# நபிகள் நாயக மான்மியம்


"தாருல் இஸ்லாம்" ஆசிரியரும்
:குர்ஆன் மொழிபெயர்ப் பாசிரியரு மாகிய
அல்ஹாஜ் பா. தாவூத்ஷா, பீ. ஏ.,
(சென்னைக் கார்ப்பொரேஷன் ஆல்டர்மேன்)

அவர்களாலும்

'ஹா'பி'ஜ் ஏ. என். மு'ஹம்மத்' யூஸுஃப் 'பா'ஜில் (ப':கவீ)

அவர்களாலும்


பல அரபீ, ஆங்கிலம், உர்தூ நூல்களிலிருந்து
ஆதாரபூர்வமாய்த் தொகுத்துத் திரட்டப்பட்டது





ஷாஜஹான் புக் டெப்போ
30, சாந்தோம் சென்னை–4

இதன் விலை] 1947 [ரூ. 12–0–0




ஷம்ஸுல் உ'லமா

# அல்லாமா ஷி'ப்லி நுஃ'மானீ (ரஹ்)

இவ்வுலகினிலே இணையில்லா வண்ணம் நபிபெருமானது திவ்யசரிதையைச் சரித்திர பூர்வமாக உருதுவில் வரைந்து, மா'ஜீ போப் பால் பேகம் ஸா'ஹிப'ா அவர்களிடமிருந்து 50 ஆயிரம் ரூபாய் சன்மானம் பெற்ற— "ஸீரத்துன் நபீ" எழுதிய, போாசிரியர். இப்பெரியாரது கிரந்தமே நமது "நபிகள் நாயக மான்மியத்" திற்கு முக்கிய முத[illegible]லாக விளங்கி வருகின்றது.

بسم الله الرحمن الرحيم
نحمده ونصلي على رسوله الكريم

# நூன் முகம்

## காப்பு

திருவுருவாய் உணருருவாய் அறிவினெடு
தெளிவிடத்தும் சிந்தி யாத
அருவுருவாய் உருவுருவாய் அகம்புறமுந்
தன்னியலா அடங்கா இன்பத்(து)
ஒருவுருவாய் இன்மையினில் உண்மையினைத்
தோற்றுவிக்கும் ஒளியாய் யாவும்
மருவுருவாய் வளர்காவல் முதலவனைப்
பணிந்துள்ளி வாழ்த்து வாமே.— சீரு.

## வேறு

கவியால் உரைத்தபுகழ் பெறுவார் மிகுத்தகவி
அடைவார் கலக்க மறவே
செவியார மெய்ப்பொருளை அறிவார் மனத்தினுறு
செயல்கே டகற்றி விடுவார்
புவியார மொய்த்தநெறி மறைநாவி னுக்குமொரு
பொறியா யுதித்த வடிவார்
நவியார் சுவர்க்கபதி நயினர் பதத்துணையை
நடுநாவில் வைத்த வ(ர்)களே.— சீரு.

பூலோகத்தின்கண் மானிடராய்த் தோன்றியிருக்கும் மக்கட்பூண் டினங்களெல்லாம் முதன்முதலாகத் தங்கள் ஆத்மாக்களைப் பரிசுத்தத்துடனே முன்னேறச் செய்துகொள்ள வேண்டு மென்பதும், சன்மார்க்க சற்குண நல்லொழுக்கங்களி லெல்லாம் அன்னவர்கள் பரிபூரண உச்ச நிலையை

அடையவேண்டு மென்பதுமே மிகவும் முக்கியமான இருபெரு நோக்கங் களாய்த் திகழ்ந்துகொண் டிருக்கின்றன. ஆகலான், முதன்முதலாக மனிதன் தெய்வபக்தி, ஆன்ம சரீர பரிசுத்தம், பதி-பத்தினி விரதம், நன்மை, நேயம், உறுதி, உதவி, பொறுமை, மன்னிப்பு, மனோதைரியம், அன்பு, பரோபகாரம், பெருந்தன்மை, உண்மை யுரோஷம், சத்தியம் முதலிய வற்றின் அஸ்திபாரங்களை யெல்லாம் மிக்க உறுதியுடனே நிலைநாட்டிக் கொள்ளுதல் வேண்டும். அதன்பின்பு பூவுலகெங்கணும் இவ் வரும் பெரும் குணங்க ளனைத்தினையும் மிக்க இனிமையான முறையிலே பரத்தத் தக்கஏற்பாடும் மிக்கபிரயாசையும் எடுத்துக்கொள்ள முற்படுதல்வேண்டும். இதற்குரிய ஒரே வழியானது பொதுவாக உபதேசம் புரிதலென்றே ஆதி முதல் கொள்ளப்பட்டு வந்திருக்கிறது. ஆனால், அதனைப் பார்க்கினும் ஒருயரிய சீர்திருத்த முறையானது, ஒழுக்கவழக்க சம்பந்தமாய உயர்தர நூல்களை இயற்றி, எங்கும் அவற்றினைப் பரவச்செய்வ துடனே நின்று விடாது, பொது மக்கள்க ளெல்லாம் அவற்றினை ஆவலுடனே கைக் கொள்ளுமாறும் செய்தலே யாகும்; அல்லது பொதுமக்க ளனைவரும் அவற்றிலுள்ள நல்லுபதேசங்களை யெல்லாம் மேற்கொண்டு நடந்துசெல்ல வேண்டுமென்று அடிக்கடி தூண்டிக்கொண் டிருப்பதுமாகும்.

எனவே, இவ்வவனியானது பண்டையிருந் தின்றுவரை மீக்கூறிய முறையைக் கொண்டே சன்மார்க்க நியதிக ளனைத்தினையும் பொது மக்கள் களுக்குப் பிரசாரம் புரிந்துவந் திருக்கின்றது. நாகரிகம் முதிர்ந்துள்ள இற்றை நாளிலுங்கூட மேற்கூறிய அதே மார்க்கத்தையேதான் நாம் கைக் கொள்ள வேண்டுவ தாகின்றதன்றி, அதிகமாக ஒன்றும் செய்துகொள்ள இயல்வ தில்லை. ஆயினும், நாவினால் மட்டுமே வெறும் வாசாமகோசரமான பிரசங்கங்கள் செய்துகொண்டு திரிவதைப் பார்க்கினும், அல்லது எழுத் தினால் மட்டுமே அவ்வாறு நடத்தல் வேண்டும், இவ்வாறு ஒழுகுதல் வேண்டும் என்று வரைந்துகொண்டு காலங்கழிப்பதைப் பார்க்கினும், எப் பக்கம் திரும்பிப்பார்க்கினும் சற்குண சொரூபமாகவே விளங்காநின்ற ஓர் உத்தமோத்தம சத்தியசீலரின் ஜீவியத்தை நாம் மக்கள்பால் எடுத்து விளக்கிக்காட்டுவதே சாலச்சிறந்த நன்மைபயக்கு மென்பதில் கிஞ்சித்தும் சந்தேகமிருக்கக் காரணமில்லை. அத்தகைய சத்தியசீலரில் ஒரு சமிக்ஞையை ஆதாரமாகக் கொண்டு ஆயிரக்கணக்கான கிரந்தங்களை இயற்றிவிடுதல் கூடும்; அம் மஹானின் ஒரு வார்த்தையைக் கொண்டே மானிடர்கள் பாரமார்த்திக விசேஷணங்களின் பரவெளியின் முகட்டை எளிதினில் எட்டிப் பிடித்து விடலாம். அம் மஹோபகாரியின் ஜீவிய மென்பது மனிதர்கட்குச் சரியான முன்மாதிரியாகவும் ஆகிவிடலாம்; இன்னம், இனிய போதனுசக்தி நிறைந்தவராகவும் அப்பெரியார் உயர்ந்து விடலாம். எனவே, இத்தன்மைத் தாய மஹோபகாரி எவரெனின், அப் பெரியார்தாம் எம் முடைய முழு முன்மாதிரியும் இருலோக இணையற்ற ஸர்தாருமாகிய

மு‘ஹம்மத்’ முஸ்த‘பா அ‘ஹ்மத் முஜ்தப’ா ரஸூல் (அல்லாஹ்வின் ஆசியும் சாந்தியும் அன்னவர்கள்மீது அமையக் கடவன) அவர்களாகவே காணப் படாநின்றார்கள். இம் மாண்புமிக்க மஹான் மு‘ஹம்மத்’ நபி(சல்) அவர்கள்பால் மேலே எடுத்துக் காட்டியவண்ணம் அத்தகைய அரிய சக்திக ளனைத்தும் அமைந் திருந்தனவா? இல்லையா? என்று ஐயுறவேண்டிய ஆவசியகமே இல்லையென்று யாம் ‘எவரெஸ்டின்’ உச்சியிலே ஏறிநின்று எல்லார் முன்னும் உரக்க எடுத்தியம்பத் தயங்கமாட்டோம். என்னெனின், எம்முடைய திருத்தூதராம் உலகமதபோத உத்தமர் சத்தியத் திருநபி மு‘ஹம்மத்’ (சல்) அவர்கள் எத்தகைய மானஸ மின்ஸார சக்திவாய்ந்துள்ள வர்களாகச் சமைந்திருந்தார்க ளென்பதைப் பின்காணும் ஒருசில உதாஹரணங்களைக் கொண்டே நன்குணர்ந்து கொள்ளுதல் கூடும் :—

1. இஸ்லாத்தின் ஆரம்பப் பிரசாரம் இனிது நடந்துவந்த காலத்தில் ‘ஹப’ஷா தேசம் (அபிஸ்ஸீனியாவை) நோக்கிப் பல முஸ்லிம்கள் தற்காப்பி னிமித்தம் புகலிடம்தேடிப் புறப்பட்டுச் சென்றார்க ளென்பது உங்களுக்குத் தெரியுமே. உயிர்தப்பியோடிய அம் முஸ்லிம்களை அங்ஙனே விட்டுவிடக் கூடா தென்றும், ‘ஹப’ஷாவின் அதிபரான அஸ்‘ஹிமா (நஜ்ஜாஷீ) மூல மாகவே ஆங்குச் சென்றிருந்த முஸ்லிம்க ளனைவரையும் மக்காவுக்குத் திருப் பிக்கொணர்ந்து வேண்டியமட்டும் இம்சைபுரிய வேண்டுமென்றும் மக்காவி லிருந்துவந்த :குறைஷிகள் எண்ணிவிட்டார்கள். இவ் வெண்ணத்தைப் பூர்த்தி செய்து வைப்பதற்காக அ’ம்ருப்’னுல் ஆ’ஸ் என்பவரே சிலபல :குறைஷியரைத் தம்முடனே கூட்டிக்கொண்டு அம்முஸ்லிம்களைத் துரத்திக் கொண்டு ‘ஹப’ஷாநாடு சென்று, ஒளித்தோடியவர்களை ஒப்புக் கொடுத்தல் — (extradition warrant) என்னும் முறைமைப் பிரகாரம் அவர்களையெல் லாம் தம்வயம் ஒப்படைத்துவிடல் வேண்டுமென்று ஆங்குள்ள அரசரிடம் வேண்டிக் கொண்டார். இஸ்லாத்தின்மீது ஆதியிலே இத்துணை மட்டும் பகைமை பூண்டிருந்த இந்த அ’ம் ரென்பார் சில ஆண்டுகளுக்குப் பின்னே உ’ம்மான் மாகாண அரசரை இஸ்லாத்தின்பக்கல் அழைக்கச் செல்லுகின்றார்; ஆங்கிருந்த ஆயிரக்கணக்கான மக்கள்கள் முஸ்லிம்களாக மாறிவிட்டனர் என்ற சுபச் செய்தியையும் நாயகமவர்களிடம் கொண்டு வந்து சமர்ப்பிக்கின்றார். அதன்பின்பு இவரே இஸ்லாத்தின் இன்றியமை யாத தளபதியாய் நின்று, எகிப்தை (மிஸ்ரை) இச் சன்மார்க்கத்திற்காக வெற்றிகொண்டு வாகைமாலையும் சூடி, வீரமுரசு கொட்டுகின்றார்.

2. க’ாலித்’ பி’ன் வ்லீதெ’ன்பார் உ‘ஹத்’யுத்தத்தின்போழ்து :குறைஷி விக்ரஹ ஆராதனைக்காரர்களின் சைன்யங்களுக்குத் தலைவராக நின்று, முஸ்லிம்க ளனைவரையும் ஒருநொடிப் பொழுதிற்குள்ளே சின்னாபின்னப் படுத்தியதனால், நபிகள்நாயகத்தின் (சல்) உயிருக்குங்கூட ஆபத்து நேர்ந்து விட்டதே போன்ற அவசர மொன்று காணப்பட்டு விட்டது. இத் தன்மைத்தாகிய கொடிய விரோதியின் மீது எம்பெருமானா ரவர்களின் மின்

சார வசீகரசக்தி தாக்கிச் சிறிதுகாலத்திற்குள்ளே ரஸூல்நாயகம் அவர்கள் திருச்சமுகத்திலே வந்து அதிகபயபக்தி விசுவாசத்துடனே சிரங்குனிந்து நிலத்தைப் பார்த்து நிற்கின்றார். பிறகு லாத் உ''ஜ்'ஜா என்னும் விக்ரஹச் சுவாமிகளை யெல்லாம் இந்த க'ாலிதே' தங்கரத்தினுல் தகர்த்து வீழ்த்து கின்றார். அதன்பின்பு இஸ்லாத்தின் இணையில்லா யுத்தகளகர்த்த ரென்னும் நாமத்தை யடைந்து, "ஸை'புல்லா" என்னும் கௌரவப் பட்டத்தையும் எம்பிரானிடமிருந்தே பெற்றுக்கொண்டு விடுகின்றார்.

3. ஒருசமயம் உ'ர்வா பி'ன் மஸ்ஊ'த்' நபிகள் நாயகம் அவர்கள் மக்காவினுள்ளே வந்து நுழையவே கூடாதென்று தடுத்துவிடக் :குறைஷிகளின் பிரதிநிதியாக 'ஹு'தை'பி'ய்யாவில் வந்து நபி நாயகம் அவர்களைத் தடை செய்கின்றார். பிறகொரு சமயம் அதே உ'ர்வா வென்பவர் எம்பிரானவர்கள் சமுகத்திற்குத் தாமே வந்து, மதீனுவில் வணங்கிநின்று, தம் முடைய வர்க்கத்தினரை யெல்லாம் இஸ்லாத்தின்பக்கல் அழைக்க அனுமதி பெற்றுச் சென்று, அப்பெரு முயற்சியிலேயே தம்முயிரையும் தியாகம் பண்ணிவிடுகின்றார்.

4. மேற் கூறிய 'ஹு'தை'பி'ய்யா உடன்படிக்கையின் போழ்து ஸு'ஹைல் பி'ன் அ'ம்ரென்பார் விக்கிரஹ ஆராதனைக்காரர்களின் சார்பாக உடன்படிக்கை முடிக்க வருகின்றார். அவ் வுடன்படிக்கையில் மு'ஹம்மத்' என்னும் சொல்லுடனே ரஸூலுல்லாஹ் என்னும் வார்த்தைகளைச் சேர்த்தெழுதக் கூடாதென்று ஆக்ஷேபிக்கின்றார். இத்தன்மை வாய்ந்த பிடிவாதக் காரரான ஸு'ஹைல் என்பாரே நாயகமவர்கள் நிர்யாண மடைந்து விண்ணுல கேகியபோது, கஃ'ப'ாவின் மேடைமீ தேறிநின்று தீ'னுல் இஸ்லாத்தைப் பற்றி மிக்க உருக்கமான நீண்ட பிரசங்கமொன்றைச் செய்கின்றார். இதனைச் செவியேற்ற அநேக அன்னிய மதத்தவர்களின் ஹிருதயங்களெல்லாம் மெழுகேபோல இளகியுருக ஆரம்பித்து விட்டன. அதுவேயுமன்றி, அன்னாரின் நெஞ்சமென்னும் கொள்கலமானது ஈமானென்னும் உறுதியான நன்னம்பிக்கையால் நிரப்பப்பட்டும் விடுகின்றது. என்னே இறைவனது இரகசிய சக்தி!

5. ஒருமுறை 'ஹ'ஜ்ரத் உ'மர் (ரலி') அவர்கள் நபிநாயக மவர்களின் சிரத்தைக் கொய்துகொண்டு ஓரே விநாடியில் திரும்புவதாகக் கூறித் தமது கட்கத்தைக் கரத்திலேந்தி, அதிக பயங்கரமான கொடிய படபடப்புடனே நபிபெருமானின் (சல்) இருப்பிடத்தை நோக்கிப் புறப்பட் டோடுகின்றார். ஆனால், மற்றொரு முறை— நபிகள் நாயகம் இம்மண்ணுலக வாழ்க்கையைத் துறந்தவன்று மாலையிலே நபிகள்பிரான் மரணமாய்விட்டார்க ளென்று எவரேனும் கூறத் துணிவ ராயின், உடனே தமது கையிலிருக்கும் உடைவாளால் அன்னவரின் சிரத்தைச் சிதைத்து விடுவதாகச் சிம்மநாதம் புரிந்து நிற்கின்றார்.

6. ஒருகால் உ'ஹத்' யுத்தகளத்தில் வ'ஹ்ஷீ என்னும் 'ஹப'ஷீ

அடிமை ஹிந்தின்— (அபூ' ஸுஃப்யான் மனைவியின்) கட்டளையை மேற்கொண்டு எம்பிரானவர்கள்மீது கொண்டுள்ள அளவிறந்த ஆத்திரத்தால் அந்த யுத்தத்திலே 'ஹ'ஜ்ரத் ஹம்'ஜா அவர்களைத் தமது எறியீட்டியைக் கொண்டு எறிந்து கொல்லுகின்றார்; அப்பெரியாரின் ஈரலையும் வெளியில் பீறி யெறிகின்றார்; அவர்களின் மர்மஸ்தானத்தையும் அறுத்து வீசுகின்றார். இன்னம் அவ்வுயிர்நீங்கிய பிரேதத்தை அளவற்ற அவமரியாதைக் குள்ளாக்குகின்றார். ஆனால், பின்னொருகால் இந்த வ'ஹ்ஷீயே முஸ்லிமாய் விடுகின்றார். ஆயினும், தாம் ஆதியிலே செய்த தவற்றை நினைந்து நினைந்து நபி பெருமானவர்கள் முன்னே தமது முகத்தைக் காட்ட முழுதும் வெள்கித் தலைகுனிந்தவரா யிருக்கின்றார். தாம் முதலில்செய்த தவற்றுக்குப் பரிகாரமாக, நபியென்று பொய்த'ஃவா செய்துகொண்டிருந்த முஸைலமத்)துல் க'த்'தாபை'க் கொல்வதே உசிதமெனக் கொண்டு, நாயகத்துக்குப் பின்னர் யமாமாவின் யுத்தகளத்திலே கொன்றுமுடிக்கின்றார். இந்தவ'ஹ்ஷீ பிறகெப்பொழுதுமே, "என்னைப்போன்ற மனிதனொருவனும் இத்தாரணியின்கண் அவதரிப்பது முடியாது. என் கையால் ஒரு மிகச்சிறந்த மனிதனையும், ஒரு மஹா துஷ்ட மனிதனையும் கொன்று தீர்த்திருக்கிறேன்," என்று கூறிக்கொண்டே யிருப்பார்.

7. ஒருசமயம் அபூ' ஸுஃப்யான் பி'ன் ஹாரிஸ் பி'ன் அ'ப்'து'ல் முத்தலிப்'— (நபியவர்களின் பெரிய தந்தையின் குமாரர்) நபி நாயகம் அவர்களுக்குப் புத்தி தடுமாறிப் போய்விட்ட தென்றும், பொய்ப் பிரசாரம் புரிகின்றார்க ளென்றும் ஏசியும் ஏளனம்செய்தும் வாயில் வந்தவாறெல்லாம் தூஷணைக் கவிகள்பாடியும் மிகவாகக் கேவலப் படுத்திக்கொண் டிருக்கின்றார். ஆனால், பின்னொரு சமயம் ஆண்டவனது மெய்யொளிப் பிரகாசத்தைப் பெற்று, 'ஹுனைன் யுத்தத்தின்போழ்து நபிகள் நாயகம் ஏறிக்கொண்டிருந்த வாகனத்தின் கடிவாளத்தை இறுகப் பற்றிக்கொண்டு, அப் பரமாசாரியரின் பந்தோபஸ்திற்குரிய மெய்காப்பாளராகவே காணப் படுகின்றார்.

8. ஒருமுறை அபூ' ஸுஃப்யான் பி'ன் ஹர்ப்' ஹிஜ்ரீ ஏழு ஆண்டுகள் மட்டும் எம்பிரானுக் கெதிராகப் பலமுறை பெரும்பெரும் சைன்யங்களை யெல்லாம் சேர்த்துக்கொண்டு வந்து, தீ'னுல் இஸ்லாமே இத்தாரணியின் கண் இல்லாமல் அழிந்தொழிந்து போக வேண்டுமென்று இனியில்லாப் பிரயத்தன மெல்லாம் செய்துசெய்து பார்க்கின்றார். ஆனால், மற்றொரு முறை இவரே யமனுக்குப் பக்கத்திலுள்ள கிறிஸ்தவ நஜ்ரான் மாகாணத்திற்கு இஸ்லாத்தின் அரசப் பிரதிநிதியாக நியமனம் பெற்றுச் செல்லுகின்றார்.

9. ஒருதடவை :துஃபல் பீ'ன் அ'ம்ர் த'வ்ஸீ என்பார் மு'ஹம்மத்' (சல்) அவர்களின் நாமசப்தமே தமது செவியுள் நுழைந்துவிடா திருக்கும் பொருட்டு மக்காவின்கண் காதிலே பஞ்சை வைத்துத் திணித்துக்கொண்டு

திரிகின்றார். ஆனால், மற்றொரு தடவை தமது சொந்தவூர் சென்று, மு'ஹம்மத்' நபியின் முத்தேபோன்ற உயரிய உபதேசங்க ளனைத்தையும் வீடுவீடாகச் சென்று, ஓதியோதி இஸ்லாமிய பிரசாரம் புரிகின்றார். விழிப்பிலும் சுழுத்தியிலும் மு'ஹம்மத்' (சல்) அவர்களின் ஏக்கமே அதிகம் குடிகொண்டவராய் அல்லுபகலாக அலைந்து திரிகின்றார்.

10. ஒருகால் அ'ப்'து'யாலைல் என்பவர், நபிநாயகம் அவர்கள் 'தாயி'ப் சென்று உபதேசம் புரிந்தக்கால், நம்பெருமானாரை அவ்வூரினில் தங்க இடங்கொடாது துரத்தியடிக்குமாறு சிறுசிறு காவாலிகளைக் கொண்டு கல்லினாலெறிந்து ரஸூலுல்லாவின் கால்களினின்று உதிரம் சொரியும்படி செய்கின்றார். ஆனால், மற்றொருகால் இன்னவர் தாமே மதீனாவிற்கு வந்து, ஈமானென்னும் மெய்யொளிச் சோதியைப் பெற்றுக்கொண்டு, தமது சொந்த ஊராகிய 'தாயி'புக்குத் திரும்பிவந்து, எல்லாரும் ஏகமனத்துடனே சாந்தத்திற்குரிய சன்மார்க்கமாம் நந் தீ'னுல் இஸ்லாத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று எங்கும் பிரசாரம் புரிகின்றார்.

> "செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
> செயற்கரிய செய்கலா தார்— குறள்.

எனவே, பொதுவாக நோக்குமிடத்து, சற்குணங்க ளனைத்தும் ஒருங்கே அமையப் பெற்று, சத்திய சொரூபியாய் அவதார மெடுத்துள்ள நம்வள்ளல்(சல்)அவர்களுடைய பரிசுத்தம்நிரம்பிய சற்போதங்க ளெல்லாம் நாளடைவில் மாக்களின் மனக்கோட்டைகளை யெல்லாம் கைவயப்படுத்தி, அவர்களை மக்கள்களாய்த் திகழுமாறு செய்துகொண் டிருந்தன. முற்காலங்களி லிருந்துவந்த பண்டை நபிமார்க ளெல்லாரும் மு'ஃஜி'ஜாத்தென்னும் அற்புதச் செயல்களை அதிகம் காண்பித்து வந்தனர். தண்டமும், ஸர்ப்பமும், கல்லும், கடலும், அக்கினியும் இயற்கைக்கு விரோதமாகக் காணப் படுவனவேபோல் சாதாரண மக்கள்முன்னே தோன்றுமாறு அப் பெரியார்களால் செய்விக்கப்பட்டன. ஆனால், நம் நபிகள் நாயகமவர்கள்(சல்) — எம் தாய்தந்தையர் இவர்களுக்குப் பலியாக்க் கடவர்— மண், கல், தடி, ஸர்ப்பம், கடல் முதலிய வஸ்துக்கள்மீது தங்கள் மு'ஃஜி'ஜாத்தைக் காண்பிப்பதை விடுத்து, அசுரத்தன்மை வாய்ந்திருந்த மறமாக்களை யெல்லாம் அமரர்குணம் நிரம்பிய மஹாசிரேஷ்ட மக்கள்களாக மாற்றி உயர்த்தி விட்டார்கள். அசேதனப் பொருள்கள்மீது தங்கள் அற்புதசக்தியை வீண் விரயம் செய்யாது, சேதனப் பொருளாகிய ஆன்மாக்களையே அதிகமதிகம் பரிசுத்தம் பண்ணி வைத்தார்கள். சுருக்கிச் சொல்லுமளவில், அதற்கு முன்னே இருந்துவந்த வானத்தையும் பூமியையுமே புதிய நூதன வானம் பூமிகளாக மாற்றி யமைத்து விட்டார்கள். கல்மீதும், மண்மீதும், கடல்மீதும், தடிமீதும், தரைமீதும் காண்பிக்கப்படும் மு'ஃஜி'ஜாத்களைப் பார்க்கினும் மாக்களின் ஹிருதயங்களின் மீது அத்தகைய மு'ஃஜி'ஜாத்களைக்

காண்பித்து, அவர்களை யெல்லாம் அமரர்களினும் மேம்பட்ட அந்தஸ்தை அடையுமாறு அதியுன்னதப் பாரமார்த்திக உச்சத்திலே உயர்த்திவிடுவ தென்பது எத்துணைப் பெரிய "எண்ணுதற்கு ஆக்குதற்கு அரிய" மாபெரும் அற்புத மென்பதை நீங்களே நன்கு நிதானித்துக் கொள்ளக் கடவீர்கள். காணுன் தேசத்துக் கல்யாண விருந்திற்குச் சென்ற தீர்க்கதரிசி யொருவர் ஆங்குப் பருகுவதற்குப் போதிய சாராயம் இல்லையெனக் கண்டு, ஜாடி ஜாடியாக வுள்ள குளிர்ந்த நீரையெல்லாம் குதிக்கும் சாராயமாக்கி விடலாம். ஆனால், உ'ஹத்' யுத்தகளத்தில் நபிபெருமானின் பிரியசிஷ்யர்கள் எத்துணைப்பெரிய தியாகபுத்தியுடனே தங்கள் ஆருயிர்களையும் பொருட் படுத்தாது தங்களுக்குரிய ஞானசிரியரின் உயிரைக் காப்பதிலேயே எம் மட்டும் கண்ணும் கருத்துமாயிருந்து மானிடக் கோட்டையாக விளங்கி வந்தார்க ளென்பதே அன்னவர்களின் ஆன்மமுதிர்ச்சி அடைந்திருந்த பாரமார்த்திக உச்சத்தை நன்கு நிரூபித்துக் காண்பிக்கின்றது. அவ்வாறு, தண்ணீரைச் சாராயமாக்கிய தீர்க்கதரிசியால் ஓர் ஆன்மாவைப் பரிபக்குவ மடையும்படி செய்துவிடுதல் சாலாது. யூதாஸ் காரியோத் கேவலம் 30 வெள்ளிக்காசுக் காசைப்பட்டுத் தன் பரமகுருநாதரை எதிரிகளிடம் பிடித் துக்கொடுத்தான். ஆனால், எம்பிரான்(சல்) அவர்கள் ஆண்டவ னனுமதியின் மீது தமதாத்மாவுக் கொன்றும் இன்னல் நேராம லிருக்கும்பொருட்டு நள் ளிரவிலே மக்காவினின்று ஹிஜ்ரத் செய்து வெளியே புறப்பட்டுச் செல்லு கின்ருர்கள். ஆனால், நபிகள்நாதர் (சல்) சயனித்திருந்த அதேபடுக்கையில், உயிருக்குப் பேராபத்து வருமென் றுணர்ந்த பின்னரும் மஹா தைரியத் துடனே தம்முயிரைப் பலிகொடுக்கப் பிரிய சிஷ்யராம் 'ஹ'ஜ்ரத் அ'லீ அவர்கள் ரஸூலுல்லாவின் பச்சைப் போர்வையையே போர்த்துக்கொண்டு அப் படுக்கையின் மீதே படுத்துக்கொண் டிருக்கிருர்கள். இஃதன்றே உண்மைச் சிஷ்யரின் உயரிய உறுதி வாய்ந்த அபிமானம் என்னப் படுவது! பேதுரு வென்னும் மற்றொரு பரம சிஷ்யன்— சுவர்க்கத்தின் சாவியையே தன்கையில் வைத்திருந்தவன்— ஒரு முறைக்கு மூன்று முறையாகப் பொய்ச் சத்தியம் செய்து, இயேசுநாதர் தன் குருநாத ரல்ல ரென்று மறுத்துக் கூறிவிட்டான். சாதாரணமாக ஒருவர் தமக் குரிய ஆத்மசக்தியால் ஒரு கல்லை ஓடுவதே போலச் செய்துகாட்டலாம்; சமுத்திரம் பொங்கி வருவதே போலத் தோன்றுமாறு செய்யலாம்; தண்டத்தை ஸர்ப்பமாகக் காட்டலாம்; செத்தாரையுங்கூட ஒருசிறிது பிழைப்புமூட்டிக் காட்டலாம். ஆனால், சாவாமல் செத்தவர்களே போலக் கிடக்கும் நடைப்பிணங்களின் ஹிருதயத்திற்குள் ஒருவகைப் புத்துயிரைப் புகுத்தி, அவர்களை யெல்லாம் அமரர்களினும் சிறந்தவர்களாகச் செய்து விடுவ தென்பது ஒரு கஷ்டசாத்தியமான காரியமேயாகும். இப்படிப் பட்ட— வேறெவராலும் சிரமசாத்தியத்து டனுங்கூடச் செய்துகாட்டற் கரிய— அரும்பெரும் முஃ'ஜி'ஜாத்தையே நம் ஸர்தார் ரஸூலுல்லா(ஹ்)

அவர்கள் இயற்றிவைத்துச் சென்றிருக்கின்றூர்களென்பதை எவராலும் எதிர்த்துரைப்பது இயலாது. இக் காரணத்தினுலேதான் 'என் ஸைக்ளோ பீடியா' என்னும் சர்வவித்யா கோசத்திலும் (*En. Br.* 11th ed., Art. Koran) - இம் மஹானைப் போல வேறெந்தத் தீர்க்கதரிசியும் வேறெந்த மத சீர்திருத்தக்காரரும் இத் தாரணியின்கண் இன்றுகாறும் அத்துணைப் பெரிய வெற்றி யடைந்ததே கிடையாதென்று கருத்துக் கொள்ளுமாறு எழுதிவைத் திருக்கின்றனர்.

இவ்வாருய அரியபெரிய அற்புதக் காரியங்களே எதிர்மத வாதிகளின் ஹிருதயத்தை இன்னமும் உருக்கமாக உறுத்திக்கொண் டிருக்கின்றன. இந்த நபி பெருமானு ரவர்களின் பரிசுத்தச் சரிதையை எத்துணையட்டும் புரட்டிப் பொய்ப்படுத்திக் கூற அன்னவர் முயன்றிடினும், அவர்கள் தங்களுக்குத் தெரியாமலே உண்மையை ஒத்துக்கொள்ளுதற்கு வேண்டிய அத்தியாவசியம் இறுதியிலே ஏற்படாமற் போய்விடுவ தில்லை. நம் மஹோபகாரியின் சரித்திரத்தை எழுதத்துணிந்த எத்தனேயோ ஹிருதயங்கள் சுயமே உருகிப்போய் இருக்கின்றன; அன்னவர்களின் அறிவு உண்மையை ஒத்துக்கொள்ள வேண்டுமென்றே சுழன்றுகொண்டு வருவதைச் செவ்வனே நாம் காணலாம்.

இன்னம், எம் வள்ளல்(சல்) அவர்களது உயிர்வாழ்க்கையை உற்று நோக்குமிடத்து, மானிடர்களுக்குரிய எல்லாவிதமான துறைகளுக்குமே அவர்கள் ஒரு முன்மாதிரியாக இருந்துவருகின்றூர்களென்பதைச் செவ்வனே நாம் தெரிந்துகொள்ளுகிறேம். 'ஹ'ஜ்ரத்மஸீ'ஹ்(அ'லை) அவர்கள் பொறுமையும், மன்னிப்பும், தாழ்மையும், சமாதானமும் மக்கள்பால் இருந்துவரல் வேண்டுமென்று உபதேசித்துச் சென்றூர்கள். ஆனல், மனிதன், எங்ஙனம் ஆட்சிமுறையில் ஈடுபடுதல் வேண்டும்? அதன்ஒழுங்குகளென்ன? அன்னிய தேசத்தாருடனே நடந்துகொள்ள வேண்டிய முறைகளென்ன? விவாகமென்றால் என்ன? இதன் சிறந்த தர்மங்களென்ன? இல்வாழ்க்கையுடன் கூடி மக்கள்பால் கலந்துகொண் டிருக்கவேண்டிய மேலான முறைகளென்ன? என்பன போன்றவற்றை, அந்த மஸீ'ஹ் கூறியதாக எவராலோ கூறப்படும் சுவிசேஷத்தினின்று நாம் ஒன்றையுமே கண்டுகொள்வது முடியாது. இவ்வாறே மூஸாநபி அவர்களுடைய உபதேசங்களென்று கூறப்படுவனவற்றில் மன்னிக்கும் குணம், சகிப்புத்தன்மை போன்றவற்றை மருந்துக்குக்கூட நாம் கண்டுகொள்வது முடியாது. இக்காரணம் பற்றியே ஒவ்வொரு காலத்திலும் ஒவ்வொரு புதியநபி தோன்ற வேண்டுவது அத்தியாவசியமாக இருந்துவந் திருக்கின்றது. ஆனல், இப்பூவுலகின் கால தேச வர்த்தமானங்கள் முன்னேறி விருத்தியடைந்து வரவர, மானிடர்களின் எல்லாத் துறைகளுக்கும் ஓர் இனிய முன்மாதிரியாய் விளங்குதற்குரிய ஒரு விசுவ மகாதீர்க்கதரிசி எல்லாத் தேயத்திற்கும், எல்லாக் காலத்துக்கும், எல்லாச் சாதியாருக்கும் உரியமுறையிலே அவதரிக்க வேண்டுவது

ஓர் அவசியமாகிக் கொண்டே வந்ததென்னலாம். இப்படிப்பட்ட மஹாநபி யாகியவர் சமாதான கர்த்தராக இருப்பதோடு அமையாது, சமயம் வாய்த்துழி, சண்டை முனையிலும் வழிகாட்டக் கூடியவரா யிருத்தல் வேண்டும். இல்லத்திற் குரிய இனிய போதகரா யிருப்பதோடு, துறவறத்திற் குரிய சன்னியாச வாழ்க்கைக்கும் முன்மாதிரியான ஓர் இல்லறத் துறவியா யிருத்தல் வேண்டும்; மாண்புமிக்க மாபெரும் மன்னராகவும் இருத்தல் வேண்டும். அதே சமயத்தில் மட்டற்ற ஏழையேபோல் உயிர் வாழ்ந்து காட்டுதலும் வேண்டும். அளவற்ற திரவியத்தை அள்ளி யிறைக்கும் அருங்கொடை வள்ளலாகவும் இருத்தல் வேண்டும்; ஆனால், உள்ளதைக் கொண்டு போதுமெனத் திருப்தியடைந்து கொள்ளும் உத்தமராகவும் உயிர்வாழ்தல் வேண்டும். ஆதரவற்ற அனாதைக் குழந்தையே போலும் இருத்தல் வேண்டும்; அவ்வாறே ஆதரிப்பை அதிகம் காண்பிக்கும் அண்ணலே போலும் இருத்தல் வேண்டும். கூலிவேலை செய்யும் கொல்லத் துக்காரனே போலும் உடல்வளைந்து சகல காரியங்களையும் சுயமே செய்து காட்டல் வேண்டும்; பிறகு கொத்தளங்களுக் கதிபதியான கோமான் போலும் தலை நிமிர்ந்திருத்தல் வேண்டும். இவையன்றி, தந்தையாகவும், கணவராகவும், நண்பராகவும், நொதுமலராகவும், நியாயாதிபதியாகவும், சட்ட நிபுணராகவும், எவ்வெத் துறையிலெல்லாம் இவ்வுலக மன்பதைக்கு முன்மாதிரி வேண்டுமோ அவ்வத் துறையிலெல்லாம் ஒரு நேர்வழிகாட்டியாகவும் அந்த மஹாநபி நின்றிலங்குதல் வேண்டும். எனவே, இத்தனை விதமான கல்யாணகுண விசேஷங்களை யெல்லாம் நம் மஹோபகாரி மு'ஹம்மத் முஸ்த'பா அ'ஹ்மத் முஜ்தப'ா ரஸூல்(சல்)அவர்கள் பரிபூரணமாக எங்ஙனம் பெற்றிருந்தார்க ளென்பதை அவர்களுடைய திவ்யசரித்திரத்தின் வாயிலாக நாம் நன்கு தெரிந்துகொள்ளக் கடவோம். இவை யனைத்தும் மெய்யே யென்பதை ஸர் வில்லியம் மூய்ர் போன்ற எம் எதிர்மத விரோதிகளும் ஏற்றுக்கொள்ளாமல் இருப்பதில்லை. எனவேதான், இக் கிரந்தத்தின்— 2-ஆம் பாக— இறுதியிலே அயல்மத வாதிகள் அநேகர் இம் மஹானுபாவரைக் குறித்துக் கூறியிருக்கும் அபிப்பிராயங்களில் ஒரு சில வற்றையே திரட்டிச் சேர்த்துவைத் திருக்கின்றோம். எம்பெருமானார் அவர்களால் இவ்வுலகினுக்கு வேண்டிய எல்லாவித சற்போதங்களும் சம்பூர்ணமாக்கி வைக்கப்பட்டு விட்டமையாலேயே இவர்களுக்குப் பின்னே இன்ன மொரு தீர்க்கதரிசி— பழையவரோ புதியவரோ— இவ்வகிலத்தில் எப்பொழுதுமே அவதரிக்க வேண்டுவது ஆவசியகமில்லாமற் போய்விட்டதென்று நாம் நன்கு துணிந்து கூறுகின்றோம். இதையேதான் எமதிறைவனும் தன் திருமறையின் 5 : 3-ஆவது திருவாக்கியத்தில், " இன்று நுங்களுக்காக நுங்கள் மார்க்கத்தை நான் பரிபூரண மாக்கிவிட்டேன்," என்று சுட்டிக் காட்டியுள்ளான். " ஆனால், (மு'ஹம்மத்') அல்லா(ஹ்)வின்

தூதராகவும், நபிமார்களுக் கெல்லாம் முத்திரையா(னவரா)கவும் இருந்து வருகின்றார்," என்பதும் அவன் வாக்கே.

ஒவ்வொரு விநாடியும் அழிந்தழிந்து மாறிக்கொண்டே யிருக்கும் இவ் வவனியின்கண் தோன்றிவரும் எல்லாப் பொருள்களும் ஒரு குறிப்பிட்ட காலத்திற்குப் பின்னே மறைந்துபோக வேண்டியன வாகவே இருந்து வருகின்றன வாதலின், மேலேகூறிவந்த சற்குணங்களனைத்தையும் தம்மகத்தே பரி பூரணமாய்ப் பெற்றிருந்த நபிகள்பிரா னவர்களும் இத்தரணியின்கண் எக் காலத்திற்குமே ஜீவித்திருக்குமாறு சிரஞ்சீவியாய் நிலைத்திருக்க வில்லை. எனவே, அம் மஹானுபாவரின் ஒவ்வொரு சொல்லும், செயலும், நடையும், உடையும், பாவனையும் உள்ளவண்ணமே ஒருவாறு நன்கு பத்திரப் படுத்திப் பாதுகாக்கப்பட வேண்டுவது ஓர் அத்தியாவசியமாகவே இருக்கின்றதன்றோ? என்னெனின், அப்பொழுதுதான் மனிதன் தனக்கு வேண்டிய அரிய பெரிய சந்தர்ப்பங்களி லெல்லாம் அம்மஹானின் முன் மாதிரிகையைப் பின்பற்றி நடந்து சித்திபெறுதல் சாலும். முன்சென்ற நபிமார்களெல்லாம் எங்ஙனம் எல்லாத் துறைகளிலும் முன்மாதிரிகையாக நிற்க முடியாதவர்களா யிருந்தார்களோ, அங்ஙனமே அன்னாரின் ஜீவிய விருத்தாந்தங்களும், நடையுடை பாவனைகளும், பிற உபதேசங்களும் சம்பூர்ண மடையாமலே அரைகுறையாக இருந்திருக்கின்றன. இயேசு கிறிஸ்து அவர்களுடைய 33 ஆண்டின் இவ்வுலக வாழ்க்கையில் மூன்றாண்டு களின் விஷயங்களே பற்பல ஐயந்திரிபுகளுடனே சின்னபின்னப்பட்டுச் சிதைவுற்றுக் காணப்படுகின்றன. பாரசீக தேசத்தில் தோன்றிய சீர்திருத் தக்காரர்களின் வியவகாரங்க ளெல்லாம் "ஷாஹ் நாமா" என்னும் ஒரு நூலினின்றேதான் வெளியாகின்றன. இவ் இந்தியநாட்டில் தோன்றிய மதத் தலைவர்களின் விஷயங்களெல்லாம் கட்டுக்கதைகளென்னும் இதிகாச புராணக் கதைகளால் அதிகம் மூடப்பட்டுக் கிடக்கின்றன. 'ஹ'ஜ்ரத் மூஸா அவர்கள் விஷயத்தை அறிந்துகொள்ள வேண்டுமாயின், இதற்காகத் 'தவ்ராத்' என்பதொன்றே அரையுங்குறையுமாய்க் காணக்கிடக்கின்றது. இதுகாலைத் தவ்ராத்தென்று கூறப்படுவதெல்லாம் 'ஹ'ஜ்ரத் மூஸா நபி யவர்கள் இடந்தெரியாமல் இறந்துபோய் 300 ஆண்டுகளுக்குப் பின்னேயே வேறெவராலோ எழுதப்பட்ட பைபிள் பழைய ஏற்பாட்டின் முதலைந்து ஆகமங்களே யாகும். எனவே, இக்கூறிய காரணத்தினால் மீக்கூறியவர் களின் போதனைக ளெல்லாம் சதா சர்வகாலமும் நீடித்து நிற்கக்கூடியன வல்லவென்பது செவ்வனே விளங்கக் கிடக்கின்றது.

பொதுப் படையாய் நோக்குமிடத்து, அவரவருக்கும் அவரவர் சமயமே ஏனையோரின் சமயங்களைக்காட்டினும் மிகச்சிறந்ததாகப் புலப் பட்டுக்கொண் டிருக்கின்றது. எனவே, இவ்வுலகத்தில் தோன்றியுள்ள எந்த மதத்தின் மூலகுரு சர்வ சற்குணங்களையும் தம்மகத்தே நிரம்பப் பெற்றவராக இருக்கின்றார்? என்று வினவப்படுங்கால், ஒவ்வொருவரும்

தத்தம் மதாசாரியரின் திருநாமத்தையே முதன்மையாய்க்கூற முற்பட்டு விடுவரென்பதில் சிறிதும் சந்தேகமென்ப தில்லை. ஆனால், எந்த மதாசாரி யரின் 63 ஆட்டைய உயிர்வாழ்க்கையின் குறிப்புக்களெல்லாம் ஒருசிறிதும் விடப்படாமல் அப்படியப்படியே பத்திரமாக வரைந்து வைக்கப்பட்டிருக் கின்றன? எந்த மதத்தலைவரின் சொற்களும், செயல்களும், திருவுருவச் சிறப் பும், புன்முறுவல் மிகைப்பும், நிறமும், குணமும், குறியும், நடையும், உயர மும், உடையும், எண்ணமும், வண்ணமும், நோக்கமும்,கடாக்ஷமும், சம்சார வாழ்க்கையின் சௌஜன்யத் தன்மையும், அருந்துவதும், பருகுவதும், உட்காருவதும், நிற்பதும், படுப்பதும், எடுப்பதும், உறக்கமும், விழிப்பும், இன்சொல்லும், நகைமொழியும், இன்னமும் இவைபோன்ற எண்ணுதற் கரிய சௌளஞ் செய்து கொள்ளல், நகங் களைதல், ஜலமல விஸர்ஜனஞ் செய்தல், பள்ளியறை யுள்ளிருத்தல் போன்ற சிறுசிறு காரியங்களெல்லா மும் மிக்க உறுதியுடனே அதி ஜாக்கிரதையாகக் காப்பாற்றப்பட்டு வந்திருக்கின்றன? என்று பொதுவாக ஓர் அறைகூவல் கிளப்பப்படு மிடத்து, அதுசமயம் மு'ஹம்மத்' அ'ரபீ' ('பித்'ாஹு அபீ' வ உம்மீ) என்னும் ஒரேயொரு பேரொலிதான் அந்த அறைகூவலை ஏற்க முற்படு மென்பதில் கிஞ்சித்தும் சந்தேகமென்பது கிடையாது ; கிடையாது.

இதுகாறும் மேலே கூறப்பட்டுவந்த ஒருசில காரணங்களால் முஸ்லிம் களாகிய நமக்கு மட்டுமே யன்றி, பொதுவாக உலகமன்பதைக ளெல்லாருக் குமே இப்பரிசுத்தம் நிரம்பிய மேன்மை வாய்ந்த மஹானுபாவரின்—மு'ஹம்மதி'ன் (சல்)—மெய்யான சரித்திரம் அத்தியாவசியமானதுதா னென் பதை எவரே மறுத்துரைத்தல் சாலும்? இத்தகைய தேவை இஸ்லாத் துக்கு மட்டுமேதான் வேண்டற்பாலதென் றெண்ணற்க. இது, ஞான மடைதற்கும், சற்குணங்களைச் சரிவரப் பெறுதற்கும், ராஜீய தேசீய அரசியல் முறைகளை ஒழுங்காகத் தெரிந்துகொள்ளுதற்கும், சீர்திருத்தத்தை உண்மையிலே அடைதற்கும், மற்றுமுள்ள ஈருலக, மனிதர்களின் தேவை யடங்கலையும் செவ்வனே பரிபூரணத்துடன் பெறுதற்கும் அத்தியாவசிய மான ஒரு தேவையென்றே மேற்கொள்ளுதல் வேண்டும். இதனை யாம் ஒருதலைப்பக்ஷமாக எழுதுகிறோமென்று எண்ணிவிடற்க. அவரவரும் தத்தம் முடைய நேத்திரங்களைத் திறந்துகொண்டு, மனத்துள் ளிருக்கும் பொறாமை யையும் புழுக்கத்தையும் அப்புறம் அகற்றிவிட்டு, காமாலைக் கண்ணாடியை யணிந்து கொள்ளாது, நன்கு நிதானித்துப் பார்க்கத் துணிவார்களாயின், அதுபொழுது இவ்விஷயம் உண்மைதா னென்பதை நன்குணர்ந்து கொள் வார்க ளென்பது திண்ணமே யாம். எனவே, எம்பிரான் (சல்) அவர்களின் உண்மையான சரித்திரம் எத்துணை அவசியமானதென்பதை ஈங்கு இன்னமும் அதிகமாக யாம் விரித்துக் கொண்டே செல்லவேண்டிய தில்லை யென்றே அஞ்சி, இம்மட்டோடு விடுக்கின்றனம்.

சுருக்கிச் சொல்லுங்கால், இத்தரணியின்கண் காணப்படும் ஒவ்வொரு

பரமாணுமுதல் மாபெரும் சூரிய கோளங்கள்வரை ஓவ்வொரு பொருளும் சிருஷ்டிகர்த்தாவால் இடப்பட்டிருக்கும் கட்டளையின்படியே ஒருசிறு அணுப் பிரமாணமும் வழுவாது ஒழுங்குடனே நடந்து கொண்டுதான் வருகின்றன வென்று அறிவுநூல்க ளனைத்தும் அறைந்துகொண் டிருக் கின்றன. இப் பிரபஞ்சத்திலுள்ள எல்லாப் பகுத்தறிவற்ற பொருள்களும் தத்தமக் கிடப்பட் டிருக்கும் வேலையைத் தவறாது செய்து கொண்டே வருகின்றன. திருஷ்டாந்தமாக, தினகரன் இவ்வுலகினுக்குத் தினந்தினம் வெளிச்சத்தையும் உஷ்ணத்தையும் அளிப்பதற்கே ஏற்படுத்தப்பட்டிருக் கின்றான். எனவே, இந்தக் கதிரவன் ஒவ்வொரு விநாடியும் தன்னுடைய காரியத்தைச் செவ்வனே செய்துகொண்டுதான் வருகிறான். அவ்வாறே பூமியும் புற்பூண்டுகளை முளைக்கச்செய்து, அவற்றினைப் பசுமையாகப் பயிர் செய்துகொண் டிருக்கின்றது; இன்னம், இத்தரணி தனக்குரிய அலுவலில் ஒருசிறிதும் தவறுவ தில்லை. இவ்வண்ணமே, மேகம் மழைநீரைச் சொரிய வும், புற்பூண்டுகளுக்குப் புத்துயிரளிக்கவும் ஏவப்பட் டிருக்கின்றது; ஆகவே, அது தன் தொழிலைத் தவறாது நிறைவேற்றிக் கொண்டேதான் வருகின்றது. இவ்விதமாக விருக்ஷங்கள் கனிகளையும் வேறு உணவுப் பொருள்களையும் உண்டுபண்ண வேண்டுமென்று உத்தர விடப்பட்டிருக் கின்றன. ஆகலின், அவை தங்காரியத்தை யெல்லாம் மிக்க நல்ல முறை யிலே நிறைவேற்றிக் கொண்டுதான் வருகின்றன. இன்னம், இங்குள்ள ஏனை ஜீவஜந்துக்களும் தத்தமக்குரிய கடமைகளைச் செவ்வனே செய்து கொண்டுதான் வருகின்றன. எனவே, இவற்றினை யெல்லாம் கண்ணுற்று நோக்கியதன் பின்னர், இவ்வாறு மனிதர்களுக் கேதேனும் இத்தரணியில் வேலையுண்டா வென்னும் வினா வொன்று சுயமே ஜனிக்க ஆரம்பிக்கின்றது.

ஆகலான், மனிதப் பிராணிகளை நாம் சிறிதே கவனித்துப் பார்க்கக் கடவோம்: மனிதப் பிராணியும் மற்றைப் பிராணிகளே போலத்தான் உண்ணுகின்றது; உறங்குகின்றது; உலவித் திரிகின்றது; உட்காரு கின்றது; எழுந்து நடமாடுகின்றது; வாணாளையெல்லாம் வீணாகவும், பெரும்பாலும் கழிக்கின்றது; இறுதியாக மரணமுமடைந்து, மண்ணோடு மண்ணாய் மறைந்தும் போகின்றது. எனவே, இவைகள்தாமா மானிடர்க ளுடைய உயிர்வாழ்க்கையின் உயரிய நோக்கம்? கேவலம் மிருகங்களைப் போலவே பிறந்து வளர்ந்து மரிப்பதற்காகவா நம் மானிடர்கள் சிருஷ்டிக் கப்பட் டிருக்கின்றார்கள்? இதுதான் மன்பதையின் சிருஷ்டி நோக்க மென்று எவரேனும் இயம்ப முற்படுவராயின், அதன்பின்பு மானிட வர்க்கத்திற்கும் மற்றுமுள்ள ஜீவஜந்துக்களுக்கும் உள்ள பாகுபாடுதான் என்னை? ஆறறிவு படைத்த மக்களுக்கும், அஃதில்லாது ஐயறிவுடனே திரியும் மாக்களுக்கும் வேறுபாடுதான் என்னை? "மாவும் மாக்களும் ஐயறி வினவே, மக்கள் தாமே ஆறறி வுயிரே!" என்றான் இலக்கண ஆசிரியனும்.

இன்னமும் சிறிது ஆழ்ந்து ஆராய்ச்சிசெய்து பார்ப்போம். மானிடர் களின் பூண்டே இம் மண்ணுலகினின்று மடிந்து மண்ணோடு மண்ணாய்ப் போய்விடினும், சூரியன் இப்பொழுதிருப்பதே போலத்தான் அப்பொழுதும் பிரகாசித்துக்கொண் டிருக்கும்; சமுத்திரத்தின் அலைக ளெல்லாமும் இப்பொழு திருப்பன போலவேதான் அப்பொழுதும் அலைந்துதிரியும்; காற்றும் வழக்கம்போலே வீசிக்கொண்டுதா னிருக்கும்; மழையும் அவ் வண்ணமே பொழிந்துகொண்டுதா னிருக்கும்; பசுமையான புற்பூண்டு விருக்ஷங்க ளெல்லாமும் காய்கனி வர்க்கங்களை அளித்துக்கொண்டுதா னிருக்கும். ஆனால், மேற்கூறியதற்கு மாறாக மரம் செடி கொடி வகைகள் காய்கனி கிழங்கு தான்யங்களை அளிக்கவில்லை யாயின், மனிதன் உயிருடன் ஜீவித்திருப்பது முடியாம லாகிவிடும். மேகம் வருஷிக்கவில்லை யாயின், மனிதன் தாகத்தினால் துடித்து மடிந்துபோவான். காற்றில்லை யாயின், இவன் மூச்சுத்திணறி மரணமடைந்தே தீருவான். பூமியே இல்லையாயின், மனிதனே தரித்திருந்து வாழ்வது முடியாது. சூரியன் வெளிச்சத்தையும் உஷ்ணத்தையும் அளிக்கவில்லை யாயின், மனிதப் பூண்டே பிரகாசமில்லாமல் குளிர்ந்து விறைத்து விடும். சமுத்திர மில்லையாயின், மழை பெய்வது அரிதாகிவிடும். ஆகவே, இவற்றினை யெல்லாம் நாம் ஆழ்ந்து நோக்குவோ மாயின், மனிதன் சுகமே ஜீவித்திருப்பதற்கு இம் மண்ணுலகில் காணக் கிடக்கும் ஒவ்வொரு வஸ்துவின்மீதும் சார்ந்து நிற்பவனாகவே படைக்கப் பட்டிருக்கிறான் என்பதை நாம் நன்கு தெரிந்து கொள்ளுவோம். ஆகலான், இப்பாருலகினில் கண்டுகொள்ளப்படும் ஒவ்வொரு பொருளும் உண்டாக்கப் பட்டதன் நோக்கம், அவைகளின் உதவியைக்கொண்டு மனிதன் உயிர்வாழ வேண்டும்; இவற்றினைக் கொண்டே 'இன்ஸான்' ஜீவித்திருக்க முடியும் என்பதாகவே தெற்றெனப் புலப்படாநின்றது.

(1) "பூலோகத்தி லுண்டான சகல வஸ்துக்களை யும் நுங்களுடைய பிரயோஜனத்துக்காகச் சிருஷ்டித் துள்ளவன் அவன்— (அல்லாஹ்)தான்."

(2) "பூவுலகின்கண் காணப்படும் எல்லாவற்றை யும் நுங்கள் நன்மைக்காகவே வசப்படுத்திக் கொடுத் திருக்கிறா னென்பதை நீர் கவனிக்க வில்லையா?"

(3) "இன்னம், அன்னவன் இரவையும் பகலையும், சூரியனையும் சந்திரனையும், உங்களுக்கு வசப்படுத்தி வைத்திருக்கிறான். நக்ஷத்திரங்களும் அவனது ஏவலைக் கொண்டு (உங்களுக்கு) வசப்படுத்தி வைக்கப்பட்டிருக் கின்றன."*— (16 : 12)

* "இன்னம், (தங்கள் கிரக பதங்களில் கிரமப் பிரகாரம்) ஓடிக்கொண் டிருக்கும் சூரியனையும் சந்திரனையும் அவன் உங்களுக்கு வசப்படுத்தி வைத்திருக்கிறான்; மேலும், இரவையும் பகலையும் அவன் உங்களுக்கு வசமாக்கி வைத்திருக்கிறான்."— (14 : 33)

ஆனால், மனிதவர்க்கமோ மேற்கூறிய வண்ணம் அவ்வஸ்துக்களுக்கு வேண்டிய உதவிக்காகவேனும் உபயோகத்திற்காகவேனும் சிருஷ்டிக்கப் பட்டில்லை யென்னும் விஷயமும் மிகத்தெளிவா யறியக் கிடக்கின்றது. ஆனாலும், மானிடவர்க்கம் ஒரு மஹா பெரிய அருமையான நோக்கத்தைக் கொண்டே சிருஷ்டிக்கப்பட் டிருக்கின்றது என்பதைமட்டும் ஒருவராலும் மறுத்துரைப்பது முடியாது. மற்றைப் பொருள்களால் விளையும் நன்மை யைக் காட்டினும் பிரயோஜனத்தைக் காட்டினும் அக்கருத்து வேறான தாகவும் மஹா உயரியதாகவுமே இருக்கவேண்டு மென்பது வெள்ளிடை விலங்கலாம். இவ்வாறாகத்தான் மானிட சிருஷ்டியின் உயரிய நோக்கம் இருந்துவரல் வேண்டுமென்று பகுத்துணர்வுள்ள ஒவ்வொருவரும் ஒத்துக் கொள்வா ரென்பது திண்ணமேயாம்.

பொதுப்படையாய்க் கவனிக்குமிடத்து, மானிடன் இவ்வுலகத்தில் ஜீவித்திருந்து தன் ஜீவனை நித்தியஜீவனாய் நிலைக்கச் செய்தற்கும், தான் இகத்திலும் பரத்திலும் மேன்மை யடைதற்கும், தான் கோரிய காரியங்களை நிறைவேற்றிக் கொள்ளுதற்கும் பற்பல படித்தரங்களில் பல்லாயிரக்கணக் கான பொருள்களின்மீது பெரிதும் சார்ந்தவனா யிருக்கின்றான். உதாரண மாக, விவசாயி (குடியானவன்) மனிதனுக்கு வேண்டிய உணவுப்பொருள் களை விளைவித்துக் கொடுக்கிறான். கருமான் மனிதனுக்கு வேண்டிய இரும்பு சாமான்களைச் செப்பனிட்டுக் கொடுக்கிறான். நெய்தற்றொழிலாளி நமக்கு அவசியமான ஆடைகளை நெய்து தருகிறான். மண்ணீட்டாளர் (குலால குலத்தினர்) நமக்கு வேண்டிய மட்பாண்டங்களை வனைந்து கொடுக் கின்றார். இவ்வாறே தட்டார்களும், தச்சர்களும் மனிதருக்கு வேண்டிய ஆபரணம், தட்டுமுட்டுச் சாமான்கள் முதலியவற்றைச் செய்து உதவு கின்றனர். பொலீஸ்காரன் நம்மை இரவுபகலாகப் பாதுகாத்து வருகிறான்; ஸப்மாஜிஸ்ட்ரேட் நமக்குத் துன்ப மிழைத்தவரைத் தண்டித்து நாட்டில் சமாதானத்தை நிறுவுகிறார். அரசன் நம்மைப் பக்ஷத்துடனே பராமரித்து வருகிறான். நியாயாதிபதி நீதி பரிபாலனம் புரிகிறார். சைன்யாதிபதி சண்டைவிளையாமல் தேசத்தைக் காப்பாற்றி வருகிறார். இவ்வாறே ஆயுர் வேதர் மன்பதையின் சரீர சுகத்தைப் பாதுகாத்து வருகின்றனர். இவ் வண்ணமாயே ஒவ்வொரு விஷயத்திலும் அதிலதிலே நிபுணத்துவம் வாய்ந்த ஒவ்வொரு மனிதன் நமக்கு வேண்டிய உதவிகளனைத்தினையும் புரிந்து வருகிறான். ஆனால், இவர்களுள்ளே எவரேனும், மனிதர்களின் சொற்களுக்கும் செயல்களுக்கும் எண்ணங்களுக்கும் நாட்டங்களுக்கும் மூல ஸ்தானமாய் விளங்காநிற்கும் "கல்பை"— (ஹிருதயத்தை)ப் பாதுகாத்து, வளர்த்து ரக்ஷித்து, நேரான பாதையிலே சீராக நிலைத்திருக்கச் செய் கின்றனரா? என்பதைமட்டும் சிறிதே ஆழச் சிந்தித்துப் பார்க்கக் கடவீர் கள். இதற்காக அல்லாஹுத் தஆலா இப்பாருலகிலே ஒருவரையும் உண்டாக்கித் தரவில்லையென்று உரைக்க முற்படுவோ மாயின், அஃது

ஆண்டவன் மீது சுமத்தும் ஓர் அடாத பழிமொழியே யாகும். என்னெனின், மக்களின் சரீர சம்பந்தமான எல்லாச் சுகசௌகரியங்களுக்கும் வேண்டிய சகல வஸ்துக்களையும் சிருஷ்டிசெய்து கொடுத்திருக்கும் அவ்வேக வல்லோன் தன்னடியார்களின் ஆன்ம சம்பந்தமான முன்னேற்றத்துக்கு வேண்டிய பாரமார்த்திக சௌகரிய மொன்றினையும் செய்துதரவில்லை யென்று எந்த அறிவாளிதான் குறைகூற முற்படுதல் சாலும்? ஸ்தூலத்திற்கு மூலமாயுள்ளதும், அதனினும் பல்லாயிரம்பங்கில் உயர்ந்திருப்பது மாகிய ஸூக்ஷ்மத்திற்கு வேண்டிய உதவியொன்றையும் ஆண்டான் தன்னடிமைகட்குச் செய்துகொடுக்க இயலவில்லையாயின், அப்படிப்பட்டவன் பிறகு ஆண்டவனு யிருப்பதற்கே அருகதையில்லாதவனுகப் போய் இழிந்துவிடுகின்றுன்.

எனவே, மன்பதைக்கு வேண்டிய மண்ணுலகத் தேவைகளை யெல்லாம் சரிப்படுத்திக் கொடுக்கக்கூடியவர் ஒருபக்கல் கிடக்க, பற்பல சாகைகளாகப் பிரிந்துகிடக்கும் மனிதப்பிராணிகளை யெல்லாம் ஒருங்கே கொண்டுவந்து சேர்ப்பதும், அன்னரின் உளத் துலகத்தில் சீர்திருத்தத்தையும் சாந்தத்தையும் சமாதானத்தையும் நிலைக்கச் செய்து, அந்த உள்ளக் கமலங்களிடத்துக் காணப்படும் பொருமையையும் புழுக்கத்தையும், கோபத்தையும் தாபத்தையும், நயவஞ்சகத்தையும் நயிச்சிய ஆஷாடபூதித் தனத்தையும் அப்புறப்படுத்தி, அங்கே அன்பையும் அதிவிசால சகோதர வாஞ்சையையும் ஒளிரச் செய்வதும், மானிடன் செய்யும் ஒவ்வொரு காரியத்துக்கும் அம்மானிடனையே சர்வாதிகாரியாகச் செய்வதும், அன்றியும் நியதியான நடுநிலையினின்று வழுவிச்சென்று மக்கள் நாசமாய்ப்போய் நரகத் தீயுள்ளே வீழ்ந்துவிடாது தடுத்து, செவ்விய பாதையினூடே சென்று ஈடேற்றத்தையடையுமாறு அதற்குரிய சன்மார்க்க ஒழுக்கங்களைக் காட்டிக்கொடுப்பதும் பின்னர் யார்தானென்று எண்ணுகின்றீர்கள்? இம் மாபெரும் புனித கைங்கரியத்தைக் கொல்லர்களேனும், குயவர்களேனும், தச்சர்களேனும், தட்டார்களேனும், வைத்தியர்களேனும், வாணியர்களேனும், விவசாயிகளேனும், பொலீஸ்காரர்களேனும், மாஜிஸ்ட்ரேட்டுகளேனும், மன்னர்களேனும், ஆண்டியேனும், அடிமையேனும், வானசாஸ்திரியேனும், பூமி சாஸ்திரியேனும், தத்துவ சாஸ்திரியேனும், தாவர சாஸ்திரியேனும், ரஸாயன சாஸ்திரிகளேனும், பௌதிக பௌமிய சாஸ்திரிகளேனும், இன்னமும் இவர்களைப்போன்ற வேறெவரேனும் செய்து முடிக்கின்றுர்களா? இவ்வேலை அவர்களால் முடியுங் காரியமாமோ? எனினும், இவ்வரிய உயரிய காரியத்தைச் செய்பவர்தாம் வேறியாரென்றுல், அவர்கள்தாம் நபிமார்கள்; அவர்கள்தாம் ரஸூல்மார்கள்; அவர்கள்தாம் பய்கம்பர்மார்கள் என்றழைக்கப் படுகின்றுர்கள். இத்தகைய நபிமார்களுக்கு ஸ்தூல சம்பந்தமான நேரானகாரியம் ஏதொன்றும் இல்லை யென்னலாம். ஆனல், அடியார்களின் உள்ளங்களைச் சீர்திருத்த வேண்டுவதும், ஆன்மாக்களை

முன்னேறச் செய்ய வேண்டுவதுமே இந் நபிமார்களின் இன்றியமையாத முதற்கடமையா யமைந்திருக்கின்றன. எனினும், ஸூக்ஷ்மதேகம் நன்றாக நிலைத்துநின்று உறுதியுடன் இக்காரியம் செய்வதற்காக ஸ்தூலமும் வேண்டப்படு மென்பது வாஸ்தவமே. ஆனாலும், மனிதர்களின் முக்கிய மூலப்பொருளாக விளங்கிநிற்பது ஸூக்ஷ்மதேகந்தா னென்பதை எவரும் மறுத்துக்கூறுதல் சாலாதென்பது திண்ணமேயாம்.

இதனால்தான் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் ஆத்மமுன்னேற்ற விஷயத்திலும், மனோநிலையை மாற்றக்கூடிய மேலான மின்சார சக்தியிலும் சம்பூர்ணமான ஜயக்கொடி நாட்டி, எக்காலத்திலும் வேறெந்த நபியும் செய்துகாட்டாத— காட்டமுடியாத— அத்துணைப் பெரிய உன்னத மாறுதல்களை யெல்லாம் மக்கள்பால் நிலைக்கச்செய்து சென்றார்கள். அரப்நாடு முழுதுமே ஆத்ம சம்பந்தமாகவும் அழகிய குணவிசேஷ சம்பந்தமாகவும் தலைகீழாய்ப் புரண்டு போய்விடுமாறு உருமாறச் செய்து விட்டார்கள். அதுவேயு மன்றி, இவ்வுலகினுக்கே பரிபூரண முன்மாதிரியாகவும், அதற்குரிய இறுதியான தெய்விக மார்க்கத்திற் குரிய சரியான சட்ட திட்டங்க ளென்னும் ஷரீஅ'த்தை நிலை நிறுத்தியவர்க ளாகவும், ஏகதெய்வக் கொள்கையை இனியில்லா வண்ணம் நன்கு நிலைக்கச் செய்தவர்களாகவும் நின்றிலங்குகின்றார்கள். மற்றும், தங்கள் அன்பைக் கொண்டும் ஆர்வத்தைக் கொண்டும் மக்கள்க ளெல்லாரும் மகிழ்ந்து கிடக்குமாறு செய்து முடித்தார்கள். இருள்சூழ்ந்து கிடந்த இப்பாருலகையே இல்லை,பாழுலகையே பிரகாசத்துக்குரிய சுடரொளியாக்கச் செய்து விட்டார்கள். வழிதப்பிப் போனவர்களுக்கு நேர்வழி காட்டியும், மறதியால் தடுமாற்றங்கொண் டலைந்தவர்களுக்கு ஞாபகமூட்டியும், அடியார்களை ஆண்டவனுடன் பிணைத்து ஐக்கியப்படுத்தியும், தவறான கொள்கைகளை யெல்லாம் தகர்த்தெறிந்தும், சன்மார்க்க சற்குணங்களனைத்தினையும் சாகோபசாகையாக உதஹரித்து உபதேசித்தும், பாபப்பட்டோலைகளை யெல்லாம் படுகுழியுள்ளே தாழ்த்தி வீழ்த்தியும், மக்கள்களை யெல்லாம் ஷைத்தான்களுடைய ஏமாற்றத்திற்குள் ளாகாது தடுத்தாட்கொண்டு உயரிய பரிசுத்த அமரர்களின் அண்மையிலே கொண்டு நிலை நிறுத்தியும், மன்பதைக ளெல்லாம், "எல்லாரும் ஓர்குலம், எல்லாரும் ஓரினம்" என்னுமாறே, சரிசமான மான பிறவியுடையவர்களே யென்றும், யோனிப் பிறப்பினாலே மட்டும் ஒருவருக்கும் மேன்மை தாழ்மை யென்பது தோன்றி விடுவதில்லை யென்றும் விளக்கிக்காட்டியும், ஒழுக்கம், நாகரிகம், சீர்திருத்தம், புத்திசாதுர்யம் போன்றவற்றின் இரகசிய இனிய போதங்களை யெல்லாம் நன்கு வெளியிட்டுக்காட்டியும் நபிகள் நாயகம் (சல்) மேன்மை பெற்றுச் சென்றார்கள். அன்றியும், அழிந்துபோய்க் கிடந்த ஆத்மசக்தியை மீண்டும் புத்துயிர்பெறச் செய்தார்கள். நாசமடைந்து பாழாய்ப்போய்க் கிடந்த ஹிருதயமென்னும் முதுகாட்டுக் கோட்டங்களை யெல்லாம் புதுப்

பித்துப் பெரிய பட்டணத்தின் நவரத்னகசித மாடமாளிகைகளாக நிர்மாணித்து விட்டார்கள். எனவே, இம்மாதிரியான மேன்மைக் குணங்களை யெல்லாம் வேண்டாமென்று உதறித் தள்ளுபவர் எவரே ஈங்குளார்? ஆதலால், மானிடர்கள் மேற்கூறிய முற்போக் கனைத்தினையும் அடைந்து கொள்ள ஆவல் கொள்ளுவார்க ளாயின், அவற்றினைச் செய்துகாட்டிய மஹோபகாரியின் விவரமான, ஆனால், உண்மையான சரித்திரத்தை உள்ள வண்ணம் அறிந்துகொள்ளாது எங்ஙனம் அக்காரியத்தில் வெற்றிபெறுதல் சாலுமென்பது எமக்கு விளங்கவில்லை. எனவே, ஒவ்வொரு மானிடப் பிறவியும் எம்பிரான் (சல்) அவர்களுடைய ஜீவியவாழ்க்கையில் நிகழ்வுற்றிருக்கும் வியவகாரங்களை யெல்லாம் முற்ற முற்றத் தெரிந்துகொள்ள வேண்டுவது ஓர் அத்தியாவசியமான காரியமாகவே காணக்கிடக்கின்றது. இஃதிங்ஙன மிருக்க.

இவ்வண்ட கோளத்தையே அறிவுச்சுடரை அடையுமாறு செய்வித்து, இம்மண்ணுலக மாக்களையெல்லாம் மாபெரும் மக்கள்களாக உயர்த்துவான் வேண்டி அவதாரம் புரிந்த மாபெரும் மஹானுபாவரும், தமக்கு வேறெவரும் ஒப்பாரும் மிக்காருமில்லாத வண்ணமாய்ச் சீர்திருத்தம் செய்துவைத்தவருமான எம் பரிபூரண இறுதிநபி அவர்களுடைய இக லோக வாழ்க்கையைப் பொது மக்கள்பால் எடுத்தோதுவான் வேண்டிப் பற்பல மதத்தினரும் பற்பலவிதமான சரித்திரங்களை யெல்லாம் வரைந்து வைத்திருக்கின்றனர். ஆங்கிலேயர்கள் தங்கள் பாஷையிலும், பிரெஞ்சுக் காரர்கள் தங்கள் பாஷையிலும், ஜெர்மானியர்கள் தங்கள் மொழியிலும் பார்ஸீகள் அன்னார் மொழியிலும், அரபிகள் அவர்கள் பாஷையிலும் நம் ரஸூலுல்லா(ஹ்)வைப் பற்றி எண்ணிறந்த சரித்திரங்களை யெல்லாம் எழுதி வைத்திருக்கின்றார்கள். இப்படிப்பட்ட பற்பல நாடுகளிலுள்ள வர்களால் பற்பலவாறாய்ப் பற்பல பாஷைகளிலே வரைந்து வைக்கப்பட்டிருக்கும் " சரித்திர " கிரந்தங்களெல்லாம் எம்பிரான்(சல்) அவர்களுடைய உயிர்வாழ்க்கை நிகழ்ச்சிகளை உண்மையாகத்தான் ஒளிக்காது கூறியிருக்கின்றனவா? அல்லது பொய்யும் புளுகுமாகவே பிரண்டி வைத்திருக்கின்றனவா? என்பதை யாம் ஈண்டெடுத்து ஆராய்ச்சி செய்ய இயலாவிடினும், இத்தனை நூற்றுக்கணக்கான ஆசிரியர்கள் பல்வேறு தேயங்களில், பல்வேறு காலங்களில் தோன்றி, பல்வேறு பாஷைகளில் கணக்கில்லாத சரித்திரங்களை எழுதிவைத்திருக்கும் பெருமையானது எம்பெருமானா ரவர்களுக்குரிய ஒருதனிப் பெருமையாகவே திகழ்ந்துகொண்டிருக்கின்றது. இத்தனை நூற்றுக்கணக்கான சரித்திரங்கள், இல்லை, இவற்றில் பத்திலொரு பங்கேனும் வேறுமத சீர்திருத்தக்காரர்களென்னும் பெரியோர்களுக்காக உலகமக்கள் சரித்திரங்க ளியற்றிவைத் திருக்கின்றனரா? என்று வினவப் புகுவோமாயின், இல்லை, இல்லை, முக்காலும் இல்லை யென்னும் விடையே எங்கும் எதிரொலி கிளப்பிநிற்கு மென்பது

திண்ணமேயாம்: இக் காரணத்தினுலேதான், இத்தனை அதிகமான சரித்திரங்கள் எழுதப் பெற்றிருக்கும் மஹானும், இத்தனை அதிகமாகப் பிறமதத்தினரால் தவருக உணர்ந்துகொள்ளப்பட்டிருக்கும் மஹோபகாரியும் இத்தாரணியின்கண் வேறெவரும் இல்லையென்றே அறிவுடையவர்கள் பலர் அறைந்திருக்கின்றுர்கள்.

மீக்கூறிய சரித்திராசிரியர்க ளெல்லாரும் நம் மஹானுபாவரின் உயரிய உபதேசத்தைக் குறித்து ஒன்றும் குறைகூற இடமில்லாமையினுனே அப்பெரியாரின் உயிர்வாழ்க்கையில் சிற்சில குறைகளைச் சிருஷ்டிக்கப் பெரிதும் முற்பட்டு நிற்கின்றனர். அவர்களுள் ஒருசிலர் நபிகள்நாயகத்தின் விவாகங்களைக் குறித்துக் குறைகூறிக்கொண்டிருக்கிறுர்கள். நம்பெருமானுர் பலதார மணம் புரிந்துகொண்டது, அவற்றுள்ளே குறிப்பாகத் தங்கள் சொந்த அத்தை மகள் ஸ'ஜனபை'— ஸ'ஜதெ'ன்பவரால் விவாக விமோசனம் செய்யப்பட்டதன் பின்னர் — மணமுடித்துக் கொண்டது, இஃதேபோன்ற வேறு சிற்சில சர்வசாதாரண விஷயங்களெல்லாம் மஹாமேரு போன்ற பெரும் பெரும் தவறுகளென்றே, இல்லை, பாதகங்களென்றே எடுத்துக்காட்டி, எல்லாரும் எள்ளிநகை யாடுமாறு ஒருசிலர் ஏளனம் செய்திருக்கின்றுர்கள்; வேறு சிலர் நபிநாயகம் அவர்கள் பலாத்காரத்தைக் கொண்டே தீ'னுல் இஸ்லாத்தை எத்துணைமட்டும் இப்பாருலகில் பரவச் செய்தார்களென்று எடுத்துக்காட்டுவான் வேண்டியே 'ஜீவிய சரித்திரம்' எழுதப் புகுந்திருக்கின்றனர். ஆதலின், பொருமையும் புழுக்கமும் பரிபூரணமாய்க் குடிகொண்டுள்ள இக் காமாலைக் கண்ணுடைய ஆசிரியர்கள் அனைவரும், தற்காப்பி னிமித்தமே நாயகமவர்கள் வாளைக் கரத்திலேந்தினுர்கள் என்னும் உண்மையை ஒளிக்க அளவுக்கு மேற்பட்டு அதிகதூரம் மாபெரும் பிரயாசைப்பட்டுப் பார்க்கின்றனர்; மற்றுஞ் சிலர் நம் ரஸூலுல்லா(ஹ்) அவர்களது வாழ்க்கையே உதிரக்களமாய் விளங்கிற்றென்று எடுத்துக் காட்டவே முற்பட்டிருக்கின்றனர். இத்தகைய இரத்தக் கறைகளுக்கு மூலகாரணமா யிருந்தது யாது செயலாகும்? அம் மஹானுபாவர் ஏன் யுத்தங்களில் இறங்க வேண்டும்? அவையனைத்தும் தர்ம யுத்தங்களா? அல்லது அதர்ம யுத்தங்களா? அடுபடைப் போர்களா? அல்லது தடுபடைப் போர்களா? என்பனவற்றிற்குரிய மூலகாரணங்களையெல்லாம் சற்றும் ஆழ்ந்து கவனியாது, அவற்றிற்குரிய உண்மைக் காரணங்க ளனைத்தினையும் வேண்டுமென்றே, அல்லது அறியாமையாலோ, ஒருவாறு விழுங்கி ஏப்பமும் விட்டுவிடுகின்றனர்.*

உண்மையிலே எம்பெருமான் (சல்) அவர்கள் ஏன் யுத்தத்தில் இறங்க வேண்டிய ஆவசியக முண்டாயிற்று? நாயகமவர்கள் அக்கால அராபியர்

* கிறிஸ்து மார்க்கம் யுத்தங்களைத் தவிர்த்துக்கொண்டே ஆதியில் பரவிற்றென்றும்; இஸ்லா மார்க்கம் யுத்தங்களை நிகழ்த்தியே ஆரம்பத்தில் பரவிற்றென்றும் நம்முடைய "தோஸ்த்" ஸர் வில்லியம் மூய்ரும் வாய்கூசாது வழுத்தியுள்ளார்.

மாட்டு ஏகதெய்வக் கொள்கையை மிக்க இனியமுறையிலே எடுத்தோதினார்கள்; பலதெய்வ வணக்கமும், அதனைச் சார்ந்துள்ள ஒழுக்கவீனங்களும் வேண்டா மென்று உபதேசித்து வந்தார்கள். இவ்வளவேதான் எம்பிரானவர்கள் இழைத்த மாபெருங் குற்றம். உடனே எழுந்ததையா கோபம்! எத்தகைய கோபமென் றெண்ணுகின்றீர்கள்? கௌசிக முனிவனைக் குறித்துக் கம்பநாடன் அன்று,

> "என்றனனென் றலுமுனிவோ டெழுந்தனன்மண்
> படைத்தமுனி இறுதிக் காலம்
> அன்றெனவாம் எனவிமையோர் அயிர்த்தனர்மேல்
> வெயில்கரந்த தங்கு மிங்கும்
> நின்றனவும் திரிந்தனமீ நிவந்தகொழுங்
> கடைப்புருவம் நெற்றி முற்றச்
> சென்றனவந் தனநகையும் சிவந்தனகண்
> ணிருண்டனபோய்த் திசைக ளெல்லாம்"

என்று கவினுறக் கூறினனே, அத்தகைய மகாகோபம்! அதுகாலைக் கு'ப்'பார்களெல்லாம் அச்சன்மார்க்க அழைப்பை ஏற்றுக்கொள்ள மறுத்து நின்றார்கள்; மறுத்ததுடன் நில்லாது, இச்சத்திய சன்மார்க்கத்தை அழித்தொழித்து விடவும் பெரிதும் கங்கணங் கட்டித் திரிந்தனர். இஸ்லாத்தை ஏற்றுக்கொண்ட மக்களை யெல்லாம் இம்சித்தும் சித்திரவதை புரிந்தும் எண்ணவியலாத் துறையாலெல்லாம் துன்புறுத்தினார்கள். இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டவர்க ளெல்லாரும் தங்கள் வீடுவாசல்களையும் நிலபுலங்களையும் விட்டோடும்படியும் நிர்ப்பந்தப் படுத்தினார்கள். முஸ்லிம்கள் தங்கள் சொந்த ஊரையும் ஆஸ்தி பூஸ்திகளையும் துறந்துவிட்டு, அன்னிய நாட்டுக்குள்ளே சென்று அடைக்கலம் புக்குவிட்டார்கள். மக்காவை விட்டு, மதீனாவிற்குள் சென்று புகலிடம் தேடிக்கொண்டவர்களை வாளா விட்டுவிடாது, அன்னவரின் பிரசாரம் தழைத்தோங்கி வருவதைக் கண்டு மனம் பொறாதவராய் மக்கத்து மறமாக்கள் நாற் திசைகளினின்றும் காட்டரபிகளைத் தூண்டிவிட்டு யுத்தங்கள்பல புரிந்து, இஸ்லாத்தையும் முஸ்லிம்களையும் நாசப்படுத்திவிடுவதே நல்ல கைங்கரியமெனக் கொண்டு 18 ஆண்டுமட்டும் திரிந்தார்கள். ஆகவே, முஸ்லிம்கள் அதன் நிமித்தமாயே தங்களுயிரைத் தற்காத்துக்கொள்ளும் பொருட்டுக் கட்கத்தைக் கரத்தி லேந்தினார்கள். ஆகவே, கு'ப்'பார்களின் மூலமாய்க் கிளம்பிவந்த மஹாபிரளயமே போன்ற எதிர்ப்பின் வேகத்தை யெல்லாம் ஒருசிறிதும் துளங்காது பெரும்பெரும் மலைகளேபோல நின்று அம்முஸ்லிம்கள் தடுக்கத் துணிந்தனர்; அசுரர்களின் அக்கிரம யுத்தங்களையெல்லாம் அமரர்களாகிய அம் முஸ்லிம்கள் தற்காப்பினிமித்தமே தடுபடை செய்துகொண் டிருந்தனர். எனவே, இம்முறையால் ஏற்பட்ட இடையூறுகளே யுத்தத்திற் குரிய

மூலகாரணமாய்த் தோன்றிச் சீக்கிரம் முடிவடையாது தொடர்ச்சியாக நடந்துகொண்டே இருந்தன வென்னலாம். இறுதியில் இஸ்லாத்தின் வெற்றிக்கொடி யுடனேதான் அந்த அதர்ம அசுரப் போராட்டமும் ஒருவாறு ஹிஜ்ரீ எட்டாவ தாண்டுடன் ஒழிந்துமுடிந்தது. தெய்வ சங்கற்பத்தால் இடையில் தோன்றிய அந்தச் சிலபல யுத்தங்கள் ஏற்பட வில்லையாயின், எம்பிரானவர்கள் தங்களுடைய யுத்தகளத்திற்குரிய மேலான பெரும்பெரும் போர்த் தத்துவங்கள் பலவற்றை வெளியிடுதற்குரிய தக்க தருணம் நேரிடாமலும் போயிருக்கலாம். இப்பாருலகினில் மானிடர்கள் உள்ளவரை யுத்தமும் ஒழியப்போவ தில்லை. எனவே, இதற்குரிய நல்ல முன்மாதிரியும் நம்பெருமானு ரவர்கள் வாயிலாய் வெளியாதல் வேண்டு மன்றோ? எனினும், அந்த யுத்தங்க ளெல்லாம் எதிர்பாரா வண்ணம் இடையில் முளைத்தவைகளே யாம். ஆயின், நம் ரஸூல் நாயகமவர்கள் மேலே காட்டிவந்த உத்தமமான ஆத்ம முன்னேற்றத்திற்குரிய சாதனங்களையும் ஹிருதயப் பிரகாசத்திற்குரிய ஜோதியையுமே காட்டிக் கொடுப்பதற்காகத்தான் இவ் வகிலத்தின்கண் வந்து தோன்றினார்க ளென்பதை மீட்டும் யாம் தங்களுக்கெல்லாம் ஞாபகமூட்டக் கடமைப்பட்டுள்ளோம்.

சுருக்கிக் கூறுமிடத்து, எம்பிரான்(சல்) அவர்களைப்பற்றி எத்தனையோ விதம்விதமான சரித்திரங்க ளெல்லாம் வரைந்து வைக்கப்பட் டிருக்கின்றன வெனினும், அவைகளுள் ஒன்றேனும் (அல்லாமா ஷிப்'லீ நுஃமானீ அவர்களின் அபிப்பிராயப் பிரகாரம்) சரியான முறையிலே உண்மையான நிகழ்ச்சிகளை மட்டுமே உரைப்பதாகக் காணப்பட வில்லை. என்னெனின், இன்றுகாறும் இம்மஹானின் சரித்திரங்களை எழுதிவந்திருக்கும் ஆசிரியர்க ளெல்லாரும் முதன்முதலில் மூன்றுவிதமாகக் காணப்படுகின்றனர் :—

(1) இப்பெரியாரைப் பற்றிச் சொல்லப்படும் நல்லனவும் அல்லனவுமாகிய விஷயங்க ளெல்லாம் உண்மையா யிருக்கின்றனவா வென்பதை அக்காலச் சரித்திராசிரியர்கள் ஒருசிறிதும் கவனிப்ப தில்லை; அவ்வாறு கவனிப்பதற்குரிய ஏற்பாடொன்றும் செய்திருப்பதாகவும் புலப்படவில்லை.

(2) பொதுவாக, சரித்திராசிரியர்க ளெல்லாரும் அதிகமான விஷயங்களைச் சொல்லவேண்டு மென்றே அளவுகடந்த ஆர்வங்கொண் டிருக்கின்றனர். இதன் பயனாகக் குப்பை கூளங்களே போன்ற குணமற்ற சருகுக ளெல்லாமும் அவர்கள் சரித்திரத்திற்குள்ளே வந்து நுழைந்து கொண்டு விட்டன.

(3) மற்றும், சரித்திர விஷயத்தைக் கூறுபவருக்கு வயது நிர்ணயம் வரையறுக்கப்பட் டில்லை. ஆகவே, சிறுவர்க ளெல்லாருங்கூடச் சரித்திரங்களை வரையும் கூட்டத்தினருள்ளே வந்து நுழைந்துகொண்டிருக்கின்றனர். "கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால் சான்றோர், குழாஅத்துப் பேதை புகல்," என்றவாறு சரித்திர சம்பந்தமான 'ஹதீ'துகளையெல்லாம் சின்னஞ் சிறார்கள் செவிமடுத்து, விஷயங்களைச் செவ்விதாய் விளங்கிக்கொள்ள

முடியாமலும் மனப்பாடம் பண்ணிக்கொள்ள முடியாமலும் இருந்து வந்தமையான், அநேக சரித்திர சம்பந்தமான "ரிவாயத்"களில் மாறுபாடு களும் குழப்பங்களும் மல்கிக் கிடக்கின்றன.

ஆயின், பிற்காலத்தில் தோன்றிய பெரியார்கள் பலர் சரித்திர சம்பந்த மான விஷயங்கள் சத்தியமாக இருக்கவேண்டு மென்று பெரிதும் பிரயாசைப்பட் டிருக்கின்றனர். எனினும், இதுகாறும் அத்தகைய நன் முயற்சியா லெல்லாம் பரிபூரணமான, சரியான, ஒழுங்கான, உண்மையான சரித்திர மொன்றும் எவராலும் எழுதப்பட் டில்லையென்று ஷம்ஸுல் உ'லமா அல்லாமா ஷிப்'லீ அவர்களே அறைந் திருக்கின்றார்கள்; இது மறுக்கொணாத மெய்யே யென்பதை அந்த அல்லாமா வரைந்திருக்கும் "ஸீரத்துன் னபீ"யின் முதல் வால்யூமிலுள்ள முகவுரையை ஊன்றிப் படிப் போர் நன்குணர்ந்து கொள்வர். உண்மை அவ்வாறிருக்க, நந் தென்னாட்டுத் தமிழ்மொழி பேசும் முஸ்லிம்நேசர்களின் நிலைமையை நாவினாலும் எடுத் துரைத்தல் வேண்டுமோ? என்னெனின், எம்பிரான்(சல்) அவர்கள் சம்பந்த மாக வரைந்து வைக்கப்பட்டிருக்கும் உண்மையான விஷயங்களெல்லாம் அரபு பாஷையிலும், பார்ஸீ பாஷையிலும், உர்தூ பாஷையிலுமே மிளிர்ந்து கிடக்கின்றன. ஆனால், நந்தமிழ்நாட்டு முஸ்லிம் நண்பர்களுக்கும் மேற்கூறிய மூன்று பாஷைகளுக்கும் சம்பந்தம் சிறிதுமே யில்லை. அப் பாஷைகளுள் உர்தூவை மட்டுமேனும் உணர்ந்திருந்தா லல்லவோ உண் மையினின்று ஒரு சிறிதை யேனும் இவர்கள் ஓர்ந்துகொள்ளப் போகின்றனர்?

அத்தகைய அன்னிய பாஷாஞானம் இன்னவர்களுக் கில்லையாதலால், இவர்களை எத்துணைமட்டுமேனும் பொய்யையும் புராணப் புளுகுகளையும் அளவுக் கதிகமாக அளந்துகொட்டி ஏமாற்றலா மெனச் சிலர் கண்டவை களையும் கேட்டவைகளையும் அப்படி யப்படியே வரைந்துதள்ளி, "நபி நாயகத்தின் ஜீவிய சரித்திரம்" என்றும், சீறு வசனமென்றும், "பிரக்யாதி பெற்ற பல நூல்களிலிருந்தும் சேகரித்தெழுதப்பட்டு............பதிப்பிக்கப் பட்டது" என்றும் நாமஞ்சூட்டிச் சிலபல புத்தகங்களை வெளியிட்டு விடுகின்றனர். இவ்வண்ணமெல்லாம் எம்பிரான்(சல்) அவர்களுடைய ஜீவிய சரித்திரத்தை எழுதுவதாகச் சொல்லி அம் மஹானுபாவரின் மாசுமறுவற்ற திரு நாமத்திற்குப் பெரும் பங்கம் விளைத்துக்கொண் டிருப்பதனைக் காட்டினும் தங்கள் எழுதுகோல்களை இதுவிஷயத்தில் மட்டுமேனும் நாட்டாம லிருந்திருந்தால், இஸ்லாத்திற்கே பெரிதும் உபகாரம் புரிந்தவர் களா யிருப்பார்கள். என் செய்யலாம்! நந் தமிழ்நாட்டின்கண் காணக் கிடக்கும் எதிர்மத விரோதிகளெல்லாரும் அத்தகைய புராணக் கட்டுக் கதைகளைக் கண்ணுற்று ஏளனம்செய்ய வேண்டுமென்று இறைவனது சித்தம் இருந்துவந்தது போலும்! இவ்விடத்தில், யாம் இந்நூலின்கண்ணே உ'மறுப்புலவரின் கவிகள் சிலவற்றை எடுத்தாண்டிருப்பதற்குப் போதிய

காரணமும் கூறக் கடமைப்பட்டுள்ளோம்: கவிச் சக்ரவர்த்தியாம் கம்பர் எழுதியுள்ள கவிநடையே போன்ற உ'மறுப் புலவரின் இனிய கவிநயத்தை மெச்சியே யாம் சிற்சில கவிகளை இடத்திற்கேற்றவாறு எடுத்தாண் டிருக்கிறோமே யல்லது, இதனால் அவருடைய புராணக்கொள்கைகளை யெல்லாம் யாம் சரியே யென்று அங்கீகரித்துக்கொண்டு விட்டதாக எந்த நண்பரும் எண்ணிவிடா திருக்கக்கடவர் என்று யாம் விநயபூர்வமாக வேண்டிக் கொள்ளுகின்றோம். எனவேதான், இரசூலுல்லாவின் மெய்ம்மைத் தன்மையை யுன்னி, ஆங்காங்கே சிற்சில இடங்களில் மட்டும் சீறாவில் காணப்படும் உண்மைக்கு முரணான சரித்திர விஷயத்தை யாம் கண்டிக்க வேண்டிய ஆவசியகமும் ஏற்பட்டு விட்டிருக்கின்றது. உ'மறுப்புலவரின் புராணப்படலங்களை யாமொன்றும் தொடாமலே விட்டுவிட்டோம். என்னெனின், புராணம் சரித்திரமன்றே யன்றோ!

எனவேதான், யாம் வேறுபல நண்பர்கள் இத்தகைய சரித்திரத்தை வரைய முற்பட்டுச் சத்தியத்தைச் சீர்குலைத்துவிட் டிருப்பதேபோலச் செய்துவிடக் கூடாதென்று எம்மால் இயன்றவரை பெரிதும் பிரயாசை யெடுத்துக்கொண் டிருக்கின்றோம். "தாருல் இஸ்லா"த்தில் மிக்க ஆராய்ச்சியுடனே வரிசைக்கிரமமாக ஆதியிலே வெளிப்படுத்தப் பட்டுவந்த விஷயத்தையெல்லாம் மீட்டும் புதிய ஆராய்ச்சியென்னும் "ஸர்ச் லைட்"டின் கீழ் முற்றுங் கொணர்ந்து, எம்முடைய மானுஷீகசக்திக் கியன்றவரை முழுதும் பரிசோதித்தே இக்கிரந்தத்தில் வெளியிட் டிருக்கின்றோம். அது வேயுமன்றி ஆதாரமற்ற கூற்றுக்களை ஆங்காங்கே அநேகமாக மறுத்தும் கூறியிருக்கின்றோம். பிற்பட்ட ஆராய்ச்சியால் விளங்கிய வேறுபல புதிய விஷயங்களையும் இக்கிரந்தத்தில் சேர்த்துள்ளோம். பொதுவாக, ரஸூலுல்லா(ஹ்)வின் பரிசுத்தமிக்க, மேலான, உண்மையான, உத்தமோத்தம உயரிய சரித்திரத்தையேதான் எழுதி வெளியிடவேண்டு மென்று யாம் பெரிதும் ஆதிமுதலே கங்கணம் கட்டிக்கொண் டிருப்பதால், எமது இந் நன்னூலான் நாயக மான்மியத்திற்கு அல்லாமா ஷிப்'லீ அவர்களால் இயற்றப்பெற் றுள்ள "ஸீரத்துன் னபீ"யையே முதனூலாகக் கொண்டுள்ளோம். அந்த "ஸீரத்துன் னபீ" யென்னும் உயரிய மேலான உத்தம உர்தூ கிரந்தமோ, எத்தனையோ மாபெரும் அரபீ, பார்ஸீ, ஆங்கிலம் ஆதிய பற்பல நூற்களையும் அதிகமதிகம் ஆராய்ந்து பன்முறையும் தெள்ளித் தெள்ளி, அவற்றினுள்ளே காணப்படும் முத்தேபோன்ற மெய்யான மணிகளே நிரம்பிய ஒரு தாவள்ய கோவையாகும். அன்றியும், உண்மையல்லாத விஷயங்க ளெல்லாம் அதிக தைரியத்துடனும் வீரிய ஸிம்ம கர்ஜனையுடனும் ஆண்டுக் கண்டிக்கப்பட் டிருக்கின்றன. இதுவு மல்லாது, :குர்ஆன் ஷரீ'புக்குப் பின்னே உண்மையானவை யென்றும் உயரிய கிரந்தங்க ளென்றும் முஸ்லிம்களால் எங்கும் ஏகமாக அங்கீகரிக்கப்பட் டிருக்கும் புக்'ாரீ, முஸ்லிம் போன்ற புனிதமான 'ஹதீ':து கிரந்தங்களிலிருந்தே அந்த

"ஸீரத்துன் னபீ" என்னும் மஹா கண்ணியம்வாய்ந்த சரித்திரகிரந்தம் அநேகமாக வரையப்பட் டிருக்கின்றதென்னும் விஷயம் ஒரு குறிப்பிடத் தக்க உண்மையேயாகும். சுருக்கிச் சொல்லுமளவில், சரித்திரம் இன்னதென்பதை ஒருசிறிதேனும் உணர்ந்துகொண் டிருக்கும் உத்தமர்கள்தாம் அதன் அருமையையும் பெருமையையும் நன்குணருதல் கூடும். இக் காரணம் பற்றியேதான் காலஞ்சென்ற போப்பால் மஹாராணியான ஸுல்தானு ஜஹான் பேகம் (மர்'ஹூமா) அவர்கள் ரூபாய் ஐம்பதாயிரம் அந்த "ஸீரத்துன் னபீ" என்னும் இன்றியமையாச் சரித்திர கிரந்தத்திற் காக நன்கொடை யளித்துதவி யிருக்கின்றனர்கள். அப்பெரிய கிரந்தத்தைப் பற்றி இன்னம் எத்துணை மட்டுமேனும் வரைந்துகொண்டே செல்லலாம்.

இதுகாறும் கூறிக்கொண்டு வந்த காரணங்களைக் கொண்டே "ஸீரத்துன் னபீ" என்னும் அம்மாபெரும் கிரந்தத்தையே யாம் முதனூலாகக் கொண்டு இந் "நபிகள்நாயக மான்மியத்"தை இயற்றி, நந் தமிழ் நாட்டு நேயர்களின் சமுகத்திலே நபி நாயகம் அவர்களின் உண்மையான சரிதையென்று விரித்துவைக்கத் துணிந்துள்ளோம். இன்னம், குறிப்பாக, நம் "ஸீரத்துன் னபீ"யுடனே "தாரீ(க்):குல் காமில்", அல்லது "இப்'னு அ:தீர்", "முரவ்விஜு'த் 'தஹப்'", "ஜாது'ல் மஆத்'", "ர'ஹ்மத்துல் லில் ஆ'லமீன்", "ஹத்'யுர் ரஸூல்", சய்யித்' அமீரலீ, ப்பீ.ஸீ., எல்எல். டீ., டீ. எல்., ஸீ.ஐ.ஈ., எழுதிய "The Spirit of Islam", மௌலானு மௌலவீ மு'ஹம்மத்'லீ, எம்.ஏ., எல்எல். பீ., எழுதியுள்ள "Muhammad the Prophet"-டும், "ஸீரத்தெ கை'ருல் ப'ஷரும்", மிர்'ஜா அபு'ல் 'ப'ஜ்ல் எழுதிய "The Life of Mohammad", ஈ.டைனேயும் ஸுலைமான் பி'ன் இப்'ராஹீமும் வெளியிட்டுள்ள "The Life of Mohammad the Prophet of Allah" (பத்துப் பவுன் விலையுள்ள விசித்திர கிரந்தம்), வாஷிங்ட்டன் இர்விங் வரைந்துள்ள "Life of Mohamet", ஸர் வில்லியம் மூய்ர் எழுதியுள்ள ஆங்கில நாயக சரிதை– பெரிது– ஆதிய பலப்பல கிரந்தங்களும் நம் பார்வையின் முன்னே வைத்துக்கொள்ளப் படாமல் இல்லை. மேற்கூறிய சரித்திர கிரந்தங்களிலுள்ள ஆதாரமான விஷயங்களையே அதிக பிரயாசையுடனே ஆராய்ச்சி செய்து, வடிக்கட்டி இந்நூலின்கண் வரைந்திருக்கின்றோம். எனவேதான், ஹிஜ்ரீ 1346, ஷவ்வால் மாதம் பிறை 13 அன்று (5-4-1928-இல்) ஆரம்பம் செய்யப்பட்ட இந்த நாயக மான்மியம் ஹி. 1349, ஷவ்வால் மாதம் பிறை 6 அன்று (25-2-1931) தேதியோடு எழுதி முடிவடைந் திருக்கின்றது.

இச் சரித்திரத்தின் ஆதிமுதல் அந்தம்வரை எல்லாம் அரபு பாஷைக் குரியனவாகவே இருந்து வருதலினால், இக் கிரந்தத்தினூடே நிரம்பிக் கிடக்கும் அரபுப் பெயர்களின் உச்சரிப்புக்களை யெல்லாம் அதிக சிரமத் துடனேயே அகராதிகளின் பேருதவி கொண்டு சேகரித் திருக்கின்றோம். இதற்காக, :காமூஸ், ஸு'ரா'ஹ், லிஸானுல் அ'ரப்', மிஸ்ப'ா'ஹ், அ'ஜ்ஹரீ முதலிய அகராதிகளினின்று அதிக பிரயோஜன மடைந் திருக்கின்றோம்.

தமிழ் மொழியில், "தவலை போய்விட்டது" என்று எழுத வேண்டுவதில் "வ"வ்வை விட்டுவிட்டால், "தலை போய் விட்டது" என்று அனர்த்தப் படுவதேபோல, அரபு பாஷையில் "அ'ரப்" என்பதற்கு "‘கரப்" என்றும், "உ'முக்" என்பதற்கு "‘குமுக்" என்றும், "ப'ால" என்பதற்கு "ப'ல்" என்றும், "ஸ"ன்'ஹ்" என்பதற் கீடாக "சுக்"கென்றும் வரைவதால் எத்துணைப் பெரிய வித்தியாசம் உண்டாகு மென்பதை அப் பாஷையை அறிந்தோர் நன்குணர்ந்து கொள்வார்கள். எனவே, இம் மாதிரியான தவறுகளும் இப்புண்ணிய நூலில் நுழைந்துகொள்ளா திருக்கவேண்டு மென்றே எம்மாற் கூடியவரை பெரிதும் பிரயாசை யெடுத்துக்கொண் டிருக்கின்றோம். இதனை விளக்கவே, "அரபுக்குத் தமிழை ஒப்பாக்கும் விதம்" என்னும் அட்டவணைத் தாளொன்றும் இதனுடனே சேர்த்திருக் கின்றோம். இதுகாறும் கூறிக்கொண்டு வந்தவைக ளெல்லாம் தேகத் திற்கும் மனத்திற்கும் அயர்ச்சி தரக்கூடியவை யாகும். ஆனால், இந்நாயக மான்மியத்தி னுள்ள விஷயசம்பந்தமாக எம்மட்டும் கஷ்ட மெடுத்துக் கொண் டிருக்கின்றோ மென்பதும், துன்பத்திற் குள்ளா யிருக்கின்றோ மென்பதும் எல்லாம்வல்ல அந்த அல்லா(ஹ்) ஒருவனுக்கே அதிகம் தெரியு மென்றே கூறி விடுக்கின்றனம்.

இன்னம், இக்கிரந்தத்தில் பற்பல விதமான சித்திரப்படங்களும் யாம் அச்சிட்டு வைத்திருக்கின்றோம். இவையனைத்தும் கிரந்தத்தின் அழகுக்காக மட்டுமேதான் சேர்க்கப்பட் டிருக்கின்றன வென்று எளிதினில் எண்ணி விடற்க. 'ஹிஜா'ஜ் தேசத்தை நேரில் சென்று தரிசிக்கக் கொடுத்துவைக் காத முஸ்லிம் நண்பர்கள் இற்றை நாளிலே அத் தேயத்தின்கண் காணப் பட்டுவரும் சிற்சில அம்சங்களைச் சித்திரத்தின் வாயிலாகப் பார்த்துக் கொள்வார்க ளாயின், அப்பண்டைக் காலத்திலே அப் பாமரதேசம் எவ்வா றிருந்திருக்கக்கூடு மென்பதை ஒருவாறு ஊகித்தறிந்து கொள்ளுதல் சாலு மென்பதே எமது முக்கிய நோக்கமாகும்.

எனவே, இத்துணைமட்டும் யாங்கள் எங்கள் புத்தியையும் சித்தத்தை யும் நேரத்தையும் செல்வத்தையும் செலவுசெய்து தாங்களெல்லீரும் கரத்தினில் ஏந்தியிருக்கும் இம் முதல்வெளியீட்டை 27-11-30-இல் அச்சிட எடுத்து, 19-3-32 தேதியோடு ஏராளமான செலவுடனே ஒருவாறு இதோ சமர்ப்பித் திருக்கின்றோம். இதற்குரிய என்று மழியா நன்மையை அந்த ஏகவல்லவன் ஒருவனே அளித்தருளுதல் சாலும். இம் முதல் வெளியீடே போல இதன் பின்னர் இன்னமிரண்டு வெளியீடுகளை வெளியிட உத்தேசங் கொண்டுள்ளோம். இவ்வாறு மூன்று வெளியீடுகளும் அச்சில் வெளி யானதன் பின்னரே எம்பெருமானின்(சல்) சரித்திரம் ஒருவாறு சம்பூர்ண மடைகின்றது. இம் முதல் வெளியீட்டில் ப'த்'ர் யுத்தம் தொடங்குமுன் வரை அதற்கு முன்னேயுள்ள விஷயங்க ளெல்லாம் அதிவிஸ்தாரமாக வரையப்பட் டிருக்கின்றன. இரண்டாவது வெளியீட்டில் ப'த்'ர் உ'ஹுத்'

அ'ஹ்'ஜாப்' முதலிய யுத்தங்க ளெல்லாம் எவ்வாறு நடைபெற்றன வென் பதும், நபிகள் நாயகம் மக்காவை எவ்வாறு கைப்பற்றினார்க ளென்பதும், அரப் நாடு முழுதிலும் தீ'னுல் இஸ்லாம் எங்ஙனம் பரவிச்சென்ற தென் பதும், அஃதாவது, ஹிஜ்ரீ 9-ஆவது ஆண்டுமுடிய நிகழ்ந்த சம்பவங்களை, இன்ஷா அல்லா(ஹ்) சேர்த்து முடிக்கலாமென உத்தேசித் திருக்கின்றோம். இறுதி மூன்றும் வெளியீட்டில் நபிகள் நாயகம் இறுதி 'ஹஜ்ஜு' ('ஹஜ்ஜத் துல் விதா'ஃ') செய்ததும், அம் மஹானுபாவரின் நிர்யாணமும், அவர்க ளுடைய சன்மார்க்க சற்குணங்களும், மற்றும் பலப்பல அருமையான விஷயங்களுடனே சேர்த்து வெளியிடப்படும். இவைகளை யெல்லாம் "பெரியவ" னுடைய பேருதவியைக் கொண்டே வெளியிட வேண்டுமென்று பெரிதும் கங்கணங்கட்டி நிற்கின்றோம். இத் திவ்விய கைங்கரியத்தை இனிது நிறைவேற்றி வைக்க வேண்டுவது அவ்வேக வல்லோனே யெனினும், அல்லாஹுத் தஆ'லா அடியார்கள் விஷயத்திலே தன்னுடைய காரியத்தில் ஒருவரைத் தூண்டியே முடித்துக் கொள்வது இயற்கையான மையின், இம் மாபெரும் சிரமசாத்தியமான காரியத்தை எந்தப் புண்ணிய வானை நல்லடியார்மீது சுமத்தி, எஞ்சியிருக்கும் இரண்டு வெளியீடுகளை யும் வெளிப்படுத்தப் போகின்றானோ? என்பது நாள் செல்லச் செல்லத் தான் நன்கு வெளியாகப் போகின்றது. பல்லாயிரக் கணக்கிலே பணத்தைச் செலவுசெய்து ஒரே இரவில் கண்ணுக் கழகாகக் கல்யாணங்களைச் செய்து விடலாம். நாயகத்தின் பெயரால், அவர்கள் மீதுள்ள மு'ஹப்'பத்தால் ஆயிரக்கணக்காகச் செலவுசெய்து ஆண்டுகள்தோறும் க'ந்தூரியும் செய்து வைக்கலாம். ஆனால், அநேக க'ந்தூரி செய்யும் கனவான்கள் பலபேர் சேர்ந்து பல்லாயிரக் கணக்கான ரூபாய்களைச் செலவுசெய்தாலும், இது போலுள்ள ஒரு சத்தியகிரந்தத்தை வெளியிடுதல் எளிதினில் இயலுமா வென்பதை அவரவரும் ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்கட்டும்.

"பல்கதிர் விரித்துத் தோன்றிப் பாடுசெய் கதிரே போல
மல்லல்நீர் உலகிற் றோன்றி மறைந்திடும் நும்மை விட்டுச்
செல்வமென் றுரைப்ப தற்குச் செல்வமென் றுரைக்கும் பேர்"

நன்றென்று ஒரு மஹா வித்வானும் கூறிப் போந்துள்ளார். குறளுக் குடையாரும்,

"கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ் செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று,"

என்று கூறியுள்ளார். ஆனால்,

"அறனீனும் இன்பமும் ஈனும் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்."—குறள்.

"கட்டின வீட்டிற்குப் பணிக்கு சொல்லுவதே" போன்று, கையா லொன்றும் ஆகாத வேறுசிலர் எமது இம்மாபெருங் கிரந்தத்தின்மீது தங்கள் காமாலைக் கண்ணோட்டத்தைச் செலுத்திக் குறைகள் பலகூறு

வதையே தங்கடன் எனக் குளறத் தலைப்படுவ ரென்பதை யாங்கள் முற்கூட்டியே உணராம லில்லை.*

" சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்,"

என்னுமா போன்று, அப் பதடிகளின் வெறுங்கூச்சலை யாம் ஒருசிறிதும் பொருட்படுத்தப் போவதில்லை. அவர்கள் கைங்கரியம் அதுதானே!

" பயனில்சொல் பாராட்டு வானை மகனெனல்,
மக்கட் பதடி யெனல்!"—ஆயின்,
" அரியவற்றுள் அரிது அழுக்காறு
வெல்வதே யாகும்."
" நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்,
அல்லது செய்தல் ஓம்புமின்!"—என்றார்,

அத் தகையாளர் போன்றோரைக் குறித்தே "புறநானூறு" என்னும் பழைய நூலிலும்.

நிர்மாண வேலை யொன்றும் செய்ய முற்படார்; ஆனால், நிக்கிரஹ வேலையில் முண்டர்களே!

எனினும், இன்ஸானுக்கு இயற்கையா யமைந்துள்ள மறதி அசக்தம் போன்ற பல குறைபாடுகளால் எமக்குத் தெரியாது ஏதேனும் இப்பெருங் கிரந்தத்தில் பிழை காணப்படின், அதனை நட்புட னெடுத்துக் காட்டும் நண்பர்கள் மாட்டுப் பெரிதும் நன்றிசெலுத்தக் கடமைப் பட்டுள்ளோம். இதன் ஒவ்வொரு 'பாரமும்' அச்சானதன் பின்னரும் ஆராய்ச்சி செய்தே சில பல விஷயங்களைத் திருத்தி யிருக்கின்றோம். இனியும் ஏதுமுளதேல் மன்னித்தருளுக!

"குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல், கற்றறிந்த மாந்தர் கடன்" அன்றோ?

" மன்பெரும் புவியினில் வாழு மாந்தரில்
துன்புறா தவரிலை; துன்பைத் துன்புறா
தின்பமே கொள்பவ ரிலங்கும் பொற்பதிக்
கன்பரா யிருப்பரென் றறிவு சொற்றதே." —சீறா.

'வஸ்ஸலாம் அ'லா மனித்தப'அ'ல் ஹுதா!

'ஹா'பி'ஜ், ஏ. என். மு'ஹம்மத் யூஸுப்
'பா'ஜில் (ப'ா:கவீ)

"தாருல் இஸ்லாம்" ஆபீஸ்,
சென்னை.—19-3-1932.

நறையூர், பா. தாவூத்ஷா, பீ.ஏ.,
காஷுலில்லா(ஹி).

---

* தம்மையும் ஒரு "தமிழெழுத்தாளர்" எனச் செய்துகொள்ள விழையும் முஸ்லிம்களுள் ஒருசிலர் உடனே தாவூத்ஷாவைத் திட்ட வேண்டும். அப்பா லவர் செந்தமிழாசிரியரே! இலக்கியப் பேராசிரியரே!!

# இரண்டாம் பதிப்பின் முகவுரை

இம் மான்மியத்தின் முதற் பதிப்பு ப'த்'ர் யுத்தத் துவக்கம் வரை முன்னர் 1932-இல் வெளியாகியிருந்தும், இன்றுகாறும் அதன் இரண்டாம் பதிப்போ, எஞ்சியிருக்கும் பகுதியோ அச்சிடத் தருணம் வாய்க்காமலே போய்விட்டது வருந்தத் தக்கதேயாம். இதுகாலை ஒருசில நண்பர்களின் பேருதவியால் இந்த இரண்டாம் பதிப்பு அல் அ'ஹ்ற 'ஜாப்' யுத்தம் முடிய (ஹிஜ்ரீ 6-ஆவது ஆண்டுவரை) உள்ள சரித்திரம் வரை 29 அதிகாரங்களை உடையதாய் 600 பக்கங்களுடனே அச்சிடப்பட் டிருக்கிறது. முன்னம் எண்ணியிருந்ததேபோல் இம் மாபெருங் கிரந்தம் மூன்று பாகங்களாக வெளியிடப்படாமல் இரண்டு பாகங்களுக் குள்ளேயே முடிக்கப்பட வேண்டுவதாயிருக்கிறது. எனவே, இதனையடுத்து வெளியாகப் போகும் இரண்டாம் பாகத்தில் 'ஹுதை' பி'ய்யா உடன்படிக்கை முதல் இறுதிவரை யுள்ள எஞ்சிய அதிகாரங்க ளெல்லாம் வெளிவருதல் கூடும். அது பொழுதுதான் நபிகள் நாயகம்(சல்அ'ம்) சரிதையையும் உண்மையான முழு விவரத்தையும் உள்ளவாறு உணர்ந்துகொள்ளப் போகின்றீர்கள். எத்துணைக் கெத்துணை இம் முதற் பாகத்தை இத் தமிழுலக மக்கள் அதிசீக்கிரத்திலே வாங்கிப் படிக்கின்றார்களோ அத்துணைக் கத்துணை "ஜல்தி"யிலே இதன் இரண்டாம் பாகமும் வெளிவர ஏதுவா யிருக்கும். எனவே, இம்முதற் பாகத்தைத் தாங்க ளெல்லீரும் ஆவலுடனே வாங்கிப் படிப்பதுடன்; தங்கள் நண்பர்களையும் வாங்கி வாசிக்கச் செய்வீர்களாக. இம் மஹா கிரந்தம் இதுகாலை வெளியாவதற்குப் பொருளுதவி புரிந்துள்ள சீதேவிகளுக் கெல்லாம் எல்லாம் வல்ல அல்லாஹுத் த'ஆ'லா அனவரதமும் அருள்புரிந் தருளுமாறு அவ் ஏகவல்லோனிடத்தே சதா சர்வகாலமும் து'ஆ' இறைஞ்சிக் கேட்பீர் களாக.

அவ்வாறு இந் நாயக மான்மியத்துக்கு அரும்பொரு ளுதவிய அன்பர் களின் நாமங்களாவன :

| | | |
|---|---|---|
| 1. | சாத்தான் குளம் (திருநெல்வேலி ஜில்லா) ஜனாப் A. E. M. யூஸுப் மரைக்காயரவர்களும், | ரூ. 5000 0 0 |
| 2. | கொழும்பு (டாம் ஸ்ட்ரீட்) ஜனாப் K. A. மு'ஹம்மத்'லீ சாஹிப்'வர்களும். | |

| | | |
|---|---|---|
| 3. சென்னை (அங்கப்ப நாய்க்கன் தெரு) ஜனாப் ஹாஜீ. S. மு'ஹம்மத்' ஜான் சாஹிப்'வர்களும், 4. கும்ப கோணத்தை யடுத்துள்ள சோழபுரம் ஜனாப் ஹாஜீ. சி. அ. மு'ஹம்மத்' இஸ்மாயீ'ல் சாஹி'பவர்களும். | ரூ. | 2500 0 0 |

[இந்தத் தொகைக ளெல்லாம் அப் பெரியார்களால் உபகார நிதியாய் உதவப்பட்டிருக்கின்றன.]

முன் பதிப்பைப் பார்க்கினும் இப் பதிப்பில் 184 பக்கங்கள் (9 அதிகாரங்கள்) அதிகமாகச் சேர்க்கப்பட் டிருக்கின்றன. அதைவிட இது கனத்திலும் அகலநீளத்திலும் பருமனிலும் மாபெருங்கிரந்தமாகவே மிளிர்ந்து வருகின்றது. இப்பதிப்பில் முன்னையைக் காட்டினும் மேலும் பல மூவர்ணப் படங்களும், மற்றும் பல சித்திரப் படங்களும் சேர்க்கப் பெற்றிருக்கின்றன. காகிதப் பஞ்சமும், அச்சுக்கூலி முதலியனவும் அதிகமதிகம் பெருகிக் கிடக்கும் இற்றை நாளில் இதன் கிரயம் மிகுந்துவிட்ட தென்று எவரும் எண்ணுதிருக்கக் கடவர். "புஸ்தகம் ஹஸ்தபூஷணம்" என்னுமா போன்று, இதன் நேர்த்திக்கும், பெருமைக்கும், பருமனுக்கும் இதன் விலை அதிகம் அன்றென்றே யாம் எண்ணுகின்றேம். இத்தகைய அரிய பெரிய நூலை எவரும் யாங்கணும் எளிதினில் கண்டுகொள்வது முடியாது.

இம் மாபெரும் கிரந்தத்தை ஆறுவார காலத்திற் குள்ளே அச்சிட்டு முடித்துக் கொடுத்த திருவல்லிக்கேணி கபீர் பிரிண்டிங் வொர்க்ஸ் சொந்தக்காரருக்கு எம்முடைய நன்றியும், இதனைப் படிப்பவர்களின் நன்றியும் உரியன வாகுக. இத் தமிழகத்தார் துரிதம் செய்வார்க ளாயின், இதன் இரண்டாம் பாகத்தையும் அன்னவர் இவ்வண்ணமே அதிசீக்கிரத்திலே அச்சிட் டுதவுவாரென்று யாமெல்லாம் திண்ணிதா யெண்ணிவிடலாம்.

இன்னணம்:
இஸ்லாத்தின் ஊழியன்,
[signature]

"தாருல் இஸ்லாம்"
30, சாந்தோம்,
சென்னை-4.
6—11—1947.

# பொருளடக்கம்

# அரபுக்குத் தமிழை ஒப்பாக்கும் விதம்

| உச்சரிப்பு | உச்சரிப்பின் சப்தம் | ஒத்த தமிழ் எழுத்து |
|---|---|---|
| அலி'ப் | அகர சப்தம் ... ... | அ |
| பே' | தம்பி என்பதிலுள்ள பி' சப்தம் (B) ... | ப' |
| ்தே | தலை என்பதிலுள்ள த சப்தம் ... ... | 'த |
| ்:தே | நுனிநா மேல்வாய் முன்பல்லின் முனையை மிருதுவாகப் பொருந்த அழுத்தி உச்சரிக்கும் சப்தம் Nothing ... | :த |
| ஜீம் | ... ... ... ... | ஜ |
| 'ஹயெ | 'ஹ வை அடித்தொண்டையால் உச்சரிக்க வேண்டும் ... | 'ஹ |
| க'யெ | அடித்தொண்டையைக் காறுவதால் உண்டாகும் சப்தம்... | க' |
| த'ால் | தானம் என்பதிலுள்ள த' சப்தம் ... ... | த' |
| 'தால் | மனிதன் என்பதிலுள்ள 'த சப்தம் ... ... | 'த |
| ரே | ... ... ... ... | ர |
| ்'ஜ | 'ஜ சப்தத்தை நுனிநாவால் உச்சரிக்க வேண்டும் (Z) ... | 'ஜ |
| ஸீன் | ... ... ... ... | ஸ |
| ஷீன் | ... ... ... ... | ஷ |
| ஸ்'வாத்' | ஸ்'வா என்பதைச் சேர்ந்தாற்போல் உச்சரிக்க வேண்டும் | ஸ'(ச) |
| ல்'வாத்' | ல்'வா என்பதைச் சேர்ந்தாற்போல் இதழ் குவித்து உச்சரிக்க; இதன் சப்தம் ளகரத்துக்கும் லகரத்துக்கும் இடையி லிருக்கும் ... ... | ல' |
| ;த்ஒயெ | ;த்ஒயெ என்பதை நெருக்கி உச்சரிக்க வேண்டும் ... | ;த |
| ள்'ஒயெ | ள்'ஒயெ என்பதை நெருக்கி உச்சரிக்க வேண்டும்; ... இது ளகரத்தினும் சற்றே மெல்லிய சப்தமாகும் ... | ள' |
| அ'ய்ன் | அகர சப்தத்தை அடித் தொண்டையால் ஆழமாக உச்சரிக்க வேண்டும் ... ... | அ'∴ |
| ;கய்ன் | கனம் என்பதிலுள்ள வடமொழி க சப்தத்தை அடித் தொண்டையால் உச்சரிக்க வேண்டும். ... | ;க |
| ்'ப | இங்கிலீஷ் ய'ப் என்னும் சப்தம் இது (F) ... | 'ப |
| :கா'ப் | தமிழ்க் ககரத்தை அடித்தொண்டையால் உச்சரிக்க | :க |
| கா'ப் | கவலை என்பதிலுள்ள க சப்தம் ... ... | க |
| லாம் | ... ... ... ... | ல |
| மீம் | ... ... ... ... | ம |
| நூன் | ... ... ... ... | ந(ன) |
| வாவ் | ... ... ... ... | வ |
| ஹே | ... ... ... ... | ஹ |
| ஹம்,ஜா | கால் மாத்திரையாக அகரத்தைக் குறுக்கி உச்சரிக்க | 'அ 'உ |
| ஏ | ... ... ... ... | ய |

# இறை வணக்கம்

"திருவினுந் திருவாய்ப்
பொருளினும் பொருளாய்த்
தெளிவினுந் தெளிவதாய்ச்
[சிறந்த

மருவினு மருவாய்
அணுவினுக் கணுவாய்
மதித்திடாப் பேரொளி
[யனைத்தும்

பொருவினும் பொருவா
வடிவினும் வடிவாய்ப்
பூதலத் துறைந்தபல்
[லுயிரின்

கருவினுங் கருவாய்ப்
பெருந்தலம் புரந்த
கருத்தனைப் பொருத்துதல்
[கருத்தே."

R. Venkatachari

بسم الله الرحمن الرحيم

نحمده ونصلي ونسلم على رسوله محمد خاتم النبيين

# நபிகள் நாயக மான்மியம்

## அதிகாரம் —1

### அ’ரப்’ நாடும் அ’ரபி’ய்யாக்களும்

" நிச்சயமாகவே, மனிதர்களு(டைய வணக்கத்து)க்காக நிறுவப்பெற்ற முதல்வீடானது ப’க்காவிலுள்ள தா(ன கஃ’ப’ாவேயா)கும்; (அஃது) ஆசீர்வதிக்கப் பட்டதாகவும், உலகமக்களுக்கு நேர்வழிகாட்டி யாகவும் இருந்துவரு கின்றது."— (:குர். 3 : 95)

பூவுலகின்கண் நீர்நிலை யொழிய நிலப்பரப்பாய்க் காணப்படும் சற்றேறக் குறைய ஐந்தரை கோடி சதுரமைல் விஸ்தீரணமுள்ள பூபாகத்தை* இக் காலத்தில் ஐந்து கண்டங்களாக ஆன்றோர் அமைத் திருக்கின்றனர்; அவற்றுள்ளே ஆசியாகண்ட மென்பது ஒருகோடியே எழுபத்தைந்திலக்ஷம் சதுரமைல் விஸ்தீரணமுள்ள ஒரு பெரிய பூபாகமாக அமைந்திருக்கின்றது. இவ்வாசியா கண்டத்தின் தென்மேற்கு மூலையிலே ஜ‘ஜீர(த்)துல் அ’ரப்’ அல்லது அராபிய தீவென்பது ஆசியாவுக்கும் ஆபிரிக்காவுக்கும் ஐரோப்பா வுக்கும் நடுமையமாக நிலைநிற்கின்றது; புராதனகாலத்திலே அறியப்பட் டிருந்த உலகத்தின் மத்திய பாகமாகவே இந்த ஜ‘ஜீர(த்)துல் அ’ரப்’ காணப் படாநின்றது; த’ஜ்லா (தைக்ரீஸ்) நதியும், ‘புராத் (யூ‘புரத்தீஸ்) நதியும் இதன் வடக்கெல்லையாய் மேற்கிலிருந்து கிழக்கு நோக்கி ஓடுகின்றன; கிழக்கில் அவ்விரு நதிகளும், பாரசீகக் குடாக்கடலும் எல்லைகளாக அமைந் திருக்கின்றன; தெற்கில் இந்து மஹாசமுத்திரமும், மேற்கில் செங்கடலும் மத்திய தரைக்கடலும் காணப்படுகின்றன. எனவே, ஜ‘ஜீர(த்)துல் அ’ரப’ானது நான்குபுறத்தும் நதிகளாலும் கடல்களாலுமே சூழப்பட்டிருத்

---

* பூகோளத்தின் முழு விஸ்தீரணம் 19,69,50,000 சதுர மைல். இதில் நீர்ப் பரப்பு 14,11,24,980 சதுர மைல்; ஆகவே, நிலப் பரப்பு மட்டும் 5,58,25,020 சதுர மைலாம்.

தலினால்தான் இப்பூபாகத்தை ஒரு தீபகல்பம் என்று கூறுது, ஒரு தீப மென்றே பண்டைச் சரித்திராசிரியர்களும் பூகோள சாஸ்திரிகளும் பெயரிட் டழைத்திருக்கிறார்கள்; இந்நான்கு எல்லைகளுக்குள் மெஸபொட்டேமியாவும் (இ'ராஃகும்) ஷாமெ அ'ரபு'ம் (அராபிய சிரியாவும்) சேர்க்கப்பட் டிருக் கின்றன. ஆனால், இ'ராஃகையும், ஷாம் தேயத்தையும் இக்காலத்திய 'தேசப் படமு' அரப்தேசத்துடனே சேர்த்துக் காட்டுவதில்லை. இவ்விரு நாடுகளை யும் பிரித்துவிட்டபின்பு எஞ்சியிருக்கும் பூப்பாகமானது பன்னிரண்டிலக்ஷம் சதுரமைல் கொண்ட ஒரு தீபகற்ப மணற்பிரதேச முள்ளதாய்ப் பரந்து காணப்படாநின்றது; இதன் மூன்று புறத்தும் சமுத்திரங்களும், வட பாகத்தில் மட்டுமே மேற் கூறியவண்ணம் பூபாகமும் சூழ்ந்திருக்கின்றன; இத்தன்மைத்தாய பூபாகமே புராதன பாபிலோனியா வாகவும், சிரியா வாகவும் காணப்படாநின்றன. எனவே, சரியான நடுநா டென்பது வடக்கில் அவ்விரண்டு நாடுகளாலும், கிழக்கில் பாரசீகக் குடாக்கடல் உ'ம்மான் குடாக் கடல் ஆகிய இரண்டு உவர்நீர்க் கடல்களாலும், தெற்கில் இந்து மஹா சமுத்திரத்தாலும், மேற்கில் செங்கடலாலும் சூழப்பட் டிருக் கின்றது; இப்படிப்பட்ட எல்லைகளால் சூழப்பெற்றிருக்கும் அந்தத் தீபகற்பத்தின் பெயரையே, அ'ரப்'* நாடென்று ஆதிகாலமுதல் ஆன்றோர் அழைத்து வருகின்றனர்; இந்நாட்டைத் தௌராத் முதலிய பழைய வேதங் களில் 'பாரான் தேசமென்று வழங்கி யிருக்கின்றனர்.

["அல்லா(ஹ்)வின் ஜோதி ஸீனாய் மலையில் தோன்றி, 'ஸாஈ' ரென்னுங் குன்றில் வளர்ந்து, 'பாரான் உச்சியில்† முதிர்ச்சி யடைந்தது," என்பது ஒரு பழங்கவி.]

அ'ரப்' தேசத்தின் மூன்றி லொரு பாகம் மணல்வெளிக ளாகவே அமைந் திருக்கின்றது; அவற்றுள்ளே மிகப் பெரியது அத்'த்'ஹ்னா என்று அழைக்கப்படுகிறது; இது தெற்குப் பகுதியின் மத்திய பாகத்தில் பரந்து கிடக்கின்றது. இத்துணைப் பெரிய அ'ரப்' தேச முழுதும் பெரிய நதி யொன்றும் காணப்படுவ தில்லை. ஆனால், அங்கங்கே காணப்படும் சிற்றாறு கள்தாம் இம் மணற் பிரதேசத்துக்குச் சிறிது பசுமையை யளிக்கின்றன; இவற்றினுள் சிற்சில ஓடைகள் அத்தேயத்தின் மணல் வெளிகளுள் சென்று, ஆங்காங்கே சுவறிப் போகின்றன; ஆனால், மற்றை யாறுகள் வளைந்து வளைந்து சென்று, இறுதியில் கடற்கரையையும் எட்டுகின்றன. இத்தேசத்தில் மழை யென்பது மிகமிக அரியதா யிருக்கும்; இந்நாட்டி

---

* "அ'ரப்'" என்பது மதுரமான சாதுர்யம் பொருந்திய பாஷையைக் குறிக்கும்; இத்தகைய பாஷைக்குரியார் வசிக்கும் நாடு அ'ரப்' என்று அழைக்கப்படுகிறது. "அ'ரபா'" என்பதற்குப் பாலைவனமென்றும் ஒரு பொருளுண்டு.

† "ஸாஈ'ர்" என்பது பலஸ்தீனிலுள்ள ஒரு குன்றென்றும், 'பாரான் என்பது மக்கத்தி லுள்ள ஒரு குன்றென்றும் யா(க்):கூத் கூறுகின்றார்.—முஃ'ஜமுல் பு'ல்த'ான். எனவே, ஸாஈ'ரென்பது ஈ'ஸா நபி பிறந்து வளர்ந்து உபதேசித்த பிராந்தியத்தைக் குறிக்கும்.

லுள்ள ஆகாயமானது எப்பொழுதும் உலர்ந்து வறட்சியாகவே யிருக்கும். ஆனால், போதுமான ஜலவசதியுள்ள சிற்சில இடங்களில் மட்டும் சுகாதாரம் சிறிது சௌகரிய முள்ளதாய்க் காணப்படும். இத்தேசத்தின் குறுக்கே தெற்கு வடக்காய் நீளத்தில் அமைந்துள்ள மலைத்தொடரொன்று காணப் படுகிறது; இதன் பெயர் ஜப'லுஸ்ஸராத் தென்று சொல்வர்; இதன் நெடிய கொடுமுடியின் உயரம் 8,000 அடியாம். இத்தேசத்தின் முக்கிய விளை பொருள் பேரீந்தின் கனியாகும். பண்டைக் காலத்தில் அ'ரப்' தேசமானது தங்கத்துக்கும், வெள்ளிக்கும், விலையுயர்ந்த கற்களுக்கும், வாசனைத் திரவியங்களுக்கும் பெயர்பெற் றிருந்தது. இங்கே காணப்படும் விலங் கினங்களுள் ஒட்டகமே மிக்க உபயோகமானதும், அம்மணல் வெளிகளுக்கு மிகவும் அருமையானதுமாய் அமைந்திருக்கிறது. அ'ரப்' நாட்டுக் குதிரை யும், தன்னுடைய அழகிலும் அந்தஸ்திலும் வேகத்திலும் விலைமதிப்பிலும் இந் நானிலத்தின் வேறெந்தப் பகுதியிலு முள்ள மற்றைக் குதிரைகளை யெல்லாம் மிகைத்துநிற்கின்றது.

இக் காலத்திலுள்ள பூகோளசாஸ்திரிகள் இ'ராக:கையும், ஷாம் தேசத் தையும் அ'ரப்' தேசத்துடன் சேர்க்காமற் போயினும், அவ்விரு நாடுகளும் ஜ'ஜீர(த்)துல் அ'ரபு'டன் பண்டைக் காலங்களில் சேர்க்கப்பட்டே வந்திருக்கின்றன. அவற்றுள் இ'ரா:க் தேசம் பாரசீகத்தின் எல்லைவரை நீண்டிருக்கிறது. இஸ்லாத்தின் முக்கிய கல்விஸ்தானங்களாய் நெடுநாள் மட்டும் நிலைத்திருந்த ப'ஸராவும், கூ'பாவும், இத் தேசத்திலேதான் இரண்டாவது க'லீ'பாவான உ'மருப்'னுல் க'த்தாப்' அவர்களுடைய ஆட்சியின்போழ்து உண்டாக்கப்பட்டன. ஷாம் தேசமென்பது வடக் கெல்லையில் இருந்துகொண்டு, வடமேற்கே 'ஹலப்' (அலெப்போ) வரை நீண்டிருக்கிறது. இதனால்தான் அ'ரப்' பூகோள சாஸ்திரிகள் இந்தத் தீவின் வடக்கெல்லையாக 'புராத் நதியைக் கூறியிருக்கிறார்கள். இப் பூபாகத்தின் மேற்கிலேதான் மூஸாநபி அவர்களுக்கு வேதம் வெளியான ஸீனாய் மலை அமைந்திருக்கிறது. இத் தேசத்தில்தான் அ'மாலீ:க் ஜாதி யினர் முன்னொரு காலத்தில் தங்களுடைய பெயர்போன மஹாராஜ்யத்தை நிருமித்திருந்தார்கள்.

அ'ரப்' தேசமானது பூசாரத்திலும், சீதோஷ்ண நிலைமையிலும், நாட்டுமக்களின் தோற்ற பேதத்திலும் ஒன்றுக்கொன்று மாறுபட்டிருக்கக் கூடிய பல மாகாணங்களாக அக்காலத்தில் பிரிந்துகிடந்த தென்னலாம்.

இ'ப்'ரானீ பாஷையிலிருந்த 'தவ்ராத் வேதத்தில் குறிக்கப்பட்டிருக்கும் ஏதோமியர்களும், மிதியானியர்களும் புராதன காலத்தில் ஜீவித்திருந்த மலைப்பிராந்திய மானது அ'ரப்'தேசத்தின் வடபாகத்தில் இருந்துவருகிறது. அதற்கிப்பா லுள்ள அ'ரப்' தேசம் பல பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருக் கிறது: அவற்றுள் 'ஹிஜா'ஜ்— (தடை) என்னும் மாகாணத்திலேதான் புண்ணிய ஸ்தலமாகிய 'ஹரம் ஷரீ'ப் அமைந்திருக்கிறது; 'ஹரம் (தடுக்கப்

பட்டது, அல்லது பரிசுத்தமாக்கப்பட்டது) என்னும் பெயரானது ஆதி காலமுதல் அப்பகுதிக்கு அளிக்கப்பட் டிருக்கிறது ; என்னெனின், அப் பகுதியானது அக்கால முதலே அ’ரபி’களால் மிக்க மரியாதையுடனே கொண்டாடப்பட்டு வந்திருக்கிறது ; அவ்விடத்திலே எப்படிப்பட்ட சண்டைகளும் சச்சரவுகளும் நிகழ்த்தப்படக் கூடாவென்று தடுக்கப் பட்டிருக்கின்றன. இந்த ‘ஹரம் ஷரீ‘பின் எல்லைக்குள்ளேதான் கஃ’பா வென்னும் பரிசுத்த ஆலயமும் அமைந்திருக்கிறது. இந்த ‘ஹிஜாஜ’ஜத் தான் ‘பாரானென்று எஹூதிகளின் ‘தவ்ராத் கூறியிருப்பதாகப் பலரும் அபிப்பிராயப் படுகின்றனர். இந்த ‘ஹிஜா‘ஜ் மாகாணமானது ஸவீ‘ஜ் (ஸூயெஸ்) சந்தியிலிருந்து தென்கோடியில் இந்துமஹா சமுத்திரம் வரை பரவியிருக்கக் கூடிய மலைத்தொடருக்கும், செங்கடலுக்கும் இடையில் தெற்கு வடக்கில் நீண்டிருக்கிறது. சில இடங்களில் இம்மலைத் தொடர் கடலோரமாய் நெருங்கியிருக்கிறது ; மற்றுஞ் சில இடங்களில் இது சமுத் திரத்திலிருந்து நெடுந்தூரம் ஒதுங்கிச் செல்கிறது. இப்படிப்பட்ட இடை வெளிகளில் குடியிருப்பதற்கும் பயிர் செய்வதற்கும் அருகதையற்ற பாலை நிலங்களாகிய வனாந்தரப் பிரதேசத் தாழ்நிலங்கள் நெடிது நெடிதாய்க் காணப்படுகின்றன. ஆனால், மாரிக் காலங்களில் சிற்சில வேளைகளில் பெய்யும் மழை நீரினால் ஆங்காங்கே பசிய நீர்நிலைகளும், வளமான நிலத் தாக்குக்களும் சிறிது காணப்படுவது முண்டு. மிகப் புராதன காலத்தில் ய:த்ரிப்’ என்று அழைக்கப்பட்டு வந்து, பிறகு நபிகள் நாயகம் அங்கே சென்று குடியேறிய பின்பு மதீ’னா (மதீ’ன‘துன் னபீ’) என்று வழங்கப்பட்டு வரும் அந்தக் கீர்த்திவாய்ந்த பெரும் பட்டணமும், நபிகள் திலகம் அவர் களின் திருவவதார ஸ்தலமாகிய மக்கமா நகரும், செழிப்புள்ள :தாயி‘பும் ‘ஹஜ்ஜுக்குச் செல்லும் முஸ்லிம் யாத்திரிகர்கள் சென்றிறங்கும் துறை முகமாகிய ஜித்’தா வென்னும் கடற்றுறைப் பட்டினமும் இந்த ‘ஹிஜா‘ஜ் மாகாணத்திலேதான் அமைந் திருக்கின்றன. ஜித்’தாவிலிருந்து மக்கா வுக்குச் செல்லச் சற்றேறக்குறைய ஐம்பதுமைல் தூரமுள்ள ஒரு வனாந்தரப் பிரதேசத்தைக் கடந்தே செல்ல வேண்டும். நேரே மதீ’னாவுக்குச் செல்ல வேண்டுமாயின், யன்பூ’ஃ’— (என்போ) என்னும் துறைமுகத்தி லிறங்கிச் செல்ல வேண்டும். ‘ஹிஜா‘ஜின் கிழக்கெல்லையில் நஜ்தெ’ன்னும் (பீடபூமி) மாகாணமும், தெற்கில் யமன் மாகாணத்தின் ஒரு பகுதியாகிய அ’ஸீரும் அமைந்திருக்கின்றன.

அ’ரப்’ தேயத்தின் இரண்டாவது முக்கிய மாகாணமாயிருப்பது அத் தீவின் தென்மேற்கு மூலையிலுள்ள “யமன்” என்னும் பகுதியே யாகும். இதன் கிழக்கில் ‘ஹல’ரமௌத்தும், அ‘ஹ்:கா‘பும் பாகம் பெற்றிருக் கின்றன. ‘ஹிஜா‘ஜின் தென் பாகத்திற்குத் “திஹாமா” என்று பெயர் சொல்வர் ; இத் திஹாமாவில்தான் மக்கமா நகரும், ஜித்’தாவும் அமைந் திருக்கின்றன. இதிலும் யமன் தேயத்தின் பகுதியும் சிறிது கலந்திருக்

கிறது. யமனுக்குக் கிழக்கில் இந்து மஹா சமுத்திரக் கரையோரத்திலே அமைந்திருக்கும் பகுதிக்குத்தான் 'ஹல'ரமௌத்தென்று பெயர் சொல்வது வழக்கம். பொதுப்படையாகக் கூறுமிடத்துத் தென் அ'ரப்' நாட்டிற்கே யமனென்று பெயர் சொல்வதுண்டு; எனவே, 'ஹல'ரமௌத்தும், அதன் கிழக்கி லுள்ள ம'ஹ்ராவும் இந்த யமனில் சாரும். ஜ'ஜீர(த்)துல் அ'ரப்' முழுதிலும் யமன் மாகாணமே மிக்க நீர் வளமும், நில வளமும் பொருந் தியதாய் அமைந் திருக்கிறது. என்னெனின், நீர்வளமுள்ள இடங்களில் மட்டுமே நிலவளமும் அதிகரித்துக் காணப்படுகின்றது. யமன் மாகாணத் திலுள்ள "ஜிப'ாலுல் யமன்" என்றழைக்கப்படுகின்ற மேட்டு நிலமானது மிகஉயரமா யிருக்கிறது; அதில் அதிக விசாலமான நீர்வளம் பொருந்திய பல பள்ளத்தாக்குக்களும் அதிகமாயுண்டு. இக் காரணத்தினால்தான் யமன் மாகாணம் மகா நாகரிகமுள்ளதாய் அமைந்திருக்கிறது. இக்காலத் திலும் அத்தேசத்தின் புராதனக் கட்டிடங்களின் அடையாளங்களுள் சிற்சில ஆங்காங்கே காணப்படுகின்றன. புராதன காலத்தில் இத்தேசத்தில் சுமார் இருபதுக்கு மேற்பட்ட கோட்டைகளும், அவற்றைச் சார்ந்த கொத்தளங்களும் மிக ரம்மியமாய் அமைந்திருந்தன வென்று சரித்திராசிரி யர்கள் சாற்றியிருக்கின்றார்கள். இம் மாகாணத்தில் மலைகளிலிருந்து உற்பத்தியாகிவரும் ஜலங்களைத் தேக்கித் திரட்டி, ஆங்குள்ள நிலங்களுக்குப் பாய்ச்சும் பொருட்டுப் பெரும்பெரும் அணைகளெல்லாமும் முற்காலத்தில் கட்டப்பட்டிருந்தன. அப்படிப்பட்ட அணைகளுள் மிகப் புகழ் படைத்தது, ம'ஆ'ரிப்' என்னும் பேரணையாகும். இதன் விநாசத்தைப் பற்றித்தான் ஆண்டவன் தனது திருமறையில் 'பஅ'ஃரலூ' 'பஅர்ஸல்னா அ'லைஹிம் ஸய்லல் அ'ரிமி* என்று (34 : 16-இல்) கூறியிருக்கிறான். பண்டைக் காலத்தில் அ'ரப்' தேசத்திற்குப் பெரும் புகழை அளித்துவந்த வாசனைத் திரவியங்களும், நவ ரத்தின வகைகளும், மற்றுமுள்ள கனிப் பொருள்களும் இந்த யமன் மாகாணத்தி லிருந்துதான் ஏற்றுமதியாயின. ஆ'தெ'ன்னும் ஜாதியாரின் புஜபல பராக்கிரம முள்ள சாம்ராஜ்யமும் இவ்விடத்திலேதான் நிர்மாணிக் கப்பட் டிருந்தது. இதைப்பற்றிய பிரஸ்தாபமும் :குர்ஆன் ஷரீ'பில் காணப்படாம லில்லை (7 : 65). அவர்கள் ஆண்டுவந்த ராஜ்ய பாகத்துக்கு அ'ஹ்:கா'ப் என்று பெயர் வழங்கப்படுகிறது (46 : 21). அ'ஹ்:கா'ப'னும் பாலைவனம் உ'ம்மானிலிருந்து 'ஹல'ரமௌத் வரை பரந்திருந்ததென்று இமாம் 'பக்'ருத்'தீ'ன் ரா'ஜீ இயம்பியிருக்கின்றார். முன்னம் விவரித்தவாறே 'ஹல'ரமௌத் தென்பது யமனின் ஒரு பகுதியா யிருந்துகொண்டு, இந்து மஹா சமுத்திரக் கரையோரத்தில் கிழக்கு மேற்காய் அமைந்திருக்கிறது.

* "ஆனால், அவர்கள் புறக்கணித்து விட்டார்கள்; ஆகையால், நாம் அன்னவர்கள்மீது தடுத்து நிறுத்தமுடியாத பெருவெள்ளத்தை யனுப்பினோம்." இவ்வணை ஸப'ாவி லிருந்தது; இது ஸன்ஆ'விலிருந்து மூன்றுநாட் பிரயாணத் தொலைவில் இருந்தது. ஸப'ா நகர் ப'ல்:கீஸ் ராணியின் தலைநகரா யிருந்துவந்தது.

யமனின் தலைநகரம் ஸன்ஆ' என்பதாகும்; அ'தந்'ன் (ஏடென்) என்பது அம் மாகாணத்தின் துறைமுகமாகும். ஸன்ஆ'வுக்கு வடக்கே நஜ்ரான் என்னும் ஒரு சிறு மாகாணம் அமைந்திருக்கிறது; அங்கே தீ'னுல் இஸ்லாத்திற்கு முன்னரே கிறிஸ்து மதம் சிறிது பரவியிருந்தது. அவ்விடத்தி லிருந்துதான் நபிகள் பெருமானிடம் ஒரு தூதுகோஷ்டி வந்தபோது, அக்கோஷ்டியினர் பிரார்த்தனை புரிந்துகொள்ளும் பொருட்டு நபிகள் திலகம் (சல்) தங்கள் மஸ்ஜிதி'ல் இடங் கொடுத்தார்கள். நஜ்ரானுக்கு வடக்கில் அ'ஸீர் மாகாணம் அமைந்து கிடக்கிறது.

அ'ரப்' தேசத்தின் முக்கிய மூன்றுவது பகுதியானது நஜ்தெ'ன்று அழைக்கப்படுகிறது; இம்மாகாணம் ஜப'லுஸ்ஸராத்தி லிருந்து கிழக்கு முகமாய் அ'ரப்' தேசத்தின் உட்பிரதேசத் துள்ளே சென்று நுழை கிறது; அ'ரப்' தேசத்தின் மத்திய பாகத்தைத் தன்னுள் அடக்கிக்கொண்டு, கிழக்கே பாரசீகக் குடாவிலிருக்கும் அல் அ'ஹ்ஸா என்னும் அல் ப'ஹ்றை னுக்குச் சமீபத்திலுள்ள பாலைவனம்வரை அகன்றிருக்கும் மேட்டு நிலமே நஜ்த்'ாகும். அது சமுத்திர மட்டத்தைக் காட்டினும் மூவாயிரம், நாலாயிரமடி உயரமுள்ள வளம்பொருந்திய ஒரு பீடபூமியா யிருக்கிறது. இப்பிராந்தியத்தில் மலைகளும் கெபிகளும் மணல்வெளிகளும் ஆங்காங்கே அமைந்து கிடக்கின்றன. இன்னம், குளிர்ச்சியான சோலைக ளடர்ந்த நீர் நிலைகளும் அடிக்கடி காணப்படுவ துண்டு. இப்படிப்பட்ட இடங்களே அந்தப் பாலைவனத்தில் அலைந்து திரியும் வனவாசிகளுக்குப் பாதுகாப்பான பத்திரஸ்தலங்களாய்க் காணப்படுகின்றன. இவ்விடத்தில்தான் :கத்'பான் என்னும் கூட்டத்தினர் வசித்து வந்தனர்; அவர்களை ஒறுக்கும் பொருட்டுத் தான் நபிகள் பெருமானும் ஒரு முறை படையெடுத்துச் செல்லும்படியான ஆவசியகம் ஏற்பட்டது. அதன் மூன்றெல்லைகளிலும் மணல்வெளிகளே சூழ்ந் திருக்கின்றன; ஆனால், தெற்கெல்லையில் மட்டும் யமாமா பிரதேசம் வளைந்திருக்கிறது; பொய்த் தீர்க்கதரிசியாகிய முஸைலமா என்னும் புளுகன் தோன்றிய ப'னீ'ஹனீ'பா என்னும் கூட்டத்தினர் இவ்விடத்திலேதான் வசித்து வந்தார்கள். நஜ்து'க்குக் கிழக்கில் அல் அ'ஹ்ஸாவுக்கு இடையில் அ'ரபி'களால் ந'பூதென்று வழங்கப்படும் பாகம் ஒன்று அமைந்திருக்கிறது.

அ'ரப்' தேசத்தின் தென்கிழக்கு மூலையில் உ'ம்மான் குடாக்கடலோர மாய் ம'ஹ்ராவுக் கப்பால் உ'ம்மான் மாகாணம் விரிந்திருக்கிறது; இதன் தலைநகரம் மஸ்:கத் என்பதாகும். அதில் பெயரளவில் மட்டும் இப்பொழுது ஒரு ஸுல்த்தான் நியமிக்கப்பட்டிருக்கிறார். உ'ம்மானுக்கு வடக்கே அல் அ'ஹ்ஸா என்று சொல்லப்படுகிற அல் ப''ஹ்றைன் என்னும் பகுதி அமைந் திருக்கிறது; இது விலையுயர்ந்த முத்துக்களுக்குப் பெயர்போன மாகாண மாகும். இதனருகிலேதான் முன்னொரு காலத்தில் பெயர் பெற்றிருந்த 'ஹீரா என்னும் ராஜ்யத்தின் ஸ்தானம் இருந்துவருகிறது.

சாலி'ஹ்நபி அவர்கள் அனுப்பப்பட்ட ஜாதியாராகிய :தமூதெ'ன்னும் வர்க்கத்தினர் வசித்துவந்த ஹிஜ்ர் என்னும் பகுதி மற்றொரு முக்கிய ஸ்தலமாகும். இது மதீ'னாவுக்கு வடக்கே அமைந்திருக்கிறது. 'தபூ'க்கின்மீது படையெடுத்துச் சென்றக்கால் நபிகள் நாயகம் இவ்வழியே சென்றிருக்கிறார்கள். 'தபூ'க்கும் ஹிஜ்ரும் இப்பொழுது 'ஹிஜா'ஜ் ரெயில்வேயில் இரண்டு ஸ்டேஷன்களா யமைந்திருக்கின்றன. ஹிஜ்ருக்கு மேற்கில் ஷுஐ'ப்' நபி அவர்கள் வசித்துவந்த மத்'யன் என்னும் பகுதி காணப்படுகிறது. மதீ'னாவுக்கு வடக்கில் கை'ப'ர் என்னுமிடம் அமைந்திருக்கிறது; இது முற்காலத்தில் எஹூதிகளின்— (யூதர்களின்) முக்கியஸ்தலமாய் இருந்து வந்தது.

நஜ்து'க்கு வடக்கேதான் ஷாம் மாகாணம் காணப்படுகிறது. வடகிழக்கில் இ்'ரா:கின் பாலைவனங்கள் (ப'ரிய்ய'துல் இ்'ரா:க்) 'புராத் நதியின் மேல்கரைமீது அமைந்திருக்கும் வளம்பொருந்திய சவாதின் (ஷால்டியாவின்) எல்லைவரை பரந்து கிடக்கின்றன. அ்'ரப்' தேசத்தின் தெற்கேதான் த'ஹ்னா வென்னும் பெரிய பாலைவனம் விரிந்துகிடக்கின்றது. இது நஜ்தை' யும், 'ஹல'ரமௌத்தையும், ம'ஹ்ராவையும் பிரித்திருக்கிறது.

செங்கடலிலிருந்து ஐம்பது மைல் தூரத்திலும், ஜப'லுல் :குராவின் கருங்கற் பாறைகளிலிருந்து முப்பது மைல் தூரத்திலும் மக்கமா நகரைச் சூழ்ந்துள்ள 'ஹிஜா'ஜின் பகுதியானது சமபூமியாயில்லாமல் கரடுமுரடான கற்பாறையா யிருக்கிறது. சூரியவெப்ப முழுதையும் மகா கொடுமையுடன் பிரதிபிம்பித்துக் காட்டக்கூடிய வெறுங் கருங்கற் பாறைகளும், ஆடுமாடுகளுக்குப் போதுமான பசும்புற்களையும் விளைவித்துக் கொடுக்காத பாலைவனங்களாகிய பள்ளத்தாக்குக்களும், எப்பொழுதும் உலர்ந்துகிடக்கும் ஓடைகளும் இப் பூபாகத்தில் மிகுந்திருக்கின்றன. இப்படிப்பட்ட வறண்டவிதமாய் உலர்ந்து வெப்பமடைந்திருக்கும் உஷ்ணப் பிரதேசத்துக்குக் கிழக்கே சிறிது தூரத்தில் பசும்புற்கள் நிறைந்து, பழ மரங்களாலும் பல விருக்ஷங்களாலும் அலங்கரிக்கப்பட்டுப் பற்பலவிதமான சாக பதார்த்தங்களையும், இலந்தை அத்தி திராக்ஷை மாதுளை வாதுமை முதலிய பழ வர்க்கங்களையும் விளைவிக்கக்கூடிய ஒரு குளிர்ந்த ரம்மியமான பூபாகமுண்டு; இதற்குத் :தாயி'ப் என்று பெயர் கூறுவர். இது மலையடிவாரத்தில் அமைந்திருப்பதால், இதற்கு இத்துணைக் குளிர்ச்சியும், நீர்நில வளமும் அமைந்திருக்கின்றன. மக்கமா நகருக்குத் தென்கிழக்கில் அமைந்திருக்கும் இந்தத் :தாயிபெ'ன்னும் பகுதியே 'ஹிஜா'ஜிலுள்ள பெரிய மனிதர்களின் கோடைக்கால வாஸஸ்தானமாய் அமைந்திருக்கிறது.

மேலே கூறியதேபோல் 'ஹிஜா'ஜின் முக்கிய பட்டணங்கள் மக்கா, மதீ'னா, :தாயி'ப் என்பனவாகும். இவற்றுள் "மக்கா" அல்லது ப'க்கா என்பது உம்முல் :குரா— (நகரங்களின் தாய்) என்று அழைக்கப்படுகிறது. இதன் நான்கு பக்கங்களிலும் மலைகள் சூழ்ந்திருக்கின்றன. கிழக்கெல்லையில்

உயர்ந்து நிற்கும் ஜப'லெ அபீ' குபை'ஸின் உச்சியிலிருந்து நோட்டமிடுவோமாயின், மக்கமாநகர் தெற்கு வடக்காய் ஒரு குறுகிய பள்ளத்தாக்கில் சுமார் இரண்டு மைல் நீளமும், ஒருமைல் அகலமுமுள்ளதாய் அமைந்திருப்பதைக் காணலாம். இதன் இக்கால ஜனத்தொகையின் கணக்கு, சுமார் அறுபதினாயிரமாம். மிகமிகப் புராதன காலத்திலிருந்தே இம் மக்கமா நகர் அ'ரபி'களின் மதத்துக்கும் பாரமார்த்திகத்துக்கும் பெயர்போன தலைநகராய் விளங்கிவருகின்றது. என்னெனின், அல்லாஹுத் தஆ'லாவின் புராதன ஆலயமாகிய கஃ'ப'ா ஷரீ'பானது இவ்விடத்தில்தான் அமைக்கப் பட்டிருக்கிறது. தீ'னுல் இஸ்லாத்தின் காலத்துக்கு நெடுங்கால முன்முதலிருந்தே அ'ரப்' தேசத்தின் ஒவ்வொரு மூலைமுடுக்கிலிருந் தெல்லாமும் யாத்திரிகர்கள் அந்தக் கஃ'ப'ாவை நோக்கிப் பிரயாணம் செய்துகொண்டு வந்திருக்கிருர்கள்.

"மகா நிச்சயமாக, மனிதர்களுக்காக நியமிக்கப்பட்ட முதன் முதலாகிய ஆலயமானது முப'ாரக்கான ஆசீர்வாதத்தைப் பெற்றதாகவும் உலகத்தினர்களுக்கு ஒரு வழிகாட்டியாகவும் இருக்கின்ற ப'க்காவிலுள்ள ஆலயந்தான்."— (:குர்ஆன், 3 : 95)

இத் திருவாக்கியத்தில் ப'க்கா என்று கூறப்பட்டிருக்கும் இடமானது மக்கா ஷரீ'பையே குறிக்கும். மனிதர்கள் இங்கு வந்து திரள் திரளாகக் குழுமுவதால் இதற்கு "ப'க்கா" என்று ஒரு புராதனப் பெயர் வழங்கலாயிற்று ; இன்னம், வேறு காரணங்களும் மற்றுஞ் சிலர் கூறுகின்றனர். மக்காவிலுள்ள கஃ'ப'(த்)துல்லா(ஹ்) வுக்கே "ப'க்கா" என்று பெயர் சொல்லுவதுண் டென்கின்றனர் மற்றுஞ் சிலர். பை'த்துல் முःகத்'த்'ஸி — (ஜெரூஸெலத்தி) லுள்ள ஆலயமானது— (மஸ்ஜித'ானது) 'ஹ'ஜ்ரத் இப்'ராஹீம்நபி அவர்களுக்கு— (ஆபிரகாம் தீர்க்கதரிசிக்கு) நெடுங்காலம் பின்னர்க் கட்டப்பட்ட தென்பது உலக சரித்திரத்தில் கண்ட உண்மையாகும்; ஆனல், மக்கா ஷரீ'பிலுள்ள கஃ'ப'ா ஷரீ'பானது அந்த இப்'ராஹீம் நபியவர்களுக்கு நெடுங்கால முன்னரே அங்கே கட்டப்பட் டிருந்தது. "(இதை— அஃதாவது, ஆண்டவனுடைய ஆலயத்தை) அப் பிரதக்ஷிணம் செய்பவர் களுக்காகவும், (அதில் வணக்கம் புரிய வந்து) தங்குபவர் களுக்காகவும், குனிந்து குப்புறுச் சிரவணக்கம் புரிபவர் களுக் காகவும், என் வீட்டை நீவிர் இருவீரும் பரிசுத்தம் செய்வீர்களாக, என்று சொல்லி, இப்'ராஹீமுக்கும் இஸ்மாயீ'லுக்கும் நாம் கட்டளையிட் டோம்," (:குர்ஆன், 2 : 125) என்று ஆண்டவனே கூறியுள்ளான். இத் திருவாக்கியத்தில், "என்னுடைய வீடு"— [அ'ரப்' பாஷையில் இது பை'த்தீ அல்லது பை'த்துல்லா(ஹ்)* என்று அழைக்கப்படும்] என்று ஆண்டவன்

* அ'ரப்' பாஷையி லுள்ள "பைத்துல்லா(ஹ்)"தான் பைபிளில் "பெதல்" என்று திரித்துக் கூறப்பட்டிருக்கிறது. கஃ'ப'ா (இதன் தாதுப்பொருள், "அது பெருமையால் ஓங்கிற்று," என்பதாகும்) என்பது அவ்வாறு அழைக்கப்படுவதன் காரணம் அதன்

அதைக் குறிப்பிட்டு, அதனை “அப்பிரதக்ஷிணம் செய்பவர் களுக்காகவும், (அதில் வணக்கம்புரிய வந்து) தங்குபவர் களுக்காகவும்...நீவிர் இருவீரும் பரிசுத்தம் செய்வீர்களாக,” என்று கட்டளை யிட்டதிலிருந்தே அந்தக் கஃ’ப’த் துல்லா(ஹ்) ஆபிரகாம் தீர்க்க தரிசிக்கு நெடுங்கால முன்முதலே அங்கே யிருந்துவருகிற தென்னும் விஷயம் விளக்கமாகின்றது. :குர்ஆன், 3 : 95-இல் “முதன் முதலாகிய ஆலயம்” என்று கூறப்படுவதும், :குர்ஆன், 22 : 29-ஆவது, 33-ஆவது ஆயாத்களில் “புராதன ஆலயம்” என்று குறிப்பிட்டுவருவதும் மேற்சொன்ன விஷயத்தையே உறுதிப்படுத்து கின்றன. நபிகள் நாயகத்தின்(சல்) சரித்திரத்தை ஆங்கிலத்தில் எழுதி யிருக்கும் ஸர் வில்லியம் மூய்ர் என்னும் மேல்நாட்டுக் கிறிஸ்தவர் எமது இஸ்லாத்தின்மீது எத்துணை ஆழமான அருவருப்புப் பாராட்டிய போதினும், அந்தக் கஃ’ப’ாவின் பழமையைப்பற்றி மட்டும் அவரால் ஒன்றும் மறுத்துக் கூற முடியவில்லை. இவர் தாமெழுதிய நூலின் முகவுரை யில் இந்தப் புராதன ஆலயத்தைப்பற்றிப் பின்வருமாறு மிக அழகாகக் கூறுகின்றார்:

“மக்காவிலிருந்து உதயமான மதத்தின் முக்கியமான அம்சங்க ளெல்லாம் மிகமிகப் புராதன காலத்திருந்தே தொன்றுதொட்டு வந்திருக் கின்றன வென்பதை ஒத்துக்கொள்ளாம லிருக்க முடியவில்லை...நம்முடைய சகாப்தத்துக்கு அரை நூற்றாண்டுக்கு முன்னே— (அஃதாவது, ஈ’ஸா பிறக்க ஐம்பது வருடங்களுக்கு முன்) ஜீவித்திருந்த டயடோரஸ் ஸி(க்)குலஸ் என்பவர் செங்கடலால் மூழ்கடிக்கப்பட்ட அ’ரப்’ தேசத்தைப் பற்றி எழுதும்பொழுது, ‘இத்தேசத்தில் அ’ரபி’களால் அதிகமாகக் கௌரவிக்கப்படுகின்ற ஆலயமொன்று இருக்கின்றது,’ என்று குறிப்பிட் டிருக்கின்றார். அவர் கூறும் ஆலயமானது மக்காவிலுள்ள மகிமை பொருந்திய ஆலயத்தைத்தான் குறிப்பிடுதல் வேண்டும்; என்னெனின், எமக்குத் தெரிந்த வரை இதனைத் தவிர்த்து வேறொரு தேவாலயமும் அந்த அ’ரப்’ நாட்டில் அத்துணைக் கௌரவமாக எல்லோராலும் கொண்டாடப் படவில்லை......தொன்றுதொட்ட காலமாய் அந்த அ’ரப்’ நாட்டின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் யாத்திரிகர்கள் அந்தக் கஃ’ப’ாவுக்கு வந்து கொண்டிருக்கிறார்க ளென்று கர்ணபரம்பரையான சரித்திரம் காணப்படா நின்றது: யமன், ‘ஹல’ரமௌத், பாரசீகக் குடாக்கடலின் கரையோரம், சிரியாவின் (ஷாம் தேசத்தின்) பாலைவனங்கள், ‘ஹீராவென்னும் இடத் தையும் மெஸபொட்டேமியா வென்னும் தேசத்தையும் சூழ்ந்துள்ள நெடுந்

பெருமையின் மேன்மையேயாகும். இன்னம், அஃது என்றென்றும் இக் குவலயத்தில் சிறப்பான பெருமையே பெற்று விளங்குமென்று குறித்தற்குரிய தீர்க்க தர்சன நாமமாய் விளங்கிவருகிறது என்பர் அறிஞர். அது பைத்துல்’ஹராம் என்றும் கூறப்பெறும். “பரிசுத்த வீடாகிய கஃ’ப’ாவை ஜனங்களுக்காக ஒரு ஸ்திர (நிலைய)மாக அல்லா(ஹ்) ஆக்கியிருக்கிறான்,” என்று ஆண்டவனே விளக்கியுள்ளான். — (:குர். 5 : 97)

தூரங்கள் ஆகிய இவ்விடங்களிலிருந்தெல்லாம் வருஷந்தோறும் மனிதர்கள் திரள் திரளாக மக்கத்துக்குள் வந்து குவிவார்கள். பலதேசத்து மனிதர்களுடைய மனத்திலும் இப்படிப்பட்ட ஆழ்ந்த பக்தியை உண்டு பண்ணுதற்கு அந்தத் தேவாலயமானது மகா மகா புராதனமான தாகத்தான் இருந்திருத்தல் வேண்டும்.''

இதைத்தான் ஆண்டவன் பின்வருமாறு தன் திருமறையில் கூறியிருக்கின்றான்: "அந்த ஆலயத்தை நாம், மனிதர்கள் வந்து தரிசனம் புரியும்படியான ஓரிடமாகவும், பத்திரப் படுத்தப்பட்டிருக்கும் ஓரிடமாகவும் ஆக்கினோம்.''— (:குர்ஆன், 2 : 125)

இவ்வாறு எமது எதிர்மத வாதியே ஒத்துக்கொள்ளும் இந்தக் கர்ண பரம்பரையான சரித்திரத்தின் முடிபான தீர்மானத்தை நோக்கும்போது, அங்குள்ள கஃ'ப'ாவானது நபிமார்களாகிய 'ஹ'ஜ்ரத் இப்'ராஹீம் (அ'லை) இஸ்மாயீ'ல் (அ'லை) இவர்களுடைய சம்பந்தத்தையும் நெருங்கப்பெற்றிருக்கிறதென்று அந்த அ'ரபி'கள் கூறும் மற்றொரு சரித்திரமும் மெய்யாயிருப்பதில் என்ன அசம்பாவிதம் காணப்படாநின்றது? அ'ரப்' தேச சரித்திரம் அநேகமாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே அந்தக் கஃ'ப'—(த்)துல்லா(ஹ்) கட்டப்பட்டிருந்த தென்றும், அதை வந்து இப்'ராஹீம் நபியும், இஸ்மாயீ'ல் நபியும் தரிசனம் செய்துவிட்டு மராமத்துச்* செய்தார்களென்றும் கூறுகின்றது. அதற்கு முன்னுள்ள மனிதர்கள் கஃ'ப'ாவின் பரிசுத்தத் தன்மையை விக்கிரஹ ஆராதனையைக்கொண்டு விக்கினம் செய்திருந்தமையால், பிதாவும் புத்திரருமாகிய ஆபிரகாமும் இஸ்மவேலும் அதைப் பழுதுபார்த்துப் பரிசுத்தம் பண்ணினார்களென்று எமது திருவேதம் (2 : 125, 127) அறைகின்றது. இத் தேவாலயத்தை ஆபிரகாம் தீர்க்கதரிசி வந்து தரிசனம் புரியவில்லையென்று வேறு சிலர் கூறுவதற்கு ஒன்றும் ஆதாரமில்லை. இப்'ராஹீம் நபி இங்குவந்து இத் தேவாலயத்துக்குத் திருப்பணி செய்தார்களென்பதை எண்பித்தற்கு அவர் வந்து தங்கியிருந்ததாகப் பண்டைக்கால முதலே வழங்கிவரும் ம:காமெ இப்'ராஹீம் என்னும் இடத்தின் பெயரே போதுமானதாயிருக்கின்றது. இந்த இடத்தில் இப்'ராஹீம் நபி அந்தத் திருப்பணி நடந்தபொழுது நிலை நின்றதாக ஐதிகம் கூறுகின்றது. "எட்டடி உயரமுள்ள ஆறு தூண்களால் சுமக்கப்பட்ட இடமாக அஃதிருக்கிறது; இவற்றில் நான்கு தூண்கள் அடிமுதல் முடிவரை நேர்த்தியான இருப்புக் கம்பிகளால் சூழப்பெற்றிருக்கின்றன; ஆனால், முன்புறமுள்ள இரண்டு தூண்களுக்கிடையிலிருக்கும் இடமானது திறந்தபடியே விடப்பட்டிருக்கிறது; இருப்புக் கம்பியின் அடைப்புக்குள்ளே ஐந்தடி சதுரமுள்ள ஒரு சட்டம் காணப்படுகிறது; கஃ'ப'ாவைப் புதுப்பித்தபோது 'ஹ'ஜ்ரத் இப்'ராஹீம்நபி (அ'லை)

* மராமத்தென்பது "முரம்மத்" தென்பதன் சிதைவு.

நின்றுகொண்டிருந்த அந்தப் பரிசுத்தமான கல்லானது இந்தச் சட்டத்துக்குள் ளிருப்பதாகச் சொல்லப்படுகிறது."†

இந்த "ம:காமெ இப்'ராஹீம்" என்னும் இடமானது நம் நபிகள் நாயகத்தின் காலத்திற்கு நெடுங்கால முன்முதலே இப்'ராஹீம் நபி இருந்த விடமென்று அ'ரபி'களால் அங்கீகரிக்கப்பட்டு வந்திருக்கிறது. அ'ரபி'களின் பண்டைக்கால சம்பந்தமாயுள்ள கர்ண பரம்பரையான சரித்திரங்களை மெய்யேயென்று ஒத்துக்கொள்ளும்போது, நபிமார்களாகிய இப்'ராஹீமும் இஸ்மாயீ'லும் வந்து இந்தக் கஃ'பாவைப் பரிசுத்தம் பண்ணினார்க ளென்பதை மட்டும் ஒத்துக்கொள்வதில் ஏன் சிலர் பின் வாங்குதல் வேண்டும்? "இது முஸ்லிம்களால் கட்டிவிடப்பட்ட கட்டுக் கதை யன்று; ஆனால், மு'ஹம்மத்'நபியின் (சல்) திருவவதாரத்துக்கு நெடுங் கால முன்னரே மக்கத்திலிருந்த மனிதர்களெல்லாரும் சர்வ சாதாரணமாக அதை ஒத்துக்கொண் டிருந்தார்கள்; இவ்வா றில்லாவிடின், இவ்விஷ யத்தை எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்ட ஒரு விஷயமாகக் கருதி, :குர்ஆன் ஷரீ'ப் கூறத் துணிந்திராது; இன்னம், கஃ'பாவைச் சூழ்ந்துள்ள சில இடங்களின் பெயர்கள், நாம் இப்பொழுது காண்பதேபோல, நபி இப்'ராஹீமின் நாமத்துடனும், நபி இஸ்மாயீ'லின் நாமத்துடனும் சம்பந்தப்பட் டிருக்கமாட்டா," என்று அந்த ஆங்கிலக் கிறிஸ்தவரான ஸர் வில்லியம் மூய்ரே மறுபடியும் வரைகின்றார். ஆனால், அந்தக் கஃ'பா ஷரீ'பானது இப்'ராஹீம் நபி, இஸ்மாயீ'ல் நபி இவர்களின் காலத்துக்கு முன்முதலே இருந்திருக்கிறதென்பதை ஒத்துக் கொள்வதற்குமட்டும் அந்த மூய்ர் துரை கஷ்டப்படுகின்றார். ஆனால், இந்த இரண்டு நபிமார்களின் பெயரும் அந்தக் கஃ'ப(த்)துல்லா(ஹ்)வுடன் சம்பந்தப் பட்டிருக்குங் காரணத்தினாலேயே அவர்களுடைய காலத்துக்கு முன்னே அக்கட்டிடம் அங்கில்லையென்று எவ்வாறு முடிவு கட்டிவிடலாம்? இஸ்மாயீ'ல் நபிக்கும் இந்த அ'ரப்' தேசத்துக்கும் மிகவும் நெருக்கமான சம்பந்த முண்டென்பது எல்லா வகையானும் ஒத்துக்கொள்ளப்பட்ட விஷயமே யன்றோ? என்னெனின், இஸ்மாயீ'ல் நபியின் புத்திரரான கேதார் (பைபிள் பழைய ஏற்பாடு, ஆதியாகமம், 25 : 13) என்பவரின் பெயரானது—(இதன் அ'ரப்' உச்சரிப்பு :கத்'ர் என்பதாகும்) அந்தப் பழைய ஏற்பாட்டில் முழுவதும் அ'ரப்' நாட்டையே குறிக்கு மென்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயமே. (சங்கீதம், 120 : 5; ஏசாயா, 42 : 11; ஏசாயா, 60 : 7 முதலியவற்றை நன்கு நோட்ட மிடுவீர்களாக).

ஆகாரையும் (ஹாஜரா) அவருடைய செல்வக்குமாரரான இஸ்மவேலையும் (இஸ்மாயீ'ல்) ஆபிரகாம் தீர்க்கதரிசி (இப்'ராஹீம் நபி) ஏதோவோர் அண்டைக் கிராமத்திலுள்ள அத்தையார் வீட்டுக்கு அனுப்புவதேபோல்

† 'ஹஜ்ஜு'க்குச் செல்பவர் எவரும் அக்கல்லைக் காணமுடியாதவாறு இருப்புக் கம்பிகளால் அது நன்கு மறைக்கப்பட்டிருக்கிறது.

ஒரு சிறிது ரொட்டித் துண்டையும் ஒரு ஷீஷாவில் தண்ணீரையும் கொடுத்து வழியனுப்பி விட்டாரென்று கிறிஸ்தவர் பைபிளின் ஆதியாக மக்கதை குறிப்பிட்டிருந்த போதினும், இப்'ராஹீம் நபி தம்முடைய மனைவியாகிய எகிப்து தேசத்து ராஜகுமாரி ஹாஜராவையும், அவருடைய செல்வப் புதல்வராகிய இஸ்மாயீ'ல் நபியையும் ஓர் அயல் தேயத்தில் குடியேறும்படி செய்துவைத்தா ரென்னும் சரித்திரம் மட்டும் மெய்யாகவே காணப்படாநின்றது. ஒரு ரொட்டித் துண்டுடனும் ஒரு ஷீஷாத் தண்ணீருடனும் அவர்களை அனுப்பிவிடுவதில் பீபீஸாராவுக்குப் போதுமான திருப்தி யிருந்திராது; இவ்வாறு பைபிளுக்குடையார் வரைந்திருப்பது நம்பத்தக்கதா யில்லை. ஆனால், இப்'ராஹீம்நபி தம்முடைய மனைவியார் ஹாஜராவையும், மகனார் இஸ்மாயீ'லையும் 'பாரான் வனாந்தரத்தில் கொண்டுவந்து, தற்போது மக்கமாநகர் அமைக்கப்பட்டிருக்கும் அதே இடத்திலே விட்டுவிட்டுப் போயினாரென்று அ'ரப்'தேயத்து மக்கள் கூறும் பண்டைக்காலக் கர்ணபரம்பரையான காதையானது பைபிளோடு சம்பந்தப் படாமல் ஒரு தனிப்பட்ட சரித்திரமாகவே அமைந்திருக்கிறது. இவ்விரண்டு கதைகளையும் ஒன்றுபடுத்திச் சீர்தூக்கிப் பார்க்குமிடத்து, அ'ரபி'களின் காதையானது மெய்யாகவே காணப்படாநின்றது. மேலும், ஷாம் தேசத்திலிருந்து யமன் தேசத்துக்குச் செல்லக்கூடிய மிகப் புராதனமான ஒரு பகிரங்க ரஸ்தாவில் இந்த மக்கமாநகர் அமைந்திருப்பதும், இங்குள்ள "பழமையான தேவாலயத்துக்கு" ஷாம் முதலிய தேசங்களிலிருந்து யாத்திரிகர்கள் கூட்டங் கூட்டமாக வந்து குழுமினார்களென்னும் சரித்திரம் உண்மையாயிருப்பதும் நாம் மேற்கூறிய முடிபையே வலியுறுத்துகின்றன. ஆதலின், அ'ரபி'களின் கர்ணபரம்பரையான காதையை வெறுங் கட்டுக்கதை யென்று ஒதுக்கித் தள்ளுவதற் கில்லை. எனவே, எமது :குர்ஆன் ஷரீ'பில் கூறப்பட்டிருக்கும் விஷயம் எல்லா விதத்தானும் உண்மையென்றே ஏற்படுகின்றது.

எனவே, அ'ரப்' தேசத்தின் மத்தியிலே மக்கமாநகரின் எல்லைக்குள்ளே அமைந்து நிற்கும் கஃ'ப'த்துல்லா(ஹ்) என்னும் இந்தத் தேவாலயம்தான் இவ்வுலகில் ஏகதெய்வ வணக்கத்துக்காக முதன்முதலில் நிருமிக்கப்பட்டதென்று செவ்வனே இப்பொழுது நாம் தெரிந்து கொண்டுவிட்டோம். உத்தேசம் ஆறாயிரம் ஆண்டுகளுக்குமுன் அ'ரப்' தேசத்தில் வந்து குடியேறிய நபி இஸ்மாயீ'ல் அவர்களின் காலத்துக்கு நெடுங்கால முன்னரே இந்தக் கஃ'ப'ா ஷரீ'பானது இப்பொழுது திருமக்கமா நகரிருக்கும் இடத்திலேயே அமைக்கப்பட் டிருக்கின்றதென்னும் உண்மையானது சரித்திர பூர்வமான காதைகளாலும், :குர்ஆன் ஷரீ'பின் ஆதாரத்தாலும் உறுதிப் படுத்தப்பட் டிருக்கிறது. இந்தியாவி லாகட்டும், அல்லது இவ்வுலகின் வேறெந்தப் பகுதியிலாகட்டும், இந்தக் கஃ'ப'த்துல்லா(ஹ்)வைக் காட்டினும் மிகப் புராதனமான ஆலயம் வேறொன்றும் இல்லையென்றே மிகத்

துணிவாகக் கூறலாம்; இதைக் காட்டினும் புராதனமான மற்றோர் ஏக தெய்வ ஆலயம் இவ்வுலகின்கண் வேறோரிடத்திலிருப்பதாக யாதொரு சரித்திரமும் ருஜுப்பிக்கவில்லை.

கஃ’ப’ாவின் பிராசீனத்தை நிலைநிறுத்தும் பொருட்டு ஸர் வில்லியம் மூய்ர் சரித்திர ஆதாரங்களைக் கொண்டும் கர்ண பரம்பரையான ஐதிகங்களைக் கொண்டும் மேற்கோள் காட்டியிருக்கின்றார்; :குர்ஆன் ஷரீ‘பும் அவ்வாறே அதனைப் புராதனமான ஆலயமென்றுதான் முடிவு கட்டியிருக்கிறது: “மனிதர்களுக்காக நிறுவப்பட்ட முதல்விடுதி” யென்று (3 : 95) அது கஃ’ப’ாவைப் பற்றிக் கூறியிருக்கிறது. அஃதாவது, ஏகதெய்வ வணக்கத்துக்கென்று இத்தரணியின்மீது முதன் முதலில் கட்டப்பட்ட ஆதிகால ஆலயமாய் அது நன்கு விளங்காநின்றது. இவ் விடத்திலிருந்துதான் முதன் முதலிலே தேவ வ‘ஹீ யானது உதயமாயிற்று. என்ன ஆச்சரியம்! இவ்விடத்திலேதான் நபிகளுக்கெல்லாம் இறுதி நபியாய் விளங்கும் முத்திரையான மு‘ஹம்மத்’முஸ்:த‘பா* ரஸூல் (சல்) அவர்களும் திருவவதாரம் புரிந்திருக்கிறார்கள். கஃ’ப’ாவின் பெருமையைக்கொண்டே மக்கமா நகரும் பெரும்புகழ் படைத்திருக்கிறது. உத்தேசம் 4,500 ஆண்டுகளுக்கு முன்னரே இந்த நகரமானது யமனிலிருந்து ஷாமுக்கும், ஷாமிலிருந்து யமனுக்கும் செல்லக்கூடிய கார்வான்கள் † வந்து தங்குவதற்குரிய மத்திய ஸ்தலமாய் விளங்கிற்று. :குர்ஆன் ஷரீ‘பும் இப்’ராஹீம் நபி அவர்களுக்கு முன்னரே (2 : 125) இந்தப் பரிசுத்த ஆலயம் இருந்துவந்ததென்று உறுதிப்படுத்துகின்றது. நபி இப்’ராஹீம் அவர்கள் தங்கள் திருக்குமாரர் இஸ்மாயீ’ல் அவர்களை அங்கே கொண்டுவந்து நிலைநிறுத்தியபோது, பின்வருமாறு பிரார்த்தனை புரிந்தார்கள்: “எங்கள் ரக்ஷகா! நிச்சயமாக, நான் என்னுடைய மக்களிலிருந்து ஒரு சிலரை விளைபொருள் முளையாப் பள்ளத்தாக்கொன்றில்— உன்னுடைய பரிசுத்த இல்லத் தருகினிலே குடியிருத்தாட்டி யிருக்கிறேன்.”— (:குர். 14 : 37)

மதீ’னா என்பது பண்டைக்காலத்தில் ய:த்ரிப்’ என்று நாமமிடப்பட்டிருந்தது. பிறகு பரிசுத்த நபிகள் நாயகம் அவர்கள் அந்நகரைத் தங்களுடைய உறைவிடமாகக் கொண்டதன்பின்னர் அது மதீ’னத்துன் னபீ’ (நபியின் நகரம்) என்று வழங்கப்பட்டு வருகிறது. காலக்கிரமத்தில் அஃது அல் மதீ’னா (அந்த நகரம்) என்று குறைந்து, இறுதியில் மதீ’னா வென்று மட்டுமே இற்றைப் போழ்தில் வழங்கிவருகிறது. இதுவும் ஒரு பிராசீனமான பட்டணமாகவே காணப்படாநின்றது; சரித்திர சம்பந்தமான சிற்சில குறிப்புக்களைக்கொண்டு இற்றைக்குச் சற்றேறக்குறைய 3,500 ஆண்டுகளுக்கு முன்னரே அந்நகரம் அடிகோலப்பட்டிருத்தல் வேண்டுமென்று

* முஸ்:த‘பா— தெளிந்தெடுக்கப்பட்டவர்.

† வர்த்தக ஒட்டகக் கூட்டங்கள்.

நன்றாகத் தெரிந்துகொள்ளலாம். அந் நகரின்கண் ஆதியில் வசித்துவந்த வர்கள் அ'மாலீ:க்கென்னும் ஜாதியாராவார். அதன்பின்பு எஹூதி'களும், ஔஸ், க''ஜ்ரஜ் கூட்டத்தினரும் அங்கே குடியேறினார்கள். நபிகள் பிரான் அந்நகரில் சென்று குடியேறிய காலத்தில் அம்மூவகை ஜாதி யாரும் அவ்விடத்திலே வசித்துவந்தார்கள். அவர்களுள் ஔஸ், க''ஜ்ரஜ் ஆகிய இரு கூட்டத்தினருமே **அன்சார்**— (உதவிபுரிவோர்) என்னும் பட்டத் துக்கு உரியவராயினர். நபிகள் நாயகம் (சல்) தங்களுக்கு நுபு'வ்வத் கிடைத் துப் பதின்மூன்றாம் ஆண்டிலே மக்காவை விட்டு மதீ'னாவிற்கு ஹிஜ்ரத் சென்றதன்பின்னர் அவ்விடத்திலேயே தங்கள் மிகுதிக் காலத்தையெல்லாம் கழித்து வந்தார்கள்; அவ்விடத்திலேயே அவர்கள் இகலோக வாழ்க்கையை நீத்துப் பரலோகப் பிராப்தியையும் அடைந்தார்கள். அவ்விடத்திலேதான் ரஸூலுல்லா(ஹ்)வின் **ரௌல'ஷரீ'ப்**— (சமாதியாயிருக்கும் நந்தனவனம்) அமைந் திருக்கிறது. மக்கத்திலிருந்து வடக்கே 300 மைல் தூரத்தில் அம் மதீ'னா நகர் அமைந்து நிற்கின்றது. ஆனால், மக்காவைப்போல மதீ'னா அத்துணைப் பாலைநிலமாகக் காணப்படுவ தில்லை; அங்கே மரமடர்ந்த சோலைகள் பல காணப்படுவதுடன், கனிவர்க்கத்துக்குரிய விருக்ஷவகைகளும் அதிகமாக வளர்ந்திருக்கின்றன. குளிர்காலத்தில் மக்காவைக் காட்டினும் மதீ'னா மிகமிகக் குளிருள்ளதாகவே காணப்படாநின்றது.

அ'ரப்' தேசத்தில் பல்வேறு காலங்களில் பல்வேறு விதமான மனிதர்கள் வசித்துவந் திருக்கிறார்கள். அ'ரபி'கள் தங்களுடைய பரம் பரையானது அநேகமாயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்தே தொடர்ந்து வருவதாகப் பெருமை பாராட்டிக் கொள்ளுகின்றனர். பூர்வ காலத்தில் தோன்றிய மகா பிரளயத்துக்குப் பின்னே நூ'ஹ்நபி அவர்களின் புத்திர ரான ஷாம்நபி அவர்களுடைய பரம்பரையினின்று அ'ரபி'களின் ஆதிக்குடி களாகிய ஆ'த்' என்னும் வர்க்கத்தினரும், :தமூத்' என்னும் வர்க்கத்தினரும் தோன்றினார்களென்று கர்ணபரம்பரையான சரித்திரமொன்று இன்றைக் கும் வழங்கி வருகின்றது. ஆராய்ச்சிக்கு எட்டியமட்டில், ஆ'த்', :தமூத்', :தஸ்ம், ஜதீ'ஸ் என்னும் வர்க்கத்தினரே அ'ரப்' தேசத்தின் புராதன ஜாதி யினராய்க் காணப்படுகின்றனர். இவர்களுள் முதலிரண்டு கூட்டத்தின ரைப் பற்றிய பிரஸ்தாபம் :குர்ஆன் ஷரீ'பிலே காணப்படுகின்றது. இந்தப் பிராசீன அ'ரபி'களுக்கு **அ'ரபுல் ப'ாயிதா'** என்று பெயர் சொல்வர். நூ'ஹ் நபியின் காலத் திருந்தவர்கள் அழிக்கப்பட்டபின்பு ஆ'தின் கூட்டத்தினர் தோன்றலாயினர். அ'ரப்' தேசத்துக்குள் முதன் முதலில் குடியேறியவர்கள் ப'னீ ஆ'த்'களே யென்றும், அத்தேசத்தின் மத்திய பாகமாகிய "அ'ஹ்'ஜா பு'ர் ரமல்" என்னு மிடத்திலேதான் வந்து அவர்கள் தங்கினார்க ளென்றும் சரித்திராசிரியர்கள் சாக்ஷியம் கூறுகிறார்கள். ஒரு காலத்தில் அவர்கள் அதிக பராக்கிரமமுள்ள ஜயசீலராய்க் காணப்பட்டனர். ஆ'த்' கூட்டத் தில் அவதரித்த **ஷத்'தா'த்'** என்னும் பேரரசன் தன்னுடைய ராஜ்யாதி

காரத்தை அ’ரப்’ தேசத்துக்கு வெளி தேசங்களிலும் அதிகம் பரத்தியிருந்தா னென்று நாம் அறிந்து கொள்ளுகிறோம். அவன் இ’ரா:க் தேசத்தையும் கைப்பற்றிக் கொண்டு, ஹிந்துஸ்தானத்தின் எல்லைவரையுங்கூட எட்டினு னென்று சொல்லுகிறார்கள். இந்த ஷத்’த்’ாதே’ா, அல்லது இவனது சந்ததியில் தோன்றிய வேறொரு ஷத்’த்’ாதே’ா எகிப்து முதலிய மேல்நாடு களுக்குள் ளெல்லாம் தன்னுடைய வெற்றிக் கொடியைத் தாங்கிச் சென் றான். அ’ரப்’தேசம், எகிப்து தேசம், மற்றும் பற்பல தேசம் முதலிய இடங்களிலெல்லாம் தங்களுடைய ராஜ்யத்தை விரிவடையச் செய்திருந்த ஆ’த்’ கூட்டத்தினர் தங்களுடைய அக்கிரமத்தினால் மழையின்மை (அநா விருஷ்டி) என்னும் கொடிய வறுமையினால் பெரும்பாலும் அழிந் தொழிந்து போயினர். அக் கூட்டத்திலிருந்து சிதறியோடிய சிற்சிலரே யமனில் பெரும்பேர் பெற்றிருந்த இரண்டாவது ஆ’த்’ கூட்டத்தை நிலை நிறுத்தினார்கள் ; இவர்களும் பிறகு வேறு கூட்டத்தாருடன் கலந்து மிசிர மடைந்து போய்விட்டார்கள்.

அதன்பின்பு ப’னீ :தமூத்’கள் அந்நாட்டில் அதியுச்சத்தை யடைந் தார்கள். இவர்கள் ஏதோம் பிரதேசத்திலும், பிறகு ஹிஜ்ர் மாகாணத்திலும் தங்கி யிருந்தார்கள் ; ஹிஜ்ர் என்பது ‘ஹிஜா‘ஜு’க்கும் சிரியாவுக்கும் இடையிலுள்ள பகுதியைக் குறிக்கும். இவர்கள் குடைந்தெடுத்த மலைக் குகைகளையே தங்களுடைய வாஸஸ்தலமாகக் கொண்டிருந்தனர். ப’னீ :தமூத்’கள் தங்கள் காலத்தில் அதிகமான முன்னேற்றத்தை அடைந் திருந் தார்கள். இறுதியில் அ’ர’ப் தேசத்தின்மீதும், ஷாம் தேசத்தின்மீதும் படையெடுத்து வெற்றிமாலை சூடிவந்த தூ’ல்’ாருல் அ‘ஹ்மர் என்பவரால் ஒழிக்கப்பட்டார்கள். தங்களுடைய பத்திரமுள்ள மலைக் குகைகளுக்குள் வாழ்ந்து வந்ததனால் தங்களுக்கொன்றும் தீங்கு விளையாதென்று எண்ணிக் கொண்டிருந்த ப’னீ :தமூத்’கள் எவ்வாறு அழிக்கப்பட்டன ரென்னும் உதாஹரணத்தையே ஆண்டவன் அடிக்கடி தன்னுடைய திருமறையில் :குறைஷிகளுக்கு ஞாபகமூட்டி, அச்சத்துடன் எச்சரிக்கை விடுத்திருக்கிறான்.

அதன்பின்னால் எஞ்சியிருந்த ப’னீ :தமூத்’கள் ஸீர் மலைப் பிராந்தியத் துக்கு ஓடிவிட்டார்கள். நபி இஸ்‘ஹா:க், நபியஃ:’:கூப்’ அவர்களுடைய காலத்தில் இக் கூட்டத்தினர் அம்மலையைச் சுற்றி வசித்து வந்தார்கள். பிறகு காலம் செல்லச் செல்ல மற்றை ஜாதியாருடன் கலந்து போய்விட் டனர். :தஸ்ம், ஜதீ’ஸ் முதலிய சிறு சிறு கூட்டத்தினரைப் பற்றி யாம் ஒன்றும் அதிகமாக ஈண்டு எழுதத் தேவையில்லை யென்றே விடுக்கின்றனம்.

அ’ரபு’ல் ப’ாயித’ாவுக்குப் பின்னே தோன்றியவர்களுக்கு அ’ரபு’ல் ஆ’ரிப’ா, அல்லது மு’த ஆ’ரிப’ா (அசல் அ’ரபி’கள்) என்று பெயர் சொல்வர். இவர்கள் :க‘ஹ்:தானின் வம்சத்தில் தோன்றியவர்க ளென்று சரித்திரம் சான்று கூறுகின்றது. இவர்களுடைய பூர்விக இல்லம் யமன் மாகாண மென்று யாம் தெரிந்து கொள்ளுகிறோம். சிரியாவிலிருந்த ப’னீ அ’மாலீ:க்

கூட்டத்தினரின் கொடுமை தாளாது, அவர்களுள் ஒரு சிலர் மதீ'னுவைச் சூழ்ந்துள்ள பகுதிகளில் வந்து குடியேறினர். ஔஸ், க''ஜ்ரஜ் என்னும் கூட்டத்தினர்கள் மேற்கூறிய ப'னீ :க'ஹ்:தான் வம்சத்தில் தோன்றிய இ'ஜ்தி'ன் பரம்பரையைச் சார்ந்தவர்க ளாவார்கள்; :க'ஹ்:தானின் மற்றிரண்டு பிரிவுகளுக்கும் :குள'ஆ', கஹ்லான் என்று பெயர் சொல்வர். அ'மாலீ:க் வம்சத்தினரை ஒழிப்பதற்கு முக்கிய காரணமா யிருந்துவந்த ப'னீஜுர்ஹும் என்பவர்கள் :குள'ஆ'வின் கிளையில் தோன்றியவர் களே. ப'னீ:க'ஹ்:தான் கூட்டத்தினர் தங்கள் காலத்தில் அதிகமான முன்னேற்றத்தையும் சீரையும் சிறப்பையும் அடையப்பெற் றிருந்தார்கள்.

சரித்திராசிரியர்களது ஆராய்ச்சியின் பிரகாரம் ஆ'பி'ரின் குமாரர்க ளான :க'ஹ்:தானும், யக்தானும் யமனிலிருந்து படையெடுத்துக் கிளம்பினார்கள். :க'ஹ்:தானின் குமாரரான யஃ'ருபு' என்னும் கீர்த்தி வாய்ந்த யமன் தேச மன்னனிலிருந்தே அ'ரப்' தேசத்துக்கும், அ'ரப்' ஜாதியாருக்கும் அப்பெயர் வந்ததென்றும் ஒரு சரித்திரம் சாற்றுகின்றது. அன்றியும், இவரேதாம் முதன் முதலாக அ'ரப்' பாஷை பேசியவர் என்றும் சொல்லப்படுகிறார் (:காமூஸுல் மு'ஹீத்). அந்த ராஜ்யத்தின் தலைநகரான மஆ'ரிபை' உண்டு பண்ணியவர் யஃ'ருபி'ன் குமாரரான யஷ்ஜுப்' என்பவராவார். இவரே, ஸப'ா (வெற்றி யடைந்தவர்) என்று பிரதாபப் பெயர் பெற்றிருந்த அ'ப்'து'ஷ் ஷம்ஸின் தந்தையாவார். ஸப'ாவின் வம்சத்தில் பிறகு தோன்றிய இரு குமாரர்களுக்கு 'ஹுமைர் (அதிக செந்நிறமானவர்) கஹ்லான் என்று நாமம் கூறுவர். இவ்விருவரின் சந்ததியாருமே நபிகள் நாயகத்தின் திருவவதாரத்துக்கு முதல் நூற்றாண்டு வரை யமன் தேசத்தில் ராஜ்ய பரிபாலனம் புரிந்து வந்தனர். 'ஹுமைரின் வம்சத்தி லிருந்துதான் மாபெரும் 'துல்கர்னைனும், கீர்த்தி வாய்ந்த ப'ல்:கீஸும் தோன்றினார்க ளென்று சரித்திராசிரியர்கள் சான்று கூறுநின்றார்கள்.

அ'ரப்' தேசத்தின் குடிமக்களுள் மூன்றாவது வர்க்கத்தினர் அ'ரபு'ல் முஸ்தஃ'ரிப'ா— (குடியேறிய அ'ரபி'கள்) என்று அழைக்கப்படுகிறார்கள். இவர்கள் அ'ரப்' தேசத்திற்குள் வந்து ப'னீ :க'ஹ்:தான் கூட்டத்தினருடன் விவாக சம்பந்தம் முதலிய உறவுகளை யெல்லாம் உண்டு பண்ணிக் கொண்டார்கள். அவர்களுடைய முன்னேற்றத்தின் முன்னே ப'னீ ஜுர்ஹும் கூட்டத்தினரால் ஒன்றும் செய்துகொள்ள முடியவில்லை. இந்தக் குடியேற்ற அ'ரபி'கள் இத்தேசத்துக்குள் வந்து ஒரு நூற்றாண்டுக்குள்ளே 'ஹிஜா'ஜையும், 'திஹாமாவையும் கைப்பற்றிக் கொண்டார்கள். ஆனால், இவ்விரு கூட்டத்தினரும் அ'ரப்' தேசத்தில் அதிகமான வெற்றியை அடைந்து வருங்கால், ப'ாபி'லோனியாவின் பேரரசனாகிய பு'க்''து நஸ்ஸர் (நெபுக்கத் நெச்சார்) என்பவனால் பெரும்பாலும் அழிக்கப்பட்டு ஒழிக்கப் பட்டார்கள். அ'ரப்' தேசத்துக்குள் படை யெடுத்துச் சென்று அவ்

வரபி'களையும் இம்சை செய்தவன் இந்த ப'பாபி'ல் அரசனே யாவான். ஆயினும், சிறிது காலத்திற்குள்ளே அவ் வரபி'கள் மீண்டும் தேர்ச்சி யடைந்து, 'ஹிஜா'ஜ், நஜ்த்' முதலிய இடங்களையும் கைப்பற்றிக் கொண்டு இ'ரா:க், மெஸபொட்டேமியா முதலிய இடங்களுக்குஞ் சென்று, ஆங்கிருந்த :க'ஹ்:தானின் வம்சத்தினருட னெல்லாம் சேர்ந்துகொண்டு, அவர்களையும் தங்கள் மரபில் கலந்துகொள்ளுமாறு செய்துகொண்டு விட்டார்கள்.

இவர்களுடைய குடியேற்றமானது நபி இப்'ராஹீம் (அ'லை) அவர் களுடைய காலத்திலிருந்து தோன்றிற்றென்று சரித்திரம் சான்று கூறு கின்றது. அல்லாஹுத் 'தஆ'லாவின் கட்டளைப் பிரகாரம் 'ஹஜ்'ரத் இப்'ராஹீம் நபி அவர்கள் தங்கள் குமாரரான 'ஹ'ஜ்ரத் இஸ்மாயீ'ல் நபி அவர்களையும், அவர்களுடைய மாதாவான 'ஹ'ஜ்ரத் ஹாஜராபீ'பீ' அவர்களையும் இதுபொழுது கஃ'பா இருக்கும் ஸ்தலத்திலே கொண்டு வந்து விட்டார்கள்— (14 : 37 ; 2 : 125). 'ஹ'ஜ்ரத் இஸ்மாயீ'ல் (அ'லை) அவர்களின் பெரிய புதல்வரான :தாபித் தென்பவரே 'ஹ'ஜ்ரத் இஸ்மா யீ'ல் அவர்கள் இறந்த பின்பு கஃ'பாவுக்குத் தலைவரா யிருந்துவந்தார். இவரும் மரணமடைந்ததன் பின்னால் இவருடைய தாயின் தந்தையான மல்'லா' லென்பவரே அப்பதவியை ஏற்றுக்கொண்டார். இவருக்குப் பின்னே அத்தலைமைப்பதவி ப'னீ ஜுர்ஹுமுக்கே வந்துவிட்டது. ஆனால், ப'னீ இஸ்மாயீ'ல் கள் இதில் எவ்வித இடையூறும் உண்டுபண்ணினார்க ளில்லை. இப்'ராஹீம் நபி அவர்களின் மற்றொரு மனைவியாகிய ஸாராவின் தூண்டுதலின்மீதே அவ்விருவரும் வெளியேற்றப் பட்டார்களென்று கூறப் படும் கதை பொய்க் கதையே யாகும். இப்'ராஹீம் நபியை நோக்கித் தாயும் பிள்ளையுமாகிய தங்களிருவரையும் அவ்விடத்தில் கொண்டுவந்து விடும்படி ஆண்டவன் கட்டளை யிட்டிருக்கிறானோ வென்று ஹாஜரா கேட்டதன் மேல் அவர்களுடைய பர்த்தாவானவர், "ஆம்!" என்று விடையிறுத்ததாக நம் நபிகள் பெருமானின் நம்பிக்கையான திருவாக்கிய மொன்று காணப் படுகிறது ; :குர்ஆன் ஷரீ'பின் விஷயமும் இக்கருத்தையே உறுதிப் படுத்து கின்றது. அதன்பின்பு பிதாவும் புத்திரரும் ஆண்டவன் ஆணையின்மீது, அதற்கு முன்னே பழுதாய்க்கிடந்த பரிசுத்தக் கஃ'பாவைப் புதுப்பித்து முடித்தார்கள் (:குர். 2 : 125). அது முடிந்தவுடன் அவ்விருவரும் நின்று கொண்டு, "எங்களுடைய றப்'பே'! இன்னம், அன்னவர்களுள் ளிருந்து அவர்கள் முன்னே உன்னுடைய அறிவிப்புக்களை ஓதிக் காண்பித்தும், அவர்களுக்கு வேதத்தையும் ஞானத்தையும் கற்றுக்கொடுத்தும், அவர்களைப் பரிசுத்த மாக்கும் ஒரு தூதரை நீ அவர்களிலே எழுப்புவாயாக!" (:குர். 2 : 129) என்று ஆண்டவனை நோக்கிப் பிரார்த்தனை புரிந்தார்கள் ; அதன் பிரகாரமே நம் ரஸூலுல்லா(ஹ்) அவர்கள் மக்கமா நகரின்கண்

ப’னீ இஸ்மாயீ’லின் வம்சத்திலே தோன்றினார்கள்.* பனீ இஸ்மாயீ’ல்களுள் தோன்றிய ப’னீஅ’த்’னான் வர்க்கமென்பது பற்பல கிளைகளாகப் பிரிந்திருந்தது. அவற்றுள் இறுதிக்கிளையானது முள’ர் என்னும் பெயரில் வந்து முடிகிறது; இப்பெயரினின்று பிரியும் கிளைகளுள்ளே ஒன்று கினானா என்று சொல்லப்படுகிறது; கினானாவின் இருகிளைகளுள் முந்தியதான :குறைஷ் குலத்தின் சாகையாகிய ப’னூ ஹாஷிம் வம்சத்திலேதான் நம் வள்ளலிரஸூல் (சல்அ’ம்) அவர்கள் திருவவதாரம் புரிந்தார்கள்.

அ’ரப்’ நாட்டிலுள்ள மனிதர்கள் எக்காலத்திலும் இருபெரும் பிரிவினையை உடையவர்களாகவே யிருந்துவந் திருக்கிறார்கள். நகரங்களில் விடுதிகளை நிருமித்துக்கொண்டு வசிக்கும் நகரவாசிகள் ஒரு வகையா ராவார். நகரங்களில் வசிப்போர் நேர்த்தியான விளைநிலங்களை வைத்துக்கொண்டும், அங்கங்கே வசதியான வீடுகளைக் கட்டிக்கொண்டும் ஜீவித்து வருவார்கள்; அவர்கள் வீட்டைச் சுற்றித் திராக்ஷைத் தோட்டங்களும், பூம்பொழில்களும், பேரீந்தின் தோப்புக்களும், நல்ல விளைநிலங்களும் நிறைந்திருக்கும்; அவர்கள் ஆடு ஒட்டகம் ஆதியவற்றை வைத்துக் கொண்டு பயிர்த்தொழில் புரிந்துவருவார்கள்.

இவ் வர்க்கத்தைச் சேர்ந்த ஏனையவர்கள் செங்கடல் துறைமுகப் பட்டினங்களில் வியாபாரம் செய்து வருவார்கள். அ’ரப்’ நாட்டின் தெற்கிலுள்ள பாரசீகக் குடாக்கட லோரத்திலும் கப்பல் வியாபாரிகள் வதிந்து வருகிறார்கள். யமன் பிராந்தியத்திலுள்ள அ’ரபி’களெல்லாரும் வாணிபர்களே. அங்கே வாசனைப் பண்டங்கள் அதிகமாக விற்பனை செய்யப்படும். புலவர்கள் இப்பாகத்தை “ஸபி’ய்யா” என்று அழைப்பார்கள். யூனானியர்களும் உரோமர்களும் ஸப’ாவை, “த்’வ்லத்மந்’தே அ’ரப்’” (அ’ரபி’களுக்குள் குபேரர் வசிக்குமிடம்) என்று வருணித்தார்கள். கீழைநாட்டு விபாரிகளுள் இவர்கள்தாம் மிக்க ஊக்க முடையவர்கள். இந்தியா, அ’ப்ரீ:கா முதலிய இடங்களிலிருந்து தங்கம் வாசனைப்பண்டம் முதலிய விலையுயர்ந்த சாமான்களும், அ’ப்ரீ:காவிலுள்ள ப’ர்ப’ர் தேசத்திலிருந்து கஸ்தூரியும் அ’ரப்’ நாட்டுக்குக் கப்பல் மார்க்கமாய் வந்து சேரும்; இப் பண்டங்களெல்லாம் ஒட்டகத்தின்மீது பொதியாக ஏற்றி உள் நாடுகளுக்கு அனுப்பப்படும். மத்தியதரைக்கடல் வழியாக மேல்நாடுகளுக்கும் அவை ஏற்றுமதி செய்யப்படும். இந்த வாணிபர்களுக்கு வேண்டிய எண்ணிறந்த ஒட்டகங்கள் கூடாரத்தில் வசித்துக்கொண்டு ஊரூராகத் திரியும் ப’த’வீ அ’ரபி’களிடத்தில் கிடைக்கும். தங்களுடைய நிரந்தர

---

* நபி இஸ்மாயீ’ல் அவர்கள் ப’னீ ஜுர்ஹும் வர்க்கத் தலைவரான மல்’ல’ாலி’ப்’னு அ’ம்ரின் குமாரியை விவாகம் செய்து கொண்டார்கள்; அவ்விவாகத்தின் பயனாய்த் தோன்றிய பிள்ளைகள் பன்னிருவர்; அவர்களுள் :கைத’ார் என்பவரே பெரும்பான்மையான அ’ரபு’ல் முஸ்தஃ’ரிப’ாக்களுக்கு மூலபிதா வாவார். மற்றொரு குமாராகிய ;தாபி’த்தி லிருந்துதான் ரஸூலுல்லா(ஹ்) அவர்கள் தோன்றி யிருக்கிறார்கள்,

வாசத்தாலும் வாணிபத்தின் அமைதியாலும் இவர்கள் தங்களுடைய உண்மையான இயற்கையைச் சிறிது மறந்துவிட்டார்கள். இக்காரணத்தால் தான் யமன் தேசத்தை அயல்நாட்டார் அடிக்கடி கைப்பற்றிக்கொண் டிருந்தார்கள். எனவே, பகைவரை வெல்வது இவர்களால் முடியாமற் போயிற்று. மிதமிஞ்சிய வர்த்தகப் பெருக்கம் சோம்பலை வளர்க்கத் தலைப்பட்டு விட்டதென்க.

மீக்கூறிய நகரவாசிகளுக்கு மாறாக, பாலைவனங்களில் கூடாரங்களில் வசித்துக்கொண்டு ஊரூராய் அலைந்துதிரியும் வனவாசிகளாகிய ப'தூ'வீக ளென்னப்படுபவர் மற்றொரு வகையாராவார். இந்தக் காட்டரபிகள் தங் களுடைய குடும்பத்துடனும், ஆடுமாடு ஒட்டகம் முதலிய கால்நடைகளுட னும் எப்பொழுதும் கூடாரங்களிலேயே வசித்துக்கொண்டு, மணல் வெளி களிலும் பசும்புற் றரைகளிலும் திரிந்துகொண் டிருப்பார்கள்.

இவர்களுள் அநேகம் உட்பிரிவுக ளுண்டு; ஒவ்வொரு பிரிவுக்கும் ஒரு ஷெய்க்' அல்லது அமீர் என்பவர் தலைவராவார். இவர் தமது கூடாரத்துக் கெதிரே வேலாயுதத்தை நட்டு வைத்தால், அதற்கு மற்றவர்கள் கீழ்ப் படிந்து நடத்தல் வேண்டும். இந்தத் தலைமைப் பட்டம் ஒரே வம்சத்தில் பரம்பரையாகத் தொடர்ந்து வரும். ஆனால், மற்றவர்கள் விரும்பினால், வேறொரு வம்சத்தவரைத் தலைவராக நியமித்துக் கொள்ளலாம். அமீருடைய 'நடத்தை' மற்றவர்களுக்குப் பிடித்தமாக இராவிடின், அவர் உடனே விலக்கப்படுவார். யுத்தம் தொடங்குவதற்கும் சமாதானம் செய் வதற்கும் அவருக்கு அதிகார முண்டு. ஓரிடம் விட்டு இன்னவிடம் புறப்படவேண்டு மென்பதும், அன்னியரை ஆதரிக்கவேண்டு மென்பதும் அவராலேயே உத்தரவிடப்படல் வேண்டும். ஆயினும், மற்றவர்களுடைய விருப்பத்தின்படியே அவர் நடப்பார். இவ்வாறு அநேகம் பிரிவுகளிருந்த போதினும், ஒவ்வொருவரும் தமக்கும் மற்றவருக்கு முள்ள ஒற்றுமை வேற்றுமைகளை நன்குணர்ந்தே யிருந்தனர். வெவ்வேறு பிரிவுகளின் அமீர்களெல்லாரும் ஒன்று சேர்ந்து தமக்குள்ளே ஒருவரைத் "தலைவர்க் கெல்லாம் தலைவ"ராக ஏற்படுத்திக்கொண்டு, அவருக்குக் கீழ்ப்படிந்து எல்லாரும் நடப்பார்கள். ஒவ்வொரு பிரிவிலுள்ளாரும் அரப்தேசத்தின் வெவ்வே றிடங்களில் அலைந்துதிரிந்தாலும், இந்தப் பெருந்தலைவர் உத்தரவு செய்தால், எல்லாரும் ஓரிடத்தில் கூடவேண்டும்.

எனினும், இத்தனை வர்க்கத்தாரையும் அடக்கி யாளுதற்குரிய ராஜ்யாதிகாரம் ஒருவருக்கும் இல்லாமையால், ஒருவருக்கொருவர் சதா சண்டை விளைத்துக் கொண்டே கிடப்பர். அவர்களுக்குள் பழிக்குப்பழி வாங்கும் பழக்கம் ஒரு வேதக்கட்டளையா யிருந்து வந்தது. ஒருவன் கொல்லப்பட்டால், அவனுடைய உறவினர் அதற்கீடாகப் பழிவாங்க வேண்டும். இதனால் பெருங் கலகங்களும் கொலைகளும் நேர்வதுமுண்டு; இக் காரணத்தால் அநேகந் தலைமுறைவரை சண்டை மூண்டு கொண்டே

யிருக்கும். கொலை யுண்டவனுக்காகப் பழிவாங்காவிடின், அவனுடைய கபாலம் வெடித்து, அங்கிருந்து ஒரு சிறகுள்ளபறவை— (ஹாமா, அல்லது ஸதா என்று பெயர் கூறப்படுவது) வெளிப்பட்டு, ஆகாயத்திற் கிளம்பி, "எனக்குத் தாகசாந்தி செய்துவையுங்கள்! எனக்குத் தாகசாந்தி செய்து வையுங்கள்!" என்று கத்துவதாக அவர்கள் நம்பி யிருந்தார்கள். அவனைக் கொன்றதற்காகக் கொலைசெய்தவனுடைய இரத்தத்தைக் குடித்தால் மட்டுமேதான் அவ்வுயிர் சாந்தியடைவதாக நினைத்துவந்தார்கள்.

அவர்கள் தங்களுடைய ஒட்டகங்களையும் குதிரைகளையும் கள்வர்களை விட்டுக் காப்பாற்ற வேண்டுவது ஆவசியகமாதலால், அவர்களுக்கு ஆயுதப் பழக்கம் மிகவு நன்ருகத் தெரியும். வில் வாள் வேல் ஆகிய ஆயுதப் பிரயோகங்களில் அவரை ஒப்பாரும் மிக்காரும் அக்காலத்தில் எவரும் இருந்த தில்லை. குதிரைகளைப் பழக்குவதில் அவர்கள் மிக்க புகழ் பெற்ற வர்கள். யுத்தப் பழக்கமும் அவர்களுக்கு நன்ருகத் தெரியும். ஆனுலும், அவர்கள் கொடிய துன்மார்க்கர்கள்; காதல் களவாடல் கள்ளுண்டல் முதலிய தீயமார்க்க மனைத்தும் அவர்கள்பால் ஒருங்கே காணப்படும். பாடத்தகாத பாடல்களை யெல்லாம் பகிரங்கமாகப் பாடிப் பரமானந்தம் அடைவார்கள். கொலையும் களவும் அவர்களுடைய இயற்கைத் தொழிலே யாம். விவசாயமும் வியாபாரமும் இழிதொழி லென்று கருதுவார்கள். இத் தகைய இழிதொழில் செய்வோரைக் கொள்ளையடிப்பதாலும் கொலைசெய்வ தாலும் ஒன்றும் பாதகமில்லை யென்றும் சமாதானம் செய்து கொள்ளு வார்கள்.

இந்தக் காட்டரபிகளுடைய தோற்றமோ மெலிந்து காணப்படும். ஆனுல், அதிக தேகதிடம் வாய்ந்து சுறுசுறுப்புள்ளவர்களா யிருப்பார்கள்; அளவற்ற துன்பத்தையும் அயர்ச்சியையும் இலேசாய்ச் சகிக்கக் கூடிய வர்கள்; அவர்களுடைய நிறம் பழுப்புக் கலந்த வெண்மையா யிருக்கும். ஆகாரம் மிதமாகச் செய்வார்கள்; பேரீச்சம் பழங்களையே பெரும்பாலும் புஜித்து ஜீவிப்பார்கள்; அவர்களுடைய தேகத்தைப்போல மனமும் உறுதி வாய்ந்ததா யிருக்கும். விஷயங்களை எளிதில் அறிந்துகொள்ளும் சக்தியும், கூரிய நுண்ணறிவும், சிறந்த கற்பனுசக்தியும் பெற்றிருப்பார்கள். தங்களுடைய குலத்தைப் பற்றி மிக்க பெருமை பாராட்டிக் கொள்ளு வார்கள். சிறந்த புலவர்கள் எழுதிய காவியங்களைக் கேட்டால் மனமுருகி மெய்ப்பா டுறுவார்கள். பிற பாஷைகளைக் காட்டினும் அ'ரபு' பாஷைக் குள்ள பலவகைச் சாதுர்ய மேன்மையாலும் அவர்களெல்லாரும் இனிமை யாகப் பேசுந்திறன் பெற்றிருந்தார்கள். பெருங்காப்பியங்களைப் படிப்பதைக் காட்டினும் சிறு நூல்களிலேயே அவர்களுக்கு விருப்பம் அதிகமாயிருக்கும். அவர்களுடைய பேச்சில் உபாக்கியானங்களும் விடுகதைகளும் மிகுந் திருக்கும்.

அவர்கள் கொடுமை வாய்ந்த போர் வீரர்களா யிருந்த போதினும், கண்ணியமும், பெருந்தன்மையும், விருந்தினரை உபசரிக்கும் வேளாண்மைக் குணமும் அவர்மாட்டு மிகுந்திருந்தன; தர்மம் செய்வதில் மகிழ்ச்சி யுடையவர்கள்; வழிப்போக்கர் எவரும் அவர்கள் வீட்டுக்குள்ளே தடை யின்றி நுழையலாம். ஜன்ம விரோதிகளாயினும், ஒருமுறை சேர்ந்து விருந்துண்டு விடுவார்களாயின், பிறகு எப்பொழுதும் அவர்களுக்குள்ளே பகைமை யுண்டாகாது.

யுத்தத்தில் பிடிபட்ட பெண்கள் வெற்றியடைந்தவரின்கீழே அடிமைத் தொழில் புரிதல் வேண்டும்; எஜமானர்கள் விரும்பினால், இப் பெண்கள் பாடல்பாடி நாட்டியம் ஆட வேண்டும்; சொந்தக்காரர் தங்கள் பெண் களைச் சிறை மீட்டுக் கொள்ள விரும்பினால், வெற்றி பெற்றவரால் குறிக்கப் படும் ஈட்டுத் தொகையைக் கொடுத்து மீட்டுக்கொண்டு போதல் வேண்டும்; இந்தப் பணம் வெற்றிபெற்றவரைச் சாரும்.

இவ்வாறெல்லாம் நகரவாசிகள் நாகரிகமுள்ளவர்க ளென்றும், ப’த’வீ கள் காட் டரபிகளென்றும் கூறப்பட்ட போதினும், அவ்விரு திறத்தாரும் பொதுவில் அந்தப் பாலைவனப் பிரதேசத்தில் வசித்துவரும் யதேச்சா பிரிய முள்ள சர்வ சுதந்தரர்களாகவே வாழ்ந்து வந்தார்கள். பரிசுத்தமான திறந்த ஆகாய வெளியில் வேண்டியமட்டும் ஆங்குள்ள யதேச்சையான காற்றைப் பருகிவிட்டு, அந்த அரபிக ளெல்லாரும் பாலைநிலப் பூச்சி களாகவே உயிர்வாழ்ந்து வந்தனர். வருஷத்துக் கொருமுறை மக்காவிலும் உ’காளி’லும் கூடிவரும் வருஷாந்தப் பெருங் கூட்டங்கள் குழுமி வந்தும், அவ்வரபிக ளனைவரும் ஒரே ஜாதியா ரென்று சொல்லப்படக் கூடிய ஒரு வித ஒற்றுமைப்பட்ட தன்மையையும் அடைய முடியவில்லை. இதற்குக் காரணம் அவரவரும் வெவ்வேறு வகையான மூலபிதாக்களி னின்றும் தோன்றியதேயாகும். மேலும், தாமே சிறந்தவரென்னும் ஜாதியிறுமாப் பும், குலப்பெருமையும், கோத்திரக் குறும்பும் அவர்களுக்குள் அதிகமாகக் காணப்பட்டுவந்தன. அவர்களை யெல்லாம் ஒரே இனமாய்ப் பிணித்து வைக்க ஏதும் அரசாங்கச் சட்டமேனும் ஆசாரச் சட்டமேனும் அந் நாட்டிலே எப்பொழுதும் அதற்கு முன்னே இருந்தது கிடையாது. எல்லாம் வல்லான் வகுத்ததே வாய்க்காலா யிருந்துவந்தது.

# அதிகாரம் — 2

## அந்தகார உலகம்

" மனிதர்களின் கரங்கள் செய்தவற்றின் காரணத்தால் கரையிலும் கடலிலும் குழப்பம் புறப்பட லாயிற்று."
—(30 : 41)

நபிகள் நாயகம் (சல்அ'ம்) அவர்களுடைய அவதாரத்துக்கு முன்னிருந்த உலகநிலைமையைப் பற்றிக் :குர்ஆன் ஷரீ'பானது தலைப்பிலுள்ள ஆயத்தில் காணப்படும் ஒருசில சொற்களைக் கொண்டே முடிவுகட்டி விட்டது. அச் சில சொற்களின் கருத்தை விவரிக்கப் புகுவோமாயின், அஃதொரு பெரிய கிரந்தமாகவே போய் மூடியும். தலைப்பில் எடுத்துக் காட்டப் பட்டிருக்கும் வேத வாக்கியம், அ'ரபி'க் கா'பிர்கள், யூதர்கள் (எஹூதி கள்), கிறிஸ்தவர்கள், இந்துக்கள் ஆதியோரின் அக்காலத் தாழ்மையான இழிநிலைமை இப்படிப்பட்ட தென்பதை நன்கு வருணித்துக் காட்டு கின்றது. அக்காலத்தில் அந்த நான்கு ஜாதியார்களிடத்தில் மட்டுமேதாம் அறியாமையென்னும் மூடத்தனம் குடிகொண் டிருந்ததென்று கருதிவிட வேண்டாம்; அற்றைநாளில் அஞ்ஞான அந்தகார மென்பது இப்பூவுலகி லுள்ள எல்லாத் தேசங்களிலும், எல்லாச் சமயங்களிலும் நிரம்பவே காணப்பட்டுவந்தது. ஆனால், அதற்கு முன்னே எக்காலத்திலும் இப் பூவுலகில் தர்மமென்பது ஒருபோதும் நிலைநின்றதே யில்லையென்று ஒரு வராலும் கூறிவிடுவது முடியாது. :குர்ஆன் ஷரீ'பும் அவ்வாறு கூறவில்லை. காலத்துக்குக் காலம் தேசா தேசங்கள் தோறும் ஆண்டவனால் ஆங்காங் குள்ள மனிதர்களின் உஜ்ஜீவிப்புக்கென்று எழுப்பப்பட்டுவந்த நபிமார் (தீர்க்கதரிசி)களால் அப்போதைக் கப்போது தத்தம் வர்க்கத்தினருக்கு உபதேசிக்கப்பட்டு வந்த தர்மோபதேசங்க ளெல்லாம் நாளடைவில் இத் தரணியினின்று மறைந்தே பறந்துபோய்க் கிடந்தன. உலகத்திலுள்ள ஒவ்வொரு ஜாதியாரும் அக்காலத்தில் மெய்யான ஞானத்தினின்றும், உண்மையான ஒழுக்கத்தினின்றும் நெடுந்தூரத்தில் விலகியே நின்றார்கள். மக்கட் பூண்டுக ளனைத்தும் தங்களுடைய பழக்க வழக்கத்திலும், ஒழுக்க விழுப்பத்திலும், ஆத்மார்த்த பாரமார்த்திகத்திலும், " தலையின் இழிந்த மயிரனையர் மாந்தர், நிலையின் இழிந்தக் கடை" என்னுமாறு முற்றமுற்ற இழிவடைந்தே கிடந்தன. உலகத்தின் ஒழுங்கீனத்தைப் பற்றி எல்லோ ருக்கும் இனிதா யெடுத்துரைக்க வேண்டுவது, அக்காலத்தில் எழுதப் படிக்கத் தெரியாதவரென்று எல்லாராலும் கருதப்பட்டு வந்த ஓர் "உம்மீ" யின் கடமையாகத்தான் காணப்பட்டது. உலகத்தின் ஒவ்வொரு மூலை

முடுக்கிலுமுள்ள மானிடர் நிலையை நேரிற்சென்று கண்டு வருவதற்குரிய சாதனங்கள் அக்காலத்தில் இத்துணைச் சௌகரியமா யமைந்திருந்ததில்லை; இக்காலத்தி லிருப்பதேபோல், இருந்த இடத்திலிருந்தே உலகத்தின் முழுச் சமாசாரத்தையும் அன்றாடம் அரைக்கணத்திலே அறிந்து கொள்ளக் கூடிய ஏனை வசதிகளும் அக்காலத்தில் இருந்ததில்லை. ஆயினும், பாலை வனப் பிரதேசமாகிய அரப் நாட்டின் மத்தியிலிருந்து 1,400 ஆண்டுகளுக்கு முன்னே நபிகள் திலகமவர்கள் (சல்) திருவாய்மொழிவழியே வெளியான வசனங்களே உலகத்தின் உண்மையை உள்ளபடியே உதஹரித்துக் காட்டு கின்றன.

புராதன காலத்தில் இத்தாரணி முழுமைக்கும் ஞானதீபத்தையும் நாகரிக நல்லொழுக்கத்தையும் அளித்துக்கொண்டு வந்த இவ் வாசியா கண்டம் அக்காலத்தில் நாவினால் நவின்றுரைக்க முடியாத அத்துணை அநியாயங்களுக்கும் அக்கிருத்தியங்களுக்கு மெல்லாம் உறைவிடமாய் மாறிப் போய்க் கிடந்தது; ஒழுக்கக் கேடென்பது புண்ணியபூமி யென்னப்படும் இப்பாரத நன்னாட்டையும் விட்டுப் பிரிந்திருக்க வில்லை. மனிதர்களால் தெய்வமென்று கொண்டாடப் பட்டவைகளின் சிரசின் மீதும் எத்தனையோ விதமான அருவருக்கத்தக்க ஆபாசமான புராணப் புளுகுகளையெல்லாம் புனைந்து வைத்திருந்தார்கள்; அக்கால இந்தியாவில் தர்மமென்பதுகூட ஒரு சிறிது காணப்பட்டதோ வென்று சந்தேகிக்கும்படியான நிலைமைக்கு இத்தேசம் வந்துவிட்டது. ஆரியர்களின் உபநிஷத்துக்களிலுள்ள உத்தம மான ஆஸ்திக தர்மோபதேசங்களில் மனத்தைச் செலுத்தமாட்டாத மனிதர் களெல்லாரும் கௌதம புத்தரின் காலத்துக்குப் பின்னே பகிரங்க விக்ரஹ ஆராதனையுள் இழிந்துவிட்டார்கள்.* பரதேவதைக்கு இணையாகப் பற்பல விக்ரஹங்களையும் வழக்கத்தில் கொண்டுவந்ததுடன், க்ஷத்திரிய வம்சத்தில் தோன்றிய பற்பல அரசர்களையும் பகவானின் அவதாரமென்றே கருதத் தலைப்பட்டு விட்டனர். ஆரிய ஹிந்துக்களுக்குள்ளே வேதாந்தமென்னும் உயரிய கொள்கையொன்று இருந்து வந்தபோதினும், பிதிர்க்களுக்குப் பலி யிடுவதும் அவர்களுக்குள் ஒரு மதக்கொள்கையாகவே மாறிக்கிடந்தது.

இயற்கைத் தோற்றங்களான சந்திர சூரியர்கள் போன்றவை யல்லாமல், இராமன் கிருஷ்ணன் போன்ற மானிடர்களும் தெய்வங்களாகக்

* இந்தியாவில் உருவ வழிபாடு எப்பொழுது துவக்கமாயிற்றென்று நிச்சயமாய்ச் சொல்வதற் கில்லை. கடைச்சங்க காலத்தில், உத்தேசம் 1900 ஆண்டுகளுக்கு முன்னே வாழ்ந்த கண்ணகியும் பத்தினிக் கடவுளாய் வணங்கப்பட லாயினள்; கண்ணகிக்கு முன்னே வாழ்ந்திருந்ததாய்க் கருதப்படும் திரௌபதியும் கடவுளாய் விட்டாள். இராமன், கிருஷ்ணன், கௌதமன் ஆகியோரும் கடவுளரே. நாலாயிரம், ஐயாயிரம் ஆண்டுகட்கு முன்னே இந்நாட்டில் செழித்தோங்கி யிருந்ததாய்க் கருதப்படும் திராவிட நாகரிகம் (சிந்து சமவெளி நாகரிகம்) கூட உருவ வழிபாட்டினைவிட்டு நீங்கியிருக்க வில்லை. பெரும் பெரும் புத்தபிரான், மகாவிஷ்ணு, மகாசிவன் முதல் "எறும்புகடை யாதி எண்பத்து நான்காயிரம் ஜீவராசிகளும்" வழிபட்டு வணங்கப்பட்டே வந்திருக்கின்றன.

கொண்டாடப்பட்டதுடன், மற்றுமுள்ள மரம் மட்டை, மலை கடல், காடு வனம்,...கல்மண் முதலியன வெல்லாமும் தேவதைகளாகவே கொண்டாடப் பட்டு வந்தன. பிரம்மா, விஷ்ணு, சிவன் என்னப்படும் மூன்று கடவுள்கள் சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்று கூறப்படும் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழிலுக்காகவும் ஏற்பட்டுள்ள திரிமூர்த்திகள் ஆவார்கள். [இக்காலக் கல்விமான்கள் அம்மூன்றும் ஒன்றே யென்றும், ஒன்றேதான் மூன்ருய் வருணிக்கப்பட்டு வருகிறதென்றும் 'திரியேகத்வ' வியாக்யானம் கூறுவர்.] இம்மூவருக்கும் உருவ வழிபாடும், ஆலய நிலயங் களும் உண்டு. இதுவேயுமன்றி, "ஷண் மதம்" என்று ஆறு மார்க்கங்கள் இருக்கின்றன: அவை சைவம், வைஷ்ணவம், சாக்தம், காணபத்தியம், கௌமாரம், சௌரம் என்பனவாம். சிவனை, அல்லது விஷ்ணுவை, அல்லது சக்தியை, அல்லது கணபதியை, அல்லது சுப்ரமணியனை (அறுமுகனை) அல்லது சூரியனைப் பரதேவதையாகக் கொண்டாடி வணங்குவதே அவ்வம் மதமாயிருக்கிறது. இன்னம், இந்திரன், சந்திரன், காளி, துர்க்கை, அக்கினி, ஆகாயம், தண்ணீர் போன்றவைகளும் வணங்கப்படுவ துண்டென்ப. எனவே, இந்நாட்டில் பல தெய்வ வணக்கமும், இணை வைத்துப் பூஜிப்பதும் சர்வ சாதாரணமாகவே நடைபெற்று வருகின்றன. அக்காலத்தில் இந் நாட்டில் இந்துமதம் எவ்வெவ்வாறெல்லாம் நடைபெற்று வந்ததென்பதை அறிய விரும்புவோர் தயானந்த சரஸ்வதியார் வரைந்துள்ள "சத்தியார்த்தப் பிரகாசம்" — (உண்மைநெறி விளக்கம்) என்னும் நூலில் பரக்கக் காண லாம். மகாலிங்கத்தின் தோற்றத்தைப்பற்றி அப்பெரியார் எழுதியுள்ளதை மட்டுமே ஈண்டு யாம் எடுத்துக்காட்டாக எடுத்தாள்கிறோம். மெய்யன் பர்காள்! மன்னிப்பீர்களாக :—

"வாம மார்க்கிகளும், சைவர்களும் ஒன்று சேர்ந்து லிங்கம், ஜலாதாரி என்று சொல்லப்படும் ஆண் பெண் குறிகளைப் பூஜைசெய்து, அதைப் பரவச் செய்யவும் கட்டுப்பட்டார்கள். அதைப் பூஜை செய்வதில் அவர் களுக்கு நாணம் தோன்றவில்லை போலும். அது காட்டாளர்க ளுடைய செய்கையென்றும், ஆதலின் அது தகுதியற்றதென்றும் அவர்களுடைய புத்திக்குப் புலப்படவில்லை போலும்," என்று தயானந்தர் தமது "சத்தி யார்த்தப் பிரகாச" நூலில் எழுதுகிருர். அவருடைய அந்தக் கிரந்தத்தில் இவ்வாறும் ஒரு விஷயம் காணப்படுகின்றது :— "சிவபுராணப் பிரகாரம், 'நான் சிருஷ்டி செய்ய வேண்டும்,' என்று சிவன் எண்ணினுர். உடனே 'நாராயண' என்று சமுத்திரத்தை யுண்டுபண்ணினுர். அதன் நாபி யிலிருந்து ஒரு தாமரை மலரும், அதிலிருந்து பிரம்மாவும் உண்டானுர்கள். சமுத்திரத்திலிருந்து கைந் நிறைய ஜலத்தை எடுத்துப் பார்த்துவிட்டுக் கீழே ஜலத்திலெறியவே, அங்கே நீர்க்குமிழி உண்டாயிற்று; அதிலிருந்து ஒருவர் உற்பத்தியானுர்; அவர் பிரம்மாவை நோக்கி, 'ஏ பிள்ளாய்! சிருஷ்டியை உண்டு பண்ணு!' என்று ஏவினுர். அதற்கு, 'நான் உன் பிள்ளை

இல்லை,' என்று பிரம்மா பதிலளித்தார். 'நீதான் என் பிள்ளை,' என்றார் அவர். இவ்வாறு இருவருக்கும் தர்க்கம் ஆரம்பமாய், ஆயிரம் தேவ வருடங்கள் மட்டும் ஜலத்தில் சண்டை நடந்தது. அப்பொழுது மஹா தேவன் தான் சிருஷ்டிக்கென்று அனுப்பிய இருவரும் சண்டை செய்து கொண்டிருப்பதை அறிந்தார்; அப்பொழுது அவர்களிருவருக்கு மிடையில் மஹாலிங்க மொன்று தோன்றி ஆகாயத்தை நோக்கிற்று; அதைக் கண்டு இருவரும் ஆச்சரியமடைந்து, அந்த லிங்கத்தின் திருமுடியையும், திருவடியையும் காண வேண்டுமென்னும் ஆவலுடன் திருமுடியையேனும் திருவடியையேனும் முதலில் அறிந்து வருகிறவனே தகப்பனென்றும், பிறகு வருகிறவன் பிள்ளையென்றும் நிச்சயம் செய்து கொண்டார்கள். விஷ்ணு கூர்மாவதாரம் (ஆமை வடிவம்) எடுத்துக் கீழே சென்றார்; பிரம்மா அன்ன பக்ஷி அவதாரமெடுத்து மேலே பறந்தார்.

"இருவரும் மனோ வேகமாய்ச் சென்றார்கள். நூறு தேவ வருடங்கள் சென்றும் அந்த மஹா லிங்கத்தின் திருமுடியையும், திருவடியையும் காண வில்லை. அப்பொழுது கீழேயிருக்கும் விஷ்ணுவும், மேலேயிருக்கும் பிரம்மாவும், 'நான் முன்னே தெரிந்துகொண்டு போனால் அவன் எனக்குப் பிள்ளையாவான்,' என்று யோசித்தார்கள்; பிரம்மா இவ்வித ஆழ்ந்த யோசனையில் இருக்குங்கால், ஒரு பசுவும் தாழம்பூவும் மேலே யிருந்து கீழே வீழ்ந்து கொண்டிருந்தன. 'எங்கிருந்து வருகிறீர்கள்?' என்று பிரம்மா வினவ, 'நாங்கள் மஹா லிங்கத்தின் திருமுடியிலிருந்து வருகின்றோம்; நாங்கள் புறப்பட்டு ஆயிரம் வருஷமாயிற்று,' என்றன. அதைக் கேட்டு, பிரம்மா ஆச்சரியமுற்று, 'லிங்கத்திற்கு ஆரம்பம் முடிவு உண்டா, இல்லையா?' என்று வினவினார். அவை முடிவற்றவை யென்று கூறின. உடனே பிரம்மா, 'என்னுடன் வந்து லிங்கத்தின் முடியில் பால்தாரை வருஷிக்கிறதென்றும், பூமாரி பொழிகிறதென்றும் சாக்ஷியம் சொன்னால் உங்களுக்கு இளைப்பாறுதல் அளிப்போம்,' என்றார். அதற்கு அவைகள் பொய்ச் சாக்ஷி சொல்ல முடியாதென்றன; பிரம்மா உடனே சினங்கொண்டு, 'அடா! சாக்ஷியம் கொடுக்காவிடில் இக்கணமே எரித்துச் சாம்பலாக்கி விடுவேன்,' என்றார். அதைக்கேட்டு அவை இரண்டும் பயந்துகொண்டு, 'நீங்கள் விரும்புகிற விதமே கூறுவோம்,' என்றன. பிறகு மூவரும் கீழே வந்தார்கள். மஹா விஷ்ணு முன்னமே வந்திருந்தார். பிரம்மாவும் வந்து, 'திருவடியைக் கண்டீர்களோ?' என்று வினவ, விஷ்ணு, 'நான் காணவில்லை,' என்றார். உடனே பிரம்மா, 'நான் திருமுடியைப் பார்த்து வந்திருக்கிறேன்,' என்றார். 'சாக்ஷி யா'ரென்று விஷ்ணு வினவ, பசுவும், புஷ்பமும், 'நாங்கள் லிங்கத்தின் சிகரத்திலிருந்தோம்,' என்றன. அப்பொழுது மஹா லிங்கத்திலிருந்து ஒரு சப்தங் கிளம்பி, 'நீ பொய் சொன்னதனால் உன்னுடைய மடலை என்னுடைய அல்லது வேறு தேவர்களுடைய பூஜையில் உலகத்தில் உபயோகிக்க மாட்டார்கள்; பூஜை செய்கிறவர்களுக்கும் நாச

மேற்படும்,' என்று சபித்தது. பொய் சொன்ன முகமானது மலமாய் விட்டதென்றும், அதனால் மலத்தைச் சாப்பிட வேண்டுமென்றும் பசுவையும் சபித்தது; 'நீ பொய் சொன்னதனால் உன்னுடைய பூஜையை உலகில் யாரும் செய்ய மாட்டார்கள்,' என்று பிரம்மாவையும் சபித்தது. 'உண்மையை உரைத்ததனால் எங்கும் பூஜிக்கப்படுவாய்,' என்று விஷ்ணுவைத் துதித்தது. அதன் பிறகு லிங்கத்தைப் பிரம்மாவும், விஷ்ணுவும் துதித்தார்கள்; துதிக்கவே, சடைமுடியுடன் கூடின ஒருவர் லிங்கத்திலிருந்து வெளிவந்து, 'நான் சிருஷ்டி செய்ய அனுப்பினேன். ஏன் சண்டை செய்து கொண்டிருக்கிறீர்கள்?' என்றார். சாமான்களில்லாமல் சிருஷ்டி செய்ய முடியாதென்று பிரம்மாவும், விஷ்ணுவும் குறை கூறினார்கள். அப்பொழுது மஹாதேவர் தம்முடைய சடைமுடியிலிருந்து சாம்பலை எடுத்து, 'இதைக் கொண்டு சிருஷ்டி செய்யுங்கள்,' என்றார்." இதுதான் சிவலிங்கத்தின் வைபவமென்று தயானந்தர் கூறுகின்றார். ச. பி. 11-ஆவது அத்தியாய முழுதையும் படித்துப் பார்ப்பீர்களாக!

ஹிந்துஸ்தானத்தில் கொடுமையான வருணாசிரம வேற்றுமையும் அக்காலத்திலும் இல்லாமற் போகவில்லை. சூத்திரன் ஒருவன் வேதத்தை ஓதவும், பிறர் ஓதுவதைக் கேட்கவும் அருகதையற்றவனென்று கருதப்பட்டு வந்தான்; அவற்றை மீறி ஓதியவன் நாவும் அறுக்கப்படத் தக்கதாம்; மீறிக்கேட்டவன் செவியும் பழுக்கக் காய்ச்சிய நாராசத்துக்கு இரையாதல் வேண்டுமாம். ஈசுவரனுடைய முகத்திலிருந்து பிராம்மணர்களும், புஜங்களிலிருந்து க்ஷத்திரியர்களும், தொடைகளிலிருந்து வைசியர்களும், பாதங்களிலிருந்து சூத்திரர்களும் முறையே உண்டாயினர்களென்பது (யஜுர், 30 : 11) என்பதன் கருத்தாகும். எவ்விதம் முகம் கைகளாகவும், கைகள் தொடைகளாகவும், தொடைகள் பாதங்களாகவும் மாற முடியாவோ, அவ்விதமே பிராம்மணன் சூத்திரனாகவும், சூத்திரன் வைசியனாகவும் மாறுவது முடியாது என்பர். மனுவின் அபிப்பிராயப் பிரகாரம் சூத்திரர்கள் பிரம்மாவினாலேயே அடிமைகளாகப் படைக்கப்பட்டிருத்தலினால், ஒரு சூத்திரனுடைய எஜமானன் அவனை விடுதலை செய்த போதினும், அவன் விடுபடல் முடியாது; அடிமைத்தனமென்பது அவனுடன் பிறந்திருக்கும்போது அவனை எவரால் விடுதலை செய்தல் முடியும்? இன்னம், ஜாதி வித்தியாசத்தின் கொடுமைகளும், தீண்டாமை யென்னும் இழிய பிணியும் இந்நாட்டை அக்கால முதல் இக்காலம்வரை ஆட்டி அலைக்கழித்து வருகின்றன. "நால்வகைச் சாதியிந் நாட்டினீர் நாட்டினீர்!" என்று அன்று கபிலர் அறைந்திருந்தும், இன்று நாலாயிரம் ஜாதிகளை நாம் இங்கே காண்கிறோம். தமிழ்நாட்டில் பறையர் பள்ளர் நிலையையும், கேரள நாட்டில் தீயர்கள் நையாடிகள் போன்றோர் நிலையையும் நினைக்க மனம் துணுக்குறுகின்றது. இற்றைக்கும் இவ்விந்திய நாட்டில் உத்தேசம் 6 கோடிக்கு மேற்பட்ட மக்கள் தீண்டாமைப் பிணியால் ஒடுக்கப்பட்டும் அடக்கப்பட்டும்

மிதிக்கப்பட்டும் தொகைக்கப்பட்டும் கிடக்கின்றார்களென்றால், அக்கால நிலைமையைப்பற்றி அறையவும் வேண்டுமோ? மகாத்மாஜீகளும், மகா சபாக்காரர்களும், இஸ்லாத்தைப் பார்த்த பின்னரேனும் இந்து மதத்தில் ஏக சகோதர ஒற்றுமையை ஏற்படுத்திவிடுவராயின், அது சாலவும் சிலாகிக்கத்தக்கதே யாகும். பலதெய்வக் கொள்கையும், பலஜாதி பேதமும் இக்காலத்தில் இந்நாட்டிற்கு நன்மையைவிடத் தீமையையே அதிகம் விளைத்து வருகின்றன வென்று இற்றைநாள் இந்துமதப் பெரியார்கள் இயம்பத் துணிந்து விட்டார்கள்.

இந்தியாவுக்குள் சக்திபூஜை யென்பது எக்காலத்திலே நுழைக்கப் பட்டதென்று கூறுவதற்கு ஒன்றும் ஆதார மில்லை. சிவத்தின் ஒரு பாதியைச் சக்தியென்று சொல்லுகிறார்கள்; இந்தச் சக்தியைப் பார்வதி யென்றும், பவானியென்றும், காளியென்றும், மகா காளி யென்றும், துர்க்கையென்றும், சாமுண்டியென்றும், மற்றும் பற்பலவாறுகவும் பயங்கர நாமத்துடன் அழைத்து வருகிறார்கள். சாக்தமதம் இந்நாட்டில் மகா புராதனகாலத்திருந்தே அனுஷ்டிக்கப்பட்டுவந்தும், பெண்களின் நிலைமை மட்டும் உயரவில்லை. கி. பி. 7-ஆவது நூற்றாண்டில் பவ்பூதியென்னும் வட மொழிக் கவிவாணரால் வரையப்பட்ட நாடகமொன்றில் அந்தத் தேவதை யின் பூஜையானது நரபலிகளைக் கொண்டும், மற்றும் பற்பல விதமான அருவருக்கத்தக்க கருமங்களைக் கொண்டும் நடத்தப்பட்டு வந்ததென்று அதன் ஆசிரியர் எழுதியிருக்கின்றார். நரபலியுடன் சிசுபலியும் இந்நாட்டில் குறைந்திருக்க வில்லை. மோக்ஷங் கிடைக்குமென்னும் முக்தியெண்ணத் துடன் தெய்வத்தின் தேர்க்கால்களில் அரைபட்டும், புண்ணிய நதிகளில் மூழ்கியும் மனிதர்கள் உயிரை மாய்த்துக்கொள்வதும் இந்நாட்டில் சர்வ சாதாரணமாய் நடைபெற்று வந்தது. அக்காலத்தில் நடைபெற்று வந்த அகோர சககமன மென்னும் உடன்கட்டையேறுதல் என்னும் கொடிய பயங்கரமான பழக்கத்தையும், சிற்சில யாகங்களுக்குரிய மகா துணிகரமான இழிய துர்வழக்கத்தையும் பற்றிப் படிக்கப் புகுவோமாயின், எந்தக் கல்மன முள்ள மனிதனுடைய மனமும் கரைந்துருகாமற் போகா தென்பது திண்ணம். இந் நாட்டுக்குள் விதவைகளை உடன்கட்டை ஏற்றுவதென்னும் கொடிய அநாகரிகப் பழக்கம் எப்பொழுது முதன்முதலாக நுழைக்கப் பட்டதென்பதற்கு ஆதாரமில்லை யென்று சையித்' அமீரலீ அறைகின்றார்; ஆனால், கி. பி. 7-ஆவது நூற்றாண்டில் இந் நாட்டில் அது சர்வசாதாரண மாக வழக்கத்தி லிருந்துவந்த தென்றும் அவரே வரைகின்றார். குழந்தை யில்லாத விதவைகளின் கதியானது மகா கொடுமையுள்ளதாய் இருந்து வந்ததனால், சககமன மென்பது எத்துணைக் கஷ்டமா யிருந்தபோதினும், அவர்களுக்கு அஃதொரு விமோசனமாகவே கருதப்பட்டு வந்தது. என்னெனின், அன்னவர்கட்குச் சொத்துரிமை இல்லை; விவாக விமோசன மில்லை; மறுமணமும் புரிந்துகொள்வது கூடாது. கணவனொருவன்

இத்தனை மனைவிகளைத்தாம் மணந்துகொள்ளலா மென்னும் சட்டக் கட்டுப் பாடுமில்லை.

இந்தியாவில் அக்காலத்தில் அனுஷ்டானத்தில் இருந்துவந்த "சாக்த மதம்" எத்தன்மைத்தாயதென்று சொல்லக்கூடிய விவரத்தை லேர்க்கிங்கி லிருந்து இஸ்லாமிய பிரசாரம் புரிந்துவந்த, காலஞ்சென்ற க்'ாஜா கமாலுத் தீனால் வரையப்பெற்றுள்ள நூல்களிலும், லண்டன் பிரிவீ கௌன்ஸில் ஜட்ஜாய் விளங்கிய, காலஞ்சென்ற சையித்' அமீரலீயால் எழுதி வெளி யிடப்பெற்றுள்ள நூல்களிலும் பரக்கக் காணலாம்.

இன்னம், அக்காலத்தில், எவ்வாறு புருஷன் இறந்த காரணத்தினாலோ, அல்லது நபுஞ்சகம் முதலிய ரோகங்களினாலோ பெண் தனது வர்ணத்தில் அல்லது உயர்ந்த வர்ணத்திலுள்ள அயல் புருஷருடன் சிறிதுகாலம் மக்கட் பேற்றுக்காகச் சேர்ந்துவாழ அனுமதியளிக்கப் பெற்றிருந்தன ளென்றும், அவ்வாறே மனைவியை இழந்த புருஷர்களும் வேறு அயல் விதவைகளுடன் சேர்ந்துகொண்டு நியோகம் செய்யலா மென்றும் கூறுதற்குரிய ஆதா ரத்தை ருக்வேதம், 10. 85. 40-ஆவது சுலோகத்திலிருந்து தயானந்தர் தமது ச. பி. 11-ஆவது அத்தியாயத்திலே எடுத் தெழுதியுள்ளார். படித்துப் பார்த்துக்கொள்க.

வேறெந்த நாட்டிலும் காணப்படாத "தேவதாசி" யென்னும் பஹி ரங்கக் கணிகையர் வழக்கமொன்றும் இந்நாட்டில் இருந்துவந்தது; இன்ன மும் இருந்துவருகிறது. ஏனை நாடுகளில் வயிற்றுப் பிழைப்புக்காக வியபி சாரம் புரிவோரெல்லாம் ஓர் இழிகுலமாக ஒதுக்கி வைக்கப்பட் டிருக் கிறார்கள். ஆனால், இந்நாட்டிலோ அத்தகைய பொதுமகளிர் தேவரடி யார்களாகவும், தேவாலயங்களுக்கு இன்றியமையாத பணியாளர்களாகவும், விவாகம் முதலிய பெரிய சதசுகளை அலங்கரிப்பவர்களாகவும் தேசமக்க ளெல்லோராலும் மிக்க கண்ணியத்துடனே கருதப்பட்டு வருகின்றனர் என்று அமீரலீ அறைகின்றார். தேவாலயங்களிலும், மடாலயங்களிலும் இப்பொழுதும் தேவதாசிகளுக்கு நல்ல மரியாதை கொடுக்கப்பட்டு வருகிற தாம்; தெரிந்துகொள்வீர்களாக.

இப்பரத கண்டத்தில் அக்காலத்தில் நடைபெற்றுவந்த "தந்திர பூஜை" யென்னும் ஒருவகை வாமமார்க்க நியமத்தைப்பற்றியும், "உடீஸ் தந்திரத்"தைப்பற்றியும், பல்வேறு வித யாகங்களைப்பற்றியும், முக்கியமாய்க் கோரக்பூர் குதிரை யாகத்தைப்பற்றியும், இன்னம், "சோலீ மார்க்கம்," "ஹோளிப் பண்டிகை," "நத்துராம் பண்டிகை," மற்றும் பல அக்காலப் பழக்கவழக்கங்களைப்பற்றியும் தயானந்தரின் ச. பி. 11-ஆவது அத்தியாயத் தையும், எம்மால் வரையப்பட்டுள்ள "ஆரியருக்கொரு வெடிகுண்டு," "ஆரிசமாஜிக் கர்ப்பணம்" * என்னும் நூல்களில் விரிவாய்க் காணலாம்.

* அடுத்த பக்கம் பார்க்க.

அக்காலத்தில் இந்நாட்டின் ஆண்பெண்களின் காரியாதிகளெல்லாம் புரோகிதர்களின் கைவயமே இருந்துவந்தன. அவர்கள் பற்பலவிதமான ஹோமங்களாலும், யக்கியங்களாலும், யாகங்களாலும் மற்றையோரை யெல்லாம் தம்முடைய ஆட்சியின்கீழே அடக்கிவைத் திருந்தார்கள். மனு தர்ம சாஸ்திரத்தின் பிரகாரம் பிராம்மணர்களும், க்ஷத்திரியர்களும் உயர் பதவியை அடைந்திருந்தார்கள். மனுவைப் போலவே யாக்ஞவல்கிய ரிடத்தும் வர்ணாசிரமக் கட்டுப்பாடென்பது ஒரு முறிக்கமுடியாத விலங் காகவே இருந்துவந்தது. சூத்திரர்களெல்லாம் இழிசனராகவே கருதப் பட்டுவந்தார்கள்.

ஸ்திரீகள் வேதம்படிக்கக் கூடாதென்றும், பிதிர்த் தர்ப்பணங்களில் கலந்துகொள்ளக் கூடாதென்றும், தேவதைகளுக்குச் செய்யும் யாகங்களில் தலைமைவகித்துச் சேர்ந்துகொள்ளக் கூடாதென்றும் சட்டம் பிறப்பிக்கப் பட் டிருந்தது. புருஷனுக்குப் பணிவிடை செய்து அவனைத் தெய்வமாக வணங்குவதே ஸ்திரீகளின் மதமாகும்; கணவனைத் தொழுதலே மனைவியர் கடைமையாம். "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப் பொய்யில் புலவன் பொரு ளுரை தேராய்" என்று "மணிமேகலை" யாசிரியர் மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் "குறளை"க்காட்டிக் கூறியுள்ளதைக் காண்க. எனவே, புருஷன் இறந்தபின் உடன்கட்டை ஏறத்துணியும் மனைவியர் தெய்வங்க ளாகவே கொண்டாடப்பட்டு வந்தார்கள். பண்டைக்காலப் பெரியார்பலரின் அபிப்பிராயத்தின்படி ஸ்திரீகள் அற்றைநாளில் அபரிசுத்த முள்ளவர்க ளாகவும், புருஷரின் சித்தவிகாரத்துக்கே உரிய பள்ளியறைத் துணைவர்க ளாகவும், கொடிய பைசாசங்களாகவுமே கருதப்பட்டுவந்தார்கள். ஆத லின், அவர்கள் அல்லும் பகலும் ஆடவரால் அடிமைகளாகவே அடக்கி யாளப்பட்டு வந்தார்கள்.

அக்காலத்தில் இக் குவலயத்தில் சன்னியாசிக ளென்னும் வெளி வேஷதாரிகள் பலர் மடாலயங்களில் கூடிக்கொண்டு அநேகவித மான அக்கிரமங்களை யெல்லாம் செய்துவந்தார்கள். பாப்பாண்டவர் போன்ற பல மடாதிபதிக ளென்பார் அளவற்ற ஐசுவரியங்களை வைத்துக் கொண்டு, கொலை, களவு, கள், வியபிசாரம், சூது முதலிய ஒழுங்கீனங்களுள் முற்ற முற்ற மூழ்கிக் கிடந்தார்கள். சடை முடியும் சாம்பலும் உருத்திராக்ஷமும் சிலுவையும் காஷாயமுமே அவர்களுக்குரிய சாதுத்தனமாய்க் காணப்பட்டன. வெளிப்பேச்சுக்கு மட்டும் தங்களைப் பிரமசாரிகளென்றும், பால சன்னியாசிக ளென்றும் சொல்லிக்கொண்டு, பொதுஜனங்களை அதிகம் ஏமாற்றிவந்தார்கள். போப்

* ஆரிய சமாஜிக் கர்ப்பணம் என்னும் இந்நூல், முன் ச. ராஜகோபாலாசாரியரது தலைமையின் கீழ் நடைபெற்று வந்த காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில் 14-9-1939-இல் பறிமுதல் செய்யப்பட்டது.

ஆருவது அலெக்ஜாந்தர், அவர் "குமாரன்" ஜார்ஜ் போர்ழியா போன்ற அந்தப் போலிச் சன்னியாசிகள் புரிந்துவந்த அக்கிரமங்களுக்கும் அயோக்கியத்தனங்களுக்கும் ஓர் அளவுசொல்லி முடியாது. எத் தேசங்களையும் விடுத்து இந்துஸ்தானத்தைமட்டுமே எடுத்தோதவேண்டுமென்பது எமது தீ நோக்கமன்று. என்னெனின், இப்பரதகண்ட மட்டுமேதான் மேற்கூறியவாறு அஞ்ஞான அந்தகாரப் பௌராணிகக் கட்டுப்பாட்டுக்குள் மூழ்கிக் கிடந்ததென்று எண்ணிவிட வேண்டாம். இதற்கு அடுத்தாற்போ லுள்ள பாரசீக தேசத்திலும் பார்ஸீ மதமென்னப்படும் ஜர்தஷ்தின் மார்க்கமொன்றும் நடைபெற்றுவந்தது. ஆங்கும் விக்ரஹ ஆராதனை என்பது அதற்குரிய பற்பலவிதமான அனுசாரங்களுடனே நுழைந்துகொண் டிராமலில்லை. மைத்ரா வணக்கமென்னும் ஒருவகைப் புருஷலிங்க பூஜையும் ஆங்கு நடைபெற்றே வந்தது; பிறகு அந்த மஹாலிங்க பூஜையை நாளடைவில் சூரிய நாராயண வணக்கத்துக்குரிய ஒரு மாபெரும் மதமாகச் செய்துவிட்டனர் அம்மக்கள். ஆங்கிருந்து அந்த மதமானது உரோமாபுரிக்குள்ளே சென்று, அவ்விடத்திற்குரிய அரசாங்க மதமாகவும் நிலைகொண்டுவிட்டது.

அக்காலத்தில் அத்தேசத்தில் ஸ்திரீகள் நடாத்தப்பட்டுவந்த மிருகத்தனமான நடத்தையானது வேறெங்குமே இருந்துவந்த தில்லையென்றுணர்க. மனுமகாராஜேனும் பெண்மணிகளை ஒருவாறு மனிதப் பிராணியாக மதித்து வந்தாரென்று கூறிவிடலாம். ஆனால், பாரசீக மாதர் ஆடவரின் சித்தவிகார ஒழுங்கீனத்துக் கெல்லாம் இடந்தரவேண்டிய அடிமைகளாகவே முற்றும் கருதப்பட்டு வந்தார்கள். ஸ்திரீ-புருஷ வியவகாரங்களில் பாரசீகப் புருஷர்கள் கொண்டதே கோலம், கண்டதே காட்சியாக நடந்துவந்தார்கள். மிகவு நெருக்கமான தடைமுறையி லுள்ள ('ஹராமான) பந்துக்களையும் சர்வதாராளமாக விவாகம் செய்துகொள்வார்கள்; இஷ்டம் வந்தபோது, அம்மனைவியரை விலக்கியும் விடுவார்கள். ஆயினும், பாரசீக மாதர்களெல்லாரும் பர்தாவுக்குள்ளேயே அடைத்து வைக்கப்பட்டு வந்தார்கள். யூனன் (கிரீஸ்) தேசத்தின் மாதர்களெல்லாரும் வெளியில் வரமுடியாமல் அறைக்குள்ளே வைத்துப் பூட்டப்பட் டிருந்ததேபோல், பாரசீகப் பெண்மணிகளும் மிக மிகக் கொடுமையாய் நடாத்தப்பட்டு வந்தார்களென்று ஒருவாறு கூறிமுடிக்கலாம். பாரசீகதேசத்தில் பேடிகளைக் கொண்டு பெண்களுக்குக் காவல்புரியச் செய்யப்படும் வழக்கமானது தொன்றுதொட்ட காலத்திலிருந்தே அனுஷ்டானத்தில் இருந்துவந்தது. யூனனில் (கிரேக்க நாட்டில்) இருந்ததேபோலப் பாரசீகத்திலும் 'வைப்பு வழக்க' மென்பது சர்வசாதாரணமாய் நடைபெற்றுவந்தது; இவ்வழக்கம் எல்லாச் சமூகத்தினராலும் ஒரு கௌரவமுள்ள காரியமாகவே கருதப்பட்டு வந்தது. தை'ரீஸ் சக்ரவர்த்திக்குப் பின்வந்த அர்த'ஷீர்மெனமானல் (ஸிப்ரஸின் சகோதரன்) அநேக நூற்றாண்டுகளுக்கு முன்னே கொண்டுவரப்பட்ட மஹாலிங்க பூஜையானது ம'ஜ்த'க் என்பவனால் மிகவும் உச்சஸ்தா

னத்துக்கு உயர்த்தப்பட்டதுடன், அந்த ம'ஜ்த'கின் காலத்திலேயே ஒரு பெண்ணைப் பல புருஷர்கள் ஏககாலத்தில் பெண்டாளலா மென்னும் சட்டமும் பகிரங்கமாகப் பிரகடனப் படுத்தப்பட்டது. ஆகவே, அளவற்ற மது பானமும், கணக்கற்ற வியபிசாரமும் அம் மன்னனுடைய காலத்திலேயே அந்நாட்டில் அதிகமாக ஆரம்பித்துத் தலைவிரித்துத் தாண்டவ மாடத் துவக்கிவிட்டன.

அத்தேயத்தில் அரசர்களே தெய்வங்களாகக் கொண்டாடப்பட்டு வந்தனர்கள். ஆகலின், குடிபடைகளின் உயிரும் பொருளு மெல்லாம் அவ்வரசர்களுக்கே உரியனவென்று கருதப்பட்டு வந்தன; ஆகவே, அந்தப் பிரஜைகளெல்லாம் அரசர்களின் அடிமைகளாகவே வாழ்ந்து வந்தார்கள். கி. பி. ஆறுவது நூற்றுண்டின் ஆரம்பத்திலிருந்த ம'ஜ்த'கின் காலத்திலே தான் பொதுவுடைமைக்கக்ஷி என்னும் சட்டமும் உண்டுபண்ணப்பட்டது. அதன்பின்பு ஒருவருக்கும் தனியான சொத்துச் சுதந்தரம் இருப்பது கூடாதாயிற்று. நீர், நெருப்பு, புல், பூண்டு முதலிய வெல்லாம் பொது உடைமைகளாய்ப் பாவிக்கப்பட்டதேபோல், தேசத்தின் ஐசுவரியமும், ஸ்திரீ ரத்னங்களுங்கூட எல்லாருக்கும் பொதுவான கூட்டுடைமைகளாகவே பாவிக்கப்பட்டு வந்தன. உடன்பிறந்த சகோதரிகளும் சொந்தச் சகோதரர் களால் தங்களுக்குச் சொந்தமான மனைவிகளாக ஆக்கிக் கொள்ளப் பட்டார்கள். இப்படிப்பட்ட ராஜவிளம்பரம் ம'ஜ்த'கினாலேதான் வெளி யிடப்பட்டது.

சீனுதேசமும் இத்தகைய மௌட்டியத் துள்ளேதான் அக்காலத்தில் ஆழ்ந்து தாழ்ந்துபோய்க் கிடந்தது. ஆங்கும் அரசர்கள் தெய்வங்களாகவே பாவிக்கப்பட்டு வந்தார்கள். அவ்வாறே ஐரோப்பா கண்ட முழுதும், கிறிஸ்தவ நாடாகிய உரோமாபுரி ஒன்று நீங்கலாக அந்தகாரத்துள்ளும் அஞ்ஞானத்துள்ளுமே அதிகம் அழுந்திக் கிடந்தது. அந்த ரூம்தேசப் பாப் பாண்டவர் மடாலயத்துள்ளே இயேசுகிறிஸ்துவின் திருநாமத்தால் இழைக்கப்பட்டு வந்த திருவிளையாடல்களை யெல்லாம் எடுத்தெழுதுவ தெனின், அஃதொரு பெருங்காப்பியமாகவே விரிந்து பரந்துவிடுதல் கூடும் என்றுணர்க. நல்ல காரிய மென்பதே இவ்வுலகமுழுதும் அக்காலத்தில் குதிரைக்கொம்பாய் அருகி விளங்கிற்று. அதற்குமுன்னே அவ்வப்பகுதி யிலும் நபிமார்கள் (தீர்க்கதரிசிகள்) தோன்றி அதிககாலம் கழிந்துவிட்ட படியால், இப்படிப்பட்ட இழிகுணம் எங்கும் பரந்து காணப்பட்டுவந்தது. நெடுநாட்களுக்குமுன்னே நபிமார்களால் நிலைநிறுத்தப்பட்ட நன்மாராயங் களும் சிறிது சிறிதாகக் கழிந்துகொண் டிருந்தன. என்னெனின், நபிமார்கள் அவதரித்துச் சென்று, "தங்களுக்கு முன்னே வேதம் அருளப் பட்டு, அப்பால் அன்னவர்கள் (அம் மக்கள்)மீது காலம் நீளமாய்ப்போய், அக்காரணத்தால் தங்களுடைய ஹிருதயங்களும் கட்டிப்பட்டுப் போய் விட்டவர்களைப்போலே" ஆய்விட்டார்கள்.—(:குர். 57 : 16)

ஏனையெல்லாத் தீர்க்கதரிசிகளைக் காட்டினும் இயேசுவே காலக் கணக்கின்படி நம்முடைய திருநபி அவர்களுக்கு மிக நெருங்கிய காலத்தில் (571 ஆண்டுகளுக்கு முன்னே) வசித்துவந்தவரா யிருக்கின்றார். இந்தியாவிலுள்ள ஹிந்துமதத்தைச் சீர்திருத்தம் செய்யத்தோன்றிய (கி. மு. 563-இல் அவதரித்த) கௌதம புத்தரும் ஈ'ஸாவுக்குச் சில நூற்றாண்டு களுக்கு முன்னரே இவ்வுலகை விட்டுப் பிரிந்துபோய் விட்டார். எனவே, இத்துணைச் சமீபத்திலுள்ள இயேசுவின் மதத்திலேனும் பல உண்மையான உயரிய அனுஷ்டானங்கள் காணப்படுதல் கூடுமென்று அறிஞர்கள் எதிர்பார்த் திருத்தல் கூடும். ஆனால், கி. பி. ஆறாவது நூற்றாண்டில் அம் மதத்தின் தன்மை எவ்வாறு இருந்துவந்தது? அதைப்பற்றிக் கிறிஸ்தவ ஆசிரியர்களே என்ன சொல்லுகின்றன ரென்று சிறிதே நாம் சிந்தித்துப் பார்க்கக் கடவோம். அக்கால நிலைமையைப் பற்றி விஸ்தரித் திருக்கும் கிறிஸ்தவ பிஷப் (பாதிரி) ஒருவர், தேவனது ராஜ்யமென்பதே முற்றும் தலைகீழாய்க் கவிழ்ந்துகிடந்த தென்றும், அம்மதத்தினுள் மலிந்து காணப்பட்டு வந்த பற்பலவிதமான தீமைகளினாலும் அத் தேவனது ராஜ்யத்துக்கு மாறாய், அங்குள்ள நரகமே இங்குவந்து விஜயம்செய்து விட்டதென்றும் கூறியிருக்கின்றார். அக்கால நிலைமையைப் பற்றி ஸர் வில்லியம் மூய்ரும் அதே விதமாகத்தான் வருணித்திருக்கிறார்: "இன்னம், ஏழாவது நூற்றாண்டின் கிறிஸ்து மதமானது சுயமே வயோதிகத்தால் தளர்ச்சியடைந்தும், கற்பழிந்துபோயும் கிடந்தது. ஒன்றுடனொன்று சண்டையிட்டுக் கொண்டிருந்த உட்பிரிவினைகளால் பலஹீன மடைந்து, முற்காலத்தி லிருந்துவந்த பரிசுத்தமான விரிந்த மதமானது மௌட்டியக் கொள்கைகளென்னும் சிறுபிள்ளைத் தனமான காரியங்களுக் கெல்லாம் அதிகம் இடங்கொடுத்து விட்டது," என்பதே அவர் கூற்று.

இதுதான் அக்காலத்தி லிருந்துவந்த மாதாகோயில் மதத்தின் முக்கிய மான மொத்தத் தன்மையை நன்கெடுத்து நிரூபிக்கின்றது. ஆனால், அதன் உள்வயணத்தையும் ஒரு சிறிது உற்றுநோக்கக் கடவீர்களாக. இயேசுவின் மார்க்கத்தில் ஏகேசுவர வாதமென்பது அதற்கு நெடுங்காலத்துக்கு முன்னரே இவ்வுலகை விட்டு நீங்கிப்போய்விட்டது. அதன் பின்னால் நுழைக்கப்பட்ட "திரியேகத்துவம்" என்னும் ஒருவகை மும்மூர்த்தி சித்தாந்தம் பிறகு பற்பல விதமான குளறுபடைகளுக் கெல்லாம் அம் மார்க்கத்தில் இடங்கொடுத்து விட்டது. தேவன் எவ்வாறு மனிதனாதல் முடியுமென்பதைப் பற்றியும், மூன்று எவ்வாறு ஒன்றாகக்கூடுமென்பதைப் பற்றியும், ஒன்று எவ்வாறு மூன்றாக மாறுமென்பதைப் பற்றியும் விவரிப்பான் வேண்டி அக்காலக் கிறிஸ்தவப் பாதிரிகள் எல்லாரும் தங்கள் அருமையான மூளையை அதிகம் சிரமப்படுத்தி வந்தார்கள். இப்படிப்பட்ட வீண் பிரயத்தினத்தால் விளைந்த பல்லாயிரக் கணக்கான தர்க்கவாத கிரந்தங்களுள்ளே மானிடர்கள் மூழ்கிவிட்டதன் பயனாய், இயேசுநாதர்

உண்மையிலே உபதேசித்துவிட்டுச் சென்றது இன்னதுதானென்று ஒரு சிறிதும் உணர்ந்துகொள்ள முடியாதவாறு அவர்கள் அத்துணை நெடுந் தூரம் சன்மார்க்கத்தினின்று விலகிச் சென்றுவிட்டார்கள். அலெக்ஜாந் திரியா (ஸிக்கந்திரிய்யா)விலிருந்த பெரிய புராதனப் புத்தகாலயம் அக்கால மததாராளச் சித்தமற்ற மாகொடிய பாதிரிமார்கள் தீயிட்டுக் கொளுத்தி யதைப்பற்றிக் கண்டித்தெழுதுங்கால், கிப்'ப'ன் என்னும் ஆங்கிலக்கீர்த்தி வாய்ந்த பிரபல சரித்திராசிரியர், அப்படிப்பட்ட மதக்குதர்க்கமுள்ள கிரந்தங்களெல்லாம் வெந்துதணிந்தது வாஸ்தவமேயாயின், அதனால் மன்பதைக்கு மிக்க நன்மையுண்டென்றே உறுத்திக் கூறியுள்ளார். கிறிஸ்து மதத்தின் முக்கிய மூன்று தீமைகளாகிய மதுபானம், பொதுச்சூது, வியபிசாரம் என்பன அக்காலத்திலேயே எங்கும் தலைசிறந்து விளங்கின வென்னலாம். 'த:க்லிப்' என்னும் ஒரு கிறிஸ்தவக் கூட்டத்தைப்பற்றி அ'லீ (ரலி') அவர்கள், "அம் மாதாகோயிலிலிருந்து அவர்கள் கற்றுக்கொண்ட தெல்லாம் சாராயம் பருகுவதேதான்," என்று கூறியதாக டோஸீ என்னும் ஓர் ஐரோப்பிய சரித்திராசிரியர் கூறிப் போந்துளார்.

அந்த ஆறுவது நூற்றுண்டின் கிறிஸ்தவர்கள் பண்டைக் காட்டு மிருகாண்டிகளின் தன்மையிலேயே தலைகீழாய் வீழ்ந்துவிட்டார்க ளென்றும், கீழ்நாட்டினரும் லஜ்ஜை யுறும்படியான அப்படிப்பட்ட அசுசிகரமான விக்ரஹ ஆராதனையுள்ளே ஆழ்ந்து மூழ்கிவிட்டார்க ளென்றும், தேவ அவதாரமும் திரியேகத்துவமும் ஏகேசுவரக்கொள்கைக்கு முற்றும் மாறுபட்டிருக்கின்றன வென்றும், இதைப்பற்றி வைதிகக் கிறிஸ் தவர்கள் கூறும் சமாதானமனைத்தும் மூடபக்தியுள்ள அடியார்களுக்கே திருப்தியா யிருக்குமென்றும் மேற்கூறிய கிப்பன் துரையே மீண்டும் எழுதி யிருக்கிறார்; இவர் இஸ்லாத்தைப் பற்றியும் :குர்ஆன் ஷரீ'பைப் பற்றியும் இவ்வாறு கூறுகின்றார்: "மு'ஹம்மதி'ன் மார்க்கம் கவர்பொருளென்னும் சம்சயத்தினின்று நீங்கி யிருக்கின்றது; அந்தக் :குர்ஆனே ஏகதெய்வக் கொள்கையைப்பற்றி இயம்பக்கூடிய ஒரு மகிமை வாய்ந்த நற்சாக்ஷியமாய் நின்று விளங்கிவருகின்றது."

இவ்வாறே அக்காலக் கிறிஸ்தவ உலகமுழுவதும் உட்பிரிவினை களாலும் பண்டைப்பாமரத் தன்மைகளாலும் சிதறுண்டுபோய்ச் சின்னா பின்னப்பட்டுக் கிடந்தது. இறந்த மனிதரின் ஆவிகளுங்கூடத் தெய்வங் களாகவே பூஜிக்கப்பட்டு வந்தன; மற்றும்பல விக்ரஹ வணக்கங்களும் உள்ளுக்குள்ளே மிகவும் ஆழமாகக் குடிகொண்டுவிட்டன. கிறிஸ்தவ நாடுகளில் சுயேச்சை யென்பதும், சுதந்தர எண்ண மென்பதும் சற்றும் தலைகாட்டாது மறைந்தொழிந்துபோய்விட்டன. "பொதுவாகக் கிறிஸ்தவ வர்க்கத்தினர் தமக்குள்ளே ஒருவரோடொருவர் நடந்துகொள்வதைக் காட்டினும், காட்டுமிருகங்களும் மனிதர்களிடத்தில் அத்துணைக்கொடிய

விரோதத்துடனே நடந்துகொள்வ தில்லை," என்று ஜூலியன் சக்ரவர்த்தியும் கூறியிருக்கின்றார்.

அலெக்ஜாந்திரியாவின் வீதிகளில், நாகரிக உலகத்தின் நல்ல விதமான நடுப்பார்வையின் முன்னே பண்டைக் காலத்தின் மகா புண்ணியவதியான பெண்ணொருத்தி ஈண்டு விவரித்தெழுத முடியாத அத்துணைக் கொடுமையுடனே ஒரு கிறிஸ்தவச் சாதுவால் மகா பகிரங்கமாகக் கொல்லப்பட்டாள். கிறிஸ்துமதத்தின் பெயரால் இழைக்கப்பட்டு வந்த எண்ணிலடங்காக் கொடுமைகளையும் கொலைகளையும் பற்றி டிரேப்பர் என்பார் என்றும் மறக்கமுடியா வண்ணம் மிகநன்றாக எழுதி வைத்திருக்கின்றார். அலெக்ஜாந்திரியாவில் அழகிய ஞானம் நிரம்பிய கற்பிற்சிறந்த கன்னிகையொருத்தி அந்நகரத்தின் பெரியார்கள் முன்னும் பணக்காரர்கள் முன்னும் தன்னுடைய ஞானோபதேசங்களை மிகநன்றாகப் புரிந்து வந்தாள். இத்தகைய மாது தன்னுடைய உபதேச மண்டபத்திலிருந்து வெளியில் வந்துகொண் டிருந்தபோது, கிறிஸ்துமதத்தைப் பின்பற்றிவந்த ஒரு மதமூர்க்கக் கூட்டத்தினரால் திடீரெனத் தாக்கப்பட்டாள். அவளை அவளது இரதத்தினின்று அந்தக் கிறிஸ்துமத மூர்க்கர்கள் கொடிய ஆவேசத்துடன் கீழே ஈர்த்துத் தள்ளி, நடுவீதியில் அவளுடைய சரீரத்திலிருந்த ஆடைகளை யெல்லாம் அடியோடு களைந்துவிட்டனர். அந்த "அம்மணத்தி"னால் திகில்கொண்டுவிட்ட அம்மாது கூவிய கூச்சலுக்குப் பின்னே அவள் ஆங்குள்ள ஒரு மாதாகோயிலுக்குள்ளே பலவந்தமாக இழுத்துக்கொண்டு செல்லப்பட்டு, அங்கிருந்த திருத்தொண்டரொருவரின் திரிதண்டத்தால் புடைத்துக் கொல்லப்பட்டாள். அதன்பின்பு அவ்வம்மணப்பிரேதம் பலவழியாலும் மானபங்கப் படுத்தப்பட்டுச் சித்திரவதையும் புரியப்பட்டது. அச்சவத்தின் மீதுள்ள தசைகளை யெல்லாம் கிளிஞ்சிலால் சுறண்டி, அந்த எலும்புகளையும் நெருப்பிற்போட்டுப் பொசுக்கும் வரை அந்தக் கிறிஸ்தவ பக்தர்களின் ஆவேசம் ஒரு சிறிதும் தணியவில்லையாம். இதைச் செய்த முதல்வனும் ஒரு கிறிஸ்தவத் திருத்தொண்டனாகவே கருதப்படுகின்றான். இவ்வாறு உண்மைக்கென்று உயிர் துறந்த ஹிப்பேஷியாவின் கொலையானது பிறகு அ'ம்ரிப்'னு ஆ'ஸினாலே தான் ஒருவாறு பழிதீர்க்கப்பட்டதென்று சையித்'அமீரலீ வரைகின்றார்.

சையித்' அமீரலீ அக்காலக் கிறிஸ்துமத ஒழுங்கீனத்தைப் பற்றி இன்னமும் இவ்வாறு எழுதுகின்றார் :— "கிறிஸ்தவ பக்தரென்றும், பிரக்யாதிபெற்ற சட்ட நிபுணரென்றும் பெயர் பெற்றிருந்த ஜஸ்டீனியன் சக்ரவர்த்தியின் காலத்திலே கான்ஸ்டாண்ட்டிநோபிள் இருந்துவந்த நிலைமையிலிருந்து கிறிஸ்தவ நாடுமுழுதும் அதுகாலைக் காணப்பட்டுவந்த ஒழுக்கமற்ற கயமையான தன்மை இப்படிப்பட்டதென்பதை ஒருவாறு ஊகித்துக் கொள்ளலாம். சமூகாசாரத்தில் பகிரங்க, அல்லது பிரத்தியேக ஒழுக்கமென்பது ஒருசிறிதும் அங்கீகரிக்கப்படவில்லை ; கைஸர்களின் சிம்மாசனத்

தின்மீது ஒரு பகிரங்க வியபிசாரியே அமர்ந்துகொண்டு, அந்தச் சக்ரவர்த்தியுடன் தர்பாருக்குரிய கௌரவங்க ளனைத்தையும் அடியுடன் அனுபவித்து வந்தாள். தியொடோரா, கான்ஸ்டாண்ட்டிநோபிளின் வீதிகளில் தன்னுடைய (வியபிசார) வியாபாரத்தை அதிபகிரங்கமாக நடாத்திவந்தாள். அவளுடைய நாமமானது அந்நகரிலுள்ள ஒழுக்கமற்ற மனிதர்களின் நாவிலெல்லாம் சர்வ சாதாரணமாக அடிபட்டுக் கொண்டிருந்தது. இன்னம், அன்னவள் அந்நகரிலுள்ள கண்ணியமிக்க நீதிபதிகளாலும், பக்தி நிறைந்த பிஷப்புகளாலும், வெற்றிமாலை சூடிய தளபதிகளாலும், அடிமைகளாய் அடங்கியொடுங்கிக் கிடந்த வேற்றரசுகளாலும், இந்தியாவிலுள்ள பற்பல உயர்பதவி தேவதாசிகளைப் பார்க்கினும் கவுரவமிக்க மகாராணியே போல மேதை மரியாதைகளுடனே கௌரவமாக நடாத்தப்பட்டு வந்தாள். மதக் கட்டுப்பாடுகளாலும் ஆசாரக் கட்டுப்பாடுகளாலும் ஒருசிறிதும் அடக்கப்படா திருந்துவந்த அவளுடைய கொடுமைகளால் அந்த ராஜ்ய முழுதும் அதிகம் அவமானப்பட்டே கிடந்தது; பாதிரிமார்களால் அதிகம் பங்கெடுத்துக் கொள்ளப்பட்ட ராஜ துரோகங்களாலும், உள்நாட்டுக் கலகங்களாலும், குருதி வெள்ளப் பெருக்குக்களாலும் அந்த ராஜ்யமானது பெரிதும் சீர்கேடுற்றுக் கிடந்தது; இவற்றிற்கு வேண்டிய காலங்களில், மனிதனாலும் தெய்வத்தாலும் விதிக்கப்பட்ட ஒவ்வொரு சட்டமும் காலின்கீழே போட்டுத் தொகைக்கப்பட்டது; மாதா கோயில்களும், பலி பீடங்களும் கொடுங் கொலைகளால் தம்முடைய பரிசுத்தத்தை யெல்லாம் யிழந்துகிடந்தன; கொள்ளைகளினின்றும் கொலைகளினின்றும் எப்படிப்பட்ட புண்ணிய ஸ்தலமும் பரிசுத்தமானதாக வேனும் பத்திரமுள்ளதாக வேனும் ஒருசிறிதும் கருதப்பட வில்லை. சமூகக்கட்டுப்பாடுக ளென்பன முற்றும் முறிக்கப்பட்டுக் கிடந்தன; பகற்கால வெளிச்சத்திலேயே மனத்துக்குச் சற்றும் சகியாத அக்கிரமங்களும் அநியாயங்களும் அதிகம் நிகழ்வுற்று வந்தன. ஜஸ்டீனியன் பட்டத்துக்கு வந்து ஐந்தாவது ஆண்டில் நைகா கலகத்தின்போது அந்நகரில் இழைக்கப்பட்ட பயங்கரமான கொடுஞ்செயல்களுக்கு இவ்வுலகின் கண்ணுள்ள வேறெதுவும் ஈடாகாதென்றே கூறிமுடிக்கலாம். மத பக்தர்களென்று கூறப்பட்டுவந்த பெரும் புலிகளால் தூண்டப்பட்டதன் காரணத்தினால், அன்னாரின் தைரியத்தை வைத்துக்கொண்டே இழைக்கப்பட்டு வந்த கொடுமைகளாலும் அக்கிரமங்களாலும் நிகழ்ந்துவந்த ஒழுக்க வீனங்களுக்கும் இரத்த வெள்ளங்களுக்கும் இடங்கொடுத்துவந்த அந்த மிருக சிலம்பக் காட்சியின் அராஜரிகம்போன்ற மற்றோர் அராஜரிகத்தை 'அஞ்ஞான உலக' மென்று அந்தக் கிறிஸ்தவர்களால் அக்காலத்தில் அழைக்கப்பட்டு வந்த வேறெங்குமே சற்றும் காணக்கிடைப்பது அதிக சிரமமாயே யிருந்துவந்த தென்னலாம்.

"அக்காலத்திய கான்ஸ்டாண்ட்டினோபிளுடன் ஒப்பிட்டுப் பார்க்குமிடத்து, பாரசீக தேசமானது ஓர் ஒழுங்குள்ள சட்டக் கட்டுப்பாடமைந்த நாடென்றே ஐயமறக் கூறப்படலாம்.

"கிறிஸ்தவ கான்ஸ்டாண்ட்டினோபிளின் சரித்திரத்தை லஜ்ஜையுறும்படியாய்ச் செய்திருக்கும் கொடுமைகளைப் பற்றிய விருத்தாந்தங்களையெல்லாம் ஈண்டொருமுறை எடுத்தெழுதுவதெனின், அது மனிதத்தன்மையையே மிகுதியும் நடுக்கங் கொள்ளுமாறு செய்யக் கூடியதாய்க் காணப்படாநின்றது. நம்முடைய திரு நபியவர்கள் சிறுபிள்ளையா யிருந்தபொழுது பை'ஜான்ஷியத்தின் (ரோமராஜ்யத் தலைநகர்) சிம்மாசனத்தின் மீது ஏறிய சக்ரவர்த்திகளுக்கெல்லாம் மகா ஒழுக்கசீலராய் விளங்கிய ஒரு மன்னர்பிரான் மற்றொரு கிறிஸ்தவ மன்னனின் அக்கிரமத் தூண்டுதலின் மீது பெண்டு பிள்ளைகளுடன் மகாகோரமான சித்திரவதைகளுக்கெல்லாம் ஆளாக்கப்பட்டு மிக்க பரிதாபத்துடனே கொல்லப்பட் டொழிந்தார். அந்தச் சக்ரவர்த்தியார் தமக்குரிய பரிசுத்த தேவாலயத்துக் குள்ளிருந்து வெளியில் இழுத்துக் கொண்டு வரப்பட்டு, அவரது கண்முன்னே அவருடைய ஐந்து குமாரர்களும் ஒருவர் பின்னொருவராய்க் கொடுங் கொலை புரியப்பட்டார்கள். இத்தகைய கொடிய காட்சி அந்தச் சக்ரவர்த்தியின் சிரச்சேதத்துடனே இறுதியில் முடிவடையச் செய்யப்பட்டது. அதன்பின்பு அந்தச் சக்ரவர்த்தியின் மனைவியும் மகள்களும் சொல்லொணுக் கொடுமைகளுக் கெல்லாம் ஆளாக்கப்பட்டு, அன்னவரின் கணவரும் தந்தையுமான மௌரீஸ் சக்ரவர்த்தியார் கொல்லப்பட்ட அதே இடத்துக்கு இழுத்துச் செல்லப்பட்டு, அவ்விடத்திலேயே இரக்கமின்றிச் சிரச்சேதம் செய்யப்பட்டனர். அந்தத் துரதிருஷ்ட சாலியான மௌரீஸ் சக்ரவர்த்தியின் நண்பர்களுக்கும், தோழர்களுக்கும், அன்னவரின் கக்ஷிக்காரர்களுக்கும் இழைக்கப்பட்ட கொடுந் துன்பங்களே அக்காலத்திய பை'ஜான்ஷிய கிறிஸ்தவர்களின் இழிய ஒழுக்கத்தை மிகுதியும் விளக்கிக் காட்டக்கூடிய ஓர் உரைகல்லாய் விளங்காநின்றன. மீக் கூறியவர்களின் கண்கள் தொளையிடப் பட்டன; நாக்கள் வேருடனே பிடுங்கப் பட்டன; அன்னவரின் கால்களும் கைகளும் மாறுகால் மாறுகைகளாகச் சேதிக்கப்பட்டன; அவர்களுள் ஒரு சிலர் தமக்குக் கிடைத்த கொறடாவின் அடிதாளாது உயிர்துறந்தனர்; வேறு சிலர் உயிருடனே தீக்கிரையாக்கப்பட்டனர்; மற்றுஞ்சிலர் பாணங்களால் தொளைத்து மரணமடையச் செய்யப்பட்டனர். சாதாரணமாகச் 'சீக்கிரம் கொடுக்கப்படும் மரணம் அவர்களால் பெறமுடியாத அத்துணைப் பெரிய தாக்ஷிண்யமாய்க் காணப்பட்டது,' என்று கிப்பன் துரையும் அதைப்பற்றிக்கூறியிருக்கின்றார்."

பை'ஜான்ஷிய ராஜ்யமென்பது ராஜீயக் கலகங்களாலும் மதக் கோளாறுகளாலும் மெல்ல மெல்லத் தன் ஆவியைப் பறிகொடுத்துக்

கொண்டு வந்தது. அந்த ரோமராஜ்யத்தில் நடைபெற்று வந்த கொலைகளுக்கும், கொடுமைகளுக்கும், ஒழுங்கீனத்துக்கும், மிருகத்தனத்துக்கும் ஈண்டு ஓர் எல்லைசொல்லி மாளாது.

'புராத் நதிக்கு மேற்கிலுள்ள ஆசியாவின் துருக்கி தேசங்களெல்லாம் பார்த்தியர்களாலும், ரோமர்களாலும், பாரசீகர்களாலும், பை''ஜான்ஷியர்களாலும் மாறிமாறிப் படை யெடுக்கப்பட்டுப் பாழாக்கப்பட்டுக் கிடந்தமையான், அவை பெரிதும் கேட்பார் கவனிப்பார் இல்லாது முற்றிலும் கதியற்றுக்கிடந்தன. அவர்களுடைய வறுமையின் கொடுமையால் ஒழுக்கமென்பது முழுதும் பழுதுபட்டுக் கிடந்தது. இயேசுவின் சிஷ்யர்கள் அவர்ளுடைய துன்பத்தைத் துடைக்காது அதை அதிகம் அபிவிருத்தி செய்தற்குக் காரணபூதராய் விளங்கிவந்தார்கள். அ'ப்ரீ:காவின்மீது கிறிஸ்து மதபோதகர்களுக்குக் கிடைத்த வெற்றிகளாலும், அன்னவரால் இழைக்கப்பட்ட கொலைகளாலும், கொடுமைகளாலும், மற்றும் பல சட்டவிரோதமான நடக்கைகளாலும் எகிப்திலும், மற்றை அ'ப்ரீ:காவின் நாடுகளிலும் இருந்துவந்த பண்டை ஒழுக்க முறைகளனைத்தும் அடியோடு இல்லாமலே கல்லியெறியப் பட்டு விட்டன. ஆனால், ஐரோப்பாவிலோ, மன்பதைகளின் நிலைமை இன்னமும் கொடுமையாய்க் காணப்பட்டது. பகற்காலத்தில் மதகுருக்களின் முன்னிலையிலே நார்ஸெஸ் என்னும் பழுத்த தேசாபிமானி கான்ஸ்டாண்ட்டிநோபிளின் சந்தை கூடுமிடத்தில் உயிருடன் எரிக்கப்பட்டார். உரோமாபுரியின் வீதிகளில் எக்ஸார்ச்சின் கண்முன்னே கக்ஷி பிரதி கக்ஷிகளின் பிஷப்களைப் பின்பற்றும் சிஷ்யர்கள் தமக்குள்ளே சண்டை யிட்டுக்கொண்டு, மாதாகோயில்களை யெல்லாம் வைதிகக் கிறிஸ்தவர்களின் இரத்தத்தால் பிரளயம் புரண்டோடும்படி செய்தனர். ஸ்பெயின் (உந்துலூஸ்) தேசமென்பது ஹிருதயத்தைப் பிளக்கக்கூடிய அத்துணைப் பெரிய அராஜரிகக் கொள்கைகளுக்கும் விநாசத்துக்கும் அடிப்படையாகக் காணப்பட்டு வந்தது. தனிகர்களாகிய ஒருசிலரே சக்ரவர்த்திகளின் கீழுள்ள மாகாணங்களின் தலைவர்களா யிருந்துகொண்டு, எப்படிப்பட்ட துன்பங்களினின்றும் துயரங்களினின்றும் தப்பிக்கொண் டிருந்தார்கள். அவர்கள் அழகிய மாளிகைக்குள்ளே ஆண்பெண் அடிமைகள் புடைசூழ ஆனந்த பரவசத்துள்ளே ஆழ்ந்துபோய்க் கிடந்தனர். ஒழுக்கமற்ற ஸ்நன கட்டங்களிலேனும், சூதாடு சாலைகளிலேனும், தங்களுடைய உண்ண வேண்டிய குடிக்கவேண்டிய காலங்களல்லாத மிகுதி நேரங்களை யெல்லாம் உல்லாசமாய்ப் போக்கிக்கொண் டிருந்தனர். அவர்களுடைய ஆடம்பர வாழ்க்கையையும், அதிகமான செல்வச் சிறப்பையும் பார்த்துவிட்டு, ஏழை மக்களின் மிகமிக எளிய தன்மையை உற்று நோக்குங்கால், மனிதரின் மனத்திற்குள்ளே அதிகம் கொதிப்புண்டாகா திராது. மத்திய குலத்

தார்களும், ஏழைகளும் உரோமர்களால் தரையிற்போட்டு மிதித்துத் தொகைக்கப் பட்டனர்கள். அதுவுமேயன்றி, அங்குள்ள அடிமைகளும் யூதர்களும் அடைந்துவந்த துன்பமும் துயரமும் எடுத்துச்சொல்லும் தரமுள்ளனவல்ல வென்க.

அக்காலக் கிறிஸ்து மதத்தைப்பற்றி ரெவெரெண்டு ஸேல் துரையும் இவ்வாறு வருணித்திருக்கின்றார்: "அதுகாறும், பிரத்தியக்ஷமான கருணைகளைக் கொண்டும், உற்சாகங்களைக் கொண்டும், பக்தி ரஸத்தைக் கொண்டும் அருள்சுரப்பதை விடுத்தும், தமக்குள்ளே கொள்கைகளின் பரிசுத்தத்தாலும், ஒற்றுமைத் தளையாலும், உறுதியான மதநம்பிக்கையாலும் ஒற்றுமையை உண்டுபண்ணிக் கொள்வதை விடுத்தும், அவற்றிற்கு மாறாய்ப் பாதிரிமார்களின் பேராசையாலும், மகா நுண்ணிய விஷயங்களிலும் மயிர்பிளந்து செய்யப்பட்டுவந்த மெல்லிய வாதவிவாதங்களாலும், தமக்குள்ளே எண்ணிக்கையற்ற பிரிவுகளையும் உட்பிரிவுகளையும் வேறு கக்ஷிப் பிரிவினைகளையும் உண்டுபண்ணிக் கொண்டுவந்த தன்மையினாலும், தங்களுக்கு அளிக்கப்பட்டிருந்த சுவிசேஷத்தினால் உயர்த்தப்படவேண்டியிருந்தசாந்தியையும், சமாதானத்தையும் அன்பையும் அருளையும் அடியோடு அழித்துக்கொண்டு வந்தார்கள்; தாங்கள் செய்யவேண்டியதை விடுத்து, ஓயாது ஒருவரை ஒருவர் க்ஷாத்திரத்தாலும், ஆத்திரத்தாலும், மற்றும் ஒவ்வொரு விதமான தீய செய்கைகளாலும் அதிகம் தாக்கிக்கொண்டு கிடந்தனர்; தங்கள் மதத்தைப் பற்றித் தாம்தாம் கொண்டுள்ள சொந்த அபிப்பிராயங்களைப் பற்றியே அதிகம் சண்டையிட்டுக்கொண் டிருந்ததனால், அவர்கள் தங்களுடைய மதத்தின் உண்மைத் தாத்பரியம் இன்னதென்பதையே அடியோடு மறந்துகிடந்தார்கள்; அவர்கள் ஒருவரோடொருவர் தங்கள் மதத்தைப் பற்றிச் செய்து கொண்டுவந்த தர்க்க குதர்க்கங்களினாலேயே கிறிஸ்து மதத்தை இப்பூவுலகினின்று அடியோடு அப்புறப்படுத்தி விட்டார்கள்."

இதுதான் அக்காலத்தில் கிறிஸ்துமதம் இவ்வுலகத்தில் நிலைகொண்டிருந்த மெய்யான தன்மையாகும். இவ்வாறே உலகமுழுதும் அஞ்ஞானத்துள்ளும், அக்கிரமத்துள்ளும் அதலபாதலத்துள்ளே ஆழ்ந்து தாழ்ந்து கிடந்த காலையில், அரப்தேசமட்டும் மிக்க உன்னதநிலைமையிலே யிருந்து வந்ததென்று சற்றும் எண்ணிவிடுவது கூடாது. என்னெனின், அக்கால உலகில் அந்த அரப்நாடேதான் மற்றெல்லாநாடுகளினும் தனக்குரியமௌட்டியத்திலும் அஞ்ஞானத்திலும் அதிகம் தலைசிறந்து விளங்கி வந்ததெனல் வேண்டும். எனவே, அவ்வரப் தேசத்தின் அஞ்ஞான அந்தகார அக்கிரமங்களை யெல்லாம் இதனையடுத்துவரும் அதிகாரத்தில் தனியே நாம் பிரித்தெழுதத் துணிவாம்.

# அதிகாரம் — 3

## அந்தகார அ’ரப்’தேசம்

"மேலும், நீங்கள் பகைவர்களா யிருந்த பொழுது, ஆண்டவன் உங்கள்மீது சொரிந்த அருட்கொடையை நினைவுகூரக் கடவீர்கள்; அப்பால், அவனது அருட்கொடைகொண்டு நீங்கள் சோதரர்க ளாகுமாறு அவன் உங்கள் ஹிருதயங்களை ஒன்றுசேர்த்து வைத்தான்; இன்னம், நீங்கள் அக்கினிக் கிடங்கின் அருகினி லிருந்தீர்கள்; ஆகவே, அவன் அதினின்று உங்களைக் காப்பாற்றினான்."—(3 : 102)

அந்தக் காலத்தில் இந்த உலகிலுள்ள பல்வேறு தேயங்களின் பாமரத் தன்மை இத்தன்மைத்தாய தென்பதைச் சென்ற அதிகாரத்தில் சிறிதே நாம் உணர்ந்துகொண்டோம். ஆனால், அற்றைநாளில் அரப்தேச மென்னப் படுவது எத்தன்மையை யுடையதா யிருந்துவந்த தென்பதும் இந்நூலுக்கு அத்தியாவசியமாதலின், அதனையும் இதன்கீழே ஒருசிறிது ஓர்ந்துபார்க்கக் கடவோம்.

அக்காலத்தில் கவிபாடும் திறமையென்பது அந்த அரபிகளுக்குள்ளே உச்சஸ்தானத்தை யெட்டியிருந்த தென்பது ஒரு மறுக்கவொண்ணாத உண்மையேயாகும்; அந்தச் செய்யுளியற்றும் சாமர்த்தியத்தில் அவர்கள் தங்கள்பாலுள்ள மேதாவித்தன முழுதையும் நன்கெடுத்துக் காட்டியே வந்தார்கள். ஆகவே, அவர்களுக்கு அறவே எழுதப்படிக்கத் தெரியா தென்று முடிவுகட்டி விடுவதற் கில்லையென்க; ஆனால், அவர்கள் தங்களுக்குத் தெரிந்த எழுத்துவாசனையை நல்ல விதத்திலே ஒருபோதும் உபயோகப்படுத்திய தில்லையென்பது மட்டும் திண்ணமேயாம். ஆகையால், அந்த அரபிகளின் கவிகளும், காவியங்களுங்கூட எழுத்துமூலமான வரிவடிவுச் சுவடிகளில் பாதுகாக்கப்பட்டுப் பத்திரமாய்ச் சேமித்து வைக்கப்படுவ தில்லை. ஆதலின், அந்த அஞ்ஞான அந்தகார நாட்களில் கோவை செய்யப்பட்ட செய்யுட்களனைத்தும் கர்ணபரம்பரையான வாயிலாகத்தான் பிற்காலத்தை எட்டி யிருக்கின்றன; ஆனால், "முஅ’ல்லஃகாத்" தென்று சொல்லப்படுகின்ற கவிகள்மட்டுமே இலிபிகளால் எழுதப்பட்டுக் கஃ’பாவின் வாயிலின்மீது தொங்கவிடப் பட்டிருந்தன.* அக்கால அ’ரபி’ய்யாக்கள் இத்தகைய செய்யுள் செய்வதில் கைதேர்ந்திருந்தாலும், இதைக்கொண்டுமட்டும் அவர்கள் அதிகமான நாகரிகத்தை யடைந்திருந்

---

* மன்ஸூர் பி’ன் இ’க்ரிமா என்பவரே இதை எழுதியவர்.

தார்களென்று கூறுவதற் கில்லை. என்னெனின், எப்படிப்பட்ட அநாகரிக முள்ள பண்டைக்காலப் பாமரர்களுக்குள்ளும் கவிபாடுவ தென்பது ஓர் இனிய அரிய தொழிலாகவே கருதப்பட்டு வந்திருக்கிறது. இதற்குக் காரணம் நெடுந்தூரத்தி லில்லை. பண்டைக்காலத்தில் உயிர்வாழ்க்கைக்கு உற்சா கத்தைத் தரத்தக்க உயரிய பொருள்கள் மிகக் குறைவாகவே காணப்பட்டு வந்தன; இவையனைத்தும் நாகரிகத்தின் வளர்ச்சிக்குத் தக்கவாறே நாளடைவில் அபிவிருத்தியடைந்து வருகின்றன. ஆதலின், அக்காலத்தில் அவர்கள் தங்களுக்குத் தெரிந்த ஒரே ஒரு பொழுதுபோக்கைக் கொண்டு தான் தங்களுடைய வாழ்க்கையைச் சந்துஷ்டியுள்ளதாக ஆக்கிக்கொள் ளுதல் அத்தியாவசியமாய்க் காணப்பட்டு வந்தது. ஆயினும், அக்கால அரபிகளின் கவிகளில் உயரிய கருத்துக்களும், தாராள நோக்கங்களும் ஒரு சிறிதும் காணப்படுவ தில்லை; என்னெனின், இவைக ளெல்லாம் நாகரிகக் கல்விப்பயிற்சியின் அளவுக்குத் தக்கவாறே அபிவிருத்தியடைந்து வருதல் கூடும். "நீரளவே யாகுமாம் நீராம்பல் தான்கற்ற, நூலளவே யாகுமாம் நுண்ணறிவு" என்பது மூதுரை. அவர்களுடைய செய்யுட்க ளனைத்தும் இவ்வுலக வாழ்க்கையைப் பற்றியே கூறி, இதற்குரிய ஒழுக்க மின்மையையே உற்சாகப் படுத்திக்கொண்டு வரலாயின. மரணத்துக்குப் பின்னுள்ள மற்றொரு வாழ்க்கையைப் பற்றி அன்னவர் சற்றும் சிந்தித்துப் பார்ப்பதே யில்லை; அம் மக்கள்க ளெல்லாம் அநேகமாய்ச் சூன்யவாதிக ளாகவே யிருந்துவந்தனர். ஆகவே, அவர்களுடைய கவிகளில் வார்த்தை களின் அரிய பிரயோகங்கள் மட்டுமே அதிக அலங்காரமாக அடுக்கி அமைக்கப்பட்டிருந்தன வென்றும், கருத்துக்களின் கண்ணியம் அத்துணைச் சிறப்புடைத்தா யில்லையென்றும் முடிவாகக் கூறிவிடலாம்.

ஆனால், அந்த அரபிகளிடத்தில் வேறு சிற்சில விதமான நற்குணங் களும் அமைந்தில்லாமற் போகவில்லை. விருந்தினரை உபசரித்தலென்னும் வேளாண்மைக் குணம், ஏதேச்சா பிரியம், பயமற்ற தன்மை, பௌருஷம், தத்தம் வர்க்கத்தின் தலைவருக்கு அடங்கிநடத்தல், உதாரகுணம் ஆதிய வற்றில் அவருக்கு நிகரானவர் அக்காலத்தில் வேறு எவருமில ரென்றே கூசாது கூறலாம். ஆனால், இப்படிப்பட்ட சில்வகையான நல்ல குண விசேஷங்கள் மட்டும், அன்னவரின் மிருகத்தன்மையாலும், பழங்காலப் பாமரத் தன்மையாலும் அளவுக்கு மீறிப் பாதிக்கப்பட்டு நிற்குங்காலை, அவர்களுடைய மீக்கூறிய குணநலன்களை யெல்லாம் நாகரிகத்தின் நல்ல அடையாளங்க ளென்று எவரே மனந்துணிந்து கூறத் துணிவர்? வந்த விருந்தினருக்கு அளவுக்கு மீறிய வேளாண்மை யுடனே மேதை மரியாதைகள் செய்வதுடன், வழிப்போக்கர்களைக் கொள்ளை யடிப்பதும் ஒரு சர்வ சாதாரணமான தொழிலாகவே அன்னவரால் கருதப்பட்டு வந்தது. கொலை செய்வதினின்றும் கொள்ளை யடிப்பதினின்றும் அவர்கள் சற்றும் பின்வாங்கிய தில்லை. மனிதர் சிரத்தைச் சேதிப்பதென்பது அவர்

களுக்குள்ளே ஓர் இளநீரைச் சீவுவதே போன்ற சர்வ சாதாரணமான கருமமாகவே காணப்பட்டுவந்தது. தத்தம் வர்க்கத்தின்மீது அவர்கள் வைத்திருந்த அபிமானத்திற்கோர் அளவுசொல்லி முடியாது. இதைப்பற்றி எவரும் சிலாகித்துக் கூறக் கூடுமாயினும், இதன் அதீதத்தைக் காணுங் கால், ஒவ்வொருவரும் பெரிதும் அச்சங்கொள்ளவே வேண்டுவதா யிருக்கின்றது. என்னெனின், இரு வகுப்பினரின் மனிதர்களுக் கிடையே மிகச் சாதாரணச் சண்டை யொன்று மூண்டுவிடு மாயின், அது பெரிய யுத்தமாக மாறி, அநேகந் தலைமுறைகள் மட்டும் உதிரம் சிந்தும் கொடுமையுள் வந்து முடியும். சுருக்கிச் சொல்லுமிடத்து, அக்காலத்தில் இவ்வுலக முழுதுமே சமயமின்மையாலும் ஒழுக்கமின்மையாலும் அதிகம் கறையாக்கப்பட்டே கிடந்ததென்னலாம்; உலகு முழுமையுமே இருண்டு கிடந்தது; அதிலும், அரப் நாடென்பது முற்றமுற்றக் காரிருள் மயமாகவே கம்மிக்கொண்டு கிடந்ததெனல் வேண்டும். மேன்மையான, உயரிய ஒழுக்கமென்பதே எங்குப்பார்த்த போதினும், முயற்கொம்பாகவே முறிந்து போய்க் கிடந்தது.

அக்கால அரபிகள் ஏகதெய்வம் ஒன்றுண் டென்பதை ஒருவாறு ஒத்துக்கொண் டிருந்தார்கள்; ஆனால், அக் கொள்கை மகா இலேசான மதபக்தி யென்றே கொள்ளப்படல் வேண்டும். என்னெனின், அவர்க ளுடைய உயிர்வாழ்க்கை யென்பது, அன்னவரின் உதட்டுநம்பிக்கை உண்மையான நன்னம்பிக்கை அன்றென்பதை மட்டும் நன்கு நிரூபித்துக் காண்பித்துக்கொண் டிருந்தது. அவர்கள் முற்ற முற்ற விக்ரஹ வணக் கத்துள்ளே மூழ்கிப்போய்க் கிடந்தார்கள்.* என்னெனின், அந்த ஏகதெய்வ மென்பது இப்பிரபஞ்சத்தை யாளுதற்குரிய வெவ்வேறு தொழில்களையும் வெவ்வேறு சுவாமிகளிடத்தும் விக்ரஹங்களிடத்தும் ஒப்படைத்திருப்ப தாக இந்துக்களேபோல அன்னவர்களும் எண்ணியிருந்தார்கள். ஆதலின், அந்த அரபிகள் தங்களுடைய எல்லாவிதமான காரியங்களுக்கும் அந்தச் சுவாமிக ளிடத்தும், விக்ரஹங்க ளிடத்துமே உதவி தேடியவர்களாய்,

*நபிகள் பெருமானின் (சல்) திருவவதாரத்துக்கு உத்தேசம் மூந்நூ றாண்டுகளுக்கு முன்னர் மக்காவாசியான அ்'ம்ரிப்'னு ல'ஹ்யுல் கு''ஜாயீ' என்பவன் (இவனது இயற் பெயர் ரபீ'ஆ' பி'ன் ஹாரி:தா) ஷாம் (சிரியா) தேசத்துக்குப் பிரயாணம் சென்றிருந் தக்கால், ஆங்கு ப'ல்:காவில் வசித்துவந்த மக்கள் விக்ரஹத் தொண்டு புரிவதைக் கண்டு, "நீங்களேன் இதற்கு வணக்கம் புரிகின்றீர்கள்?" என்று வினவினான்; இதற் கவர்கள், "இவ் விக்ரஹங்கள் எங்கள் தேவைகளை நிறைவேற்றி வைக்கின்றன; யுத்தகாலங்களில் ஜயத்தை யளிக்கின்றன; பஞ்சகாலம் வந்துவிடுமாயின், மழை பெய்யச் செய்கின்றன," என்று கூறினார்கள். இதைக் கேட்டவுடன் அ்'ம்ர் அன்னவர்களிட மிருந்தே சில விக்ர ஹங்களை வாங்கிக்கொண்டு வந்து, க'்'ப'ாவின் நாறுபக்கங்களிலும் நிறுத்தாட்டி, அவைகளின் பயனாய், ஷாம்தேயத்தில் விக்ரஹ வணக்கங்கள் சர்வ சாதாரணமாய் நடந் தேறிக்கொண்டு வந்ததேபோல, அவ் விக்ரஹ வணக்கத்தைக் கொணர்ந்து தனதூரிலும் பரத்திவிட்டான்.

அவர்கள் பக்கலே தங்கள் முகத்தைத் திருப்பிக்கொண் டிருந்தார்கள். எனவே, அவர்களுடைய ஏகதெய்வக் கொள்கை யென்பது அம்மக்களின் உயிர்வாழ்க்கைக்கு உபயோகப்படாத ஒருவகை வெறு உதட்டு நம்பிக்கையாக மட்டுமேதான் இருந்துவந்தது. பல்வேறு விக்ரஹங்களை யன்றி, சூரியன், சந்திரன், நக்ஷத்திரம், வானம், பூமி முதலிய இயற்கைப் பொருள்களையும் தங்களுக்குரிய தெய்வங்க ளென்றே வணங்கி வந்தார்கள். என்னெனின், இவ்வகை இயற்கைப் பொருள்க ளனைத்தும் தங்களையும், தங்கள் தலைவிதியையும் அடக்கியாள்வதாய் உறுதியாக நம்பியிருந்தார்கள். மக்கமா நகரிலுள்ள கஃ'பா ஷரீ'பில் மட்டும் முந்நூற் றறுபது விக்ரஹங்கள் நிறுவப்பட் டிருந்தன; தினமொன்றுக்கு ஒருசுவாமி விகிதம் ஒரு வருஷத்தின் முந்நூற் றறுபது தினங்களுக்கும் முந்நூற் றறுபது சுவாமிகள் அப்புண்ணிய ஸ்தலத்திலே பூஜிக்கப்பட்டு வந்தன.

கஃ'பாவின் நடுவில் முகட்டுக்கருகினில் ஹுப'ல் என்னும் மனிதவுருக் கொண்ட பெரிய விக்ரஹம் — ஒருவகை விலையுயர்ந்த செந்நிறக் கல்லால் செதுக்கப்பட்டது — வைக்கப்பட் டிருந்தது.† இதையும், இதனருகிலிருந்த, தங்கத்தாலும் வெள்ளியாலும் செய்யப்பட்டிருந்த இரண்டு மான் குட்டிகளையும் (:க'ஜலாக்கள்), நபிஇப்'ராஹீம் நபிஇஸ்மாயீ'ல் ஆகிய இருவரின் விக்ரஹங்களையும் சூழ்ந்துதான் அந்த முந்நூற்றறுபது விக்ரஹங்களும் அடுக்கி வைக்கப்பட் டிருந்தன. :குறைஷிக ளுள்ளே சண்டை நடந்துகொண் டிருக்கும்பொழுது அந்த ஹுப'ல் என்னும் விக்ரஹத்தின் பெயரைச் சொல்லியே "ஜேய்!" என்று கோஷ மிடுவார்கள். "இவ்விடத்திற்குத்தான் ஒவ்வோர் ஆண்டிலும் திரள்திரளான ஜனங்கள் அந்தக் கஃ'பாவைச் சுற்றி ஏழுமுறை முழுநிர்வாணத்துடன் அப்பிரதக்ஷிணம் சுற்றுவதற்கு வந்து குவிந்துகொண் டிருப்பார்கள்." மேற்கூறிய அவ் விக்ரஹங்களல்லாமல், அரபிகளின் ஒவ்வொரு கூட்டத்துக்கும் ஒவ்வொரு சுவாமியும், இல்லை! ஒவ்வொரு வீட்டுக்கும் ஒவ்வொரு விக்ரஹமும் சொந்தமாகக் கொண்டாடப்பட்டு வந்தன. இன்னம், அக்கால அரபிகளில் :குறைஷிக ளுட்படப் பற்பல கூட்டத்தினர் சந்திரனுடைய வெவ்வேறு தோற்றபேதங்களைத் தங்களுக்குரிய தெய்வங்களாகக் கொண்டாடி வந்தனர்: உதாரணமாக, "ஆண்டவனுடைய புத்திரிகள்" (ப'னாத்துல்லாஹ்) என்று கூறப்பட்டுவந்த அல் லாத் (பிரகாசமுள்ள சந்திரன்) அல் மனாத் (இருண்ட சந்திரன்) அல் உ''ஜ்'ஜா (இரண்டுங்கலந்த சந்திரன்) என்னும் மூன்று தெய்வங்களும் அந்நாட்டில் அக்காலத்திலே வணங்கப்பட்டு வந்தன. மக்காவிலிருந்து ஒருநாட் பிரயாண தூரத்திலுள்ள நக்'லா என்னுமிடத்தி லிருந்துவந்த கருவேல்போன்ற விருக்ஷமொன்றும் உ''ஜ்'ஜாவென்று கொண்டாடப்பட்டு வந்தது; இதைக் :குறைஷிகளும்,

† மானிட உருவா யமைந்துள்ள இந்த ஹுப'ல் விக்ரஹம் ஷாம் தேயத்திலிருந்து எடுத்துக்கொண்டு வரப்பட்டதென்று கூறப்படுகிறது.

அவர்களை யொத்த கினை வர்க்கத்தினரும்* தங்களுடைய தெய்வமென்று பூஜித்துவந்தார்கள்.† மக்காவுக்குத் தென்கிழக்கில் அலைந்து திரிந்து கொண்டிருந்த ஹவா'ஜின் கூட்டத்தார்களும் :த:கீ'ப் கூட்டத்தார்களும் :தாயி'பி லிருந்துவந்த லாத் தென்னும் விக்ரஹத்தைத் தங்களுக்குரிய குலதெய்வ மென்று கொண்டாடி வந்தார்கள். ஆண்டவன் குளிர்காலத்தில் லாத்தி னிடத்தும், உஷ்ணகாலத்தில் உ''ஜ்ஜாவி னிடத்தும் தங்குவதாக அந்த அரபிகள் கருதி யிருந்தார்கள். மக்காவுக்கும் சிரியாவுக்கும் (ஷாமுக்கும்) செல்லக்கூடிய ஒட்டகக்கூட்ட வழியிலுள்ள கதீதென்னும் நகரத்துக்குச் சமீபமாயுள்ள முஷல்லலில் ஒரு விக்ரஹம் இருந்துவந்தது. அப்பகுதிகளில் காணப்பட்டுவந்த விக்ரஹங்க ளுள்ளெல்லாம் அதுவே மகா புராதனமா யிருந்தது. இதற்குத்தான் மதீனாவாசிகளான அவ்ஸ், க''ஜ்ரஜ், :கஸ்ஸான் முதலிய வர்க்கத்தினர் வணக்கம் புரிந்து வந்தார்கள். முக்கியமாய் முதலிரண்டு கூட்டத்தார்களும் இதற்காகப் பலியும் கொடுப் பார்கள். மதீனாவாசிகள் மக்காவிற்குச் சென்று 'ஹஜ்ஜை முடித்து விட்டுத் திரும்பி வரும்போழ்து, இங்கு வந்துதான் தங்களுடைய இ'ஹ்ராமைக் களைவார்கள். ஹுதை'ஜல், கு''ஜாஆ' என்னும் கூட்டங் களும் இதையேதான் வணங்கிக்கொண் டிருந்தன. மதீனாவிலிருந்து ஏழு மைல் தூரத்திலேதான் இச்சுவாமி இருந்துவந்தது; அஃதொரு கரடு முரடான செதுக்கப்படாத கல்லாய்க் காணப்பட்டது. அ்ம் ரிப்'னு ல'ஹ்யுல் கு''ஜாயீ' ஷாமிலிருந்து கொணர்ந்த விக்ரஹங்க ளுள்ளெல்லாம் மனாத்தே மிகப் பெரிதென்று கூறினர். த்'வ்ம(த்)துல் ஜந்தலி லிருந்து வந்த ப'னூ கல்பென்னும் வர்க்கத்தினர் உத்' தென்னும் மனித விக்ர ஹத்தை வணங்கிவந்தனர். ஹுதை'ஜல் வர்க்கத்தினர் ஸுவாஃ' சுவாமியைப் பூஜித்துவந்தனர். யன்பூ'உ'க் கருகில் ரி'ஹாத்தி லிருந்தது ஒரு கல்விக்ரஹம். இதன் தலைவர்கள் ப'னீ லி'ஹ்யான்க ளாவார். இத்தகைய விக்ரஹவணக்கங்க ளெல்லாம் பண்டைய ஸெமிதிக் வர்க்கத் தினராலும், 'பினீஷியர்களாலும், ப'ாபி'லோனியர்களாலும் வணங்கப் பட்டுவந்த "லிங்கபூஜை"யையே பெரும்பாலும் நிகர்த்திருந்தன.

மீக் கூறியனவே யன்றி, அராபியரில் பெரும்பான்மையோர், அவர்க ளுள்ளும் முள'்ர் வர்க்கத்தைச் சார்ந்த மக்கள் எல்லாவித இயற்கைப் பொருள்களையும் தங்களுக்குரிய தெய்வங்க ளென்றே கொண்டாடி வந்தனர்: மிருகங்கள், செடிகொடிகள், மான்குட்டிகள், குதிரை, ஒட்டகம், பேரீச்சமரம், மலை, பாறை, மணல்மேடு, கற்கள் முதலிய முதலிய எல்லாப் பொருள்களும் அவர்களுக்குரிய தெய்வங்களாகவே வழங்கி

---

* இந்தக் கினைக்கள் தங்களுக்குரிய வேறொரு நக்ஷத்திரத்தையுங் கூட வணங்கி வந்தார்கள்.

† பிறகு நபிபெருமானது கட்டளையின்மீது இவ் விருக்ஷம் க'ாலி தி'ப்'னு வலீத்'ால் தீக்கொண்டு எரிக்கப்பட்டு விட்டது.

வந்தன. அவர்களுக் கெதிரே தென்படும் எந்த நல்லவிதமான அழகிய கல்லின் முன்னும் குப்புற்று வீழ்ந்து கும்பிட் டெழுவார்கள். அவர்க ளுடைய வணக்கத்துக் கொரு கல்லென்பது காணப்படாமற் போய்விடுமா யின், ஆங்குள்ள மணல்மேட்டின்மீது தங்கள் ஒட்டகத்தின் பாலைக்கறந்து விட்டு, கட்டியான அக்குவட்டையே தெய்வமெனக் கொண்டாடுவார்கள். மலக்குகளை (தேவ தூதர்களை) யெல்லாம் ஆண்டவனுடைய அரிய புத்திரிக ளென்றே போற்றி வந்தார்கள். கீர்த்திவாய்ந்த மனிதர்களின் பெயராலும் விக்ரஹங்களைச் செய்துகொண்டு, அவற்றை "வீரன்"களெனப் "பட்டவன் பூசை" போட்டு வருவார்கள். அவர்களுடைய விக்ரஹங்களும் செம்மை யாகவும் ஒழுங்காகவும் செதுக்கப்பட்ட கற்களா யிருக்கவேண்டு மென்ப தில்லை; கரடுமுரடான செதுக்கப்படாத கற்களே அவர்களுக்குப் போதும். அவர்கள் பிரயாணம் புறப்படும்போது, தங்களுடனே நான்கு கற்களைச் சுமந்து செல்வார்கள்; அவற்றுள் மூன்று அடுப்புக் கூட்டுவதற்கும், நான்காவது கல் தெய்வமாக இருப்பதற்கும் உபயோகப் படுத்தப்படும். சிற்சில வேளைகளில் மூன்று கற்களே கொண்டு செல்லப் படும்; அப்படிப் பட்ட வேளைகளில் சமையல்வேலை முடிந்தவுடன் அம்மூன்று கற்களுள் ஏதேனு மொன்று சுவாமி யாக்கப்பட்டு, அவ்விடத்தே அர்ச்சிக்கப்படும்.

விக்ரஹவணக்க மென்பது அந்த அரபிகள்பால் நாளடைவில், இவ் விந்தியாவி லிருப்பதேபோல், ஒருவகைப் பிறவித்தொழிலாய்ச் சமைந்து விட்டது; எனவே, அன்னவரின் தினசரியான வாழ்க்கையும் அவர்களு டைய விக்ரஹவணக்கத்துக்குத் தக்கவாறாகவே அமைந்துகிடந்தது. ஏக தெய்வமாகிய அந்தப் பராபரக்கடவுளே தன்னுடைய அதிகார முழுதையும் இந்தச் சில்லறைத் தெய்வங்களிடம் ஒப்படைத்துவிட்டு, இப்பிரபஞ்ச முழுதையும் ஆண்டுவருமாறு அனுமதி யளித்திருப்பதாக அவர்கள் எண்ணினார்கள்; எனவே, வியாதியைச் சொஸ்தப்படுத்துவது, குழந்தை களைக் கொடுத்தருளுவது, பஞ்சம் பிணி முதலியவற்றை நீக்குவது ஆகிய வெல்லாம் அந்தக் குட்டித் தெய்வங்களாலேயே மேற்பார்வை யிடப்பட்டு வந்தன வென்று கருதியிருந்தார்கள். இத்தகைய விக்ரஹங்களின் ஸிஃபாரி ஷில்லாமல் பரதேவதையின் தயையை மனிதனால் பெற்றுக் கொள்வது ஒருசிறிதும் முடியாதென்றே நம்பியிருந்தார்கள்.* ஆதலின்; அவ் விக்ரஹங்களின்முன்னே சாஷ்டாங்கமாய்த் தண்டனிட்டு வீழ்வார்கள், அவற்றைச் சுற்றிப் பிரதக்ஷிணம் வருவார்கள்; அவற்றிற்குப் பலிகொடுப் பார்கள்; அவற்றின் உபயோகத்துக்கென்று தங்களுடைய விளைபொருள் களிலிருந்தும், மிருக வகைகளிலிருந்தும் ஒரு சிலபாகத்தை ஒதுக்கி †வைப்பார்

* இற்றைநாளில் எம் முஸ்லிம்களில் வெகு பலர் அவ்லியாக்களின் ஸிஃபாரிஷில்லாமல் அல்லா(ஹ்)வை அண்மிக் கொள்ள இயலா தென்று திண்ணிதா யெண்ணி யிருக்கும் பைத்தியக்காரத் தனத்தையே அவர்கள் செயலும் நிகர்த்து நின்றது.

†இக்கொடிய செயல்களையெல்லாம் அவ்லியா பூஜைக்காரர்களும் செய்தேவருகிறார்கள்.

கள்; இத்தன்மைத் தாகிய மிகவுமிழிய விக்ரஹத் தொழும்பினின்று அவ் வரப்நாடு முழுதையும் நம்முடைய நபிகள் நாயகம் மு'ஹம்மத் முஸ்த'பா ரஸூல் (சல்) அவர்கள் ஓரிருபத்துமூன்று ஆண்டுகளுக்குள்ளே விடுதலை யடையும்படியாகச்: செய்து வெற்றிமுரசு கொட்டிவிட்டார்கள். "வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்(கு) யாண்டும் இடும்பை யில," என்னுமா போன்றே செய்துவிட்டார்கள். அரப்தேசத்தை விட்டு அவ் விக்ரஹவணக்கமென்பது அடியோடு ஒழிக்கப்பட்டதுடன், ஏகேசுவர வாத சமயவுணர்ச்சியை அக்கால உலகமுழுதும் தங்கள் துவஜத்தின் நுனி யில் (வாளின் நுனியிலன்று) கொண்டுசென்று, ஆங்காங்குள்ள மக்கள்க ளனைவரையும் 'தவ்'ஹீ தென்னும், "இப்படியன் இந்நிறத்தன் இவ்வண் ணத்தன் இவனிறைவன் என்றெழுதிக் காட்டொ ணாதே!" என்னும் ஏக இறைவன் கொள்கை யென்னுங் கடலுள்ளே மூழ்கித் திளைக்குமாறு செய் தற்கு வேண்டிய அத்துணைப் பரபரப்பும் சுறுசுறுப்பும் கொண்டவர்களாக மாறிவிடும்படியான தீவிர இஸ்லாமிய மதஉணர்ச்சியையும் அவர்கள் அடைந்து விடுதற்குரிய சீர்திருத்தமும் மிக நன்றாக உதயமாய்விட்டது. பண்டைக்காலந்தொட்டு நெடுங்காலபரியந்தம் அத்தேசத்தின் பன்னிரண்டி லக்ஷ சதுரமைல் முழுவதும் பழக்கத்தாலும் பரம்பரையாலும் நன்கு வேரூன்றிப்போய்க் கிடந்த அந்தக் கொடிய மஹா பயங்கரமான விக்ரஹத் தொழும்பினின்று சுமார் கால் நூற்றாண்டின் கால எல்லைக்குள்ளே அம் மௌட்டிய மாக்களை விடுதலையடையுமாறு செய்து, அவர்களையே பிற்கா லத்தில் "விக்ரஹ நிக்ரஹர்க" ளென்று இப்பூவுலகோர் போற்றும் படியான பெருங்கீர்த்தியை யடையும்வண்ணம் சீர்திருத்திய தென்பதே இவ்வுலகில் இதுகாறும் எவராலும் கண்டிருக்க முடியாத அத்துணைப் பெரிய மகா அற்புதமாய் அமைந்திருக்க வில்லையா? இப்படிப்பட்ட மெய்யான சீர்திருத் தத்தைச் சொற்ப காலத்திற்குள்ளே சாதித்துவிட்டுச் சென்ற அம்மா பெரிய மஹானுபாவரை மானிடவர்க்கத்துக்குரிய ஒரு மஹா தயாளமூர்த்தி யென்று எவர்தாம் கூறத் துணியாதிருப்பர்? "அல்லாஹுத் தஆலாவுக்கு அதிக உவப்பானவர் எவர்? அவனுடைய சிருஷ்டிப் பொருள்களுக்கு எவர்பாலிருந்து அதிகமான நன்மை யுண்டாகின்றதோ, அன்னவரே அப்ப டிப்பட்ட மனிதரா யிருக்கின்றார்," என்றி எம்பெருமானார் இயம்பியுள்ளது இவர்கட்கே சாலவும் பொருத்த முள்ளதா யமைந்து கிடக்கின்றது என்றறியக் கடவீர்கள்.

மேற்கூறிய வாறான தினசரி விக்ரஹ வணக்கங்களுடனே நக்ஷத்திர வணக்கமென்பதும் அவ்வரப்நாட்டில் அதிகம் வேரூன்றி விடாமலில்லை. பல்வேறு நக்ஷத்திர கிரஹங்களின் இயக்கத்துக்குத் தக்கவாறாகவே மனித னுடைய தலைவிதியும் ஆட்டிப்படைக்கப்படுகிற தென்பதே அன்னாரின் துணிபாகும். இயற்கைத் தோற்றங்களின் தன்மைக்குத் தகுந்தாற்போல வேதான் மனிதனுடைய நன்மையான காரியங்களும் தீமையான காரியங்

களும் ஆட்சி புரியப்பட்டு வருகின்றன வென்றும் நம்பினுர்கள். 'ஹிம்யார் வர்க்கத்தைச் சார்ந்த அரபிகள் சூரியநாராயண வணக்கத்துள் மூழ்கிக் கிடந்தார்கள்; ப'னூ அஸத்' கூட்டத்தினர் புதன் கிரஹத்தையும், ஜுʻஜாம் கூட்டத்தினர் வியாழன் (குரு) கிரஹத்தையும், ப'னூ ஃத கூட்டத்தினர் அகஸ்திய நக்ஷத்திரத்தையும் (Canopus), ஃகஸ் ஐ'லான் வம்சத்தினர் மிருகவியாத (அக்கினி) நக்ஷத்திரத்தையும், கினுை வகுப்பார் கள் சந்திரனையும் தங்களுக்குரிய தெய்வங்களாகக் கொண்டாடி வந்தனர். இவர்களல்லாமல் தெய்வத்தையே நம்பாத நிரீசுவர வாதிகளும் எம் மதத் தையும் பின்பற்ருது பலர் அந்நாட்டில் வதிந்துவந்தனர்.

ஒரு பக்கத்தில் மிகக்கொடிய விக்ரஹ வணக்கமென்பது அந்த அரபி களைப் பொதுவாக மகா பொல்லாத மூடபக்தியுள்ளெல்லாம் ஆழ்த்தி அமுக்கிக்கொண் டிருந்தது; மற்ருெரு பக்கத்தில் தெய்வத்தின்மீதும், ஆத்மாவின் என்றுமழியாத் தன்மையைப் பற்றியும், இறுதித் தீர்ப்புக்காக உயிர்த்தெழுப்பப்படும் நாளைப்பற்றியும் ஒருசிறிதும் நம்பிக்கை வையாத வரும் பலர் காணப்பட்டனர். அவர்களுள் சிற்சில வர்க்கத்தா ரிடையே எவரேனும் இறந்து படுவாராயின், அன்னவரின் சமாதியின்மீது ஒட்டக மொன்று* பலி கொடுக்கப்படுவ துண்டு; அல்லது அவ் வொட்டகம் அங்கேயே கட்டி வைக்கப்பட்டுப் பசியின் கொடுமையால் தானே மாண்டு போகும்படி விட்டுவிடப் படுவது முண்டு. வைதரணி யென்னும் ஆற்றைக் கடக்கத் தன் வாலைக்கொண்டு உதவி புரியுமாறு பசுமாடொன்று இந்துக் களுள் இறந்தோருக்காகப் பார்ப்பனருக்குத் தானம் கொடுக்கப்படுவதே போலத்தான் அவ்வொட்டகமும் அந்த அரபிகளின் ஆத்மாவுக்கு மறுவுலக வாழ்க்கையில் ஒரு வாகனமா யிருக்கும்பொருட்டே அவ்வாறு பலி கொடுக் கப்பட்டு வந்த தென்ப. மனிதன் இறந்துவிட்டபின்னர் அவனது ஆன்மா ஹாமா அல்லது ஸதூ'ா என்னும் பக்ஷி ரூபத்தை எடுத்துக்கொள்ளுகிற தென்று வேறு சிலர் நம்பியிருந்தனர்; அம்மனிதன் பலாத்காரமான துன் மரணத்தால் கொலையுண் டிறப்பானுயின், அந்தக் கொலைக்குக் கொலை பழி வாங்கப் படாதவரை அப் பறவையானது, "அஸ்:கினீ"— "எனக்குக் குடிக்கக் கொடு!" என்னும் கூச்சலுடனே அம் மனிதனுடைய புதை குழியின்மீது சுற்றிச் சுற்றிக் கத்திக்கொண்டே யிருக்கு மென்றும் நம்பி யிருந்தார்கள். "எதிரி என்கைவயம் அகப்படின், அவனது மண்டை யோட்டில் நான் சாராயம் வார்த்துச் சாப்பிடுவேன்," என்பது அவர்க ளுடைய சர்வ சாதாரணமான பிரதிக்ஞையாகும்.† ஜின்கள், :கவ்ல்கள், பைசாசங்கள் ஆகியவற்றின்மீது வைக்கப்பட்ட நம்பிக்கையும், அ'ஜ்லாம்

---

* ப'ரிய்யா— (பாபத்தினின்று நீங்குதல்) என்று அஃது அழைக்கப்படும்.

† தாழ்ந்த குலத்தா ரொருவன் உயர்ந்த குலத்தா ரொருவனைக் கொன்றுவிடுவானுயின், அதற்கீடாக அத்தாழ்ந்த குலத்தில் இருவரைக் கொல்லவேண்டு மென்பது அன்னவரின் அக்கிரமச் சட்டமாகும்.

அல்லது கிந்'ர என்று சொல்லப்படும் மொட்டை யம்புகளைக்கொண்டு குறி பார்த்துத் தங்கள் விக்ரஹங்களிடத்தி லிருந்து தெரிந்துகொள்ளும் சோதிடத்தின்மீது வைக்கப்பட்டு வந்த நம்பிக்கையும் அத்தேச முழுதும் நன்கு பரவிக் கிடந்தன. அவ் வரபிகளின் ஒவ்வொரு வர்க்கத்துக்கும் வெவ்வேறு விக்ரஹங்களும், வெவ்வேறு கோவில்களும் காணப்பட்டு வந்ததனால், அவற்றின் சார்பான புரோகிதர்களுக்கும் பூஜாரிகளுக்கும் அவ்வவற்றிற்குரிய பக்தர்களிடமிருந்து கணக்கற்ற உபயதானங்களும் உம்பளங்களும் கிடைத்துக்கொண் டிருந்தன. ஆயினும், அடிக்கடி வெவ்வேறு போட்டித் தெய்வங்களின் திருத் தொண்டர்களுக் குள்ளே மிகக் கடுமையான உதிர வெள்ள யுத்தங்களெல்லாம் நிகழ்ந்துவிடுவது முண்டு.

அக்கால அராபியருள் மற்றும் பலருக்கு மதமென்பது ஒரு பரிஹஸிக்கத்தக்க சமாசாரமாகவே காணப்பட்டு வந்தது; என்னெனின், சிற்சில வேளைகளில் அவர்கள் தங்களால் பூஜிக்கப்பட்டு வரும் விக்ரஹங்களையே தூற்றத் தலைப்பட்டுவிடுவர். அந் நாட்களில் இம்ரஉல் :கய்ஸ் என்னும் பெயர்போன மகாவித்வா னொருவர் ஆங்கு இருந்துவந்தார். அவருடைய தந்தையார் கொல்லப்பட்டுப் போய்விட்டமையான், தமது மரபிற்குரிய பண்டைய வழக்கப் பிரகாரம் அக்கொலைக்குக் கொலை பழிவாங்குவது அவசியமா? அவசிய மில்லையா? என்பதைக் குறிபார்த்துத் தெரிந்து கொள்ளும் பொருட்டு மூன்று அம்புகளை யெடுத்துக்கொண்டு, தம்முடைய விக்ரஹத்தின் முன்னே சென்றார். அம் மூன்றனுள் ஒன்றில் நஅ'ம் (ஆம்) என்னும் பதம் பொறிக்கப்பட் டிருந்தது; மற்றொன்றில் லா (அல்ல) என்னும் பதம் எழுதப்பட் டிருந்தது; வேறோர் அம்பு வெறுமையாயிருந்தது. அவர் குறி பார்க்குங்கால் இந்த வெறும் பாணம் கிடைக்குமாயின், மீட்டும் அக்குறியைப் பார்க்கவேண்டு மென்பது கருத்தாம். எனவே, இம்ரஉல் :கய்ஸ் மூன்று முறை அவ்வம்புகளுள் ஒன்றை உருவிப் பார்த்தார்; அம் மூன்று முறையும் லா என்னும் அம்பே அவர் கையி லகப்பட்டது. இதனால் அக்கவிவாணர் அடக்கொணுக் கோபங்கொண்டு, "ஏ அதிருஷ்டங்கெட்ட மூதேவி! உன்னுடைய அப்பன் கொல்லப்பட்டிருந்தால் நீ என்னை இவ்வாறு பழிவாங்க வேண்டாமென்று தடுத்திருக்க மாட்டாய்," என்று கூறிக்கொண்டே அவ்வம்புகள் மூன்றையும் அவ் விக்ரஹத்தின் மூஞ்சியிலே ஒடித்தெறிந்துவிட்டுச் சென்றுவிட்டார். இவ்வாறே ஹுப'லின் முன்னும் 'நஅ'ம்' 'லா' என்று பொறிக்கப்பட்ட ஏழு அம்புகள் வைக்கப்பட்டிருக்கும்.

மேற்கூறிய வாறாகத்தான் அக் காலத்தில் அவ் வரப்நாட்டின் மதக் கொள்கையும் விக்ரஹத் தொழும்பும் ஆங்குள்ள மாக்களை அடியோடு ஆட்டிவைத்துக் கொண்டிருந்தன. ஆனால், அன்னவரின் சமுதாய வாழ்க்கையைப்பற்றிப் பேசுவதெனின், அதிலும் அவர்கள் சிலாக்கியமான பழக்கவழக்கங்களை யுடையவர்களாய்க் காணப்படவில்லை; சமூக ஒழுக்கத்

தின் முதற் பாடத்தையும் கற்றறியாத முழு மூடர்களாகவே அவர்கள் காலங்கழித்து வந்தார்கள். அவர்கள் நடாத்திவந்த உயிர் வாழ்க்கையே அன்னவரின் சமூகத்துக்குள் எப்படிப்பட்ட நல்ல பழக்க வழக்கங்களையும் நுழைத்துக்கொள்ள முடியாததாய் அமைந்து கிடந்தது. என்னெனின், அவர்களுக்குள் விளைந்துவந்த உட்கலகங்களே அன்னாரின் காலத்தையும் கவனத்தையும் ஒருங்கே ஈர்த்துக்கொண் டிருந்தன. சமூக ஒழுக்கங்களை அபிவிருத்தி யடையுமாறு செய்தற்கு வேண்டிய அத்தியாவசியமான நிலையுற்ற சமாதான வாழ்க்கை யென்பது அந்த அரபிகள்பால் ஒரு சிறிதும் காணப்படாத தாகவே யிருந்துவந்தது. ஆனால், அவர்களுள் ஒரு வர்க்கத்துக்கும் மற்றொரு வர்க்கத்துக்கும் இடையிலே எப்



கூடாரங்களில் வசிக்கும் காட்டரபிகள்

பொழுது யுத்தத் தீ மூண்டு விடுமோ வென்னும் அச்சமே அவர்களுடைய மனத்தை எக்காலத்தும் அதிகம் உறுத்திக் கொண்டே யிருக்கும். அவர்களுடைய வாழ்க்கை யென்பது இதற்குமுன் கூறப்பட்டிருப்பதே போல், தங்களுக்குரிய கால்நடைகளுடன் ஊரூராக அலைந்த பிழைப்பாகவே காணப்பட்டது. தங்கள் கால்நடைகளுக்குத் தீனியும், பருகுவதற்குத் தண்ணீரும் காணப்படக்கூடிய இடங்களில் தங்களுடைய ஒட்டகத் தோலால் செய்த கூடாரத்தை அடித்து விடுவார்கள். அவர்களுள் சிற்சிலரே ஊர்களில் வசித்துவருவார்கள்; இவர்களிலும் மிகச் சிலரே நகரங்களில் வாழ்ந்து வருவார்கள். இவ்வாறு நாடோடிகளாய்த் திரிந்துவந்த அந்த அரபிகளிடத்து நிரந்தர வாழ்க்கைக்குரிய அமைதியி

னின்று விளையக் கூடிய நல்லொழுக்கமும் நாகரிகமும் எவ்வாறு தழைத் தோங்குதல் சாலும்? அவர்களுக்குள் நல்ல பழக்கவழக்கங்களையும் சமூக சீர்திருத்தங்களையும் கட்டாயப்படுத்தி நுழைப்பதற்கு மத்திய அரசாங்க மொன்றும் அக்காலத்தில் அத்தேயத்திலே அமைக்கப்பட் டிலலை. என்னெனின், அக்காலத்தில் அந்த அரப்தேச மென்னப்பட்டது எண் ணிறந்த சிறுசிறு துண்டுகளாகப் பிளவுபட்டுக் கிடந்தது; எனவே, அவர்களுள் ஒவ்வொரு வர்க்கமும் ஒவ்வொரு தனித் தொகுதியாகவே பிரிந்திருந்தது. அங்கங்கே தனித்தியங்கிவந்த சிறுசிறு மாகாண ஆட்சி முறைகள் தேசமுழுதும் செல்லுதற்குரிய நியாய பரிபாலனத்தை எல்லார் மீதும் செலுத்துதற் கியலாதவனாய் அத்துணைப் பல்ஹீனத்துடன் அமைந்து கிடந்தன. அவரவரும் தத்தமக்குரிய உரிமைகளைப் பிறரிட மிருந்து பெறுதற்குத் தம்முடைய சொந்தப் பலத்தின்மீதே சார்ந்திருக்க வேண்டுவது அத்தியாவசியமாய்க் காணப்பட்டது. ஒவ்வொரு வர்க்கமும் தன்தனக்குரிய பாத்தியதைகளுக்காகப் பிறிதொரு வர்க்கத்துடன் போர் புரிய நிகழுங்கால், அவ்வர்க்கத்தைப் போர் முகத்திற்கு நடாத்திச் செல்லு தற்கு ஒரு தலைவர் இருந்து வருவார். ஆனால், தனி நபர்களை அவ்வர்க்கத் துடனேனும், ஒவ்வொரு வர்க்கத்தையும் தேசப் பொதுமக்க ளுடனேனும் சேர்த்துப் பிணைப்பதற்கு யாதொரு விதமான சட்ட திட்டங்களும் அத் தேயத்தில் காணப்படவில்லை. ஒருவர் மற்றொருவருக்குக் கட்டுப்படாமல் எல்லாரும் எதேச்சையாகவே அலைந்து திரிந்தனர். இப்படிப்பட்ட மக்களையெல்லாம் ஒன்றுசேர்த்துப் பிணிப்பதற்கு இறுதியிலே இஸ்லாம் மார்க்கம் தோன்றலாயிற்று. இதைப்பற்றி ஸர் வில்லியம் மூய்ரும் பின் வருமாறு எழுதியிருக்கின்றார் :—

“பிறகு, எம்முடைய கவனத்தை ஈர்க்கக்கூடிய முதன்மையான சிறப்பு யாதெனின், ஒரே தன்மையனவான கண்ணியத்துக்கும் ஒழுக்கத் துக்கும் கட்டுப்பட்டு, ஒரே தன்மையனவான பழக்க வழக்கங்களையும் அனுஷ்டித்துக்கொண்டு, பெரும்பாலும் ஒரே தன்மையதான பாஷை யையும் பேசிக்கொண்டு, ஆனால், ஒவ்வொருவரும் மற்றவரினின்றும் எதேச்சையா யிருந்துகொண்டு, அந்த அராபியர் எண்ணிறந்த சாகை களாகப் பிளவுபட்டுக் கிடந்ததேதான்; ஓரிடத்தில் அமைதியுடனே நில்லாமலும், அடிக்கடி தங்களுக்குள்ளே போர் புரிந்துகொண்டு மிருப் பார்கள்; உதிரக்கலப்பைக் கொண்டேனும், அல்லது வேறு சம்பந்தத்தைக் கொண்டேனும் ஒன்று சேர்ந்திருக்கும் மனிதர்களும் ஓர் அற்பக் காரணத்தைக் கொண்டே தமக்குள்ளே பிளவுபட்டு, உடனே ஜன்ம விரோதிகளாய் மாறிவிடுவதற்கு எப்பொழுதும் அவர்கள் ஆயத்தமா யிருப்பார்கள். இவ்வாறாகத்தான் இஸ்லாத்தின் உதயகாலத்தில் அவ்வரப் தேசத்தின் பண்டைச் சரித்திரம் இருந்துவந்தது; அஃதாவது, ‘சித்திர தரிசனியில்’ (Kaleidoscope) அடிக்கடி வெவ்வேறு விதமான தோற்றங்கள்

மாறிமாறிக் காணப்படுவதேபோல், அதற்குமுன்னே அவர்களை யெல்லாம் ஒன்றுசேர்த்துப் பிணைப்பதற்காகச் செய்யப்பட்டுவந்த எல்லாவிதமான முயற்சிகளும் வீணுகவே போய் முடிவடையுமாறு தகர்த்துக்கொண்டு, அன்னவரின் நிலைமையானது சதா சர்வகாலமும் மாறுபாட்டை யடையக் கூடிய முறையிலே அடிக்கடி சேர்ந்துகொண்டும் பிரிந்துகொண்டும் இருந்து வந்தது...எந்த விதமான சக்தியைக்கொண்டு இந்தக் கூட்டத்தினர் அடக்கி யாளப்படுதல், அல்லது, ஒரே மத்திபத்தின் பக்கல் ஈர்க்கப்படுதல் கூடு மென்னும் விஷயம் இனித்தான் ஃபஸல் செய்யப்பட வேண்டியதா யிருந்தது; அந்த விதமான ஃபஸல்தான் மு‘ஹம்மத்’ால் (சல்) செய்து விடப்பட்டது.”

இப்படிப்பட்ட எல்லாவிதமான இழிகுணங்களைப் பற்றியும் :குர்ஆன் ஷரீ‘பானது மிக மிகச் சுருக்கமான ஒரே திருவாக்கியத்தைக் கொண்டே பின்வருமாறு கூறி முடித்திருக்கிறது: “நீங்கள் (அராபியர்) அக்கினிக் கிடங்கின் அருகினி லிருந்தீர்கள்.” ஒருமுறை உற்பத்தியாய்விடும் சச்சர வானது பலதலைமுறைகள் மட்டும் ஒரு யுத்தமாகத் தொடர்ந்து சென்று கொண்டே யிருக்கும். ஓர் இழியசொல், அல்லது குதிரைப் பந்தயத்தில் செய் யப்படும் ஒருசிறு விஷமம் ஆதிய சிறுசிறு நுண்ணிய விஷயங்களும் ஆயிரக் கணக்கான மனிதர்கள் வதைபுரியப் படுதற்குக் காரணபூதமாய் விளங்கி வந்தன. அவர்களுடைய ஒழுக்கத்தில் காணப்பட்ட ஒருவகை விசேஷம் யாதெனின், அன்னுரின் யுத்தங்களில் கைதிகளாகவும் அடிமைகளாகவும் அகப்பட்டுக் கொண்டவர்கள் ஜயமடைந்தவரின் கீழ்த் தங்கள் ஆயுள் முழுதும் அடிமைகளாகவே யிருந்துவருதல் வேண்டு மென்பதேதான். இப்படிப்பட்ட இழிய தீய கொடிய அராபிகளைத்தாம் நந்திரு நபியவர்கள் மிகவு மேலான ஒழுக்கத்தின் உன்னத ஸ்தானத்திலே கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டார்கள். அவர்களுக்குள் பிளவுபட்டுக் கிடந்த ஆயிரக்கணக் கான வேற்றுமையுள்ள மக்கள்களை யெல்லாம் ஒற்றுமையுள்ள ஒரே இனத்தவராக ஆக்கி வைத்ததுதான் இவ்வுலகின் கண்ணுள்ள வேறெந்தச் சரித்திரத்திலும் காணக்கிடைக்காத ஓர் அதியற்புதமாய் விளங்கா நிற்கின்றது. இதுதான் நம் நபிகள் நாதரின் இணையற்ற வெற்றி (வாகை) மாலை யென்று கூறப்படுவது.

அந்த அராபியரின் சமுதாயத்தில் ஸ்திரீகளென்பார் மிகமிகக் கேவல மாயே நடாத்தப்பட்டு வந்தார்கள்; மிருகங்களினும் கீழ்மையான அந்தஸ்துதான் அவர்களுக்கு அளிக்கப்பட் டிருந்தது. சித்த விகாரத்தின் ஆத்திரத்தால் மட்டும் சிற்சில அரபிகளால் தத்தமக்குரிய பிரிய சகிகள் மேல் பாடப்பட்டு வந்த சிற்சில சிற்றின்பப் பாடல்களி லல்லாமல், மற் றெல்லா விஷயங்களிலும் அம்மங்கையர் மிருகத்தினும் கயமையாகவே மதிக்கப்பட்டு வந்தனர். “பெண் ணென்ருல் பேயு மனம் இரங்குமெனப் பேசக் கேட்டேன்; ஆனு லப் பெண்ணினுக்காப் பேயு மனம் இரங்கி

யொரு பேச்சேனும் பேசக் கேளேன்,'' என்பதே அவர்களின் இழிநிலையா யிருந்து வந்தது. மானிட சமூகம் மகா ஆரம்பதசையி லிருந்துவந்த காலத்தில் அப்பண்டைய மாக்களால் அரிதினில் அனுஷ்டிக்கப்பட்டு வந்த பழக்கமாகிய பலபதி மணமென்பது, அஃதாவது, ஒரு பெண் ஏக காலத்தில் பல கணவன்மார்களுக்கு மனைவியாயிருத்தல் என்னும் மாகொடிய தீய வழக்கமும் அந்த அராபிகளிடம் காணப்படாம லிருக்க வில்லை. அஃ தல்லாமலும், ஓர் ஆண்மகன் விவாகம் செய்துகொள்ளும் ஸ்திரீகளின் எண்ணிக்கையும் இந்துமதத்தி லிருப்பதேபோல் அளவில்லாததாயே அமைந்துகிடந்தது; இத்தனை மனைவியர் போதுமென்பது அந்த அந்த ஆடவனுடைய இஷ்டத்தையே பொறுத்ததா யிருந்துவந்தது. கணக்கற்ற மனைவியரை மணந்து கொள்வதுடன், எத்தனை வேண்டுமாயினும் அத்தனை "வைப்புக்"களையும் வைத்துக்கொண்டு அவன் அனுபவித்து வரலாம். வியபிசாரமென்பது அவர்களுக்குள்ளே இந்நாட்டுத் தாசிகளேபோல் ஒரு பகிரங்க வியாபாரத் தொழிலாய் நடைபெற்று வந்தது. போர்க் கைதி களாகிய பெண்ணடிமைகள் தங்கள் எஜமானர்களுக்கு "வைப்புக்களா" யிருப்பதோடு, தங்களுடைய வேறு வியபிசாரத்தாலும் பணயம் சம்பாதித்து அந்த எஜமானர்களுக்குக் காணிக்கை செலுத்தல் வேண்டும். விவாகமான ஸ்திரீகளும், அவர்களுக்குக் குழந்தை யில்லாவிடின், அன்ன வரின் கணவன்மார்களாலேயே வேறு அன்னிய புருஷர்களிடம் சம்சர்க்கம் வைத்துக்கொள்ளும்படி பகிரங்கமாக 'நியோகம்' புரியுமாறு அனுமதியளிக் கப்பட்டு வந்தனர். இவ்வழக்கமானது இஸ்திப்'ல்'ாஃ' என்றழைக்கப்பட்டு வந்தது. அன்றியும், அரப் மாதர்கள் ஆடு மாடுகளினும் கீழாய வெறும் அசேதனப் பொருள்களாகவே எல்லோராலும் கருதப்பட்டு வந்தனர். அவர்கள் தங்களுடைய இறந்துபோன தாய் தந்தைய ரிடத்திருந்தேனும், கணவர்க ளிடத்திருந்தேனும், அல்லது வேறெந்தப் பந்துக்களிடத்திருந் தேனும் ஏதேனும் சொத்துக்களைச் சுதந்தரம் பெற்றுக்கொள்ளுதற்குச் சற்றும் அருகதை யற்றவராகவே கணிக்கப்பட்டு வந்தனர். ஆனால், அதற்கு மாறாக அந்த மாதர்களே தங்களுடைய காலஞ்சென்ற பந்துக் களின் வாரிஸ்களுக்குரிய அனந்தர ஜங்கம சொத்துக்களாகப் பாவிக்கப் பட்டு வந்தனர்: அந்த இறந்தவருக்குரிய வாரிஸ் அந்த ஸ்திரீ ரத்தினங் களைத் தன்னிஷ்டம் போலே நடாத்தி வைப்பான்; அவளை அவன் தானே யும் மணந்து கொள்ளலாம்; அல்லது வேறெவனுக்கேனும் மணம் புரிந்து வைக்கலாம். தந்தை இறந்தபின்னால் அவனுடைய மூத்த தாரத்தின் குமாரன் தன் தகப்பனுக்கு வாய்த்த மறு தாரத்தையும் தன் பிதாவின் ஜங்கம சொத்தெனக் கொண்டு, அவளைத் தனக்குரிய சொந்த மனைவியாக ஆக்கிக்கொள்வான். அக்கால அராபியர்பால் காணப்பட்டுவந்த விவாக விமோசனமென்னும் கெட்ட வழக்கமும் அன்னவரின் குணாதிசயங்களுக் கேற்றவாறாகவே காணப்பட்டு வந்தது. ஒரு மனிதன் தன் மனைவிக்கு ஆயிர

முறை 'தலா:க்குக் கொடுத்து, இ'த்'தா வென்னும் ஒரு குறிப்பிட்ட காலத்துக்குள் ஆயிரமுறை அவளையே புனர்விவாகம் செய்து கொள்வான். சில சமயங்களில் தன் மனைவியருகே நெருங்குவதில்லை யென்று அவளுடைய கணவன் அவள்பால் சத்தியம் செய்து கொடுத்து விடுவான்; வேறு சில சமயங்களில் அவன் அவளைத் தன்னுடைய பெற்ற தாயாகவே பாவிப்பதாகவும் உறுதிமொழி கூறிவிடுவான். இவ்வாறு செய்வதனு லெல்லாம் அப்பெண்மணிகள் தங்கள் கணவன்மாரிடம் மனைவியாய் வாழ முடியாமலும், அல்லது வேறு புருஷர்களைத் தேடி வாழ்க்கைப்பட முடியாமலும் திரிசங்கு சுவர்க்கத்தி லேயே பலகாலும் கிடந்துழன்று அவஸ்தையுறுவார்கள்.

[இவ்வாறே இக்காலத்திலும் சில பல பாமர முஸ்லிம்கள் சிற்சில வேளைகளில் தங்கள் மனைவியரைத் தாமே வாழ வைக்காமலும், அல்லது பிற புருடருக்கு அவர்களை விவாகம் செய்து வைக்க இடங்கொடுக்க முடியாமலும் வம்புத்தனமாய் அன்னவருக்குத் 'தலா:க்குக் கொடாமலும் அல்லது தாமே சம்ரக்ஷணம் செய்யாமலும் அப் பெண்மணிகளைத் துன்புறுத்தி வருவதுண்டு. இப்படிப்பட்ட சங்கடமான நிலைமையில் அம் மனைவிமார் தங்களுக்குக் கல்வியறி வில்லாமையால், இஸ்லாமிய ஷரீஅ'த்தின்படி அத்தகைய புருடர்களிட மிருந்து விவாகவிமோசனம் பெற இந் நாட்டில் வழிதெரியாமல் அப் பண்டைக்கால அரபி மாதேபோல் அளக்க முடியா அவஸ்தையுள் அகப்பட்டுக்கொண்டு விழிக்கின்றனர். தங்களை ரஸூல் நாயகத்தின் வாரிஸ்'களென்று வாய்கூசாது கூறிக்கொள்ளும் பற்பல மௌலானாக்களும் மௌலவீகளும் இத்தகைய மாகொடிய கொடிய செய்கையைக் கண்ணுற்றும் இதற்கொரு பரிகாரமும் இதுபொழுது செய்யத் துணியாது வாளா இருந்து வேடிக்கை பார்த்து வருகின்றார்கள். என்னே இக்கால முஸ்லிம்களின் பிற்போக்கு !]

அத்தகைய துறைகளா லெல்லாம் அக்கால அரபிகள் அந்த ஸ்திரீ ரத்தினங்களைப் பலவாற்றானும் துன்புறுத்தி வந்தனர். இப்படிப்பட்ட சங்கடமான பொறியினின்று தப்பிக்கொண்டு விடுதலை பெறுதற்கு அந்த வனிதாமணிகளால் சற்றும் முடியாமலே யிருந்துவந்தது. அவர்களுக்குள்ளே ஆண்பால் பெண்பாலுக் கிடையில் வழங்கப்பட்டுவந்த இல்வாழ்க்கை சம்பந்தமான பதப்பிரயோகங்க ளனைத்தும் மகா அருவருப் புள்ளனவாகவே காணப்பட்டு வந்தன. காதலைப்பற்றியும் காமத்தைப்பற்றியும் மகாமகா அருவருக்கத்தக்க கவிகளால் மிக்க பெருமையுடனும் சற்றும் லஜ்ஜை யில்லாமலும் பாடிப் புகழ்ந்துகொண் டிருப்பர் அவ்வாடவர். உதாரணமாக, இம்ரஉல் :கய்ஸ் என்பார் ஒருபெரிய பிராபல்யம் வாய்ந்த கவியா யிருந்தார். அன்றியும், அவர் நற்காலத்துக் கேற்றாற்போலே அரச குமாரராகவும் இருந்தார். அவர் தம்முடைய ஒரு கவியில் தமது சிற்றப்பன் மகளுடன் கூடாத அநேக காரியங்களையெல்லாம் கூடிச் செய்திருப்பதாக

மிக்க இனியமுறையிலே பாடிக் காட்டியிருக்கின்றார். இவ்வா றிருந்தும், இவருடைய கவிகள் மக்காவிலுள்ள கஃ’பா’வின் வாயிலுக்கு மேலே உயர்த்தி மகா கௌரவத்துடனே பாதுகாக்கப்பட்டே வந்தன. பல மேற்குலத்துப் பெருமாட்டிகளும் மகா பகிரங்கமான காதற்கவிகளில் நுழைக்கப்பட்டுப் பாடப்படுவார்கள். அந்தப் பெருமாட்டிகளும் தங்களுக்கு இத்தனை அதிகமான காதலர்கள் இருக்கின்றனரென்று மிக்க வெளிப்படையாகக் கூறிப் பெருமை பாராட்டிக் கொள்வர். அக்கால அராபியர் எவ்வாறு தங்கள் பெண்மணிகளை மிருகத்தினும் இழிய மிருகமாக மிக்க தாழ்மையுடன் நடாத்திவந்தார்களென்பதை ஒருவாறு அறிந்துகொண்டாரல்லது, அவ் வனிதா மணிகளுக்காக நம் ரஸூல் நாயகமவர்கள் (இவர்களுக்கு என்றென்றும் இறைவனது சுகசாந்தியும் சுபிக்ஷநல்லருளும் சொரியப்படுவனவாக!) எத்துணைமட்டும் பாடுபட்டிருக்கிறார்களென்பதை ஒரு சிறிதும் ஓர்ந்து கொள்ளுதல் சாலாது; அதல பாதலத்துள்ளே ஆழ்ந்து தாழ்ந்துபோய்க் கிடந்த அம்மங்கையரைக் கைதூக்கி மகா உச்சஸ்தானத்துக்கு மேலே உயர்த்தி விட்டார்கள். பெண்களுக்கு அதிக சுதந்தரம் அளித்து விட்டதாக வீண்பெருமை பாராட்டிக் கொள்ளும் மேனாட்டு ஐரோப்பியரும் நம் நபிகள் பெருமானார் முஸ்லிம் ஸ்திரீகளுக் களித்திருக்கும் சமத்துவத்தையும், சகோதரத்துவத்தையும், சுதந்தரத்தையும், சுயேச்சையையும் இன்னம் பல நூற்றாண்டுகளுக்குப் பின்னரும் ஒரு சிறிதும் கிட்டக்கூட எட்டிக் கொள்வது முடியாது. பெண்களின் பெருமையைப் பாதுகாத்த லென்பது, அன்னவரின் கற்பு நிலைமையைப் பின்னமில்லாது பத்திரப்படுத்தி வைப்பதே யன்றி, எல்லா விதமான உரிமைகளிலும் அவர்களுடைய பாத்தியதைகளை ஆடவருடன் சரிசமானமாய் உயர்த்தி வைப்பது மாகும். இவ்விரு விஷயங்களிலும் இக்காலத்தில் வீண்பெருமை பேசிக்கொள்ளும் மேனாட்டு நவ நாகரிக மென்பது எத்துணை மட்டும் வெற்றியடைந்து வருகிற தென்பதை நீங்களே நன்கு நிதானித்துக் கொள்ளக் கடவீர்கள்.*

ஆனால், அதற்கு மாறாய் நந்தீனுல் இஸ்லாம் எத்துணை மட்டும் ஸ்திரீகளின் விஷயத்தில் நன்மை புரிந்திருக்கிற தென்பதை இதன் கீழ்ச் சிறிது ஆராய்ந்து பார்ப்போம்:—“ஆடவருக்குப் பெண்டிர் மீதுள்ள உரிமைகளே போன்ற உரிமைகள்தாம் பெண்டிருக்கும் நியாய முறைப்படி ஆடவர்மீதுண்டு,” (:குர். 2 : 228) என்னும் இறைவனது திருவாக்கியமே ஸ்திரீகளுக்

* பெண்மணிகட்குச் சொத்துச் சுதந்தரம், அந்தஸ்துயர்வு, விவாக உரிமை, விவாக விமோசன உரிமை முதலிய ஒருரிமையும் அளிக்காது, எதேச்சையாய் வெளியிலே அலைந்து திரியவும், ஆண்களைப் போல ஆடல் பாடல், உயர்தரக் கல்வி, உத்தியோகம் வகித்தல் போன்றவை யளிக்கவும் முற்படுவதுதான் ஸ்திரீ சுதந்தரமென்று இக்காலத்தில் எண்ணத் துணிந்து விட்டனர். இது தவறான வாதமேயாம். சகல உரிமைகளுடனும் வீட்டடங்கியிருப்பதைவிட ஒருரிமையுமில்லாது ஊரில் அலைந்து திரிவதுதான் சாலச் சிறந்ததோ?

களிக்கப்பட்டுள்ள சர்வசுதந்தர பத்திரமாகும். “ஆடவர் பெண்டிருக்கு ஆடையே போல்வர்; பெண்டிரும் ஆடவருக்கு ஆடையே போல்வர்” (:குர். 2 : 187). இதே விதமாகத்தான் நபிகள்நாதரும் (சல்) நவின்றருளி யிருக்கின்றார்கள் :— “உங்களுள்ளே மிகவு மேலானவர் தம் மனைவியரை மகா மேன்மையுடன் நடத்துபவரே யாவார்.” “ஆணும் பெண்ணும் இரட்டைப் பிறவியினரே யாவர்.” பெண்ணென்ற மாத்திரத்திலே மகா அருவருப்புடன் நடாத்தப்பட்டு வந்த நந் தாய்மார்களும், நஞ் சகோதரி களும் இவ்வாறு மிக்க உன்னத ஸ்தானத்தை யடையுமாறு உயர்த்தப்பட்டு விட்டனர். பெண் குழந்தை பிறந்தவுடன் அதை உயிருடனே புதைத்து விடுவதுதான் ஒரு கண்ணியமான காரியமென்று கருதியிருந்த அந்தப் பாமரச் சமூகத்தாரிடம் வனிதையர்மாட்டு இத்துணைப் பெரிய மேதை மரியாதையைக் காட்ட வேண்டுமென்று கற்பித்துவிட்டுச் செல்வதென்பது ஒரு சர்வ சாதாரணமான காரியமென்று அரப்நாட்டுச் சரிதை யுணர்ந்த ஒரு சர்வ சாதாரணமான எந்தப் பள்ளிச்சிறுனும் ஒத்துக்கொள்ளத் துணி யான். பெண் குழந்தை பிறந்ததென்னும் சமாசாரத்தைக் கேட்டவுடன், இனியில்லா வியாகுலத்தாலும் துக்கத்தாலும் அத்தந்தையின் முகம் கரு நிற மடைந்துவிடும்; கோபாவேசமும் கனன்றெழும். ஆதலின், அவன் அக் கணமே அப்பெண் சிசுவை உயிருடனே பூமியுள் புதைத்துவிடுதல் வேண் டும்; இன்றேல் அன்னவன் தனக்கு விளையப்போகும் அவமானத்தைச் சகித்துக்கொண்டிருக்க முடியாது, பிற மக்களின் மூஞ்சியில் விழிக்கநாணி ஒளிந்துகொண் டலைவான் (:குர். 16 : 58, 59). ஆதலால், அவன் தன் குமாரி யைப் பாலைவனத்தின் பக்கல் அழைத்துச் சென்று, அவ்விடத்தில் அதற்கு முன் தையாராக வெட்டி வைக்கப்பட்டிருக்கும் குழியினருகில் நிற்கும்படி செய்து, அதுபொழுது கதற ஆரம்பிக்கும் அந்தச் சிறு குழந்தையைத் தன்னுடைய சொந்தக் கரத்தினுலேயே குப்புறத்தள்ளி, அதன் மேல் மண்ணைப்போட்டு மிதித்து மூடிவிடுவான் அந்தப் படுபாவி. நபிகள் பெரு மான் ஓரமயம் இத்தகைய சம்பவத்தைக் கேட்டுத் திடீரென்று சோகமுற் றுக் கண்ணீர் சொரிய ஆரம்பித்து விட்டார்கள். இதன் சார்பான அவ் விருத்தாந்தத்தை ஈண்டெடுத்தெழுதல் வீணுகாதென்றே யாம் கருதுகின் றேம் :—

ஒருநாள் :கய்ஸ் பி'ன் ஆ'ஸிம் என்பார் நபிகள் பெருமானிடம் வந்து இவ்வாறு கூறலுற்றார் : “யா ரஸூலல்லா(ஹ்)! எனக்குப் பிறந்த எல்லாப் பெண் குழந்தைகளையும் உயிருடனே மண்ணுக்குள் புதைக்காமல் ஒரு போதும் நான் வெறுமனே விட்டுவிட்டதில்லை. ஒருமுறை நான் வெளியில் பிரயாணம் சென்றிருந்தபொழுது என் மனைவி ஒரு குழந்தையை ஈன்றெடுத் தாள். யான் என் வீட்டுக்குத் திரும்பி வந்தவுடன் அவளை நோக்கி, அது பொழுது பிறந்த குழந்தையைப் பற்றி விசாரித்தேன். அதற் கவள், ‘யாடுனரு மரித்த குழந்தையையே ஈன்றேன்,’ என்றாள். பிறகு சில ஆண்டு

கள் மட்டும் அவள் தன்னுடைய இரகசியத்தை வேறெவரிடத்தும் வெளி யிடாமல் தனக்குள்ளே மறைத்து வைத்திருந்தாள். ஒரு நாள் ஒரு பெண் குழந்தை என் மனைவியைப் பார்க்க வந்தது; அச் சிறுமியை நானும் உற்று நோக்கினேன்; அவளும் தன் தலைமயிரில் செவ்விய புஷ்பங்கள் அலங்கரிக் கப் பெற்றவளாய் அதிக ரூபலாவண்யத்துடன் மிக்க ஒய்யாரமாய்க் காணப் பட்டாள். அதுபொழுது யான் என் மனைவியை நோக்கி, 'இது யாருடைய குழந்தை? இதன் அழகைக் கண்டு என்மனம் கனிந் துருகுகின்றதே!' என்றேன். இதைக் கேட்டவுடன் என் மனைவி என்னை நோக்கித் தேம்பித் தேம்பி அழுதுகொண்டே, அப்பெண் குழந்தை தன்னுடைய குமாரிதா னென்றே கூறினாள். எழுந்ததையா எனக்கு ஆவேசம்! எனவே, அதன் பிறகு என் மனைவி உறங்கிக்கொண் டிருந்த பொழுது, அந்த என் இளங் குமாரியை அழைத்துக்கொண்டு வெளியே சென்றேன். அவ் விடத்தில் ஒரு குழியைத் தோண்டி, அதற்குள்ளே என் அழகிய பெண் சிறுமியை நிறுத்தாட்டினேன். அதைக் கண்டு அப் பச்சிளங் குழந்தை தன்னுடைய மிருதுவான இனிய குரலால், 'என்னருந் தந்தாய்! தாங்கள் என்னை என்ன செய்கின்றீர்கள்?' என்று என்னைப் பார்த்து வினவிற்று; ஆனால், யாதொன்றும் விடை கூறவில்லை. யான் அச்சிறு மழலைக் குழவியின் அழகிய மேனியின்மீது மணலைக் குவித்து வருங்கால், அக்குழந்தை மீண்டும் தனக்குரிய இனிய தொனியால், 'என்னருந் தந்தாய்! யாதொரு வெளிச்சமும், ஆகாரமும், வஸ்திரமு மில்லாமலா என்னைத் தாங்கள் இவ்விருண்ட மண்ணறைக்குள்ளே தனியேவிட்டுச் செல்கின்றீர்கள்?' என்று என் முகத்தைப் பார்த்து இரங்கிக் கேட்டுக் கொண்டே யிருந்தது. யானோ, ஒன்றும் பேசாது மௌனத்துடனே மண்ணைத் தள்ளிக்கொண்டே வந்து, அவ்வழகிய குழந்தையின் இனிய குரலானது அம்மண்ணுள்ளே மறையுமட்டும் என் வேலையைச் செய்து கொண்டே வந்தேன். இதுதான் இன்றைக்கும் என் மனத்தைத் துளைத் துக்கொண் டிருக்கிறது!" இக் கொடிய சம்பவத்தைக் கேட்டுக் கொண் டிருந்த நபிகள் திலகமும் அடக்கொணாத் துயரால் அப்பொழுதே அவலக் கண்ணீருகுத்து, "ஹிருதயமென்பது அத்துணைக் கொடிதாய் அமைந்திருக கின்றதே!" என்று கூறிப் பெருமூச்சு விட்டார்கள். இன்னமும், இது போன்ற எத்தனையோ கொடிய சம்பவங்களை யெல்லாம் எழுதிக்கொண்டே செல்லலாம். பெண் குழந்தைகள் மட்டுமேதாம் இவ்வாறு உயிருடன் மண்ணுக்குள் புதைக்கப் பட்டனவென் றெண்ணிவிட வேண்டாம். ஆண் குழந்தைகளுங்கூட ஒவ்வொரு குடும்பத்திலிருந்து தத்தம் தெய்வங்களுக்குப் பலியாகக் கொடுக்கப்பட்டு வந்த வழக்கமும் அக்காலத்தில் அத்தேயத்தில் இருந்தேவந்த தென்னலாம்: பல ஆண்களைப் பெறுந்தந்தை தன்னுடைய ஏனைக்குழந்தைகள் உயிருடனிருப்பதாயின், அவர்களினின்று "இன்னானை

யான் என் சாமிக்குப் பலியாகக் கொலை புரியக் கடவேன்," என்று வேண்டுதல் புரிந்துகொள்வான்.

சிற்சில சமயங்களில் விவாகத்துக்கு முன்னரே, அத் தம்பதிகளுக்கு இனிப் பிறக்கும் பெண் குழந்தைகளை உயிருடனே புதைத்துவிடத்தான் வேண்டு மென்னும் நிபந்தனையை உறுதிப்படுத்திக் கொள்வது முண்டு. அப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் அந்தக் கொலைப்பாதகத்தைச் செய்து முடிக்க வேண்டிய நிர்ப்பந்தமானது அந்தத் தாயையே சார்ந்ததாகும். அப் பெற்ற தாயின் இப் பரிதாபநிலை இருந்தவா றென்னே! அந்தக் கொடும் பாதகச் செயலைக்கண் டானந்திக்கும் பொருட்டுப் பிரத்தியேகமாக வரவழைக்கப்பட் டிருக்கும் அக்குடும்பத்தைச் சார்ந்த மற்றெல்லாப் பெண்களுக்கு முன்னே அந்தத் துரதிருஷ்டம்பிடித்த தாயானவள் தன் வயிற்றிற் பிறந்த பெண் சிசுவை உயிருடன் வதைபுரிதல் வேண்டும். பெண் சிசுக்களை உயிருடன் புதைப்ப தென்னும் கொடிய வழக்கத்தினை வெவ்வேறு வர்க்கத்தினர் வெவ்வேறு விதமாக அனுஷ்டித்து வந்தார்கள்: சில சமயங்களில் தரையில் குழியொன்று தோண்டி, அதனருகினில் பிரஸவஸ்திரீயைத் திட்டையில் உட்காரவைத்து விடுவார்கள். பின்னர்ப் பிறக்கும் சிசு ஆணாயிருப்பின், எடுத்துக் கொள்வார்கள்; பெண்ணேயாயின், அக்குழியினுள்ளே போட்டு அப்படியே புதைத்து விடுவார்கள். வேறுசில சமயங்களில் அப் பெண் குழந்தையினை ஆறு அல்லது ஒன்பது வயதுவரை வளரவிடுவார்கள்; அதன்பின்பு அக்குழந்தையின் தாய் தான் பெற்ற குமாரியை அலங்காரம் செய்வித்து நறுமணமும் பூசியனுப்புவாள்; அப்பொழுது அச்சிறுமியின் தந்தை அக்குழந்தையை அழைத்துச் சென்று ஒரு கிணறு, அல்லது ஒரு பிலத்தின் வாயிலருகில் நிறுத்தித் தான்மட்டும் அவளுக்குப் பின்னே நின்று, அக் குழந்தையை அக் கூபத்தினுள்ளே எட்டிப் பார்க்கச் சொல்வான். அவ்வாறே அச்சிறுமி அதனுள் எட்டிப் பார்க்கும் வேளையில் அக் கொடும் பாதகன் தன்குமாரியைக் காலைவாரி அதற்குள்ளே தள்ளி, மூடிவிடுவான். இதைத்தான் :குர்ஆன் ஷரீ'பும் இவ்வாறு வருணித் திருக்கின்றது: "அவர்களுள் ஒருவனுக்குப் பெண்குழந்தை (பிறந்த செய்தி) அறிவிக்கப்படுமாயின், அவன் முகம் கருநிறமாக மாறிவிடுகின்றது; அவன் அதிகம் கோபங் கொண்டுவிடுகிறான். அவனுக் கறிவிக்கப்பட்ட தீயசெய்தி கேட்டு, அவன் மனிதர்களைவிட்டு மறைந்து கொள்ளுகிறான்; அவமானத்துடன் அதனை வைத்துக்கொண் டிருப்பதா? அல்லது புழுதியுள் புதைத்து விடுவதா? என்றெண்ணுகிறான். இதுபொழுது நிச்சயமாக அவர்களுடைய தீர்மானம் தீயதாகவே யிருக்கிறது"— (16 : 58, 59). ஆனால், அத்தகைய பாமரக் கொடிய பழக்க வழக்கங்களெல்லாம், "உயிருடன் புதைக்கப்பட்ட அப்பெண் குழந்தை என்ன குற்றத்துக்காக அவ்வாறு கொலைசெய்யப் பட்டதென்று விசாரிக்கப்படுங்கால்" (81 : 8) என்னும் :குர்ஆன் ஷரீ'பின் திருவாக்கிய மொன்று வெளிப்படுத்தப்பட்டக்கால், ஒரேயடியாக ஒழிக்கப்

பட்டுப் போய்விட்டன. அதன்பின்பு அத்தேய முழுதும் ஓரிடத்திலேனும் ஒரு முறையேனும் அத்தகைய கொடிய சிசுஹத்தி யென்னும் உயிருடன் பெண்ணைப் புதைக்கும் கெட்டவழக்கம் மீட்டு மொருமுறை நடை பெற்றதே யில்லை. இவ்வொரு விஷயத்துக்கே மு‘ஹம்மத்’ நபியவர்கள் (இவர்களுக்கு இறைவனருளும் அவனன் மாராயமும் என்றென்றும் சொரியக் கடவனவாக!) இவ்வுலக மன்பதைக்குச் செய்தருளி யிருக்கும் உபகாரத்துக்கு மற்றெவரும் போதிய கைம்மாறு செய்ய ஆற்ற மாட்டாது, முற்றிலும் தயங்கிக்கொண் டிருக்கின்றனர். இத்தகைய அபூர்வ சீக்கிர சீர்திருத்தத்தை இவ்வுலக சரித்திரத்தின் வேறெந்த ஏட்டிலும் நீங்கள் கண்டுகொள்ள மாட்டீர்க ளென்பது திண்ணமேயாம்.

"செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்ற லரிது!" என்றார் வள்ளுவனாரும்.

அந்த மௌட்டிய அ’ரபி’ய்யாக்களிடம் காணப்பட்ட மற்றொரு கொடிய வழக்கம் யாதெனின், அதுதான் மதுபானம் செய்தலாகும். அவர்களுள்ளும் மக்கத்துக் கு’ப்‘பார்களே மதுபானம், சூதுபொருதல், கீழ்த்தர சங்கீதம் ஆகியவற்றில் அதிகம் வேரூன்றிக் கிடந்தனர். ஆடலும் பாடலும், ஏனைக் கீழ்நாடுகளி லெல்லாம் காணப்படுவதே போல ஒரு வகைக் கீழ்த்தர மாக்களால்தாம் ஆண்டும் நடாத்தப்பட்டு வந்தன. அவ் வகுப்பினரைக் **கியான்** என்றழைப்பர். இவர்களுடைய வியபிசாரத் தனமும் ஒழுக்கக்கேடும் உலகறிந்த விஷயமேயாம். இந்திய நாட்டுத் தேவ தாசிகளேபோல அவர்களும் அதிக கௌரவமாகவே எல்லோராலும் நடாத்தப்பட்டு வந்தார்கள்; மாபெரும் பிரபுக்களும் அந்தக் "கியான்" களிடம் பகிரங்கமாய்ப் ‘போக்கு வரத்து’ வைத்துக்கொண் டிருந்தனர் மதுபானத்திலோ, அக்காலத்திலிருந்த அரபிகளை வேறெவரும் இவ்வவனி யில் வென்றிடுதல் சாலாது. அவர்கள் பகலில் மூன்றுவேளை ஆகாரமும், ஐந்து வேளை மதுபானமும் செய்துவருவது பெருவழக்கம். பெரிய மனிதர் கள் மட்டுமன்றி, சிறுபிள்ளைகளும் அந்நாட்டில் சாராயங் குடித்தல் சர்வ சாதாரணமா யிருந்து வந்தது. சாராயப் "பீப்பாக்"கள் நிரம்பப் பெற்றிராத ஓர் அரபியின் இல்லமேனும் அக்காலத்தில் வெறுமையா யிருந்ததில்லை. ஆனால், மதுபானம் கூடாதென்னும் குர்ஆன் திருவாக்கியம் (5 : 90)* அருளப்பட்ட வுடனே அவரவரின் இல்லத்திலு மிருந்துவந்த சாராய ஜாடிகளும், "பீப்பாக்"களும் ஒரே மூச்சில் வீதிகளில் கவிழ்க்கப்

* "ஏ ஈமான் கொண்டவர்காள்! மயக்கந்தரும் வஸ்துக்களும், சூது விளையாட்டுக் களும், நட்டுவைத்த கற்கள்மீது பலியிடுவதும், அம்புகளைக் கொண்டு பிரிவினை செய்வதும் எல்லாம் ஷைத்தானின் விஷமத்தனத்தினின்றுள்ள அசுத்தமாகவே இருந்து வருகின்றன. ஆதலால், நீங்கள் ஜயசீலர்க ளாகும்பொருட்டு அவற்றினைத் தவிர்த்துக் கொள்ளக் கடவீர்கள்," என்பது அவ்வாயத்.

நுழைந்து, அதனுடன் வளர்ந்து வரக்கூடிய ஒருசிறு பிராணியே யென்று கருதி யிருந்தனர்; அவனுடைய மரணத்துக்குப் பின்னே அந்த ஆவி யென்பது அவ்வுடம்பை விட்டுப் பிரிந்து, அவனது சவக்குழியின்மீது பறந்துகொண் டிருக்கு மென்றும் நம்பியிருந்தனர்.

ஊருள் பஞ்சம் வந்துவிடுங்கால், அவர்கள் ஒரு பசுவின் வாலில் உலர்ந்த புல்லையும் சருகையும் கட்டிவிட்டுத் தீயைமூட்டி, அதை மலைச் சாரலின் பக்கல் துரத்தி விடுவார்கள்; இந்த வாலின் நெருப்பானது மேகத்தின் மின்னொளியை ஒத்திருந்ததென்றும், இப்படிப்பட்ட ஒற்றுமை யால் இந் நெருப்பான்து அம் மேகத்திலுள்ள மழையை வருஷிக்கச் செய்யு மென்றும் மௌட்டியமாய் நம்பினார்கள். தங்களுக்கு ஏதேனும் அசம்பவம் நேரிட்டு விடுமாயின், அந்த அரபிகள் தங்கள் விடுதிக்குள் தலைக்கடை வழியே நுழையாமல், புழைக்கடை வழியேதான் நுழைந்து செல்வது வழக்கம். பறவைகளின் பாய்ச்சலைக் கொண்டும் பக்ஷிசாஸ்திரப் பிரகாரம் சகுனம் பார்ப்பார்கள்: தங்கள் வழியின் குறுக்கே பக்ஷி யொன்று இடப் புறமிருந்து வலப்புறம் பறந்து சென்றால் நற்சகுன மென்றும், இதற்கு மாறாகச் சென்றால் துர்ச்சகுன மென்றும் கருதிவந்தார்கள். மரித்தோரின் ஆத்மா பரலோகத்தில் ஏறிக்கொண்டு செல்வதற்காக அவருடனே ஓர் ஒட்டகத்தைப் பட்டினியாகக் கிடத்திச் சாவடிப்பதைப் பற்றியும், கொல் லப்பட்டு இறந்தோரின் ஆவியானது எதிரியின் இரத்தத்தைக் குடிப்பதற் காக ஆந்தையின் உருவெடுத்து ஆகாயத்தில் அரற்றிக்கொண்டு திரிவதைப் பற்றியும் முன்னமே யாம் கூறியிருக்கின்றோம். இன்னம், குறி பார்ப்பதி லும், ஆரூடம் கேட்பதிலும் அவர்கள் அளவுகடந்த பக்தியுள்ளவர்க ளாகவே காணப்பட்டனர்; அந்தச் சாஸ்திரத்துக் குரிய கோடங்கிகள் என்ன சொன்னபோதினும், அதிலெல்லாம் முழுநம்பிக்கையும் வைத்துக் கொண்டு அவ்வாறே செயலாற்றித் திரிவர்.

சுருங்கச் சொல்லுமிடத்து, இப்படிப்பட்ட ஆயிரக்கணக்கான மூட நம்பிக்கைகளி லெல்லாம் அக்கால அரபிகள் முற்றும் மௌட்டியமான பக்தி வைத்திருந்தார்க ளெனத் தெரிந்து கொள்ளுகிறோம். இத்தகைய அனுசாரங்களிலிருந் தெல்லாம் மு‘ஹம்மத்’நபியவர்கள் (சல்) அந்தக் காட்டு மிருகாண்டிகளான அஞ்ஞான மாக்களை ஒரு சில ஆண்டுகளுக்குள் மக்கள் களாக மாற்றி, அந்தப் பண்டை மௌட்டியத்தினின்று வெளிக்கிளப்பி, நாகரிகம், நல்லொழுக்கம், ஞானம், சீலம், கல்வி முதலியவற்றி லெல்லாம் முன்னேற்ற மடைந்து மிகவு முயரிய உச்ச ஸ்தானத்தை யடையுமாறு செய்துவிட்டார்கள். இப்படிப்பட்ட மதசமூக சீர்திருத்தம் செய்து முழு வெற்றி யடைந்திருக்கும் மற்றொரு தீர்க்கதரிசியை இவ்வுலகின்கண் வேறெங்கும் நீங்கள் காணமாட்டீர்கள். அக்காலத்தில் அரப்தேசம் அடைந்திருந்த மௌட்டியமே போன்ற மௌட்டியத்தை யடைந்திருந்த வேறெந்தத் தேசத்தையும் நுங்களால் இத்தரணியில் கண்டுகொள்வது

இயலாது. எனவே, அந்த அராபியர் அடைந்த சீர்திருத்தம் போன்ற சீர்திருத்தத்தையும் வேறெங்கும் கண்டுகொள்வது முடியாது. ஈதெல்லாம் இருபத்துமூன்று வருடகால வரையறைக்குள்ளேதான் நிறைவேறிவிட்டது. இதையெல்லாம் உற்று நோக்குங்கால், இதற்குரிய உத்தமோத்தமரை மகாமகா புருஷோத்தமரென்று எவரே இக்குவலயத்தில் கூறத்துணியார்? இவரே மகா ஜயசீலர். இவரே இறுதி நபியாவார். இன்னமும் இதிலென்ன சந்தேகம்? "நவியார் சுவர்க்கபதி நயினர்" என்று சிறப்பித்துள்ளார் "சீறு"வென்கிற புராணத்துக் குடையாரும்.

---

# அதிகாரம் — 4

## ஆதிகால மதசீர்திருத்த முயற்சிகள்

**" எவர்களுடைய மூதாதையர்கள் எச்சரிக்கப்படாமல் இருந்தார்களோ, அப்படிப்பட்ட ஜனங்களை எச்சரிப்பான் வேண்டி நீவிர் அனுப்பப்பட்டீர்; ஆனால், அவர்கள் அலக்ஷிய புத்தி படைத்தவர்களா யிருக்கிறார்கள்."— (36 : 6)**

அரப் தேயத்தின் வெவ்வெறு பகுதிகளில் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு விதமான தீர்க்கதரிசிகள் அதற்குமுன்னே அவதரிக்காமலிருந்ததில்லை; இப்ராஹீம்நபி (அலை) அவர்களுக்கு முன்னும், அவர்களுடைய காலத்துக்குப் பின்னும் அத்தேயத்தின்கண் நபிமார்கள் அவதரித்தேயிருக்கிறார்கள்; :குர்ஆன் ஷரீ'பிலும் அவர்களில் சிற்சில நபிமார்களின் குறிப்புக்கள் காணப்படாகின்றன: யமன்தேயத்தின் ஒரு பகுதியாகிய அ'ஹ்:கா'ப் என்னும் மாகாணத்தில் வதிந்துவந்த ஆ'த்' என்னும் வர்க்கத்தினரை நல்வழிக்குக் கொணரும் பொருட்டு அவர்களுக்காக ஹூத்'நபி அனுப்பப்பட்டார்; மதீனாவுக்கு வடக்கே ஹிஜ்ரென்னும் பகுதியில் வசித்துவந்த :தமூதெ'ன்னும் வர்க்கத்தவரை நல்ல நிலைமைக்குக் கொண்டுவருவான் வேண்டி ஸ்'ாலி'ஹ்நபி அம் மாகாணத்தில் தோற்றுவிக்கப்பட்டார். ஆனால், இவ்விரு நபிமார்களும் நபி இப்ராஹீம் அவர்கள் காலத்துக்கு முன்னரே தோன்றி மறைந்தவர்கள். ஆனால், யமன் தேயத்திலும், மத்'யன்பகுதியிலும் முறையே தோன்றிய இஸ்மாயீல் (அலை) ஷுஐப்' (அலை) என்னும் இரு நபிமார்களும் அந்த இப்ராஹீம்நபி அவர்களுக்குப் பிறகே ஆங்காங்கே அவதரித்தார்கள். கல்வெட்டுக்களும், கர்ணபரம்பரையான சரித்திரங்களும், ஆ'தெ'ன்னும் வர்க்கத்தினர் மகா சாமர்த்தியசாலிகளாகவே இருந்துவந்தார்களென்று எண்பிக்கின்றன;

அவர்களால் நிறுவப்பட்ட மகாராஜ்யம் அரப்தேயத்தின் எல்லையையுங் கடந்து அப்பால் சென்றுவிட்டது. அவர்கள் இறைவன் நம்பிக்கையை இழந்து, முற்றும் உலோகாயதத்துள்ளே மூழ்கிக்கிடந்த காலத்திலேதான் ஹூத்' நபி அவர்களுடைய ஈடேற்றத்தி னிமித்தம் ஆங்குத் தோன்றலாயினர்; ஆனால், அந்த ஹூத்'நபி அவர்களுடைய காலத்துக்கு முன்னரே அந்த ராஜ்யத்தில் வேறுபல நபிமார்களும் அவதரித் திருந்தார்களென்று ஊகித்தற்குப் பல ஆதாரங்கள் காணப்படுகின்றன. அந்த ஆ'த்' வர்க்கத்தினர் ஹூத்' நபி அவர்களுடைய உபதேசங்களுக்குச் செவி தாழ்த்தாது மிக்க உதாசினத்துடனே இருந்துவந்தமையால், அன்னவர்கள் மகா கொடுமையுடனே தண்டிக்கப்பட்டார்கள். ரூபு'உ'ல் க'ாலி (வெறும் பொட்டலான நான்கிலொன்று) என்னும் பெயருடன் அ'ஹ்:கா'புக்கு வடக்கே அமைந்துள்ள பெரும் பாலைவனத்திருந்து கிளம்பிவந் தடித்த மண்மாரியால் அந்த ஜாதியினர் அடியோடு அழிக்கப்பட்டுப் போயினர். ஆதலின், :தமூதென்னும் வர்க்கத்தினர் மலைப் பிராந்தியங்களுக்குச் சென்று, ஆங்குள்ள குன்றுகளில் தங்களுக்கு வேண்டிய குடியிருப்பு வசதிகளைக் குடைந்துகொண்டு (:குர். 26 : 149) வசித்துவரத் துணிந்தனர். ஆனால், இவர்களுடைய விநாசகாலம் முடுகிவந்த காலத்திலே இன்னவரின் குகைகளும் குன்றுகளும் ஒருசிறிதும் இவர்களுக்குப் பாதுகாப்பை யளிக்கவில்லை. என்னெனின், இந்த :தமூத்' வர்க்கத்தினர் ஓரே கொடிய பூகம்பத்தால் அடியோடு அழிந்தொழிந்து போயினர். ஆனால், நீங்கள் நுங்கள்பா லுள்ள அரப்தேசப் படத்தை உற்று நோக்குவீர்களேல், மேற்கூறிய நான்கு நபிமார்களுள் ஹூத்' இஸ்மாயீ'ல் ஆகிய இருவர்களின் அவதாரமும் அரப்தேசத்தின் தெற்குப் பகுதியிலும், ஸ'ாலி'ஹ் ஷுஐ'ப்' ஆகிய இருவர்களின் அவதாரமும் அவ்வரப்தேசத்தின் வடக்குப் பகுதியிலுமே நிகழ்ந் திருக்கின்றன வென்பதை மிகச் செவ்விதாய்த் தெரிந்து கொள்வீர்கள். ஆயின், மத்திய அரப்தேசமாகிய 'ஹிஜா'ஜில் மட்டும் அதற்குமுன்னே யாதொருவிதமான தீர்க்கதரிசியும் அவதரித்ததே யில்லை. ஆனால், இப்'ராஹீம் நபி அவர்கள் தங்கள் செல்வப் புதல்வராகிய நபி இஸ்மாயீ'ல் அவர்களை மக்கமாநகர் இப்போதிருக்கு மிடத்தில் அப்போது கொண்டுவந்து விட்டுக் கஃ'ப'ாவையும் பழுதுபார்த்துவிட்டுச் சென்றதன் சார்பான சரித்திரம் மட்டும் ஆங்காங்குச் சிற்சிலவிதமாய கர்ண பரம்பரையான கதைகளாக அவ்விரு நபிமார்களையும்பற்றிக் கூறிக்கொண்டிருக்கின்றது. இது தவிர்த்து, 'ஹிஜா'ஜுக்கும் வேறெந்தத் தீர்க்கதரிசிக்கும் எக்காலத்திலும் எவ்விதமான சம்பந்தமும் இருந்ததே யில்லையென்றறிக.

ப'னீ இஸ்ராயீல் வர்க்கத்தைச் சார்ந்த நபிமார்களின் காலத்திலெல்லாம் அரப்தேச முழுவதும் விக்ரஹத் தொழும்பே அதிகம் தலைவிரித்துத் தாண்டவமாடிக் கொண்டு கிடந்தது. யமன் தேயத்து ராணியொருவரை

(பி'ல்:கிஸை) ஸுலைமான் நபி (அ'லை) அவர்கள் ஏகதெய்வக் கொள்கையின் பக்கல் ஈர்த்திருந்தார்கள்; இதனால் அரப்தேயத்தின் அத் தெற்குப்பகுதியில் அக்காலத்தில் மட்டுமே சிறிதுபொழுது ஒருசிறிது மதவுணர்ச்சி தோன்றியிருந்தது. பிறகு கி. மு. 5-ஆவது நூற்றாண்டில் 'பலஸ்தீனத்தை விட்டு நெபு'க்கத்நேச்சார் (பு'க்'துநஸ்ஸர்) ஆங்கிருந்த யூதர்களைத் துரத்தியடித்தபோது, அவர்கள் 'ஹிஜா'ஜுக்குள் வந்து அடைக்கலம் புகுந்துகொண்டார்கள். அவர்களுக்குள், 'பாரான் (அரப்) தேசத்திலேதான் இறுதி நபி தோன்றப் போகிறாரென்னும் தீர்க்கதரிசன வதந்தியும் அதிகம் உலவி வந்தது. எனவே, அந்த எஹூதிகள்— (யூதர்கள்) 'ஹிஜா'ஜுக்குள் குடியேறி, கை'ப'ர் என்னு மிடத்தையே தங்களுக்குரிய ஒரு யூதக்குடியேற்ற ஸ்தலமாகச் செய்துகொண்டனர். அவ்வாறு அவர்கள் அப்பகுதியில் குடியேறி நிலைகொண்ட பின்னர்த் தங்களுடைய மதத்தை அந்த அரபிகள்மாட்டும் போதிக்கத் தலைப்பட்டனர். இவ்வாறு அவர்கள் செய்து வந்த பிரசாரத்தின் பயனாக, கி. மு. 3-ஆவது நூற்றாண்டில் 'தூநவாஸ் என்னும் பெயருடைய யமன் தேசத்தரசனும் அந்த யூதமதத்தில் சேர்ந்துகொண்டான். இதனால் யூதமதப் பிரசாரத்துக்குப் பெரியதோர் ஆக்கமுண்டாய், அவ்வியக்கமும் அதிகம் வலுவடைந்து விட்டது; இக்காரணத்தினால் அந்த யூதமதமே அத் தீபகல்ப முழுதும் காலக்கிரமத்தில் தலை சிறந்து விளங்கிவர லாயிற்று. ஆயினும், அந்த 'ஹிஜா'ஜின் அரபிகள் மட்டும் தங்களுடைய பூர்விக விக்ரஹத் தொழும்புமார்க்கத்தைச் சற்றும் கைவிடாது, மிக்க பிடிவாதத்துடன் அதனையே முற்றும் பின்பற்றி வந்ததனால், சிறிது காலத்துக்குள் அந்த யூதர்களின் கிளர்ச்சியனைத்தும் ஒடுங்கி, அவ்வரப்தேச முழுவதும் முன்போலவே தனக்குரிய அஞ்ஞான அந்தகாரத்துள் மீண்டும் தலைகீழாய் வீழ்ந்து மூழ்கிக்கிடந்தது. அதன்பின்பு மற்றோர் இயக்கம் சிறிது தலைகிளப்பி நின்றது: கி. பி. 3-ஆவது நூற்றாண்டில் கிறிஸ்துமதப் பாதிரிகள் கூட்டங்கூட்டமாக வந்து நஜ்ரானில் குடியேறினார்கள். அரப் நாட்டுக்கு வடக்கிலும் மேற்கிலும் உரோமராஜ்யம், அபி'ஸ்ஸீனிய ('ஹப'ஷா) ராஜ்யம் என்னும் இருபெரும் கிறிஸ்தவ ராஜ்யங்களும் அதுகாலை அதிகம் தழைத்தோங்கி வந்தமையால், அவற்றின் ஆதரவுகொண்டு அரப்தேசத்துக்குள் கிறிஸ்துமத ஆதிக்யம் சிறிது செல்வாக்குடன் வலுவுற்றுக் காணப்பட்டது; இக்காரணத்தினால் அ'ஸீருக்கும் ஸன்ஆ'வுக்கும் இடையிலுள்ள நஜ்ரான் மாகாண முழுதும் கிறிஸ்துமதத்தையே தழுவிவிட்டது. ஆனால், அதற்குமேல் அந்தக் கிறிஸ்துமதத்தால் அத்தேயத்தில் ஒன்றும் செய்துகொள்ள முடியவில்லை. ஆங்காங்குச் சிற்சில தனிமனிதர்கள் கிறிஸ்துமதத்தை ஒருவாறு அனுஷ்டிக்கத் துணிந்தன ரல்லது, அரப்தேச முழுதிலும் அம்மதத்தால் ஏதேனுமொரு பிரத்தியக்ஷமான மாறுதல் உண்டாய்விட்டதென்று கூறுவதற்கில்லை. எனவே, இவ்வாறாகத்தான் அத்தேசத்தில் இந்த இரண்டாவது முயற்சியும் தன் மத

சீர்திருத்த விஷயத்தில் முற்றுந் தோல்வியடைந்து தொலைந்து போய் விட்டது.

மூன்றாவது முறையாக, உள்நாட்டுக் குள்ளிருந்தே ஒருவித முற்போக்கிற்குரிய இயக்கம் தலைகிளப்பிற்று: அஃதாவது, நபிகள் பெருமானின் திருவவதாரத்திற்குச் சற்றுமுன் அத்தீவில் ‘ஹனீ‘ப்கள் என்னும் ஒரு வகைக் கொள்கைக்காரர் தோன்றலாயினர். அச்சிறு கூட்டத்தினர் விக்ரஹ ஆராதனையை முற்றும் வெறுத்துவந்தனர்; ஆனால், அவர்கள் யூத மதத்தின் பக்கலேனும் கிறிஸ்துமதத்தின் பக்கலேனும் தங்கள் வதனத்தைத் திருப்ப வில்லை; அவர்கள் ஏகதெய்வத்தையே முற்றமுற்றப் பூஜித்து வந்தார்கள். அன்னவர் தங்களைமட்டும் திருத்திக்கொண்டு வந்தனரே யன்றித் தங்கள் தேயத்தின் பொதுமக்களைப்பற்றி ஒருசிறிதும் கவலை கொண்டன ரில்லை. வேறு சிலர், தங்கள் சமூகத்திலிருந்த கொடிய துர் வழக்கங்களைக் கண்டு உளம் பொறுதாராய், க’தீ’ஜா (ரலி’) அவர்களின் பெரிய தந்தையின் குமாரரான வர:கா பி’ன் நௌ‘பல், ஹம்‘ஜா வுடைய தமக்கை மகன் அ’ப்’து’ல்லா ஹிப்’னு ஜஹ்ஷ் போன்றவர்கள் கிறிஸ்து மதத்தில் சேர்ந்துகொண்டார்கள். ஆனால், அவ்வாறு சேர்ந்துகொண்ட வர்களின் தொகையோ மிகமிகச் சொற்பமாகவே யிருந்துவந்தது. என்னெனின், பெரும்பான்மையான அரபிகள் ஆங்கிருந்த யூத மதத்திலேனும் கிறிஸ்து மதத்திலேனும் சிறிதும் அபிமானங் கொள்ளாதவராய் விளங்கிவந்தனர்; இப்படிப்பட்டவர்களுள் உ’மரின் (ரலி’) தந்தைக்குச் சகோதரரான ஃஜத்’ ‘பின் நௌ‘பல், :தாயி‘பின் தலைவரும் ஒரு கீர்த்திவாய்ந்த பெரும் புலவருமாயிருந்த உமையா பி’ன் அபி’ஸ் ஸல்த் முதலியோர் முக்கியஸ்தராவார்கள். எனவே, அப்பொழுது அவ்வாறு அந்தக் கிறிஸ்து மதத்திலும் யூத மதத்திலும் சேர்ந்துகொண்டவர்கள் தத்தமக்குரிய புதிய மார்க்கத்தைப் பிரசாரம் செய்யச் சற்றும் உற்சாக மில்லாதவர்களாய் வீணே காலங் கழித்து வந்தனர். ஆயினும், அவர்க ளருகில் வாழ்ந்துவந்த ‘ஹனீ‘ப்க ளெல்லாரும் தங்கள் ஜாதியாரிடம் வழங்கிவந்த விக்ரஹத் தொழும்பை மட்டும் அடியோடு வெறுத்துத்தான் வந்தார்கள். அவர்கள், இப்’ராஹீம் நபி அவர்களால் ஆதியில் உபதேசிக்கப்பட்டு விட்டுச் செல்லப்பட்ட அந்த ஏகேசுவரவாத மதத்திலேயே இருந்து வருவதாகத்தான் பகிரங்கமாய்க் கூறிக்கொண் டிருந்தார்கள். இந்த ‘ஹனீ‘ப்களின் மார்க்கம் அதிக பிரசாரத்துடன் வேலைசெய்து வாராமற் போயினும், அது தன்னளவிலே அடக்க ஒடுக்கத்துடன் அத்தேயத்தில் இருந்துகொண்டுதான் வந்தது. அரப் தேயத்தில் அக்காலத்தில் இருந்துவந்த அனாசாரங்களைப் பற்றியும் அநியாய அட்டூழியங்களைப் பற்றியும் அந்த ‘ஹனீ‘ப்கள் சிறிதும் சிந்தியாமல், அதிக பராமுக முள்ளவர்களாகவே தம்மளவில் இருந்துவந்தனர். பலதெய்வ விக்ரஹத் தொழும்பின்முன் ஏகதெய்வக் கொள்கையை ஏற்றுக் கொள்வதே அன்னாரின் முக்கிய விசேஷமாய்க் காணப்பட்டது; இவ்வள

வேதான் அவர்களுடைய மார்க்க அனுஷ்டானமும். ஆதலின், இதற்கு முன் தோன்றிய மற்றிரண்டு இயக்கங்கள் போலவே இதுவும் சமுத்திரத்தின் மேல்மட்டத்துக்குக் கீழே நுழைய முடியாது, மேலேயே சிற்றலைகளாக மிதந்துகொண்டிருந்தது. எனவே, அந்த அஞ்ஞான அரப்தேச சாகரமென்பது எப்பொழுதும் போலவே சிறிதும் மெய்ச்சலனமில்லாது, தனக்குரிய பண்டை நிலையிலேயே முன்போலக் குடிகொண்டிருந்தது. சுருங்கச் சொல்லுமிடத்து, இந்த 'ஹனி'ப்களின் இயக்கமென்பது, அதற்கு முன்னிருந்த யூதமத, கிறிஸ்துமத இயக்கங்கள் செய்துபார்த்த அத்துணைப் பிரசாரங்கூடச் செய்யச் சக்தியற்றதாய்க் காணப்பட்டதென்றே ஒருவாறாகக் கூறிமுடிக்கலாம்.

நபிகள் பெருமானார் திருமக்காவில் அவதாரம் புரியுமுன் அத்தேசத்தில் மூன்றுவிதமான வெவ்வேறு வகை இயக்கக்காரர்கள் தோன்றியிருந்தார்களென்பதையும், அவர்களெல்லாரும் அத்தேசத்தினரை அஞ்ஞான அந்தகாரத்தினின்று வெளிக்கிளப்புதற்கே முயற்சி செய்துவந்தார்களென்பதையும் மறந்துவிடுதல் கூடாது. உலகாயத சம்பந்தமான எல்லாவித ஆதரவுகளையும் வைத்துக்கொண்டு, அவ்வியக்கங்களெல்லாம் பல நூற்றாண்டுகள் மட்டும் பாடுபட்டும், அவ்வரபிகளிடம் அவர்களால் ஒன்றும் செய்துவிட முடியவில்லை. ஆனால், அவர்களுடைய ஸ்தானத்தில் தோன்றிய ஒரு தனிமனிதரோ, எவ்வித இகலோக உதவியுமில்லாது தன்னந்தனியே நின்றுகொண்டு, எல்லோராலும் ஆதிமுதலே மிகக் கடுமையாக எதிர்க்கப்பட்டுவந்தும், ஒருசிறு காலத்திற்குள்ளே தம்முடைய கோரிக்கையில் முழுவெற்றியும் அடைவதென்பது ஒரு சர்வசாமான்யமான மனிதக்காரியமன்று. உத்தேசம் ஓர் இருபத்துமூன்று வருடகால எல்லைக்குள், இவ்வுலகத்தில் இன்றுகாறும் வேறெவராலும் பெறுதற்கரிய அத்துணைப் பெரிய முழுவெற்றியையும் இவர் அடைந்துவிட்டார். அத்தேயத்தின் பீராப்பிணியாகிய விக்ரஹத்தொழும்பை இவர் அடியோடு ஆணிவேருடன் கல்லியெறிந்துவிட்டதுமல்லாமல், அவ்வராபியரிடம் வேரூன்றிக்கிடந்த மற்றெல்லாவிதமான துராசாரங்களையும், மௌட்டிய அநாகரிக அனாசாரங்களையும் இருந்தவிடம் தெரியாமலே அப்பால் எடுத்தெறிந்து விட்டார். "நெறிநிலை திரியா மருள்மதம் மிகுந்து நெடுநிலம் எங்கணும் பரந்து, துறவறம் தவறி இல்லறம் மடிந்து சுடரிலா மனையது போலக், குறைபடும் காலம்" என்று உமறுப் புலவரும் அற்றைநாள் அவகேட்டு நிலைமை குறித்து அறைந்திருப்பது பொய்யாமோ?

யூதர்களும் அராபியர்களும் ஒரே மூலத்திலிருந்து தோன்றியவர்களாதலின், அவர்களுக்குள் ஜாதியபிமானமும் ஒற்றுமையும் அதிகம் தழைத்தோங்குதற்குத் தக்கசாதனமும் இல்லாமற் போய்விடவில்லை; அவ்விரு வர்க்கத்தாரின் நடைநொடி பாவனைகளும், பாஷாதத்துவ இயல்பும் பெரும்பாலும் ஒன்றுடனொன்று ஒற்றுமையுடையனவாகவே காணப்

படாநின்றன. அவ்விரு ஜாதியினருமே நபி இப்ராஹீம் அவர்களைத் தங்களுக்குச் சொந்தமான பொதுவாயுள்ள தீர்க்கதரிசியென்றே கௌரவத்துடன் கருதியிருந்தார்கள். இவையேயன்றி, அரப்தேயத்தின் ஒரு வளம் பொருந்திய பகுதியாகிய யமன் மாகாணத்தின் அரசனும் தனது முழுச் செல்வாக்குடன் அந்த யூத மதத்தைத் தழுவியிருந்தான். இப்படிப்பட்ட விஷய நுட்பங்களை யெல்லாம் துருவிப் பார்க்குமிடத்து, அந்த யூத மதமென்பது அரப்தேச முழுதையும் அதிசீக்கிரம் தன்னளவில் சிக்கவைத்துக் கொள்ளுதற்கு வேண்டிய சக்திவாய்ந் திருந்ததாகவே வெளித்தோற்றத்தில் காணப்பட்டுவந்தது. ஆனால், அந்த அரப்நாடென்பது அத்தகைய யூத மதத்துக்குச் சற்றும் இடங்கொடாமலே தன்னகத்து அத்துணைக் கடுமையுடன் கொடுமையாகப் பழைய பாதையைப் பற்றிக்கொண்டு கிடந்தது. அதன் பின்னால் கிறிஸ்துமதம் மற்றொரு வகையான சமாசாரத்துடன் (ஓரெளிய நூதன சித்தாந்தத்துடனே) அத் தேயத்துள் வந்து புகுந்தது. என்னெனின், அந்தக் கிறிஸ்தவரின் ஏகதெய்வ நம்பிக்கையென்பது ஒருவாறு அரபிகளின் நம்பிக்கையை ஒத்திருந்தது. எவ்வாறெனின், அந்த அராபியரின் விக்ரஹ வணக்கக் கொள்கையும், கிரீஸ் (யூனன்) தேசத்தில் வழங்கிவந்த விக்ரஹ வணக்கக் கொள்கையும் பெரும்பாலும் தம்முள்ளே ஒத்திருந்தன; அப்படிப்பட்ட கிரேக்க நாட்டு விக்ரஹ வணக்கத்தை அடிப்படையாக வைத்துக்கொண்டுதான் பௌல் துரையும் தம்முடைய கிறிஸ்து மதத்தை— இதுகாலை இயேசுவின் பெயரால் நடைபெற்று வரும் மாதாகோயில் மார்க்கத்தை— உண்டுபண்ணி யிருந்தார்: அவரால் நிர்மாணிக்கப்பட்ட திரியேகத்துவ மென்னும் தத்துவமானது, இஸ்ரவேல் இனத்தாரின் ஏகதெய்வக் கொள்கையை ஒருவிதமாக மாற்றி, பண்டை விக்ரஹத் தொழும்பில் அடியோடு ஈடுபட்டுக் கிடந்த அக்கால அராபியருக்கும் முற்றும் பிடித்தமா யிருக்கக்கூடிய முறையிலே திருத்தி யமைக்கப்பட்டிருந்தது. எனவே, அக்கால விக்ரஹத் தொழும்பர்களனைவரும் மிக எளிதில் பௌலின் திரியேகத்துவக் கொள்கையை ஏற்றுக் கொள்ளுதற்குரிய வழியிலேயே யிருந்துவந்தார்கள்; இக் காரணத்தினாலேதான் கிரீஸ், ரோம் போன்ற பண்டை விக்ரஹ நாடுகளெல்லாம் மிகஎளிதில் அந்தப் பௌலின் விக்ரஹ வணக்கக் கிறிஸ்துமதத்தை ஏற்றுக்கொள்ளச் சர்வ தாராளத்துடன் முன்வந்துவிட்டன; அரப் தேசத்திலும் ஸன்ஆ முதலிய பகுதிகளில் அத்தகைய கிறிஸ்துமதம் அதிகம் புகுந்து வேலைசெய்ய ஆரம்பித்தது. இதுவேயுமன்றி, அக்கால அரபிகளுக்குப் பிரீதியாயிருக்கக்கூடிய மற்றோர் அம்சமும் அந்தக் கிறிஸ்துமதத்தில் காணப்படாமலில்லை; அது தான் சட்டவரம்புக்குக் கட்டுப்பட வேண்டியதில்லை யென்னும் கொள்கையாகும். பௌல் துரையின் கிறிஸ்துமதத்தில் சட்டவரம்புக்குக் கட்டுப்பட்டு நடக்கவேண்டு மென்னும் நியதி யொன்று மில்லை: என்னெனின், ஏவரும் எதைச் செய்தபோதினும், எப்படிச் செய்தபோதினும், இறுதியில்

இயேசுவின்மீது தாம் கொண்டுள்ள நம்பிக்கையால் இரக்ஷண்யம் பெறுவாரென்னும் கொள்கையையே அந்தக் கிறிஸ்துமதம் தனக்குரிய முக்கிய கொள்கையாகப் போதித்து வருகின்றது; இதுதான், எவ்வகைச் சட்ட வரம்புக்கும் கட்டுப்படும் யோக்கியதையற்ற அந்த அராபியருக்கு மிக்க பிடித்தமுள்ளதா யிருந்திருத்தல் வேண்டும். அக்காலக் காட்டரபிகள் எந்தவிதமான தெய்வநியதிக்கேனும் மனிதசட்டத்துக்கேனும் சற்றும் கட்டுப்படாதவர்களாய்க் காட்டுமிருகங்களைப் போலவே முற்றிலும் கடிவாளமற்றுக் கண்டபடி அலைந்துதிரிந்து, மனம்போனபடி யெல்லாம் "குடி"யிலும், "கூத்தி" முறையிலும் தலைகீழாய் மூழ்கிப் போய்க் கிடந்தனர். அவர்களுடைய இத்தகைய ஒழுக்க வீனத்துக்கெல்லாம் அந்தக் கிறிஸ்துமார்க்கத்தில் அதிக தாராளமான "லைசென்ஸே" கொடுக்கப்பட்டுள்ளது. மனம்போன போக்கெல்லாம் போய்விட்டு, இறுதியில் இரக்ஷண்யம் பெறுவதென்னும் அத்தகைய எளியமார்க்கத்தை அவ்வராபியர் ஏற்றுக்கொள்ளப் பின்வாங்குவார்களென்று எந்தக் கண்ணுடைய மனிதன் தான் குருட்டுத்தனமாகக் கூறுவான்? அந்த அராபியரும் அதையேதான் தேடினார்கள்; அதையேதான் அந்தப் பௌலின் மாதாகோயில் மதமும் அவர்களுக்குக் கொடுப்பதாய் வாக்களித்தது. இதனை எவர் வேண்டாமென்று கூறுவர்? உள்ளுக்குள் அம்மார்க்கத்தில் இத்தகைய எளிமை வாய்ந்திருந்ததுடன், வெளித்தோற்றத்திலும் அந்தக் கிறிஸ்துமார்க்கம் அதிகம் செல்வாக்குப் பெற்றே விளங்கிவந்தது. அரப்நாட்டுக்கு வடக்கிலிருந்த மிக்க செல்வாக்குற்ற ரோமராஜ்ய முழுதும் அந்தப் பௌல் மதத்திலே சேர்ந்திருந்தது; செங்கடலுக்கு மேற்கிலுள்ள அபிஸ்ஸீனியாவும் ('ஹப்'ஷாநாடும்) அதே மதத்தைத்தான் பின்பற்றிவந்தது. யமன் தேயத்தின் ஒரு மாகாணமும் கிறிஸ்து மதத்தைத் தழுவி யிருந்ததோடு, ஹீரா ;கஸ்ஸான் ஆகிய இருபெரும் பகுதிகளுங்கூட அம் மாதாகோயில் மதத்திலே சேர்ந்திருந்தன. இத்தகைய இலௌகிகச் செல்வாக்கனைத்தும் அந்தப் பௌலின் கிறிஸ்து மதத்துக்கு அக்காலத்தில் சாதகமாய் நின்று விளங்கின. எனவே, அந்த அரப்நாடு முழுதும் அந்தக் கிறிஸ்து மதத்தில் சேர்ந்து கொள்ளுதற்கு இன்னம் சிலதினங்களே எஞ்சியிருந்தன வென்று காண்போர் கருதும்படியாகவே அத்தேச நிலைமை அதுபொழுது அத்துணை எளிதாய்க் காணப்பட்டு வந்தது. ஆயினு மென்ன? அந்த மாதாகோயில் மத மென்பது, அந்த அராபியருக்குள் "குடி"யையும், "கூத்தி"யையும், சூதையும், விளையாட்டையும் முன்னையைக் காட்டினும் பன்மடங்கில் அதிகப்படுத்துவதற்கு உபயோகப்பட்டதே யல்லாமல், அவர்களை அவர்களுடைய துன்மார்க்கத்தினின்று சன்மார்க்கத்தின் பக்கல் திருப்புவதற்குச் சற்றும் சக்திபடைத்ததாய்க் காணப்படவில்லை. மூன்றாவது இயக்கமென்னப்பட்ட 'ஹனீ'ப்கள் அந்த அராபியருக்குள்ளே தோன்றித் தம்மைத் தாமே செப்பஞ் செய்துகொள்பவர்களாய்க் காணப்பட்டார்க ளல்லது,

தங்கள் சமூகத்தா ரிடையுள்ள அனுசாரங்களை யொழிப்பதற்குச் சற்றும் பிரயாசை யெடுத்துக்கொண்டவர்களாய்க் காணப்படவில்லை. அஞ்ஞான அரபிகளின் பலதெய்வக் கொள்கைக்கிடாய் ஏகதெய்வ மொன் றுண் டென்று ஒத்துக்கொள்வதே போதுமென்பதுதான் அன்னவரின் ஒரே கொள்கையாய்க் காணப்பட்டுவந்தது. இவ்வா றில்லாது, அவர்கள் அந்த அரபிகளைச் சீர்திருத்தஞ் செய்ய முயன்று முன்வந்திருந்த போதினும், அந்த 'ஹனீ'ப்களால் ஆங்கு ஒன்றும் செய்துவிடுவது முடியாது. என்னெனின், அவர்களுக்கு உலகசம்பந்தமான செல்வாக் கொன்றும் அப்பொழுது இல்லாமலே யிருந்துவந்தது. உண்மையை ஊடுருவிப் பார்ப்பவர்க ளெல் லாரும், அதற்குமுன்னே வரிவரியாய் ஒன்று, இரண்டு, மூன்று இயக்கக் காரர்களால் ஒருசிறிதும் அசைத்துத் திருப்ப முடியாமற்போன அந்தக் கொடிய அரபிகளை ஒரே இருபத்துமூன்று வருட காலத்திற்குள் சமூகாசார விஷயத்திலும், குலாசார ரீதியிலும், ஒழுக்க விஷயத்திலும் முற்றும் மாறுத லடையும்படியாக அடியோடு சீர்திருத்தம் செய்துமுடிப்பது ஒரு தனிமனிதரால் அத்துணைச்சீக்கிரம் ஆகக்கூடியதா யிருந்த காரியமாய்க் காணப்படுவதி லிருந்தே அன்னவரின் செய்கையில் ஆண்டவனே துணை நின்றிருக்கிறு னென்பதை நன்குணர்ந்து கொள்ளக்கடவார்கள். இத்தகைய அபூர்வ சீர்திருத்தத்தை இவ்வுலக சரித்திரத்தில் வேறெவருடைய ஆயுட் காலத்திலும் நீங்கள் கண்டிருக்க மாட்டீர்கள். இஸ்லாத்தின் பரம விரோதியாகிய ஸர் வில்லியம் மூய்ரும் இவ்விஷயத்தைக் குறித்துப் பின் வருமாறு தமது விரிந்த ஆங்கில நூலில் வரைந்து வைத்திருக்கின்றுர் :—

"மு'ஹம்மதி'ன் பால்ய தசையில் அந்தத் தீபகல்பத்தின் நிலைமை யானது சற்றும் முற்போக்குக்கு இடமில்லாது, ஒரே மந்தகதியி லிருந்து வந்தது; இன்னமும், அதற்குமுன் எப்பொழுதும் சீர்திருத்த மென்பது அத்துணை முடியாத காரியமாய்க் காணப்பட்ட தில்லை. திருப்திகரமான முடிபைச் சாதித்துக் காட்டுவதற்குச் சுயமே வெளித் தோற்றத்தில் இயலாத ஒரு தனிமனிதனுல் பற்பல விஷயங்கள் செய்து நிறைவேற்றப்படுவதைக் காணுங்கால், அவ்வவற்றிற் குரிய காரணங்கள் இன்ன இன்னவை யென்று பலவிதமான பொய்க்காரணங்களைக் கூற இவ்வுலகோர் முற்படுவதுண்டு: மு'ஹம்மத்' தோன்றினுர்; உடனே அந்த அராபியரெல்லாரும் ஒருவிதமான நூதனப் பாரமார்த்திகக் கொள்கைக்குள் வந்து குதித்துவிடக் கூடிய உணர்ச்சியைப் பெற்றுவிட்டார்கள். இதனுல் ஏற்படும் முடிபு யாதெனின், அரப் தேசமானது சீர்திருத்தத்துக்குரிய பரிபக்குவத்தை அடைந்து வந்தது; ஆதலின், அத்தேயம் அத்தகைய மாறுபாட்டை உடனே ஏற்றுக் கொண்டு விட்டது என்பதேயாம். ஆனுல், புராதன சரித்திரத்தை நிதா னத்துடன் ஆராய்ந்து பார்க்கும் எமக்கு, இஸ்லாத்துக்கு முற்பட்ட சரித்திர மென்பது இத்தகைய முடிபை ஏற்றுக்கொள்ள இடங்கொடுக்க வில்லை. ஐந்து நூற்றுண்டின் கிறிஸ்துமதப் பிரசாரத்துக்குப் பின்னும் அங்குமிங்

கும் சிற்சில கிறிஸ்தவர்களைப் பார்க்கினும் வேறு அபிவிருத்தியைக் கண்டு கொள்ள முடியவில்லை.

"முடிவாகக் கூறுமிடத்து, மதசம்பந்தமாய் ஆராய்ந்து பார்க்குங்கால், கிறிஸ்து மதத்தின் பலஹீனமுள்ள முயற்சிகளால் அரப் தேசத்தின் மேற்குப் பகுதிமட்டும் அப்பொழுதைக் கப்பொழுது ஒருசிறிது மிருதுவாக அலைக்கப்பட்டு வந்ததென்றே நாம் தெரிந்து கொள்வோம். யூத மதத்தின் பலமான செல்வாக்குச் சிறிது ஆழத்திலும் அதிக கடினமான நீரோட்டத்திலும் அடிக்கடி காணப்பட்டுவந்தது. ஆனால், அத்தேயத்தில் வழங்கிவந்த விக்ரஹ வணக்கமும், ப்னீ இஸ்மாயீ'ல் வம்சத்து மூடக்கொள்கைகளும் ஒவ்வொரு மூலையிலுமிருந்து கிளப்பிவிட்ட அலையானது, மக்காவின்மீது வைத்த நம்பிக்கையும் அதைநோக்கி வணங்கிய வணக்கமும் அந்த அராபியரின் மனத்தை மிகக் கடுமையான, எவராலும் மறுக்கமுடியாத அடிமைத் தனத்துள்ளே ஆழ்த்தி வைத்திருந்தன வென்பதற்குப் போதிய சாக்ஷியமாய் அமைந்திருந்தது."

இன்னமும் அந்த ஆங்கிலேயரே இவ்வாறும் எழுதுகின்றார் :— "மு'ஹம்மது'க்கு முன்னே அரப்தேசம் இருந்துவந்த நிலைமையானது, அத்தேசத்தாரின் மதவிஷயத்திலும், தேசீய விஷயத்திலும், ஜாதீய விஷயத்திலும் சிறிதும் சீர்திருத்தம் செய்வதற்கு இடங்கொடாததாகவே காணப்பட்டது. அந்த அராபியரின் மதக் கொள்கையானது, அதிகமாய் வேரூன்றிப் போய்க்கிடந்த விக்ரஹத் தொழும்பே யாகும்; எனவே, எகிப்திலிருந்தும் சிரியாவிலிருந்தும் வந்த ஒவ்வொருவிதமான மதமாற்றச் சீர்திருத்த முயற்சிக்கும் முன்னிலையில் எந்தவிதமான பிரத்தியக்ஷ மாறுதலுமில்லாமல் பல நூற்றாண்டுகளாகவே முன்னிருந்த நிலைமையிலேயே அத்தேசவிஷயம் இருந்துவந்தது."

ஆதலின், எந்த விதமான மத சீர்திருத்தத்திற்கும் சிறிதும் இடந்தாராத அப்படிப்பட்ட காட்டுமிருகாண்டிகளான அம்மறமாக்களைச் சீர்திருத்த வேண்டிய பொறுப்பே நம்நபிகள் (சல்) திலகத்துக்குக் கிடைத்தது. அதற்கு முன்னே தங்களைச் சீர்திருத்தம் செய்ய முன்வந்த எல்லாவித இயக்கங்களையும் நூற்றாண்டுக் கணக்காகத் தோல்வியடையச் செய்துவந்த அரபிகள்! இப்படிப்பட்ட திருத்த முடியாத அடங்காப் பிடாரிகளான அந்தக் காட்டரபிகளை யெல்லாம் சீர்திருத்த மடையுமாறு செய்து, தங்களுடைய ஏகேசுவர வாதத்தையும், இஸ்லாமிய கலைஞானங்களையும் இவ்வுலக முழுதும் சுமந்து செல்லும்படியாகச் சுமார் ஒரே கால் நூற்றாண்டுக்குள் ஆக்கிவிட்ட அத்துணைப் பெருமையும் நந் திருநபி யவர்களுக்கே உரியதாகும்! ஆதலின், இத்துணைப் பெரிய இணையற்ற வெற்றியை இத் தாரணியில் வேறெவருடைய சரித்திரத்திலேனும் நீங்கள் கண்டேனும் கேட்டேனும் இருக்கின்றீர்களா? எனவே, இது மு'ஹம்மத்'(சல்) நபியவர்களுக்குக் கிடைத்த இனியில்லா முழுஜய மென்பதற்கு வேறோர் உதாரண

மும் வேண்டுமோ? இதை உற்று நோக்குங்கால், மனிதர்கள் எத்துணைப் பாதாளத்துள் ஆழ்ந்து தாழ்ந்துபோய்க் கிடப்பினும், அவர்களை யெல்லாம் ஒரு நொடியில் மீட்டும் உச்சஸ்தானத்தை யடையும்படி செய்தற்குரிய ஆத்மசக்தியும், ஆச்சரியஉணர்ச்சியும் இந்த மு‘ஹம்மது’க்கு (சல்) இன்றும் இல்லையென்று எண்ணுகின்றீர்கள்? அந்த அராபியரின் பண்டைய நிலையை நன்கு நின்று நிதானித்துப் பார்ப்போமாயின், அன்னவரின் சீர்திருத்த அற்புதத்திலிருந்து நாமும் அவ்வாறே சீர்திருத்த மடைந்து முன்னேறுவதற்குப் போதிய ஆதாரம் இருக்கிற தென்றே நன்கு தெரிந்து கொள்வோம். அருகினில் வருக! இஸ்லாத்தின் இனிய உணர்ச்சியை இனிதுறப் பெறுக! அதன்பின்பு இதன் ஆத்மசக்தி இப்படிப்பட்ட தென்பதை நன்குணர்ந்து கொள்வீர்கள். ததாஸ்து!

---

# அதிகாரம் — 5

## நபியவதாரத் தீர்க்கதர்சனங்கள்

> *“அவர்கள் தங்கள்பா லுள்ள ‘தவ்ராத்திலும் இன்ஜீலிலும் வரையப்பட்டிருப்பதாய் எவரைத் தாங்கள் காண்கிறார்களோ, அத்தகைய உம்மீயாகிய திருத்தூதரென்னும் நபியைப் பின்பற்றுகிறவர்கள்.”*— (7 : 157)

**ந**பிகள் நாயகம் (சல்அ’ம்) ஜனனமாவதற்கு நெடுங்காலத்துக்கு முன்முதலிருந்தே மு‘ஹம்மத்’ நபியின் (சல்) திருவவதாரத்தைப் பற்றிய தீர்க்கதர்சனங்கள் பண்டை வேதங்களில் அதிகம் காணப்பட்டு, அவை அக்கால மக்களிடையே அளவற்ற பிராபல்யத்தை யடைந்திருந்தன. உண்மையை ஊன்றிப் பார்க்குமிடத்து, அக்காலத்திய அத்தகைய தீர்க்கதர்சனங்களே ஆங்காங்குள்ள யூதர்களையும் கிறிஸ்தவர்களையும் அந்த அரப்தேயத்திற்குள்ளே வந்து குடியேறுமாறு தூண்டிக்கொண் டிருந்தன வென்று ஒருவாறு நாம் ஊகித்துணர்ந்து கொள்ளலாம்; என்னெனின், அந்த வாக்களிக்கப்பட்ட தீர்க்கதர்சி அவதரித்தற்குரிய நாட்டின்பெயரும் ‘பாரான் என்று அப்புராதன வேதபுத்தகங்களில் மிக்க வெளிப்படையாகவே குறிப்பிடப்பட்டிருந்தது. ஆகையால், அத்தகைய தீர்க்கதர்சனங்களுள் முக்கியமான சிலவற்றைமட்டுமே யாம் ஈண்டெடுத் தெழுதுவாம்.

நபிகள் திலகத்திற்கு முன்னே வந்துசென்ற ஒவ்வொரு தீர்க்கதரிசியும், ஏன்! எல்லாக் காலத்திலும் தோன்றிய எல்லா நபிமார்களுமே இந்த “வாக்களிக்கப்பட்ட இறுதிநபி”யின் திருவவதாரத்தைப் பற்றிக் கூறியிருந்த தீர்க்கதர்சனங்களைப் பற்றியும், அவர்கள் வாயிலாய் இந்த இறுதி

நபியவர்களை எல்லாரும் எவ்வகைத் தடையுமின்றி இனியமுறையிலே எல்லா எதிர்நோக்கத்துடனும் முன்சென்று நல்வரவேற்க வேண்டுமென்று உறுதிமொழி வாங்கப்பட் டிருந்ததைப் பற்றியும் :குர்ஆன் ஷரீ'பானது அதிக ஸ்பஷ்டமாகவே அடிக்கடி எடுத்தோதி யிருக்கின்றது. இவ்வாறு வாக்களிக்கப்பட்டுள்ள இறுதிநபியின் ஓர் உன்னதமான உயரிய இலக்ஷணம் யாதெனின், இவர் தமக்குமுன் இவ்வவனியில் அவதரித்துச் சென்றிருக்கும் எல்லா நபிமார்களையும் (தீர்க்கதரிசிகளையும்) உண்மையானவர்க ளென்றே ஒத்துக்கொண்டு நிற்பர் என்பதாகுமென்றும் அவ்வழகிய திருமறையே அவர்களுக்கு அறைந்திருக்கிறது: "இன்னம், திண்ணமாக, இதுவே முன் சென்ற மக்களின் ஆகமங்களில் இருக்கின்றது," என்று எமது :குர்ஆன் தன்னைக்குறித்து வரைந்துள்ளதை 26 : 196-இல் காண்க. இன்னம், முன்னுள்ள எல்லா வேதங்களுமே இந்தத் தீர்க்கதர்சனங்களைக் கூறியிருக்கின்றன வென்றும் எமது :குர்ஆன்ஷரீ'ப் மிகவிளக்கமாக எடுத்தோதி யிருக்கின்றது: "இன்னம், 'நிச்சயமாக, வேதத்தினின் றுள்ளதையும், ஞானத்தினின் றுள்ளதையும் நான் உங்களுக்களித்தேன்;— அதன் பிறகு உங்கள்பா லிருப்பதை உண்மையாக்கி வைக்கும் ஒரு தூதர் உங்களிடம் வருவார்; அவரைக்கொண்டு நீங்கள் நிச்சயமாய் உறுதிகொள்ள வேண்டும்; நிச்சயமாக அவருக்கு உதவிபுரியவும் வேண்டும்' என்று நபிமார் வாயிலாய் அல்லா(ஹ்) வாக்குறுதி வாங்கியபொழுது, (நிகழ்ந்ததை நினைவுகூர்க); (இன்னம்) அன்னவன் கூறினான்: 'இதன்மீது எனது உறுதிமொழியை நீங்கள் ஊர்ஜிதப்படுத்தி, ஏற்றுக்கொள்கின்றீர்களா?' (இதற்கு) அவர்கள் சொன்னார்கள்: 'நாங்கள் ஊர்ஜிதப்படுத்துகிறோம்.' (அப்பொழுது அல்லாஹ்) சொன்னான்: 'பிறகு நீங்கள் சாக்ஷிகளா யிருங்கள்; நானும் உங்களுடனே சாக்ஷிகளுள் (உள்ளவனாக) இருக்கிறேன்.' "— (:குர். 3 : 80).

இச் சத்திய வேதத்தில் காணப்படும் இத்தகைய வாக்குறுதிகள் பைபிள் புதிய ஏற்பாட்டில் காணப்படும் இம்மாதிரியான விஷயங்களால் நன்கு நிரூபிக்கப்பட் டிருக்கின்றன: "உலகத்தோற்றமுதல் தேவன் தம்முடைய பரிசுத்த தீர்க்கதரிசிகள் எல்லாருடைய வாக்கினாலும் உரைத்தவைகள் எல்லாம் நிறைவேறித் தீருங்காலங்கள் வருமளவும் பரலோகம் அவரை ஏற்றுக்கொள்ள வேண்டும்."— (அப்போஸ்தலருடைய நடபடிகள், 3 : 21)

இக்காலத்தில் ஒரு தேயத்திலிருந்து மற்றொரு தேயத்துக்கு, ஏன்! உலகத்தின் ஒரு மூலையிலிருந்து எல்லாக் கோணங்களுக்கும் மிகஎளிதில் செல்லக்கூடிய வாகன வசதிகள், வண்டி வசதிகள், விமான வசதிகள் ஆதியவெல்லாம் அமைந்து கிடப்பதேபோல் அத்துணை அதிகமான யாத்திரா வசதிகள் அமையப் பெற்றிராத அப் பண்டைக் காலத்தில் ஒவ்வொரு நாடும் தன்னளவிலே ஒரு தனிப்பட்ட கண்டமேபோல அத்துணை ஏகாந்தமாகப் பிரிந்து கிடந்தமையான், ஆங்காங்குள்ள தனித்

தனியான மானிடவர்க்கத்தின் சீர்திருத்தத்துக்கும் முன்னேற்றத்துக்கும் வேண்டிய தீர்க்கதரிசிகளை ஆங்காங்கே ஆண்டவன் தனித்தனியாகவே அனுப்பிவைத்திருந்தான். இறுதியில் இவ்வுலகிலுள்ள எல்லா மதங்களின் சத்தியங்களையும் ஒன்றாகத் திரட்டி ஒரே உலகமதமாகச் செய்து, ஈங்குள்ள மக்களினத்தையும் ஒரே உலகசகோதரத்துவத்துள் புகுத்திவைக்கு முறையான் அவ்வாண்டவன் இத்தரணிமீதுள்ள எல்லா ஜாதியாருக்கும் ஏகப் பொதுவாகவே இவ்விறுதி நபியவர்களை(சல்) விசுவமஹா தீர்க்க தரிசியாக ஈங்கு அனுப்பிவைத்தான். ஆதலின், ஒருபுறத்தில் அத்தகைய விசுவமஹா தீர்க்கதரிசி யொருவர் இறுதியில் இப் பாருலகின்கண் திருவவதாரம் புரிவாரென்னும் சந்தோஷகரமான முன்னறிக்கையானது இவருக்கு முன் இக்குவலயத்தில் அவதரித்திருந்த ஒவ்வொரு தீர்க்க தரிசிக்கும் அறிவிக்கப்பட் டிருந்ததன்றி, மற்றொரு புறத்தில் இப்படிப் பட்ட இறுதி நபியானவர் தமக்குமுன்னே இவ்வுலகு முழுவதும் எத் தேயத்திலேனும் எக் காலத்திலேனும் எம் மக்களுக்காகவேனும் தோன்றியிருந்த எல்லா நபிமார்களின் உண்மையையும் ஒருங்கே ஒத்துக் கொள்ளுவா ரென்னும் முன்னறிக்கையும் இவர்சார்பாக அப்பொழுதே விடுக்கப்பட் டிருந்தது. எனவே, இத்தன்மைத்தாய இலக்ஷணங்களுக் கொத்த இறுதிநபியானவர் எம் மு‘ஹம்மத்’ முஸ்த‘பா ரஸூல் (சல்) அவர்களாகவே இத்தாரணியின்கண் காணப்படுகின்றனர். இவர்கள்தாம், தங்களுடனே இவ்வுலகினில் இதுகாறும் அவதரித்திருக்கும் எல்லாத் தீர்க்கதரிசிகளையும் ஒருங்கே எல்லாரும் ஒத்துக்கொள்ள வேண்டுமென்று தங்களுடைய சிஷ்யகோடிகளின் நன்னம்பிக்கைக் குரிய ஒரு முக்கிய கடமையாக ஏற்படுத்திவைத்துச் சென்றிருக்கிறார்கள். :குர்ஆன் ஷரீ‘பின் ஆரம்பத்திலேயே இவ்வாறு எல்லோருக்கும் உபதேசிக்குமாறு இந்த இறுதி நபியவர்கள் அறிவுறுத்தப் பெற்றிருக்கின்றார்கள்: “(இன்னம் அன்னவர்கள்) உம்பால் அருளப்பட் டிருப்பதையும், உமக்கு முன்னே அருளப்பட் டிருப்பதையுங் கொண்டு ஈமான் கொள்கிறவர்கள்.”— (:குர். 2 : 4). அதன் பின்பு இவ்வுலகினில் தோன்றிய எல்லா ஜாதியாருக்கும் ஒவ்வொரு தீர்க்கதரிசி ஒரோவமயத்தில் அனுப்பப்பட் டுள்ளாரென்னும் உண்மை இவ்வாறு அவ்வேதத்தில் பொதுப்படையாகக் கூறப்பட் டிருக்கிறது: “தங்கள்பால் அச்சமூட்டி எச்சரிக்கை விடுப்பவர் தோன்றாத ஜாதியாரினின்று ஒருவரும் இருக்கவில்லை.”— (35 : 24). இத் திருமறையின் இனியோரிடத்தில், இவ்வுலகில் அநேகம் நபிமார்கள் தோன்றியிருப்பினும், அன்னவர்களின் நாமதேயங்க ளெல்லாம் இதில் விளக்கிக் கூறப்படவில்லை யென்றும், அவர்களுள்ளே ஒருசிலரின் நாமங்கள் மட்டுமே ஆண்டுக் குறிப்பிடப்பட் டுள்ளன வென்றும் ஒருண்மை உரைக்கப்பட்டிருக்கிறது. ஆதலின், நபிகள் நாயகம் மு‘ஹம்மத்’ முஸ்த‘பா ரஸூல் (சல்)அவர்களே மேற்கூறிய இரண்டு விஷயங்களிலும் பரிபூரணப் பூர்த்திபெற்று விளங்கு

கின்றார்கள். பண்டைய வேதங்களில் தீர்க்க தர்சனமாய்க் கூறப்பட்டிருக்கும் முன்னறிக்கைகளெல்லாம் இந்த இறுதிநபி யவர்களின் திருவவதாரத்திலேதான் சம்பூர்ணமாய் வந்து முடிவடைகின்றன; அதுவேயுமன்றி, எம்பெருமானார் ஒருவரே இவ்வுலகினில் இதுகாறும் அவதரித்திருக்கும் மதத்தலைவர்களுள் ளெல்லாம் தங்களுடனே மற்றெல்லாத் தீர்க்கதரிசிகள் மீதும் தங்களுடைய சிஷ்யகோடிகள் ஒரேவிதமாக ஈமான் கொள்ள வேண்டுவது அத்தியாவசியமான ஒரு மதக்கடமை யென்று ஏற்படுத்தி வைத்துள்ளார்கள். எனவே, எல்லா நபிமார்களாலும் இறுதியில் அவதாரம் புரிவாரென்று எப்போதும் முன்னறிவிக்கப்பட்டிருந்த அந்த இறுதித் தீர்க்கதரிசியானவர் இந்த மு'ஹம்மத்' முஸ்த'பா ரஸூல் (சல்) என்பதில் கிஞ்சித்தும் சந்தேகமில்லை யென்று ஈண்டுநாம் மிகச் செவ்விதாய் அறிந்துகொண்டு விட்டோம்.

ஆனால், இக் குவலயத்திலுள்ள பண்டை வேதங்களெல்லாம் இடைக்காலத்தில் சேஷ்டை செய்யப்பட்டுவந்த விஷமங்களால் பெரிதும் மாறுபட்டுக் கிடக்கின்றன வென்பது வெள்ளிடை விலங்கலேயாம்; அவற்றுள் பைபிள் பழைய ஏற்பாடும், புதிய ஏற்பாடும், மற்றையவற்றைக் காட்டினும் சமீபகாலத்தன வாதலின், அவையிரண்டும் அத்துணை அதிகமாகப் புரட்டப்பட்டுக் கிடக்கவில்லை. எனவேதான், இவற்றில் காணப்படும் இறுதிநபியவர்களின் அவதாரச் சார்பான தீர்க்க தர்சனங்கள் அத்துணை மோசமாக மாற்றப்பட்டில்லை யென்று அறிஞர்கள் அறைகின்றார்கள்; இவற்றையேதாம் :குர்ஆன் ஷரீ'பும் அடிக்கடி குறிப்பிட்டுக் காட்டிக்கொண் டிருக்கின்றது. எனவே, இவ்வுலகிலுள்ள எல்லாப் பழைய வேதங்களையும் ஆதிமுதல் ஆராய்ச்சி செய்யாது, :குர்ஆனுக்கு முன்னே தோன்றிய பைபிள் வேதத்தைமட்டுமே யாம் ஈண்டெடுத்துச் சிறிது ஆராய்ந்து பார்ப்போம்.

ப'னீ இஸ்ராயீல், ப'னீ இஸ்மாயீ'ல் ஆகிய இருபெரும் மக்கட் பிரிவினர்களும் நபி இப்'ராஹீம் என்னப்படும் ஒரே மூலபிதாவிலிருந்தே தான் உற்பத்தி யாயினார்கள். அந்த இப்'ராஹீம் (அ'லை) நபியவர்களுக்கு ஆண்டவனால் அருளப்பட்ட அந்த வேதவெளிப்பாட்டின் பிரதியொன்றும் இதுகாலை நமது கரத்திடைக் கிடைக்காமற் போயினும், பைபிள் பழைய ஏற்பாட்டிலிருந்து, இப்'ராஹீம் நபியவர்களின் புத்திரர்களான இஸ்மாயீ'ல் இஸ்'ஹா:க் ஆகிய இருவரின் எதிர்கால சம்பவம் இத்தன்மைத்தாயிருக்குமென்னும் தீர்க்கதர்சனத்தின் பெருமையானது இப்படிப்பட்டதென்பதை ஒருவாறு நாம் விளக்கமுறத் தெரிந்து கொள்ளுகிறோம்:
"இன்னம், இப்'ராஹீமை அவருடைய றப்' ஒருசில வசனங்களைக்கொண்டு சோதனை செய்தபொழுது, அவர் அவற்றினைப் பூர்த்தி செய்துவிட்டார்; 'நிச்சயமாக, நான் நும்மை மனிதர்களுக்குத் தலைவராகச் செய்கிறவனாயிருக்கிறேன்,' என்று அவன் — (ஆண்டவன்) கூறினான். (அதற்கு

இப்'ராஹீம்) 'இன்னம் என்னுடைய சந்ததியிலிருந்து?' என்று கூறி (வினவி)னர். (அதற்கு அல்லாஹ்) 'என்னுடைய உறுதிமொழி யொப் பந்தம் அநியாயக் காரர்களைச் சாரமாட்டாது,' என்றுரைத்தான்"— என்னும் :குர்ஆன் ஷரீ'பின் திருவாக்கியமும் (2 : 124) அப்படிப்பட்ட தீர்க்க தர்சனத்தின் உண்மையையே உறுதிப்படுத்துகின்றது. இதனால் இப்'ராஹீம் நபியின் (அ'லை) சந்ததியார்க ளுக்கும் அத்தகைய தீர்க்க தர்சனம் அருளப்படு மென்றும், ஆனால், அவர்கள் அநீதியுள்ளவராக மாறிவிடுவார்க ளாயின், அதன்பின்பு அப்படிப்பட்ட தீர்க்கதர்சன சக்தி அவர்களை விட்டுப் பிடுங்கிவிடப்படு மென்றும் நாம் தெரிந்துகொள்ளு கிறோம். இவ்வாறே கஃ'பாவில் நின்றுகொண்டு நபிமார்கள் இப்'ராஹீம் இஸ்மாயீ'ல் ஆகிய இவ்விருவராலும் குறையிரந்து கேட்கப்பட்ட பிரார்த் தனையும் அதே விதமான முடிபைத்தான் சுட்டிக்காட்டிக்கொண் டிருக் கிறது: "எங்களுடைய றப்'பே! இன்னம், அன்னவர்களுக் குள்ளிருந்து, அன்னவர்கள் முன்னே உன்னுடைய அறிவிப்புக்களை ஓதிக்காண்பித்தும், அவர்களுக்கு வேதத்தையும் ஞானத்தையும் கற்றுக்கொடுத்தும், அவர் களைப் புனிதமாக்கியும் வைக்கும் ஒரு தூதரை அவர்கள் மத்தியிலே நீ எழுப்பி வைக்கக் கடவாய்!"—(2 : 129). இதே விதமான தேவ வாக் குறுதி யொன்று, முதற் குழந்தை இஸ்மாயீ'லும் இரண்டாவது குழந்தை இஸ்'ஹா:க்கும் பிறப்பதற்கு முன்னரே நபி இப்'ராஹீம் அவர்களுக்கு அளிக்கப்பட்டிருந்த தென்னும் விஷயம் இவ்வாறு பைபிள் பழைய ஏற்பாட்டின் ஆதியாகமத்திலும் பொறிக்கப்பட் டுள்ளது: "நான் உன்னைப் பெரிய ஜாதியாக்கி, உன்னை ஆசீர்வதித்து, உன்பேரைப் பெருமைப் படுத்துவேன்; நீ ஆசீர்வாதமாய் இருப்பாய். உன்னை ஆசீர் வதிக்கிறவர்களை ஆசீர்வதிப்பேன்; உன்னைச் சபிக்கிறவனைச் சபிப்பேன்; பூமியிலுள்ள வம்சங்க ளெல்லாம் உனக்குள் ஆசீர்வதிக்கப்படும்."— (ஆதி. 12 : 2, 3)

மேற்கூறிய பைபிள் வசனத்தைச் சற்றே உற்று நோக்குவாருக் கெல்லாம், அங்கே குறிப்பிடப்பட் டிருக்கும் தீர்க்கதர்சன மானது ப'னீ இஸ்மாயீ'ல் வம்சத்தையே சுட்டிக் காட்டுமென்னும் விஷயம் செவ்வனே தெரிந்து கொள்ளக் கிடக்கு மென்பதில் சற்றும் சந்தேகமில்லை. என்னெனின், இன்றளவும் இவ்வுலக முழுதும் எம் முஸ்லிம்கள் மட்டுமே தாம் நபி இப்'ராஹீம் அவர்கள்மீது ஒவ்வொரு நாளும் ஐந்துவேளையும் தந் தொழுகையின் பொழுது சுமூகமான பிரார்த்தனை புரிந்து வருகிறார்கள். "ஏ ஆண்டவனே! இப்'ராஹீம் அவர்கள்மீதும், அவர்களுடைய மெய்யான பக்தர்கள் மீதும் நீ ஆசி கூறி, மேலாக்கியதே போல், மு'ஹம்மத்' அவர்கள் மீதும் அவர்களுடைய மெய்யான பக்தர்கள் மீதும் ஆசிகூறி மேலாக்கி வைக்கக் கடவாய்........ஏ ஆண்டவனே! இப்'ராஹீம் அவர்கள் மீதும், அவர்களுடைய மெய்யான பக்தர்கள் மீதும் நீ ஆசீர்

வாதம் புரிந்ததேபோல், மு‘ஹம்மத்’ அவர்கள் மீதும், அவர்களுடைய மெய்யான பக்தர்கள் மீதும் ஆசீர்வாதம் புரியக்கடவாய்.........” என்பது எம் முஸ்லிம்களின் ஒரு முக்கியமான பிரார்த்தனையாகும். பிறகு பைபிள் ஆதியாகமம் 17 : 20-இல் பின் வருமாறு இஸ்மாயீ’லின் பெயர்குறித்து ஒரு விஷயம் காணப்படாநின்றது :—

“இஸ்மவேலுக்காகவும் நீ செய்த விண்ணப்பத்தைக் கேட்டேன் ; நான் அவனை ஆசீர்வதித்து, அவனை மிகவும் அதிகமாகப் பலுகவும் பெருகவும் பண்ணுவேன் ; அவன் பன்னிரண்டு பிரபுக்களைப் பெறுவான் ; அவனைப் பெரியஜாதி யாக்குவேன்.”

இவ்விடத்தில் இஸ்மாயீ’லையும் இவருடைய சந்ததியையும் குறித்துச் செய்யப்பட்டுள்ள தீர்க்க தர்சனமானது, முன் இப்’ராஹீமுக்கும் அவருடைய சந்ததிக்கும் கூறப்பட்டுள்ள தீர்க்க தர்சனத்தையே முற்றும் ஒத்திருக்கின்றது. ஆதியாகமத்தில் காணப்படும் தெய்வ தீர்க்க தர்சனம் இருவகையாகக் காணப்படும்: அவற்றுள் ஒன்று, ஆதி. 17 : 10, 11-இல் இவ்வாறு எழுதப்பட்டிருக்கிறது :—

“எனக்கும் உங்களுக்கும், உனக்குப் பின்வரும் உன் சந்ததிக்கும் நடுவே உண்டாகிறதும், நீங்கள் கைக்கொள்ள வேண்டியதுமான என் உடன்படிக்கை என்னவென்றால், உங்களுக்குள் பிறக்கும் சகல ஆண் பிள்ளைகளும் விருத்தசேதனம் பண்ணப்பட வேண்டும்: உங்கள் நுனித் தோலின் மாம்சத்தை விருத்தசேதனம் பண்ணக் கடவீர்கள். அஃது எனக்கும் உங்களுக்கு முள்ள உடன் படிக்கைக்கு அடையாளமா யிருக்கும்.”

இங்குக் குறிக்கப்பட்டிருக்கும் விருத்தசேதன மென்பது (க’த்னு—“ஸுன்னத்”) சிறிதுகாலமட்டும் ப’னீ இஸ்ராயீ’ல் வர்க்கத்துக்கும், ப’னீ இஸ்மாயீ’ல் வர்க்கத்துக்கும் பொதுவாகவே நடைபெற்று வந்தது. ஆனால், இன்று இவ்வழக்கமானது மு‘ஹம்மத்’நபியின் (சல்) ஞானசந்ததியாகிய, இவ் வுலகின்கண் திகழ்ந்து நிற்கும் எம் 60 கோடி முஸ்லிம்களிடத்து மட்டுமேதான் அனுஷ்டானத்தில் இருந்து வருகிறது. ப’னீ இஸ்ராயீல் வர்க்கத்தில் ஒரு சிலர்மாட்டு இவ் வழக்கம் இன்னமும் இருந்து வருகிறதென்று எவரேனும் கூறத்துணிவராயின், அன்னவரின் தொகையானது மிகமிக அற்பமாகவே யிருக்குமென்பது வெளிப்படை. எனவே, இற்றைநாளில் அந்த இப்’ராஹீம் நபியுடன் ஆண்டவன் அன்று செய்து கொண்ட உறுதிப் பாட்டின் உண்மையான அனுஷ்டானமென்பது எம் முஸ்லிம்க ளிடத்தேதான் முழுவதும் காணப்படுகிற தென்று கூறுவதில் ஒன்றும் பிழை யிருத்தற்கு நியாயமில்லை. என்னெனின், இவர்களே இவ்வுலக முழுதிலும் விருத்தசேதன வழக்கத்தை முற்றமுற்ற இன்றளவும் மேற்கொண் டொழுகுவோராய்க் காணப்படாநின்றார்கள்.

அந்த உடன்படிக்கையின் இரண்டாவது பாகம் இவ்வாறு காணப்படுகிறது:— "உனக்கும் உனக்குப் பின்வரும் உன் சந்ததிக்கும் நான் தேவனா யிருக்கும்படி எனக்கும் உனக்கும், உனக்குப் பின் தலைமுறை தலைமுறையாக வரும் உன் சந்ததிக்கும் நடுவே என் உடன்படிக்கையை நித்திய உடன்படிக்கையாக ஸ்தாபிப்பேன். நீ பரதேசியாய்த் தங்கிவருகிற கானான் தேச முழுவதையும், உனக்கும் உனக்குப் பின்வரும் உன்சந்ததிக்கும் நித்திய சுதந்தரமாகக் கொடுத்து, நான் அவர்களுக்குத் தேவனா யிருப்பேன் என்றார்."— (ஆதி. 17 : 7, 8)

இதுவும், ஆண்டவன் இப்'ராஹீம் நபியுடன் செய்துகொண்ட உடன்படிக்கையை இன்றளவும் இவ்வுலகில் யார் மேற்கொண்டு ஒழுகுகிறா ரென்னும் உண்மையைக் கண்டுபிடித்தற்குரிய ஓர் உயரிய அடையாளமாகவே அமைந்து கிடக்கின்றது. என்னெனின், எங்கள் இறுதி நபியாகிய மு'ஹம்மத்' முஸ்த'பா ரஸூல் (சல்) அவர்கள் இவ்வுலகில் திருவவதாரம் புரிந்தபின்னர் அந்த வாக்களிக்கப்பட்ட பூமியானது ப'னீ இஸ்ராயீல் வம்சத்தாரிடமிருந்து பிடுங்கப்பட்டு, ப'னீ இஸ்மாயீ'ல் வம்சத்தாரிடம் (முஸ்லிம்களிடம்) ஒப்படைக்கப்பட்டு, இன்றளவும் சென்ற பதின்மூன்று நூற்றாண்டுக ளாகவே இவர்கள் கைவயமே இருந்துவருகிற தென்பது தேச சரித்திரத்தில் காணப்படும் ஒரு மறுக்கமுடியாத உண்மையேயாகும். ஐரோப்பிய கிறிஸ்தவர்களால் பல்லாண்டு பல்லாண்டுகள் மட்டும் நிகழ்த்தப்பட்டுவந்த அந்த எட்டு (அநாகரிக)ச் சிலுவை யுத்தங்களும் அந்தப் புண்ணியபூமியை முஸ்லிம்க ளிடத்திருந்து பிடுங்குவதற்காகவே தொடுக்கப்பட்டன. அந்தப் புண்ணிய பூமியானது சிறிதுபொழுது முஸ்லிம்களின் கையைவிட்டு நீங்கியபோதினும், பிறகு உடனே அவர்கள் கைவயமே மீண்டும்வந்து சேர்ந்துவிட்டது. இவ்வாறே இனியும் இப்பூமி இவர்களுடைய கைப்பிடியைவிட்டு நழுவுமாயின், மீண்டும் அந்த ஆண்டவனது உடன்படிக்கையின் படியே அது முஸ்லிம்களின் கைவயமே வந்து சேர்ந்துவிடும். எனவே, இந்தப் புண்ணியபூமியின் ஆதிக்யமுழுதும் என்றென்றும் எம் முஸ்லிம்கள் கைவயமே இருந்துவரு மென்பது திண்ணமேயாம். இவ்வாறு இப்'ராஹீம் நபி அவர்களுடன் ஆண்டவன் செய்துகொண்ட இரண்டு நிபந்தனைகளும் — விருத்தசேதனமும், புண்ணியபூமியின் சுதந்தரமும் — எம் முஸ்லிம்க ளிடத்திலேயே இருந்து வருதலினால், மு'ஹம்மத்' முஸ்த'பா ரஸூல் (சல்) அவர்களும், அவர்களுடைய ஞான சந்ததியுமேதாம் அந்த இப்'ராஹீம் நபியவர்களுக் களிக்கப்பட்ட தீர்க்கதர்சனத்தின் உண்மையான பிரதிநிதிகளென்று நாம் நன்கு தெரிந்து கொள்ளுகிறோம். எனவே, இவர்களே அந்த வாக்களிக்கப்பட்ட இறுதி நபியாய் விளங்காநின்றார்கள். எனவே, இவர்கட்குப் பின்னால் இனியொரு நபி— புதியவரோ, பழையவரோ— அவதரிக்கத் தேவையில்லை யென்றறிக.

நம் பரிசுத்த நபிகள்நாயகம் மு‘ஹம்மத்’ முஸ்த‘பா ரஸூல் (சல்) அவர்களுடைய திருவவதாரத்தைப் பற்றிய இரண்டாவது தீர்க்கதர்சனம் மூஸாநபி அவர்கள் மூலமாக இவ்வாறு வெளிப்படுத்தப் பட்டுள்ளது :—

“உன்னைப்போல ஒரு தீர்க்கதரிசியை நான் அவர்களுக்காக அவர்கள் சகோதரரிலிருந்து எழும்பப்பண்ணி, என் வார்த்தைகளை அவர்வாயில் அருளுவேன்; நான் அவருக்குக் கற்பிப்பதை யெல்லாம் அவர்களுக்குச் சொல்லுவார்.”— (உபாகமம் 18 : 18)

இந்தத் தீர்க்க தர்சனமானது வெள்ளிடை விலங்கலே போல் அத்துணைத் தெள்ளிதாய்க் காணக்கிடக்கின்றது. மோசேக்கு (மூஸா நபியவர்கட்கு)ப் பின்னே நெடுங்கால பரியந்தம் ஈ‘ஸாநபி — இயேசு கிறிஸ்து — ஜனனமாகும் காலம்வரை இடையில் வந்த எந்தவிதமான நபியும் மேற்கூறிய தீர்க்கதரிசனத்தில் குறிப்பிடப்பட்டுள்ள அந்த நபியென்று தம்மைக் கூறிக்கொள்ளத் துணியவில்லை. என்னெனின், மூஸா(அ’லை)அவர்களுக்குப் பின்னே தோன்றிய எல்லா இஸ்ரவேல் கூட்டத் தீர்க்கதரிசிகளும் உண்மையில் அந்த மூஸாநபியின் கட்டளைகளையே நிறைவேற்றி வைக்கத் தோன்றியவர்க ளானமையின், அவர்களுள் ஒருவரும் மூஸாவைப்போன்ற வேறொரு நபியாய் அவதரித்திருத்தல் முடியாது. மேலே கூறப்பட்டுள்ள தீர்க்கதர்சனம் அக்கால யூதர்களுள் எல்லாருக்கும் தெரிந்த ஒரு சர்வசாதாரணமான விஷயமாகவே காணப்பட்டு வந்தது; இதனால்தான் அவர்கள் ஒவ்வொரு தலைமுறையிலும் மூஸாவைப் போன்ற அந்தத் தீர்க்கதரிசி அவதரித்து விட்டனரோ வென்று அதிக ஆவலுடனே எதிர்பார்த்து நின்றனர். இவ் விஷயத்தை யோவான் (எ‘ஹ்யா) ஞானஸ்நானருக்கும், அவரை நோக்கி, “நீர் யார்?” என்று கேட்க வந்தவர்களுக்கும் இடையில் நடைபெற்ற சம்பாஷணையிலிருந்து மிக்க விளக்கமாக நாம் தெரிந்துகொள்ளக் கடவோம் :—

“‘நான் கிறிஸ்து அல்ல’ என்றும் அறிக்கை யிட்டார். அப்பொழுது அவர்கள், ‘பின்னை யார்? நீர் எலியாவா?’ என்று கேட்டார்கள். அதற்கு ‘நான் அவரல்ல’ என்றார். ‘நீர் அந்தத் தீர்க்கதரிசியா?’ என்று கேட்டார்கள். அதற்கும் அல்ல என்றார்.”— (யோவான் 1 : 19—21)

இதனால் அக்கால யூதர்கள் மூன்றுவிதமான தீர்க்கதரிசிகளை ஆவலுடன் எதிர்பார்த் திருந்தனரென்று நாம் விளக்கமாகத் தெரிந்துகொள்ளுகிறோம் : முதன் முதலாக எலியா என்னும் தீர்க்கதரிசி மீண்டும் தமக்குரிய பூதவுடம்புடன் திரும்பிவர வேண்டுமென்று எதிர்பார்த் திருந்தனர்; இரண்டாவதாகக் கிறிஸ்துவை எதிர்பார்த் திருந்தனர்; மூன்றாவதாக அந்தத் தீர்க்கதரிசியானவர் அதிக ஆவலுடனே எதிர்பார்க்கப்பட்டு வந்தனர்; அவர் இப்படிப்பட்டவரென்னும் விருத்தாந்தம் எல்லாருக்கும் மிகநன்றாக அறியக்கிடந்தமையான், அவருக்குரிய விசேஷ அடையாளமொன்றும் குறிப்பிட்டுக் கூறப்பட்டில்லை; “அந்தத் தீர்க்கதரிசி” யென்

பதே, மூஸாவைப் போன்ற வேறொரு தீர்க்கதரிசி யென்பதற்குரிய போதிய சான்றாய்க் காணப்பட்டது. என்னெனின், மூஸாவைப் போன்ற ஒரு தீர்க்கதரிசியானவர் அக்காலத்தில் அவதரித்தல் அத்தியாவசிய மென்னும் நம்பிக்கையானது அத்துணை அதிகமாக அந்த யூதர்களுக்குள்ளே நன்கு நிலைநின்று பயின்று வந்தது. எனவே, இயேசு கிறிஸ்து தோன்றுவதற்கு முன் அந்த யூதர்கள் மேற்கூறியபடி இரண்டாவது முறையாக எலியாவையும், கிறிஸ்துவையும், மோசேயைப் போன்ற மற்றொரு தீர்க்கதரிசியையும் எதிர்பார்த்துக்கொண் டிருந்தார்களென்று ஈண்டு நாம் மிகத் தெளிவாய்த் தெரிந்து கொள்ளுகிறோம். ஆனால், அச்சமயம் இயேசு கிறிஸ்துவின் அவதாரத்தினாலும், அவருக்குமுன் யோவான் ஞானஸ்னானன் தோன்றியதனாலும் முதலிரண்டு தீர்க்கதரிசிகளும் அவதரிக்க வேண்டிய தீர்க்க தர்சனம் பூர்த்தியாய்விட்டது. இயேசுவோ, தம்மைக் கிறிஸ்து வென்றும், யோவான் ஞானஸ்னானனே எலியாவின் தத்துவத்திலும் ஆவியிலும் தோன்றியவரென்றும் கூறிக்கொண்டிருந்தார். ஆனால், அவ்விருவருள் எவரும் தம்மை மூஸாவைப் போன்ற வாக்களிக்கப்பட்ட அந்தத் தீர்க்க தரிசி யென்று உரிமை கொண்டாட வில்லை; அவ் விருவரையும் அக்காலத்தில் ஏற்றுக்கொண்டவரும் அவ்விருவருள் ஒருவரையும் "அந்த வாக்களிக்கப்பட்ட" தீர்க்கதரிசி யென்று ஒத்துக்கொண்டு விடவில்லை. இயேசுகிறிஸ்துவுடன் இஸ்ரவேல் குடும்பத்தில் தீர்க்கதரிசிகள் அவதரிப்ப தென்பது அஸ்தமித்துவிட்ட தென்பதை இவ்வுலகம் நன்கறிந்து கொண்டுதா னிருக்கிறது. எனவே, மோசேயைப் போன்ற வேறொரு தீர்க்கதரிசி அவதரித்துத்தான் ஆகவேண்டு மென்னும் பைபிளின் பழைய ஏற்பாட்டின் உபாகமத்தி லுள்ள தீர்க்க தர்சனமானது ப'னீ இஸ்ராயீல் சம்பந்தப்பட்டவரையில் பூர்த்தியாகாமலே நின்றுவிட்ட தென்பது ஈண்டு மிகச் செம்மையாகவே புலப்படக் கிடக்கின்றது. அதன்பின்பு நிகழ்வுற்ற இவ்வுலக சம்பவங்களை யெல்லாம் கூர்ந்து நோக்குவோ மாயின், இத் தரணியின்மீது அவதரித்துள்ள வேறெவரும் (மு'ஹம்மத்' நபியவர்களைத் தவிர்த்து) மூஸாவைப்போன்ற "அந்த வாக்களிக்கப்பட்ட நபி" யென்று கூறிக்கொள்ளத் துணிந்ததில்லை; இன்னம், எமது :குர்ஆன் ஷரீஃபைத் தவிர்த்து வேறெந்த வேதமும், இவ்வுலகில் அவதரித்த இன்னாரினையாருடைய ஜனனத்தால் அந்த மூஸாவுக் களிக்கப்பட்ட தீர்க்கதர்சனம் பூர்த்தியாயிற் றென்று கூறத் துணியவில்லை. இன்றுகாறும் நடைபெற்று வந்திருக்கும் உலகநிகழ்ச்சியும் இதையே வற்புறுத்துகின்றது. மூஸாவோ, இப்பூவுலகில் ஒரு சட்ட நிரூபணராய் விளங்கினார்; அவ்வாறாகத்தான் மு'ஹம்மத்' நபியவர்களும் ஒரு மாபெரும் சட்ட நிரூபணராய்க் காணப் படுகின்றார்கள். ப'னீ இஸ்ராயீல் வர்க்கத்தில் தோன்றிய மூஸாவைத் தவிர்த்து வேறெந்த நபிமாரும் புதிதாகச் சட்ட நிரூபணம்—(ஒரு ஷரீஅ'த்தைச்) செய்துவைக்க முன்வரவில்லை. ஆனால், மு'ஹம்மத்' நபியவர்கள் (சல்)

மூஸாநபி (அ'லை) அவர்களைப்போலச் சட்ட நிரூபணராய் விளங்கியமையான், அவர்களைப்போன்ற " அந்த வாக்களிக்கப்பட்ட " தீர்க்கதரிசி யென்பதில் கிஞ்சித்தும் சந்தேகமே யில்லை. இக் காரணத்தினால்தான், " நாம் 'பிர்அ'வ் னிடத்தே ஒரு தூதரை அனுப்பி வைத்ததே போன்று, நிச்சயமாக ஒரு தூதரை நாம் உங்களிடத்தே அனுப்பியிருக்கிறோம்," என்று எமது :குர்ஆன் ஷரீ'பும் (73 : 15—இல்) கூறி யிருக்கின்றது. " இஸ்ரவேல் குலத்தில் தோன் றிய சாக்ஷி யொருவர் அவரைப் போன்ற ஒருவர் அவதரிப்பா ரென்று சாக்ஷியங் கூறியுள்ளார்," என்னும் வாக்கியத்தைக் கொண்டு எமது திரு மறையானது யூதர்களின் கவனத்தை உபாகமத்தி லுள்ள தீர்க்கதர்சனத் தின் பக்கல் ஈர்த்துக் காண்பிக்கின்றது.

" அவர்கள் சகோதரரி லிருந்து " என்று காணப்படும் அந்த உபாகமத் தின் தீர்க்கதர்சன வாசகமே இனி வரப்போகும் " அந்த வாக்களிக்கப் பட்ட " தீர்க்கதரிசி யானவர் ப'னீ இஸ்ராயீல் வர்க்கத்திலிருந்து தோன்றா மல், அன்னவரின் சகோதரரான ப'னீ இஸ்மாயீ'ல் வர்க்கத்திலிருந்தேதான் தோன்ற வேண்டுவது அத்தியாவசிய மென்னும் சத்தியத்தை நன்கு விளக்கிக் காண்பித்துக்கொண் டிருக்கிறது. எனவே, பைபிள் உபாகமத் தில் காணப்படும் அந்த மூஸாவின் தீர்க்கதர்சனமானது ப'னீ இஸ்மாயீ'ல் வம்சத்தில் அவதரித்த எம்முடைய இறுதிநபி மு'ஹம்மத்' முஸ்த'பா ரஸூல் (சல்) அவர்களையே சுட்டிக்காட்டி, அன்னவரின் அவதார விசேஷத் தாலேயே அது பூர்த்தியாய் விட்டதென்பதையும் இனியில்லா வண்ணம் எல்லோருக்கும் எடுத்தோதி யிருக்கின்றதென்று நாம் மிகச் செம்மையாக விளங்கிக்கொண்டு விட்டோம்.

மீக்கூறிய உபாகமத்தில் மூன்றாவதாக மற்றொரு தீர்க்கதர்சனமும் மிகத் தெளிவாய்க் காணப்பட்டுக்கொண் டிருக்கிறது: " கர்த்தர் சீனாயி லிருந்து வந்து அவர்களுக்குமுன் சீரிலிருந்து எழும்பினார் ; அவர் பாரானி லிருந்து விளங்கினார் ; அவர் பதினாயிரம் பக்தர்களுடன் வந்து சேர்ந்தார் ; அவரது வலக்கரத்தி லிருந்து அவர்களுக்காக ஜோதிபோன்ற சட்டமும் வெளியாயிற்று," என்று அந்தத் தீர்க்கதர்சனம் கூறிக்கொண் டிருக்கிறது. " சீனாயிலிருந்து வருவ " தென்பது மூஸாநபி அவர்களுடைய அவதாரத் தைச் சுட்டிக் காட்டிக்கொண் டிருக்கிறது ; "சீரிலிருந்து எழுவ" தென்பது இயேசுவின் ஜனனத்தைக் குறிக்கும்; என்னெனின், இப்பெயர் பூண்ட இடங்களிலேதாம் அந்த நபிமார்களிருவரும் தங்களுக்குரிய ஞானோதயத் தைப் பெற்றுக் கொண்டார்கள். ஆனால், "பாரான்" என்பது 'ஹிஜா'ஜின் பண்டைப் பெயரென்பதில் கிஞ்சித்தும் சந்தேகமென்பதே யில்லை ; இவ் விடத்தேதான் ப'னீ இஸ்மாயீ'ல் வம்சத்தில் தோன்றிய திருநபியாம் பெரு நபி மு'ஹம்மத்' முஸ்த'பா ரஸூல் (சல்) அவர்கள் திருவவதாரம் புரிந் திருக்கின்றார்கள். இன்னம், " அவர் பதினாயிரம் பக்தர்களுடன் வந்துசேர்ந் தார்," என்பதும், அஃது இவ்வுலகில் இன்னாரைத்தாம் சுட்டிக்காட்டுகிற

தென்னும் விசேஷமும் சற்றே உற்று நோக்குவோருக் கெல்லாம் மிகமிகச் செவ்விதாய் விளங்கக் கிடக்கின்றது. இத்தரணியில் இதுகாறும் அவதரித் திருக்கும் சுத்த வீரர்களுள் ளெல்லாம் எம் பரிசுத்தத் திருநபி மு'ஹம்மத்' முஸ்த'பா ரஸூல் (சல்) அவர்கள் ஒருவரே வெற்றிமுரசுடன் பதினுயிரம் பக்த கோடிகள் புடைசூழ வாகைமாலை சூடியவராய் மக்கமா நகருக்குள் பிரவேசித்தார்க ளென்பது உலகமறியக் கிடக்கும் ஒரு பிரபல சரித்திரச் சான்ருகும். இவர்களால் இவ்வுலகினருக் களிக்கப்பட்ட சட்டமானது இன்றளவும் பை'ல'ா (ஜோதிமய மானது) என்றே அழைக்கப்பட்டு வருகிறது. என்னெனின், சமூகம், ஒழுக்கம், மதம் ஆகிய இம்மூன்று விஷயங்களுக்கும் அத்தியாவசியமான எல்லாத் துறைகளுக்கும் வேண்டிய எல்லா நுட்பப் பொருள்களையும் இப்பெரியாரின் திருமறையே இனியில்லா வண்ணம் மிகத் தெளிவாய் விளக்கிக்கொண் டிருக்கின்றது. எனவே, மேற்கூறிய தீர்க்கதர்சனத்தி லுள்ள "அவரது வலக்கரத்தி லிருந்து அவர் களுக்காக ஜோதி மயமான சட்டமும் வெளியாயிற்று," என்னும் பகுதி யானது :குர்ஆன் ஷரீ'பின் இத் திவ்வியமான பெறுதற்கரிய பெருமை யினையே சுட்டிக் காட்டிக்கொண் டிருக்கிற தென்பதில் எட்டுணையும் ஐய மின்றன்றே!

மற்றொரு நான்காவது தீர்க்கதர்சனமானது, அந்த வாக்களிக்கப்பட்ட இறுதித் தீர்க்கதரிசியின் திருவவதார ஸ்தலமானது அரப்நாடா யிருக்கு மென்றே வெளிப்படையாய்க் கூறியிருக்கின்றது: "அரபியாவின் பாரம். திதானியராகிய பயணக் கூட்டங்களே, நீங்கள் அரபியாவின் காடுகளில் இராத் தங்குவீர்கள். தேமா தேசத்தின் குடிகளே, நீங்கள் தாகமா யிருக் கிறவர்களுக்குத் தண்ணீர் கொண்டு போய், தப்பி ஓடுகிறவர்களுக்கு அப்பங் கொடுக்க எதிர்கொண்டு போங்கள். அவர்கள், பட்டயங்களுக்கும், உருவின கட்கத்துக்கும், நாணேற்றின வில்லுக்கும், யுத்தத்தின் கொடு மைக்கும் தப்பி ஓடுகிறார்கள்."— (ஏசாயா 21 : 13—15)

முதன் முதலாக நோக்குமிடத்து, "அரபியா" என்னும் சொல்லே நமக்குப் போதுமான சாக்ஷியமாகக் காணப்படாநின்றது. அன்றியும், "தப்பி ஓடுகிறவர்" என்னும் சொற்றொடரும் அந்தத் தீர்க்க தர்சனத்தின் குறிப்பையே நன்கெடுத்துக் காண்பிக்கின்றது. உலக சரித்திரத்தின் சம்பவங்களை யெல்லாம் ஒவ்வொன்ருக நன்கு எடுத்துப் பன்னிப் பன்னிப் பரிசீலனை செய்து பார்க்குங்கால், அவற்றுள்ளே ஒரேஒரு ஓட்டந்தான் அதிகமான பிராபல்யத்தை யடைந்திருப்பதாக நாம் கண்டுகொள்வோம்: அதுதான் மு'ஹம்மத்'நபி யவர்கள்(சல்) மக்காவைவிட்டு மதீனுவுக்கு ஹிஜ்ரத் சென்றதாகும்; அதிலிருந்துதான் முஸ்லிம்களின் ஆண்டுக்கணக்கும் ஆரம்பமாயிற்று; அதிலிருந்தேதான் இஸ்லாத்தின் வெற்றி, இல்லை, இவ் வுலகத்தின் நாகரிகப் போக்கே புத்துயிர் பெற்றெழத் தலைப்பட்டதென்று கூறலாம். இன்னம், "உருவின கட்கத்துக்குத் தப்பி ஓடுகிறார்," என்னும்

வாக்கியந்தான் இங்கு நாம் அதிகம் கவனிக்க வேண்டிய அத்தியாவசிய மான தீர்க்க தர்சனமாகும். என்னெனின், நபிகள் நாயகத்தின் இல்ல மானது, அன்றிரவு அப்பெருமானுர் வெளியில் வந்தவுடன் அவர்கள்மீது எல்லோரும் ஒருமிக்கத் தாவிவீழ்ந்து குத்திக் கொலேசெய்யும் பொருட்டு நிச்சயமாக உருவப்பட்ட வாளாயுதங்களைத் தங்கள் கரத்தில் ஏந்தியவர் களாய்த் தையாராக வந்து நின்ற இரத்தவெறி பிடித்த அந்த மக்கத்துக் கு'ப்'பார்களால் சூழப்பட்டிருந்த சமயத்திலேதான் எம்பெருமானவர்கள் அவ்விடுதியை விட்டு வெளிப்போந்து, அன்றிரவே மதீனவை நோக்கிப் புறப்பட்டார்கள். உலக சரித்திரத்தின் ஏடுகளை யெல்லாம் ஒவ் வொன்ருகப் புரட்டிப் புரட்டிப் பார்த்தபோதினும், இத்தகைய மற்ருேர் உதாரணத்தை நீங்கள் கண்டுகொள்ள மாட்டீர்கள். இப்படிப்பட்ட உலக மகாபுரட்சியை உண்டு பண்ணத்தக்க வேறெந்த ஹிஜ்ரத்தும் இவ் வுலகினில் இதுகாறும் வேறெங்கும் நிகழ்வுற்றதே யில்லை. எதிரிகளின் உருவிய வாளினின்று வேறெந்த நபியும் இவ்வாறு தப்பிப் பிழைத்ததில்லை. இவ்விரு விஷயங்களும், அந்த இறுதிநபி அவதரிக்க வேண்டிய ஜனன பூமியானது "அரபியா" என்னும் விஷயத்துடனே சேர்ந்து, இறுதியில் அவதரிக்க வேண்டிய அந்த வாக்களிக்கப்பட்ட தீர்க்கதரிசி யானவர் மு'ஹம்மத்' (சல்) நபிதானென்று நாம் மகாநிச்சயமாக உணர்ந்துகொள்ளு கிருேம்.

த'ாவூத்'நபி, ஸுலைமான் நபி, ஆபகூக் தீர்க்கதரிசி, ஆகாய் தீர்க்க தரிசி முதலிய ப'னீ இஸ்ராயீல் தீர்க்கதரிசிக ளெல்லாரும் முன்னறிக்கை செய்திருக்கும் தீர்க்கதர்சனங்களில் அநேக மநேகம் குறிப்புக்க ளெல்லாம் இந்த வாக்களிக்கப்பட்ட இறுதிநபியின் திருவவதாரத்தைப் பற்றியே கூறுகின்றன. அத்தகைய தீர்க்கதர்சனங்க ளனைத்தையும் ஈண்டெடுத்து வியவகரிக்காமல், அந்த ப'னீ இஸ்ராயீல் தீர்க்கதரிசிகளுள் இறுதியாய்த் தோன்றிய இயேசுகிறிஸ்துவின் தீர்க்கதர்சனத்தை மட்டுமே ஈங்கெடுத்து எழுதிக் காண்பிப்பாம்:—

"நீங்கள் என்னிடத்தில் அன்பா யிருந்தால், என் கற்பனைகளைக் கைக் கொள்ளுங்கள். நான் பிதாவை வேண்டிக் கொள்ளுவேன்; அப்பொழுது என்றென்றைக்கும் உங்களுடனே கூட இருக்கும்படிக்குச் சத்திய ஆவியாகிய வேருெரு தேற்றரவாளனை அவர் உங்களுக்குத் தந்தருளுவார். உலகம் அந்தச் சத்திய ஆவியானவரைக் காணுமலும் அறியாமலும் இருக்கிறபடியால் அவரைப் பெற்றுக்கொள்ள மாட்டாது; அவர் உங்களுடனே வாசம் பண்ணி உங்களுக்குள்ளே இருப்பதால், நீங்கள் அவரை அறிவீர்கள்."— (யோவான் 14 : 15—17)

"என் நாமத்தினலே பிதா அனுப்பப் போகிற பரிசுத்த ஆவியாகிய தேற்றரவாளனே எல்லாவற்றையும் உங்களுக்குப் போதித்து, நான்

உங்களுக்குச் சொன்ன எல்லாவற்றையும் உங்களுக்கு நினைப்பூட்டுவார்."— (யோவான் 14 : 26)

"நான் உங்களுக்கு உண்மையைச் சொல்லுகிறேன்; நான் போகிறது உங்களுக்குப் பிரயோஜனமா யிருக்கும்; நான் போகாதிருந்தால், தேற்றரவாளன் உங்களிடத்தில் வரார்; நான் போவேனேயாகில் அவரை உங்களிடத்திற்கு அனுப்புவேன்."— (யோவான் 16 : 7)

"இன்னும் அநேக காரியங்களை நான் உங்களுக்குச் சொல்ல வேண்டியதா யிருக்கிறது; அவைகளை நீங்கள் இப்பொழுது தாங்கமாட்டீர்கள். சத்திய ஆவியாகிய அவர் வரும்போது, சகல சத்தியத்திற்குள்ளும் உங்களை நடத்துவார்."— (யோவான் 16 : 12, 13)

மேற்கூறிய தீர்க்கதர்சனங்களில் காணப்படும் வார்த்தைக ளெல்லாம் சிறிதும் சந்தேக மில்லாமல் இயேசுவுக்குப்பின் மற்றொரு தீர்க்கதரிசி அவதரிப்பதையே மிகமிக அழுத்தமாகவும் திருத்தமாகவும் குறித்துக் கொண் டிருக்கின்றன வென்பதை நாம் செவ்வையாகத் தெரிந்து கொள்ளுகிறோம். 'எனினும், இங்குக் கூறப்பட்டுள்ள "தேற்றரவாள" னென்பது கிறிஸ்து மதத்தில் குறிப்பிடப்பட்டுள்ள "பரிசுத்த ஆவியையே" சுட்டிக் காட்டுமென்று வியாக்கியானம் செய்து காண்பிப்பதற்குக் கிறிஸ்தவப் பாதிரிமார் பெரிதும் பாடுபட்டு வருகின்றனர். ஆனால், அவருரைத்த தீர்க்கதர்சனம், "நான் போகாதிருந்தால், தேற்றரவாளன் உங்களிடத்தில் வரார்," என்னும் ஒரு வாக்கியத்தையும் தன்னுள் அடக்கிக்கொண் டிருப்பதை அந்தப் பாதிரிமார் ஊன்றிப் பார்ப்பதில்லை. இயேசு கிறிஸ்து இவ்வுலகில் உயிருட னிருந்தபோதே அவருடன் "பரிசுத்த ஆவி"யுங் கூட இருந்துவந்ததென்று கிறிஸ்தவர்கள் நம்பியிருக்கிறார்கள். ஆனால், தாம் சென்றபிறகே அத்தத் தேற்றரவாளர் விஜயம் செய்வாரென்று அவர் அதிக ஸ்பஷ்டமாகக் கூறியிருக்கின்றார். பைபிள் புதிய ஏற்பாட்டி லிருந்து யோவான் ஞானஸ்னானன் பிறப்பதற்கு முன்னரே அவர்பால் பரிசுத்தஆவி நிரம்பியிருந்த தென்று நாம் தெரிந்துகொள்ளுகிறோம்; பிறகு இயேசு கிறிஸ்துவும் புறாவின் தோற்றத்தில் அந்தப் பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொண்டா ரென்றும் அந்தச் சுவிசேஷத்தி லிருந்தே தெரிந்து கொள்ளுகிறோம். எனவே, இயேசுவின் காலத்துக்கு முன்னும், அந்த இயேசுவின் காலத்திலும் பரிசுத்த ஆவியென்பது இவ்வுலகில் தோன்றிக்கொண்டுதா னிருந்ததென்று பைபிளைக்கொண்டே மிகச் செவ்விதாய்த் தெரிந்து கொள்ளக் கிடக்கின்றது. ஆதலின், "நான் போகாதிருந்தால், தேற்றரவாளன் உங்களிடத்தில் வரார்," என்பதன் தாத்பரியந்தான் என்னை? இது நிச்சயமாக இயேசு கிறிஸ்துவின் பரிசுத்த ஆவியாயிருப்பது முடியாது. என்னெனின், அவருடைய ஜீவியத்தின்போதே அவர்பால் பரிசுத்த ஆவியென்பது இல்லையென்று கூறத்துணிவோ மாயின், அஃதொரு பெரும் பொய்யேயாகும். உண்மையிலே இயேசுவும், அவருடைய அருள்வயப்பட்ட சிஷ்யர்

களும் அந்தப் பரிசுத்த ஆவியால் நிரப்பப்பட் டிருந்தார்க ளென்றே கொள்ளப்படுதல் வேண்டும்; என்னெனின், குருவும் சிஷ்யர்களும் அத்துணைப் பரிசுத்தம் நிரம்பியவ ராகவே யிருந்தார்க ளென்றே யாம் கொள்ளக் கடவோம். :குர்ஆன் ஷரீ'பானது, மு'ஹம்மத்' நபி யவர்களின் தோழர்களுக் கெல்லாம் இத்தகைய பரிசுத்த ஆவி அருளப்பட் டிருந்ததென்று கூறியிருக்கிறது: "எவர்களைத் தன்பாலிருந்து (உதயமான பரிசுத்த) ஆவியைக் கொண்டு பலப்படுத்தியும் வைத்திருக்கிறானோ, அவர்கள் இவர்களே."—(:குர். 58 : 22)

"பரிசுத்த ஆவி" என்னும் சொற்றொடரொன்று இயேசுவின் தீர்க்க தர்சனத்தில் காணப்படுவது வாஸ்தவமே. இஃதோர் இடையிட்ட காலத்தில் புதிதாகப் புகுத்தப்பட்டிராத சொற்றொடரா யிருப்பின், இனி வர வேண்டி யிருந்த அந்த வாக்களிக்கப்பட்ட இறுதி நபியானவர் பரிசுத்த ஆவியுடன் அதிகம் சம்பந்தப்பட் டிருப்பா ராதலின், அவரது திருவவதாரமே அந்தப் பரிசுத்த ஆவியின் வருகையையே உருவகமாக ஒருவாறு குறிக்குமென்று மிகச் செவ்விதாய்த் தெரிந்து கொள்ளுகிறோம். இயேசுவின் தீர்க்க தர்சனத்தில் வேறு பல வார்த்தைகளும் காணப்படுகின்றன; அவை எவ்வாற்றானும் மு'ஹம்மத்' நபி (சல்) அவர்களை யல்லாமல் வேறுயாரையும் சுட்டிக் காட்டுதல் ஒருபோதும் சாலாது. "என்றென்றைக்கும் உங்களுடனே கூட இருக்கும்படிக்குச் சத்திய ஆவியாகிய வேறொரு தேற்றரவாளனை அவர் உங்களுக்குத் தந்தருளுவார்," என்று கூறப்பட் டிருப்பதிலிருந்து இந்த இறுதிநபி யவர்களுக்குப் பின் வேறொரு தீர்க்கதரிசியும் இவ்வுலகினில் அவதரிக்க மாட்டாரென்று மகா நிச்சயமாகத் தெரிந்து கொள்ளக் கடவோமாக. இதுவேதான், எமது :குர்ஆன்ஷரீ'பில் **மா(க்)கான மு'ஹம்மது'ன் அப'ா அ'ஹதி'(ன்)ம் மின்(ர்)ரிஜாலி(க்)கும் வலா(க்)கின் ரஸூலல்லாஹி வக'ா(த்)தமன் னபி'ய்யீன்** * (33 : 40)— "முத்திரையான நபி" யென்று மு'ஹம்மத்' (சல்) அவர்களைப்பற்றி ஆண்டவன் கூறிய வாக்கியத்தின் கருத்துமாகும். "பரிசுத்த ஆவியாகிய தேற்றரவாளனே எல்லாவற்றையும் உங்களுக்குப் போதித்து, நான் உங்களுக்குச் சொன்ன எல்லாவற்றையும் உங்களுக்கு நினைப்பூட்டுவார்," என்பது :குர்ஆன் ஷரீ'பிலுள்ள (5 : 3-ஆவது) ஆயத்தையே எல்லாருக்கும் எடுத்து நினைப்பூட்டுகின்றது: "இன்று நான் உங்களுக்காக உங்கள் மதத்தைப் பரிபூரணமாக்கியுள்ளேன்," என்று ஆண்டவன் **அல்யவ்ம அக்மல்(த்)து ல(க்)கும் தீ'ன(க்)கும்** என்னும் இவ் வாயத்தில் மீக்கூறிய உண்மையை மிகச் செம்மையாய் விளக்கியுள்ளான். இந்த இறுதிநபி யானவர் "சத்திய ஆவியானவரா யிருப்பாரென்று இயேசுவின் தீர்க்கதர்சனம் கூறுவதும் எமது :குர்ஆன்

* "மு'ஹம்மத்' உங்கள் ஆடவருள்ளே எவருக்கும் தந்தையா யில்லை; ஆனால், அன்னவர் அல்லா(ஹ்)வின் தூதராகவும், நபிமார்களின் முத்திரையாகவுமே யிருந்து வருகின்றார்."

ஷரீ'பிலுள்ள, "சத்யம் வந்துவிட்டது; மேலும், அசத்யம் அழிந்தொழிந்து போய்விட்டது என்று கூறுவீராக!" என்னும் ஆயத்தையே (17:81) எமக்கு ஈண்டு அதிகம் ஞாபகமூட்டுகின்றது.

என்வே, நபி இப்'ராஹீம், நபி இஸ்மாயீ'ல் ஆகியோரின் பிரார்த்தனையின் பயனாகவும், மூஸா, ஈ'ஸா முதலியோருக்கு அளிக்கப்பட்டுள்ள தீர்க்கதர்சனத்தின் பயனாகவும் இந்த இறுதி நபியாகிய மு'ஹம்மத்' முஸ்த'பா ரஸூல் (சல்) அவர்கள் இப்பூவுலகின்கண் எல்லா நபிமார்களுக்கும் இறுதியிலே முத்திரையாக அவதரித்திருக்கிறார்களென்று நாம் மிகமிக விளக்கமாகத் தெரிந்து கொள்ளுகிறோம். எனவே, இந்த இறுதி நபியவர்களுக்கு இறைவனது நன்மாராயம் என்றென்றும் நின்றிலங்குவதாக! ஆமீன்! ஆமீன்! ஆமீன்!

---

# அதிகாரம் — 6

## குலமுறையும் திருவவதாரமும்

**"(அவன்) நீர் ('த'ஹஜ்ஜுத்'ல்) நிலையாய் நிற்கும் போதும், (ஆண்டவனுக்குச்) சிரவணக்கம் புரிகிறவர்கள் மத்தியில் நீர் புரண்டுகொண்டிருந்தபோதும் உம்மைப் பார்க்கிறவன்."— (26 : 218, 219)**

அரப் தேசத்தின் ஆதிகால சரித்திரங்களையெல்லாம் :குர்ஆன் ஷரீ'பிலிருந்தே நாம் நன்கு தெரிந்து கொள்ளலாம். அன்றியும், அரபிகளின் ஞாபகசக்தியும் மிகச்சிறந்ததா யிருந்துவந்தமையான், அவர்கள் தங்களுடைய புராதன சரித்திரங்களனைத்தையும் கர்ணபரம்பரையான காதைகளிலேயே அமைத்து வைத்திருந்தார்கள். யமன்தேயத்தின் சிற்சில பகுதிகளிலிருந்து கண்டெடுக்கப்பட்டிருக்கும் சிலாசாசனங்களில் வரையப்பட்டிருக்கும் விஷயங்களை ஊன்றிப் படித்துப் பார்க்குங்கால், அவற்றிலுள்ள சரித்திரங்களும், :குர்ஆன் ஷரீ'பிலுள்ள சரித்திரங்களையும், கர்ணபரம்பரையான காதைகளையும் முழுக்க முழுக்க ஒத்திருக்கின்றன.

நபி இப்'ராஹீம் அவர்களுடைய மூத்த குமாரர் நபி இஸ்மாயீ'ல் அவர்களே யாவார்கள். இந்த இஸ்மாயீ'ல் நபி அவர்களுக்குப் பன்னிரு குமாரர்கள் தோன்றினார்கள்; இவ்விஷயம் பைபிள் பழைய ஏற்பாட்டாலும் ஒத்துக்கொள்ளப்பட்டிருக்கின்றது. இஸ்மாயீ'லுடைய செல்வக் குமாரர்களுள் ஒருவரான ஃகேதா'ர் என்பவருடைய சந்ததியார்களே 'ஹிஜா'ஜ் மாகாணமுழுதும் நன்கு பரவிக்கிடந்தனர். ஆகவே, ஆங்குள்ள அராபியரனைவரும் ஃகேதா'ரின் சந்ததியாரே யென்பதற்கும் பைபிள்

பழைய ஏற்பாடே சான்று கூறுகின்றது. இத்தகைய இஸ்மாயீ'ல் வம்சத்தவரின் கைவயம் இருந்துவந்த க'அ்பாவின் ஆதிக்யமானது, பாபிலோனியரின் படையெழுச்சிக்குப் பின்னே ஜுர்ஹும் வம்சத்தாரின் ஆதீனத்துள் சென்று சிக்கிவிட்டது. அதுமுதல் அந்த ப'னூ ஜுர்ஹும் வம்சத்தினரே அத்தேயத்தின் மாலிக்குகளாய் உயர்ந்து விளங்கிவந்தனர். பிறகு கி.பி. மூன்றாவது நூற்றாண்டின் முற்பகுதியில் யமனிலிருந்து கிளம்பிவந்த க'ஹ்:தான் வம்சத்தைச் சார்ந்த ப'னூகு' 'ஜாஆ' என்னும் வர்க்கத்தினர் ப'னூ ஜுர்ஹும் வம்சத்தினரை வென்று, மக்கமா நகரையும், 'ஹிஜா'ஜின் தெற்குப் பகுதியையும் கைப்பற்றிக் கொண்டனர். இதற்கிடையில் பாபிலோனியரின் கையிலே தோல்வியுற்றுக் கிடந்த ப'னீ இஸ்மாயீ'ல் வர்க்கத்தினரும் தமது பண்டைப் பராக்கிரமத்தை யெல்லாம் மீண்டும் சேகரம் செய்துகொண்டு வந்தனர். இஸ்மாயீ'ல் நபி அவர்களினின்று உத்தேசம் நாற்பதாவது தலைமுறையில் தோன்றிய அ'த்'னான் என்னும் வீரர் கிறிஸ்து பிறப்பதற்கு முதல் நூற்றாண்டில் தமது முன்னோரைப் போலவே ஜுர்ஹும் வம்சத்துத் தலைவரது குமாரியை மண முடித்துக்கொண்டு மக்கமா நகரின் கண்ணே ஆதிக்யம் பெறலாயினர். இந்த அ'த்'னானி னின்றே நம் நபீகரீம் அவர்கள் தோன்றியிருக்கிறார்க ளென்பதில் சிறிதும் சந்தேகமில்லை. அ'த்'னானுடைய குமாரர் மஅ'த்' என்பாரே 'ஹிஜா'ஜ், நஜ்த்' ஆகிய இருபெரும் மாகாணங்களிலும் வசித்துவரும் அராபியரின் மூல புருஷராக விளங்குகின்றார். மஅ'தி'ன் வம்சத்தில் தோன்றிய 'பிஹ்ர் என்பவர் கி.பி. மூன்றாவது நூற்றாண்டில் ஜீவித்திருந்தார்; இவருக்குக் :குறைஷ் என்றும் மற்றொரு சிறப்புப்பெய ருண்டு. மற்றும் பலர், நாயகமவர்களின் பிதாமஹர் வம்சத்தில் காணப்படும் நல்'ர் பி'ன் கினானா என்பவரே இப் பெயருக் குரியவர் என்று கூறுகின்றார் (ரா'ஜீ). ":குறைஷ்" என்னும் பதத்தின் தாத்பரியம், புராதன அரபு பாஷையில் "வர்த்தகர்", அல்லது "சேகரிப்பவர்" என்று பொருள் பட்டுவந்தது. என்னெனின், இதன் தாதுவுக்கு "வியாபாரம் செய்தல்," அல்லது "ஒன்று சேர்த்தல்" என்பதே சிறந்த பொருளாகும்.* பிறகு 'ஹிஜா'ஜில் வசித்துவந்த :குறைஷ் குலத்தார் தங்கள் குலப் பெருமையைப் பற்றியும், கோத்திரச் சிறப்பைப் பற்றியும் அளவு கடந்த பெருமைபாராட்டி வந்தனர். மற்றெல்லாக் கோத்திரத்தாரைக் காட்டினும் :குறைஷ் குலத்தார் உண்மையில் மிகமிகச் சிறந்தவர்களே. பெருமையிலும் பரிசுத்தத்திலும் இவர்களை மிக்காரும் ஒப்பாரும் அக்காலத்தில் அத்தேயத்தில் வேறெவரும் இல்லையென்றே மகா நிச்சயமாகக் கூறலாம்.

---

* வேறு சிலர், :கர்ஷ் என்பதன் சார்பாய்க் :குறைஷ் என்னும் பதம் தோன்றியுள்ள தென்பர். :கர்ஷென்பது சமுத்திரத்தில் வசிக்கக்கூடிய ஒரு பெரிய பிராணியாம்; இஃது ஏனையவற்றையெல்லாம் புசித்துவிடுமாம்; ஆனால், இதைப் புசிப்பது ஒன்றுமில்லை. இவ்வாறு 'திமிங்கில கில'மென்றே இப்'னு அ'ப்'ப'ாஸ் இயம்பியுள்ளார்.

அ’த்’னானி னின்று ஒன்பதாவது தலைமுறையில் ந’ல்’ர் பி’ன் கினானா என்னும் பெரியார் தோன்றினார். இவரே உண்மையில் :குறைஷ் குலத்தை உண்டுபண்ணியவ ரென்று சரித்திராசிரியர் கூறியிருக்கின்றனர். இவரினின்று தோன்றிய ஒன்பதாவது தலை முறையில் (‘பிஹ்ரினின்று ஐந்தாவது தலைமுறையில்) :குஸையி என்னும் மகான் தோன்றினார்; (இவர் பிறந்தது கி. பி. 398 என்பர்.) இப் பெரியாரே நம் நபிகள் திலகத்தின் பாட்டனாரான அ’ப்’து’ல் முத்தலிபி’ன் பாட்டனா ராவார். ப’னூ கு’‘ஜாஆ’க்கள் இரண்டு நூற்றாண்டுக்கு மேல் கஃ’ப’த்துல்லாவின் ஆதிக்யத்தையும், அதன் சார்பாய்க் கிடைத்த சகலவிதமான அதிகாரங்களையும் மேற்கொண்டு வந்தனர். ப’னூ கு’‘ஜாஆ’க்களின் இறுதித் தலைவராகிய ‘ஹுலைல் என்பவரே இதுசமயம் கஃ’ப’ாவின் அதிபதியா யிருந்தார். எனவே, :குஸையி யென்பவர் ‘ஹுலைல் என்பவரின் ஏகபுத்திரியான ‘ஹுப்’பீ’ என்னும் பெண்ணை மணந்துகொண்டார். ஆகவே, ‘ஹுலைல் என்பவர் தாம் மரணமடையும் சமயம், தமக்குப் பின் தம்முடைய அதிகாரங்களை யெல்லாம் தம் மருகரான :குஸையியிக்கே கொடுக்கவேண்டுமென வசிய்யத் செய்து சென்றார். ஆதலின், அந்த வசிய்யத்துப்படி :குஸையி யென்பவர் கஃ’ப’ாவுக்கு அதிகாரி யாயினார். பிறகு சிறுகச் சிறுகக் :குஸையி ‘ஹிஜா‘ஜுக்கே அரசராய் உயர்ந்துவிட்டார்.

இவ்வாறு :குஸையி மக்காவுக்கும், மற்றுமுள்ள ‘ஹிஜா‘ஜ் முழுமைக்குமே தலைவராக விளங்கியது கி. பி. ஐந்தாவது நூற்றாண்டின் மத்திய பாகமாகும். இவர்தாம் முதன்முதலில் மக்கமா நகரை ஓர் ஒழுங்கான ஆட்சி முறையின்கீழே கொண்டுவந்து வைத்தார். இவருக்குமுன்னே வெவ்வேறு :குறைஷ் குடும்பத்தாரும் கஃ’ப’த்துல்லா(ஹ்)வை விட்டு நெடுந் தூரத்தில் தனித்தனியே வசித்துவந்தனர்; கஃ’ப’ாவுக் கருகினில் வீடு கட்டிக்கொண்டு வசிப்பது ஒரு தோஷமான காரியமென்று அன்னார் கருதி வந்தனர். ஆனால், :குஸையி அக் குடும்பத்தின ரனைவரையும் அழைத்துக் கஃ’ப’ாவைச் சுற்றியே வீடுகட்டிக் கொள்ளுமாறு வேண்டினார். கஃ’ப’ாவைச் சுற்றி நான்கு புறத்தும் :தவ்வா‘ப் (இடம்வரல்) செய்வதற்குப் போதிய இடத்தைமட்டும் விட்டுவிட்டு, அவர்கள் தத்தமக்கு வேண்டிய விடுதிகளை அதிக பலமாகவே கட்டிக்கொண்டு வசிக்கலாயினார்கள்.

:குஸையியோ, ஆங்குத் தமக்கொரு மாளிகையை நிர்மாணித்துக் கொண்டு, அதன் வாயிலைக் கஃ’ப’துல்லா(ஹ்)வின் முற்றத்தின் பக்கல் திருப்பி வைத்தார். இதற்குப் பெயர் த’ாருன் னத்’வா என்று சூட்டப்பட்டு, :குறைஷியரின் “ஆலோசனை மண்டப”மாக உபயோகிக்கப்பட்டு வந்தது. நாற்பது வயதுக்கு மேற்படாத, :குஸையியின் வம்சத்தவ ரல்லாத வேறெவரும் அந்த ஆலோசனை மண்டபத்துக்குள் நுழைவது கூடாது. இங்கேதான் எல்லாவிதமான நிர்வாக வியவகாரங்களும், மற்றுமுள்ள பொதுஜனக் காரியங்களும் நிகழ்த்தப்பட்டு வந்தன. :குறைஷிகள்

யுத்தத்துக்குப் புறப்படுங்கால், இங்கிருந்துதான் :குஸையியின் கரத்தி லிருந்து லிவா என்னும் கொடியைப் பெற்றுச் செல்வர்; இந்தச் சடங்குக்கு அக்'‘துல் லிவா என்று பெயர் கூறுவர். அராபியரின் இராஜ்யாதிகாரம் அத் தேயத்தில் இருந்துவந்த இறுதிவரை இச்சடங்கும் நடைபெற்றே வந்தது. நபி(சல்) பெருமானைக் கடைசியில் கொல்ல நினைந்து செய்த :குறைஷியர் சதியாலோசனை “த்'ாருன் னத்'வா” என்னும் இந்தச் சபா மண்டபத்திலேதான் நடைபெற்றது. இச் சபாமண்டபம் பிறகு பல முறையும் புதுப்பிக்கப்பட்டு, இறுதியில் ப்'னூ உமையாக்களின் க'லீ'பாக் களில் ஒருவரான இரண்டாவது அ'ப்'து'ல் மலிக்கென்பார் காலத்தில் ஒரு மஸ்ஜிதாக மாற்றப்பட்டு விட்டது.

:குஸையீ ஏற்படுத்திய மற்றொரு காரியம் பிறகு நெடுநாள் மட்டும் ஆங்கு நின்று நிலவிக் கொண்டே யிருந்தது: அரப் தேசத்தின் நெடுந் தூரங்களி லிருந்தெல்லாம் ஆண்டுதோறும் கஃ'ப்'த்துல்லாவை நோக்கி யாத்திரை வருவா ரனைவருக்கும் அன்னபானாதி முதலிய சுகசௌகரி யங்களை யெல்லாம் செய்துகொடுத்தற்கு வேண்டிய ஒரு முக்கிய ஏற்பாடு அன்னவரால் நிறுவப் பெற்றது. இதற்கு வேண்டிய ரி'பாதஃ'ஃ என்பதற் குரிய ஏழைவரியைக் கொடுக்குமாறு தனிகர்களான அக் :குறைஷியரிடம் வேண்டிக் கொண்டு, அவ்வாறே ஆண்டுக் கொருமுறை அதை வசூல் செய்து, “ஐயாமுல் மினா” விலும், அதற்கடுத்த இரண்டு நாட்களிலும், மினாவின்கண் விஜயம் செய்துள்ள எல்லா யாத்திரிகர்களுக்கும் நல்லுதவி புரிந்துவந்தார். இவ்வழக்கம் இஸ்லாத்தின் ஆரம்பத்துக்குப் பின்னேயும் நடைபெற்றே வந்தது; பிறகு வருடந்தோறும் ‘ஹஜ்ஜின்போது மினாவில் கூடும் ‘ஹஜ்ஜாஜிகளுக்கு க'லீ'பாக்களின் பெயராலும், அவர்களுக்குப் பின்வந்த சுல்தான்களின் பெயராலும் வழங்கப்பட்டு வந்த அன்னதானப் பழக்கத்துக்கும் அந்தக் :குஸையியின் வழக்கமே மூலகாரண மாகும். நத்'வா, லிவா, ரி'பாதஃ'ஃ என்னும் சொற்களே :குஸையீ அவர்களுக்கு ஆலோசனைச் சபைத் தலைமையும், யுத்தகாலத் தலைமையும், பொதுஜனத் தலைமையும் இருந்துவந்தன வென்பதை நன்கு ருஜூப்படுத்துகின்றன. இம் மூன்றுவித அதிகாரங்களுடன் மக்காவிலும் அதனைச் சூழ்ந்துள்ள பகுதிகளிலு முள்ள கிணறுகளிலிருந்து கொணரப்படும் தண்ணீரை ஒழுங்குசெய்து வீதித்துக் கொடுப்பதற்குரிய அதிகாரமும் (ஸி:காயாவும்) கஃ'ப்'ாவின் திறவுகோலை வைத்துக்கொண் டிருப்பதென்னும் அதிகாரமும் (‘ஹிஜாப'ாவும்) அவர்வமயமே யிருந்துகொண்டு வந்தன.

எனவே, மதத் தலைமையும், பொதுஜன வியவகாரத் தலைமையும் ராஜீயத் தலைமையும் அந்தக் :குஸையீ யென்னும் பெரியாரிடமே ஒருங்கு அமைந்துகிடந்தன வென்று மிக்கவிளக்கமாக இப்பொழுது நாம் தெரிந்து கொள்ளக் கடவோம். ஆதலின், அவரே அக்காலத்தில் அத்தேயத்துக்கு

அரசராகவும், நீதிபதியாகவும், மதத் தலைவராகவும் ஏககாலத்தில் விளங்கி வந்தா ரென்பது வெள்ளிடை விலங்கல். இதனால் அவருக்கும், அவரைச் சார்ந்துள்ள ஏனைக் :குறைஷியர் குடும்பத்தினருக்கும் அதிகமான சீரும் சிறப்பும் உண்டாயினதுடன், மற்றைக் கோத்திரத்தாரைக் காட்டினும் அக் :குறைஷிகளுக்கே அந்நாட்டில் அளவுகடந்த செல்வாக்கும் விளைந்து கொண்டிருந்த தென்பதில் கிஞ்சித்தும் சந்தேகமில்லை.

இப்படிப்பட்ட பீடுகெழு செல்வாக் கமைந்த பெரியாரான :குஸையி என்பார் தமது முதிர்ந்த பிராயமான 82-ஆவது வயதில் ஆண்டவனது அருட்பெருஞ் சோதியின் வண்ணம் கி. பி. 480-ஆவது ஆண்டில் தேக வியோகமாய்ப் போய்விட்டார்.

:குஸையி தேகவியோக மாகுமுன்னே தம்முடைய ஆறுகுமாரர்களுள் மூத்த மகனாரான அ'ப்'து'த்'த்'ார் என்பாரையே தமக்குரிய தலைமை ஸ்தானத்தில் நிறுவிச் சென்றார். ஆனால், அவர் அதை நிர்வகிக்கப்போதிய சாமர்த்தியமற்றவரா யிருந்துவந்தார். எனினும், :குஸையியிக்குப் பின்னே :குறைஷிகளின் தலைமைஸ்தானத்தை அ'ப்'து' மனா'ப யடைந்துவிட்டார். இவருடைய வம்சத்திலேதான் நபிகள்திலகம் தோன்றலாயினார்கள். அ'ப்'து' மனா'புக்கு ஆறு புத்திரர்கள் இருந்தார்கள். அவர்களுள் ஹாஷிம்* என்பாரே மஹாகீர்த்தி வாய்ந்தவராகவும், மிக்க செல்வாக்குள்ளவராகவும் இருந்துவந்தார். எனவே, ஹாஷிம் தம் சோதரர்களைத் தூண்டிவிட்டு, அ'ப்'து'த்'த்'ாருக்குக் கொடுக்கப்பட்ட கஃ'ப'ாவின் உத்தியோகங்களைத் திரும்பப் பிடுங்கிவிடவேண்டு மென்றும், அன்னவர் அப்பதவியை வகிக்க அருகதையற்றவ ரென்றும், சொல்லிக்கொண் டிருந்தார். ஆனால், அ'ப்' து'த்'த்'ாரின் வம்சத்தினரோ, அவ்வாறு தங்கள் ஆதிக்யத்தை விட்டுக் கொடுக்க முடியாதென மறுத்துவிட்டனர். எனவே, அவ்விரு வர்க்கத் தலைவர்க ளிடையேயும் போர்மூளக்கூடிய சமயமும் தோன்றிவிட்டது. ஆனால், இறுதியாக அ'ப்'து'த்'த்'ா ரிடமிருந்த ரி'பாத'ாவும், ஸி:காயாவும் திரும்ப ஹாஷிமிடமே ஒப்படைக்கப்பட்டுச் சமாதானம் நிறுவப்பட்டது. எனவே, யாத்திரிகர்களுக்கு அன்னதான மளிக்கும் பொருட்டுக் :குறைஷி களிடமிருந்து வசூலிக்குமாறு :குஸையி என்பார் ஏற்படுத்திவிட்டுச் சென்ற ஏழைவரியை ஹாஷிமே வசூல் செய்து, தம்பாலுள்ள திரவிய சகாயத்தின் உதவியையும் சேர்த்துக்கொண்டு, மக்கமா நகரின்கண் வருடந்தோறும் வந்துகுழுமும் அன்னியநாட்டு யாத்திரிகர்களுக் கெல்லாம் அன்னபானாதி களை யளித்துவர லாயினார்.

* இது பட்டப் பெயராம். மக்காவி லொருசமயம் கடுமையான பஞ்சம் வந்தபோது, ஜனங்களுக் கிவர் ஆணங்காய்ச்சி ரொட்டியும் சுட்டுக்கொடுத்ததனால் இப்பெயர் உண்டா யிற் றென்பர். "ஹஷமுன்" என்பது, உலர்ந்ததைத் தூளாக்குதல், அல்லது நொறுக்குதல் என்று கருத்துக் கொள்ளும்.

மக்காவின் கண்ணுள்ள மற்றையோரைப் போன்றே ஹாஷிமும் வர்த்தகத்திலேயே ஈடுபட்டிருந்தார். இவர்தாம் :குறைஷிகளுக்குள் ஓர் ஒழுங்கான வர்த்தக முறையை முதன்முதலாக உண்டுபண்ணி வைத்தவர்; குளிர் காலத்தில் யமன் தேயத்தை நோக்கி ஒரு *கார்வானும், கோடைக் காலத்தில் சின்ன ஆசியாவிலுள்ள சிரியா (ஷாம்) தேயத்தை நோக்கி ஒரு கார்வானும் ஒவ்வோராண்டிலும் ஒழுங்காகச் சென்று வர்த்தகம் புரிந்து வருமாறு ஏற்பாடு செய்து வைத்தார். அதுவேயு மன்றி, ஹாஷிமென்னும் இப்பெரியார், வியாபாரிகளின் நன்மையை யுன்னி, ஷாம்தேயத்தில் வந்து வியாபாரம் செய்யும் :குறைஷியரிட மிருந்து வரியொன்றும் வசூல்செய்ய வேண்டாமென அந்த ரோமச் சக்ரவர்த்தியிட மிருந்து சலிகை பெற்றிருந் தார்; இவ்வண்ணமாயே 'ஹப்'ஷாதேச மன்னரிட மிருந்தும் யமன்தேய அதிபதியிட மிருந்தும் கேட்டுச் சகாய முண்டுபண்ணி வைத்தார். அரப் வியாபாரிகளுக்கு அதன்பயனாக அக்காலத்தில் எத்துணைச் சௌகரியமும் நன்மையும் உண்டாயிருக்கு மென்பதை நீங்களே நிதானித்துப் பார்க்கக் கடவீர்கள். அரப் தேயத்தில் "போக்கு வரத்துக்" குரிய ரஸ்தா வென்பதே தனியா யிருந்ததில்லை யென்றாலும், ஹாஷிம் அநேக வர்க்கத் தாரிடம் ஒரு நல்ல உடன்படிக்கையைச் செய்திருந்தார். அதில் :குறைஷி களின் வர்த்தகக் கார்வானுக்கு எவரும் எத்தகைய இடையூறும் விளைக்கக் கூடா தென்றும், அதற்கீடாகக் :குறைஷிகள் எந்தெந்தக் கூட்டத்தாருக்கு என்னஎன்ன பண்டங்கள் தேவைப்படுகின்றனவோ, அவ்வப் பண்டங்களை யெல்லாம் வர்த்தகத்தின் பொருட்டுச் சேகரித்துக்கொண்டு வருவார்க ளென்றும், வேண்டியவர் வேண்டியாங்கு வாங்கிக்கொள்ளலா மென்றும், ஆனால், :குறைஷியர்களுக்கு எவ்விதத் துன்பத்தையும் எவரும் வியாபாரப் பாதையில் செய்வது கூடாதென்றும் நிபந்தனைகள் வரையப்பட்டிருந்தன. இக்காரணம் பற்றியேதான் அரப் தேயத்திலிருந்த ஏனைக் கூட்டத்தார்கள் சரிவர வியாபாரம் செய்ய முடியாமற் சண்டை சச்சரவுகளிலும் கொள்ளை கொலைபோன்ற துர்க்கிரியைகளிலும் பிரவேசித்துக்கொண் டிருந்தக்கால், :குறைஷி கூட்டத்தார்கள் மட்டும் மிக நன்றாக ஷாம் (சிரியா) போன்ற தேசத்துக்குச் சென்று வர்த்தகத்தை நடாத்திக்கொண் டிருந்தனர்.

இவ்வா றெல்லாம் மக்காவின் வியாபாரச் செல்வாக்கை அதிகம் அபிவிருத்தி செய்துவைத்த ஹாஷிம் என்னும் பெரியார் ஒருமுறை ஷாம் தேசத்துக்குச் சென்றுகொண் டிருந்தபொழுது மதீனாவில் அவ் வியாபாரக் கார்வான் தங்கிற்று. எனவே, ஆங்கு ப'னீ நஜ்ஜார் கூட்டத்தைச் சார்ந்த அழகும் குணமும் அதிகமாய்ப் பெற்றிருந்த ஸல்மா என்னும் பெண் ணொருவர் இருப்பதைக் கேள்வியுற்று, அப்பெண்ணை ஹாஷிம் வரித்து மணமுடித்துக் கொண்டார். விவாகத்துக்குப் பின்னர்ச் சிறிதுகாலமே

* கார்வான் என்பது பாலைவனங்களின் வழியே பத்திரமா யிருக்கும்பொருட்டு ஒரு மிக்கத் திரண்டுசெல்லும் வர்த்தகர்களின் ஒட்டகக் கூட்டமாகும்.

மதீனாவில் தங்கியிருந்து, பிறகு வியாபாரத்தின் பொருட்டு ஷாம் தேசத்துக்குச் சென்றார். ஹாஷிம் ஷாம் தேசத்துக்குப் புறப்பட்டபோது, ஸல்மா கர்ப்பவதியா யிருந்தார். ஆகவே, சின்னாட்களுக்குப் பின்னே ஓர் ஆண்மகவு ஜனனமாயிற்று. அதற்கு ஷைப்'ா என்று நாமகரணம் சூட்டப்பட்டது. வடக்கேயுள்ள :கு'ஜ்'ஜா என்னும் நகரில் கி. பி. 510-ஆம் ஆண்டில் ஹாஷிம் காலகதியால் தேகவியோகமாய் விட்டார். ஆனால், ஹாஷிம் மரணத்துக்குப்பின் ரி'பாத'ாவும் ஸி:காயாவும் இவருடைய இளைய சோதரராகிய முத்தலிப்' என்பவரிடமே சென்று சேர்ந்தன. இந்த முத்தலிப்' என்னும் பெரியார் தமது தாராள குணவிசேஷத்தினாலும், பெருந் தன்மையினாலும் அல் ஃப'ஜ் என்னும் கௌரவம் வாய்ந்த பட்டப் பெயரைப் பெற்றுக்கொண்டு, அந்நகரின்கண் அதிக சீரும்சிறப்பும் பெற்று நிலவ லாயினார். இவர் ய:த்ரிபி'லிருந்து ஷைப'ா என்னும் அந்த வெண் சிகை வாலிபரை 8-ஆவது பிராயத்திலே மக்காவுக்கு இட்டுக் கொண்டு வந்து சேர்ந்தார். ஆங்கு வந்ததன்பின், ஷைப'ாவென்னும் இவ்வாலிபரான அகதியைச் சிறிய தந்தையான அந்த முத்தலிபே' பாதுகாத்து வளர்த்துவந்தார். எனவே, ஷைப'ாவென்னும் பெயரை விட்டுவிட்டு, அ'ப்'து'ல் முத்தலிப்'— (முத்தலிபி'ன் அடிமைக்காரர்) என்னும் நவநாமத்துடனே எல்லாரும் அவரை அழைத்து வந்தனர். ஆகவே, சரித்திராசிரியர்களும் நம் நபிகள்திலகத்தின் (சல்) பாட்டனாரை இந்த "அ'ப்'து'ல் முத்தலிப்'" என்னும் திருநாமத்தைக் கொண்டே இன்றளவும் சிறப்பித்து வருகின்றனர்.

முத்தலிப்' என்பார் யமன் தேயத்திலுள்ள க'ஜ்வான் என்னுமிடத்தில் கி. பி. 520-ஆம் ஆண்டின் இறுதிப்பகுதியில் இறந்துபோயினார். அதற்கிடையில் அ'ப்'து'த்'த'ாரின் பேரர்கள் மக்காவின் கண் மிக்க செல்வர்களாகச் செருக்குமிக்கு விளங்க லாயினார்கள். ஆனால், அதே நகரில் ஹாஷிமின் வம்சத்தார் தங்களைக் காட்டினும் அதிகமான செல்வாக்குடையவரா யிருப்பதைக் கண்டு, அ'ப்'து'த்'த'ாரின் வம்சத்தவர் அதிகம் அழுக்காறு கொண்டு, அன்னாரின் அதிகாரத்தைப் பற்றிக்கொள்ளப் பகீரதப்பிரயத்தன மெடுத்துவந்தனர். அவ்வம்ச அ'ப்'து'ஷ்ஷம்ஸின் குமாரரான பேராசைபிடித்த உமையாஎன்பவர் அந்தக்கக்ஷியின் தலைமைப் பதவியை வகித்துவந்தார். ஆனால், அ'ப்'து'ல் முத்தலிபி'டம் பொதுஜனங்களுக்கிருந்துவந்த பிரியத்தினாலும் மரியாதையினாலும் அவரே அந்நகரின் தலைமையைச் செவ்வனே நிர்வகித்துவந்தார். இவருடைய குணவிசேஷமும் பெருந்தன்மையுமே இவருக்கு இத்தகைய நன்மதிப்பை உண்டுபண்ணிவிட்டன. ஆதலின், ஏழை யாத்திரிகர்களுக்கு அன்னதான மளித்தலென்னும் "ரி'பாத'ா" வாகிய சர்வாதிகாரமும், தண்ணீர் விநியோகத்துக்குரிய மேற்பார்வை யென்னப்பட்ட "ஸி:காயா"வாகிய பேரதிகாரமும் அ'ப்'து'ல் முத்தலிபி'ன் கைவயமே எப்பொழுதும் இருந்துவந்தன. ஆனால்,கஃ'ப'த்துல்

லாவை மேற்பார்வையிடுத லென்னும் "ஹிஜாப'ா" உத்தியோகமும் இவரது ஆதீனத்திலேயே சிறுகச்சிறுக வந்து சேர்ந்துவிட்டது. இதனாலும் உமையாவின் பொறாமை யென்பது அதிகரித்து வளர்ந்துகொண்டே யிருந்தது. ஆயினும், பொதுமக்களின் நன்மதிப்பால் அ'ப்'து'ல் முத்தலிப்' சுமார் ஐம்பத்தொன்பது ஆண்டுகள்வரை அந்த மக்கமா நகரின்கண் அதிக கண்ணியத்துடனே ஆட்சிபுரிந்து வந்தார்.

அ'ப்'து'ல் முத்தலிபி'ன் காலத்தில் மக்காவின் ஆட்சிமுழுதும் அவரது ஏக சுவாதீனத்திலேயே யிருந்துவந்த தென்று கொள்ளுவதற் கில்லை. என்னெனின், அதுபோழ்து அந்த ஆட்சிமுறையானது :குஸையியின் வம்சவழிவந்த தலைவர்க ளென்னப்பட்ட பல பிரமுகர்களின் கைவயமே யிருந்துவந்தது. அ'ப்'து'ல் முத்தலிப'ால் 'ஜம்'ஜம் கிணறு கண்டு பிடிக்கப்பட்ட பின்னர், அதன் சார்பாயுள்ள மேற்பார்வையை எவ்வாறு நிர்வகிப்பதென்னும் சச்சரவு ஒருவாறு முடிவடைந்தவுடன், மக்காவின் ஆட்சியானது ஷரீ'ப்கள் என்னப்பட்ட பத்துப் பெருந் தலைவர்களிடம் இருந்துவருமாறு ஏற்பாடு செய்யப்பட்டது. அப் பதின்மரே அதன் பின்னர் அவ்வாட்சி முறையில் தலைமை ஸ்தானத்தை நிர்வகித்துவந்தனர்; அவர்களுடைய தலைமைப்பதவி யென்பது வம்சபரம்பரையாய் வரக்கூடிய தாகவும், அதுவும் அவ்வக் குடும்பத்தின் முதல்வர் அல்லது தலைவருக்கே உரிமையுள்ளதாகவும் கருதப்பட்டு வந்தது. எனவே, அப் பதின்மரின் உத்தியோகங்கள் வருமாறு :—

(1) 'ஹிஜாப'ா என்னும், கஃ'ப'த்துல்லாவின் திறவுகோலை வைத்துக் கொண் டிருக்கவேண்டிய பொறுப்பு. இவ்வைதிக உத்தியோகத்துக்கு அக்காலத்தில் அளவுகடந்த கௌரவம் வாய்ந்திருந்தது. இது முதன் முதலில் அ'ப்'து'த்'த'ாரின் வம்சத்தவரிடமே இருந்துவந்தது; ஆனால், மக்கமாநகர் நபிகள் பெருமானால் வெற்றிகொள்ளப் பட்ட பொழுது, இவ்வுத்தியோகம் :தல்'ஹாவின் குமாரரான உ':த்மானிடம் இருந்துவந்தது.

(2) ஸி:காயா என்னும், 'ஜம்'ஜம் கிணற்று ஜலத்தையும், யாத்திரிகர்களுக்கு உபயோகமாகக் கூடிய வேறுபல தண்ணீரையும் மேற்பார்வை செய்துகொள்ள வேண்டிய பொறுப்பானது ஹாஷிம் குடும்பத்தினரிடம் இருந்துவந்தது. மக்காநகர் பிடிபட்டபோழ்து இவ்வுத்தியோகம் நபிகள் பெருமானா ருடைய சிறியதந்தையும், அவர்களினும் இரண்டு வயதே மூத்தவருமான 'ஹ'ஜ்ரத் அ'ப்'ப'ாஸ் அவர்களிடம் இருந்துவந்தது.

(3) தீ'யத் தென்னும், ஸிவில் கிரிமினல் நியாயாதிகார முழுதும் நெடு நாட்கள்வரை தைம் இப்'னு முர்ரா என்பவரின் வம்சத்தவரிடமே இருந்து வந்தது. இது ரஸூல்நாயக மவர்களுடைய காலத்தில் அபூ'ப'க்ர் என்று பின்னால் அழைக்கப் பட்ட அ'ப்'து'ல்லா ஹிப்'னு கு'ஹா'பா என்பவரிடம் இருந்துவந்தது.

(4) **ஸி'பாரா** என்னும், அயல்நாட்டுத் தூதுக்குரிய பெரிய கௌரவம் வாய்ந்த உத்தியோகம் அதற் கடுத்ததாகும். இதனை வகிப்போர், :குறைஷ் குலத்தவருக்கும் வேறு அரப் குலத்தவருக்கும், அல்லது அவர் களுக்கும் வேறு அன்னியர்களுக்கும் ஏற்படக்கூடிய தாரதம்மிய மான எல்லாவித வித்தியாசச் சச்சரவுகளையும் சமரசப் படுத்துதற்கு வேண்டிய அதிகாரம் பெற்றவராய் விளங்கிவந்தார். இவ் வுத்தியோகம் ஆதியில், அ'தீ'யின் குடும்பத்தவரால் நிர்வகிக்கப்பட்டு வந்தது. இஃது இஸ்லாத்தின் ஆரம்பகாலத்தில் உ'மர் அவர்களால் நிர்வகிக்கப் பட்டு வந்தது.

(5) **லிவா**— (உ':காப்') என்னும், போருக்குப் புறப்படுங்கால் கொடுக் கப்பட வேண்டிய கொடி— (பதாகை)க்குரிய பெரிய உத்தியோகம் அத் தேயத்தின் சேனைசமூகத்துக் குரிய தளபதியிடம் இருந்துவந்தது. இந்த இராணுவ அதிகாரமென்பது ஆதியில் உமையாவின் வம்சத்தவரிடம் இருந்துவந்தது. இஃது இஸ்லாத்தின் ஆரம்பதசையில் மு'ஹம்மத்'நபி (சல்) அவர்களுடைய ஜன்மவிரோதியாய் இருந்துவந்த ஹர்பி'ன் குமாரர் அபூ' ஸு'ப்யானிடம் இருந்துவந்தது. (இறுதியிலே இவர் இஸ்லாம் மதத்தை ஏற்றுக்கொண்டு விட்டார்.)

(6) **ரி'பாத'ா** என்னும், ஏழைகளை ஆதரிப்பதற்குரிய மேற்பார்வை பொதுமக்களிட மிருந்து வசூலிக்கப்படும் தானதர்மச் சொத்தைப் பொறுத் ததா யிருந்துவந்தது. அஃது ஆண்டவனுடைய விருந்தினரென்று கருதப் பட்ட எல்லா மனிதர்களுக்கும் — அவர்கள் அயலூர் யாத்திரிகர்களா யினும், உள்ளூர் வாசிகளாயினும் — அன்னதானம் அளிப்பதாகும். ஆதியில் அ'ப்'து'ல் முத்தலிபி'டம் இருந்த வந்த இவ் வுத்தியோகம் பிறகு அபூ'த்தாலிபி'டம் வந்து, இவர் காலகதி யடைந்துவிட்ட பின்னர், அ'ப்'து'மனு'பின் குமாரரான நவ்'பல் என்பவரது குடும்பத்துக்கு மாற்றப்பட்டது. இது ரஸூல்நாயக மவர்களுடைய காலத்தில் ஆ'மிரின் புத்திரரான 'ஹர்பெ:தன்பவர் வயம் இருந்துவந்தது.

(7) **நத்'வா** (மஷூரா) என்னும், தேச மகாசபையின் தலைமை ஸ்தானம் வகிப்பவரே தேசத்தின் தலைவராகவும் பொதுவாகக் கருதப்பட்டு வந்தார். இவருடைய ஆலோசனையின் பிரகாரமே எல்லாப் பொதுக் காரியங்களும் ஆங்கு நடைபெற்று வந்தன. நபிகள் நாயகத்தின் காலத்தில் இவ்வுத்தி யோகம் :குஸையியின் குமாரர் அ'ப்'து'ல் உ''ஜ்'ஜா என்பவரது குடும்பத் தில் தோன்றிய எஜீத்' பி'ன் ரபீ'ஆ' என்பாரிடம் இருந்துவந்தது.

(8) **:கயிம்மா** (:குபீ'த்தா) என்னும், சபாமண்டபத்தின் மேற்பார்வைக் குரியவர், ஆலோசனைச் சபையைக் கூட்டுவிக்கவும், சேனை சமூகங்களை ஆயுதபாணிகளாக வரும்படி செய்யவும் அதிகாரம் பெற்றிருந்தார். இஃது இஸ்லாத்தின் உதயத்தின்போது, முர்ராவின் புத்திரராகிய யக்'ஜூம் என்

பவரது குடும்பத்திலுதித்த முஃகீராவின் குமாரராகிய வலீதி'டம் இருந்து வந்தது.

(9) க'ர'ஜிஉ (அம்வால்) என்னும், அரசாங்க வரவுசெலவு இலாகாவுக் குரிய பெரிய உத்தியோகம் ஸஹ்மின் குடும்பத்துக்குச் சொந்தமா யிருந்து வந்தது ; இஃது இஸ்லாத்தின் தோற்றக் காலத்தில் கைஃஸின் புத்திரராகிய 'ஹாரிஃத் என்பவரிடம் இருந்துவந்தது.

(10) அ'ஜ்லாம் என்னும், குறிபார்க்கும் அம்புகளுக்குரிய மேற்பார்வை, ஆதியில் ஜுமஹ்'ஹுடைய வம்சத்தாரிடமே யிருந்துவந்தது. இஸ்லாம் தோன்றிய போது, இவ்வதிகாரம் அபூ' ஸுப்யானுடைய சகோதரர் ஸ'ப்வானிடம் இருந்துவந்தது. இத்தகைய அம்புகளைக் கொண்டே அக் கால மக்கள் ஆண் பெண் தெய்வங்களுடைய அந்தரங்க நோக்கங்களை ஆரூடமா யறிந்துவந்தனர்.

மேற்கூறிய இத்தகைய பெரிய பத்து உத்தியோகங்களும் இருந்து வந்த போதினும், அவ் வுத்தியோகஸ்தருள் அதிகம் வயது முதிர்ந்தவரே அளவுகடந்த அதிகாரம் வகித்துவருதற் குரியவரா யிருந்துவர வேண்டு மென்பதே ஆங்கொரு புராதன வழக்கமாய்க் காணப்பட்டு வந்தது. இவரே அக் குழாத்தின் ரயீஸ் அல்லது சையித்' என்னப்பட்ட தலைவராக விளங்கி வருவார். நம் நபிகள்திலகத்தின் காலத்தில் இத் தலைமைப்பதவி யென்பது அ'ப்'ப'ாஸ் (ரலி') அவர்களின் கைவயம் இருந்துவந்தது. எனவே, அவர் களே அக்கால ரயீஸ், அல்லது சையித்' என்றழைக்கப்பட்டு வந்தார்கள்.

மேற்கூறியவாறு அம்மக்கமா நகரின் அதிகார முழுவதும் மாபெருந் தலைவர்களாகிய அப்பத்து ஷரீ'ப்களிடம் பங்கிட்டுக் கொடுக்கப்பட்டிருந்த போதினும், அ'ப்'து'ல் முத்தலிபி'ன் குணாதிசயமும், சீரும், சிறப்பும், செல் வாக்கும் அன்னவருக்கே ஆங்குள்ள பெருமை யனைத்தையும் அதிகம் அளித்துவந்தன. இப் பெரியார் அக்கால வழக்கின்படி தமக்குப் பிறக்கும் ஆண்மக்களுள் பத்து ஆண்மக்களை வாலிபர்களாகத் தாம் ஜீவித்திருக்கும் போதே காணும் பாக்கியம் பெறக் கிடைப்பாராயின், அன்னவருள் ஒரு வரைக் கஃ'ப'த்துல்லாவின் தெய்வங்களுக்குப் பலிகொடுப்பதாக வேண்டு தல் புரிந்துகொண் டிருந்தார் ; தாம் கனவில்கண்ட 'ஜம்'ஜம் கிணற்றைத் தோண்டுவதற்கும் தமக்கு அதற்கு முன்னுலிருந்த ஏகபுத்திரனுடன் இன்னம்பல குழந்தைக ளிருப்பின் நலமென்று கண்டும் அவ்வாறு வேண்டுதல் புரிந்துகொண்டார். அவ்வாறே ஆண்டவனருளால் அ'ப்'து'ல் முத்தலிபு'க்குப் பன்னிரு குமாரர்களும், ஆறு குமாரிகளும் தோன்றலா யினுர்கள் : அவர்களுள், கி. பி. 538-ஆம் ஆண்டருகில் பிறந்த ஹாரி ஃதன்பவரே (அ'ப்'து'ல் கஃ'ப'ா) மூத்தவ ராவார். மற்றவர்கள் :— 2. அ'ப்'து'ல் உ''ஜ்'ஜா என்று மறுபெயர் வழங்கப்பெற்ற அபூ'லஹப்' (இவன் தான் தன் மனைவியுடன் நபிகள் நாதருக்கு அளவுகடந்த கஷ்ட நிஷ்டூரங் களை யெல்லாம் அடிக்கடி உண்டுபண்ணியவன்.) 3. அ'ப்'து' மனுபெ'பன்று

மறுபெயர் வழங்கப்பெற்ற அபூ'த் தாலிப்' (இவர்கள்தாம் அ'ப்'து'ல் முத்தலிபு'க்குப் பின்னால் அன்னையும் பிதாவுமற்ற அகதியாம் அ'ஹ்மத்' முஜ்தப'ா மு'ஹம்மத்' முஸ்த'பா ரஸூல்(சல்) அவர்களை ஆதரித்து வந்தவர்கள்)— கி. பி. 540 முதல் 620 வரை ஜீவித்திருந்தார்கள். 4. 'ஜுபை'ர், 5. அ'ப்'து'ல்லா(ஹ்)— (கி. பி. 545–570).—(இவ்விருவரும் :மக்''ஜூம் வம்சத்து அ'ம்ரின் குமாரத்தியாம் 'பாத்திமாவின் வயிற்றி லுதித்தவர்கள்.) 6. ளி'ரார், 7. அ'ப்'ப'ாஸ் (கி. பி. 566–652).—(இவ்விருவரும் நுடைதலா வயிற்றிற் பிறந்தவர்கள்.) அ'ப்'ப'ாஸ் அவர்கள் நெடுநாள் மட்டும் தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவாதிருந்த போதினும், நபிகள் பெருமானிடம் அத்தியந்த விசுவாச முள்ளவர்களாகவே யிருந்து வந்தார்கள். 8. மு:கவ்விம், 9. ஜஹ்ம்— (அல்அ'ய்த'ா:க் அல்லது தாராள சித்தமுள்ளவர்.) 10. ஹம்'ஜா.— (இம்மூவரும் ஹாலா என்னும் மாது சிரோமணியின் வயிற்றில் தோன்றியவர்கள். ஹம்'ஜா (ரலி') அவர்கள் ஆதியிலே தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவியவர்களுள் ஒருவராவர்;(இவர்கள்தாம் இஸ்லாத்துக்காகத் தற்காப்புப் போர் நிகழ்ந்த உ'ஹத்' யுத்தத்தில் உயிர்துறந்தவர்.) மற்றும் இரு குமாரர்களின் பெயர்கள் :கு:தம், மு:கீரா என்பனவாம்; இவ்விருவருக்கும் சந்ததி யொன்றுமில்லை போலும். இக் காரணத்தினாலேதான் அ'ப்'து'ல் முத்தலிபி'ன் குமாரர்கள் பதின்மரென்று வேறுசில சரித்திராசிரியர்கள் அபிப்பிராயப்படுகின்றனர் போலும்?

அ'ப்'து'ல் முத்தலிபி'ன் குமாரிகள்: 1. ஆ''தி:கா, 2. உமைமா, 3. அர்வா, 4. ப'ர்ரா, 5. உம்மு' ஹ(க்)கீம் அல்லது அல் பை'ல'ா— (அழகுடையவள்)— (இவர்களெல்லாரும் 'பாத்திமாவின் வயிற்றி லுதித்தவர்கள்.) 6. ஸ'பிய்யா; இவர் ஹாலா என்பவர் வயிற்றில் வாய்த்தவர். இந்த ஸ'பிய்யாவே அவ்வாம் என்பவரை மணந்து கொண்டவர்; இந்த அவ்வாமே, இஸ்லாத்தின் சரித்திரத்தில் அளவற்ற கீர்த்தியுடன் மிக்க புகழ்பெற்று விளங்கிய அ'ப்'து'ல்லா ஹிப்'னு 'ஜுபை'ர் என்னும் பெரியாரின் பாட்டனா ராவார்.

அ'ப்'து'ல் முத்தலிபி'ன் பன்னிரு குமாரர்களும் சுகஜீவிகளாய் இருந்து வந்ததைக் கண்ட அத் தந்தையார் மனம்பூரித்துப் புளகாங்கிதங் கொண்டு, தம்முடைய குமாரர்க ளனைவரையும் அழைத்துக்கொண்டு, தமது முன் நேர்ச்சையின்படி ஓர் ஆண்குழந்தையைத் தமக்குரிய தெய்வங்களுக்குப் பலி கொடுக்கக் கஃ'ப'த்துல்லாவை நோக்கிச் சென்றார். அப் பன்னிருவரின் பெயர்களையும் வெவ்வேறு சீட்டுக்களில் வரைந்து, அவற்றுள் ஒன்றை அங்குள்ள பூஜாரியைக் கண்ணை மூடிக்கொண்டு எடுக்குமாறு வேண்டிக் கொண்டார். அவ்வாறு அப்பூஜாரி எடுத்த சீட்டில் அ'ப்'து'ல்லா(ஹ்)வின் பெயர் பொறிக்கப்பட் டிருந்தது. அவ்வாறே அக் குமாரரை அ'ப்'து'ல் முத்தலிப்' பலிபீடத்துக் கருகில் இட்டுச் சென்றபொழுது, அவருடைய பெண்மக்க ளெல்லாரும் அழுதுபுலம்பி, ஆறுய்ப்பெருகி, அ'ப்'து'ல்

லா(ஹ்)வை விட்டுவிட்டு, அவருக்குப் பதிலாகப் பத்து ஒட்டகங்களைப் பலி கொடுக்குமாறு வேண்டிக் கொண்டார்கள். அவ்வாறே பத்து ஒட்டகங்களின் பெயரை ஒரு சீட்டிலும், அ’ப்’து’ல்லா(ஹ்)வின் பெயரை ஒரு சீட்டிலும் எழுதிப்போட்டு, முன்போலவே அந்தப் பூஜாரியைக் கொண்டு எடுக்கச் செய்தார்கள். அப்பொழுதும் அ’ப்’து’ல்லா(ஹ்)வின் பெயர் எழுதப்பட்ட சீட்டே வந்தது. பிறகு இருபது ஒட்டகங்களென்று எழுதிப் போட்டுப் பார்த்தபோதும், அந்த அ’ப்’து’ல்லா(ஹ்)வின் சீட்டே கைக்கு வந்தது. இவ்வாறே மேன்மேலும் பப்பத்தாகக் கூட்டிக்கொண்டே போகப் போக, இறுதியில் ஒருநூறு ஒட்டகமென்று எழுதிப் போட்ட போதுதான் அ’ப்’து’ல்லா(ஹ்)வின் சீட்டு எடுபடாமல் அவ்வொட்டகங்களின் சீட்டு எடுபட்டது. உடனே அ’ப்’து’ல் முத்தலிப்’ அதிக சந்தோஷத்துடனே அந்த ஒருநூறு ஒட்டகங்களையும் பலியாகக் கொடுத்து, அ’ப்’து’ல்லா(ஹ்)வை மீட்டுக்கொண்டு வந்தார். அ’ப்’து’ல்லா(ஹ்)வைப் பலியிடாது பப்பத்து ஒட்டகங்களாகச் சேர்த்துக் குலுக்குசீட்டுப் போடவேண்டுமென்னும் யோசனையைக் :குறைஷித் தலைவர்கள்தாம் கூறினார்களென்று வேறு சரித்திராசிரியர்கள் கூறுநிற்பர். அன்றியும், அந்தப் பலிபீடத்துக்குக் கொண்டு போகப்பட்ட அ’ப்’து’ல்லா(ஹ்)வின் சந்ததியின் மூலபுருஷரான இஸ்மாயீ’ல்நபி அவர்கள் தங்கள் தந்தையான இப்’ராஹீம்நபி அவர்களின் கனவை உண்மையாக்கிக் காட்டும்பொருட்டு முன்னொரு முறை பலிபீடத்துக்குக் கொண்டு போகப்பட்டார்களென்பதையும் மறந்து விடுவது கூடாது. எனவே, இதற்காகத்தான் எம் நாயகம் (சல்) அவர்கள், “யான் பலியிடக் கொண்டு செல்லப்பட்ட இருமனிதர்களின் புதல்வனா யிருக்கிறேன்,” என்று திருவுளமா யிருக்கின்றார்கள்.

இப்படிப்பட்ட அருமை அ’ப்’து’ல்லா(ஹ்)வுக்கு இருபத்துநான்கு வயதானபோது, ய:த்ரிப்’ நகரத்துள்ள ’ஜாஹ்ரா என்னும் கோத்திரத்துக்குத் தலைவராய் விளங்கிய வஹ்ப்’ பி’ன் அ’ப்’து’ மனா‘பின் செல்வக் குமாரியாம் ஆமினாவுடன் அன்னவர் திருமணம் முடித்துவைக்க எண்ணங் கொண்டார். ’ஜாஹ்ராவென்னும் அக்கூட்டத்தினர் :குறைஷிகளெல்லாரைக் காட்டினும் மிகமிக மேலானவர்களாகவே யிருந்துவந்தனர். அத்தலைவரின் குமாரியான ஆமினா அவர்கள் அதுசமயம் தங்கள் சிறிய தந்தையான உஹைப்’ என்பவரின் விடுதியில் இருந்துகொண் டிருந்தார்கள். ஆதலின், அ’ப்’து’ல் முத்தலிப்’ அவர் வீட்டுக்கே சென்று விவாக விஷயத்தைத் தெரியப்படுத்தியதைக் கேட்டுச் சிறிய தந்தையான உஹைப்’ம் அச் சுபச்செய்தியை அப்படியே ஏற்றுக்கொண்டு விட்டார். பிறகு விவாகமும் நல்ல முறையில் நிறைவேறிற்று. இங்கு மற்றொரு விஷயத்தையும் தெரிந்து கொள்ளுதல் வேண்டும். அஃதாவது, அதே சமயத்தில் உஹைப்’ என்பவரின் சொந்தக் குமாரியான ஹாலா வென்னும் பெண்ணை அ’ப்’து’ல் முத்தலிப்’ தாமே விவாகமுடித்துக் கொண்டார். அவரிடமிருந்தே ‘ஹ’ம்ஜத்

ஹம்'ஜா தோன்றினார்கள். இதே ஹாலர்தான் நபிநாயகம் அவர்களுக்கும் பால் கொடுத்திருக்கிறாரென்று அல்லாமா ஷிப்'லீ அறைந்திருக்கிறார். இதனால் ஹம்'ஜா (ரலி') நாயகத்துக்குப் பால்குடி முறையால் சோதரருமாவர்.

அதுபொழுது அ'ப்'து'ல்லா(ஹ்) அம்மக்கமா நகரின்கண் இணையற்ற ஒரு சௌந்தரியம் மிக்க யௌவன புருஷராய் விளங்கிவந்தார். எனவே, இவரது விவாகத்தைப்பற்றி ஓர் ஆதாரமற்ற விந்தையான கதையும் கூறுவதுண்டு:— ஒரு நாள் அ'ப்'து'ல் முத்தலிப்' தம் மிளைய குமாரராகிய அ'ப்'து'ல்லா(ஹ்)வைத் தங் கரங்கொண்டு பற்றிக் கஃ'ப'ாவைவிட்டு வெளியில் அழைத்துச் சென்றார். அப்பொழுது கஃ'ப'ாவின் வாயிற்படியில் ப'னூ அஸத்' வர்க்கத்தைச் சார்ந்த :கு'திலா என்னும் பெண்ணொருத்தி குந்தியிருந்தாள். இவள், பண்டை வேதங்களில் அவ் வரப்நாடு முழுதும் மகா நிபுணத்துவம் பெற்று விளங்கிய வர:கா இப்'னு நௌ'பல் என்னும் பெரியாரின் சகோதரி யாதலின், அவரது வாய்மூலம் 'பாரான்' பிரதேசத்தில் ஒரு திருநபி அவதரிக்கப் போகின்றாரென்றும், அந்தத் திருநபியின் அவதாரக் காலம் அவரது தந்தையின் முகத்தினின்று வெளியாகும் ஒரு வகைத் தேஜஸைக்கொண்டு அறியப்படக் கிடக்குமென்றும் கேள்வியுற்றிருந்தாள். இந்தக் :கு'திலா அங்கிருந்தபடியே அ'ப்'து'ல்லா(ஹ்)வின் நெற்றியினின் றிலங்கிய அந்தத் தேஜஸைக் கண்டு வியப்புற்று, "நீர் எங்குச் செல்லுகின்றீர்?" என்று அவரிடம் நெருங்கி வினவினாள். அதற்கு, "என் தந்தை அழைத்துச்செல்லும் இடத்தை நாடிச் செல்லுகிறேன்," என்று அ'ப்'து'ல்லா(ஹ்) விடை கொடுத்தார். "சற்றுப் பொறும்! உமக்காக உமது தந்தையார் பலிகொடுக்க விரும்பிய அந்த நூறு ஒட்டகங்களையும் உமக்குச் சம்மானமளிக்க விரும்புகிறேன்; நீர்மட்டும் என்னை இப்பொழுதே விழைதல் வேண்டும்," என்று அப்பெண் சற்றும் நாணமில்லாது சட்டெனை வேண்டினாள். அதற்கு, "நான் என் பிதாவுடனே செல்லுகின்றேன்; இவரை யன்றி, சுயமே யாதொன்றும் செய்யத் துணியேன்; இவரது கட்டளையை மீறியும் நடவேன். இப் பெரியாரது முன்னிலையில் இவ்வாறு என்னைக் கேட்க உனக்கு லஜ்ஜை யில்லையா?" என்று விடைகொடுத்தார்.

அ'ப்'து'ல்லா(ஹ்)வுக்கும் ஆமினாவுக்கும் விவாகம் நடைபெற்றபின், அதுசமயம் அவரது அழகைக் கண்டு தமக்கு அப்புருஷன் கிடைக்கவில்லையே யென்று அந்நகரத்துப் பலப்பல பெண்மணிகளும் ஏமாற்றத்தால் விரகவேதனை தாளாது வியாதியுற்றனரென்று ஆதாரமற்ற சரித்திரம் ஒன்று அறைந்திருக்கின்றது. அவ்வாறே :கு'திலாவும் ஏமாற்ற மடைந்தாள். பிறகு ஆமினாவுடன் விவாகம் முடிந்து மூன்று நாட்கள் கழிந்த பின்பு அ'ப்'து'ல்லா(ஹ்) அவ்வழியே சென்றபோது, எதிரில் வந்த :கு'திலா அவரை ஒரு சிறிதும் மதியாததைக் கண்டு, விஷயம் என்னவென்று விசா

ரித்தார். இதற்கு அப் பெண்மணி, "எனக்கு உம்மீது இப்பொழுது காதல் உதிக்கவில்லை. நீர்தாமோ அ்ப்'துல் முத்தலிபி'ன் குமாரர்? உம் மீது யான் கொண்டது வெறும் காமமன்றே! உம்முடைய நெற்றியினின்று அன்று பிரகாசித்த தேவஜோதியைக் கண்டு, 'உலக ரக்ஷகராய அந்த மகா புருஷனை' என தடிவயிற்றில் கொள்ளலாமென ஆவல்மிக் கிருந்தேன். ஆனால், உமது விவாகத்துக்குப் பின்னே அவ்வொளியை நான் நும் வதனத்தின்மீது காணவில்லை. ஆதலின், நீர் எனக்கு இனி வேண்டாம்," என்று கூறிப் போய்விட்டாளென்று சில சரித்திராசிரியர்கள் ஆதார மில்லாது அறைந்து வைத்திருக்கின்றனர்.

எனவே, பிறகு அ்ப்'துல்லா(ஹ்) ஆமினா என்னும் இவ்விரு தம்பதிகளும் சீரும்சிறப்பும் மிக்க இருபெருங் குலத்திலுதித்தவர்களென்பதில் எட்டுணையும் ஐயமின்று; இது மாத்திரமென்றா எண்ணுகின்றீர்கள்? ஆண்பெண்களுக் கிடையில் தம்பதி தர்மமென்பது முயற் கொம்பாய் விளங்கிவந்த அப்பண்டைக் காலத்தில் இவ்விரு சதிபதிகளும் அளவுகடந்த பரிசுத்தத்துடனே விளங்கிவந்தார்களென்பதே ஓர் ஒப்புயர்வற்ற கண்ணியமாய் இன்றளவும் கருதப்பட்டு வருகின்றது.

"இற்புகுந் தெழுமதி இலங்கு மாமணி
விற்புரு வக்கடை மின்கள் நாயகம்
பொற்பெலாம் பொதிந்தபொற் கொடிநற் பூவையர்
கற்பெலாம் திரண்டுருக் கொண்ட கன்னியே!"

"அறத்தினுக் கில்லிடம் அருட்கோர் தாயகம்
பொறுத்திடும் பொறுமையில் பூமிக்(கு) எண்மடங்(கு)
உறைப்பெரும் குலத்தினுக்(கு) ஒப்பி லாமணி
சிறப்பினுக்(கு) உவமையில் லாத செல்வியே!"

என்று சீறா வென்கிற புராணத்துக் குடையாரும் செப்பியுள்ளார், ஆமினா அம்மாளைக் குறித்து.

அ்ப்'துல்லா(ஹ்)வுக்கு மணமுடிந்து அடுத்த வருடம் அவ்வரப் தேசத்தில் பலசம்பவங்கள் நிகழ்வுற்றன. அவையனைத்திலும் நம் நபிகள்திலகம் திருவவதாரம் புரிதற்குரிய முன்னறிக்கையான அற்புதக்குறிகளே காணப்படுகின்றனவென்று சரித வாசிரியர்கள் சான்று கூறுநிற்கின்றனர். அவற்றுள்ளெல்லாம், அவ்வராபிய ரனைவரையும் நடுநடுங்குமாறு செய்துவிட்ட ஓர் ஆச்சரிய சம்பவத்தைப் பற்றி மட்டுமே ஈண்டு யாம் விஸ்தரித்துக் கூறுவாம்: 'ஹப'்ஷா (அபிஸ்ஸீனியா) தேயத்து மன்னனால் யமனுக்கு ராஜப் பிரதிநிதியாக அனுப்பப்பட்டிருந்த "அப்'ரஹத்துல் அஷ்ரம்" என்று மறுபெயர் வழங்கப்பெற்ற அப்'ரஹா என்னும் கிறிஸ்தவ மாகாணாதிபதி ஸன்ஆ' என்னும் நகரத்தில் "கு'லஸா" வென்னும் ஒரு மாபெரிய மாதா

கோயிலைக் கட்டிமுடித்தான். அராபியர்கள் கஃ'ப'த்துல்லாவில் வருஷ மொருமுறை கூடுவதற்கு மாருக அந்த மாதா கோயிலிலே வந்து கூட வேண்டுமென்றும், அங்கே மக்காவில் நடைபெறும் வியாபார முழுதும் ஸன்ஆ'வுக்கே திரும்பிவிட வேண்டுமென்றும் கட்டளை பிறப்பித்ததுடன் நில்லாது, அதன்பின்பு அத்தேச மக்களை யெல்லாம் மெல்லமெல்லக் கிறிஸ்த வர்களாக ஆக்கிவிட வேண்டுமென்றும் அப்'ரஹா தன் உள்ளத்தின் கண்ணே உறுதி கொண்டு விட்டான். ஆனால், அவ் வராபியர் அப்'ரஹாவின் அம் மாதா கோயிலைச் சிறிதும் மதியாததால், இறுதியிலே அவன் கஃ'ப'ா வையே இடித்துத் தரைமட்டமாக்கி விடுவதென்னும் கெட்ட எண்ணத் துடனே மக்காவின்மீது படையெடுத்துச் சென்றான். இது நடைபெற்றது கி. பி. 570-ஆவது ஆண்டிலாகும். அவ்வாண்டின் பெயர் அராபியர் சகாப் தத்தில் "ஆ'முல் 'பீல்"— (யானையாண்டு) என்று குறிக்கப்பட்டிருக்கிறது; அப்'ரஹாவின் சேனையின் பெயரும் "அஸ்'ஹாபு'ல் 'பீல்"— (யானை யுடைய சேனையினர்) என்று ஏற்பட்டுவிட்டது; இப்பெயர் அச் சேனை யிலிருந்த அப்'ரஹாவின் வாகனமான ம'ஹ்மூ தென்னும் நாமத்தையுடைய மாபெரும் யானையின் காரணத்தினால் உண்டாயிற்று. அப்'ரஹாவின் சேனையில் இன்னம்பல யானைக ளிருந்தன வென்று வேறுசிலர் கூறுவர். இவ் விஷயத்தையேதான் எமது :குர்ஆன் ஷரீ'பின் 105-ஆவது அத்தியாய மும் விரித்துக் கூறுகின்றது.*

அப்'ரஹாவின் சைன்யம் மக்காவுக்கருகில் நெருங்கியவுடன் அ'ப்'து'ல் முத்தலிப்' அம் மக்கமாநகரைக் காலிசெய்து விட்டு, அருகினிலிருந்த 'தபீ'ரா என்னும் குன்றின்மீது சென்று இருந்து கொண்டார்; இவ்வாறே ஏனை மக்காவாசிகளும் தத்தமக்குரிய வீடுவாசல்களை யெல்லாம் விட்டுச் சென்று, அக்கம் பக்கத்திலுள்ள குன்றுகளின்மீது ஏறிக்கொண்டனர். அப்பொழுது அ'ப்'து'ல் முத்தலிபி'ன் ஒட்டகங்கள் சிலவற்றை அப்'ரஹா கைப்பற்றிக் கொண்டான். அக்கணமே அ'ப்'து'ல் முத்தலிப்' அப்'ரஹாவி னிடஞ் சென்று, அவ் வொட்டகங்களைத் திரும்பக் கொடுத்துவிடுமாறு கேட்டுக்கொண்ட போது, அந்த அப்'ரஹாவானவன் ஆச்சரிய முற்று, "என்ன! நான் இடித்துத்தள்ள நாடியிருக்கும் கஃ'ப'ா சம்பந்தமாக ஒன்றும் நீர் முறையிட்டுக் கொள்ளவில்லையே!" என்று மிக்க வியப்புடன் வினவினான். அதற்கு அ'ப்'து'ல் முத்தலிப்' பின்வருமாறு தக்க விடை கொடுத்தார்கள்: "யானோ (என்) ஒட்டகங்களின் சொந்தக்காரனா யிருக்

* "யானை (ச்சேனை)யுடையவர்களைக்கொண்டு நும்முடைய ரக்ஷகன் எப்படி(வேதனை யை)ச் செய்தானென்று நீர் கருதிப் பார்க்கவில்லையா? அவர்களுடைய போர்வினையை அவன் நாசத்தி லாக்கிவிடவில்லையா? இன்னம், அன்னவர்கள்மீது கூட்டங் கூட்டமான பறவைகளை அனுப்பினான்; அவை அவர்களைக் கட்டியான கற்களைக்கொண்டு எறிந்து (கொல்லக்கூடிய விதமாய்); ஆதலின், அவன் அவர்களை மெல்லப்பட்ட வைக்கோலைப்போ லாக்கிவிட்டான்."— (அல்'பீல்).

கிறேன். கஃ'ப்'ாவின் சொந்தக்காரனும் (வேறொருவன்) இருக்கிறான்; அதனை அவன் காத்துக் கொள்வான்.'' அன்றியும், மக்காவைக் காலி செய்தவுடன் அ'ப்'து'ல் முத்தலிப்' கஃ'ப்'ாவின் வாயிற்படிச் சங்கிலியைப் பற்றிக்கொண்டு, "(எனக்குக்) கவலை யொன்று மில்லை. மனிதனே தன் வீட்டைக் காத்துக் கொள்ளுகிறான். ஆதலின், நீயே உன்வீட்டைக் காத்துக் கொள். அவர்களுடைய சிலுவையும், அவர்களுடைய சக்தியும் உன்னுடைய சக்தியை ஒருபோதும் வெல்வது முடியா,'' என்று குறை யிரந்து முறையிட்டுக் கொண்டார். அவ்வாறே அப்'ரஹா கஃ'ப்த் துல்லாவை நெருங்குவதற்கு முன்னரே அவனுடைய சேனையுள் விநாச காலம் விபரீதமாய்த் தொடங்கிவிட்டது. அடைக்கலம் போன்ற சிறுசிறு தகைவிலான் குருவிகள் பெரும் படைகளாக வந்து அப்'ரஹாவின் சேனா சமூகங்களைத் தாக்கத் தலைப்பட்டன; ஒவ்வொரு பறவையின் அலகிலும் ஒரு பொடிக்கல்லும், இரண்டு கால்களிலும் இரண்டு பொடிக்கற்களும் கொண்டுவந்து, அவை அவனுடைய படையின்மீது வீசியெறிந்தன. அந்தப் பொடிக்கற்கள் எந்தஎந்த மனிதர்மீது வீழ்ந்தனவோ, அவர்களெல் லாரும் அழிந்தே போயினரென்று சரித்திராசிரியர்கள் கூறியிருக்கின்ற னர்கள். ஆனால், இ'க்ரிமாவின் சொற்படி எவன்மீது அப்பொடிக்கல் வீழ்ந்ததோ, அவனுக்கு அப்பொழுதே வைசூரி கிளம்பிக் கொப்புளித்துக் கொண்டிருந்தது (ரூ'ஹு'ல் மஆ'னீ). எனவே, இப்'னு க:தீரின் மொழிப் படியும் வைசூரியென்னும் கொடிய கொள்ளைநோய் அவனுடைய படை முழுதும் பரவிற்றென்று நாம் தெரிந்துகொள்ளுகிறோம். அப்'ரஹாவுங்கூட இக்கொள்ளை நோயினின்று தப்ப முடியவில்லை. அவன் கடுமையான மன வேதனையாலும் கொடுமையான வைசூரி நோயாலும் அவதியுற்று, ஸன்ஆ' சென்றவுடன் துன்மரணமடைந் தொழிந்தான்.

அன்று பொழிந்த அளவுகடந்த சோனாமாரியால் செத்தாரும் சாவாரும் சமுத்திரத்திற்கு ஒருங்கே அடித்துக்கொண்டு போகப்பட்டனர். எனவே, எஞ்சி யிருந்தோர் அம்மக்கமா நகரைவிட்டு அஞ்சி ஓட்டம் பிடித்தனர். இதனால் அப்'ரஹாவும் மிகவுங் கடுமையான தோல்வியுற்ற வனாய்த் தன் சரீரமுழுதும் அந்த வைசூரிக் கொப்புளங்களால் ரணமாக்கப் பட்ட நிலையில் ஸன்ஆ'வுக்குத் தனியே திரும்பி யோடினான்; அவ்வாறு சென்று சிலதினங்களுக்குள்ளே அப் பாதகன் ஆங்கு எலும்பினின்று சதை சதையாகக் கழன்று, இறந்துபட் டொழிந்தான். இப்'னு ஹிஷாம் இவ்வைபவத்தை விவரித்துக் கூறியதன்பின்னே இறுதியில், "அவ்வாண் டிலேதான் அரப்தேசத்தில் முதன்முதலாக வைசூரிநோய் தோன்ற லாயிற்று,'' என்று கூறி முடிக்கின்றார். அப்'ரஹாவின் சேனாசமூகம் இவ்வாறு ஆண்டவனால் சின்னா பின்னப் படுத்தப்பட்ட அதே தினத்தில் தான் நம்நபிகள் திலகமும்(சல்) இவ்வவனியில் திருவவதாரம் புரிந்தார்க ளென்று சில சரித்திராசிரியர்கள் கூறுநிற்பர்.

இவ் விருத்தாந்த மானது, ஆண்டவன் எவ்வாறு தன்னுடைய கஃ'ப்'ாவை எதிரிகளின் இலக்ஷியத்தினின்று காப்பாற்றி வைத்தானென்பதைச் செவ்வனே தெரிவித்து விடுகின்றது. விக்ரஹ ஆராதனைக்காரரிடம் அதுபோழ்து இருந்துவந்த போதினும், அந்தக் கஃ'ப்'ாவை அப்பொழுது ஆண்டவன் எதிரிகளின் படையெடுப்பினின்று காப்பாற்றியதும் ஒரு குறிப்பிட்ட உத்தேசத்தை நிறைவேற்றி வைக்காமற் போகவில்லை. என்னெனின், அப்'ரஹாவின் படையெடுப்பு நிகழ்ந்த அதே ஆண்டிலேதான் நம் ரஸூலுல்லாஹ் அவர்கள் அம்மக்கமா நகரின்கண் திருவவதாரம் புரிந்து, ஆண்டவனுடைய சத்திய சன்மார்க்கத்தை நிலை நிறுத்திக் கஃ'ப்'ாவின் பரிசுத்தத்தையும் பெருமைப் படுத்தினார்கள். அக்காலத்திய அரபிகள், இப்'ராஹீம் நபியின் அந்தப் பரிசுத்தப் புராதன ஆலயத்தைக் குறித்த பிரார்த்தனையைப் பற்றிக் கேள்வியுற்றிருந்தார்கள். அதுவேயுமன்றி, அன்னவரின் சந்ததியினின்றே ஒரு திருநபி இறுதியில் அவதரித்து அவ் வாலயத்தைப் பரிசுத்தம் பண்ணவேண்டுமென்று அந்தப் பிதாமஹரான இப்'ராஹீம்நபி ஆண்டவனிடம் வேண்டுதல் புரிந்திருந்ததும் அன்னவருக்கு நன்குதெரியும். எனவேதான், அவ்வாண்டவன் அப்'ரஹாவின் அந்தப் படையெடுப்பிலிருந்து தனது திவ்விய பரிசுத்தக் கஃ'ப்'ாவைக் காப்பாற்றி வைத்தானென்று மிகச்செவ்விதாய் இதுகாலை நாம் தெரிந்து கொள்ளுகிறோம்.

அப்'ரஹாவின் படையெடுப்புக்குப் பின்பு அ'ப்'து'ல்லா(ஹ்) அவர்கள் ஷாம்தேசத்தின் தெற்குப் பகுதியிலுள்ள 'க'ஜாவுக்குச் சென்று திரும்பியக்கால் வியாதிகண்டு, ய:த்ரிபி'ல் வந்து தமது தாய்மாமன்மார்களாகிய அ'தீ'யின் குமாரர்களது விடுதியில் தங்கினார்கள். ஆனால், அவ்விடத்திலேயே நோய் அதிகப்பட்டு, ஆண்டவன் கட்டளைப்படி அங்கேயே தமது இருபத்தைந்தாவது பிராயத்திலே மரணமடைந்து, அவ்விடத்திலேயே (மதீனாவில்) நல்லடக்கமும் செய்யப்பட்டார்கள். அவர்கள் அவ்வாறு ஆண்டவன் சோதனையால் தேகவியோகமாய்ச் சிலதினங்களுக்குப் பின்னே ஆமினா அம்மாளின் திருஉதரத்தினின்று ஒரு திவ்ய சிறு குழந்தை இவ்வுலகின்கண் திருவவதாரம் புரிந்தது.— ஸுப்'ஹானல்லா(ஹ்)!

அ'ப்'து'ல்லா(ஹ்) அவர்கள் மரணமாயின போது, நம் நபிகள்திலகம் தங்கள் தாயார்வயிற்றில் இரண்டுமாதக் கர்ப்பவயதுடையவர்களாயிருந்தார்களென்று சில சரித்திராசிரியர்கள் கூறியிருக்கின்றனர்; ஆனால், அ'ப்'து'ல்லாவின் மரணத்துக்குப் பின்னர் இரண்டுமாத கால அளவுக்குள்ளேயே நபிகள் பெருமான் (சல்) திருவவதாரம் புரிந்துவிட்டார்களென்று வேறுபலர் கூறுகிறபர். எவ்வாற்றானும், தந்தை யிறந்தபிறகே தமியராய் நம் ரஸூலெ கரீம் அவர்கள் இவ் வவனியின்கண் தோன்றலாயினார்களென்பதில் சிறிதும் சந்தேக மில்லை. எனவே, எம் ரஸூல் நாயகமவர்கள் இப் பூவுலகின்கண் அப்'ரஹாவின் சேனாசமூக மழிந்து

சுமார் 50 அல்லது 55 தினங்கள் சென்றதன்பின்னே "யானையாண்டின்" ரபீ'உ'ல் அவ்வல் மாதம், பிறை 12, திங்கட்கிழமை, காலை— (கி. பி. 570-இல் ஆகஸ்ட்மீ 29உ) விடிவெள்ளி முளைக்கச் சில வினாடிகளுக்கு முன்னே திருவவதாரம் புரிந்தார்க ளென்பதே பெரும்பான்மையோரின் அவலம்பித்த அவசரக் கூற்றாகும். இது, குஸ்ரூ நவ்ஷேர்வான் அரசாண்ட 40-ஆவது ஆண்டின் இறுதிப் பகுதியாகும். ஆனால், அந்த ஜனனதினம் மற்றொரு சாராரின் சரியான ஆராய்ச்சியின்படி யானையாண்டு ரபீ'உ'ல் அவ்வல் பிறை 9— (கி. பி. 571-இல் ஏப்ரில்மீ, 20உ) என்று கணிக்கப்பட்டுள்ளது. (சல்லல்லாஹு அ'லா மு'ஹம்மதி'ன் சல்லல்லாஹு அ'லைஹி வஸல்லம் !)

"நெறிநிலை திரியா மருண்மத மிகுந்து
நெடுநில மெங்கணும் பரந்து
துறவறந் தவறி யில்லற மடிந்து
சுடரிலா மணியது போலக்
குறைபடுங் கால மிருளெனுங் குபிரின்
குலமறுத் தறநெறி விளக்க
மறுவிலா தெழுந்த முழுமதி போல
மஹ(ம்)மது நபிபிறந் தனரே !"

"பானுவின் கதிரா லிடருறுங் காலம்
படர்தரு தருநிழ லெனலா
யீனமுங் கொலையும் விளைத்திடும் பவநோ
யிடர்தவிர்த் திடுமரு மருந்தாய்த்
தீனெனும் பயிர்க்கோர் செழுமழை யெனலாய்க்
குறைஷியின் திலதமே யெனலாய்
மானிலந் தனக்கோர் மணிவிளக் கெனலாய்
மஹ(ம்)மது நபிபிறந் தனரே !"

—என்றார் உ'மறுப் புலவரும்.

நம் ரஸூல் நாயகமவர்கள் மக்கமா நகரின்கண் யூஸு'ப் நஜ்ஜாரின் குமாரராகிய மு'ஹம்மதி'ன் இல்லமென்று வழங்கப்பெற்ற விடுதியிலே தான் ஜனனமாயினார்கள். அதை நந் திருநபியவர்கள் (சல்) தங்களுக்குரிய வாரிஸ்கிரமப்படி அடைந்திருந்தார்கள்; ஆனால், நபிபெருமானது ஹிஜ்ரத்துக்குப் பின்னே உ'கைல் என்பார் அதனைக் கைப்பற்றிக் கொண்டார். பிறகு இவர் அவ்வீட்டை இறுதியில் யூஸு'பின் குமாரரும், ஹஜ்ஜாஜின் சகோதரரு மாகிய மு'ஹம்மதி'டம் விற்றுவிட்டார். இவ் விடுதி அப்

பெயரால் அபூ'த்தாலிப்' கிளையின் வாஸஸ்தலம்— (ஷிஃ'பெ' அபீ'த்தாலிப்') என்று வழங்கப் பெறுமிடத்தில் 'ஜ(க்)காத்துல் மவாலீத்' என்று அழைக்கப்படும் வீதியிலே அமைந்திருக்கின்றது.

நபிகள் திலகம் அவதரிப்பதற்கு முன்னமே அவர்கள் அன்னையாருக்கு அந்தச் சந்தோஷ சமாசாரம் முன்னறிவிக்கப் பட்டது. அம் மாது சிரோமணியின் வாய்மொழியைக் கொண்டே, அவர்களுக்கு இவ்வுலகினில் கர்ப்பவதியாகும் ஏனை ஸ்திரீகளுக்குக் காணப்படுவது போன்ற கர்ப்பநோய்களும், மற்றைப் பிரசவவேதனைகளும், "வயாவும் வருத்தமும் ஈன்றக்கால் நோவும், கவாஅன் மகற்கண்டு தாய்மறந் தாங்கு," அதிகமாயுண்டாக வில்லையென்று நாம் நன்கு தெரிந்துகொள்ளுகிறோம். நபிகள் பெருமான் தங்கள் தாய்வயிற்றி லிருந்தக்கால், அவ்வரப்தேச முழுதும் நல்ல மழைபெய்து, பூமி செழிப்படைந்தமையான், அத் தேயத்தினர் அவ்வாண்டுக்கு "ஸன·துல் 'பத்'ஹி வல் இப்'·திஹாஜ்" — (வெற்றியும் குதூகலமும் கூடிய வருஷம்) என்று நாமஞ் சூட்டினர். ஆனால், இவ்விடத்தில் நாம், எவ்வாறு நம் ரஸூலுல்லாவின் திருவவதாரத்தின் அறிகுறியாக ஸாவாஃ' என்னும் ஏரி திடீரென்று வறண்டுவிட்டதென்றும், பாரசீகத்தில் அதற்குமுன்னே ஓராயிரத்துக்கு மேற்பட்ட ஆண்டுகளாக ஓயாது எரிக்கப்பட்டுவந்த அந்த அக்கினி வணக்கக்காரரின் பெருநெருப்பானது எவ்வாறு சடுதியில் அணைந்துபோயிற்றென்றும், கு'ஸ்ரூ நவ்ஷேர்வான் என்னும் பாரசீக மன்னனுடைய மாளிகை எவ்வாறு பூகம்பத்தால் அதிர்ச்சி யடைந்ததென்றும், அதன் பயனாக எவ்வாறு அம் மாளிகையின் பதினான்கு ஸ்தூபிகள் இடிந்து வீழ்ந்தனவென்றும் பற்பல ஆசிரியர்கள் எழுதி வைத்திருப்பதை ஈண்டொரு முறை மீண்டும் பெயர்த்தெழுதவேண்டிய ஆவசியக மில்லை.

நபிகள் நாயகமவர்கள் கூறிப்போந்துள்ள பற்பல "நாயக வாக்கியங்க"ளிலிருந்து, இவர்களுக்கு மு'ஹம்மத்' (புகழப்பட்டவர்) என்னும் திருநாமம் பாட்டனார் அ'ப்'து'ல் முத்தலிப்'ால் சூட்டப்பட்டதென்றும், அ'ஹ்மத்' (புகழ்பவர்) என்னும் நாமம் தாயார் ஆமினா அம்மாளவர்களால் வைக்கப்பட்டதென்றும் நாம் நன்கு தெரிந்து கொள்ளுகிறோம். :குர்ஆன் ஷரீ'பிலும் இவ்விரு திருநாமங்களுமே காணப்படுகின்றன. "நான் மு'ஹம்மத்'ாகவும் அ'ஹ்மத்'ாகவும் இருக்கிறேன்," என்று ரஸூலுல்லா அவர்களே திருவாய் மலர்ந்தருளி யுள்ளார்கள். வேறு பல ஸ்தோத்திரப் பாக்களிலும் இவ்விரண்டு நாமங்களும் மிசிரமாகவே கலந்து காணப்படாநின்றன.

இப்பெயர்கள் வைக்கவேண்டிய விஷயசம்பந்தமாக அ'ப்'து'ல் முத்தலிபு'ம், ஆமினாவும் தத்தம் தெய்விகக் கனாத்தோற்றங்களில் தேவதூதர்களால் தூண்டப்பட்டார்க ளென்றும் சரித்திராசிரியர்கள் கூறியிருக்கின்றார்கள். இன்னம், ஆமினாவின் பேறுகாலத்துக்குமுன்னே ஒருநாட் கனவில் தமது

திருமேனியினின்று வெளிப்போந்த ஜோதி யொன்று சிரியாவின்பக்கம் சென்று, அதற்குக் கிழக்கிலுள்ள ப்'ஸ்ரா முதலிய இ்'ரா:க் நகரங்களையெல்லாம் பிரகாசிக்கச் செய்ததாகவும் கண்டார்களாம். மேற் கூறியவாறு ஷாமைப்பற்றியும், இ்'ரா:க்கைப்பற்றியும், பாரசீகத்தைப்பற்றியும் காணப்பட்ட அற்புதங்களெல்லாம் பிற்காலத்தில் ஆங்கெல்லாம் இஸ்லாத்தின் ஜோதி பிரகாசிக்கத் தலைப்பட்டதையே குறிக்குமென்று ஞானவான்கள் நவின்றருளி யிருக்கின்றனர்கள். அதன்பின்பு, பாரசீக கு்'ஸ்ரூக்களின் ராஜ்யாதிகாரம் ஒழிந்துபோனதற்கும், அவனுடைய அரண்மனையினின்று 14 ஸ்தூபிகள் இடிந்துவீழ்ந்த சம்பவமே ஒரு முன்னறிக்கை யாகுமென்றும் கூறுநிற்பர். இவ்வாறு பற்பல விதமான அற்புத நிகழ்ச்சிகளுடனே நம் நபிகள் நாயகமவர்கள் இத் தாரணியின் கண்ணே திருவவதாரம் புரிந்தார்களாம். இதுதான் அப்பெருமானாரின் திருவவதார மாஹாத்மியமு மாகும்.

இங்குக் கூறப்பட்டுள்ள அதியற்புத சம்பவங்களைப் பற்றியும், வேறு பல அதிசயங்களைப் பற்றியு மெல்லாம் மௌலானா சையித் ஸுலைமான் நத்'வீயவர்கள் வரைந்துள்ள ஆராய்ச்சிக் குறிப்பிலே மிகவிரிவாகக் காணப்படும். அப் பரந்த நூலிலே விரிந்து காணப்படுவதைத் திறந்து பார்த்துக் கொள்ளக் கடவீர்களாக.

---

# அதிகாரம்—7

## பெருமானின் சிறுபிராயம்

> **"நாம் நுமக்கு நும்முடைய நெஞ்சத்தை விரிவாக்கவில்லையா? இன்னம், நாம் நும்மைவிட்டு நும்முடைய சுமையை இறக்கினோம் (இல்லையா)? நும்முடைய முதுகைக் கனமா யழுத்திக்கொண் டிருந்த (சுமை); இன்னம், நாம் நும்முடைய கீர்த்தியை நுமக்கு உயர்த்தினோம் (இல்லையா)?— (94: 1—3)**

முன் அதிகாரத்தில் வரைந்திருப்பதேபோல நபிகள்திலகம் (சல்) அவர்கள் இப்பூவுலகின்கண் பற்பல விதமான தெய்விக அற்புதங்களினிடையே திருவவதாரம் புரிந்து, பிறகு இரண்டு தினங்களே தாயார் ஆமினாவின்பால் மார் பூட்டினார்கள். இவ்வாறு மாதாவின் மடிமீதிருந்து அமுதருந்தியது ஏழு நாளென்றும் வேறுசில சரித்திராசிரியர்கள் கூறியிருக்கின்றனர்கள். மேலே கூறியவண்ணம் இரண்டு தினம்வரை தாய்ப்பா லருந்தியபின்பு, அபூ்'லஹபெ்'ன்னும் நம் ரஸூலுல்லாவின் பெரிய தந்தையால் இச்சுபச் செய்தியின் காரணமாக உரிமைவிடப்பட்ட :துவைப்'ா வென்னும் அடிமைப்பெண்

ணுல் பால்கொடுக்கப் பெற்ருர்கள். இவ்வாறு இரண்டு மூன்று நாட்கள் வரை நடந்தேறிய பின்னர் ஏழாவது தினத்திலேதான் அ'ப்'து'ல் முத்தலி பெ'ன்னும் அப்பெரியாரால் அவ்வூர் வழக்கப்படி பெரிய விருந்தொன்று செய்விக்கப்பட்டு, மு'ஹம்மத்' (புகழப்பட்டவர்) என்னும் திருநாமமும் சூட்டப்பட்டது. ஆமினுவின் சகோதரர் ஒரு பெரிய சோதிடரானமையின், அன்னவர் இக் குழந்தையின் ஜன்மலக்னத்தை நன்கு நோட்டமிட்டு, அக் காலையில் கோள்கள் நின்றநிலையை நோக்கி, இஃதொரு பெரிய மதத்தலைவராகவும், மகா ராஜாதிராஜராகவும், அதிகாரத்தால் அளவுகடந்த செல்வாக்குள்ளவராகவும் பின்னெரு காலத்தில் ஆய்விடுதல் கூடுமென்று முன்னறிக்கை செய்துவைத்தார். ஆனுல், அதுபொழுது வைதவ்ய கோலத்தையடைந்திருந்த ஆமினுவின் உள்ளத்தின்கண் துயரமும் துக்கமும் அதுகாலை அதிகரித் திருந்ததனுல், அன்னவர் முலைகொண்டு தமது அருமைக் குழவிக்கு அமுதூட்டுவது அரிதாகிவிட்டது. என்னெனின், ஐந்து ஒட்டகங்களும், சில ஆடுகளும், (உம்மு ஐமன், அல்லது) ப'ரக்கத் தென்னும் 'ஹப்'ஷீப் பெண்ணடிமை யொருத்தியுமே அ'ப்'து'ல்லா(ஹ்) அவர்களால் இறுதியில் விட்டுச் செல்லப்பட்ட சொத்துக்களாம். அன்றியும், அரப் தேசத்தின் பெரியமனிதர்வீட்டுப் பிள்ளைகளுக்கு அவ்வவ்வீட்டுத் தாய்மாரே முலைகொடுத்துப் பாலூட்டுவது அக்காலத்தில் வழக்கமில்லை; மேலும், மக்காவின் உஷ்ணத்தாலும், ஆங்குள்ள வறண்ட காற்றின் கொடுமையாலும் சிறுசிறு குழந்தைகள் அவ்வூரினின்று அப்பாலுள்ள போஷகத் தாய்மார்களிடமே ஒப்படைக்கப்பட்டு விடுவது வழக்கம். இவ் வழக்கம் அராபியத் தலைவர்களுள்ளே தலைமுறை தலைமுறையாய் நெடுங்காலமுதலே நடந்தேறிவந்தது. எவ்வா றெனின், ப'னூ உமையாக்கள் அரசாட்சி செலுத்திவந்தபோது, தங்கள் ராஜ்ய பரிபாலனத்துக்குரிய தலைநகரை (ஷாம்) சிரியா என்னும் பகுதியில் ஏற்படுத்திக் கொண்டனர். இன்னுரின் அதிகாரமும் செல்வாக்கும் ராஜ்யதந்திரமும் கிஸ்ராவ், கை:கஸர் முதலியவர்களுக் கொப்பெனவே கூறிமுடிக்கலாம். இவர்களின் அந்தஸ்தும் அதிகாரமும், கவுரவமும் கண்ணியமும் அத்துணை உயர்ந்தனவாகவிருந்தும், இன்னுரின் சிசுக்கள் (ராஜகுமாரர்கள்) ப'த'விய்யீன்களான காட்டரபிகளிடமே ஒப்படைக்கப்பட்டு வளர்க்கப்பட்டு வந்தனர். ஆனுல், ப'னூ உமையாக்களான க'லீ'பாக்களுள், வலீத்' பி'ன் அ'ப்'து'ல்மலிக் கென்பவர் மாத்திரம் வேறு சில காரணங்களை முன்னிட்டுக் கிராமத்தில் காட்டரபிகளின் இல்லங்களில் வளரும்படி செய்யப்படாது, அரசமாளிகையிலேயே சிறப்புடன் வளர்க்கப்பட்டு வந்தார். இதனுலுண்டான அப்பிரயோஜன மென்னவெனின், இவருக்குச் சரியாகவும், அழகாகவும் அரபு பாஷையில் பேசமுடியாம லிருந்ததேயாம். எனவேதான், மேற்கூறிய முறைப்படியே இச் செல்வச் சிறுகுழவியும் ஹவா'ஜின் கூட்டத்தைச் சார்ந்த ஸஅ'தி'ன் மரபில் வந்த 'ஹலீமா (சாந்த குணசீலி) என்னும்

"ப'த்'உ" வம்ச மாதிடம் ஒப்படைக்கப் பட்டது. இவ் வம்மையாரின் சொந்த நாடு : தாயி'புக்குத் தெற்கேயுள்ள மலைப்பிராந்தியத்தின் நடுவிலே யுள்ளதாகும்.

இம்மாது— ('ஹலீமா பி'ன்த் ே'ஜப்') தமக்கு ஆமினுவின் செல்வக் குழந்தை கிடைத்ததைப்பற்றிப் பின்வருமாறு கூறுகின்றார்: "அவ்வருடம் ஒரு மாகொடிய வறுமைக்காலமாய்க் காணப்பட்டது; ஆதலின், யானும் என் கணவர் ஹாரி:த் பி'ன் அ'ப்'து'ல்உ''ஜ்'ஜாவும் மிக்க வேதனையுள்ளே சிக்கியவராய், மக்காவுக்குச் சென்று ஒருகுழந்தையை வளர்ப்பதற்குக் கொண்டு வந்தேனும் அதனிமித்தம் கிடைக்கும் ஊதியத்தைக்கொண்டு ஒருவாறு வயிறுவளர்க்கலா மென்று எமக்குள்ளே தீர்மானம் செய்துகொண்டோம். எனவே, இவ்வாறு குழந்தையொன்று கொண்டுவரும்நோக்கத்துடனே புறப்பட்டுச் சென்ற எங்கள் வர்க்கத்து மற்றும்பல பெண்களுடனே நாங்களும் சேர்ந்துகொண்டோம். யான் ஏறிச்சென்ற பெண்கழுதை பஞ்சத்தால்வாடிப் போயிருந்தமையான், வழியில் என்னைத் தாங்கமாட்டாது இடுப்பொடிந்து வீழ்ந்துவிடும்போலே காணப்பட்டது; இதனால் எனக்கு அந்த இரா முழுதும் நித்திரையே சிறிதுமில்லாது போய்விட்டது. என் குழந்தையும் தனக்குப் பாலில்லாமல் இராமுழுதும் பசிப்பிணியால் அதிகம் கத்திக் கொண்டே வந்தது. ஆனால், அதற்குக் குடிக்கக் கொடுக்க ஒருசிறிது பாலும் என்மார்பிலேனும், என்புருஷன் ஓட்டிக்கொண்டு வந்த பெண்ணொட்டகத்தின் மடியிலேனும் பீச்சக் கிடைக்கவில்லை. இத் தன்மைத்தாய வறிய நிலைமையில் யான் எவ்வாறு பால்கொடுத்து வளர்க்க ஒரு செல்வரின் குழந்தையைப் பெறப்போகிறே னென்னும் ஏக்கமே எனக்குள் அன்று அதிகரித்துவிட்டது.

"இவ்வாறு யாங்கள் அளவற்ற கஷ்டப்பட்டுக் கொண்டே எல்லாருக்கும் பின்னே மக்காவிற்குச் சென்று சேருமுன்னே அவ்வாண்டில் பிறந்திருந்த அத்தனை குழந்தைகளையும் அதற்குமுன் வந்த என் வர்க்கத்தினர் அனைவரும் பங்கிட்டுக் கொண்டுவிட்டனர். ஆனால், மு'ஹம்மத்' என்னும் தந்தையற்ற குழந்தை ஒன்றுமட்டுமே யான் சென்றபோது, அந்நகரில் எஞ்சி யிருந்தது. அதற்குப் பெற்ற தகப்ப னில்லாததாலும், அக்குழவி ஏழை மகவா யிருந்ததாலும் அச்சிசுவை எவரும் எனக்குமுன்னே விரும்பி எடுத்துக்கொள்ள வில்லை. யானும் ஆரம்பத்தில் அவ்வாறே அக்குழந்தை வேண்டாமென்று கூறி வந்துவிட்டேன்; ஆனால், குழந்தை யொன்று தேடி மக்காவரை வந்து, ஒரு குழந்தையும் கிடைக்கப்பெறாது வெறுங்கையுடனே வீடு திரும்புவ தென்பது எனக்கு அடக்கொணா ஆத்திரத்தையும் வெட்கத்தையுமே கொடுத்தது. இதைக் கண்டு என் வர்க்கத்து ஏனைச் சகோதரிகள் நகைப்பார்க ளென்னும் லஜ்ஜையும் என்னை மற்றொருபுறத்தில் வாட்டிக் கொண் டிருந்தது. அன்றியும், மு'ஹம்மதெ'ன்னும் அச்சிறு குழவியின் அழகியவதனமும் என்னுள்ளத்தை அதிகம் வாட்டிவதக்கத் துவக்கிற்று.

உடனே ஏதோஒர் அற்புதமாயமாக, என்னை யறியாமலே என் மார்பிரண்டும் பால் சுரந்து பொங்கிவழிவதே போன்ற எண்ணமொன்று என் மனத்துள்ளே தோன்றிற்று. எனவே, அக் குழந்தையை வளர்ப்பதால் அதிகமான பிரதிப்பிரயோஜனத்தை எதிர்பார்க்க முடியாமற் போயினும், யானே அச் சிசுவை எடுத்துச்செல்ல வேண்டுமென்று என் கணவரிடம் வற்புறுத்திக் கூறினேன். அவரும், ஆண்டவனருளால் அக்குழந்தையின் பாக்கியத்தாலேனும் எங்கள் குடும்பத்துக்குச் சிறிது நல்லகாலம் விளையக் கூடுமென்று இயம்பினார். இவ்வளவே போதுமென்று கொண்டு, யானோடிச் சென்று, அயர்ந்து நித்திரை செய்துகொண்டிருந்த அந்தச் சௌந்தரிய சிசுவைத் தொட்டு, அதன் நெஞ்சின்மீது என் கையை வைத்தேன்; உடனே அது விழித்துப் பார்த்தது; அக்கணமே யான் அதன் புருவ மத்தியில் முத்தியிட்டு, உச்சிமோந்து உள்ளங் குளிர்ந்து, என் மார்புறத் தழுவித் தூக்கி வந்து, எங்கள் வர்க்கத்தினர் தங்கியிருந்த இடம் சென்று சேர்ந்தேன். ஆங்குச் சென்றவுடனே அவ்வழகிய குழவிக்கு என் வலப்பக்கத்து முலையைக் கொடுத்தேன். அதுபொழுது ஆண்டவனருளால் அக்குழந்தைக்குப் போதுமான பால் அங்கிருந்தே பொங்கிவிட்டது.

" அன்று காலையில் என்கணவர் தமது ஒட்டகத்தின் மடியினின்று வேண்டியஅளவு பால்கறந்ததால், யானும் என்வயிறாரக் குடித்து, அன்றிரா முழுதும் அயர்ந்து நித்திரைசெய் தெழுந்தேன். மறுநாட் காலையில், என் கணவர் என்னை நோக்கி, யானோர் அதிருஷ்டமுள்ள நல்ல குழந்தையையே பொறுக்கி யெடுத்துவந்ததாகக் கூறினார். பிறகு யான் ஏறிச்சென்ற பெண் கழுதை மற்றவர்களுடைய வாகனங்களுக்குச் சற்றும் பின்வாங்காது சென்றதுடன் நில்லாது, அவற்றிற்கு முன்னேயும் பாயத் துவக்கிற்று. இதைக் கண்ட ஏனைய ரெல்லாரும் யான் மக்கத்தை நோக்கிச் சென்ற போது ஏறிச்சென்ற கழுதைதானோ அதுவென்று ஆச்சரியங்கொண்டு, அது வாஸ்தவமாயின், என் பெண்கழுதைக்கு ஏதோ நல்லகாலம் வந்து விட்டதென்றே கூறத் தொடங்கினார்கள்.

" எங்கள் நாடு அவ்வாண்டில் என்றுமில்லாத வறட்சியையும் உஷ்ணத்தையுமே அடைந்திருந்தது; எங்களுடைய ஆடு மாடு ஒட்டகங்களெல்லாம் அதற்குமுன் எப்பொழுதும் அடைந்திராத வெக்கையையே யடைந்திருந்தன. ஆனால், மு'ஹம்மத்'(சல்) எங்களிடம் வந்ததன்பின்னால் எங்களைப் பற்றியிருந்த எல்லாவிதமான க்ஷாமங்களும் க்ஷீணங்களும் அடியோடு ஒழிந்துபோய் விட்டன. எப்படிப்பட்ட க்ஷேமகாலங்களிலும் காணப் படாத அப்படிப்பட்ட முன்னேற்றங்களை யெல்லாம் எங்கள் கால்நடைகள் அடைந்துகொண்டு வந்தன. இத்துணைப் பாலைக்கொண்டு யாங்கள் என் செய்வதென்னும் திகைப் புண்டாகும்படியான அத்துணை யதிகமான பாலை யெல்லாம் எங்கள் பெண்ணொட்டகங்கள் கறக்கத் தலைப்பட்டன. இதனைக் கண்ணுற்ற அக்கம்பக்கத்து ஜனங்கள் தங்கள் கால்நடைகள் எங்கள்

பிராணிகளேபோல அத்துணைப் போஷணையுடன் காணப்படாததைக் கண்டு, அவர்கள் தங்களுடைய ஆடு மாடு மேய்ப்பவர்கள்மீது பழிசுமத்தித் தங்கள் மிருகங்களையும் 'ஹலீமாவின் மிருகங்கள் மேய்க்கப்படும் தரைகளுக்கு ஓட்டிக் கொண்டுபோய் மேய்க்கும்படி கட்டளையிட் டனுப்புவார்கள். ஆயின், அன்னவரின் கால்நடைகளெல்லாம் எங்களுடைய கால்நடைகளேபோல் தேர்ச்சி பெறவில்லை.

''மு'ஹம்மத்' (சல்) எங்களில்லத்தி லிருந்தமட்டும் எங்களுடைய சகல விதமான காரியங்களும் அதிக க்ஷேமகரமாகவே நடைபெற்று வந்தன. இரண்டு வருடங்கள் மட்டும் யான் அக் குழந்தைக்குப் பால் கொடுத்தே பிறகு நிறுத்தினேன். அதுவரை அச் சிசுவின் நடைமுறைகளெல்லாம் மிக்க அசாதாரணமாகவே காணப்பட்டுவந்தன. பிறந்து ஒன்பதாவது மாதத்திலேயே அக்குழந்தை கேட்போ ருள்ளம் கனிந்துருகுமாறு அத்துணை இனிமையாகவும் திருத்தமாகவும் வசனிக்கத் துவக்கிற்று. அக் குழந்தை எப்பொழுதுமே அசுசியாய்ப் போவதைச் சகிப்பதில்லை. தன்னுடைய மர்மஸ்தானங்கள் தற்செயலாய் வெளியில் காணப்படும் போதல்லது, மற்றைக் காலங்களில் அச் சிறுகுழந்தை அழுததே கிடையாது. இராக் காலங்களில் உறக்கம் பிடியாது சிற்சில வேளைகளில் சங்கடப்படுமாயின், யான் அக் குழந்தையை யெடுத்துவந்து, திறந்த வெளியில் வானத்தை நோக்கிக் காண்பிப்பேன். அஃது ஆங்குள்ள நக்ஷத்திர கிரஹங்க (உடுக்குலங்க)ளைக் கண்ணுற்றுக் களிப்பெய்தி உடனே தன் கண்களை மூடிக் கொண்டு அயர்ந்த நித்திரையுள் ஆழ்ந்துவிடும்.'' இக்கூறிய விருத்தாந்தத்தி லெல்லாம் ஆதாரமற்ற விஷயங்கள் அநேகம் காணப்படுகின்றன வென்று மௌலானா சையித்' ஸுலைமான் நத்'வீ அவர்கள் அறைந்திருக்கின்றார்கள். நிற்க.

அந்தச் செவிலித் தாயாகிய 'ஹலீமா அம்மாளவர்கள் பிறகொரு சமயம், நபிகள்பெருமான் (சல்) க'தீ'ஜாபிராட்டி (ரலி') அவர்களை மணந்து கொண்டதன் பின்னர் மக்காவுக்குச் சென்று பார்வையிட்டார்கள். அது சமயம் அந்த நபிகள்திலகம் க'தீ'ஜா (ரலி') அவர்களிட மிருந்து பெற்ற வெகுமதிகளைக்கொண்டு 'ஹலீமா அவர்களைச் சந்தோஷப்படுத்தி யனுப்பினார்கள். மற்றொருமுறை நபிகளுதர் தங்கள் செவிலித்தாய்மீது வைத்திருந்த அன்பின் பெருக்கத்தால் தங்களுடைய மேலாடையை விரித்து, அதன்மீது அந்த அம்மாளவர்களை அமரும்படி உபசரித்து, அவர்கள்மீது தங்கள் திருக்கரத்தையும் வைத்து அதிக சந்தோஷத்துடனே யோக க்ஷேமங்களை விசாரிக்கத் தலைப்பட்டார்களாம். மக்கமா நகர் பிடிபட்டதன் பின்னர் நம் ரஸூலுல்லாஹ் அவர்கள் :துவைப'ாவினிடத்தும் அவ்வாறே நடந்துகொண்டதாக ஒரு சரித்திரம் கூறுகின்றது.

மீக் கூறியவாறு 'ஹலீமா அம்மாளவர்கள் அச்சிறு குழவியாம், அ'ஹ்மது'ர் ரஸூலுல்லாவாகப் போகின்ற அந்த மு'ஹம்மதை' அளவு

கடந்த பிரியத்துடனே தாலாட்டிப் பாலூட்டிச் சீராட்டிப் பாராட்டிச் சுமார் ஈராண்டுகள்மட்டும் தமதில்லத்திலே வைத்துக்கொண் டிருந்து, அப்பால் பால்மறந்த அவ்விளங் குழந்தையை அதற்குரிய அன்னையார் வதிந்துவந்த மக்கமாநகருக்குத் தூக்கிச் சென்றூர்கள். அப்பொழுது அந்தப் பட்டணமுழுதும் ஒருவகை வியாதியே அதிகரித்திருந்ததோ டமையாது, ஆங்கிருந்த சீதோஷ்ண நிலைமை அக்குழந்தைக்கு அதிகதிருப்திகர முள்ள தாகவும் காணப்பட வில்லை. அதனை யுணர்ந்த 'ஹலீமா அவர்களும் ஆமினு அம்மா ளவர்களிடம் கூறிக் குறையிரந்து, அதிகம் மன்றூடி, மீண்டும் அச்செல்வச் சிறுகுழந்தையைத் தமது ''ப்'ாதி'யா''வுக்கே திருப்பித் தூக்கிச்செல்ல அனுமதி கோரி நின்றூர். ஊரின் நிலைமையையும், குழந்தையின் இளமையையுங் கண்டு, அன்னை ஆமினு அவர்களும் தங்கள் வாத்ஸல்யத்தை ஒருவாறு சகித்துக்கொண்டு, மீண்டும் அச்சிறுவரை ப்'ாதி'யாவுக்கே கொண்டுசெல்லும்படி அனுமதி கொடுத்துவிட்டார்கள்.

அங்கு 'ஹலீமாவின் சுதேசமாகிய ப்'ாதி'யாவின் பரிசுத்த, திறந்த மணல் வெளியிலேதான் நமது இளங் குழந்தையின் முதன்முதலான ''தப்படிகள்'' எடுத்துவைக்கப் பட்டன. ப்'னூ' ஸஅ'த்' இனத்தவர் வசித்துவந்த அந்த ப்'ாதி'யாவின் குன்றுகளில் பூக்கும் புஷ்பங்களின் வாசனையும், அந்தப் பரந்த மணல்வெளிகளில் இராக் காலத்தில் வீசும் பரிசுத்தமான காற்றுமே மு'ஹம்மத்' (சல்) அவர்களுடைய மூளையையும் தெளிவுறச் செய்து, உள்ளத்தையும் அதிகம் ஊக்கி விசாலிக்கச் செய்தன. ஆங்கிருந்துவந்த சீதோஷ்ண நிலைமையின் பெருமையாலும், அந்த ப்'ாதி'யா வாசிகளின் ஆகார விசேஷத்தாலும் இந்தச் செல்வக் குழந்தையும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகத் தேகவன்மையிலும் முகவசீகரத்திலும் அதிகம் அபிவிருத்தி யடைந்துகொண்டே வந்தது. பிற்காலத்தில் இவர்களுக் கேற்பட்ட கஷ்டநிஷ்டூரங்களை யெல்லாம் சகித்துக் கொள்ளுதற்குப் போதுமான சக்தியையும் சாமர்த்தியத்தையும் இக்கூறிய நன்மைகளே கொடுத்துதவின வென்பது திண்ணமேயாம். என்னெனின், ரஸூல் நாயகமவர்களே அடிக்கடி இவ்வாறு சொல்வது முண்டு: ''ஆண்டவன் எனக்கு இரண்டுவித விலைமதிக்க வொண்ணுத அருட்கொடைகளை யளித்துள்ளான்: முதலாவதாக, இந்த அரப்நாடு முழுதிலும் மேன்மையுற்று விளங்கும் :குறைஷிகளின் வம்சத்திலே யான் தோன்றினேன்; இரண்டாவதாக, 'ஹிஜா'ஜ் முழுதிலும் பேச்சுவன்மையில் பெயர்போன இடமெனக் கருதப்படும் ப்'னூ ஸஅ'த்'கள் குடியிருக்கும் ப்'ாதி'யாவிலே வளர்ந்தேன்.''

அவ் விளங் குழந்தைப் பருவத்தே நம் ரஸூல் நாயகமவர்கள் மற்றைச் சிறூர்களுடன் ஆடுமேய்க்குந் தொழிலில் ஈடுபட்டுச் சிற்சில வேளைகளில் ஆங்குள்ள குன்றுகளின் மீதும், குறுகிய கருங்கற்பாறைகளின் உச்சியிலும் ஏறிச்சென்ற போதினும், பெரும்பாலும் ஆங்கிருந்துவந்த

வாலிபத் துஷ்டக் குழந்தைகளாகிய "ப'த'வீ"ச் சிறுர்களுடனே அதிகம் கலந்துகொள்ளாது நபிகள்பிரான் (சல்) தன்னந்தனியே பிரிந்துசென்று, மறைவான இடங்களி லிருந்துகொண்டு, சுயமே தியானசமாதியுள் மூழ்கியவரேபோல் காணப்படுவதுண்டு. அவ்வாறு நிகழ்ந்துவருங்கால், அவர்களுக்கு உத்தேசம் ஒரு மூன்று வயதானபோது, ஒருநாட் காலையில் இச்சிறுவரும், இவருடைய போஷகமுறைச் சோதரரான, 'ஹலீமாவின் சொந்தக் குமாரர் அ'ப்'து'ல்லா(ஹ்)வும் தங்களுக்குரிய ஆடுகளை மேய்க்கும் பொருட்டு வெளியிலுள்ள மேய்ச்சற் றரைக்குச் சென்ருர்கள். அவ்வாறு சென்றதன் பின்பு அன்று நடுப்பகலில் 'ஹலீமாவின் குழந்தை தன் வீட்டுக்குத் திடீரெனத் திரும்பி ஓடிவந்து, அச்சத்தினுல் தன் மென்னி யடைக்குமாறு கூவிக்குளறித் தன் தாய்தந்தையரை நோக்கி, "அம்மம்ம! சீக்கிரம் ஓடிவா! நங் :குறைஷிச் சகோதரர் தமக்குரிய வழக்கமேபோல் இன்றும் என்னைவிட்டுத் தனியே சென்ருர். அவ்விடத்தில் எவரோ தூய வெள்ளையாடை யுடுத்திய இரண்டு மனிதர்கள் அவரைப் பிடித்து மல்லாத்திப் போட்டு நெஞ்சைப் பிளந்தார்கள்," என்று கூறிற்று.

அதைக் கேட்டவுடன் 'ஹலீமாவும், அவருடைய அருமைக் கணவரும் வெறிகொண்டவரே போல் மதிமயங்கி வேகமாகத் தங்கள் சிறுவனுல் காட்டப்பட்ட அந்தப் பாட்டையின் வழியே அலறிக்கொண்டு ஓடினுர்கள். ஆங்கொரு குன்றின்உச்சியிலே மு'ஹம்மத்' (சல்) தன்னந்தனியராய்க் குந்தி யிருக்கக் கண்டனர்; மூவாட்டைப் பிராயமேயுடைய அச்சிறுவர் அதிக சாந்தத்துடனே மிக்க அமைதியாக அங்கே அமர்ந்திருந்தார். ஆனுல், அவருடைய முகாரவிந்தத்தில் மட்டும் ஏதோ ஒருவிதமான உரைக்க முடியாத தோற்றபேதம் காணப்படலாயிற்று. அதைப் பார்த்தவுடன் 'ஹலீமாவும், அவருடைய கணவரும் அவரருகிற் சென்று, "எங்களருங் குழந்தாய்! உமக்கென்ன உடம்பிற்கு? இங் குமக்கு என்ன நிகழ்ந்தது?" என்று அதிக ஆயாசத்துடனே அவசரமாக வினவினுர்கள். இதற்கந்தச் சிறுவர் இவ்வாறு அமைதியுடனே விடைகொடுத்தார்: "அதோ மேய்ந்து கொண்டு நிற்கும் ஆட்டுக்கூட்டத்தை யான் கூர்ந்து கவனித்துக்கொண் டிருந்தேன். அதுபொழுது நெடுந்தூரத்தி லிருந்து இரண்டுருவங்கள் என்னை நோக்கி வரக்கண்டேன். முதலில் அவை யிரண்டும் இரண்டு பெரும் பறவைகளென்றே எண்ணினேன். பிறகு, சமீபத்தில் வரவர அவ்விரண்டும் மனித உருவெனத் தெரிந்துகொண்டேன். அவர்களிருவரும் தூய்மையான வெண்டுகி லணிந்திருந்தனர். அவர்களுள் ஒருவர் என்னைச் சுட்டிக்காட்டி, 'இவர்தாமா அவர்?' என்று வினவினுர். 'ஆம், இவர்தாம்!' என்று மற்ருெருவர் கூறினுர். அதைக் கேட்டு யான் திகில்கொண்டு நின்றேன். ஆனுல், அவ் விருவரும் என்னைப் பிடித்துக் கீழே மல்லாத்தித் தள்ளி, என் மார்பைக் கிழித்தனர். அதற்குள் ளிருந்த எனது ஹிருதயத்தி லிருந்து ஒருசிறு கறுப்பிரத்தக் கட்டியை யெடுத்து அப்புறப்படுத்திவிட்டு,

என் நெஞ்சைப் பிறகு மூடிவிட்டு, உடனே திடீரென அவர்களிருவரும் மறைந்து விட்டனர்," என்று கூறியதாக ஒருசில சரித்திராசிரியர்கள் உரைத்திருக்கின்றனர்.

இவ் விஷயந்தான் :குர்ஆன் ஷரீபின் 94-ஆவது அத்தியாயத்திலும் "நாம் நுமக்கு நும்முடைய நெஞ்சத்தை விரிவாக்க வில்லையா? இன்னம், நாம் நும்மைவிட்டும் நும்முடைய சுமையை இறக்கினோம் (இல்லையா)? நும்முடைய முதுகைக் கனமாயமுத்திக் கொண்டிருந்த (சுமை)" என்று வரையப்பட் டிருப்பதாக ஒருசிலர் விவாதிப்பர். ஆனால், வேறு சிலர், ரஸூலுல்லாவின் ஹிருதயத்தை எல்லாவிதமான அசுத்தங்களைவிட்டும் பரிசுத்தம் செய்ததாகக் காண்பிக்கப்பட்ட ஒருவகை உவமதரிசனத் தோற்ற மென்றே இதனைக் கூறுவர். இவ் விடத்தில் நெஞ்சத்தைத் திறப்ப தென்பதன் கருத்து, தெய்விக ஜோதியாலும் பாரமார்த்திகப் புனிதத்தாலும் அவர்களுடைய நெஞ்சகமானது நிரம்பிவிடுவதா யிருக்கு மென்று இமாம் ரா:கிப'வர்கள் தங்கள் மு'ப்ரத'த்திலே மொழிந்திருக் கிறார்கள். இவ்விஷயம் வ'ஹீயின் வாயிலாய் நிகழ்வுற்றது. நபிகள் பெருமானின் திவ்யசரிதையை ஆங்கிலத்தில் மிகவிரிவாக வரைந்திருக்கும் ஸுலைமான் பி'ன் இப்'ராஹீம் என்பாரும் இதையெல்லாம் ஓர் ஆத்மார்த்த சம்பந்தமாயுள்ள உவமதரிசன மென்றே உரைத்துப் போந்துளார். நபிகள் நாயகத்தின் ஹிருதயத்தைக் கீறிய தென்பதும், அதற்குள்ளே ஈமானை நிரப்பிய தென்பதும் பரிசுத்த உலகின் ஜோதிகளும் பிரகாசங்களும் அந்த ஹிருதயத் துள்ளே மிகைத்துப் போவதாகும். அதுவேயுமன்றி, மனித இயற்கையி லுண்டான துர்க்குணங்கள் நீங்கிவிடுவதும், பரிசுத்த உலகினின் றெலிக்கும் ஆண்டவனருளை ஒப்புக்கொள்ள உள்ளம் தையாரா யிருப்பது மாகும், என்று ஷா(ஹ்) வலீயுல்லா(ஹ்) மு'ஹத்'தி'ஸ் தெ'ஹ்லவீ அவர்கள் தங்கள் "ஹுஜ்ஜ(த்)துல்லாஹில் ப'ாலி:கா"வில் கூறியிருக்கின் றார்கள். இன்னமும், சையித்' ஸுலைமான் நத்'வீயவர்கள் தங்கள் "ஸீரத்துன்னபீ"யில் பின்வருமாறு வரைந்திருக்கின்றார்கள்: "சாதாரண உலமாக்கள் உண்மையிலேயே நாயகமவர்களின் ஹிருதயம் பிளக்கப்பட்ட தென்றும், அந்த ஹிருதயம் பின்னர் 'ஜம்'ஜம் கிணற்று ஜலங்கொண்டு கழுவிச் சுத்தப்படுத்தப்பட்ட தென்றும், அதற்குள்ளே பிறகு ஆண்ட வனது 'ஹிக்மத்தும் ஈமானும் நிரப்பப்பட்டன வென்றும் கூறுகிறார்கள். ஆனால், அந்தரங்கத் தாத்பரியத்தை அறிந்துணரும் மேலான ஸூ'பியாக் கள், பின்னே நடைபெறப் போகும் விஷயங்கள் முற்கூட்டியே ஓர் உவம தரிசனத் தோற்றத்தால்— (கஷ்'பால்) அறிவிக்கப்பட்டன வென்றும், இதுதான் ஆத்மார்த்த விஷயங்களைப் பூதவுடம்புகளின் மூலமாய்த் தோற்றுவிக்கும் ஆ'லமெ ப'ர்'ஜக்' (இடையுலகம்) உடைய உண்மையான இரகசிய மென்றும், இவ்வண்ண மாகத்தான் இன்னமு மநேக இரகசி யங்கள் ஸ்வப்பனங்கள் மூலமாய்ப் பூதவுடம்பில் நிகழ்வுறுவனவே போலக்

காணப்படுகின்றன வென்றும், ஆனால், நபிநாயகம்(சல்) அவர்கள் இவற்றை யெல்லாம் ஸ்வப்பனத்தில் காணாது, விழிப்பு நிலையிலேயே கண்டுகொண்டார்க ளென்றும், நபிமார்களுக் கெல்லாம், அவர்களுள்ளும் சொந்தமாக எம்பெருமானா ரவர்களுக்கு இத்தகைய சக்தி அதிகமாக அமைந்துகிடந்த தென்றும் அறைகின்றனர். இவ்வாறே அபீ'ஸ் ஸுஊ'த்' தம்முடைய 'த'ப்ஸீரிலும் வரைந்திருக்கின்றார்கள்."

எனவே, இத்தகைய வ'ஹீயெ 'கய்ரெ மத்லூவ் வாயிலாய் வெளியான உவமதரிசனத் தோற்றத்தால் நபிகள் பெருமானின் நெஞ்சகமானது அதி பால்யத்திலேயே அதிகம் விசாலமடைந்து, ஏகேசுவர வாதமென்னும் மெய்யான ஓரே கடவுள் தத்துவத்தை உட்கொண்டு, பொய்யான விக்கிர ஹத்தொழும்பென்னும் வீண்சுமையை வெளியேற்றி விடுதற்குரிய பரிபக்கு வத்தை யடைந்துவிட்டதென்றே நாம் தெளிந்து கொள்ளுதல் வேண்டும்.

மேலே சொல்லப்பட்ட விஷய முழுதையும் 'ஹலீமாவும் அவருடைய கணவரும் கேள்வியுற்றதன் பின்னால், அவ்விருவரும் கல்வியறிவில்லாத குக்கிராமவாசிக ளானமையின், ரஸூலுல்லா(ஹ்)வுக்கு நிகழ்ந்த இந்தச் சம்பவத்தைக் கண்டு அதிகமான திகிலும் திடுக்கமுங் கொண்டு, இனி இக் குழந்தையை இதன் பெற்றதாயாரிடம் கொண்டுபோய் விட்டுவிடாது தாங்களே வைத்துக்கொண் டிருப்பது அத்துணைப் பத்திரமான காரிய மன்றென்று கண்டு, உடனே இதனை மக்காவுக்குக் கொண்டுபோய் ஆமினா அம்மா ளவர்களிடம் ஒப்படைத்து விடுவதென்று உறுதியாய்த் தீர்மானம் செய்து கொண்டார்களாம்.

அப்பொழுது இச்சிறுவருக்கு வயது நான்காகவு மில்லை. ஆதலின், மக்காவுக்குள் நுழையும்பொழுது 'ஹலீமா தமது செல்வச் சிறுவரைத் தம்மருகினில் நடத்தாட்டி அழைத்துச் சென்றார். அதுசமயம் ஆங்குள்ள ஜனக்கூட்டத்துள் சிக்குண்டு நஞ்சிறார் 'ஹலீமாவின் பார்வையினின்றுந் தவறிக் காணாமற் போய்விட்டனராம். உடனே 'ஹலீமா அவர்கள் எங்கெங்கும் தேடியும், குழந்தை அகப்படாமற் போனதனால், அளவுகடந்த துக்கத்துடன் சென்று நடந்த விருத்தாந்தத்தை யெல்லாம் அ'ப்'துல் முத்தலிபி'டம் கூறினார். அக்கணமே அவர் தம்முடைய வேலையாட்களை நாலு திக்குக்கு மனுப்பித் தாமும் ஒரு குதிரையின் மீதேறித் தேட ஆரம் பித்தார். பிறகு சிறிது நேரத்திற்குள் அவ் வாட்களுள் ஒருவன் திஹாமா என்னுமிடத்தில் ஒரு சிறு பையன் ஆங்குள்ள செடிகொடிகளை ஒடித்து விளையாடிக்கொண் டிருக்கக் கண்டான். உடனே அவ் வேலைக்காரன் அச் சிறுவரிடம் சென்று நீ யாரென்று வினவியபோது, "நான் அ'ப்'துல் முத்தலிபி'ன் குமாரரான அ'ப்'துல்லா(ஹ்)வின் மகன் மு'ஹம்மத்'" என்னும் விடை கிடைத்தது. உடனே அவன் அச்சிறுவரை அ'ப்'துல் முத்தலிபி'டம் கொண்டு வந்து ஒப்படைத்தான். அவர் தம்முடைய பேரரைத் தமது குதிரையின் கலணையின் மீதே அமர்த்திப் பத்திரமாக

ஆமினு அம்மா ளவர்களிடம் கொண்டுவந்து ஒப்புக்கொடுத்து விட்டாராம்.

இறுதியாக, 'ஹலீமா அம்மாளவர்க ளிடமிருந்து நபிகள்பிரான் (சல்) தங்கள் மாதாவிடம் கொண்டுவந்து விடப்பட்டபொழுது, அவர்களுக்கு வயது ஆறென்பதுதான் சரியான ஆதாரமுள்ள கிரந்தங்களில் கணப்படாநின்றது. ஆனால், ஆறுவய தடைந்திருந்த அவ்விளைஞர் அதிகநாள் மட்டும் தந் தாயின் பாதுகாப்பி லிருப்பதற்கு வேண்டிய அதிருஷ்டத்தை அடையப் பெறுதவராய்ப் போய்விட்டார்.* என்னெனின், ஆமினு அம்மாளவர்கள் தஞ் செல்வச்சிறு மைந்தருடன் அதுசமயம் மதீனுவுக்கு (ய:த்ரிபு'க்கு)ச் சென்று, தம்முடைய அருமைக் கணவரின் சமாதியைத் தரிசனம் செய்து கொண்டு, ஆங்குள்ள மற்ற பந்து மித்திரர்களையும் கண்டுவரலா மென்று புறப்பட்டார்கள். அவ்வாறு ய:த்ரிபு'க்குச் சென்று, மக்காவுக்குத் திரும்பி வருங்கால், அப்'வா‡ என்னுமிடத்தில் ஆமினு அம்மாளவர்கள் அல்லா(ஹ்)வின் கட்டளைப்படி காலகதியால் தேகவியோகமாய்ப் போய்விட்டார்கள். நம் ரஸூல்நாயக மவர்கள் திருவவதாரம் புரியுமுன்னரே அன்னவரின் தந்தையார் அ'ப்'து'ல்லா(ஹ்) இறந்துபோய்விட்டார். இப்பால் அவர்களுக்கு ஆறுவய தாகும்போது, அப்'வாவில் அன்னை ஆமினுவும் பரகதியடைந்து, அங்கேயே அடக்கமாகி விட்டார்கள். அது சமயம் 'ஹ'ஜ்ரத் ஆமினு அவர்கள் மதீனுவில் ஏறக்குறைய ஒரு மாதகாலம் தங்கியிருந்தார்கள். எனவேதான், மதீனுவிலுள்ள அநேக விஷயங்கள் நாயகமவர்களுக்கு வயதானபின்னும் ஞாபகத்திலே யிருந்துகொண் டிருந்தன. உதாரணமாக, ஒருமுறை திரு நபியவர்கள் ப'னூஅ'தீ'களிருக்கும் பக்கமாகச் சென்று கொண் டிருந்தபோது, ஒரு வீட்டைச் சுட்டிக்காட்டி, "இந்த வீட்டிலேதான் என் தாயாரவர்கள் வந்து தங்கியிருந்தார்கள்," என்று கூறினுர்கள். அன்றியும், ஓர் ஏரியைச் சுட்டிக்காட்டி, "இதிலேதான் யான் நீந்தக் கற்றுக் கொண்டேன்," என்றும், மற்றொரு மைதானத்தைக் காட்டி, "இதிலேதான் யான் அனீஸா வென்னும் ஒரு பெண்ணுடனே விளையாடிக் கொண்டிருந்தேன்," என்றும் திருவாய் மலர்ந்தருளி யுள்ளார்கள். இவ்வாறு வளர்ந்துவந்த இந்த இளைஞர் தமது ஆருவது பிராயம் முடியுமுன்னரே அன்னையும் பிதாவுமற்ற அகதியாய் விளங்கிநின்றுர்கள். ஆ என்னே ஆண்டவனது அரிய சோதனை! இதிலே அவனது அந்தரங்க நோக்கமொன்று அமைந்தில்லாது போய்விடவில்லை போலும்!

---

* அன்னையின் அன்பு இப்படி யிருக்குமென்று நேரிலே அனுபவித் தறியாத இந்த உம்மீ நபியே, "மக்களின் சுவர்க்கம் மாதாவின் காலின்கீழே இருக்கிறது," என்று மொழிந்தருளி யுள்ளார்கள். ஆனால், மர்யம்(அ'லை) தெய்வகடாக்ஷத்தால் ஈ'ஸாவை ஈன்று வளர்த்திருக்க, அக்குமாரன் தன் மாதாவை நோக்கி, 'ஏ பெண்பிள்ளை! உன்னை வைத்துக்கொண்டு யான் என்செய்யட்டும்?" என்று ஏசியதாகச் "சுவிசேஷம்" கூறுகின்றது.

‡ இது மதீனுவிலிருந்து 32 மைல் தூரத்தி லுள்ளது.

தாய் தந்தையரின் அரிய பிரியத்தின்கிழே ஆதரவு பெற்று வளர வேண்டுமென்னும் அத்தியாவசியத்தைக்கூட ஆண்டவன் தன் திருத்தூதருக்கு இல்லாமலே செய்துவிட்டான். எனினும், இத்துயரானது பிறகு எப்பொழுதும் நம் ரஸூலுல்லாவின் உள்ளத்தை விட்டு ஒழிந்திற்றிலது. ஆனாலும், அன்னையும் பிதாவு மற்ற அகதிக்குத்தான் அப்படிப்பட்ட அனாதைக் குழந்தைகள்மீது அபிமானம் அதிக முண்டாகுமென்று எல்லாம் வல்ல இறைவனே எண்ணி யிருந்தான் போலும்! என்னெனின், ஏழைகளுக் கிரங்குந் தன்மையிலும், அனாதைக் குழந்தைகளை ஆதரிக்கும் அன்பிலும் நம் ரஸூல் நாயகத்தை ஒப்பாரேனும் மிக்காரேனும் இத்தரணியில் இதுகாறும் எவரும் அவதரித்ததே யில்லை யென்பது சரித்திர முணர்ந்த ஓர் உண்மையே யாகும். அடிமைகளுக்கு உரிமை வழங்கியவரும், பெண்மணிகளுக்குச் சரியான அந்தஸ்தை யளித்தவரும் இக் குவலயத்தில் இவர்களே முதல் மனிதரா யிருக்கின்றார்கள். தயை தாக்ஷிண்யம் பொறை அன்பு அபிமானம் முதலிய சற்குணங்களில் பயிற்சி பெறும் பொருட்டே ஆண்டவன் அவ்வாறு அவர்களைச் சோதித்திருக்கின்றான் போலும்.

இவ்வாறு குழந்தையின் பாலுள்ள தாயின்கரிசனம்—(வாத்ஸல்யம்) இன்னதென்றும், அக்குழந்தை அத் தாய்க்குப் பின்னர்ச் செய்யவேண்டிய கடமை இன்னதென்றும் ஒருசிறிதும் சுயமே உணர்ந்துகொள்ளப் போதிய அவகாசம் நம் நபிகள் திலகத்திற்கு ஏற்பட்டிரா திருந்தும், "மாதாவின் பாதத்தடியிலேதான் மைந்தனின் சுவர்க்கம் அமைந்து கிடக்கிற" தென்று முதன்முதலில் இவ் வுலகினர்க்கு அறிவுறுத்திச் சென்றவர்கள் இவர்களே யாவார்க ளென்பதை எவரும் இத் தரணியின்கண் மறுக்கற்பால ரல்லரென்றே யாம் எண்ணுகின்றேம். "தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து, முந்தி யிருப்பச் செயல்," என்றவாறு கற்பிக்கப்பட்டு இவர்கள் தங்கள் சொந்த மாதா பிதாக்களுக்கு "மகன்றந்தைக் காற்றும் உதவி இவன்றந்தை, என்னோற்றான் கொல்லென்ஞ் சொல்," என்றவாறு புத்திரக்கடமை யொன்றினையும் செய்யக்கூடிய சந்தர்ப்பம் வாய்க்கப் பெறுமற் போயினும், தங்களுடைய போஷகத் தாய் தந்தையர்க்கும், அக் குடும்பச் சகோதரர்கட்கும், இல்லை, ப'னூ ஸஅ'தி'ன் வர்க்கத்தினருக்கே எப்பொழுதும் தாங்கள் ஆற்றவேண்டிய கடமைகளைச் செவ்வனே ஆற்றி வந்தே யிருக்கின்றார்கள். ரஸூலுல்லா(ஹ்) அவர்கள் தங்களுக்கு நபிப் பட்டம் வந்ததன்பின் 'ஹலீமா அவர்கள் ஒருசமயம் தங்களைக் காணவந்தக்கால், எவ்வாறு தங்களுடைய திருமேனியிலிருந்த அங்கவஸ்திரத்தைத் தரையில் விரித்து, அதன்மீது அவ்வருமைச் செவிலியை அமரவைத்து அன்புடனே சம்பாஷித்துக்கொண் டிருந்தார்களென்று இதற்குமுன்னே நாம் படித்திருக்கின்றோம். பீ'பீ' க'தீ'ஜாபிராட்டி(ரலி) உயிருடனிருந்து வந்தபோது ஒருமுறை :குறைஷிகள் 'ஹலீமா வென்னும் இவ் வேழை மாதை அடிமையாகப் பிடித்து மக்காவுக்குக் கொண்டுவந்த சமயம் ரஸூல்

நாயகமவர்கள்(சல்) அவரை இன்னாரெனக் கண்டுபிடித்து, ஆனந்தபாஷ்பஞ் சொரிந்து, தங்கள் மனைவியான க'தீ'ஜா நாயகியா ரிடமிருந்து ஏராளமான சம்மானங்களையும் வாங்கிக்கொடுத் தனுப்பினார்கள். இதுவன்றோ "தாயி னிடத் தன்பு" என்று இயம்பப்படுவது !

மேற்கூறியவாறு மதீனாவுக்கும் மக்கத்துக்கும் இடைவழியி லுள்ள அப்'வா என்னுமிடத்தில் அன்னை ஆமினா அவர்கள் ஆண்டவனருளால் பரலோகப் பிராப்தி யடைந்து விட்டமையான், அவருடைய அரிய பிரிய ஊழியக்காரியாகிய ப'ரக்கத் தென்னும் பெண்ணால்— (இம்மாதின் பெயர் உம்மு ஐமன் என்று பிரபலமாக வழங்கப்படும்) ஆறு பிராயமுள்ள அவ் வகதிச்சிறுவர் மக்கமாநகர் கொண்டுவரப்பட்டு, பாட்டனாரான அ'ப்'து'ல் முத்தலிபி'டம் பத்திரமாக ஒப்படைக்கப்பட்டார். யாம் இதற்குமுன்னர்க் கூறியதேபோல், இந்த ப'ரக்கத் தென்னும் 'ஹப'ஷீப் பெண்ணும், சில ஒட்டகங்களும், ஒருசில ஆடுகளுந்தாம் நம் பால்ய மு'ஹம்மது'க்கு(சல்) அச் சமயம் பிதிரார்ஜித சொத்துக்களாக விளங்கிவந்தன. ஆனாலும், அந்த வயோதிகரான அ'ப்'து'ல் முத்தலிப்' இச்சிறுவரை அதிக அன்புடனே ஆதரித்து வளர்த்துவரத் துவக்கினார். அன்னையும் பிதாவுமற்ற அந்தச் சிறுருக்கு அவருடைய பாட்டனாரே அவ்விருவருமாக விளங்கிவந்தார். அவர் தம்முடைய அருமைப் பேரர்மீது கொண்டிருந்த அளவிகந்த பிரியத் தைப் பின்வரும் ஓர் இனிய சம்பவத்தால் நன்கு தெரிந்துகொண்டு விடலாம் :—

மற்றெல்லாப் பாலைவன நகரங்களையும் போலவே குறுகிய கோண லான தெருக்களையுடைய அந்த மக்கமாநகரிலும் கஃ'ப'த்துல்லாவின் அருகி லுள்ள சதுக்கமொன்றே ஊருக்கெல்லாம் பொதுவாயுள்ள விசாலமன்ற மாய் விளங்கிவந்தது. அவ் விடத்திலேதான் காலையிலும் மாலையிலும் அந்த மக்காவாசிகள் வந்துகூடித் தத்தமக்குரிய பொதுவிஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண் டிருப்பர். அங்கே ஒவ்வொரு நாளும் அ'ப்'து'ல் முத்தலிபி'ன் ஆட்கள் அந்தக் க'ஃ'ப'ாவின் நிழலில் அவருடைய இரத்தினக் கம்பளத்தை விரித்து வைப்பர். அவ்விடத்தில் அ'ப்'து'ல் முத்தலிபி'ன் வருகையை எதிர்பார்த்து அவருடைய புத்திரர் பௌத்திரர்களும், மற்று முள்ள நகரத்துப் பெரிய மனிதர்களும் ஆவலுடனே கூடியிருப்பர். அ'ப்'து'ல் முத்தலிபி'டமுள்ள மேதை மரியாதையின் மிகுதியால் அவ ருடைய இரத்தினக் கம்பளத்தின் தோகையைக்கூட ஒருவரும் மிதிக்கத் துணியார். விஷயம் இவ்வாறிருக்க, ஒருநாள் நபிகள் திலகம் அந்தப் பெரி யாரின் இரத்தினக் கம்பளத்தின் நடுவே சென்று, அதனை மிதித்துக் கொண்டு நின்றார்கள். அதனைக் கண்ட பெரியதந்தைக ளெல்லாரும் அவரை ஏசி, வெளியே துரத்தினார்கள். அப்பொழுது தூரத்திலிருந்து அதையெல்லாம் பார்த்துக் கொண்டு வந்த அ'ப்'து'ல் முத்தலிப்' தம் முடைய பேரரை வெளியில் வெருட்ட வேண்டா மென்றும், அவரை

அந்தக் கம்பளத்தின் மீதே விட்டுவிட வேண்டுமென்றும் கூறிக்கொண்டே வந்து, அவ்வருமைச் சிறுவரைக் கட்டியணைத்துக் கலக்கந்தெளிந்து, உச்சி மோந்து உள்ளங்குளிர்ந்து, முத்தங்களும் பல சொரிந்து, "என்னினும் மிகச் சிறந்த பெருமையையும் மேன்மையையும் அடையப்போகும் இவ் வாலிபரை ஏன் வெருட்டுகின்றீர்கள்?" என்று கடிந்துகொண்டார். இதி லிருந்து அந்தப் பிதாமஹரின் கரிசனம் இத்தன்மையுடைய தென்பதை ஒருவாறு நாம் ஊகித்துக் கொள்ளுகின்றோம்.

இப்படிப்பட்ட பாட்டனாரிடமும் அதிகநாள் நம் நபிகள் பெருமான் இருந்துவரக் கொடுத்து வைக்கவில்லை. என்னெனின், அ'ப்'து'ல் முத்த லிபி'டம் நஞ்சிறுவர் வந்து இரண்டு வருடங்களுக்குள், அஃதாவது, அன்ன வருக்கு எட்டாவது பிராயம் நடைபெற்று வருங்காலையில், அந்தப் பிரிய முள்ள பாட்டனாரான அ'ப்'து'ல் முத்தலிபு'ம் தமது 82-ஆவது பிராயத் தில், ஸன்ஆ'வுக்குச் சென்று திரும்பிவந்து, கி.பி. 579-ஆம் ஆண்டிலே ஆண்டவனது திருவடி நிழலை யடைந்துவிட்டார்; அப்பால் இவர் ஹஜூன் என்னும் ஸ்தலத்திலே நல்லடக்கம் செய்யப்பட்டார். இப் பெரியார் தமது மரணத் தறுவாயில் தம்முடைய இளம்பேரரைத் தமக்குப் பிரியமுள்ள புத்திரர் அபூ'த்தாலிப'வர்களிடம் ஒப்படைத்து விட்டுச் சென்றார். என்னே இறைவனது இனியில்லாச் சோதனை! இப்பெரிய தந்தையாரே அன்று முதல் தமது மரணபரியந்தம் தந் தம்பி மைந்தரைப் பாதுகாத்து வந்தார். இறுதிவரை இப்பெரியார் நந் தீனுலிஸ்லாத்தில் பஹிரங்கமாகச் சேர்ந்து கொள்ளா திருந்தும், நமது ரஸூல் நாயகத்துக்கு வேண்டிய எல்லாவித உதவிகளையும் எப்பொழுதும் புரிந்துகொண்டே யிருந்தார்கள்; அன்னவர்பால் அளவிலா அபிமானமும் அதிகம் வைத்தே யிருந்தார்க ளென்பதி லும் சிறிதும் சந்தேகமென்ப தில்லை. அபூ'த்தாலிபி'ன் ஆதரவு இருந்து வந்தவரை மக்காக் :குறைஷியர் மஹான் மு'ஹம்மத்'நபி(சல்) அவர்கள்மீது தங்கள் கரங்களைப் போடத் துணிந்தன ரில்லை. அப் பெரியார் நிர்யாண மடைந்த பிறகுதான் அம்மக்கத்து மறமாக்கள் நம் பெருமானாரைக் குத்திக் கொன்றுவிடச் சதியாலோசனை செய்யத் துணிந் தெழுந்தார்கள்.

---

# அதிகாரம் — 8

## எம்பெருமானது யௌவனம்

*"திண்ணமாக, நான் அதற்கு முன்னே உங்கள் மத்தியில் ஓராயுட் காலம் (வரை) வாழ்ந் திருக்கிறேன். அவ்வாறிருக்க, நீங்கள் அறிந்துணர மாட்டீர்களா?"* — (10 : 16)

அப்'துல் முத்தலிபின் பிரிய குமாரராகிய அபூ'த்தாலி பென்பவர் அப்'துல்லா(ஹ்)வின் மூத்த சகோதரரா யிருந்ததோடு, ஆமினு அம்மாளவர்களுக்கும் ஒரு முறைப்படி சோதரராகவே விளங்கிவந்ததனுல், அன்னவரே நமதிளம் வாலிபருக்குத் தாயுமானவராகவும் தந்தையானவராகவும் அன்று முதல் நின்றிலங்கி வந்தார்கள். அப்'துல் முத்தலிப்' இறந்து போனதன் பின்னுல் அவர்பா லிருந்துவந்த ஸி:காயா, ரி'பாத'ா என்னும் இருவகைப் பொறுப்புள் "ஸி:காயா" வென்பது 'ஜம்'ஜம் கிணற்றின் மேற்பார்வையுடன் அப்'ப்'ாஸ் (ரலி) என்னும் குமாரரிடம் போய்ச்சேர்ந்தது. ஆனுல், "ரி'பாத'ா" மட்டும் அபூ'த்தாலி ப்'வர்களிடம் ஒப்படைக்கப் பட்டது; எனவே, இவருக்கு மக்கத்தில் அதிகமான மேதை மரியாதைகளெல்லாம் வளர்ந் தோங்கிக்கொண் டிருந்தன. எனினும், இந்த ரி'பாத'ாவானது அபூ'த்தாலிபு'க்குப் பின்னே அவருடைய மைந்தர்கள் வயம் சென்று சேரவில்லே; அபூ'த்தாலிபின் மரணத்துக்குப்பின்னுல் அப்'து'மனு'பின் மைந்தராகிய நௌ'பல் வம்சத்தவரிடமே அந்த உத்தியோகம் போய்ச் சேர்ந்துவிட்டது. பிறகு மக்கமாநகர் நம் ரஸூலுல்லாஹ் அவர்களால் பிடிபட்டபோது, ரி'பாத'ா வென்னும் கௌரவமானது, நாம் முன்னமே கூறியபடி, நௌ'பலின் பேரராகிய அ'ம்ரின் குமாரர் ஹாரி தென்பார் வயமிருந்து வந்தது.

மேலே கூறப்பட்டுள்ள முறைமையின்படி யமைந்துள்ள அபூ'த்தாலி ப்'வர்கள் தம் தம்பிமைந்தரைத் தந்தையின் ஆணேக்கிணங்க மார்புறத் தழுவித் தம தில்லங் கொண்டு சேர்த்தார்கள். ஆங்குத்தான் இனி அல்லா(ஹ்)வின் நபியாக வேண்டியவருடைய வாலேப் பருவமுழுதும் கழிந்துவந்தது. அபூ'த்தாலி ப்'வர்கள் இவ்விளஞ் சிறுரைத் தம்முடைய சொந்த மைந்தரினும் பன்மடங் கதிகமான பிரியத்துடனும் கரிசனத்துடனுமேதான் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்துவரத் தொடங்கினுர்கள். நம்முடைய இளம்வாலிபர் இயற்கையிலேயே இனியகுணமும் எளியநடையும் வாய்ந்தவரா யிருந்து; எப்பொழுதும் முகமலர்ச்சியையும் அகமலர்ச்சியையும் அதிகம் படைத்திருந்தமையால், அபூ'த்தாலிபின் குடும்பத்தினரும் இன்னம் அக்கம்பக்கத்தி லுள்ளவர்களும் அச் சிறுவரை அதிகம் நேசித்துவரத் தலேப்பட்டார்கள். அவ்

வாலிபர் மகா சாந்தகுணசீலரும் தயாளமிக்க பாலருமா யிருந்தமையால், ஏழைகள்படும் துயரைக்கண்டு பெரிதும் மனமுருகுவார். அவர் அதிபால்யத்திலேயே மகாமேதாவியாகவும், எல்லோரிடத்தும் இனியவசனம் பேசும் பூர்வபாஷியாகவும்* இருந்துவந்தார். மிகச்சிறு பிராயத்தி லிருந்தே இவர் ஏகாந்தமான இடங்களுக்குச் சென்று தனிமையான தியானத்துள் மூழ்கி விடுவது வழக்கம். ஒட்டகம் ஆடு முதலியவற்றை மேய்த்துக்கொண்டிருக்குங்காலே, மற்றைச் சிறூர்களுடன் கூடி விளையாடாமல், தனிமையான கற்பாறைகளின்மீது தாவிக்கொண்டு, இயற்கையின் இரகசியங்க ளனைத்தையும் பார்த்துப் பார்த்துப் பரமானந்தப் பரவசத்துள்ளே அடிக்கடி ஆழ்ந்து விடுவார். தம்மோ டொத்த உடன்சிறூர்கள் விளையாடக் கூப்பிடுவார்களாயின், "பிரயோஜனமற்ற காரியங்களில் ஈடுபடுவதைக் காட்டினும் மேலான காரியத்தைச் செய்து முடித்தற்காகவே மனிதன் இவ்வுலகினுக்கு அனுப்பப்பட் டுள்ளான்," என்று எம்பெருமானு ரவர்கள் திருவாய் மலர்ந்தருள்வார்கள். எனவே, எம்பிரானைக் காணும் எவரும் அவருடைய புத்தி தீக்ஷண்யத்தையும் சாந்த குணசீலத்தையும் பாராட்டா திருப்பதில்லை. ஆதலின், அபூ'த்தாலிப'வர்கள் இவ்வுத்தம வாலிபரை எப்பொழுதும் தம்முடனே வைத்துக்கொண் டிருப்பார்கள். எங்குச் சென்ற போதினும், உடன் அழைத்துக் கொண்டே செல்வார்கள். இராக் காலங்களிலும் தம்முடைய படுக்கையிலேயே தந்தம்பி மைந்தரையும் உடனுறங்கச் செய்வார்கள்.

ஆனால், அபூ'த்தாலி ப'வர்கள் நபிகள் பெருமானுக்குப் பள்ளிக்கூடப் படிப்பொன்றும் படித்துக்கொடுக்கப் பிரயத்தனப் படவில்லை. ஆகவே, ஆடுகளை மேய்த்துக்கொண்டு, ஆண்டவனது இயற்கையையே தங்களுக்குரிய பாடசாலையாக அவர்கள் அமைத்துக்கொண் டிருந்தார்கள். இதிலும் அல்லா(ஹ்)வின் அந்தரங்க நோக்கமொன்று இல்லாமற் போய்விடவில்லை. அஃதாவது, மானிட குருமாரின் வாயிலாக ஒன்றும் கற்றுக்கொடுக்கப்பட வேண்டிய ஆவசியக மில்லாது, எல்லாவற்றையும் ஆண்டவன் தானே நேரில் தனது இயற்கையின் வாயிலாயும், தன் வானவர் (ஜிப்'ரீல்) மூலமாயும் கற்றுக்கொடுக்கவே அவ்வாறு தனதுள்ளத்தின்கண்ணே உணர்ந்திருந்தான் போலும்! இவ்வாறு ஏனை மானிடரைப்போலப் பள்ளிக்கூடப் படிப்புப்படியாத காரணத்தினால் அவரை "உம்மீ" (எழுதப் படிக்கத் தெரியாதவர்) என் றழைப்பர். இப்படிப்பட்ட "உம்மீ நபி"யே ஒவ்வோர் ஆணும் பெண்ணும் கல்விபயில வேண்டுமென்றும், சீனுவுக்குச் சென்றேனும் அவ

* "பூர்வபாஷி"— எதிரில் வருபவர் பேசத் தொடங்குமுன் தாமே முன்சென்று வலுவில் பேசும் சுபாவ முடையவர்.

"முகத்தான் அமர்ந்தினிது நோக்கி அகத்தானும்
இன்சொ லினதே அறம்," என்பது குறள்.

ரவரும் அறிவுதேட வேண்டுமென்றும் அதிகம் வற்புறுத்திக் கூறியிருக்கின்றார்கள். என்னே கல்வியின் மாண்பு!

"கண்ணுடையர் என்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்."

மு'ஹம்மத்' நபியவர்கள் இளம்பிராயத்தினரா யிருந்தபொழுது, ஒரு முறை அம்மக்கமா நகரின்கண் கொடிய பஞ்சமொன்று தோன்றலாயிற்று. அதுகாலை அபூ'த்தாலி ப்'வர்கள் இவ் விளைஞரை ஒரு மைதானத்துக்கு அழைத்துச் சென்று, ஆங்கு நின்று ஆண்டவனை நோக்கி மழைக்காகப் பிரார்த்தனை புரியச் சொன்னார்கள். அவ் வண்ணமே நஞ்சிறாரும் அல்லா(ஹ்)வை நோக்கிச் செய்த அழகிய பிரார்த்தனையின் பயனாய்ச் சோனா மாரி யொன்று பெருவெள்ளமாகப் பெய்து அவ் வரப்தேச முழுதையும் குளிரச்செய்து, அக்கொடிய பஞ்சத்தையும் வெருட்டி யடித்துவிட்டதெனப் பல சரித்திராசிரியர்கள் பகர்ந்துவைத் திருக்கின்றனர். ஆனால், இதற்குச் சரியான ஆதாரமில்லை யென்பர் மற்றுஞ் சிலர்.

நம் அருமைச் சிறுவருக்கு வயது ஒன்பதாயின போதுதான் அத்தேசத்தில் :க'ஜ்வ(த்)துல் 'பிஜார்— "தேவ தூஷணை யுத்தம்" கி. பி. 580-இல் ஆரம்பமாயிற்று; பரிசுத்த மாதத்தின் கௌரவத்தையும் கருதிப் பாராமல் அந்த யுத்தம் ஆரம்பிக்கப்பட்டதனால், அதற்கு அப்பெயர் இடப்பட்டது. :குறைஷிகளும் ப்'னூ கினானைக்களும் ஒரு கக்ஷியிலும், ஹைகஸ் ஐ'லான் கூட்டத்தினர் மற்றொரு கக்ஷியிலுமாக எதிர்த்துநின்ற அந்த யுத்தம் உ'(க்)காளி'ல் ஆரம்பிக்கப்பட்டு, பலவருடங்கள் மட்டும் (கி. பி. 580 முதல் 590 வரை) நடைபெற்றதில் இருபெருங் கக்ஷியிலும் பலஉயிர்கள் மடிந்தன. உ'(க்)காளெ'ன்பது :தாயி'புக்கும் நக்'லாவுக்கு மிடையே மக்காவிலிருந்து மூன்று மன்'ஜில் தொலைவிலே அமைந்திருக்கின்றது. அரப்தேச சரித்திரத்தில் மிகவும் பெயர்போன இந்த உ'(க்)காளெ'ன்னு மிடத்தில் வருடந்தோறும் 'துல்கஃ'த'ா மாதத்தில் ஒரு பெரிய சந்தை கூடுவது வழக்கம். அம் மாதத்திலே அச் சந்தையின்பொழுது எவரும் யுத்தத்தில் இறங்குவதும், ஆத்திரத்தால் மனித உதிரத்தைச் சொரிவதும் கூடாவெனப் பண்டைப் பழக்கமொன்று வழக்கத்தி லிருந்துவந்தது. மக்காவுக் கருகிலுள்ள மற்றிரண்டு ஸ்தலங்களிலும்— மர்ரு'ஜ் 'ஜுஹ்ரானுக் கருகிலுள்ள மு'ஜ்னாவிலும், அ'ர'பாத் மலையடிவாரத்தி லுள்ள 'துல் மஜா'ஜிலும்— சந்தைகூடிய போதினும், உ'(க்)காளி'ன் சந்தையே மற்றையவற்றைக் காட்டினும் அதிக விசேஷமுள்ள தேசீயக் கூட்டமேபோல் காணப்பட்டு வந்தது. யுத்தமும் இரத்தப்பழியும் அடியோடு நிறுத்தப் பட்டிருக்கும் அந்த 'துல்கஃ'த'ா மாதத்தில் அரப்தேசத்தின் எல்லாப் பகுதிகளிலிருந்தும், இல்லை, மற்றுமுள்ள தூரதேசங்களி லிருந்தெல்லாமும் வியாபாரப் பண்டங்கள் ஆங்குவந்து குவிந்துவிடும். 'ஹிஜா'ஜிலிருந்தும், நஜ்தி'

விருந்தும் பெயர்பெற்ற வர்த்தகர்க ளெல்லாரும் அச்சந்தைக்கு விஜயஞ் செய்வார்கள். சுற்றுப்புறப் பாலைவனத்தின் புலவர்களும், 'நடிகர்'களும் சாதாரணமாகவும் திரைமறைவிலும் தங்கள் கவிகளையும் கீதங்களையும் பாடிச் சம்மானம்பெற ஆங்குவந்து குழுமுவார்கள். அங்கே கூடும் பொது ஜனங்களின் பெருமதிப்பைப் பெறும் :கஸீத்'க்கள் பொன்னெழுத்தால் (மு'தஹ்ஹப'த்) வரையப்பட்டுக் கஃ'ப'ாவில் மரியாதையாகத் தொங்க விடப்படும்; அவ்வாறு தொங்கவிடப் படுவதனால், அந்தக் கவிகளை "முஅ'ல்ல:காத்" தென்றும் பெயர் கூறுவர். அந்தச் சந்தையின் காலத்தில் உ'(க்)காஎ'னது ஒரு பெரிய கேளிக்கையும் கூத்தும் மலிந்துகிடக்கும் நகரமே போலத்தான் காணப்படும். நாட்டியப் பெண்களும் ஆங்குள்ள கூடாரங்களுக்குச் சென்று, அங்குள்ள வாலிபர்களின் மோகத் தீயைத் தங்கள் ஆடல் பாடல்களால் அதிகம் மூட்டிக்கொண் டலைவர். ஆங்கு நடைபெறும் மதுமயக்கத்தால் அடிக்கடி அவர்களுக்குள்ளே 'அடிதடிகள்' நிகழ்வது முண்டு; இரத்தப்பழியும் சிற்சில வேளைகளில் காணப்பட்டுவிடும். ஆங்குள்ள சூதாட்டக் கடைகளில் மக்காவாசிகள் இரவுபகலாய்ச் சூதாடிக் கொண்டே திரிவார்கள்.

அந்த உ'(க்)காளி'ன் சந்தையில் மதத்தர்க்கங்களும் அடிக்கடி நிகழ்வ துண்டு. யூதர்கள் கிறிஸ்தவர்களையும், கிறிஸ்தவர்கள் யூதர்களையும் அதிகம் தாக்கிக்கொள்வர். இருவரும் சேர்ந்துகொண்டு அரபிகளைக் கா'பிரென்று தூஷிப்பர். ஆயினும், அம்மூவரும் நபிஇப்'ராஹீம் (அ'லை) அவர்கள்பால் அபிமானம் பாராட்டியே வந்தனர். அந்தக் கி. பி. 580-இல் மக்காவுக்கும் :தாயி'புக்கும் இடையிலுள்ள ஓரூரிலிருந்து உ'(க்)காளி'ன் சந்தைக்கு ஒரு புலவன் விஜயம் செய்திருந்தான்; அவன் தன் வர்க்கத்தின் பெருமையை வானமண்டலம் வரை அனுவசியமாக மிகைபடுத்திக் கூறினான். அது பொருது :குறைஷிகள் தங்கள் வாட்களை உருவிக் கொண்டனர். இதனால் மூண்ட தீ பிறகு பத்துவருட காலமட்டும் மற்றும் பல வர்க்கத்தையும் தன்னுள்ளே ஈர்த்துச் சிக்க வைத்துக் கொண்டது. இதையெல்லாங் கண்டு நம் ரஸூல் நாயகமவர்கள், இவர்களுக்குள்ளே— எல்லாரும் அரபிகளாகவே யிருந்தும்— ஏன் சகோதர வொற்றுமை விளைவது கூடாதென்றும், இவர்களெல்லாம் அல்லா(ஹ்) ஒருவனுடைய சிருஷ்டியாகவே யிருந்தும், ஏன் ஏகேசுவரக் கொள்கையுள் ஈடுபடக் கூடா தென்றும், ஏன் இவர்கள் தங்கள் ஒழுக்கத்தைப் பேணிக்கொள்ளாது இவ்வாறு குடி மயக்கத்திலும், கூத்திப் பழக்கத்திலும், சூதாட்டக் கடையிலும், வாதாட்டப் போரிலும் ஈடுபட் டுழல்கின்றன ரென்றும் ஏங்கி நிற்பார்கள். அவர்களுக்கு அப்பொழுது பத்தாட்டைப் பிராயமும் பூர்த்தி யடையா திருந்தும், அவர்களுடைய உள்ளத்தின்கண் இத்தகைய எண் ணங்க ளெல்லாம் ஊடுருவிப் பாய்ந்துகொண்டே யிருக்கும். இம் மக்களை யெல்லாம் ஒன்றுசேர்த்து ஏகசகோதரத்துவத் துள்ளே மடக்கி ஏகதெய்வக்

கொள்கையுள்ளே நுழைப்பதற்கு ஏதும் மார்க்க மில்லையா வென்று இறைவனை நோக்கிச் சதா குறையிரந்து நிற்பார்கள். இத்தகைய குறைபாடுகளை யெல்லாம் என்று எவர்வந்து ஒழிப்பரோ? என்பதேதான் எம திளஞ் சிறுவரின் உள்ளத்தை அடிக்கடி வாட்டிக்கொண்டே யிருக்கும்.

கஃ'ப்த்துல்லாவின் மேற்பார்வைக்குரிய மாபெரும் அந்தஸ்தை இணையில்லாது வகித்திருந்தும், அ'ப்'து'ல் முத்தலிபி'ன் திருக்குமாரராகிய அபூ'த்தாலி ப்'வர்கள் தம்முடைய முன்னோர்களைப்போ லில்லாமல் வர்த்தகத்தில் பெரிதும் நஷ்டமடைந்து சிறிது ஏழ்மைத்தனத்தை யடைந்திருந்த காரணத்தினாலும், தம்முடைய குடும்பச் சுமை அளவுகடந்த பளுவை அளித்துவந்த காரணத்தினாலும் அவர் யமன் தேசத்துக்கும், ஷாம் (சிரியா) தேயத்துக்கும் கார்வான்களை யனுப்பித் தமது வியாபாரத்தை அதிகம் அபிவிருத்தி செய்யவேண்டிய பொறுப்புவாய்ந்தவரா யிருந்துவந்தார்கள். ஆதலின், நமதிளஞ் சிறுராகிய மு'ஹம்மத'ானவர் (சல்) தமக்குரிய பன்னிரண்டாவது பருவத்தை யடைந்துவந்தக்கால், ஒருமுறை அவருடைய பெரிய தந்தையான அபூ'த்தாலிப்' ஷாம்தேயத்தை நோக்கி ஒரு வர்த்தகக் கார்வானைச் சித்தஞ் செய்யத் தொடங்கினர். அவர் தமது வர்த்தகத்துக்கு வேண்டிய சரக்குக்களை யெல்லாம் பல்வேறு கூனல்முது கொட்டகங்களின் மீது குவித்தேற்றியபோது,* அதனைக் கண்டவுடனே நம் பால்யருக்கு ப'ாதி'யாவின் பண்டையஞாபகம் மனத்துள்ளே மறுபடியும் ஓடிவந்தது. என்னெனின், அந்த ப'ாதி'யாவி லிருந்தபொழுது இம்மாதிரியான பலப்பல கார்வான்கள் அவ்வூர்வழியே அங்குமிங்கும் ஊர்ந்துசெல்வதைச் சிறுவர் மு'ஹம்மத்'(சல்) அடிக்கடி கண்டிருக்கிறார்கள். தங்களுக்கும் வயது இதுபொழுது பன்னிரண்டாய் விட்டமையான், தாங்களும் பெரியதந்தை அபூ'த்தாலி ப்'வர்களுடன் ஷாம் முதலிய வெளிநாடுகளுக் கெல்லாம் வியாபாரம் செய்யச் சென்று உலக அனுபவத்தைப் பெறவேண்டு மென்னும் அவாவும் அதிகம் பெருக லாயிற்று. அதுவேயு மன்றி, மற்றொரு முறையும் தம்முடைய பெரிய தந்தையரையும் பிரிந்து தனித்திருக்க வேண்டுமே யென்னும் ஏக்கத்தினால் அச்சிறுவர் மனங்கசிந்து உள்ளங்கனிந்து உருகுகின்றார்கள்; உடனே ஓடிச்சென்று அபூ'த்தாலிபி'ன் இடுப்பைக் கோத்துப் பிடித்து, அவரது ஆடையின் தோகையால் தமது நேத்திரத்தினின் றிழியும் அவலக்கண்ணீரைத் துடைத்துக் கொண்டே, "தாங்கள் ஈங்கில்லாதபோது என்னை எவர் பராமரிப்பார்?" என்று இனிமையாகக் கூறினார்கள்.

அதனைக் கேட்டவுடனே அபூ'த்தாலிபு'ம் தம்முடைய தம்பி மைந்தரை மார்புறத் தழுவி, உள்ளம் பூரித்தவராய், "ஆண்டவ னாணைப்படி

---

* தி'மஷ்க், ப்'ஸ்ரா, மற்றுமுள்ள ஷாம்தேயப் பகுதிகள் ஆகியவற்றிற்கு அபூ'த்தாலிப்' 'ஹிஜா'ஜ், ஹிஜ்ர் முதனியவற்றின் பேரீச்சங் கனிகளையும், யமன்தேயத்து வாசனைப் பண்டங்களையும் ஏற்றுமதி செய்துகொண்டு போய், ஆங்கிருந்து பை'ஜான்ஷிய ராஜ்யத்தின் விலைபொருள்களைத் திரும்ப ஏற்றிக்கொண்டு வருவார்.

யானிவரை உடன்கொண்டே செல்வேன்; இவரும் ஒருக்கணமும் என்னை விட்டுப் பிரிந்திரார்; யானும் ஒருக்கணமும் இவரைவிட்டுப் பிரிந்திரேன்," என்று கூறி, அச்சிறுவரையும் ஷாமுக்கு உடன்கொண்டு செல்லச் சம்மதித்தார். இவரை அந்த அரபிகளுக்குரிய வெளிநாட்டு வர்த்தகத்திலே இனிப் பழக்கவேண்டு மென்னும் ஆவலும் அபூ'த்தாலிபி'ன் உள்ளத்தின்கண் ஊன்றிப் பதிந்துவிட்டது. ஆதலின், அவரது அனுமதி கிடைத்தவுடனே நமதிளஞ்சிறுர் தமது பிரயாணத்துக்கு வேண்டியதைச் சித்தஞ்செய்து கொண்டு, அப்பெரிய தந்தையுடன் சென்று அவருக்குப் பின்னே அவரது பெண்ணொட்டகத்தின் கூனன்முதுகின்மீது தாவி ஏறிக்கொண்டார்கள்.

அப்பால், அந்தக் கார்வான் மக்கமா நகரைவிட்டுப் புறப்பட்டு வெளியிலுள்ள 'ஹிஜா'ஜின் மணல்வெளியுள்ளே நுழைந்து சிரியாவை நோக்கிச் சென்றது. அதுவரை மக்கத்துக் காற்றால் மங்கிப்போயிருந்த மு'ஹம்மதி'ன்(சல்) ஹிருதயகமல மெல்லாம் அந்த மைதானத்தின் திறந்தவெளிக் காற்றால் அளவுகடந்த ஆரோக்கியத்தைப் பெற்றுக்கொள்ளத் தலைப்பட்டு விட்டது. மக்காவுக்கு வடக்கேயுள்ள அந்த 'ஹிஜா'ஜின் மணல்வெளியில் இந்தக் கார்வானைத் தவிர்த்து வேறெவ்வித உயிர்ப்பிராணியும் கண்கொண்ட மட்டும் காணப்படவே யில்லை. படைத்தவன் ஒருவனல்லது, படைப்பினங்க ளெவையும் காணக்கிடைக்காத அவ்வரப்தேசப் பாலை வனத்தில் நமதிளஞ் சிறுரும் அவ்வெப்பத்தின் வெக்கை யனைத்தினையும் ஓராண்டுமட்டும் மிக்க பொறுமையுடன் சகித்து, அதிக முகமலர்ச்சியுடனே விளங்க லாயினர்கள். சிறுபிராய முதலே ப'தி'யாவின் மணல்வெளிகளில் அதிகம் உலாவித் திரிந்ததன் காரணத்தினல் பால்ய மு'ஹம்மது'க்கு (சல்) அவ்வரப்தேச வெப்பமுழுதும் சர்வ சாதாரணமாகவே காணப்பட்டுவந்தது. அன்றியும், இச்சிறுவரும் அவ்வராபியர் வர்க்கத்திலேயே தோன்றியவ ராதலின், இவருக்கு அப்பாலைவனக் கொடுமை யனைத்தும் ஓர் இயற்கையான நிலைமையாகவே தோன்றிக்கொண் டிருந்ததென்னலாம். ஆனல், இவ்வாறு அத் திறந்த பாலைவனத்தின் வழியே சென்றுகொண் டிருந்தபோது, அச் சிறுவருக்கு மேகங் குடைபிடித்ததென்றும், மலக் (வானவர்) ஜிப்'ரீல் தமது சிறகை விரித்துக்கொண்டு தலைக்குமேல் வட்டமிட்டு வந்தா ரென்றும் கூறப்படும் சம்பவங்களுக்குப் போதிய சரித்திர ஆதாரமில்லை யென்று நம் ரஸூலுல்லாவின் உண்மைச் சரித்திராசிரியர்கள் பலபேர் உறுத்திக் கூறுகின்றர்கள்.

இவ்வாறு சென்றுகொண் டிருந்த கார்வான் ஷாம்தேசத்தின் எல்லைப் பகுதியிலுள்ள பு'ஸ்ரா* என்னும் நகர்போய்த் தங்கிற்று. ஆங்குள்ள ஜப'லெ 'ஹௌரான் என்னும் மலைத்தொடரின் சிறியதொரு செங்குத்தான சிகரத்தின்மீது கிறிஸ்தவ சன்னியாசிகளின் மடாலய மொன்று நிருமிக்கப்பட்டிருந்

* பு'ஸ்தரா என்றுங் கூறுவர் வேறுசிலர்.

தது; அம்மடத்தின் அதிபராக அதுசமயம் பு'ஹைரா ராஹிப்' என்னும் கிறிஸ்தவப் பாதிரியார் ஒருவர் விளங்கிவந்தார். இவர் மேற்கூறிய கார்வானில் எதிர்பாராத பல அற்புதங்கள் நிகழ்வுற்றதைக் கேட்டு, அம் மனிதர்களுடன் ஓர் ஆச்சரியமான பிறவியுடையவரும் உடன்வந்திருக்க வேண்டுமெனக் கொண்டு, அவரைக் கண்டுபிடிப்பான் வேண்டி அக் கார்வானுடன் சென்றிருந்த அனைவர்க்கும் ஒரு பெரியவிருந்து செய்வித்தற்பொருட்டு மிகுதியும் பரிந்தழைத்தார். அதனைச் செவியுற்ற கார்வான் விருந்தினருள் ஒருவர் அதற்குமுன்னே என்றுமில்லாத வழக்கமாய் அந்த "பு'ஹைரா" இன்றுமட்டும் தமக்கெல்லாம் விருந்து செய்விக்கத் துணிந்ததற்கு யாது காரணமென விசாரித்தார். அதற்கு விடையாகப் பாதிரி பு'ஹைரா தாம் அன்னவருக்கு அவ்வாறு விருந்தளிக்க முன்வந்ததற்குத் தக்க காரணம் இல்லாமற் போகவில்லையென்று கூறி, அவர்களுக்கென்று தையாரித்த விருந்துபசாரத்தை ஏற்றுக்கொண்டு, எல்லாரும் தமது மடாலயத்திற்கு வர வேண்டுமென்று நல்வரவு கூறினர். அவ்வாறே அவர்கள் சென்று அந்தப் பாதிரியாரின் வளம் பொருந்திய விருந்துபசார வேளாண்மைப் போஜனத்தை மனமார அருந்திக்கொண்டிருந்தக்கால், அந்த பு'ஹைரா ராஹிபென்பவர் ஆங்குக் கூடியிருந்த அனைவரையும் ஏற இறங்கப் பார்த்துத் தாம் எதிர்பார்த்திருந்த அந்த மனிதர் அவ்விருந்தில் காணப்படவில்லையென்று தெரிந்துகொண்டார். ஆனால், அதற்குமுன் அந்தக் கார்வானில் காணப்பட்ட பற்பல விதமான அற்புதங்களால் அவற்றிற்குரிய "அந்த மனிதர்" அங்கு வந்திருக்கத்தான் வேண்டுமென மனந்தேறி, அந்தக் கிறிஸ்தவப் பாதிரியார் அந்தக் :குறைஷிகளை நோக்கி, "ஏ மக்கத்து மனிதர்காள்! உங்கள் கூட்டத்திலுள்ள வயோதிகர், வாலிபர், சிறியோர், பெரியோர் ஆகிய அனைவர்க்கும் யான் விருந்தளித்திருந்தேன்; அவ்வாறிருந்தும், ஏன் நீங்கள் ஒருவரைமட்டும் இங்குக் கொண்டுவரவில்லை?" என்று வினவினர். இதற்கு, "அவர் மிகச்சிறு பிராயத்தினராயிருத்தலினால், இங்கே அழைத்து வரவில்லை," என்று ஒரு :குறைஷி பதில் கூறினர். அக்கணமே அவரையும் அழைத்து வருமாறு அந்த பு'ஹைரா வற்புறுத்தினர்.

அதைக் கேட்டவுடன் ஒருவர் ஓடிச்சென்று பால்ய மு'ஹம்மதை'(சல்) அந்தப் பாதிரியாரிடம் கொண்டுவந்து விட்டார்; ஆங்கு அச்சிறுவர் வந்து விருந்துண்டு இளைப்பாறிய பின்னர் அவரிடம் பு'ஹைரா சென்று அவரது ரூபலாவண்யத்தையும் முகவசீகரம் முதலிய சாமுத்திரிகா லக்ஷணத்தையுங் கண்டுவியந்து, "லாத்தின்மீதும் உ''ஜ்'ஜாவின் மீதும் ஆணையாக! உம்மிடம் ஒரு கேள்விகேட்கப்போகின்றேன். நீர் அதற்கு விடை கூறுவீரோ?" என்று அதிவிநயமாக வினவினர். அதைச் செவிமடுத்தவுடன் நஞ்சிறுர், "லாத்தின்மீதும் உ''ஜ்'ஜாவின்மீதும் ஆணையாகவா! யான் இவ்வுலகினில் அவ்விரண்டு விக்ரஹங்களைக் காட்டினும் வேறெதையும் அத்துணை அருவருப்புடனே நோக்குவதில்லையே! ஆதலின், நீர் அல்லா(ஹ்)வின் மீது ஆணை

யிடுவீ ராயின், அதற்கு யான் மறுமொழி கூறுவேன்," என்று விடை பகர்ந்தார். பிறகு அப்பாதிரியார் அல்லா(ஹ்)வின் திருநாமத்தைக்கொண்டு பின்வரும் விஷயங்களைக் குறித்து வினவத் துவக்கினார் :—

முதன்முதலாக அவ்வாலிபரின் வம்ச வரலாற்றைப் பற்றியும், அவரது சமூக அந்தஸ்தைப்பற்றியும், அடிக்கடி அவருக்குண்டாகும் (மனும்) கனத் தோற்றங்களைப் பற்றியும், இவ்வாறாய மற்றும் பற்பல விஷயங்களைப் பற்றியும் விசாரித்தார். இவற்றிற் கெல்லாம் தக்க விடைகளைப் பெற்றுக் கொண்டதன் பின்னால், அவ்வாலிபர் அவரிடம் விடைபெற்றுக் கொண்டு திரும்பியபோது, பிடரியின் பக்கம் அவரது அங்கி சிறிது அகன்றதைக் கண்ட பு'ஹைரா ராஹிப்' அச்சிறுவரின் முதுகில் பிடரிக்குக் கீழாகத் தோட்பட்டை யோரத்தில் "க'ாத்தமெ நுபு'வ்வத்", அஃதாவது, "நபிப் பட்டத்திற்குரிய முத்திரை" இருப்பதைக் கண்டுகொண்டார். அப்பொழுதே இவர்தாம் தமது தவ்ராத், இன்ஜீல் வேதங்களில் முன்னறிவிக்கப்பட்டிருக்கும் இறுதித் தீர்க்கதரிசி யென்று சந்தேகமின்றித் தெளிவாகத் தெரிந்து கொண்டு, அவருடைய பெரியதந்தையான அபூ'த்தாலிபி'டம் சென்று, இவர் எவருடைய மைந்தரென்று வினவினார். அதற் கவர், அச்சிறுவர் தம் முடைய மைந்தரென்று விடைகொடுத்த போழ்து, அதனை அப்பாதிரியார் ஒப்புக் கொள்ளாது, மீட்டும் வற்புறுத்தி வினவினார். அதைக் கேட்டு அபூ'த்தாலிப்' அவரைத் தம்முடைய தம்பியான (காலஞ்சென்றுபோ யிருந்த) அ'ப்'து'ல்லா(ஹ்)வின் மைந்தரென்று கூறியவுடனே, பு'ஹைரா ராஹிப்', "நான் சொல்வதை நீர் கேட்பீராக: இன்றே இச்சிறுவருடன் நுமது சொந்தநாடு போய்ச் சேர்வீராக; ஆங்கு இவர்மீது அதி ஜாக்கிரதை யான் கவனம் செலுத்திவரல் வேண்டும். எல்லாவற்றைக் காட்டினும் எஹூதிகளைப்பற்றிய ஞாபகமே அதிகமிருத்தல் வேண்டும். அல்லா(ஹ்) வின்மீது ஆணையாக! இவர் இவ்வுலகின்கண் இணையற்ற மாபெருங் காரி யங்களை யெல்லாம் சாதிக்க வந்துள்ளார்; இவ்விஷயத்தை அந்த யூதர்கள் அறிந்துகொள்வார்க ளாயின், இவரது உயிருக்கே ஆபத்து விளைந்திடக் கூடும்," என்று அறிவுறுத்தினார். இதை யெல்லாங் கேட்டவுடனே அபூ'த்தாலி ப்'வர்கள் அந்த பு'ஸ்தராவிலேயே தாம் கொண்டுசென்ற பண்டங்க ளனைத்தையும் விற்பனை செய்துவிட்டு, அதிக பத்திரமாகத் தம் தம்பிமைந்தருடனே மக்கமா நகர் வந்து சேர்ந்தார். இவ்வாறு அந்த முதற் பிரயாணம் ஒருவாறு தக்க லாபத்துடனே முடிவடைய லாயிற்று.

ஆனால், அந்த ஷாம்தேசப் பிரயாணத்தில் பாதிரி பு'ஹைராவுடன் நடைபெற்ற தென்று கூறப்படும் சம்பவ முழுதும் மெய்யென்று கொள்ளு தற்குப் போதிய சரித்திர ஆதாரம் இல்லையென்று இமாம் அ'ஹ்மதி'ப்'னு ஹன்ப'ல் (ர'ஹ்) அவர்கள் அக்காலத்திலேயே கூறிச் சென்றார்கள். இவ் வாறே இப்'னு ஸஅ'த்', 'ஹா'பிஸ் 'தஹபீ' முதலிய மற்றும் பற்பல

பெரியார்களும் அபிப்பிராயங் கூறியிருக்கின்றனர். இவ்வண்ண மாயே அல்லாமா ஷிப்'லீயும் அபிப்பிராயங் கொண்டுள்ளார்கள்.

மேற்கூறிய வாறு சிரியா தேசத்துக்குச் சென்று வந்ததன் பின்பு அல்லா(ஹ்)வி னருளாலும், பெரியதந்தை அபூ'த்தாலி ப்'வர்களின் கருணை மிக்க கரிசனத்தாலும் நம்பெருமானூர் நபிகள் திலகம் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக நன்கு வளர்ந்துவந்தார்கள். இவர்கள் அவ் விளம் பிராயத்தே விக்ரஹ வணக்கத்தையும் வீண் விளையாட்டுக்களையும் அதிகமதிகம் வெறுத்து வந்ததோடு, பொய்ம்மையை யொழித்து மெய்ம் மையையே பெரிதும்போற்றி வந்தார்கள். இவ் வாலிபர் அக் காலத்திலேயே அதிக சங்கோச சுபாவ முள்ளவர்களா யிருந்து வந்தார்கள்; மனத்தளவில் மட்டுமின்றி, சரீர சம்பந்தமான விஷயங்களிலும் இன்னவருக் குள்ள சங்கோசத்திற் கோர் உறை கூறி முடியாது. இவர்கள் எப்பொழுதுமே தங்கள்மீதுள்ள அங்கியைக் கழற்றுவது வழக்கமில்லை. இவ்வாறிருக்க, ஒருநாள், அபூ'த்தாலி ப்'வர்களால் 'ஜம்'ஜம் கிணற்றுக்குச் செய்யப்பட்டு வந்த "மராமத்தில்"* கலந்துகொண் டிருந்த மக்கத்துச் சிறுவர்களுடனே நம் வாலிப மு'ஹம்ம த்'வர்களும் சேர்ந்துகொண்டு பெரும்பெரும் கற்களை யெல்லாம் சுமந்து சென்றூர்கள். அதுபொழுது மற்றெல்லாச் சிறூர்களும் தங்கள் உடம்பி லுள்ள அங்கியைத் தூக்கித் தோள்மீது சுருட்டிச் "சும்மாடாக"† வைத்து, அந்தக் கரடுமுரடான கற்களால் தங்கள் தோள் நோவுறு திருக்கும்படி செய்து கொண்டார்கள். அதனைப் பார்த்து மு'ஹம்மத'வர்களும்(சல்) தங்கள் மேலங்கியையும் அவ்வாறே தூக்கிச் சுருட்டித் தோள்மீது சுமையடையாக வைத்துக்கொண்டு தாங்கள் சுமக்க வேண்டிய கற்களைச் சுமந்து சென்றூர்கள். ஆனல், இவ்வாறு அவர்கள் செய்யநேர்ந்தத னிமித்தம் தங்கள் திருமேனி திறந்து வெளியில் எல்லார் முன்னும் காணப்பட்ட தென்பதைக் கண்டுகொண்ட வுடனே அந்நாணத் தால் திகைப்புண்டு தடுமாறி மனநோ வடைந்து மேனி முழுதும் வியர்வை நீரால் நனைந்து அக்கணமே மயக்க முற்றுக் கீழே சாய்ந்து வீழ்ந்துவிட் டார்கள்.

" மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னூர்
உயிர்நீப்பர் மானம் வரின்,"

என்று வனப்புற வர்ணித்துள்ளார் வள்ளுவனூரும்.

இத்தகைய காரியங்களால் அவர்களுடைய மான மென்பது அவ் வாலிப தசையிலேயே எத்துணை மட்டும் உச்சஸ்தானத்தை யடைந்திருந்த தென்பதை நாம் ஒருவாறு உய்த்துணர்ந்து கொள்ளுகின்றோம். அக்

* "முரம்மத்" என்பதே சரியான வழக்கு.
† "சுமையடை" (சுமையை யடுத்திருப்பது) என்பதுதான் சரி.

காலத்தில் தம்மோடொத்த வாலிபர்க ளெல்லாரைக் காட்டினும் இவர் களே அழகிலும் அந்தத்திலும் அதிகம் வனப்புற்று விளங்கினார்கள். இவர் களுக் கிருந்துவந்த மானத்தின் பெருக்கால் இவர்கள் மற்றை யுவர்கள் செய்துவிடக்கூடிய அப்படிப்பட்ட எத்தகைய மன முரணான காரியங்களை யும் ஒரு சிறிதும் செய்யத் துணிந்தன ரில்லை யென்னலாம். இவர்கள் அப்பொழுதே அதிக தாராளச் சித்தமுள்ளவர்களாய் விளங்கினார்கள். சத்தியத்தைக் கடைப்பிடிப்பதிலும், நம்பிக்கைத் துரோகம் செய்யாமை யிலும், எல்லாரிடத்தும் இனியமொழி சம்பாஷிப்பதிலும் அக்காலத்தில் இவர்களை ஒப்பாரும் மிக்காரும் அவ் வரப்தேய முழுதுமே வேறெவருமே காணப்பட்டதில்லை யென்னலாம். அக்கால அராபி யுவர்களிடம் சாதாரண மாய்க் காணப்பட்டுவந்த குடித்தல், "கூத்திப்" பழக்கம், சூது பொருதல் முதலிய தகாத கிரியைகளெல்லாம் நம்வாலிப மு'ஹம்ம த்'வர்களிடம் (சல்) எட்டுணையும் எப்பொழுதுமே இருந்துவந்த தில்லை. நட்பிலும் நாணயத் திலும் இவரை மிகைப்பவர் வேறெவரும் இத் தரணியின்கண் இருந்த தில்லை. இந்த மு'ஹம்மதி'டம் இவ்வுலக சம்பந்தமான எந்த விஷயத்தி னிமித்தம் நெருங்கியவரும் இவரது பெருந்தன்மை, வாய்மை, தாராளச் சிந்தை, முழுநம்பிக்கை முதலிய உத்தமோத்தம சத்திய சற்குணங்களால் ஈர்க்கப்படாமல் வாளா விலகிக்கொண்ட தில்லை. இவ்வாறாய பல்வகைக் காரணங்களைக் கொண்டே அல் அமீன் (முழு நம்பிக்கைக் குரியார்) என்னும் சிறப்புப் பொருந்திய— இன்றுகாறும் எவருக்கு மளிக்காத— பட்டத்தை யும் அவ்வரபிகள் இவருக் களித்தனர். அதன்பின்பு இந்த "அல் அமீன்" என்னும் இச்சிறப்புப் பெயருக்கு மாற்றமாய் நம் வாலிபர் எப்பொழுதும் நடந்து கொண்டதே யில்லை. ஆகலின், அன்னவரும் பிற கெப்பொழுதும் இவர்களை "அல் அமீன்" என்றே அழைத்து வந்தார்கள்; எதிரிகள் எழுதிய ஏசற் கவியிலும் இப்பெயரையே பெரிதும் வழங்கியுள்ளன ரென்றால், பிறகு இப்பெருமானாரின் பெருமையைக் குறித்து யார் என் சொல்லல் சாலும்! இதுவேயு மன்றி, இப்படிப்பட்ட "நம்பிக்கைக் குரியார்" என்னும் அழகிய சிறப்புப் பெயர் இதுகாறும் இவ் வவனியின் கண் வேறெவருக்கும் எத்தேயத்திலும் எக்காலத்தும் எவராலும் அளிக்கப் பட்டதில்லை யென்னும் உண்மையையும் நம் நேயர்கள் சிறிதும் மறவாமல் தம் ஞாபகத்தில் எப்பொழுதும் வைத்துக்கொள்ளக் கடவார்களாக.

அதுபொழுது நம் வாலிப மு'ஹம்மது'க்கு வயது இருபதுதா னாயிற்று. அவ் வேளையில்தான் :குறைஷிகளுக்கும் ஃகஸ் வர்க்கத்தினருக்கும் இடை யில் நடைபெற்றுவந்த ":க'ஜ்வ'துல்'பிஜார்" என்னும் முன்னமே கூறப் பட்ட யுத்தத்தில் இவர்களும் கலந்து கொண்டார்கள். அந்த யுத்தத்தில் நம் வாலிபயுவர் பங்கெடுத்துக் கொள்ள வேண்டிய ஆவசியகம் நேரிட்டுவிட்ட போதினும், இவர்களுடைய திருக் கரத்தால் ஓருயிரும் சேதிக்கப்பட்டதே யில்லை யென்பது திண்ணமே. இவர்கள் அந்தப் போரில் தந் தந்தைமார்

களுக்கு அம்பு பொறுக்கிக் கொடுத்தார்களே யன்றி, தாங்க ளொன்றும் போர்புரிய வில்லையென்ப.

அதன் பின்பு இவர்கள் 'ஹில்'புல் 'பு'ஜூல் என்னும் பொதுநன்மைக் கான இயக்கத்தில் ஈடுபட் டுழைத்தார்கள். ஏழை எளியவர்கட்கும் அடக்கி யொடுக்கப் பட்டவர்கட்கும் அரிய உதவி புரிவதே அவ் வியக்கத்தின் முக்கிய நோக்கமா யிருந்துவந்தது; உதவி யற்றவர்களுக்கு வேண்டிய உதவிக ளனைத்தையும் செய்துதீர வேண்டுவதே அவ்வியக்க அங்கத்தினர் ஒவ்வொருவரும் தத்தம் தலைமீ தேற்றிக் கொண்ட முதற் கடமையாகும். இத்தகைய மானுஷீக தர்மத்துக் குரிய பொதுச்சங்க மொன்றை நிர் மாணித்து, அதனை முதன்மைக்குக் கொண்டுவந்த கௌரவ முழுதும் வாலிபமு'ஹம்மது'க்கும்(சல்) அவருடைய குடும்பத்தினரான ப'னூஹாஷிம் வம்சத்தினருக்குமேதாம் உரித்தா யிருக்கின்றது. இது நடந்தது க'தீ'ஜா பிராட்டியா ரவர்களுடன் திருமணம் முடிந்த பின்னரென்று வேறுசிலர் கூறுவர்; ஆகவே, அவ்விடத்தில் இதன் முழுவிவரமும் விரித்துரைக்கப் படும். இவ்வாறு அவ்வாலிப வயதிலேயே மு'ஹம்மத்'வர்கட்கு மன் பதைகளிடம் என்றும் மாறாப் பெருங்கருணை முளைத்திருந்ததை உற்று நோக்குங்கால், அவர்கள் இயற்கையிலேயே "உலக முழுமைக்கும் ஓர் ஒப்பற்ற தயாளமூர்த்தி"* யாகவே விளங்கலாயினார்க ளென்பது தெள்ளி திற் புலனாகின்ற தன்றோ?

நம் வாலிபர் ஷாம்தேயம் சென்று வந்ததுமுதல் மானுஷீக தர்மத்திலே அதிகம் சிந்தனை செலுத்தி வந்தார்கள். என்னெனின், அந்தப் பிரயாணத் திலேதான் மனிதர்களின் வீழ்ச்சிகளையும் மதங்களின் தாழ்ச்சிகளையும் மிக மிகச் செம்மையாக நேருக்கு நேராய்க் கண்டு கொண்டார்கள். இத்தகைய மாந்தர்களை யெல்லாம் எவ்வாறு மேன்மைக்குக் கொண்டுவருவ தென்னும் உள்ளெண்ணத் துடனே தங்களது வாலிபமனம் மிக்குமிக்கு நெக்நெக் குருகியவ ராகவே சதா காலங்கழித்து வந்தார்கள். இவர்களது ஷாம் தேச அனுபவத்துடன், மக்காவின் கண்ணுள்ள மனிதர்களின் நிலைமையும் இவர் களதுஉள்ளத்தினை எப்பொழுதும் உறுத்திக்கொண்டே யிருந்தது; உ'(க்)காளி'ன் சந்தையில் அடிக்கடி நேரிடும் சண்டைகளும், :குறைஷிகளின் கொடிய குணுதிசயங்களும் இளகிய மனத்தை யுடைய இவ் வாலிபரின் உள் ளத்தின் கண்ணே எப்பொழுதும் ஊடுருவிக் கொண்டே யிருக்கும். இவற் றிற்கெல்லாம் இறைவன்தான் ஒரு நல்வழிகாட்ட வேண்டுமென்று சதா சர்வ காலமும் அவனுடைய ஆகாயத்தையே அண்ணாந்து பார்த்த வண்ண மாகவே நெடுங்காலங் கழித்துவந்தார்கள்.

நாம் முன்னமே கூறிய வண்ணம் மக்காவிலுள்ள பெரிய மனிதர்க ளான அரபிகள் தங் தேயத்துக்கு வடக்கிலுள்ள ஷாம் தேயத்துடனும்,

* "ர'ஹ்ம'துன் லில் ஆ'லமீன்," என்று ஆண்டவனே வர்ணித்துள்ளான்.

தெற்கி லுள்ள யமனுடனும் வர்த்தகம் செய்துவருவது நெடுங்கால வழக்கமா யிருந்துவந்தது. உலகத்திலுள்ள மகாமகா கொடுமையெல்லாம் வாய்ந்து வறந்து கிடக்கும் பாலைவனத்துள் ளெல்லாம் மிக்க சிறப்பு வாய்ந்த அந்த 'ஹிஜா'ஜின் பாலைவன மத்தியில் இந்த மக்கமா நகர் நிர் மாணிக்கப்பட் டிருப்பதால், ஆங்குள்ள மாந்தர்கள் அயல்தேயங்களுடன் வியாபாரம் செய்தே தங்களுடைய காலத்தைக் கழிக்கவேண்டியவரா யிருந்துவந்தனர். அந்த அரபிகளின் ஒட்டகங்கள், ஆபிரிக்கா, இந்தியா, சீனு, யமன் முதலிய தேயங்களிலிருந்து வரும் வாசனைத் திரவியங்கள், தந்தம், தங்கம், பட்டு, "துகிம்"† முதலிய விலையுயர்ந்த சாமான்களை ஏற்றிக் கொண்டு சென்று, 'ஹிஜா'ஜிலுள்ள :தாயி'ப் ய:த்ரிப் முதலிய இடங்களில் விளையும் பேரீச்சம் பழங்களையும் சுமந்து சென்று, வடக்கேயுள்ள ஷாம் தேசத்தில் விற்பனை செய்துவிட்டு, ஆங்கிருந்து அரிசி, கோதுமை முதலிய தான்யங்கள், அத்திப்பழம் முதலிய தீம்பண்டங்கள், இன்னம் அங்குக் காணப்படும் கிரேக்க ரோம நாகரிகப் பண்டங்கள் ஆகியவற்றை வாங்கிக் கொண்டு வரும். இப்படிப்பட்ட அயல்நாட்டு வர்த்தகத்தில் அபூ'த்தாலி ப்'வர்களைப் போன்ற ஆடவர் மட்டுமின்றி, பெண்டிரும் பலர் கலந்திருந் தனர். உதாரணமாக, மக்காவி லிருந்துவந்த, :குஸையின் வம்சத்துதித்த கு'வைலித்' என்பாரின் புத்திரி சிகாமணியாகிய க'தீ'ஜா*(ரலி) என்னும் பெருமாட்டியும் ஒருவராவர். இம்மாது சிரோமணியின் அயல்நாட்டு ஏற்றுமதி இறக்குமதி வியாபாரம் மிகப் பெரிதாகவே நடைபெற்று வந்தது.

> " வணக்கமும் அறிவும் சேர்ந்த மனத்துறும் பொறையும் நல்லோர்
> இணக்கமும் வறியோர்க் கீயும் இரக்கமும் நிறைந்த கற்பும்
> குணக்கலை வல்லோ ராலும் குறித்தெடுத் தவட்கொப் பாகப்
> பணக்கடுப் பாந்தட் பாரிற் பகருதற் கரிய வன்றே!"

என்றார் இவர்குறித்து உமறுப் புலவரும்.

அப் பெருமாட்டியாருக்கு அதுகாலைத் தமது வர்த்தகத்தை வெளி நாடுகளுக்குச் சென்று நடாத்திவைக்க ஒரு நம்பிக்கையான "ஏஜெண்ட்" டைத் தேடிக்கொண்டிருக்க வேண்டிய ஆவசியகம் நேரிட்டு விட்டது. அப்படிப்பட்ட வேளையிலே அம் மாதரசியார் நம் வாலிபர் "அல் அமீன்" அவர்களைப் பற்றிக் கேள்வியுற் றிருந்தார்கள். இந்த "அல் அமீன்" அவர்களிடம் வியாபாரிகளுக்குரிய முக்கிய அம்சங்களாகிய நம்பிக்கையும் நாணயமும் அளவுக்குமீறி அதிகம் காணப்பட்டு வந்தன. அவர்களுடைய

† "துகிம்"— தோகை— அஃதாவது, மயில் என்று பொருள்படும்.

* இம்மாதரசியார் இஸ்லாத்திற்கு முற்பட்ட நாட்களில் :தாஹிரா—பரிசுத்தமானவர்— என்று அழைக்கப்பட்டு வந்தார்.

நாணயத்தைப் பற்றி அ'ப்'து'ல்லா ஹிப்'னு அபி'ல் 'ஹம்ஸா என்னும் வியாபாரி யொருவர் கூறி யிருப்பதாவது:— "யான் வர்த்தகம் செய்து வந்த காலத்தில் எனக்கும் அவர்கட்கும் சரக்குக்களின் கொடுக்கல் வாங்கல் இருந்து வந்தன. ஒரு முறை அவர்களிட மிருந்து சில சரக்கு வாங்க வேண்டியிருந்ததால் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் அவர்களிடம் வருவதாகக் கூறிப் போனேன். யாது காரணம்பற்றியோ யான் அவர்களிடம் சொல்லி வந்ததுமுதல் மூன்று தினம்வரை எனக்கு அதைப்பற்றிய நினைவு வரவே யில்லை. பிறகு மூன்றாவது நாளன்றுதான் எனக்கது நினைவிற்கு வந்தது. உடனே எழுந்து அவ்விடத்திற் கோடினேன்; ஆனால், நம் பெருமானா ரவர்கள் அவ்விடத்திலேயே என்னை எதிர்பார்த்த வண்ணமாய் இன்னம் இருக்கக் கண்டேன். ஆனால், யான் சொல்லிவந்த என் வாக்குப் பிழைத் ததைப் பற்றி அவர்கள் என்பால் ஒன்றும் கேட்கவில்லை; அல்லது ஒரு சிறிது வருத்தமேனும் அவர்களுடைய பூரணச்சந்திர வதனத்தில் தட்டுப் பட வில்லை. இதைப் பற்றி யாதொன்றும் நடவாததே போலத்தான் அவர்கள் முழுமௌனத்துடனே இருந்து விட்டார்கள்." ஆனால், "நீர் எனக்குச் சிறிது சிரமங் கொடுத்தீர். யான் மூன்று நாளாக இங்கேயே காத்துக்கொண் டிருக்கிறேன்," என்று மட்டுமே கூறினார்கள். இவ் வண்ணமே நாயகமவர்களின்(சல்) வியாபார நேர்மையைப்பற்றி, ஸாயிப்' (நாயகமவர்களுடன் சிறுபிராயத்திலேயே வியாபாரம் பண்ணிக்கொண் டிருந்தவர்) இஸ்லாத்தைக் கைக்கொண்டவுடனே மிகத் தெளிவாக எடுத் தோதி யிருக்கின்றார். இது மட்டுமா? ஃகஸ் பி'ன் ஸாயிப்' மக்''ஜூமீ என்னும் ச'ஹாபி'ப்பெரியாரும், ரஸூலுல்லா அவர்களுடைய வர்த்தகமும் வாக்கும், சத்தியமும் சாமர்த்தியமும் வேறு ஏனையவர்பால் கண்டுகொள்ள முடியாதனவாய் அமைந்துகிடந்தன என்று கூறியுள்ளார்.

"நிலம்திறம் பெயரும் காலை யாயினும்,
கிளந்த சொல்நீ பொய்ப்பறி யலையே!"

என்றார் ஒரு தமிழ்நாட்டுப் பெரும்புலவர்.

இப்படிப்பட்ட "அல்அமீ"னாகிய அ'ஹ்மத'வர்கள்(சல்) தங்களுடைய சௌலப்பிய சற்குணத்திற்காகவும் சர்வ சாதாரணமான எளிய வாழ்க்கைக் காகவும் நம்பிக்கைக்காகவும் நல்ல வாக்குறுதிக்காகவும் க'தீ'ஜா(ரலி) அவர் களால் விழையப்பட்டதில் ஒன்றும் ஆச்சரிய மில்லை. நம் மாதரசியோ முன்னம் கூறியவாறே நாற்பது பிராயமுடைய ஒரு பெருந் தனிகமாதாய் விளங்கினார்கள். மக்காவிலிருந்து வெளிநாடுகளுக்கு ஏற்றிச் செல்லப்படும் வர்த்தகப் பண்டங்களுள் ஒருபாதி க'தீ'ஜா ஸ்ரீமாட்டியாருக்கும், மற்றைப் பாதியே மற்றெல்லா மக்கா வாசிகளுக்கும் சொந்தமாயிருந்தன வென்றால், அதன்பின்பு அம்மாதரசியின் வியாபாரப் பெருமை இத்தன்மைத் தென்று வேறு தனியே எடுத்துச் சொல்லவும் வேண்டுமோ? அப் பெருமாட்டியார்

அதுசமயம் தம்முடைய இரண்டாவது கணவரையும் இழந்துவிட்ட ஒரு "விதந்து"வா யிருந்தமையான், வாலிபர் மு'ஹம்மதைப் பற்றிக் கேள்வி யுற்றவுடனே, அன்னவரையே தம்முடைய வர்த்தகத்துக்குரிய சரியான காரியஸ்தரெனத் தீர்மானம் செய்துகொண்டனர். மக்காவிலுள்ள மற்றெல்லாரும் இவ் வாலிபரையே ஏகமனத்துடன் ஸி'பாரிஷ் செய்தமை யானும் அன்னவரை வரவழைத்துத் தாம் வேறெவருக்கும் வழக்கமாகக் கொடுக்கும் ஊதியத்தைப்போல இரண்டுமடங்கு கொடுப்பதாக ஏற்றுக் கொண்டு, அன்னவரை ஷாம் தேயத்துக்கு ஒருமுறை வாணிபத்தி னிமித்தம் சென்றுவருமாறு வேண்டினார். அப்பொழுது நம் பெருமானாருக்கு வயது 25 தான் எட்டியிருந்தது.

இவ்வாறு வலியவந்த உத்தியோகத்தை நம்பெருமானா ரவர்கள் ஏற்றுக்கொள்வதில் தமக்கொன்றும் ஆக்ஷேபணையில்லை யென்று அபூ'த் தாலி ப்'வர்களும் அனுமதி யளித்து விட்டார்கள். அதற் கவர்கள் உடன் பட்டு, சிரியாவுக்குப் புறப்பட்ட காலத்தில் க'தீ'ஜா பிராட்டி அவர்களுடைய அடிமை மைஸரா என்பா ரொருவரும் உடனனுப்பப்பட்டார். இவர் நம்பெருமானின் உதவிக்காக அனுப்பப்பட் டிருந்தும், சிரியாவுக்குச் செல்லும் வழியிலும், ஆங்கிருந்து திரும்பிவரும் வழியிலும் அவர்கள் சார்பாய் நிகழ்ந்த அநேகவித அற்புதங்களை யெல்லாம் அதிகம் கண்டு கொண்டே வந்தார் : மக்காவை விட்டுப் புறப்பட்டது முதல் திரும்பிவந்து சேரும்வரை பெருமானா ரவர்களின் தலைக்குமேலே பகலெல்லாம் ஒரு வித மான கார்மேகம் குடைபிடித்துச் செல்லும் ; இரவானவுடனே அம்மேகம் மறைந்து விடும். மீட்டும் மறுநாட் பகல்முழுதும் அதே மேகம் தோன்றி, அவர்கட்குக் குடைபிடிக்கும். இந்த விதமான இயற்கை யற்புதம் தினந் தோறும் மீண்டும் மீண்டும் தோன்றி வருவதை அந்த மைஸரா அதிக ஆச்சரியத்துடனே இடைவிடாது பார்த்துக் கொண்டே வந்தார். மக்காவை விட்டு ஷாம்தேசம் நோக்கிச் செல்லும் பிரயாணத்தின்போழ்து வழியிலே வெப்பத்தால் களைத்துப் போன க'தீ'ஜாவின் ஒட்டகங்களும் நங் தெய்வ கடாக்ஷ முள்ள வாலிபரது கரம் பட்ட மாத்திரத்தில் தமது களைதீர்ந்து அதிக உற்சாகத்துடனும் அளவுகடந்த சுறுசுறுப்புடனும் எழுந்து ஓட்டம் பிடிப்பதையும் அந்த மைஸரா கண்ணாரக் கண்டுவந்தார். பிறகு ஷாம் தேசத்தின் எல்லையிலுள்ள பு'ஸ்ரா சென்றவுடன் ஆங்கும் முன்னம் பாதிரி பு'ஹைராவால் காணப்பட்ட அதிசயமே மீண்டும் நஸ்தூராப் பாதிரியான ஜார்டிஸ் என்பவராலும் காணப்பட்டது. இப் பாதிரியாரும் அப்பாதிரி யாரேபோல நம்பெரியார் இத் தாரணியின்கண் பின்னொரு சமயம் மகா கீர்த்தி வாய்ந்த ஓர் இணையற்ற பெரியாராய் விளங்கப் போகின்றனரென்று தீர்க்கதர்சனம் கூறினர். எனினும், இதற்கெல்லாம் சரியான சரித்திர ஆதாரம் இல்லையென்பதைப் பின்னே நீங்கள் தெரிந்துகொள்வீர்கள்.

நம் பெரியாரின் அற்புதங்க ளெல்லாம் அவ்வாறிருக்க, இவர்கள் தங்களுடைய புத்தி தீக்ஷண்யத்தாலும், நுண்ணிய வர்த்தக யுக்தியாலும், நல்ல நம்பிக்கையாலும், உயரிய வாய்மையாலும் தாங்கள் கொண்டுசென்ற சரக்குக்களை யெல்லாம் அதிக லாபத்துடன் மிக்க நல்ல முறையிலே விற்று விட்டார்கள். மற்றெவருக்குங் கிட்டாத அத்துணை அதிகமான லாபத்துடன் வாலிப மு'ஹம்மத்'ஆனவர் அந்த ஷாம் தேசத்தை விட்டு அதி சீக்கிரம் திரும்பி விட்டார்கள். அவர்கள் அவ்வாறு திரும்பிவருங் காலையிலும் முன்கூறிய மேகமானது அன்னவரின் தலைக்குமேல் பகல்முழுதும் குடைபிடித்த வண்ணமே நடந்தது. அத்தகைய அற்புதத்தை யெல்லாம் அடிமை மைஸரா கண்டானந்தித்ததுடன், க'தீ'ஜா அவர்களுங்கூட நேரில் காணும்படியான பாக்கியம் அவர்களுக்குக் கிடைத்தது. எவ்வாறெனின், அம்மாது சிரோமணியார் ஒவ்வொரு நாளும் தமது மாளிகையின் உச்சி மாடியிலிருந்து ஷாம்தேச ரஸ்தாவை நோக்கித் தம்முடைய வாலிப "ஏஜெண்ட்" திரும்பி வருகிறாரோ வென்று நெடுநேரமட்டும் கூர்ந்து நோக்குவது வழக்கம். அவ் வழக்கப் பிரகாரம் ஒருநாள் தமது மேல் மாடியிலிருந்து வடகிழக்குத் திசையை நோக்கித் தொடு வானமட்டும் நெடுந்தூரம் வரை கூர்ந்து பார்த்துக்கொண்டே யிருந்தார். அப்பொழுது அந் நடுப்பகலின் சூரியக்கிரணம் மங்கிய ஒளியை யளிக்குமாறு அதன் வெப்பத்தை ஒருவகை மேகம் தோன்றி மறைத்தது. பிறகு சிறிது நேரத்திற்கெல்லாம் க'தீ'ஜா அம்மாளின் வீடுமுழுதும் குளிர்காற்றும் ஒருவகை நறுமணமும் வீசத் துவக்கின. உடனே சிறிது போழ்தைக்குள் தம்முடைய காரியஸ்தரான நம்முடைய இளம்வாலிபர் (சல்) அவர்முன்பினில் வந்து தோன்றலாயினார்கள்.

அவ் வாலிபப் பெரியார் தமக்குரிய பெருந்தன்மையுடனும், நம்பிக்கையுடனும், அதிக கண்ணியமான யோக்கியப் பொறுப்புடனும் தாம் ஷாம் தேயத்தில் செய்துவந்த வர்த்தகத்தின் இலாப சம்பந்தமான கணக்கு முழுதையும் ஒருசிறிதும் ஒளிக்காது அதி பகிரங்கமாக அம் மாதரசியிடம் மிகச் செம்மையாக ஒப்படைத்து விட்டார்கள். அந்தக் கம்பீரத்தைக் கண்டு அம்மாதரசியும் அன்னவர்மாட்டு அளவுகடந்த உவகைபூத்து உள்ளம்பூரித்து நின்றார். பிறகு அம்மாது சிரோமணியார் தாம் கண்ணுற்ற கண்ட அதிசயத்தை அடிமை மைஸராவிடம் கூறி, அன்னவரால் அவர் கண்டுவந்த அற்புதங்க ளனைத்தையும் கூறக் கேட்டு, எம்பெருமானாரவர்கள் ஏதோ ஒருவித தெய்விகப் பெருமை வாய்ந்தவ ரென்பதை ஐய மறத் தெளிந்து கொண்டார். இதனால் அன்னவர்மீது க'தீ'ஜா பெருமாட்டியாருக் கிருந்துவந்த நம்பிக்கையும் உறுதியும் முன்னினும் பன்மடங் கதிகம் ததும்பத் தலைப்பட்டன. ஆனால், மேலே மைஸரா கண்டதாகக் கூறப்பட்டுள்ள அற்புதங்களுக்கும், பீ'பீ' க'தீ'ஜா(ரலி) அவர்களே நேரில் கண்டதாகக் கூறப்பட்டுள்ள அதிசயங்களுக்கும், பு'ஸ்ரா'வில் மீண்டுமொரு

நஸ்தூராப் பாதிரியார் கண்டு தரிசித்துக் கூறியதாகக் கூறப்பட்டுள்ள ஆச்சரியங்களுக்கும் தக்க ஆதார மில்லையென உண்மையை யொளியா உத்தம சரித்திராசிரியர்கள் உறுத்திக் கூறியிருக்கின்றனர். ஆயினும், அந்த க'தீ'ஜா (ரலி) பெருமாட்டியாருக்கு மட்டும் அந்த வாலிபரிடம் தோன்றிய அபிமானம் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து கொண்டே வந்ததென்பதில் மட்டும் சிறிதும் சந்தேகமில்லை.

நம்பெருமானா ரவர்கட்கு அப்பொழுது வயது 25 ஆகியிருந்ததென்று நாம் முன்னமே கூறினோம். அவர்கள் அதிக நெட்டையு மல்லாமல் குட்டையு மல்லாமல் நடுத்தரமான உயரமுள்ளவர்கள். திருமேனியோ, சிவப்பும் வெண்மையும் கலந்த தங்கவர்ண முடையதாய்த் திகழ்ந்தது. மற்ற அங்க அவயவமெல்லாம் சாமுத்திரிகா லக்ஷணத்துக்குரிய அரிய அழகுடனே நிறையப் பொலிந்து விளங்கின. அபூ' ஹுரைரா அவர்கள் நாயகத்தின் பொலிவைப் பற்றிப் புகழ்ந்துரைக்குங்கால், "நபி பெருமானா ரவர்களைப்போல் அழகிய வேறெவரையும் யான் கண்டதே யில்லை. அவர் களது திருமேனியின் அழகு தூரத்திலிருந்து பார்க்கினும், சமீபத்திலிருந்து பார்க்கினும் ஒரேமாதிரி யாகத்தான் தோன்றும்," என்று கூறியிருக் கின்றார்கள். 'ஹ'ஜ்ரத் அ'லீ (ரலி) அவர்களும் அவ்வனப்பைப் பற்றிக் கூறுங்கால், "பெருமானா ரவர்களை முதன்முதலில் பார்த்தவுடனே பயமும் பக்தியும் கலந்ததோர் உணர்ச்சி பிறக்கும். ஆனால், அவர்களிடம் அதிகம் நெருங்கிப்பழக ஆரம்பித்தவுடனே அன்னவர்கள்மீது அளவுக்கு மீறிய அன்புண்டாகும். அழகிலும் குணத்தினும் அவர்களுக்குச் சமமாக வேறு யாரையும் யான் கண்டதே யில்லை," என்று புகழ்ந்துள்ளார்கள்.

நம்பெருமானா ரவர்கள் எந்த மனித குருவினிடத்தேனும் இகலோகக் கல்விச் சாலையிலேனும் "பள்ளிக்கூடக் கல்வி" பயின்றதே யில்லையென்று முன்னரே நாம் கூறியுள்ளோம். ஆனால், ஸ்தூல ஸூக்ஷ்ம சம்பந்தமா யுள்ள எல்லாவித அறிவும் ஞானமும் அன்னவர்களுக்கு அல்லாஹுத் த஥ஆ'லாவினால் இயற்கையாகவே அருளப்பட் டிருந்தன. அவர்களுடைய விஷயஞானமோ, இணையற்ற பரிபூரணத்தை யடைந்திருந்தது; எப்படிப் பட்ட கடின காரியத்தையும் அதிக சுலபத்தில் அறியக்கூடிய நுண்ணறிவு வாய்க்கப் பெற்றவர்களா யிருந்தார்கள். அவர்களுடைய அபார ஞாபக சக்திக்கு ஓர் அளவுசொல்லி மாளாது. எவ்விஷயத்தைப் பற்றியும் அவர்கள் கூறும் அபிப்பிராயம் மிகச் சரியானதாகவே யிருக்கும். வாக்குச் சாதுரியம் இயற்கையாகவே அவர்களுக்கு வாய்த்திருந்த தென்பதில் கிஞ்சித்தும் சந்தேக மில்லை. நற்குணமும் நன்னடக்கையும் அவர்கள்பால் பரிபூரண மாயே அமைந்திருந்தன. அவர்களுடைய மலர்ந்த முகமும், இனிய குரலும், கண்ணியமான தோற்றமும், கம்பீரமான நடைநொடியும், அன்பையும் மனத் தூய்மையையும் வெளிக் காட்டுகின்ற ஒழுக்கமும்

அவர்களுடனே சம்பாஷிப்பவர்களின் உள்ளத்தையெல்லாம் உடனே அவர்கள்பால் கவரக்கூடியனவாய் விளங்கின.

"பேரறி வெவையும் செம்மை பொருந்தொளிர் வனப்பும் வெற்றி
வீரமும் திறலும் உண்மை விளங்குவா சகமும் கல்வி
சாரமும் பொறையும் மிக்க தருமநற் குணமும் யார்க்கும்
வாரமும் முஹம்ம தின்பால் வந்தடைந் திருந்த வன்றே!"

என்றார் உமறுப் புலவரும்.

ஆகவே, க'தீ'ஜா பெருமாட்டியார் (ரலி) அவ்வாலிபப் பெரியாருக்குக் கொடுப்பதாக வாக்களித்திருந்த இருமடங்கு சம்பளத்தையும் உம்பளத்தையும் சரிவரக் கொடுத்துவிட்டது மன்றி, இனி எப்பொழுதுமே தம்முடைய ஐசுவரியத்திற்குரிய நிரந்தரப் பாதுகாவலராக அன்னவரையே அடைந்துவிட வேண்டுமென்னும் ஆர்வத்தையும் நிரம்பக் கொண்டுவிட்டார்கள். ஆனால், அத்தகைய ஆர்வத்தைப் பூர்த்திசெய்து கொள்வதற்கு இத்தரணியின்கண் கௌரவமான வழியென்பது ஒன்றேதான் உண்டென்பதை நன்கு தெரிந்துகொண்டார்கள். அக்கணமே அத்தகைய வழியானது அவ் வாலிபரைத் தாம் ஆண்டவனுக்குப் பொருத்தமான முறையிலே பகிரங்கமாக விவாகம் செய்து கொள்வதுதா னென்று தீர்மானம் செய்துகொண்டு, அதற்கு வேண்டிய காரியத்தை அதிக துரிதமாகத் தாங்களே செய்ய நாடி, நாயக மவர்களிடம் விவாக கோரிக்கையை வேண்டித் தூதனுப்பத் துணிந்தெழுந்தார்கள். இஃது உலக வழக்கத்திற் கொன்றும் விரோதமில்லை. என்னெனின், அதுசமயம் அந்த அரப்நாட்டில் வதிந்து வந்த பெண்மணிகள், கன்னிகைக ளென்றும் கட்டியறுத்தவர்க ளென்றும் வேறுபாடு செய்யாமல் தாங்களே தங்களுக்குத் தகுதியான வரனை நேரே வரித்துக்கொண்டு வந்தார்கள்; இவ்வாறு செய்வதுதான் கிரமமென்றும் அக்கால நவமணிகள் நன்கெண்ணி யிருந்தனர். இக்காரணம் பற்றியே தான் 'ஹ'ஜ்ரத் க'தீ'ஜாவின் சிறியதந்தையார் அதுசமயம் ஜீவித்திருந்தும், தமது சுயேச்சையைக் கொண்டே விவாகச் செய்தியைச் சொல்லியனுப்பினார்கள். ஆனால், இத்தகைய திரு மணத்திற்கு ஒரே விதமான ஆக்ஷேபணை உண்மையிலே சிறிது சிரமமானதாய்க் காணப்பட்டது. என்னெனின், நம் பெருமானா ரவர்கட்கு அத் தருணம் வயது 25 தான் எய்தியிருந்தது; ஆனால், க'தீ'ஜா பெருமாட்டியார் அவர்களுக்கு அதுசமயம் 40-ஆவது பிராயம் முடிவடைந் திருந்தது. அன்றியும், அம்மாது சிரோமணியார் அதற்குமுன்னே இரண்டுமுறை வாழ்க்கைப்பட்டு மூன்று குழந்தைகளுடனே வைதவ்யகோல மடைந்திருந்தார்.* ஆயினும், அப்

* அவருடைய முதற்கணவர் அபீ'ஹாலா பி'ன் 'ஜாரா 'தமீமீ என்பவ ராவார்; அவருக்குப் பிறந்த குழந்தைகள் ஹிந்து, ஹாரி:த் என்னும் இரண்டு ஆண் சிறுவர்க

பெண்ணரசியார் மீட்டு மொருமுறை மணமுடித்துக் கொள்ளக் கூடிய அருகதை முழுதும் வகித்தவராகவே காணப்பட்டார். அவருக் கிருந்து வந்த ஐசுவரியப் பெருக்கத்தினுல் மட்டும் அத்தகைய அபார யோக்கியதை வாய்ந்திருந்ததென் றெண்ணிவிடல் வேண்டா. என்னெனின், அக்கால அராபியர் சட்டப்படி கணவனே மனேவி யகத்துக்குச் சொத்துக் கொண்டு செல்வது வழக்கமா யிருந்துவந்தது ; ஆதலின், அக்கணவனுக்குத் தன் மனேவியின் சொத்தில் ஒன்றும் உரிமையில்லாமலே யிருந்தது. ஆகவே, க'தீ'ஜா அவர்களுடைய ஐசுவரியமன்றி, அன்னவரின் அழகிய கலியாண குணங்களும், இனிய பழக்க ஒழுக்கங்களும், கம்பீரமான நடைநொடி பாவனேகளும், உயர்குலப் பிறப்பும், கற்பின் மாண்பும் அவரை வேறெவரும் மீட்டும் மணமுடித்துக்கொள்ள விருப்பங் கொள்ளுமாறு செய்துவைத்தன. அம்மாதரசியார் தமது குடிப்பிறப்பில் அஸதி'ன் குமாரரான (:குஸை வம்சத்து) கு'வைலிதி'ன் திருக்குமாரி யாவார். அஸதி'ன் தந்தையார் அ'ப்'து'ல் உ''ஜ்'ஜாவாவர் ; இவரது தந்தை :குஸை ; அவரது தந்தை கிலாப்'; இவரது தந்தை முர்ரா; அவரது தந்தை கஅ'ப்' ; கஅ'பி'ன் தந்தை லுவை ; லுவையின் தந்தையார் ':காலிப்'......எனவே, இத்தகைய மேற்குலப் பெருமாட்டியைப் பற்பலவிதமான உயர்குலப் புருஷர்களும் பெரும் பெருந் தனிகர்களும் விவாகம் முடித்துக்கொள்ள எதிர்நோக்கி யிருந்தனர்.* அதற்கெல்லாம் அம் மாதரசியார் சற்றும் இடங்கொடுக்க வில்லே. இப்படிப்பட்ட வேளேயிலேதான் எம்பெருமானுரவர்கள் (சல்) அப்பெருமாட்டியாரிடம் காரியஸ்தராய்ப் போய் அமர்ந்தார்கள்.

க'தீ'ஜா பெருமாட்டியார் தம்முடைய இரண்டாவது கணவர் இறந்து போயினதன் பின்னுல் இனியும் மற்றொரு முறை மணமுடித்துக் கொள்வதில்லே யென்று தீர்மானம் செய்துகொண் டிருந்த போதினும், அந்நகரி லுள்ள பற்பல கனதனவான்க ளெல்லாம் அம் மாதரசியின் அரியவிருப்பத்தை ஆவலுடன் பெறப் பெரிதும் எதிர்பார்த்த வண்ணமாகவே யிருந்துவந்தனர். ஆனுல், க'தீ'ஜாவின் தந்தையார் மட்டும் தங்குமாரிக்குத் தக்க வரன் கிட்டட்டுமென்று ஒருவாறு காத்துக்கொண் டிருந்தாராம். ஆனுல், ஷாம் தேசத்துக்குச் சென்றுவந்த வர்த்தக விஷயத்தின் விருத்தாந்த முழுதையும் மைஸராவின் வாய்மொழியைக் கொண்டு நன்கு தெரிந்து

---

ளாவர். இரண்டாவது கணவர் அ'·தீக் பி'ன் ஆ'யி'ஜ் மக்''ஜூமீ என்பவராவார் ; இவருக்குப் பிறந்த குழந்தை ஹிந்து என்னும் ஒரே பெண்ணென்று பெரியார்கள் கூறி யிருக்கின்றூர்கள்.

* " மாசிலாக் குலத்து வந்தாள் வருவிருந் துவப்ப வூட்டும்
நேசமிக் குடையாள் கொண்கன் நிஜேப்பறிந் தொழுகு நீராள்
தேசுறு வாய்மை யுள்ளாள் சினந்திடல் என்று மில்லாள்
பேசுதிண் கற்பு வாய்த்தாள் பெற்றதே கொண் டுவப்பாள்,"

என்று மகா வித்துவான் மீ. சு. பிள்ளேயவர்கள் கூறிய செய்யுள் நோக்க.

கொண்ட க்'தீ'ஜா பெருமாட்டியார் உத்தேசம் மூன்று மாதங்களுக்குப் பின்னே நமதிளம் வாலிபரையே மணமுடித்துக் கொள்வதெனத் தீர்மானித்து, அந்த மைஸராவையே அப் பெருமானிடம் தூதாக அனுப்பி, அன்னவரின் அனுமதி பெற்று, அதற்கென்று ஒரு நல்லநாளையும் குறித்துக் கொண்டார்கள். க்'தீ'ஜா நாயகம் தம்முடைய தந்தையான கு'வைலி'துக்கும் தக்க சமாதானம் சொல்லிக் கொள்ளலா மெனத் தீர்மானம் செய்து கொண்டனராம். கு'வைலித்' மணமகனை மு'ஹம்மது'க்கு(சல்) அன்னையும் பிதாவுமற்ற அகதித்தன்மையோடு ஐசுவரியப் பெருக்கமும் இல்லையென்று கண்டு ஆக்ஷேபணை கிளப்பியபோதினும், க்'தீ'ஜா நாயகியார், தமக்கிருக்கும் செல்வமே அவருக்கும் போதுமென்றும், அவர்பாலுள்ள கலியாணகுண விசேஷமே மற்றெல்லாவற்றினும் சிறந்த ஐசுவரியமென்றும் கூறித் தமது தந்தையாருக்குத் தக்க சமாதானம் செய்யப் பிரயத்தனப் பட்டனராம். கு'வைலிது'க்கு மதுபானத்தின்மீது பிரியம் அதிக மென்றும், அதனால் க்'தீ'ஜாவின் விவாக விருந்தின்போது அவர் சிறிது அதிகமாகவே குடித்து மதிமயங்கி விட்டாரென்றும், ஆகலின், அவ்வேளையில் அவரது அபிப்பிராயத்தைக் கபடத்தனமாக க்'தீ'ஜா அவர்கள் பெற்றுவிட்டார்க ளென்றும் சில பொய்யான கதைகள் கூறப்பட்டு வருகின்றன. ஆனால், க்'தீ'ஜாவின் தந்தையான கு'வைலிதெ'ன்பார் 'பிஜார் யுத்தத்துக்கு முன்னரே இறந்து போய் விட்டா ரென்றும், எனவே, அவர் இவ்விவாகத்தின்போது உயிரோடில்லை யென்றும் இமாம் ஸுஹைலீ முதலிய மகான்கள் எழுதியிருக்கின்றனர்கள். இவ்விவாக காலத்தில் உயிருடனிருந்த க்'தீ'ஜாவின் சிறிய தந்தையான அ'ம்ரிப்'னு அஸதை'யும் அப் பெருமாட்டியார் மணமுடிக்கு முன்னே கலந்துகொள்ள வில்லை. ஆனால், அவர் திருமணத்தின் வேளையில் மட்டுமே "ஆஜிரா" யிருந்தார்.

ஆகவே, அவ்விவாகத்திற்கு மணமகர் சார்பாக அபூ'த்தாலிப'வர்களும், மணமகள் சார்பாக அவருடைய பெரிய தந்தையான நௌ'பலின் குமாரரான வர:காவும் வ(க்)கீல்களாக இருந்து, அத்திருமணம் மிக்க மங்களகரமாக க்'தீ'ஜாவின் மாளிகையிலேயே நிறைவேற்றப்பட்டது. அதில் 'ஹ'ஜ்ரத் ஹம்'ஜாவும் கலந்திருந்தார். அவ் வேளையில் அவ் விவாகத்தை நிறைவேற்றி வைத்த அபூ'த்தாலிப'வர்களால் அடியிற் காணுமாறு ஒரு சொற்பொழிவு நிகழ்த்தப்பட்டது: "எல்லாப் புகழும், நம்மையும் பனூ'ஹாஷிமையும், இப்'ராஹீம் நபியின் வம்சத்தாரையும், இஸ்மாயீ'ல் நபியின் வம்சத்தாரையும் படைத்து, நம்மையே தன்னுடைய பரிசுத்த ஆலயமாகிய க'ஃப'ாவின் பாதுகாவலராகவும், தன்னுடைய பரிசுத்த பூமியின்மீது செங்கோ லோச்சுபவராகவும், மற்றை அராபியர்மீதெல்லாம் தலைவர்களாகவும் செய்துவைத்திருக்கும் அல்லா(ஹ்)வுக்கே தகும். இங்கு நுங்கள்முன் அ'ப்'து'ல்லாவின் குமாரராகிய என் சகோதரர் மைந்தர் மு'ஹம்மத்' நிற்கின்றார். இவருக் கிணையானவர் இத்தரணியில் வேறெவரு

மிலர். என்னெனின், மேற்குலம், பெருந்தன்மை, தாராளசித்தம், உயரிய ஞானம் முதலியவற்றில் இவரை ஒப்பாரும் மிக்காரும் இங்காரு மிலர். இவரை ஓர் ஏழையென மதிக்க வேண்டாம். செல்வமென்பது இன்றைக் கிருந்து நாளையே சென்றுவிடும்.* எனவே, இத்தகைய செல்வத்தினால் மட்டும் ஒருவரும் பெரிய மனிதராய்ப் போய்விடுதல் சாலாது. இப்பொழுது மு'ஹம்மத் பி'ன் அ'ப்'து'ல்லாவின் மனமானது கண்ணியமிக்க க'தீ'ஜா வின் பக்கல் நாடுகின்றது; இவ்வாறே இம்மாதரசியின் மனமும் அவ் வாலிபர் பக்கலே நாடுகின்றது. எனவே, ஏ வர:கா பி'ன் நௌ'பல்! இவ் வேளையில் இவ்வாலிபர் உம்மிடம் வேண்டுதல் புரிவதாவது: நீர் உமது பெருந்தன்மையைக் கொண்டு நுமது சோதரியாம் க'தீ'ஜாவைப் பாணிக் கிரகணம் பண்ணிக் கொடுப்பீராக! இதற்கு மஹராக 500 தங்க திர்கங் களை இவ்விளைஞர் கொண்டுவந் திருக்கின்றார். ஏ என் :குறைஷி சோதரர் காள்! அதற்கு நீங்கள் சாக்ஷியா யிருக்கக் கடவீர்கள்."†

அதன்பின்னர் நிகழ்த்தப்பட்ட க'தீ'ஜா நாயகியாரின் விருந்துக்குப் பின்னால் மணமகனாரின் விருந்தொன்றும் மிக்க நல்லவிதமாகவே நடாத்தி வைக்கப் பட்டது. அவ் விவாகத்துக்கு நம் பெருமானாரின் செவிலித் தாயாகிய 'ஹலீமாவும் வரவழைக்கப்பட் டிருந்தார்கள். அவர்கள் திரும்பிச் செல்லுங்கால், 40 ஆடுகளும் இனம் கொடுக்கப்பெற்று, அதிக சந்தோஷத்துடனே அம்மாது சிரோமணி தமது வீடுதிரும்பினார்கள். என்னெனின், மாதாவின் காலடியின் கீழே மைந்தரின் சுவர்க்கம் அமைந் திருக்கிறதென் றறிக.

இருபத்தைந்து பிராயமெய்திய இவ்வாலிபர் தம்மைக் காட்டினும் பதினைந்தாண்டு மூப்படைந்திருந்த அப்பேரிளம் பெருமாட்டியாரைத் திருமண முடித்திருந்தும், அவ்விருவருக் கிடையிலே அதன்பின்பு அபிமான மென்பது ஒருசிறிதும் எப்போதும் குறைந்தபாடில்லை. நம் பெருமானா ரவர்கள், பலதார மணமும் "வைப்பு" வழக்கமும் சர்வ சாதாரணமாய் மலிந்துகிடந்த அந்த அந்தகார அரப்நாட்டில் சுமார் கால் நூற்றாண்டு கால மட்டும் தனியே வாழ்ந்துவந்தும், அந்த விவாக காலம்வரை எந்தவிதமான

---

* "பல்கதிர் விரித்துத் தோன்றிப் பாடுசெய் கதிரே போல
மல்லனீர் உலகிற் றோன்றி மறைந்திடு நும்மை விட்டுச்
செல்வமென் றுரைப்ப தற்குச் செல்வமென் றுரைக்கும் பேர்நன் (று) "
என்று பாடியுள்ளார் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையும்.

† ஈங்கொரு முக்கிய விஷயம் மறக்கப்படுவது கூடாது: விதவா விவாக விஷயமாக இதுபொழுது அதிகம் பேசப்பட்டு வருகிறது; எதிர்க் கக்ஷியும் பலமாகவே தாக்குகிறது. ஆயின், 1400 ஆண்டுகட்கு முன்னே அ'ஹ்மத்' நபியவர்கள் தங்களது 25-ஆவது வயதிலே முதல் தாரமாகத் தம்மினும் 15 பிராயம் மூத்திருந்த— இருமுறை விதவையாய்ப் போயிருந்த —க'தீ'ஜா பிராட்டியை மணந்து, இவ்வுலகினுக்கு நல்வழி காட்டினார்கள். எனவே, ஜுல்லா "ஜே"யும் இம் மகானுபாவருக்கே!

பெண்களையும் எப்பொழுதுமே ஏறெடுத்தும் பார்த்ததே கிடையாது. மேற் கூறிய மாது சிரோமணியாருடன் திருமணம் முடிந்ததன் பின்னால் நம் பெருமானார் தங்களுடைய 50-ஆவது பிராயம் வரை, அஃதாவது, க'தீ'ஜா நாயகியாருக்கு வயது 65 முடியும்வரை அவருடனே மனமொப்பியே இணை பிரியாக் காதலுடனே வாழ்ந்துவந்தார்கள். அப்பொழுதும் நம் பெருமானா ரவர்கள் வேறெந்த மாதின் வதனத்தின் பக்கமும் திரும்பிப் பார்த்ததே யில்லை. அந்த விவாக காலமாகிய இருபத்தைந்து ஆண்டும் பரஸ்பரம் அதிக அன்னியோன்னிய மான அபிமானத் துடனேயே கழிக்கப்பட்டு வந்தன. அவ்விருவரும் மலரும் மணமும் போலும், மணியும் ஒளியும் போலுமே எப்பொழுதும் வாழ்ந்துவந்தனர்கள்.

இந்த விவாகமே நபிபெருமானாருக்கு வேண்டிய ஆயத்த காலத்தை அளித்ததென்னலாம். அதுவேயுமன்றி, அவர்களுக்கு வேண்டிய ஆறுதலும் அம்மாது சிரோமணியிடத் திருந்தே அவர்கட்குக் கிடைத்ததெனல் வேண்டும். இவ்வுலகினில் ஒருவரும் நபிபெருமானின் புதிய பதவியை நம்ப முன்வாராத அப்படிப்பட்ட ஆதிகாலத்திலேயே க'தீ'ஜா(ரலி') நாயகியார் தங் கணவரது நுபு'வ்வத்தை ஏற்றுக்கொண்டு, அன்னவருக்குத் தேறுதன் மொழியுங் கூறினார்கள். எனவே, இந்த க'தீ'ஜா பெருமாட்டியார் (ரலி') செய்துவந்திருக்கும் காரியங்களையும், இவரது இறுதிக் குமாரியாகிய 'பா(த்)திம(த்)து'ஜ் ஜ'ஜாஹ்ரா சாதித்திருக்கும் காரியங்களையும் உற்று நோக்குங்கால், நங் தீ'னுல் இஸ்லாம் பெண்மணிகள் விஷயத்தில் எத்துணைப் பெரிய நன்மைகளைச் சாதித்திருக்கின்ற தென்பதை நாம் நன்கு தெரிந்து கொள்ளலாம். இஸ்லாத்தில் ஈமான் கொண்ட முதல்முஸ்லிம் ஒரு பெண் மணியாகவே யிருக்கின்றார், பாருங்கள்!

அத்தகைய அரிய திருமணத்தின் பயனாய் இரண்டு ஆண் குழந்தை களும், நான்கு பெண் குழந்தைகளும் க'தீ'ஜா நாயகியின் திருவுதரத்தி னின்றும் உதயமாயினார்கள். :காஸிம் என்னும் தலைக்குழந்தை ஆணாகப் பிறந்தவுடனே அ'ப்'து'ல்லாவின் குலம் விளங்கவந்த குழந்தை என்னும் சந்தோஷத்தினால் அதன் தந்தையருக்கு அந்நாட்டு வழக்குப்படி "அபு'ல் :காஸிம்" (:காஸிமின் தந்தை) என்னும் புதுப்பெயர் புனையப்பட்டது. ஆனால், அத் தந்தையினால் அதிகம் விழையப்பட்டு வந்த அச்சிறு குழந்தை யானது தனது இரண்டாம் பிராயமான பிள்ளைமைப்பருவத்தே ஆண்ட வன் திருவடிநிழலை அடைந்து விட்டது. அந்தோ பரிதாபம்! :காஸிமைப் போலவே, அதன் பின்தோன்றிய மற்றொரு குழந்தையும் தனது இளம் பிராயத்தே இறைவனடி சேர்ந்துவிட்டது. இதனால் பிற்காலத்தில் நபி பெருமானின் எதிரிகளும் "அல் அப்'தர்" (வாலறுபட்டவர், அஃதாவது வம்சவழி யற்றவர்) என்றோர் இழிய புனைபெயரைச் சூட்டலாயினார்கள்.*

* இதுகாலை யாங்கள் 60 கோடி முஸ்லிம்கள் அப்பெருமானாரின் ஞானக்குழந்தை களாக இப்பாருலகு முழுதும் பரந்து கிடக்கின்றோம், சென்ற 1400 ஆண்டுகளாகச்

எனவே, நாயகமவர்களுக்குத் தோன்றிய இரண்டு ஆண் குழந்தைகளும் நுபு'வ்வத்துக்கு முன்னரே காலகதியால் தேக வியோகமாய்ப் போய் விட்டனவென்ப.* பிறகு தோன்றிய ஜை:ஜனப்', ருகை:கயா, உம்முகுல்:தூம், 'பா(த்)திமா என்னும் நான்கு பெண் குழந்தைகளும் நபிப்பட்டம் வந்ததன் பின்னுல் நெடுநாள் மட்டும் உயிரோ டிருந்தார்கள்.

இப் பெண்மணிகளுள் மூத்தவரான ஜை'ஜனப்' என்பார் அபு'ல் ஆ'ஸ் என்பவருக்கு விவாகம் செய்து கொடுக்கப்பட்டார். ருகை:கயா வென்னும் இரண்டாவது குமாரி 'ஹ'ஜ்ரத் உ':துமா னுப்'னு அ''ப்'பான் அவர்களுக்கு மணமுடித்துக் கொடுக்கப்பட்டார். இம்மாது சிரோமணியார் ப'த்'ருயுத்தத்தில் முஸ்லிம்களுக்கு வெற்றிகிடைத்த அன்றே தேக வியோகமாய்ப் போயினர். அதன்பின்பு அடுத்த குமாரியாம் உம்முகுல்:தூம் என்பாரும் 'ஹ'ஜ்ரத் உ':துமான் அவர்களுக்கே இரண்டாவதாக மணமுடித்துக் கொடுக்கப்பட்டார். இறுதிக் குமாரியாகிய 'பா(த்)திம(த்)து'ஜ் ஜெ'ஜாஹ்றா(ரலி) அவர்களே தமது வயதுவந்த பருவத்தில் 'ஹ'ஜ்ரத் அ'லீ(ரலி) அவர்களுக்கு மனைவியாகக் கொடுக்கப்பட்டனர். இவ் வர்க்கத்தினின்றுந் தோன்றியவர்களே "சையித்'கள்" என்றழைக்கப் படுகின்றனர். 'பா(த்)திமாவுக்குப் பிறகுதான் இறுதியாக இரண்டாவது ஆண்குழந்தை பிறந்து சிசுப் பிராயத்திலேயே இறந்துவிட்ட தென்று வேறுசிலர் கூறுகின்றனர். முதல் மூன்று குமாரிகளும் தம்முடைய தந்தையாரின் ஆயுளுக்குள்ளேயே காலமாய் விட்டனர். ஆனல், எஞ்சிநின்ற 'பா(த்)திமாவும் தந்தையார் தேக வியோகமாய் ஆறு மாதங்களுக் குள்ளே காலகதி யடைந்து போயினர்கள். (இன்னு லில்லாஹி......)

நபி பெருமானு ரவர்கள் தங்கள் அருமைப் பத்தினியாரிடம் எப்பொழுதும் பேரன்பு பூண்டொழுகியே வந்தார்கள். க'தீ'ஜா நாயகமும் அவ்வாறே தங் கணவரிடம் எப்பொழுதும் அளவுகடந்த பக்தி விசுவாசம் கொண்டே நடந்து வந்தார்கள். எனவே, இருவரும் ஈருடலும் ஒருயிருமாய் நகமும் சதையும் போலவே பரஸ்பர அன்னியோன்னிய அபிமானத்துடனேயே சதா சர்வகாலமும் காலங் கழித்து வந்தார்கள். இதன் பயனுக மாது சிரோமணி க'தீ'ஜா நாயகியார் (ரலி') தமது ஐசுவரிய முழுதையும் தம்முடைய பர்த்தாவின் அபிப்பிராயம் போலவே செலவு செய்துகொள்ள அனுமதி யளித்து விட்டார்கள். எனவே, 'ஹ'ஜ்ரத் க'தீ'ஜா நாயகியார் காலஞ் சென்றுவிட்ட பின்னும் நபிகள் பெருமான் அப் பதுமினியாரை ஒருசிறிதும் மறந்ததே யில்லை. ஒருமுறை க'தீ'ஜா பெருமாட்டியார்

---

சென்றுபோயுள்ள ஞான புத்திர புத்திரிகள் எத்தனை யெத்தனையென் றெண்ணுகின்றீர்கள் !

* :காஸிமுக்குப் பின் :தாஹிர், ஜை:தயிப்' என இரு குழந்தை பிறந்தனவென்பர்வேறு சிலர். நபிபெருமான் மாட்டு க'தீ'ஜா பிராட்டியார் திருவயிறு வாய்த்த மக்கள் மொத்தத்தில் பதினெரு குழந்தைகள் என்பர் தக்க ஆராய்ச்சியாளர்.

காலமாயின பின்பு பீ'பீ' ஆ'யிஷா (ரலி') அவர்கள் மணமுடிக்கப்பட்ட பிறகு, நபிகள் பெருமானார் அவ்வுத்தமப் பத்தினியைக் குறித்து அதிகம் சிலாகித்துப் புகழ்ந்து பேசியபோது, 'ஹ'ஜ்ரத் ஆ'யிஷா அவர்கள் நபிகள் திலகத்தை நோக்கி, "நாயகமே! க'தீ'ஜா நாயகியார் வயது தளர்ந்திருந் தார்கள். ஆனால், அவர்களைப் பார்க்கினும் யௌவனமும் சௌந்தரியமும் நிறைந்த நங்கையரை ஆண்டவன் தங்களுக்கு அளித்திருக்க வில்லையா?" என்று சட்டென வினவினார்கள். அதைக் கேட்டு நபிநாயக மவர்கள், "இல்லை! இல்லை! நான் ஏழையா யிருந்தபொழுது க'தீ'ஜா என்னை மணந்து தனவந்த னாக்கினார். நான் நபியென்று பொய் த'ஃ'வா செய்ததாக என்னை எல்லோரும் புறக்கணித்த பொழுது அவர் என்மீது முழு விசுவாசமுங் கொண்டு என்பால் உறுதியோடு நடந்துவந்தார். அரப் நாட்டார் அனைவரும் எனக்கு விரோதமாய்க் கிளம்பிய பொழுது க'தீ'ஜா பிராட்டி என் பக்கல் நின்று எனக்கு உதவிபுரிந்து வந்தார்," என்று சற்றுந் தயங் காது சடுதியில் விடை கொடுத்தார்கள். எனவே, அப் பெருமாட்டியின் குண விசேஷங்களை இவ்வாறு அடிக்கடி நபிகள்திலகம் புகழ்ந்து கூறு வார்கள். ஆண்டவன் பாதையில் அவர்களுடைய திரவியத்தை அள்ளிச் செலவு செய்வதில் தங் கணவருக்கு முழு அனுமதியும் கொடுத்திருந் தார்கள். அப் பெருமாட்டியார் தம்பிரிய கணவருடைய உபயோகத்துக் கென்றே தம்முடைய சொந்தச் செலவில் ஓர் அடிமையையும் வாங்கிக் கொடுத்தார். ஆனால், அவ்வடிமையை நபிகள்பெருமான் (சல்) உரிமை கொடுத்து விடுதலையளித்து விட்டவுடனே அப் பெருமாட்டியாரும் அதைக் கண்டு அதிக ஆனந்தங் கொண்டார். இவ்வாறாகத்தான் ஸ'ஜைத்'என்னும் அந்தப் பெயர்போன அடிமையும் நபிகள் பெருமானால் உரிமை யளிக்கப் பெற்றார். நுபு'வ்வத் என்னும் பட்டம் அளிக்கப்பட்டபொழுது, நபிகள் திலகம் தங்களுக்குள்ள அப்பெரும் பளுவான கடமையைக் கண்டு சிறிதே மனந் துளங்கினார்கள். அதுபொழுது க'தீ'ஜா நாயகமவர்கள் பின்வருமாறு அவர்களுக்குத் தைரியங்கூறித் தேற்றினார்கள் :—

"தாங்கள் தோல்வியுற்று அவமான மடையும் படியான கதியிலே ஆண்டவன் தங்களைக் கைவிட்டுவிட மாட்டான். நிச்சயமாகவே தாங்கள் பந்து மித்திரர்களிடம் பேரன்பு பூண்டு, ஆற்றமாட்டாதவர்களின் அரிய சுமையைச் சுமந்து வருகின்றீர்கள். வேறெவரிடத்துங் காணப்படமாட்டாத அத்தகைய நற்குண நல்லொழுக்கங்களையெல்லாம் தாங்கள் மேற்போட்டுக் கொண் டிருக்கின்றீர்கள். அதிதிகளை ஆதரித்து அகதிகளுக்காகத் துன்ப முற்று எத்துணைக் கஷ்டம் நேரிட்ட போதினும், சத்தியத்தின் பக்கலே தலைசாய்ந்து நிற்கின்றீர்கள்."*

* பு'கா'ரீ ஷரீ'பில் காணப்படும் வசனங்களைத் தெரிந்துகொள்ள நாடுவோர் எமது ஸ'ஹீ'ஹு பு'கா'ரீ அதி. 1, 'ஹதீ'. 2-இல் தெளிவாய்க் கண்டுகொள்ளலாம்.

இவ் வன்பு மொழிகளை உற்று நோக்குங்கால், க’தீ’ஜா நாயகியார் நபிகள் பெருமானிடம் எத்துணைப் பெரிய உண்மையான உள்ளன்பு பாராட்டி வந்தார்களென்பது செவ்விதில் அறியக்கிடக்கின்றது. அவர்களுடைய சற்குணமும் சன்மார்க்க நடக்கையுமே அந்தப் பத்மினியாரின் உள்ளத்தை அத்துணைமட்டும் கவர்ந்துநின்றன. எனவே, அக்கணவன் மனைவியிருவரும் மானுஷீக தர்மமென்னும் சற்குணத்துள்ளே முற்ற முற்ற மூழ்கிக்கிடந்தனர் என்பது வெளியாகின்றது. இவ்வாறு அன்னியோன்னியமாய்ப் பழகிவரும் மனைவியரே தங் கணவரின் அந்தரங்கப் பெருமையை நன்குணர்ந்தவராவார். எனவே, மேற்கூறிய வாறுய யோக்கியதா பத்திரத்தை அப் பெருமாட்டியாரே அளித்திருக்கின்றுரென்போமாயின், அதன் பின்பு அப்பெருமானின் உயரிய உன்னத உண்மைத் தன்மையைப் பற்றி வேறெவர்தாம் ஐயுற்று நிற்றல் சாலும்? இவ் விஷயத்தில் எப்படிப்பட்ட எதிர்மத வாதியும் இப்பெருமானார்மீது பழிசுமத்துவது சாலாது. என்னெனின், அவர்களது அந்தரங்க முழுதையும் ஆழ அறிந்திருக்கும் அவர்களுடைய மனைவியாரே, அன்னவர்பால் கள்ளத்தனமான உள்ளக்கபடம் ஒருசிறிதும் காணப்பட் டிருக்குமாயின், மேற்கூறியவாறுய அத்துணைச் சிறந்த உயரிய நன்மதிப்புத் தகவுரையை நல்கியிருப்பது ஒருபொழுதும் முடிந்திராது.

க’தீ’ஜா நாயகியாருடன் மணமுடிந்ததன் பின்னர் ஆவசியகமிருந்தால் மட்டுமே வெளியுலகில் வந்து கலந்துகொள்வதல்லது மற்றெல்லாக் காலங்களிலும் நபிகள் திலகமவர்கள்(சல்) தங்களுக்குள்ளேயே ஆத்மவிசாரணை அதிகம் புரிந்துகொண்டு, பதினைந்து வருட காலமட்டும் சுத்தசைதன்ய சத்தியயோக தியானத்துள்ளே சதா சமாதியில் மூழ்கி யிருந்தார்கள். அ’ப்’து’ல் முத்தலிப்’ இறந்துபோன பின்னர் மக்கமா நகரிலுள்ள அதிகார முழுதும் சிறிது சிதறுண்டு கிடந்தது; ஒவ்வொருவரின் ஆதிக்யமும் பிறருடைய அதிகாரத்துக்குக் கட்டுப்படாததாகவே காணப்பட்டுவந்தது. எனவே, மனிதர்களுடைய பொருளுக்கும் ஆவிக்குங்கூடப் பாதுகாப்பென்பது அரிதாகிவிட்டது. உள்ளூர் வாசிகளுக்கு மட்டுமே அவரவருக்குள்ள குடும்பச் செல்வாக்கினுல் ஒருசிறிது பாதுகாப் பிருந்துவந்தது; ஆனுல், அயலூரார்களின் கதியோ, மக்காவின் வீதிகளிலும் அதோகதியாகத்தான் காணப்பட்டது. வெளியூரார்களின் பொன்னும் பொருளும் மட்டுமேதாம் அங்கே கொள்ளையடிக்கப் பட்டனவென் றெண்ணவேண்டாம்; அவருடைய மனைவி மக்களுங்கூட அவ்வாறே சூறையாடப் பட்டனர். ப’னீயுல் ஃகன் என்னும் வர்க்கத்தைச் சார்ந்த ஹன்’ஜலா என்னும் கீர்த்திவாய்ந்த வித்வானெருவர்—(இவரை அபூ’ த’மஹான் என்றுங் கூறுவர்) :குறைஷ் குலத்தின் அ’ப்’து’ல்லா ஹிப்’னு ஜு’த்’ஆ’ன் என்னும் பெரியாரகத்துக்கு விருந்தினராக விஜயஞ் செய்திருந்தும், மக்காவின் வீதிகளிலேயே பகிரங்கமாகக் கொள்ளையடிக்கப் பட்டார்.

இவ்வாறே மற்றொரு காரியமும் அந் நகரின் கண்ணே நடைபெற்று விட்டது; இதனால் விஷயம் அதிக விபரீதமாகப் போய்விட்டதெனல் வேண்டும்.

ஆதலின், மு'ஹம்மத்' (சல்) இப்'னு அ'ப்'து'ல்லாவின் தூண்டுதலின் மீது ஹாஷிம் வம்சத்தினரும், அ'ப்'து'ல் முத்தலிபி'ன் வம்சத்தினரும், ஜு'ஹ்ரா வம்சத்தினரும், தைம் வம்சத்தினருமான முக்கியஸ்தர்களைச் சேர்த்துக்கொண்டு, உள்ளூர் வாசி யாயினும், அயலூர் வாசி யாயினும், அடிமை யாயினும், எஜமான னாயினும், எவரேனும் மக்காவிலேனும், அதனைச் சூழ்ந்துள்ள பகுதிகளிலேனும் துன்புறுத்தப் படுவராயின், அவ்வாறு துன்புறுத்தியவ ரிடமிருந்து சரியான பரிகாரம் பெற்றுத் துன் புறுத்தப்பட்டவருக்கு உதவிபுரிவதென்று தங்களுக்குள்ளே சத்தியம் பண்ணி உறுதிசெய்து கொண்டார்கள். 'பிஜார் யுத்தத்துக்குப் பின்னே மக்கள்களெல்லாரும் திரும்பியவுடனே பரோபகாரச் சங்கமொன் றிருக்க வேண்டுவது மகா முக்கியமான காரியமென்பதை 'ஜுபை'ர் பி'ன் அ'ப்'து'ல் முத்தலிப்'— (நாயகத்தின் பெரிய தந்தையார்) வற்புறுத்தினார். அதன் நிமித்தம் ஹாஷிம் கூட்டத்தவரும், ஜு'ஹ்ரா தைம் முதலிய கூட்டத்தவர்களெல்லாரும் அ'ப்'து'ல்லா பி'ன் ஜுத்'ஆ'ன் வீட்டில் வந்து கூடி, ஒரு சங்கத்தை நிர்மாணம் செய்தனர். இவ்வாறு நடந்த இந்தப் பரோபகாரச் சங்கத்துக்கு 'ஹில்'புல் 'பு'ஜூல்— ('பு'ஜூல்களின் ஒப் பந்தம்) என்று பெயர் வைத்துக் கொண்டனர். முற்காலத்திலே ஜுர் ஹும், :க'தூரா வென்னும் வர்க்கங்களில் இப்படிப்பட்ட சங்கமொன்று ஏற்படுத்தப்பட் டிருந்தது. அதில் 'ப'ஜ்ல், 'ப'ஜால், மு'ப'ஜ்'ஜல், 'புஐ'ஜல் என்னும் பெயர் வாய்ந்த நான்கு பெரியார்கள் சேர்ந்திருந்தனர். இக் காரணத்தினால் அச்சங்கம் "'பு'ஜூல்களின் சங்கம்" என் றழைக்கப்பட்டது. அச்சங்கத்தின் ஞாபகார்த்தமாகவே இச்சங்கமும் "'ஹில்'புல் 'பு'ஜூல்" என்று நாமகரணம் சூட்டப்பட்டதென்ப. நபிகள் பெருமானா ரவர்களின் விவாகத்துக்குச் சிலதினங்களுக்குப் பின்னே கி. பி. 595-இல் நிறுவப்பட்ட இந்த 'ஹில்'புல் 'பு'ஜூல் சங்கத்தில் நம் நபிகள் பெருமானே முதல் முக்கியஸ்தராக விளங்கினார்கள்.* ஏழைகளையும் ஒடுக்கப் பட்டாரையும் காப்பாற்றுவதற்கு இந்த 'ஹில்'புல் 'பு'ஜூல் பெரிதும் பயன்பட்டு வந்தது. அது நிறுவப்பட்ட முதலாண்டிலேயே அச்சங்கம் வந்து தலையிடு மென்னும் வெறும் பயமுறுத்தாட்டலே பலசாலிகளின் அக்கிரமத்தை யடக்கி, ஏழைகளுக்குப் பேருதவி செய்வதாய்க் காணப்பட லாயிற்று. இச்சங்கமானது

* இது சம்பந்தமாக நபித்துவத்தின் காலத்திலும் நம் நாயகம் அவர்கள் நவின்று கொண்டிருந்ததாவது :—" அவ் வொப்பந்தத்துக்கு ஈடாக எனக்குச் சிவப்பு வர்ணமுள்ள ஒட்டகமொன்று கொடுக்கப்படுமாயின், அப்பொழுதும் அவ் வொப்பந்தத்தை நான் மீறி நடப்பது முடியாது. இப்பொழுதும் நான் அம்மாதிரியான உடன்படிக்கை யொன்று செய்துகொள்ள அழைக்கப்படுவேனாயின், அதற்காகத் தையாராகவே யிருக்கிறேன்."

இஸ்லாம் தோன்றி அரை நூற்றாண்டு காலமட்டும் தனது முழுஅதிகாரத்துடனும் வேலைசெய்து கொண்டே வந்தது.

இந்த 'ஹில்'புல் 'பு'ஜூல் சங்கம் ஆரம்பிக்கப்பட்டதன் பின்பு கி. பி. ஏழாவது நூற்றாண்டின் ஆரம்பத்தில் 'ஹுவைரி:தின் குமாரனான உ'ஸ்மான் என்னும் மக்காவாசி (ஒரு கிறிஸ்தவன்) பை''ஜான்ஷிய ராஜ்யத்தின் ஏராளமான தங்கத்தை "இலஞ்ச"மாக வாங்கிக்கொண்டு 'ஹிஜா'ஜ் மாகாணத்தையே அந்த ரோம ராஜ்யத்தின்கீழ் அடிமையாய்ச் செய்துவிடப் பிரயத்தனப் பட்டான். அவனுடைய இந்த அயோக்கியத் தனமான எண்ணமானது நபிகள் பெருமானார் மு'ஹம்மத்' முஸ்த'பா ரஸூல் (சல்) அவர்களது பெருமுயற்சியால் குந்தகப்பட்டுப் போய்விட்டது. இதன் பயனாக அவ்வுஸ்மான் சிரியா தேசத்தை நோக்கி ஓடும்படி யாயிற்று; அங்கே அவன் பின்னர் :கஸ்ஸானிய இளவரசரான அ'ம் ரென்பவரால் விஷமிட்டுக் கொல்லப்பட் டொழிந்தான். இவ்வாறு மக்காவிற்கு வர விருந்த பேராபத்தொன்று நம் பெருமானவர்களால் அதுகாலைத் தடை செய்யப்பட்டது.

பிறகு கி. பி. 605-ஆம் ஆண்டில் நபி பெருமானா ரவர்கட்கு வயது 35 ஆயினபோது, மக்காவில் விளையவிருந்த ஒரு மாபெருங் கலகத்தைத் தங்களுக்குரிய புத்திசாதுர்யத்தால் அடியோடு தவிர்த்து விட்டார்கள். தீயினாலும், பிறகு வெள்ளத்தாலும் கஃ'ப'த்துல்லா வென்னும் தேவாலயம் அதிகமாகக் கிலமடைந் திருந்தது. திருடர்கள் உள்ளே நுழைந்து ஆங்குள்ள சேமிப்பை யெல்லாம் களவாடிச் சென்றதுடன், வெள்ளமும் அக் கட்டிடத்துள்ளே சர்வ சாதாரணமாக நுழைந்து சென்றுகொண் டிருந்தது. ஆதலின், அது சமயம் அந்தக் கஃ'ப'த்துல்லாவுக்கு "மராமத்துச்" செய்ய வேண்டுவது அத்தியாவசியமாய்க் காணப்பட்டது. ஆனால், அதன் சுவர்களெல்லாம் அதிகம் கிலமா யிருந்தமையால், அவை யனைத்தையும் இடித்து விட்டுப் புதிதாக நிர்மாணிக்க வேண்டுவதே உசிதமாய்க் காணப்பட்டது. அந்தச் சுவர்களை அடியோடு இடித்துக் கட்டுவதற்கு அக் :குறைஷிகள் ஆரம்பத்தில் விருப்பங் கொள்ளாது போயினும், ஆவசியகத்தி னிமித்தமாகவே இறுதியில் அதன் சுவர்களையும் அடியோடு இடித்துத்தான் கட்டி முடித்தாக வேண்டுமென்று தீர்மானம் செய்துகொண்டார்கள். எதிர்பாரா வண்ணம் அதுசமயம் ஜித்'த'ாவின் துறைமுகத்தில் வியாபாரக் கப்பலொன்று கரையில் மோதிப் பல துண்டுகளாய் உடைந்து போய்விட்டது. எனவே, இதுவிஷயம் மக்கத்துக் :குறைஷிகளுக்குத் தெரிந்தவுடனே வலீத்' பி'ன் மு:கீரா வென்பவர் ஜித்'த'ா வந்து சேர்ந்து, உடைந்து போயிருந்த அக் கப்பலின் மரப்பலகைகளை யெல்லாம் கிரயம் கொடுத்து வாங்கிக் கொண்டார். மேலும், உடைந்துபோன மரக்கலத்தில் ரூம்தேசத்தைச் சார்ந்த ப'ா:கூம் என்னும் நாமம் பூண்ட ஒரு சிற்பியு மிருந்தான். ஆகவே,

அச் சிற்பியையும் வலீத்' தம்முடனே அழைத்துக்கொண்டு மக்கமாநகர் வந்துசேர்ந்தார்.

அவரவரும் தத்தம்மா லியன்றவரை போட்டிபோட்டுக் கொண்டு கஃ'ப'ாவின் சுவர்களை எழுப்பிவந்தார்கள். 'ஹஜருல் அஸ்வத்' என்னும் கறுப்புக் கல்லைப் பதிக்கும் உயரம்வரை எல்லாம் நல்லவிதமாகவே நடைபெற்று வந்தது. ஆனால், அங்கு வந்தவுடனே அந்த 'ஹஜருல் அஸ்வதை' எவர் அந்தச் சுவரில் எடுத்துப் பதிப்பதென்னும் விஷயத்தில் பெரியதொரு தக்ரார் ஏற்பட்டு, அவ்வேலை அவ்வளவோடு தடைபட்டு நின்றுவிட்டது. இந்த உயரிய உரிமையை யார் மேற்கொள்வதென்னும் போட்டியினால் அந்தக் :குறைஷிகளுக்குள்ளே கடும்போரொன்று நிகழத் துவக்கும்போல் காணப்பட்டது; இவ்விஷயத்தில் எல்லாரும் திகில்கொண்டு நின்றனர்; அவரவரும் தத்தமக்குரிய உரிமையே மேலானதென்று வாதாடிக் கொண்டிருந்தனர். அதுபோழ்து ப'னூ அ'ப்'து'த்'த'ார் வம்சத்தினர் ப'னூ அ'·திய்யீ பி'ன் கஅ'ப்' வம்சத்தினருடன் கலந்துகொண்டு உதிரம் நிரம்பிய பாத்திரமொன்றைக் கொணர்ந்து, அதில் தங்கள் கரங்களைத் தோய்த்துக் கொண்டு சத்தியம் செய்து, தங்களுக்கு அவ்விஷயத்தி லிருக்கும் பாத்தியதையை விட்டுக் கொடுப்பதைக் காட்டிலும் தங்களுடைய உயிரை விட்டு விடுவதே மேலென்று சபதஞ்செய்து நின்றனர்.

நான்கு பகலும் நான்கிரவும் இவ்வாறு ஒருவரை யொருவர் எதிர் நோக்கிய வண்ணமாகவே அவரவரும் யுத்த சன்னத்தராய் உறுமிக்கொண்டு நின்றனர். ஆனால், அன்னவரின் தக்ரார் பெரியதோர் யுத்தமின்றி இனிய முறையில் எளிதில் தீர்மான முறுமென்று எண்ணுவதற்குச் சற்றும் இடமில்லா திருந்துவந்தது. இறுதியில் அபூ' உமையா பி'ன் மு:கீரா வென்னும் பெரியார் முன்வந்து, "ஈதெல்லாம் முடிவடையக்கூடிய சமயம் சமீபித்து விட்டது. எனவே, யான் இவ்வாறு கூறுகின்றேன்: நாளை வைகறை யாமத்தில் எவரொருவர் முதன்முதலில், அல்'ஹரா மென்னும் வாயில் வழியே கஃ'ப'ாவுக்குள் நுழைகின்றாரோ, அவரையே இவ் விவாதத்தைத் தீர்த்தற்குரிய மத்தியஸ்தராக எல்லாரும் ஏற்றுக்கொள்ள வேண்டும்," என்று கூறினார். அக்கணமே எல்லாரும் அப் பிரேரணையை முழு மனத்துடனே அங்கீகரித்துக் கொண்டனர். எனவே, எல்லாரும் அவ் வண்ணமாகவே மறுநாட் காலையில் எவர் முதன்முதலாகக் கஃ'ப'ாவை நோக்கி அவ்வாயில் வழியே வருகின்றாரென்று அதிக ஆவலுடனே எதிர்நோக்கி நின்றனர்.

அவ் வேளையில் ஆங்கு வந்து தோன்றியவர் யாரென்று நினைக்கின்றீர்கள்? எவரை ஆண்டவன் அச்சமயம் அங்கே தோற்றுவித்தானென் றெண்ணுகின்றீர்கள்? அன்று காலையில் எல்லாக் கக்ஷியினரும் கூடி அவ்விடத்திலே அதிக ஆவலுடனே எதிர்பார்த்திருந்த பொழுது, அங்கே அல் அமீன் என்னும் நம் பெருமானாரவர்களே முதன்முதலில் தோன்றினார்கள்,

அவரைக் கண்டவுடனே அனைவரும், "அல் அமீன்! அல் அமீன்!! இதோ வந்துவிட்டார் அல் அமீன்!!! இவரே இவ் விஷயத்தில் நியாய மான தீர்ப்புச் செய்யக்கூடியவர்!" என்று ஏகோபித்த கூச்சலைக் கிளப்பி னர். அக்கணமே நபிகள் திலகம் அவர்களுடைய விவாதங்களைக் கேட்டுப் பின்னால் ஒரு வஸ்திரத்தைக் கொணர்ந்து தரையிலே விரிக்கச் சொன் னார்கள். அதன்மீது 'ஹஜருல் அஸ்வதை'ப் பெருமானாரவர்கள் தங்கள் திருக்கரத்தாலே எடுத்துவைத்து, அவ் விவாதத்துக்குரிய எல்லாக் கக்ஷித் தலைவர்களையும் அழைத்து அவ் வஸ்திரத்தின் ஓரங்களைப் பிடித்துத் தூக்கச் சொன்னார்கள். அவர்க ளனைவரும் அவ்வாறே உயர்த்திப் பிடித்தவுடனே நபிகள்பெருமானே (சல்) அந்தத் தேவலோகச் சின்னமாகிய 'ஹஜருல்அஸ்வ தை'த் தங்கள் திருக்கரத்தா லெடுத்து, அதற்குரிய யதாஸ்தானத்திலே பதித்து விட்டார்கள்; இதைக் கண்டு எல்லாரும் திருப்தி யடைந்து விட் டார்கள்; இதனால் அத்தேயத்தில் அச்சமயம் விளையவிருந்த பெரியதோர் உள்நாட்டுக்கலகம் தவிர்க்கப்பட்டது. 'ஹஜருல் அஸ்வது'ம் தனது திருத் தூதரின் திருக்கரத்தாலே பதிக்கப்பட வேண்டுமென்பதும் இறைவனது திருவுளச் சித்தம் போலும்! என்னே எம்பெருமானது இனிய யுக்தி!*

இவ்வாறு முடிவடையச் செய்யப்பட்ட கஃ'பாவானது ஆதியிலே :கிப்'தீகளால் தையாரிக்கப்பட்ட ஓர் அழகிய திரையினால் முழுதும் மூடப் பட்டது. பிறகு யமன் தேயத்துப் "பட்டி போட்ட" துணியினால் மூடப் பட்டது. அதன்பின்பு, 'ஹஜ்ஜாஜ் பி'ன் யூஸு'ப்'பென்பவரால் ":கிஸ்வா" என்னும் கரும்பட்டால் திரையிடப்பட்டு, இன்றளவும் ஆண்டுதோறும் அது புதுப்பிக்கப்பட்டும் வருகின்றது. இவ் வுரிமை இதுகாலை எகிப்து (மிஸ்ர்) அரசாங்கத்தினரால் கொண்டாடப்பட்டு வருகிறது.

நபி பெருமானா ரவர்களின் புத்தி சாதுரியத்தால் மேற்கூறியவாறு ஒரு மகாபிரளயம் அம் மக்காவின்கண் அதுசமயம் தடுத்து நிறுத்தி வைக் கப்பட்டது. அப் பெரியாரின் சாந்த குணசீலமும், சன்மார்க்க விழுப்பமும், உயிர் வாழ்க்கையின் உயரிய பரிசுத்தமும், உன்னத நாகரிகத்தின் நன்னய மும், அன்றாடம் அகதிகளையும் ஏழைகளையும் அதிகம் உபசரித்து அன்னவ ருக்கு உதவிபுரிந்து காத்தலும், அவர்களுடைய கண்ணியத்தின் திண்மை யும், அவர்கள் அனுஷ்டித்துவந்த சதிபதி தர்மமும், அவர்களது காரிய சித்திக்குரிய பெருந்தன்மையும் ஆதியவெல்லாம் ஒருங்கு திரண்டே அப் பெரியாருக்கு இவ்வுலகினில் வேறெந்த மானிடருக்கும் இன்றுகாறும் கிடைக்கப் பெற்றிராத **அல் அமீன்** என்னும் சீரிய சிறப்புப் பட்டத்தை நல்கிய தென்று நாம் முன்னமே நன்கு தெரிந்துகொண் டிருக்கின்றோம்.

அக்காலத்தில் அவ்வரப் தேயத்தில் பெரியதொரு பஞ்சம் தோன்ற லாயிற்று; அக் காரணத்தினால் ஆயிரக்கணக்கான மனிதர்களும் ஏனைப்

* "அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார், என்னுடைய ரேனும் இலர்," என்பது குறள்.



இதுபோதுள்ள 'ஹரம் ஷரீஃபு—நடுவில் நிற்பது கஃபா' ஷரீஃபு

பிராணிகளும் மாண்டுபோயின. அவ் வேளையில் நம் பெருமானா ரவர்கள் தங்களுக்குள்ள இயற்கையான இரக்கத்தாலும், ஈகையாலும் அவ்வேழைகளை மிகுந்த அன்புடனும் ஆதரவுடனும் போற்றி வந்தார்கள். அச் சமயத்தில் அபூ'த்தாலி ப்'வர்களின் குடும்பநிலைமை அதிக பரிதாபகரமாய்க் காணப்பட்டது. ஆனால், நபிபெருமா னவர்கள் க'தீ'ஜா பிராட்டியாரின் திருமண சம்பந்தத்தாலும், அபூ'த்தாலிபி'ன் சகோதரர் அ'ப்'ப'ாஸ் அவர்கள் தங்கள் வர்த்தகத்தாலும் அதுசமயம் அம் மக்காவிலே இரு பெருந் தனிகர்களாக விளங்கிவந்தனர். எனவே, எம் பெருமானா ரவர்கள் அப்பொழுது தம் பெரிய தந்தையான அபூ'த்தாலி ப்'வர்களால் தாங்கள் அதற்குமுன் பெற்றிருந்த உபகாரங்களுக்கெல்லாம் பிரதியுபகாரம் செய்யுமுகத்தான் ஒரு பெரிய உதவி புரிய முன்வந்தார்கள்: மீக்கூறிய பஞ்ச காலத்தில் பெருமானாரவர்கள் அபூ'த்தாலிப்'வர்களின் குமாரர்களுள்ளே ஒருவரைத் தாங்கள் எடுத்துக்கொண்டு, தங்கள் சிறியதந்தையார் அ'ப்'ப'ாஸ் அவர்களையும் மற்றொரு குமாரரை எடுத்து வளர்க்குமாறு வேண்டிக் கொண்டார்கள். அவ்வாறே அ'ப்'ப'ாஸ் அவர்கள் ஜஃ'பரையும், நபி பெருமானார் அ'லீ(ரலி') அவர்களையும் எடுத்துக்கொண்டார்கள்; உ'ஃகல் மட்டும் தந் தந்தை அபூ'த்தாலிபி'டமே இருந்துவந்தார். நம் பெருமானாருடைய ஆண்குழந்தைக ளெல்லாம் அதிபால்யத்திலேயே இறந்து விட்டமையால், இந்த அ'லீயையே அவர்கள் தங்களுக்கு ஆறுதலளிக்கும் ஆண் குழந்தையென ஆதரித்து வளர்த்து வந்தார்கள். இத்தகைய அபிமானமே பிறகு அ'லீ அவர்களுக்கும் 'பா(த்)தி ம(த்)து'ஜ் ஜ'ஜாஹ்ரா அவர்களுக்கும் நிகழ்ந்த திருமணத்தினால் மிக்க வன்மையுற்றுவிட்டது.

நபிபெருமா னவர்கள் அதுசமயம் வேறொரு விதமான முறையிலும் தங்களுடைய தயாளகுணத்தை வெளிப்படுத்தி ஏனையோருக்கெல்லாம் ஒரு முன்மாதிரியாய் விளங்கிநின்றார்கள். க'தீ'ஜா நாயகமவர்கள் எம்மட்டும் தங்கள் பர்த்தாவின்மீது அபிமானமும் அன்பும் பாராட்டிவந்தார்க ளென்பதை முன்னரே நாம் தெரிந்துகொண் டிருக்கின்றோம். நபி பெருமானிடம் நெருங்கிப் பழகிய ஏனையோரும் இவ்வாறே அவர்கள்பால் அபிமானம் பாராட்டி வந்தார்க ளென்பதற்குப் பலப்பல உதாரணங்களை எடுத்துக் காட்டுதல் சாலும். நம்பெருமா னவர்கள் ஏழை யென்றும் பணக்காரனென்றும், ஆண்டா னென்றும் அடிமை யென்றும், அரச னென்றும் ஆண்டி யென்றும் எவரிடத்தும் வேறுபாடு காட்டுவது வழக்கமின்று. ஸை'ஜதிப்'னு 'ஹாரி:தா வென்னும் பெயருள்ள ஒருவர் ஒரு சண்டையில் சிறைபிடிக்கப்பட்டு உ'(க்)காள்' சந்தைக்கு அடிமையாக விற்கப்படக் கொண்டுவரப்பட்டார். அவரை 'ஹ(க்)கீமிப்'னு ஹ'ஜாம் என்பவர் விலை கொடுத்து வாங்கித் தம் பிதாவின் (ஒன்றுவிட்ட) சகோதரியான க'தீ'ஜா பிராட்டியாரிடம் கொண்டுவந்து விட்டார்; அவரை நம் பிராட்டியார் தம் முடைய நாயகரிடம் ஒப்புக்கொடுத்தார்கள். உடனே நபிகள்நாயகம் அவ்

வடிமைக்கு உரிமை கொடுத்து விடுதலையளித்து விட்டார்கள். ஆனால், ஜை'து'க்கு உரிமை கிடைத்தும், அவர் தமது சொந்த இல்லத்துக்குச் செல்லாது நபிகள் பெருமானின் திருக்கலியாணகுணத்தி லீடுபட்டு, அன்னவரின் சன்னிதானத்திலேயே யிருந்துவிட்டார். இவ் விஷயத்தைப் பற்றிக் கேள்வியுற்றிருந்த ஜை'தின் தந்தையார் நபிகள் திலகத்திடம் "ஆஜிராகித்" தமது மைந்தனை யனுப்பிவைக்குமாறு வேண்டிக் கொண்டார். அக்கணமே ரஸூல் நாயகமவர்கள் அவருக்கு அனுமதி யளித்து, அவருடைய மைந்தர் வர இஷ்டப்பட்டால் உடனழைத்துச் செல்லலாமென விடையும் கொடுத்து விட்டார்கள். அத் தந்தையார் அவ் வண்ணமே தந் தனயனை யழைத்தார்; ஆனால், ஜை'து'க்குத் தந் தந்தையாரினும் அதிகமான அன்பும் அபிமானமும் நம் பெருமானா ரவர்களிடமே ஏற்பட்டுவிட்டபடியால், தம் பிதாவின் அழைப்புக்கு இணங்க அடியுடன் மறுத்து விட்டார்.

நபி பெருமானார் ஜை'தை' உரிமை கொடுத்து யதேச்சா பிரியராகச் செய்தது மட்டுமன்றி, அன்னவருக்குத் தங்கள் அத்தை மகளான ஜை'னபை'யும் தாங்களே முன்னின்று மணமுடித்து வைத்தார்கள். தீ'னுல் இஸ்லாத்தின் சமத்துவத்துக்கும் சகோதரத்துவத்துக்கும் இத்தகைய செய்கைகளே மூலாதாரங்களாய் விளங்காநின்றன. தாங்கள் ஒரு விதவையை மணந்து கொண்டார்கள்; தங்கள் சொந்த அத்தை மகளை விடுதலை பெற்றிருந்த அடிமைக்கு மணமுடித்து வைத்தார்கள். என்னே எம்பெருமானது சீர்திருத்த முன்னேற்றம்!*

* கிறிஸ்துமத வித்தியார்த்திகளால் வெறியுடனே இஸ்லாமிய சரித்திரத்தைச் சிதைத்து எழுதப்பட்டிருக்கும் நூற்கள் பற்பல. ஆறாவது, ஏழாவது நூற்றாண்டுகளின் இஸ்லாமிய வீரர்கள் பலர், இவ் வித்தியார்த்திகளின் நூல்களில் கிறிஸ்து மதத்தை உயர்த்திக் காட்டுவதற்கும், இஸ்லாம் மார்க்கத்தைச் சிறுமைப் படுத்துவதற்கும் இலக்காகக் குறிப்பிடப் பட்டிருக்கிறார்கள். இஸ்லாத்தின் சிறந்த நபியவர்களே அவர்களின் மதவெறிக்கும் மூர்க்க துர்க்குணத்திற்கும் ஆளாக்கப்படும் பொழுது, மற்றவர்கள் எம்மாத்திரம்? அன்னார் போன்றவர்களே ஜை'த்' (ரலி') என்பவரையும் குறித்து அடாதவை கற்பித்துப் புளுகாக எழுதி யிருக்கின்றனர்.

இப்'னு 'ஹஜர் அ'ஸ்:கலானீ என்பவர் தம் நூலில், ஜை'து'டைய அன்னை தங் கூட்டத்தவருள் சிலரைப் பார்க்கச் சென்றிருந்தபொழுது, மூன் பி'ன் தாயீ வம்சத்தவர் மீது:கின் என்னும் கூட்டத்தவர் சிலர் மாற்சரியங் கொண்டு, அவர்களின் இல்லங்களுள்ளே புகுந்து எதிர்த்தனர் என்பதாகவும், அதுபொழுது ஏழுபிராயமே எய்தியிருந்த ஜை'தை'யும் தூக்கிச் சென்று உ'(க்)காள்' என்னுமிடத்தில் 'ஹ(க்)கீம் என்பாருக்கு விற்றுவிட, அவர் க'தீ'ஜா (ரலி') அவர்களுக்கு இவரைக் கொடுத்துவிட்டனர் என்பதாகவும் எழுதியிருக்கின்றார். இன்னும், ஹ'ஜாம் என்பவரின் குமாரராம் 'ஹ(க்)கீம் என்பவர் சிரியாவிலிருந்து சில அடிமைகளைக் கொண்டு வந்ததாகவும், அதில் ஜை'த்' ஒருவ ரென்பதாகவும், க'தீ'ஜா அவர்கள் மு'ஹம்மத்'(சல்) அவர்களைத் திருமணம் செய்துகொண்ட பின்பு, அவர் தம்வீட்டுக்கு வந்திருந்தபொழுது, அந்த 'ஹ(க்)கீமின் அடிமைகளையெல்லாம் பார்வையிட்டு, ஜை'தை'த் தாமே வைத்துக்கொள்ள விரும்பினாரெனவும், பிறகு நபியவர்களிடம் க'தீ'ஜா நாயகி

ஜைதி'ன் சரிதை இவ்வாறிருக்க, அபூ'ப'க்ர் சித்'தீ':க் (ரலி') அவர்கள் தங்கள் ஞானாசிரியர்மாட்டு எத்துணைப் பெரிய பக்தி விசுவாசம் பூண்டொழுகி வந்தார்க ளென்பது சரித்திரமே சான்று பகரக்கூடிய ஓர் ஆச்சரியகரமான அற்புதவிஷயமாய்க் காணப்படாநின்றது. அபூ'த்தாலி ப்'வர்களும் நம்பெருமானாரிடம் (சல்) எத்துணைப்பெரிய அபிமானம் பாராட்டினார்க ளென்பதும் எல்லோருக்கும் பகிரங்கமா யறியக்கிடக்கும் ஒரு செய்தியே யாகும். அபூ'த்தாலி ப்'வர்கள் தங்களுக்குரிய பண்டை மார்க்கத்தி லிருந்து கொண்டு, நபிகள் திலகத்தின்மீது ஈமான் கொள்ளா திருந்தும், அவர்களுடைய நல்லொழுக்கத்தையும் நற்குணத்தையும் பாராட்டி அன்னவர் மாட்டுத் தமது ஆருயிரையும் பரித்தியாகம் பண்ணியவண்ணமே யிருந்து வந்தார். :குறைஷிக ளனைவரும் ஒருமிக்கத் திரண்டுவந்து எதிர்த்த

---

சென்றபொழுது அவர்கள் ஜைது'க்கு விடுதலையளித்து விட்டதாகவும் ஸீரத் இப்'னு இஸ்'ஹா:க்கில் எழுதப்பட்டிருக்கிறது. ஜைதை'யே மு'ஹம்மத்' நபி அவர்கள் ஸ்வீகாரம் செய்து கொண்டனர் என்று கருதப்படுவது தவறானதே யாகும். என்னெனின், இச் சுவீகாரம் நடந்தேறுவதன் முன்பே க'தீ'ஜாவை மணந்தாகி, அவர் ஒரு மகவையும் எதிர்பார்த்திருந்தார். ஆகவே, ஸ்வீகாரம் என்பது இங்கு அருத்தமற்றதாக வாகின்றது. நம் நபியவர்கள் ஜைதை' மிகுந்த பக்ஷத்துடனே நடத்தி வந்தார்கள்; வயதேறியவர்கள் இளையவர்களிடம் எவ்விதம் அன்பு காட்டுவார்களோ, அதேவிதம் அன்பு பாராட்டி வந்தார்கள். திருநபியவர்கள் ஜைதை' ஆழ்ந்துநேசித்து, அதன் காரணமாக "மகனே!" என்றும் கூப்பிட்டு வந்ததைச் சில சரித்திராசிரியர்கள் ஸ்வீகாரம் என்ற தவற்றுக் காதாரமாகக் கொண்டு விட்டனர். (இஸ்லாத்தில் ஸ்வீகாரமே இல்லை.) உண்மையை உணரப் பிரயத்தனம் எடுக்காமலே சரித்திராசிரியர்கள் இத்தவற்றை ஒருவர்பின் ஒருவராக வரைந்துவிட்டனர். வயதில் மூத்தவர் இளைய வயதினரிடம் கொள்ளக்கூடிய பிரியமே கொண்டு, "மகனே!" என்று கூப்பிட்டு வந்ததற்கு ஒரு சான்றிருக்கிறது: ஜைதி'ன் தந்தையும், சிறிய தந்தையும் ஜைது'க்காக விடுதலைக் கிரயம் கொண்டு வந்தபொழுது, நபிகள் நாயகமவர்கள் ஜைதி'ன் இஷ்டப்படியே செய்துகொள்ள அனுமதி கொடுத்துவிட்டார்கள். அப்பொழுது ஜைத்' தந் தந்தையையும் சிறிய தந்தையையும் காட்டின் தம்மைப் புத்திரன்போன்று பாவித்து அன்பு பாராட்டி வந்ததனால், நபியவர்களையே அதிகம் நேசிப்பதாகக் கூறினார். இக் கூறியதிலிருந்து, தம்மை நபிபிரான் ஸ்வீகாரம் செய்துகொண்டிருந்தால், இவ்விதம் அவர் சொல்லியிருக்க மாட்டாரென்பது விளங்கவில்லையா? இன்றேல், தம்மை மு'ஹம்மத்' (சல்) அவர்கள் ஸ்வீகாரம் செய்துகொண்டு விட்டதாகவும், ஆதலால், அவர்களுடன் (பிதாமார்களுடன்) வரமுடியா தெனவும் கூறியிருப்பார்.

ஜைதி'ன் ஜீவியத்தைப்பற்றிப் பேசுங்கால், சில மதவெறி கொண்ட கிறிஸ்தவப் பாதிரிகள், இஸ்லாத்தின்மீது கொண்டுள்ள வெறுப்பினால், ஜைத்' என்பவர் கிறிஸ்தவ தத்துவ போதங்களில் மகா நிபுணரென்றும், நபி பெருமானா ரவர்கள் அவரிடமிருந்தே கிறிஸ்தவக் கொள்கைகள் பலவும் கற்றபடியாலேயே அவரைப் புத்திரராகச் சுவீகரித்துக் கொண்டா ரென்றும் வரைந்திருக்கிறார்கள். ஸர் வில்லியம் மூய்ரும், வேறுபல கிறிஸ்தவ சரித்திராசிரியர்களும் ஜைத்' க'தீ'ஜா அவர்களின் அடிமைகளுள் ஒருவரென்றும், இவரே கிறிஸ்தவக் கொள்கைகளைத் திருநபி யவர்களுக்குச் சொல்லிக் கொடுத்து வந்தா ரென்றும், அந்தப் பிரீதியின் காரணமாகவே மு'ஹம்மத்' (சல்) அவரை ஸ்வீகாரம் செய்துகொண்டன ரென்றும் எழுதியிருக்கின்றார்கள். இது பிரசார வேலைக்காகப் புனைந்த அஸ்திபாரமற்ற ஒரு பெரும் கட்டுக்கதையே யாகும். இஸ்லாமிய சரித்திரம் ஒன்றேனும் ஜைது'ம் அவர்

போதும், அபூ'த்தாலி ப்'வர்கள் தங்களுக்கு என்னவிதமான துன்பம் நேரிடினும் எதிரிகளுக்குச் சற்றும் இடங்கொடுப்ப தில்லையெனத் தீர் மானித்து, அவ்வாறே தமது மரண பரியந்தம் ரஸூலுல்லாவின் பக்கலிலே நின்றுகொண் டிருந்தார்கள். என்னெனின், அத்துணை ஆழமாக அன்னவர் மனத்தின்கண் நம் பெருமானாரின் குணநலன்கள் நன்கு பதிந்துகிடந்தன. எனவே, அத்துணைப் பெரிய நற்குண நல்லொழுக்கங்களை யுடைய தம் முடைய தம்பி மைந்தரை எதிரிகள்வயம் காட்டிக்கொடுப்பது மகா பாதக மாகுமெனத் தீர்மானித் திருந்தார்கள். மு'ஹம்மதைத் தங்களிடம் கொடுத்துவிடுமாறு :குறைஷிகள் கேட்டபோது, அபூ'த்தாலி ப்'வர்கள் ஓர் அழகிய கவியால் இவ்வாறு ஏசி யனுப்பினார்களாம்: "உங்களுக்கே நாச காலம்! பாதுகாத்தற் குரிய ஒவ்வொன்றையும் பத்திரமாகப் பாதுகாத்து வரும் ஒரு தலைவரை (சையிதை') அவருடைய வர்க்கத்தினர் எப்பொழுதும் விட்டுப் பிரிந்ததில்லை. அவர் அகந்தை படைத்தவரல்லர்! தம்முடைய காரியங்களைப் பிறரிடம் ஒப்படைக்கக் கூடிய அத்துணைப் பலஹீனமான வரு மல்லர். அவர் தாராள குணமுள்ளவர். அவரது முகாரவிந்தத்தின் ஸ்'பாரிஷினால் மாரியும் கோரப்படுகின்றது. அவர் அகதிகளையும், விதவைகளையும் ஆதரிக்கின்றார்."

சுருக்கிச் சொல்லுமிடத்து, நபிகள் திலகமவர்கள் தங்கள்பால் அண்மி வருவோரின் ஆழிய அபிமான முழுதையும் அடியோடு தங்கள் வயமே சேர்த்துக் கொள்ளும் இயற்கை வசீகர சுபாவ முள்ளவர்களாய் விளங்கினார் கள். அதிலுமோர் விசேஷம் யாதெனின், அவர்கள்மாட்டு வந்துசேர்ந்த பெரியா ரனைவரும் ஒப்புயர்வற்ற சற்குண சீலர்களாகவே காணப்பட்டனர் என்பதேதான். நபிபெருமானின் நண்பர்களுள் தேசசரித்திரம் சான்று கூறும்படியான அத்துணைப் பெரிய அபூ'ப்'க்ர் (ரலி') உ'மர் (ரலி') ஆதிய

---

தந்தையும் கிறிஸ்தவர்கள் என்றாவது, கிறிஸ்துவின் உபதேசங்களைப் பின்பற்றியவர்கள் என்றாவது எடுத்துக்கூறக் காணோம். க'தீ'ஜா பிராட்டியாரின் அடிமையாயின போது, ஸை'ஜது'க்குப் பிராயம் எட்டே; உடனே அவர் நபிபிரானிடம் ஒப்புவிக்கப்பட்டார். ஆகவே, நபியவர்க ளிடமிருந்தே அச்சிறுவர் எவ்வித உபதேசத்தையும் பெற்றிருத்தல் வேண்டும். ஆகவே, கிறிஸ்தவர் கூற்று எவ்வளவு உண்மையுட னிருக்கிறது? என்பதை யாம் எடுத்துக்காட்ட வேண்டுவதின்று.

ஸை'ஜத்' (ரலி') திருநபியவர்களை அளவுகடந்து நேசித்தும், அவர்களுக்குத் தொண்டு புரிவதையே தமது மோக்ஷசாதன மெனவும் மேற்கொண் டொழுகினார். தம்முடைய எஜமானரைவிட்டுச் சற்றும் அகலாது இணைபிரியா திருந்துவந்தார். இவர் ப்'த்'ர் யுத்தத் திலும் மற்றும்பல சண்டைகளிலும் ஈடுபட்டிருக்கிறார். நபி யவர்களின் பிரதிநிதியாகச் சில தருணங்களிலே வேலை செய்திருக்கின்றார். இவர் நபிபெருமானின் பணிப்பெண்ணாகிய உம்மு ஐமன் என்பவரை மணந்து அஸ்மாவைப் பெற்றார். மறுமுறையும் ஜஹ்ஷ் என் பவரின் புதல்வியாகிய ஸை'ஜனப்' என்பவரை மணந்தும், விவாக விலக்கு ஈந்தும், பிறகு உம்முகுல்:தூம் என்பவரை மணந்து கொண்டனர். தாமே சைன்யத்தின் தலைவராக இருந்து போர்புரிந்தபோது, மூத்தா என்னும் போர்க்களத்தில் தமது 55–ஆவது வயதில் கொல்லப்பட்டு, ஹி. 8, முஹர்ரம் மாதத்திலே உயிர்துறந்தார்.

குணசீலர்களாகிய மகான்கள் அனந்தம் பேரிருக்க, அவர்களுடைய குண நலன்களை யெல்லாம் அப்படியே நிகர்த்து நிற்கக்கூடிய மற்றும் பலரும் அப் பெருமானாரின் தோழர்களுள் இல்லாமற் போகவில்லை. 'ஹ(க்)கீம் இப்'னு ஹ'ஜாம் என்னும் :குறைஷி குலத் தலைவ ரொருவர் ஹிஜ்ரத் நிகழ்ந்து எட்டு ஆண்டுகள் மட்டும் தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவாமலே யிருந்து வந்தார்; இவர் ஓர் உத்தமர்.* இவர் முஸ்லிமாவதற்கு முன்னே கஃ'ப்த்துல்லாவி லுள்ள உயர்ந்த சில சாமான்கள் ஏலத்துக்கு வந்தன. அவற்றுள் ஓர் உயர்ந்த ஆபரணத்தை 50 பவுன் விலை கொடுத்து 'ஹ(க்)கீமிப்'னு ஹ'ஜாம் வாங்கினார். இவர் நாயகமவர்கள்மீது கொண்டிருந்த அன்பின் காரணமாக அவ்வாபரணத்தை மதீனாவுக்குக் கொண்டுசென்றார். அதைக் கண்ட எம்பிரான் அவர்கள், "(மக்கா) முஷ்ரிக்குக ளிடமிருந்து இன்ஆ' மொன்றையும் நான் வாங்க முடியாது. ஆனால், விலைகொடுத்து வாங்கிக்கொள்வேன்," என்று கூறிவிட்டமையான், இறுதியாகத் தாம் கொடுத்த 50 பவுனையும் வாங்கிக் கொண்டே 'ஹ(க்)கீமிப்'னு ஹ'ஜாம் ஆபரணத்தைக் கொடுத்துவிட்டு வரும்படியும் ஒரு சம்பவம் நேரிட்டது. இன்னம், ல'ம்மாத்' பின்' :தஅ'லப'ா என்பா ரொருவரும் இருந்துவந்தார்.† இவர்க ளிருவரும் நபி பெருமானிடம் காட்டிவந்த அத்தியந்த அன்பிற் கோர் அளவு கூறுவது முடியாது; இவர்க ளிருவரும் நபிகள் நாயகத்தின் விலக்கொணா அத்தியந்த நண்பர்களாய்த் திகழ்ந்துவந்தனர்; இவ்விருவரும் தங்களுடைய ஒழுக்கத்திலும் சீலத்திலும் மகா மேன்மைபெற்று விளங்கினார்கள். இதனையெல்லாம் நாம் தெரிந்துகொள்வது யாதெனின், நம் பெருமானா ரவர்கட்கு நபிப்பட்டம் வருமுன்னரும் அன்னவரிடம் நெருங்கிப் பழகியோ ரனைவரும், "தங்கமக மேருவை யடுத்திடுங் காக்கையும் சாயல் பொன் நிறமதாகும்," என்றவாறே தங்களுடைய ஒழுக்கத்திலும் சீலத்திலும் மிக்க மேம்பா டடைந்தவர்களாகவே காணப்பட்டன ரென்பதே யாம்.

---

* க'தீ'ஜா நாயகியாரின் பெரியதந்தையின் பௌத்திரராகிய இவர்— ஸ'ஜதை' வாங்கி வந்தவர்— நபிபெருமானைக் காட்டினும் ஐந்து அல்லது ஏழு வயதே மூத்தவர். வேறு சிலர் ஆ'மூல்'பீல் (யானை யாண்டு)க்கு 13 வருடம் முன்னே பிறந்தவ ரென்று கூறுவர். இவர் "த'ாருன் னத்'வா"க் கட்டிடத்தின் சொந்தக்காரர். இக்கட்டிடமே மக்காத் தலைவர்களெல்லாம் கூடிப்பேசும் ஆலோசனை மண்டபமா யிருந்துவந்தது. இம் மண்டபத்திலேயே ஹிஜ்ரத்துக்குமுன் நாயகம் (சல்) அவர்களைக் குத்திக் கொலைசெய்துவிட வேண்டுமென்று சதியாலோசனை செய்யப்பட்டது. முஆ'வியாவின் காலத்தில் அதை ஓரிலக்ஷம் தி'ர்ஹத்துக்கு விற்று, அத்தொகை முழுதையும் தானம் செய்துவிட்டவர்.

† இ'ஜ்த்' கூட்டத்தின் பெயர்போன வைத்தியராய் விளங்கிய இவர், நபிநாயகம் அவர்களுக்குப் பைத்தியம் பிடித்திருந்ததாகக் கேள்வியுற்று, நாயக மவர்களிடமே சென்று, அப் பைத்தியத்துக்கான மருந்தைத் தாம் செய்வதாகச் சொல்லி, பிறகு நாயக மவர்களால் ஓதிக் காட்டப்பட்ட சில :குர்ஆன் திருவாக்கியங்களைக் கேட்டு இஸ்லாத்தைக் கைக்கொண்டார்.

" மருவுக மாசற்ருர் கேண்மையொன் றீத்தும்
ஒருவுக ஒப்பிலார் நட்பு."— குறள்.

நபிகள் திலகத்தின் குணுதிசயங்க ளுள்ளெல்லாம் சிரோபூஷணமாய் விளங்கி நின்றது அவர்கள் ஏழைக ளிடத்தும், எளியார்கள் மாட்டும், அகதிக ளிடத்தும், அநாத விதவைகள் மாட்டும் காட்டிவந்த அளப்பரும் ஆழிய அபிமானமே யாகும். அவர்களுடைய துன்பங்களையும் துயரங்களை யும் போக்குவதற்கு எத்துணைப் பெரிய அசெளகரியங்களையும் ஒரு பொரு ளாக எண்ண மாட்டார்கள். இவ்விஷயத்தில் இஸ்லாத்தின் பரமவிரோதி களும் நம் நபிகள் பெருமானின் பெருந்தன்மையை நன்கு மதிக்காம லிருப்ப தில்லை. க'தீ'ஜா நாயகியாரும் ரஸூலுல்லாவின் இத்தகைய கலியாண குண த்தையே அதிகம் சிலாகித்துக் கூறினார்கள். எதிரிகளிட மிருந்து இவர் களைக் காப்பாற்ற வேண்டு மென்பதற்குரிய காரணமும் இதுவேயென்று அபூ'த்தாலி ப'வர்களும் பெருமைபாராட்டிக் கூறுகின்றனர். ஒடுக்கப் பட்டாரைத் தற்காக்கும் பொருட்டு நிறுவப்பட்ட 'ஹில்'புல் 'பு'ஜூல் சங்கத்தில் நபிபெருமாஞ ரவர்கள் சேர்ந்து வேலைசெய்ததும் இதையே நிரூபித்துக் காண்பிக்கின்றது.

" அன்பின் வழிய(து) உயிர்நிலை அஃதிலார்க்(கு)
என்புதோல் போர்த்த உடம்பு."— குறள்.

ஏழை எளியோர்களுக் கிரங்கலும், அகதிகளுக்கும் அநாத விதவை களுக்கும் ஆதரவளிப்பதும் நம் பெருமாஞ ரவர்களது உதிரத்துடனேயே ஊறிக்கிடந்தன. இவைபோன்ற காரியங்களைச் செய்வதுதான் சன்மார்க்க மென்பதன் அந்தரங்க நோக்கமாகு மென்று அடிக்கடி ஆண்டவனும் தனது திருமறையிலே அறைந்தருளி யுள்ளான். அகதிகளை உதாசினம் செய்பவர்களும், ஏழைகளுக்கு அன்னமிடுவோரைத் தடுப்பவர்களும் சன் மார்க்கத்தையே மீறி நடப்பவர்க ளென்று நமது நன்மறையானது நன்கு நவின்றருளி யிருக்கின்றது ; அகதிகளை ஆதரித்து எளியவர்களுக்கு உதவி புரிவதே மனிதன் செய்தற்கரிய மகோன்னதமான செய்கையென்று அவ் வேதம் அழகுபெற அறைந்திருக்கிறது. அகதிகளுக்கு ஆதரவளிக்க மாட் டாதவர் மனிதருள் மிலேச்சரென்று நமது தெய்வத் திருமறை அடிக்கடி எடுத்தோதுகின்றது. அகதிகளின் பராமரிப்பும், ஏழை எளியோர்களின் உதவியும் இல்லாத ஜாதியார் இவ்வுலகினில் தாழ்மையுறுவது நிச்சயம். அகதிகளின் விஷயமும், ஏழைகளின் விஷயமும் :குர்ஆன் ஷரீ'பில் அடிக்கடி வற்புறுத்தப்பட் டுள்ளன வென்பதற்கு 2 : 220, 240 ; 69 : 34 முதலிய ஆயாத்களை எடுத்துக்காட்டுக்களாக ஈண்டெடுத்துக் கூறலாம்.

நபிகள் திலகத்தின் இளம்பிராய முதற்கொண் டுள்ள குணுதிசயங்களை யெல்லாம் நன்கு பரிசீலனை செய்து பார்ப்போமாயின், அவர்கள் எப்பொழு

தும் அமைதியும் அடக்கமும் அதிகம் குடிகொண்டவர்களாகவே காணப் படுகின்றார்க ளென்பது செவ்வனே விளங்கக் கிடக்கும். சாந்தகுணமே அவர்களுடைய முக்கிய உடற்பிறப்பாகும். நபிகள் பெருமான் எப்பொழு தும் ஒரு திரைமறைவி லுள்ள கன்னிப்பெண்ணே போலத்தான் இருப் பார்க ளென்று பற்பல சரித்திராசிரியர்களும் எழுதி வைத்திருக்கின்றனர். அக்காலச் சிறுவர்களுக்குரிய சேஷ்டைத்தனத்தில் நம்பெருமானார் (சல்) எப் பொழுதும் கலந்து கொண்டதே யில்லை. இதனைக் குறித்து அ'ப்'ப'ாஸ்(ரலி') அவர்களிடம் அபூ'த்தாலி ப்'வர்கள் இவ்வாறு கூறியிருக்கின்றார்கள்: "அவர் ஒருபொழுதும் ஒரு பொய்யைச் சொன்னதையேனும், வேடிக்கை யான விளையாட்டுக்களில் தலையிட்டதை யேனும், அசப்பியங்களை மொழிந் ததையேனும், தெருப்பிள்ளைகளுடனே கலந்து கொண்டதையேனும் யான் எப்பொழுதும் கண்டதில்லை." அவர்களுடைய காலத்தில் போர் புரிவ தென்பது அராபியருக்கொரு பொழுதுபோக்கா யிருந்துவந்தது; ஆனால், நபிகள் திலகம் இயற்கையிலேயே அத்தகைய கொடிய செய்கைகளை யெல்லாம் அடியோடு வெறுத்து வந்தார்கள்; ஹர்பு'ல் 'பிஜாரிலும் இவர் கள் தங்கள் பெரிய தந்தைமாருடன் சேர்ந்து கலந்திருந்தபோதும், தங்கள் திருக்கரத்தால் யாதோ ருயிரையும் சேதித்து விடவில்லை. அவர்களுடைய காலத்தில் அத்தேயத்தில் காணப்பட்டுவந்த பற்பலவிதமான மூடப்பழக்க வழக்கங்க ளெல்லாம் அவர்களுக்கு அளவுகடந்த அருவருப்பையே அதிகம் அளித்து வந்தன. தங்களுடைய சிறுபிராய முதற்கொண்டே விக்ரஹ ஆராதனையை அவர்கள் அளவுகடந்த வெறுப்புடனே திரஸ்கரித்து வந்தார்கள். ஒருமுறை இவர்களுடனே வார்த்தையாடிய கிறிஸ்தவப் பாதிரியொருவர் லாத் தென்னும் விக்ரஹத்தின் பெயரையும் உ''ஜ்'ஜாவின் பெயரையும் எடுத்தோதியபோது, நபிகள் பெருமான் அந்த விக்ரஹங்களைப் பார்க்கினும் வேறெதையும் தாங்கள் இத் தரணியின்கண் அத்துணை அரு வருப்புடனே நோக்குவ தில்லையென்று விடை கொடுத்தார்களாம். என் னெனின், நபிகள்திலகம் (சல்) தங்கள்காலத்து விக்ரஹத் தொழும்பிற்குரிய எந்த விதமான ஷிர்க்கிலும் சேர்ந்து கொண்டதே யில்லை. இது மட்டு மன்று. விக்ரஹங்களுக்குப் பூஜை செய்யப்பட்ட பொருள்களையும் நம் பெருமானா ரவர்கள் ஒருபோதும் கையாலும் தொட்டுப் பார்த்ததில்லை. மதுவையும் ஒரு சொட்டையும் தொட்டுப் பார்த்தது கிடையாது. இவ் வாறு அவர்கள் தங்கள் பிள்ளைமைப்பருவ முதற்கொண்டே அதிகமதிகம் பரிசுத்தமா யிருந்துவந்தார்கள். எனவே, விக்ரஹ ஆராதனை யென்பது தான் அன்னவருக்கு ஆதிமுதலே அளவிட்டுச்சொல்ல முடியாத அத்துணைப் பெரிய அருவருப்பை யளித்துவந்தது. எனவேதான், எதிரிகளெல்லாம், இவருக்குத் தாமா நபிப்பட்டம் அருளப்பட வேண்டுமென்று வினவுங் கால், அந்தக் கடாக்ஷத்தை அருளப் பெறுதற்கு அருகதை வாய்ந்தவர்

எவரெவ ரென்று கண்டுபிடிப்பது இறைவனது காரியமே யென்று அல்லாஹுத் தஆ'லா அழுத்தி வழுத்தியுள்ளான்.

> "சகல மனோரதர்களும் கொண்டிருக்கும் சிறப்பனைத்தையும் நீங்க ளொருவீரே கொண்டவரா யிருக்கின்றீர்கள்."—ஒரு 'பார்ஸீக் கவி.

> "விஞ்ஞான சாஸ்திரிகளாலும் கண்டுபிடிக்க முடியாததும், (ஏனை) ஆராய்ச்சியாளராலும் விண்டுரைக்க முடியாதது மாகிய ஒரு பரம ரஹஸ்யத்தைக் கம்பளி போர்த்தக்கூடிய ஒரு (சாதாரண) புருஷர் ஒருசில சமிஞ்ஞைகளால் தெளிய வைத்து விட்டார்.—ஓர் உருதூக் கவி.

---

# அதிகாரம் — 9

## நபிப்பட்டம் அருளப்பெறுதல்

> **"படைத்த உம்முடைய றப்'பின் திருநாமத்தைக் கொண்டு (நீர்) ஓதுவீராக! (அவன்) மனிதனை உதிரக் கட்டியினின்று படைத்தான்; (நீர்) ஓதுவீராக! இன்னம், உம்முடைய றப்' மகா கண்ணியமுள்ளவனு யிருக்கிறுன்; எழுதுகோலைக் கொண்டு (எழுதக்) கற்பித்தவன்; மனிதனுக்கு அவன் அறியா திருந்ததை (அறியக்) கற்பித்தவன்." — (96 : 1—5)**

> "சோதியா யெவைக்கும் உள்ளுறைப் பொருளாய்த்
> தோற்றமு மாற்றமுந் தோன்ருு
> ஆதிதன் பருமான் கொண்டினி தோங்கி
> அமரிழிந் தமரருக் கரசன்
> மேதினி புகுந்து முஹம்மது தமக்கு
> விளங்கிய நபியெனும் பட்டம்
> கோதறக் கொடுப்பத் தீன்பயிர் விளைத்த
> கூறெலாம் விரித்தெடுத் துரைப்பாம்,'

என்று கூறுகின்றுர் சீருப் பாடிய பெரும்புலவர்.

முன் சென்ற அதிகாரத்தில் கூறியவாறு உத்தேசம் பதினைந்து வருடகால மட்டும் நபிகள் பெருமானுரவர்கள் (சல்) பற்பலவிதமான பரிசோதனைகளுடனும், மன வேதனைகளுடனும் தங்கள் காலத்தை ஒருவாறு கழித்து

வந்தார்கள். ஆனால், அப்பொழு தெல்லாம் மன்பதைகளின் மாட்டுள்ள உள்ளபிமானம் மட்டும் ஒருசிறிதும் குறையாமலே இருந்துவந்தது. அவர்களுடைய கண்ணெதிரே அரப்தேச முழுதும் அக்காலே உள்நாட்டுக் கலகங்களாலும் ஜாதிச் சண்டைகளாலும் வகுப்புப் பூசல்களாலும் அதிகம் பிளவுபட்டுக் கிடந்தது. அத்தேச மக்களெல்லாம் அறியாமையுள்ளும் ஆழிய மௌட்டியத்துள்ளுமே அதிகம் ஆழ்ந்து தாழுந்து மூழ்கிப்போய்க் கிடந்தனர். அவர்கள் சட்டமென்பதையே சாஸ்திரத்துக்காகவும் தியானிக்க முடியாத அத்துணைப் பெரிய அடங்காப் பிடாரிகளா யிருந்து வந்ததோடு, துஷ்டத்தனத்திலும், கொடிய கொள்ளைத் தொழிலிலும், கொலைத் தொழிலிலும் முற்றமுற்ற மூழ்கிப் போய்க்கொண் டிருந்தனர். அவர்கள் தங்கள் பெண்மணிகளை யெல்லாம் முன்னரே கூறியவாறு மிருகத்தினும் கயமையாக நடாத்திவந்தார்கள்; பெண்சிசுக்களை யெல்லாம் உயிருடனேயே புதைத்துவந்தார்க ளென்பதையும் நீங்க ளறிவீர்கள். இக் கொடிய வழக்கம் அரப் தேச சரித்திரத்தில் வவ்து'ல் ப'னுத் என்று வரையப்பட் டிருக்கின்றது. அவர்கள் ஆண்குழந்தைகளையுங்கூடத் தங்கள் சுவாமிகளுக்குப் பலிகொடுத்து வந்தார்கள்.

அத்தகைய பொல்லாத அராபிய ரனைவரையும் எவ்வாறு, எப்பொழுது, சீர்திருத்தி முன்னுக்குக் கொண்டுவருவ தென்னும் ஏக்கமே எம்பெருமானது உள்ளத்தை என்றென்றும் உறுத்திக்கொண்டே யிருந்தது; இப் பெரியார் இருமுறை சிரியா நாட்டுக்கு வர்த்தகத்தி னிமித்தம் பிரயாணஞ் சென்று வந்ததிலிருந்தும், ஆங்காங்குள்ள மாந்தரின் ஆழிய வீழ்ச்சியையும் அதிகம் அறிந்துகொண் டிருந்தார்கள். உள்நாட்டுக் கலகங்களால் ஒவ்வொரு கோத்திரத்தாரும் மற்றக் கோத்திரத்தாருடனே ஒரு சிறு அற்பக் காரணத்துக்காகவும் பற்பல தலைமுறைகள்மட்டும் மகாயுத்தம் புரிந்துகொண் டிருப்பார்கள்; பந்தய ஓட்டத்தில் ஒருவருடைய குதிரை மற்றொருவருடைய குதிரையைக் காட்டினும் ஒரே காதளவு நீளமே முந்தி விட்ட தென்னும் காரணத்தைக்கொண்டு நூற்றாண்டு கணக்காகப் பெரிய யுத்தம் புரிந்து வருவார்கள். அவ் வராபியர் தாங்கள் தெய்வமெனக் கொண்டாடி வந்த பற்பலவிதமான விக்ரஹங்களின் நிமித்தமாகவும் ஒருவரோடொருவர் நெடுங்காலமட்டும் போர்புரிவார்கள். இப்படிப்பட்ட தாழ்ந்த இழிநிலைக ளனைத்தையும் உற்றுநோக்குங்கால், எவருடைய உள்ளந்தான் துணுக்குறு திருந்திடுதல் சாத்தியமாகும்? மக்காவிலுள்ள சிற்சில அரபிகள் தங்கள் கோத்திரத்தாரின் கொடிய பழக்க வழக்கங்களை யெல்லாம் அதிகம் வெறுத்துவந்த போதினும், அவர்க ளனைவரும் தப்பிப் பிழைத்தற்கு வேறுவழியின்றி அத்தேசச் சேற்றுக் குள்ளேயே அதிகம் சிக்கிச் சுழன்றுகொண்டு தவித்தனர்.

ஃஜத்' பி'ன் அ'ம்ரிப்'னு நுஃபல், வர:கா பி'ன் நௌ'பல் (இவர் க'தீ'ஜா பிராட்டியாரின் பெரிய தந்தையர் புத்திரர்), உ'பை'து'ல்லா

ஹிப்’னு ஜஹ்ஷ், உ’:துமான் பி’ன் ஹவாரிஸ், கிஸ்ஸிப்’னு ஸாயித’ா என்னும் ஐவரும் தங்கள் தேசத்தாரின் விக்ரஹத் தொழும்பை அடியோடு வெறுத்து, உண்மையான தத்துவத்தைக் கண்டுபிடிப்பான் வேண்டி அதிகமான பிரயத்தனஞ் செய்துவந்தார்கள். இவ்வித ஆராய்ச்சியில் என்ன செய்வதென்று ஒன்று மறியாது, வர:காவும், உ’:துமானும் கிறிஸ்து மதமே சரியானதென் றெண்ணி, அம்மதத்தைக் கைக்கொண்டனர். ஜை’தே’ா, “ஏ ஆண்டவனே! யான் உன்னை எவ்வாறு வணங்கவேண்டு மென்று தெரிந்துகொள்வே னாயின், அவ்வாறே யான் வணங்குவேனே!” என்று குறையிரந்துகொண்டே யிருந்து மரணமும் அடைந்துபோயினர். நபிகள் பெருமான் வனாந்தரத்தை நோக்கிச் சென்று ஆண்டவனை நாடி யோக நிஷ்டையுள் ஆழ்வதற்கு முன்னே இந்த ஜை’ஜதை’ப் பற்றியும், இவருக்கு விக்ரஹ ஆராதனையி லிருந்துவந்த வெறுப்பைப் பற்றியும் நன்கு தெரிந்துகொண் டிருந்தார்கள். பிற்காலத்தில் இந்த ஜை’ஜதி’ன் தம்பி மகன் ரஸூல்நாயக மவர்களிடம் நெருங்கித் தன் பெரிய தந்தையாரின் பொருட்டு ஆண்டவனிடம் பிரார்த்தனை புரியுமாறு வேண்டிக் கொண்ட பொழுது, நபிபெருமான் (சல்) அவர்கள் ஜை’ஜதி’ன்நிமித்தமாக அத்தியந்த பிரியத்துடனே அல்லாஹுத் தஆ’லாவினிடம் அழகிய பிரார்த்தனை புரிந்தார்கள்.—(இப்’னு ஹிஷாம்)

மீக்கூறிய சாதுக்களான நல்லமனிதர்க ளெல்லாரும் தங்களைமட்டும் பரிசுத்த மார்க்கத்தில் திருத்திக்கொள்ள முயன்றார்களே யல்லது, ஒரு சிறிதும் தந்தேய மாக்களைச் சீர்திருத்த முன்வரத் துணிந்தன ரில்லை. அவர்கள் அவ்வாறு துணிந்திருப்பினும், அன்னவரால் அணுத்துணையும் முடிந்திரா தென்பதே சரதமாம். ஆனால், மு’ஹம்மத்’ நபியவர்கள் (சல்) மட்டும் சற்றும் மனந்தளராது மன்பதைகளின் இழிய நிலையை எவ்வாறு முன்னுக்குக் கொண்டுவருவ தென்று சதா சிந்தித்த வண்ணமாகவே அல்லும் பகலும் அனவரதமும் தங்கள் அரிய நாட்களைப் பெரிய கவலையிலே கழித்து வந்தார்கள். ஜனன மரணத்தைப் பற்றியும், நன்மை தீமைகளைப் பற்றியும் இப்பிரபஞ்சத்தில் காணப்படும் ஆண்டவனுடைய மெய்யான தத்துவம் என்னவா யிருத்தல் கூடுமென்பதை அறியப் பெரிதும் சிந்தாகுலராய்த் திரிவார்கள்; ஆண்டவனுடைய சத்தியத்தைக் கொண்டு இவ்வுலகினில் காணப்படும் அசத்தியத்தை ஒழிப்ப தெப்படி? என்று அல்லும் பகலும் ஆழ்ந்த கவலையுள்ளே மூழ்கியிருப்பார்கள். இதற்காக அவர்கள் மக்காவைச் சூழ்ந்துள்ள நெடிய பாலைவனங்களில் தன்னந் தனியே நெடுந்தூரம் வரை அலைந்து திரிந்து, ஆண்டவனது அருளைப் பெறுவ தெங்ஙன மென்று சதா சிந்தித்துக் கொண்டே யிருப்பார்கள். நீரோடைகளின் தீரங்களிலும், மரமடர்ந்த தோப்புக்களின் மத்தியிலும், உயரிய கற்பாறைகளின் உச்சியிலும் ஒதுங்கிநின்று, ஆகாயத்தையும் அதற்குக் கீழுள்ள நானாதிசைகளையும் கண்கொண்ட மட்டும் அண்ணாந்து

பார்த்து, ஆண்டவனது இயற்கைத் தத்துவத்திலுள்ள இரகசியத்தை யறியப் பெரிதும் முயலுவார்கள்.

இத்துணைப் பெரிய பிரபஞ்சத்தையும், இதிலுள்ள அண்டசராசரங்க ளனைத்தையும் மிகவு நுண்ணிய ஞானத்துடனே சிருஷ்டித்துக் காத்து ரக்ஷித்துவரும் பரம கருணாநிதியாகிய பக்தரக்ஷகனது திருவுள்ளத்தின் கண்ணே இத்தீய மறமாக்களின் புனருத்தாரணத்திற் குரிய நல்வழி யொன்று இல்லாமற் போகாதென்று மிக்க திண்ணமா யெண்ணி யிருந்தார் கள். அத்தகைய சத்தியத்தைக் கண்டுபிடிக்குமாறு அடிக்கடி நம் பெருமானு ரவர்கள் தனியாகவும், தங் குடும்பத்தாருடனும் பாலைவனத்துள் ஒதுங்கிச் சென்று, தன்னந் தனியே தியானம் புரிவார்கள். இவ்வண்ண மாயே 'ஹ'ஜ்ரத் இப்'ராஹீம்(அ'லை) அவர்கள் முதன்முதலாக எம் மார்க்கத்தவரா யுமில்லாது, உண்மையை உணர்ந்துகொள்ள வேண்டுமெனப் பெரிதும் பிரயாசைப் பட்டுத் தவம் புரிந்துகொண் டிருந்தார்கள். இவ்வாறு நபிகள் திலகம் அடிக்கடி செல்வதை த'ஹ'ன்னுஸ் என்று சரித்திராசிரியர் கூறுவர். அவ்வாறு நம்ரஸூல்நாயக மவர்கள் தன்னந் தனியான தியானத்தினின்றும் யோக சமாதியினின்றும் பெற்றுக்கொண்ட ஆன்ம பரிசுத்தத்தை ஸ'பாத்துஸ் ஸ'பா (பரிசுத்தத்துக் கெல்லாம் பரிசுத்தம்) என்று கூறுவர்.




இவ்வாறு இருந்துவருங்கால், பின்னர் மக்காவினின்று சுமார் மூன்றுமைல் தூரத்தில் அ'ர'பாத் செல்லும் ரஸ்தாவுக்கு இடப் புறத்திலே 'ஹிரா என்னும் பெயரையுடைய செங் "கருங்கற்பாறை" யொன்று பெரிதாகக் காணப்படுகின்றதை நெருங்கினார் கள். அது பிற்காலத்தில் ஜப'லுன் னூர் என் றழைக்கப்பட லாயிற்று. அந்தத் தனித்த பெரிய குன்றின்மீது மரமேனுஞ் செடியேனும் சிறிதேனும் காணப்படுவ தில்லை; அத்தகைய வறண்ட கற்பாறை யில் காணப்படும் இயற்கையான குகை யொன்ற னுள்ளே நபிகள் பெருமான் பற்பல முறைகளில் சென்று அநேக நாள்வரை தன்னந்தனியே க'ல்வத் தென்னும் யோகசமாதி யுள்ளே ஆழ்ந்து, அல்லும் பகலும் 'தஹன்னு தென்னும் அகோர தவம்புரிந்து வருவார்கள். ஆங்கிருந்தபடியே தாங்கள் இப் பிரபஞ்ச கர்த்தாவுடனே ஐக்கியத்தொடர்பை ஏற்படுத்திக் கொள்ளப் பலவாற்று னும் வணக்கம் புரிவது வழக்கம். 'ஹிராவின் குகையிலிருந்து திரும்பி வாராமல், அங்கிருந்தபடியே அல்லும் பகலும் அனவரதமும் ஆண்டவனை நாடி அரியவணக்கம் புரியுங்கால், இடையில் சுணக்கம் உண்டாகா திருக்கும் பொருட்டுக் கைவயமாகக் காக் கென்னும் ஒருவகை ரொட்டியைச் சுட்டுக்

கொண்டு சென்று வைத்துக்கொண்டு, அவ்வுலர்ந்த ரொட்டியையே புசித்துக் காலந் தள்ளுவார்கள். அது முடிந்தவுடனே வீட்டுக்குத் திரும்பி வருவார்கள். எம்பெருமானுக்கோ இவ்வுலக சம்பந்தம் அநேகம் இருந்து வந்தன: வர்த்தகம் செய்ய வேண்டியதாயு மிருந்தது; அநேகம் பிள்ளைகளும் இருந்தனர்; வியாபாரத்தின் பொருட்டு வெளி நாடு செல்ல வேண்டியதாயு மிருந்தது. ஆனால், இவர்களைக்கொண்டு ஏகப்பெரியோன் எப்பணியைச் செய்ய நாடியிருந்தானோ, அஃதே அக்காரியங்க ளெல்லாவற்றையுங் காட்டில் மிகமிக மேலானதா யிருந்துவந்தது. எனவே, நாயகமவர்களுக்கு (சல்) இவ்வுலக சம்பந்தமான எல்லாக் காரியங்களும் சர்வ சாமான்யமாகவே தோன்றின. என்றாலும், நபிகள்பிரான் (சல்) அவர்கள் தேடிக்கொண்டிருக்கும் உண்மையான "பரம்பொருள்" மாத்திரம் எங்குளதென்பதைக் கண்டுகொள்ளக் கூடவில்லை. இவர்கள் செய்துகொண்டிருந்த வணக்கத்தை எவ்வாறு எம் வாயால் விரித்துரைத்தல் சாலும்! இதனால்தான் எதிர் மதவாதியான கார்லைல் என்னும் கிறிஸ்தவ சரித்திராசிரியர் பின்வருமாறு வரைந்திருக்கின்றார்: "ஊரில் தங்கியிருக்கும் போதும் பிரயாணத்தி லிருக்கும்போதும் மு'ஹம்மது'டைய மனத்தினுள்ளே ஆயிரக்கணக்கான கேள்விகள் உண்டாய்க்கொண் டிருக்கும். 'நான் யார்? முடிவற்ற இவ்வுலகமென்ப தென்ன? நபித்துவ மென்பது யாது? யான் எவ்வஸ்துக்களை நம்ப வேண்டும்?' இவைகளுக் கெல்லாம் 'ஹிராக்குகையின் கொடுமுடிகளோ, ஃதளரென்னும் மலைமீதுள்ள வானமளாவிய உச்சஸ்தானச் சிகரங்களோ, பரந்த வெட்டவெளி மைதானங்களோ விளக்கிக்காட்டி விடை கொடுப்பனவா யிருந்தனவா வென்றால், இல்லை யென்றேதான் விடை கிடைக்கும். இதுமட்டுமா? மு'ஹம்மத்' அவர்கள் மனத்தில் தோன்றிய இவ்வெழுச்சிகளுக் கெல்லாம் சுழன்று திரிந்துகொண் டிருக்கும் வான மண்டலங்களும், மாறிமாறி வந்துகொண் டிருக்கும் இராப்பகலும், பிரகாசித்துக்கொண்டிருக்கும் மினுமினு நக்ஷத்திரங்களும், மழையைப் பொழியும் மேகங்களும், இவைபோன்ற வேறெந்த வஸ்துவும் அவைகளுக்கு விடையளிக்கக் கூடவில்லை."

இவ்வாறு மு'ஹம்மத்'நபியவர்கள்(சல்) அல்லும்பகலும் அகோர தவம் புரிந்து வந்தக்கால், ஆங்கு அவர்களைச் சூழ்ந்து நின்ற கற்பாறைகளும், குன்றுகளும், புற்பூண்டுகளும், மற்றுமுள்ள செடிகொடிகளும் ஆண்டவனுடைய திருநாமத்தையே பஜிப்பனவேபோல் காணப்பட்டன. அக்காலங்களி லெல்லாம் நபிகள் பெருமானாருக்குக் கனவிலும் நனவிலும் மெய்யான உவமதரிசனங்கள் (ரூயா—மனும்) தோன்றிக்கொண் டிருந்தன; அசரீர வாக்குக்களும் அடிக்கடி கேட்டுக்கொண் டிருக்கும். அப்பொழுது அவர்களுக்கு வயது நாற்பதென்று நாம் முன்னமே தெரிந்துகொண் டிருக்கிறோம். இவ்வாறு நடந்துகொண்டு வருங்காலை, கி. பி. 609-ஆம் ஆண்டில் நிகழ்வுற்ற ரமல'ான் மாதத்தின் 25-ஆவது, அல்லது, 27-ஆவது,

அல்லது 29-ஆவது இரவிலேதான் இவ்வுலக மன்பதைகளின் ஈடேற்றத்தின் பொருட்டு ஆண்டவனால் அருளப்பட்ட முதன்முதலான ஞான விகாசம் அவர்களுக்கு அறிவிக்கப்பட்டது. "உள்பொருள் இதுவென உணர்தல் ஞானமாம், தெள்ளிதின் அப்பொருள் தெளிதல் காட்சியாம்," என்றார் "சிந்தாமணி"க் குடையாரும்.

இவர்களுக்கு முன்வந்த மூஸாநபி ஈ'ஸாநபி முதலிய நபிமார்களும் தன்னந் தனியே சென்று அருந்தவம் புரிந்து பெரிய நோன்பு நோற்ற பிறகே அவர்களுக்கும் ஆண்டவ னிடத்திலிருந்து அரிய வ'ஹீ (ஞான விகாசம்) வெளியாகத் தொடங்கிற்று; அவ்வாறு நம்பெருமானாரவர்களுக்கும் ரமலா'ன் மாத 27-ஆந் தேதி யன்றிரவு 'புர்:கானுல் மஜீதெ'ன்னும் :குர்ஆன் ஷரீ'ப் வெளிப்படத் தலைப்பட்டது. அந்த இரவை "லைலதுல் :கத்ர்"—(மாட்சிமை தங்கிய இரவு) என்று எமது வேதமே அறைந்திருக்கின்றது. அதுபொழுது வெளியாக்கப்பட்ட திருவாக்கியங்கள் :குர்ஆன் ஷரீ'பின் 96-ஆவது அத்தியாயத்தி லுள்ள முதலைந்து ஆயாத்களே யாகும்.— இவ்வதிகாரத் தலைப்பிலே பொறிக்கப் பட்டிருப்பவை.

[நபிகள் பெருமானார் (சல்) வழக்கமாக ரமலா'ன் மாதத்திலேதான் 'ஹிராக் குகையுள் அருந்தவம் புரிவதென்று இப்'னு ஹிஷாம், இப்'னு அதீர், அபு'ல் 'பிதா' முதலியோர் அறைந்திருக்கின்றனர். ஆனால், அது ரஜப்' மாதமென்று 'தப்'ரீ மட்டும் எழுதுகின்றார். ஆனால், பெரும்பான்மையோரின் அபிப்பிராயப் பிரகாரம் ரமலா'ன் மாதத்தின் 27-ஆக் தேதி யன்றிரவு என்பதுதான் அந்த முதல் வ'ஹீ இறங்கிய மாட்சிமை தங்கிய இரவாக இம்முஸ்லிம் உலகுமுழுதிலும் கருதப்பட்டு வருகின்றது. அது கி. பி. 611, ஜனவரி, 17-ஆந் தேதியென்றும் வேறுசிலர் கணக்கிட்டிருக்கின்றனர்.]

மேற் கூறியவாறு 'ஹிராவின் குகையிலிருந்து "'த'ஹன்னு"தென்று கூறப்படும் அரிய இ'ப'ாத'த்தை நம்பெருமானா ரவர்கள் செய்து கொண்டு வருங்காலை அந்த ரமலா'ன் மாதம் 27-ஆந் தேதி திங்கட்கிழமை யன்றிரவு அவர்கள் தங்களுக்கு வழக்கமாயுள்ள முஷாஹத'ா, முரா:கப'ா என்னும் இருவகைப் பழக்கங்களுள் "பிரபஞ்சத்தைப் பற்றியும், பிரபஞ்ச கர்த்தாவைப் பற்றியும் ஆழச் சிந்தனை புரித"லென்னும் "முரா:கப'ா" என்னும் நிலைமையி லாழ்ந்து தங்களையே மறந்து தியானம் செய்து யோக சமாதியில் மூழ்கியிருந்த வேளையிலேதான் அந்த உயரிய "வான ஜோதி" உதயமாயிற்று. ஆங்கு அந் நிலையில் தோன்றிய நாமூஸெ அஃ'ள'ம் (உயரிய வானவர் ஜிப்'ரீல்) நபிகள் திலகமவர்களை நோக்கி, இ:க்ரஃ— "ஓதுவீராக!" என்று ஏவினார்; அதைக் கேட்டவுடனே நபிகள் பெருமானார், "யான் ஓதக்கூடியவ னல்லனே!" என்று விடை பகர்ந்தார்கள். அப்பொழுது அந்த "நாமூஸுல் அக்ப'ர்" அவர்களை இறுகத் தழுவினார்; மறுபடியும் ஓதச் சொன்னார். மறுபடியும், "யான் ஓதக்கூடியவ னல்லனே!"

என்றார்கள்; மறுபடியும் மூன்று முறையாக அவ் வானவர் இறுகத் தழுவினார். இவ்வாறு மூன்று முறை ஆயின தன்பின்னே ஆகாயத்திலிருந்து வந்த ஜிப்'ரீலானவர் இந்த ஐந்து ஆயாத்களையும் ஓதினார். அவை யாவெனின் :—

"1. (நீர்) ஓதுவீராக! படைத்த உம்முடைய றப்'பின் திருநாமத்தைக் கொண்டு. 2. (அவன்) மனிதனை உதிரக் கட்டியினின்று படைத்தான். 3. (நீர்) ஓதுவீராக! இன்னம், உம்முடைய றப்' மகா கண்ணியமுள்ளவனாயிருக்கிறான். (4) எழுதுகோலைக் கொண்டு (எழுதக்) கற்பித்தவன்; 5. மனிதனுக்கு அவனறியா திருந்ததை (அறியக்) கற்பித்தவன்,"— (:குர். 96 : 1—5) என்பனவாம்.*

அக்கணமே ஆண்டவனுடைய இத் திருவாக்கியங்களைந்தும் நபி பெருமானாரின் ஹிருதயத்துள்ளே கன்மேலெழுத்துப் போலே நன்கு பதிந்துவிட்டன; அப்பொழுதே ஆங்குத் தோன்றிய ஜிப்'ரீலும் மறைந்து விட்டார். பிறகு நம் ரஸூல் நாயகமவர்களுக்கு உரோமம் சிலிர்த்தது; வியர்வை நீர் துளித்தது. உள்ளத்தின் கண்ணே ஒருவகைப் புதிய உணர்ச்சியும் எழுவதாயிற்று. இவ்வாறு ஆண்டவனிடத் திருந்து ஜிப்'ரீல் (அலை) என்னும் நாமூஸின் வாயிலாக வெளியாக்கப்பட்ட ஞானப்பிரகாசத்தை நம் முஸ்லிம்கள் வ'ஹீ என்று கூறுவர்; இத்தகைய வ'ஹீயின் வாயிலாக அருளப்பட்டதுதான் :குர்ஆன் ஷரீஃபென்னும் எமது 'புர்:கானுல் மஜீத்'ாகிய சுத்தசத்திய சம்பூர்ண வேதமெனப் படுவது.†



இக்ரவ் இறங்கியவிடம்

நபிகள்பெருமானார்(சல்) முதலில்தங்களுக்குப் படிக்கத்தெரியாதென்று கூறியும், சிருஷ்டி கர்த்தாவின் திருநாமத்தைக் கொண்டு வாசிக்கச் சொன்னார் அந்த வானவர்; இதனால் வெற்றி— கண்ணியம்— கிடைத்தது. இக் காரணம் பற்றியே, "கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு மாடல்ல மற்றை யவை" என்றார் குறளுடைப் பெரியாரும். எனவே, நபிகள்திலகம் அவர்கட்கு இனி எப்பொழுதேனும் எவ்விஷயத்திலேனும் இடையூறேற்படுமாயின், அப்பொழுது ஆண்டவன் பெயரைக் கொண்டே அவர்கள் அதினின்றும் வெற்றி பெறுதல் சாலு மென்னும் இரகசியத்தையும் நன்குணர்ந்து கொள்ளுகிறோம். இன்னமும், இந்த நபியவர்கள் மூலமாக

* இவ்வைந்து ஆயாத்களே ஆதியில் அருளப்பட்டன. ஆதியில் வ'ஹீ வந்த விருத்தாந்த விவரத்தை எமது (தமிழ்) ச'ஹீ'ஹு பு'கா'ரீயில் விளக்கமாய்க் காணலாம்.

† நமது சத்தியத் திருமறை சிறிதுசிறிதாக 23 ஆண்டுகளில் 6350 ஆயாத்துகளுடனே, 114 அத்தியாயங்களில் பூர்த்தியாயிற்று.

இவ் வுலகினுக்கு எத்துணைப் பெரிய கல்விநலன் விளையப் போகின்ற தென்னும் சூக்ஷுமமும் மேற் கூறிய திருவாக்கியங்களில் சுட்டிக் காட்டப் பட் டிருக்கின்றது. எழுதுகோலின் வன்மை இத்தன்மைத் தென்பதை இறைவனே இவ்வாறு வர்ணித்துள்ளான்; பிறகு எம் முஸ்லிம்கள் இவ் விகலோகக் கல்விவிஷயத்திலும் பரலோகப் பாரமார்த்திக விஷயத்திலும் என்னென்னவெல்லாம் இதுகாறும் செய்திருக்கின்றன ரென்பது சரித்திர முணர்ந்த ஒரு மறுக்கொணு உண்மையே யாகும்.

வெண்பா

"எழுத்தறியத் தீரும் இழிதகைமை தீர்ந்தால்
மொழித்திறத்தின் முட்டறுத்தா ஞகும்— மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்."

"கற்பக் கழிமடம் அஃகும் மடம்அஃகக்
குற்றந்தீர்ந் திவ்வுலகில் கோளுணரும்— கோளுணர்ந்தால்
தத்துவமாய நெறிபடரும் அந்நெறிதான்
இப்பால் உலகத் திசைநிறீஇ உப்பால்
உயர்ந்த உலகம் தரும்."

இப்பாருலகு முழுதையும் சீர்திருத்துவ தென்னும் அத்துணைப் பெரிய சுமையும் அந்தத் திங்கட்கிழமை "லைல·துல் :கத்'ர்" என்னும் மாட்சிமை தங்கிய இரவிலே நம்பெருமானார் மு'ஹம்மத்' முஸ்த'பா ரஸூல் (சல்) அவர்களது தோள்மீது ஆண்டவனுல் சுமத்தப்பட்டது. சென்ற பதினைந்து ஆண்டுகளாகத் தேடிக்கொண்டிருந்த அந்தச் சுத்தசத்திய சன்மார்க்க மென்பது இப்பொழுதுதான் இறுதியாக வெளிப்படத் தலைப்பட்டது; இவ்வுலக மன்பதைகளைச் சீர்திருத்தற்கு வேண்டிய ஞானஜோதி யென்பது இதுபோது வெளியாய் விட்டது. அதே சமயத்தில் இத்துணைப் பெரிய வேலைக்குரிய மஹா ஜவாப்தாரித்தனம் இன்னதென்பதும் அவர்களுக்கு அறிவிக்கப்படாம லில்லை. மனிதன் தனக்குரிய இயற்கைத் தன்மையிலே தன்னுடைய மனைவி மக்களையும், மற்றுமுள்ள உற்ருர் உறவினர்களையும் தாங்கக்கூடிய சுமையையே மிகப் பளுவானதெனக் கண்டு ஓரோவமயம் திடுக்கிட்டுத் தவிக்க வேண்டியவ ஞய்விடுகிருன். உண்மை இவ்வாறிருக்க, உலகமக்க ளனைவரையும் உயரிய மார்க்கத்தளவிலே உய்த்துக் கொண்டு சென்று சேர்த்தற்குரிய அத்துணைப் பெரிய அரிய சுமையைச் சுமந்து கொண்டு, எல்லாருக்கும் இறுதிநபியாய் விளங்கிநிற்ப தென்பது ஒரு சர்வ சாதாரணமான காரியமென்ரு கருதுகின்றீர்கள்? இவ் வவனியில் காணப் படும் வேலைகளுள் ளெல்லாம் மனித சமூகத்தைச் சீர்திருத்துவ தென்பது தான் மகாசிரம முள்ள காரியமாய்க் காணப்படாநின்றது; எனவே,

இதிலேதான் எப்படிப்பட்ட தைரியசாலியும், புத்திசாலியும்கூட ஒருவேளை யில்லாவிடின் மற்றொரு வேளை மனச்சோர் வடைந்து தளர்வுற்று விடுகிறான்; எப்படிப்பட்ட கல்விமான்களும் இந்தச் சமூக சீர்திருத்த வேலையைக் கண்டுதான் பெருந்திகில் கொள்வது வழக்கம். என்னெனின், சரியே யாயினும், அஃதன்றே யாயினும், மாக்களுள் நெடுங்காலப் பழக்க வழக்க மென்பதொன்று குடிகொண்டு விடுமாயின், அதனை அப்புறப் படுத்திப் பகுத்தறிவின் பக்கல் திருப்பிக் கொண்டு வருவ தென்பது அத்துணை யெளிய காரியமாகப் புலப்பட வில்லை.* எனவே, மத சமூக சீர்திருத்த மென்பது, மிகமிகப் பெரிய முட்டுக்கட்டைகளையும், மாபெரும் எதிர்ப்பிரசார அலைகளையும் மிக்க பொறுமையுடனும் அதிக சாந்தத் துடனுமே நிதானமாய்த் தாண்டிச் செல்வதா யிருக்கிறது.

மூஸா நபி அவர்களுக்குத் தங்களுக்குரிய ப்னீ இஸ்ராயீல் வர்க்கத் தினரை மட்டும் (உத்தேசமாக ஆறிலக்ஷம் பேர்கள்) சீர்திருத்த வேண்டிய வேலையும், அவ் வர்க்கத்தினரை மிஸ்ரினின்று மீட்டுக்கொண்டு சின்ன ஆசியாவுக்குச் சென்றுவிட வேண்டுமென்னும் கடமையுமே ஆண்டவனால் ஆணையிடப்பட்டிருந்தன; அவ்வா றிருந்தும், அவர்கள் அத்துணைச் சிறிய கடமையைச் சுயமே சுமக்கத் துணியுமுன், "என் குடும்பத்திலிருந்து எனக் கோர் உதவியாளரைத் தந்தருளல் வேண்டும்"— (:குர். 20 : 29) என்று இறைவனிடம் மன்றாடிக் கேட்டார்கள். மஸீ'ஹ் (அ'லை) அவர்களுக்கோ, மார்க்கப்பிரசாரம் மாத்திரம் செய்ய வேண்டுமென்று ஆண்டவனால் ஆணை யிடப்பட் டிருந்தது. ஆனால், அதிலேனும் அன்னவர் வெற்றி பெற்று விளங்கினரா? என்பதுதான் எமது வினா. ஈ'ஸா நபி எடுத்த காரியத்தி லெல்லாம் தோல்வியுற்று, இறுதியிலே (சுவிசேஷப் பிரகாரம்) "என் தேவனே! என் தேவனே! ஏன் என்னைக் கைவிட்டீர்?" என்று அலறிக் கொண்டே சிலுவையில் உயிர் துறந்தார். ஆனால், இவ்வுலக முழுவதுமே ஆழமறியா அதல பாதலத்துள் ஆழ்ந்து தாழ்ந்து மூழ்கிப்போய்க் கிடந்தக் கால், ஈங்குள்ள மன்பதைக் கெல்லாம், எல்லாத் தேயத்துக்கும், எல்லா ஜாதியாருக்கும், எல்லாக் காலத்துக்குமே பொதுவான இறுதிச் சீர்திருத்தக் காரராக ஒருவர் அமர்ந்து விடுவதென்பது எத்துணைப்பெரிய கடுஞ்சுமை யாய்க் காணப்படுதல் கூடுமென்பதை நீங்களே சற்று நிதானித்துப் பார்த் துக்கொள்ளக் கடவீர்களாக. அவ்வாறிருந்தும், நம் பெருமானா ரவர்கள் எவரையும் அதுசமயம் ஆண்டவன்பால் துணைக்குக் கூப்பிடவில்லை; ஒரு வினாடியேனும் நம் மஹானுபாவர் தங்கள் கடமையைக் கண்டு மனந் துணுக் குற்றதே யில்லை. அல்லா(ஹ்)வின்மீது வைத்துள்ள ஆணித்தர மான நன்னம்பிக்கையால் அவர்கள் தன்னந்தனியே அத்துணைப் பெரிய ஜவாப்தாரித் தனத்தையும் ஆரம்பத்திலேயே சற்றும் மனந்துளங்காது

* Man is a conservative animal என்பது ஒரு மறுக்கமுடியாத உண்மையே யாகும்.

சந்தோஷத்துடனே தமியராய்நின்று ஏற்றுக்கொண்டார்கள். இதற்கென்று இவர்கள் வேறெந்த மனித சகாயத்தையும் அதுபொழுது ஆண்டவன் மாட்டு எதிர்பார்த்து நிற்கவில்லை.

ஆனால், ஆண்டவனது வ'ஹீ யென்பதும், தெய்வசகாய மென்பதும் மனிதனால் கணித்துரைக்க முடியாத ஒருவகை ஆத்மசக்தியைக் கொடுக்கத் தக்க வல்லதாய் அமைந்திருக்கின்றது. இதன் தன்மை இவ்வாறிருக்கு மென்று வேறு எவராலும் சற்றேனும் ஓர்ந்து கொள்வது சாலாது. என்னெனின், அல்லா(ஹ்)வின் வ'ஹீ யென்பது எல்லோருக்கும் ஒவ்வொரு நாளும் கிடைக்கக்கூடிய இகலோகப் பாக்கிய மன்று. வ'ஹீயைப் பெறுதற்குரியார் இவ்வுலக சம்பந்தத்தினின்றும் அதுசமயம் முற்றும் விடுபட்டிருத்தல் வேண்டும். வ'ஹீ வருங்காலத்தில் அன்னவரின் சரீர முழுதும் ஆண்டவனுடைய சக்தியினாலேயே பெரிதும் நிரப்பப்பட்டு விடுகின்றது. நபிகள் திலகமவர்கட்கு இத்தகைய வ'ஹீயைப் பெற்றுப்பெற்றுப் பழக்கம் ஏற்பட்டதன் பின்னரும், அது வருங்கால் அன்னவர்களின் சரீர முழுதும் வியர்வைநீரால் நனைந்து, அதிக கனமுள்ளதாகவும் ஆய்விடுமாம்; இதன் அனுபவத்தைக் குறித்து நபிபெருமானின் தோழர்களுள் ஒருவர் (ஸ'ஜைத்') கூறுகின்றார்: ஒரு சமயம் நபிகள் திலகத்துக்கு வ'ஹீ வந்தபோது, அவர்களுடைய தொடையானது அந்த ச'ஹாபி'யின் முழங்தாளின்மீது வைக்கப்பட்டிருந்தது. அப்பொழுது அந்தத் தொடையின் பளுவால் தமது முழங்தாள் நசுங்கிப் போய்விடு மென்று அந்த ஸ'ஜைத்' அச்சங் கொண்டு விட்டனராம். எனவே, எம் ரஸூல் நாயகமவர்கட்கு முதன்முதலில் அருளப்பட்ட வ'ஹீயினால் அவர்களுடைய தேகமும் மனமும் என்ன விதமா யிருந்திருக்கு மென்று எவரே எடுத்துரைக்க வல்லார்?

எனவே, எம்பிரானவர்கள் (சல்) உள்ளமும்உடலமும் அன்றிரவு அதிக நடுக்கங் கொண்டு, தங்கள் இல்லத்தை நோக்கித் திரும்பினார்கள்; மேனி முழுதும் ஒருவகைக் கம்பத்தால் நடுங்கிக்கொண் டிருந்தது. ஆண்டவனது ஆத்மார்த்த வ'ஹீயால் அவர்கள் வதனத்தின் தேஜஸும் வேறுவிதமாக மாறியிருந்தது. அல்லா(ஹ்)வின் நூர்—(ஜோதி) அவர்களுடைய அகத்தையும் புறத்தையும் அதிகம் பற்றிக்கொண்டு விட்டது. அக்கணமே அவர்கள் அதிதுரிதமாக வீடுசென்று படுத்துக் கொண்டு, தங்களுடைய தேகத்தை நன்குகப் போர்த்தி வைக்குமாறு பிரியமனைவியார் க'தீ'ஜா பிராட்டியாரிடம் வேண்டினார்கள். அதைக் கேட்டு, அப் பெருமாட்டியார் சிறிது கவலை கொண்டு, தம்முடைய ஆருயிர்த் தோழரவர்களைப் போர்வை கொண்டு போர்த்தி வைத்துவிட்டு, அருகினிலிருந்து ஆவலுடனே அவர்களைக் கவனித்து வந்தார்கள். சிறிது போழ்தைக்குள்ளே நபிகள் திலகத்தின் தேகநடுக்கமும், அதன் சார்பாய் விளைந்த மனத்திடுக்கமும் ஓருவாறு ஓழிந்ததன்பின், 'ஹிராவில் நிகழ்வுற்ற சம்பவ முழுதையும் தங்கள் அருமை க'தீ'ஜாவிடம் ஆதியோடந்தமாய்க் கூறினார்கள். அதனைக் கேட்டு, அம்

மாதரசியார் தம் பிராணநாதருக்கு ஆறுதன்மொழி கூறி, ஆண்டவன் அவர்களை ஒருபோதும் கைவிடமாட்டா னென்று உறுதி கூறினார்கள்: "ஒன்றுக்கும் அஞ்ச வேண்டுவ தின்று. அதிக சந்தோஷமா யிருங்கள்! ஆண்டவன் ஒருபோதும் தங்களைக் கைவிட மாட்டான். தாங்கள் கருணையுள்ளவர்கள்; சத்தியமே பேசுகிறவர்கள்; ஏழை எளியார்க் குதவுகின்றீர்கள்; பந்து மித்திரர்களையும், உற்றார் உறவினர்களையும் அன்புடனே ஆதரிக்கின்றீர்கள்; நற்கருமங்களுக்கு எப்பொழுதும் துணையாய் நிற்கின்றீர்கள். எனவே, எவன் கைவயம் என்னுயிர் இருக்கின்றதோ, அவன் சாக்ஷியாகத் தாங்கள் ஒரு தீர்க்கதரிசி (நபீ') என்பதில் கிஞ்சித்தும் சந்தேகமே யில்லை."

தாங்கு மெய்ப்பொருள் அறிவருள் குணந்தய விரக்கம்
நீங்கி டாதறம் பெருகிட வளர்க்குநன் னெறியீர்
ஓங்கு மாநிலத் திடத்துறை பகைவர்களா லுமக்குத்
தீங்கு றாதென உரைத்தனர் மடந்தையர் திலதம்,"— என்றார் உமறுப் புலவர்பெருமான்.

க'தீ'ஜாவின் பெரியதந்தை நௌ'பலின் மைந்தரான வர:கா என்பவர் பண்டைய வேதங்களாகிய தௌராத்திலும், இன்ஜீலிலும் அதிக ஆராய்ச்சி மிக்கவராய் விளங்கிவந்தார்; அவரினும் பெரிய ஆராய்ச்சிக்காரர் அது சமயம் அம்மக்கமா நகரின்கண் வாழ்ந்துவந்த தில்லை. அவர் மக்கமாவாசிகளின் விக்ரஹத் தொழும்பைக் கண்டு அதிகம் வெறுப்புற்று, இறுதியில் கிறிஸ்துமதத்திலே சேர்ந்திருந்தார்; அவர்தாம் முதன்முதலாக "பைபிள்" புத்தகத்தின் "பழைய ஏற்பாட்டி"னின்றும், "புதிய ஏற்பாட்டி"னின்றும் சிற்சில பகுதிகளை அரபுபாஷையில் மொழிபெயர்த்தவ ராவர். இவர் ஆங்குச் சென்றும் ஆத்மசாந்தி யடையாது, இயேசு கிறிஸ்துவால் பின் வருவா ரென்று முன்னறிவிக்கப் பட்டிருந்த 'பாரக'லீத்தின்— (தேற்றரவாளரின்) வருகையையே அதிக ஆவலுடன் எதிர்பார்த்த வண்ணமா யிருந்துகொண் டிருந்தார். அச் செய்தியை க'தீ'ஜா பெருமாட்டியும் அறியாம லில்லை. எனவே, இத்தகைய 'பாரக'லீத் அதிசமீபத்தில் அந்த அரப் ('பாரான்) நாட்டிலேயே திருவவதாரம் புரிவாரென்றும் அவர் எதிர் நோக்கிய வண்ணமா யிருந்துவந்தார். அவர் வயோதிகத்தால் தமது கண் பார்வையையும் இழந்திருந்தனர். ஆதலின், அன்னவர்பால் பீ'பீ' க'தீ'ஜா (ரலி') அவர்கள் நபிகள் பெருமானை(சல்) அழைத்துச் சென்று, நிகழ்ந்தவற்றைக் கூறினார்கள். ரஸூலுல்லா அவர்கட்கு வ'ஹீ வந்த விவரமுழுதையும் ஆதியோடந்தமாய்க் கேட்டுக்கொண்டிருந்த வர:கா பி'ன் நௌ'பல் ஆச்சரியமேலீட்டால், ":குத்'தூ'ஸுன்! :குத்'தூ'ஸுன்!! (பரிசுத்தம்! பரிசுத்தம்!!) நிச்சயமாக இவர்தாம் மூஸாவுக்கும் ஈ'ஸாவுக்கும் வ'ஹீ கொணர்ந்த நாமூஸுல் அக்பு'ர் என்பவ ராவர். மு'ஹம்மத்' (சல்) இவ்வுலகினில் ஒரு

பெரிய நபியாவார். இவர் இவ்விஷயத்தில் அதிக தைரியமா யிருத்தல் வேண்டும்," என்று கூறினர். இதன் பயனாக அக்கணமே க'தீ'ஜா நாயகியா ரவர்கள் நபிகள் பெருமான்மீது நன்னம்பிக்கை (ஈமான்) கொண்டு முதன் முதலில் இஸ்லாத்தைத் தழுவினார்கள்; எனவே, இம்மாது சிரோமணியே "முதல் முஸ்லிமா"வாவர்.* [அல்'ஹம்து' லில்லா(ஹ்)!]

யூத கிறிஸ்தவ வேத புத்தகங்களில் அதிகம் தேர்ச்சி பெற்றிருந்தும், வர:கா பி'ன் நௌ'பல் அவ்வேதங்களைக் கொண்டு தேறுதலடைய முடியாது, இயேசு கிறிஸ்துவால் வாக்களிக்கப் பட்டிருந்த அந்தத் "தேற்றரவாளரை"யே ('பாரக'லீத்தையே) அதிக ஆவலுடனே எதிர்பார்த்திருந்தவராதலின், அவர் மற்றொரு முறை 'முஹம்மத்' நபி அவர்களைத் தெருவீதியில் சந்தித்த போது, "எவனுடைய திருக்கரத்தில் வர:காவின் ஆவி யிருக்கின்றதோ, அவன்மீது சத்தியமாக! ஆண்டவன் இவ்வுலகினுக்கு உம்மை யொரு தீர்க்கதரிசியாகவே அனுப்பி வைத்துள்ளான். உம்மிடம் வந்தவர் அந்த நாமூஸுல் அக்ப'ரே யாவர். ஆனால், இவ்வுலக மாக்கள் உம்மை யொரு பொய்ய ரென்றே கூறுவர். உம்மை அளவற்ற துன்பத்திற் குள்ளாக்கி ஊரைவிட்டும் விரட்டியடிப்பர்," என்று கூறியதைக் கேட்டவுடனே, நபிகள் பெருமான் (சல்) ஆச்சரியங்கொண்டு, "ஊரை விட்டுமா என்னை ஓட்டுவர்?" என்று ஆவலுடனே வினவினார்கள். அதைக் கேட்டு வர:கா, "ஆம்! அவர்கள் உம்மை ஊரைவிட்டுத் துரத்துவார்கள்! உம்மைப் போன்ற உத்தமர்கள் இவ்வுலக மாக்களின் நன்மையின் பொருட்டு இத்தகைய சுத்தசத்திய சன்மார்க்கத்தைக் கொணர்ந்து கொடுத்தபோதெல்லாம் இவர்கள் அவர்களைச் சும்மா விட்டு விடுவதில்லை. எண்ணத் தொலையாத எல்லாவிதத் தொல்லைகளுக்கும் ஆளாக்குவார்கள். ஆ! உம்முடன் அவர்கள் யுத்தம் புரியும்போது நான்மட்டும் உயிரோ டிருப்பேனாயின், என்னுடைய பலமுழுதையும் உமக்காகவே செலவுசெய்து எதிரிகளுடனே சண்டைசெய்வேன்," என்று கூறிமுடித்தார்.† பிறகு அவ்வயோதிகர் நேத்திரப்பழு தடைந்தவ ராதலின், ரஸூலுல்லாவின் முன் நெற்றியில் முத்தமுமிட்டுச் சென்றார். முன்னம் சோர்வடைந்திருந்த நபி பெருமானின் உள்ளமும் இதனால் சற்றுத் தேறுதலடைந்தது. இக் காரணத்தினாலேயே வர:காவும் நபிகள் திலகத்தின் தோழர்களுள் ஒருவரெனவே மதிக்கப் படுகின்றார். ஆனால், இப்பெரியார் உயிருடனிருந்து ரஸூல் நாயகத்தின் மான்மிய மொன்றினையும் பிறகு பார்ப்பதற்கு அதிருஷ்ட மில்லாதவராகவே போய் விட்டார். என்னெனின், இவர் இச் சம்பவம் நடைபெற்று நெடுநாள் மட்டும் இம்மண்ணுலகில் உயிருடனே

---

* பெண்களின் உயர்வைப்பற்றிப் பெருமையாய்ப் பேசும் பிற மதத்தின ரெல்லாம் இப் பெருமையைப் பரிசீலனை செய்து பார்க்கட்டும்.

†இச் சம்பாஷணை முதல் சந்திப்பின்போதே நடைபெற்றதென்று "ச'ஹீ'ஹ் புக'ா'ரீ" சாற்றுகின்றது.

ஜீவித்திருக்க வில்லை; இதற்குச் சிறிது போழ்தைக்குப் பின்னர் அன்னவர் காலகதியால் தேக வியோகமாய்ப் போய்விட்டார். (அவரது ஆவி என்றும் சுகசாந்தி யடைவதாக!)

மேலே கூறியவாறு வர:கா பி'ன் நௌ'பல் தேறுதல் கூறி, ஆறுதல் செய்து வைத்ததன்பின் நபிகள் பெருமானு ரவர்கள் அதிக தைரியத்துடனே அல்லா(ஹ்)வின் வ'ஹீயின் உண்மையை ஓர்ந்துகொண் டிருந்தார்கள். சென்ற பதினைந்தாண்டுகளாக அவர்களுடைய உள்ளத்தின்கண் ஊன்றிக் கிடந்த தபோபல முழுதும் இப்பொழுது இந்த முதல்வ'ஹீ யென்னும் ஒரே யொரு பொறியால் பெருஞ்சோதியாகப் பற்றிக்கொண்டு வெளிக்கிளம்ப ஆயத்தமாய் விட்டது. ஜிப்'ரீல் (அலை) கொணர்ந்துகொடுத்த வ'ஹீயால் தாங்கள் இவ் வுலகினில் செய்து முடிக்கவேண்டிய காரியங்கள் மிகப் பல வென்றும், அவைமகா ஜவாப்தாரித்தனம் வாய்ந்தன வென்றும் நன்கு உணர்ந்துகொண்டு விட்டார்கள். இனி இவர்கள் ஏகாந்தமான குகைக்குள் ளிருந்தபடியே தன்னந்தனியராய்த் தவம் புரிந்துகொண்டிருப்பது மட்டும் கூடாது; இவர்கள் எழுந்துவந்து எல்லாருக்கும் அல்லா(ஹ்)வின் அரிய சத்தியத்தை இனி தெடுத்துப் போதித்தல் வேண்டும். "யான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்" என்பதே இனி எம்பெருமானின் மஹா வாக்கியமா யிருத்தல் வேண்டும். எனவே, இதனால் ஏற்படக்கூடிய கஷ்டநிஷ்டூரங்களை யெல்லாம் அதிகப் பொறுமையுடனே சகித்துக்கொள்ளத் துணிந்து விட்டார்கள்.

இவ்வாறு எண்ணிக்கொண்டே நபிகள் திலகமவர்கள் இரண்டாவது முறையாய் வெளிவரவேண்டிய வ'ஹீயை அதிகஆவலுடனே எதிர்நோக்கி யிருந்தார்கள். ஆனால், அந்த வ'ஹீ அப்பொழுதே வரவில்லை. 'ஹிராவில் அந்த முதல்வ'ஹீ ஜிப்'ரீலால் (அ'லை) லைலதுல் :கத்'ர் இரவில் கொண்டு வந்து கொடுக்கப்பட்டதன் பின்னே சிலகால மட்டும் மீண்டும் அந்த வானவர் அந்த ரஸூலிடம் வரவே யில்லை. இவ்வாறு வ'ஹீ வாராது நின்றிருந்த காலத்தை "'பித்ர(த்)துல் வ'ஹீ" என்று சரித்திராசிரியர்கள் கூறுகின்றார்கள். இத்தகைய 'பித்ர(த்)துல் வ'ஹீ எத்துணைக் காலமட்டும் நீடித்திருந்த தென்னும் விஷயத்தில் அபிப்பிராயபேதம் அதிகமா யிருந்து வருகின்றது. சிலர் இக்காலம் இரண்டுமுதல் மூன்று வருடம்வரை யென்று கூறுவர்; ஆனால் இ'ப்'னுஅ'ப்'பா'ஸ் (ரலி') அவர்கள் அந்த 'பித்ர(த்)துல் வ'ஹீ யென்பது ஒருசிறிது காலமே நிகழ்ந்ததென்று கூறியிருக்கின்றார்கள்; இவரது கூற்றுக்கே சரித்திர ஆதாரமும் காணக் கிடைக்கின்றது. 'பித்ர(த்)துல் வ'ஹீயின் போழ்து நம் ரஸூல் நாயகமவர்கள் மலையுச்சிகளுக்குச் சென்று, தங்களுக்கு வ'ஹீ வரவில்லையே யென்னுங் காரணத்தினால் மன முடைந்து, ஆங்கிருந்தபடியே தலைகீழாக வீழ்ந்து தங்களுயிரை மாய்த்துக் கொள்ளப் பலமுறையும் பிரயத்தனப் பட்டார்களாம். ஆனால், அச் சமயங்களில் நாமூஸுல் அக்'ப'ர் திடீரெனத் தோன்றி, "ஏ மு'ஹம்மத்'

நீர் உண்மையில் அல்லா(ஹ்)வின் நபியா யிருக்கின்றீர்!" என்று சொல் வார்கள்; அதைக் கேட்டதன் பிறகே நபிநாயகம் அவர்களின் மனம் சமா தானமடைந்து, சுகமே திரும்பி வருவார்கள், என்று ஒரு சிலரால் கட்டி விடப்பட் டிருக்கும் கதைக்கு யாதோர் ஆதாரமும் காணப்பட வில்லை.* என்னெனின், இத்தகைய விஷயமொன்றும் நம் நபிகள் நாயகத்தின் திரு வாய்மொழிகளில் காணப்படவே யில்லை; ஆனால், பிற்காலத்தில் தோன்றிய 'தாபி'யீ'யான ஜ'ஜாஹ்ரீதாம் இக்கதையைக் கூறியிருக்கின்றா ரல்லது, அவரது கூற்றுக்கு வேறெவ்வித ஆதாரமும் காணப்பட வில்லை.† இக் காரணத்தினாலேயே ஆராய்ச்சியாளர், அந்த மலைமீதிருந்து திருநபியவர்கள் வீழப் பிரயத்தனப் பட்டதாய்க் கூறப்படும் கதையை ஒதுக்கித் தள்ளி விடுகின்றனர். இந்த விஷயத்தை எடுத்துக்கொண்டே ஒருசில கிறிஸ்தவ சரித்திராசிரியர்கள், மு'ஹம்மது'ம் தற்கொலை புரிந்து கொள்ளலா மென்ற பாப எண்ணத்தைக் கைக்கொண்டவ ராகவே யிருந்தார் என்று எம்பிரான் மீது (சல்) ஒரு வீண்பழிச்சொல்லைச் சுமத்துகின்றனர்.

அதுவேயு மன்றி, இவ்வாறு தற்கொலை புரிந்துகொள்ள எண்ணங் கொள்வ தென்பது நம் நபிகள் திலகத்தின் இயற்கைக் குணத்திற்கே முற்றும் மாற்றமாய்க் காணப் படாநின்றது. சிறு பிராய முதற் கொண்டே அவர்களுடைய ஹிருதயமானது மன்பதைகளின் முன்னேற் றத்தின் மீதே பற்றுக்கொண் டிருந்தது. எனவே, இத்தகைய ஊழியத் துக்குரிய தக்கசமயம் வாய்ந்திருக்கும்போது, அவர்கள் மலையுச்சியிலிருந்து கீழே உருண்டுவீழ்ந்து தற்கொலை புரிந்துகொள்ள நாடினார்க ளென்பது எத்துணைப் பொருத்தமற்ற விஷயமாய்க் காணப்படுகிற தென்பதைத் தாங்களே சற்றுச் சிந்தித்துப் பார்த்துக்கொள்ளக் கடவீர்கள். ஆகலான், அந்த 'பித்ர(த்)துல் வ'ஹீயின்போழ்து அவர்கள் ஏதேனும் அசாதாரண மான காரியங்களைச் செய்திருப்பார்க ளாயின், அஃது, அவர்கள் முன்னை யைக் காட்டினும் அதிகமாக அந்தத் தனிப்பட்ட இடங்களுக்குச் சென்று முன்னினும் மிகவேகமாய்த் தவம்புரிந் திருத்தலே யாகும். இதனால் அவர்கள் அப்படிப்பட்ட தனியிடங்களுக்குச் சென்று தற்கொலை செய்து கொள்ளவே முயன்று திரிந்தார்களென்று யூகிப்பதென்பது எந்தப் பகுத்

* தாங்கள் இரண்டா முறையாக ஜிப்'ரீலைக் கண்டது அவர் இரண்டாவது வ'ஹீயைக் (:குர். 74 : 1—5) கொண்டுவந்த போதுதானென்று நபிகள் நாயகமே கூறியிருப்பதாய் "ச'ஹீ'ஹ் பு'க'ாரீ" சாக்ஷிபம் கூறுகின்றது. —(தமிழிலுள்ளது பார்க்க)

† அந்த ஜ'ஜாஹ்ரீயின் கூற்றை நம்பியே உமறுப் புலவரும் இவ்வாறு ஒரு கவி யாத்துளார் :—

" தனியவன் தூதெனச் சார்ந்து பூவிடை
நனிபெறும் புதுமைகள் நடத்தல் இலனெனின்
பனிவரை நின்று வீழ்ந்திடுதல் பண்பலால்
இனியிருப் பதுபழு தென்னுங் காலையில்."

இக் கவியும், இதனை அடுத்துள்ள இரு கவிகளும் ஆதார மற்றவையே.

தறிவு படைத்த மனிதனுக்கும் பொருத்தமா யிராதென்றே யாம் கருது கின்றேம். நபிகள் பெருமாஞ ரவர்கட்கு முதன் முதலான வ'ஹீ வருதற்கு நெடுங்கால முன்னரே அவர்கள் அப்படிப்பட்ட தனித்த இடங் களுக்குச் சென்று "தபஸ்" செய்வது வழக்கமா யிருந்துவந்தது. அவர்க ளுடைய மனமானது இயற்கையிலேயே அடிக்கடி தியான சமாதியுள் பதியக்கூடிய தன்மை வாய்ந்ததா யிருந்து வந்ததஞல், அவர்கள் அவ்வாறு தன்னந்தனியே ஊரைவிட்டு ஒருபுறமாக ஒதுங்கிச் சென்று விடுவார்கள். என்னெனின், தன்னந் தனியான ஏகாந்த ஸ்தலமே இத்தகைய மனப் பான்மை யுடையவர்கட்கு மிக்க பொருத்த முள்ளதாய்க் காணப்படும். ஆதலால், அவர்கள் மலையுச்சிக்குச் செல்வதெல்லாம் தற்கொலை புரிந்து கொள்வதற்காகத்தான் என்று முடிவுகட்டிவிடுவது அறியாத்தனமான ஒரு மகா விபரீதக் கூற்ருகவே காணப்படாநின்றது. முன்னேயைக் காட்டினும் இன்னமும் அதிகமாக இதுபொழுது அவர்கள் மனக்குழப்பத்துடனே—(அதிகமாகச் சொல்ல வேண்டுமாயின், இவ்வளவுதான் சொல்லலாம்) அங்குமிங்கும் அலைந்து திரிவார்க ளாயின், அதற்குத் தக்க காரணமும் இல்லாமற் போகவில்லை. அவர்கள் நெடுங் காலமாகத் தேடிக்கொண் டிருந்த தேவ ஜோதியானது ஒரு முறை வந்து உடனே நின்று விட்டமை யால், அவர்களுடைய மனக்கிலேசம் முன்பிருந்ததைக் காட்டினும் அதிக மாகவே யிருந்திருக்கு மென்பதில் சற்றும் சந்தேக மில்லை. வ'ஹீயின் அபிருசியை ஒருமுறை கண்டுகொண்டதன் பின்னுல் மீண்டும் மீண்டும் அதனையே அதிகம் பெறவேண்டு மென்னும் ஆர்வமானது முன்னினும் மிகவாகக் காணப்படுவது ஓர் இயற்கைச் சம்பவமே யன்ருே? இத்தகைய வ'ஹீயை இனியும் இரண்டாம் முறையாகப் பெறுதற் கென்றே அவர்கள் அடிக்கடி மலையடி வாரங்களுக்குச் சென்று விடுவார்கள். ஆனல், தற்கொலை செய்துகொள்ளும் பொருட்டு அங்ஙனம் ஏகாந்த ஸ்தலங்களுக்கு ஏகுவ தில்லை. என்னெனின், நபிகள் பெருமானின் பிற்கால வாழ்க்கை முறையெல்லாம் இத்தகைய ஊகத்துக்குச் சிறிதும் இடந்தர மாட்டா தென்பது திண்ணம். அவர்கள் நங் தீ'னுல் இஸ்லாத்தை வெளியில் பரத்தத் துணிந்தக்கால், எத்தனையோ விதமான எண்ணத் தொலையாத அபஜய மடைதற் குரிய நிகழ்ச்சிக ளெல்லாம் ஒன்றன்பின் ஒன்ருய்ப் பல ஆண்டுகள் மட்டும் நிகழ்ந்துகொண்டே வந்தன. வேறு சாமான்ய மக்கள் அதைரிய மிகுதியால் மனமுடைந்து முதுகுந் தளர்ந்து இடுப்பில்லாது கீழே வீழ்ந்துவிடக் கூடிய அத்தகைய மாகொடிய சம்பவங்கள் பலப்பல நேரிட்ட காலையிலும் நபிபெருமாஞ ரவர்கள் (சல்) ஆண்டவன்மாட்டு வைத்த தங்கள் ஆழ்ந்த நம்பிக்கையை அணுத்துணையும் தளர்த்தி விட்டதே யில்லை யென்பது சரித்திரங் கண்ட சான்ருகும். எத்துணைப் பெரிய பரம சங்கடங் களும் நெடிய இடையூறுகளும் நிகழ்வுற்ற காலங்களிலும் அவர்கள் தாங்கள் கொண்டுள்ள கர்மத்தின்மீது வைத்த கண்ணேக்கத்தை ஒரு சிறிதும் சறுகவிடுவது வழக்கமில்லை.

"எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவ மென்ப திழுக்கு."— குறள் ;

'மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்— செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணுயி னூர்."— நீதிநெறி விளக்கம்

என்னும் ஆன்றோர் மொழியின் இலக்ஷண முழுதும் அன்னவர் மாட்டே முற்றும்முற்றும் பொருத்தமாயே காணப்பட்டு வந்தது.

"அருமை யுடைத்தென்(று) அசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்."— குறள்.

இறுதியில் அந்த 'பித்ர(த்)துல் வ'ஹீயின் காலமும் ஒருவாறு ஒருசில மாதங்களிலே முடிவுற்றது. ஆனால், அக்குறுகிய காலமானது நம் அண்ணலவர்களுக்கு நெடியதொரு யுகமாகவே காணப்பட் டிருத்தல் கூடும். என்னெனின், அன்னவர்கள் தங்கள் உயிரினுமினிய ஆண்டவனது சல்லாபத்தைப் பெற அத்துணை அதிகமான ஆவலைக் கொண் டிருந்தார்கள். தாங்கள் பிரிந்திருப்பதற்குச் சற்றும் மனமிசையாத ஓர் அரியபொருளை விட்டுப் பலவந்தமாய் அப்புறப் படுத்தப்பட்டிருக்கும் அத்தகைய மாந்தருக்கே இத்தகைய பிரிவாற்றாமையின் கொடுமை இன்னதென்பது செவ்விதில் விளங்கக் கிடக்கும். இக் காரணத்தினாலேதான் அந்தக் காலம் மிக மிக நெடிய காலமாய்க் காணப்பட்ட தென்று சில சரித்திராசிரியர்கள் கூறுகின்றனர்கள். ஆனால், உண்மையிலே ஆண்டவனது அருள்விசாலத்தினாலேயே அத்தகைய 'பித்ர(த்)துல் வ'ஹீ யென்னும் காலம் ஒருசில மாதங்கள் மட்டும் நீடித்து வைக்கப்பட்டது. என்னெனின், முதலில் வந்த வ'ஹீயின் பயனாகவே நபிகள் நாயகத்தின் தேகாரோக்கியமும் மனோதைரியமும் எவ்வாறு பாதிக்கப்பட்டன வென்பதை நாமெல்லாரும் நன்கு தெரிந்துகொண்டுதா னிருக்கிறோம். ஆதலின், அவர்களுடைய சரீராரோக்கியத்தையும் மனப்பரிபக்குவத்தையும் உத்தேசித்தே அத்தகைய ஓய்வுக் காலம் ஏற்பட வேண்டுவது அத்தியாவசியமாகவே யிருந்ததென்பதில் கிஞ்சித்துஞ் சந்தேகமே யில்லை.

இவ்வாறு சுமார் ஆறுமாத காலம் கழிந்ததன்பின்னே அளிக்கப்பட்ட அந்த இரண்டாவது வ'ஹீயும் முன்போலவே ஒரு சிறிது அயர்ச்சியை உண்டுபண்ணிய போதினும், அத்துணைக் கடுமையா யில்லை யென்றே கூறலாம் :—

"ஏ ஆடைகொண்டு போர்த்துக்கொண் டிருப்பவரே! எழுந்து (சென்று) அப்பால், அச்சமூட்டி எச்சரிக்கை விடுப்பீராக! இன்னும், உம்முடைய ரக்ஷகனை மகிமைப் படுத்துவீராக! (வழக்கம்போல்) உம்முடைய

உடைகளையும் பரிசுத்தம் பண்ணிக்கொள்வீராக ! (ஏனையெல்லா) அசுத்தத்தையும் ஒழித்துவிடக் கடவீராக !"— (:குர். 74 : 1—5) *

இந்த வ'ஹீயைப் பெற்றபொழுதும் நபிகள்பெருமானார் (சல்) மீண்டும் க'தீ'ஜா நாயகியாரிடம் சென்று, (ஆனால், முன்போல அத்துணை மனப் படபடப்பும், மேனித் துடிதுடிப்பும் இப்பொழுது ஏற்படவில்லை) தங்களைப் போர்த்தி வைக்கச் சொன்னார்கள். எனினும், "ஏ ஆடைகொண்டு போர்த்துக்கொண் டிருப்பவரே ! எழுந்து (சென்று) அப்பால், அச்சமூட்டி எச்சரிக்கை விடுப்பீராக !" என்னும் இறைவன் கட்டளையைத் தலைமேற் சுமந்தவர்களாய், உலகமக்க ளனைவர்க்கும் அவ் வாண்டவனது அரிய சத்தியத்தை அறிவிக்கத் துணிந்துவிட்டார்கள். அன்றுமுதற் கொண்டு தான் நபிகள் பெருமான் இவ்வவனியில் தங்கள் இஸ்லாமிய பிரசாரத்தை ஆரம்பித்தார்கள் ; அன்றுமுதற் கொண்டுதான் அவர்களையும் எதிரிகள் அதிகம் துன்புறுத்தத் தலைப்பட்டார்கள். எனினும், இப் பிரசாரத்தை எம்பெருமானா ரவர்கள் முதன்முதலில் மூன்றுவருட காலம்வரை ஒருசிறிது மறைவாகவே செய்துகொண்டு வந்தார்கள்.

முதன்முதலாக நபிகள் நாதரின் நுபு'வ்வத்தில் களங்கமற்ற உறுதி கொண்டவர்கள் க'தீ'ஜா (ரலி') பிராட்டியா ரவர்களே யாவார்கள். தங்கள் பிராண நாதருக்கு அளிக்கப்பட் டிருப்பது ஆண்டவனருளிய நபிப்பட்டமென்பதில் அணுத்துணையும் அவர்களுக்கு ஐயப்பாடு உதித்தெழ வில்லை. நபிகள் திலகத்துக்கு மனக்கிலேசம் ஏற்படும்போ தெல்லாம் நாயகி க'தீ'ஜா பிராட்டியா ரவர்களே அன்னவர்களை ஆற்றித் தேற்றுவார்கள். பதினைந்து வருடங்களுக்கு முன்னரே, அவ்விருவரும் கணவன்—மனைவியா யில்லாது, தாமோர் எஜமாட்டியாகவும், அவரொரு கு'மாஷ்தாவாகவும் இருந்துவந்த போதே அவர்களுடைய உயரிய குணாதிசயம் இத்தன்மைத் தென்பதை இப்பெருமாட்டியார் மிகமிகச் செவ்வனே தெரிந்துகொண் டிருந்தார்கள். ஆகலின், அவர்களிருவரும் ஈருடலும் ஓருயிருமாய்ப் பிணைக்கப் பட்டதன் பின்னால் அப் பெருமாட்டியாருக்கு அவ் வேந்தலின் மாட்டுள்ள நம்பிக்கையானது நாளேற நாளேறத் தானே வளர்ந்தோங்கியேதான் வந்துகொண் டிருந்தது. முதல் வ'ஹீக்குப்பின் நபிகள்திலகம் சிறிது சோர்வுற் றிருந்த போது, அந்தப் பிராட்டியாரே அவர்களைப்பற்றித் தாங்க ளறிந்திருந்த யோக்கியதா பத்திரத்தை யளித்து, அவர்களைத் தேற்றினார்கள். நபிகள் பெருமானைப் போன்ற ஒருவரின் உயரிய உன்னத ஒழுக்கமும், தாராளமான தர்மசிந்தனையும் அவர்களை ஒருபோதும் துன்பத்திற் காளாக்க மாட்டா வென்று அந்த ஸ்ரீமாட்டியவர்களே உறுதிகூறினார்கள்.

---

* ஆரம்ப வ'ஹீயின்பொழுது 96–ஆவது ஸூராவின் முதலைந்து ஆயாத்கள் அருளப்பட்டன ; அடுத்த வ'ஹீயின்பொழுது 74-ஆவது ஸூராவின் முதலைந்து ஆயாத்கள் அருளப்பட்டன. அப்பால், குர்ஆன் ஆயாத்தெல்லாம் வேகமாகவும் விடாமலுமே வரத் துவக்கிக்கொண்டன,

அற்றை நாட்களில் நபிகள் பெருமானது உள்ளெண்ணத்தையும் அந்தரங்க நல்லொழுக்கத்தையும் அந்தப் பத்மினியாரல்லது, வேறு எவரே உள்ளவண்ணம் உணர்ந்திருத்தல் சாலும்? என்னெனின், இவ்வுலகினில் எந்தக் கணவனும் தன் மனைவிக்குத் தெரியாத மர்மமொன்றினையும் தன்னுள்ளே மறைத்து வைத்திருப்பது முடியாது; "தாய்க் கொளித்த சூலில்லை" என்று தமிழ் நாட்டினரும் ஒரு பழமொழி கூறுவர். இப்படிப் பட்ட நிலையில் அப்படிப்பட்ட கணவரே இவ்வுலக முன்னேற்றத்துக்குப் பாடுபடுதற் குரிய நுபு'வ்வத்தைப் பெறுதல் கூடுமென்றும் நம்பினர். ஆகலின், எம்பிரானின் நபிப்பட்டத்தின்மீது முதன் முதலாக நன்னம்பிக்கை கொண்டதோடு மட்டும் நில்லாது, அவர்களுடைய பிரசாரத்தின்போது எதிரிகளால் விளைக்கப்பட்ட துன்பங்களிலெல்லாமும் அதிகம் பங்கெடுத்து வந்தார்கள். "எம்பிரான் இல்லத்துக் கேகுங்கால், அந்த க'தீ'ஜா நாயகியார் மூலமாகவே ஆண்டவன் அவர்கட்கு ஆறுதலளித்தான். என்னெனின், தங்களுக்கு அவர்கள்மீதுள்ள நன்னம்பிக்கையை மீண்டும் அம்மாது உறுதிப்படுத்தி, மற்ற மனிதர்கள் கூறுவதெல்லாம் வீண்பிதற்ற லென்று விளக்கிக்காட்டி, அப் பெருமானாரின் மனக் கிளர்ச்சியைத் தூண்டிவிட்டு, அவர்களுடைய மனத்தின்கண் மிகுந்துகிடக்கும் பளுவைக் குறைப் பார்கள்."

அரப்நாடு முழுதும் அந்தகாரத் துள்ளே ஆழ்ந்து தாழ்ந்து கிடந்து, அக்கால அரபிகள் அநேக நூற்றுக்கணக்கான மனைவியரையும் "வைப்புக் களை"யும் வைத்துக் கொண்டிருந்தக்கால், நம் பெருமானார் மட்டும் தங்கள் 25 பிராய மட்டும் வேறு தவறிய ஒழுக்கத்தி லிறங்காது, தங்களினும் 15 பிராயம் முதிர்ந்த விதவையையே மணம் புரிந்துகொண்டு, அன்றுமுதல் சென்ற 15 ஆண்டுகளாகத் தங்களுக்குரிய குடும்ப வியவகாரத்தில் மிக்க நெறியுடனே ஒழுகி வந்ததைக் கண்ட பின்னரும் அன்னவரின் சத்திய சன்மார்க்க சீலத்தில் அப் பிராட்டியாருக்கு என்னவிதமான சந்தேகம் ஜனித்திடுதல் சாலுமென் றெண்ணுகின்றீர்கள்?

பீ'பீ' க'தீ'ஜா பிராட்டியா ரவர்களுக்கு அடுத்தபடியாக வர:கா பி'ன் நௌ'பல் என்னும் பெரியாரே ரஸூலுல்லாவின் நுபு'வ்வத்தில் விசுவாசம் கொண்டவ ராவார். இவர், ரஸூல் நாயகமவர்கள் தீ'னுல் இஸ்லாத்தை வெளியுலகினில் போதிக்குமாறு கட்டளையிடப் பட்டதற்கு முன்னே 'பித்ர(த்)துல் வ'ஹீயின் காலத்திலேயே காலஞ்சென்று போய்விட்டார். ஆகவே, அப்பெரியார் ரஸூலுல்லாவின் மதப்பிரசாரம் ஆரம்பிக்கு முன்னரே தேகவியோக மாய்ப்போய் விட்டாரென்று அறிந்து கொள்கின்றோ மாயினும், அதற்குமுன் நபிகள் பெருமானுக்கும் அவருக்கு மிடையில் நடந்திருந்த சம்பாஷணையி லிருந்து அப்பெரியார் இப் பெருமானை "வாக்களிக்கப்பட் டிருந்த இறுதித் தீர்க்கதரிசி" யென்பதைச் சந்தேகமற ஒத்துக்கொண்டு விட்டாரென்பதைமட்டும் மிகச் செவ்விதாக

நாம் தெரிந்து கொள்ளுகிறோம். ஆகலின், இப் பெரியாரையும் ஆதியில் தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவிய மஹான்களுள் ஒருவராக எண்ணுவதில் ஒன்றும் ஆக்ஷேபமில்லை யென்றே பேராசிரியர்கள் பலர் அபிப்பிராயங் கூறியிருக்கின்றன ரென்று நாம் நன்கு தெரிந்துகொள்ளுகிறோம்.

அதற்குப் பின்னே இஸ்லாத்தைத் தழுவிய பெரியார், அப்பொழுது எட்டு வயதையே* யடைந்திருந்த ('ஹ'ஜ்ரத்) அ'லீ என்னும் சிறுப் பெரியாரே யாவர். நபிகளுத‌ரின் பெரிய தந்தையான அபூ'த்தாலிப்' அவர்களின் குமாரரான 'ஹ'ஜ்ரத் அ'லீ அவர்கள் அநேகமாகத் தங்கள் சிறு பிராய முதற்கொண்டே நபிகள் நாதரிடமே யிருந்து வளர்ந்து வந்தார்கள்; நபிகள் பெருமானே இச்சிறுவரைத் தங்கள் கருணையின்கீழே கொண்டு வந்து பராமரித்து வந்தார்கள். இம்மட்டும் அப் பெரியாரின் உண்மையை உணர்ந்திருந்த இச்சிறியார் நந் தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவுவதற்குச் சற்றும் பின்வாங்கினு ரில்லை.

அதன் பின்பு நபிகள் நாயகமும் 'ஹ'ஜ்ரத் அ'லீ(ரலி') அவர்களும் மக்காவைச் சூழ்ந்துள்ள தனியான நெடும் பாலைவனங்களுக்குச் சென்று, ஆங்கு எல்லாம்வல்ல இறைவன் தங்களுக் களித்துள்ள கிருபா கடாக்ஷத்தை யுன்னியுன்னி அடிக்கடி அவ் ஏகவல்லவனுக்குத் துதிசெலுத்திக் கொண்டேயிருப்பார்கள். அவ்வாறு தங்களுக்குரிய மனமார்ந்த நன்றியை ஸ்தோத்திர வாயிலாய்ச் செலுத்திக்கொண் டிருக்குங்கால், ஒருமுறை ஆங்குத் தற்செயலாய் வந்து சேர்ந்த அபூ'த்தாலிப்' அவர்களால் கண்டுகொள்ளப் பட்டார்கள். அதுபொழுது அப் பெரியார் நபிகள் பெருமானை விளித்து, "ஆ என் தம்பிக்குத் தனைய! நீர் பின்பற்றி யிருப்பது என்ன மார்க்கம்?" என்று ஆவலுடனே வினவினர். அதற்கு நம் பெருமானு ரவர்கள், "இது தான் அல்லா(ஹ்)வுக்கும், அவனுடைய தேவதூதர்களுக்கும், அவனுடைய மனித தூதர்களுக்கும், நம் மூதாதையரான இப்'ராஹீம் நபி அவர்களுக்கும் உரிய மார்க்கமாகும். ஆண்டவன் தன்னுடைய அடியார்களைச் சத்தியத்தின் பக்கல் அழைக்கும் பொருட்டே என்னை அன்னவர்பால் அனுப்பியுள்ளான். என்னரும் பெரிய தந்தாய்! தாங்களே மற்றெல்லோரைக் காட்டினும் மேம்பட்டு விளங்குகின்றீர்கள். ஆதலின், தங்களையும் இச்சத்திய சன்மார்க்கத்தின் பக்கலிலே யான் அழைக்கின்றேன். எனவே, தாங்கள் இவ்வுண்மையை ஏற்றுக்கொண்டு, இதை நன்குபரத்தும் விஷயத்தில் தாங்களே நல்லுதவி புரியக் கடவீர்கள்," என்று விடையிறுத்து நின்றார்கள்.

அதனைக் கேட்டு அந்த அபூ'த்தாலிப்' என்பார் தம்முடைய குலமுறை வழக்கப் பிரகாரம், "என் தம்பியின் தனைய! என் பிதாமகர்களின் மார்க்கத்தை யான் கைவிடுவது இயலாது; நீரோ, நும்மார்க்கத்தை எவ்வித

* பத்து வயதென்றும் வேறுசிலர் கூறுநிற்பர்.

ஆக்ஷேபமு மின்றி அனுஷ்டித்துவரலாம். ஆனால், அந்த எல்லாம்வல்ல ஆண்டவன்மீது பிரமாணமாக! யான் உயிரோடு இருக்கு மட்டும் உம்மை ஒருவரும் துன்புறுத்தத் துணியார்," என்று ஆறுதன் மொழி கூறி விட்டுப் பிறகு தம் மைந்தரான அ'லீயை நோக்கி, அவரது மார்க்கம் யாதாயிருக்கிற தென்று வினவினார். அதைக் கேட்டவுடனே 'ஹ'ஜ்ரத் அ'லீ அவர்கள், "என்னரும் பிரிய தந்தாய்! யான் அல்லா(ஹ்)வின்மீதும், அவனுடைய திருத் தூதரின்மீதும் நன்னம்பிக்கை கொண்டுவிட்டேன்; இனி யான் இவருடனே தானே இருந்துவருவேன்," என்று விடைகொடுத்தார். அக்கணமே அபூ'த்தாலி ப்'வர்கள், "குழந்தாய்! நன்று! நன்று! இவர் நன்மையல்லாத மார்க்கத்தில் நின்னை அழைக்கத் துணியார்; ஆதலின், நீ நினது இஷ்டம்போலவே இவருடனே ஒன்றித்துவிடக் கடவாய்!" என்று தேற்றிச் சென்றார். இவ்வாறு அப் பாலைவனத்தில் நடைபெற்ற சம்பாஷணத்தின் போதும், அப்படிப்பட்ட மற்றக் காலங்களிலும் பீ'பீ' க'தீ'ஜா நாயகியா ரவர்களும் நபிகள் பெருமானுடனே உடன்செல்வ துண்டென்று சில சரித்திராசிரியர்கள் வரைந்திருக்கின்றனர். ஆனால், இதற்குத் தக்க ஆதாரம் இல்லை யென்றே வேறுபல பேராசிரியர்கள் மறுத்துக் கூறுகின்றனர்.

அதன் பின்னே ஹாரி:தாவின் குமாரராகிய ஜை'த்'ன்பார்— இவர் முன்னரே தமது அடிமைத் தளையினின்று விடுதலை பெற்றும், அந்த நபிகள் பெருமானுடனேயே ஒன்றித்திருந்தவர்— தீ'னுல் இஸ்லாத்தை மனமாரத் தழுவிக்கொண்டார். இவர் தம் பிதா அழைத்தபோதும் சொந்த ஊருக்குச் செல்லாது நபிபெருமானுடனேயே ஐக்கியமாய்விட்டார். அதன் பின்பு நந் தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவிய பெரியார் அபூ'ப'க்ர் சித்'தீ':க் அவர்களே யாவார்கள். இதுசமயம் அவர்கள் 40,000 திர்ஹம்— (சுமார் 10,000 ரூபாய்) ஐசுவரிய முடையவர்களா யிருந்தார்கள். இவர்கள் மக்காவிலுள்ள :குறைஷ் குலத்தின் தைம் இப்'னு முர்ரா வென்னும் கோத்திரத்தி லுதித்த ஒரு பெரியாராய் விளங்கிவந்தார்கள். இவருடைய தந்தையான அபூ'கு'ஹா'பா என்பார் தம்முடைய குமாரருக்கு ஆரம்பத்தில் "அ'ப்'து'ல் க'ஃ'ப'ா" என்று நாமகரணஞ் சூட்டியிருந்தார். இப்பெரியார் தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவியபின்னர் அப்பெயர் "அ'ப்'து'ல்லா" என்று திருத்தி யமைக்கப்பட்டது. இவர் பிறகு தம்முடைய திருக்குமாரியும் கன்னிகையு மாகிய பீ'பீ' ஆ'யிஷாவை நபிகள் நாதருக்கு மண முடித்துக் கொடுத்த காரணத்தினால் அத்தேயத்து மக்கள் அதன் பின்னே இவரை "அபூ' ப'க்ர்" (கன்னிகையின் தந்தை) என்று அழைக்கத் தொடங்கினார்கள்.* இவரது குடும்பம் அம் மக்காவின்கண் விளங்கிய ஒரு மேதை

---

* எதேச்சாப் பெண்மணிகளுள்ளே நபிபெருமான் திருமண முடித்த பிராட்டிமாருள் ளெல்லாம் 'ஹஜ்ரத் ஆ'யிஷா (ரலி') அவர்கள் மட்டுமே விதவையல்லாத கன்னிகையாயிருந்தார்கள் என்றறிக.

மரியாதைக்குரிய உயரிய கோத்திரமாய்க் காணப்பட்டு வந்தது. இவருக்கு எப்பொழுதுமே கல்வியில் அளவுகடந்த பிரிய முண்டு. கூரிய புத்தியும், விசால நோக்கு முடையவர். இவர் வாக்கு வன்மையுடன் நன்ருகப் பேசுந் திறன் வாய்ந்தவர்; எனவேதான், இவர் பிரசங்க வன்மையிலும் பேர் பெற்று விளங்கலாயினர். இவர் இஸ்லாத்தைத் தழுவுமுன் செய்யுளியற்று வதில் மிக்க பாண்டித்தியம் பெற்றிருந்தார். ஆனல், இந்த அபூ'ப'க்ர்(ரலி') என்பார் அதற்கு முன்னே எப்பொழுதும் மதுபானம் செய்தது மில்லை; விக்ரஹங்களின்முன் குப்புற்று வீழ்ந்து வணக்கம் புரிந்தது மில்லை.

இவர் நபிகள் நாதரைக் காட்டினும் இரண்டு ஆண்டுகளே இளமையா யிருந்தார். ஆதலின், இவ்விருவரும் பால்ய சினேகித ரென்பதில் எட்டுணை யும் ஐயமின்று. இவர் இஸ்லாத்தைத் தழுவுமுன் ஒருபெரிய புடைவைக் கடை வைத்திருந்த "ஜவுளி" வியாபாரியாய் விளங்கிவந்தார். அது காலைப் பெருஞ் செல்வத்துடனே அதிக யோக்கியமும் நுண்ணிய நல் லறிவும் குடிகொண்டவராய்க் காணப்பட்டார். எனவே, அத்தேய அரா பியர் தங்களுடைய பற்பல விதமான கலகங்களிலும் இவரிடமே வந்து நியாயம் தீர்த்துக்கொள்வார்கள்.

இத்தகைய பெரியார் பால்யமுதலே நபிகள் பெருமானை நன்குணர்ந் திருந்ததனல், ரஸுலுல்லாவின் நுபு'வ்வத்தைப் பற்றிக் கேள்வியுற்ற வுடனே அவர்கள்பால் சென்று, அவர்கள் உபதேசித்த தீ'னுல் இஸ் லாத்தை முழுமனத்துடனே ஏற்றுக் கொண்டார்கள். ஆனல், நபிகள் பெருமானருக்கு வானவர் ஜிப்'ரீல் வ'ஹீ கொண்டுவந்தபோது, 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் அவர்கள் வர்த்தகத்தி னிமித்தம் ஷாம் தேசத்துக்குச் சென்றிருந் தார்கள். ஆங்கிருந்து திரும்பி வந்தபோது, :குறைஷிகளில் சிலர் மக்கா வின் எல்லையிலே வந்து நின்று, அபூ'ப'க்ர் சித்'தீ':க் கவர்களைக் கண்டு, அவர்களிடம், "நாட்டில் குழப்பமாகவே யிருந்துவருகின்றது. அபூ'த் தாலிபி'ன் தம்பி மகனை அந்த அநாதமனிதன் தன்னையொரு நபியென்று கூறிக்கொண் டிருக்கிருன்!" என்று கூறினர்கள். அதனைச் செவியேற்ற வுடனே 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ரவர்கள், "அல் அமீன அப்படிச் சொன்னர் கள்! அவர்கள் அவ்வாறு சொல்லி யிருப்பார்க ளாயின், நிச்சயமாகவே அவர்கள் ஆண்டவனுடைய திருத்தூத ராகவேதான் இருக்கவேண்டும்!" என்று பதில் கூறினர்கள். "அவர்களைப் பாராமுன்னமே நான் அதனை ஒத்துக் கொள்கிறேன்," என்று மொழிந்துவிட்டு, முழுவிவரத்தையும் அறிதற்பொருட்டுப் பெருமான ரவர்களின் திருமுன்பிற்கு விரைந்துசென் ருர்கள். ஆங்குச் சென்றவுடனே நபிகள் திலகம், ஆண்டவனது திருச் சன்னிதானத்தி லிருந்து தங்களுக்கு அனுப்பி வைக்கப்பட்ட வ'ஹீயின் விவ ரத்தை விரித்தோதினர்கள். அக்கணமே 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ரவர்கள்(ரலி') "வணக்கத்துக் குரியவன் ஆண்டவன் ஒருவனைத் தவிர்த்து வேறெந்தத் தெய்வமும் இல்லை யென்றும், மு'ஹம்மத்' (நபியவர்கள்) அவனுடைய

அடியா ரென்றும் திருத்தூத ரென்றும் யான் அறுதியிட்டு உறுதிகூறு கிறேன்!" என்று சொல்லி, இஸ்லாத்தில் முழுமனத்துடனே சேர்ந்து கொண்டு விட்டார்கள். இவ்விஷயத்தில் இப்பெரியார் கொண்டிருந்த உறுதியின் காரணமாகவும் "சித்'தீ':க்" (மெய்கண்ட சான்ருர்) என்னும் பட்டப்பெயரும் இவர்களுடைய திருநாமத்துடனே சேர்த்துக் கூறப்பட்டு வருகின்றது.

ஆனுல், க'தீ'ஜா பிராட்டியா ரவர்கள் பெண்மணிகளுள்ளே முதன் முதலாக "தீ'னுல் இஸ்லாத்தை"த் தழுவியதேபோல், ஆடவருள் 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் சித்'தீ':க் அவர்களே முதன்முதலாக ஈமான் கொண்டார்க ளென்று வேறுசில சரித்திராசிரியர்கள் கூருநின்றனர்; இவர்கள்—('ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் அவர்கள்) 'ஹ'ஜ்ரத் அ'லீ, ஸ'ஜதி'ப்'னு ஹாரி:தா இருவருக்கும் முன்னரே இஸ்லாத்தைத் தழுவினரென்றும் அவர்கள் கூறுகின்றனர். ஆதலின், ரஸூலுல்லா அவர்களுக்கு முதல் வ'ஹீ வந்தகாலத்து அபூ'ப'க்ர் சித்'தீ':க் கவர்கள் ஷாம்தேயம் சென்றிருந்தார்க ளென்பதற்கும் தக்க ஆதாரம் இல்லையென்கின்றனர். 'ஹ(க்)கீம் இப்'னு ஹ'ஜாம் வீட்டிலேதான் இப் பெரியார் அதுசமயம் இருந்தார்க ளென்றும் கூறுப. எவ்வாருயினும், க'தீ'ஜா, அபூ'ப'க்ர், அ'லீ, ஸ'ஜத்' ஆகிய நால்வருமே முதல்முதலில் தீ'னுல் இஸ்லாத்தில் சேர்ந்து கொண்டார்க ளென்பதில் சிறிதும் சந்தேகமில்லை. இந் நால்வருமே நபிகள் நாதரின் அந்தரங்க பகிரங்க விஷயங்களை யெல்லாம் மிகமிக நுணுக்கமாக உணர்ந்துகொண் டிருந்தவர்கள். க'தீ'ஜா பிராட்டியார் சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு மேலாகவே அவர்களுடனே பஹிரங்கத்திலும் அந்தரங்கத்திலும் அதிகம் நெருங்கிப் பழகி யிருக்கின்ருர்கள். அபூ'ப'க்ர் சித்'தீ':க் அவர்களோ, நபிகள் திலகத்துடனே தெருத்தோழமை யென்னும் பால்ய சினேகத்தால் மிகவும் நெருங்கிப் பழகி வந்தார்கள். 'ஹ'ஜ்ரத் அ'லீ அவர்களோ, தங்களுக்குக் கருத்துத் தெரிந்ததுமுதலே நபிகள் நாதருடனேயே ஒன்றித்து வாழ்ந்து வந்திருக்கிருர்கள். இவ்வாறே நபிபெருமாளுல் உரிமை யளிக்கப்பட்ட ஸ'ஜது'ம் அப் பெருமாளுருடனே மிக்க நெருக்கமாகவே பழகிவந்திருக்கிருர். இவர்களுள் எவரும் நபிபெருமானின் த'ஃ'வாவில் அணுத்துணையும் ஐயங்கொண் டிருக்கவில்லை. இந்த நாற்பதாவது பிராயம்வரை அவர்கள் "அல் அமீன்" என்னப்படும் நம்பிக்கைக்குரிய சத்தியசீலராகவே நடந்துகொண்டும் வந்திருக்கிருர்கள். இந்நாள் பரியந்தம் அவர்கள் ஒருபோதும் ஒருசிறு வெள்ளைப் பொய்யையேனும் வேடிக்கைக்காகவும் புகன்றதாய்ச் சந்தேகம் ஜனித்ததே கிடையாது. ஆதலின், இப்பெருமாளு ரவர்கள் தங்களுக்கு நபிப்பட்டம் அளிக்கப்பட் டிருக்கிறதென்று உரிமை கொண்டாடிய போது, அவர்கள் ஒருவரும் ஒருசிறிதும் ஐயங் கொண்டாடி விடவில்லை. ஆனுல், அவர்களுடைய சிறுபிராய முதற் கொண்டே அவர்களுடைய அந்தரங்க பகிரங்க வாழ்க்கை முறையை யெல்லாம் அந் நால்வரும் மிக்க நெருக்கமாக அறிந்துகொண்

டிருந்தமையால், அப் பெருமானார்பால் ஒருசிறு தவற்றையேனும் கண்டு கொண் டிருப்பார்களாயின், பிறகு அந்த "அல் அமீன்" மீது அத்துணை ஆழிய அபிமானமும் நீடிய விசுவாசமும் ஒருபோதும் கொண்டிருக்க மாட்டார்கள். நபிகள் திலகமவர்கள் அணுத்துணை யேனும் அகத்தி லொன்றும் புறத்திலொன்றுமாய் நடந்துவந்தார்க ளென்று எட்டுணையும் ஐயங் கொண்டிருப்பார்க ளாயின், அந் நால்வரும் அப் பெரியார்மாட்டு அத்துணைப் பெரிய உறுதிகொண் டிருக்க மாட்டார்க ளென்பது திண்ணமே யன்றோ ?

ஆனால், அதற்குமாறாக அப் பெருமானாரிடம் நெருங்கிப் பழகப்பழக அவர்க ளெல்லாரும் அதிகமான அபிமான முள்ளவர்க ளாகவே அபிவிருத்தி யடைந்து வந்தார்கள். ஆதலினால்தான், இவ் விஷயத்தில் ஸர் வில்லியம் மூய்ர், ஸ்ப்ரெங்கர் முதலிய எதிர்மத விரோதிகளும் நம் பெருமானார்முன் சிரவணக்கம் புரிகின்றார்கள். நபிகள் பெருமானார் (சல்) கபடத்தனத்துடனே வெளிவேஷமாய் நடித்திருப்பார்க ளாயின், அந்தத் தோழர்க ளனைவரும் அவர்களை அத்துணைமட்டும் ஆழ விசுவசித்திருக்க மாட்டார்கள். அவர்க ளனைவரும் தங்கள் ஞான பிதாவின்மாட்டுப் பேரபிமானம் மட்டும் கொண்டு வாளா இருந்துவிட வில்லை. தங்கள் ஞான பிதாவுக்கு ஆபத்தொன்றும் அணுகாவண்ணம் தங்கள் உடல் பொருள் ஆவியை யெல்லாமும் தத்தம் செய்யவும் பலகாலும் தயாரா யிருந்துவந்தார்கள். அவர்களெல்லாரும் கடிய சோதனைகளுக் கெல்லாம் ஆளாக்கப்பட்டும், ஒரு சிறிதும் தங்கள் மத நம்பிக்கையில் தளர்வுறாமலே உறுதியாய் நின்றிலங்கினார்கள். இத்துணைப் பெரிய அபிமானத்தை இவ் வுலகிலுள்ள எந்த மதாசாரியர் மாட்டும் எந்தச் சிஷ்யர்களும் இதுகாறும் காட்டியிருக்க மாட்டார்க ளென்பதற்குச் சரித்திரமே சான்று பகரக்கூடியதா யிருக்கின்றது. இனியும் ஒருவருக்கும் இத் தன்மைத்தாகிய பேரபிமானம் கிடைக்கப் போவதில்லை யென்பதை இனிவரும் சரித்திரக் காரர்களே கண்டு கொள்வார்கள்.*

'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் சித்'தீ':க் (ரலி') அவர்கள் தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவியதன்பின்னால் தங்கள் மூலமாய்த் தங்களுக்குத் தெரிந்த மற்றும்பல பிரமுகர்களையும் இஸ்லாத்தில் ஈமான் கொள்ளுமாறு செய்து வைத் தார்கள். அவர்கள் எடுத்த முயற்சியால் உ':த்மான் இப்'னு அ'''ப்'பான் — (உமையா வம்சத்தவர் ; பிறகு மூன்றாவது க'லீ'பாவாக வந்தவர்) க'தீ'ஜாவின் சகோதரரான அ'வ்வாமின் குமாரர் 'ஜுபை'ர், அ'ப்'து'ர் ர'ஹ்மான் இப்'னு அ'வ்'ப், ஸஅ'த்' பி'ன் அபீ' வ:க்:காஸ்— (இவர்தாம் பின்னர்ப் பாரசீக ராஜ்யத்தை ஜயித்தவர்) 'தல்'ஹா என்னும் ஐவரும் இஸ்

* சுவர்க்கத்தின் திறவுகோலைப் பெற்றிருந்தவரென நம்பப்பட்டு வந்த பேதுரு வென்னும் முதன்மையான சீடர் தம்முடைய குருமகானாகிய இயேசுவிடம் எவ்வாறு நடந்துகொண்டா ரென்பதை எமது "இயேசுவின் இரகசியம்" என்னும் நூலில் காண்க.

லாத்தைத் தழுவிக் கொண்டார்கள். 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ரின் முயற்சியினுல் அப்பொழுது இஸ்லாத்தைத் தழுவியவர்களின் தொகை பதினொன்ருகும். பி'லால், யாஸிர், அவருடைய மனைவி ஸுமிய்யா, அவர்கள் புத்திரர் அ'ம்மார் என்னும் ஏழைமக்களும் அப்பொழுதே தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவிக் கொண்டார்கள். அ'ப்'து'ல்லா ஹிப்'னு மஸ்ஊ'த்', க'ப்'ப'ாப்' இப்'னுல் இ'ர்த், அர்:க்:கம், ஸயீ'த்' பி'ன் ஸை'ஜத்', உ':த்மான் பி'ன் மள்'ஊ'ன், உ'பை'த்'ா, ஸுஹைப்' ரூமீ ஆகியோரும் அப்பொழுதுதான் இஸ்லாத்தில் சேர்ந்து கொண்டார்கள். இந்த அர்:க்:கம்(ரலி) அவர்களின் இல்லத்துக்குள் ளிருந்துகொண்டேதான் நபிகள் பெருமானு ரவர்கள் தங்களுக்கு வ'ஹீவந்த நான்காவதாண்டில் பஹிரங்கமா யில்லாது, இரகசிய மாக இஸ்லாமிய பிரசாரம் புரிந்துவந்தார்கள்.

நபிகள் திலகமவர்கள் தங்களுக்கு வ'ஹீ வந்து மூன்று வருட காலம்வரை இரகசியமாகவே தங்கள் சன்மார்க்கத்தைப் போதித்து வந்தார்கள். அதுகாறும் நாற்பது மனிதர்கள்வரை தீ'னுல் இஸ்லாத்தில் சேர்ந்து கொண்டார்கள். எனவே, முதல் வ'ஹீக்குப் பின் மூன்று வருட காலம் வரை இரண்டாவது வ'ஹீ வரவில்லை யென்பாரின் கூற்றை இவ்வொரு விஷயமே தகர்த்தெறிந்து விடுகின்றது. என்னெனின், முதன் மூன்று ஆண்டுகள் மட்டும் இரண்டாவது வ'ஹீ வரவில்லை யென்போ மாயின், பிறகு நான்காவது வருட முதற்கொண்டேதான் நபிகள் பெருமான் அவர்கள் தங்கள் சுத்த சத்திய சன்மார்க்கத்தை வெளியில் பிரசாரம் பண்ணத் தொடங்கி யிருத்தல் வேண்டும். ஆனல், நான்காவ தாண்டின் ஆரம்பத்திற்கு முன்னரே நாற்பது மனிதர்கள் மட்டும் இஸ்லாத்தில் சேர்ந்து விட்டார்கள். இவ்வாறு தினேதினே தீ'னுல் இஸ்லாம் வளர்ந்தோங்கி வருவதைக்கண்ட மக்கத்துக் கு'ப்'பார்கள் நபிகள் நாதர்மீது மெல்லமெல்ல வர்மம் கொள்ளத் தலைப்பட்டனர். எனவேதான், நான்காவ தாண்டின் ஆரம்பத்தில் அம்முஸ்லிம்கள் தங்க ளுடைய பிரசாரத்தை எதிரிகளின் தாக்குதலுக்கு இலக்காக்காமல் தனியான ஓரிடத்தைத் தேடிக் கொண்டார்கள்; அதுதான் அர்:க்:கம் அவர்களுடைய விடுதியா யிருந்தது. ஆகவின், அச்சமயம் நாற்பதுவரை முஸ்லிம்களின் எண்ணிக்கையும் பெருகி விட்டமையான், 'பித்ர(த்)துல் வ'ஹீயின் காலம் மூன்ருண் டென்னும் ெ'ஜாஹ்ரீயின் அபிப்பிராயம் அடியோடு அடிபட்டுப் போகின்றது. ஆனல், அந்த 'பித்ர(த்)துல் வ'ஹீயின் காலம் ஓராண்டுகூட நீடித்திருக்க வில்லை யென்பதுதான் மெய்யான சரித்திரத்தின் நிச்சயமான கூற்ருய்க் காணப்படாகின்றது. ஆகவே, அஃது ஆறுமாதத்துக்கு மேலே நீடிக்கவில்லை யென்றறிக.

# அதிகாரம் — 10

## நாயகத்தின் ஆரம்பகால பிரசாரம்

"ஆதலால், உமக்கு ஏவப் பட்டதைக் கொண்டு நீர் திறந்து சொல்லிவிடக்கடவீர்; மேலும் இணைவைப்பவர்களை விட்டுப் புறக்கணித்திடக் கடவீர்."— (15 : 94)

"இன்னம், உமக்கு மிகவும் நெருங்கியுள்ள உறவின் முறையாளர்களை அச்சமூட்டி எச்சரிக்கை விடுக்கக்கடவீர்."
— (26 : 214)

"சீதவொண் கவிகை நீழல் திருந்திய குரிசிலானோர்
தூதெனந பியின் பட்டந் துலங்கிய நான்கா மாண்டில்
வேதநல் வணக்கம் யார்க்கும் விரித்துற விளக்கு மென்ன
ஆதிதன் பருமான் மேற்கொண் டமரர்கோ னுரைத்துப் போனார்."
சீறாப் புராணம்.

முன்னம் நாம் கூறியிருப்பதே போல் நபிகள்பெருமா னவர்கள் மறைவான இடத்தி லிருந்தபடியே தங்கள் தீனின் பிரசாரத்தை மகாமந்தணமாகச் செய்துகொண்டு வந்தார்கள். ஹாஷிம் வம்சத்துக் :குறைஷிகள் விக்ரஹ ஆராதனையில் அதுசமயம் அதிகம் மூழ்கிப்போய்க் கிடந்தார்கள். ஆனால், ஹாஷிம் வம்சத்தின் தாயாதிகளாய் விளங்கிவந்த அ’ப்’து’ஷ் ஷம்ஸின் வம்சத்தினர்—(ப’னூ உமையாக்கள்) ரஸுலுல்லாவின் ஏக தெய்வக் கொள்கையின் சார்பாயுள்ள பிரசாரத்தைப் பற்றிக் கேள்வியுறுவார்களாயின், தங்களுக்குக் கஃ’ப’ாவின்மீ திருந்துவந்த செல்வாக்குப் போய்விடு மென்று சீறிவீழ்வார்கள். இந்தக் குடும்பத்தினரின், இல்லை, :குறைஷிகளின் தலைவராக உமையாவின் வம்சத்தில் தோன்றிய அபூ’ஸுப்’யானே அப்பொழுது விளங்கி வர வேண்டியவராக இருந்தார். என்னெனின், இவருடைய தந்தையான ஹர்ப்’ பி’ன் உமையா என்பவரே :குறைஷிகளுக்கு மாபெரும் தலைவராய் விளங்கி வந்தார். அன்றியும், அவரே ஜங்கெ ‘பிஜாரில் :குறைஷிகளின் பெரிய போர்த் தளபதியாய் விளங்கிவந்தார். அவரையே :குறைஷிக ளெல்லாரும் மிகவாய் வாழ்த்திப் போற்றி வந்தனர். ஆனால், அவருடைய மைந்தனான அபூ’ஸுப்’யான் தந்தையேபோல அத்துணை மகா சமர்த்தரா யில்லாததனால், இவரைப் பொதுவாக எல்லாரும் தலைவராக ஏற்றுக்கொண்டனரில்லை. ஆனால், ப’னூ ஹாஷிம்களுக்குத் தலைவனாய் அபூ’லஹபு’ம்—(இவன் நாயகமவர்களின் பெரிய தந்தையாயும், மரணமடையும் வரை கா’பிராயும், நாயகமவர்களுக்குப் பெரிய விரோதியாயும் இருந்தவன்) ப’னூ :குறைஷிகளுக்குத்

தலைவராய் வலீத்' பி'ன் மூ:கீராவும், ப'னூ உமையாக்களுக்குத் தலைவராய் அபூ'ஸு'ப்யானும் இருந்துவந்தனர். இவருக்கு அக்காலத்தில் திரண்ட ஐசுவரியமும், போதுமான செல்வாக்கும் எஞ்சி இருந்துகொண்டே வந்தன; இவருடைய சாமர்த்தியத்துக்கும் பேராசைக்கும் அளவுசொல்லி முடியாது. இப்படிப்பட்ட விரோதிகளுக் கிடையிலேதான் முதல் மூன்றுண்டுகள்மட்டும் மகா இரகசியத்திலேயே நபிகள் பெருமானின் இஸ்லாமிய பிரசாரம் ஒருவாறு நடைபெற்று வந்தது. அதுசமயம் நபிகள் நாயகம் வெளியில் செல்லுந்தோறெல்லாம் சிறுவர்களும், மக்காவிலுள்ள பெருந் துஷ்டர்களும் அப் பெருமானுரை முன்னே விட்டுப் பின்னே யிருந்து பரிகாசம் பண்ணிக்கொண்டே திரிவார்கள்.

ஆதியில் எம்முடைய வள்ளல் (சல்) அவர்களின் சத்தியோபதேசத்தைச் சரியென ஒத்துக் கொண்டவர்கள் ஏழைகளே யாவார்கள். உதாரணமாக, அ'ம்மார், க'ப்'ப'ாப்', அபூ'‘ப(க்)கீஹ், சுஹைப்' முதலியவர்கள் போன்றவர்களுக்குத் தலைமைஸ்தானமாய கஃ'ப'த்துல்லாவில் ஒருசிறிதும் உத்தியோகம் இல்லாம லிருந்தது. எனவே, இன்னுரை யெல்லாம் அழைத்துக் கொண்டு நபிகள் (சல்) அவர்கள் கஃ'ப'த்துல்லாவுக்குச் செல்வார்களாயின், :குறைஷித் தலைவர்க ளெல்லாரும் இவர்களைக் கண்டு எள்ளி நகையாடுவார்கள். அதுவேயு மன்றி, "நம்மையெல்லாம் விட்டுவிட்டு, இதோ போகின்றூர்களே, இவர்களுக்குத்தாம் ஆண்டவன் நல்லுதவி செய்திருக்கிறுன்!" என்றும் பரிகசிப்பார்கள். இவ் வேழைகளிடம் ஐசுவரியமில்லாம லிருந்ததே :குறைஷிக் கு'ப்'பார்கள் ஏளனம் பண்ணுவதற்குக் காரணமாயிருந்துவந்தது. உலகவிலங்கான இவ் வைசுவரியங்கள் இவர்களிடம் இல்லாம லிருந்ததனுல்தான் ஏழை ச'ஹாப'ாக்கள் முதன்முதலாக ஈமானென்னும் பெரும்பொருளை யடைய ஏதுவாயிருந்தது. செல்வம் இவர்களுடைய ஹிருதயங்களைக் கறையாக்கி விடவில்லை.

> "செல்வம்வந் துற்ற காலைத் தெய்வமுஞ் சிறிது பேணூர்
> சொல்வன வறிந்து சொல்லார் சுற்றமுந் துணையும் நோக்கார்
> வெல்வதே நினைவ தல்லால் வெம்பகை வலிதென் றெண்ணூர்
> வல்வினை விளைவு மோரார் மண்ணின்மேல் வாழு மாந்தர்,"—

என்றூர் வில்லியும்.

"பொருளிலார்க்கு இவ்வுலக மில்லை" என்பதே அவர்களது கோட்பாடா யிருந்தது.

ஆணவமும் அகம்பாவமும் அவ்வேழைகளுக் கிருந்து, நேரான வழியைப் பின்பற்றும் விஷயத்தில் தடைக்கல்லாய் நிற்கவில்லை. அன்றியும், விக்ரஹ நிக்ரஹம் செய்து விடுவோமாயின், கஃ'ப'த்துல்லாவி லிருக்கும் உத்தியோகம் பறிபட்டுப் போய்விடுமே யென்றும் இவர்கள் எண்ணுவதற்கில்லை. எனவே, பொதுவாக நோக்குமிடத்து, இஸ்லாத்தைக் கைக்

கொண்ட இவ்வேழைகளின் ஹிருதயங்கள் மிகவும் களங்கமற்றன வாகவே காணப்பட்டு வந்தன. ஆதலின், உண்மையார்த்த பிரகாசம் இன்னாரின் உள்ளத்தின்கண்ணே ஊடுருவிப்பாய அருகதை வாய்ந்ததா யிருந்துவந்தது. இக்காரணம் பற்றியேதான் முந்திய நபிமார்களைப் பின் தொடர்ந்தவர் களுங் கூட ஆதியில் ஏழைகளாகவேதாம் இருந்து வந்தனர். கிறிஸ்து மதத்தை ஆதியில் ஏற்றுக் கொண்டவர்கள் செம்படவர்களே. நூ'ஹ் நபி அவர்களை ஆதியில் பின்பற்றியவர்களைப் பார்த்து ஏனைத் தலைவர்களான கு'ப்'பார்கள், "உம்மைப் பின்பற்றியவர்கள் மகா இழிவானவர்க ளாகவே காணப் படுகின்றனர். இதைப் பார்த்தவுடனே தெரிந்துகொள்ளலாம். உம்பால் எம்மைப் பார்க்கினும் எவ்விதமான சிறப்பும் அதிகமாயில்லை. ஆனால், நீங்க ளெல்லாம் பொய்யர்களா யிருக்கின்றீர்க ளென்றுதான் நாங்கள் எண்ணுகிறோம்," என்று கூறிக்கொண் டிருந்தனர்.

எனவே, ஆதியில் இஸ்லாத்தைப் பின்பற்றிய ஏழை ச'ஹாப'ாக்கள் எத்துணை உறுதியுட னிருந்தார்க ளென்பதை மேலே சென்று தெரிந்து கொள்வீர்கள். ஆனால், அக்கிரமக் கொலைகளாலும், அளவுகடந்த அநியாயங்களாலும், ஐசுவரியத்தைக் கொண்டு உண்டுபண்ணப்படும் ஆசை யினாலும் அன்னாரை ஒரு சிறிதும் அசைக்க முடியவில்லை என்பதையும் நன் குணர்ந்து கொள்வீர்கள். இறுதியாக இவ் வேழைகளினாலேயே கிஸ்ரா வின் (பாரசீக) சிம்மாசனமும் கவிழ்ந்துபோய் விட்டது என்பதை நுங்கள் மனத்தின்கண்ணே பதியவைத்துக் கொள்ளக் கடவீர்களாக. அவர்கள் அன்று செய்த தியாகமே இன்று இவ்வுலகில் அறுபதுகோடி முஸ்லிம்களை உண்டுபண்ணி யிருக்கிறது.

அதையெல்லாம் கேள்வியுற்ற அபூ' 'தர் என்னும் பெரியார் தம் முடைய சகோதரரை மக்காவிற் கனுப்பிவைத்து, நபிகள் திலகத்தின் விஷயத்தை விசாரித்து வருமாறு செய்தி சொல்லி யனுப்பினார்; அவ்வாறே அச் சகோதரர் சென்று மக்காவிலிருந்த நபிகள் நாயகத்தைக் கண்டு தரிசனம் செய்து, உண்மையை ஒருவாறு உணர்ந்து கொண்டுவிட்டார். சிறுவர்களும் காவாலிகளும் செய்யும் ஏளனமனைத்தும் வீண்செயலே யெனக்கண்டு தம்முடைய சகோதரரான அபூ' 'தர்ரிடம் சென்று, விஷயத் தைத் தமக்குத் தெரிந்தவரை விளக்கிக் காண்பித்தார். எனினும், தமக் கேற்பட்ட சந்தேக முழுதும் சரியாகத் தீராததனால், அக்கணமே அந்த அபூ' 'தர் அவர்களும் ஓட்டோட்டமாக ஓடிவந்து, நபிகள் திலகமவர்களை நேரில் கண்டு, தமக்குள்ள சந்தேகங்களைத் தெளிந்து கொண்டு, அப் பொழுதே தீ'னுல் இஸ்லாத்திலும் சேர்ந்துகொண்டு விட்டார்கள். இவ்வா றெல்லாம் முதல்மூன்று வருடகாலமட்டும் செய்து வந்ததனால்தான் அக் காலத்திற்குள் 40 முஸ்லிம்கள்வரை இஸ்லாத்தில் சேர்ந்திருந்தார்கள். அவர்களுள்ளே ரஸூலுல்லாவின் செவிலித் தாயாய் விளங்கிய 'ஹலீமா வும், அவருடைய கணவரான 'ஹாரி:தி'ப்'னு அ'ப்'து'ல் உ''ஜ்'ஜாவும்

சேர்ந்திருந்தார்கள். தங்களுடைய போஷக புத்திரருக்கு நபிப்பட்டம் வந்ததென்பதைக் கேட்டவுடனே அவ்விருவரும் அதிக ஆவலுடனே மக்கத்துக்கு ஓடிவந்து, மனமார நந் தீ'னுல் இஸ்லாத்திலே சேர்ந்து கொண்டு விட்டார்கள்.

ஒரு பக்கல் விக்ரஹத் தொழும்பர்களின் ஆத்திரமும், மற்றொரு பக்கல் கஃ'ப'ாவின்மீது ஆதிக்யம் செலுத்திவந்த மக்கத்துப் "பெரிய மனிதர்க" ளின் அதிகாரமும் நம் பெருமானு ரவர்களுக்கு விரோதமாக ஆதிமுதலே எதிர்த்து நின்றுகொண் டிருந்தன. ஆயினும், அம்மூன்று வருடங்களுக் கிடையிலே அத்தகைய விரோதிகளால் ஒன்றும் பகிரங்கமான தொந்தரை உண்டாய்விட வில்லை. ஆனால், "அல் அமீன்" அவர்களுக்குச் "சித்த பிரேமை" உண்டாய் விட்டதாக மட்டுமே எளிதா யெண்ணினார்கள். இவ்வாறு நிகழ்ந்துவந்த காலையிலேதான் இவ் வதிகாரத்தின் தலைப்பில் பொறிக்கப்பட்டிருக்கும் குர்ஆன் ஆயாத்கள் நம் ரஸூலுல்லா அவர்களுக்கு இறக்கி வைக்கப்பட்டன: "உமக்கு ஏவப்பட்டதைக் கொண்டு நீர் திறந்து சொல்லிவிடக் கடவீர்," என்றும், "உமக்கு மிகவு நெருங்கி யுள்ள உறவின்முறையாளர்களை அச்சமூட்டி எச்சரிக்கை விடுக்கக் கடவீர்," என்றும் அல்லாஹுத் த'ஆ'லாவி னிடத்திருந்து கட்டளைகள் பிறந்தவுடனே நபி பெருமானாரவர்கள் வெளிக்கிளம்பி, பஹிரங்கமாய்ப் பிரசாரம் புரியத் துணிந்து விட்டார்கள். அதற்காக ஸ'‘பா என்னும் கஃ'ப'ாவுக் கருகி லுள்ள தென்மேற்குக் குன்றின்பக்கல் நபிகள் பெருமானாரவர்கள் :குறைஷியர் களை ஒன்றுகூடும்படி அழைத்து, அதன் மீது தாங்கள் ஏறி நின்றுகொண்டு, அன்ன வர்களை நோக்கி, "ஏ குறைஷியர்காள்! இக்குன்றின் பின்புறமாகப் பெருஞ் சைன் யம் ஒன்று உங்களைத் தாக்கும்பொருட்டு வந்துகொண் டிருக்கிறதென்று யான் இப் பொழுது சொல்வேனாயின், நீங்கள் அவ்வார்த்தைகளை மெய்யென்று நம்பு வீர்களா? மாட்டீர்களா?" என்று வினவினார்கள். அதைக் கேட்டவுடனே அவர்க ளனைவரும் ஒரே மொழியாக, "ஆம்! நாங்கள் அவ்வாறே நம்பு கிறோம். என்னெனின், நீங்கள் எப்பொழுதும் சத்தியத்தையே பேசுகிற வர்கள் என்பதை நாங்கள் நிச்சயமா யறிவோம்," என்று விடை கொடுத்தார்கள்.




"உரைத்தசொல் எவர்க்கும் உறுதிநிண் ணயமென்
றனைவரும் உரைத்திட மகிழ்ந்து

நிரைத்தகுங் குமத்தார்ப் புயநபி இனியான்
நிகழ்த்திய மார்க்கநன் னெறியைத்
தரைத்தலத்(து) ஈமான் கொள்ளுதற் கிசையாத்
தரம்படைத் தவரனை வரையும்
கரைத்திட நனிய தாபெனுங் கொடிய
கடும்பிணி பிடித்திடும் என்றார்."— சீறா.

அக்கணமே நபிபெருமானா ரவர்கள், "நீங்கள் ஆண்டவன்மீது மெய்யான நன்னம்பிக்கை (ஈமான்) கொள்ளவில்லை யாயின், உங்கள்மீது கடுமையான வேதனைவந் திறங்குமென்று இப்பொழுது நான் எச்சரிக்கை செய்கின்றேன்!" என்று கூறியதைக் கேட்டவுடனே, அக் :குறைஷிக ளெல்லாருக்கும் கடுங்கோபம் பிறந்துவிட்டது. நபிகள் பெருமானின் பெரிய தந்தையான அபூ'லஹப்' என்பான்— (இவனது இயற் பெயர் அ'ப்'து'ல் உ'ஜ்'ஜா என்பதாகும்) "நீ நாசமாய்ப் போகக் கடவாய்! இதற்காகத் தானா எங்களை நீ இங்குக் கூட்டிவைத்தாய்?" என்று மிகக் கடுமையாக ஏசினான்.

"கூறிய மொழிகேட்(டு) அபூலக பெனுமக்
கொடியவன் இருவிழி செவந்து
மாறுபட்(டு) இதற்கோ குலத்தொடுங் கெடுவாய்
வரவழைத் தனையெனச் சீறித்
தேறிலா(து) உறுக்கி இருகரம் புதைப்பச்
செறிதரு பூழ்தியை வாரி
ஈறிலான் தூதை முகம்மதைச் சிறிதும்
எண்ணிலா(து) எதிர்த்துநின்(று) எறிந்தான்."— சீறா.

இவன்தான் தனது ஆயுள்முழுதும் ரஸூலுல்லாவின்(சல்) மாகொடிய பகைவனாய் விளங்க லாயினான். இவனுக்கும் அபூ' ஸுப்யானே போலத் திரண்ட ஐசுவரியம் உண்டு; ஆனால், அதிக கர்வமும், முன்கோபமும் அளவில்லாது படைத்திருந்தான். இவனுடைய மனைவியான, அபூ' ஸுப்யானின் தங்கை உம்மு ஜமீலும் இவனுக்கேற்ற கொடிய மனைவியாகவே வாய்த்திருந்தாள். அவள் ஒரு தனவந்தன் வீட்டுக்குடையவளா யிருந்தும், தன்னுடைய உலோபித்தனத்தால் தானே காடுகளுக்குச் சென்று விறகு வெட்டிச் சுமந்து கொண்டு வருவாள்; இதனால், இவளுக்கு 'ஹம்மா ல'தல் 'ஹ':தப்' என்றொரு பெயரு முண்டு. இவளுடைய ஆதிக்யத்தின் கீழேயே அபூ' லஹப்' அதிகம் சிக்கிக்கொண் டிருந்ததனால், இயற்கையிலேயே கொடியவனாய் விளங்கிய அபூ'லஹப்' பின்னும் கடுமையாகத் தன்னுடைய சொந்தத் தம்பி மைந்தரை ஒறுக்கத் தலைப்பட்டான். அபூ' லஹப்' தன்னுடைய குமாரர்களான உ'த்ப'ா, உ'தைப'ா என்னும் இருவரையும்

அழைத்து, அவர்கள் அதற்குமுன்னே மணமுடித்திருந்த ரஸூலுல்லாவின் இரு குமாரிகளான ருகையாவையும், உம்முகுல்தூமையும் திருமணரத்து செய்துவிடுமாறு வற்புறுத்தி, அவ்வண்ணமே இறுதியில் செய்து முடித்துக் கொண்டான். இவனும் இவனுடைய மனைவியும் நபி பெருமானாருக்குச் செய்துவந்த துன்பத்திற்கு ஓர் அளவுசொல்லி முடியாது. உம்மு ஜமீல் என்பவள், ரஸூலுல்லாஹ் அவர்கள் இருளில் நடக்கநேருங்கால், அவர்களுக்கு இன்னல் விளைக்க வேண்டுமென்னும் கொடிய எண்ணத்தினால் நபிபெருமான் தொழுகைக்கு நடந்துசெல்லும் வழிகளிலே முட்களைக் கொண்டுவந்து போட்டுக்கொண் டிருந்தாள். இறுதியில் அவள் கட்டி வந்த விறகுகட்டின் பேரீச்சநார்க் கயிறே அவளது கழுத்தில் சிக்கிக் கொண்டு, அதனால் அவளது குரல்வளை நெரிந்து இறந்து போயினாள். அபூ'லஹபு'ம் ப'த்'ர் யுத்தத்தில் மக்கத்துக் கு'ப்'பார்கள் தோல்வி யடைந்ததைக் கேள்வியுற்ற பின்னர் ஏழு நாளைக்குப்பிறகு மனமுடைந்து வாந்தி பேதியால் இறந்துபோயினான். அவன் இறுதியில் நீகிரோ ('ஹப'ஷீ) ஜாதியாராலேயே இழிவுடன் புதைக்கப்பட்டான். என்னெனின், அன்னவன் வீட்டு ஜனங்கள் நெருங்க மறுத்துவிட்டார்கள்.

மேற் கூறியவாறு ஸ''பா மலையிலிருந்து :குறைஷிக ளெல்லாரும் கலைந்து தத்தம்வீடு சென்ற பின்பு சில நாட்களுக்குள் நம் பெருமானாரவர்கள் அ'ப்'து'ல் முத்தலிபி'ன் குடும்பத்தினருக் கென்று விருந்தொன்று செய்விப்பான் வேண்டி அதற்கு வேண்டிய சாமக் கிரியைகளனைத்தையும் சித்தஞ் செய்யுமாறு 'ஹ'ஜ்ரத் அ'லீ அவர்களுக்கு உத்தரவிட்டார்கள். பகிரங்கமாக மார்க்கப் பிரசாரம் செய்வதற்கு இதுவே முதற்கூட்டமாயிருந்தது என்பதை நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்ளக் கடவீர்கள். பெருமானாரின் தந்தையாருடன் பிறந்திருந்த வர்களாகிய அபூ'த்தாலிப்' (இவரது சொந்தப்பெயர் அ'ப்'து'மனா'ப் என்பதாகும்) ஹம்'ஜா, அ'ப்'ப'ாஸ் முதலிய பெரிய மனிதர்களும் அவ்விருந்துக்கு விஜயம் செய்திருந்தனர். விருந்து முடிந்தவுடனே நபிகள் திலகமவர்கள் எழுந்து நின்று, ஆங்கு விஜயம் செய்திருந்தவர்களை நோக்கி, "அ'ப்'து'ல் முத்தலிபி'ன் வம்சத்தினர்காள்! அல்லா(ஹ்)வி னிடத்திலிருந்து இகத்திற்கும் பரத்திற்கும் உறுதியான நற்கதி யளிக்கக் கூடிய பொருளை நான் கொண்டுவந் திருக்கிறேன். ஆண்டவன் தன்வழியிலே நுங்களெல்லீரையும் அழைக்குமாறு என்னை ஏவியிருக்கிறான். ஆதலின், இப்பெரும் பாரத்தைச் சுமப்பதற்கு என்னுடனே உதவியாய் இருப்பவர் எவர்?" என்று அதிக உற்சாகத்துடனே வினவியதைக் கேட்டு, அச்சபை முழுதும் ஆச்சரிய மிகுதியால் அசைவற்று நிசப்தமாய் ஸ்தம்பித்து நின்றது; ஆயின், சிலர்மட்டும் பரிகாசமாகப் புன்சிரிப்புச் சிரித்தார்கள். அதுபொழுது பதினொரு வயதையே எய்தியிருந்த வாலிபர் ஒருவர் அதிக தைரியமாக எழுந்து நின்று, "யான் இளகிய கண்களையும், மெல்லிய கைகால்களையும், சிறுபிராய

மூளையையும் உடையவனு யிருந்துகொண்டு, எல்லாரினும் மிகச் சிறியனே யாயினும், யானே தங்களுக்கு உதவியா யிருப்பேன்," என்று உரக்கக் கூறினர்.

இவ்வாறு நபிபெருமானு ரவர்களுக்கு மறுமொழியாக 'ஹ'ஜ்ரத் அ'லீ(ரலி') கூறிய தைரிய மொழிகளைக் கண்டு :குறைஷிக ளெல்லாரும் அளவில்லா ஆச்சரிய மடைந்தனர்; ஆயினும், அவர்கள் இவ்விருவரின் மொழிகளையும் கேட்டுப் புன்முறுவலால் பரிகாசதோரணையில் ஏளனம் செய்த வண்ணமாக அவர்களை ஏறஇறங்கப் பார்த்தார்கள். இந்தத் தன்னந்தனியான மு'ஹம்மத்' என்பவரும் (சல்) பதினெரு பிராயமுடைய இச்சிறு வாலிபனுந்தாமா இவ்வுலகத்தின் கதியைப் பற்றி முடிவுசெய்யப் போகிறார்க ளென்பதை நினைத்த மாத்திரத்திலே மற்றொரு முறையும் அக் :குறைஷிகளுக்குத் தங்களை யறியாமலே நகைப் புண்டாயிற்று; எனவே, அவர்கள் ஏளனமாகப் பரிகாசம் பண்ணி இகழ்ந்தார்கள்; ஆனால், அவர்க ளிருவரும் மொழிந்த மாற்றங்களனைத்தும் சத்தியந்தா னென்பதைச் சிறிது போழ்தைக்குள்ளே காலமே நன்கு காட்டிவிட்டது.* அதுமுதல் நபிபெருமா னுரவர்கள் மக்கத்து மறமாக்களிடம், ஓரே ஆண்டவனையே வணங்குமா றும், விக்ரஹ ஆராதனையை விட்டுவிட்டுச் சன்மார்க்கத்தின் பக்கல் வந்து சேருமாறும் பகிரங்கத்திலே போதனை செய்துவந்தார்கள். இவ்வாறு நிகழத் தலைப்பட்டதன்பின் நபிகள் திலகமவர்கள் கஃ'ப'த்துல்லாவுக்கும் சென்று தங்கள் ஏகநாயகக் கொள்கையைப் பற்றி அதிகம் இனிது வற்புறுத்திச் சொல்லத் துவக்கினுர்கள். நாயகமவர்கள் (சல்) தங்கள் பிரசாரத்தைக் கஃ'ப'ாவுள் சென்றுநின்று செய்ததனுல், கு'ப்'பார்கள் கஃ'ப'வையே அவர்கள் அதிகங் கேவலப்படுத்தி விட்டதாக எண்ணினுர்கள். அதன் பின்னர்த்தான் :குறைஷிகளுக்கு ஆத்திரம் அளவிலாது அதிகம் பொங்கத் தொடங்கிற்று; இனி இவரைச் சும்மாவிட்டால் காரியம் கெட்டுவிடு மெனத் தீர்மானித்துக் கொண்டார்கள். ஆதலின், எவ்வாற்றானும், தொந் தரை செய்தேனும் அந்த அதிகப்பிரசங்கித் தனமான பகிரங்கப் பிரசா ரத்தை முளையிலேயே கிள்ளியெறிந்துவிட வேண்டுமென்றுதான் கொடிய எண்ணங் கொண்டு விட்டார்கள். எனவே, நபிகள் பெருமானவர்கள் க'ஃப'த்துல்லாவில் நின்று அரிய பிரசங்கம் ஒன்று செய்துகொண் டிருந்த பொழுது, மக்கத்து மறமாக்களாய முரடர்கள் சிலர் வந்து நாயகமவர்களைத் தாக்க ஆரம்பித்தனர்; அதில் அடிதடிகளும் சிறிது நிகழாமற் போகவில்லை. இவ் விஷயத்தைக் கேள்வியுற்றவுடனே வீட்டிலிருந்த க'தீ'ஜாவின் (ரலி') புதல்வரான ஹாரி:திப்'னு அபீ'ஹாலா† என்பவர் தம்முடைய விடுதியி லிருந்து வேகமாக ஓடிவந்து, நபிகள் நாயகத்தைக் காப்பாற்றத் துணிந்

* அவ்விரு தமியர்களும் அன்றுசெய்த தீர்மானத்தினுலேதான் இன்றுகாறும் கோடி கோடிக் கணக்கான மக்கள் இஸ்லாத்திலே சேர்ந்துள்ளார்கள். எனினும், அக்:குறைஷியர் அதனை ஏளனமா யெண்ணினுர்கள். [† அடுத்த பக்கம் பார்க்க.]

தார். அதுசமயம் நிகழ்வுற்ற கத்திவீச்சினாலும் கழிவீச்சினாலும் அக் குழப்பத்தில் தாக்குண்ட ஹாரிஃதன்பார் உயிரிழக்கும்படியான அசந்தர்ப் பமும் நேரிட்டுவிட்டது. எனவே, இவர்தாம் இன்றைக்கும் தீனுல் இஸ்லாத்தின் தற்காப்புக்காக ஆதியில் தமதுயிரைத் தியாகஞ்செய்து, தமது உதிரத்தால் இப் பூமியைச் செந்நிறமாகச் செய்தவ ரென்று பெரிதும் கொண்டாடப்பட்டு வருகின்றார். இவரது ஆவிக்கு ஆண்டவன் என்றென் றும் நல்லருள் சுரப்பானாக! இவரே இஸ்லாத்தின் முதல் ஷஹீத்†.

"குறுகிய நோக்க முடையவர்களும், நற்பழக்க மற்ற முரடர்களு மான இவர்கள், தங்கள் தாய் தந்தையர்களின் ஆசார அனுஷ்டான முறைக்கு ஏதேனும் விரோதமேபோல் ஓர் இயக்கம் தோன்றிவிடுமாயின், உடனே பெரிதும் ஆத்திரத்துக் குள்ளாய் விடுவார்கள்; இஃது இவர்களது இயற்கையே. இன்னம், இன்னவர்கள் வாயினால்மட்டும் அதற்கு விரோதம் செய்துகொண்டிராமல், உதிரத்தை ஓட்டியே தங்கள் தாகத்தைத் தீர்த்துக் கொள்ளுவார்கள். இற்றை நாட்களில் இவ் விந்தியாவானது மிகமிகச் சீர்திருத்தமுள்ள நாகரிக மடைந்திருப்பதாய்க் கூறப்பட்டு வருகிறது. ஆனால், இதுசமயமும் மார்க்க சம்பந்தமான ஒரு பொதுவிஷயத்தில் ஏதேனும் விகற்ப முண்டாய்விடின், அதிகமான புரட்சிகளுண்டாய் விடுகின்றன. எனவே, இதுகாலைக் காணக்கிடக்கும் அரசாங்கம் ஒழுங் கானதாகவும், அடக்கி யாட்சிபுரியும் வல்லமை இல்லாததாகவும் இருக்கு மாயின், இங்கும் எத்தனையோ முறைகளில் உதிரமழை பொழிந்து கொண்டிருக்கு மென்பது திண்ணம்," என்று அல்லாமா ஷிப்லீ யவர்கள் தங்கள் "ஸீரத்"தில் அறைந்திருக்கின்றார்கள்.*

பழைய கொடிய பழக்கங்களைப் போக்கிப் புதிய நேரிய சன்மார்க்க ஒழுக்கங்களைப் போதிக்க வந்த அந்த அல்லா(ஹ்)வின் திருத் தூதருக்கு மட்டுமேதான் இத்தகைய எதிர்ப்புக்கள் நேரிட்டனவென் றெண்ண வேண்டாம்; இக்காலத்திலும் இவ்விந்திய நாட்டிலும், இதற்கு முன்னிருந்த ஆங்கில ஆட்சிமட்டும் இல்லாமற் போயிருக்குமாயின், இந்த முஸ்லிம்கள் தங்கள்பாலுள்ள சிறுசிறு அபிப்பிராய பேதங்களுக் கெல்லாம் ஒருவரை யொருவர் கழுத்தை வெட்டிக்கொண்டுதா னிருப்பார்கள். [இனிப் பாக்கிஸ் தான் ஆட்சியிலும் இஸ்லாமிய மத தாராளம் நன்கு நிலைபெறட்டும் பா. தா.] எனவே, இம் முஸ்லிம்களை யெல்லாம் தொலைத்துவிட வேண்டு மென ராமராஜ்ய ஹிந்துக்களும் பிரயத்தனப் படாதிருப்பார்களாக. "மத விஷயத்தில் பலவந்த மில்லை," என்பது எமது வேதக்கட்டளை (2 : 256).

---

† இவர் க'தீ'ஜா பிராட்டியின் முதற்கணவரான அபீ'ஹாலா பி'ன் ஜுராராவுக்குப் பிறந்த பிள்ளை; நபிபெருமானால் வளர்க்கப்பட்டவர்.

* இன்றுங்கூட அப்படித்தான் இந்துஸ்தானத்தில் இந்து—முஸ்லிம் கலகங்கள் அங்கங்கே அறியாத மாக்களால் அதிகம் கிளப்பப்பட்டு, உதிரமும் சொரியப்பட்டுவருகிறது.

அவ்வாறு மக்கத்து மாந்தர்களிடையே குழப்பங்களும் கலகங்களும் அதிகம் விளையத் தலைப்பட்டதனால் வெளியிலிருந்து மக்கத்துக்கு வியாபாரத் தினிமித்தமாகவும் யாத்திரையி னிமித்தமாகவும் வந்துசெல்லும் மனிதர்க ளிடத்திலேனும் தங்களுடைய பிரசாரத்தைத் திருப்பலாமென்று நபிகள் பெருமான் (சல்) யோசித்துக்கொண் டிருந்தார்கள். ஆனால், அதற்கும் இடங் கொடாமலே அந்தக் :குறைஷிகள் பெருஞ்சூழ்ச்சி செய்துவந்தார்கள்: மக்கத்துக்குள்ளே நுழையக்கூடிய ஒவ்வொரு ரஸ்தாவின் எல்லைப்புறத்தி லும் :குறைஷிகள் தங்களுடைய ஆட்களை நிறுத்தி, வெளியிலிருந்து வரும் மனிதர்களைப் பொய்சொல்லிக் கலைத்துக்கொண் டிருந்தார்கள்: மக்கத்திற் குள்ளே பொல்லாத மந்திரவாதி யொருவன் இருப்பதாகவும், அவனுடைய சூன்ய வார்த்தைக்குச் சற்றும் செவிசாய்க்கக் கூடாதென்றும், மீறிச் சாய்த்து விட்டாலோ, மதிமோசம் வந்துவிடு மென்றும் பயமுறுத் தாட்டு வார்கள். ஆனால், அந்தக் :குறைஷிகள் எத்துணைக் கெத்துணை நபிகள் நாயகத்தின் உபதேசத்திற்குச் செவிதாழ்த்தக் கூடாதென்று கொடிய பிரசாரம் புளுகாகச் செய்து வந்தார்களோ, அத்துணைக் கத்துணை அவர் களுக்கே அவ் வேலையானது இறுதியிலே ஆபத்தை விளைத்துக்கொண் டிருந்தது. என்னெனின், கேட்கவேண்டா மென்ற பிரசங்கத்தையே கேட்டுப்பார்க்க வேண்டுமென்னும், பார்க்கவேண்டா மென்ற "பேர்வழி"யைப் பார்த்துவிட வேண்டுமென்னும் பேரவாவானது வெளியிலிருந்து வந்த வர்த்தகர்களையும் யாத்திரிகர்களையும் பெரிதும் தூண்டிக்கொண் டிருந்ததனால், அவர்க ளெல்லோரும் நம் ரஸூல் நாயகத்தின் அரிய உபதேசத்தைக் கேட்டு, அந்தச் சத்திய சன்மார்க்கத்தின் உண்மையான போதனைகளையெல்லாம் அரபநாடு முழுதும் சிறுகச்சிறுகப் பரத்தத் தலைப் பட்டனர். இதனால், "நினைக்கக் கேடு தனக்கே!" என்னும் பழமொழி அம் மக்கத்துக் கா'பிர்களுக்கே மிகவு நன்றாகப் பலிக்கத் தலைப்பட்டு விட்டது.

"பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்."— குறள்.

"முற்பகல் கண்டான் பிறன்கேடு தன்கேடு
பிற்பகல் கண்டு விடும்."— பழமொழி.

அபூ'லஹபு'ம் உம்முஜமீலும் நபிகள் நாதருக்கு விரோதமாய்க் கிளர்ச்சி செய்ததுடனே, அபூ'ஸுஃப்யான், அபூ'ஜஹ்ல் — (இவனது இயற்பெயர் உ'ர்வா பி'ன் ஹிஷாமில் மக்''ஜூமீ யென்பதாகும்; பின்னர் அபு'ல் 'ஹகம் ஆயினான்) முதலிய துஷ்டர்களும் ஆங்கு நிகழ்ந்த எதிர்ப் பிரசாரத்தில் சேர்ந்துகொண்டனர். உண்மையிலேயே :குறைஷிக ளெல் லாரும் நபிகள் நாயகத்தின் பிரசார அபிவிருத்தியைக் கண்டு சிறிது திகிஷ்

கொள்ள ஆரம்பித்து விட்டார்கள். என்னெனின், நபிகள் பெருமானது பிரசாரமானது :குறைஷிகளின் பண்டை மார்க்கத்தை மட்டுமே உடைத்தெறிவ தன்றி, அவர்களுடைய ஆட்சி முறையிலேயே ஒருவகைப் புரட்சியை உண்டுபண்ணிவிடு மென்றும் பெரிதும் அஞ்சினார்கள். விக்ரஹங்களை யெல்லாம் நிக்ரஹம் செய்து ஏகநாயகக் கொள்கையை நிலைநிறுத்த வேண்டுமென்பதுதான் நபிகள் நாயகத்தின் ஒரே நோக்கமாகக் காணப்பட்டு வந்தது. ஆனால், அவ் விக்ரஹங்களைக் கொண்டுதான் மக்காவிற்கு மதிப்பெல்லாம் இருந்துவருகிற தென்றும், அவற்றை அழித்துவிட்டால் மக்கத்துக்கே மதிப்புக்குறைவு ஏற்படுவ தல்லாமல், அ'ரப்'நாடு முழுமைக்குமே ஆபத்து வந்துவிடு மென்றும் அஞ்சினார்கள். முக்கியமான விக்ரஹங்க ளெல்லாம் தங்களிடமே யிருப்பதனால் மக்கத்துக் கு'ப்'பார்கள் தங்களை "அஹ்லுல்லாஹ்" (ஆண்டவனுடைய குடும்பத்தினர்) என்றுசொல்லிப் பெருமையும் பாராட்டி வந்தார்கள். ஆகலின், அந்நகரத் தலைவர்க ளெல்லாரும் இந்த மு'ஹம்மதை' ஒரு பெரிய அபாயகரமுள்ள ராஜதுரோகக் கிளர்ச்சிக்காரர் என்றே தீர்மானித்து விட்டார்கள். என்னெனின், அன்னவர் ஆதியில் நபித்துவத்தின் தன்மையையே உணர்ந்துகொள்ள முடியாதவர்களா யிருந்து வந்தனர். அன்றியும், நன்மைக்குரிய நல்ல பிரதிப் பிரயோஜனத்தையும், தீமைக்குரிய தீய தண்டனையையும் ஏற்றுக்கொள்ளாம லிருந்தனர். இவ்விஷயம் மரணமடைந்தபின்னே மனிதனுக் குண்டாகப் போகும் காரியமா யிருத்தலினால், இஃதொரு பரிகாசத்திற்குரிய பைத்தியக்காரத்தனமா யிருக்கிற தென்றே யெண்ணி யிருந்தனர். அதுவேயு மன்றி, அரப்தேசத்தின் வழக்கத்திற்கேற்ப, ப'னூஹாஷிம் வர்க்கத்தவர்மீது வேறுபல கூட்டத்தினர் பகைமை கொண்டிருந்தனர். எனவே, தங்கள் பகைவர்களின் குடும்பத்திலே தோன்றிய ஒருவரின் வார்த்தையைக் கேட்டு ஏனைவர்க்கத்தார் நடப்பதென்றால், இதனை மஹா கேவலமான ஒரு பெரிய விஷயமென்றே எண்ணிக்கொண் டிருந்தனர். இந்துஸ்தானத்தில் பலர் கூறிவருவதே போல, விக்ரஹவணக்கமே தங்களுக்குப் போதுமானதென்றும், இதைப் பார்க்கினும் மேலான பயபக்தி விசுவாசமுள்ள ஒரு சன்மார்க்கம் இருக்கவும் முடியாதென்றும் எண்ணி யிருந்தனர். அதுவுமல்லாமல், வியபிசாரம், சூதுபோர், வழிப்பறி, கொள்ளை, களவாடல், வாக்குறுதிக்கு விரோதம் செய்தல், தாந்தோன்றித் தம்பிரான்களாய்த் திரிதல், எச்சட்டத்துக்கும் எவருக்கும் கட்டுப்படாத் தன்மை, கணக்கற்ற பெண்களை வீட்டில் "வைப்பாக" வைத்துக்கொண் டிருத்தல் போன்றவை யெல்லாம் அன்னவர்பால் அப்படியே ஊன்றிக் கிடந்தன. ஆனால், இஸ்லாமோ, அவற்றினை யெல்லாம் ஒழிக்கவே தோன்றி யிருக்கின்றதென்றால், இதற்கு எதிராக நில்லாமல், அவர்கள் வேறென்னதான் செய்வார்கள்? தங்கள் குடிக்கே ஆபத்து வந்துவிட்டதென் றெண்ணத் துணிந்துவிட்டார்கள்,

இந்த நபியின் நல்லுபதேசத்தால் எல்லா மனிதர்களும் ஏக சகோதர விசுவ கோஷ்டியைச் சார்ந்தவராகவே கருதப்பட்டார்கள்; இதனுல் பெரிய மனிதன் சிறிய மனிதன், பணக்காரன் ஏழை, ஆண்டான் அடிமை, முதலாளி தொழிலாளி போன்ற சமுதாயக் கட்டுப்பாடுக ளெல்லாமும் குலைந்து விடுமென்றும் பெரிதும் அஞ்சினுர்கள். ஆகவே, அத்தகைய முழுமோசமான துர்ப் பிரசாரத்தை(?) ஆதிமுதற் கொண்டே அழித் தொழித்துவிட வேண்டுமென்ற ஆலோசனைகளை யெல்லாம் அந்நகர மாக்க ளனைவரும் பெரிதாகச் செய்யத் தொடங்கினுர்கள்.

நபிகள் பெருமான் தெருவழியே செல்லுங்கால், எதிரிக ளெல்லாரும் அதிக பரிகாசத்துடனே மிக்க ஏளனஞ் செய்வார்கள். பித்த ரென்றும், பிடிவாதக்கார ரென்றும், மந்திரவாதி யென்றும், மகா சூன்னியக்கார ரென்றும், ஜின் பைசாசம் முதலியவற்றின் தாக்குதலால் சித்தபிரேமை கொண்டவ ரென்றும் பொய்யாகப் பழிதூற்றுவார்கள். நபிகள் பெருமான் உபதேசம் செய்யத் தொடங்கினுல், எதிரிக ளனைவரும் கூடிக்கொண்டு பெருங்கூச்சல் கிளப்பி, அவர்களுடைய தொனி யொன்றும் வெளியில் கேளாவண்ணம் அமுக்கிவிடுவார்கள். ஆண்டவன் வ'ஹீயாலே அருளப் படும் :குர்ஆன் திருவாக்கியங்களையும் ஓதிக்காட்ட இடங்கொடாது, இடை யில் பெருங் கூச்சல் செய்து கலைத்துவிடுவார்கள். துஷ்டத்தனமான வசை மொழிகளையும், தூஷணையான பாட்டுக்களையும் அதிகம் தூற்றிப் பரத்து வார்கள். இன்னம், குப்பை, கூளம், மண், சாணம் முதலிய அசுசிகளை யெல்லாம் அவர்கள்மீது வாரி யிறைப்பார்கள். கஃ'ப்'ாவிற்குச் சென்று ஆண்டவனைத் தொழுது கொள்வதற்கும் இடங்கொடாது இம்சை செய் வார்கள். எம் ரஸூலுல்லாவைப்பற்றி, இழிவான பாடல்களை இட்டுக் கட்டு வதில் அ'ம்ரிப்'னுல் ஆ'ஸே அதுசமயம் அதிகமதிகம் தலைசிறந்து விளங்கி வந்தார்.— (பிறகு இஸ்லாத்தில் சேர்ந்து எகிப்தைக் கைப்பற்றியவர் இவரே).

இவ்வாறெல்லாம் செய்துவருவதனுல் மு'ஹம்மத்'நபியின் (சல்) உற்றுர் உறவின ரெல்லாரும் அவர்களைக் கைவிட்டு விடுவார்க ளென்று அந்தக் :குறைஷிக ளனைவரும் அதிக ஆவலுடனே எதிர்பார்த் திருந்தார்கள்; ஆனுல், அபூ'த்தாலிப்' அவர்கள் தங்களுக்குரிய பண்டை மார்க்கத்தை விட்டுவிடத் துணியாவிட்ட போதினும், தங்களுடைய தம்பிமைந்தரை ஊரார் படுத்திவைக்கும் பாட்டை யெல்லாம் பார்த்துக்கொண்டு, இனி வாளா இருப்பது முடியா தென்று கண்டு வெளியில் வந்து, பகிரங்கமாக நபிகள் நாதரைக் காப்பாற்றத் துணிந்தார்கள். அநாதக் குழந்தைகளுக்கும், அகதியான விதவைகளுக்கும் அதிகம் உதவிபுரிந்துவந்த "அல் அமீன்" என்னும் சத்தியசீலரை அவ்வாறு :குறைஷிகள் துன்புறுத்துவது கூடா தென்று அதிக தைரியமாய்க்கூற ஆரம்பித்தார்கள். இனியும் :குறைஷிகள் அவ்வாறு அவரைத் துன்புறுத்துவார்க ளாயின், ஹாஷிம் குடும்பத்தி

னரும், முத்தலிப்' குடும்பத்தினரும் தங்கள் உயிர்களைக் கொடுத்தேனும் அந்தக் குற்றமற்ற பெரியாரைக் காப்பாற்ற வேண்டியதா யிருக்குமென்றும் அச்சுறுத்தினார்கள்.

அதே சமயத்தில் ய:த்ரிபி'லிருந்த தலைவரொருவர் மக்காவின் :குறைஷி களுக்கு ஒரு நிருபம் விடுத்து, முன்னோர்களின் சரித்திரங்களை யெல்லாம் எடுத்துக் காண்பித்து, உள்நாட்டுக் கலகங்களையும் யுத்தங்களையும் கிளப்ப வேண்டா மென்று வேண்டிக் கொண்டார். "கண்ணிய மிக்க மனித ரொருவர் தமக்குரிய மார்க்கம் ஒன்றைத் தழுவினால், ஏன் அவரைத் துன் புறுத்த வேண்டும்? மனிதனுடைய உள்ளத்தை உணரக்கூடியவன் சர்வ லோக சரண்யனான அந்த ஆண்டவன் ஒருவனே யாவன்," என்று கூறி, அப் பெரியாரின் உபதேசங்களுக்குச் சிறிது செவிசாய்க்கும் படியாகவும் கேட்டுக்கொண் டிருந்தார். இதைக் கண்டு :குறைஷிகள் சிறிதுபோழ்து மட்டுமே சும்மா இருந்தார்கள். அதன்பின்பு மீண்டும் நபிகள் பெருமானைத் தொந்தரை செய்ய ஆரம்பித்து விட்டார்கள். கஃ'ப'ாவில் தொழக் கூடா தென்று தடுத்துவிட்டதோடு நில்லாது, அந்தக் :குறைஷிக ளெல்லாரும் நபிகள் நாயகம் செல்லுமிடங்களுக் கெல்லாம் பின்தொடர்ந்து சென்று, அவர்கள்மீதும், அவர்களுடைய சிஷ்யர்கள்மீதும், அவர்கள் தொழுது கொண் டிருக்கும் காலத்திலும் அசுத்தங்களையும் குப்பை கூளங்களையும் வாரிப் போடுவார்கள். சிறுவர்களையும் போக்கிரிகளையும் தூண்டிவிட்டு, அவர்களைக் கல்லா லெறிந்து இம்சிக்கச் செய்வார்கள். அவர்கள் நடக்கும் பாதைகளி லெல்லாம் முட்களைக் கொண்டுவந்து பரப்பி வைப்பார்கள். அபூ' லஹபி'ன் மனைவியான உம்முஜமீ லென்பாளே இந்த நா'ஜூக்கான ஊழியத்தில் தலைமை ஸ்தானத்தைப் பெற்றுவிளங்கினாள்.

இவ்வாறு அந்த மக்கத்துக் கு'ப்'பார்கள் செய்துவந்த கொடுமை தாளாது நபிகள்திலகமும் (சல்) அவர்களுடைய ச'ஹாப'ாக்களும் (சுமார் 40-க்கு மேற்பட்டவர்கள்)ச'பாமலைமீதிருந்த அர்:க்:கம் (ரலி') அவர்களுடைய இல்லத்துக் குள்ளேயே யிருந்துகொண்டு, ஆங்கிருந்தவாறே தெய்வ வணக் கங்களையும், தங்கள் சுத்த சத்திய பிரசாரத்தையும் செய்துவந்தார்கள். ஒருவர் மற்ற மனிதர்கள் செல்லும் பாட்டை தமக்குப் பிடித்தமா யில்லை யென்று கண்டு, தாமொரு புதிய பாட்டையில் செல்லத் துணிவராயின், ஏன் இவ்வுலகிலுள்ள ஏனைய மாக்கள் அவரைச் சும்மா விடுவ தில்லை? உடனே தம்முடைய பழைய பாட்டைக ளெல்லாம் பாழடைந்து விடுகின் றன வென்று பேரோலமிட் டலையத் தலைப்பட்டு விடுகின்றனர். இதுதான் இவ்வகில மாக்களின் இழிய தன்மைபோலும்!

நுபு'வ்வத் அருளப் பெற்றதன் பின்பு நான்காவது ஆண்டிலே நபிகள் பெருமானவர்கள் அர்:க்:கம் (ரலி') அவர்கள் விடுதியுள் ளிருந்துகொண்டே அந்தரங்கத்திலே தங்கள் தீ'னுக்குரிய பிரசாரத்தை மகா இரகசியமாகச் செய்து வந்தார்கள். ஆயினும், மக்கத்துக் கு'ப்'பார்கள் மட்டும் தங்க

ளுடைய வர்மத்தை விட்டுவிட்டனரில்லை. நபிகள் திலகம், அவர்களை நன்மாராயத்தின் பக்கல் வந்து ஈடேற்றம் பெறவேண்டுமென்றும், அவ்வாறு அவர்கள் செய்துகொள்ளத் தவறிவிடுவார்களாயின், நரகத்தீக்கே ஆளாவார்களென்றும் வாய்மொழியுபதேசம் செய்துகொண்டிருந்தவரையில் அப்பெருமானாரின் போதனைகளை யெல்லாம் அதிக அலக்ஷியத்துடனும் மிக்க உதாசினத்துடனுமே ஏளனஞ் செய்து வந்தார்கள். ஆனால், அன்னவரின் விக்ரஹச் சுவாமிகளெல்லாம் வீண் மூர்த்திகளே யென்றும், அவற்றிற்கு உயிரொன்றுமில்லாத, ஊமையும் குருடும் செவிடுமான, வெறும் உருவங்களே யென்றும் நம்பெருமானார் கூறத் தலைப்பட்டதன் பின்னரே அவர்களுடைய ஆத்திர முழுதும் எல்லைகடந்து விட்டதேபோல் கொழுந்து விட்டெரியத் தலைப்பட்டு விட்டது. இவ்வாறு அவ் விக்ரஹங்களைத் தூஷிப்பதனால்(?) அவற்றின் மகிமை குறைந்து, அதனால் மக்கத்துக்:குறைஷிகளுக்குக் கிடைக்கக்கூடிய ஏராளமான வருவாயும் இல்லாமற் போய்விடுமென்றும் ஏக்கங் கொண்டு விட்டனர். இத்தகைய சுயநய நஷ்டமே, இங்குள்ள அவ்லியா தர்காக்களி லுள்ள "சாபுமார்" களுக்கு வேதனையளிப்பதேபோல், அவர்களுக்கு அத்துணைப் பெரிய கஷ்டத்தை உண்டு பண்ணிக்கொண்டே யிருந்தது. மேலும், தங்களுடைய மூதாதையரின் மார்க்கமாகிய விக்ரஹ ஆராதனையை விட்டுவிடுவதனால் தங்களுக்குப் பெரிய கேடுண்டாகுமென்றும் திகில்கொண்டு விட்டார்கள். "ஆகாத காலத்துக்கு அன்ன துவேஷம், போதாத காலத்துக்குப் பிரம்ம துவேஷம்" என்னுமாபோன்று, தங்கள் தேவதைகளை மு'ஹம்மத்' (சல்) தூஷிப்பதால்(?) தங்களுக்குப் பேராபத்து விளைந்துவிடுமென்று பெரிதும் அஞ்சினார்கள்.

ஆனால், அப்படிப்பட்ட விக்ரஹத் தொழும்பர்களான :குறைஷிகளுள் ளெல்லாம் அபூ'த்தாலிப்' ஒருவரே தங்கள் தம்பிமைந்தர்மீது அளவற்ற அபிமானம் பாராட்டி வந்தார்கள். :குறைஷிகளுள் ஒருசில தலைவர்கள், உண்மையிலேயே மு'ஹம்மத்' (சல்) தவறானவழியிலே நடந்துசெல்கின்றார் என்று எண்ணிக்கொண்டிருந்தமையான், தங்கள் நல்லெண்ணத்தின் காரணமாக எப்படியேனும் இம் மு'ஹம்மதை' நேரான தங்கள் வழியிலே திருப்பிக் கொண்டுவந்து விடலாமென் றெண்ணி யிருந்தனர். எனவே, அப் பெரியார் (அபூ'த்தாலிப்') தங்களுடனே சேர்ந்துகொள்ளாது, தங்களையே தூஷித்து வருவதைக்கண்டு, மற்றைக் :குறைஷிக ளெல்லாரும் அன்னவர் மாட்டு அதிகமான அதிருப்தி கொண்டிருந்தார்கள். ஆனால், அவரை ஒன்றும் செய்வதற் கியலாது, தங்களுடைய தலைவருள் சிலரைத் தூதாக அனுப்பி, அவரைக்கொண்டு நம்மு'ஹம்மதைத் திருத்திவிடலா மென்று எண்ணினார்கள். ஆகலின், அத் தலைவர்கள் அபூ'த்தாலி ப்'வர்களிடம் சென்று பின்வருமாறு கேட்டுக் கொண்டார்கள் :—

"ஏ அபூ'த்தாலிப்'! உம்முடைய தம்பிமைந்தர் நம்முடைய தெய்வங்களையும், தெய்வக் கோட்பாடுகளையும் இடித்தும் இழித்துங் கூறுகின்றார்.

எங்களுடைய முன்னோர்களின் சமய சம்பிரதாயங்களை யெல்லாம் மிகவாக ஏளனம் பண்ணுகின்றார். ஆதலின், நாங்கள் அவரைத் தொலைத்துவிட வேண்டும்; அல்லது நீர் ஒதுங்கி யிருப்பீராயின், நாங்கள் எங்கள் மனம் போனவாறு அவரைத் துன்புறுத்தி ஒழித்துவிடல் வேண்டும். அவருடைய மதக்கொள்கையில் உங்களுக்கே நம்பிக்கை யில்லாதபோது, நீங்களே ஏன் அவரைவிட்டு எங்கள்கக்ஷியில் சேர்ந்துகொள்வது கூடாது?" இதைக் கேட்டவுடனே அபூ'த்தாலிப்' அக் :குறைஷிகளுக்கு மரியாதையான சமாதான மொன்று கூறி, அவர்களைச் சாந்தப்படுத்தித் திருப்பியனுப்பி விட்டார்கள்.

ஆயினும், நபிகள் பெருமானார் மட்டும் தங்களுடைய நல்லுபதேசப் பிரசாரத்தை ஒருசிறிதும் தளர்த்திவிட வில்லை. ஆதலின், :குறைஷிக ளுக்கும் அதன்பின்னே நாளுக்குநாள் விஷம், ஏன்! விஷமங்கூட ஏறிக் கொண்டே வந்தது. எனவே, இனியும் சும்மா இருப்பது தகாதெனக் கொண்டு, மீண்டும் ஒருமுறை அக் :குறைஷிகள் தங்கள் தலைவர்களுள் முக்கியஸ்தர்களான சிலரைப் பொறுக்கி யெடுத்து அனுப்பிவைத்தார்கள். உ'த்ப'ா பி'ன் ரபீ'ஆ', ஷைப'ா, அபூ'ஸுப்'யான், ஆ'ஸ் பி'ன் ஹிஷாம், அபூ'ஜஹ்ல், வலீத்' பி'ன் மு:கீரா, ஆ'ஸ் பி'ன் வாயில் முதலியவர்கள் சென்று இவ்வாறு தங்கள் அபிப்பிராயத்தை அபூ'த்தாலிபி'டம் அறிவித் தார்கள்:— "தங்கள் வயதுக்கும் அந்தஸ்துக்கும் பெருந்தன்மைக்கும் நாங்கள் அளவுகடந்த மரியாதை காட்டி வருகின்றோம்; ஆனால், எங்களுக் குத் தொந்தரை செய்யாமல் தங்கள் தம்பிமைந்தரைத் தடுத்து வைக்குமாறு பெரிதும் வேண்டிக் கொண்டோம்; எனினும், இதுவரை தாங்கள் அவ் வாறு ஒன்றும் செய்யக் காணோம். எங்கள் தெய்வங்களையும் எங்களையும் அவர் அடிக்கடி தூஷித்துக் கொண்டே(?) வருகின்றார். இதனை இனிச் சகிப்பது எங்களால் ஒருசிறிதும் முடியாது. ஆகவே, நீர் அவருக்கும் எங்க ளுக்கு மிடையே முட்டுக்கட்டையாய் நில்லாது சற்றே விலகிக் கொண்டு விடல் வேண்டும்; இல்லையேல் நீரும் அவருடனே பகிரங்கமாகச் சேர்ந்து கொண்டு நடுமைதானத்தில் வந்து எங்களுடனே யுத்தம் புரியச் சித்தமா யிருக்க வேண்டும். நம்மிரு கக்ஷியினருள் ஒருகக்ஷியார் ஒழிந்து போகு மட்டும் நாங்கள் செய்யப்போகும் யுத்தம் நிற்கப்போவ தில்லை."

நபிகள் பெருமானவர்கள் உண்மையிலே ஒருபோதும் :குறைஷிகளின் தெய்வங்களைத் தூஷித்துப் பேசிய தில்லை. என்னெனின், இவ்வாறு தூஷணைசெய்வது கூடாதென்று :குர்ஆன் ஷரீ'பிலே (6:109) மிகவிளக்க மாகக் கூறப்பட் டிருக்கிறது: "இன்னம், அன்னவர்கள் அறியாமையால் வரம்பைமீறி அல்லா(ஹ்)வை ஏசாதிருக்கும் பொருட்டு, அல்லா(ஹ்)வை யன்றி அவர்கள் வணங்குகின்றவைகளை நீங்கள் ஏசாதீர்கள்." அன்றுமுதல் இன்றுவரை எமது திருமறையானது சென்ற பதினான்கு நூற்றாண்டுக ளாகவே சுத்த சுயம் பரிசுத்தத்துடனே ஒருசிறிதும் மாற்றமில்லாமலும்

திருத்தமில்லாமலுமே இருந்துவருகின்ற தென்பதை இவ்வுலகு முழுதும் நன்கறிந்து கொண்டுதா னிருக்கிறது. அவ்வழகிய அருமறையின் முத லேடுமுதல் கடை யேடுவரை புரட்டிப் புரட்டிப் பார்த்தபோதினும், அன்னிய மதத்தினரின் தெய்வங்கள் தூஷண மொழிகளால் ஒருசிறிதும் வருணிக்கப்பட்டில்லை யென்பதை நீங்களே நன்கு தெரிந்துகொள்வீர்கள். அவ் விக்ரஹங்களா லெல்லாம் அடியார்களுக் கொன்றும் நன்மையைச் செய்வது முடியா தென்றும், தீமையைத் தடுப்பதும் முடியா தென்றும், பலதெய்வ வணக்கங்களும் விக்ரஹ வணக்கங்களும் தவமுன மார்க்கங்கள் என்றுமேதான் எமது வேதம் இயம்பிக்கொண் டிருக்கின்றது— (25 : 55).* ஆனால், அந்தக் :குறைஷிகள் அபூ'த்தாலிபு'க்கு உரோஷம் உண்டாக வேண்டு மென்றே நபிகள் நாயகத்தின் பிரசாரம் தங்கள் முன்னோர்களின் தெய்வங்களையும் தெய்வக் கோட்பாடுகளையும் தூஷணை (?) செய்வதாகப் பொய்படக்கூறி, விஷமத்தனத்தை அதிகம் உண்டுபண்ணப் பார்த்தனர்.

மீக் கூறியவாறு அந்தக் :குறைஷித் தலைவர்கள் அபூ'த்தாலி ப்'வர்களை யும் விரோதக்கக்ஷியில் சேர்த்துவிடுவதாகப் பயமுறுத் தாட்டிவிட்டுச் சென்று விட்டார்கள். எனவே, அஃதொரு நெருக்கடியான வேளையாகவே உண்மையிலே காணப்பட்டது: ஒருபக்கல் :குறைஷிகளின் பகைமை யானது பயமுறுத் தாட்டிக் கொண்டே யிருந்தது; மற்றொரு பக் கல் தம்பிமைந்தர் மீதுள்ள அபிமானம் என்பது அன்னாரை அதிகக் கவலைக்குள் ளாழ்த்திக் கொண்டே யிருந்தது. ஆகலின், அக்கணமே அபூ'த்தாலி ப்'வர்களுக்கு ஒன்றுந் தோன்றாது இருதலைக் கொள்ளி யெறும்பே போலாய், நம் ரஸூல் நாயகத்தை (சல்) வரவழைத்து விஷயத்தை முழுமையாய் விளக்கிக் காண்பித்தார்கள். அதன் பின்பு, "ஏ என் அருமைத் தம்பி மைந்த! நம்முடைய சகோதரக் :குறைஷிக ளெல்லாரும் என்னிடம் வந்து சில பயமுறுத் தாட்டல்களைக் கூறிவிட்டுச் சென்றிருக்கின்றார்கள். ஆகலின், நீர் சிந்தித்துப் பார்க்கக் கடவீர். என்மீது இரக்கங் கொள்வீராக; உம்மீதும் இரக்கங் காட்டக் கடவீர். என்னால் இனித் தாங்கமுடியாத சுமையை என்மீது சுமத்தி விடாதீர். :குறைஷிக ளெல்லாரும் ஒன்றுசேர்ந்து எதிர்த்து வருவார்க ளாயின், என்னா லொன்றும் தனியே செய்வது சாலாது. இதுவோ மிக்க நெருக்கடியான சமயமா யிருக்கிறது," என்று மிகவும் பரிதாபத்துடனே இரங்கிக் கூறினின்றார்.

என்ன நெருக்கடியான நிலைமை! :குறைஷ்குலம் முழுதுமே நபிபெரு மானின் இரத்தத்தை உறுஞ்சிச் சப்பச் சமயம் பார்த்துக்கொண் டிருக் கின்றது. அபூ'த்தாலிப்' என்பார்மட்டும் இடையிலே இல்லாதிருக்கும்

* "இன்னம், அன்னவர்கள், தங்களுக்குப் பிரயோஜன மொன்றும் செய்ய இயலா மலும், தீங்கொன்றும் புரிய முடியாமலும் இருப்பதையே அல்லா(ஹ்)வையன்றி வணங்கு கிறார்கள்."

பக்ஷத்தில் அவ்வெதிரிக ளனைவரும் பட்டப் பகலிலேயே நபிகள் நாயகத்தைத் திட்டமாக வதைத் திருப்பார்கள். ஆனால், அந்தோ! இப்பொழுது அபூ'த்தாலிபி'ன் ஆதரவும் அற்றுப் போய்விடும்போலே காணப்படா நின்றது! இனி இவ்வுலக மக்கள் எவருடைய ஆதரவும் அவர்களுக் கில்லாமற் போய்விடப் போகின்றது! நபிபெருமானின்(சல்) சிஷ்யர்கள்பாலும் இப் பெரும் பகைமையை எதிர்த்தற்குரிய வன்மை யொன்றும் காணப்படவில்லை. அப்படிப்பட்ட தருணத்திலே தாமரையிலை நீரேபோல் தத்தளித்து நின்ற நபிகள்பெருமானார் (சல்) மட்டும் ஆண்டவ னுதவியின்றி வெறும் சாமான்ய மனிதரா யிருந்திருப்பார்க ளாயின், அவர்களுடைய உள்ளங் குன்றி, உடலமும் தளர்ந்துபோ யிருக்கும். வேறு சாதாரண மக்கள் இப்படிப்பட்ட நெருக்கடியான சந்தர்ப்பங்களில் தங்களுடைய உயிரைத் தற்சமயமே காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டு எதிரிகளுடனே ஏதேனுமொரு வகையில் சமாதானம் செய்துகொண்டு, அக்கணமே மற்றொரு பாதுகாப்புள்ள ஸ்தலத்துக்குச் சென்று, ஆங்கிருந்தே தங்கள் பிரசார வேலையை ஆரம்பித்திருப்பார்கள். அத்தகைய நெருக்கடியான வேளையிலே எத்தகைய தந்திர சூழ்ச்சியும் இவ்வுலக மன்பதைகளால் "புத்திசாலித்தன" மென்றே கருதப்படக் கூடுமாயினும், அவ்வா றெல்லாம் அல்லா(ஹ்)வின் திருத்தூதரான அ'ஹ்மத்' முஜ்தப'ா மு'ஹம்மத்' முஸ்த'பா ரஸூல் (சல்) அவர்கள் அணுத்துணையும் எண்ணினார்க ளென்று நினைக்கின்றீர்கள்? அப்படிப்பட்ட சபலமொன்றும் அவர்களுடைய எஃகு சித்தத்தைக் கலக்கத் துணிந்திற் றிலது. என்னெனின், அல்லா(ஹ்)வின்மீது அவர்கள் வைத்திருந்த ஆணித்தரமான ஆழிய நம்பிக்கையை இவ்வுலக "நிர்ப்பந்தம்" ஒன்றும் அசைத்துவிட மாட்டாதென்பதே திண்ணம். எனவே, அந்த அல்லா(ஹ்)வின் சத்திய சன்மார்க்கத்தை இவ்வுலக மக்களுக்கு எடுத்தோதும் விஷயத்தில் அணுத்துணையேனும் நம் நபிகள் பெருமான் விட்டுக் கொடுத்திருப்பார்களென்று எண்ணுகின்றீர்கள்?

ஆகவே, அபூ'த்தாலி ப'வர்கள் கூறிய அதைரிய மொழியைச் செவியேற்றவுடனே நபிகள்திலகமவர்கள்(சல்) அதிகதைரியத்துடனே, "ஏ என் அருமைப் பெரிய தந்தாய்! அல்லா(ஹ்)வின்மீது சத்தியமாக! என் பிரசாரத்தை விட்டுவிடுமாறு என்னைத் தூண்டும் பொருட்டு அவர்கள் சூரியனைக் கொணர்ந்து என் வலக் கரத்தில் வைத்தபோதினும், சந்திரனைக் கொணர்ந்து என் இடக் கரத்தில் வைத்தபோதினும், என் சத்திய சன்மார்க்கப் பிரசாரத்தை ஒருபோதும் ஒருசிறிதும் கைவிட மாட்டேன்," என்றுகூறி, "ஆண்டவனே! இக்காரியத்தில் என்னை நீ வெற்றி பெறுமாறு செய்து வைக்கக் கடவாய்! இன்றேல், இம்முயற்சியில் என்னை மடியச் செய்துவிடக் கடவாய்!" என்று சொல்லித் தங்கள் நேத்திரங்களில் நீர்ததும்ப அப்புறம் சென்று விட்டார்கள்,

“ பரிதி யைக்கொணர்ந் தணிவலக் கரத்திடை பதித்தும்
அரிதி னிற்சசி கொணர்ந்திடக் கரத்தினில் அமைத்தும்
ஒருமொ ழிப்பட இனத்தவர் ஒருங்குற நெருங்கிப்
பொருத டக்கினும் நும்மனம் பொருந்திலா திருந்தும்,”

“ ஈத லாற்சில இடரெனை யடுக்கினும் இறையோன்
தூத னியானெனச் சுருதியை விளக்குவ தலது
பேதி யாதென தகமென முஹ(ம்)மது பிரியாத்
தாதை யோடுரைத் தன்றிரு விழிம்மழை தயங்க,”

என்று எழிலுற வருணித்துள்ளார் சீறு வென்கின்ற புராணத்துக் குடையாரும்.

தங்களுடைய இத்தகைய மறுமொழியானது, தங்களை மிக்க அருமை பெருமையுடனே வளர்த்துவந்த பெரிய தந்தையாரின் உள்ளத்தை நன்குக ஊறுபடுத்தி யிருக்கு மென்னும் எண்ணமும் எம்பெருமானாரின் மனத்தை அதுசமயம் வாட்டிநின்றது. அபூ’த்தாலிப்’ தம்முடைய முன்னோர்களின் விக்ரஹவணக்க மார்க்கத்தை விட்டு, தீ’னுல் இஸ்லாத்தின் பக்கல் திரும்பி யிரா விட்டபோதினும், தம்முடைய தம்பிமைந்தரின் குணதிசயத்தின்மீது கொண்டிருந்த மட்டற்ற அபிமானத்துக்கு மட்டும் கங்குகரை யென்பன ஒருசிறிதும் காணப்பட்டதே யில்லை. ஆதலின், அப்படிப்பட்ட தம்பியின் தனயரை ஒருகணமேனும் விட்டுப் பிரிந்திருப்பதைப் பார்க்கினும், தம் முடைய உயிரையே விட்டுவிடத் துணியினும் துணிவர் என்றே கூறி முடிக்கலாம். ஆகவே, அப் பெரியார் அப்பொழுதே நபிகள் நாயகத்தைத் திரும்ப அழைத்து, “என் னருமந்த மைந்த! நீர் நும்முடைய விருப்பம் போலே செய்துவரக் கடவீர். இனி என்னவரினும் வருக! ஆண்டவன் மீது ஆணையாக, யான்மட்டும் உம்மைக் கைவிட மாட்டேன், கைவிட மாட்டேன்!” என்று உறுதிமொழிகூறி அனுப்பி வைத்தார்கள்.

:குறைஷிகள் தங்கள் தலைவர்களின் மூலமாய் அபூ’த்தாலிப்’ அவர்களைப் பயமுறுத்தாட்டியதி லிருந்து அப்பெரியார் தந் தம்பி மைந்தரைத் தங்கள் கைவயம் ஒப்புவித்து விடுவாரென்று அதிக ஆவலுடனே எதிர் பார்த் திருந்தார்கள். ஆனால், இனி என்ன நேர்ந்த போதினும் அத் தம்பி யின் குமாரரை ஒருபோதும் கைவிடுவ தில்லையென்று அபூ’த்தாலிப்’ கூறிய உறுதிமொழியைக் கேள்வியுற்று, இலவுகாத்த கிளியே போல, அதிக ஏமாற்றமும் அளவற்ற ஆச்சரியமும் கொண்டு விட்டார்கள். தங்களுக் குள்ளே குடும்பசம்பந்தமான போர்களைக் கிளப்புவதும் மகா ஆபத்தாகவே வந்துவிளையு மென்பதைக் கண்டும் சிறிது மனந் துளங்கினர்கள். என் னெனின், இத்தகைய உள்ளூர்க் கலகத்தால் தங்களுக்குள்ள தலைமைப் பதவியும் பாதிக்கப்படு மென்றும் பெரிதும் அஞ்சினர்கள். அன்றியும், யுத்தங்கள் பல தொடர்ச்சியாய்ச் செய்துகொண் டிருந்தமையால்தான்

சமீபகாலத்திலே இனி யவை வேண்டா மென்பதற்காக 'ஹில்'புல் 'பு'ஜூல் என்னும் யுத்தநிறுத்த ஒப்பந்தத்தையும் எல்லாரும் ஏகோபித்துச் செய்துகொண் டிருந்தனர். ஆகலின், இனியொரு முறையும் அபூ'த்தாலிபைப் பயமுறுத் தாட்டாது நயவஞ்சகமாய் ஏமாற்றிவிடலா மென்றே எண்ணினார்கள். எனவே, அவர்கள் அ'ம்மாரா பி'ன் வலீத்' என்னும் வாலிபரை அழைத்துக்கொண்டு அபூ'த்தாலிபி'டம் சென்று பின்வருமாறு பேசலுற்றார்கள் :—

"ஏ அபூ'த்தாலிப்'! மக்காவிலுள்ள வாலிபர்களுள் ளெல்லாம் அதிக அழகும் பெரிய புகழும் பெற்றிருக்கும் அ'ம்மாரா பி'ன் வலீதெ'ன்னும் இவரைத் தங்களுக்காகக் கொண்டுவந் திருக்கிறோம். இவரைத் தாங்கள் ஸ்வீகாரமாக எடுத்துக் கொள்ளுங்கள். இவருக்குப் பதிலாகத் தாங்கள் வளர்த்துவரும் தங்கள் தம்பிமைந்தரைக் கொடுத்து விடுங்கள். நாங்கள் அவரை 'வேலை தீர்க்க' வேண்டும். என்னெனின், அன்னவர் நம்முடைய மூதாதையரின் மதத்தைத் தூஷிக்கின்றார்." இதைக் கேட்டவுடனே அபூ'த்தாலி ப்'வர்கள் நகைத்துக் கொண்டே, "நீங்கள் கூறும் யோசனை மிகவு நன்றாயிருக்கிறது! உங்கள் குமாரனை நான் ஊணும் உடையும் கொடுத்துப் பேணிக் காத்து வளர்க்குமாறு என்னிடம் விட்டுவிடுவீர்கள்; அதற்கு மாறாக என்னுடைய குமாரரை நீங்கள் கொலை செய்யும் பொருட்டு உங்களிடம் நான் அவரைக் கொடுத்துவிடல் வேண்டும்.* இஃது ஒரு போதும் முடியக்கூடிய காரியமன்று. முடியாது! முடியாது! ஆண்டவன் மீது ஆணையாக, ஒருபோதும் முடியாது!" என்று அதிக அழுத்தமான மறுமொழியைத் திருத்தமாகக் கூறிவிட்டார்கள்.

மூன்றாவது முறையாகவும் அந்தக் :குறைஷிகள் அவமானத்துடனே ஏமாற்றமடைந்து திரும்பினார்கள். அதன்பின்னே, அந்தக் :குறைஷியரால் ப'னூ ஹாஷிம் குடும்பத்தினருக்கே ஏதேனும் கொடிய சங்கடங்கள் நேரிடக்கூடுமென் றெண்ணி, அபூ'த்தாலிப்' உடனே தங் குடும்பத்தினர் எல்லாரையும் வரவழைத்து, இனிவரப் போகும் அபாயத்தைக் குறித்து எச்சரிக்கை செய்து வைத்தார்கள். அந்தக் :குறைஷிகள் ப'னூ ஹாஷிம் குடும்பத்தினருக்கு விரோதமாக எப்படிப்பட்ட துன்பங்களை இழைக்க நேரிட்ட போதினும், நபிகள் நாதரைமட்டும் எதிரிகள்வயம் ஒருகாலும் ஒப்புக்கொடுத்து விடுவதில்லை யென்று ஒரேமுடிபாகத் தீர்மானம் செய்து கொண்டார்கள். ஏனைக் :குறைஷிகளுடனே சேர்ந்துகொண்ட அபூ'லஹப்' ஒருவனைத் தவிர்த்து மற்றெல்லா ப'னூ ஹாஷிம் வம்சத்தினரும் நபிகள் பெருமானைத் தற்காக்க வேண்டுமென்னும் கக்ஷியிலேயே சேர்ந்துகொண்டார்கள். இதனால் நம் நபிகள்திலகத்திடம்(சல்) அக்குடும்பத்தின ரனைவரும் எத்துணைப்பெரிய மதிப்பு வைத்திருந்தார்க ளென்று ஈண்டுச் செவ்வனே

*"ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும்" என்னும் முதுமொழிக்கு முரணாயிருக்கிறது அந்த வந்தவர்கள் விண்டுரைத்தது.

நாம் தெரிந்து கொள்ளுகிறோம். நபிகள் நாதரின் உயரிய ஒழுக்கத்தைக் கண்டு அவர்க ளெல்லாரும் அத்துணைப்பெரிய அபிமானம் பாராட்டி வந்தார்கள். ஆதலின், தங்களுக்கும் அந்த நபிபிரானுக்கும் இடையிலே மதசம்பந்தமான அபிப்பிராய பேதங்கள் காணப்பட்டுவந்த போதினும், அவர்க ளனைவரும் அப் பெருமானாரைத் தங்களுக்கு உயிர்க்கிறுதி வருவதா யிருப்பினும், எதிரிகள்வயம் ஒருசிறிதும் காட்டிக் கொடுப்ப தில்லையென்று தீர்மானித்துக் கொண்டார்கள்.

அதன் பின்னே நபிகள் நாயகமவர்கள்(சல்) முன்னினும் பன்மடங்கு அதிகமான ஊக்கத்துடனே தீ'னுல் இஸ்லாத்தைப் பொது ஜனங்களுக்குப் போதித்துவரத் தலைப்பட்டார்கள். விக்ரஹ வணக்கத்தைப் பற்றியும், அந்தக் குப்'பார்களின் கொடுஞ் செயல் களைப் பற்றியும் மிகமிகக் கண்டித்துப் பேசினார்கள். ஏக நாயகனையே வணங்கவேண்டு மென்றும், மற்றைச் சகோதரர்மாட்டு நல்லொழுக்கத்தோடு நடக்கவேண்டு மென்றும் அவர்களுக்கு நல்லுபதேசம் புரிந்துவந்தார்கள். இதனைக் கேட்குந்தோறும் கேட்குந்தோறும் அந்தக் :குறைஷிகளுக் குண்டான ஆத்திரமும் க்ஷாத் திரமும் அளவுகடந்தே பொங்கி யெழுந்தன. தங்களுடைய சாமர்த்தியச் சூழ்வினைகளா லெல்லாம் மு'ஹம்மதை'ச் சும்மா இருக்கும்படி செய்ய முடியவில்லை என்பதைக் கண்டுகொண்ட அந்தக் :குறைஷிகள் மீண்டும் அன்னாரைத் துன்புறுத்தத் தொடங்கி விட்டார்கள்.

கஃ'ப'த்துல்லாவுக்கு யாத்திரிகர்கள் விஜயம் செய்யக்கூடிய யாத்திரா பர்வம் (மௌஸம்) நெருங்கி வருவதைக் கண்டு, அவர்க ளெல்லாரும் வலீத்'ப்'னு மு!கீரா என்பானது விடுதியில் ஒரு பொதுக்கூட்டங் கூடி, அந்த மௌஸத்தின்போது அவர்க ளனைவரும் மு'ஹம்மதி'ன் சம்பந்த மாக எவ்வாறு நடந்துகொள்ள வேண்டுமென்று தீர்மானிக்கப் பார்த்தனர். இதுகாறும் செய்து வந்ததேபோல் சட்டதிட்ட மொன்று மில்லாமல் கண்டகண்ட விடங்களில் காண்பவ ரெல்லாம் கண்ட கண்டவாறு மு'ஹம்மதை' இம்சிப்ப தென்றால், அது சரியன்று. இதற்கென்றே இனித் தனியான ஒரு "கம்மிட்டி" இருக்க வேண்டியது அவசியமென்றே அத்தகைய கம்மிட்டி யொன்றைக் :குறைஷிகள் நிர்மாணித்தார்கள். அதற்கு அபூ'லஹப்' — (நாயகமவர்களின் பெரியதந்தை) என்பானே அக்கிராசனப்பதவியை ஏற்றுக்கொண்டிருந்தான். இவனல்லாமல் இன்னம் 25 :குறைஷித் தலைவர்கள் இக் கம்மிட்டியின் அங்கத்தினர்களா யிருந்தனர். அவர்களுள் ஒருவனான தள்ளாத கிழ வயோதிகன் வலீதென்பான், "ஏ :குறைஷியர்காள்! இப்பொழுது வரும் மௌஸம் மக்காவிற் குள்ளே எண்ணிறந்த யாத்திரிகர்களைக் கொண்டுவந்து சேர்க்கும். இதுவரை அவர்கள் நிச்சயமாக மு'ஹம்மதைப்' பற்றிக் கேள்வியுற் றிருப்பார்கள். ஆதலின், அவர்கள் இப்பொழுது இவரைப்பற்றிச் சந்தேகமில்லாது வினவு வார்கள். நீங்கள் அதற்கென்ன விடைகொடுக்கப் போகின்றீர்கள்? நீங்க

ளெல்லீரும் ஒருவரோ டொருவர் வேற்றுமை யில்லாது ஒற்றுமையான வழியையே கடைப்பிடித்தல் வேண்டும். நீங்கள் சிறிதும் வேற்றுமைப் படுவீர்களாயின், உங்கள் சொல்லுக்கு மதிப்பில்லாமற் போய் விடும்," என்று கூறினான். அதைக் கேட்டவுடனே, "ஏ வலீத்'! நீர் தாம் எங்களுக் கோர் ஆலோசனை கூறவேண்டும்," என்று ஆங்குக் கூடியிருந்தவர்கள் மறு மொழி யளித்தார்கள்.

"நீங்களே முதலில் சொல்ல வேண்டும்; உங்கள் அபிப்பிராயத்தைக் கேட்டதன் பின்னரே நான் என்னுடைய அபிப்பிராயத்தைச் சொல்லு வேன்," என்று வலீத்' கிழவன்கூறினான். "அப்படியானால், மு'ஹம்மத்' ஒரு புலவரென்று நாங்கள் சொல்லுவோம்," என்று அக்கூட்டக் :குறைஷிகளுள் ஒருவன் கூறினான். உடனே வலீத்', "இல்லை! இல்லை! இவரொரு புலவ ரில்லை. வித்வான்கள் பாடும் மோனை எதுகை அடி தொடை நடைகளை யெல்லாம் நாம் கவனித்துவந் திருக்கிறோம். ஆனால், இவரது உபதேசமோ, அப்படிப்பட்ட புலவர்களின் நடைநயத்தை ஒருசிறிதும் ஒத்திருக்கவில்லை," என்று கூறினான். "நல்லது! இவரொரு குறிகாரக் கோடங்கி!" என்று இன்ன மொருவன் சொன்னான். "இல்லை! இல்லை! இவரொரு கோடங்கி யில்லை. எல்லாக் கோடங்கிகளும் சொல்வதே போன்ற பொய்யொன்றும் இவர் சொல்வதைக் காணேம். பெரும்பாலும் கோடங்கிகள் பொய்யர்களே. 'முஹம்மத்' பரிசுத்தமாகவும் தூய்மையாகவும் இருப்பதேபோல் குறிகாரர் கள் இருப்பது வழக்கமில்லை. குறிகாரர்களின் மேனியும் உடையும் மகா அருவருப் புள்ளனவாகவும் கேவலமாகவு மல்லவோ இருக்கும்?" என்று கூறினான். "நல்லது! இவருக்குப் பைத்தியம் பிடித்திருக்கிற தென்று சொல் லுவோம்," என்று அவர்கள் செப்பினார்கள். அதைக் கேட்டு வலீத்', "நாமும் பல பைத்தியம் பிடித்தவர்களைப் பார்த்திருக்கிறோம். அவர்களைப் போல இவர் நடிப்பதாய்க் காணப்பட வில்லையே!" என்று மறுமொழி கூறினான். அப்பால், ஆழச் சிந்தித்து, "உண்மையில் இவரது வெற்றி முழுதும் இவருடைய வாசாவினின்று வெளிவரும் மதுரமொழியின் இனிமையையே சார்ந்து நிற்கின்றது. இவரது மொழியைக் கேட்பதனால்தான், தந்தையை விட்டு மைந்தனும், சோதரனை விட்டுச் சோதரனும், பெண்சாதியை விட்டுப் புருடனும் பிரிந்துபோகக் கூடிய துர்ப்பாக்கிய முண்டாகின்றது!" என்று வலீத்' இறுதியாகக் கூறிமுடித்தான்.*

* குறைஷிகள் கூறிய மூன்று விஷயமும் பிடிக்காமல், "வலீத்' அக் கூட்டத்தை விட்டுப் புறப்பட்டுப் போய்விட்டான்; ஆகவே, அவன் இஸ்லாத்தைத் தழுவிக்கொள்ளப் போவதா யெண்ணினர்கள் அக்கிழவனுடைய தோழரெல்லாரும். அபூ'ஜஹ்ல் அவன் பின்னே சென்று விஷயம் என்னவென்று ஆவலுடனே விசாரித்தான்; அதற்கு வலீத்' இவ்வாறு விடை கூறினன்: 'யான் அவ்விஷயங்குறித்து ஆழச் சிந்தித்தேன்; இறுதியிலே மு'ஹம்மத்' ஒரு சூனிய வித்தைக்காரர் (ஸா'ஹிர்) என்ற முடிவிற்கே வந்து சேர்ந்தேன். ஏனென்றால், ஸா'ஹிரே தனயனை விட்டுத் தந்தையையும், அண்ணனை விட்டுத் தம்பியையும்,

"கேட்பார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாம் சொல்,"—

என்றூர் வள்ளுவப் பெரியாரும்.

இவ்வாறு கூறியதைக் கேட்டவுடனே அந்தக் :குறைஷிக ளனைவரும் தங்கள் நெஞ்சின்மீது கையை வைத்துப் பார்த்து, இவ்விறுதியில் கூறப் பட்ட விஷயத்தின் உண்மையை ஒருவாறு ஒத்துக் கொள்ளாமல் இருக்க முடியாமற் போய்விட்டனர். என்னெனின், நபிபெருமானின் பிரசங்க வன்மையின் ஆணித்தரமான அழுத்தத்தைக் கண்டு ஒருவரும் ஆச்சரியங் கொள்ளா திருப்பது முடியாது. :குறைஷிகள் தங்கள் மூர்க்கப் பிடிவாத குணத்தினுலேயே ரஸூலுல்லாவின் நல்லுபதேசத்துக்குச் செவிதாழ்த்தாது மாறுபாடாக இருந்துவந்தார்களே யல்லது, வேறொன்று மில்லை. ஆனுல், அதுசமயம் :குறைஷிகள் தங்களுக்குள்ளே ஒரு முடிபுக்கு வரவேண்டிய "அவசரம்" ஏற்பட்டு விட்டது. ஆதலின், அவர்க ளெல்லாரும் அப்பொழுதே இம் மாதிரியான ஒரே முடிபுக்கு வந்துசேர்ந்தார்கள் :— "மு'ஹம்மதி'டத்தில் ஏராளமான வாக்கு வன்மையும் வசீகரண (மெஸ்மெரிஸ) சக்தியும் அமைந் திருக்கின்றன. இவற்றைக் கொண்டு அவர் பல குடும்பங்களில் கலகத்தை யுண்டுபண்ணி, சகோதரருள்ளும், தந்தை தனயருள்ளும், கணவன் மனைவியருள்ளும் அபிப்பிராய பேதங்களை யுண்டுபண்ணி விகற்பத்தை ஏற்படுத்தி விடுகின்றூர்."

"தாயைத் தந்தையைத் தன்னுயி ராகிய
சேயைப் பெண்டிரைச் சிந்தையில் வேறதாய்ப்
பாயத் தோடும் பகைப்பிக்க வல்லதோர்
மாயக் காரன் மஹம்மதென் றேதுவார்."

"ஆதி வேறுண் டொருவனென் பானவன்
தூத னியானெனச் சொல்லுவன் தெய்வங்கள்
பேத கம்படப் பேசுவன் பேதியா
வேத மொன்று விளைந்தது காணென்பான்."

— (உ'மறுப் புலவர்)

அதன்பின்னர் அந்த மௌஸத்தில் அளவிறந்த யாத்திரிகர்கள் மக்கத் திற்குள்ளே வந்து சேர்ந்தார்கள் ; வலீது'ம் அவருடைய "சகாக்களும்" எல்லா ரஸ்தாக்களிலும் நின்று கொண்டார்கள். ஆகவே, வெளியூர் அரபி

---

'மனைவியை விட்டுக் கணவனையும் பிரித்து விடுகிறுன்.' எனவே, இவ்வாறே மக்காவின் தெருக்கள்தோறும் மு'ஹம்மத்' ஒரு ஸா'ஹிர் என்றே பிரகடனப் படுத்தப் பட்டது," என்று மௌலானு மு'ஹம்மத'லீ தாமெழுதியுள்ள ஆங்கில மொழிபெயர்ப்புக் :குர்ஆன், அத்தி, 74, ஆயத் 15-இன் கீழுள்ள அடிக் குறிப்பிலே (2600) வரைந்துள்ளார். பா.தா.

ஒருவர்கூட அப் பகைஞராால் எச்சரிக்கப் படாமல் மக்காவிற் குள்ளே நுழைந்துவிட விடப்படவே யில்லை. ஆனால், அவர்களுள் சிறுபான்மை யினரே இத்தகைய மாந்திரீக சக்தியைப் பற்றிக் கேள்வியுற்றுச் சிறிது அச்சங்கொண்டு விட்டார்கள்; பெரும்பான்மையோர் 'அப்படிப் பட்ட வசீகரண சக்தியையுடைய பெரியார் யாவர்?' என்பதைக் காணவே அதிக ஆவல்கொண்டு விட்டார்கள். அவரைக் கண்டு ஏன் மக்கத்துத் தலைவர்க ளெல்லாரும் இத்துணைத் தூரம் திகில்கொண் டிருக்கவேண்டு மென்றும் அவர்க ளெல்லாரும் ஆச்சரியமும் அளவிலாது கொண்டு விட்டனர். இதனால் வெளியிலிருந்து வந்தவர்களுள் பெரும்பான்மையோர் நபிகள் நாயகத்தின் நல்லுபதேசத்தை நன்கு தெரிந்து கொண்டே சென்றார்கள்.

இவ்வண்ணமாக நபி பெருமானின் கீர்த்தியும் பிரதாபமும் அதிகப்பட அதிகப்பட, அந்தக் :குறைஷிகளின் வைராக்கியமும் வைஷம்யமும் அதிகம் தழைத் தோங்கிக்கொண்டே வந்தன. அந்தக் கொடுங் கு'ப்'பார்கள் ரஸூல் நாயகத்தின்மீது அவதூற்று மொழிகளைச் சுமத்த ஒவ்வொரு விநாடியையும் அதிக ஆவலுடனேயே எதிர்பார்த் திருந்தார்கள். அவர்க ளெல்லாரும் ஒருநாள் கஃ'ப'த்துல்லாவின் பக்கத்தில் கூடிநின்று, "இந்த மனிதன் நமக்குச் செய்துவரும் தீங்கைப்போல வேறொருவனும் இதுவரை நமக்குச் செய்யத் துணிந்த தில்லை!" என்று கத்திக்கொண் டிருந்தபோது, அதே சமயத்தில் நபிகள் பெருமானும் அந்தக் கஃ'ப'ாவைச் சுற்றிச் செல்ல (:தவ்வா'ப் செய்ய) அங்கு விஜயம் செய்தார்கள். உடனே எல்லாரும் அவர்களிடம் ஓடிச்சென்று, "நீதானா எங்கள் மூதாதையரின் தெய்வங்களைப் பழிக்கின்றாய்?" என்று பெருங் கூச்சலிட்டார்கள். அதற்கு நபிகள் நாதர், "ஆம்! நான்தான் அம் மனிதன்!" என்று அதிக தைரியத்தோடு மறுமொழி கூறினார்கள்.

மற்றொரு நாள் நபிகள் பெருமானார் (சல்) ஆண்டவனுக்கு வணக்கம் புரிந்துகொண் டிருந்தபோது, அந்தக் :குறைஷிகளுள் ஒருவனான உ':க்ப'ா பி'ன் மு'ஈ'த்தென்பான் தன்னுடைய அங்க வஸ்திரத்தை நபிகள் பெருமா னது கழுத்திலே போட்டு முறுக்கி இழுத்து, அவர்களுக்குச் சோக முண்டாகு மாறு கீழே உருட்டித் தள்ளிவிட்டான். அதுபொழுது சமீபத்தில் தற்செயலாய் வந்துசேர்ந்த அபூ'ப'க்ர் சித்'தீ':க் (ரலி') அவர்கள் குறுக்கிட்டு, அம் முறுக்கிய துணியை விடுவித்து, "என்னடா உனக்கு வந்த கேடு! அல்லா(ஹ்)வைத் தன்னுடைய தெய்வமெனக் கொண்ட ஒருவரையா நீ கொல்லப் பார்க்கின்றாய்?" என்று கூறிய மாத்திரத்திலே ஆங்குக் கூடிநின்றவர்கள் அந்த அபூ'ப'க்ரையும் அடித்துத் துன்புறுத்தி, அவருடைய தாடியினின்று ஒருசிறிதைப் பிய்த்தும் விட்டார்கள்; இதனால் 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ரும் மூர்ச்சையாயினார். இதனைக் கண்டு, "ஏன் இவர் களுக்கு இந்தவிதமான 'கேடுகாலம்' பிடித்திருக்கின்றது!" என்று அக் கூட்டத்தினர் ஏளனமாகச் சிரித்துப் பரிகாசமும் பண்ணினார்கள்.

இவ்வா றெல்லாம் எதிரிகள் செய்துவந்ததைக் கண்டும் நபிகள் பெருமானார் சிலசமயம் கஃ'ப்'ாவுக்குச் செல்வதை நிறுத்தி விடவில்லை; அப்பொழுதெல்லாம் எதிரிகளும் அவர்களை அதிகம் துன்புறுத்தாமலும் விட்டுவிடவில்லை. அதுபொழுது ஒருநாள் நபிகள் பெருமான் தங்கள் வணக்கத்தில் நின்று சிரவணக்கத்துக்காகத் தரையிற் குப்புற்று ஸுஜூதி' லிருந்த பொழுது அபூ'ஜஹ்லின் உத்தரவின் பிரகாரம் ஷ:கீ உ':க்ப'ா வென்பவன் பல தினங்களுக்கு முன்னர்க் கொல்லப்பட்டிருந்த ஒட்டகத்தின் அழுகிய குடர்களைக் கொண்டுவந்து, அப் பெருமானாரின் கழுத்திலும், பிடரியிலும், தோட்பட்டைகளிலும் போட்டுவிட்டான். அப்பொழுது ஆங்கிருந்தவர்களெல்லாரும் ஒருவர்மேல் ஒருவர்வீழ்ந்து சிரித்துக்கொண்டு கிடந்தார்கள். ஆனால், அல்லா(ஹ்)வின் திருத்தூதரோ, அஃதொன்றனையும் கருத்திற் கொள்ளாது தங்களுடைய வணக்கத்திலேயே ஆழ மூழ்கி யிருந்தார்கள். நாயக மவர்களின் நெருங்கிய நண்பரான இப்'னு மஸ்ஊ'த்'* அதுசமயம் அவ்விடத்தி லிருந்தார்கள். ஆனால், :குறைஷிகளின் மிகப் பெரிய கூட்டத்தைக் கண்ட இவர் அதுபொழுது ஒன்றும் பேசாமல் மௌனமாயிருப்பதே மேலானதென் றெண்ணிச் சும்மா இருந்துவிட்டார். பிறகு சில நிமிஷங்களுக்குள்ளே பெருமானின் திருக்குமாரியான 'பா(த்)திமா அவர்கள் அங்கு ஓடிவந்து, அந்த அசுத்தங்களை யெல்லாம் அப்புறப் படுத்திவிட்டு, அந்தக் :குறைஷிகளையும் திட்டினார்கள். ஆனால், ரஸூல் நாயகமவர்களோ அவர்களை அவ்வாறு திட்டவேண்டாமென்று சாந்தமாகத் தங்கள் புத்திரிக்குச் சமாதானம் கூறினார்கள்.

"ஏக னைத்தொழு(து) எழுந்தி ருந்துபின்
இடும்புசெய் தவரை நோக்கியே
மோக முற்றதனி றப்பனு உனது
முனிவி னுலிவர்கள் தங்களை
வேக முற்றகொடு நரகி டைப்புகுத
விடுதல் வேண்டுமென விரைவினுல்
மாக நோக்கியிரு கரமெ டுத்துபது
வாவுரைத்து நபி போயினர்,"

என்று உ'மறுப் புலவர் பெருமான் பாடியிருப்பது சரியன்று. என்னெனின், எம்பெருமா னவர்கள், எவரையும் எப்பொழுதுமே ஏசியது மில்லை; சபித்தது மில்லை யென்றறிக. அவர்கள் மனிதர்களை நேர்வழியிற் செலுத்தவே யன்றிச் சபிக்கப் பிறக்கவில்லை.

* இவர் இதற்கு முன்பே இஸ்லாத்தைத் தழுவியிருந்தார்.

"பேதையரைக் கண்டால் பெரியோர் வழிவிலகி
நீதியொடு போதல் நெறியன்றே— காதுமத
மாகரத்த யானை வழிவிலகல் புன்மலந்தின்
சூகரத்துக் கஞ்சியோ சொல்."— நீதி வெண்பா.

அபூ'ஜஹ்லுடன் கூட்டாளியா யிருந்த மற்றொரு ஜாஹில் அபூ'லஹப்'ாவான். இந்த அபூ'லஹபு'ம், அவனுடைய மனைவியான உம்மு ஜமீலும் எவ்வாறு நபிகள் நாயகத்தைத் துன்புறுத்துவது வழக்க மென்பதையும், அவர்கள் எவ்வாறு தங்களிரு மைந்தர்களையும் அழைத்து, அவர்களுடைய மனைவி யிருவரையும் (நபிகள் நாயகத்தின் குல்ஸூம், ருகையா வென்னும் இரு குமாரிகளையும்) விவாகரத்து செய்துவிடும்படி கட்டாயப் படுத்தினர்க ளென்பதையும் பற்றி முன்னரே ஒருசிறிது யாம் கூறியிருக்கின்றோம்.

"நம்முடனே நாற்பதாண்டுகளுக்கு மேலாய் உயிர்வாழ்ந்து வந்திருக்கும் ஒருவரை— அல் அமீனை—ப் பொய்யரென்று எவ்வாறு புகலலாம்? இவர் ஒருகால் மெய்யேயும் கூறலாமல்லவா?" என்று வினவப்பட்டக்கால், அபூஜஹ் லென்பான், "நான் மு'ஹம்மதைப் பொய்யனென்று கூறவில்லை; ஆனால், அவன் உபதேசிப்பதைத்தான் பொய்யென்று சொல்லுகிறேன்," என்று வின்னியாசமாக விடைகொடுத்தான். இதைத் தான் அல்லா(ஹ்)வும் இவ்வாறு விளக்கிக் கூறுகிறான்: "நிச்சயமாக, அவர்கள் உம்மைப் பொய் யாக்க வில்லை; ஆனால், அநியாயக்காரர்கள் அல்லா(ஹ்)வின் அறிவிப்புக் களையே (பொய்யென்று) மறுக்கின்றார்கள்."— (:குர். 6 : 33)

இப்படிப்பட்ட இம்சைக ளெல்லாம் நுபு'வ்வத் வந்து ஐந்தாவ தாண்டிலேதான் மிகக் கொடுமையுடனே துவக்கமாயின வென்னலாம்.

---

# அதிகாரம் —11

## நேரிற்சென்ற தூதும், மீறிச்செய்த தீதும்

"இன்னம், நாம் உம்மை (இதற்கு முன்பே) உறுதிப் படுத்தி வைக்கவில்லை யாயின், நிச்சயமாகவே நீர் அவர்கள் பக்கல் ஒருசிறிதே சாய முடுகிவிட் டிருப்பீர்."— (17 : 74)

இதற்குமுன் சென்ற அதிகாரத்தில் கூறியவாறு அபூ'ஜஹ்ல், அபூ'லஹப்' முதலிய துஷ்டர்களால் தூண்டிவிடப்பட்ட மக்கத்துக் காவாலிகளும் கர்த்தபங்களும் செய்துவந்த வீண்புரளிகளை யெல்லாம் கண்டு அந் நகரி லுள்ள பெரும்பான்மையான மக்கள்க ளனைவரும் நபி'கள் நாதரிடம்

நெருங்க அச்சங்கொண்டே சிறிது விலகிநின்றூர்கள். ஆனால், அவற்றை யெல்லாம் கண்டு, நபிகள்பெருமானார் (சல்) மட்டும் அணுத்துணையும் மனஞ் சலித்தார்க ளில்லை. எவர் என்ன சொன்னபோதினும், என்ன செய்தபோதி னும், நபிகள் திலகம் அவற்றினையெல்லாம் பொருட்படுத்தாது, தங்கள் கரு மத்தின்மீதே கண்ணுயிருந்து வந்தார்கள். " இகத்தினி லெவர்க்கும் முடித் திட வரிதென் றிருக்குமோர் வல்வினை யெனினும், அகத்தினி லொருமித் தெடுத்தொரு துணிவா யடுப்பதோர் முயற்சியுண் டாயின், சகத்தினில் விளக்கும் புகழொடு முடியும்," என்னுமாபோன்று, எதிரிகளின் இத்தகைய கூச்சல்களெல்லாம் ஆகாயத்தில் தோன்றிமறையும் சிறிய மேகமென்றே கருதியிருந்தார்கள். தங்களுக்கு விரோதஞ் செய்துவரும் எதிரிகள் இன்னு ரென்பதையுங்கூடச் சட்டைசெய்து அவர்கள் கவனித்துப் பார்ப்பது வழக்க மில்லை. அவர்களுடைய நோக்கமெல்லாம் தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவவிரும்புவாரின் பக்கலே முற்றிலும் திரும்பிநின்றது.

ஆதியில் நபிபெருமானின் உபதேசத்திற்குச் செவிதாழ்த்தியவர்கள் பெரும்பாலும் ஏழை மக்களாகவே யிருந்துவந்தனர்; ஆனால், பெரும் பெரும் தனவந்தர்க ளெல்லாரும் அதில் சிறிதும் கவலை கொள்ளாமலே பராமுகமா யிருந்துவந்தார்கள். இதிலும் ஆண்டவனது இரகசியமொன்று பொதிந்தில்லாமற் போய்விடவில்லை — [:குர்ஆன், அத்தி. 80—ஸூரா அ'ப'ஸ என்பதை நோக்க.]

ஒருநாள் நபிகள் பெருமான் மக்கத்துக் :குறைஷ்குலப் பெரியார்களை நோக்கி உபதேசம் புரிந்துகொண் டிருந்தார்கள். அதுபொழுது இப்'னு உம்மு மக்'தூம் என்னும் பெயருடைய பார்வையற்ற ஏழை யொருவர் ஆங்குவந்து சேர்ந்தார். நபிகள் திலகம் வேறு சிலருடனே சம்பாஷணம் புரிந்துகொண் டிருப்பதை யறியாது அந்த நேத்திர மில்லாதவர் நபிகள் நாயகத்தை நோக்கிக் குறுக்கிட்டுச் சில கேள்விகளைக் கேட்டார். ஆனால், இத்தகைய இடையூற்றை நபிகள் பெருமான் விரும்பவில்லை. ஆயினும், அவர்கள் அக் குருடரை நோக்கி ஒன்றும் வசைமொழி கூறவில்லை; கடிந்து கொண்டேனும் ஒரு வார்த்தையும் பேசவில்லை. ஆனால், அவ் வந்தகர் தருணமறியாது குறுக்கிட்டதை. விரும்பாத எண்ணம் மட்டுமே பெரு மானாரது முகக்குறியில் ஒருசிறிது காணப்பட்டது. ஆனால், ஏழை பணக் காரர் என்ற வேற்றுமை இல்லாது எல்லாரும் சரிசமமாகவே நடாத்தப் பட வேண்டுமென்பதை விழைந்துநின்ற ஆண்டவன் உடனே நபிகள் நாதருக்கு எச்சரிக்கை செய்தான். என்னெனின், அங்கு வந்திருந்த தன வந்தரைக் காட்டினும் இவ்வேழைக் குருடரே நபிகள் நாயகத்தின் நல் லுபதேசத்தைக் கேட்டு நற்பிரயோஜனம் அடைதல் கூடும். இஸ்லாத்தின் ஈடேற்றத்தில் ஏழை பணக்காரர் என்ற வித்தியாசம் ஒருசிறிது மில்லை. இதனுல் பணக்காரர்களாலேதாம் இம்மார்க்கம் அபிவிருத்தி யடைய வேண்டு மென்பதும் கட்டாயமில்லை. ஏழைகளைக் கொண்டே இஸ்லாம்

முன்னுக்கு வந்து, அவ் வேழைகளைக் கொண்டே இவ் வுலகத்தவருக் கெல்லாம் அபார ஞானத்தையும் ஆத்ம சுகிர்த சன்மார்க்கத்தையும் புகட்டத் துணிந்தது.

செல்வர்களாலே இஸ்லாம் செழிப்புற வேண்டுவதின்று; செல்வர்கள் எப்பொழுதும் அறிவில்லாது செல்வோர்களே— (:குர். 17 : 100). இஸ்லாத் தின் ப்ரக்கத்தைக் கொண்டே இதில் சேர்ந்த ஏழைகளெல்லாரும் பிறகு தன வந்தர்க ளாயினார்கள்; ஒருசிலர் இவ்வுலகம் போற்றும் உத்தம ப்ரத்ஷாக் களாகவும் சிறந்து விளங்கினார்கள். இதனால் ஏழைகளா யுள்ளவர்களும், ஆண்டவனது அனுக்கிரகமட்டும் இருந்துவிடுமாயின், எத்துணைப் பெரிய ராஜாதி ராஜர்களாகவும் ஆய்விடக் கூடுமென்னும் படிப்பினையை நாம் கற்றுக் கொள்கிறோம். அவ் வேழைக ளெல்லாரும் செல்வத்தில் மட்டு மல்லது, ஒழுக்கத்திலும் விழுப்பம் பெற்று, கலைஞானங்களிலும், மெய்ஞ் ஞான சாஸ்திரங்களிலும், தத்துவ சாஸ்திரத்திலும் முதன்மை பெற்று, அக்காலத்தில் அஞ்ஞான அந்தகாரத்துள்ளே ஆழ்ந்துகிடந்த இக்கரிய உலகினுக்கே இனியஒளியைக் கொளுத்தி விட்டார்கள். இதனால் இஸ்லாத் தின் படிப்பினை இப்படிப்பட்ட தென்பதை நாம் நன்கு தெரிந்து கொள்ளு கிறோம்.

இந்தக் கண்தெரியா ஏழையின் சம்பவத்தினின்றே மற்றோர் ஆழிய கருத்தையும் நாம் நன்குணர்ந்து கொள்ளுகிறோம்: ரஸூல் நாயகமவர் களுக்கு உதயமாய்வந்த வேதஞான வெளிப்பா டனைத்தும் (வ'ஹீ) அவர்க ளுடைய உள்ளத்துக் குள்ளிருந்தே உதய மாயினவா? அல்லது அல்லா ஹுத் தஆ'லாவி னிடத்திலிருந்தே வந்து சேர்ந்தனவா? என்னும் விஷயத் தில் சில மனிதர்கள் வாக்குவாதம் புரிந்துகொண் டிருக்கின்றனர். ஆனால், இந்த நேத்திரப் பழுதானவருடன் நடந்த சம்பவத்தி லிருந்தே அவர்களுக்கு வந்துகொண்டிருந்த வ'ஹீ என்பது அவர்களுக்கு வெளியி லிருந்தேதான் வந்து தோன்றியிருக்க வேண்டுமென்று நாம் நன்கு தெரிந்து கொள்ளு கிறோம். என்னெனின், அந்தக் குருடரைச் சிறிது அலக்ஷியம் செய்ததற் காக ஆண்டவன் அப்பெருமானுக்கு விடுத்துள்ள அறிவுறுத்த லானது :குர்ஆன் ஷரீ'பின் 80-ஆவது அத்தியாயத்தில் சிலாசாசனமேபோல் உலக முடிவுக் காலம்வரை மிகவும் அழுத்தமாகப் பதியவைக்கப்பட் டிருக் கின்றது. வ'ஹீ என்பது ரஸூலுல்லாவின் உள்ளத்தினின்றே உதயமாகக் கூடுமாயின், அவர்கள் இவ்வாறு தங்கள் குற்றத்தைத் தாங்களே வலுவில் சிலாசாசனமாகச் செய்து வைத்திருக்க மாட்டார்கள். இது மனித இயற்கை. ஒருவர் தாம் செய்துவிட்ட தவற்றுக்காக எத்துணைமட்டும் உள்ளுக்குள்ளே கழிவிரக்கங் கொண்டபோதினும், பகிரங்கத்தில் அதனைச் சிலாசாசனமாகச் செய்துவைக்க ஒருபோதும் மனந் துணியார். இதனால் ஆண்டவனிடத்தி லிருந்தே அந்த வ'ஹீ என்பது வெளியாகிக் கொண் டிருந்த தென்பதில் சிறிதும் சந்தேகமில்லை யென்பது தெற்றெனப் புலப்

754—26

படாநின்றது. ஆண்டவனால் எச்சரிக்கை செய்யப்பட்டதை அப்படியே :குர்ஆன் ஷரீ'பில் வரைந்துவைத்து விட்டார்கள். என்னெனின், அல்லா(ஹ்)வின் ஆணைக்கு முற்றமுற்றத் தலைசாய்த்து நடப்பதே அவர்களுடைய கொள்கையா யிருந்துவந்தது. இதுவே தீ'னுல் இஸ்லாத்தின் முக்கியத் தாத்பரியமாகவும் இருந்துவருகின்றது. ஆண்டவனு லனுப்பப் படும் வ'ஹீயை அப்படியப்படியே மக்களுக்கு அறிவித்துவிட வேண்டுமென்று ஆண்டவன் தன் திருத்தூதருக்குக் கடுமையான கட்டளை பிறப்பித்திருந்தான்.

மக்கத்துக் :குறைஷிகள் ஆரம்பத்திலே நபிகள்பெருமானை எதிர்க்கத் தொடங்கினார்கள்: பிறகு அபூ'த்தாலிப்' அவர்கள் மூலமாக அவர்களைத் திருப்பிவிடுவ தென்று கொண்டு ஒருமுறைக்கு மூன்றுமுறை சூழ்ச்சி செய்து பார்த்தார்கள். அதனு லொன்றும் பலியாமற் போகவே, மறுபடியும் ரஸூலுல்லா அவர்களையும், அவர்களுடைய ச'ஹாப'ாக்களையும் தொந்தரைக் குள்ளாக்கினார்கள். அவற்றை யெல்லாம் அவர்கள் ஒரு சிறிதும் இலக்ஷியம் செய்யாது, மேன்மேலும் விரைந்து செல்வதைக் கண்டு, மீட்டு மொருமுறை அந்த நபிகள்நாயக மவர்களையே நேரில்கண்டு பேசுவ தெனத் தீர்மானித்துக் கொண்டார்கள்.

எல்லாவிதமான கஷ்ட நிஷ்டூரங்களையும் எள்ளத்துணையும் பொருட்படுத்தாது நிர்வகித்துக்கொண்டு வருவதைக் கண்ட அந்தக் :குறைஷிகள் அளவற்ற ஆச்சரியங் கொண்டு, நபிகள் பெருமானை இறுதியாகச் சமாதான முறையிலே "சரிப்படுத்தி" விடலா மென்று சாதாரணமா யெண்ணிக் கொண்டார்கள். துன்பங்களாலும் தொந்தரைகளாலும் அதைரியங் கொண்டுவிடாத அ'ஹ்மது'ர் ரஸூலுல்லாவை (சல்) நயமான தந்திரங்களைக் கொண்டேனும் தங்கள்வயம் திருப்பிவிடலாமென்று தைரியம் கொண்டு விட்டார்கள். அபூ'த்தாலிபு'ம் ப'னூ ஹாஷிம் குடும்பத்தினரும் விடாப் பிடிவாதத்துடனே மூர்த்தன்யமா யிருப்பதைக் கண்ட அந்தக் :குறைஷிக் கு'ப்'பார்கள் இம்மாதிரியான நயவஞ்சக முறையையே உறுதியாகச் செய்யத் துணிந்தார்கள்; இதுவே அவர்களுக்கு நன்றெனு அதுசமயம் புலப்பட்டது போலும். சாம பேத தான தண்டம் என்னும் சதுர்வித உபாயங்களுள் சமாதான வார்த்தையைக் கொண்டே திருநபி யவர்களை வசப்படுத்த நாடினர்.

ஒருநாள் நபிகள்பெருமானு ரவர்கள் கஃ'ப'த்துல்லாவில் அமர்ந்திருந்த பொழுது, அந்தக் :குறைஷியரின் தலைவரான உ'த்ப'ா பி'ன் ரபீ'ஆ' என்பவரை நபிகள் நாயகத்திடம் அனுப்பி வைத்தார்கள். அவர் அபூ'ஜஹ்ல், அபூ'லஹப்' போன்ற அமிதவாதி யல்லர். நிதானபுத்தியும், பெருந் தன்மையான சுபாவமும் உடைய அந்த உ'த்ப'ா என்பவர் நபிகள் பெருமானிடம் நெருங்கி, "ஏ என் சகோதரர் மைந்தரே! நீர் உம்முடைய குலப்பெருமையைக் கொண்டும் உமது குணப் பெருமையைக் கொண்டும் அதிகமான

கீர்த்தியை அடைந்திருக்கின்றீர். ஆனால், இதுபொழுதோ, நம்முடைய ஜனங்களுக்குள்ளே நீவிர் விகற்பத்தை உண்டுபண்ணிக் கொண்டு வருகின்றீர்; இதனால் நங் குடும்பங்களில் கலகங்களையும் பிரிவினைகளையும் ஏற்படுத்திவிட்டீர். நீவிர் நம்முடைய பழைய தெய்வங்களையும் தெய்வக் கோட்பாடுகளையும் தூஷித்து வருகின்றீர். நம் மூதாதைய ரனைவரும் பக்திமான்களா யிருக்கவில்லை யென்று குறை கூறுகின்றீர். ஆதலின், நான் இப்பொழுது உம்மிடம் சொல்ல வேண்டிய விஷயம் ஒன்றுண்டு; அதனை நீர் அங்கீகரிக்க முடியுமோ வென்று நன்கு நிதானித்துப் பார்ப்பீராக!" என்று வேண்டிக் கொண்டார். அதைக் கேட்டவுடன், "வலீதி'ன் தந்தையே! தாங்கள் என்ன சொல்லப் போகின்றீர்கள்?" என்று நபிகள் பெருமான் அதிக ஆவலுடனே வினவினார்கள். அதைக் கேட்டு, உ'த்ப'ா பி'ன் ரபீ'ஆ' பின்வருமாறு பேசத் தொடங்கினார்:—

"ஏ என் சகோதரர் மைந்த! இதுபொழுது நீர் செய்துகொண்டு வரும் கிளர்ச்சியைக் கொண்டு திரவியசேகரம் செய்யவேண்டு மென்னும் நாட்டம் உமக்கிருக்குமாயின், எங்களுள் எவரிடத்து மில்லாத அத்துணைப் பெரிய திரவியக் குவியலை உமக்கு வேண்டிய அளவு திரட்டிக் கொடுக்கச் சித்தமா யிருக்கின்றோம். ஆனால், நீவிர் கண்ணியத்தையும் கௌரவத்தையும் விரும்புவீ ராயின், நாங்கள் உம்மையே எங்கள் தலைவராகக் கொண்டு, தங்களைக் கலந்துகொள்ளாமல் ஒரு காரியத்தையும் செய்யமாட்டோ மென்று உறுதிமொழி கூறுகின்றோம். ஆனால், உமக்கொரு ராஜ்யமே வேண்டுமாயினும், நாங்களெல்லோரும் உம்மையே எங்கள் அரசராகக் கொண்டு உமக்கே ராஜவிசுவாசப் பிரமாணமும் செய்துகொடுக்கச் சித்தமா யிருக்கின்றோம். ஆனால், பெரிய தனவந்தர்வீட்டு அழகிய நங்கையர் வேண்டுமாயின், உமக்குப் பிடித்தமான ஐசுவரியப் பெருக்கமுள்ள வீட்டின் மகா சௌந்தரியம் பொருந்திய நேர்த்தியான அப்ஸரஸ்திரீ போன்ற ஒருத்தியைக் கொண்டுவந்து விவாகம் செய்துகொடுக்கக் கடவோம். ஆனால், உம்மைப் பிடித்திருக்கும் பைசாசத்தை ஓட்ட வேண்டுமாயின், நாங்கள் அதற்குரிய ஆட்களைக் கொணர்ந்து, அவர்கள் உம்மைக் குணப்படுத்தும் வரை அவர்களுக்கு வேண்டியமட்டும் சம்மானமும் கொடுத்துவரத் தயாரா யிருக்கின்றோம். நீவிர் செய்து கொண்டுவரும் இத்தீய பிரசாரத்தை மாத்திரம் விட்டுவிட வேண்டும்," என்று சொல்லிவிட்டு, தாம் கூறிய இவ்விஷயங்களுள் எதையேனும் மு'ஹம்மத்'(சல்) அவசியம் ஏற்றுக் கொண்டேதான் தீருவார் என்றெண்ணி உ'த்ப'ா நாயக மவர்களின் நாவையே நோக்கிக் கொண்டிருந்தார். இதனைத்தான் உ'மறுப் புலவரும் இவ்வாறு அழகாக வருணித் தெழுதியுள்ளார்:—

"தந்தைதாய் தமர்வணக்க முறையொழுகிப்
பழையமறை தழுவி னீரேல்

வந்தமா வினைநீங்கு மினத்தோர்க
ளெவருமன மகிழ்ச்சி யாகிக்
கந்தடர்வெங் கரியிரதம் பரிநெருங்கப்
படைசூழக் கவிகை யோங்க
இந்தமா நிலத்தரசர் இறைஞ்சுவது
சரதமென இயம்பி ஞரல்."

உ'த்ப'ா கூறியது உண்மையிலே எவரும் இச்சிக்கக்கூடிய இனிய விஷயந்தான்! ஆதரவற்றவ ராகவும், அதிகம் இம்சிக்கப்பட்டவ ராகவும், உதவிக்குச் சரியான ஆளில்லாதவராகவும் இருந்துவந்த ஒருதமியருக்கு அரப் ராஜ்யத்தின் ஏகசக்ராதிபத்யமே கிடைப்ப தென்ருல், அது சாமான்ய மான ஒருசிறிய அதிருஷ்டமென்ரு கருதுகின்றீர்கள்? ஆனுல், அல்லா(ஹ்)வின் பாதையில் நிஷ்காம்மிய கருமத்துடனே உழைத்துவரும் அ'ஹ்மது'ர் ரஸூலுல்லாவுக்கு இவ்வுலக சம்பந்தமான ஆசைவார்த்தைக ளெல்லாம் எம்மாத்திர மென்று எண்ணுகின்றீர்கள்? அவர்களுடைய உள்ளத் துணர்ச்சியை உள்ளபடி அறியாத :குறைஷிகள் அவ்வாறு அற்பத்தன மாய்க் கருதிஞர்கள்.

ஆனுல், நம் நபிகளுதர் மட்டும் அதற்கெல்லாம் சற்றும் இடங்கொடுக் கத் துணிந்தனரில்லை. ஆதலின், உ'த்ப'ாவின் விஷயம் முடிவுபெற்றவுடனே நபி பெருமானவர்கள், "ஏ வலீதி'ன் தந்தாய்! இப்பொழுது நான் சொல் வதை நீர் செவிதாழ்த்திக் கேட்கக் கடவீர் :— 'அருளாளனும் அன்புடை யோனு மாகிய அல்லா(ஹ்)வின் திருநாமத்தால். இவ் வேத கிரந்தமாகிறது மகா காருண்ய மூர்த்தியான அந்த ஆண்டவன்மாட் டிருந்து வந்திருக் கின்றது; இதிலுள்ள திருவாக்கியங்கள் மிக்க விளக்கமாகவே விவரிக்கப் பட்டிருக்கின்றன; பகுத்தறிவுள்ள மனிதர்களின் போதனைக்காக வெளிப் படுத்தப்பட்டிருக்கும் அ'ரபு' பாஷையி லுள்ள :குர்ஆ ஞகும் இது; இதில் நன்மாராயங்களும் பயப்படுதற்குரிய அச்சப்பாடுகளும் நிரம்பி யிருக் கின்றன. ஆனுல், அவர்களுள் பெரும்பான்மையோர் தங்கள் முதுகைத் திருப்பிக்கொண்டு, இதில் என்ன கூறப்படுகிற தென்பதைக் கவனித்துக் கேட்பதில்லை. நீர் கூப்பிடும் கொள்கையின் பக்கல் திரும்ப வொட்டாது எங்கள் ஹிருதயங்கள்மீது திரையிடப்பட்டிருக்கிறது; இன்னம், எங்கள் செவிகளின்மீது செவிட்டுத் தன்மையே குடிகொண்டிருக்கிறது. இன்னம், உமக்கும் எமக்கும் இடையிலே திரை ஒன்று தொங்கிக் கொண்டிருக்கிறது. ஆதலின், நீர் நாடியபடியே நடந்துகொண்டு வரக்கடவீர்; என்னெனின், நாங்களும் எங்கள் கோட்பாடுகளுக்குத் தக்கவாறு நடந்துவரக் கடவோம், என்று அவர்கள் சொல்லுகிருர்கள். ஆனுல், நீவிர் சொல்லுவீராக: நிச்சயமாக நானும் உங்களைப்போன்ற ஒரு மனிதனுகவே இருக்கின்றேன்; ஆனுல், உங்களுடைய தெய்வமும் என்னுடைய தெய்வமும் அந்த ஒரே

தெய்வம்தான் என்னும் விஷயம் எனக்கு வெளியாக்கப்பட் டிருக்கின்றது. ஆதலின், உங்களுடைய பாதையை அவன் பக்கமே நேராகத் திருப்பிக் கொள்ளக் கடவீர்கள். சென்றுபோன காரியங்களுக்காக அவன்பால் மன்னிப்பைத் தேடுவீராக. மேலும், குறிப்பிடப்பட்டிருக்கும் தான தருமங் களைக் கொடாமலும், மரணத்துக்குப் பின்னுள்ள வாழ்க்கையில் நம்பிக்கை வையாமலும் இருந்துவருகின்ற விக்ரஹத் தொழும்பர்களின் கதி அதோ கதியாகவே வந்து முடியும். ஆனால், நன்னம்பிக்கை கொண்டு நற்கருமம் செய்துவருவோர் என்றென்றும் ஒழியா நன்மையையே பெற்றுக்கொள்ளக் கடவார்கள்."— (குர். 41 : 1—8)*

---

* மேலே கூறியிருப்பது 'ஹா மீம் ஸஜ்தா'வின் முதலெட்டு ஆயாத்தின் கருத்தாகும். ஆனால், அந்த அத்.தின் முதல் 13 ஆயாத்களையே நபி பெருமான் அதுகாலை உ'த்ப'ாவிடம் ஓதிக் காட்டினார்களென மௌ. மு'ஹம்மத'லீ தமது ஆங்கிலக் குர்ஆனில் அறைந்துளார். அவற்றின் சரியான தர்ஜுமா வருமாறு :—

அருளாளனும் அன்புடையோனுமாகிய அல்லா(ஹ்)வின் திருநாமத்தால்.

1. (அவன்) புகழப்படுகிறவன் ; மகிமை வாய்ந்த ஆண்டவன் !

2. அருளாளனும் அன்புடையோனு மாகிய ஆண்டவன்பா லிருந்து அருளப்பட் டிருப்பது :

3. தன்னுடைய திருவாக்கியங்கள் விவரிக்கப்பெற்றுள்ள திருவேதம் ;—அறிவுள்ள ஜனங்களுக்கு அரபு மொழியிலுள்ள :குர்ஆன் ;

4. நன்மாராயம் கூறக்கூடியது ; இன்னம், அச்சமூட்டி எச்சரிக்கை விடுத்துக் கொண் டிருப்பது ; ஆனால், அவர்களில் அதிகம்பேர் அப்புறம் திரும்பிவிடுகிறார்கள் ; ஆதலால், அன்னவர்கள் (செவிதாழ்த்திக்) கேட்பது கிடையாது.

5. இன்னம், அன்னவர்கள் சொல்லுகிறார்கள் : "நீர் எதன்பால் எங்களை அழைக் கின்றீரோ, அதைவிட்டு எங்கள் ஹிருதயங்கள் மூடல்களுக்குள்ளா யிருக்கின்றன ; இன்னம், எங்கள் செவிகளின்மீது பளுவொன் றிருக்கிறது ; எங்களுக்கும் உமக்கும் இடையிலே திரையொன்றும் உண்டா யிருக்கிறது ; ஆகையால், நீர் (உமக்கேற்ற முறை யிலே) செயல் புரியும் ; நாங்களுங்கூட (எங்கள் முறையிலே) செயல் புரிவோம்."

6. நீர் கூறுவீராக : "நானெல்லாம் நுங்களைப் போன்ற ஒரு (சாதாரண) மனிதனே தான் ; உங்க ளிறைவனெல்லாம் ஒரே இறைவனென்று என்பால் வ'ஹீ யறிவிக்கப்பட் டிருக்கிறது ; ஆகையால், அவன்பாலே நீங்கள் (நேரான பாதையில்) நிலைநிற்கக் கடவீர் கள் ; இன்னம், அன்னவன் (இடம்) பிழை பொறுக்கத் தேடுவீர்களாக ;" இன்னம், இணைவைத்துப் பூஜிப்பவர்களுக்கு அதோகதிதான் ;

7. (அவர்கள்) தான தர்மம் கொடாதவர்கள் ; இன்னம், அன்னவர்கள் இறுதி (வாழ்க்கை)யை நிராகரித்தவர்கள்.

8. ஈமான் கொண்டும் சற்கருமங்கள் புரிந்தும் வருகிறவர்கள் (குறித்தென்றாலோ) அவர்களுக்கு நிச்சயமாக எப்பொழுதுமே இற்றுப் போகாத சம்மானம் உண்டு.

9. மேலும் சொல்வீராக : "என்ன ! திண்ணமாக, பூமியை இரு பருவங்களில் சிருஷ்டித்த அவனை நீங்கள் நிராகரிக்கின்றீர்களோ ? இன்னம், அன்னவனுக்கு நீங்கள் இணைகளை ஏற்படுத்துகின்றீர்களோ ? அவன்தான் சகல லோகங்களின் ரக்ஷகன்."

10. இன்னம், அன்னவன் அதில், அதன் மேற்பரப்பில் மலைகளை உண்டுபண்ணி வைத்தான் ; மேலும், அதி லவன் ஆசீர்வாதத்தை அருளி, இன்னமதில் அதற்குரிய

அதை ஓதி முடித்தவுடனே நபிகள்நாயகம் (சல்) மீட்டும் உ'த்ப'ாவை நோக்கி, "நான் சொல்லிவந்ததைத் தாங்கள் கேட்டுக்கொண் டிருந்தீர்கள். இனித் தங்களுக்கு விருப்பமான வழியிலே நடந்துகொள்ளுங்கள்," என்று கூறி முடித்தார்கள். இதனால் ஆங்குவந்த உ'த்ப'ா வென்பார் அறிந்து கொண்ட படிப்பினை யாதெனின், "எனக்குச் செல்வமும் வேண்டாம்; சிம்மாசனமும் வேண்டாம். மனிதர்களுக்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்யவே யான் அனுப்பப்பட் டிருக்கிறேன். ஆதலின், அவனுடைய செய்தியை உங்களுக்கு அறிவித்து விடுகிறேன். நீங்கள் அதனை ஏற்றுக் கொள்வீர்களாயின், இகத்திலும் பரத்திலும் நீங்களே வெற்றி பெறுவீர் கள். ஆனால், நீங்கள் அல்லா(ஹ்)வின் ஆணையை அங்கீகரிக்க மறுத்து விடுவீர்களாயின், பிறகு ஆண்டவனே உங்களுக்கும் எனக்கு மிடையில் நியாயம் தீர்க்கக் கடவன்," என்பதே யாகும். இதனைக் கேட்டுக்கொண் டிருந்த உ'த்ப'ா வென்பார் என்ன செய்வதென்று ஒன்றுந் தோன்றாது, தம்மிரு கரங்களையும் பூமியின்கண்ணே ஊன்றிவைத்துக் கொண்டு, தங் கழுத்தைத் தோள்மீது சாய்த்துவைத்து, நாயகமவர்களை உற்று நோக்கிக் கொண்டே யிருந்து, இறுதியில் ஒன்றும் சொல்லாமலே, "மதியிழந்து தன் வாயிழந்(து) அருந்தவன் மறைந்தான்," என்றுங்கு, எழுந்து வாளா சென்று விட்டார்.

---

ஆகாராதிகளை நான்கு பருவங்களில் அளவைப்படுத்தி வைத்தான்; உசாவுகிறவர்களுக்கு ஒரே மாதிரியாய்.

11. பிறகு, அவன் வானத்தின் பக்கல் (தன்) நாட்டத்தைத் திருப்பினான்;— அது நீராவி மயமானது; ஆகையால், அவன் அதற்கும் பூமிக்கும் சொன்னான்: "நீங்க ளிருவீரும் விருப்புடனோ, அல்லது வெறுப்புடனோ (என்பால்) வரக்கடவீர்கள்." (அதற்கு) அவ்விரண்டும், "நாங்கள் விருப்புடனே வருகிறோம்," என்று (விடை) கூறின.

12. ஆகவே, அவன் அவற்றினை இரு பருவங்களில் ஏழு வானங்களாக விதித்து விட்டான்; இன்னம், ஒவ்வொரு வானத்திலும் அதனதன் காரியத்தை அறிவித்து வைத் தான்; இன்னம், நாம் கீழ் வானத்தைப் பிரகாசிக்கும் நக்ஷத்திரங்களைக் கொண்டு அலங் காரமாக்கி வைத்தோம்; மேலும், பேணிக் காக்கவும் (அதனைச் செய்தோம்); அது வல்லமையுள்ளவனாகிய, அறிவு நிரம்பியவனாகிய (ஆண்ட)வனது கட்டளையா யிருக்கிறது.

13. ஆயின், அவர்கள் (புறக்கணித்து) அப்புறம் திரும்பி விடுவார்களாயின், அப்பால் நீர் சொல்லக் கடவீர்: "ஆ'த்'களுக்கும் :தமூத்'களுக்கும் நேரிட்ட மாகொடிய வேதனை யைப் போன்ற வேதனை யொன்றை(க் கொண்டு) நான் உங்களுக்கு அச்சமூட்டி எச் சரிக்கை விடுக்கின்றேன்."

இதன் கீழே அந்த மௌலானா எழுதுகின்றார்:— ":குறைஷியரிடத்திருந்து ஒரு தூதுச் செய்தியுடனே தங்கள்பால் உ'த்ப'ா பின் ரபீ'ஆ' வந்துசேர்ந்தபொழுது, நபிகள் பெரு மானால் ஓதிக் காண்பிக்கப்பட்டவையே யாகும் இந்த 13 ஆயாத்தும்.........நபிகள் திலகம் 13-ஆவது ஆயத்தை எட்டி, ஆ'த்'களின் கதியும், :தமூத்'களின் கதியும் போன்ற துர்க் கதியே மக்கா வாசிகட்கும் வந்து லபிக்குமென்று எச்சரிக்கத் துவக்கியவுடனே, மேற் கொண்டு ஒன்றுங் கூறவேண்டாமென்று உ'த்'பா நபிகளாரைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டு, :குறைஷிகளிடம் இந்நிகழ்ச்சியைக் கூறப் புறப்பட்டு விட்டார்."— (ரா'ஜீ).

"இரவியெனும் கலிமாவின் குபிர்த்திமிரம்
அடர்த்தெறியும் இறசூலுல்லா
தெரிமறையின் உரைகேட்டுப் பொருள்தேர்ந்து
பகுப்பஅதி சயித்து நோக்கி
உருகிமதி மயங்கியெதிர் உரையாமல்
ஊமனென ஒடுங்கி வான்தோய்
பெருவரையின் மடங்கலெதிர் வரையாடு
நிகர்வதெனப் பேதுற் றூனே!"

"அலங்குளைவால் அரியேறு முகம்மதுநா
விற்பிறந்த தன்றித் தீஞ்சொல்
இலங்கமரர் இறைமொழிகேட்(டு) இவர்க் குரைத்த(து)
அறுதியென இதயத்(து) ஓர்ந்து
கலங்குமனம் தெளிந்துநபி கமலமலர்
முகநோக்கக் கண்கள் நாணி
விலங்கினமொத்(து) எவரோடும் மொழியாது
தனியெழுந்து விரைவிற் போனான்,"—

என்பன சீறாப்புராணம்.

உ'த்ப'ாவை யனுப்பிய :குறைஷித் தலைவர்க ளெல்லாரும் இவரது வருகையை ஆவலுடனே அதிகம் எதிர்பார்த்துக் கொண் டிருந்தனர். எனவே, உ'த்ப'ா அவர்களிடம் வெறுங் கையுடன் சென்றவுடனே அவர்க ளெல்லாரும் வந்துகூடி, "நீர் என்ன பார்த்தீர்? என்ன கேட்டீர்? அவர் என்ன சொன்னார்?" என்று விநயத்துடன் வினவினார்கள். அதைக் கேட்டு, உ'த்ப'ா கூறினார்: "மு'ஹம்மத்' சில வார்த்தைகளைச் சொன்னார். அவை ஜோசியங்களாகவோ, காவியங்களாகவோ, சூனியங்களாகவோ, மாந்திரீகங்க ளாகவோ இல்லை. எனவே, யான் சொல்வதைக் கேளுங்கள். மு'ஹம்மத்' எப்படி நடந்து செல்லுகின்றாரோ, அவரை அப்படியே அப்பாதையிலேயே நீங்கள் விட்டுவிடுங்கள். அவர் தாம் கொண்ட எண்ணத்தில் வெற்றி பெறுவாராயின், அது நம்முடைய தேசத்தினருக்குப் பெருமையளிக்கக் கூடியதாகவே யிருக்கிறது. அவர் தோல்வியுறுவா ராயின், அரபநாடே அவரை இங்கில்லாமல் நாசஞ் செய்துவிடும். எனவே, நாம் அவர்விஷயத் தில் பிரத்தியேகமான கஷ்டங்களை எடுத்துக்கொள்ள வேண்டியதில்லை." இதைக் கேள்வியுற்ற :குறைஷிகள் இவருக்கும் மு'ஹம்மதி'ன் சூனியம் (ஸி'ஹ்ர்) சிறிது தலைக்கேறி விட்டதென்றே கூறுவாராயினர். எனவேதான்,

"சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லுஞ்சொல் இன்மை யறிந்து,"

"சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சான் அவனை
இகல்வெல்லல் யார்க்கும் அரிது,"—

என்று வள்ளுவனாரும் வழுத்திச் சென்றுளார்.

இதனால் அந்தக் :குறைஷிகள் நாடியிருந்த இறுதிநாட்ட முழுவதும் வீணாகவே சிதறிப் போய் முடிந்துவிட்டது. துன்பப்படுத்தியும் பயனில்லை; இன்பமொழி கூறியும் இதமில்லை. சாமம் பேதம் தானம் என்னும் மூன்று வித உபாயங்களும் பயன் விளைக்காது போய்விட்டன. எஞ்சியிருப்பது தண்டம் ஒன்றே தான். எனவே, எதிரிகளின் தொந்தரையோ, சகிக்கமுடியா திருந்துவந்தது; ஆனால், அவர்களது ஆசை வார்த்தையோ, தடுக்கக் கூடாததாயும் இருந்தது. நபிகள் நாயகத்தின் ஹிருதயத்துக் குள்ளே ஊன்றப்பட்டிருந்த அல்லா(ஹ்)வின் நன்னம்பிக்கை யென்னும் வித்தானது அத்துணை உறுதியுள்ளதா யமைந்திராத பக்ஷத்தில் எதிரிகளின் துன்பமும் இன்பமொழியும் வேறொரு சாதாரண மனிதனை மிகவாக ஆட்டி அசைத்து விட் டிருக்கும். ஆனால், நபிகள் பெருமானோ, தங்கள்மீது வந்துமோதும் எதிரிகளின் விரோத அலைகளையெல்லாம் அதிக சாமர்த்தியத்துடனே சமாளித்துக்கொண்டு, தங்கள் காரியத்திலேயே கண்ணுங் கருத்துமா யிருந்து வந்தார்கள். இக் காரணத்தினாலேதான் இதன் தலைப்பில் பொறிக்கப்பட் டிருக்கும் ஆயத்தும் இவ்வாறு கூறிக்கொண் டிருக்கிறது: "இன்னம், நாம் உம்மை முன்னமே உறுதிப்படுத்தி வைக்கவில்லையாயின், நிச்சயமாகவே நீர் அவர்கள்பக்கல் ஒருசிறிதே சாய்ந்துபோ யிருப்பீர்."

இத் தரணியின் முன்னேற்றத்திற் காகவும் ஈங்குள்ள மக்கட்பூண்டு களின் நாகரிக சீர்திருத்தத்திற் காகவும் பாடுபடும்பொருட்டுத் தந்நலமற்ற தியாகிகள் அந்த அல்லா(ஹ்)வின் ஆணையை மேற்கொண்டு சன்மார்க்க ஒழுக்கத்திலே இம்மாக்களை யெல்லாம் ஈர்க்க முற்பட்டுவருங்கால், அவர்களுக்கு நேர்விரோதமான சுயநலப் புலிகள் பல கிளம்பி அந் நல்லாரின் சன்மார்க்கத் தொண்டை யும் தடுத்து, அன்னவர்மீது எண்ணிலாத் துன்பங்களையும் துயரங்களையும் சுமத்தத் தலைப்பட்டு விடுவதென்பது இக்காசினி யின்மீது காணப்பட்டுவரும் ஒரு சர்வசாதாரணமான காட்சியாகவே காணப்படாநின்றது. ஆயினும், அத்தகைய எதிர்ப்பிரசார முட்டுக் கட்டைகளும் தோன்றவேண்டுவது ஓர் அத்தியாவசியமான காரியமாகவே தான் காணப்படுகின்றது. எதிரிகளின் துன்பங்களுக்கும் தொந்தரை களுக்கும் ஆளாகி, மீட்டும் வெளியில் வெற்றிமுரசுடனே வாகைமாலை சூடி வருவதுதான் இப் பெரியார்களின் உண்மையான சத்தியசீலத்தை நன்கு பிரதிபலிக்கச் செய்கின்றது. இவர்க ளனைவரும் எதிரிகளால் இழைக்கப்படும் இன்னல்களையும் இடையூறுகளையும், துன்பங்களையும் துயரங்களையும், கஷ்டங்களையும் நிஷ்டூரங்களையு மெல்லாம் மிக்க பொறுமையுடனே சந்தோஷமாகச் சகித்துக்கொண் டிருப்பதோடுமட்டு

மில்லாது, தாங்கள் மேற்போட்டுக்கொண் டிருக்கும் சத்திய சன்மார்க்க சீர்திருத்த ஊழியத்தையும் ஒருசிறிதும் ஒருபொழுதும் மறந்துவிடுவதும் வழக்கமில்லை. கூடுமாயின், தாங்கள் எடுத்துக்கொண்ட தர்மகைங்கரியத்திலே இறுதிவரை மல்லாடிப் பெருவெற்றி பெறுவார்கள்; இன்றேல், தாங்கள் மேற்போட்டுக்கொண்ட முயற்சியில் மடிந்தேனும் தங்கள் உயிரைத் தியாகம்செய்து தீருவார்கள். ஆனால், ஒருபோதும் தங்களுடைய சன்மார்க்க ஊழியத்திலே மனச்சஞ்சலம் கொள்ள மாட்டார்கள். இன்னம், திடசித்தம், உறுதியான கடைப்பிடி, மேன்மேலும் வேண்டப்படும் அதிக ஊக்கம் ஆகிய சற்குணங்களுக் கெல்லாம் எதிரிகளால் இழைக்கப்படும் துன்பங்களே பயிற்சிதரும் தரையாகக் காணப்பட்டு வருகின்றன. இன்னம், அப்படிப்பட்ட சற்குண சீலங்களெல்லாம் அமையப் பெறுவிடின், ஒருவர் குணமென்னும் குன்றேறி நிற்பதாகப் பீடுகெழு பெருமுழக்குச் செய்வது சாலாது. நான்கு புறத்தும் தாண்டமுடியாத இடையூறுகளே போன்ற முட்டுக்கட்டைக ளெல்லாம் காணப்படும்போது, அத்தகைய தடைகளை யெல்லாம் தாண்டிக்கொண்டு வீரமுழக்குடனே வெளிவருதற்கு எதிரிகளின் துன்பங்களும் துயரங்களுமே ஒருவகைப் புடம்போல அமைந்து கிடக்கின்றன. அத்தகைய அருமையான புடத்தினுல் பெரிதும் பரிசுத்தமாக்கப்பட்டு வெற்றியுடனே வெளிவரும்பொதுதான் அப்பெரியார் இந்நானிலத்தில் இணையற்ற பத்தரை மாற்றுப் பசும்பொன்னிற்கே நிகராக நின்றிலங்குகின்றுர். ஆகலின், எதிரிகளால் இழைக்கப்படும் துன்பங்களெல்லாம் நம்முடைய நன்மைக்காகவே விளைக்கப்படும் மறைமுகமான ஆண்டவ னுசீர்வாதங்க ளென்றே கொள்ளப்படுதல் வேண்டும். இப்படிப்பட்ட இடையூறுகளே நம்மை வன்மைபெறச் செய்து நம்முடைய குணுதிசயங்களையும் சம்பூர்ண மடையுமாறு அதிகம் தூண்டிவிடுகின்றன.

இவை யெல்லாவற்றையுங் காட்டில் மற்ருெரு மூன்ருவது விதமான ஆண்டவன் நோக்கமும் இந்த எதிரிகளின் துன்பங்களில் மறைமுகமாக நின்றிலங்கிக்கொண் டிருக்கின்றது. அஃது என்னவெனின்: எல்லாம் வல்ல அல்லாஹுத் தஆலா தன்னுடைய நாட்டத்தின் பிரகாரம் தனது திருக்கரத்தாலேயே ஒருசிறு செடியை நட்டு வைக்கிருன்; வெளிப்பார்வைக்கு அச்செடியானது எத்துணை மெல்லியதாய்க் காணப்படினும், எத்துணைப் பெரிய பகைமை யென்னும் பெரும் பெரும் புயல்களையும் தாங்கிக்கொண்டு ஆண்டவ னருளால் அச்சிறு செடியே இறுதியில் பெருங்கருங்காலி மரமாய் வளர்ந்துவிடு மென்னும் தத்துவத்தை மனிதர்களுக்கு அவ் விறைவனே நன்கெடுத்து நிரூபித்துக் காண்பிக்கின்றுன் என்பதேதா னுகும். ஆதலின், ஆண்டவனுல் பொறுக்கி யெடுக்கப்பட்ட அவனுடைய சொந்தத் திருத்தூதரின் வெற்றிமுழுதும் வேறு மனிதசகாயமில்லாது அவனொருவனுடைய கிருபாகடாக்ஷத்தைக் கொண்டே இத்தாரணியின் கண்ணுள்ள எப்படிப்பட்ட பெரும் பெரும் அபாயகரமான

புயற்காற்றுக்களை யெல்லாம் தாண்டிக்கொண்டு வெற்றிமாலையுடனே வெளிவருதற்கு அந்தத் திருத்தூதர் அவர்களும், அவர்களுடைய ச'ஹா ப்'ாக்க ளென்னப்படும் தோழர்களும் அந்த மக்கத்துக் :குறைஷிக் கு'ப்'பார்களின் கையிலே அளவுகடந்த துன்பங்களை யெல்லாம் சிலகாலம் வரை சகித்துவர வேண்டுமென்பது அவ்'ஏ'க வல்லவனுடைய ஓர் ஆழிய கட்டளையே போலத்தான் காணப்படாநின்றது.

நாம் முன்னமே கூறியிருப்பதேபோல், தீ'னுல் இஸ்லாத்தின் பிரசாரத்தைச் செவியேற்றவுடனே அம்மக்கத்துக் :குறைஷிகள் ஆரம்பத்திலே நபிகள் பெருமானை ஏளனம் செய்வதும் இழித்துரை யாடுவது மாகவே இருந்து வந்தார்கள்; சில தினங்களுக்குள் நம் பெருமானாரின் பிரசாரம் தானே செத்துவிடுமென்று அவ்வாரம்பத்திலே அவர்கள் அலக்ஷியமா யிருந்திருக்கலாம்; இந்த ஞானசிகாமணியின் "பைத்தியமும் வெறியும்" சிறிது போழ்தைக்குள்ளே சுயமே தணிந்துவிடு மென்றும் அம்மக்கா வாசிகள் எண்ணி யிருந்தார்கள். ஆதலின், பெரியதனக் காரர்களும் தலைவர்களும் செல்வர்களும் அவ்வெதிர்ப் பிரசாரத்தில் தலையிடாது, இளைஞர்களையும், காவாலிகளையும், வேறுசில துஷ்டப் போக்கிரிகளையும் தூண்டிவிட்டே நம் பெருமானுக்குச் சிறுசிறு இன்னல்களையே விளைத்து வந்தார்கள். ஏளனமும் இழிய பரிகாசமும் செய்யப்பட்டு வந்த அவ்வாரம்ப காலத்திலே நபிகள் பெருமானையும் அவர்களுடைய சிஷ்யர்களையும் அதிகம் துன்புறுத்த வில்லை. கண்ணடித்துச் சாடை காட்டுவதும், பரிகாசமாகக் கெக்கலி செய்து சிரிப்பதும், போகவிட்டுப் புறங்கூறித் திரிவதுமே அந்த ஆரம்ப விஷமிகளின் அழகிய தொழிலாகக் காணப்பட்டு வந்தன. சித்தபிரேமை கொண்டவரென்றும், சிறு பைத்தியம் பிடித்தவ ரென்றும், மற்றும் பலவாறாகவும் பிதற்றி வந்தார்கள். நபிகள் பெருமானுக்கு (சல்) மூளை ஒருசிறிது கலங்கிப்போ யிருப்பதாகவும் கூறினார்கள். ஆரம்பத்தில் ஏழைகளும் அடிமைகளும் இப்பெரியாரின் பேச்சைக் கேட்ட போது, அவர்களைப்பற்றி அம்மக்கத்துக் கா'பிர்கள் ஒன்றும் கவலைகொள்ள வில்லை. ஆனால், நாளடைவில் அபூ'ப'க்ர், உ':த்மான் போன்ற பல பெரிய மனிதர்களும் தீ'னுல் இஸ்லாத்தில் சேர்ந்துவருவதைக் கண்டபோதுதான் அவர்கள் இனிச் சும்மா இருப்பது கூடாதென்று நுபு'வ்வத் வந்து ஐந்தாவது ஆண்டில் தங்கள் எதிர்ப்பை மிக மிகக் கடுமையாகச் செய்யத் துவக்கினார்கள். அதன் பிறகுதான் அபூ'ஜஹ்லின் ஆணையின்படி ஓர் அயோக்கியன் ஒட்டகத்தின் அழுகிய நாற்றமெடுத்த குடர்களை அப்பெருமானாரின் பிடரியின்மீது போட்டதும், மற்றோர் அயோக்கியன் அவர்களுடைய கழுத்திலே துணியைப் போட்டு முறுக்கித் துன்புறுத்தி மூர்ச்சையாக்கியதும் நிகழ்வுற்றன. நபிகள்நாயகம் (சல்) அதிகாலையில் எழுந்து வணக்கம்புரியச் செல்லுங்கால், அவர்கள் நடக்கும் வழிமுழுதும் முட்களையும் கற்களையும் நிரப்பி வைப்பார்கள். பிறகுதான் கல்லடியும் மண்

ணடியும் அதிகம் கைக்கொள்ளப்பட்டு வந்தன. இதுசமயமே அபூ'ஸுஃப்யான் பி'ன் ஹாரி:த் பி'ன் அ'ப்'து'ல் முத்தலிபெ'ன்னும் ரஸூலுல்லாவின் பெரிய தந்தையின் மைந்தரும் நாயகமவர்களைப் பற்றி வாய்கொண்டமட்டும் நன்ருகக் கவிகள் பாடித் திட்டிக் கொண்டிருந்தார். (பிறகு, இவர் இறுதியிலே இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டுவிட்டார்.)

நபிகள் பெருமானின் நல்லுபதேசத்திஞல் ஆண்டானும் அடிமைகளும் இப்பாருலகில் சரிசமானமாகவே பாவிக்கப்பட வேண்டியவர்களா யிருந்தார்கள். இதனுலும் ஏழைகளும் அடிமைகளும் சர்வ சாதாரணமாக நந் தீ'னுல் இஸ்லாத்தில் சேர்ந்து கொண்டார்கள். ஆனுல், இதுதான் அந்தக் :குறைஷிக் கு'ப்'பார்களுக்குப் பிடிக்க வில்லை. இன்னம், அன்னவர்களைத் துன்புறுத்திஞல் உள்ளூரில் கலகம் விளையாதென்றும் கண்டு கொண்டார்கள். அக்கொடிய பாதகர்கள் ஆணென்றும் பெண்ணென்றுங் கூட வேற்றுமை பாராட்டாமலே வேதனை செய்துவந்தார்கள். அரப் நாட்டிலே சூரியக்கிரணம் சகிக்க முடியாக் கொடுமையுடனேதான் எறிக்கு மென்பது உங்களுக்குத் தெரியும். அக்கொடிய வெய்யிலில் உச்சியுரும நேரத்திலே திறந்த மணல் வெளியிலே அவ்வேழை முஸ்லிம்களைச் சரீரத்தில் ஆடையுமின்றிக் கீழே கிடத்திவைத்து, அவர்கள்மீது சுமக்க முடியாத பாருங்கற்களையும் சுமத்தி வைப்பார்கள். இரும்புச் சலாகைகளைப் பழுக்கக் காய்ச்சி அவர்களுடைய சரீரத்தின்மீது சூடுபோடுவார்கள். அவர்களைத் தனியறைகளுள்ளே போட்டு இருட்டில் பூட்டிவைப்பார்கள்; தண்ணீருக் குள்ளும் ஆழ அமுக்கி எடுப்பார்கள். பாய்க்குள்ளே வைத்துச் சுருட்டிப் புகையையும் அதனுள்ளே புகுத்துவார்கள். இவ்வா றெல்லாம் செய்யப்பட்டு வந்தும், அவ்வேழை முஸ்லிம்கள் எல்லாரும் தங்களுடைய ஈமான் என்னும் நன்னம்பிக்கையில் மட்டும் ஒருசிறிதும் உறுதிப்பாடு குறைந்தவர்களாய்ப் போய்விடவில்லை.

> "தேந்தரு மினியசொற் செவ்வி நந்நபி
> யாய்ந்தசொ லுணர்ந்திசு லாத்தி லாகிய
> மாந்தரைப் பிடித்தக மறுக்க முற்றற
> வீய்ந்திட விடர்பல விளைத்திட் டாரரோ,"
>
> "ஏங்குவ ரிரங்குவ ரிருக ணீர்விழத்
> தேங்குவ ரடிக்கடி தீனை மாறியும்
> நீங்குவ தில்லென நினைத்திட் டுள்ளகம்
> வீங்கிட நெட்டுயிர்ப் பெறிந்து வீழ்குவார்,"—

என்ருர் சீருவென்கிற புராணத்துக் குடையாரும்.

இவ்வழியா லெல்லாம் துன்புறுத்தப்பட்ட முஸ்லிம்கள் பல்லோரா யிருப்பினும், அவர்களுள் சிலருடைய விருத்தாந்தங்களை மட்டுமே ஈண்டு

உதாரணமாக எடுத் தெழுதுகின்றேம். ஆயினும், அவரவரும் தத்தம் முடைய அடிமைகளை யெல்லாம் இவ்வாறே துன்புறுத்தும் கடமைகளையே மதக் கட்டளையாக மேற்போட்டுக் கொண்டு விட்டனர். அவர்கள் சிறை யிடப்பட்டும், பசிப்பிணியால் துன்புறுத்தப்பட்டும், தடிகளால் நையப் புடைக்கப்பட்டும் வந்தார்கள். இக்கொடிய செய்கைகளுக்கு "ரமல்'ா" என்னும் கொடிய மலைக்குன்றும் "ப்'த்'ா" என்னும் உஷ்ணத் திடருமே பேர்பெற்று விளங்கலாயின. அவ்விடங்களில் தாகத்துக்கும் தண்ணீர் கொடுக்காமல் வேகின்ற வெய்யிலில் கொதிக்கின்ற மணல்மீது குப்புறும் மல்லாத்தியும் போட்டு அவ்வேழை முஸ்லிம்களை வாட்டிவதக்குவார்கள்.

**பி'லாலைச் செய்த கொடுமை:**— பி'லால் (ரலி') இப்'னு றப்'ப'ா'ஹ் என்னும் 'ஹப'ஷாநாட்டு நீகிரோவ அடிமையேதான் இஸ்லாத்தின் முதல் முஅ'த்'தின் என்பதை நீங்களெல்லீரும் நன்கறிவீர்கள். இவரை உமையா பி'ன் க'ல'ப் என்னும் கா'பிரானவன் அடிமையாகக் கொண்டிருந்தான். நம் பி'லால்(ரலி') தீ'னுல்இஸ்லாத்தில் சேர்ந்து கொண்டதை யறிந்து, அதை விட்டுவிடுமாறு பலவிதத்திலும் அந்த விக்ரஹத் தொழும்பனுன உமையா தன்னுடைய அடிமையைத் துன்புறுத்தினுன். அவன் அவ்வாறு செய்து வந்த இம்சைக்கோர் அளவு சொல்லி மாளாது. 'ஹ'ஜ்ரத் பி'லாலை ரமல்'ாவுக்கு அழைத்துச் சென்று, ப்'த்'ா வென்னும் உஷ்ணத் திடர்மீது ஒவ்வொரு நாளும் நடுமத்தியான்ன உச்சியுருமவேளையில் ஆடையு மில்லாது அம்மணமாக மல்லாந்து படுக்கும்படி கிடத்தாட்டி, "நீ இஸ்லாத்தைத் துறந்துவிடல் வேண்டும்; இன்றேல், இப்படியே நீ சாவவேண்டும்," என்று சொல்லி, ஒரு பெரிய பாறைக்கல்லையுந் தூக்கி அவர்களுடைய நெஞ்சின் மீது வைப்பான் அந்த உமையா வென்னும் கொடும்பாபி. 'ஹ'ஜ்ரத் பி'லாலின் முதுகின் தோல் வறுவோட்டிற் போடப்பட்ட மாம்ஸத் துண்டேபோலப் படபடவென்றும் சடசடவென்றும் பொரியும்போதும், தாகவிடாயின் கொடுமையையும் கண்ணில்குத்தும் உக்கிரச்சூரியனது உச்சிக் கடோர வெப்பத்தையும் சகித்துக்கொண்டே, "அ'ஹது'ன்! அ'ஹது'ன்!! [அல்லா(ஹ்) ஒருவனே! அல்லா(ஹ்) ஒருவனே!!] என்று மட்டுமேதான் விளம்புவார்க ளல்லது, வேறொன்றும் விடுக்க மாட்டார்கள்.

> "நெஞ்சினில் பெருஞ்சிலை சுமந்து நீங்கிலா
> வெஞ்சுரத்(து) இடைமிடை மிடைந்தும் வேதநூல்
> விஞ்சையின் முகம்மது விளக்கும் உண்மையை
> அஞ்சலித் தவனலால் அறிவு நீங்கிலான்,"

என்று அழகுற அறைந்துளார் சீறுவுக் குடையாரும்.

அந்த மணல்வெளியில் எறியப்பட்ட எத்தகைய மாம்ஸத் துண்டும் எளிதில் வறுபட்டு விடுமென்று சரித்திராசிரியர்கள் சொல்லுகிறார்கள்.* அப்படிப்பட்ட மாகொடிய மணலுஷ்ணத்திலே பலநாள்வரை அந்தக் கடின சித்தமுடைய உமையா வென்பவன் பி'லால் அவர்களைக் கிடத்தி வைத்துப் பார்த்தான். அதனுலெல்லாம் ஒன்றும் முடியாததைக் கண்டு, மிருகங்களின் பச்சைத்தோலை 'ஹ'ஜ்ரத் பி'லாலின் சரீரத்தில் சுற்றிக்கட்டி, அத்தோல் துண்டு துண்டாகச் சிந்தியாகும்வரை இருப்புக் கம்பியால் அடிப்பான். சிற்சில சமயங்களில் பச்சைத் தோலைக்கொண்டு 'ஹ'ஜ்ரத் பி'லாலின் சரீரத்தைச் சுற்றி இறுகக் கட்டி வைப்பான். அப் பச்சைத் தோல் உலர்ந்து சுருங்கிக் கொண்டே வரும்போது, 'ஹ'ஜ்ரத் பி'லாலின் தேகமும் சுருங்கிக்கொண்டே வரும். அப்பொழுதும், அவர்களுடைய சரீரத்தினின்று இரத்தம் பொங்கி வழிந்தோடும்போதும், "அ'ஹது'ன்! அ'ஹது'ன்!!" என்பதைத் தவிர்த்து வேறொன்றும் கூறார்கள். கடுங் குளிர்காலத்தில் சரீரத்தில் ஆடையொன்று மில்லாது இராமுழுதும் திறந்த வெளியிலேயே நிறுத்திக் கட்டிவிடுவான். கோடைக் காலத்தில் பகல் முழுதும் அக் கொதிவெய்யிலிலே நிறுத்திப் பசிக்குப் புசிக்கவும், தாகத்திற்குத் தண்ணீரும் சிறிதும் கொடுக்க மாட்டான். அப்பொழுதும், "அ'ஹது'ன்! அ'ஹது'ன்!!" என்பதை யல்லது, வேறொன்றும் சொல்ல மாட்டார்கள். சில சமயங்களில் பனையகணியால் முறுக்கப்பட்ட கரடு முரடான கயிற்றைக் கொண்டு பி'லால் அவர்களது கழுத்திலே சுருக்கை மாட்டி இரக்கமற்ற சிறுவர்களின் கரத்திலே கொடுத்து, அங்குமிங்கும் இழுத்தலையச் செய்வான். அந்தக் காவாலிகள் 'ஹ'ஜ்ரத் பி'லாலை அவ்வாறு பலவந்தமாக இழுத்துச் செல்வதால், அவர்களுடைய கழுத்திலும் பெருங் காயம் பட்டு, இரத்தம் பீரிட் டடிக்கும். அப்பொழுதும், "அ'ஹது'ன்! அ'ஹது'ன்!!" என்பதை யல்லது, வேறொன்றுங் கூற மாட்டார்கள்.

இவ்வா றெல்லாம் மகா நா'ஜூஸக்கான முறையிலே அந்த உமையா பி'ன் க'ல'ப் செய்துவந்த கொடுமைகளைக் கண்டு, ஒருநாள் ஆபூ'ப'க்ர் சித்'தீ':க் அந்த எஜமானனைப் பார்த்து, "ஏ உமையா! எல்லாம் வல்ல அல்லா(ஹ்)வி னிடத்து உனக்குச் சிறிதும் அச்ச மில்லையா? ஏன் இவ் வேழை அடிமையை இவ்வாறு துன்புறுத்துகின்றாய்?" என்று கோபமாக வினவினார்கள். அதனைக் கேட்டு அந்த உமையா, "நீதான் இவனைக்

* இத்தகைய கொடும்பாலையைக் குறித்துத்தான் கம்பநாடனும் இவ்வாறு சித்திரித்துள்ளான் :—

"பாருமோ டாதுநீ டாதெனும் பாலதோ!
சூருமோ டாதுகூ டாதரோ! சூரியன்
தேருமோ டாதுமா மாகமீ தேரினோர்
காருமோ டாதுநீள் காலுமோ டாதரோ!"

கெடுத்து விட்டாய். ஆதலின், நீதானே இவனை இப்பொழுது காப்பாற்றி விடக் கடவாய்!" என்று மிக்க ஏளனத்துடனே கூறினான். உடனே 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர், "நிச்சயமாக அப்படியே செய்கிறேன். இவரைக் காட்டினும் வன்மையும் வாலிபமு முள்ள மற்றொரு நீகிரோவ அடிமை என்னிட மிருக்கின்றான். அவனும் உன்னைப் போன்ற ஒரு விக்ர ஹத் தொழும்பனே. ஆதலின், அவனையே இவருக்குப் பதிலாக ஈடு கொடுக் கின்றேன்,'' என்று கூறி முடித்தார்கள். உடனே உமையாவும் அதை ஒப்புக்கொண்டு பி'லாலை 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ரிடம் அப்பொழுதே ஒப்புக் கொடுத்து விட்டான். இவ்வாறே இந்தப் பெரியார்—(இவர்களுக்கு ஆண்டவனே சர்வ சாந்தியும் அளித் தருள்வானாக!) ஆணும் பெண்ணு மான ஆறு அடிமைகளை அவரவருடைய முதலாளிகளின் கையினின்று விடுவித்து, இஸ்லாத்தில் சுயேச்சை அளிப்பதற்காகவே வாங்கி விடுதலை செய்திருக்கின்றார்கள். அவ் வறுவரின் நாமங்களாவன: 1. பி'லால்* 2. லுபை'னா 3. ஜ'ன்னீரா 4. நஹ்தி'ய்யா 5. உம்ம உ'பை'ஸ் 6. ஆ'மிர் பி'ன் 'புஹைரா.

**க'ப்'ப'ாப்'**:— க'ப்'பா'ப் பி'ன் இர்த் ப'னூ 'தமீம் வர்க்கத்தி னின்று பிடித்துக்கொண்டு வரப்பட்ட அடிமையா யிருந்தார்கள். இவர் களை விலைக்குவாங்கி அடிமைத் தனத்தில் ஆழ்த்தியிருந்தவன் பெயர் உம்ம அ'ன்மார் என்பதாகும். இந்தத் தோழர், நபிகள் பெருமான் அர்(க்)கம் விடுதிக் குள்ளிருந்த காலத்திலே தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவிக் கொண்டார்; அதற்குமுன் அறுவரே இஸ்லாத்தில் சேர்ந்திருந்தார்கள். இவர்கள் இஸ்லாத்தைத் தழுவிய விஷயம் :குறைஷிகளுக்கு எட்டிய வுடனே, அவர்க ளெல்லாரும் இவர்களை ஏட்டில் எழுதமுடியா இம்சை களுக் கெல்லாம் ஆளாக்கத் துணிந்தனர். ஒரு நாள் அக்கொடிய பாபிகள் அக்கினியை வளர்த்து அந்தத் தணலின்மேல் க'ப்'ப'ாப்'(ரலி') அவர்களை மல்லாத்திக் கிடத்தி, இவர்கள் அப்பக்கம் இப்பக்கம் திரும்பமுடியாத விதத்திலே ஒரு வன்னெஞ்சன் இவர்கள் மார்பின்மீது தன்காலை வைத்தும் மிதித்து அழுத்திக் கொண்டான். இவர்கள் அந் நெருப்பின் வேகம் தணிந்து சுயமே ஆறிப்போகுமட்டும் அப்படியே கிடத்திவைக்கப் பட்டிருந் தார்கள். அப்பொழுதும் இவர்கள் தங்கள் இஸ்லாமிய கொள்கைகளை விட்டுவிடத் துணியவில்லை. நெடுங் காலத்திற்குப் பின்பு 'ஹ'ஜ்ரத் உ'மர் அவர்களிடம் க'ப்'ப'ாப்' (ரலி') மீக்கூறியவாறு நடந்த விருத்தாந்தங்களை யெல்லாம் சொல்லிக் காட்டியபொழுது, அந்த 2-ஆவது க'லீ'பாவாய் உயர்ந்து விளங்கிய அமீருல் மூமினீன் இவர்களுடைய முதுகைத் திறந்து காண்பிக்கச் சொன்னார்கள். அவ்வண்ணமே க'ப்'ப'ாப்'(ரலி') அவர்கள்

---

* 'ஹ'ஜ்ரத் பி'லால் அவர்கள் ஹி. 20-ஆம் ஆண்டில் தமது 63-ஆம் பிராயத்திலே திமஷ்க் பட்டணத்தில் மரணமடைந்தார்கள்.

தங்கள் முதுகைத் திறந்துகாட்டிய பொழுது, அம் முதுகு முழுவதும் வெண்குஷ்டம் பற்றியதேபோல் வெள்ளைத் தழும்பு மயமாகவே காணப் பட்டது. இவர்கள் இஸ்லாத்தைத் தழுவுமுன் கொல்லர் (கருமார்) வேலை செய்து வந்தார்கள். இவர்கள் இஸ்லாத்தைத் தழுவிய பின்பு இவர் களுக்குப் பழைய பாக்கி கொடுக்க வேண்டி யிருந்த கடன்காரர்க ளெல்லாரும், இவர்கள் இஸ்லாத்தைக் கைவிட்டா லல்லது, தாங்க ளொன்றும் அக்கூலியைக் கொடுக்கமுடியா தென்று மறுத்து, இறுதிவரை அப்படியே பிடிவாதம் பிடித்துச் சாதித்து விட்டனர். பி’லால், அ’ம்மார், யாஸிர் ஆகியோரும் இவ்வாறே நெருப்பு விரிப்பின்மீது படுக்க வைக்கப் படாது போய்விட வில்லை.

**அ’ம்மாரும் (ரலி’) அவருடைய தாய் தந்தையரும்:—** யமன் தேச வாசியான யாஸிர் என்பார் மக்காவில் வந்து அபூ’ஹு’ஸைஃபா மக்’’ஜூமீ என்னும் :குறைஷியிடம் தங்கி யிருந்தார். அந்தக் கா’பிர்மனிதன் தன்னுடைய அடிமைப் பெண்ணான ஸுமிய்யா என்னும் நங்கையை அந்த யாஸிருக்கு விவாகம் செய்துவைத்தான். அந்தத் தம்பதிகள் வயிற்றிலே அ’ம்மார் தோன்றியிருந்தார். இந்த அ’ம்மார் என்பவர் ஆதியிலே நான்கா வது முஸ்லிமாக இஸ்லாத்தில் சேர்ந்திருந்தார். இவரும் இவரது தாய் தந்தையரும் தீ’னுல் இஸ்லாத்தில் சேர்ந்து கொண்ட விஷயம் ப’னூ மக்’’ஜூம் வர்க்கத்தினருக்குத் தெரிந்தவுடனே அந்தக் கொடும் பாதகர்கள் அம் மூவரையும் படுத்திவைத்த பாட்டை நினைக்க நெஞ்சம் துணுக்குறு கின்றது. ரமல’ாவுக்கு அழைத்துச் செல்லப்பட்டு, அ’ம்மார் என்பவர் கீழே கிடத்தப்பட்டு, அவரது நெஞ்சின்மீது இரும்பினால் செய்யப்பட் டிருந்த பளுவான மார்புக்கவசம் ஒன்றும் தூக்கி வைக்கப் பட்டது. உச்சியுரும நடுப்பகலின் வேளையில் உஷ்ணத்தால் கொதிப்பேறிய அந்த இருப்புத் தகட்டின்கீழ் அ’ம்மாரின் சரீரம் பொரிந்துகொண் டிருந்த ஓசை வெளியிலும் கேட்டுக்கொண் டிருந்தது. ஆயின், பி’லால் அவர்களைப் போலவே இவர்களும் தங்கள் ஈமானை— இஸ்லாத்திலுள்ள உறுதியை— இழக்காமலே உறுதிகொண் டிருந்தார்கள்.

> “ஏங்குவர் இரங்குவர் இருகண் நீர்விழத்
> தேங்குவர் அடிக்கடி தீனை மாறியும்
> நீங்குவ(து) இல்லென நினைத்திட்(டு) உள்ளகம்
> வீங்கிட நெட்டுயிர்ப்(பு) எறிந்து வீழ்குவார்,”— என்றார் உமறுப்

புலவர் பெருமானும்.

சிறிதும் இரக்கமில்லாமலே, “இவர்கள் பிடித்துச் சிறையிடப்பட்டார் கள்; அல்லது மத்தியான்ன சூரியவெப்பத்தின் கண்கூசும் வெய்யிலிலே, அந்த மணல்வெளியின் வேகின்ற கரடுமுரடான கற்களின்மீது கிடத்தாட் டப் பெறுவார்கள்; போதாக் குறைக்குத் தாகவறட்சியால் அந்தக் கடுங்

கொடுமை அதிகப்படுத்தப்படும்; அவ்வாறு துன்புறுகிறவர்கள் தங்களால் பிழைத்துப் பெறுவது இன்னதென்றறியாமலே (பயித்தியம் பிடித்தவர்களே போல்) ஆய்விடுவார்கள்," என்று ஸர் வில்லியம் மூய்ரும் சான்று கூறுகின்றார்; ஆயினும், அவர்களில் எவரும் இஸ்லாத்தைத் துறந்து மாறிப்போய் விட்டன ரில்லை. எத்துணைப் பெரிய மன உறுதியுள்ள மனிதர்களும் மாறிவிடும்படியான அத்துணைப் பெரிய உக்கிரமும், உஷ்ணமும்! ஆனால், அம் மூவரின் உறுதிப்பாட்டையுங் கண்ட :குறைஷிகள் கொடுங்கோபங்கொண்டு யாஸிர் என்பவரை மனத்தினாலும் நினைக்கமுடியாத அப்படிப்பட்ட கொடுமைகளுக் கெல்லாம் ஆளாக்கி வைத்தார்கள். அந்தக் கொடிய கா'பிர்கள் யாஸிரைக் கொன்ற மிருகப்பிராயமான அநாகரிக சரித்திரத்தைக் கேட்குங்கால், எப்படிப்பட்ட கல்நெஞ்சாய உள்ளமும் குன்றி, உரோமமும் சிலிர்த்து விடுமென்றே செப்பலாம்: யாஸிரின் இருகால்களையும் இரண்டு ஒட்டகங்களின் பின்னங்கால்களில் பிணித்து இறுகக் கட்டிவிட்டு, அவ்விரு மிருகங்களையும் எதிரெதிராய வெவ்வேறு திசையை நோக்கி வெருட்டினார்கள். இதனால் யாஸிரின் கவட்டை வழியே மேனி கிழிந்து இரண்டு துண்டாகப் பிளந்து, அந்தக்ஷணமே உயிர்துறந்தார். 'க'தீ'ஜாவின் (ரலி') மைந்தருக்குப்பின்பு யாஸிரே தீ'னுல் இஸ்லாத்திற்கென்று இரண்டாவதாக உயிரைத்தியாகம் செய்துவிட்ட புண்ணிய புருஷராவார். யாஸிரின் மனைவியும் அ'ம்மாரின் மாதாவு மாகிய ஸுமய்யா என்னும் மாதரசியாரும் தம்முடைய ஈமானைத் தளர்த்தி விடவில்லையென்று கண்ட அபூ'ஜஹ்ல் அம்மாது சிரோமணியைக் கீழே தள்ளி, "நீ மு'ஹம்மதி'ன்மீது ஈமான் கொண்டதாய்க் கூறும் கதையெல்லாம் அந்த மு'ஹம்மதி'ன் அழகின்மீது நீ கொண்ட காதலே யாகும்," என்று ஏளனமாகக் கூறிக்கொண்டே, தன்னுடைய ஈட்டியை அப் புண்ணியவதியின் மருமத்திலே சொருகி, அவரது உயிரை ஆகாயலோகம் அனுப்பிவைத்தான். இவருடைய மர்மஸ்தானத்திலேயே அபூ'ஜஹ்ல் அம்பை எய்து அவ்வுலகுக் கனுப்பிவைத்தா னென்பர் வேறு சிலர். இந்த ஸுமய்யா என்னும் மகானுபாவையே இஸ்லாத்துக்காக உயிரைக் கொடுத்த முதற் பெண் தியாகி யாவார். இவ்வா றெல்லாம் துன்புறுத்தப் பட்டும், அம்மூவரும் சிறிதும் தமது ஈமானில் தளர்ச்சியை அடைந்தன ரில்லை. அ'ம்மாரைக் :குறைஷிக்கு'ப்'பார்கள் அக்கினியைக் கொண்டு சுட்டு, இஸ்லாத்தை விட்டு விடுமாறு அதிகம் துன்புறுத்திக்கொண் டிருந்தார்கள். சிற்சில சமயங்களில் நாயகமவர்கள் அப்பாதை வழியே சென்றுகொண் டிருக்கும்போது, "ஏ அக்கினியே! நீ இப்'ராஹீம்நபிக்குத் தணிந்திருந்ததேபோல் இங்கும் இருக்கக் கடவாய்!" என்று கூறுவார்கள். ஆனாலும், அ'ம்மார் தம்முடைய ஈமானை விட்டுவிட வில்லை. இறுதியில் இவர் பின்னே நடந்த ஸிப்'பீன் யுத்தத்தில் 'ஹ'ஜ்ரத் அ'லீ(ரலி') யுடனே சேர்ந்திருந்து அதே யுத்தத்திலே கொல்லப்பட்டும் போயினர்.

ஸு'ஹைப்' :— இவர்களும் :குறைஷிகளால் தீ'னுல் இஸ்லாத்தை விட்டுவிடு மாறு கூறிப் புத்தி தடுமாறுமட்டும் நையப் புடைக்கப்பட்டார்கள். ஆனால், இவர்கள் அக் கஷ்டத்தை யெல்லாங் காட்டினும் இஸ்லாத்தையே பெரிதெனக் கருதியிருந்தார்கள்; ஆதலின், இவர்களுக்கு இஸ்லாத்தின்மீ திருந்துவந்த நன்னம்பிக்கை ஒருசிறிதும் மாறுதலடைந்திற்றிலது. பிறகொரு சமயம் இவர்கள் மதீ'னாவுக்குப் போக நாட்டங் கொண்டார்கள். அது தெரிந்த :குறைஷிகள் இவர்களுடைய ஆடைகள் யாவற்றையும் மக்கத்திலே விட்டுப்போவதா யிருந்தால் மட்டுமே மதீ'னத்திற்குப் போக விடைகொடுக்க முடியுமென்று சொல்லி விட்டார்கள். இவ்வுலக சம்பந்தமான எல்லாவற்றையுங் காட்டில் தங்களுக்குரிய தீ'னுல் இஸ்லாமே சிறந்ததெனக் கொண்டு தங்களுக்குச் சொந்தமாயிருந்த எல்லாப் பொருள்களையுமே மக்கத்திலே விட்டுவிட்டு மதீ'னத்திற்கு ஹிஜ்ரத்சென்று விட்டார்கள். இவர்களை ஸு'ஹைப்' ரூமீ என்று சொல்லுவார்கள். என்னெனின், இவரது தந்தையான ஸனான் என்பவர் பாரசீக தேசத்துக் கிஸ்ராவின் ராஜப்பிரதிநிதியாக உப'ல்லாவில் உத்தியோகம் வகித்து வந்தபோது, மோஸலில் தங்கியிருந்த இக் குடும்பத்தினரை உரோமர்கள் வந்து வெற்றிகொண்டு, சிறைபிடித்துக் கொண்டு சென்றுவிட்டார்கள். பின்னர் ஸனான் என்பவருக்கு ஸு'ஹைப்' என்பார் அந்த உரோமாபுரியிலேயே பிறந்தவ ராவர். இவரை ஒரு மக்கத்து அரபி கிரயத்துக்கு வாங்கிக் கொண்டுவந்து அ'ப்'து'ல்லா ஹிப்'னு ஜத்'ஆ'ன் என்பவரிடம் அடிமையாக விற்று விட்டான். இந்த அ'ப்'து'ல்லா வென்பவர் ஸு'ஹைப்' ரூமீயை விலை கொடுத்து வாங்கி விடுதலை செய்துவிட்டார். அதன்பின்பு இவர் அ'ம்மாருடனே சேர்ந்துகொண்டு போய் ரஸூலுல்லாவின் முன்னிலையில் அர்:க்:கமவர்களின் இல்லத்திலே தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவிக்கொண்டார்.

அபூ' 'ப(க்)கீஹ் :— (இவரது ஆதிப்பெயர் அ'ப்ல'ஹ் என்பதாகும்.) இவர்களும் பி'லாலைப்போல ஓர் அடிமையாகவே இருந்தார்கள். எனவே, அவ்விருவரும் சென்றே நபிகள் நாயகத்தின் திருமுன்பினில் தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவினார்கள். இவ்விஷயம் அபூ' 'ப(க்)கீஹின் எஜமானனை ஸ'ப்வான் இப்'னு உமையாவுக்குத் தெரிந்தவுடனே இவர்களைத் துன்புறுத்தத் தொடங்கினான். இவர்களை ஸ'ப்வான் கீழே தள்ளி, இவர்களுடைய காலில் கயிற்றைக் கட்டித் தெருத்தெருவாக இழுத்துக்கொண்டு செல்லுமாறு சிறுவர்களிடம் ஒப்புக்கொடுப்பான். இவ்வாறு இழுத்துக் கொண்டு போகும் வழியில் ஒரு மஜூஸியை— (அக்கினியை வணங்குகிறவனை) அபூ' 'ப(க்)கீஹிடம் காண்பித்து, "இவன் உன்னுடைய ஆண்டவனல்லவா?" என்று வேடிக்கையாக வினவினான். அதற்கு அபூ' 'ப(க்)கீஹ் அவர்கள், "உனக்கும் எனக்கும் ஆண்டவனா யிருப்பவன் அந்த அல்லாஹுத் த ஆ'லா ஒருவனாகவே யிருக்கிறான்," என்று விடை கொடுத்

தார்கள். இதைச் செவியேற்றவுடனே ஸ்'ப்வானுக்கு அடங்காக் கோபம் பிறந்து, அபூ' 'ப(க்)கீஹின் கழுத்தைப்பிடித்து அழுத்தமாக நெரித்தான். அதைக்கண்ட மனிதர்கள் அவர்களுக்கு அப்பொழுதே உயிர் போயிருக்கு மென் றெண்ணினார்கள். வேறு சில வேளைகளில் அவர்களைப் பொட்டல் மணல் வெளியில் கீழே கிடத்தாட்டி, அந்தச் சகிக்கொணுச் சூட்டிலே போட்டு வெதுப்புவான். மற்றொரு சமயம் அவர்களைக் கீழே தள்ளி மார்பின்மீது பெரும் பாரமான கல்லைத் தூக்கி வைத்தான். அதன் பளுவைத் தாங்கமுடியாது, அபூ' 'ப(க்)கீஹின் நெஞ்சுக்கூடு நசுக்குண்டு, நாவும் வெளியில் பிதுங்கி வந்துவிட்டது. அந்தோ, என்ன அக்கிரமம்! என்ன அநியாயம்!!—இவர்கள் மூன்றாவது ஆண்ஷஹீத்'.

புருஷர்கள் மட்டுமேதாம் அவ்வாறெல்லாம் துன்புறுத்தப் பட்டார்க ளென்று எண்ணிவிட வேண்டாம். இத்தகைய கொடிய வேதனைக்கு ஸ்திரீ ரத்னங்களும் ஆளாக்கப்படாமல் விட்டுவிடப் படவில்லை. ஸுமய்யாவின் பரிதாபகரமான மரணத்தைப்பற்றி நாம் முன்னமே கூறினோம். வேறுசில பெண்மணிகளின் துயரக் காதையையும் இதன்கீழ்ச் சிறிதே விவரிக்கின் றோம்; கவனிப்பீர்களாக:—

லுபை'னு:— இப் பெண்மணி 'ஹ'ஜ்ரத் உ'மர் அவர்கள் வீட்டிலிருந்த ஓர் அடிமையாவர். இவர்கள் தீ'னுல் இஸ்லாத்தில் சேர்ந்துகொண்ட விஷயம் இவரது எஜமானரான உ'மருக்கு— (இவர் அதுவரை முஸ்லிமாக வில்லை) வெளியாயவுடனே அவருக்கு அடக்க முடியாக் கோபமுண்டாகி, இம்மாது சிரோமணியை மனங்கொண்டமட்டும் அடித்துத் துன்புறுத்தி னார். உ'மர் தம்முடைய கைகால்க ளெல்லாம் களைத்து ஓய்வடையுமட்டும் அடித்து நிறுத்திக்கொண்டு, அம்மாதை நோக்கி, "ஏ லுபை'னு! உன் மீது கருணைகூர்ந்து நான் இப்போது அடிப்பதை நிறுத்திவிட்டே னென்று எண்ணிவிட வேண்டாம். ஆனால், நான் அதிகம் களைத்திருப்பதனால்தான் உன்னை இதுபொழுது அடிப்பதை நிறுத்தி யிருக்கிறேன்," என்று செப்பு வார். அதைக் கேட்டு, அந்தப் பெண்மணி யானவர், "தாங்கள் தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவாவிட்டால் ஆண்டவன் உங்கள்பால் இதற்குத் தக்க வண்ணம் பழி வாங்குவான்," என்று இன்முகத் துடனே நன்மொழி கூறு வார். இவரைக் கிரயங்கொடுத்து வாங்கி விடுதலை செய்தவர்கள் 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் சித்'தீ':க் (ரலி') அவர்களே யாவார்கள்.

ஜுன்னரா:— இவரும் உ'மர் (ரலி') வீட்டில் அடிமையா யிருந்தவரே. 'ஹ'ஜ்ரத் உ'மர்மட்டும் இம்மாது சிரோமணியை அடித்துத் துன்புறுத்தியது போதாதெனக் கண்டு, உ'மரின் சிறியதந்தை முறையான அபூ'ஜஹ்லும் சற்றும் இரக்கமில்லாது இந்தப் பெண்மணியை அடித்த அடியின் வேகத்தி னால் ஜுன்னராவின் நேத்திரங்க ளிரண்டும் பழுதாய்விட்டன. பிறகு பார் வையை யிழந்த இப் பெண்மணியை நோக்கி அபூ'ஜஹ்ல், "லாத், உ'ஜ் 'ஜா என்னும் சுவாமிகளே உன்னைக் குருடாக்கிவிட்டன!" என்று ஏளன

மாகக் கூறியதைக் கேட்டு, அம்மாது சிரோமணி, "நீ சொல்லுகிற லாத், உ''ஜ்'ஜா வென்னும் விக்ரஹங்களுக்கே தங்களைப் பூஜிப்பவர்கள் இன்னு ரினையா ரென்று அறியக்கூடிய சக்தி இல்லையே! ஆதலின், எனக்குப் பார்வை யில்லாமற் போனது அல்லா(ஹ்)வின் சங்கல்பத்தினாலேதான். என் னுடைய ஆண்டவன் சர்வ வல்லமை யுள்ளவன். மீட்டும் என் நேத்திரங் களுக்கு ஒளிகொடுக்கக் கூடிய அபாரசக்தி வாய்ந்தவன்," என்று புன் முறுவ லுடனேயே புகன்று நின்றார். இவரையும் விடுவித்தவர் அபூ'ப்க்ர் சித்'தீ':க் அவர்களே யாவார்கள்.

**நஹ்தி'ய்யாவும் உம்மு உ'பை'ஸுᵐம் :—** இவ்விரு பெண் ணடிமைகளை யும் அவரவரின் எஜமானர்களும் எஜமாட்டிகளும் பற்பலவாருகத் துன்பு றுத்தி வந்தார்கள். "நீ இஸ்லாத்தை விட்டுவிட வேண்டும்; இன்றேல் மு'ஹம்மதை'ச் சேர்ந்தவர் எவரேனும் உன்னைக் கிரயங்கொடுத்து வாங்கிக் கொள்ள வேண்டும். அதுவரை நான் இவ்வாறே உன்னைத் துன்புறுத்து வேன்," என்று நஹ்தி'ய்யாவின் எஜமாட்டி கூறுவாள். இவரும் உம்மு உ'பை'ஸுᵐம் அதற்கெல்லாம் கிஞ்சித்தும் அஞ்சவே யில்லை. இவ் விருவரை யும் விடுவித்தவரும் அந்தத் தயாளகுணசீலரான அபூ'ப்க்ர் சித்'தீ':க் அவர் களே யாவார்கள்.

இவர்களல்லாமல், ஆ'மிர் பி'ன் 'புஹைரா என்னும் நல்லடிமை ஒருவ ரும் அந்தக் :குறைஷிகளின் துன்பத்திற்கு இலக்காக்கப்பட்டு வந்தார். இவ்வாறே ஏனை எண்ணிறந்த முஸ்லிம்களும் முஸ்லிமாக்களும் துன்புறுத் தப்பட்டே வந்தார்கள். இதனால் ஒருசிலர் உயிர்துறந்தும், ஒருவரும் தாம் இஸ்லாத்தின்மீது கொண்டிருந்த நன்னம்பிக்கையை மட்டும் ஒருசிறிதும் தளர்த்திவிடவே யில்லை. ஏழைகள் மட்டுமல்லாமல் பணக்காரர்களும் அந்தக் :குறைஷிகளின் கொடுமையினின்று தப்ப விடப்பட்ட தில்லை. உ':த்மான் (ரலி') அவர்கள் ஒருயர்குடும்பத்திலே தோன்றிச் சமூகஅந்தஸ்தி லும் மிக்க உன்னத ஸ்தானத்தை வகித்திருந்தார்கள். அவ்வா றிருந்தும், அவருடைய தந்தையின் சகோதரர் ஒருவர் (சிச்சா) அந்த உ':த்மானை ஒரு கயிற்றால் இறுகப் பிணித்துச் செம்மையாக அடித்துவிட்டா ரென்று சரித் திரம் சான்று கூறுகின்றது. இவர்கள் பேரீச்ச மட்டைகளின் நடுவே வைத்துக் கட்டப்பட்டுக் கீழிருந்து புகையை விட்டுச் சுவாசிக்கும்படி செய் யப்பட்டதாகவும் சொல்லப்படுகிறது. உ'மர் தம்முடைய சகோதரியையும் அவருடைய கணவரையும் படுத்திவைத்த பாடு பிறகு விவரிக்கப்படும். 'ஜுᵐபை'ர் என்பவர் (இவர் 5-ஆவது முஸ்லிம்) ஒரு பாயினுள் வைத்துச் சுருட்டப்பட்டு, அதற்குள்ளே புகையும் நுழைக்கப்பட்டுச் சுவாசிக்கும்படி துன்புறுத்தப்பட்டார். அபூ'ப்க்ர்(ரலி') அவர்களுங்கூட வாளா விட்டுவிடப் படவில்லை. இவர்களையும் ஸ்மரணை தப்பும்வரை அடித்துத் தாடி ரோமங் களையும் பிய்த்துவிட்டார்கள் என்பதை நீங்கள் முன்னமே அறிந்துள்ளீர் கள். ஸயீ'த்' இப்'னு ஃ'ஜத்' என்னும் உ'மர் அவர்களின் சிறிய தந்தை

யார் மகனை— (உ'மரின் தங்கை 'பாத்திமாவை மணந்தவர்) இந்த உ'மர் ஐயங்கொண்டு கயிற்றினுற்கட்டி வெய்யிலில் உருட்டிவிடுவார். அபூ'‘தர் (ஏழாவதாக இஸ்லாமானவர்) தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவியவுடனே பகிரங்கமாகச் சென்று கஃ'ப'ாவில் நின்றுகொண்டு தைரியமாகத் தமது மதக் கொள்கையை வெளிப்படுத்தினர். உடனே ஆங்குக் கூடியிருந்த :குறைஷிகள் அவரைப் பிணம்போலே அடித்துக் கீழே ஸ்மரணை யில்லாது கிடத்தாட்டி விட்டார்கள். ஸஅ'தி'ப்'னு அபீ'வ:க்:காஸ் என்னும் பெரியார்— (இஸ்லாத்தைப் பின்பற்றியவர்களுள் இவரும் ஓர் ஆதி மனிதராவர்) மிக்க மேதை மரியாதைக் குரியவரா யிருந்தும், அவரையும் :குறைஷிகள் வாளா விட்டு விடவில்லை. ப'னீ அஸத்' கூட்டத்தினர் இவருக்கு அடிக்கடி துன்பங்களும் துயரங்களும் இன்னல்களும் இடையூறுகளும் கணக்கில்லாது விளைத்துக் கொண்டே வந்தார்கள்.

ஆனல், ஒருவரும் தீ'னுல் இஸ்லாத்தை விட்டுத் திரும்பிச் சென்றுவிடவில்லை. இவர்க ளெல்லாரும் பட்டுவந்த பாட்டையும், இவர்களுக்கு நபிகள்பிரான்மீது இருந்துவந்த பற்றுக்கோட்டையும் இயேசு கிறிஸ்துவின் குருத் துரோகிகளான பரம பாமர சிஷ்யர்களின் ஓட்டத்துடனே ஒப்பிட்டுப் பார்த்தால், இஸ்லாத்தின் பக்தர்கள் எப்படிப்பட்ட மெய்யடியார்கள் என்பதை நீங்கள் இனிது தெரிந்துகொள்வீர்கள். இயேசுவின் ஒரு சிஷ்யன் கேவலம் 30 வெள்ளிக்காசுக் காசைப்பட்டுத் தன்னுடைய பரமகுருநாதரை எதிரிகளிடம் காட்டிக் கொடுத்தான். மற்றொரு பரம சிஷ்யனே— (சுவர்க்கத்தின் சாவியையே அருளப்பெற்றவன்) தெய்வத்தின்மீது மூன்றுமுறை சத்தியம் செய்து, தனக்கு அப்பெரியார் (இயேசு) இன்னரென்பதே தெரியாதென்றும் அவர் பிடிபட்டபோது பொய்ம்மொழி புகன்றன். இயேசு கலியாண விருந்தில் தண்ணீரைச் சாராய மாக்குவார்; ஆயின், மேலே கூறிய மாதிரியிலுள்ள ஒரு மெய்யான சீடனை உற்பத்தி செய்வதென்பது அவரா லாகாது. இயேசுவின் 12 சிஷ்யர்களும் 12 பொறுக்கியெடுக்கப்பட்ட மணிகளே!

---

# அதிகாரம் —12

## 'ஹப'ஷாவுக்கு ஹிஜ்ரத் செல்லல்

**"தாங்கள் இன்னல்களுக்கு ஆளாக்கப் பட்டதன் பின்னால் அல்லா(ஹ்)வி னிமித்தம் வீட்டைத் துறந்து வெளி யேறுகிறவர்கள்— அவர்களுக்கு நிச்சயமாகவே நாம் இவ் வுலகில் அழகான இருப்பிடத்தை அளித்தருள்வோம்."— (16 : 41.)**

இதற்கு முன்னர்க் கூறியுள்ள அதிகாரத்தில் நபிகள் பெருமானும் (சல்) அவர்களைப் பின்பற்றிய பெரியோர்களும் சிறியோர்களும் பெண்மணிக ளுட்பட எவ்வாறு எண்ணமுடியாத துன்பங்களுக்கும் துயரங்களுக்கு மெல்லாமும் ஆளாக்கப்பட்டு வந்தார்க ளென்பதை யாம் ஒருவாறு சுருக்கியும் விளக்கியும் ஒருசில திருஷ்டாந்தங்க ளுடனே எடுத்துக்காட்டி யிருக்கின்றோம். நபிகள் பெருமானாரை அந்த மக்கத்துக் கு'ப்'பார்கள் ஒரு மெஸ்மரிஸ மாயாவியென்று கூறிவந்ததோ டமையாது, அவர்களுடைய வாசாவினின்று வெளியாகும் ஆண்டவனுடைய திருவசனங்களையும் ஒருவரும் கேட்கக்கூடா தென்றும் கடுமையான கட்டளை பிறப்பித்திருந் தார்கள். :குர்ஆன் ஷரீ'பின் ஆயாத்களை ஓதக்கேட்ட மாத்திரத்திலே அம் மக்கத்து மனிதர்களெல்லாரும் மயங்கிவிடுவார்க ளென்பது அன்னவர்கட் குள்ள அச்சமாகக் காணப்பட்டு வந்தது. இதைப்பற்றி ஆண்டவனும் தனது திருமறையில் சுட்டிக்காட்டாம லிருக்கவில்லை. என்னெனின், எமது :குர்ஆன் ஷரீ'பிலுள்ள வேத வாக்கியங்களைச் செவியேற்ற மாத்திரத்திலே அக்காலத்திய அரபிகள் அத் திருமந்திரங்களின் முன்னே தங்கள் சிரத்தைச் சாய்க்காது இருந்துவிட முடியவில்லை. இதற்கு வேண்டிய திருஷ்டாந்தங் களும் பலப்பல காணப்படுகின்றன : ஒரு முறை நபிகள் திலகம் :குர்ஆன் ஆயத்தை ஓதி, அதிலுள்ள முறைமைக் கேற்றவாறு முதன் முதலாக ஸஜ்த்'ா 'திலாவத் தென்னும் சென்னிசாய்த்தலை நிகழ்த்திய போழ்து, ஆங்குக் குழுமியிருந்த முஸ்லிம்களுடனே யூத கிறிஸ்தவ மதத்தினரும், மற்றுமுள்ள கு'ப்'பார்களும் உடன் சிரஞ்சாய்த்தார்க ளென்று சரித்திரம் உறுத்திக் கூறுகின்றது.

லபீ'தி'ப்'னு ராபி'ஆ' என்னும் கீர்த்திவாய்ந்த அ'ரப்' நாட்டுக் கவி யொருவர் தாம் யாத்திருந்த செய்யுட் களுள்ளே சிலவற்றை மக்காவி லுள்ள கஃ'ப'ாவின் வாயிற் கதவில் ஆணிகொண் டறைந்து, அவற்றிற் கிணையாக வேறெவரேனும் பாடிய கவிகளிருக்கும் பக்ஷத்தில் அவற்றைத் தம்முடைய செய்யுட்களுக் கெதிரே அறைந்து காட்டட்டும்

பார்ப்போம்! என்று அறைகூவி அழைத்திருந்தார். அப்புலவரின் பெரும் பேரும், அவருடைய கவிநயமும் பெரும் புகழ்படைத் திருந்தமையான், அவரது அறைகூவலுக்கு ஒருவரும் துணிந்து மறுமொழிகூற முன்வர வில்லை. பிறகு :குர்ஆன் ஷரீ'பின் இரண்டாவது அத்தியாயம்* அந்த மஹா வித்வானின் கவிகளுக் கெதிரே அறையப்பட்டதைக் கண்டு, அந்த விக்ரஹ வணக்கக்காரரா யிருந்துவந்த லபீ'தென்னும் கவிவாணர் திக்பிரமை கொண்டு, அவ் வத்தியாயத்தின் சில ஆயாத்களை உற்றுநோக்கிய மாத்திரத்திலே உடனே இஸ்லாத்தில் சேர்ந்துகொண்டு விட்டார். ஆண்டவனுடைய திருவாக்கியங்களுக்கு முன்னே தாம் தோல்வியடைந்து விட்டதாகவும் அப்பெரியார் முழு மனத்துடனே சிரங்குனிந்து ஒத்துக்கொண்டார். பிறகு ஒரு சமயம் அவருடைய கவிநயத்தில் ஈடுபட்டிருந்த பல சிஷ்யர்கள் அவரிடம் நெருங்கி, அவருக்கு ஞாபகத்தி லிருந்துவந்த செய்யுட்களைக் கூறவேண்டு மென்றும், அவற்றைத் தாங்கள் ஒன்று திரட்டிக் கிரந்த ரூபமாக வெளியிட வேண்டுமென்றும் வேண்டிக் கொண்டார்கள். அதற்கு அம் மகா வித்வான், "என்னுடைய செய்யுட்க ளொன்றும் எனக்கு இப்பொழுது ஞாபகத்தி லில்லை. என்னெனின், என் முழு ஞாபகமும் இதுகாலை அல்லா(ஹ்)வின் திருவசனங்களின் மீதேயே பதிந்திருக்கின்றது," என்று பதின்மொழி கூறிவிட்டார்.

நபிகள் நாயகம் கஃ'பாவிற்கு விஜயம் செய்யும்போது, அதன் வாயிற் படியில் நின்றுகொண்டு சில :குர்ஆன் ஆயாத்களை ஓதுவது வழக்கமாதலின், அப்படிப்பட்ட மாய சூனியக்காரரை— ஸா'ஹிரை ஒருவரும் நெருங்க வேண்டா மென்று அந்நகரத்துத் தலைவர்கள் மிகக் கடுமையாகத் தடை செய்திருந்தார்கள். :குர்ஆன் ஆயத்தைக் கேட்பது கூடாதென்று ஒருசிலர் தங்கள் கைவிரல்களைக் காதுக்குள்ளே திணித்துப் பொத்திக்கொள்வார்கள்; அல்லது அவ்வாயத்தின் சப்தம் வெளியில் கேளாவண்ணம் கூச்சலிட்டும் கைகொட்டியும் நகைத்தும், போட்டிக்காக வேறுபல கேவலப் பாடல்களைப் பாடியும் பேரிரைச்சல் போடுவார்கள். இவ்வாறு :குர்ஆன் ஆயத்தொன்றையும் செவிமடுக்கக் கூடாதென்னும் கெட்ட எண்ணத்தால் தம்முடைய செவிகட்குள்ளே பஞ்சைத் திணித்துக்கொண்டிருந்த மனிதரொருவர் ஒருகால் அப்பஞ்சை வெளியி லெடுத்துவிட்டு நடமாடவேண்டிய ஆவசியகம் நேரிட்டபோது, ஆங்கு அல்லா(ஹ்)வின் திருவாக்கியமொன்று ஓதப்படுவதைக் கேட்டு, அவர் அதிதுரிதமாய்த் தங் கையிலிருந்த பஞ்சையெடுத்துக் காதுக்குள்ளே சொருகிக் கொள்ளப் போனார்; அதற்குள்ளே அல்லா(ஹ்)வின் திருவசனம் அம்மனிதருடைய செவிக்குள்ளே ஒருசிறிது நுழைந்துவிட்டதால், அதனை முடிவுறக் கேட்கும்பொருட்டு, அவர் கையிலிருந்த பஞ்சைக் காதுக்குள் திணிக்காமலே வாளா இருந்துவிட்டார். அதுசமயம் அம்மனிதர் செவியேற்ற :குர்ஆன் ஷரீ'பின் திருவசனங்களைக்

* 55-ஆவது அத்தியாயம், ஸூரா அர்ர'ஹ்மா னென்றும் வேறுசிலர் கூறுகின்றனர்.

கொண்டே அவர் அப்பஞ்சை இறுதியாக அப்பால் எறிந்துவிட்டு, அக்கணமே தீ'னுல் இஸ்லாத்தில் சேர்ந்து கொண்டார். தவ்'ஸ்வர்க்கத்தைச் சேர்ந்த :துஃபைல் பி'ன் அ'ம்ரென்பார்தாம் இவ்வாறு செய்தவர். காதில் பஞ்சையடைத்துக் கொண்டு மு'ஹம்மதி'ன்(சல்) சப்தத்தைக் கேட்கக் கூடாதென்று தடைசெய்து கொண்டிருந்த இவர், பிறகு தங்கூட்டத்தினரின் வாயில்கள்தோறும் வாயில்கள்தோறும் சென்று சென்று, காத்துக்கொண்டு நின்று, மு'ஹம்மத்' (சல்) அவர்களின் உபதேசத்தை ஒரு சிறிதேனும் அன்னவர் காதுதாழ்த்திக் கேட்கவேண்டுமென வேண்டிக் கொண்டே திரிவார்.

ஒரு நாளிரவில் அபூ' ஸு'ப்யான், அபூ' ஜஹ்ல், அல் அக்'னஸ் என்ற மூவரும் தனித்தனியே தத்தம் விடுதியைவிட்டு வெளியில் புறப்பட்டார்கள். அம் மூவரும் ஒருவருக் கொருவர் தெரியாமலே நபிகள்நாயகம் தங்கியிருந்த விடுதியை நோக்கிச் சென்று, ஆங்குள்ள சுவர்கட்கு வெளியிலே ஒளிந்து கொண்டு, உள்ளிருந்து வெளிவரும் :குர்ஆன் ஆயாத்களின் இனிய நாதங்களைக் கிரஹித்துக்கொண் டிருந்தார்கள். இவ்வாறு அவ் விருளில் ஒவ்வொருவரும் செய்துவந்தமையால், அம்மூவரும் அன்றிரா முழுவதும் ஒருவரை யொருவர் சந்தித்துக் கொள்ள வில்லை; ஆனால், பொழுது புலர்ந்ததும் அம்மூவரும் ஒருவரை யொருவர் பார்த்து ஏசிக் கொள்ளத் துணிந்தார்கள்: "நாமே இவ்வாறு திருட்டுத்தனமாக ஒளிந்திருந்து கேட்பதைக் கண்டாலே நம்முடைய பொது ஜனங்கள் நம்மைப்பற்றி என்ன நினைப்பார்கள்?" என்று பேசிக்கொண்டு, இனி இவ்வாறு செய்வதில்லை யென்று சத்தியமும் செய்து கொண்டார்கள். ஆனால், மறுநாள் இரவிலும், அதற்கடுத்தநாள் இரவிலும் மேற்கூறிய அதேவிதமான கதைதான் நிகழ்ந்து வந்தது. ஒவ்வொருநாட் காலையிலும் மேற்கூறியவாறே அம்மூவரும் ஒருவரையொருவர் ஏசிக்கொண்டும், இறுதியில் சத்தியம் செய்துகொண்டுமே தத்தம் இல்லம் ஏகினார்களாம்.*

ஈதெல்லாம் பொய்க் கதையென்று சந்தேகம் சிறிதும் கொள்ள வேண்டுவ தின்று. இத்தகைய பெருமையைக் கொண்டேதான் ஆண்டவனும், மனிதர்களால் இத் திருவேதத்தி லுள்ளதேபோன்ற ஓர் அத்யாயத்தையேனும், அல்லது பத்து அத்யாயத்தையேனும், அல்லது மனிதகோடிகளெல்லாம் ஜின்களுடன்சேர்ந்தும் இவ்வேதத்தைப்போன்ற ஒரு திருமறையையேனும் கொண்டுவர முடியுமோ வென்று அறைகூவி அழைக்கின்றான். இப்படிப்பட்ட அறைகூவலை இன்றுவரை எவருமே இவ் விரி

* :குர்ஆன் செய்யுளா யமைந்தில்லை; வசன கிரந்தமே யாகும். "குழுவு நுண்தொளை வேயினும் குறிநரம் பெறிவுற்(று) எழூவு தண்தமிழ் யாழினினும் இனியசொல்" நடையே யாகும். :குர்ஆனை ஓதவேண்டிய முறைப்படி ஓதத்தெரிந்தவர்—:காரீ யென்பார்—ஓதத் துணிந்தால், பொருள் விளங்காத அயலவர்கட்கும் மயிர்க்கூச்செறிந்து உவகைக் கண்ணீரும் உகத் தலைப்பட்டுவிடும். இது பொய்யன்று; மெய்யேயாம்,

வுலகினில் ஏற்றுக்கொண்டு வெற்றிபெற முன்வரத் துணியவில்லை யென்பது சரதமே யாமன்றோ?

மீக் கூறியவாறாக மக்கத்துக் கு'ப்'பார்கள் ஆண்டவனுடைய வேத வாக்கியங்களையும் செவி தாழ்த்திக் கேட்பது கூடாதென்று தடை செய்திருந்ததை யுணர்ந்த இப்'னு மஸ்ஊ'த்' அவர்கள் தீ'னுல் இஸ்லாத்தில் சேர்ந்து கொண்டவுடனே எவருக்கு மஞ்சாது கஃ'பாவுக்குச் சென்று :குர்ஆன் ஆயாத்களை ஓதிக் காண்பிக்கத் துணிந்து, அவ்வாறே ஆங்குச் சென்று ம(க்):காமெ இப்'ராஹீமில் நின்று, அர்ர'ஹ்மான் ஸூராவைப் பகிரங்கமாக ஓதத்துணிந்தார். அக்கணமே அங்கிருந்த கு'ப்'பார்களனைவரும் அவர்மீது ஒருமிக்க வீழ்ந்து தாக்கிப் பலவாறாக அடித்துத் தொந்தரை செய்து விட்டனர். எனினும், இப்'னு மஸ்ஊ'த்' மட்டும் அத்தனை அடிகளையும் பட்டுக்கொண்டு, தமது கருத்திற் கொண்டிருந்த ஆயத்வரை ஓதியே நிறுத்தினர். ஆனால், அதற்கிடையே அப் பெரியாரின் முக முழுதும் குருதி வெள்ளமாக மாறிவிட்டது. ஹ'ஜ்'ரத் அபூ'ப'க்ர் சித்'தீ':க் (ரலி') அவர்கள் கௌரவத்திலும் கண்ணியத்திலும் குறைவானவர்க ளல்லர். எனினும், இப்பெரியாரும் :குர்ஆன் ஷரீ'பப் பகிரங்கமாக ஓத முடியாதவராகவே இருந்துவந்தார்க ளென்பதையும் நீங்கள் நன்கு ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுதல் வேண்டும்.

இதுமட்டு மன்று. கு'பை' பி'ப்'னு அ':தா வென்பவர் வகை மோசமாகக் :குறைஷிகளிடம் அடிமையாய்ச் சிக்கிக் கொண்டு விட்டார். இவர் பலவாறாகவும் அந்தக் கு'ப்'பார்களால் இம்சைக்குள் ளாக்கப்பட்டு வந்தபொழுது, இவரது ஸ்தானத்திலே அந்த மு'ஹம்மத்' (சல்) இருந்தால், அஃது எவ்வாறிருக்கு மென்று வினவப்பட்டார்; அதற் கிவர் சிறிதும் தயங்காது, "எங்கள் ஞானபிதாவாகிய மு'ஹம்மது'க்கு (சல்) ஒரு முள் தைப்பதா யிருப்பினும், யான் என் குடும்பத்துடனும், மனைவிமக்களுடனும் சொத்து சுதந்தரத்துடனும் சுகித்திருக்கச் சம்மதியேன்," என்று விடை பகர்ந்தார். இவரை அந்தக் :குறைஷிகள் ஒருமுறை ஒரு தொழுமரத்திலே கட்டிவைத்து, "இப்பொழுதேனும் நீ இஸ்லாத்தை விட்டுவிட்டால், நாங்கள் உன்னை விட்டுவிடுவோம்," என்று பயமுறுத் தாட்டினர்கள். ஆனால், "இப்பூவுலகு முழுதும் எனக்கு இனமாய்க் கிடைப்பதா யிருப்பினும், யான் இஸ்லாத்தை மட்டும் துறந்துவிடத் துணியேன்," என்று கு'பை'ப்' மறுத்துக் கூறிவிட்டார். இதற்காக இவர் இறுதியிலே சிறுகச் சிறுகக் கொலை செய்யப்பட்டே யொழிக்கப்பட்டார்; இவரது கொலை எவரது உள்ளத்தையும் உருகச் செய்யா திருந்துவிடாது: இவரது சரீரம் சதை சதையாகக் கழிக்கப்பட்டு, அங்க அவயவங்களும் அவ்வாறே ஒவ்வொன்றாகச் சேதிக்கப்பட்டு, இறுதியிலே மகா பரிதாபகரமான முறையிலே அல்லா(ஹ்)வின் பாதையிலே தமது ஆருயிரைத் தியாகம் செய்து தீர்த்தார். —இவர் நான்காவது பிராணத்தியாகி.

" கைவாரா வந்த இடுக்கண் மனமழுங்கார்
மெய்யாய காட்சி யவர்,"—

என்றூர் ' ஆசாரக் கோவை'யிலும்.

இவ்வாறெல்லாம் அம் மக்காவின் கண் மதசுதந்தரத்துக்கும், மனசுதந்தரத்துக்கும் எள்ளத்துணையும் இடமில்லாது போய்விடவே, அச் சிறு பான்மையினரான நவ் முஸ்லிம்கள் அந்நகரத்துக் கு'ப்'பார்களிடம் படாத பாடுகளை யெல்லாம் பட்டுவந்தக்கால், நபிகள் பெருமானும் அன்னவர்கட்கு என்னவிதத்திலும் சற்றும் உதவிபுரிய இயலாதவர்களாகவே இருந்து வந்தார்கள். அதுபொழுது இஸ்லாத்தைத் தழுவியிருந்த உத்தேசம் ஐம்பது முஸ்லிம்களும் பட்டுவந்த சகிக்கமுடியாத இம்சைகளை யெல்லாம் கண்டும் கேட்டும் தங்களால் தாளமுடியாது போய், நெக்கு நெக்கு மனமுருகுவார்கள். நாளேற வேற அம் முஸ்லிம்களின் சிறுதொகையும் சிறுகச் சிறுகப் பெருக்கெடுத்துக் கொண்டே வந்தது. எதிரிகளின் இம்சையால் அவர்களுக் குள்ளே ஒற்றுமையும் மிகுந்துவந்த தென்னலாம். எதிரிகள் படும் துன்பத்தையும் கண்டு சகிக்க முடியாத எம்பெருமானு ரவர்கள் தங்களுடைய சொந்த சிஷ்யர்களே இவ்வாறெல்லாம் இம்சிக்கப்படுவதைக் கண்டு எவ்வாறு மனஞ்சகித் திருப்பார்கள்? அவர்களுள் ஒவ்வொரு தோழரின் சிறுசிறு உதவியும் நபிகள் திலகத்துக்குப் பெரிதும் வேண்டப் பட்டுவந்த அதுபொழுது, அத்தோழர்களின் துன்பங்களைக் கண்டு சிறிதும் சகிக்க மனமில்லாதவர்களாய், அவர்களை வேறேதேனு மொரு பத்திரமான ஸ்தலத்திற்குச் சென்று சிறிதுகால மட்டும் அடைக்கலம்புக்குச் சுகவாசம் புரியுமாறு அனுமதியளித்து விட்டார்கள். தங்கள் தோழர்கள் அவ்வாறெல்லாம் பட்டுவந்த துன்பத்தைக் காண்பதிலும், தாங்களே அந்தக் :குறைஷிகளின் துன்பங்க ளனைத்தையும் சகித்துக் கொண்டு, அன்னவர்களை வெளியிலே அனுப்பிவிடச் சம்மதித்தார்கள். தங்களைப்பற்றி ஒரு சிறிதும் அப்பெருமானுர் அதுபொழுது கவலை கொள்ளவில்லை; அதுவேயுமன்றி, அக் :குறைஷிகளுக்கு அவர்கள் கிஞ்சித்தும் அஞ்சுவதும் வழக்கமே யில்லை.

எனவே, எம்பிரான் (சல்) அவர்கள் தங்கள் சிஷ்யர்களை நோக்கிச் செங்கடலுக்கு மேற்குப் பகுதியிலுள்ள 'ஹப'ஷா (அபிஸ்ஸீனியா)வுக்குச் சென்று விடுமாறு ஆலோசனை கூறினுர்கள்; என்னெனின், அந்த 'ஹப'ஷா தேசத்தின் நிலைமையை அரபிகள் முன்னமே நன்குணர்ந்தவர்களா யிருந்து வந்தார்கள். அன்றியும், அந்த 'ஹப'ஷா தேசம் அரபிகளுக் குரிய புராதன வியாபார ஸ்தலமாகவும் இருந்து வந்தது. "ஒருவரும் துன்புறுத்தப்படாத நாடொன்று— அஃதாவது, நியாயம் வழங்கப்பெறும் நாடொன்றுளது. ஆங்குச் சென்று, ஈங்குள்ள இடையூறுகளை விட்டு அல்லா(ஹ்) உங்களுக்கொரு விடுதலைக்குரிய வழியைக் காண்பிக்கும் வரை அவ்விடத்தி

லேயே தங்கி யிருக்கக் கடவீர்கள்,'' என்று அன்னவர்கட்கு அனுமதி யளித்தார்கள். ஆனால், அந்த அபிஸ்ஸீனியா (எதியோப்பியா)வி லுள்ள நேகஸ்— (அஸ்'ஹிமா நஜ்ஜாஷீ) என்னும் அரசரும், அவருடைய குடி படைகளும் கிறிஸ்தவர்களாகவே அதுகாலை விளங்கிவந்தார்கள்.

எனவே, 'ஹப்'ஷாவுக்கு முதன்முதலாக ஹிஜ்ரத் புறப்பட்டவர்கள் பதினோர் ஆடவரும் —(பன்னிரு ஆடவரென்று வேறுசிலர் கூறுவர்) அவர்களுடனே நான்கு ஆடவரின் மனைவியரும் சேர்ந்திருந்தனர். அப் பதினைந்து முஸ்லிம், முஸ்லிமாக்களுள் 'ஹ'ஜ்ரத் உ':த்மா னுப்'னு அ''ப்'பான் அவர்களும், அவர்களுடைய மனைவியான ருகைய்யாவும் (ரஸூலுல்லாவின் புத்திரியார்) உடனிருந்தனர். மற்றப் பதின் மூன்று முஹாஜிரீன்களின் நாமங்களாவன:— அபூ' ஹுதை'த'பா, இவருடைய மனைவியான ஸஹ்லா, அபூ' ஸல்மா மக்''ஜூமீ, இவருடைய இல்லக் கிழத்தியான உம்முஸல்மா, ஆ'மிரா பி'ன் ரபீ'ஆ', இவருடைய இல்லா ளான லைலா, 'ஜுபை' ரிப்'னுல் அ'வ்வாம், முஸ்'அப்' பி'ன் உ'மைர், அ'ப்'து'ர்ர'ஹ்மான் பி'ன் அ'வ்'ப், உஸ்மான் பி'ன் மஃ'ஊ'ன் ஜம்ஹீ, அபூ'ப'ர்ரா பி'ன் அபீ'ர'ஹ்ம், 'ஹா'திப்' பி'ன் அ'ம்ரு, ஸுஹைல் பி'ன் பை'ல்'ா. இப் பதினைந்து முஸ்லிம்களும், முஸ்லிமாக்களும் நுபு'வ்வத் வந்தபின்னர் ஐந்தாவதாண்டு (நாயகத்தின் 45-ஆவது பிராயத்தின்போது) 'ரஜப்' மாதத்திலே புறப்பட்டார்கள் (கி. பி. 615). இதற்கு "முதல் முஹாஜரத்'' தென்று இஸ்லாமிய சரிதையில் பெயர் கூறுவர். இவர் களுள் ஒரு சிலர் வாகனங்கள் மீதும், மற்றவர்கள் பாதசாரிக ளாகவும் புறப்பட்டார்கள். அதற்குப் பின்பு அ'ப்'து'ல்லா(ஹ்) பி'ன் மஸ்ஊ'து'ம், ஜஃ''பரும்— (அபூ'த்தாலிபி'ன் மூத்த குமாரர்) அவர்களுடனே சென்று சேர்ந்து விட்டார்க ளென்று செவ்வனே நாம் தெரிந்துகொள்ளுகிறோம்.

முதன் முதலில் சென்ற பதினைந்து மனிதர்களும் ஜித்'த'ா வுக்குச் சென்றதும், எதிர்பாரா வண்ணம் ஆங்கே ஆயத்தமாயிருந்த இரண்டு சரக் கேற்றும் கப்பல்களில் தலையொன்றுக்கு ஐந்து தி'ர்ஹம் (உத்தேசம் ரூ. 1-4-0) கொடுத்து அதிக உல்லாசமாக அக்கரை போய்ச் சேர்ந்தனர். இவ்விஷயத்தை யுணர்ந்தவுடனே மக்கத்துக்குக் கு'ப்'பார்கள் அவர்களைப் பிடித்துக்கொண்டு வரும் பொருட்டுத் துரிதமாகத் தங்கள் ஆட்களை யனுப்பி வைத்தார்கள். இவர்கள் கடலோரம் செல்லு முன்னே அப் பதினைந்து மனிதர்களும் புறப்பட்டுச் சென்று விட்டமையான், இன்ன வர்கள் வெறுங்கையுடனே ஏமாற்றமுற்றுத் திரும்பிவந்து சேர்ந்தனர். ஆயினும், அவ்வளவுடனே அம்மக்காவாசிகள் வாளா இருந்துவிடச் சம்ம தித்தன ரில்லை. எனவே, பிறகும் நஜ்ஜாஷீயின் திருவோலக்கத்துக்குத் தங்களுடைய தூதர்களை அனுப்பி, அம்மன்னரிடம் சொல்லி, அம் முஸ்லிம் களை மீட்டும் பெற்றுக்கொண்டு வந்துவிட வேண்டுமென்றே தீர்மானம் செய்து கொண்டனர். இதற்குள்ளே அபூ' ஸு'ப்யானது குமாரியாகிய

உம்மு' ஹபீ'பா'வும் 'ஹப'ஷாவுக்குச் சென்றுவிட்டா ரென்று கேள்வி யுற்றதன் பின்பு அம்மக்கத்து மறமாக்களின் கோபாவேசம் கரை கடந்து பொங்கி வழியத் தொடங்கிற்று. எனவே, உடனே தங்களுடைய தூதர்களை ஆங்கனுப்ப எல்லாவித ஏற்பாடுகளையும் செய்து முடித்துக் கொண்டு, அ'ப்'து'ல்லா(ஹ்) பி'ன் ரபீ'ஆ'வையும், அ'ம்ரிப்'னுல் ஆ'ஸ் (இவரே பிறகு 'ஹ'ஜ்'ரத் உ'மர் அவர்களின் காலத்தில் எகிப்து தேசத்தை வென்றவர்) என்பவரையும் (இஸ்லாமாகு முன்) பொறுக்கி யெடுத்துத் தக்க காணிக்கைகளுடனும் கையுறைகளுடனும் நஜ்ஜாஷீயின் தர்பாருக்கு அனுப்பி வைத்தார்கள். ஆங்கும் சென்று முஸ்லிம்கள் அமைதியுடனே உயிர்வாழ்வ தென்பது அம்மக்கத்துக் கு'ப்'பார்களுக்குச் சற்றும் பிடிக்க வில்லை. ஆதலின், அன்னவரின் தூத ரிருவரும் 'ஹப'ஷாவுக்குச் சென்று, ஆங்குள்ள தர்பாரின் பாதிரிமாரைப் பிடித்து, அவர்கள்பால் வேண்டிய மட்டும் கோள்களை யெல்லாம் மூட்டி, நஜ்ஜாஷீயிடம் தங்களை அறிமுகம் செய்து வைக்குமாறும் வேண்டிக் கொண்டனர். "எங்களூரி லுள்ள முழுமக்கள் சிலர் புதிய மதமொன்றைச் சிருஷ்டி செய்துகொண்டு, அதனையே பின்பற்றித் திரிகின்றனர்கள். யாங்கள் அவர்களை எங்கள் தேசத்தை விட்டுத் துரத்தி விட்டோம்; அவர்கள் இதுசமயம் இங்குவந்து அடைக்கலம் புகுந்துகொண் டிருக்கின்றனர். அவர்களைப்பற்றி நாங்கள் நாளைக் காலையில் அரசர் திருமுன்பில் குறை கூறும்போது, நீங்களும் எங்களுக்கு உதவி புரிதல் வேண்டும்," என்று வேண்டிக் கொண்டு, அப் பாதிரிகளுக்கு வேண்டிய மட்டும் சம்மானமும் பரிதானமும் கொடுத்துச் "சரிப்படுத்தி" வைத்தனர்.

அந்தப் பாதிரிமார் ஒரு பக்கல் தங்களுக்குக் கிடைத்த "லஞ்சப்" பொருளாலும், மற்றொரு பக்கல் தங்களது கிறிஸ்து மதத்துக்குப் போட்டி யாக வேறொரு மதம் தோன்றிவிட்டதென்னும் அழுக்காற்றாலும் அதிகம் தூண்டப்பெற்று, மறுதினமே தங்களுடைய மன்னர்பிரானிடம் சென்று விஷயத்தை யெல்லாம் விளக்கிக் காண்பித்தார்கள். அம் முஸ்லிம்கள் தங்களுடைய பிதாமகர்களின் பண்டை மார்க்கத்தையேனும் கிறிஸ்து மதத்தையேனும் பின்பற்றாது, அவ் விரண்டற்கும் நேரெதிரியா யுள்ள வேறொரு நூதன மதத்தைப் பின்பற்றுகின்றனரென ஆங்குக் கூடநின்ற அராபித் தூதர்களும் உடன் கூறினர். அதைக் கேட்டவுடனே அந்த நஜ்ஜாஷீ மன்னர் ஆச்சரியமுற்று, அந்த முஸ்லிம்களை உடனே தஞ் சமுகம் வரவிடுத்து, விஷயம் என்னவென்று விசாரிக்கத் தொடங்கினார். அவர்கள் அவ்வாறு ஏன் மததுரோகிகளாய் மாறிவிட்டன ரென்று அவ்வரசர் விடுத்த வினாவினுக்கு அம் முஸ்லிம்களின் சார்பாக ஜஃ'பர்சாதி':க்(ரலி') ('ஹ'ஜ்ரத் அ'லீயின் மூத்த சகோதரர்) பின்வருமாறு பேசலுற்றார்:—

"ஏ அரையர் பெருமானே! யாங்கள் மௌட்டியமும் அனாசாரமும் நிறைந்த ஓர் அறிவற்ற இனத்திலே தோன்றி யிருந்தோம். விக்ர'ஹ

வணக்கமே எங்கள் தொழிலா யிருந்துவந்தது. தானே செத்த பிராணிக ளின் சவத்தையும் புசித்துக்கொண் டிருந்தோம். யாங்கள் செய்துவந்த துஷ்கிருத்தியங்களுக் கோர் உறையிட்டுக் கூற முடியாது. உற்ருர் உறவி னர்களை யெல்லாம் துன்புறுத்திக்கொண்டு வந்தோம்; அண்டை அயலவர் களிட மெல்லாம் அக்கிரமம் புரிந்துவந்தோம். எங்களது சமூகத்துக் குள் ளேயே இடைவிடா அக்கிரமங்க ளெல்லாம் நடந்தேறிக்கொண்டு வந்தன: பலமுள்ளவர்கள் பலஹீனர்களை இம்சித்துக்கொண் டிருந்தனர். இவ்வா ருய நிலைமையிலே எங்கள்முன் ஒருவர் தோன்றிஞர்; அவருடைய சீரை யும் சிறப்பையும், உண்மையையும் உறுதியையும் நாங்கள் நன்குணர்ந்து கொண்டோம். பிறகு அவர் 'இஸ்லாம்' என்னும் மார்க்கத்தின் பக்கல் எங்களை அழைக்கத் துவக்கிஞர். விக்ரஹங்களுக்கும், மற்றுமுள்ள இயற்கைப் பொருள்களுக்கும் வணக்கம்புரிவது கூடாதென்றும், சத்தியத் தையே சதா பேசவேண்டு மென்றும், நம்பிக்கைத் துரோகம் ஒருபொழுதும் புரியவேண்டா மென்றும், கொலைகளவு முதலியன செய்யக்கூடா தென்றும், அகதிகளின் ஐசுவரியங்களை அக்கிரமமாய் அபகரிக்க வேண்டா மென்றும், உற்ருர் உறவினர்கட்கு நல்ல சந்துஷ்டியை யளிக்கவேண்டு மென்றும், அண்டை அயலவருடனே சுமுகமாய் வாழவேண்டு மென்றும், பதிவிரதை களான பெண்மணிகள்மீது வீண்பழிகளைச் சுமத்துவது கூடாதென்றும், தினமும் தெய்வந் தொழவேண்டு மென்றும், நோன்பு நோற்கவேண்டு மென்றும், 'ஜகாத்'தென்னும் ஏழை விகிதத்தை ஈயவேண்டு மென்றும் நல்லுபதேசம் பண்ணிஞர். எனவே, இவர் கூறியதை யாங்கள் ஏற்றுக் கொண்டு, ஈமான் — இஸ்லாத்தில் உறுதி — கொண்டோம்; அன்றுமுதல் விக்ரஹ வணக்கத்தையும் அடியோடு தொலைத்துத் தலைமுழுகி விட்டோம். துஷ்கிருத்தியங்களான எல்லாச் செய்கைகளை விட்டும் அப்புறப்பட்டு விட்டோம். இவ்வாருகப் புண்ணிய கைங்கரியங்களை யெல்லாம் நாங்கள் புரிந்துகொண்டு வருகிறேமென்றே எங்கள் சமூகத்தவர்கள் எங்கள்மீது அளவுகடந்த கோபங்கொண்டு, எங்களை எவ்வாற்ருனும் பழைய பாதாளப் பாபகிருத்தியங்களான படுகுழியி னுள்ளேயே கொண்டுபோய்ச் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று எண்ணி யிருக்கின்ருர்கள். அன்னவர்களின் கொடுமைகள் அளவுக்கு மீறிவிட்டமையான், நாங்கள் ஓடிவந்து தங்க ளுடைய தர்பாரிலே அடைக்கலம் புகுந்துகொண்டோம்; இவ்விடத்தில் எங்களுக் கொன்றும் தீங்கு விளையாதென்றே யாங்கள் திண்ணிதா யெண்ணி யிருக்கின்றேம்."

இதனைக் கேட்டுக்கொண் டிருந்த நஜ்ஜாஷீ யென்பவர் இஸ்லாத்தின் கொள்கைகளிலே அதிகம் ஈடுபட்டு, இதற்குரிய வேதத்திலின்று ஒருசிறி தைக் கேட்டுப்பார்க்க வேண்டுமென்று ஆர்வங் கொண்டார். அவரது விருப்பத்திற் கிணங்க, ஜஃ'பர் ஸாதிக் :குர்ஆன் ஷரீ'பி லுள்ள ஸூரெ "மர்யம்" என்னும் 19-ஆவது அத்தியாயத்தி னின்று ஒரு சிறிதை எடுத்

தோதிக் காட்டினார்கள். இதனைச் செவியேற்ற பொழுது, நஜ்ஜாஷீயின் நேத்திரங்களினின்று ஆனந்தபாஷ்பம் துளிக்கத் தலைப்பட்டது. ஆண்டவனுடைய திருவசனங்களின் அதிகம்பீரமான நடையும், அவற்றிலுள்ள உண்மையான உயரிய கருத்துக்களும், எதுகை மோனைகளுடன் கூடிய சற்போதங்களும் அவரது மனத்தை உருகச் செய்துவிட்டன. உடனே, "ஆண்டவன்மீது ஆணையாக! இத் திருவேதமும், இன்ஜீலும் ஓரே ஜோதியினின்றே வெளியான இரண்டு கிரணங்களாகவே காணப்படுகின்றன," என்று கூறி, எம் முஸ்லிம்களை மக்கத்துக் கு'ப்'பார்களிடம் ஒப்புவிக்க மறுத்துவிட்டார்.

இவ்வாறு தோல்வியடைந்த மக்கத்தின் மறமாக்கள் தூதுவர்கள் மீட்டும் நஜ்ஜாஷீயின் உள்ளத்தின்கண் விஷத்தையேற்ற வேறொரு விஷமச் சூழ்ச்சி செய்தார்கள். கிறிஸ்தவர்கள் இயேசுவைத் தேவ குமாரனென்று கருதியிருக்கின்றார்கள்; ஆனால், முஸ்லிம்களோ, அன்னவரை ஒரு ரஸூல் (தூதர்) என்றே கொண்டிருக்கின்றார்கள். எனவே, இவ் விஷயத்தைச் சொல்லி, நஜ்ஜாஷீக்குக் கோபத்தை உண்டுபண்ண வேண்டுமென்று எண்ணிக்கொண்டு மறுநாட்காலையில் அ'ம்ரிப்' னுல் ஆ'ஸ் என்பவர் அவ்வரசர் திருவோலக்கஞ் சென்று, அம்முஸ்லிம்கள் இயேசு கிறிஸ்துவின் தெய்விகத் தன்மையில் நம்பிக்கை வைக்கவில்லையென்று கோள்மூட்டினார். உடனே அவ்வரசரும் அதன் உண்மையைத் தெரிந்து கொள்ளுவான் வேண்டி முஸ்லிம்களைத் தமது சமூகத்திற்கு வரவழைத்தார். இவர்கள் அவ்வரசரது நம்பிக்கைக்கு மாறாக இயேசுவைத் தேவகுமாரனல்லவென்று கூறுவதாயின், தங்களுக்கு ஏதேனும் பேராபத்து விளையக்கூடுமென்று அஞ்சினார்கள். எனினும், தங்களுக்குள் ஒருவாறு சமாதானம் செய்து கொண்டதன் பின்னர் ஜஃ'பர் (ரலி') "என்ன வந்தபோதினும் உண்மையைத் தான் சொல்லித் தீரவேண்டும்; அதனை மறைப்பதில் பிரயோஜனமில்லை," என்று தைரியமாகக் கூறிக்கொண்டு வந்து, அரசர் தர்பாரில் ஆஜிரானார்கள். அங்கே நஜ்ஜாஷீ அம் முஸ்லிம்களுக்குள்ள ஈ'ஸாவைப் பற்றிய கொள்கை யாதென வினவியதைக் கேட்ட ஜஃ'பர், "ஈ'ஸா நபியவர்கள் அல்லா(ஹ்)வின் அடியாரென்றும், அவனுடைய தூதரென்றும் எங்கள் நபிகள் பெருமானார் எங்களுக்குப் போதித்திருக்கின்றார்கள்," என்று விடை கொடுத்தார். உடனே நஜ்ஜாஷீ தரையிற் கிடந்த ஒருசிறு துரும்பையெடுத்து, "சத்தியமாக! இயேசு கிறிஸ்து முஸ்லிம்களால் இப்பொழுது கூறப்பட்டிருப்பதைக் காட்டினும் இந்தத் துரும்பத்தனைகூட அதிகமாயில்லை!" என்று கூறிமுடித்தார். அதைச் செவியுற்ற பத்ரீக்கென்னும் அரசனது ஆஸ்தானப்பாதிரி முதலியோர் அடக்கமுடியாக் கோபமுற்றனர். ஆனால், அதற்கெல்லாம் நஜ்ஜாஷீ யென்பவர் சிறிதும் மனங்கலங்கவேயில்லை. ஆனால், அதைக் கண்டவுடனே மக்காவிலிருந்து வந்திருந்த :குறைஷிகளின் தூதர்களிருவரும் வெட்கித் தலைகுனிந்தவர்களாய், ஒன்றுஞ்

செய்ய மாட்டாது வாய்புதைந்து வாளா திரும்பிவிட்டனர்; அன்னவரின் சம்மானங்களை யெல்லாம் நஜ்ஜாஷீ அங்கீகரியாது, அப்படியே திருப்பியனுப்பி விட்டார். அதன்பின்பு அவ்வரசர் ஜஃ'பருடன் அடிக்கடி மதசம்பந்தமான விஷயங்களில் சம்பாஷணை புரிந்துவருவது வழக்கமாயிருந்தது. சில நாட்களுக்குப் பின்னே நஜ்ஜாஷீ மன்னர் உண்மையை உணர்ந்துகொண்டு, ஜஃ'பர் அவர்களை நோக்கி, "ராஜ்யாதிகாரத்தினின்று விடுதலை பெறக்கூடுமாயின், யான் இன்றே அரபநாட்டுக்குச் சென்று அந்த அரபரசரிடம் இட்ட ஏவல்புரியும் ஓர் ஏவலாளனாய் அமர்ந்துவிடுவேன்," என்று இயம்பலுற்றார்.*

இவ்வாறு முஸ்லிம்கள் 'ஹப்'ஷாவுக்குச் சென்றுவிட்டதும், ஆங்கிருந்து அன்னவர்களைப் பிடித்துக் கொண்டுவர முடியாமற் போய்விட்டதும் அம்மக்கத்து மாந்தருக்கு அளவிடற்கரிய மனவேதனையை உண்டுபண்ணி விட்டன. அவர்களுடைய ஆட்கள் முதலில் முஸ்லிம்களின் முஹாஜரத்தைக் கேள்வியுற்றவுடனே ஜித்'தா'வுக் கோடினர்; அங்கிருந்து அவர்கள் தப்பிச்சென்று விட்டனரென்று தெரிந்து கொண்டதன் பின்னர் அம்மட்டோடு அதை விட்டுவிட மனமில்லாது, நஜ்ஜாஷீயின் தர்பாருள்ளும் அம்முஸ்லிம்களைத் துரத்திச் சென்றனர். இத்துணைப் பெரிய வைஷம்யம் அம்மக்கா வாசிகட்கு இருப்பதற்கு என்ன காரணம் இருந்ததென்றெண்ணுகின்றீர்கள்? அம் முஸ்லிம்கள் மக்காவி லிருந்துவந்த விக்ரஹச் சுவாமிகளுக்கு விரோதமாய்ப் பிரசாரம் செய்துவந்ததுதானா இத்துணைக்கும் காரணமென்று எண்ணுகின்றீர்கள்? இல்லை! இல்லை!! அம் முஸ்லிம்கள்தாம் இப்பொழுது கண்காணாத தொலை தூரத்துக்குச் சென்று விட்டார்களே! எனவே, இனி அவர்களால் மக்காவிலுள்ள சுவாமிகளுக் கொன்றும் தீங்குநேருதல் முடியாதன்றோ? விஷயம் இவ்வா றிருந்தும், அக் கா'பிர்கள் 'ஹப்'ஷாவுக் குள்ளும் அம் முஸ்லிம்களைத் துரத்திக்கொண்டு வேட்டையாடிச் செல்லவேண்டிய அத்தியாவசியம் யாதாயிருத்தல் கூடும்? முதன்முதலில் மதவிஷயத்தினால் விளைந்த மனஸ்தாபம் இதுபோழ்து சொந்தக் குரோதமாக மாறிவிட்டது. ஆதலின், "கொம்புளதற் கைந்து குதிரைக்குப் பத்துமுழம், வெம்புகரிக் காயிரந்தான் வேண்டுமே— வம்புசெறி, தீங்கினர்தங் கண்ணில் தெரியாத தூரத்து, நீங்குவதே நல்ல நெறி," என்றவாறு மக்கத்தை விட்டு நெடுந்தூரம் வெளியேறிச் சென்றும், அன்னவர்களைச் சும்மா விட்டுவிடுதற்கு அவர்களுக்குச் சற்றும் மனந் துணியவில்லை; தங்களுக்கு விரோதமா யுள்ளவர்கள் எங்கேனும் சென்றேனும் க்ஷேமத்துடனே வாழப் பொறாதவர்களாய்க் காய்ந்து கொண்டிருந்தனர். எனவே,

* இவ்வரசர் பிறகொருபொழுது இஸ்லாத்தைத் தழுவி, நபி பெருமானை நேரில் தரிசிக்கப் புறப்பட்டார்; இடைவழியில் செங்கடலில் மூழ்கி இறந்துவிட்டார். இச் செய்தியை நபிபெருமான்(சல்) வ'ஹீயாலறிந்து, அவருக்காக ஜனா'ஜாத் தொழுகையும் தொழவைத்தார்கள்.— (பு'கா'ரீ)

அம் முஸ்லிம்களை எவ்வாருயினும் இங்கில்லாது ஒழித்துவிட வேண்டு மென்பதே அம்மக்கத்துக் கு'ப்'பார்களின் விடாப் பிடிவாதமாக இருந்து வந்தது; இக் காரணத்தினுலேதான் அவர்கள் அம் முஸ்லிம்களைத் துரத்திக் கொண்டு நஜ்ஜாஷீயின் திருவோலக்கம்வரை ஓடினர். இவ்வாருய குரோ தத்தினுல்தான் பின்னர் ரஸுூல் நாயகமவர்களும் மற்றுமுள்ள ச'ஹாப'ாக் களும் அடியோடு மக்காவைத் துறந்து 300 மைல் வடக்கே மதீனுவுக்கு ஹிஜ்ரத் சென்றதன் பின்னும் அவர்களை யெல்லாம் அங்ஙனே வாளா விட்டு விடாது, ஆங்குந் துரத்திக்கொண்டு வலியச்சென்று சண்டைக்கிழுக்கத் துவக்கினுர்கள். 'ஹப'ஷாவில் நஜ்ஜாஷீ இருந்ததேபோல மதீனுவில் அம் முஸ்லிம்களைக் காப்பாற்றுதற்கு எவருமில்லை யெனக் கொண்டே அக் கொடுங் கா'பிர்கள் அவர்களுக்கு விரோதமாய் ஆங்குப் படை யெடுத்துச் சென்று அடியோடு அம் முஸ்லிம்களைத் தொலைத்துவிட வேண்டுமென்று கொடிய வர்மங் கொண்டனர். அதன் பிறகுதான் அம் முஸ்லிம்களுக்குத் தற்காப்பென்னும் எண்ணம் தோன்றி, தம் முயிருக்கே மன்ருடக் கூடிய அத்தியாவசியமும் நேரிட்டு விட்டது. அவ்வேழை முஸ்லிம்கள் தங்கள் வீடுவாசல்களையும், சொத்து சுதந்தரங்களையும், உற்ருர் உறவினர்களையும் விட்டு வெளியேறியும், அன்னவரை அம் மக்காவாசிகள் மதீனுவின் கண்ணும் சுகமே வாழவிடச் சம்மதியாமையாற்ருன் அவ் வேழைமக்கள் கேவலம் தற்காப்பி னிமித்தமாயே யுத்தத்தில் ஈடுபட வேண்டிய ஆவசியகத்துள் எட்டாண்டுமட்டும் சிக்குண்டு கிடந்தனர்.

ஆனுல், உண்மையை ஓர்ந்துகொள்ள விருப்ப மில்லாதாரே அந்த யுத்தங்களுக் கெல்லாம் ஆதிகாரணம் எம்பிரானேயென்று கூறி, "இஸ்லாம் வாளின் உதவிகொண்டேதான் பரத்தப்பட்டது," என்னும் குற்றச்சாட் டையும் அப்பரிசுத்த ஆன்மாவின்மீது சிறிதும் சங்கோசமில்லாது சுமத்தத் துணிந்துவிடுவர். உயிருக்கே மன்ருடித் தற்காப்புப் போரி லிறங்கிய அம் முஸ்லிம்களைக் ":குர்ஆனை ஒரு கையிலும், வாளாயுதத்தை மற்ருெரு கையிலும் எடுத்துக் கொண்டு யுத்தத்துக்குப் புறப்பட்டவர்கள்" என்று எந்த அறிவீனனுங்கூடக் கூறத்துணியான். 'ஹப'ஷாவில் நடந்த வைப வத்தைக் கொண்டு, விக்ரஹவணக்கம் இருக்கட்டும், இல்லாதொழியட்டும், எவ்விதத்தானும் முஸ்லிம்க ளென்னப்படுபவர் இவ்வுலகிலேயே இல்லாமல் தொலைந்துபோக வேண்டுமென்பதே அம்மக்கத்துக் கு'ப்'பார்களின் ஒரே பிடிவாதமா யிருந்துவந்த தென்பதை மட்டுமே மிகச் செம்மையாய்த் தெரிந்துகொள்ளுகிருேம். இதுதான் உண்மையும்!

:குறைஷிகளின் தூதர்கள் 'ஹப'ஷாவிலிருந்து சற்றும் வெற்றிபெருது வெறுங்கையுடனே வாளா திரும்பிவந்ததைக் கண்ட அம் மக்கத்துக் கா'பிர்களுக்கு உண்டான மனக்கொதிப்புக்கோர் அளவு சொல்லி மாளாது. ஆகலான், அவர்கள் மீண்டும் தங்களுக்குத் தெரிந்த கொடுமைகளை யெல் லாம் பன்மடங்கில் அதிகமாகச் செய்யத் தலைப்பட்டார்கள். அதற்கு முன்

வரை அம் முஸ்லிம்கள் அந்தக் கு'ப்'பார்களின் கையிலே என்னவிதமான துன்பங்களையும் இன்பத்துடனேதான் சகித்துக்கொண்டு வந்தார்க ளென்பதை நன்கறிந்துகொண் டிருந்தார்கள். ஆனால், 'ஹப'ஷாவுக்கு அவர்கள் ஹிஜ்ரத் புறப்பட்டுச் சென்றதிலிருந்து இன்னமும் எத்தகைய இன்னல்களை யெல்லாம் சகித்துக்கொள்ள வேண்டிய அத்தியாவசியம் நேரிடினும், அவற்றை யெல்லாமும்கூட ஒருசிறிதும் பொருட்படுத்தாது தங்களுடைய தீ'னுல் இஸ்லாத்தையே அதிகம் பற்றிக்கொண்டிருக்கத் துணிந்துவிட்டார்க ளென்பதை மிகச் செவ்விதா யுணர்ந்துகொண்டு விட்டார்கள். ஆதலின், சிறுகச்சிறுக 83 முஸ்லிம்கள் வரை நாளடைவிலே நஜ்ஜாஷீயிடம் போய்ச் சேர்ந்துவிட்டார்கள்.

அதற்கிடையில் நஜ்ஜாஷீ மன்னருக்கும், நீலநதியின் அக்கரையிலிருந்த மற்றோர் அரசனுக்கும் பெரியதொரு போர் நிகழத் தொடங்கிற்று. அந்த யுத்தத்தில் முஸ்லிம்களும் கலந்துகொண்டு நஜ்ஜாஷீக்கு உதவிபுரிய எண்ணங் கொண்டிருந்தனர்; ஆனால், இவர்களுடைய உதவி செல்வதற்கு முன்னே அந்த நஜ்ஜாஷீ மன்னருக்கு வெற்றி கிடைத்துவிட்டது. இதற்குள்ளே மக்காவிலிருந்த எல்லாக் கா'பிர்களுமே இஸ்லாத்தைத் தழுவி விட்டார்க ளென்னும் வதந்தி யொன்று 'ஹப'ஷாவுக்கு வந்து எட்டிற்று. ஆதலின், அவ் வதந்தியை மெய்யென்று கொண்டு பல முஸ்லிம்கள் தங்கள் சொந்த நகரத்துக்குத் திரும்புவா ராயினார்கள்; ஆனால், இடைவழியில் மேற்கூறிய வதந்தி பொய் யென்பதைத் தெரிந்துகொண்ட பற்பல மனிதர்கள் மீண்டும் 'ஹப'ஷாவுக்கே திரும்பிச் சென்றுவிட்டனர்; வேறுசிலர் தங்கள் மக்கத்துக் குள்ளேயே வந்து தங்கிவிட்டனர். இவர்களுள் அ'ப்'து'ல்லா ஹிப்'னு மஸ்ஊ'து'ம் ஒருவராவர். இவர்களின் வாய்மொழியைக் கொண்டு மக்கத்தி லிருந்துவந்த மிகுதியான முஸ்லிம்க ளெல்லாரும் அந்த நஜ்ஜாஷீ மன்னரது தயாள குணத்தையும், நீதிவழுவா நெறிமுறையையும் பற்றிக் கேள்வியுற்று, அந்த 'ஹப'ஷா நாட்டுக்கே தாங்களும் ஹிஜ்ரத் சென்று விடலா மென்று எண்ணினார்கள். அன்றியும், மக்கத்துக் :குறைஷியர் முஸ்லிம்களை முன்னையைவிடப் பன்மடங் கதிகமாய்த் தங்கள் வெஞ்சத்தை யெல்லாம் தீர்த்துக் கொள்ளவேண்டு மென்றே துன்புறுத்திக் கொண்டு வந்தனர். எனவே, முதல் முஹாஜரத் நிகழ்ந்ததன் பின்பு மறு வருஷத்தில் இரண்டாவது முஹாஜரத்தும் புறப்பட லாயிற்று. அதுபொழுதும் ஆங்குள்ள :குறைஷிகள் தங்களால் இயன்றமட்டும் தடைசெய்து பார்த்தும், அம் முஸ்லிம்கள் அதற்குச் சற்றும் வழிப்படாது வெளிக்கிளம்பி விட்டனர். அதுசமயம் சிறு குழந்தைகளைத் தவிர்த்து, 83 முஸ்லிம் ஆண்களும், 18 முஸ்லிம் பெண்களும் ஹிஜ்ரத் புறப்பட்டார்கள். அவர்க ளெல்லாரும் அந்த 'ஹப'ஷா நாட்டிலேயே அதுகாலைத் தங்கி விட்டார்கள். ஆனால், 'ஹ'ஜ்ரத் உ':த்மான் பி'ன் அ'“ப்'பான் (ரலி') அவர்

களும் அவர்களுடைய மனைவியரும் மட்டுமே இரண்டாவது ஹிஜ்ரத்துக்குப் பின்னே மக்கமா நகருக்குத் திரும்பி வந்துவிட்டார்கள்.

இவ்வாறு 'ஹப'ஷா நாட்டுக்கு ஹிஜ்ரத் சென்றவர்க ளெல்லாரும் அவ் விடத்திலேயே, ரஸூலுல்லாவின் (மதீனா) ஹிஜ்ரத்வரை தங்கி விட்டார்கள். ஆனால், நபி பெருமானா ரவர்கள் மக்காவை விட்டு மதீனாவுக்கே ஹிஜ்ரத் சென்றுசேர்ந்த பிறகு, அவ்விஷயத்தைக் கேள்வியுற்றே 'ஹப'ஷாவி லிருந்துவந்த ஒருசிலர் நேரே மதீனாவுக்குச் சென்று நபிகள் பெருமானாருடனே சேர்ந்துகொண்டார்க ளென்று சில சரித்திராசிரியர்கள் கூறுகின்றார்கள். ஆனால், ரஸூலுல்லாவின் ஹிஜ்ரத்துக்குப் பின்னர் ஏழாண்டு கழியும்வரை அந்த 'ஹப'ஷா நாட்டில் வசித்துவந்த முஸ்லிம்க ளெல்லாரும் மதீனாவுக்குச் சென்று நபிக ளாதருடனே கலந்துகொள்ள வில்லையென்பதுதான் சரியான சரித்திரச் சான்றாகும். ஹிஜ்ரீ ஆறாவதாண்டில் 'ஹுதை'பி'ய்யா உடன்படிக்கை நிகழ்ந்ததன்பின் பத்துவருட கால மட்டும் முஸ்லிம்களுக்கும் :குறைஷிகளுக்கும் இடையில் சமாதானம் நிலவியிருக்க வேண்டுமென்னும் நிபந்தனை யொன்று அ'மலில் சிலகாலம் இருந்து வந்ததனால், அந்த அரப்நாட்டில் அம் முஸ்லிம்களுக்குச் சிறிது சுயேச்சையென்பது அதுசமயம் காணப்பட்டு வந்தது ; இதனால் 'ஹப'ஷாவிலிருந்த முஸ்லிம்க ளெல்லாரும் மதீனாவுக்குச் சென்று, தங்கள் பந்துமித்திரர்களுடன் சேர்ந்துகொள்ளுதற் குரிய நற்பாக்கியம் கிடைத்தது. இதனால் ஹிஜ்ரீ ஏழாவதாண்டு வரை மதீனாவிலும் ஆங்குச்சென்ற முஹாஜிரீன்களுக்கு நல்லவிதமான பாதுகாப்புக் கிடைக்கவில்லை யென்று ஒருவாறு நாம் உணர்ந்து கொள்ளுகிறோம். என்னெனின், 'ஹுதை'பி'ய்யாவின் சமாதான உடன்படிக்கைக்குப் பிறகுதான் சிறிதுபோழ்து அம் முஸ்லிம்களுக்குச் சுகசாந்தி யென்பது கைக்குக் கிட்டிற்று.

'ஹப'ஷா நாட்டில் அவர்கள் தங்கியிருந்த பொழுது, அந் நஜ்ஜாஷீ மன்னருக்கும், ஆற்றுக்கு அக்கரையி லிருந்த மற்றொரு மன்னருக்கும் யுத்தம் தொடங்கிய காலையில் அவ்வரசபிரானுக்கு நம் முஸ்லிம்கள் உதவி புரியத் தையாரா யிருந்தார்க ளென்று முன்னமே கூறியிருக்கின்றோம். ஆனால், அவ்வரசருக்கு உதவி வேண்டக்கூடிய அவசரமான சந்தர்ப்பத்தை அறிந்துவரும் பொருட்டு அந் நீலநதியைத் தன்னந்தனியே நீந்திச்சென்ற 'ஜுபை'ர் (ரலி') அவர்கள் அம்மன்னருக்கு வெற்றிகிடைக்கும்வரை திரும்பி வாராமையால், 'ஹப'ஷாவிலிருந்த முஸ்லிம்களால் நேரிற் சென்று அந்த யுத்தத்தில் கலந்துகொள்ள முடியாமற் போயினும், அவர்க ளெல்லாரும் அந்த நஜ்ஜாஷீயின் வெற்றிக்காக அல்லும் பகலும் அனவரதமும் ஆண்டவன்பாலே அளவுகடந்த விண்ணப்பங்களை யெல்லாம் செலுத்தித் துதி செய்துகொண்டே வந்தார்கள். இதனால் அம் முஸ்லிம்கள் எத்துணைப் பெரிய நன்றியறித லுள்ளவர்களா யிருந்துவந்தார்க ளென்பது செவ்வனே புலனாக வில்லையா? அன்றுமுதல் பிறகு எப்பொழுதுமே அம் முஸ்லிம்கள்,

"நன்மைக் கீடாக நன்மையேயன்றி மற்றொன்றும் செய்யப்படக் கூடாது," என்னும் :குர்ஆன் ஆயத்தையே (55 : 60) தங்களுக்குரிய மகா வாக்கிய மாகக் கொண்டு நின்றார்கள்.

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு." — குறள்.

'ஹப்'ஷாவுக்குச் சென்ற முதல் முஹாஜரத்தைப் பற்றிய விருத்தாந்தம் ஒன்றும் ஈண்டுக் குறிப்பிட வேண்டுவது அத்தியாவசியமாய்க் காணப்படா நின்றது: முதல் முஹாஜரத் நிகழ்ந்ததன்பின்பு சிறிது போழ்தைக்குள் அந் நஜ்ம் என்னும் ஸூரா (அத்தி. 53) ஆண்டவனால் அருளப்பட்டது; அதன் 19-ஆவது, 20-ஆவது ஆயாத்களில் லாத், உ''ஜ்'ஜா, மனாத் ஆகிய மக்கத்துக் கு'ப்'பார்களின் சுவாமிகளின் நாமங்கள் காணப்படுகின்றன. பிறகு 21-ஆவது ஆயத்தில், "என்ன! உங்களுக்கு ஆண்களும், ஆண்டவனுக்குப் பெண்களுமா!" என்னும் விஷயம் காணப்படாநின்றது. ஒருநாள் நபிகள் பெருமானாரவர்கள் (சல்) இந்த ஆயாத்களை ஓதித் தொழுதுகொண்டிருந்தபொழுது, அவர்கள் திருவாயினின்று மேற்கூறிய 19-ஆவது, 20-ஆவது ஆயாத்கள் வெளிப்பட்டு, 21-ஆவது ஆயத் வெளியாகுமுன்னே அருகினில் சூழ்ந்திருந்த கு'ப்'பார்கள், "நிச்சயமாக, அவர்கள் மகா பெரிய உயர்ந்த பெண்களாவர்; நிச்சயமாகவே, அவர்களுடைய மத்தியஸ்தத்தில் ஆதரவுவைக்க வேண்டியதா யிருக்கின்றது," என்னும் வாக்கியத்தைக் கூறி முடித்து, ஆண்டவனே இப்படிப்பட்ட திருவாக்கியத்தைத் தன் வ'ஹீயின் வாயிலாய்த் தன்னுடைய திருத்தூதருக்கு வெளிப்படுத்தினனென்ற வதந்தியைக் கிளப்பிவிட்டார்கள்; அக்கணமே இவ்விஷயம் அந் நகரத்திலிருந்த எல்லாக் கு'ப்'பார்களுக்கும் எட்டி விட்டது. ஆனால், விக்ரஹத் தொழும்பைக் குறித்துக் கண்டிக்கப்படும் இவ்விடத்திலே அந்தச் சுவாமிகளின் பெருமையே கூறப்பட்டிருத்தல் கூடுமென்பது ஒரு வெறு முட்டாட்டன மாகவேதான் காணப்படாநின்றது.

இச் சம்பவத்தைக் கொண்டுதான் மக்கத்திலிருந்த எல்லாக் கு'ப்'பார்களும் தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவிவிட்டார்க ளென்னும் பொய்வதந்தி யொன்று 'ஹப்'ஷாவுக்குள்ளே நுழைந்துவிட்டது. என்னெனின், இந்த 53-ஆவது அத்தியாயத்தில் அந்தக் கு'ப்'பார்களின் விக்ரஹ வணக்கத்திற்கு நபிபெருமானார் அவர்களே மேற்கூறியவாறு சிறிது விட்டுக் கொடுத்தார்க ளென்னும் கட்டுக்கதையைச் சிற்சில ஷைத்தான்கள் கிளப்பிவிட்டார்கள். ஆனால், அந்த ஷைத்தான்களின் இத்தகைய கட்டுக்கதைக் கொன்றும் இஸ்லாமிய சரித்திரங்களில் சரியான ஆதாரம் காணப்படவில்லை யென்பது தான் சத்தியமாகும். உண்மையிலே :குர்ஆன் ஷரீ'பின் மகா கம்பீரமான கட்டளையைக் கேட்டவுடனே அந்தக் கு'ப்'பார்கள் தங்களுக்குத் தெரியாமலே வலுவிலே சிறிது மனங்கசிந்திருத்தல் கூடும். இதன் காரணமாகவே

அவர்களெல்லாரும் தீ'னுல் இஸ்லாத்தில் சேர்ந்து கொண்டார்களென்னும் வதந்தி யொன்று 'ஹப'ஷாவுக்குள்ளும் எட்டிற்றுப் போலும்? அதைக் கேட்டுத்தான் சிற்சிலர் மட்டுமே தங்கள் சொந்த ஊருக்குத் திரும்பிவரத் துணிந்தார்கள். இவ்வளவேதான் மெய்யான சரித்திரங்களில் காணப்படாநின்றது. ஏனைய வெல்லாம் ஷைத்தான்களின் பொய் விஷமச் சிருஷ்டியேயாகும்.

மக்காவில் இஸ்லாத்தைத் தழுவியிருந்த ஏழை மக்கள்தாம் அந்தக் கு'ப்'பார்களால் துன்புறுத்தப்பட்டு வந்தார்களென்று கூறுவதற்கில்லை. 'ஹ'ஜ்ரத் உ':த்மான், 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் போன்ற மாபெருந் தனிகர்களும் செல்வாக்குப் பெற்றவர்களுங்கூட அன்னவர்களால் துன்புறுத்தப்படாமல் வாளா விட்டுவிடப்பட வில்லை யென்பது நுங்களுக்கு நன்கு தெரியும். எனவே, 'ஹ'ஜ்ரத் உ':த்மான் அவர்கள் தங்கள் மனைவியுடன் முதலிலேயே 'ஹப'ஷாவுக்கு ஹிஜ்ரத் புறப்பட்டு விட்டார்கள். ஆனால், 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் அவர்கள் இனியோர் ஆண்டுமட்டும் எதிரிகளின் துன்பங்களை யெல்லாம் மிக்க பொறுமையுடனே சகித்து வந்தார்கள். இவர்கள் அம் மக்காவின்கண் பெரிய செல்வாக்கும், நெடிய புகழும் படைத்திருந்தும், இவர்கள் :குர்ஆன் ஷரீ'பின் திருவாக்கியங்களை வாய்விட்டு வெளியில் உரத்த சப்தத்துடனே ஓதக்கூடாதென்று அந்த எதிரிகளால் வாய்ப்பூட்டுடனே அதிகம் இம்சிக்கப்பட்டு வந்ததைக் கண்டு பொருது, மனச் சுதந்தரத்துக்கும் வாக்குச் சுதந்தரத்துக்கும் சற்றும் இடமில்லாத அம்மக்கத்திலிருப்பதைக் காட்டினும், இரண்டாவது முறை 'ஹப'ஷாவுக்கு ஹிஜ்ரத் புறப்பட்டவர்களுடன் தாங்களும் புறப்பட்டுச் சென்று விடுவதே சாலச் சிறந்ததெனக் கொண்டு, அவ்வாறே நபிகள் பெருமானிடத்தும் உத்தரவு பெற்றுக் கொண்டார்கள்.

அவ்வாறே 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர்சித்'தீ':க் (ரலி') அவர்கள் மக்காவை விட்டுப் புறப்பட்டு, ஆங்கிருந்து ஐந்துநாள் செல்லக்கூடிய தூரத்திலுள்ள ப'ர்க்குல் :கிமாத்' என்னும் இடம்போய்ச் சேர்ந்தவுடன் அவ்விடத்தில் :கார்ரா என்னும் ஒரு முக்கிய வகுப்பின் தலைவரான இப்'னுத்' த':க்னு என்பவர் 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ரை இடைவழியில் சந்திக்கும் படியான சந்தர்ப்பம் ஏற்பட்டு விட்டது. 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் தங்கள் சொந்தவூரை விட்டு வெளிப்புறப்பட்ட காரணம் யாதென்று இப்'னுத்' த':க்னு வினவினர். அதைக்கேட்டு, அபூ'ப'க்ர் (ரலி') "என்னூரில் என்னுடைய மனிதர்கள் என்னைச் சுகசாந்தியோடு சும்மா இருக்க விடுகின்றார்களில்லை. ஆதலின், யான் அவர்களைவிட்டு வேறெங்கேனும் சென்று அல்லாஹுத் தஆ'லாவைத் தன்னந்தனியே எத்தகைய இடையூறு மில்லாது வணங்கிக் கொண்டிருக்கலாமென்று செல்லுகிறேன்," என்று விடைபகர்ந்தார்கள். "உங்களைப் போன்ற பெரியார் மக்காவைத் துறந்து ஹிஜ்ரத் செல்வது நியாய மாகாது. நான் உங்களுக்காக அங்கு வந்து ஸி'பாரிஷ் செய்து

வைக்கின்றேன்," என்று கூறி, இப்'னுத்' த':க்னு அபூ'ப'க்ரை மக்காவுக்குத் திருப்பி அழைத்துக் கொண்டு வந்தார். அங்கு வந்து :குறைஷித் தலைவர் களை யெல்லாம் ஒன்று சேர்த்து, அவர்களை நோக்கி, "இந்த அபூ'ப'க்ரோ உபசரணையில் மிகைபட்டவர். ஏழை எளியவர்கட்கு அதிகம் உதவும் உபகாரி; பந்துமித்திரர்களை யெல்லாம் அளவுகடந்து ஆதரிப்பவர். துன்பத்திற் குதவும் தூய மனமுடையவர். இவ்வாறிருக்கும் இவரை நீங்கள் வெளியில் வெருட்டலாமா?" என்று வினவினார். இப்'னுத்' த':க்னுவின் இவ் வார்த்தைகளைக் கேட்ட அந்தக் கு'ப்'பார்கள், "இவர் நாங்கள் விதிக்கும் ஒரே நிபந்தனைக்குக் கட்டுப்படுவ ராயின், இவர் இங்கிருக்க அனுமதி கொடுப்போம்: அஃதாவது, இவர் தொழுது கொள்ளும் பொழுது :குர்ஆன் ஆயாத்களை வேண்டியமட்டும் மனங் கொண்டவரை ஓதிக்கொள்ளட்டும். ஆனால், வாய்க்குள்ளேயே ஓதிக் கொள்ள வேண்டும். இவர் உரத்த குரலிட்டு ஓதுவதானால் எங்கள் பெண் களும் பிள்ளைகளும் அவற்றைச் செவிமடுத்து, அதனால் தங்கள் உள்ளங் களைக் கெடுத்துக் கொள்ளுகிறார்கள்," என்று விடை கொடுத்தார்கள். பிறகு இப்'னுத்' த':க்னுவின் வேண்டுகோளுக் கிணங்கி 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் அவர்களும் தங்கள் சொந்த நகரமாய அம் மக்காவிலேயே யிருந்துவிட்டார்கள்.

பிறகு சிலதினம்வரை அவர்கள் தங்கள் விடுதிக் குள்ளேயே யிருந்து ஓசை யொன்றும் செய்யாமல் ஆண்டவனைத் தொழுதுவந்தார்கள். சுதந்தர தாகமும், சமத்துவப் பிரியமும் அதிகம் குடிகொண்டுள்ள அவர்கள் எத்தனை காலம்தான் இத்தகைய கட்டுப்பாட்டிற்குள்ளே சிக்கிக்கொண்டு கிடப்பார்கள்? எனவே, இனி என்ன நேரினும் இலக்ஷியம் இல்லையெனத் தீர்மானம் செய்துகொண்டு, தங்கள் வீட்டுக்கருகினில் ஒரு சிறு மஸ்ஜிதை' நிர்மாணம் செய்துகொண்டு, அதற்குள்ளிருந்தே தொழுதுவரத் தலைப்பட் டார்கள். ஆங்கிருந்தபடியே :குர்ஆன் ஷரீ'ஃபையும் வாய்விட்டுச் சிறிது உரத்த குரலில் ஓதிவருவார்கள். அவ்வாறு ஓதும்போ தெல்லாம் அவ் விளகிய மனமுடைய அபூ'ப'க்ரின் நேத்திரங்களினின்றும் உவகைக்கண்ணீர் தாரை தாரையாக வழிந்தோடும்; அதைக் கேட்கும் அக்கம்பக்கத்தி லுள்ள பெண்களும் பிள்ளைகளும் தங்களை அறியாமலே அழுதுவிடுவார்கள். எனவே, 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர்(ரலி') அவர்களின் பயபக்தியையும், விசுவாச குணத்தையும் நன்குணர்ந்துகொண் டிருந்த :குறைஷிகளுள் பலர் அன்ன வரின் பாடத்தைக் கேட்டே மனந்திரும்பி விட்டார்கள். இவ்வாறு இஸ்லாத்தில் சேர்ந்தவர்கள் பல ராவர். இதனைக் கண்ட கு'ப்'பார்களுக்கு உண்டான வருத்தத்திற்கோர் அளவில்லை. ஆதலின், அவர்கள் இப்'னுத்' த':க்னுவிடம் சென்று, இதைக் குறித்து முறையிட்டுக் கொண்டார்கள். உடனே அவரும் அபூ'ப'க்ர் சித்'தீ':க் அவர்களிடம் சென்று, "இனி யான் தங்களைப் பாதுகாக்கும் பொறுப்பை ஏற்றுக்கொள்வது முடியாது.

தங்களுக் கிடப்பட்ட நிபந்தனையை மீறித் தாங்கள் நடந்துகொண்டு வருகின்றீர்கள்,” என்று கூறினர். அதைக் கேட்டு, ‘ஹ’ஜ்ரத் அபூ’ப’க்ர் அவர்கள், “யான் ஆண்டவன் பாதுகாப்பிலேயே இனி இருந்துகொள்ளுகிறேன். எனவே, இன்றுமுதல் தாங்கள் எனக்களித்திருந்த அபயத்தினின்று யானே விலகிக் கொள்ளுகிறேன். இனித் தங்களுக் கொன்றும் என்னைப்பற்றிய கவலை வேண்டாம். எல்லாவற்றிற்கும் அந்த அல்லா(ஹ்) ஒருவனே போதுமானவனு யிருக்கின்ருன்,” என்று பதின்மொழி கூறி, அந்த இப்’னுத்’ த’:க்னவை அதிக சமாதானத்துடனே திருப்பி யனுப்பி விட்டார்கள்.

“ புரசைக் கடக்கரிகள் நிரைதட் டறக்குபிரர்
புவியைப் படக்க டவியே
சரகுற் றநற்பதவி வழியிற் புகுத்தியுயர்
தலைமைக்கு வைத்த பெரியோர்
பிரசத் துளித்திவலை சிதறிக் கிடக்குமிரு
பிணையற் புயத்து நயினர்
அரசுக்கு வைத்தநெறி வரிசைக்கு மிக்கதுரை ”

யாய் விளங்கிய ‘ஹ’ஜ்ரத் அபூ’ப’க்ர் சித்’தீ’:க்(ரலி’) அவர்கள்,

“ வடித்த மெய்ம்மறை நங்நபி வாக்கினிற்
படித்த சொல்லைப் பகர்ந்திடும் பேர்களைப்
பிடித்த டித்துப் பெலன்குறைத் தில்லமும்
இடித்து டைத்திடை யூறு படுத்தினர்,”

என்னும் துன்பத்தை இனியும் பொருட்படுத்தவா போகின்ருர்கள்? இப்பெரியாரும் எதிரிகளுக்கு எளிதில் அஞ்சுவது வழக்கமில்லை. அன்னவரின் தொந்தரை அளவிறந்து விட்டதன் காரணத்தாலேதான் ‘ஹப’ஷாவுக்குச் செல்லநாடிப் புறப்பட்டார்கள். ஆனுல், இனி என்ன நேர்ந்திடினும், ரஸூலுல்லா(ஹ்) அவர்களுடனேயே மக்காவின் கண்ணே தங்கியிருந்து விடுவதுதான் சாலச் சிறந்ததென்று எண்ணிக்கொண்டு விட்டார்கள். எனவே, இனி இவர்கள் நபிகள் பெருமானுடனே ஒன்றித்து மதீனவிற்கு ஹிஜ்ரத் சென்றகாலம் வரை அம்மக்கமா நகரின் கண்ணேயே தாமதித்திருந்து விட்டார்கள். அதன்பின்பு எதிரிகளும் இப்பெரியாருக்கு எதிரிலே ஒன்றும் இன்னல் விளைக்காது வாளா இருந்து விட்டார்கள்.

---

# அதிகாரம் — 13

## 'ஹ'ஜ்ரத் ஹம்'ஜாவும்(ரலி') உ'மரும்(ரலி') தீ'னிலே தழுவியதும் பின்னரும்

*" அல்லா(ஹ்)வைக் கொண்டும், அவனுடைய தூதரைக் கொண்டும் ஈமான் கொள்ளக் கடவீர்கள் ; இன்னம், எதில் (ஆண்டவன்) உங்களைப் பிரதிநிதிகளாய்ச் செய்திருக் கின்றானோ, அதினின்று செலவு செய்யக் கடவீர்கள் ; எனவே, உங்களிலிருந்து ஈமான் கொண்டும் (நற்பாதை யில்) செலவுசெய்தும் வருபவர்களுக்கு மாபெரிய சம்மானம் உண்டாயிருக்கிறது."* — (57 : 7)

'ஹப'ஷாவுக்குச் சென்ற அவ்வேழை முஸ்லிம்களைத் துரத்திக் கொண் டோடிய மக்கத்துக் கு'ப்'பார்களின் தூதர்களும் ஒன்றும் செய்ய வியலாது பெரிய அவமானத்துடனே வாளா திரும்பிவந்து விட்டார்கள். இதனால் அன்னவர்களின் "அசட்டுக்" குரோதம் குறைவதற்கு மாறாக அதிகம் ஜுவாலைவிட் டெரியத் தலைப்பட்டது. 'ஹப'ஷாவுக்குச் சென்று நஜ்ஜாஷீ மன்னரிடம் அடைக்கலம் புக்க முஸ்லிம்களைத் தவிர்த்து, மக்காவின்கண் எதிரிகளுக் கஞ்சாது அதிக தைரியத்துடனே வாழ்ந்துவந்த தீரபுருஷர் களுள் நபிகள் நாதரும்(சல்) 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் சித்'தீ':க்(ரலி') அவர்களும் தலைசிறந்தவ ராவார்கள். நயவஞ்சகத்தால் அவ் வெதிரிகள் முதன்முதலில் நபிகள் பெருமானின் முயற்சியை அடக்கிவிடலாமென் றெண்ணினார்கள். அது பலியாது போகவே, ஆசைவார்த்தைகளைக் கூறியேனும் அவர்களை வசப்படுத்தி விடலாமென்று எதிர்பார்த்திருந்தனர். அதுவும் பிரயோஜனம் தரவில்லை யெனக்கண்டு, இணையில்லா இடுக்கண்விளைப்பதே இனிச் சரியான முறையெனப் பிறகு கண்டு பிடித்தார்கள். எனவே, நஜ்ஜாஷீ மன்னர் மட்டும் தம் பாதுகாப்பில் அடைக்கலம் புக்கவர்களை மக்கத்துக் கா'பிர்க ளிடம் திருப்பி ஒப்படைத்திருப்ப ராயின், அவ்வேழை முஸ்லிம்களை யெல் லாம் அம்மக்கத்துக் கொடுங் கா'பிர்கள் என்ன வதைதான் செய்யாதிருந் திருப்பரென்று எண்ணுகின்றீர்கள்? இதனை நினைக்க எவர் மனமுந் துணுக்குறா திராதென்பது திண்ணமேயாம்.

அதுமட்டு மன்று. அந் நஜ்ம் ஸூரா வெளியாக்கப்பட்ட போதேனும் மு'ஹம்மத்' நபியவர்கள் தங்களுக்குரிய விக்ரஹச் சுவாமிகளுக்குச் சிறிதே கௌரவம் கொடுப்பார்க ளென்று அவ் வன்கா'பிர்கள் பெரியதொரு

சூழ்ச்சிசெய்து பார்த்தார்கள். ஆனால், சென்ற அதிகாரத்தில் கூறப்பட்டிருப்பதேபோல், அதிலும் அவர்கள் வெற்றிபெறுதற் கியலாது போய் விட்டது. இவ்வாறு எம்பிரானவர்கள் அந்த விக்ரஹத் தொழும்பர்கட்குச் சற்றும் விட்டுக்கொடா திருந்தது அன்னவரின் மனக்கொதிப்பை அளவுக்கு மீறிக் 'கரம்' உண்டாகுமாறு செய்துகொண்டே வந்தது. நபிகள் நாயகமும் அவர்களுடைய சுவாமிகட்குச் சிறிதும் விட்டுக்கொடுப்ப தில்லை; எனவே, அந்தக் கு'ப்'பார்களும் இனி இவர்களைச் சும்மா விடுவதில்லை யெனத் தீர்மானம் செய்து கொண்டார்கள். அவர்களுடைய பெரிய விக்ரஹங்களாகிய லாத், உ''ஜ்'ஜா, மனாத் என்பன உண்மையிலே சுவாமிகளல்ல வென்றும், அவை வெறும் (அர்த்தபுஷ்டி யற்ற) பெயர்களே யென்றும் எம்பெருமானார் கூறக்கூற, அக் கு'ப்'பார்களுக்கு அவ்விஷயம் ஒரு பெரிய குரோதத்தையும், அளப்பரும் ஆத்திரத்தையுமே அதிகம் விருத்திசெய்து கொண்டு வந்தது. ஆகலின், அவர்கள் இழைத்துவந்த கொடுமைகளுக்கோர் உறை சொல்லி முடியாது போயிற்று. என்னெனின், வேறெந்தச் சாமானிய மனிதர்களாலும் இவ்வுலகினில் சகிக்கமுடியாத அத்துணைக் கொடுமைகளை யெல்லாம் அப் பெருமானாரவர்கட்கு அக்கொடுங் கா'பிர்கள் இழைத்து வந்தார்கள். தெய்விகசக்தியின் உதவிபெற்றிராத எத்தகைய மனிதப் பிராணியும் அந்தக் கு'ப்'பார்களின் கொடுமைகளை யெல்லாம் அத்துணைப் பொறுமையுடனே சகித்திருப்பது அணுத்துணையும் சாலாது.

உண்மை விஷயம் இவ்வாறு இருந்துவரும் போழ்து, ஒருநாள் ச'பா வென்னுமிடத்தில் நபிகள் திலகமவர்களை அபூ'ஜஹ்ல் என்பான்* சந்தித்து, வாயினாற் கூறமுடியாத வசைமொழிகளை யெல்லாம் வரிசையாகக் கோத்துத் திட்டினான்; அதுபொழுது அந்த அபூ'ஜஹ்ல் திட்டிய வசைமொழிகளைப் பேனாவின் முனைகொண்டு வரைவதும் முடியாதென்று சரித்திராசிரியர்கள் பெரிதும் வருந்துகின்றனர். கல்லா லெறிந்து நபிகள் நாயகத்தை அவ்வமயம் அபூ'ஜஹ்ல் தலையில் காயமும் உண்டுபண்ணிவிட்டா னென்று கூட வேறெவரோ சிலர் கூறியுள்ளனர்.

> "பொன்னும் கரும்பும் புகழ்பாலும் சந்தனமும்
> சின்னம் படவருத்தஞ் செய்தாலும்— முன்னிருந்த
> நற்குணமே தோன்றும்; நலிந்தாலும் உத்தமர்பால்
> நற்குணமே தோன்றும் நயந்து,"—

* இவனது இயற்பெயர் உ'ர்வா பி'ன் ஹிஷாம் மக்''ஜூமீ என்பதாகும். இவன் ரஸூலுல்லாவுக்கு இழைத்துவந்த இன்னல்களின் காரணத்தாலும், அதில் இவன் காட்டிவந்த குயுக்திகளின் காரணத்தாலும் :குறைஷிகள் இவனுக்கு "அபு'ல் 'ஹகம்" — நீதிவாதத்துக்குத் தந்தை — என்று புனைபெயர் சூட்டினர். ஆனால், இவனது மடமைத்தனத்தின் காரணமாகப் பொதுமக்கள் இவனுக்கு "அபூ' ஜஹ்ல்"— அஞ்ஞானத்தின் தந்தை — என்று நிந்தனைப்பெயர் சூட்டி, இன்றுகாறும் அவ்வாறே அழைத்தும் வருகின்றனர்.

என்றுங்கு, நபிகள் திலகம் ஒன்றுங் கூருது வாளா மௌனித்திருந்து விட்டார்கள். இதனைப் பார்த்துக்கொண் டிருந்த 'ஹ'ஜ்ரத் ஹம்'ஜா(ரலி') அவர்களின் ஊழியக்காரி யொருத்தி — (இவளை அ'ப்'து'ல்லா ஹிப்'னு ஜத்'ஆ'ன் என்பவரது அடிமையென்றும் வேறுசிலர் கூறுவர்) ஹம்'ஜா (ரலி') வேட்டையிலிருந்து திரும்பிவந்தவுடனே அன்னவரிடம் அபூ'ஜஹ்ல் செய்த கொடுமைகளைப்பற்றி யெல்லாம் விவரித்துக் கூறிமுடித்தாள்.

ஹம்'ஜா (ரலி') அவர்கள் ரஸூலுல்லாவின் தந்தைக் கிளைவரா யிருந் தும், நபிகள் நாயகத்தைப் பார்க்கினும் இரண்டுமூன் ருண்டுகளே மூப் படைந் திருந்தார்கள். இவர்களும், ரஸூல்நாயக மவர்கள் இளமையில் பாலருந்திய :துவைப'ா என்னும் மாதிடமே ஒருசேரப் பாலருந்தி வளர்ந் தார்கள். எனவே, இவ்விளைய தந்தையார் நபிகள் பெருமானுடன் விளை யாட்டுத் தோழராயும் விளங்கிவந்தார்கள். ஆனால், 'ஹ'ஜ்ரத் ஹம்'ஜா அவர்கள் பால்யமுதலே வேட்டையாடுவதில் அதிகம் பிரியம் காட்டி வந்தார்கள். எனவே, இவர்களுக்கு அம்பெய்வதில் அதிக சாமர்த்திய முண்டென்று சரித்திரக்காரர்கள் சாற்றுகின்றுர்கள்; இருளிலும் இலக்கு வைத் தெய்தால் ஹம்'ஜாவின் பாணம் குறிதப்புவ தில்லையாம். இப்படிப் பட்ட வேட்டைப் பிரியரான இவ் வில்லாளி ஒவ்வொரு நாளும் காலையில் வேட்டைக்குச் சென்று மாலையில்தான் திரும்பிவருவது வழக்கமா யிருந்து வந்தது. இவருக்கு நபிகள் பெருமான்மீது அளவற்ற அபிமானமும் இருந்து வந்தது; ஆனால், அதுவரை இவர்கள் தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவவில்லை. இவருடைய சாமர்த்தியத்துக் காகவும் சத்தொழுக்கத்துக் காகவும் அக் :குறைஷிகள் இவரை அதிகம் புகழ்ந்து வந்தார்கள். இப்படிப்பட்ட ஹம்'ஜா(ரலி') அவர்கள் அன்று வேட்டையினின்று திரும்பிவந்த பொழுது, அந்த வேலைக்காரப் பெண்ணுல் அபூ'ஜஹ்ல் செய்த அக்கிரம முழுதையும் நன்கு தெரிந்து கொண்டார்கள். தங்களால் அதிகம் மதிக்கப்பட்டுவந்த தமையன் மைந்தரை இவ்வாறு அபூ'ஜஹ்ல் அன்று பகலில் அவமானம் செய்துவிட்டான் என்பதை அறிந்தவுடனே அவர்களுக் குண்டாய ஆத்திரத்திற்கோர் அளவில்லை யென்னலாம். அ'ப்'து'ல்லாவின் மைந்தரைப் போன்ற ஒரு சாத்விக சிகாமணியை எதிரிகள் அவ்வாறு அளவுகடந்து துன்புறுத்தியதைக் கண்டு எந்த நல்ல மனிதன்தான் இவ்வுலகினில் வாளா இருந்திடுதல் சாலும்? ஆகலின், 'ஹ'ஜ்ரத் ஹம்'ஜா(ரலி') அவர்கள் அக் கணமே தங்கள் வில்லை யெடுத்துத் தோள்மீது மாட்டிக்கொண்டு, அபூ'ஜஹ்லைத் தேடிக் கஃ'ப'த்துல்லாவுக்கு நேரே சென்ருர்கள். ஆங்குத் தன்னுடைய சகபாடிகளுடனே தான் அன்றுநடாத்திய அதிசாமர்த்தியக் காரியத்தைப் பற்றி மிக்க விமரிசையாய்ப் பாராட்டிப் பேசிக்கொண்டிருந்த அந்த அபூ'ஜஹ்லை ஹம்'ஜா (ரலி') அவர்கள் கண்டவுடனே ஆத்திரம் தாளாது, தங்கள் வில்லைக் கையிலெடுத்து அவனது தலைக்குமேல் ஓங்கி ஓரடி கொடுத்துவிட்டு, "ஆ அபூ'ஜஹ்ல்! நீ என் தமையன் மைந்தரை

இத்துணை மட்டும் இழிவுபடுத்தத் துணிந்து விட்டனையோ? யானும் இன்றே இஸ்லாத்தில் சேர்ந்துவிட்டேன் என்பதை நீ அறிந்து கொள்! உன்னுடைய கல்விக்ரஹங்களில் எனக்குச் சற்றும் நம்பிக்கை யில்லை. ஆதலின், மு'ஹம்மத்' சொல்லுகிறபடியே நானும் நம்புகின்றேன். உன்னு லாகுமாயின், என்னைத் தடைசெய், பார்ப்போம்!" என்று அதிக தைரியத் துடனே நிமிர்ந்து மொழிந்து நின்றூர்கள்.

"படிறபூ ஜஹிலென் றேதும் பாதகன் வதனம் நோக்கி
அடல்முகம் மதுவைச் சொல்லா தவமொழி பகர்ந்த(து) எந்த
மிடலெனச் சினந்து சீறி வீரவேல் தடக்கை வில்லால்
உடைபடச் சிரத்தில் தாக்கி உறுக்கொடும் கறுத்துச் சொன்னூர்,"

"துனிமனத் துறைய முன்னேன் தோன்றலை யுரைத்தா யென்னில்
இனியெவை யுரைப்ப னியானும் இயல்நபி மொழிந்த மார்க்கம்
தனினடு நிலைமை யானேன் சாதியின் தலைவர் கூடி
நனிபகை வரினும் காண்பேன் காணுநீ நவிறல் என்றூர்,"—

என்பன சீருப் புராணம்.

'ஹ'ஜ்ரத் ஹம்'ஜா அவர்கள் கொடுத்த வில்லடியால் மண்டை திறந்து, அபூ'ஜஹ்லுக்கு உதிரம் சொரிந்ததைக் கண்ட அவனுடைய வர்க்கத்தின ராகிய ப'னூ மக்''ஜூம் கூட்டத்தினர் அக்கணமே அதற்காகப் பழிக்குப் பழிவாங்க வேண்டு மென்று ஓடிவந்தார்கள். அதுகண்டு, அபூ'ஜஹ்ல் அவர்க ளெல்லாரையும் சமாதானப்படுத்தி, "ஹம்'ஜாவை விட்டுவிடுங்கள். இன்று யான் என்சகோதரன் மகனுக்குச் செய்த தெல்லாம் மாபெருங் குற்றமே யாகும்," என்று கூறித் தன்னுடைய குற்றத்தையும் ஏற்றுக் கொண்டான். அதன்பின்பு ஹம்'ஜா(ரலி') அவர்கள் கஃ'ப'ாவைச் சுற்றிக் கொண்டு நபிகள்பெருமானவர்களிடம் நெருங்கிச் சென்று, "ஏ என் தமைய னுக்குத் தனைய! நீர் வருந்தற்க! உம்முடைய பகைவனிடம் சரியான பழி வாங்கி விட்டேன்," என்று கூறினூர்கள். அதைக் கேட்டுப் பெருமானு ரவர்கள் தங்கள் சிறியதந்தையான ஹம்'ஜா அவர்களை நோக்கி, "என் னருஞ் சிறிய தந்தாய்! தீ'னுல் இஸ்லாத்துக்குப் பகைவர்களா யுள்ளவர் கள்மீது பழிவாங்க வேண்டுமென்பது என் நோக்கமே யன்று. எனவே, யான் அவர்களுக்குத் துன்பங் கொடுக்க விரும்பவில்லை. ஆனல், அதற்கு மாருகத் தாங்கள் தீ'னுல் இஸ்லாத்தில் சேர்ந்துகொள்வதுதான் எனக்குப் பெரிதும் பிரியமா யிருக்கும்," என்று மறுமொழி கூறினூர்கள். உடனே 'ஹ'ஜ்ரத் ஹம்'ஜா அவர்கள், "நான் அபூ'ஜஹ்லை அடித்தபோதே இஸ் லாத்தில் சேர்ந்துவிட்டேனே!" என்றுகூறி, நபிகள் பெருமான்மீது உறுதி கொண்டு நந் தீ'னுல் இஸ்லாத்திலே நன்னம்பிக்கையும் கொண்டுவிட்டார்

கள்.— (எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே!) ஆனால், அன்றிரவு ஹம்‘ஜா அவர்கள் சாந்தமாயிருந்த வேளையில், “யான் இன்று என்செய்து விட்டேன்! கோபா வேசத்தினா லல்லவோ, என்னுடைய மூதாதையரின் மார்க்கத்தை முன்பின் ஆலோசித்துப் பாராது திடுமென விட்டுவிட்டேன்! இவ்வாறு யான் செய்தது சரிதானா?” என்றெல்லாம் சிறிது தளர்ச்சியடைந்து, உடனே தங்கள் மனத்தைத் தேற்றிக்கொண்டு, தாங்கள் அவ்வாறு அந்தக் கல்விக்ரஹங்களின் பண்டைமார்க்கத்தை விட்டு ஏகேசுவர வாதத்திற்குக் கொடிபிடித்து நிற்கும் தீ’னுல் இஸ்லாத்தில் சேர்ந்து கொண்டது நியாயந்தா னென்று உறுதிகொண்டு, பிறகு எப்பொழுதும் நபிகள் பெருமானா ரவர்களுக்கே முற்றும் பக்கபலமாக இருந்துவருவதே சாலச் சிறந்த தென்று ஒரே தீர்மானமாக உறுதி செய்து கொண்டு விட்டார்கள்.

“ வள்ளலென் றுதவும் செவ்வி முஹம்மதின் மதுர வாக்கின்
விள்ளரும் மறையின் தீஞ்சொல் விடுத்தெடுத் துரைப்பத் தேறி
உள்ளமும் உடலும் பூரித்(து) உருசிக்கும் அமுதின் மிக்காய்த்
தெள்ளிய கலிமா ஓதித் தீனிலைக் குரிய ரானார்,”

“ அறிவுறும் ஹம்ஜா தீனில் ஆயின ரென்னும் மாற்றம்
மறுவுரை குபிரர் கேட்டு மனத்தினில் துன்ப முற்றார்
இறையவன் தூதர் செவ்வி யியல்நபிக் கலிமா ஓதும்
திறல்கெழும் வேந்த ரியாரும் சிந்தையில் செல்வம் பெற்றார்,”—

என்றார் உமறுப்புலவர்.

இவ் வைபவம் நிகழ்ந்தது நுபு’வ்வத் வந்து ஆறாவது ஆண்டிலாகும். அவ் வாண்டிலே மேற்கூறியவாறு ‘ஹ’ஜ்ரத் ஹம்‘ஜா தீ’னுல் இஸ்லாத்தில் சேர்ந்து கொண்டது அம்மக்கமா நகரின்கண் மிக்கதொரு பரபரப்பையே உண்டுபண்ணி விட்டது. ஆங்கிருந்த கு‘ப்’பார்க ளனைவரும் சகிக்கொணா ஆத்திரத்துள்ளும் க்ஷாத்திரத்துள்ளும் வீழ்ந்து வெதும்பிக்கொண்டு கிடந்தார்கள்; அவர்க ளெல்லாருள்ளும் அபூ’ஜஹ்ல் லென்பானே அளவுகடந்த ஆத்திரத்துடனே அதிகம் பொங்கிக்கொண் டிருந்தான். என்னெனின், ஹம்‘ஜாவின் வில்லினா லடிபட்டதே அவனுடைய உள்ளத்தின்கண் இன்னம் ஊடுருவிக் கொண்டிருந்தது. எனவே, அவன் எவ்வாற்றானும் இந்த மு‘ஹம்மதி’ன் இயக்கத்தை இனி இத் தரணியின்கண் தலைகாட்டவொட்டாது செய்துவிட வேண்டுமென்று காழிய வைரங்கொண்டு விட்டான். ஆகலின், அவன் ஒருநாள் எல்லாக் :குறைஷியரையும் அழைப்பித்து, அவர்க ளனைவர்க்கும் கோபத்தணல் கொழுந்துவிட் டெரியுமாறு அன்னவரின் உரோஷத்தை உயரக் கிளப்பிவிட்டான் :—

"'ஏ :குறைஷியர்காள்! நுங்கள் மூதாதையரின் மார்க்கம் மிகவும் இழிவு செய்யப்பட்டு வருகின்றது. நீங்கள் வணங்கும் சுவாமிகளெல்லாம் எல்லையில்லாது நிந்திக்கப் படுகின்றனர். நுங்கள் பிதாமகர்கள் அதிகம் பழிக்கப்பட்டு வருகின்றார்கள். இன்னம் உங்களுக்கு உரோஷம் வர வில்லையா? நீங்கள் தற்கொலை புரிந்து கொண்டேனும் உயிர்விடக் கூடாதா? ஒரு மனிதன் தன்னந்தனியாக நின்று நம்மனைவரையும் இத் துணை மட்டும் கேவலப் படுத்துகின்றான்! நாம் இதற்கொன்றும் செய்ய வியலாதிருப்பது நமக்கே மானக்கேடா யிருக்கவில்லையா? என்ன! உங்கள் வீரமும் தீரமும் இதுகாலை மரணித்தா போய்விட்டன? நாமென்ன பேடி களாகவா ஆய்விட்டோம்? மானத்தினும் உயிர் பெரிதா?* அரப் தேயத்து யுவர்காள்! இவ் வெட்கக்கேட்டை யொழிப்பது நுங்களால் முடியுங் காரியமல்லவா? நுங்களுள் எவன் அந்த மு'ஹம்மதி'ன் சிரத்தைக் கொய்துகொண்டு வருகின்றானோ, அவனுக்கு யான் ஒரு நூறு ஒட்டகமும், 2,500 தோலா தங்கமும் (அல்லது, 40,000 திர்ஹம் என்பர் மற்றுஞ்சிலர்) சம்மான மளிப்பேன் என்று இந்தப் பெரிய சபையின்கண்ணே பகிரங்கமாக உறுதி கூறுகின்றேன்."

அதுபொழுது அக்கூட்டத்தில்'ஆஜிராயிருந்த' நடுப்பிராய வயதுடைய ஓரிளங் காளையர் முன்வந்து, "நீர் கூறியவண்ணம் யான் செய்து முடிப் பேன்; ஆனால், நீர் கூறிய சபதத்தை நிறைவேற்றித் தருவதாக எனக்கு உறுதிசெய்து கொடுத்தல் வேண்டும்," என்று வேண்டினார். உடனே அன்னவரை அபூ'ஜஹ்ல் 'ஹரம் ஷரீ'புக்குள்ளே அழைத்துச் சென்று, அம்மக்காவின் மக்களால் பெரிதாகப் போற்றப்பட்டு வந்த ஹுபல்' என்னும் பெரிய விக்ரஹத்தின்முன்னே தான் கூறிய பிரதிக்ஞையை நிறை வேற்றி வைப்பதாகச் சத்தியம் செய்து கொடுத்தான். அதைக் கேட்டு, அச் சபதத்தை நிறைவேற்றச் சென்றவரும் அந்த மு'ஹம்மதி'ன் சிரத்தைக் கொய்யுமட்டும் தாமொரு சுகபோகத்தையும் மேற்கொள்வ தில்லையென்று எதிர்ச் சத்தியம் செய்துகொடுத்தார்.

இவ்வாறு சபதஞ்செய்தவர் யாரென்று நினைக்கின்றீர்கள்? இவர்தாம் ஆரம்பமுதலே இஸ்லாத்தின்மீது அதிக வைரம்முற்றிய பகைமை கொண் டிருந்தவர்; மிக்க வீரதீரமும், மிகக் கடுமையான முன்கோபமு முள்ளவர். பார்க்கப் பயங்கரமான தோற்றமுள்ள ஆஜானுபாஹு; அவரைப் பார்க் கினும் அவரது "தொடித்தலை விழுத் தண்டமே" அதிக பயங்கரமா யிருக்குமாம். சரீர வல்லமையிலும் மனோ தைரியத்திலும் இணையற்ற இளங் காளை. மிக்க முரட்டுச் சுபாவ முள்ளவர். தம்முடைய அடிமைப் பெண் ணொருத்தி இஸ்லாத்தில் சேர்ந்துவிட்டா ளென்று தெரிந்துகொண்ட வுடனே தமது கை ஓயுமட்டும் அன்னாளை அடித்துத் துன்புறுத்தியவர். மற்றவர்களையும் அன்னவர் ஈமான்மாறி விட்டனரென்று வாளா விடாது

* "மான மழிந்தபின் வாழாமை முன்னினிதே!" என்றான் ஒரு பழம்புலவன்.

பெரிதுந் துன்புறுத்தியவர். இவர் தம்மா லானதை யெல்லாம் செய்து பார்த்தும் தீ'னுல் இஸ்லாம் ஒழிவதைக் காணுது, இறுதியில் இவற்றிற் கெல்லாம் மூலவேராய் விளங்கிவந்த அந்த மு'ஹம்மதை'யே ஒரே மூச்சில் கொன்று தீர்த்து விடுவதென்று இதுபொழுது தீர்மானம் செய்துகொண்டார். இவர்தாம் அபூ'ஜஹ்லின் சகோதரர் மைந்தர் ;— க'த்தாபி'ன் சொந்தக் குமாரர் ; உ'மரென்னும் உயரிய திருநாமம் வகிக்கப்பெற்றவர்!

இந்த உ'மருக்கு அதுபொழுது வயது 33 ஆகியிருந்தது. இவர் நுபு'வ்வத்தின் காலத்திலே தமது 27-ஆவது பிராயத்தி லிருந்தா ரென்று சரித்திரம் சான்று பகருகின்றது. இப்படிப்பட்ட கொடிய முன்கோபியாகிய இந்த உ'மர் ஒருநாள் தமது வாளை உருவிக்கொண்டு நெருப்புப் பொறிபறக்கும் நேத்திரங்களுடனே நபிகள்பெருமானின் (சல்) சிரத்தைக் கொய்துவிட்டு வருவ தென்னும் ஒரே தீர்மானத்துடனேயே ச'பாவை நோக்கி வெளியில் புறப்பட்டார்.

" அற்றைநாள் கழிந்த பிற்றை அடலும றெழுந்து செவ்வேல்
கொற்றவர் அப்துல் லாதம் குமரரைக் கோறல் வேண்டி
முற்றிய மனத்தி னேடும் முரண்மதக் கரியை நேராய்
வெற்றிவெண் கதிர்வாள் தாங்கி நடந்தனர் விளைவ(து) ஓரார்."

— சீரு.

வழியில் தம் வர்க்கத்தைச் சார்ந்த நயீ'ம் இப்'னு அ'ப்'து'ல்லா(ஹ்) என்பவரைச் சந்தித்தபோது, அவர் உ'மரின் யோக க்ஷேமங்களைப்பற்றி விசாரித்தார் ; அதற்கு விடையாக உ'மர் மு'ஹம்மதி'ன் சிரத்தைக்கொய்ய வேண்டு மென்னும் 'நிய்யத்' துடனேதான் அன்று அவ்வுருவிய வாளுடனே சூளுறவு செய்து புறப்பட் டிருப்பதாகக் கூறினர். ஆனாலும், அதுவரை உ'மருக்கு அவருடைய சகோதரியான 'பாத்திமாவும், அவருடைய கணவரான ஸயீ'தி'ப்'னு ஸ'ஜத்' என்பாரும்* இஸ்லாத்தில் சேர்ந்திருப்பது தெரியாது. ஆகவே, அக்கடுங் கோபியான உ'மருப்'னுல் க'த்தாபை'(ரலி') அச்சமயம் ரஸூலுல்லாஹ் அவர்கள் தங்கியிருந்த அர்(க்):கம்(ரலி') அவர்களின் விடுதியை நோக்கிச் செல்லவொட்டாது திருப்பிட வேண்டுமென்னும் நன்னேக்குடனே, அதற்குமுன்னே தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவியிருந்த நயீ'ம் என்பவர் அவரை நோக்கி, " அங்கே செல்வது பிற கிருக்கட்டும் ; மு'ஹம்

* ஸயீ'தி'ன் தந்தையான ஸ'ஜத்' என்னும் இவர் 'ஹனீ'பிய்யீன் (சன்மார்க்கத்தைத் தேடியவர்கள்) கூட்டரவிலே சேர்ந்து இப்'ராஹீமின் மார்க்கத்தைத் தேடிக்கொண்டு ஷாம் இ'ரா:க் முதலிய தேயங்க ளெல்லாம் சுற்றித்திரிந்து இறுதியாகச் சமீபகாலத்தில் 'பாரானில் ஒரு நபி தோன்றப் போகின்றார் என்று கேள்வியுற்று, மக்கமா நகரின்கண்ணே வந்து, தம்முடைய காலத்தைக் கடத்திக்கொண் டிருந்தார். இந்த ஸ'ஜத்' உ'மருக்குச் சிற்றப்பர் மகனு யிருந்தார்.

மதைக் கொல்வது மறுபடி யாகட்டும். உம்முடைய குடும்பத்தினரை முதன்முதலில் உசாவிப் பார்த்தீரா? அவர்களுள்ளே எவரும் இதுவரை இஸ்லாத்தில் சேரவில்லை யென்பது நுமக்கு நிச்சயமாகத் தெரியுமா?" என்று கடாவினர். அதனைக் கேட்டவுடனே உ'மர் அடங்காக் கோபத்துடன், "யார் என் குடும்பத்தில் அவ்வாறு மதம்மாறிய துரோகி? அவன் பெயரைச் சொல்வீராயின், யான் இன்னே அன்னவனைத் தண்டிப்பேன்," என்று மிக்க ஆத்திராவேசத்துடனே அரற்றினர்.* அதற்கு நயீ'ம், "உம்முடைய சகோதரியான 'பாத்திமாவும், அவருடைய கணவர் ஸயீ'து'ம் இஸ்லாத்தில் சேர்ந்துவிட் டிருக்கின்றனரே! இஃதுமக்குத் தெரியாதா?" என்று மறுமொழி கூறினர். இதனைச் செவியேற்ற வுடனே உ'மர் இடியோசை கேட்ட நாகமேபோல் பெருமூச்சு விட்டார். அக்கணமே மு'ஹம்மதி'ன் மீதிருந்த ஆவேச முழுதும் 'பாத்திமாவின் வீட்டின் பக்கலிலே திரும்ப லாயிற்று.

அப்பொழுதே அதிவேகமாக அவர் தஞ் சகோதரியின் இல்லம்நோக்கிப் புறப்பட்டார். அதுசமயம் நபிபெருமானின் பிரிய சிஷ்யர்களுள் ஒருவரும், ஸயீ'தை'யும் 'பாத்திமாவையும் உ'மருக்குத் தெரியாமலே தீ'னுல் இஸ்லாத்திற்குத் திருப்பியவருமான க'ப்'ப'ாப்'(ரலி') அவர்கள் அப்பொழுது வெளியாயிருந்த 57-ஆவது ஸூரா "கரும்பொன்"– (அல் 'ஹதீ'த்') என்னும் அத்தியாயத்தின் ஒரு பகுதியை அவ் விருவருக்கும் ஓதிக் காண்பித்துக் கொண்டிருந்தார்.† உ'மர்(ரலி') உள்ளே க'ப்'ப'ாப்'(ரலி') ஓதிக்கொண்டிருந்த ஓசையைக் கேட்டுக்கொண்டே சென்று, 'பாத்திமாவின் வீட்டுக் கதவைத் தட்டினர். அது தெரிந்து, அக்கணமே க'ப்'ப'ாப்' உள்ளே சென்று ஓர் அறையினுள் ஒளிந்துகொண்டார். 'பாத்திமாவும் அந்தக் :குர்ஆன் ஸூரா எழுதிய கையெழுத்துப் பிரதியை மறைத்து வைத்துக் கொண்டார்; இதற் குள்ளே உ'மரும் உள்ளே வந்துவிட்டார். ஆங்கு வந்த அவர், அதற்குமுன்னே அவ்விடத்தில் எவர் என்ன ஓதிக்கொண்டிருந்தன ரென்று மிக்க வேகத்துடனே அதிகம் கடுகடுத்த தொனியில் கடாவினர். அங்கு அதற்கு முன்னம் அவ்வா றொன்றும் நடைபெற வில்லையென்று அவ்விரு

---

* இம்மாதிரியான வேறொரு முன்கோபியைக் குறித்துக் கம்பநாடன் இவ்வாறு கவிச் சித்திரம் தீட்டியிருக்கிறன்; கவனியுங்கள் :—

"என்றனனென் றலுமுனிவோ டெழுந்தனன்மண் படைத்தமுனி இறுதிக் காலம்
அன்றெனவாம் எனவிமையோர் அயிர்த்தனர்மேல் வெயில்கரந்த தங்கு மிங்கும்
நின்றனவும் திரிந்தனமீ நிவந்தகொழுங் கடைப்புருவம் நெற்றி முற்றச்
சென்றனவந் தனநகையும் சிவந்தனகண் இருண்டனபோய்த் திசைக ளெல்லாம்."

† ஆனல், இந்த ஸூரா "தா! ஹா!" என்னும் 20-ஆவது அத்தி. என்று இப்'னு ஹிஷாமும், இப்'னு ஸஅ'து'ம் கூறுவர். அல்லாமா ஷிப்'லீ நுஃ'மானீ அவர்களது அபிப்பிராயப்படி இஃது 57-ஆவது ஸூராவே யாகும். மௌ. மு'ஹம்மத'லீ முன்சொன்ன இருவரையே ஆதரிக்கின்றர்.

வரும் அதிக அமைதியுடனே மிருதுவாக மறுமொழி கூறினார்கள். அதைக் கேட்டு, உ'மருக்கு அடங்காக் கோபம் பிறந்து, தம் மைத்துனரைத் தூக்கிக் கீழேதள்ளி, அன்னவர் நெஞ்சின்மீது குந்தித் தாடியையும் பிடித்துக்கொண்டு, தமது உடைவாளை அவரது மென்னியில் சொருகிவிடப் பார்த்தார். அதைக் கண்ட 'பாத்திமா மேலே விழுந்து குறுக்கிட்டுத் தடுக்க முயன்றபோது, அவருக்கும் சில அடிகள் கிடைத்து, வதனமுழுதும் குருதிவெள்ள மாயிற்று; உடனே அம்மாது அவ் வடிமயக்கத்தால் கீழே வீழ்ந்து மூர்ச்சையடைந்து சோர்ந்துவிட்டார்.

பிறகு 'பாத்திமா மூர்ச்சை தெளிந்து, தமது ஈமானில் சிறிதும் தளர்வுறாது அதிக தைரியத்துடனும் ஒழுகிவடியும் உதிரத்துடனும் எழுந்து நின்று, உ'மரை நோக்கி, "ஏ அல்லா(ஹ்)வின் பகைவ! இனி எங்களுக்கென்ன அச்சம்? உண்மையிலே யாங்கள் இஸ்லாத்திலேதான் சேர்ந்துவிட்டோம். அல்லா(ஹ்)வைத் தவிர்த்து வேறே தெய்வமில்லை யென்றும், மு'ஹம்மத்' அவனுடைய திருத்தூத ரென்றும் உறுதிகொண் டுள்ளோம். இனி, உன்னாலானதைச் செய்துகொள்; யாங்கள் எதற்கும் அஞ்சோம்!" என்று பயமென்பது சிறிதுமின்றிக் கூறிநின்றார். 'பாத்திமாவின் தைரியத்தையும், அவரது மேனி முழுதும் வடியும் உதிரத்தையும் கண்டு உ'மருக்குச் சிறிது மனவிரக்கம் தோன்றுவ தாயிற்று; உடனே அவர் தம்முடைய சகோதரியை நோக்கி, அந்த மு'ஹம்மது'க்கு(சல்) ஆண்டவனால் அருளப்பட்டுள்ள :குர்ஆன் ஸூராவின் வாசகத்தைத் தமக்குச் சிறிது வாசித்துப் பார்க்கும் பொருட்டுத் தங் கரத்தினில் கொடுக்குமாறு வேண்டிக் கொண்டார். உ'மர் :குர்ஆனை இவ்வாறு வேண்டியதால், இவர் அக் :குர்ஆனை ஒருசமயம் எங்கு அவமதிக்கப் போகின்றாரோவென ஆதியில் அஞ்சினராயினும், பின்னர்ச் சோதரி 'பாத்திமா உ'மரின் மாட்டிருந்து வாக்குறுதியைச் செவ்வனே பெற்றுக்கொண்டு, பிறகு தம்மிடமிருந்த :குர்ஆன் ஷரீ'பின் 57-ஆவது ஸூராவின் ஏடுகளை உ'மரிடம் கொடுத்தார். அதன் தொடக்கம், "அருளாளனும் அன்புடையோனுமாகிய அல்லா(ஹ்)வின் திருநாமத்தால். வானங்களிலும் பூமியிலுமுள்ள அனைத்தும் அல்லா(ஹ்)வின் தூய்மையையே துதிக்கின்றன; இன்ன மவன் வல்லமை மிக்கவனாகவும் விவேகம் நிறைந்தவனாகவும் காணப்படுகின்றான்," என்று ஆரம்பமாகின்றது. அந்த அத்தியாயத்தின் சிறிது தூரத்தைப் படிக்குமுன்னமே அதிலுள்ள தெய்வீக உண்மை அவரது உள்ளத்தின்கண் ஊடுருவி ஆணிவேரே போல ஆழப் பதியத் துவக்கிற்று.— அல்'ஹம்து' லில்லா(ஹ்)!

'மறைமொழிப் பொருளைத் தேர்ந்து மானுடர் மொழியீ தன்றென்(று)
இறையவன் மொழியே யென்ன இதயத்தில் இருத்தி வேத
நிறைநிலை மனத்த ராகி நினைத்தவஞ் சகத்தைப் போக்கிக்
குறைபடும் குபிரைச் சூழ்ந்த குலத்தொடும் வெறுத்து நின்றார்,"—

என்றார் சீறாவுக் குடையார்.

'ஹ'ஜ்ரத் உ'மர்(ரலி') அதற்குமுன்னே நல்ல கல்விவாசனை யுள்ளவரா யிருந்துவந்ததனால், அந்த அல்லா(ஹ்)வின் (எதுகை மோனையுடன் கூடிய) திருவசனம் அவரது உள்ளத்தின்கண்ணே ஊடுருவிச் செல்வதாயிற்று. அவ் வத்தியாயத்தின் ஒவ்வொரு திருவாக்கியமும் அவரது ஹிருதயத் துள்ளே பசுமரத் தாணியேபோல் பதிந்து வருங்கால், அதன் 7-ஆவது திரு வாக்கியமாகிய "ஆமினூ பி'ல்லாஹி வரஸூலிஹி" —அல்லா(ஹ்)வைக் கொண்டும் அவனுடைய தூதரைக் கொண்டும் ஈமான் கொள்ளுங்கள்...... ......என்னும் தொடக்கத்தை யுடைய ஆயத்தை ஓதியவுடனே, 'ஹ'ஜ்ரத் உ'மர் அவர்கள் தமக்குத் தெரியாமலே "அஷ்ஹது' அன்லா இலாஹ இல்லல்லாஹு, வ அஷ்ஹது' அன்ன மு'ஹம்மத'ன் ரஸூலுல்லாஹி"— அல்லா(ஹ்)வைத் தவிர்த்து வேறே தெய்வம் இல்லை யென்று யான் அறுதி யிட்டு உறுதிகூறுகின்றேன்; மேலும், மு'ஹம்மத'வர்கள் அல்லா(ஹ்)வின் தூதரென்றும் யான் அறுதியிட்டு உறுதி கூறுகின்றேன்;— என்று உரக்கக் கூறி விட்டார். அங்ஙனே இத்தகைய சத்திய வேதத்திற்கு முற்றும் மாறாய் இதுகாறும் தாம் எதிர்ப்புச் செய்துவந்த அறியாமையை யுன்னியுன்னி அதிகம் மனங்கசிந் துருகலாயினார். — (எல்லாப் புகழும் அல்லாஹ் ஒரு வனுக்கேயாம்!)

அதுவரை மறைவிலே ஒளிந்துகொண் டிருந்த க'ப்'பா'ப்' அவர்கள் அமயம் பார்த்து வெளியில் வந்து, அந்த உ'மருக்கு இஸ்லாத்தின் தத்து வங்களைப் பற்றிப் போதிக்கத் துவக்கினார்; அதுவேயு மன்றி, :குர்ஆனி லிருந்து சில திருவாக்கியங்களையும் ஓதிக் காண்பித்தார். அவர் அவ்வாறு ஓதிக்கொண்டே செல்லச் செல்ல, அதனைக் கேட்டுக்கொண் டிருந்த 'ஹ'ஜ்ரத் உ'மரின் நயனங்களி னின்று தம்மை யறியாமலே உவகைக் கண்ணீர் ஓடிக்கொண்டே யிருந்தது. அக்கணமே அன்னவர் அல்லா(ஹ்) வின் அருட்பெருஞ் சோதியிலே கலந்துகொண்டார்; அவ்வளவோடு அவரது ஆர்வம் தணிந்திற் றிலது. ஆதலின், அப்பெரியார், அதுசமயம் நபிகள் பெருமானார் எங்குத் தங்கியிருந்தார்க ளென்பதை க'ப்'பா'பி'ன் வாயிலாய்த் தெரிந்துகொண்டு, நேரே ச'பா வென்னும் குன்றின் பாலிருந்த அர்(க்):கம் அவர்களது விடுதியை நோக்கிப் புறப்பட்டார். அங்கே சென்ற உ'மர் அர்(க்):கம்அவர்களின் வீட்டுக்கதவை ஓங்கித்தட்டினார்; அதுபொழுது உள்ளேயிருந்த ஒருவர் அக் கதவின் இடுக்குவழியே எப்படிப் பார்த்து, வெளியில் உறையிற் சொருகிய உடைவாளுடனே நின்றுகொண்டிருந்த உ'மரைக் கண்டு, அன்னவர் அவ் விடத்திற்குத் தீய எண்ணத்துடனேதான் விஜயம்செய்திருக்க வேண்டுமென்று தமக்குள்ளே எண்ணித் திகில்கொண் டார். அது கண்டு, ஹம்'ஜா அவர்கள் ஆங்கிருந்த முஸ்லிம்களை நோக்கி, "உ'மரை உள்ளே வரவிடுங்கள்! அவர் நல்லெண்ணத்துடனே வந்தால் நல்லதுதான்! இல்லையேல், அவரது கையிலிருக்கும் கட்கத்தைக்கொண்டே அவருடைய சிரத்தைக் கொய்து விடுகிறேன்!" என்று கூறியவுடனே

கபாடம் திறக்கப்பட்டது. உடனே உ'மரும் உள்ளே சென்ருர். அப்பொழுது எல்லாருக்கும் முன்னுக நபிகள்பெருமானு ரவர்களே எதிர் கொண்டு சென்று, உ'மரின் அங்கவஸ்திரத்துடனே அணைத்துப் பிடித்துக் கொண்டு, "ஏ க'த்தாபி'ன் குமாரரே! நீர் இங்கு வந்த காரணம் யாது? எல்லாம் வல்ல இறைவனது கோபத்திற் கிரையாய் நீர் மாண்டுபோகு மட்டும் அஞ்ஞானத்திலேயே இருந்துவரத் தீர்மானித் திருக்கின்றீரோ?" என்று அதிக தைரியமாக வினவியவுடனே அந்த உ'மர் உள்ளங்குன்றி, உடலம் நடுக்குற்று, மிக்க வணக்க ஒடுக்கத்துடனே, "யான் தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவவே வந்திருக்கின்றேன்!" என்று மிக்க தழுதழுத்த வார்த்தைகளால் குழறிமுடித்தார்.

"வரிசை நபியே முஹம்மதுவே வானோர்க் கரசே புவிக்கரசே
உரிய தனியோன் முதற்றூதே உமது கலிமா உரைப்படியே
அரிய மறைதேர்ந் தீமான்கொண் டறத்தா ரொழுகும் படிகருத்திற்
கருதி யிவணி லடைந்தேனென் றுரைத்தா ருமறு கத்தாபே,"—

என்றார் உ'மறுப் புலவரும். அங்ஙனே நபிகள் பெருமானு ரவர்கள் (சல்) தங்களுக்குத் தெரியாமலே, "அல்லாஹு அக்ப'ர்!" — ஆண்டவனே மகா பெரியவன்— எல்லாப் புகழும் அவனுக்கே உரியன! என்று உரக்கக் கூவினார்கள். அதனைச் செவியேற்ற வுடனே ஆங்குக் குழுமியிருந்த எல்லா முஸ்லிம் ஆண்பெண்களும் விம்மிதமுற்று, "அல்லாஹு அக்ப'ர்!" என்று பெருங் கூச்சலிட்டுக் கூவினார்கள். இதனால், அந்த அர்(க்):கம் வீட்டைச் சூழ்ந்துநின்ற அபீ':குபை'ஸ் முதலிய எல்லாக் குன்றுகளிலிருந்தும் அதே விதமான ஆச்சரியசப்தமே எதிரொலியாக ரீங்காரத்துடனே முழங்கிற் றென்று சரித்திராசிரியர்கள் செப்பி யிருக்கின்றார்கள்.

இது மெய்தான்! என்னெனின், அதற்கு முன்னே அபூ' ஜஹ்லின் சபதமும் உ'மரின் சூளுறவும் இப்படிப்பட்டன வென்பதை முன்னமே முஸ்லிம்கள் கேள்வியுற் றிருந்தார்கள். அன்றைத் தினம் அந்த உ'மர் உருவிய வாளுடனே ரஸூலுல்லாவின் சிரத்தைக் கொய்வ தென்னும் ஒரே தீர்மானத்துடனே வெளியில் புறப்பட்டுவிட்டா ரென்பதும் அந்த முஸ்லிம் களுக்குத் தெரிந்துபோகாம லில்லை; ஆனால், இடைவழியில் 'பாத்திமாவின் இல்லத்தில் நிகழ்ந்தது மட்டும் அவர்களுக்குத் தெரியமாட்டாது. இதுவுமல்லாமல், இதற்கு முன்னிரவிலேதான் எம்பெருமா னவர்கள், "ஏ ஆண்டவனே! இரண்டு உ'மருள்— (அபூ'ஜஹ்ல், உ'மர் ஆகிய இருவருள்) ஓர் உ'மரை இஸ்லாத்தி லாக்கித் தருவையாயின், அவரது உதவியையும் வைத்துக்கொண்டு எத்துணை அழகாக யான் உனது சத்திய சன்மார்க்கப் பிரசாரம் செய்வேன்!" என்று அல்லா(ஹ்)வினிடத்துக் குறையிரந் திருந் தார்கள் என்ப,

“ உலகி னிற்கரு தலர்க்கட லரியும றினைக்கொண்(டு)
அலத பூஜஹி லினைக்கொடு தீனிலை யதனைப்
பெல னுறும்படி யெனக்கருள் பிறிதிலை யெனவே
நலனெ டுந்துஆச் செய்தனர் மு‘ஹ(ம்)மது நபியே,”—

என்றார் சீறாப்புராணக் காரரும். அதன் பின்பு அற்றைப் பகலிலேயே இவ்வாறு இந்த உ’மர் இஸ்லாத்தைத் தழுவுவதென்றால், யாருக்குத்தான் இச்செய்தி ஒரு பேராச்சரியத்தை விளைத்திராதென் றெண்ணுகின்றீர்கள் ? எனவே, அம் முஸ்லிம்கள், “அல்லாஹு அக்ப’ர் !” என்று போட்ட பேரிரைச்சலால் அக்கம்பக்கத்தி லிருந்த குன்றுக ளனைத்தும் குமுறின வென்பதில் ஒன் றும் அசம்பாவித மில்லை யென்றே நாம் கூறத் துணிவோம். எனவேதான், விளையப்போவது இன்னதென் றுணராது திருநபியைக் கொல்ல அன்னவர் வாளையுருவிக் கொண்டு சென்றாரென் று உமறுப் புலவரும் அழகுபெறக் கூறியுள்ளார்.

நாளுக்கு நாள் இஸ்லாத்தில் மக்கள் அதிகமாய்க் கொண்டே செல்லு கின்றனர்; மற்றொருபுறம் தங்கள் கூட்டத்தி லுள்ளவர்களே அன்னாருக்குப் பாதுகாப்பையும் அளிக்கின்றனர் என்பதைக் கண்ட :குறைஷிக் கு‘ப்‘பார்கள் மனம்நொந்து கொதித்ததை மட்டுப்படுத்திச் சொல்லிவிடல் முடியாது. அக் :குறைஷிக் கு‘ப்‘பார்களுள் உ’த்ப’ா, ஆ’ஸ் பி’ன் வாயில் போன்றவர்களும் மனவேதனையே கொண்டவர்களா யிருந்தார்க ளெனினும், ஏழையான முஸ்லிம்களை இம்சிக்க மனமற்றவர்களா யிருந்துவந்தார்கள். ஆனால், உமையா பி’ன் க’ல‘ப், அபூ’ஜஹ்ல் (உ’ர்வா பி’ன் ஹிஷாம்) போன்ற கு‘ப்‘பார்கள் எப்படி யெப்படி யெல்லாம் முஸ்லிம்களை இம்சிக்க மார்க்க முண்டோ, அப்படியப்படி யெல்லாம் வழிதேடிக் கொள்ள எண்ணங் கொண்டவர்களா யிருந்து வந்தார்கள். இவர்களே நபிகள் நாயக மவர்களுக்கும் நாயகத்தைச் சார்ந்தவர்களுக்கும் கஷ்டங்களை உண்டு பண்ணுவதில் முதன்மையாய் நின்றிலங்கினார்கள்.

‘ஹ‘ஜ்ரத் உ’மர் அவர்கள் தீ’னுல் இஸ்லாத்தைத் தழுவியது ‘ஹ‘ஜ்ரத் ஹம்‘ஜா இஸ்லாத்தில் சேர்ந்தபின்பு மூன்றாவது தினத்திலாகும். உ’மர் இவ்வாறு மத மாறியவுடனே இஸ்லாத்தின் சரித்திரத்திலேயே ஒரு நூதன மாறுத லேற்பட்டு விட்டது. என்னெனின், இதற்கு முன்வரை முஸ்லிம்கள் பகிரங்கமாகத் தங்கள் மதக்கடமைகளை வெளியில் வந்து செய்ய அஞ்சிக் கொண் டிருந்தனர்; இனிமேல் அவ்வாறு செய்ய வேண்டிய ஆவசியகம் நேரிட மாட்டாது. இதுவரை எல்லாரும் அர்(க்):கம் அவர்களுடைய விடுதிக் குள்ளேயே இரகசியத்திலே தங்கள் காரியாதிகளை நிகழ்த்தி வந்தார்கள். இதையெல்லாம் உ’மர் இலக்ஷியம் செய்யக்கூடிய சுபாவ முடையவ ரல்லர். இவர் இஸ்லாத்தைத் தழுவியது இஸ்லாத்தின் தற்காப்புக் கொரு பெரிய அரண்போலவே காணப்பட்டது. மு‘ஹம்மதைக் கொல்லப் புறப்பட்ட

உ'மர் தாமே ஓரே வினாடியில் தீ'னுல் இஸ்லாத்தின் வசீகரண சக்தியால் வெல்லப்பட்டா ரென்னும் விஷயம் காட்டுத் தீயேபோல் அம் மக்கமாநகர் முழுதும் ஒரு நொடிப் பொழுதிலே நன்கு பரவிவிட்டது. இவ்வாறு அச் செய்தி பரவும் விஷயத்தை 'ஹ'ஜ்ரத் உ'மர் (ரலி') அவர்களும் அதிகம் விரும்பியே நின்றார்கள்.

இவ் வாச்சரியகர விஷயத்தைக் கேள்வியுற்ற :குறைஷிக் கு'ப்'பார்க ளெல்லாம் அங்கங்கே கூட்டங்கூட்டமாய் நின்று பேசிக்கொண் டிருந்தனர். நகரமெங்கும் இவ்வாறு ஓரே குழப்பமா யிருப்பதைக் கண்ட ஆ'ஸ் பி'ன் வாயி லென்பார், "இவ்வாறு ஏன் கூட்டங் கூட்டமாக நின்று பேசிக் கொண் டிருக்கின்றீர்கள் ?" என்று வினவினார். இதற்கு ஆங்குள்ளவர்கள், "உ'மர் முர்த்தத்' த்'ராய் (மதம் மாறி)ப் போய்விட்டார்," என்று கூறினார்கள். இதைக் கேட்டவுடனே ஆ'ஸ் பி'ன் வாயில், "அவர் அப்படி மதம் மாறிவிட்டால் என்ன கெட்டுப் போய்விட்டது? நான் அவருக்குப் பாதுகாப் பளித்துள்ளேன்," என்று கூறினார். அதன்பின்னரும் :குறைஷிக் கு'ப்'பார்க ளெல்லாம் உ'மருக்கும் ஏனை முஸ்லிம்களுக்கும் கஷ்டத்தைக் கொடுத்துக் கொண்டேதான் இருந்தனர். எனினும், 'ஹ'ஜ்ரத் உ'மர் அவர்கள் அதனையெல்லாம் மஹா தைரியத்துடனே எதிர்த்துநின்றே வந்தார்கள். குகைச் சிங்கத்தின் முன்னே குட்டிக் குறும்பாடுகள் என் செய்ய வல்லன ?

அதற்கு முன்னே நபிகள்திலகம் (சல்) மட்டும் தைரியமாகச் சென்று கஃ'ப்'ாவில் தொழுது கொள்ளுவார்கள். ஆனால், இனி எல்லா முஸ்லிம் களும் அங்கே சென்றுதான் ஆண்டவனை வணங்கவேண்டு மென்றும், சத்தி யத்தைக் கைக்கொண்ட நாம் ஒளித்துக்கொண்டு வணங்காமல் பகிரங்க மாகக் கஃ'ப்'ாவுக்குள் சென்றே வணங்கவேண்டு மென்றும் உ'மர்(ரலி') அவர்கள் கூறினார்கள். உடனே நபிகள் பெருமானும், அவர்களுடனிருந்த ஐம்பது தோழர்களும் வெளியில் புறப்பட்டார்கள்; நாயகத்தின் வலப் புறத்தில் ஹம்'ஜாவும் இடப்புறத்தில் உ'மரும் மெய்ப் பாதுகாவலராய்ச் சென்றனர். இந்த இரண்டு சிம்மங்களும் இவ்வாறு வெளிப் புறப்பட்ட தைக் கண்டு, அங்கங்கேயுள்ள :குறைஷிகள் ஆட்டுக்குட்டிகளே போல வெளியில் தலைகாட்டாது பதுங்கிக் கொண்டனர்; ஒருவரும் ஒருசிறிதும் வெளியில் மூச்சு விடவும் துணிந்தன ரில்லை. எனவே, அன்றுமுதல் அம் முஸ்லிம்க ளெல்லாரும் பகிரங்கத்தில் நின்றே கஃ'ப்'ாவில் தொழுதுகொள் ளத் துணிந்தனர். உ'மர் அவர்களுடைய தீரகுணமும், ஆழிய புத்தியும் வாக்குச் சாதுரியமும் அம்மக்கத்துக் :குறைஷியரை யெல்லாம் பிரேமை கொள்ளச் செய்வது வழக்கம். இராஜீய வியவகாரங்களிலும் இவர் அதிக அனுபவ முள்ளவர். இக்காரணம் பற்றியே :குறைஷியர்கள் அவ் வுமரையே அயல்நாடு சம்பந்தமாயுள்ள காரியாதிகளைக் கவனித்து வருமாறு நியமித்திருந்தனர். இவ்வாறு எல்லா விஷயங்களிலும் சிறப்

புற்று விளங்கும் உ'மர் அவர்களும், வீர தீர சூர பராக்ரமத்தையும் :குறைஷிகளின் நன்மதிப்பையும் பெற்றிருந்த ஹம்'ஜா அவர்களும் நந் தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவியதுதான் அம் மக்கத்துக்குக் கு'ப்'பார் களுக்கெல்லாம் அடிவயிற்றில் இடிவிழுந்ததே போல் இருந்துவந்தது. ஈதெல்லாம் நிகழ்ந்தது நுபு'வ்வத்வந்து 6-ஆவது ஆண்டிலாகும்.

ஆயினும், அன்று முதலேனும் அம் முஸ்லிம்களுக்கு நல்லகாலம் பிறந்துவிட்டதென்று நாம் முற்றிலும் சந்தோஷங் கொள்வதற் கில்லை. என்னெனின், இத்துணைச் சோதனைமட்டும் போதா தென்பதே அந்த ஆண்டவனது திருவுள்ளக் கிடக்கையேபோல் தென்பட்டது. மேற் கூறியவாறு உ'மரும் அதிக தைரியத்துடனேதான் தீ'னுல் இஸ்லாத்தில் பகிரங்கமாகச் சேர்ந்துகொண்டார்கள். வில்லை யேந்திய ஹம்'ஜா(ரலி') கொல்லப்போன உ'மர்(ரலி') எல்லாருமே இஸ்லாத்தின் வலையுள் சிக்கி விடுகின்றனர். இனியும் எப்படித்தான் அக் :குறைஷிகள் மனம்பொறுத் திருப்பார்கள்? என்ன வந்தாலும் இனி இறுதிவரை விடுவதில்லை யென்றே எல்லாரும் சூளறவு கூறிவந்தார்கள். இதற்குள்ளே வேறுபல கூட்டத் தினர்களும் சிறுகச் சிறுக இஸ்லாத்தில் சேர்ந்துகொண்டே சென்றனர். 'ஹப'ஷாவில் நஜ்ஜாஷீயின் பாதுகாவ லிருப்பதைக் கண்டே மக்கா வாசிகளுள் பலர் தைரியமாக இஸ்லாத்தைத் தழுவிவந்தனர். இவ்வாறு விட்டுக்கொண்டே சென்றால் தங்களுடைய நிலைமை பரமசங்கடத்திலே வந்து முடியுமென்று அக் :குறைஷிகள் உணர்ந்து கொண்டார்கள். ஆதலின், இனிச் சும்மா இருக்கக் கூடாதென்று தீர்மானம் செய்து, அதற்குத் தக்கது செய்வதே சாலச் சிறந்ததென்றும் கண்டுகொண்டார்கள்.

எனவே, நுபு'வ்வத் வந்து ஏழாவது ஆண்டில் (கி. பி. 616 இறுதி) அம் மக்கத்துக் கு'ப்'பார்க ளெல்லாரும் சேர்ந்து ப'னூ ஹாஷிம் வர்க்கத் தினர்மீது "ஜாதிக்கட்" டென்னும் சமூகக்கட்டுப்பா டொன்றைக் கட்டி, மு'ஹம்மதை'யும் அவர் குடும்பத்தாரையும் ஓரடைப்புக்குள்ளே வைத்து அப்படியே மடியுமாறு செய்து விடுவதுதான் சாலச் சிறந்ததெனத் தீர்மானித்தார்கள். ப'னூ ஹாஷிம்கள் தங்கள்பா லுள்ள மு'ஹம் மதை'க் :குறைஷிகளிடம் ஒப்புக்கொடாதவரை அவர்களை அக் கட்டுப் பாட்டுள் வைத்துப் பற்பல விதமாகவும் இம்சிப்பதென்றே கொடிய தீர்மானம் செய்துகொண்டார்கள். அக்கணமே அவர்க ளெல்லாரும் மன்ஸூர் பி'ன் இ'க்ரிமா என்பாரைக்கொண்டு ஒரு கட்டுப்பாட் டுடன் படிக்கையை எழுதுவித்துக் கஃ'ப'ாவின் வாயிலில் கட்டித் தொங்க விட்டார்கள். நபிகள் பெருமானாரை ஹாஷிம் வம்சத்தினர் கொணர்ந்து கொடுக்காதவரை அவர்களுடன் மற்றவர்கள் "நெருப்பு வழக்கம் நீர் வழக்கம்" வைத்துக்கொள்வது கூடாதென்றும், அவர்களுடனே பேசுவதுங் கூடாதென்றும், அன்னவருடன் கொடுக்கல் வாங்கல் ஒருவரும் செய்வதுங் கூடாதென்றும், தெருக்களிலும் கடை வீதிகளிலும் ப'னூ ஹாஷிம்கள்

சுயேச்சையாய் நடந்துசெல்ல விடக்கூடாதென்றும், அவர்கட்கு உணவுப் பொருள்களும் எட்டும்படி விடுவது கூடாதென்றும், ஏனை எவ்விதமான விவாக சம்பந்தமும் வைத்துக்கொள்வது கூடாதென்றும் மிகக் கடுமையாக அந்த தஸ்தாவீஜை எழுதிக் கொண்டார்கள். இதனால் என்ன விளையுமோ வென்று இருதிறத்தினரும் ஏக்கங்கொண் டிருந்தனர். இக் கட்டுப்பாட்டின் கடினத்தைக் கனப்படுத்துதற்காகவே அவர்கள் அச் சீட்டைக் கஃ'ப்'ா வின் வாயிலில் தொங்கவிட்டு வைத்தார்கள்.

இதனால் என்ன விபரீதம் ஏற்படக் கூடுமோவென் றெண்ணி, ப்'னூ ஹாஷிம்கள் மக்கமா நகரிலுள்ள தங்கள் விடுதிகளை யெல்லாம் துறந்துவிட்டு, அந்நகரின் கிழக்குப் பகுதியிலுள்ள ஷிஃ'பெ' அபீ'த்தாலிப்' (அபூ'த்தாலிப்' கிளையின் வாஸஸ்தலம்) என்னும் ஓர் ஒடுக்கமான நீண்ட தெருத்துர்க்கத்திற் குள்ளே குடிபோய்விட்டார்கள். அதற்கும் மக்கத்துக்கு மிடையிலே ஓரேஒரு சிறு வாயில்மட்டுமே இருந்த தல்லாமல் மற்றைப் பகுதிக ளெல்லாம் சுவர்களாலும் குன்றுகளாலுமே மறைக்கப் பட் டிருந்தன. மாறுகண் படைத்த அபூ'லஹபை' யல்லாமல் ஏனை ஹாஷிம்வம்ச மக்க ளெல்லாரும் அந்த ஷிஃ'பெ' அபீ'த்தாலி புக்குள்ளே குடிபோய் விட்டனர்; ஆனால், ஒன்றரைக் கண்ணனான அபூ'லஹப்' மட்டுமே அபூ'ஜஹ்ல் முதலிய எதிரிகளுடனே சேர்ந்துகொண்டு மக்கத்திலேயே வாழ்ந்து வந்தான். ஆனால், அபூ'த்தாலிப்' முதலிய ஏனையோ ரெல்லாருமே ஒன்றும் செய்து கொள்ள வியலாது, அப்புதிய இடத்திற்கே சென்று விட்டார்கள். மக்கத்து மனிதர்க ளெல்லாரும் ஏளனம் பண்ணுவார்க ளென்னும் ஏக காரணத்தினால்தான் அபூ'த்தாலிப்'வர்கள் இறுதிவரை இஸ்லாத்திலே சேரவில்லை யென்று கூறுவது ஒருபக்க லிருக்க, அன்னவர் அதுசமயம் மற்ற ப்'னூ ஹாஷிம்களுடனே சேர்ந்திருந்ததுதான் மிக்க நன்மையாய்க் காணப்பட்டது. என்னெனின், அபூ'த்தாலி ப்'வர்கள் நபிகள் திலகத்துக்கு அளவுகடந்த ஆதரவுகாட்டி வந்ததனால், அந்த ஹாஷிம் வர்க்கத்தினையே 'ஜாதிக்கட்'டுக் குள்ளே வைத்துவிடின், அவ்வர்க்கத்தி லுள்ள 'இஸ்லாமாகாதவர்க' ளெல்லாரும் நபிகள் பெருமானை விட்டுப் பிளவுபட்டு வேறாகப் பிரிந்துநின்று விடுவார்க ளாயின், அவ் வர்க்கத்தி னுள்ளேயே இருபெருங் கக்ஷிகள் தோன்றி, மற்றை மக்கத்து எதிரிகளால் மு'ஹம்மதி'ன் கக்ஷி சீக்கிரம் தோல்வியுறுமாறு செய்யப்படு மென்றே அவ்வாறு அந்தக் குஃ'ப்'பார்கள் சூழ்ச்சி செய்தார்கள். அதுசமயம் அபூ'த்தாலி ப்'வர்கள் முஸ்லிமாயில்லாது தமது பண்டைமார்க்கத்தி லிருந்ததனாலேயே அவ் வர்க்கத்தினருள் பிளவு ஏற்படாதுபோய், எல்லாரும் ஏகோபித்தே "அல் அமீன்" என்னப்பட்ட தங்குல மணிவிளக்கைத் தற்காக்க முன் வந்தனர். இன்றேல், அபூ'த்தாலிப்' முஸ்லிமா யிருந்திருப்பின், அவரது வார்த்தைக்கு அதுசமயம் எல்லா ப்'னூ ஹாஷிம்களும் கட்டுப்பட் டிருப்பார்க ளென்று உறுதியாய்க் கூறுவதற் கில்லையென்று சரித்திராசிரி

யர்கள் அபிப்பிராயம் கூறி யிருக்கின்றார்கள். எனவே, இது வாஸ்தவ மாயின், அவ்வாறு ஆண்டவன் செய்து வைத்ததிலும் ஒரு பெரிய பிரயோஜனம் இருந்த தென்றேதான் பற்பல சரித்திராசிரியர்களும் பகர்ந் திருக்கின்றார்கள்.

இவ்வாறு அபூ'ஜஹ்ல், அபூ'ஸுஃப்யான் ஆகியோர் செய்து வைத்த 'ஜாதிக் கட்டுப்பாட்'டால் அபூ'லஹபை'த் தவிர்த்து மற்றெல்லா ப'னூ ஹாஷிம்களும்— முஸ்லிம், முஸ்லிமல்லாதார் அனைவருமே— ஷிஃ'பெ' அபீ'த்தாலி பென்னும் ஒரு பத்திரமான ஸ்தலத்திற்குள்ளே சென்று தங்கிவிட்டார்களென்று மேலே கூறினோம். இந்த இடம் ப'னூ ஹாஷிம் குடும்பத்தவர்களுக்கே பரம்பரைப் பாத்தியதையில் இருந்துகொண் டிருந்தது. ஆங்குச் சென்றவர்கள் எப்பொழுது விடுவிக்கப்படுவார்க ளென்னும் விஷயம் ஒருவருக்கும் தெரிய மாட்டாது. மு'ஹம்மதை'(சல்) அவர்கள் :குறைஷியரிடம் காட்டிக்கொடுத்தா லல்லது, இந்தக் கட்டுப் பாட்டை அவர்கள் தளர்த்துவதா யில்லை. ஆதலின், அவ் விடத்திற்குச் சென்றவர்கள் தங்களுடனே கொண்டுசென்ற ஆகாராதிக ளெல்லாம் எத்தனை நாட்களுக்குக் காணுமென்பது எவருக்கும் தெரியாது. எனவே, அவர்களுடைய ஆகாரபதார்த்தங்க ளனைத்தும் ஆங்குச்சென்று சில தினங் களுக்குள்ளேயே இல்லாமலாய் விட்டன; அதன்பின்னர்ப் புதிய பதார்த் தங்கள் வாங்கும் பொருட்டு அந்த ப'னூ ஹாஷிம்கள் வெளியில் வந்து நகருக்குள் நுழைவது கூடாத காரியமா யிருந்துவந்தது. அவ்வாறு ஒரு முறை ஒருவர் வெளியில்வந்து ஓர் ஒட்டகக் கூட்டத்தைப் பின்பற்றிச் சென்று, அவர்களிடமிருந்து சில விக்கிரயப் பண்டங்களை விலைக்குக் கேட்டார். அதுபொழுது தூரத்தில் நின்று பார்த்துக் கொண்டிருந்த அபூ'ஜஹ்ல் ஏசுவானென்று அச்சங் கொண்டிருந்த அந்த ஒட்டகக் கூட்டத்தார் ப'னூ ஹாஷிம்களால் தாங்கமுடியாத அத்துணை அதிகமான விலையை வேண்டினார்; அதைக் கண்ட அம் மனிதர் ஒன்றும் வாங்க வியலாது வாளா தமதிருப்பிடம் திரும்பிவிட்டார்.

ஹிஷாம் பின் அ'ம்ர் மக்'ஜூமீ என்பவர் தமது வர்க்கத்துக்கே பெரியவராய் விளங்கினார்; இப் பெரியார் ஹாஷிம் வம்சத்துக்கும் நெருங்கிய பந்துவா யிருந்துவந்தார். எனவே, இவர் அக் கட்டுப்பாட்டைப் பொருட் படுத்தாது ப'னூ ஹாஷிம்களுக்கு உணவுப் பொருள்களை அடிக்கடி அபூ'ஜஹ்ல் முதலியோருக்குத் தெரியாது இரகசியமாக அனுப்பி வருவது வழக்கம். இவர் தமது ஒட்டகத்தின்மீது ஆகார பதார்த்தங்களை ஏற்றி, மாலைக் காலத்தில் சூரியாஸ்தமயத்துக்குப்பின் ஷிஃ'பெ' அபீ'த்தாலி பு'க்குள் நுழையும் வாயிலுக்கு நேரே சென்று, அவ் வொட்டகத்தை ஒருவருங் காணாதவாறு ஓங்கி ஓரடியடித்து விரட்டிவிடுவார்; உடனே அம்மிருகம் ஒரே ஓட்டமாக ஓடி ஷிஃ'பெ' அபீ'த்தாலி'புக்குள் நுழைந்து விடும். ஆங்குள்ளோர் பிறகு அதன்மீதுள்ள சாமான்களை யெல்லாம்

இறக்கிக் கொள்ளுவார்கள்; ஆனால், இவ்வாறு எப்பொழுதுமே செய்வதற்கு முடிவதில்லை. என்னெனின், எதிரிகளின் ஆட்கள் அத்துணை எச்சரிக்கையுடனே தங்கள் கட்டுப்பாட்டைப் பத்திரமாகப் பாதுகாத்து வந்தார்கள்.

ஒரு முறை க'தீ'ஜாவின் (ரலி') சகோதரர்மைந்தர் முறையிலுள்ள (பெரிய தந்தையின் பேரர்) 'ஹ(க்)கீம் இப்'னு ஹ'ஜாம் என்பவர் தம்முடைய வேலைக்காரன் மூலம் தம்முடைய அத்தையான 'ஹ'ஜ்ரத்தெ க'தீ'ஜா அவர்களுக்குச் சிறிது கோதுமை யனுப்பினார். அதனை வழியில் அபூ'ஜஹ்ல் மறித்துக்கொண்டு தக்ரார் செய்துவரும் வேளையில், அவ் வழியே சென்ற அபு'ல் ப'க்'தரீ குறுக்கிட்டு, "அவர் தம்முடைய அத்தைக் கனுப்பிய கோதுமையை நீ இடைவழியில் தடுப்பது கூடாது," எனச் சமாதானம் கூறி யனுப்பினார். இவ்வாறெல்லாம் இரகசியத்தில் அனுப்பப் படும் சிற்சில தான்யாதிகளை வைத்துக்கொண்டே ஆங்குள்ள மக்கள் எத்தனை நாட்களுக்குத்தாம் சுகஜீவனம் செய்து நடாத்தல் சாலும்?

இவ்வாருய கஷ்ட நஷ்ட ஜீவனத்தால் நாட்கள் பல கழிந்து, வாரங்களாயின; வாரங்களும் பல கழிந்து, மாதங்களாயின; மாதங்களோ பற்பல சென்று, வருடங்களும் சில கழிந்துவந்தன. ஆனால், எதிரிகளின் கட்டுப்பாடு விடுபட வழியில்லாமலே யிருந்துவந்தது. இதற் கிடையிலே ஷிஃ'பெ அபீ'த்தாலிபி'ல் பசிப்பிணியோ எல்லாரையும் எல்லைகடந்து துன்புறுத்தி வரத் தலைப்பட்டது. உண்பதற்கு ஒன்று மில்லாததால் பேரீச்சங்குருத்து முதலிய பல குழைகளையும் தழைகளையும் அவர்கள் ஆகாரமாகக் கொண்டுதின்று காலங்கழித்து வருவா ராயினார்கள். சிற்சில வேளைகளில் உள்ளே யிருந்து ஆகாரமில்லாத குழந்தைகள் வீறிட்டழுவதைக் கேட்டு, வெளியிலுள்ள கு'ப்'பார்கள் குதூகலங் கொண்டு, கைகொட்டிக் கூத்தாடுவார்கள். எனினும், சில மானுஷீக ஹிருதயங்கள் அதுசமயம் அவ் வழுகுரலைக் கேட்டு உருகாமலும் இருந்ததில்லை.

ஸஃ'தி'ப்'னு அபீ'வ:க்:காஸ் என்பார் ஒருநாள் இருளில் தரையில் ஒரு காய்ந்த தோற்றுண்டு கிடப்பதாகக் கண்டு, அதனை யெடுத்துவந்து, அலம்பியபின் அடுப்பிற் போட்டுச் சுட்டுப் பின்னர்த் தண்ணீரில் கரைத்துக் குடித்தார். இவ்வாறெல்லாம் அந்த ப'னூ ஹாஷிம்கள் ஓராண்டு, ஈராண்டல்ல, சுமார் மூன்றாண்டுகள் மட்டும் அத் தனியிடத்திலிருந்து கஷ்டப் பட்டு வந்தார்கள்.* அத்துணைக் காலமாகியும், அவர்கள் விடுபடுதற்கு வழியில்லாமலே யிருந்துவந்தது. ஆயினும், அவர்கள் அந்தப் பெரியபல துன்பங்களையும் துயரங்களையு மெல்லாம் ரஸூலுல்லாவின் பொருட்டு அதிக தைரியத்துடனேயே சகித்து வந்தார்கள்; அல் அமீன் மாட்டு அவர்கட் கெல்லாம் அளவுகடந்த அபிமான மட்டும் இருந்திராமற்

* மற்றுஞ் சிலர் ஈராண்டுகளென்றே கூறுவர்.

போயிருப்பின், முஸ்லிமல்லாதவர்களும் அவ்வாறு அத்துணைக் காலமட்டும் அத்துணைப் பொறுமையுடனே எதிரிகளின் இம்சைகளை யெல்லாம் சகித்துக் கொண் டிருந்திருக்க மாட்டார்கள்.

நபிகள் பெருமானும்(சல்) அவர்களைச் சார்ந்தவர்களும் ஷிஃ'பெ அபீ'த்தாலிபு'க் குள்ளேயே அந்த மூன்றாண்டுகள் மட்டும் இருக்கவேண்டிய அத்தியாவசியம் ஏற்பட்டிருந்தும், யாத்ரா மாதங்களில் மட்டும் நபிகள் திலகம் வெளியில் வந்து ஆங்குக் கூடும் ஆயிரக் கணக்கான யாத்திரிகர்கள் முன்னே தங்களுடைய சத்திய சன்மார்க்கத்தைப் பற்றிப் பிரசாரம் புரிந்து வருவார்கள். ஆனால், அதற்கும் இடங்கொடாது அபூ'ஜஹ்ல் அபூ'லஹப்' முதலியோர் இடையூறு செய்வார்கள். நபிகணயகர் செல்லுமிடங்களுக் கெல்லாம் அபூ'லஹபு'ம் நிழல்போலத் தொடர்ந்து சென்று சென்று, "இவனொரு பொய்யன்! புளுகன்! பைத்தியம் பிடித்தவன்! இவன் கொண் டாடும் நுபு'வ்வத் மெய்யா யிருப்பின், இவனுடைய குடும்பத்தினராகிய யாங்களெல்லேமும் இவனைப் பின்பற்றியிருக்க மாட்டோமா? இவனுடைய வார்த்தையைக் கேட்பவன் ஒன்றுக்குமுதவாமல் கெட்டுக் குட்டிச்சுவராய்ப் போய்விடுவான்," என்று கூறி, அக்கூட்டத்தின ரனைவரையும் கலைத்து விடுவான். இதனால் அம் மூன்றாண்டுகள் மட்டும் ப'னூ ஹாஷிம்களெல் லாரும் பட்டுவந்த கஷ்டங்களோடு மட்டும் நில்லாது, தீ'னுல் இஸ்லாத்தின் பிரசாரமும் அடியோடு தடைபட்டு நசித்துப் போனதே போலத்தான் வெளியில் தோன்றிற்று.

இவ்வாறு அம் முக்கிய மூவாட்டைப் பருவமும் கழிந்துவருங்கால், ஒருநாள் ஹிஷாம் பி'ன் அ'ம்ர் மக்''ஜூமீ என்பார், அ'ப்'து'ல் முத்தலிபி'ன் மகள்வயிற்று மைந்தராகிய 'ஜுபைர்' ரிப்'னு அபூ' உமையா என்னும் தௌஹித்திரரை விளித்து, "நீர்மட்டும் ஷட்ரஸத்துடனே பஞ்சபக்ஷண பரமான்னத்தை உண்டு உல்லாசமா யிருக்கின்றீரே? ஆனால், உம்முடைய மாமனிடமோ (அபூ'த்தாலி பி'டம்) உண்பதற்கு ஒருசிறிதும் தான்யமில்லை என்பது உமக்கு நன்கு தெரியுமே. அவர் அவ்வா றிருக்க, நீர் இவ்வா றிருப்பது நியாயந்தானா?" என்று வினவினர். அதைக் கேட்டு, 'ஜுபைர்' மனம் வருந்தி, "ஆம்! என் செய்வது? யானோ தமியனா யிருக்கின்றேன். என்னுடனே ஒரு மனிதனேனும் சேர்வதா யிருந்தால், நானே சென்று அக்கிரமமான அந்தக் கட்டுப்பாட்டுச் சீட்டைக் கிழித்தெறிந்து விடுவேன். இதுபொழுது என் செய்யட்டும்?" என்று மறுமொழி கூறினர். "அப்படி யானால் உம்முடனே யா னிருக்கிறேன்," என்று ஹிஷாம் கூறினர். அவருடன் ஹிஷாம் சேர்வதாய்க் கூறியவுடனே, அவ்விருவரும் அப் பொழுதே முத்'இ'ம் பி'ன் அ'தீ' என்பாரிடம் நெருங்கினார்கள். பிறகு அம் மூவருடன் அபு'ல் ப'க்''தரீ, இப்'னு ஹிஷாம், ஜம்ஆ' பி'ன் அஸ்வத்', அ'தீ' இப்'னு ஃகஸ் ஆகியவர்களும் சேர்ந்து கொண்டார்கள். எல்லாரும்

சேர்ந்து மறுநாள் கஃ'ப'ாவிற்குச் சென்று முடிவுசெய்து கொள்வதென்று தீர்மானம் செய்து கொண்டார்கள்.

அவ்வாறே மறுநாள் அவர்கள் கஃ'ப'ாவுக்குச் சென்றவுடனே 'ஜுபை'ர் ஆங்குக் கூடியிருந்த எல்லாரையும் நோக்கி, "ஏ மக்கத்து மனிதர்களே! இது தர்மந்தானு? நாமெல்லாரும் சகலவிதமான சுகபோகங் களுடனே நகரத்தில் காலங்கழித்து வருகின்றோம்; நம்முடைய சோதரர் களான ப'னூ ஹாஷிம்கள் மட்டும் நகருக்கு ஒதுக்குப்புறத்திலே அடை பட்டு அன்னந் தண்ணீ ரில்லாமல் அதிகம் அவதிப்படுகிறார்களே! இது நியாயந்தானு? ஆண்டவன்மீது ஆணையாக! அக்கிரமமான இந்த உடன் படிக்கையைக் கிழித்தெறியும்வரை யான் இனிச் சும்மா இருக்கப் போவ தில்லை!" என்று கர்ஜித்தார். உடனே அபூ'ஜஹ்ல் அவரை விளித்து, "இவ் வுடன்படிக்கையைக் கிழிக்க ஒருவராலும் ஒருகாலும் முடியாது," என்று எதிர்த்துக் கூறினன். அதைக் கேட்டு, ஜம்ஆ' பி'ன் அஸ்வத்', "நீ கூறியது பொய்யே யாகும். இதை எழுதியபோது நாங்களொருவரும் இதற்குச் சம்மதங் கொடுத்ததில்லையே!" என்று கூறிக்கொண் டிருக்கும் போதே, முத்இ'ம் பி'ன் அ'தீ' என்பார் தாவி, மேலே தொங்கிக்கொண் டிருந்த அந்த உடன்படிக்கையைப் பற்றிக் கிழித்தெறிந்து விட்டார். அதற்கு முன்னே அவ் வுடன்படிக்கையின் எழுத்துக்க ளெல்லாம் [அல்லா(ஹ்) என்பது தவிர்த்து] கறையானல் அரிக்கப்பட் டிருந்தது' என்றும் கூறுவர். இதன் சார்பாயுள்ள வேறுபல கதைகளுக்கெல்லாம் ஆதாரம் கிஞ்சித்தும் காணப்பட வில்லை. பிறகு முத்இ'ம் பி'ன் அ'தீ', அ'தீ' இப்'னு ஃகஸ், ஜம்ஆ' பி'ன் அஸ்வத்', அபு'ல் ப'க்'தரீ, 'ஜுபை'ர் ஆகிய ஐவரும் தங்கள் உடை வாட்களை யெல்லாம் உறைகளுக்குள்ளே போட்டுக்கொண்டு ஷிஃ'பெ' அபீ'த்தாலிபு'க்குள் நேரேசென்று, ஆங்கிருந்த ப'னூ ஹாஷிம்களை யெல்லாம் விடுவித்து, மக்காவுக்குள்ளே அழைத்துக் கொண்டு வந்துவிட்டார்கள். இது நிகழ்ந்தது நுபு'வ்வத் வந்து பத்தாவது ஆண்டாகும்.— (கி. பி. 619).

---

# அதிகாரம்—14

## ஆ'முல் 'ஹுஜ்னும்* அதன்பின் ':தாயி'பும்

" மேலும், நிச்சயமாகவே நாம் நுங்களைப் பயம், பசி, பொருள்கள், உயிர்கள், பழவர்க்கங்கள் (ஆகியவற்றின்) நஷ்டம் ஆகியவற்றி லிருந்து ஒரு சிறிதைக் கொண்டு சோதிப்போம்; மேலும், நீர் பொறுமையுட னிருப்பவர் களுக்கு நன்மாராயம் கூறக்கடவீர்!"— (2 : 155)

சென்ற அதிகாரத்தில் செப்பியிருப்பதேபோல் நபிகள் பெருமானும்(சல்) அவர்களுடனே ப'னூ ஹாஷிம் வம்சத்தினரும் ஷிஃ'பெ' அபீ'த்தாலிபு'க் குள்ளே மூவாண்டுமட்டும் தன்னந்தனியே அடைக்கப்பட்டுக் கிடந்தமை யால், தீ'னுல் இஸ்லாம் அதுகாலைச் சிறிதும் வெளியில் பரவவில்லை யென் பதை அந்தக் :குறைஷிக் கு'ப்'பார்கள் நன்கறிந் திருந்ததனால், இனியும் அவ்வாறே இஸ்லாத்தின் இயக்கம் அங்கில்லாது அறவே அழிந்தொழிந்து விடுமென்று அதிக ஆவலுடனே எதிர்நோக்கி யிருந்தார்கள். இக்காரணத் தினால்தான் அவர்கள், ஷிஃ'பெ' அபீ'த்தாலிபி'லிருந்து நபிகள் பெருமான் வெளியில் வந்ததன் பின்னர் அன்னவர்களுக்கு ஒன்றும் தொந்தரை கொடுக்காது சிறிதுபோழ்து மட்டும் வாளா விட்டுவந்தார்கள். இவ்வாறு பலநாள் கழியுமுன்னே அந்த நுபு'வ்வத் வந்து பத்தாவதாண்டிலேயே இரு பெரும் துக்க சம்பவங்கள் நபிகள் நாதருக்கு நிகழ்ந்து விட்டமையால், ஆங்கிருந்துவந்த எதிரிகள் அதன்பின்பு அதிகமாகத் தொந்தரை கொடுக்கத் துணிந்தெழுந்து விட்டார்கள்.

அதுசமயம் உத்தேசம் 85 பிராயத்தை எய்தியிருந்த அபூ'த்தாலிப'வர் கள் வியாதியுற்று மரணத் தறுவாய்க்கு வந்து விட்டார்கள். அதுபொழுது அவர்கள் தங்கள் கூட்டத்தின ரனைவரையும் அழைத்து, "நீங்க ளெல்லீரும் மு'ஹம்மதி'டம் மிக்க நேசப்பான்மையுடனே நடந்துவர வேண்டுமென்று யான் உங்களுக்கு உறுதியாகச் சொல்லுகிறேன். என்னெனின், அன்னவர் நம்வர்க்கத்தில் நம்பிக்கையைக் காப்பாற்றக் கூடியவரா யிருக்கின்றார்; இத்தேச முழுதுமே சத்திய சந்தர் இவர் ஒருவராகவே காணப்படாநின்றார். இவர் கொண்டுவந் திருக்கும் மதத்தை எவரது பக்ஷபாதமற்ற உள்ளமும் அங்கீகரிக்கின்றது," என்று கூறி முடித்தார்கள். அதுபொழுது நபிகள் பெருமானும் ஆங்குச் சென்றடைந்து, மரணப்படுக்கையி லிருந்த தங்கள்

---

* வியசனத்துக்குரிய வருஷம்— துக்கம் நேரிட்ட ஆண்டு.

பிரிய பெரிய தந்தையரை நோக்கி, "என்னரும் பெரிய தந்தாய்! தாங்கள் மிக்க நல்ல புத்திமதிகளைக் கொண்டு தங்கள் வர்க்கத்தினருக் கெல்லாம் மரணோபதேசம் புரிந்துவருகின்றீர்களே! ஆனால், இம் மரணத் தறுவாயில் தங்கள் சொந்த ஆன்மாவுக்காக ஒன் றும் பிராயச்சித்தம் செய்துகொள்ள மாட்டீர்களா? லா இலாஹ இல்லல்லாஹு"— (ஒரே ஆண்டவனைத் தவிர்த்து வணக்கத்திற்கு வேறெந்தத் தெய்வமும் இல்லை) என்றுமட்டும் மனமார ஒத்துக்கொண்டு வாயார உறுதி கூறுவீர்களாக!" என்று வேண்டிக் கொண்டார்கள். அதுபொழுது, அதற்கு முன்னே ஆங்கு வந்திருந்த அபூ ஜஹ்லும் அ'ப்'து'ல்லா ஹிப்'னு உமையாவும் அந்த அபூ'த்தாலிபை' நோக்கி, "நீங்களென்ன! உங்கள் அ'ப்'து'ல் முத்தலிபி'ன் பண்டை மார்க் கத்தை விட்டா அப்புறம் சறுகிவிடப் போகிறீர்கள்?" என்று எச்சரிக்கை செய்தார்கள். உடனே அபூ'த்தாலிபு'ம் ரஸூலுல்லாவை நோக்கி, "என தருமந்த தம்பி மைந்த! நீர் கூறுவதை ஏற்றுக்கொள்வதில் எனக்கொன் றும் ஆக்ஷேபணை யில்லை; அஃதுண்மை யென்பதையும் யானறிவேன். ஆனால், யான் இதுபொழுது அவ்வாறு கூறிவிடுவே னாயின், மரணத்துக் கஞ்சியே அவ்வாறு யான் கூறிவிட்டதாக என் வர்க்கத்தின ரெல்லாரும் என்னைப் பிறகெப்பொழுதுமே நிந்தித்துக்கொண் டிருப்பார்கள். ஆகலான், யான் அ'ப்'து'ல் முத்தலிபி'ன் மார்க்கத்திலேயே யிருந்து மரணமடைந்து போய்விடுகிறேன்!" என்று கூறிமுடித்தார்.

ஆனால், அபூ'த்தாலிபி'ன் உயிர்நீங்கும் பொழுது, அவர்களுடைய உதடுக ளிரண்டும் அசைவுற்றன வென்றும், அதுசமயம் அ'ப்'பா'ஸ் அவர் கள் (இவர் நபி பெருமானின் சிறிய தந்தையா யிருந்தும், அதுவரை தீ'னுல் இஸ்லாத்தில் சேர்ந்துகொள்ள வில்லை) தங்கள் செவியை அவ்வுதடுகளுக் கருகினில் வைத்துக் கேட்டுவிட்டுப் பிறகு நபிகள் திலகத்தை நோக்கி, "என் சகோதரர் மைந்த! நீர் வருந்தற்க. உம்முடைய பெரிய தந்தையார் நீர் சொல்லச் சொன்ன வசனங்களையே சொல்லிக்கொண் டிருக்கின்றார்," என்று கூறினார்கள். இவ் விஷயத்தை இப்'னு ஹிஷாம், அபு'ல் 'பித்'ா' முதலிய சரித்திராசிரியர்கள் ஆமோதித்தே எழுதியிருக்கிறார்கள். ஆனால், பு'க்'ாரீ போன்ற கிரந்தங்களின் ஆதாரங்களைக் கொண்டு அபூ'த்தாலி ப்'வர்கள் தங்கள் முன்னோரின் மார்க்கத்திலிருந்தபடியேதான் இவ்வுலகைத் துறந்தார்களென்று வேறுபலர் கூறுகின்றார்கள். என்னெனின், அப்பெரிய தந்தையார் தம் முன்னோரின் மார்க்கத்தி லிருந்தவண்ணமே இறந்து விடுவ தாகக் கூறியதைக் கேட்டு நபிகள் நாதரும், "என்னரும் பெரிய தந்தாய்! தாங்கள் தங்க ளிஷ்டமேபோல் நடந்து கொள்ளலாம். யானும் தங்களுக் காக அல்லா(ஹ்)வினிடம் மன்னிக்கக் குறையிரப்பேன். ஆனால், அவன் என்னைத் தடுத்துவிடுவா னாயின், அப்பொழுதுதான் என் பிரார்த்தனையை விடக்கடவேன்," என்று கூறியதாக மற்றொரு விஷயமும் சில மெய்யான கிரந்தங்களில் காணப்படாம லில்லை.

ஆயினும், அபூ'த்தாலி ப்'வர்கள் இஸ்லாத்திலே ஈமான்கொண்டதைப் பற்றி இருவிதமான அபிப்பிராயங்கள் இவ்வுலகினில் இன்றளவும் இருந்தே வருகின்றன. ஆனால், அல்லாமா ஷிப்'லீ(ரஹி) ஆதியோர், அபூ'த்தாலிப்' கலிமாச்சொல்லி இஸ்லாத்தை ஏற்றுக்கொண்ட விஷயம் விளக்கமாயில்லை யென்றாலும், அபூ'த்தாலிப்' அவர்கள் நாயக மவர்கள்மீது கொண்டிருந்த அத்தியந்த அன்பினால் எண்ணத் தொலையாத இன்னல்களை யெல்லாம் சகித்துக்கொண் டிருந்தார்க ளென்பதை யாரே மறுக்கவல்லார்? அத் துணைத் தூரம் பகிரங்கமாக ஒத்துக்கொண்டு சகல துறைகளிலும் உதவி செய்துவந்த பெரிய தந்தையார் தமக்குள்ளே நன்னம்பிக்கை கொண்ட பின்னரே உயிர் துறந்தார்க ளென்று கூறியிருப்பது மிகையாகாது. எனவே, யாமும் அதுவே சரியென்றுதான் ஏற்றுக்கொள்ளுகிறோம். என்னெனின், 'அ'ப்'து'ல் முத்தலிபு'க்குப்பின் அபூ'த்தாலி ப்'வர்களே அந்நகரில் பெருஞ் செல்வாக்குப் பெற்றிருந்தார்கள். அவர்கள் தங்கள் சொந்த மைந்தர்களைக் காட்டினும் நபிகள் பெருமானிடமே அளவுகடந்த அன்புபாராட்டி வந்தார் கள். அவர்கள்பால் வைத்திருந்த அபிமானத்தின் காரணத்தினால் எல்லாக் :குறைஷிகளுடைய விரோதத்தையும் சம்பாதித்துக் கொண்டதோடு நில் லாது, ஷிஃ'பெ' அபீ'த்தாலிபு'க் குள்ளும் தம்மினத்தவருடனே கூடிச் சென்று, மூன்று ஆண்டுகள்மட்டும் அதற்குள் ளிருந்தவாறே படமுடியாத இம்சைகளை யெல்லாம் பட்டுவந்தார்கள். எனவே, இப்படிப்பட்ட அன்பு கெழுமிய பெரிய தந்தையார் தமக்குரிய மரணத்தறுவாயில் அப்பிரிய மைந் தரின் இறுதிக் கோரிக்கைக்கு இடங்கொடுத்திருக்க மாட்டார்க ளென்று எண்ணுவதற் கில்லையென்று அந்த அல்லாமா ஷிப்'லீ நுஃ'மானீ அவர் களே கூறியிருக்கின்றார்கள். "அபூ'த்தாலிப்' தம்முடைய தம்பிமைந்தரின் நுபு'வ்வத்தில் நம்பிக்கை வைக்காதபோதே அவரின் பொருட்டுத் தம்மை யும் தம்முடைய குடும்பத்தினரையும் உட்படுத்திவந்த தியாகங்களே அவரது குணத்திசயத்தை மகா மேன்மை யுற்றதாகவும் தன்னல மற்றதாக வும் எண்பித்துக் காட்டுகின்றன. அதே சமயத்தில் அவை (நபி) மு'ஹம் மதி'ன் பரிசுத்தமான நல்லெண்ணத்தையும் ருஜூப்படுத்தி நிற்கின்றன. அபூ'த்தாலிப்' சுயநலமுற்ற ஓர் ஏமாற்றக்காரருக்காக அவ்வாறு நடந்து கொண்டு வந்திருக்க மாட்டார். இன்னம், அன்னவர் துருவிட்டு அறிந்து கொள்ளுதற்குரிய மார்க்கங்கள் அனந்தம் இருந்துவந்தன," என்று ஸர் வில்லியம் மூய்ரும் வரைந்திருக்கின்றார். "அபூ'த்தாலிப்' நபிகள் நாயகத்தின் நுபு'வ்வத்தில் நம்பிக்கை வையாம லிருந்தபோது, அவரைக் காப்பாற்றி வந்த கரிசனமானது மிகமிகப் பெரிதாகவே புலப்படாநின்றது; அதுவே மு'ஹம்மதி'ன் யோக்கியதைக்குப் போதுமான மஹாசாக்ஷியமாய் விளங்கா நின்றது. என்னெனின், அப்படிப்பட்ட குணத்திசயம் நிரம்பிய ஒரு பெரிய மனிதர்மீது அவருடைய தம்பிமைந்தர் அத்துணைப் பெரிய செல்வாக்கைப் பெற்றிராவிடின், அது முடிந்திராது," என்று கில்மன் துரையும் போற்றி

யிருக்கின்றார். அபூ'த்தாலிப்' மரணத்தின்போழ்து நபி பெருமானாரைக் காட்டினும் 35 ஆண்டுகள் முதிர்ந்திருந்தார்கள்.

அபூ'த்தாலிப்' மரணமடையுமுன்னே ஒருசமயம் வியாதியுற் றிருந்தார் கள். அதுபொழுது நபிகள்திலகம் தங்கள் பெரிய தந்தையாரைப் பார்க்கச் சென்றார்கள். அதுசமயம் அபூ'த்தாலிப்' ரஸூலுல்லாவை நோக்கி, "என் னரும் தம்பிமைந்த! எந்த இறைவன் உம்மைத் தன் தூதராக அனுப்பி யிருக்கிறானோ, அந்த இறைவனிடம் என்னுடைய வியாதி குணமடையும்படி நீர் பிரார்த்தனை புரியக் கூடாதா?" என்று வேண்டிக் கொண்டபோது, நபிபெருமானா ரவர்களும் அவ்வாறே ஆண்டவனிடம் பிரார்த்தனை புரிந்தக் கால், அபூ'த்தாலிபி'ன் வியாதியும் குணமடைந்தது. அதைக் கண்ட அபூ'த்தாலி ப்'வர்கள் நம் ரஸூலுல்லாவை நோக்கி, "உமதாண்டவன் உம்முடைய பிரார்த்தனைகளை அங்கீகரிக்கின்றா னெனத் தெரிகின்றதே!" என்று கூறியதைக் கேட்டு, நபிகள் திலகமும் அன்னவரை நோக்கி, "அந்த ஆண்டவன் சொல்லுகிறபடி நீங்களும் கேட்டு நடந்தால், அவன் உங்கள் பிரார்த்தனைகளையும் அங்கீகரிப்பான்," என்று மறுமொழி கூறினார்கள்.

இவ் வாறுத்துயர் நிகழ்ந்து சிலதினங்களுக் குள்ளே—(3 தினங்க ளென்றும் வேறுசிலர் கூறுவர்) மற்றொரு பொறுக்கமுடியாத, என்றும் மறக்கமுடியாத துக்கசம்பவம் நிகழ்ந்துவிட்டது. நபிகள் பெம்மானின்(சல்) ஆருயிர்த் துணைவியும் அருமைப்பிராட்டியுமாய் விளங்கிவந்த க'தீ'ஜா(ரலி') அன்னவர் ஏழ்மைத்தனத்துள் இருந்து வந்தக்கால் தம்முடைய ஐசுவரிய மனைத்தையும் அளித் துதவிய க'தீ'ஜா நாயகியார், அவர்களை எல்லாரும் பொய்யரென்றும் புளுகரென்றும் தூஷித்துவந்தபொழுது அவர்களுக்கு ஆறுதலும் தேறுதலும் ஊட்டிவந்த க'தீ'ஜாபிராட்டி, அந்த நபிபெருமா னுடைய காரியங்களுக் கெல்லாம் பக்கபலமாய் நின்றுதவிய க'தீ'ஜா பெருமாட்டி, எல்லாரும் இஸ்லாத்தை ஏற்குமுன்னே முதன்முதலாக ரஸூலுல்லாவின் நுபு'வ்வத்தில் முழுநம்பிக்கையுங் கொண்டு முன்னமே இஸ்லாத்தில் சேர்ந்துகொண்ட க'தீ'ஜத்துல் குப்'ரா, இன்னம் "உம்முல் மூமினீன்" என்று அழைக்கப்படும் முஸ்லிம் மாதாக்களுள்ளெல்லாம் தலை சிறந்த க'தீ'ஜா திலகம் ஆகிய லோகமாதாவை ஆண்டவன் தன்பால் அழைத்துக் கொண்டான். க'தீ'ஜா நாயகியார் தமது 65-ஆவது பிராயத்தில், நுபு'வ்வத் வந்து 10-ஆவது ஆண்டு ரமல'ான் மாதத்திலே இறைவனருளால் இம்மண்ணுலகைத் துறந்து அவ்விண்ணுலகை யடைந்தார்கள்.— (இன்னா லில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊ'ன்). இத்தகைய இருபெருந் துக்க சம்பவங்கள் நேர்ந்ததன் காரணத்தினால்தான் அந்தப் பத்தாவதாண்டிற்கு ஆ'முல் 'ஹுஜ்'ஜ்ன்— (துக்ககரமான ஆண்டு) என்று பெயர்வைக்கப்பட் டுள்ளது. அதன்பின்பு க'தீ'ஜா(ரலி') அவர்களுடைய தேகம் 'ஹஜூனில் அடக்கம் செய்யப்பட்டது. அதுவரை ஜனா'ஜாத் தொழுகை தொழும் வழக்கம் முஸ்லிம்களுக்குள் ஏற்படாததால், க'தீ'ஜா நாயகத்தின் மய்யித்

ஜு'ஜாத்தொழுகை யில்லாமலே அதுசமயம் அடக்கம் செய்யப்பட்டது. (ஆண்டவன் அவர்களது ஆவிக்கு என்றென்றும் சுவர்க்கானந்த சுக சாந்தியை அளித்தருள்வானுக!)

" முடிவி லாதவன் தூதுவர் முஹம்மது நபிக்கு
வடிவ மைந்தமெய்த் துணைவியாய் மகிதலத் திருந்து
கடிகொள் பொன்னக ரத்தினிற் கதிர்கொண்மா ளிகையிற்
குடிபு குந்தனர் கத்திஜா வெனுங்குலக் கொடியே!"—

என்றார் "சீறாப்புராணம்" பாடிய பெரியாரும்.

க'தீ'ஜா பிராட்டியாரிடம் (ரலி') நபிகள்திலகம் அத்தியந்த விசுவாசம் பாராட்டி வந்ததனால், அப் பெருமாட்டியாருக்குத் தம்முடைய ஆருயிர்ப் பர்த்தாவைப் பார்க்கினும் அதிகமான வயது பதினைந்து ஆகியிருந்தும், அவர்களுடைய காலத்திலே அம்மாது சிரோமணியை யன்றி மற்றெந்த மங்கையரையும் நம் நபிகள் பெருமானார் ஏறெடுத்தும் பார்த்தது கிடையாது. அக்காலத்தில் பலதாரமண மென்பதும், பல'வைப்பு' வழக்க மென்பதும் அந்நாட் டரபிகளிடம் சர்வ சாதாரணமாகவே அனுஷ்டானத்தில் இருந்து வந்தன. அவ்வா றிருந்தும், நபிகள்பெருமான் தங்கள் 50-ஆவது வயது மட்டும், சென்ற இருபத்தைந்து ஆண்டுகளாக அம் மாதரசியுடனேயே முழுமனத் திருப்தியுடனே சர்வசமாதான சுகவாழ்க்கையையே நடாத்தி வந்தார்கள். பிறகு ஒருசமயம் இவர்கள் 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் சித்'தீ':க் அவர்களுடைய செல்வப் புதல்வியைத் திருமணம் முடித்துக் கொண்டார்கள். கன்னிகை ஆ'யிஷா (ரலி') க'தீ'ஜா பிராட்டியை நேரில் கண்டதே யில்லை. அம்மாது சிரோமணியே இவ்வாறு இயம்பி யிருக்கின்றார்கள்: "யான் ஒருபோதும் க'தீ'ஜாவை நேரில் சந்தித்த தில்லை. என்னெனின், எனக்கு விவாகம் நடைபெறுதற்குப் பலகாலம் முன்னரே அப்பிராட்டியார் இறந்துபோய் விட்டார்கள். ஆனால், ரஸூலுல்லா அவர்கள் அப் பெருமாட்டியைப்பற்றி அடிக்கடி மிக்க கண்ணியமான முறையிலேயே பேசிக் கொண் டிருப்பார்கள். நபிகள்பிரான் ஆடொன்றை அறுப்பார்களாயின், அதில் பெரும்பாகத்தை க'தீ'ஜாவின் பெண்ணுறவினருக்குக் கொடுப்பதற் கென்று பிரத்தியேகமாக ஒதுக்கி வைப்பார்கள். இதைக் கண்டு மனம் பொறாது, ஒரு முறை யான் ரஸூலுல்லாவை நோக்கி இவ்வாறு கூறினேன்: 'இவ்வுலகு முழுதும் க'தீ'ஜா ஒருவர்தாம் ஸ்திரீரத்னம் போலும்?' இதைக் கேட்டவுடனே நபிகள் பெருமானார் அப் பெருமாட்டியின் குணாதிசயங்களை யெல்லாம் மிக விஸ்தாரமாக எடுத்துக் கூறி, 'யாதொரு கூச்சலும் குடும்பக்கவலையும் தொந்தரை கொடுக்காத அப்படிப்பட்ட மாளிகை யொன்றையே அம் மாதரசி சுவர்க்க லோகத்தில் பெற்றுக் கொள்வார்,' என்று கூறினார்கள்."

"க'தீ'ஜாவின் சோதரியாகிய ஹாலா பி'ன்த் கு'வைலித்' என்பவர் ஒரு முறை நம் ரஸூலுல்லாவைக் காண வந்தார்கள். அப்பொழுதும் காலஞ் சென்று போயிருந்த க'தீ'ஜாவைப் பற்றியே அவர்கள் அந்தச் சகோதரியிடம் அதிகம் புகழ்ந்து பேசிக்கொண் டிருந்தார்கள். அதனைக் கேட்டுக் கொண்டிருந்த யான் அழுக்காறு தாளாது, 'தாங்கள் அடிக்கடி அந்தப் பல்லுதிர்ந்து செவ்வீற்றுடனும் திரைந்து வலித்துப்போன வதனத்துடனும் விளங்கியிருந்த அந்தக் கிழக் :குறைஷிப் பெண்பிள்ளையைப் பற்றியே ஞாபகம் செய்து கொண்டிருப்பதில் யாது பயனுண்டு? ஆண்டவன் அவரது ஸ்தானத்தில் வேறு நல்ல அழகிய சிறு பெண்களைத் தங்களுக்கு அளித்திருக்க வில்லையா?' என்று சிறிது ஆத்திரத்துடனே வினவினேன்."

இவ்வாறு ஆ'யிஷா அழுக்காறு கொண்டு சிறுபிள்ளைத் தனமாய்ப் பிதற்றியபோதினும், ஆ'யிஷாவின் அழகும் புத்திக்கூர்மையும் இயற்கையாகவே நன்கு பிரதிபலித்த போதினும், ரஸூல் நாயகம் அவர்கள்மட்டும் எப்பொழுதும் க'தீ'ஜா பிராட்டியையே அதிகம் புகழ்ந்து கொண்டேயிருப்பார்கள். இவ்வுலகத்தில் இன்றுகாறும் தோன்றியிருக்கும் நான்கு பரிபூரணமான மாதுசிரோமணிகளுள் க'தீ'ஜாவும் ஒருவரென்று அடிக்கடி கூறிக்கொண் டிருப்பார்கள். மற்ற மூவரும் மூஸா நபி அவர்களைக் காப்பாற்றிய 'பிர்அ'வ்னின் மனைவியான ஆஸியா வென்றும், ஈ'ஸா நபி அவர்களின் தாயாரான மர்யம் என்றும், க'தீ'ஜாவின் திருவுதரத்தில் ரஸூலுல்லாவுக்குத் தோன்றிய 'பா(த்)திம(த்)து'ஜ் ஜு'ஜாஹ்ரா வென்றும் கூறுவார்கள்.

" வணக்கமும் அறிவுஞ் சேர்ந்த மனத்துறும் பொறையும் நல்லோர்
இணக்கமும் வறியோர்க் கீயும் இரக்கமும் நிறைந்த கற்பும்
குணக்கலை வல்லோ ராலும் குறித்தெடுத் தவட்கொப் பாகப்
பணக்கடுப் பாந்தட் பாரில் பகருதற் கரிய வன்றே!"—

என்றார் உ'மறுப் புலவரென்று யாம் முன்னமே கூறியுள்ளோம்.

"அவர் (மு'ஹம்மத்' நபி) இந்த விவாகம் செய்துகொண்ட பரோபகார மாதுடனே அளவுகடந்த அன்புடனும், அளக்கரும் அமைதியுடனும், அதிகமான திருப்திகரத்துடனும் வாழ்ந்துவந்தன ரென்பது நன்கு புலனாகின்றது; அம்மாதை மெய்யன்புடன், அன்னவரையே அதிகம் நேசித்துவந்தார். அவரது வயது மூர்க்க முழுதும் அடியோ டொழியும் வரை இத்தகைய முற்றும் ஆக்ஷேபத்துக்கிடமற்ற, முற்றும் சாந்தமுள்ள சர்வ சாதாரணமான மார்க்கத்தில் அன்னவர் வாழ்ந்துவந்ததே, அவரொரு வேஷதாரக் கள்வன் என்னும் சித்தாந்தத்தை நெடுந்தூரம் பாதிக்கின்றது. வானுலகி னின்று தமக்குத் தூது வருகிறதென்று அவர் கூறுமுன்னமே நாற்பதாவது பிராயத்தை யடைந்திருந்தார். அவருடைய எல்லா 'ஒழுங்

னேங்களும்'— மெய்யாகவும் பொய்யாகவும் கூறப்படுவன வெல்லாம்— அந்த நல்ல க'தீ'ஜா இறந்து, அவருக்கும் பிராயம் ஐம்பதானதன் பின்னரே தோன்றி யிருக்கின்றன ! அவருடைய 'பேராசைக' ளெல்லாம் அதுவரை ஒரு யோக்கியமான வாழ்க்கையையே நடாத்துமாறு தூண்டியன வாகவே காணப்படுகின்றன ; அவரது 'கீர்த்தி' யென்பது அவரை அறிந்துள்ள அண்டை அயலவரின் சாதாரண நல்லபிப்பிராய மாகவே யிருந்து, அது வரை போதுமானதா யமைந்திருக்கிறது. அவர் முன்னமே வயதுதளர்ந்து, அவரது வாழ்நாளின் சித்தவிகார ஆவேசமென்பது முழுதும் தணிந்து, சாந்தி யென்பதே இவ்வுலகம் அவருக் களிக்கக்கூடிய முக்கிய விஷயமாய் வளர்ந்தோங்கி வரும்வரை, அவர் 'பேராவ லென்னும் துறையில்' இறங்கி யதே யில்லை ; இன்னமும், அவரது பழைய குணுதிசயத்தையும் வாழ்க்கை யையும் பொய்ப்படுத்திக் கொண்டு, இனி யொருபோதும் தம்மால் அனு பவிக்க முடியாததைச் சம்பாதிக்கும் பொருட்டு வெறும் பொய்வேஷக்கார நடிப்பை மேற்கொண்டது மில்லை! என்னைப் பொறுத்தமட்டில் அதில் எனக்குச் சிறிதும் நம்பிக்கை யில்லை," என்று தாமஸ் கார்லைல் என்னும் ஆங்கிலப் பெரியார் அழகுற அறைகின்றார்.

எனவே, ரஸூல் நாயகமவர்கள்(சல்) மேற்கூறிய இருபெருந்தலைவர் களின் மரணத்துக்குப் பின்னர் எதிரிகளால் இன்னமும் கடுமையாகத் துன்புறுத்தப்பட்டே வந்தார்கள். அக் :குறைஷிகள் இனித் தங்களுடைய துஷ்டத்தனத்தை அடக்குவதற்கு அந்நகரில் ஆள் ஆருமில்லை யெனத் தைரியங் கொண்டுவிட்டார்கள். எனவே, ஒரு நாள் நபிகள் பெருமானார் அவர்கள் தெருவழியே போய்க்கொண் டிருந்தபோது, ஓர் அயோக்கியன் அவர்கள் தலைமீது மண்ணை வாரி யிறைத்தான் ; இதனால் நபிகள் திலகத் தின் சிரசும், முகமும், பிடரியும், முதுகும் மண்ணால் நிறைந்துவிட்டன. அவ்வாறு வாரி யிறைக்கப்பட்ட மண்ணுடனே நபிகள் நாயகமும் தங்கள் வீடுவந்து சேர்ந்தார்கள்; அங்கே அவர்களுடைய இளைய குமாரியான 'பா(த்)திமா பீ'பீ' தண்ணீர் கொணர்ந்து, அம்மண்ணினைக் கழுவித் தம் பிதாவின்மீது வைத்திருந்த அத்தியந்த அன்பினால் கண்ணீருகுத்து அழத் தொடங்கினார்கள். அதுபொழுது நபிபெருமா னவர்கள் தமதருமந்த புத்திரியை நோக்கி, " உன் பிதாவின் உயிரே, நீ அழாதே! அல்லா(ஹ்)வே உன் பிதாவைக் காப்பாற்றுவான் !" என்று தேறுதன்மொழி கூறினார்கள். இவ்வா றெல்லாம் அப் பகைஞர்கள் படுத்திவைத்த பாட்டிற்கோர் அளவு சொல்லி மாளாது. ஆனால், நபிபெருமானது நம்பிக்கைமட்டும் இதனை லெல்லாம் சிறிதும் துளக்குற வில்லை. இறுதியிலே சத்தியமே ஜயம்பெறு மென்பதில் அவர்களுக்குச் சுற்றும் சந்தேகம் ஜனித்ததே கிடையாது. இக் காரணத்தினால்தான் அவர்கள் எப்பொழுதும் 'ஹப'ஷாவுக்குச் சென்று, ஆங்கு அடைக்கலம் தேடிக்கொள்ளலா மென்னும் ஆர்வங் கொண்டும் நின்றதில்லை. ஆங்குச் சென்றால் தங்களுக்குத் தக்க பாதுகாப்புக் கிடைக்கக்

கூடு மென்ற நம்பிக்கை யிருந்திருக்கக் கூடுமாயினும், தங்கள் ஜனன பூமியி லேயே தங்கள் குழாத்தினரையே முதலில் தீ'னுல் இஸ்லாத்தில் திருப்பி விடலாமென்ற நம்பிக்கைமட்டும் அவர்கள் மனத்தைவிட்டு ஒருகாலும் அகன்றதே யில்லை.

நாலு பக்கத்திலும் காரிருள் சூழ்ந்திருக்கும் போதும், இப்பொழுது கொடும் பகைவர்களாய்த் திகழும் இந்தக் :குறைஷிகளே பின்னொரு சமயம் தம்முடைய ஆப்த நண்பர்களாய்த் திகழ்வார்க ளென்னும் ஒரு பிரகாச எண்ணம் மட்டும் அவர்களது அந்தரங்கத்தை விட்டு ஒருபோதும் அகன்றதே யில்லை. ஆயினும், அதுசமயம் மக்கத்து மறமாக்களிடம் தாங்கள் பிரசாரம் செய்வதை நிறுத்திக்கொண்டு, தென் கிழக்கிலுள்ள :தாயி'பின் பக்கல் தங்கள் முகத்தைத் திருப்ப நாடினார்கள். இந்தத் :தாயி'பென்பது மக்காவிலிருந்து தென்கிழக்கே 73 மைல் தூரத்தி லிருக் கிறது. ஆங்கும் விக்ரஹத் தொழும்பர்களே நிறைந்திருந்தார்கள்; அல் லாத் தென்னும் "பெரியசாமி" அங்கு விசேஷமாக வணங்கப்பட்டு வந்தது. ஆங்குள்ள மாக்கள் பெரும்பாலும் :த:கீ'ப் என்னும் வர்க்கத்தைச் சார்ந்த வர்களாகவே விளங்கிவந்தனர். அவர்களுக்கும், மக்காவிலுள்ள :குறைஷி களுக்கும் நெருங்கிய சம்பந்த முண்டு; அன்றியும், மக்கத்துக் :குறைஷி களுக்குத் :தாயி'பில் நிலபுலங்க ளெல்லாமும் அதிக முண்டு. அத்தி, திராக்ஷை, வாதுமை, மாதுளை, தாமரை முதலிய இனிய தாவரப் பொருள்க ளெல்லாம் ஆங்கு அதிகமாக உற்பத்தியாவ துண்டு. ஆதலின், அங்குள்ள வர்களேனும் தங்கள் வார்த்தைக்குச் செவிசாய்ப்பார்க ளென்னும் நல் லெண்ணத்துடனே நபிபெருமான் அப்பக்கம் தங்கள் கவனத்தைச் செலுத் தினார்கள்; அதைக் கொண்டு பிறகு மக்கத்தவர்களையும் மெல்ல மெல்ல இஸ்லாத்தின் பக்கல் திருப்பிவிடலா மென்று எண்ணினார்கள். ஆனால், மக்கத்துக்கும் :தாயி'புக்கும் இருந்துவந்த நெருங்கிய சம்பந்தத்தை உற்று நோக்குங்கால், அவ்வமயம் நபிகள்திலகம் செய்யத் துணிந்தது ஒரு பெருந் துணிச்சலான செய்கை யென்றே கூறியமைதல் வேண்டும். "இவ்வாறு மு'ஹம்மத்' :தாயி'புக்குச் செல்லத்துணிந்த பிரயாணத்தில் ஏதோ ஓர் உயரிய சாமர்த்திய மிக்க செய்கையுண் டென்றே புலப்படுகின்றது; தம் முடைய சொந்த ஜனங்களால் ஏளனத்துடனே வெருட்டியடிக்கப்பட்ட ஒரு தனிமனிதர், யூனுஸ் நைனவீ பட்டணத்துள் நுழைந்ததே போல, அல்லா(ஹ்)வின் திருநாமத்தைக் கொண்டு தைரியத்துடனே முன்னேறிச் சென்று, ஒரு விக்ரஹத் தொழும்பரான நகரத்தவரை விளித்து, தௌப'ா செய்யுமாறும், தமது பிரசாரத்துக்கு உதவிபுரியுமாறும் அழைக்கின்றார். இது தமது நுபு'வ்வத்தானது ஆண்டவனிடத் திருந்தே தோன்றிற்றென்று அவர் நம்பியிருந்த நம்பிக்கையின் உரத்தின்மீது ஒரு பிரகாசமான வெளிச் சத்தைச் சொரிகின்றது," என்று மூய்ர் துரையும் இறும்பூ தெய்தி எழுதி யிருக்கின்றார்.

அல்லா(ஹ்)வின் மீது வைத்த நம்பிக்கையோடு, அ’ப்’ப’ாஸ் அவர்களுக்கும் அந்தத் :தாயி‘பில் அதிகமான பூஸ்திதிகள் உண்டென்பதையும் நம் ரஸூல் நாயக மவர்கள் நன்குணர்ந் திருந்தார்க ளாதலின், தங்களுடைய வளர்ப்புப் புத்திரராகிய ஸ’ஜதி’ப்னு ஹாரி:தா(ரலி’) வுடனே ஆங்குப் புறப்பட்டுச் சென்றார்கள். ஆனால், அதனைப் பார்க்கினும் வேறொரு பொல்லாத இடத்தை அவர்கள் பொறுக்கி யெடுத்திருப்பது முடியாது. :தாயி‘பி லிருந்த :த:கீ‘ப்களுள் உ’மைர் வம்சத்தினரே பேர்பெற்ற வர்களாய் விளங்கி வந்தனர். அவ் வம்சத்துத் தலைவர்களாய அ’ப்’து’ யா லைல், மஸ்ஊ’த்’, ‘ஹபீ’ப்’ என்னும் மூவரிடத்தும் நபிகள்திலகம் சென் றடைந்தார்கள். அம் மூவருமே அவ்வூரின் முக்கியஸ்தர்க ளானமையின், அவர்கள் நபிகள் பெருமானது அழைப்புக்குக் கொடுத்த பதின் மொழியை ஈண்டு நன்கு கவனிப்பீர்களாக:— அம்மூன்று சகோதரர்களுள் முதல்வர் நம் ரஸூல் நாயகத்தை நோக்கி, “உம்மை ஆண்டவன் நபியாக அனுப்பிக் க:’ப’த்துல்லாவின் திரையைக் கிழித்து விட்டான்,” என்று பரிகாசமாகக் கூறினார். இரண்டாவது சகோதரர், “என்ன! மக்காவிலிருந்து :தாயி‘புக்கு ஏறி வருவதற்கு ஒரு கழுதையைக்கூடப் பெற்றிராத உம்மைத்தானா ஆண்டவன் தன் நபியாகப் பொறுக்கி யெடுத்தல் வேண்டும்? உம்மையல்லாத வேறு யாரும் அவனுக்கு இத்தரணியிலே அகப்பட வில்லையா?” என்று வேடிக்கையாக வினவினார். மூன்றாவது தம்பி நந் திருநபியவர்களை விளித்து, “யான் உம்மோடு எக்காரணத்தைக் கொண்டும் சம்பாஷித்தல் கூடாது. நீர் கூறுகிறபடி மெய்யாகவே நபியா யிருந்தால், நான் உம்முடன் பேசுவது ஒழுக்கத்திற்கு விரோதமாகும். ஆனால், நீர் சொல்வது பொய்யாயிருந்தால், என்னுடன் சம்பாஷிப்பதற்கு உமக்கு யோக்யதை யில்லை,” என்று தர்க்க முறைப்படி கூறி முடித்துவிட்டார்.




இவ்வாறு அம் மூவரும் சொல்லி மறுதலித்து விட்டதனால், அவ்வூரில் ஒருவரும் அதன்பின்பு இஸ்லாத்தில் சேரவில்லை. அன்றியும், :தாயி‘புக் குடையவர்கள் மக்காவாசிகளைக் காட்டினும் கல்நெஞ் சுடையவர்களாய்க் காணப்பட்டனர். உத்தேசம் பத்துநாள் மட்டும் நபிகள் திலகம் (சல்) :தாயி‘பிலே தங்கியிருந்து, ஆங்குள்ள பல நல்ல மனிதர்களுக்கும் இஸ்லாத்தின் படிப்பினையை எடுத்துப் போதித்துப் பார்த்தார்கள்; ஆனால், அதனாலொன்றும் பலிக்கவில்லை. “இவர் உண்மை நபியா யிருந்தால், ஏன் முதன் முதலில் தம்மூர் மனிதர்களை இஸ்லாத்தில் சேர்த்திருப்பது கூடாது?”

என்று எல்லாரும் வினவத் தொடங்கினர். அவ்வூரிலிருந்த மூன்று சோதரர்களும் தாங்கள் தீ'னுல் இஸ்லாத்தில் சேர்ந்துகொள்ள விரும்பாத தோடு மட்டும் நில்லாது, ஆங்கிருந்த ப'த்'மஆ'ஷீக் காவாலிகளையும் நபிகள் பெருமானுக்கு விரோதமாய்த் தூண்டி விட்டார்கள். அவர்களுடைய ஏளனமும், கைகொட்டி நகையாடலும் சகிக்கமுடியாது போய் நபிகள் பிரான் பத்து நாட்களுக்குப் பின்னே அந்நகரை விட்டு நீங்கி வெளிப்புறப் பட நாடினார்கள். அதுபோழ்து ஆங்குள்ள அயோக்கியத் தறுதலைகளும் போக்கிரிகளும் வீதியின் இருமருங்கும் வரிசையாக நெடுந்தூரமட்டும் நின்றுகொண்டு, இடையில் தெருவழியே சென்றுகொண் டிருந்த நபிகள் திலகத்தின் பாதத்தை நோக்கிக் கற்கொண்டெறிந்து காயப்படுத்தினார்கள். இவ்வாறு இருமருங்கும் நின்றுகொண் டிருந்த அவ்வூர்ப் போக்கிரிகள் எறிந்த கற்களால் நபிகள் பெருமானாரது பாதமிரண்டும் நைந்து புண் பட்டுப் பெருகிய குருதியால் அவர்க ளணிந்திருந்த பாதரக்ஷைகளும் செந் நிறமாக நனைந்துபோய் விட்டன.

"வஞ்ச கக்கொடி யவனுரைத் திடுமொழி வழியே
பஞ்ச பாதகர் நடந்தரும் பாதையைக் குறுகிக்
கஞ்ச மென்பத முஹம்மதைக் கடிதினில் வளைந்திட்
டஞ்ச லாதுகற் குணிலெடுத் தெறிந்துநின் றடர்ந்தார்,"—

என்றார் உ'மறுப் புலவரும்.

இவ்வாறு அடியுண்டு வலிதாளாது ரஸூலுல்லா(ஹ்) அவர்கள் தங்கள் பாதங்களை மறைத்துக் கொள்வான் வேண்டி நடுவீதியிலே தரையில் குந்தி விடுவார்க ளாயின், உடனே சில ப'த்'மஆ'ஷீகள் அவர்களுடைய தோட் பட்டையைப் பிடித்துத் தூக்கிவிட்டு, "எழுந்து நட! இங்கு நீ உட்காரக் கூடாது!" என்றுசொல்லி, மறுபடியும் காலிலே கல்லெறிவார்கள். இவ்வாறு மூன்றுமைல் தூரமட்டும் விடாது அடித்துத் துரத்திக்கொண்டே வந்தார் கள். இடையில் ஜைத்'தென்பவர் தமது ஞான பிதாவின் காலில் கல்லடி படாது காத்துக்கொள்ள முயன்றபோது, அவரது முகத்திலும் ஒரு கல் தாக்கி உதிரப்பெருக் கெடுக்கும்படி செய்துவிட்டது. இவ்வண்ணமாக மூன்றுமைல் தூரம்வரை அத் தறுதலைகளெல்லாம் துரத்தி வந்து விட்டுச் சென்ற பின்பு ரஸூலுல்லா அவர்களும், ஜைதி'ப்னு 'ஹாரி:தாவும் ஆங்கிருந்த திராக்ஷைத் தோட்ட மொன்றனுள் புகுந்து, அருகிருந்த பேரீச்ச மரநிழலிலே அயர்ந்து நெடிதுறப் படுத்துவிட்டார்கள்.

"ஊறு பட்டதன் வருத்தமும் பசியினுள் ளுலைவும்
மாறு பட்டவர் தொடர்ந்ததன் நடந்தமெய்ம் மலையும்
பேறு பட்டமுந் தந்தவன் அருளெனப் பெரிதின்
றேறு பட்டவண் இருந்தனர் திருநபி இரஸூல்,"—

என்றார் "சீறு"ப் பாடிய பெரும் புலவரும்.

அத் தோட்டம் மக்கா வாசியான உ'த்ப'ா பி'ன் ரபீ'ஆ'வுக்குச் சொந்தமா யிருந்தமையால், அவரது தோட்ட ஆரற்சுவருக்குள் எவரும் :தாயி'ப் வாசிகள் நுழையத் துணியாது,'வந்தவழியே தமதூருக்குத் திரும்பி விட்டனர். அந்த உ'த்ப'ா பி'ன் ரபீ'ஆ' தீ'னுல் இஸ்லாத்தில் இதுகாறும் சேராதவரா யிருந்தும் பெருந்தன்மையான நோக்கமும், தாராளமான மனப்பான்மையும் உடையவ ராதலின், அவர் நம் ரஸூல் நாயக மவர்களை மிக்க களைப்பான நிலைமையில் கண்டவுடனே தம்முடைய கிறிஸ்தவ வேலைக்காரனுன அ'த்'த'ாஸிடம் திராக்ஷைக்குலை யொன்றைக் கொடுத்து, அதனை ஒரு தட்டத்தில் வைத்து, நபிகள் பெருமானிடம் கொடுக்குமாறு அனுப்பி வைத்தார். அதனை ஏற்றுப் பின்பு நபிகள்திலகம் தங்களுக்குரிய வழக்கமேபோல் பி'ஸ்மில்லாஹ் (அல்லாஹ்வின் திருநாமத்தால்) என்று சொல்லிப் புசிக்கலாயினுர்கள். உடனே இவர்கள் அவ்வாறு கூறிய வார்த்தைகளின் பொருளென்ன வென்று அந்தக் கிறிஸ்தவ அடிமை ஆச்சரியத்துடன் வினவினுன். பிறகு ரஸூலுல்லா அவர்கள் அ'த்'த'ாஸை நோக்கி, "உம்முடைய நகர மெது? நீர் எச்சமயத்தைச் சார்ந்தவர்?" என்று வினவியபோது, அ'த்'த'ாஸ், "நான் கிறிஸ்தவச் சமயத்தைச் சார்ந்தவன். என் சொந்த ஊர் நைனுவா (அஸ்ஸீரியாத் தலைநகர்) என்னும் நகரமாகும்,' என்று விடை யிறுத்தார். இதைக் கேட்டதும், நபிகள், "சரிதான்! நீர் யூனுஸ் பி'ன் மத'ா என்னும் நல்ல மனிதரின் நகரத்தைச் சார்ந்தவரா யிருக்கின்றீர்," என்று கூறினுர்கள். இதைச் செவியேற்றவுடனே, அ'த்'த'ாஸ் "யூனுஸ் பி'ன் மத'ா வென்பவர் யார்? அவர் விஷயமென்ன வென்பது தங்களுக்குத் தெரியுமா? இஃதெங்ஙனம் தங்களுக்குத் தெரியும்?" என்று வினவ, திருநபி அவர்கள், "அவர் என்னுடைய சோதர ராவார்; அவர் நபியா யிருந்தார். யானும் நபியா யிருக்கிறேன்," என்று விடை யிறுத்தார்கள். இவ் விஷயத்தைக் கேள்வியுற்றதும், அ'த்'த'ாஸ் தஞ்சிரசைச் சாய்த்து மரியாதை செய்து, நபிகள் அவர்களின் பாதத்தையும் கரத்தையும் தொட்டு முத்தமிட்டார். இவ் விஷயத்தை உ'த்ப'ா பி'ன் ரபீ'ஆ' நெடுந் தூரத்துக் கப்பாலிருந்து பார்த்துக்கொண் டிருந்தமையான், அ'த்'த'ாஸ் திரும்பி வந்தவுடன், "ஏ பணிவிடைக்கார! நீ ஏன் அவர் கரத்தையும் காலையும் முத்தமிட்டாய்? உன் மார்க்கமானது அவர் மார்க்கத்தைவிட மிகமிக மேலானது. எனவே, எக்காரணத்தைக் கொண்டும் நீ உன்னுடைய மார்க்கத்தை விட்டுவிட வேண்டாம்," என்று கூறிக் கண்டித்து வைத்தார். ஆயினும், அ'த்'த'ாஸ், தீ'னுல் இஸ்லாத்தின் விசேஷத்தை எடுத்துக் கூறக்கேட்டு அப்போதே இஸ்லாத்தில் சேர்ந்து கொண்டார். ஆனுல், உ'த்ப'ா பி'ன் ரபீ'ஆ' மட்டும் கா'பிராகவே யிருந்து ப'த்'ருக்கு முன்னே இறந்துபட்டார்.*

* இவர்தாம் முன்னொரு முறை நபிபெருமானிடம் :குறைஷிகளுக்காகத் தூது சென்றவர்; 'வாய்பார்த்தான் பார்த்தான், வழிபார்த்தான் விழிகலங்க' என்னுமா போன்று நபிகள் திலகம் ஓதிய திருவாக்கியங்களைச் செவியேற்றுப் பிரமித்துப் போனவரும் இவரே,

எல்லாரும் கைவிட்டு, இம்சையுள் ஆழ மூழ்கிய இப்படிப்பட்ட தன்னந்தனியான சந்தர்ப்பத்திலே எம்பெருமானு ரவர்கள் (சல்) இறைவனிடமே தங்கள் முகத்தைத் திருப்பினுர்கள். "ஏலீ! ஏலீ! லாமா ஸபக் தானீ?" (என் தேவனே! என் தேவனே! ஏன் என்னைக் கைவிட்டீர்?) என்று முன்னொரு தீர்க்கதரிசி சிலுவையி லிருந்துகொண்டே கதறினு ரென்று அன்னவரின் சுவிசேஷம் செப்புவதே போன்று, நம்பெருமானு ரவர்கள் ஒன்றும் மனமுடைந்து கைசோர்ந்து மெய்தளர்ந்து கூறிவிட வில்லை. என்னெனின், இவர்கள் எப்படிப்பட்ட பொறுக்க முடியாத துன்பங்களை யெல்லாம் இறைவன் பொருட்டு இனிது பொறுத்துக் கொள்ளும் இயற்கை யான சுபாவ முள்ளவர்களாய் இலங்கிவந்தார்கள். எனவே, இவர்கள் இவ்வாறே ஆண்டவனிடம் அதுசமயம் குறையிரந்து கொண்டார்கள் :—

"ஏ என்னிறைவா! எனது பலஹீனத்தின் மென்மையைப் பற்றியும், எனது திக்கற்ற வறிய நிலையைப் பற்றியும், பொதுஜனப் பார்வையிலே எனக் கிருந்துவரும் அற்பத் தன்மையைப் பற்றியும் நின்பாலே யான் குறையிரந்து கொள்ளுகின்றேன். தயாளமூர்த்திகளுக் கெல்லாம் நீயே மகாதயாள முள்ளவனு யிருக்கின்றுய். ஏழைகளின் இரக்ஷகனும் நீயே யாவாய். எனவே, என்னை நீ எவரிடம் ஒப்படைக்கப் போகின்றுய்? என்மீது கோபாக்கினியுடனே தாவும் ஓர் அபிமானமற்ற எதிரியின் கைவயத்திலா? அல்லது என் விஷயத்தை முற்றும் மேற்பார்வை செய்து கண்காணிக்கக் கூடிய ஒரு நெருங்கிய நண்பரிடத்திலா? எனக்கு நினது பாதுகாப் பிருக்கவேண்டுமே யல்லது, மற்றப்படி வேறென்றுக்காகவும் யான் கிஞ்சித்தும் கவலைகொண்டே னில்லை. நினது திருமுக விலாசத்தின் ஜோதியிலே யான் பாதுகாப்புத் தேடுகின்றேன்; வானுலகத்தைப் பிரகாசிக்கச் செய்து எல்லாவிதமான இருள்களையும் பறக்கச் செய்யும் ஜோதி! இவ்வுலக காரியங்க ளனைத்தையும் மறுவுலக காரியங்களனைத் தையும் அடக்கியாளும் திராணி பெற்ற ஜோதி! யான் நினது கோபத்துக் குள்ளாகாமலும், நீ என்மீது கோபங் கொள்ளாமலும் இருக்கவேண்டு மென்பதே எனது கோரிக்கை யாகும். நின்னைக் கொண்டல்லது எனக்கு வேறு சக்தியும், சாமர்த்தியமும், கதியும் கிடையாவே!" இதுதான் அன்று அவர்கள் மனமுருகி ஆண்டவன் முன்னே செய்துகொண்ட 'துஆ' வாகும்.

எத்தகைய சந்தர்ப்பத்தில், எத்தகைய மனவெறுப்பு மில்லாது, எம்பிரானவர்கள் எவ்வாறு இறைவன்மாட்டுத் தங்களுக்குரிய குறைகளை யிரந்து கொண்டார்க ளென்பதை எவரே உணரவல்லார்! இதன் பெருமையை எதிர்மத வாதிகள் எங்ஙனம் உய்த்துணர்தல் சாலும்? எப்ப டிப்பட்ட 'கெட்டியான' எஃகின் குணம்படைத்த இன்ஸானது மனமும், இளஞ்சிறு ஸ்படிகமே போன்று தகர்ப்புண்டு தத்தளித்து நின்று, இனி என் செய்வோம்? என்செய்வோம்? இறைவனும் கைவிட்டு விட்டாற் போன்றே காணப்படுகின்றுனே! என்று ஏங்கி, அவ் விறைவன்மீது வைத்துள்ள

நம்பிக்கையிற் சிறிது தளர்வுற்று நாஸ்திகத்தின் பக்கல் ஒருசிறிதே சாரக் கூடிய அப்படிப்பட்ட சங்கடமான சந்தர்ப்பத்திலே நம் நபிகள் பெருமானு ரவர்கள் (சல்) எத்துணை உறுதிப்பாட்டுடனே இறைவனிடம் தங்கள்முகத் தைத் திருப்பினுர்க ளென்பதை இதன் வாசகர்களாகிய நீங்களே நிதானித்துப் பார்த்துக்கொள்ளக் கடவீர்களாக. :தாயி'ப் வாசிகள் படுத்திவைத்த அத்துணைப்பெரிய பாட்டிற்குப் பின்னே ஆண்டவனிடம் து'ஆ'க்கேட்க முற்பட்ட ஒருவர் உண்மையிலே பொய்யரா யிருந்திருப்பின், இப்படிப்பட்ட உயரிய உன்னத எண்ணங்களைக் கொண்டா அல்லா(ஹ்)வி னிடத்துத் தம்முடைய குறைகளைக் கூறி யிருப்பாரென் றெண்ணுகின் றீர்கள்? வேறெந்த நரனுலும் இவ்வுலகில் சகிக்கமுடியாத அத்துணைப் பெரிய அவமானத்தையும், அளவு கடந்த இம்சையையும் அவர்கள் வாய் பேசாது சர்வமௌனத்துடனே சகித்துக் கொண்டார்கள். வேறெந்த மனிதனும் பலமுறையும் தற்கொலை புரிந்துகொள்ளலா மென்று துணிந்து விடக்கூடிய அப்படிப்பட்ட பெரிய சங்கடங்களை யெல்லாம் நம் நபிகள் திலகம் மிக்க பொறுமையுடனே அதிக திறமையாகச் சகித்துக் கொண்டு வந்தார்கள். இதனை என்ன தெய்வபக்தி யென்று கூறுவது! இறைவனது நாட்டத்துக்கு என்ன அமைதியான தலைச் சாய்ப்பு! ஆயினும், அல்லா(ஹ்) வின் திருப்திமட்டும் இருக்கும்வரை அவர்கள் இன்னமும் எப்படிப்பட்ட துன்பத்தையும் சகித்துக்கொள்ளப் பின்வாங்காது முன்னணியிலேயே யிருக்கத் துணிகின்றுர்கள். என்னே இவர்களுக்கு இறைவன் மாட்டும், அவனது இஸ்லாத்தின் மீதும் இருந்துவந்த பேரபிமானமும், பெரியதொரு தியாகபுத்தியும்!

அதன்பின் நபிகள் நாதரும் ஜை'ஜது'ம் அத் தோட்டத்தை விட்டுப் புறப்பட்டு, மக்காவுக்குச் செல்லும் இடைவழியிலுள்ள நக்'லாவில் சில நாள் தங்கி யிருந்துவிட்டு, ஆங்கிருந்து கிளம்பி, 'ஹிராவிலே வந்து தங்கி விட்டார்கள். மக்கத்திலிருந்து கிழக்கே சுமார் 3 மைல் தூரத்திலுள்ள 'ஹிராவில் நபிகள் பெருமான் தாமதித் திருந்துகொண்டு, ஜை'ஜதை' யனுப்பி, மக்காவிற்குள் முத்இ'ம் பி'ன் அ'தீ'யின் பாதுகாப்பை நம்பித் தாங்கள் க்ஷேமத்துடனே திரும்பி வரலாமா வென்று கேட் டனுப்பி ஞர்கள். முதலில் மக்கமா நகரில் தங்களுக்குப் போதிய பாதுகாப் பின்மையை யுணர்ந்து அதை விட்டுத் :தாயி'புக்குச் சென்று, அங்கேனும் சில மனிதர்களைத் தங்கள்வயம் திருப்பலா மென்னும் நல்லெண்ணத் துடனே ஆங்குச் சேர்ந்தார்கள். ஆனுல், ஆங்கிருந்த போக்கிரிக் காவாலிகள் மக்கத்துத் தறுதலைகளையும் தங்கள் ப'த்'மஆ'ஷீத்தனத்தில் வென்றுவிட்டபடியால், அதைவிட்டு மீண்டும் மக்கத்துக்கே திரும்பிவர வேண்டிய ஆவசியகம் நேரிட்டு விட்டபடியால், இவ்வாறு ஜை'ஜதி'டம் சொல்லி யனுப்பினுர்கள். இதற்குள்ளே :தாயி'பில் நடந்த விருத்தாந்த முழுதும் மக்கத்துக்கு வந்து, ஆங்குள்ள :குறைஷ் குலக் கு'ப்'பார்கள்

நன்றாகக் கைகொட்டி நகையாடிக்கொண் டிருந்தார்கள். ஜை'ஜத்' மக்கா வுக்குள் சென்று, வழியில் தாம் சந்தித்த அல் அக்'னஸ், ஸுஹைல் என்னும் இருவரிடமும் விஷயத்தை விளக்கிக் கூறியபோது, அவர்கள் தம்மாலொன்றும் செய்யமுடியா தென்று கையை விரித்துவிட்டார்கள். ஆனால், முத்இ'ம் பி'ன் அ'தீ' என்பார்மட்டும் தமக்கு வழக்கமாயுள்ள பெருந்தன்மையுடனும், அளவுகடந்த தாராளச் சிந்தையுடனும் நபிகள் நாதரைத் தமது பாதுகாப்பின்கீழ் மக்காவுக்குள்ளே வரவேற்கத் துணிவு கொண்டு விட்டார். உடனே அவர் தம்முடைய குமாரர்களை ஆயுதபாணி களாய் 'ஹரம் ஷரீ'பில் நிறுத்திவைத்து விட்டுத் தாம்மட்டுமே நேரே 'ஹிராமலைக்குச் சென்று, ஆங்கிருந்த நபிகள் திலகத்தைத் தமது ஒட்டகத் தின்மீது ஏற்றிக் கொண்டு வந்தார். 'ஹரம்ஷரீ 'பருகினில் வந்தவுடனே முத்இ'ம் பி'ன் அ'தீ', "இதுபொழுது மு'ஹம்மது'க்கு யான் அபயமளித்



துள்ளேன்," என்று அதிக தைரியத்துடனே கூறினர் ; உடனே ஒருவரும் ஒன்றும் எதிர்த்துப்பேசத் துணிந்தன ரில்லை. அதுபொழுது நபிகள் பிரானும் நேரே கஃ'ப'ாவுக்குச் சென்று, ஆங்குச் செய்யவேண்டிய மதக் கடமைகளை முடித்துக் கொண்டவுடன், முத்இ'ம் பி'ன் அ'தீ'யும் அவருடைய குமாரர்களும் உருவிய வாளுடனே அங்கக் காவலர்களாய்ப் புடைசூழ்ந்து செல்ல, நபிகள் பெருமானாரும் க்ஷேமத்துடனே மக்காவின் கண்ணுள்ள தங்கள் இல்லம்வந்து மீண்டும் சேர்ந்தார்கள். அதுபொழுது அல்லா(ஹ்)வை யன்றி, வேறெவருமே அப் பெருமானாருக்கு ஆதரவில்லை அந்தப் பிறந்த ஊரிலே!

நபிகள் பெருமான் :தாயி'புக்குச் செல்லுமுன் 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ரின் திருக் குமாரியான பீ'பீ' ஆ'யிஷா (ரலி') அவர்களை, க'தீ'ஜா பிராட்டியார் காலமாயிய பின்பு சிறிது காலத்திற்குள் ளெல்லாம் மணமுடித்துக்

கொண்டார்கள். இவ் வைபவம் 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ரின் (ரலி') சொந்தப் பிரார்த்தனையின் மீதே நிகழ்வுற்றதென்று சரித்திராசிரியர்கள் கூறுகின்றார்கள். இத் திருமணத்துக்குப் பின்னேதான் அ'ப்'து'ல்லா(ஹ்) என்றிருந்த அவரது பண்டைப்பெயர் அபூ'ப'க்ர் (கன்னியின் தந்தை) என்று மாற்றி வைக்கப் பட்டது. பீ'பீ' ஆ'யிஷா(ரலி') அவர்கள் அதுசமயம் சிறுபிராய முள்ள ஓர் இளங் கன்னிகையா யிருந்தமையான், அவர்கள் தங்கள் தந்தையின் இல்லத்திலேயே தங்கியிருந்தார்கள்.* பிறகு நபிகள் நாயகம் மதீ'னாவுக்கு ஹிஜ்ரத் சென்று ஏழெட்டு மாதங்கள் கழியுமட்டும் பீ'பீ' ஆ'யிஷா அவர்கள் மக்காவிலுள்ள தங்கள் தாயா ரகத்தேதான் தங்கியிருந்தார்களென்று சரித்திரம் கூறுகின்றது.

ஆனால், 'ஹ'ஜ்ரத் ஆ'யிஷாவை நபிகள்திலகம் மணமுடிக்கு முன்னே ஸௌத'ா வென்னும் பெரிய அம்மையான ஒரு விதவையையே மீண்டும் விவாகம் செய்துகொண்டார்களென்று வேறுசிலர் கூறுகின்றார். எவ்வாறாயினும், :தாயி'பிலிருந்து திரும்பிவந்ததன் பின்னே ஸௌத'ா அம்மாளை நாயகம்(சல்) அவர்கள் மணமுடித்துக் கொண்டதுமட்டும் வாஸ்தவமாய்க் காணப் படாநின்றது. ஸக்ரான் பி'ன் அ'ம்ர் என்பவரும், அவருடைய மனைவியான ஸௌத'ா பி'ன்'த் 'ஜம்ஆ' அம்மா ளவர்களும் தீ'னுல் இஸ்லாத்தில் சேர்ந்து கொண்டதன் பின்னால் இருவரும் இரண்டாவது 'ஹப'ஷா ஹிஜ்ரத்தின்போது ஆங்குச் சென்று தங்கிவிட்டனர். ஆயினும், பிறகு பலர் மக்காவுக்குத் திரும்பி வந்தபோது ஸக்ரானும் ஸௌத'ாவும் உடன் திரும்பிவந்து, மக்காவில் சிலநாள் தங்கியதன்பின் ஸக்ரான் தமது வயது சென்ற மனைவியான ஸௌத'ாவையும், அ'ப்'து'ர் ர'ஹ்மான் என்னும் ஓர் ஆண் குழந்தையையும் மிக்க பரிதாபகரமான நிலையிலே விட்டு மரணமாய் விட்டார். அளவுக்கு மீறிய பருமனும், அதிக வயது முதிர்ச்சியும் அடைந்திருந்த அம்மாது ஸௌத'ா அவர்களை வேறுயாரும் மறுமணம் முடித்துக் கொள்ளவும் சம்மதியார்; ஆனால், அவர்களை வைத்து ஆதரிப்பவரும் வேறெவரும் அதுசமயம் ஆங்குக் காணப்பட வில்லை. அவருடைய சகோதரரும், தன் தந்தையுங்கூட அம்மாதை வைத்துக் காப்பாற்றக் கூடிய சக்தி வாய்ந்தவரா யில்லை. அன்றியும், அம்மாதும் அவருடைய கணவரும் தீ'னுல் இஸ்லாத்தில் சேர்ந்துகொண்டதே அவரது சோதரருக்குப் பிடிக்க வில்லை. இக் காரணத்தினால்தான் பிறகு தன் தமக்கையை ரஸூலுல்லா அவர்கள் திருமணம் முடித்துக் கொண்டார்களென்பதைக் கேள்வியுற்ற வுடனே, "இந்த அயோக்கியனுக்கா என் சகோதரியைக் கொடுப்பது?" என்று கூறித் தமது தலைமீது மண்ணைவாரி

* ஆ'யிஷாவுக்கு விவாகமாயபோது அவருக்கு வயது பத்தென்பதே மௌலானா மு'ஹம்மத'லீ, எம். ஏ., எல்எல். பி., அவர்களின் அபிப்பிராயம். எமது "அபூ'ப'க்ர் சித்'தீ':க்" என்னும் நூலில் இவ்விவாக வைபவ முழுதும் விரித்துரைக்கப் பட்டுள்ளது.

யிறைத்துக் கொண்டாராம்.* இத்தகைய வறிய கதியற்ற நிலையிலே அந்த ஸௌதா அம்மாளை யார்வைத்துக் காப்பாற்றுவது? இதற்காகத் தான் இறைவனுடைய திருநபி யவர்களே அம்மாது சிரோமணி யவர்களை மனப்பூர்வமாய் மறுமணம் முடித்துக்கொண்டார்கள். ஓர் அநாத விதவையை நபி பெருமானவர்கள் ஜீவனம்சத்தின் பொருட்டுத் தங்கள் ஆதரவின்கீழே வெறுமையாய் வைத்துக் கொள்வதைக் காட்டினும், இவ்வாறு பகிரங்கமாய் விவாகம் செய்து கொள்வது ஒரு மேன்மையான கௌரவமுள்ள விஷயமன்றென்று எண்ணுகின்றீர்கள்? எவரே, இவ் வயதுதளர்ந்து அதிகம் பருத்துள்ள விதவையை எம்பிரானவர்கள் சித்த விகார எண்ணங்கொண்டு மறுமணமுடித்துக் கொண்டார்க ளென்று கூறத் துணிவர்? காமாலைக் கண்ணருக்கே இவ்விஷய முழுதும் ஒரு காமுகரின் லீலையாகக் காணப்படும். ஆனால், 50 பிராயத்துக்கு மேற்பட்ட ஓர் உத்தமப் பக்தர் அதிகம் பருத்து வயதும் முதிர்ந்திருந்த ஒரு விதவை யைச் சித்தவிகார எண்ணத்துடனேதான் மணந்துகொண்டார்க ளென்பது மனிதசுபாவத்தின் தன்மையை யுணர்ந்த எவருக்கும் பொருத்தமா யிரா தென்பது திண்ணமேயா மன்றோ?

தாயிஃபி லிருந்து திரும்பி வந்ததன்பின்னர் நம்பெருமானார் மக்கத்து மறமாக்களிடம் ஏதும் பிரசாரம் புரிய முயற்சி யெடுக்காது, யாத்திரையி னிமித்தம் வெளியூரிலிருந்து மக்காவிற் குள்ளே வரும் மனிதர்களையும், உ'காள்' முதலிய சந்தைகூடு மிடங்களில் சேரும் மனிதர்களையும், வேறுபல கூட்டத்தார்களையும் விளித்தே தங்களுடைய இஸ்லாமிய பிரசாரத்தைச் செய்யத் தீர்மானித்துக் கொண்டார்கள். எனவே, இதன் பயனாய், ப'னூ ஆ'மிர், மஹாரிப்', 'ப'ஜாரா, 'கஸ்ஸான், முர்ரா, 'ஹனீ'பா, ஸுலைம், அ'ப்ஸ், ப'னூநல்'ர், கந்த'ா, கல்ப்', 'ஹாரிஃத் பி'ன் கஃ'ப்', அ''ஜ்ரா, 'ஹல'ரமா போன்ற பிரபல வர்க்கத்தின ரிடையேயெல்லாம் நபிநாயகம் அவர்கள் சென்று சென்று தங்கள் பிரசாரத்தைச் செய்தார்கள். ஆனால், அவ்வாறு உபதேசம் புரியும்பொருட்டு நபிபெருமானார் செல்லு மிடங்களுக் கெல்லாம் ஒன்றரைக் கண்ணனான அந்த அபூ'லஹப்'ம் தொடர்ந்தே சென்று, மு'ஹம்மத்' மதப் பாஷண்டராகி விட்டா ரென்றும், லாத், உ''ஜ்'ஜா ஆகிய தம் பண்டைச் சுவாமிகளின் கௌரவத்தை முழுதும் குறைத்துவருகிறா ரென்றும் தூஷித்துக் கொண்டே திரிவான். இவ்வாறு அரப் நாட்டிலுள்ள எல்லா வர்க்கத்தினரையும் நபிகள் திலகம் நெருங்கி நெருங்கித் தங்களுடைய பிரசாரத்தை யெல்லாம் செய்து பார்த்தார்கள். ஆனால், ஆங்காங்கும் அபூ'லஹப்'ம் பின்தொடர்ந்தே சென்று விஷமஞ் செய்து வந்தான். இதனால் அவரவரும் ரஸூல்நாயக மவர்களை அடியோடு

* இதனால், இவர் பிறகு இஸ்லாத்தில் சேர்ந்துங்கூடத் தாம் இழைத்த லஜ்ஜையால் ரஸூலுல்லா (ஸல்)வின் எதிரில் வாராது எப்பொழுதுமே தமது முகத்தைத் திருப்பிக் கொள்வாராம்.

வெறுக்கத் தொடங்கினர். சில கூட்டத்தினர் அடியோடு நபி பெருமானைத் திரஸ்கரித்து வந்தனர்; வேறுசிலர் அவர்களுடனே சேர்ந்துகொள்வதா யிருந்தால், நபிகள் திலகம் தங்களுக்கு வேறுசில நிபந்தனைகள் செய்து கொடுக்க வேண்டுமென்று கூறிக்கொண் டிருந்தனர். உதாரணமாக, ப'னூ ஜஹல் பி'ன் ஷீப'ான் என்னும் வர்க்கத்தினர்பால் நபிகள் பெருமான் சென்றார்கள்; அதுசமயம் 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ரும் உடனிருந்தார். ஆகவே, அக்கூட்டத்தின் தலைவரா யிருந்துவந்த ம'ப்ரூ:க் கென்பவரிடம் அபூ'ப'க்ர் அவர்கள், "நீர் எவரேனு மொரு நபியைப்பற்றிக் கேள்விப்பட்டிருக் கின்றீரா? அவ்வாறு கேள்விப்பட் டிருப்பீராயின், அந்த நபி இவரே யாவார்," என்று சொன்னார்கள். இதற்கு ம'ப்ரூ:க் நாயகமவர்களை நோக்கி, "ஏ :குறைஷ்குலச் சோதர! நீர் என்ன சொல்லுகின்றீர்?" என்று வினவினார். இதற்கு விடையில் நாயகம் அவர்கள், "ஆண்டவன் ஒருவனே; அதுவேயுமன்றி, யான் அவனுடைய நபியா யிருக்கிறேன்," என்றுகூறி, :குர்ஆன்ஷரீ'பின் 6: 152-ஆவது திருவாக்கியத்தையும் எடுத் தோதினார்கள்.* நபிகள்நாயகம் (சல்) கூறிய நன்மாராயங்க ளனைத்தையும் செவிதாழ்த்திக் கேட்டுக்கொண் டிருந்த பின்னர், இவை மிகவும் நன்றா யிருக்கின்றன வென்பதை அவர்கள் ஒருவாறு ஒத்துக்கொண்டபோதினும், தாங்கள் தங்கள் புராதன மார்க்கத்தை விட்டுவிடப் பிரியப்பட வில்லை யென்றும், தங்களுடைய பண்டைய வழியை ஒருகாலும் விடுவதில்லை யென்று பாரசீக மன்னனான கிஸ்ராவிடம் உடன்படிக்கை செய்து கொடுத் திருப்பதாகவும் கூறிவிட்டார்கள்.

பிறகு மற்றொரு கூட்டத்தினராகிய ப'னூ ஆ'மிர் என்னும் வர்க்கத் தினரிடம் சென்று நபிகள்திலகம் தங்கள் பிரசாரத்தைச் செய்து பார்த் தார்கள். நபிகள் பெருமானது அதிசாமர்த்தியமான பிரசார வன்மையைக் கண்ட அவ்வர்க்கத் தலைவனாய் விளங்கிய 'பர்ராஸ் என்பவன், இப்படிப் பட்ட காரியதரிசி யொருவர் தனக்குக் கிடைக்கக் கூடுமாயின், தான் அரப் தேசத்துக்கே அதிசீக்கிரம் அரசனாய் விடலா மென்று தன்னுள்ளே எண்ணினான். எனவே, 'பர்ராஸ் நாயக மவர்களை நோக்கி, "யாம் இப்பொழுது உம்முடனே சேர்ந்து உழைக்கின்றோம்; பிறகு நீர் உம் முடைய சத்துருக்களை யெல்லாம் வென்றுகொண்டு மேன்மை பெற்று ராஜ்யாதிகாரத்தையும் அடைவீ ராயின், உமக்குப் பின்னே அரசுரிமை

* "நீங்கள் ஆண்டவனுக்கு எதையும் இணையாக்காதீர்கள்; இன்னம், உங்கள் பெற் றோர்களிடம் பக்ஷம் பாராட்டக் கடவீர்கள்; இன்னம், உங்கள் குழந்தைகளை வறுமைக் காக அஞ்சிக்கொண்டு கொலை புரியாதிருக்கக் கடவீர்கள். உங்களுக்கும் அவர்களுக்கும் நாம் உணவளிக்கின்றோம். இன்னம், துராசாரங்களுக் கருகில், அவற்றுள் பகிரங்கமான வற்றிற்கும் அந்தரங்கமானவற்றிற்கும் அருகினில் நெருங்காதிருக்கக் கடவீர்கள்; இன்னம், நீதிக்காகவன்றி, அல்லா(ஹ்) விலக்கியுள்ள எந்த ஜீவனையும் கொல்லாதிருக்கக் கடவீர்கள்," என்பதே அவ்வாயத்.

யென்பது எமக்கே கிடைத்தல் வேண்டும்; இஃதுமக்குச் சம்மதமா?'' என்று வினவியது கேட்டு, "இஃது ஆண்டவன் வயமுளது!'' என்று நாயகம் விடையிறுத்தார்கள். இதைக் கேட்டவுடன், 'பர்ராஸ், "இது சமயம் யாங்கள் அரபிகளின் ஈட்டி அம்புகளுக்கு எங்கள் மார்பைக் காட்டித் தடுத்துப் பின்னே ஏனையவர் இந்த இராஜ்ய பரிபாலனத்தை யடைவதென்றால், எமக்கது சம்மதமில்லை. ஆகலின், யாங்கள் உமது இவ் வியக்கத்துக்குத் துணைபுரிவது முடியாது,'' என்று கூறி முடித்தான். இவ் வாறேப'னூ 'ஹனீ'பா வென்னும் கூட்டத்தினர் யமாமாவி லிருந்துகொண் டிருந்தார்கள். இன்னாரிடமும் நபியவர்கள் சென்று தங்கள்சுபச்செய்தியைச் சொன்னார்கள். ஆனால், அக்குழாத்தினர் நாயகமவர்களை வாயில் வந்தவா றெல்லாம் நன்றாய் வசைமொழிகூறி, நிராகரித்து விட்டார்கள். சிறிது காலத்துக்குப் பின், தானுமொரு நபியென்று பொய்ப்பறை யறைந்து நாயகத்துக்கே பெரிய விரோதியாய் நிமிர்ந்துநின்ற முஸைலம(த்)துல் க'த்'தாப்' என்னும் பொய்யன் இக்கூட்டத்தின் தலைவனானவன் என்பதை ஈண்டு ஞாபகத்திலே வைத்துக்கொள்ளுதல் வேண்டும்.

'பர்ராஸுடன் நிகழ்வுற்றது ஒரு சிறிய விஷயமேயாயினும், அதனால் ரஸூலுல்லாவின் மெய்ம்மைத்தன்மை மிகவும் நன்றாய்ப் பிரதிபலித்து நிற்கின்றதென்பது மட்டும் நிச்சயமாய்ப் புலப்படுகின்றது. சில எதிர்மத வாதிகள் அறைவதேபோல் நபிகள் திலகம் ஒரு பொய் வேஷதாரியா யிருந்திருப்பார்க ளாயின், ப'னூ ஆமிர் வர்க்கத்தினர் கேட்டுக்கொண்ட படி தற்கால சாந்தியாய் ஒரு வெறும் வாக்குறுதியைக் கொடுத்து, அக் கூட்டத்தின ரனைவரையும் தங்கக்ஷியில் சேர்த்துக்கொள்வதில் யாது தடை இருந்திருத்தல் கூடும்? ஆனால், பொய்வேஷம் போட்டு இவ்வுலக இன்ப சுகங்களை ஏமாற்றிப் பறிக்க வேண்டு மென்பது அன்னவர்களுக் குரிய அந்தரங்க எண்ணமாய் எப்பொழுதுமே இருந்துவர வில்லை யென்பது மட்டும் சத்தியமே யாகும். மனிதப் பிராணிகளை முன்னுக்குக் கொண்டு வரவேண்டு மென்பதே அவர்களுடைய ஒரே நோக்கமா யிருந்து வந்ததல் லது, வேறொன்று மில்லை; எனவே, இவ்வுலக இன்பமென்பது அவர்களுக் கொரு பெரிய இலக்ஷியமாய் எப்பொழுதுமே இருந்துவந்த தில்லை. ஆதலி னால்தான் அவர்கள் எப்பொழுதும் ஆண்டவன் மீதே சார்ந்திருந்தார்கள். அல்லா(ஹ்)வின் அருள்மட்டும் சமீபத்திலே வந்துவிட்ட தென்பதில் கிஞ்சித்தும் சந்தேகமில்லை; ஆனால், அஃது என்று கைக்குக் கிட்டுமென்பது மட்டுமே இதுவரை விளங்காம லிருந்துவந்தது.

அதுசமயம் ;குறைஷிகளுள் ஒருதிறத்தினர் ரஸூலுல்லாவின் இயக் கத்தை இனித் தலையெடுக்க வொட்டாது அடியோடு எல்லாவற்றானும் அமுக்கி நசுக்கிவிடுவதே சரியென மிகமிகக் கடுமையாகத் தீர்மானம் செய்து கொண்டனர். அம் மக்கா வாசிகளுள் 22 மனிதர்கள்வரை தங்கள் சொந்த அலுவல்க ளனைத்தையும் அடியோடு விடுத்து, நபிகள் திலகத்தை

அடக்கிவிட வேண்டுமென்னும் இப்புண்ணிய கைங்கரியத்தையே தந்தலை மீது போட்டுக்கொண்டு, அல்லு பகலாய் அதே வேலையாகவே அலைந்து திரிந்தனர். அவர்களுள் அபூ'ஜஹ்ல் என்பவன் மட்டும் நபிகள் நாயகம் செல்லுமிடங்களுக் கெல்லாம் பின்தொடர்ந்து சென்று, அவர்கள்மீது மண்ணைவாரி யிறைப்பதையே தன் முக்கியத் தொழிலாக மேற்கொண்டலைந் தான். இப்பொழுதுதான் அந்த அபூ'ஜஹ்ல் ரஸூலுல்லாவின் கழுத்தில் அழுகிய ஒட்டகத்தின் குடரை மாட்டினு னென்று ஷிப்'லீ நுஃ'மானீ எழுதுகின்றார்கள். அப்பெரியார் இவ் வைபவத்தைக் குறித்து இவ்வாறு வரைந் திருக்கின்றார்: ஒருநாள் நபிகள் திலகம் 'ஹரம் ஷரீ'பில் தொழுது கொண் டிருக்கும்போது அபூ'ஜஹ்ல் ஆங்கு நின்று கொண்டு, "ஆஹா! இதுவன்றோ நல்ல வமயம்! இப்பொழுது அழுகிப்போன ஒட்டகத்தின் குடரை எவர் என்னிடம் கொண்டுவந்து கொடுப்பார்? எவரேனும் கொணர்ந்து கொடுத்தால் மிக நன்றாக இவர் ஸுஜூத்' செய்யும்போது இவரது கழுத்திலே போட்டு வேடிக்கை பார்க்கலாமே!" என்று கூறினன். அதைக் கேட்டு அருகினில் நின்றுகொண் டிருந்த உ':க்ப'ா என்பவன் மிக்க குதூகலத்துடனே தான் அந்தக் கைங்கரியத்தை நிறைவேற்றி வைப்பதாகக் கூறி, உடனே ஓரிடத்துக்கு ஓடிச்சென்று, ஆங்கு அழுகிப்போய்க் கிடந்த ஒட்டகத்தின் குடலை அள்ளிக்கொண்டு ஓடிவந்தான். அதனை வாங்கி, அபூ'ஜஹ்ல் ரஸூல் நாயகத்தின் கழுத்திலே, அன்னவர்கள் ஸுஜூதி' லிருந்தபோதே மாட்டிவிட்டான். அதைக்கண்டு அருகினிலிருந்த :குறைஷிய ரெல்லாரும் கைகொட்டி அதிகம் நகையாடினூர்கள். இதனைக் கேள்வி யுற்ற 'பா(த்)திமா (ரலி') வீட்டிலிருந்து ஓடிவந்து, அவ்வாறு செய்தவர்களை ஏசிக்கொண்டே அவ்வழுகி நாற்றமெடுத்திருந்த குடரையெல்லாம் அப்புறப் படுத்தித் தந்தையாரையும் இல்லம் அழைத்துச் சென்றார். அதுபொழுது ரஸூலுல்லாவின் திருக் குமாரியான பா(த்)திம(த்)து'ஜ் ஜ'ஜாஹ்ரா அவர் களுக்கு வயது ஆறாயிருந்த தென்று அல்லாமா ஷிப்'லீ அவர்களே அறை கின்றார்கள். இச் சம்பவம் முன்னரே நிகழ்ந்துவிட்ட தென்று வேறுபல சரித்திராசிரியர்கள் கூறுகின்றார்கள்.

:குறைஷிகளின் துன்பங்களை யெல்லாம் பெரிதும் பொறுமையுடனே சகித்துவந்த க'ப்'ப'ாப்' பி'ன் இ'ர்த் என்னும் முஸ்லிம் ஒருவர் ஒருசமயம் ரஸூலுல்லா அவர்களிடம் வந்து, முஸ்லிம்களுக்குப் பெரிதும் இன்னல் விளைத்துவந்த அந்தக் :குறைஷிய ரெல்லாரும் நாசமடைந்து போமாறு ஏன் அல்லா(ஹ்)வின் திருத்தூதர் சபிப்பது கூடாதென்று வினவினர். இதனைச் செவியேற்றவுடனே நபிகள் திலகம் முகமுழுதும் சிவந்து, கண் களில் அனற்பொறி பறக்க, அம்முஸ்லிம் சிஷ்யரை நோக்கி, "நீர் இவ்வாறு கூறுவது சரியன்று! நானும் அவ்வாறு செய்யத் துணியேன்! உமக்கு முன்னே இவ்வுலகில் எப்படிப்பட்ட மனிதர்களெல்லாரும் காலஞ் சென்று போயிருக்கின்றன ரென்பதை நீர் அறியீரோ? அவர்களுள் சிலர் நிற்க

வைத்துச் சிரச்சேதம் செய்யப்பட் டுள்ளார்; வேறு சிலர் உடல்நெடுகப் பிளக்கப்பட் டுள்ளார்; எனினும், அவர்களெல்லாரும் அவற்றையெல்லாம் பொறுமையுடனே சகித்துக்கொண்டு தங்கள் காரியத்தின்மீதே கண்ணு யிருந்திருக்கிருர்கள்.* எனவே, நமக்கும் அவ் வாண்டவனே வெற்றி யளிப்பான். ஈதெல்லாம் நமக்குக் கிட்டப்போகும் வெற்றிக்கு எம்மாத்திர மாகும்! ஸன்ஆ’விலிருந்து ஹல’ரமௌத் வரை ஒருவன் ஒட்டகத்தின்மீது நிர்ப்பயமாக ஏறிச் செல்லக்கூடிய அப்படிப்பட்ட அச்சமற்ற கால மொன்றை ஆண்டவன் நம் கண்முன்னே காண்பிக்கப் போகின்ருன்!” என்று கூறி முடித்தார்கள்.

இந்தத் தீர்க்க தர்சனம் மெய்யாகவே நிறைவேற்றப் பட்டதா? இல்லையா? என்பதை நீங்களே இச்சரித்திர முடிவில் நன்கு தெரிந்துகொள் ளப் போகின்றீர்கள். என்னே இறைவனது மறைவான சக்தி!

---

# அதிகாரம் —15

## அ’:கப’ாவின் அறுதியும் அல் மி:’ராஜும்†

> “ இன்னம், நும்மை அதினின்று— (மக்காவினின்று) அப்புறப்படுத்துவான் வேண்டி இப்பூமியை விட்டு நும்மை நிலைகுலையச் செய்துவிட வேண்டுமென்று அவர்கள் நிச்சய மாய் உத்தேசித்திருந்தார்கள்; இன்னம், அப்பொழுது அவர் கள்— (கு’ப் ‘பார்கள்) உமக்குப் பின்னே ஒருசிறிது (காலமே) அன்றி (அதிகம்) தரித்திருக்க மாட்டார்கள்.”— (17 : 76.)

**நா**ம் முன்னம் கூறியுள்ளவாறு நபிகள்திலகம் (சல்) ’:தாயி‘பிலிருந்து திரும்பி வந்ததிலிருந்து அந்த அரப் நாட்டிலுள்ள ஒவ்வொரு கூட்டத்தினரிடத்தும் போய்ப் போய்த் தங்களுடைய உபதேசத்தை இடைவிடாது ஓதிவந்தார் கள். மேலும், மக்கத்துக்கு வெளியூர்களிலிருந்து யாத்திரையாக விஜயம் செய்பவரிடத் தெல்லாமும் சென்று தங்களுக்கு இறைவனுல் அளிக்கப்பட் டுள்ள திருமறையின் பெரு மந்திரங்களை அடிக்கடி ஓதிக் காட்டுவார்கள். இவ்வாறெல்லாம் இஷாஅ’த் செய்து வருவதனுல் எங்கிருந்தேனும் எவ ரேனும் தீ’னுல் இஸ்லாத்தில் சேர்ந்துகொள்ளுதல் கூடுமென்பதே அன்ன வரின் ஆர்வமா யிருந்து வந்தது. மனிதர்களால் எத்துணை மட்டும்

* “நிச்சயமாக, அல்லா(ஹ்) பொறுமையாளருடனே இருக்கின்ருன்,” என்று நாம் அடிக்கடி :குர்ஆன் மஜீதி’ல் காண்கிருேம்.

† மி:’ராஜ்— விண்ணேற்றம்— நபிபெருமான் தேவலோக சஞ்சாரம் செய்துவந்தது.

இம்சிக்கப்பட்ட போதினும், இறைவன் மாட்டு அவர்கள் வைத்துள்ள உறுதி யென்பது கரைகடந்து விளங்கியமையால், அவர்கள் தங்கள் கருமத்தின்மீதே சதா கண்ணுங் கருத்துமா யிருந்துவந்தார்கள். "தோல்வி", அல்லது "அபஜயம்", அல்லது "அதைரியம்" என்னும் பதமே நம் நபிபெருமானது பேரகராதியில் இல்லாமையால், அவர்கள் சதாசர்வ காலமும் மக்காவுக்கு வருவார் போவாரிட மெல்லாம் தீ'னுல் இஸ்லாத்தின் பெருமைகளனைத்தையும் எடுத்தெடுத்துப் போதனை புரிந்தே வந்தார்கள்.

இவ்வாறு நாள்பல கழிந்து வருங்கால், ய:த்ரிபி'லிருந்தும்— (பிற்காலத்தில் மதீ'னத்துன்னபீ', அல்லது மதீ'னா என்று வழங்கப் பெறுவது) சிலபல மனிதர்கள் வந்துபோய்க் கொண் டிருப்பார்கள். அந்த ய:த்ரிபி'ல் பெரும்பாலும் எஹூதி'களே—(யூதர்களே) வசித்துவந்தனர்; ஆனால், அதற்கும் பன்னெடுங் காலமுன்னர் யமனில் தோன்றிய ஒரு பெரு வெள்ளத்தின் காரணத்தினால் ஆங்கிருந்து புறப்பட்டு மதீனாவுக்குள் வந்து குடியேறியிருந்த ஔஸ், க''ஜ்ரஜ் என்னும் இரு கிறிஸ்தவச் சகோதரர்களின் சந்ததியார்களும்— (இவர்கள் க'ஹ்:தான் வம்சத்தவர்) அந்நகரின்கண் முக்கியஸ்தர்களாய் விளங்கி வந்தார்கள். ஒரு பக்கத்தில் அந்த யூதர்களுக்கும் இந்தக் கிறிஸ்தவர்களுக்கு மிடையே எப்பொழுதும் யுத்தம் மூண்டுகொண்டே யிருக்கும்; மற்றொரு பக்கத்தில் ஔஸ், க''ஜ்ரஜ் என்னும் இவ்விரு கூட்டத்தினருள்ளும் பலப்பல உட்சண்டைகளும் அடிக்கடி நிகழ்ந்த வண்ணமா யிருந்துவருவ துண்டு. இவ்வாறு அந்த ய:த்ரிப்' நகரமானது அக்காலத்தில் தனக்குள்ளே எவ்விதமான ஒற்றுமையும் பெற்றிராம லிருந்துவந்த தென்பது வெள்ளிடை மலை. ஆயினும், அந்த யூதர்களும், அவர்களுடனே நெருங்கிப் பழகிவந்த ஔஸ், க''ஜ்ரஜ் கூட்டத்தினரும், எஹூதி'களின் தௌராத் வேதத்தில் முன்னறிவிக்கப்பட் டிருந்த இறுதிநபி யொருவர் அவதரித்தற்குரிய காலமானது சமீபத்திலே வந்துகொண் டிருந்ததென்பதை மட்டும் நன்குணர்ந்து, அத்தகைய இறுதி நபியின் திருவவதாரத்தை அதிகஆவலுடனேதான் எதிர்நோக்கி யிருந்தார்கள்.

அக்காலத்திய ய:த்ரிப்' நகரில் அன்சார்களுள்* "காமில்" என்னும் புனைபெயர் வழங்கப்பெற்ற ஸுவைதி'ப்'னு ஸாமித் தென்னும் கல்விமானொருவர் வசித்துவந்தார். அவர் லு:க்மான் தம்முடைய புத்திரருக்கு உபதேசம் புரிந்திருந்த நல்லுபதேசங்கள் பலவற்றில் நிபுணராய் விளங்கி வந்தார். அன்றியுமவர், யுத்த சமயத்திலே வீரர்களுக்குள் உரோஷத்தையும், உற்சாகத்தையும், தீரத்தையும் எழுப்பக்கூடிய சொற்களைக் கொண்டு கவிகளைப் பாடி உற்சாக மூட்டுவதில் தலைசிறந்து விளங்கினார். அதுவேயுமன்றி, லு:க்மானுடைய உபதேசத்தை வானுலக வேதமேபோல மிகவாக

* "அன்சார்" என்பவர், ஹிஜ்ரத்துக்குப் பின்னல் நபிபெருமானுக்கும் இவர்களுடன் சென்ற முஸ்லிம் (முஹாஜிர்)களுக்கும் மதீனாவில் உதவிபுரிந்தவ ராவார்.

மதித்துவந்தார். இத்தகைய கல்விமானுன ஸுவைதி’ப்’னு ஸாமித் ஒரு முறை மக்கமா நகருக்கு விஜயம் செய்திருந்தார். இவருடைய பெயரையும் பெருமையையும் பற்றிக் கேள்வியுற்றிருந்த நபிகள் திலகம் அவர்கள் தாமே இவரிடம் சென்று “தங்கள்பால் ஏதோ சில நல்ல விஷயங்க ளிருப்பதாக எல்லாரும் சொல்லிக் கொள்ளுகிறுர்கள். அவற்றை யானும் கேட்டு ஆனந்தங் கொள்ளலாமா ?” என்று கேட்டுக் கொண்டார்கள். அக்கணமே அவரும் அதற்கிணங்கித் தமக்குத் தெரிந்த லு:க்மானுடைய உபதேசங்கள் சிலவற்றைக் கூறினுர். அதன்பின்பு நாயகம் (சல்) அவர்களும், “என்னிடத்திலும் ஒருசில உபதேசங்க ளிருக்கின்றன. அவை இதோ நுங்களிடத்தி லிருப்பதைவிட மிகமிக மேலானவாகவும், பிரகாசத்தை வீசக்கூடியனவாகவும் இருக்கின்றன. எனவே, அவற்றினைக் கேட்கத் தங்களுக்கு அதிக விருப்பமிருக்கு மாதலால், அவற்றைத் தங்களுக்குச் சொல்லிக் காட்டட்டுமா ?” என்று கூறி, அவரது அனுமதி பெற்றுத் தங்கள்பா லுள்ள அல்லா(ஹ்)வின் திருவேதத்தி லிருந்து சில ஆயாத்களை ஓதிக் காண்பித்தார்கள். அவற்றைக் கேட்டவுடனே ஸுவைதி’ப்’னு ஸாமித் மெய்ம் மறந்து ஆனந்த சாகரத்துள்ளே அதிகம் ஆழ்ந்து மூழ்கிப் போய்விட்டார். எனவே, இவர் தமதிருப்பிடம் சென்றதன்பின்னுல் அந்த ய:த்ரிபி’லும், அதைச் சூழ்ந்துள்ள பகுதிகளிலும், மக்காவில் ஒரு தீர்க்கதரிசி அவதாரம் புரிந்திருப்ப தாகவும், அவரொரு புதிய இனிய அழகிய வேதத்தைக் கொண்டுவந் திருப்பதாகவும் கூறிக்கொண் டிருந்தார். இந்தக் காமிலென்பார் இஸ்லா மென்னும் புதியமார்க்க மொன்றைக் கைக்கொண் டிருக்கின்றுர் என்பதை அறிந்தவுடனே க’‘ஜ்ரஜ் என்னும் கூட்டத்தினர் இவரைக் கொன்றுவிட்டன ரென்று சிலர் கூறுவர். ஆனுல், அதற்குப் பின்னே, ஔஸ், க’‘ஜ்ரஜ்களான இரு வர்க்கத்தினரிடையே நடந்த மஹா யுத்தமான “பி’ஆ’:த்” என்னும் சண்டையின்போதே இந்தக் காமிலும் கொல்லப்பட்டார் என்று அல்லாமா ஷிப்’லீ அறைந்திருக்கின்றுர்கள்.

பிறகொரு முறை, க’‘ஜ்ரஜ் என்னும் வர்க்கத்தினரை ஒழிக்கும் பொருட்டு மக்காவின்கண் உதவி தேடுவான்வேண்டி இந்நகருக்கு ஔஸ் என்னும் வர்த்தகத்தின் தலைவரான அயாஸிப்’னு முஆ’‘தும் அவருடைய சேனைத் தலைவரான அபு’ல் ஹைஸும், மற்றும் பல தலைவர்களும் விஜயம் செய்திருந்தனர். அவர்களிடத்தும் நபிகள்பெருமானுர் (சல்) தங்கள் வழக்கம் போலே சென்று :குர்ஆன் ஷரீ’‘பிலிருந்து சிலபல ஆயாத்களை ஓதிக்காண்பித்து, தீ’னுல் இஸ்லாத்தின் பெருமைகளைப் பற்றி யெல்லாம் விளக்கிக் கூறினுர்கள். அதைக் கேட்டுக்கொண் டிருந்த அயாஸிப்’னு முஆ’‘த் பெரிதும் பரவசப்பட்டுத் தாம் கோரிவந்த காரியத்தினும் இதுவே சாலச் சிறந்ததாய்க் காணப்படுகிற தென்று கூறினுர். ஆனுல், அபு’ல் ஹைஸ் அதற்கிடங் கொடாது அயாஸிப்’னு முஆ’ஃதக் கலைத்து மதீனுவுக்குக் கொண்டு போய்விட்டார். ஆயினும், இவர் அந்த ய:த்ரிப்’ முழுதும் தீ’னுல்

இஸ்லாத்தின் பெருமையைப் பற்றியே எப்பொழுதும் பேசிக்கொண் டிருந்து, இறுதியில் "கலிமா" சொல்லிக்கொண்டே யிறந்தாரென்று சரித்தி ரர்சிரியர்கள் சான்று கூறுகின்றார்கள்.

அவ்வாறெல்லாம் நிகழ்ந்துவரும் நாட்களிலே ஒருநாள் ய:த்ரிபி'லுள்ள க''ஜ்ரஜ் கூட்டத்தினர் அறுவர் வந்து மக்காவின் ஒரு பகுதியான அ':கப'ாவுக் கருகே அமர்ந்து க்ஷவரம் செய்துகொண் டிருந்தனர். இவர் களுக்கும் ய:த்ரிபி'லுள்ள யூதர்களுக்கும் நெருங்கிய சம்பந்தமுண் டென் பதைக் கேள்வியுற்று, நபிபெருமானார் அவர்கள்பால் சென்று அமர்ந்து, இஸ்லாத்தின் புதிய உதயத்தைப் பற்றிக் கூறினார்கள். முன்னரே கூறியதேபோல் ஔஸ், க''ஜ்ரஜ் என்னும் இருபெருங் கூட்டத்தினரும் ய:த்ரிபி'லுள்ள பெரும்பான்மையான யூதர்களுடன் நெருங்கிப் பழகிவந்த காரணத்தினால், அவர்களுடைய தௌராத்தில் வாக்களிக்கப்பட் டுள்ள அந்நத் தீர்க்கதரிசி அவதரிக்க வேண்டிய வேளை நெருங்கிவிட்ட தென்று அறிந்திருந்ததனால், அவ் வறுவரும் நபிகள்திலகத்தை (சல்) உண்மையிலே "அந்த இறுதி நபி" யென்றே உறுதி கொண்டுவிட்டார்கள். அன்னவரின் எதிர்நோக்கத்துக் கொத்தவாறே நம் நபிகள்பெருமானும் தீ'னுல் இஸ்லாத் தின் பெருமைகளனைத்தையும் நன்கெடுத்துப் போதித்துக் காட்டியதால், அவ் வறுவரும் அக்கணமே இஸ்லாத்தில் சேர்ந்து கொண்டார்கள். இது நிகழ்ந்தது நுபு'வ்வத் வந்து 10-ஆவது ஆண்டின் ரஜப்' மாதத்திலாம் (கி. பி. 620). அவ் வறுவரின் நாமங்களாவன :— 1. அபு'ல் ஹைதம் பி'ன் தீஹான். 2. அஸ்அ'த்' பி'ன் 'ஜரார்ா. 3. அ'வ்'ப் பி'ன் 'ஹாரிஸ். 4. ராபி'ஃ' பி'ன் மாலிக் பி'ன் அ'ஜ்லான். 5. :கு:த்ப'ா பி'ன் ஆ'மிர். 6. ஜாபி'ர் பி'ன் அ'ப்'து'ல்லா(ஹ்).

இவ்வாறு க''ஜ்ரஜ்களும் தீ'னுல் இஸ்லாத்தில் சேர்ந்துகொண்டதோடு மட்டும் நில்லாது, ய:த்ரிபி'லுள்ள எஹூதிகள் இவ் விஷயத்தைப் பற்றிக் கேள்வியுறு முன்னம் தங்கள் க''ஜ்ரஜ் கூட்டமும், ஔஸ் கூட்டமும் இப்புதிய மார்க்கத்தின் பெருமைகளை யெல்லாம் மேற்கொண்டுவிட வேண்டுமென்று மிகவுந் தீவிரமாக எண்ணி, தமக்குள்ளே நெடுங்காலமா யிருந்துவந்த பெரும் பகைமை யனைத்தும் இனி அடியோடு ஒழிந்து விடு மென்றும் தீர்மானம் செய்துகொண்டார்கள். எனவே, இவர்கள் செய்து வந்த பிரசாரத்தினால் பலர் இஸ்லாத்தில் சேர்ந்து கொண்டனர்; இதன் காரணமாய் மு'ஹம்மத்' (சல்) அவர்களது திருநாமம் அந்த ய:த்ரிப்' நகர் முழுதும் பிராபல்ய மடைந்து விட்டது. ஆதலின், அடுத்த ஆண்டு (கி. பி. 621) நுபு'வ்வத் வந்து பதினோராவது வருடம்— முன்னாண்டில் வந் திருந்த அறுவரும் மற்றோர் அறுவருடனே— இவர்கள் ஔஸ் 2, க''ஜ்ரஜ் 10 என்னும் இருவர்க்கத்தின் பிரதிநிதிகளா யிருந்தனர் — மக்காவுக்கு விஜயம்செய்து, முன்னர் நபிபெருமானைச் சந்தித்த அதே இடத்தில்— மக்கா வுக்கு நான்கு மைல் வடக்கிலுள்ள அ':கப'ா என்னும் குன்றின்மீதே—

சந்தித்து, தீ'னுல் இஸ்லாத்தில் சேர்ந்துகொண்டார்கள். அவர்க ளனைவரும் தங்கள் அன்சார் பெண்பிள்ளைகளுக்காகவும் அடியிற் காணுமாறு நபிகள் பெருமானிடம் ப'ய்அ'த் தென்னும் உறுதிமொழி செய்து கொடுத்தார்கள் : "அல்லா(ஹ்)வுக்கு இணையாக நாங்கள் வேறெதனையும் ஏற்படுத்த மாட்டோம். நாங்கள் திருடமாட்டோம்; வியபிசாரம் புரியமாட்டோம்; எங்கள் சிசுக்களைக் கொலைசெய்ய மாட்டோம்; பிறரைக் குறித்து ஒன்றும் அவதூறு பேச மாட்டோம். ஒவ்வொரு நல்ல காரியத்திலும் நாங்கள் நபிபெருமானையே பின்பற்றுவோம்; சுகதுக்க காலங்களி லெல்லாம் நாங்கள் அவரைப் பிரியாமலே இருந்துவரக் கடவோம்." இதற்கு இஸ்லாமிய சரித்திரங்களில் "அ':கப'ாவின் முதலுறுதி"— ப'ய்அ'த்துல் அ':கப'ா— என்று நாமங் கூறப்படுகிறது. இவ் வுறுதிமொழி 2-ஆவது அ':கப'ாவின் அறுதியின் போதுதான் கூறப்பட்டதென்று வேறுசிலர் கூறுவர். [இந்த அ':கப'ாவின் பெயர் சரியாக உச்சரிக்கப்பட வேண்டுமாயின், அதனை உ':க்ப'ா— (மிஞ) என்று மொழிய வேண்டுமென்று அல்லாமா ஷிப்'லீ அறைந்திருக்கின்றார்கள்.]

> "ஆரமு தனைய வேதத்(து) அருமொழி அகத்துள் தேக்கிப்
> பேருணர் பொங்கி யாவும் தோற்றிடாப் பெருக்கா னந்தக்
> கார்முகிற் கருணை வள்ளல் தீ'னெனும் கடலுள் ஆழ்ந்து
> வாரமுற் றறிவி னுல்ஈ மானெனும் போகம் துய்த்தார்;"
>
> "நல்வழிக் குரிய ராகி நடுக்கமொன் றின்றித் தங்கள்
> :கல்பினில் கசடு நீத்துக் கரகம லங்கள் நீட்டிச்
> செல்வநங் நயினர் செவ்வித் திருக்கரத்(து) இடத்திற் சேர்த்திப்
> பல்விதம் வரினும் வார்த்தைப் படிதவ றிலம்யாம் என்றார்."
>
> — சீறுப் புராணம்.

அவர்க ளெல்லாரும் மதீனாவுக்குத் திரும்பிச் செல்லும் வேளையில், "மார்க்கபோதகர் ஒருவர் எங்களுக்கு வேண்டுவது அத்தியாவசியமாயிருக்கிறது," என்று அன்சார்கள் வினவியதன்மீது நபிநாயகம் அவர்கள் முஸ்அ'ப்' பி'ன் உ'மைர் என்னும் ஆதியில் இஸ்லாத்தைத் தழுவியிருந்த பெரியாரை உடன்சென்று, ஆங்குள்ளவர்க ளனைவர்க்கும் இஸ்லாத்தின் படிப்பினைகளை யெல்லாம் சாங்கோபாங்கமாய்ப் போதித்துக்கொண்டிருக்குமாறு செய்தார்கள். இவர் ஹாஷிமின் பேரராய் விளங்கிவந்தார்; இவர்தாம் பிறகு ப'த்'ரு யுத்தத்தில் கொடிபிடித்து நின்றவர். இப்பெரியார் ய:த்ரிபி'லுள்ள பெரியதனக்காரரான க''ஜ்ரஜ்வம்ச அஸ்அ'த்' பி'ன் 'ஜுராரா என்பவர் விடுதியில் இருந்துகொண்டு, ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வீடாகச் சென்று தீ'னுல் இஸ்லாத்தைப்பற்றி உபதேசம் புரிந்து வருவார். இவ்வாறு செய்து வந்ததனால் தினம்தினம் ஒன்றிரண்டுபேர் இஸ்லாத்தில்

சேர்ந்து கொண்டே வந்தனர். ஔஸ், க''ஜ்ரஜ் என்னும் இருபெருங் கூட்டத்தினின்றும் பலப்பல பிரமுகர்களும் தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவலாயினார்கள். சிறிது காலத்திற்குள்ளே ய:த்ரிபி'லிருந்து :குப'ாய் வரை இஸ்லாம் பரவிவிட்டது. பிறகு ஒருநாள் முஸ்அ'ப்' பி'ன் உ'மைர் ய:த்ரிபி'லுள்ள ஔஸ் வர்க்கத் தலைவரான ஸஅ'தி'ப்'னு முஆ''த் என்பாரிடம் சென்று இஸ்லாத்தைப்பற்றி விளக்கிக் கூறினார்கள். ஆனால், அதனை அவர் செவியேற்றுக் கொள்ள வில்லை. அவர் அந்த ய:த்ரிப்' நகரிலுள்ள ஔஸ் வர்க்கத்தில் அதிகமான செல்வாக்குப் பெற்று விளங்கியவர். அவர் ஒருவர் தீ'னுல் இஸ்லாத்தில் சேர்ந்துவிட்டால், அவ்வர்க்கமே இஸ்லாத்தில் சேர்ந்துவிட்டதாகப் பாவிக்கப்படல் வேண்டும். இத்தகைய பெரியார் முதலில் முஸ்அ'பி'ன் வேண்டுகோளுக்கு இணங்காது கல்மனங் கொண்டிருந்தார். பிறகு முஸ்அ'ப்' :குர்ஆன் ஷரீ'பிலுள்ள சில திருவாக்கியங்களை ஓதிக் காண்பித்தார்; உடனே அந்த ஸஅ'தி'ப்'னு முஆ''தின் மனமுழுதும் மெழுகேபோல் இளகி, அக்கணமே தீ'னுலிஸ்லாத்தைத் தழுவிக்கொண்டார்; இதனால் அவரைப் பின்பற்றியிருந்த எல்லாரும் இஸ்லாத்தைத் தழுவலாயினார்கள். க''ஜ்ரஜ் கூட்டத்தின் தலைவர்களும் பலர் இஸ்லாத்தில் சேர்ந்து கொண்டனர். இவ்வாறாகத்தான் அம் மதீனாவின்கண் ஆதியிலே இஸ்லாம் பையப் பையப் பரவலாயிற்று.

*　　　*　　　*　　　*

"அல் இஸ்ரா"—(நடுநிசிப் பிரயாணம்) என்றும், "அல் மிஃ'ராஜ்" (விண்ணுலக யாத்திரை) என்றும் அழைக்கப்படும் சம்பவம் நபிகள் பெருமானாரவர்கட்கு இதுபொழுது நிகழ்வுற்றதென்று அறிஞர்கள் அறையாநின்றார்கள். என்னெனின், இவ் வைபவம் ஹிஜ்ரத்துக்கு முன்னே உத்தேசம் பதினாறு மாதங்களுக்கு முன்னர் நிகழ்வுற்றதாக நிச்சயிப்பதே மிக்க பொருத்தமாயிருக்குமென்று பற்பல சரித்திராசிரியர்கள் ஆதாரங் கூறியிருத்தலினால், யாமும் நுபு'வ்வத் வந்து பதினோராவது ஆண்டின் இறுதியையே அம் மிஃ'ராஜுக் குரிய காலமெனக் கொண்டு, அதனை ஈண்டெடுத்துக்கொண் டிருக்கின்றோம். வேறு சமயங்களில் இது நடைபெற்றதாகக் கூறும் தேதிகளுக்குப் போதிய ஆதாரமில்லையென்று மௌலானா ஸையித்' ஸுலைமான் நத்'வீ அவர்களும் கூறுகின்றார்கள். ஹிஜ்ரத் ரபீ'உ'ல் அவ்வலில் நடைபெற்றதால், அதற்கு ஓராண்டுக்கு முன்னேதான் மிஃ'ராஜ் நடைபெற்றதென்பாரின் சொற்படி அது நுபு'வ்வத் வந்து 12-ஆவது ஆண்டின் ரபீ'உ'ல் ஆகி'ர் பிறை 26-க்கும் 27-க்கும் நடுவிலுள்ள இரவாகும். ஆனால், பெரும்பான்மையோர் ரஜப்' 27-ஆந் தேதியன்றுதான் மிஃ'ராஜ் நடைபெற்றதென்பதனால், இக்கணக்குப்படி நுபு'வ்வத் வந்து 11-ஆவது ஆண்டின் ரஜப்' மாதமாகும். அஃதாவது, ஹிஜ்ரத்துக்கு 18 மாதத்துக்கு முன்னாகும். இன்னம், அல் மிஃ'ராஜ் நபிகள் திலகத்தின்

ஸ்தூல சரீரத்துடனேதான் நடைபெற்றதா? அல்லது அவர்களது ஸூக்ஷ்ம ஆவிமட்டுமேதான் அப் பரமண்டலமட்டும் சென்று சஞ்சரித்து வந்ததா? என்பதிலும் இற்றைநாள் வரையுங்கூடக் கல்விமான்களுக்குள்ளேயே பெரும்பெரும் அபிப்பிராய பேதங்க ளெல்லாம் இருந்து வருகின்றன. பெரும்பாலானோர் அது ஸ்தூல சரீரத்துடனேதான் நடைபெற்றதென்று நம்புகின்றனர்; ஆனால், வேறு சிலர் அன்று நிகழ்ந்தது முழுதும் ஆன்மஉலக (ஆ'லமெ மலக்கூத்) உவமதரிசன சஞ்சாரமென்றே (ஆனால் வெறுங்கனவே யன்று) சாதிக்கின்றனர். எனவே, இதுவிஷயத்தில் யாமொன்றுங் கூறத்துணியாது, அல்லாமா ஷிப்'லீ நுஃ'மானீ அவர்களது "ஸீரத்துன் னபீ" என்னும் மகா ஆதாரபூர்வமான பெரிய கிரந்தத்துக்கு அனுபந்தமாய் வரையப்பட்டுள்ள மூன்றாவது வால்யூமில், அன்னவரின் பிரதமசிஷ்யர் மௌலானா சையித்' ஸுலைமான் நத்'வீ அவர்கள் எழுதியிருப்பதன் கருத்தையே ஈண்டெடுத்துக் குறிக்கின்றோம்; கவனித்துக் கொள்வீர்களாக. இவ்வாறு ஸூக்ஷ்ம சரீரத்துடனேதான் நபிகள் (சல்) அவர்கள் தேவலோக சஞ்சாரம் செய்துவந்தார்க ளென்பதை மௌலானா சையித்' ஸுலைமான் நத்'வீ அவர்கள் மட்டுமேதாம் கூறுகின்றார்க ளென்றெண்ணற்க. ஷைகு'ல் இஸ்லாம் அல்லமா இப்'னுத் ைதமிய்யாவின் பிரதம சிஷ்யரும், அநேக பல பெரிய கிரந்தங்களின் ஆசிரியருமான அல்லாமா இப்'னு :கயிமும், ஹுஜ்ஜ(த்)துல்லாஹில் ப்'ாலி:காவின் கிரந்த கர்த்தாவான ஷா(ஹ்) வலிய்யுல்லா(ஹ்) மு'ஹத்'தி'ஸ்' தெ'ஹ்லவீயும் இவர்களைப்போன்ற இன்னமுமநேக மகான்களும் இவ் வபிப்பிராயத்தையேதான் உறுத்திக்கொண் டிருக்கின்றன ரென்றும் நுங்கள் ஹிருதயத்தில் இருத்திக்கொள்ளல் வேண்டும்.

'ஹ'ஜ்ரத் இப்'ராஹீம்நபி (அ'லை) அவர்களால் பழுதுபார்கப்பட் டிருந்த கஃ'ப்'ாவென்னும் கட்டிடம் வெள்ளங்களினால் பலமுறை கீழே வீழ்ந்துவிட்டது.—(அது நிகழ்ந்தபொழுது, நபிகள் பெருமானுக்கு நுபு'வ்வத் வரவில்லை.) பிறகு அதை நன்றாய்ப் பழுது பார்த்துவிட வேண்டு மென்று மக்காவிலுள்ள :குறைஷியர் முயற்சி செய்தார்கள். எனினும், தங்கள்வயம் போதிய திரவிய மில்லா திருந்ததனால், அதுமுழுதையுங் கட்டாது, அச் சுவரின் சிறிது பாகத்தை அப்படியே பழுதுபார்க்காது விட்டிருந்தனர்; இக் காரணத்தினால் க'ஃப'ாவின் ஒருபகுதி கட்டப்படாமலே யிருந்துவிட்டது; இன்னமும் அஃது அவ்வாறாகவேதான் இருந்துவருகிறது. அதற்குத்தான் 'ஹிஜ்ர் என்றும், 'ஹ:தீம் என்றும் பெயர் கூறப்பட்டு வருகின்றது. எனவே, :குறைஷித் தலைவர்களும், பிரமுகர்களும், தனவந்தர்களும் பெரும்பாலும் ஆங்குச் சென்றே இளைப்பாறிக்கொண் டிருப்பார்கள். அவ்வாறே நபிகள் நாயகம் அவர்களும் அவண்சென்று அடிக்கடி சயனித்துக்கொண் டிருப்பார்கள். நபிகள் திலகத்துக்கு நுபு'வ்வத் வருமுன்னரே நித்திரையின்போது வானவர் ஜிப்'ரீல் (அ'லை) தோற்றமாய்க்

கொண்டிருந்தனர்.* எனவே, நாயகமவர்கட்கு மிஃ'ராஜின் காட்சியுண்டான போதும் அந்தப் பெருமைவாய்ந்த 'ஹ:தீம், அல்லது 'ஹிஜ்ர் என்னு மிடத்திலேதான் சயனித்துக்கொண் டிருந்தார்கள்.

ஆனால், நபிகள் பிரான் மிஃ'ராஜ் சென்றபோது எந்தவிடத்தில் இருந் தார்கள்?. என்பது குறித்துச் சிலர் அபிப்பிராயபேதம் கொண்டுள்ளனர். 'ஹ'ஜ்ரத் மாலிக், அனஸ் (ரலி') முதலியோரின் மூலமாய் ச'ஹீ'ஹனில் ரிவாயத் செய்யப்பட்டுள்ள 'ஹதீ':துகளில் மிஃ'ராஜின்போது நாயகமவர் கள் கஃ'ப'ாவில் சயனித்துக்கொண் டிருந்தார்க ளென்பதே நிச்சயமாய்க் காணக் கிடக்கின்றது. ஆனால், நம்பத்தகாத சில ரிவாயத்களில், நாயக மவர்கட்கு மிஃ'ராஜ் நடந்தது உம்மஹானீயின் வீட்டில்தான் என்னும் விஷயம் காணப் படுகின்றது; அந்த உம்மஹானீயின் வீடோ ஷிஃ'ெப' அபீ'த்தாலிபை'ச் சார்ந்த ஒரு பகுதியா யிருந்துவந்தது. இந்த ரிவாயத் பிரபலப் புளுகரான கலபீ'யின் வாயிலாய் வெளிவந்த தென்பதை மட்டும் மறந்துவிடுதல் கூடாது; அன்றியும், அதில் அநேக ஆக்ஷேபத்துக் கிடமான விஷயங்கள்பல நிரம்பிக் கிடக்கின்றன. அந்த ரிவாயத்தில் உபயோகமும் உண்மையுமற்ற பலவிஷயங்கள் காணப்படுவ தல்லாமல், இ'ஷா, சுப்''ஹ் என்னும் இரண்டு நேரத்தின் தொழுகைகளும் கூறப்பட் டிருக்கின்றன. இம்மாதிரியான பொய்கள் இணையற்றன வென்றேதான் கொள்ளவேண்டி யிருக்கின்றன. என்னெனின், ஐந்துநேரத்தின் தொழுகையே மிஃ'ராஜின் போதுதான் கடமையாக்கப்பட்ட தென்றால்,† மிஃ'ராஜ் நிகழ்வதற்கு முன்னரே ஐங்காலத் தொழுகையில் சேர்ந்த இ'ஷா, 'பஜ்ர் முதலியவைகளை நாயகமவர்கள் நிறைவேற்றினார்க ளென்றால், அஃதெத்துணைப்பெரிய இணை யற்ற பொய்யென்பதை நீங்களே நிதானித்துக் கொள்வீர்களாக. 'தாரீ:குல் மிலலி வல் உமம் போன்ற கிரந்தங்களில், மிஃ'ராஜு¬க்கு முன்னமேயே இரண்டுவேளைத் தொழுகை விதியாக்கப்பட்டுவிட்டன என்று சொல்லப்பட் டிருக்கிற தாயினும், அவை 'பஜ்ரும் அ'ஸ்ரும்தாம் என்றுதான் அதிலும் காணப்படுகின்றன. ஆனால், கலபீ' இ'ஷாத் தொழுகை யொன்றையும் தன் வழக்கத்துக் கொப்பச் சிருஷ்டித்திருக்கிறார் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளல் வேண்டும். எனவே, நாயகமவர்கள் மிஃ'ராஜின் போது கஃ'ப'ாவிலேதான் சயனித்துக்கொண் டிருந்தார்க ளென்பதில் சிறிதும் சந்தேக மில்லை. ஆனால், சிலர் தங்களுக்கெட்டிய ஆராய்ச்சிவரை சென்று, அந்தக் கலபீ'யினால் கட்டிவிடப்பட்ட ரிவாயத்துத்தான் சரியான

---

* இதன் விவரம் ச'ஹீ'ஹ் பு'க'ாரீ (எமது தமிழ் மொழிபெயர்ப்பு) என்னும் கிரந்தத் தில் விஸ்தாரமாய்க் காணப்படும்.

† மிஃ'ராஜு¬க்குப் பல வருடங்கள் முன்னரே, நுபு'வ்வத் வந்து 4-ஆவது ஆண்டி லேயே அர்(க்):கம்(ரலி') அவர்களது இல்லத்துக்குள்ளே இஸ்லாமிய தொழுகைகள் நபி பெருமானால் நடாத்தப்பட்டு வந்தன வென்பது சரித்திரச் சான்றும்.

தென்று கொண்டு, அதற்குமேல் பற்பலவிதமான அர்த்தபுஷ்டியற்ற மணற் கோட்டைகளை யெல்லாம் நிர்மாணித்துக் கொண்டே செல்கின்றனர். அந்தோ பரிதாபம் !*

நபிகள் திலகமவர்கள் (சல்) அன்றிரவு நித்திரைக்கும் விழிப்பு நிலைக்கு மிடையே ஒரு நடுமையமான நிலைமையி லிருந்தார்கள். அதுசமயம் நாயக மவர்கள் தங்கள் வீட்டின் (தாங்கள் ஆங்குத் தங்கியிருந்ததாக எண்ணி யிருந்தமையால்) மேல்முகடு திறக்கப்பட்டு, அதன் வழியே 'ஹ'ஜ்ரத் ஜிப்'ரீலும் அவர்களுடன் வேறுசில மலக்குகளும் உள்ளே இறங்குவதாகக் கண்டார்கள். முதன்முதலாக வந்தவர்கள் நபிகள் பெருமானை 'ஜம்'ஜம் என்னும் கிணற்றருகினில் கொண்டு சென்று, அவர்களுடைய மார்பைப் பிளந்து, உள்ளிருந்த ஹிருதயத்தை வெளியி லெடுத்து, அக்கிணற்றின் ஜலத்தைக் கொண்டு நன்கு சுத்தம் செய்தார்கள். அதன்பின்பு ஈமானும் 'ஹிக்மத்தும் நிரம்பிய ஒரு பொன் தட்டத்தைக் கொணர்ந்து, ஜிப்'ரீலவர் கள் (அ'லை) அந்தத் தட்டத்தி லிருந்தவற்றைக் கொண்டு நாயகமவர்களின் ஹிருதயத்துள்ளே நிரப்பினார்கள்.

அதன் பிறகு, கழுதையைக் காட்டினும் சற்றுப் பெரிதாகவும், கோவேறு கழுதையைக் காட்டினும் சற்றுச் சிறிதாகவும், வெண்மை நிற மாகவும், நீளமாகவு முள்ள பு'ரா:க்கென்னும் ஓர் உயிர்ப்பிராணி கொண்டு வரப்பட்டது. அதன் நடையின் வேகமோ, கண்பார்வை எட்டக்கூடிய தூரம்வரை ஓர் அடியை எடுத்துவைத்துச் செல்லக்கூடியதா யிருந்தது. பிறகு நாயக மவர்கள் அதன் மீதேறி, பை'த்துல் மு:கத்'த'ஸ் (ஜெரூ ஸலம்) சேர்ந்தார்கள். அதற்குமுன்னே சென்ற நபிமார்கள் தங்கள் வாகனங்களைக் கட்டிக்கொண் டிருந்த அந்தக் கைப்பிடியிலேயே நாயக மவர்களும் தங்கள் பு'ரா:க் கென்னும் வாகனத்தைக் கட்டிவிட்டு, பை'த்துல் மு:க'த்'த'ஸ் மஸ்ஜிதி'ற்குள் தங்கள் அடியை வைத்தார்கள் ; அங்கே இரண்டு ரக்ஆ'த் தொழுகையும் தொழுதார்கள். அதன்பிறகு ஜிப்'ரீல் பாலினுலும் மதுவினுலும் நிரப்பப்பட்ட இரண்டு பாத்திரங்களைக் கொண்டு வந்து, ஏதேனு மொன்றை அருந்த வேண்டுமென்று வேண்டினர். அதற் கிணங்க நாயக மவர்கள் பாலின் பாத்திரத்தை எடுத்துக் கொண்டார்கள். உடனே ஜிப்'ரீல், "இயற்கைக் கொத்த உண்மை யானதையே எடுத்துக் கொண்டீர்கள். தாங்கள் மதுவின் பாத்திரத்தைக் கைக் கொண்டிருப்பீர்க ளாயின், தங்களைச் சார்ந்த உம்மத் தெல்லாம் வழிக்கேடான முறையிலே

* ஒரு பொய்யை நிலைநிறுத்த ஒன்பது பொய் சொல்ல வேண்டியது குறித்து வேத நாயகம் பிள்ளை யாத்துள்ள கவியொன்று நினைவிற்கு வருகிறது. அது வருமாறு :—

" முன்னமோர் பொய்யுரைக்க அப்பொய்வெளி யாகாமல் மூடும் வண்ணம்
பின்னுமோர் பொய்யுரைக்க அதையு(ம்)நிலை நிறுத்தவோர் பெரும்பொய் சொல்ல
இன்னவகை கைதவமொன்(று) இருநூறு கைதவத்துக்(கு) இடமாம் வாய்மை
தன்னையே முன்பகரின் சங்கடமொன் றிலையதுவே தகைமை நெஞ்சே !"

தான் நடந்து செல்வார்கள்," என்று கூறி முடித்து, நாயக மவர்களை வான லோகத்துக்குக் கொண்டு சென்றார்கள்.

இவ்வாறு முதல்வானம் சென்றவுடன், அதன் காவலாளரை ஜிப்'ரீல் அழைத்தார்; அதற் கவர், "நீர் யார்?" என்று வினவினர்; அதைக் கேட்டவுடன், "நான்தான் ஜிப்'ரீல்" என்று விடை கொடுத்தார். "உம்முடன் வேறெவரு முண்டோ?" என்று அக் காவலாளர் கேட்டார்; அதற்கு, "ஆம், மு'ஹம்மத்'" என்று ஜிப்'ரீல் மறுமொழி கூறினர். "அவர் இங்கு அழைக்கப்பட் டிருக்கின்றனரா?" என்று அக் காவலாளர் வினவியதற்கு, "ஆம்" என்னும் விடையை ஜிப்'ரீல் அளித்தார்கள். பிறகு அக் காவலாளர் அம் முதல் வானத்தின் வாயிலைத் திறந்தார்; மேலும், அக் காவலாளர் நாயக மவர்களைக் கண்டவுடனே நல் வாழ்த்தும் கூறினர். பிறகு நாயக மவர்கள் அவ்வானத்துள் சென்றபோது, ஆங்கொருவரைக் கண்டார்கள். அவருடைய வலப்புறமும் இடப்புறமும் அநேக மனிதர் களின் தோற்றங்கள் காணப்பட்டன. ஆனால், அவரது வலப்புற முள்ள வர்கள் சிரிப்பவர்களாகவும், இடப்புற முள்ளவர்கள் அழுபவர்களாகவும் காணப்பட்டார்கள். இப்படிப்பட்ட பெரியார் நாயக மவர்களைக் கண்ட வுடன், "சாலி'ஹான நபியே! வருக! சாலி'ஹான பிள்ளையே! வருக!" என்று உபசரித்தார். அதுபொழுது நாயக மவர்கள் ஜிப்'ரீலை நோக்கி, "இவர் யார்?" என்று வினவினர்கள்; அதற்கு ஜிப்'ரீல், "இவர்தாம் தங்கள் (ஆதி) தந்தையான ஆத'ம் என்னப் படுபவர். இவருடைய இரு மருங்கிலும் காணப்படுவன இவருடைய சந்ததியார்களின் ஆன்மாக்க ளாகும். வலப்புற முள்ளவர்கள் சுவர்க்கவாசிக ளாவார்கள்; இடப்புற முள்ளவர்கள் நரக வாசிக ளாவார்கள். எனவேதான், வலப்புறம் பார்க்கும்போது சந்தோஷ மாகவும், இடப்புறம் பார்க்கும்போது துக்ககரமாகவும் காணப்படுகின் றனர்," என்று விடை கொடுத்தார்கள். அப்பொழுது அந்த முதல் வானத் திலே விசாலமான இருபெரும் நதிகளைக் கண்டு, "இவை என்னென்ன நதி?" என்று ஜிப்'ரீலைக் கேட்டார்கள். அதற்கு அவ் வானவர், "இவை தாம் நீல், 'புராத் தென்னும் இருபெரு நதிகளின் ஆரம்ப ஸ்தலமாகும்," என்று பதின்மொழி பகர்ந்தார்கள். ஆங்கிருந்து சிறிதுதூரம் சென்ற வுடன் மற்றொரு நதி நாயக மவர்களின் கண்களுக்குத் தோன்றிற்று; அதன் மத்தியில் முத்தினாலும் மரகதத்தினாலும் நிர்மாணிக்கப்பட்ட ஓரழகிய மாளி கையும் காணப்பட்டது. அதன் அடித்தளம் நிகரற்ற வாடையை யுடைய கஸ்தூரியினால் இலங்கிக்கொண் டிருந்தது. இதைக் குறித்து ஜிப்'ரீல், "இது தங்களுக்காக ஆண்டவன் சொந்தமாகத் தையார் செய்துவைத் திருக்கும் மாளிகையாகும்," என்று நாயக மவர்களை நோக்கிக் கூறினர்.

இவ்வாறே நபிகள்திலகம் அதற்குமே லுள்ள ஒவ்வொரு வானத்தை யும் கடந்து சென்றார்கள். மேற்கூறிய வண்ணமே மற்றெல்லா வானங்களி லும் ஜிப்'ரீலுக்கும் ஒவ்வொரு வானத்தின் காவலாளருக்கும் வின

விடைகள் நிகழ்வுற்றன. மேலும், முதல் வானத்தில் ஆத'ம் நபி அவர்களைக் கண்டதே போன்று மற்ற ஒவ்வொரு வானத்திலும் வேறு சில நபிமார்களைக் கண்டு களித்தவண்ணமே சென்றார்கள். இரண்டாவது வானத்தில் சோதரர்களான எ'ஹ்யா, ஈ'ஸா முதலியோரைச் சந்தித்தார்கள். மூன்றாவது வானத்தில் உலகத்தின் அழகிலே ஒரு பாதியைப் பெற்று விளங்கிய 'ஹ'ஜ்ரத் யூஸு'ப் நபி அவர்களைச் சந்தித்தார்கள். நான்காவது வானத்தில் 'ஹ'ஜ்ரத் இத்'ரீஸ் அவர்களைத் தரிசித்தார்கள். ஐந்தாவது வானத்தில் 'ஹ'ஜ்ரத் ஹாரூனைக் கண்டார்கள். இவரும் மற்றெல்லாரையும் போலவே, "சகோதர வருக! நபியே வருக!" என்று கூறி, நல்வர வேற்றார். ஆறாவது வானத்தில் 'ஹ'ஜ்ரத் மூஸா அ'லைஹிஸ்ஸலாத்து வஸ்ஸலா மவர்களைச் சந்தித்தார்கள்; அவர்களும் ஏனை நபிமார்களைப் போலவே நம் வள்ளல் ரஸூ லவர்களை நல்வர வேற்றார்கள். அவர்களை நாயகம் கடந்து செல்லுங்கால், அந்த மூஸா நபியவர்கள் துக்கித் தழுதார்கள். அதுபொழுது, "ஏ மூஸா! ஏன் நீர் அழுகின்றீர்?" என்றோர் அசரீர வாக்கு வினவிற்று; அதைச் செவியேற்றவுடனே 'ஹ'ஜ்ரத் மூஸா அவர்கள், "ஏ என்னிறைவனே! இவரை (மு'ஹம்மதை') எனக்குப் பின் நபியாக அனுப்பி யிருக்கின்றாய். இவரைப் பின்பற்றும் உம்மத்கள் என்னுடைய உம்மத்களைக் காட்டினும் அதிகமாய்ச் சுவன லோகத்தை யடைபவர்களாய்க் காணப்படுகின்றனர்," என்று கூறினார்கள்.

அதன்பின்பு நபிகள்நாயகம் ஏழாவது வானத்துக்குச் சென்றார்கள். ஆங்கு 'ஹ'ஜ்ரத் இப்'ராஹீம் க'லீலுல்லா(ஹ்) அவர்கள் நம்பெருமானாரவர்களைக் கண்டு, "ஏ நபியே வருக! ஏ சாலி'ஹான பிள்ளையே வருக!" என்று நல்வரவேற்று, உபசாரம் புரிந்தார்கள். 'ஹ'ஜ்ரத் இப்'ராஹீம்(அ'லை) அவர்கள் பை'த்துல் மஃ'மூர்— (செழிப்பான விடுதி) என்னும் உயர்ந்த மஸ்ஜிதி'ல் சாய்ந்தவண்ண மிருந்தார்கள். அந்தப் பள்ளியுள்ளே ஒவ்வொரு நாளும் 70-ஆயிரம் மலக்குகள் (வானவர்) நுழைகின்றனர்.

பிறகு நாயகமவர்கள் சுவர்க்க லோகத்தைச் சுற்றிக் காண்பிக்கப் பட்டார்கள். அந்தச் சுவர்க்கத்தில் நின்றிலங்கும் மாளிகைகள்மீது காணப்பட்ட ஸ்தூபிகளனைத்தும் முத்தினாலும், அவற்றின் அடித்தளங்களெல்லாம் கஸ்தூரியினாலும் அமைக்கப் பட்டிருந்தன.* இவ்வாறே நாயகமவர்கள் :குத்'ரத்தின் :கலம் (எழுதுகோல்)† எழுதிக்கொண்டு செல்லும் சப்தத்தைக் கேட்கக்கூடிய அத்துணைச் சமீபத்திலே நெருங்கிச் சென்றார்கள்.

---

* மிஃ'ராஜின் சம்பந்தமாய் இத்தகைய விஷயங்களைக் கூறுபவர்களுள் அபூ' ஹாரூனுல் அ'ப்'தீ', அபூ'ஜஃ''பர் ரா'ஜீ, க'ாலித்' பி'ன் ய'ஜீத்'களான இம்மூவர்களின் சம்பந்தமே அதிகமாய்க் காணக்கிடக்கின்றது. இம்மூவரும் எப்படிப்பட்ட மகா புளுகர்களென்னும் விஷயத்தை ருவாத்களின் விஷயத்தைச் சிறிதே ஆராய்ந் தறிந்தவர்கள் நன்குணர்ந்து கொள்வார்களென்பது திண்ணம்.

† "பிரமதண்டம்" என்பர் வடமொழியாளர்.

பிறகு அதனையுங் கடந்து (இறுதி எல்லைக்கோடி இலந்தை மரமாகிய) ஸித்'ரத்துல் முன்தஹாவி னருகே சென்று சேர்ந்தார்கள். அவ் விருக்ஷத்தின் மீது அல்லா(ஹ்)வின் மாஹாத்மியத் தோற்றம் மிளிர்ந்துகொண் டிருந்தது; அத்தோற்றம் அம் மரத்தைச் சூழ்ந்துகொண்ட போது, அதன் சுயத் தோற்றமே மாறிப்போய்க் காணப் பட்டது. இதன் காரணத்தினால் அம்மரத்தின் பொலிவே நாவினால் வருணிக்க முடியாத விதத்திலே அத்துணை அழகியதாய்க் காணப்பட்டது. அதில் தோன்றிய நிறபேதங்களையும், தோற்ற பேதங்களையும் வாய்கொண்டு வருணித்து விடுதலும் எவராலும் சாலாது. அங்கிருந்துதான் ஒவ்வொரு பொருளும் அல்லா(ஹ்)வின் பக்கலிலிருந்து இப் பூவுலகின்கண் இறங்கிக்கொண் டிருக்கின்றது. இவ் வண்ணமாகவே இப்பூவுலகினின்று அல்லா(ஹ்)வின் பக்கல் சேரவேண்டியவை யனைத்தும் அங்கேதான் போய்ச் சேருகின்றன. நபிகள்திலகம் (சல்) ஆங்குச் சென்றவுடனே 'ஹ'ஜ்ரத் ஜிப்'ரீல் அவர்கள் தங்களுக்குச் சொந்தமான சுய உருவங் கொண்டு அவர்கள்முன்னே தோன்றினார்கள். அதன் பின்பு எக்காலமும் மறைந்து நிற்கும் ஏக நாயகனாகிய இறைவன் முன்னிருந்த அந்தத் திரை அகற்றப்பட்டது. அதுசமயம் மனிதரது மனோரதத்தின்கண்ணும் தோன்றுதற்கரிய அத்தன்மைத்தாய மகாபெரிய மாண்புமிக்க இரகசியங்க ளெல்லாம் அல்லா(ஹ்) ரஸூலுக் கிடையிலே நடைபெற்றன; அவற்றின் மகிமையும் மாகாத்மியமும் இவ்வளவின வென்பதைச் சாமான்யமான இவ் வாக்கியங்களைக் கொண்டு எழுதி விளக்கிவிடல் முடியா தென்பது திண்ணமேயாம். "தன்னுடைய அடியாருக் கறிவித்த அந்த ஒரே வ'ஹீயைத்தான் அறிவித்தான்," என்று அதையேதான் ஆண்டவன் தன் திருமறையில் சுட்டிக் காட்டியுள்ளான்.

அதுசமயம் அல்லா(ஹ்)வி னிடமிருந்து நபிகள் பெருமானுக்கு மூன்று வித அருட்கொடைகள் அளிக்கப்பட்டன: முதலாவது, "இஸ்லாத்தின் உறுதிமொழிகளையும், ஈமானைப் பரிபூரண மாக்கிக்கொள்ளும் விதத்தையும், கஷ்டசாத்தியமான காரியங்களை நிவாரணம் பண்ணிக்கொள்ளும் விதத்தையும்" தன்னகத்தே கொண்டிருக்கும் :குர்ஆன் ஷரீ'பின் 2-ஆவது அத்தியாயத்தின் இறுதி (286) ஆயத்தாகும். இரண்டாவது, அல்லா(ஹ்)வுக்கு இணை வைத்து வணங்காத ஒவ்வொருமூமினும் நிச்சயமாய் அவனது கிருபைகொண்டு மன்னிக்கப்படலாம் என்பதாகும். மூன்றாவது, ஐம்பது நேரத்தின் தொழுகை நபிகள் திலகத்தின் உம்மத்தின்மீது விதியாக்கப் பட்டதாகும்.

இவ்வாறு நாயகமவர்கள் இம்மூன்று அருட்கொடைகளையும் பெற்றுக் கொண்டு திரும்பி வரும்வழியில் 'ஹ'ஜ்ரத் மூஸா அவர்களைச் சந்தித்தார்கள். அப்பொழுது, "அல்லா(ஹ்)வின் திருச் சன்னிதானத்தினின்று என்ன வெகுமதியைப் பெற்றுவந்தீர்கள்?" என்று அன்னார் வினவினார்; அதற்கு, "ஐம்பது வேளைத் தொழுகை," என்று நபிநாயகம் விடையளித்தார்கள்,

அதைக் கேட்டு மூஸா, "நான் இக்காரியத்தை ப'னீ இஸ்ராயீல் வர்க்கத்தினரிடம் அதிகம் பரிசோதனை செய்து பார்த்துவிட்டேன். ஆதலின், இவ்வாறு ஐம்பதுவேளைத் தொழுகையைத் தங்கள் உம்மத்கள் தொழுது நிறைவேற்றுவது சிறிதும் முடியாது. எனவே, மீண்டும் இறைவனிடம் சென்று, அதனைச் சிறிது குறைத்து இலேசாக்குமாறு வேண்டிக் கொள்வீர்களாக!" என்று கூறினர். அவ்விதமே நாயகமவர்கள் திரும்பி அல்லா(ஹ்)வின் சன்னிதானம் சென்று, "ஏ என் இறைவனே! என்னுடைய உம்மத்கள் அதிக பலஹீன முள்ளவர்கள்; அதற்கேற்ப அன்னவர்களுடைய சக்தியும் சாமர்த்தியமும் மிகக் குறைவாகவே காணப்படுகின்றன," என்று வேண்டிக் கொண்டவுடன், ஆண்டவ னருளால் பத்துவேளைத் தொழுகை குறைக்கப்பட்டன. இதனைக் கேட்டுத் திரும்பிவரும்போது, மூஸா நபி அவ்விஷயத்தை யுணர்ந்து, மீண்டும் சென்று ஆண்டவனிடம் வேண்டுதல் புரியுமாறு கேட்டுக் கொண்டார்; அவ்வாறே நபிபெருமான் (சல்) ஆண்டவன்பால் சென்று, மற்றுமொரு பத்துவேளைத் தொழுகையைக் குறைத்துக்கொண்டு வந்தார்கள். இவ்வாறு பலமுறை அல்லா(ஹ்)வின் சன்னிதானம் சென்று சென்று, நபிபிரா னவர்கள் இறுதியாக அந்த ஐம்பது வேளைத் தொழுகைகளையும் ஐந்துநேரத்துத் தொழுகையாகக் குறைத்துக்கொண்டு மீண்டார்கள். இதையும் எம்பெருமானின் உம்மத்களால் நியமத்துடன் நிறைவேற்றி வைப்பது முடியாதென்று 'ஹ'ஜ்ரத் மூஸா அவர்கள் கூறியதைச் செவியேற்ற நாயகம் அவர்கள், "இனியும் ஆண்டவன் திருமுன்பில் சென்று இதுசம்பந்தமாக வேண்டுதல் புரிவதென்பது எனக்கு வெட்கமா யிருக்கிறது; எனவே, இனி யான் அல்லா(ஹ்)வினிடம் செல்லமாட்டேன்," என்று கூறி மறுத்து விட்டார்கள். அதுபொழு துடனே, "என்னுடைய கட்டளையை இனி மாற்றுவது முடியாது. தொழுகை ஐந்து வேளைதான். ஆனால், அவற்றின் பிரதிபலன் ஐம்பதை நிகர்த்ததா யிருக்கும்," என்றோர் அசரீரி வாக்குக் கேட்டது.

பிறகு நபிகள்திலகம் (சல்) அவர்கள் வானுலகினின் றிறங்கிப் பூவுலகின்கண் திரும்பிவந்து, மீண்டும் பை'த்துல் மு:கத்'த'ஸுக்குள் நுழைந்தார்கள். அங்கு நபிமார்களின் திரளான கூட்ட மொன்றைக் கண்ணுற்றார்கள். அவர்களுள், 'ஹ'ஜ்ரத் மூஸாவும் இப்'ராஹீமும் தொழுகை யென்னும் இ'ப'ாத'த்தி லிருந்தார்கள். அவர்களை எந்நிலைமையில் ஆங்குக் கண்டார்களோ, அந்நிலைமையை அப்படியே நாயகம் மற்ற மனிதர்களிடம் எடுத்துக் கூறியு மிருக்கிறார்கள். எனவே, இதற்கிடையில் சுப்''ஹ் நேரத் தொழுகையின் வேளையும் வந்துவிட்டமையான், நாயக மவர்கள் அத் தொழுகையை முடித்துக்கொண்டு வெளிவந்தார்கள்.

அதுபொழுது, "ஏ மு'ஹம்மத்'! நரகலோகத்தின் அதிகாரி 'ஆஜிரா' யிருக்கின்றார்; அவருக்கு ஸலாம் சொல்வீராக!" என்றோர் அசரீரி வாக்குக் கேட்டது. அதன் பிரகாரமே நபிகள் பெருமானார் திரும்பிப் பார்த்த

போது, நரக லோகத்தின் த்'ாரூ:கா வானவர் நாயகமவர்கட்கு ஸலாம் சொன்னார்.

மேலே கூறப்பட்டுள்ள இவ்விஷயங்க ளெல்லாம் நிகழ்ந்ததன் பின்னால் நபிகள்திலகம் (சல்) அவர்கள் மஸ்ஜிதெ' 'ஹராமுக்கு— (கஃ'ப'ாவுக்கு) வந்துசேர்ந்தார்கள். இவ்வளவும் நிகழ்ந்தது அன்றிரவின் மிக மிகக் குறுகிய கால அளவுக்குள்ளேதா னென்று சரித்திராசிரியர்கள் சான்று கூறுகின்றார்கள்.* நபிகள்திலகமவர்கள் பொழுது புலர்ந்ததன் பின்னும் 'ஹிஜ்ர் என்னும் அந்த 'ஹ:தீமிலேதான் இருந்தார்கள். அப்பொழுது அபூ'ஜஹ்ல் ஆங்குத் தோன்றி, நாயகமவர்களை விளித்து, "ஏ மு'ஹம்மத்'! எங்களுக்கு நீ ஒவ்வொருநாட் காலையிலும் சொல்லும் கதைகளைப் போன்று இன்று காலையிலும் ஏதேனும் கதை யொன்று சொல்லப் போகின்றனையா?" என்று வேடிக்கையாக வினவினான். அதற்கு நபி பெருமானா ரவர்கள், "ஆம்! இன்றிரவு பொழுது புலருமுன் யான் பை'த்துல்மு:கத்'த'ஸுக்குச் சென்று திரும்பியிருக்கிறேன்," என்று கூறினார்கள்.

இதனைக் கேட்டவுடனே அபூ'ஜஹ்ல் அதிக நகைப்புக் கொண்டு, எல்லாரையும் அழைப்பித்து, இக்கதையைக் கேட்குமாறு தூண்டினான். அதுபொழுது கஃ'ப'ாவைச் சூழ்ந்து :குறைஷித் தலைவர்கள் நிரம்பி யிருந்தனர்; அவர்களிடம் நாயகமவர்கள் மேற்கூறியவாறு தாங்கள் தரிசனம் செய்துவந்த அதிசயங்களை யெல்லாம் எடுத்துக் கூறினார்கள்; அதனைச் செவியேற்று அத்தலைவர்க ளெல்லாம் அளவில்லா ஆச்சரிய முற்றார்கள். அன்னவர்களுக்கு ஆத்ம ஞானக்கண் ணென்னும் மெய்ஞ்ஞான ஜோதி சிறிதும் உதயமாகாம லிருந்து வந்தமையால், நாயகமவர்கள் கூறிய இவ் வார்த்தைகளைக் கேட்டுப் பொய்யென்று (நஊ'து பி'ல்லாஹ்) கூறினார்கள். ஆங்குக் கூடியிருந்த ப'த்'மஆ'ஷீகள் தங்களுடைய அடக்க முடியா நகையால் கைகொட்டிச் சிரிக்கத் தலைப்பட்டனர்; மற்றும் பலர் தங்களுக் குண்டான அளவுகடந்த வெடிசிரிப்பால் தங்கள் மூளை வெடித்துப் போகா திருக்குமாறு தங்களுடைய சிரங்களைத் தங்கள் கரங்களைக்கொண்டு பத்திரமாய்ப் பற்றிக்கொண்டார்கள்.

அக்கணமே அபூ'ஜஹ்ல் அம் முஸ்லிம்களை அவமானப் படுத்திவிட வேண்டு மென்னும் கெட்ட எண்ணத்துடன் 'ஹ'ஜ்ரத் அபூ'பக்'ரிடம் ஓடி, "ஓய் அபூ'ப'க்ரே! உன்னுடைய மு'ஹம்மத்' சென்ற இரவு இங்கிருந்து பை'த்துல் மு:கத்'த'ஸ் சென்று, அங்கிருந்து விடியுமுன்னே திரும்பி மக்காவுக்கு வந்துவிட்டதாகக் கூறுகின்றார், பார்த்தீரா?" என்று மிகமிக ஏளனமாகக் கூறி, நையாண்டித்தனமாய் நகைத்தான். இதனால் 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் அவர்கள் பதில்கூற முடியாது அவமானமுற்று விடுவார்க

* இவ்வளவும் நிகழ்வுற்ற விருத்தாந்தத்தையும், இதற்கெல்லாம் ஏற்பட்ட நேரத்தின் சுருக்கத்தையும் கூர்ந்து நோக்குமிடத்து, இஃது ஆ'லமெ மலக்கூத் தென்னும் ஆன்ம உலகினில் ஆத்மா சஞ்சரித்து வந்ததாகத்தான் புலப்படாநின்றது. அதுதான் ஆச்சரியம்!

ளென்று அபூ’ஜஹ்ல் அதிக ஆவலுடனே எதிர்பார்த்து நின்றான். ஆனால், அவனுடைய எதிர்நோக்கத்திற்கு முற்றும் மாற்றமாக அபூ’ப’க்ர் (ரலி’) அவர்கள் நடந்துகொண்டார்கள். எவ்வா றெனின், இவ்வாறு நபிகள் பிரான் கூறியது உண்மைதானா வென்று ‘ஹ’ஜ்ரத் அபூ’ப’க்ர் வினவினார்கள்; அதற்கு அபூ’ஜஹ்ல் ஆமென்று மறுமொழி கூறினான். அதைக் கேட்டவுடன் அபூ’ப’க்ர் அவர்கள், “அந்த நபிகள் திலகம்மட்டும் ஒரு சிறிது நேரத்திற்குள்ளே ஏழுவானங்களுக்கும் சென்று வந்தார்க ளென்று கூறியிருப்பினும், அது முழுதும் மெய்யாகவே யிருந்திருக்கும்,” என்று பதின்மொழி பகர்ந்தார்கள். இக் காரணத்தி னாலேதான் ‘ஹ’ஜ்ரத் அபூ’ப’க்ர் அவர்கட்கு ஸி’த்’தீ’:க் கென்னும் பட்ட மளிக்கப்பட்ட தென்ப. [சென்ற மூன்று பாராவிலு முள்ள விஷயம் சில மௌலானா ஸையித்’ ஸுலைமான் நத்’வீ அவர்களுடைய நூலிலுள்ள தல்ல வென்பதை நீங்கள் அறியக் கடவீர்கள்.]

இன்னம், அந்த மௌலானா அவர்களே எழுதி யிருப்பதன் சாராம்ச மாவது:— அவ்வமயம் ஆங்குக் குழுமியிருந்த தலைவர்களுள் பலர் பெரிய வர்த்தகர்களா யிருந்தனர். ஆகவே, அன்னவர்கள் பற்பல சமயங்களில் பை’த்துல் மு:கத்’த’ஸுக்குச் சென்று வந்தவர்களா யிருந்தனர். ஆனால், நம் நபிகள்திலகம் மட்டும் ஆங்கெப்பொழுதுமே சென்றுவந்தது கிடையா தென்பதும் அன்னவர்களுக்குத் தெரியாம லில்லை. ஆதலின், அவர்கள் இவ் விஷயத்தைக் குறித்து நபிபெருமானைப் பரிசோதிக்கத் தொடங்கினார்கள். ஆகவே, அவர்கள் நாயக மவர்களை நோக்கி, “ஏ மு‘ஹம்மத்’! நீர் ஒரே இரவில் பை’த்துல் மு:கத்’த’ஸுக்குச் சென்று திரும்பி வந்துவிட்டதாய்க் கூறுகின்றீரே! இஃ துண்மையாயின், பை’த்துல் மு:கத்’த’ஸின் உருவங்களும் தோற்றங்களும் எவ்வா றிருக்கின்றன வென்பதை விளக்குவீராக!” என்று வினவினர். அதற்குக் கொடுத்த விடையில் நாயக மவர்கள், “எனதுள்ளத்தில் அக்கட்டிடத்தின் உருவம் சரியாய் அமைந்திருக்க வில்லை. எனவே, எனக்குச் சிறிது கிலேச மேற்பட்டது. உடனே திடீரென (இறைவனருளால்) அக்கட்டிடம் என் கண்முன்னே உயர்த்திக் காண்பிக்கப்பட்டது. பிறகு அந்தக் :குறைஷிகளின் வினாக்களுக் கெல்லாம் அதனைப் பார்த்துக்கொண்டே விடைகொடுத்து வந்தேன்,” என்று திருவுளம்பற்றி யுள்ளார்கள்.

மிஃ’ராஜ் நடைபெறு முன்னே நடந்த சம்பவத்தைக் குறித்து மேற்கூறிய மௌலானா அவர்களே இவ்வாறு எழுதுகிறார்கள்: அதுசமயம் இஸ்லாத்துக்கு வந்திருந்த கஷ்டமும் ஆபத்தும் நீங்க வேண்டியனவா யிருந்தன. பிறகு சமீபத்தில் ஹிஜ்ரத்துக்குப் பின்னே இஸ்லாத்துக்குப் புதியதொரு சகாப்தம் தோன்ற வேண்டியதாயு மிருந்தது. எனவே, அதனைப் பூர்த்திசெய்ய இன்றியமையாத இரவொன்று வந்து தோன்றிற்று. அதனினும், நபிகள்பெருமான் பரிசுத்தபரமபதயாத்திரை சென்று,

ஆண்டவ னிடத்திலிருந்து சில சொந்தமான கட்டளைகளைக் கொண்டுவர வேண்டிய வேளையும் வந்துற்றது. ஆகலின், சுவர்க்கலோக அதிபதியான ரில்'வான், "புதிய சாமான்களைக் கொண்டு சுவனபதியை அலங்காரம் செய்யவேண்டும். உலகினருக்கே சாக்ஷியான ஒருவர் இங்கு விருந்தினராக விஜயம் செய்யப் போகின்ருர்," என்று கட்டளை யிடப்பெற்ருர். லாஹூத் தென்னும் தெய்வலோக யாத்திரிகர்கட்காக ஏற்பட்டுள்ள, மின்னலே போலப் பறந்துசெல்லும் ஏறுவாகனமாகிய பு'ரா:க்கை* ம:காமெ இப்'ராஹீம்—(கஃ'ப்'ா) என்னும் ஸ்தலத்துக்குக் கொணருமாறு ரூ'ஹுல் அமீன்—(ஜிப்'ரீல்) உத்தர விடப்பெற்ருர். இன்னம், பஞ்ச பூதங்களின் அதிபதிகள், ஆகாயம், நெருப்பு, காற்று, மண், தண்ணீர் முதலியவற்றின் சுபாவங்களையும், அவற்றின் சட்டங்களையும் சிறிது போழ்தைக்கு இல்லாமற் செய்துவிட வேண்டுமென்றும், இவ்வாறே இடம், காலம், பிரயாண தூரம், கேள்வி, பார்வை, வார்த்தை முதலியன போன்றவற்றின் தடையை நீக்கி விட வேண்டுமென்றும் கட்டளைகள் விடுக்கப்பட்டன.

இத்தகைய மிஃ'ரா ஜென்பது முஸ்லிம்களின் மதிப்பிலே மகா முக்கியமான தாகவும், ஆனுல், சாமான்ய மனிதனது சாதாரண மூளைக்கு எட்டாத தாகவும், இவனது அறிவுள் அதிசீக்கிரம் நுழையக் கூடாத தாகவுமே அமைந் திருக்கின்றமையான், இதன் மெய்யான தன்மையைப் பற்றி மீக்கூறிய மௌலாஞ அவர்களே என்ன கூறி யிருக்கின்ருர்களென்பதை ஈண்டுச் சிறிது ஆராய்ந்து பார்க்கக் கடவோம். நபிகள் திலகத்தின் மிஃ'ராஜ் அவர்களது ஸ்தூல சரீரத்துடன் நடைபெற்றதா? அல்லது அவர்களது ஸூக்ஷ்ம ஆவிமட்டுந்தான் அப் பரிசுத்த பரமபத யாத்திரையை முடித்துக்கொண்டு வந்ததா? என்பதுபற்றி மௌலாஞ அவர்களுடைய ஆராய்ச்சி முடிவு இதுவாகும்:— "ஆ'லமெ ப்'ர்'ஜகு'க்கும் ஆ'லமெ மி:தாலுக்கும்— (இந்தப் பூதவுலகுக்கும் அந்த ஆன்ம உலகுக்கும்) இடையில் மற்ருேருலகம் காணக் கிடக்கின்றது. அதில் ஸ்தூலத்துக்கு ஸூக்கும உலகின் விஷயங்களெல்லாம் நன்கு புலனுகும். அதுபொழுது ஆன்ம உலகினின்று வெளியாகும் அவ் விஷயத் தோற்றங்களெல்லாம் ஜடசம்பந்தமானவை போலவேதான் காணப்படும். எனவே நாயகமவர்கட்கு மிஃ'ரா ஜென்பது விழிப்பு நிலையில் இந்தச் சரீரத்துடனேதான் நிகழ்வுற்றது. அஃதாவது, அவர்கள் ஆ'லமெ ப்'ர்'ஜகி' லிருந்தபோது, இங்கிருந்தவண்ணமே ஆன்மஉலகுக்குச் சென்று யாத்திரை செய்து வந்தார்கள். அந்த ஆன்ம உலகத்திலேதான் நபிகள் திலகம் பற்பல விதமான விஷயங்களையும், அவ்வவற்றிற்குரிய பலப்பல விதமான தோற்ற பேதத்துடனே நேருக்கு நேராய்க் கண்டுகொண்டார்கள். அஃது எல்லாரும் போய்ப் பார்த்துவிட்டு வந்துவிடலாமென்று எண்ணும் ஒரு சர்வ சாதாரண உலக

---

* ப்'ர்:க்— மின்னல் வெட்டும் ஒளி— மின்சாரம் electricity. அதனுலாய பறக்கும் வாகனம் பு'ரா:க் என்னப்படுகிறது.

மன்று," என்று பலவாறு ஸூ'பியாக்களுள் சிறந்துவிளங்கும் ஷா(ஹ்) வலீயுல்லா(ஹ்) மு'ஹத்'தி'ஸ் தெ'ஹ்லவீ வரைந் துள்ளார்கள். எனவே, நபிமார்களின் ஸ்தூலசரீரம் இங்கிருக்குங்கால், ஸூக்ஷ்மஆவி மட்டுமே ஆ'லமெ மலக்கூத் (தென்னும் அப் பரிசுத்த உலகத்)திற்குச் சென்று, இவ்வாறு சஞ்சாரம் செய்துவருவ துண்டென்று நாம் நன்கு தெரிந்து கொள்ளுகிறோம். ஆதலினால்தான், அதுசமயம் ஸ்தூலதேகத்தின் இந் நேத்திரங்களால் காணுதற்குரிய சகலவித சட்ட திட்டங்களும், ஸ்தூல சரீர சம்பந்தமான மற்றெல்லாக் காரியங்களும் அன்னவர்களை விட்டு அப்புறப் படுத்தப்படுகின்றன. இவ்வாறே இந்த ஸ்தூலதேகச் செவி களால் கேட்கப்படக் கூடிய இவ்வுலக சம்பந்தமான வியவகாரங்க ளனைத்துங்கூட விலக்கப்பட்டு விடுகின்றன. இடம், பொருள், காலம் எனப்படும் எல்லாவிதத் தடை (திரை)களும் அவர்களை விட்டு நீக்கப்பட்டு விடுகின்றன. அதுசமயம் வானங்களிலும் பூமியிலு முள்ள எல்லாவித இரகசியங்களும் அன்னவர்முன்னே வந்து நிற்கின்றன. பிறகு அவர்கள் "நூரானிய்யத்" தென்னும் பரிசுத்தஒளியின் சுவனலோக ஆபரணங்களை அணிந்து கொண்டு, அமரர்களாகிய "மலாயி(க்)கத்து" களின் ஆத்மார்த்தக் கூட்டங்களுடனே சேர்ந்துகொண்டு, அல்லா(ஹ்)வின் திருமுன்பினில் ஆ'ஜி ராகின்றார்கள்.

எனவே, இந்த மிஃ'ராஜின் விஷயமோ, மகா ஸூக்ஷ்ம முள்ளகாரிய மாய்க் காணப்படாநின்றது. ஆதலினால்தான், சாமான்ய மக்களின் மூளையுள் இந்த மிகவு நுட்பமான உண்மை நுழையக்கூடியதா யில்லை. இக்காரணத்தினால்தான் மேற்கூறியவாறு மிஃ'ராஜென்பது ஆன்மஉலக யாத்திரை யென்று கூறத் தொடங்குமுன்னே பல சாமான்ய மாக்கள் நபிகள் திலகத்தின் மிஃ'ராஜை "வெறுங் கன"வென்று கூறியதாகக் குற்றஞ் சாட்ட முற்பட்டு விடுகின்றனர். ஆனால், இப்'னு அ'ப்'பா'ஸ் அவர்க ளுடைய வியாக்யானப் பிரகாரம் நாயக மவர்களின் மிஃ'ராஜென்பது "வெறுங்கனவு"தான் என்று கூறப்படுவது கூடாதென்று நாம் நன்கு தெளிந்து கொள்ளுகிறோம். இன்னம், ஷுரைக்கின் வாயிலாய்க் காணப் படும் 'ஹ'ஜ்ரத் அனஸ் அவர்களது ரிவாயத்தில், "இந்த மிஃ'ராஜின் விஷயம் நாயக மவர்களின் கண் தூங்கிக்கொண்டும், அவர்களின் ஹிருதய கமலம் விழித்துக் கொண்டும் இருந்த அதுசமயந்தான் நடைபெற்றது," என்று நன்று கண்டு கொள்ளுகிறோம். ஆனால், கனவின்தன்மை இது வன்று. இதுவுமல்லாமல், ச'ஹீ'ஹனில் நபிகள் பெருமானின் திருவாயி னின்று வெளியானதாய் 'ஹ'ஜ்ரத் மாலிக் பி'ன் ஸஃ'ஸஆ' அவர்கள் வாயிலாய் ஒரு நாயகவாக்கியம் (பு'க'ாரீயி ல்) காணக்கிடக்கின்றது: "யான் கஃ'ப'ாவில் தூக்கத்துக்கும் விழிப்புக்கு மிடையே யுண்டான ஒரு நடுநிலையி லிருந்தேன்." ஆனால், சாதாரண மனிதர்கள் இத்தகைய நிலைமையில் இருந்துகொண்டு உண்மையான கனவுகாண்பது வழக்கமில்லை. மேலும்,

"நாயக மவர்களின் சரீரம் (இங்கிருந்து) மறைந்துபோய் மிஃ'ராஜ் உண்டாக வில்லை. ஆனால், அவர்களுக்கு ஆன்மசம்பந்தமான மிஃ'ராஜே தான் நடைபெற்றது," என்று பீ'பீ ஆ'யிஷா கூறுகின்றார்கள்.— (இப்'னு ஜரீர், இப்'னு ஹிஷாம் நோக்க)

மேலே காட்டிவந்த விவரங்களினால் நாம் தெளிந்துகொள்ள வேண்டிய தென்னவெனின், நாயகமவர்களை அடுத்துவந்த ஆதிக் கூட்டத்திலேயே மிஃ'ராஜ் என்பது ரூ'ஹானிதான் என்று சர்வ சதாரணமாய்க் கருதப்பட்டு வந்திருக்கின்ற தென்பதே யாம். இக் காரணத்தினால்தான் மிஃ'ராஜ் ரூ'ஹானிதா னென்று கூறப்பட்ட பற்பல கூட்டங்களில் 'ஹ'ஜ்ரத் 'ஹஸன் ப'ஸரீ(ரஹ்) அவர்கள் பிரசன்னமா யிருந்தும், அதை அப்படியே ஒப்புக்கொண்டு மறுக்காம லிருந்துகொண் டிருந்தார்கள். ஆனால், இந்த விதமான ஆன்ம உலக உவமதரிசனத் தோற்றத்திற்கு "ரூயா" என்றும் பெயர் சொல்லப்படுவதனால்தான் அது "வெறுங்கன"வாகக் கொள்ளப்படு தல் கூடுமென்று சாமான்யமக்கள் சந்தேகப் படுகின்றனர். உண்மையிலே அந்த மிஃ'ராஜ் சர்வசாதாரண மான ஒரு வெறுங் கனவன்று. ஆனால், அஃது உடலை விட்டு ஆன்மா மட்டும் தனியே பிரிந்துசென்று செய்த பிரயாணமாகும். எனவேதான், முரடர்களான அந்தக் :குறைஷி மறமாக் கள் எளிதில் இவ்வுயரிய அரிய விஷயத்தை உணர்ந்துகொள்ள முடியாத வர்களாய் இருந்து வந்தனர்கள். ஆகலின், "ரூயா" என்று சொன்ன மாத்திரத்திலே சர்வசாதாரணமாய் மனிதர்கள் காணும் "கனவே" போன்றுதான் உள்ளதென்று கொள்ளுவது இம் மனிதர்களின் அறியா மையேயன்றி, வேறொன்றுமா யில்லையென்றே கூறியமைவாம்.

உண்மையை உய்த்து நோக்குமிடத்து, "ரூயா" என்னும் பதம், சாதாரண மக்கள் காணுங் கனவுக்கும், நபிமார்களின் உண்மையான சூக்ஷ்ம ஆத்மதரிசனத் தோற்றத்திற்கும் பெயரளவிலே மட்டும் ஒன்றாகக் காணப்படுகின்ற தல்லது, தாத்பர்யங்களில் அவ்விரண்டும் ஒன்றுக்கொன்று முற்றும் முரண்பட்டன வாகவே அமைந்து கிடக்கின்றன. எவ்வா றெனின், நபிமார்களுக் குண்டாகும் ஆத்மதரிசனத் தோற்றத்தின் போழ்து அவர்க ளுடைய நேத்திரங்க ளிரண்டும் மூடப்பட் டிருக்கின்றன; ஆயினும், அவர் களுடைய ஹிருதயங்கள் முற்றும் விழித்துக்கொண்டே யிருக்கின்றன. ஆனால், சாதாரண மனிதர்களின் கனவுகளோ, இதற்கு விரோதமாய் அமைந்து கிடக்கின்றன. என்னெனின், சாதாரண மக்களின் கனவுக ளெல்லாம் ஆன்ம உலகிலும், பரிசுத்த மலக்கூத்திலும் சென்று யாத்திரை செய்ய முடியாம லிருக்கின்றன. நபிமார்களின் மேலான ஆத்மதரிசனத் தோற்றங்களில் அன்னவர்களின் ஆவி ஆன்ம உலகிலும், பரிசுத்த மலக் கூத்திலும் சென்று சுற்றிக்கொண்டு வருவதல்லாமல், விழிப்பு நிலையிலே காணும் பாவனையாகவே ஒவ்வோர் உண்மையையும் மகா நிச்சயமாய் உணர்ந்துகொண்டு வருகின்றது. இவ்வாறாய இரகசியங்களையே ச'ஹாப'ாக்

களும் மற்றுமுள்ள பெரியார்களும் "ரூயா" என்னும் பதத்தைக்கொண்டு உருவகமுகமாய்ச் சுட்டிக்காட்டிச் சென்றனர். ஆ'லமெ மலக்கூத் தென்னும் அந்தப் பரிசுத்த உலகில் நடக்கக்கூடிய ஒவ்வொரு விஷயமும் மகா உண்மையான தாகவே காணப்பட்டு வருதலினுல், அதைப் பொய் யென்று எந்த உண்மையான முஸ்லிமும் மனமாரக் கூறத் துணியான். அவ்வாறு துணிந்தால், அவன் மெய்யான மூமினுயிருப்பது முடியாது.

மனிதன் நித்திரை செய்யும்போது, அவனது ஆத்மா தனது சரீர சம்பந்தத்தைச் சற்றே விட்டு விலகி யிருக்கின்றது. ஆதலின், அதுசமயம் அவன் பரிசுத்தஉலகில் காணக்கிடக்கும் பேராச்சரியங்களுள் சிலவற்றையே கண்டு களிக்கின்ருன். மனிதன் எத்துணைக் காலம் ஜீவித்திருப்பினும், இறுதியிலே ஒரு நேரம் இந்தச் சரீரத்தின் சம்பந்தத்தை விட்டு ஆத்மா முற்றும் விலகிக்கொள்ளு மாயின், அவன் மரணமடைகின்ருன்; அதன் பின்னரேதான் அந்த ஆன்மா ஏகசந்தோஷங் கொண்டு எதேச்சையாய்த் திரியத் துணிகின்றது. ஆனுல், மற்ருெரு சாரார் இப்பஞ்சபூத சரீரத் துடனே இவ்வுலகில் வாழ்ந்துவரும் போழ்தே, அவர்களுடைய ஆன்மா வானது தனக்குரிய உன்னதப் பதவியினுல் இந்தச் சரீரசம்பந்தத்தை விட்டு நீங்கி, ஆன்ம உலகின் பக்கல் சென்று, ஆங்குள்ள ஆச்சரியங்களைக் கண்டு, மீண்டும் தன்னுடைய சொந்தக் கூண்டுக்குள்ளே வந்து நுழைந்துகொள்ளு கின்றது. இவ்வாறு சுற்றிக்கொண்டு வரும் இந்தப் பிரயாணத்திற்கே "ரூயாயெ சாதி':கா"—(உண்மைத் தோற்றம்) என்றும், "ரூயாயெ நுபு'வ்வத்"—(நபித்துவத்தின் தோற்றம்) என்றும் நாம் நாமஞ்சூட்டி வருகின்ருேம்.

இஃது ஒருபக்கல் கிடக்க. 'ஹா'பிஸ் இப்'னு ::கயிம் தங்களுடைய உயர்தரக் கோவையான ஜாது'ல் மஆ'த்' என்னும் கிரந்தத்தில் இந்த மிஃ'ராஜ் சம்பந்தமாய்ப் பின்காணுமாறு வரைந் திருக்கின்ருர்கள். அதனை நன்கு கவனிப்பீர்களாக:—" 'ஹ'ஜ்ரத் ஆ'யிஷா முஆ'வியா ஆகிய அவ் விருவர்களினின்றும் இப்'னு இஸ்'ஹா:க் ரிவாயத் செய்கின்ருர்: மிஃ'ராஜின் போது நாயகமவர்களின் ரூ'ஹேதான் கொண்டு செல்லப்பட்டது. அவர் களது பரிசுத்த தேகம் உடன்செல்ல வில்லை. (அஃதாவது, அம்மேனி இவ் வுலகிலேதான் இருந்த விடத்திலே இருந்தது).........இதனுல் நாயகமவர்கள் சொப்பனந்தான் கண்டார்க ளென்பது இதன் கருத்தன்று. மனிதன் மரணமடைந்த வுடனே அவனுடைய ஆன்மா பிரிந்து சென்று விடுவதே போல, நாயக மவர்களின் பரிசுத்த ஆன்மாவும் வானத்தின் பக்கலே உயர்த்திச் செல்லப்பட்டது. மற்றெல்லா ஆன்மாக்களும் சரீரத்தை விட்டுப் பிரிந்ததன்பின்னர் ஆண்டவன் சமுகத்தை அடைவதே போலத் தான், நாயகமவர்களின் உன்னதமான ஆன்மாவும் அதுசமயம் அல்லா(ஹ்) வின் சன்னிதானம் சென்று, தான் நாடிய நாட்டத்தைப் பூர்த்தி செய்து கொண்டு, மீண்டும் இவ்வுலகின்கண் வந்து தோன்றிற்று. எனவே,

மற்றெல்லா ஆன்மாக்களும் தம்முடைய சரீர சம்பந்தத்தை நீக்கிக்கொண்டதன் பின்னே அடையக்கூடிய விஷயங்களை யெல்லாம் மரணமடைதற்கு முன்னமேயே இவ்வுலகத்தி லிருந்தவண்ணமே நாயகமவர்கள் அடைந்தார்களென்றால், அஃதெத்துணை மேலான தென்றும், சிரேஷ்டமான தென்றும், நாம் சொல்லவேண்டுவ தின்று.........இவ் விஷயத்தை மூர்க்கர்களும், முரட்டுஞான முள்ளவர்களும், மெய்ஞ்ஞானத்தை விரும்பாத போலி ஞானிகளும் எளிதில் விளங்கிக் கொள்வது ஒரு கஷ்டசாத்தியமான காரியமே யாகும்."

ஆதலின், ஆண்டவனது அருளைப்பெற்ற மெய்ஞ்ஞானப் பெரியார்கள் இந்த இரகசியத்தை மிகஎளிதிலே உணர்ந்து கொள்ளுவார்கள். ஆண்டவனது நூரை (ஜோதியை)யடைய நாட்டமில்லா நண்பர்கள் இந்நுண்ணிய விஷயத்தை உணர்ந்து கொள்ளுவ தென்பது ஒருசிறிது கஷ்டசாத்தியமான காரியமாகவே காணப்படாநின்றது. [நாயகமவர்களின் மிஃ'ராஜின்போது அவர்கள் கண்டுகளித்த ஆத்மதரிசனத் தோற்றங்களின் விவரங்க ளனைத்தையும் ஸூ'பீ ஷா(ஹ்) வலீயுல்லா மு'ஹத்'தி'ஸ் தெ'ஹ்லவீ அவர்களால் வரையப்பட்டுள்ள "ஹுஜ்ஜ(த்) துல்லாஹில் ப'ாலி:கா" என்னும் மாண்பு மிக்க மஹாகிரந்தத்தில் மிகநன்றாய் விளங்கிக் கொள்ளுவீர்கள். வேண்டுவோர் அதில் அதிகம் பார்த்துக் கொள்ளலாம். ஆனால், இங்கு அவர்களது ஒரு குறிப்பை மட்டுமே தருகின்றோம்; கவனிக்க: நபிகள் நாயகமவர்கள் நெடுந்தூரப் பள்ளிவரை கொண்டுசெல்லப் பட்டார்கள். பின்னர் ஸித்'ரத்துல் முன்தஹா வரையும், அதன் பிறகு அல்லா(ஹ்) நாடிய தூரம் வரை யெல்லாமும் கொண்டு செல்லப்பட்டார்கள். இவையனைத்தும் நபிகள்(சல்) அவர்களுடைய (ஆன்ம)தேகத்துக்கே விழிப்புநிலையில் நடந்தேறியது. ஆனால், இவ் விண்ணுலகப் பிரயாண நிகழ்ச்சிக ளெல்லாம் ஸ்தூல உலகுக்கும், ஸூக்ஷ்ம உலகுக்கும் இடையேயுள்ள மத்திய உலகமான அ'லமெ ப'ர்'ஜகி'லேதான் நிறைவேறிற் றென்பதுதான் உண்மை. ஆகவே, அதுசமயம் அவர்களின் சரீரம் ஆன்மாவின் கட்டளைகளுக் குட்பட்டதா யிருந்தது. ஆகையால், ஆன்மாவும் ஆன்மாவின் சூக்ஷுமக் காட்சிகளும் ஸ்தூலமாகவே அதுசமயம் தோன்ற லாயின. இதனால்தான், நாயகம் அவர்கள் அதுசமயம் கண்ட ஒவ்வொரு காட்சியும் ஒரு சூக்ஷுமத் தாத்பரியத்தைக் கொண்டதா யிருக்கின்றது.*]

[லாஹூர் மௌலானா முஹ'ம்மத்'லீ தமது ஆங்கிலக் :குர்ஆன், ப'னீ இஸ்ராயீல் (ஸுப்''ஹானல்ல'தீ) ஸூரா, ஆயத் 60-இன் கீழே† இவ்வாறு எழுதுகிறார்:]

---

* ஹுஜ்ஜத். வால். 2, பக். 154.— யாம் கூறுவதும் இதுவேயாம்.

† அவ்வாயத் வருமாறு: "இன்னம், 'நிச்சயமாக, உம்முடைய ரக்ஷகன் மானிடர்களை அடைய வளைந்துகொண் டிருக்கின்றான்,' என்று நாம் உமக்குச் சொன்னபொழுது,

இவ்விடத்தில் குறிக்கப்பட்டுள்ள விஷயம் நபிகள்திலகத்தின் (சல்) **விண்ணேற்றம்** என்னும் ஆன்ம உலக சஞ்சாரத்தையே சுட்டிக் காட்டுகிற தென்று அநேகமாக எல்லா வியாக்யானிகளும் ஏற்றுக்கொண் டிருக்கிறார்கள் (பு'கா'ரீ, ரா'ஜீ); அந்தத் துரிய தரிசனத் தோற்றமானது (ரூயா) ஹிஜ்ரத்துக்குப் பின்னே நபிபெருமானுக்கு நல்லதொரு பெரு வெற்றி கிடைக்கப் போகிற தென்பதை முன்னறிவித்துக் காண்பித்தது; என்னெனின், அந்த விண்ணேற்றத்திற்குரிய துரியதரிசனம் அவ்வண்ணமாகத் தான் தாத்பர்யம் கொள்ளப்பட வேண்டியதா யிருக்கிறது. நபிகள் பெருமான் விண்ணுலகுக்கு ஏறிச் சென்றது இந்த ஸ்தூல சரீரத்துடனா? அல்லது சூக்ஷ்ம (ஆன்ம) சரீரத்துடனா? என்னும் விஷயத்தில் கற்றோர் களுக்கிடையே அபிப்பிராய பேதம் இருந்தே வருகிறது; அவ்விண்ணுலகக் காட்சி ஸ்தூல தேகத்துடனேதான் நிகழ்வுற்ற தென்று பெரும்பான்மையோர் கூறிவருகிறார்கள்; ஆனால், சூக்ஷ்ம தேகத்துடனேதான் அது நிகழ்வுற்றதென்று ஆ'யிஷா பிராட்டி போன்ற அறிவாளிகள் அபிப்பிராயம் கூறுகிறார்கள்; முஆ'வியாவும் இவ்வாறே கூறியுள்ளார்; இவ்வாயத்தில், "நாம் உமக்குக் காண்பித்த துரியதரிசனம் (ரூயா)" என்று வெளிப்படையான வசனங்களைக் கொண்டு அந்த விண்ணேற்றம் வர்ணிக்கப்பட்டிருக்கின்றமையால், நபி பெருமானின் சூக்ஷ்ம சரீரந்தான் அந்த விண்ணுலகுக்குச் சென்று ஆன்ம உலக சஞ்சாரம் புரிந்துவந்த தென்பதே சரியான அபிப்பிராயமாய்த் தோன்றுகின்றது. :குர்ஆன் மஜீத்' பற்பல இடங்களில் சூக்ஷமதர்சனங்களைக் குறித்துக் கூறுங்கால், அவை அப்படிப்பட்ட "சூக்ஷ்ம தர்சனங்கள்" என்று விவரித்துக் காட்டாமலே கூறியிருக்கிறது. ஆனால், இவ்விடத்திலோ, அஃதொரு ரூயா (தூரிய தரிசனம்) என்று வெளிப்படையாய்ச் சொல்லப்பட் டிருக்குங்கால், அது ஸ்தூல தேகத்துடனா? அல்லது சூக்ஷ்ம தேகத்துடனா? என்பது குறித்த ஐயமே எழுதற்கு அவசியமில்லை. நபிகள் திலகத்தின் திருவாக்கியங்கள், அஃதொரு ஸ்தூலதேக யாத்திரையே தான் என்பதைச் செவ்வனே விளக்கிக் காண்பிக்கவில்லை; ஆயின், அது சம்பந்தமாய்க் கூறப்பட்டுள்ள விவரங்களைக் கூர்ந்து கவனிக்கு மிடத்து, திட்டமாகவே அஃதோர் ஆன்ம உலக சஞ்சாரந்தான் என்னும் உண்மை நன்கறியக் கிடக்கின்றது. எவ்வாறெனின், ஷ'ரைக்கின் வாயிலாய் வந்திருக்கும் ஒரு விஷயத்தில், வானவர் (ஜிப்'ரீல்) நபி பெருமானார்பால் விஜயஞ்செய் தாரென்று காணப்படா நின்றது: في ليلة اخرى فيما يرى قلبه وتنام عينه ولا ينام قلبه இதன்பொருள், "அவர்களுடைய ஹிருதயம் (விஷயாதிகளைப்) பார்த்துக் கொண்டும், அவர்களுடைய நேத்திரங்கள் உறங்கிக் கொண்டும் (ஆயின்,

---

(நிகழ்ந்ததை நினைத்துப் பார்க்க). இன்னம், நாம் உமக்குக் காண்பித்த துரியதரிசனத்தையும் — (ரூயாவையும்) :குர்ஆனில் முனியப்பட்ட மரத்தையும் மனிதர்களுக்குச் சோதனையாகவே யன்றி (வேறாக) நாம் செய்யவில்லை.....," (17 : 60).

அன்னவர்க ளுடைய ஹிருதயம் உறங்கிவிடவே யில்லை) இருந்த அன்றோர் இரவில்;" என்பதாகும்; இவ் வாக்கியத்தின் இறுதியிலே,

واستيقظ وهو في مسجد الحرام என்னும் சொற்கள் காணப்படாநின்றன; அஃதா வது, "மேலும் அவர்கள் விழித்துப் பார்த்தார்கள்; இன்னம், அன்னவர் கள் பரிசுத்த மஸ்ஜிதி'லே யிருந்தார்கள்" [பு'கா'ரீ, கி(த்)தாபு'த் தவ்'ஹீத்'] இனியொரு குறிப்பில், அந்த விண்ணேற்றத்தின் பொழுது அவர்கள் என்ன நிலையில் இருந்து வந்தார்க ளென்னும் விஷயம் இவ் வாறு காணப்படா நின்றது: بينا انا بين النائم واليقظان அஃதாவது, "உறங் கிக்கொண் டிருக்கும் ஒருவனுக்கும், விழித்துக்கொண் டிருக்கும் ஒருவ னுக்கும் நடுவேயுள்ள நிலையில் நான் இருந்து வந்தபொழுது," என்ப தாகும். இதனால் உண்மையிலே நபிபெருமான்(சல்) அயர்ந்து உறங்கிவிட வில்லை யென்பது திண்ணமாய் விளங்கக் கிடக்கிறது; அவர்கள் கனவு தான் கண்டார்க ளென்று சொல்வதற் கில்லை; ஆனால், சூக்ஷ்மதர்சன நிலையிலே நிச்சயமாக இருந்து வந்தார்கள்; ஆகவே, அதுகாலை அவர்கள் இப்பஞ்சபூத ஸ்தூல தேகத்துடனே ஆகாயத்தில் உயர்த்தப்பட வில்லை. ஆயின், அப் பெருமானார் அல்லாஹு^த் தஆ'லாவின் திருச்சன்னிதானத் திலே மெய்யாகவே கொண்டு செல்லப்பட்டார்கள்; அவ்விடத்தில் அநேக விதமான ஆச்சர்ய அற்புதங்க ளெல்லாம் அவர்களுக்குக் காண்பிக்கப் பட்டன; ஆனாலும், அவ்வாறு உயர்த்திக்கொண்டு செல்லப்பட்டது அன்னவர்களின் ஆன்மாவாக மட்டுமே இருந்துவந்தது; ஆகையால், தங்க ளுடைய ஆத்மதர்சன நேத்திரங்களைக் கொண்டே அவ் வற்புதங்களை யெல்லாம் அப் பெருமானார் கண்டுகளித்தார்க ளல்லது, இப் பஞ்சபூத சரீரத்திற்குரிய பௌதிகக் கண்களால் காணவில்லை; என்னெனின், ஆன்ம உலக அதிசயங்களை ஆன்ம நிலைக்குரிய அகக்கண்களே (புறக்கண்களல்ல) கண்டுகொள்வது சாலும். இவ்வாறு அவர்கள் கண்ட சூக்ஷ்மதர்சனக் காட்சி ஒரு முக்கியமான குறிப்பைக் கொள்ளாது போய்விட வில்லை; அஃதாவது, புறக்கண் கொண்டு பார்ப்பவர்களுக்கு மிகவும் உதவியற்ற எளிய நிலையில் இருந்து வந்ததேபோல் அவர்களது நிலைமை காணப்பட்டு வந்த அந்த நெருக்கடியான நேரத்திலே அகக்கண் கொண்டு அந்த அதிசயக் காட்சியைக் கண்டார்கள்; அஃதாவது ஒரு மாபெரும் எதிர்கால வெற்றி வாழ்க்கை அவர்களுக்கு முன்னே இருந்துவந்த தென்னும் பெருமையை அப்பெருமானார் அறிந்து கொள்ளச் செய்யப்பட்டார்கள். எப்பொழுதும் போலவே அவர்களுடைய :குறைஷ்குல எதிரிகள் அத்தகைய சூக்ஷ்ம தர்சனக் காட்சியை நம்பாமல் பெரியதோர் ஏளனத்தைக் கிளப்பி எள்ளி நகையாடினார்கள். —

ஆனால், இத்தகைய உத்தமமான உயரிய ஆத்மதரிசன விஷயத்தை அந்த மட்டப்புத்தியுள்ள விரோத அஞ்ஞான அரபிகள் எவ்வாறு உணர்ந்

திருத்தல் சாலும்? தீக்ஷண்ய புத்தியுள்ளவர்களேயும் அதிகம் பிரமிக்கச் செய்யக்கூடிய இவ்வரிய விஷயத்தின் பெருமையை அன்னவர் ஒருசிறிதும் அறிந்துகொள்ளாது அதிகம் பரிகாசம் பண்ணிக் கைகொட்டி நகையாடத் துணிந்தனர். நபிபெருமானின் ஆத்மஞான முதிர்ச்சியைத் தினைத்துணையும் கிராஹ்யம் செய்துகொள்ள முடியாத அம் முரட்டுக் கு'ப்'பார்கள், இன்னமும் அதிகமான பைத்தியமே (நஊ''து பி'ல்லாஹ்) நம் பெருமானுருக்குப் பிடித்துவிட்ட தென்று வீண்புரளி பண்ணத் துணிந்தனர். ஆனால், அல்லா(ஹ்)வின்மீது சற்றும்தளரா உறுதிகொண் டிருந்த நபிகள்திலகம்(சல்) எவருடைய புகழையும் இகழையும் சற்றும் பொருட்படுத்தாது, தங்கள் காரியத்தின் மீதே கண்ணுங் கருத்துமா யிருந்துவந்தார்கள்.

"அடுக்கி வரினும் அழிவிலான் உற்ற
இடுக்கண் இடுக்கட் படும்,"— என்றூர் குறளுடைப் பெரியார் திருவள்ளுவனாரும்.

---

# அதிகாரம் — 16

## இரண்டாவ தறுதியும் எதிரிகளின் ஏற்பாடும்

"இன்னம் அல்லா(ஹ்)வின் பாதையிலும், 'எங்கள் ரக்ஷகா! இந்நகரை விட்டு— இங்குள்ளவர்கள் அநியாயக் காரர்களா யிருக்கிறூர்கள்— எங்களை நீ அப்புறப்படுத்துவாயாக; இன்னம், எங்களுக்கு உன்பாலிருந்து ஒரு பாதுகாவலரை ஏற்படுத்தக் கடவாய்; மேலும், எங்களுக்கு உன் பாலிருந்து ஓர் உதவியாளரை ஏற்படுத்தக் கடவாய்,' என்று கூறுகின்றவர்க ளாகிய ஆடவர் பெண்டிர் குழந்தைகள் (ஆகியவர்கள்) உள்ளிருந்து அசக்தர்களா யுள்ளவர்கள் சார்பிலும் நீங்கள் போர் புரியாதிருக்க உங்களுக்கென்ன (காரணம்) நேர்ந்துவிட்டது?"— (4: 75)

அ':கப்'ா (அல்லது, உ':க்ப்'ா— மினு) என்னும் சிறு குன்றின்மீது சென்ற ஆண்டின்போது பன்னிரு மதீனு வாசிகள் வந்து ரஸூலுல்லா(ஹ்) அவர்களிடம் தாங்கள் இனித் தங்களுடைய பண்டை அஞ்ஞான மதத்தை அனுஷ்டியாது, இனி இஸ்லாமிய ஸுஞ்ஞான மார்க்கத்தையே பின்பற்றுவதாக அறுதியிட்டு உறுதிகூறிச் சென்றதன்பின்னே, நபிகள் பெருமானுரது நிலைமை மிக்க மனக்கவலைக் குரியதாய்த் தினேதினே மாறி வந்துகொண்டேயிருந்தது. மதீனுவுக்குள் தீ'னுல் இஸ்லாத்தின் தெய்விகவித்துத் தெளிக்

கப்பட் டாயிற்று. ஆனால், அதன் பசும்பயிர் எவ்வா ருகுமென்பது எவருக்குமே தெரிய மாட்டாது. மக்காவிலுள்ள வன்கண் :குறைஷியர் வர்மங் கொண்டு எதிர்த்துநிற்கத் தொடங்கியதே போல, மதீனாவிலும் பலப்பல எதிரிகள் இப்பால்ய இஸ்லாத்திற்கு விரோதமாய் ஒருகால் கிளைத்துவிடுதல் கூடும். அல்லது ஆங்குள்ள எஹூதிகளே—(யூதர்களே) நபி பெருமானுக்கு விரோதமாய் மாறிவிடுதலுங் கூடும். ஆதலின், அம் மதீனாவின் முடிவு என்னவாதல் கூடுமென்று எவரே இதுபோழ்து திட்டமாய் முற்கூறியமைதல் சாலும்? மக்காவின்கண்ணோ, இனி ஆங்கொன்றும் இஸ்லாமிய பிரசாரம் செய்வதற்கு முடியாத முறையிலே அக்கொடுங் :குறைஷியரின் கோபாக்கினி அதிகம் மூண்டு கொண்டே யிருந்தது. மிஃ'ராஜுக்குப் பின்னே முஸ்லிம்க ளனைவரும் தங்களுக்குக் கடமையாக விதிக்கப்பட்டுள்ள தினமைந்து வேளைத் தொழுகைகளையும் நித்திய நியமத் துடனே நன்கு நிறைவேற்றி, இஸ்லாத்தின் கௌரவத்தை இனியில்லா வண்ணம் பெருமைப்படுத்தி வருங்கால், மக்கத்துக் கு'ப்'பார்கள் அம் மிஃ'ராஜையே ஒரு புதிய காரணமெனக் கொண்டு, இன்னமும் அதிகம் ஏளனம் பண்ணி, இதன் ஸ்தாபகருக்குப் பித்துப் பிடித்திருக்கிற தென்று முன்னரே தாங்கள் கூறிவந்தது வாஸ்தவந்தா னென்று வற்புறுத்திக் கொண்டு திரிந்தார்கள். இறுதியில் தர்மமே ஜயம்பெறு மென்பது உண்மையே யாயினும், இதுசமயம் அம் மக்காவாசிகள் மிக்க இடையூறு களையே விளைத்து வந்தார்கள். அவர்க ளனைவரும் பின்னொரு சமயம் தீ'னுல் இஸ்லாத்தில் சேர்ந்துகொள்ளப் போவது மெய்யே யாயினும், அஃதெப்பொழுது அவ்வாறு நடைபெறப் போகின்றது? ஒருகால், நபிகள் திலகத்தின்(சல்) ஜீவதசையிலா? அல்லது அவர்களுடைய மரணத்துக்குப் பின்னரா? மதீனா போன்ற நெடுந் தூரத்துள்ள மக்களும் தீ'னுல் இஸ்லாத்தைக் கண்டு மோகங் கொள்ளும் போது, நபிபெருமானின் சொந்த ஜனன பூமியாகிய மக்காவிலுள்ள மறமாக்கள்மட்டும் அதற் கிணங்காததோடு திருப்தி யடையாது, ஏனோ இன்னவருக்கு ஜன்ம விரோதிகளாகவும் மாறிப் போய்க் கிடக்கின்றனர்? எல்லா இரகசியங்களும் அந்த அல்லா(ஹ்) ஒருவனுக்கே நன்கு தெரியும்!

இந்த நிலைமையைப் பற்றி இஸ்லாத்தின் ஜன்ம சத்துருவாகிய ஸர் வில்லியம் மூய்ரின் நாவினின்றுகூட ஒருசிறு சிரேஷ்டமான தகவுரை வெளிப்படாதிருக்க முடியவில்லை: "தம்முடைய சொந்த ஜனங்களாகிய எதிரிகளுக்குச் சற்றும் இடங்கொடாது தடுத்துக் கொண்டு, தற்காத்துக் கொள்ள முடியாதவரே போன்று வெளித் தோற்றத்தில் காணப்பட்ட போதினும், தம்முடைய வெற்றியை மிக்க நம்பிக்கையுடன் எதிர்நோக்கிய வண்ணமே யிருந்துகொண்டு, தம்மைப் பின்பற்றிய ஒரு சிறு தொகுதியினரைச் சிம்மத்தின் கடைவாயினுள் தள்ளினாற்போலே வைத்துக்கொண்டு, தம்மை ஒரு தூதராக அனுப்பியுள்ளா னென்று அவர் நம்பியிருந்த அத்

தகைய எல்லாம் வல்ல அல்லா(ஹ்)வின் மீது இன்னமும் அசைக்க முடியாத ஓரே தீர்மானமான உறுதியை வைத்துக்கொண் டிருக்கும் மு'ஹம்மத்' காட்டிவரும் மஹாத்தியமென்பது சமயசம்பந்தமான சாசனங்களில், 'யான், யான் மட்டுமே தனித்து நிற்கின்றேன்!' என்று தம்முடைய தலைவனிடம் குறையிரந்த அந்த இஸ்ராயீல் தீர்க்கதரிசியின் சரித்திரத்துக்கேதான் முழுதும் ஒத்திருக்கின்றது."

ரஸூலுல்லா(ஹ்) அவர்களது மனநிலைமை இவ்வா றிருந்து வருங்கால், நுபு'வ்வத் வந்து 12-ஆம் ஆண்டின் (கி. பி. 622) யாத்திரா காலமாகிய 'துல்'ஹஜ் மாதம் ஆங்குவந்து தோன்ற லாயிற்று. அதுபோது அரப் நாட்டின் பற்பல பாகங்களி லிருந்தும் ஏராளமான ஜனங்கள் மக்கமா நகரின்கண்ணே வந்து குழுமினார்கள். அதுபொழுது ய:த்ரிபி'லிருந்தும் அநேகமான பலதெய்வ வணக்கக்காரர்களும் வந்து சேர்ந்தார்கள். அவர்களுடனே ஆங்கிருந்த 75 முஸ்லிம்களும் புறப்பட்டு மக்காவுக் கருகிலுள்ள முன்கூறிய அ':கப'ா வென்னும் குன்றி னடிவாரத்தில் வந்து தங்கினார்கள்; இவர்களுள் 73 ஆண்களும், 2 பெண்களு மிருந்தனர். இவர்க ளனைவரும் முஸ்அ'ப்' பி'ன் உ'மைரின் தலைமையிலேதான் விஜயம் செய்தனரென்று சில சரித்திராசிரியர்கள் எழுதியிருக்கின்றார்கள். இந்த 75 முஸ்லிம்களும் தங்கள் நகரினின்று புறப்பட்டு வந்த பலதெய்வ விக்ரஹவணக்கக் காரர்களுடனே சேர்ந்துவந்தும், அவர்கள்—(அம் முஸ்லிம்கள்) என்ன நோக்கத்துடனே மக்கத்துக்கு வருகிறார்க ளென்னும் இரகசியத்தை இவர்கள் அறிய மாட்டார்கள். எனவே, அவ்விக்ரஹத் தொழும்பர்கட்குத் தெரியாமலே அம் முஸ்லிம்கள் நபிகள் திலகத்துடன் சம்பாஷிக்க வேண்டியவர்களா யிருந்தார்கள். ஆதலின், 'தஷ்ரீ:க்* இரண்டாவது தினத்துக்கு முன்னிரவிலே அ':கப'ாவின் அடிவாரத்தில் அவர்க ளனைவரும் அ'ஹ்மது'ர் ரஸூலுல்லா(ஹ்) (சல்) அவர்களைச் சந்திப்பதென்று முற்கூட்டியே ஏற்பாடு செய்யப்பட் டிருந்தது.

அவர்கள் அன்றிரவு நபிகள் பெருமானைச் சந்தித்த வைபவத்தைக் குறித்துக் க'அ'ப்' பி'ன் மாலிக் என்பார் பின்வருமாறு கூறுகின்றார்:— அந்த முஸ்லிம் கூட்டத்திலே யானும் ஒருவனா யிருந்தேன். நாங்கள் எங்களுடன் வந்த கா'பிரீன்களுக்குத் தெரியாது ரஸூல் நாயக மவர்களைச் சந்திக்கவேண்டி யிருந்ததனால், அன்றிரவு மூன்றிலொரு பகுதி கழியும் வரை அயர்ந்து உறங்கிவிட்டோம். பிறகு ஒவ்வொருவராக எழுந்து, வேறு எவருக்கும் தெரியாமல் மெல்லமெல்ல நடந்துசென்று, எல்லாரும் சேர்ந்து அம் மலைக்குன்றின் சரிவிலுள்ள கணவாயருகிலே நெருங்கி நின்று, ரஸூலுல்லா(ஹ்) அவர்களின் வருகையை அதிக ஆவலுடனே எதிர்நோக்கி

* "தஷ்ரீ:க்"குடைய நாட்கள், அ'ர'பாத்தின் தினத்துக்குப் பின்னே 'ஹஜ்ஜாஜ்கள் மினாவில் குழுமியிருக்கும் மூன்று நாட்களாகும்; 'துல்'ஹஜ் பிறை 10, 11, 12 என்னும் நன்ருண்டிய நாட்களாம்.

யிருந்தோம். அதுபொழுது நபிகள் பெருமான்(சல்) தங்கள் சிறிய தந்தை யாகிய அ'ப்'ப'ாஸுடனே ஆங்கு விஜயம் செய்தார்கள்; அச்சிறிய தந்தை யார் அதுவரை தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவா திருந்தும், அபூ'த்தாலி பை'ப் போலே இவரும் தம்முடைய சகோதரர் மைந்தருக்கு விளையக்கூடிய ஆபத்தினின்று தப்புவிப்பதற்குப் பெரிதும் பிரயாசை யெடுத்துவந்தார். ய:த்ரிப்' வாசிகள் தம்முடைய தமையன் புத்திரரைத் தங்கள் ய:த்ரிபு'க்கே அழைத்துக்கொண்டு சென்றுவிட வேண்டுமென்னும் ஒரே நோக்கத்துட னேயே வந்திருந்ததனால், அம் முஸ்லிம்களின் ஸ்திரமான மனப்பான்மை எத்துணை மட்டும் உறுதி கொண்டு நிற்கிற தென்பதைப் பரிசோதித் தறிவான் வேண்டி 'ஹ'ஜ்ரத் அ'ப்'ப'ாஸ் அவர்கள் எங்களை நோக்கி இவ்வாறு வினவலுற்றார்கள் :—

"ஏ க'ஜ்ரஜ், ஒளஸ் வர்க்கத்தினர்காள்! என்னுடைய தமையன் குமாரர் எங்களினத்தில் எத்தகைய கௌரவமான உயரிய அந்தஸ்தை வகித்து வருகின்றாரென்பதை நீங்களனைவீரும் நன் கறிவீர்கள். நாங்கள் இதுவரை இவருடைய சன்மார்க்கத்திலே சேராதிருந்தும், இன்றளவும் யாங்கள் இவரை இவருடைய எதிரிகளினின்று நன்கு பாதுகாத்தே வந் திருக்கின்றோம். எனவே, இவர் இங்கு இப்பொழுது அதிக கௌரவமாக வும் பத்திரமாகவுமே காப்பாற்றப்பட்டு வருகின்றார். ஆனால், இதுபோழ்து நீங்களோ, இவரை உங்களுடனே அழைத்துச் சென்று, உங்களுடைய நகரத்திலேயே வசிக்கக் கோருகின்றீர்கள். மக்கத்துக் :குறைஷிக ளெல்லாரும் இவருடைய ஜன்மவிரோதிகளேபோ லிருக்கின்றனர். இதனை நன்கு நிதானித்துப் பார்க்கக் கடவீர்கள்! உங்கள் வாக்குறுதியை நீங்கள் முழுதும் நிறைவேற்றுவதா யிருந்து, இவரை எத்தகைய ஆபத்தினின்றும் அடாயத்தினின்றும் முற்றும் காப்பாற்றக் கூடிய தைரியமும் கொண்டிருப் பீர்க ளாயின், அதுதான் நன்றெனப் படுகின்றது. அ'ரபி'களாயினும் அ'ஜமிகளாயினும், எவருடைய எதிர்ப்பினின்றும் இவரைக் காப்பாற்ற முடியுமென்னும் சாமர்த்தியம் பெற்றிருப்பீர்க ளாயின், இவரை நீங்கள் சந்தோஷமாக அழைத்துக்கொண் டேகலாம். இன்றிப் பின்னொரு சமயம் இவருடைய எதிரிகள்வயம் இவரைக் காட்டிக்கொடுத்து விடவேண்டிய அவசரம் நேரலாமென்று நீங்கள் ஐயங் கொள்வீர்களாயின், இப்பொழுதே இவரை இவருடைய மனிதர்களுடனே க்ஷேமமாய் விட்டுச் சென்று விடுங்கள்."

இதனைக் கேட்டு, நாங்கள் அக்கணமே அ'ப்'ப'ாஸுக்கு அதிக திருப்தி கரமான விடை யளித்தோம்: "எங்கள் செய்கையால் விளையக் கூடிய சங்கடங்க ளனைத்தையும் யாங்கள் முன்னுணர்ந்து கொள்ளாது இப்பெருங் காரியத்திலே இறங்கத் துணிந்தோ மில்லை. இப்பொழுது எங்களுடைய பிரேரணை இன்ன தென்பதைத் தாங்கள் தெரிந்து கொண்டீர்கள். எங்கள் வாக்குறுதியின் மீது நீங்கள் முழுநம்பிக்கையும் வைக்கலாம்," என்று

கூறிக்கொண்டே, நபிகள் திலகத்திடம் திரும்பி, "யாரஸூலல்லா(ஹ்)! தங்கள் நாயனுக்காகவும் தங்களுக்காகவும் யாங்கள் என்செய்தல் வேண்டும்?" என்று அதிக ஆவலுடனே வினவினோம். அதைக் கேட்டு, நம் பெருமானார் (சல்) தங்கள் வழக்கத்திற்கேற்ப அப்பொழுதும் :குர்ஆன் ஷரீ'பிலிருந்து சில ஆயாத்களை ஓதி, இஸ்லாத்தின் மூலக் கொள்கைகளை மீட்டுமொருமுறை நன்கெடுத்துக் கூறி, "நீங்கள், நான் செய்துவரும் சத்திய சன்மார்க்க பிரசாரத்தில் எனக்குப் பூரண உதவியும் புரிவீர்களா? அன்றியும், நீங்கள் உங்கள் மனைவிகளையும் மக்கள்களையும் தற்காப்பதே போன்று என்னையும் என்னைச் சார்ந்த முஸ்லிம்களையும் தற்காத்தல் வேண்டும். இதற்கு வேண்டிய உறுதிமொழிகளை நீங்கள் செய்துகொடுத்தல் அத்தியாவசியமாகும்," என்று கூறி முடித்தார்கள். இதனைக் கேட்டவுடன் அன்சார்கள், "நாங்கள் இவ்வாறெல்லாம் உதவிசெய்வோமாயின், எங்களுக் கென்ன பிரதிப் பிரயோஜனம் கிடைக்கப் போகின்றது?" என்று வினவியது கேட்டு, நபிகள் பெருமானவர்கள், "நித்தியசுகம் பெறக் கூடிய சாந்தி நிகேதனமான சுவர்க்கபதி யடைவீர்கள்!" என்று மொழிந்தருளினார்கள்.*

இதைக் கேட்ட வுடனே எங்கள் தலைவர் ப்'ரா இப்'னு மஃ'ரூர் என்னும் பெரியார் எங்களுக்காக வெல்லாம் சேர்த்துத் தாமே ரஸூலுல்லா(ஹ்)வின் திருக்கரத்தின்மீது தமது கையைவைத்து, அவ்விஷயத்தைக் குறித்து நாங்க ளனைவரும் ஒரே மனத்தினராய் உறுதி கூறுவதாகப் பிரமாணம் செய்து கொடுத்தார் :— "அல்லா(ஹ்)வின்மீது பிரமாணமாக! நாங்கள் வாட்களின் கரத்திலேயே வளர்ந்து வந்திருக்கிறோம். யுத்த தளவாடங்களை யெல்லாம் எங்ஙனம் சித்தஞ் செய்துகொள்வ தென்னும் வித்தையையும் எங்கள் மூதாதையர் எங்களுக்குக் கற்பித்துக் கொடுத்திருக்கிறார்கள்," என்று ப்'ரா இப்'னு மஃ'ரூர் கூறிக்கொண் டிருக்கும்போதே, அபு'ல் ஹைஸ:தம் இப்'னு தீ'ஹான் என்னும் மற்றொரு பெரியார் குறுக்கிட்டு, "யாரஸூலல்லா! இதுசமயம் எங்களுக்கும் ய:த்ரிபி'லுள்ள எஹூதிகளுக்கும் இடையி லிருந்துவரும் உடன்படிக்கையைத் தங்கள் நிமித்தம் இனி யாங்கள் முறித்தாக வேண்டிய அத்தியாவசியம் ஏற்பட்டு விடுதல் கூடும். ஆனால், எங்களுடைய உதவிகொண்டு தங்களுக்கு வெற்றிமுழுதும் கைகூடியதன்பின்பு தாங்கள் எங்களைவிட்டுத் தங்கள் கூட்டத்தாருடனே சேர்ந்து

* "முஹாஜிர்களிலிருந்தும் அன்சார்களிலிருந்தும் முதல்வர்களாயுள்ள முதன்மையானவர்களும், அவர்களை நன்மையான கருமத்தில் பின்பற்றியவர்களும் (குறித்தென்றோ) அல்லா(ஹ்) அவர்களுடனே அதிக பிரீதியடைந் துள்ளான்; அவர்களும் அவனுடனே அதிக பிரீதியடைந் துள்ளார்கள்; இன்னம், அன்னவன் அவர்களுக்காக, அவற்றின்கீழே அருவிகள் ஒலித்தோடுகின்ற உத்யானவனங்களை,— அவற்றிலே அவர்கள் நித்தியமாய் நிலைத்திருப்பார்கள்,— சித்தஞ்செய்து வைத்திருக்கிறான்; அதுதான் மகத்தான சித்தியாகும்"— (:குர். 9 . 100).

கொண்டு தங்கள் சொந்தவூரான இம் மக்காவுக்கே திரும்பி வந்துவிடாம லிருக்கவேண்டும்," என்று வேண்டினர்.

இதனைக் கேட்டு, நபிகள் திலகம் புன்முறுவல் பூத்துத் தங்கள் தலையை யசைத்தார்கள். "அது விஷயத்தில் நீங்கள் கவலை கொள்ள வேண்டுவ தின்று. உங்கள் உதிரம் என் னுதிரமாகவும், உங்கள் கண்ணியம் என் கண்ணியமாகவும் ஒன்றித்துவிட்டன. இனி உங்களுக்குத் துன்ப மிழைப் பவர் எனக்கே அத்துன்பத்தை இழைத்தவ ராவார். ஆகலின், இனி நீங்கள் யுத்தம் புரியும் எதிரிகளுடனே யானும் யுத்தம் புரிவேன். நீங்கள் ஆதரிக் கும் நண்பரையே யானும் ஆதரிப்பேன். எனவே, இன்றுமுதல் யான் உங்களுடனே ஒன்றித்துவிட்டேன்; நீங்களும் என்னுடனே ஒன்றித்துவிட் டீர்கள்," என்று கூறிமுடித்து, எங்களுள் பன்னிரு தலைவர்களை— (நகீப்' களை)ப் பொறுக்கி யெடுக்குமாறு கட்டளை யிட்டார்கள்.

பிறகு நாங்கள் எங்களுள்ளே கலந்தாலோசித்து, க'ஜ்ரஜ் கூட்டத்தி லிருந்து ஒன்பது நகீப்'களையும், ஔஸ் கூட்டத்தி லிருந்து மூன்று நகீப்' களையும் பொறுக்கியெடுத்து, "ஈ'ஸா அ'லைஹிஸ்ஸலாம் அவர்கட்கு அவர்க ளுடைய கூட்டத்திலிருந்து பன்னிரு 'ஹவாரிய்யீன்கள் ஏற்பட்டதேபோல், இப் பன்னிருவரும் எங்க ளினத்தி லிருந்து தங்களுக்கு அருகர்களாய் அமைந் திருக்கின்றார்கள்," என்றுங் கூறினோம்.

அப்பன்னிரு நகீப்'களின் நாமங்களாவன :—1. உஸைத்' பி'ன் 'ஹுலை'ர், 2. அபு'ல் ஹை:தம் பி'ன் •தீஹான், 3. ஸஅ'த்' பி'ன் கை':தமா (இம் மூவரும் ஔஸ் கூட்டத்தவர்க ளாவர்), 4. அஸ்அ'த்' பி'ன் 'ஜுராரா— (இவரே அதுசமயம் மதீனாவில் பேஷ் இமாம் வேலை பார்த்து வந்தவர்), 5. ஸஅ' தி'ப்'னுர் ரபீ'ஃ', 6. அ'ப்'து'ல்லா ஹிப்'னு ரவா'ஹா— (இவ ரொரு பிரபல கவிவாணராவர்), 7. ஸஅ'த்' பி'ன் உ'ப்'ாத'ா, 8. முன்'திர் பி'ன் அ'ம்ர், 9. ப்'ரா இப்'னு மஃ'ரூர், 10. அ'ப்'து'ல்லா ஹிப்'னு அ'ம்ர், 11. உ'ப்'ாத'ா பி'ன் சாமித், 12. ராபி'ஃ' இப்'னு மாலிக்.— (இறுதி ஒன்பது பேர்களும் க'ஜ்ரஜ் வர்க்கத்தவரைச் சேர்ந்தவராவர்).

இப் பன்னிருவரும் தங்கள் கரங்களை நபி பெருமானின் திருக்கரத்தின் மீது வைத்து, ப'ய்அ'த் செய்யப்போகுந் தறுவாயில், அஸ்அ'த் பி'ன் 'ஜுராரா •தமீமீ என்னும் பெரியார் குறுக்கிட்டு, "ஏ க''ஜ்ரஜ், ஔஸ் வர்க் கத்தினர்காள்! இப்பொழுது நீங்கள் இவர்களிடம் செய்துகொடுக்கும் உறுதி மொழியின் தாத்பரியத்தை உள்ளபடியே உணர்ந்து கொண்டீர் களா? இவர்களுக்காக நீங்கள் இத் தரணியிலுள்ள வெள்ளை, மஞ்சள், கறுப்பு நிற மாக்களுட னெல்லாம் யுத்தம் புரியவேண்டிய ஆவசியகம் ஏற்பட்டுவிடுதல் கூடும். பிறகு நிகழப்போகும் யுத்தத்தின்போழ்து உங்கள் பொருள்க ளெல்லாம் கொள்ளை கொள்ளப்பட்டும், உங்கள் தலைவர்க ளனைவரும் கொலை செய்யப்பட்டும் போகுங்காலை நீங்கள் இவரைக் கை விடத் துணிவீர்களாயின், உங்களுக்கு இவ்வுலகிலும், வரப்போகின்ற அவ்

வுலகிலும் அவமானமே சித்திக்கும்," என்று வற்புறுத்திக் கூறினர். உடனே, "இஸ்லாத்தின் நன்மைக்காகப் பாடுபடுங்கால், எங்களுடைய பொருள்களும் தலைவர்களும் ஒழிந்துபோவதில் எங்களுக் கொன்றும் கவலையில்லை," என்று நாங்களெல்லாம் ஏகோபித்துக் கூறினேம். "ஆனல், அவ்வாறு யாங்கள் சத்தியத்தின் பொருட்டுப் பாடுபட்டு யுத்தகளத்தில் மடிய நேர்ந்தால், எங்களுக்கு அதற்கீடாய்க் கிடைக்கும் சம்மானம் யாதாயிருக்கும்?" என்று நாங்கள் கேட்டதற்கு, "வீர சுவர்க்கம் எங்களுக்குச் சம்மானமாக அளிக்கப்படு" மென்று நபிகள்திலகம் (சல்) பதின்மொழி பகர்ந்தார்கள்; ஆண்டவனும் இவ்வாருகத்தான் தன் திருமறையில் கூறியுள்ளான்.*

இதனைக் கேட்டவுடனே எல்லாரும் திருப்தியுற்றுப் புளகாங்கிதமுங் கொண்டு விட்டனர். உடனே அஸ்அ'த்' பி'ன் 'ஜாரா ரஸூலுல்லாவின் வலக்கரத்தை நீட்டச் சொன்னர். அவ்வாறே, நபிகள் திலகமும் தங்கள் வலக்கரத்தை உள்ளங்கை ஆகாயத்தைப் பார்த்தவண்ணம் நீட்டினர்கள். அதன்மீது அவர் தமதுள்ளங் கையைவைத்துச் சத்தியஉறுதிமொழி செய்து கொடுத்தார். அதன் பின்பு இப்'னு ஹை:தம், அவருக்குப் பின்னே ப'ரா பி'ன் மஃ'ரூர் என்னும் முறையில் அப் பன்னிரு நகீப்'களும் ரஸூலுல்லாவின் திருக் கரத்தின்மீது தங்கரம் போட்டு, ப'ய்அ'த் செய்து கொடுத்தார்கள். இவ்வாருக அந்த அ':கப'ாவின் இரண்டாவது அறுதியிடல் அந்நள்ளிரவிலே நடைபெற்று முடிந்தது. அது முதற்கொண்டுதான் மதீனுவாசிகட்கு "அன்சார்கள்"— (உதவிபுரிவோர்) என்னும் அழகிய நாமமும் வழங்க லாயிற்று.

பிறகு நாங்கள் உள்ளம் பூரித்த நல்லெண்ணங் குடிகொண்டவராய் மீட்டும் எவருக்கும் தெரியாமலே எங்களூர்வாசிகளுடனே வந்து கலந்து படுத்துறங்கி விட்டோம். அந்த முஷ்ரிக்கீன்களுள் ஒருவருமே அன்றிரவு நிகழ்ந்த வைபவ மொன்றையும் அறியார். ஆயினும், ரஸூலுல்லா(ஹ்) அவர்கள் எந்நேரத்தில் இரகசியத்தில் என்ன செய்துகொண் டிருக்கிருர்களென்று துருவிட்டுக் கொண் டலைந்த அம் மக்காவின் :குறைஷிகள் அதுபொழுது நிகழ்வுற்ற அ':கப'ாவின் அறுதியையும் விடியுமுன்னே ஒருவாறு ஸ்தூலமாக அறிந்துகொண்டு விட்டார்கள். நபிகள்பெருமானும் (சல்) இதனை மறைத்து வைக்கத்தான் வேண்டு மென்று ஒன்றும் இரகசிய ஏற்பாடு செய்துவைக்க விரும்பவில்லை. அவர்கட்கு ஆண்டவன் மீதுள்ள உறுதியின் முன்னே இத்தகைய மனிதப்பிரயத்தன மெல்லாம் என்ன பெருந்தீங்கு செய்துவிடப் போகின்றது ! அவனன்றி ஓர் அணுவும் அசையாதன்றே !

* ரஸூல் நாயகமும், "ஜன்னத்தென்பது— வீரசுவர்க்கம்— வாட்படைகளின் நிழலின் கீழேயே இருக்கிறதென்று அறியக்கடவீர்கள்," என்று இயம்பியுள்ளார்கள் (ப':க'ரீ 56 : 22).

அவ்வாறு கேள்வியுற்ற :குறைஷியர் தம்முடைய ஒருசில பிரதிநிதிகளை யனுப்பி, ய:த்ரிபி'லிருந்து எங்களுடன் வந்திருந்த முஷ்ரி(க்)கீன்களிடமிருந்து உண்மையை அறிந்து வருமாறு கட்டளை யிட்டிருந்தார்கள்; அங்ஙனமே அவர்கள் எங்களூராரிடம் வந்து, "ஏ ய:த்ரிப்' வாசிகளே! உங்களுடன் இங்கு வந்துள்ள க''ஜ்ரஜ், ஒளஸ் கூட்டத்தினர் எங்களுக்கு விரோதமாக எங்களூர் மு'ஹம்மதிப்'னு அ'ப்'து'ல்லா(ஹ்)வுடன் ஏதோ உடன்படிக்கை செய்துகொண்டு, எங்களுடன் யுத்தத்துக்கு வரப்போகின்றார்க ளென்று நாங்கள் கேள்விப்பட்டோமே! அது வாஸ்தவந் தானா?" என்று விசாரணை செய்தார்கள். ஆனால், உண்மையில் அவர்கள் அஃதொன்றையும் அறியார்க ளாதலின், அவ்வாறொன்றும் அன்றிரவு அவ்விடத்தில் நடைபெறவே யில்லை யென்றும், அங்ஙனம் ஏதேனும் ஆண்டு நடைபெற்றிருக்குமாயின், அது தங்களுக்குத் தெரியாமற் போயிருக்கக் காரணமில்லை யென்றும் கூறினார்கள். "அப்படி யொன்றும் இங்கு நடைபெறவே யில்லை. அவ்வாறு ஏதேனும் நடைபெற்றிருக்குமாயின், அஃது என் செவிவரை எட்டாம லிருத்தற்குக் காரண மொன்று மில்லை. இதுவரை அத்தகைய விஷய மொன்றும் என் செவியிற் படவே யில்லை," என்று அந்த ய:த்ரிப்' வாசிகளின் தலைவனான அபூ'ஸலூல் வற்புறுத்திச் சொன்னான்.

இதைக் கேட்டு, அக் குறைஷிகள் ஒருவாறு திருப்தியடைந்து மக்காவை நோக்கிச் செல்லுங்கால், வழியில் வேறுசில ப'த'வீகளைச் சந்தித்துப் பேசியபோது, அதற்கு முன்னிரவில் அந்த அ':கப'ாவின் அடிவாரத்தில் அவர்கள் சந்தேகங் கொண்டுள்ளதே போன்ற உறுதிமொழி யொப்பந்த மொன்று செய்யப்பெற்றது மெய்யேயென்று தெரிந்துகொண்டு, மீண்டும் க''ஜ்ரஜ் ஒளஸ் முதலியோர் தங்கியிருந்த இடத்தை நோக்கி ஓடினார்கள். அதற்கு முன்னரே ஆங்கிருந்தவர்க ளனைவரும் புறப்பட்டுச் சென்றுவிட்டமையால், அக் :குறைஷிகள் அளவிறந்த ஆத்திரத்துடனே தங்களூருக்குத் திரும்பிச் சென்று விட்டார்கள். ஆனால், அக் :குறைஷிகள் ய:த்ரிபை' நோக்கி ஒளஸ் க''ஜ்ரஜ் கூட்டத்தினரைத் துரத்திச் சென்று வழியில் இருவரைப் பிடித்துக்கொண்டன ரென்று வேறுசில சரித்திராசிரியர்கள் எழுதியிருக்கிறார்கள். அவ் விருவருள் ஒருவரான முன்'திரென்பார் பிடிபட்டும் தப்பிக்கொண்டார்; மற்றவராகிய ஸஅ'த்' பி'ன் உ'ப'ாத'ா பிணிக்கப்பட்டு மக்கத்துக்கு இழுத்துச் செல்லப்பட்டார். இவர் முன்னொரு முறை மதீனாவில் மக்கத்து மனிதர் சிலருக்கு நல்லவிதமான உதவியொன்று செய்துள்ளா ராதலின், அன்னவரின் ஷி'பாரிஷின் மீது ஸஅ'த்'(ரலி') அது சமயம் விடுதலை செய்யப்பட்டார் என்ப.

மேற்கூறியவாறு நுபு'வ்வத் வந்து 12-ஆவது ஆண்டு 'ஹஜ் மாதம் 10-ஆந் தேதி யன்றிரவு அ':கப'ாவின் அடிவாரத்தில் அந்த ஒளஸ் க''ஜ்ரஜ் என்னும் இருபெருங் கூட்டத்தினரும் ரஸூலுல்லாவின் கரத்தின்மீது தங்கரம் வைத்துச் செய்துகொடுத்த அந்த இரண்டாவது அறுதியிலிருந்து

நபிகள் திலகம்(சல்) அன்னவர்களின் அழைப்பின்மீதே மதீனுவுக்கு ஹிஜ்ரத் செய்தார்களென்று மிகத்தெளிவாக நாம் விளங்கிக் கொள்ளுகின்றோம். அரப் தேசத்தின் வழக்கப் பிரகாரம் ஒரு கூட்டத்துக் குரியா ரொருவர் வேறொரு கூட்டத்துடன் சேர்ந்துகொள்வா ராயின், அவரை அக்கூட்டத்தினர் பாதுகாப்பதாகப் பிரமாணிக்கம் செய்துகொடுப்பர். என்னெனின், அவரவரும் தத்தம் வர்க்கத்தினரைத்தாம் இயற்கையாய்க் காப்பாற்றக் கட்டுப்பட் டுள்ளார். இன்னமும், மேற்கூறிய உறுதிமொழியி லிருந்து, மதீனுவுக்கு ஹிஜ்ரத் சென்றதன் பின்னரும் மக்கா வாசிகள் அம்முஸ்லிம் களை வாளா விட்டுவிடத் துணியாரென்று நபிகள் பெருமானும், அவர்களுடைய சிறிய தந்தையாகிய அ'ப்'ப்'ாஸு'ம் நன்குணர்ந் திருந்தார்களென்று மிகச் செவ்வையாய்த் தெரிந்து கொள்ளுகிரேம். ஆதலினுல் தான், எதிரிகளின் தாக்குதல்களினின்று தற்காத்துக்கொள்ள வேண்டுவது அத்தியாவசிய மென்னும் எண்ணமானது அதுசமயம் வற்புறுத்தப்பட்டு, அவ்வாறே அன்சார்களிட மிருந்து உறுதிமொழியும் வாங்கப்பட்டது. அவ்வாறு அ'ப்'ப்'ாஸு'ம் நபிகள் நாதரும் சந்தேகப்பட்டதற்குத் தக்க காரணம் இல்லாமற் போகவில்லை: முன்னொரு முறை முஸ்லிம்கள் 'ஹப்'ஷா நாடு சென்று ஆங்குள்ள அரசரிடம் அடைக்கலம் தேடிக் கொண்டபோது, அந்த நஜ்ஜாஷீயின் தர்பார்வரை அந்தக் :குறைஷிகள் அவ்வேழை முஸ்லிம்களை பிடித்துக் கொண்டு வருமாறு துரத்திக்கொண்டு செல்ல வில்லையா? இத்தகையினர் இனி மதீனுவுக்கும் அம் முஸ்லிம்களைத் துரத்திக்கொண்டு செல்லாமலா வாளா விட்டுவிடப் போகின்றன ரென்று எண்ணுகின்றீர்கள்? வெளியில் உலவிய வதந்தியல்லாமல் மக்கத்தில் நாயக மவர்களுக்கும், அ'ப்'ப்'ாஸ் அவர்களுக்கு மட்டுமல்லது, வேறு யாருக்கும் அந்த அ':கப்'ாவின் இரண்டாவது அறுதியின் நிபந்தனை இன்ன தென்பது தெரிய மாட்டாது; இவ்வாறே மதீனுவின்கண்ணும் அம் முஸ்லிம்க ளல்லாத வேறு எந்த மனிதனும் இவ் வுடன்படிக்கை இத் தன்மைத் தென்பதை ஒருசிறிதும் உணரமாட்டான்.

இந்த இரண்டாவது அறுதியிடுகை 'ஹஜ் மாதம் ஐயாமுத் தஷ்ரீ:க்கில் நிகழ்வுற்றது. பிறகு அம்மாத மிகுதிப் பகுதியான இருபது தினமும், அடுத்த மு'ஹர்ரம் மாதமும், ச'பர் மாதமும் கழிந்ததன் பின்னர், அடுத்து வரும் ரபீ'உ'ல் அவ்வல் மாதத்திலேதான் நபிகள்திலகம் (சல்) மக்காவை விட்டு மதீனுவுக்கு ஹிஜ்ரத்செல்ல வேண்டியதா யிருந்தது. அதற்குள் அவர்கள் தங்களுடைய சிஷ்யர்களான ஆண்களையும், பெண்களையும் மதீனுவுக்குச் சிறுகச்சிறுக அனுப்பிக்கொண்டே வந்தார்கள். இவ்வாறு அம் மக்கத்து முஸ்லிம்கள் மதீனுவுக்குச் சென்றுவிடுவதை ஆங்குள்ள :குறைஷிகள் அடியோடு விரும்பவில்லை. என்னெனின், அவர்க ளனைவரையும் வெளியில் செல்லவிடாது தங்களுருக் குள்ளேயே வைத்துத்தான் இம்சிக்க வேண்டு மென்னும் கெட்ட எண்ணங் கொண்டிருந்தார்கள். ஆனுல், அவர்களுக்குத்

தெரியாமலே இரண் டிரண்டு, மும் மூன்று மனிதர்களாக மகா இரகசியமாக அம்முஸ்லிம் ஆண் பெண்கள் மக்காவைவிட்டு மதீனுவுக்குச் சென் றுகொண் டிருந்தனர். எனவேதான், இவர்கட்கெல்லாம் "முஹா ஜிரீன்கள்"* என்று பெயர் வழங்கலாயிற்று. இவ்வாறு இரண்டு மாதங் களுக்குள்ளே சற்றேறக்குறைய ஒருநூறு குடும்பங்கள்வரை (உத்தேசம் 150 முஸ்லிம்க ளென்ப) மதீனுவுக்கு ஹிஜ்ரத் சென்று விட்டார்கள். இறுதி யில் ரஸூலுல்லா(ஹ்) அவர்களும், 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் சித்'தீ':க் அவர் களும், 'ஹ'ஜ்ரத் அ'லீ(ரலி') அவர்களும் அல்லாத ஏனையோரெல்லாம் (அநேக மாய்) மக்காவைவிட்டு வெளியில் புறப்பட்டுவிட்டதாகக் காணப்பட்டனர்;† எதேச்சா புருஷருள் இம்மூவரும், வேறு சில அடிமைகளுமே பிறகு மக்கா வின்கண் பின்தங்கி யிருந்தனர். வேறு விக்ரஹத் தொழும்பர்களான :குறைஷியரிடம் அ'ப்'து'களாய்ச் சிக்கிக்கொண்டிருந்த அடிமைகள் எவ்வாறு இரகசியத்தில் மக்காவைவிட்டு மதீனுவுக்கு ஓடிவிடுதல் சாலும்? இப்படிப் பட்டவர்களும், மேற்கூறிய மூவர்வீட்டு ஜனங்கள் சிலரும் நபிகள் திலகத்தின் ஹிஜ்ரத்துக்குப் பிறகே மக்காவைவிட்டு மதீனுவிற்குப் போய்ச் சேர்ந்தனர். அதுவரை இவ் வேழைமக்க ளனைவரும் இவ்வதி காரத்தின் ஆரம்பத்திலுள்ள :குர்ஆன் ஷரீ'பின் ஆயத்தையே ஓதி, ஆண்டவனிடம் உதவிதேடிக்கொண் டிருந்தனர்.

மதீனுவுக்கு ஹிஜ்ரத் சென்றவர்கள்—(முஹாஜிரீன்கள்) ஆங்குள்ள முஸ்லிம்களால் மிக்க குதூகலத்துடன் நல்வர வேற்கப்பட்டு, நன்கு உபசரிக்கப்பட்டு வந்தார்கள். ஆனுல், மக்காவினுள்ளோ, ஆங்குக் குடி யோடிய விடுதிகள் நாளுக்குநாள் மல்கிக்கொண்டே வந்தன. முன்னொரு முறை மிக்க செழிப்புடன் விளங்கிவந்த மக்காவின் சிலபகுதிகள் இவ்வாறு குடியில்லாது வெறுமையாய்ப் போய்க் கிடப்பதைக் கண்ணுற்ற உ'த்ப'ா பி'ன் ரபீ'ஆ' பெருமூச்சு விட்டுக் கொண்டே பின்வருமாறு ஒரு பழங் கவியைப் பாடினுர்:—"ஒவ்வொரு விடுதியும், அஃது எத்துணைக் கால மட்டும் மிக்க நல்ல ஸ்திதியிலிருந்த போதினும், பின்னொரு சமயம் துக்கத் துக்கும், கொடிய புயலுக்குமே இரையாய் விடுதல் கூடும்." இந்தக் கவியைப் பாடி அவர், "ஈதெல்லாம் நம்முடைய சகோதரர் புத்திரரின் வேலையா யிருக்கின்றது; அவர் நமது கூட்டத்தைக் கலைத்து, நம்முடைய காரியங்களைக் கெடுத்து, நமக்குள் பிரிவினையையும் உண்டுபண்ணி விட்டார்," என்று பெரும் வியஸனத்துடனே விளம்பலாயினுர்.

"பூமியின்மேல் சமாதானத்தை அனுப்பவந்தேன் என்று எண்ணு திருங்கள்; சமாதானத்தை யல்ல, வாளாயுதத்தையே அனுப்ப வந்தேன்.

---

* "முஹாஜிர்"— ஹிஜ்ரத் செல்பவர்— ஒருமை; இதன் பன்மை "முஹாஜிரீன்".

† ஹிஜ்ரத் புறப்பட இயலாத ஒரு சிலரும் மக்காவிலே தங்கிவிட்டன ரென்று :குர்ஆன் ஷரீ'ப் கூறுகின்றது (8 : 72).

எப்படியெனின், மகனுக்கும் தகப்பனுக்கும், மகளுக்கும் தாய்க்கும், மருமகளுக்கும் மாமிக்கும் பிரிவினையுண்டாக்க வந்தேன்"—(மத்தேயு, 10 : 34, 35) என்று இயேசு கிறிஸ்து கூறியதேபோல் எம்பெருமானார் (சல்) எப்பொழுதும் கூறியதே கிடையாது. மீக் கூறியவாறு இயேசுவே கூறினார்; ஆனால், எம்பெருமானார் விஷயத்திலோ, அவர்கள் சுயமே இவ்வாறு ஒருபோதுங் கூறியதில்லை. ஆனால், அவர்களுடைய எதிரிகளே அவ்வாறு கூறிக்கொண் டலைந்தனர். இதுதான் இப்பெரியாருக்கும் அவருக்குமுள்ள வித்தியாசம் என்றறிக.

மேற்கூறியவாறு எல்லாரையும் மதீனாவுக்கு அனுப்பிவிட்டு, இரண்டு ச'ஹாப்'ாக்களுடனே ரஸூல் நாயகமவர்கள் மட்டுமே மக்காவிலே தங்கியிருந்ததானது, மீண்டும் நபி பெருமானுக்கு ஆண்டவன் மீதுள்ள அளப்பரும் ஆழிய பக்தியையே அதிகம் வெளியி லெடுத்துக் காண்பிக்கின்றது. மக்கா வாசிகளின் கொடுமைகளோ, நாளுக்கு நாள் பொறுக்க முடியாதனவாகவே காணப்பட்டு வந்தன. மக்காவில் தங்களால் அடியோடு வெறுக்கப்பட்டு வந்த இஸ்லா மார்க்கம் மதீனாவுக்குச் சென்று கொடி படர்வதென்பதை நினைக்க நினைக்க, அக் :குறைஷியரின் வயிற்றெரிச்சல் பொறுக்க முடியாததாகவே பொங்கி யெழுந்துகொண் டிருந்தது. இப்படிப்பட்ட எதிரிகளின் மத்தியிலே எம்பிரானவர்கள் தன்னந்தனியே தங்கியிருப்பதென்பது ஒரு மகாமோசமான காரியமாகவே காணப்பட்டு வந்தது. ஆயினும், அல்லா(ஹ்)வின் திருத்தூதரவர்கள் தங்களது சொந்த க்ஷேமத்தில் செலுத்திய கவலையைக் காட்டினும் தங்கள் சிஷ்ய கோடிகளின் க்ஷேமத்தின்மீது செலுத்திய கவலையே மிகப்பெரிதாய்க் காணப்பட்டு வந்ததனால்தான் அவர்கள் தங்களைத் தவிர்த்து மற்றையோரையெல்லாம் மதீனாவுக்கு முன்னரே அனுப்பி விட்டார்கள். அவர்களெல்லாரும் அதிக பத்திரமான இடத்தில் பாதுகாப்புட னிருக்கச் செல்லுங்கால், இவர்கள் மட்டும் இரத்தத்தை உறுஞ்சிச் சப்பிப் பிழிந்துவிட வேண்டுமென்று எண்ணங்கொண்டிருந்த அந்தக் கொடிய துஷ்டக் :குறைஷியர் மத்தியிலேயே மகா தைரியத்துடனே தங்கி யிருந்தார்கள். அவர்களுக்கு முன்னமே யிருந்துவந்த க்ஷாத்திரத்துடன், மக்கத்து முஸ்லிம்கள் தங்களுரை, இல்லை, பிடியை விட்டு மதீனாவுக்கு ஓடி விடுதலென்னும் ஏமாற்றச் செய்தியைக் கேட்கக் கேட்க, அவர்களுக் குண்டான ஆத்திரத்துக்கு அளவென்பதே ஒருசிறிதும் சொல்ல முடியாது போய் விட்டது.

எல்லாருடைய க்ஷேமத்துக்கும் ரஸூலுல்லாவின் க்ஷேமமே முக்கிய மூலகாரணமாய் விளங்கி வந்தமையான், இவர்களே ஏனை எல்லாரைப் பார்க்கினும் முதன்முதலாக ஹிஜ்ரத் புறப்பட்டிருத்தல் வேண்டும். ஆனால், நபிகள் திலகம் மட்டும் அவ்வாறு செய்யவில்லை; செய்யவு மாட்டார்கள். என்னெனின், இவர்கட்கு இறைவன்மாட்டு எண்ணி முடியாத அத்துணைப்

பலமான, திடமான நம்பிக்கை இருந்து வந்தது. ஆனால், எல்லாருக்கு முன்னம் இவர்களே ஹிஜ்ரத் புறப்பட்டுச் செல்லவேண்டு மென்று ஒரு சிறிதேயும் விரும்பி யிருப்பார்க ளாயின், அதற்கு அந்தச் சிஷ்யர்கள் அதிக பிரியத்துடனேயே அனுமதி கொடுத்திருப்பார்கள். என்னெனின், எத் தகைய தீ'னுல் இஸ்லாத்திற்காக அம் முஸ்லிம்கள் தங்கள் ஜன்ம பூமியையும் விட்டுத் தங்களுக்குச் சொந்தமான அரிய வீடுவாசல்களையும், சொத்து சுதந்தரங்களையும், மற்றுமுள்ள உற்றார் உறவினர்களையும் அடியோடு துறந்து அயலூர் சென்று, தங்களுடைய உடல் பொருள் ஆவி யனைத்தையும் தியாகம் செய்யத் தையாரா யிருந்தனரோ, அத்தகைய இஸ்லாத்தின் க்ஷேமத்துக்கே அந்த ரஸூல்நாயக மவர்கள்(சல்) உயிருட னும் சகல க்ஷேமலாபத்துடனும் இருந்துவர வேண்டுவது அத்தியாவசிய மாய்க் காணப்பட்டு வந்தது. ஆனால், அப் பெருமானார் தங்கள் சிஷ்யர்கள் மீது அத்துணை அளவுக்கு மீறிய அபிமானம் பாராட்டி வந்ததனால், அவர் கள் தங்கள் சொந்த க்ஷேமத்தைக் காட்டினும் அன்னாரின் க்ஷேமத்தின் மீதே சதா கண்ணுங் கருத்துமா யிருந்து வந்தார்கள். இக் காரணத்தி னால்தான் நபிகள்பெருமான் தங்களைக் கொலைசெய்துவிடத் தீர்மானித்துள்ள எதிரிகளின் மத்தியிலே தாங்கள்மட்டுமே இருந்துகொண்டு, தங்கள் சிஷ்ய வர்க்க முழுதையும் முற்கூட்டியே மதீனாவுக்கு அனுப்பி வைத்து விட்டார்கள். இத் துணிச்சலான செய்கையால் நாம் இரண்டுவிதமான கருத்தைக் கண்டு கொள்ளுகிறோம்: முதலாவதாக, அவர்களுக்கு ஆண்டவன் மாட்டுள்ள அளவிடற்கரிய உறுதியென்பது எத்தன்மைத் தென்பது நன்கு வெளியாகின்றது. இரண்டாவதாக, அவர்கள் "தன் னுயிரைப் பார்க்கினும் மன்னுயிரை" எத்துணைப் பெரிய மு'ஹப்ப'த் துடனே பேணிக் காத்துவந்தார்க ளென்பதும் வெளிப்படையாய்ப் புலப் படக் கிடக்கின்றது.

மக்கத்து மனிதர்கள் மதீனத்துக்குச் சிறுகச்சிறுக ஹிஜ்ரத் செய் வதைக் கண்டு, அக் :குறைஷியருக்கு நாளுக்குநாள் வயிற்றெரிச்சல் பொறுக்க முடியாது அதிகம் பொங்கியெழுந்து கொண்டே வந்ததனால், அவர்க ளனைவரும்கூடி, இந்த மு'ஹம்மதி'ன் விஷமத்தனத்தை எவ்வாறு அடியோடு ஒதுக்கிவிடுவ தென்று ஒரு முடிவான தீர்மானம் செய்யத் துணிந் தெழுந்தனர். அதுபொழுது மக்காவின் தலைமைப்பதவி அபூ'ஸுஃப் யான் கைவயம் இருந்து வந்தமையால், அவரிடமே எல்லாரும் சென்று முறையிட்டுக் கொண்டனர். இவர் ரஸூலுல்லாவின்மீது இடைவிடா வைஷம்யங் கொண்டவராய் விளங்கிவந்தார். அதுபோது நபிகள் திலக மல்லாத (அபூ'ப'க்ர், அ'லீயைத் தவிர்த்து) ஏனை முஸ்லிம்க ளெல்லாரும் அநேகமாய் 'ஹப'ஷாவுக்கும், மதீனாவுக்கும் ஹிஜ்ரத் சென்று விட்டார்கள். ஆனால், நபிபெருமானா ரவர்களையும் மதீனத்துக்கு ஹிஜ்ரத் புறப்பட்டு விடு மாறு 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் (ரலி') அடிக்கடி கூறுவார்கள்; அதற்கெல்லாம்,

இன்னமும் இறைவனது கட்டளை வரவில்லையென்றே எம்பிரான் அவர்கள் மறுமொழி கூறுவார்கள்; நபி பெருமானது சாத்விக பிரசாரத்துக் கெல்லாம் உத்தரமாக உடைவாட்களே யாங்கும் உருவப்பட்டன. இதுவரை :குறைஷியர் பலரும் தத்தமக்குத் தெரிந்த முறையிலேயே தனித்தனியே துன்பமிழைத்து வந்தார்கள்; ஆனால், அவர்களெல்லாரும் ஏகோபித்துச் செய்ய வேண்டிய காரிய மொன்றே இனிப் பாக்கியா யிருந்துவந்தது. இதனால்தான் இறைவனது உத்தரவும் இதுகாறும் வரவில்லை போலும்! இறுதிவரை சோதிப்பதே இறைவனது இயற்கையே யாமன்றோ?

ஏனையெல்லா முஸ்லிம்களிடத்தும் ஏற்பட்டிருந்த மனவெறுப்பைக் காட்டினும் நபிபெருமான் மீதே அக் :குறைஷியருக்குப் பொறுக்கமுடியாத மனவேதனை பொங்கி யெழுந்து கொதித்துக்கொண் டிருந்தது. ஆதலின், அதுபொழுது மக்காவைச் சூழ்ந்துள்ள இடங்களிலுள்ள முஸ்லிம் சிஷ்யர்களிடத்திருந்தெல்லாம் அழைப்புக்கள் வந்துகொண் டிருந்தன. த்வ்ஸ் என்னும் கூட்டத் தலைவர் 'துஃப லிப்'னு அ்ம்'ரென்பார் தங்களிடம் போதிய பாதுகாப்புள்ள கற்கோட்டையொன் றிருப்பதாயும், அதனுள் வந்து ரஸூல் நாயக மவர்கள் தக்க பந்தோபஸ்துடனே தங்கிக் காலங்கழித்து வரலா மென்றும் வேண்டிக் கொண்டார். அதற்கும் நபிபெருமான் (சல்) இடங் கொடுக்க வில்லை. என்னெனின், இறைவனது அனுமதி இன்னமும் கிடைக்க வில்லை. இத்தகைய நிலைமையில் எம்பிரான்(சல்) அவர்கள் ஒரு நாளிரவு ஒருகனவு(மனாம்) கண்டார்கள்; அழகிய நந்தன வனத்துடன்கூடிய ஒரு பெரிய மாளிகையிலே தாங்கள் தங்கியிருப்பதாகக் கனவு கண்டு, அதன் தாத்பரியமாகத் தாங்கள் யமாமாவுக்குப் புறப்பட்டுச் செல்லவேண்டு மென்ற கட்டளை பிறக்கலா மென்று எதிர்பார்த் திருந்தார்கள். ஆனால், யமாமாவுக்கா? அல்லது வேறெங்கேனுமா? என்னும் விஷயம் இன்னமும் நிச்சயமாய்ப் புலப்படவில்லை. என்னெனின், இதுவரையும் அல்லா(ஹ்)வினிடத்திருந்து வ'ஹீ வந்து சேரவில்லை.

பிறகு இறுதியாய் நுபு'வ்வத் வந்து 13-ஆவது வருட ஆரம்பத்தில், அதிக நாட்களாக ஆவலுடனே எதிர்பார்க்கப் பட்டுவந்த அனுமதி யொன்று ஆண்டவன் திருச் சன்னிதானத் திருந்து அவனது அருமைத் திருத்தூதருக்கு அறிவிக்கப் பட்டது; தங்கள் கூட்டத்தாருடன் மதீனாவுக்கு ஹிஜ்ரத் செல்வதே உத்தம மென்னும் உத்தரவு அதுசமயம் கொடுக்கப் பட்டது. அப்பொழுதே நபிகள்திலகம்(சல்) தங்கள் பிரியசிஷ்யரான 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் சித்'தீ':க் அவர்களது விடுதிக்குச் சென்று தெருக்கதவைத் தட்டினார்கள். உடனே உள்ளேயிருந்த அபூ'ப'க்ரால் எதிர்பாரா வேளையில் வந்துற்ற நபிகள்திலகம் ஒரு சுபச்செய்தி யுடனேதான் வந்திருப்பார்களென நல்வரவேற்கப்பெற்று, ஆங்குச் சென்று ஆண்டவனது அறிக்கையை அவர்பால் அறிவித்தார்கள். உடனே 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ரவர்கள் (ரலி') அடக்கமுடியா அதிசயத்துடனும், அரும்பித் ததும்பிய அளவற்ற ஆனந்த

பாஷ்பத்துடனும், "என் பிதாமஹார் தங்களுக்குத் தியாகமாகுக! யானும் தங்களுடனே சேர்ந்து மதீனாவுக்குவரும் பாக்கியத்தைப் பெறுவேனா?" என்று அதிக ஆவலுடனே வினவினார்கள். அதற்கு ரஸூலுல்லா(ஹ்) அவர்கள் இசைந்ததைக் கண்டு, அதற்குமுன் நான்குமாத காலமாகவே இத்தகைய ஹிஜ்ரத்தை எதிர்பார்த்து 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் சித்'தீ':க் அவர்கள் வேலந்தழை போட்டு மிக்க கொழுமை யடையுமாறு வளர்த்து வந்த இரண்டு பெண்ணொட்டகங்களுள் ஒன்றினை அங்கீகரிக்குமாறு நபிகள் திலகத்தை வேண்டிக் கொண்டார்கள். ஆனால், அதனைக் கிரயம் கொடாது நபிபெருமான் பெற்றுக்கொள்ள மறுத்துவிட்டமையான், ஒருவாறு அவ் வொன்றினுக்கு மட்டும் விலைபேசி முடிவுசெய்து, அதன்படியே அக்கிரய மும் அக்கணமே கொடுக்கப்பட்டு முடிந்தது.

அதுபொழுது ஆ'யிஷா (ரலி') அவர்கள் ஏழு அல்லது எட்டு வயதே யுடைய சிறுமியா யிருந்துவந்ததனால், அவருடைய மூத்த சகோதரியான அஸ்மா—[பிறகு அ'ப்'து'ல்லா ஹிப்'னு 'ஜுபைர்'-(ரலி') அவர்களின் மாதா வாய் விளங்கியவர்] அவர்களே இரண்டு மூன்று நாட்களுக்கு வேண்டிய ஆகாரபதார்த்தங்களை யெல்லாம் கட்டமுதாகக் கட்டித் தையாரிக்க முற்பட் டார்கள். இம் மாதுசிரோமணி அக் கட்டமுதைக் கட்டுவதற்குக் கயிறு தேடி, அஃதொன்றும் அதுசமயம் அவர் கைக்குக் கிட்டாமையால், தம் முடைய 'கமர்பந்த்' என்னும் இடுப்புப் பட்டியை அவிழ்த்து இரண்டாகக் கிழித்து, அதனைக் கொண்டு அத் தோட்கோப்பை இறுகப்பிணித்து வைத் தார்; இக் காரணத்தினால்தான் அஸ்மா அவர்கட்கு "'தாத்துன் நி:தா(க்) கை:கன்" —இரண்டு இடுப்புக்கட்டை யுடையவர்) என்னும்பட்டமும் வழங்க லாயிற்று. நபிபெருமானுடன் 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ரும் ஹிஜ்ரத் புறப்படலா மென்னும் சுபச்செய்தியைச் செவியேற்றவுடனே அவருடைய நேத்திரங் களினின்று ஆனந்தபாஷ்பம் பெருகிற்றாம். ஏன்? தம்முடைய ஞான பிதாவுடன் புறப்பட்டுத் தாமும் மக்காவை விட்டு நீங்கி க்ஷேமமாக மதீனா வுக்குச் சென்றுவிடலா மென்னும் சந்தோஷத்தினாலா? இல்லை; இல்லை! அன்னவருக்கு என்னவிதமான கஷ்ட நிஷ்டூரங்கள் நேரிடினும், அவற்றை யெல்லாம் அவருடனே யிருந்து தாமும் அனுபவித்து, அவருக்கு ஆபத்து நேரிடாது காப்பாற்றலா மென்னும் ஆர்வமே அபூ'ப'க்ரின் (ரலி') நயனங் களினின்று அவ்வாறு அதுசமயம் ஆனந்தக் கண்ணீர் வெளியாகுமாறு செய்துவிட்டது.

மேற்கூறியவாறு ஹிஜ்ரத் சம்பந்தமான வ'ஹீ வந்து இரண்டு மூன்று தினத்திற் குள்ளே ஆங்குள்ள :குறைஷிக் கொடுங் கா'பிர்களும் மகா மோசமான யோசனை யொன்றை முடிவாகச் செய்துவிடத் தீர்மா னித்து விட்டார்கள். அம் மக்கமா நகரிலுள்ள "த்'ாருன் னத்'வா" என்னும் நகரப் பொதுச்சபா மண்டபத்திலே அவர்கள் ஒருநாள் பெருங் கூட்டம் போட்டனர். அதன் சொந்தக்காரர் 'ஹ(க்)கீம் இப்'னு ஹ'ஜா

மென்பவராகவே காணப்பட்டார். ஆதியில் குஸை இப்'னு கிலாப்' என் பவரால் நிர்மாணிக்கப்பட்ட இந் நகரமண்டபத்துள் அந்தக் குஸை வம்சத் தின ரல்லாத வேறெவரும் நுழைவதற்கு அனுமதி கிடையாது; அவர்க ளுள்ளும் நாற்பது வயதுக் குட்பட்டவர் எவரும் அதற்குள்ளே அடி யெடுத்து வைப்பது கூடாது. ஆங்குத்தான் தேச சம்பந்தமான முக்கிய விஷயங்க ளெல்லாம் பரியாலோசனை செய்யப்பட்டு வருவது வழக்கம். அத்தகைய கௌரவம் பொருந்திய நகர மண்டபத்துள் அபூ' ஸு'ப்யான், உ'த்ப'ா, 'ஜு'பை'ர் பி'ன் முத்இ'ம், நல்'ர் பின் 'ஹாரி:த் பி'ன் கல்த'ா, அபு'ல் ப'க்'த்ரீ, இப்'னுஹிஷாம், 'ஜம்ஆ' பி'ன் அஸ்வத்' பி'ன் முத்தலிப்', 'ஹ(க்)கீம் இப்'னு ஹு'ஜாம், அபூ'ஜஹ்ல், நபீ'ஹ், முனப்'ப''ஹ், உமையா பி'ன் க'லபு' முதலிய பலர்கூடி, நபிபெருமான் விஷயத்தை எவ்வாறு ஃபஸல் செய்வ தென்று பொதுவாக ஆலோசிக்கத் தொடங்கினார்கள். அவர்களுள் ஒருவரான அபு'ல் ப'க்'தரீ முதன் முதலாகப் பேசத் தொடங்கி, மு'ஹம்மதை' விலங்கிட்டுக் கைகால்களைப் பிணித்துச் சிறைக் கோட்டத் துள்ளே அடைத்துப் போட்டுச் சாப்பாடுங் கொடாது சாவடித்தலே சரி யெனக் கூறினார். இஃது அத்துணைச் சிறந்த வழியாய்க் காணப்படவில்லை. என்னெனின், அவரைச் சிறையி லடைத்து விடுங்கால், அவ்விஷயம் வெளியில் வந்து, நபிபெருமானின் சிஷ்யர்கள் கூடி, வேண்டுமாயின், மதீனாவிலுள்ள அன்சார்களும் கலந்துகொண்டு, :குறைஷியரை எதிர்த்துச் சிறையினை உடைத்துத் தம்முடைய ஞானாசிரியரை வெளிப்படுத்தி விடுதல் கூடும். ஆதலின், இஃது அத்துணைச் சிறப்புவாய்ந்த முறையாக மாட்டா தென்று அம் மகான்க ளனைவரும் ரத்துசெய்து விட்டு, வேறு யோசனை வேறு யாருக்கேனும் தோன்றுகிறதா? என்று வினவினார்கள்.

உடனே அஸத்' இப்'னு ரபீ'ஆ' எழுந்து நின்று, மு'ஹம்மதை' நாடு கடத்தி விடுதலே மெத்த உத்தமமான வழியெனக் கூறினார். "தேசப் பிரஷ்ட மாயினதன் பின்பு அவர் எங்குச் செல்கிறார்? எங்கே புகலிடம் தேடிக் கொள்ளுகிறார்? என்பதுகுறித்து நமக்கொன்றும் கவலை வேண் டாம். அச் சனியனை விட்டு நாம் ஒதுங்கி யிருக்கலாம்," என்று போதித் தார். இதுவும் அம் மேதாவிகளின் கூட்டத்தில் அங்கீகரிக்கப் படவில்லை. என்னெனின், ரஸூலுல்லாவின் வாக்குச் சாதுர்யத்தை அவர்களனைவரும் நன்கறிவர். இத்தகைய வாக்குவன்மை வாய்ந்தவரை வெளியில் விட்டால், அவர் ஆங்காங்குள்ள மனிதர்களை யெல்லாம் தமது சாமர்த்தியத்தால் தங் கக்ஷியில் சேர்த்துக்கொண்டு, மக்காவின்மீது படையெடுத்துவந்து, ஆங் குள்ள :குறைஷிய ரனைவரையும் தோற்கடித்து வென்று விடுதலுங் கூடும். எனவே, இவ்வாறு ரஸூலுல்லா அவர்களைத் தனியே நாடுகடத்தல் ஒரு கூடாத காரியமாகவே கருதப்பட்டது; ஆதலின், அந்த யோசனையும் அங்கீகரிக்கப் படவில்லை. அதன்பின்பு வேறுயோசனை யாதுளதெனப் பரியாலோசனை புரியத் தலைப்பட்டனர். [இங்கு ப'னூ ஆ'மிர் கூட்டத்தின்

தலைவரான 'பர்ராஸ் என்பவர், நாயக மவர்களின் வாக்கு வன்மையைக் குறித்து, "இவர் என்வசமாய் விட்டால் அதிசீக்கிரம் அரப் நாட்டையே யான் வசப்படுத்திக்கொண்டு விடுவேன்," என்று கூறியிருந்ததை நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்ளல் வேண்டும்.]

அதுபோழ்து அபூ'ஜஹ்ல் எழுந்து நின்று, தன்னுடைய மேலான யுக்தியை விவரிக்கத் தொடங்கினன்: "என்னுடைய ஆலோசனையைக் கேட்பதாயின், மு'ஹம்மதை' ஓரே மூச்சாய்க் கொன்று தீர்த்துவிடுவதே உத்தமமான காரியமென்று யான் கூறத்துணிவேன். எவனேனும் தனி மனிதன் இக்காரியத்தைச் செய்வதாயின், அவன்மீது ப'னூ ஹாஷிம்கள் பழிக்குப்பழி வாங்கத் தொடங்கிவிடுவர். ஆகலின், ஒவ்வொரு கோத்திரத்திலு முள்ள உத்தம யௌவன வீரபுருஷர்க ளனைவரும் உருவிய வாளுடனே ஒருமுகமாய் முன்வருதல் வேண்டும். அவர்க ளனைவரும் ஏககாலத்தில் தத்தம் வாளாயுதங்களை உருவி மு'ஹம்மதி'ன் சரீரத்தின் கண் சொருகிவிடுதல் வேண்டும். அதுபொழுது எவருடைய குத்தினல் மு'ஹம்மதி'ன் கொலை நேரிட்டதென்று நிச்சயிப்பது முடியாது. எனவே, எல்லாக் கோத்திரத்தாருடனும் ப'னூஹாஷிம்கள் ஏககாலத்தில் எதிர்த்து நிற்பது இயலாது போய்விடும். ஆகவே, அவர்கள் :குறைஷிய ரெல்லாருடனும் எதிர்த்துநிற்கத் துணியாது, "தி'யத்" தென்னும் இரத்தப் பரிக்கிரயத்தை மட்டுமே பெற்றுக்கொண்டு வாளா இருந்துவிடுவர்."

"வங்கிடத் தொருவர் படைக்கல மெடுத்து
மஹம்மதைப் பொதுவுற வளைந்து
செங்கர மெடுத்திட் டியாவரும் ஓங்கிச்
சின்னபின் னம்பட உடலில்
பொங்கிய குருதி சிதறிடத் துணிகள்
புரள்தரப் புவியினில் வீழ்த்தி
நங்களை கடிவோம் கீர்த்தியை யுலகில்
நடத்துவோம் நறைதரு புயத்தீர்!—"

என்றார் உமறுப்புலவரும்.

இதனைக் கேட்டவுடனே எல்லாரும் இதுதான் சரியான யோசனை யென்று ஏகோபித்து ஏற்றுக் கொண்டனர். என்னெனின், ஏனையோரெல்லாரும் கூறிய ஏனை யோசனைக ளனைத்தினைக் காட்டினும் இந்த அபூ'ஜஹ்ல் கூறியதே அதுசமயம் மெத்தப் பொருத்த முடையதாய்க் காணப்பட்டது. இவ்வாறு முட்டாட் டனமாகவும், முரட்டுத்தனமாகவும் ஆலோசனைகள் சொல்வதனுல்தான் இந்த உ'ர்வாவுக்கு அபு'ல் 'ஹகம் (அதியுக்தியின் தந்தை) என்ற காரணப் பெயரொன்றும் கிடைத்திருந்தது. எனவே, இவ்வாறு ஓரேமுழுக்கிலே தம்முடைய எதிரியைத் தொலைத்துத்தலைமுழுகி

விடலாமென்று எண்ணினார்கள் அந்த ஆடவர்கள். ஆனால், ஆண்டவன் நாட்டத்தை அவர்க ளறியார்கள். அந்த அகடிதகடனா சக்தியை யுடைய* ஆண்டவனது திருவுளச் சித்தத்தையும் திருவிளையாடல்களையும் எவரே அறியவல்லார்? இந்தச் சதியாலோசனையைக் குறித்துத்தான் ஆண்டவனும் தனது திருமறையில் (8: 30) இவ்வாறு கூறியுள்ளான்: "மேலும், குஃப்பார்கள் உம்மைச் சிறைசெய்து மறித்துவிடுவ தென்றோ, அல்லது உம்மைக் கொலைசெய்து விடுவதென்றோ, அல்லது உம்மை வெளியேற்றி விடுவதென்றோ உமக்கு விரோதமாய்ச் சூழ்ச்சி செய்தபொழுது; இன்னம், அன்னவர்கள் (ஒரு) சூழ்ச்சி செய்தார்கள்; அல்லா(ஹ்)வும் (ஒரு) சூழ்ச்சி செய்தான்; இன்னம், அல்லா(ஹ்)வே சூழ்ச்சி செய்வோருள் (ளெல்லாம்) மகா சிரேஷ்டம் வாய்ந்தவனா யிருக்கிறான்."

இனி, மு'ஹம்மத்'(சல்) தங்கள் கரத்தினின்று ஒருபோதும் தப்பப்போவதில்லை யென்று அந்தக் :குறைஷிக் குஃப்பார்க ளெல்லாம் நிச்சயம் செய்து கொண்டார்கள். அதற்கேற்ப அன்றிரவே அந்தக் :குறைஷிப் பிரதிநிதிகளனைவரும் ஒருமுகமாய் நபிபெருமானது இல்லம் சென்று, அதன்பின்பு ஆகவேண்டிய காரியாதிகளைப் பார்ப்பதெனத் தீர்மானம் செய்துகொண்டார்கள்; அவர்களுள்ளே அபூ'ஜஹ்லும் ஒரு தலைவனாய்க் காணப்பட்டான். இதற்கிடையிலே இறைவனருளால் எம்பிரானவர்கள் எதிரிகளின் சூழ்ச்சி யனைத்தையும் நன்குணர்ந்து கொண்டு விட்டார்கள்; அன்றிரவு தங்களுடைய சொந்தக் கட்டிலின்மீதும் அவர்கள் படுத்துறங்க வேண்டாமென்று ஆண்டவனே அறிவித்துக் கொடுத்ததாகவும் நபிபெருமா னவர்கள் நவின்றருளி யுள்ளார்கள். ஆனால், நபிகள் திலகத்தின் பிரசாரத்தின்மீது நம்பிக்கை வையாமற் போயினும், அந்தக் :குறைஷிக் குஃப்பார்களுள் பலர் அவர்களது யோக்கியதையின் மீதுமட்டும் மட்டற்ற நம்பிக்கை வைத்து, அன்னவர்பால் ஏராளமான அடைக்கலப் பொருள்களை யெல்லாம் அமானத்தாகக் கொடுத்து வைத்திருந்தார்கள்; அவற்றை யெல்லாம் அவரவரிடமே ஒப்படைக்க வேண்டிய ஆவசியகத்தை அப் பெருமானார் அதுசமயமும் நன்குணர்ந்து கொண்டார்கள். தங்களுடைய தலைக்குமேலே கத்திவீச்சுப் பறந்துகொண் டிருந்தது; எனினும், தங்களுடைய உயிர்க்கிறுதி வருங் காலையும் தங்கள்பாலுள்ள அடைக்கலக் கடமைகளை நிறைவேற்றுவதே சாலச் சிறந்ததெனக் கொண்டார்கள்; தங்க ளுயிருக்கே உலைவைக்கும் அத்தகைய ஜன்மவிரோதிக ளிடத்தும் நேர்மையுடன் நடந்து கொள்வதே மிகவும் சிறந்ததெனக் கண்டார்கள்; தங்க ளுயிரினும், அடைக்கலப் பொருளை உடையாரிடம் ஒப்படைத்தலே உத்தமமெனக் கொண்ட ஒரு மகான் ஒரு கள்ளத் தீர்க்கதரிசி யாகவேனும் பொய்ந் நடிப்புக்கார ராக

* அகடிதகடனா சக்தி - உள்ளதை இல்லாததே போலும், இல்லாததை உள்ளதே போலும் காண்பிக்கவல்ல சக்தி,

வேனும் இருந்திருப்பது முடியுமா வென்பதைச் சற்றே சிந்தித்துப் பார்ப்பீர்களாக. அத்தகைய சந்தர்ப்பத்திலே வேறொரு மனிதனுயிருப்பின், அவன் என் செய்திருப்பா னென்பதைச் சிறிதே சிந்தனை செய்து பாருங்கள். தங்களுயிரை ஆண்டவன்வயம் ஒப்படைத்து விட்டு, தங்கள்வயம் எதிரிகளால் ஒப்படைக்கப் பட்டிருந்த அடைக்கலப் பொருள்களை யெல்லாம் உரியவரிடம் வாபஸ் செய்வதிலே எம்பெருமானின் ஆழிய எண்ணம் அது சமயம் பதிந்துவிட்டது. யோக்கியதையைப் பற்றியும் கண்ணியத்தைப் பற்றியும் அவரவரும் எத்தனையோ கப்பல் கணக்காகப் பேசலாம். ஆனால், உயிருக்கே ஆபத்து நேருங்கால், ஒருவர் எவ்வாறு உண்மையிலே நடந்து கொள்வ ரென்பதுதான் இத்தரணியில் வேறு விஷயமாய்க் கருதப்படும். ஆனால், அல்லா(ஹ்)வின் ரஸுலான நபிபிரானின் (சல்) செய்கை அவ்வா றிருப்பது ஒருபோதும் கூடாது. என்னே எம்பிரானின் நம்பிக்கைத் துரோகமற்ற (அல் அமீன்) செய்கை!

தங்க ளுயிரினும் உயர்ந்ததாய் அன்னியரின் அமானத்தே அதிகம் ஓம்பப்படல் வேண்டுமென்னும் எண்ணம் உதித்தவுடனே ரஸுல் நாயகமவர்கள் 'ஹ'ஜ்ரத் அ'லீ (ரலி') அவர்களை யழைத்துத் தங்களுக்கு ஆண்டவனால் முன்னறிக்கை செய்யப்பட் டிருப்பதால், தாங்கள் அன்றிரவு தங்களுடைய படுக்கையில் படுத்துறங்குவது கூடாதென்றும், ஆதலின், அந்த மரவணையின் மீது அன்று அ'லீ (ரலி') அவர்களே தங்களுக்குப் பதிலாகப் படுத்துறங்க வேண்டுமென்றும் ஏவினார்கள். "இன்றிரவு நீர் எனது கட்டிலில் படுத்து, என்னுடைய இந்த 'ஹல'ரமௌத் பச்சை ஷால்வையையும் மேலே போர்த்துக் கொள்ளக் கடவீர். உமக்கொன்றும் ஆபத்து வாராது அல்லா(ஹ்) காப்பாற்றுவான். நீர் நாளைக்காலையில் என்பாலுள்ள அடைக்கலப் பொருள்களை யெல்லாம் அவ்வவற்றிற்கு உரியாரிடம் ஒப்படைத்து விட்டுப் பின்னர் மதீனவுக்கு வந்து சேரக்கடவீர்," என்று மொழிந் தருளினார்கள். அதனைச் செவியேற்ற வுடனே அ'லீ(ரலி') அவர்கள் அதிகம் அகமகிழ்வு கொண்டவர்களாய் அவ்வாணையை அவ்வாறே சிரமேற் கொண்டு விட்டார்கள். அன்றிரவு அந்தக் கட்டிலும், படுக்கையும், பசும் போர்வையும் செங்குருதி மல்கும் ரணரங்கமாய் மாறிவிடு மென்பதை 'ஹ'ஜ்ரத் அ'லீ (ரலி') அவர்கள் நன்குணர்ந் திருந்தும், அதன்மூலம் தங்களுடைய ஞானபிதாவாய் விளங்கிய நபிகள் திலகம் உயிர்தப்பக் கூடு மென்பது கண்டு, முழுமனத் திருப்தியுடனே அப்பணியைத் தங் தலைமேற் கொண்டு விட்டார்கள். முன்னொரு முறை மற்றொரு தீர்க்கதரிசியை அன்னாரின் சிஷ்யனொருவன் (யூதாஸ் காரியோத்) கேவலம் 30 வெள்ளிக் காசுக்காக எதிரிகளிடம் காட்டிக் கொடுத்ததே போன்று எம்பெருமானின் சிஷ்யர்கள் எப்பொழுதுமே நடந்துகொண்டது மில்லை; அவ்வாறு நடந்து கொள்ளவு மாட்டார்கள்.

அந்தப் பயங்கரமான இருளிரவிலே ரஸுலுல்லாவின் படுக்கையின்

மீது அ'லீ(ரலி') அவர்கள் படுத்து, நபிபெருமானின் பச்சைப் போர்வை யையும் தங்கள்மீது போர்த்துக் கொண்டார்கள். வீட்டைச் சுற்றிலும் வெளியில் :குறைஷி மாக்கள் வந்து முற்றுகை போட்டுக்கொண்டனர்; அவர்களுக்குத் தலைவனாய் அபூ'ஜஹ்லும் ஆண்டு நேரிலே ஆ'ஜிரா யிருந் தான். ஆனால், அந்த அரபிகள் ஸ்திரீகளுள்ள விடுதிக்குள்ளே உடைய வரது அனுமதியின்றி 'உள்ளே நுழைவது' வழக்கமில்லை; அன்றியும், இருட்டிலேனும், குடியிருக்கும் வீட்டிற்குள்ளேனும் புகுந்து கொலை செய்வதும் அவர்களுக்கு இழுக்கை யுண்டுபண்ணும். ஆதலின், ஆங்கு வந்த :குறைஷிய ரனைவரும் நபிகள் திலகத்தின் வீட்டிற்குள்ளே பலாத் காரமாய் நுழையாது, வெளியிலேயே தங்கி யிருந்தார்கள். கதவிடுக்கால் பார்த்தபோது, உள்ளே ரஸூலுல்லாவின் மரவணையின்மீது அவர்களது போர்வையுள் ஒருவர் உறங்குவதைக் கண்டு, நபிகள் பெருமானே ஆங்கிருப் பதாய் எண்ணிக்கொண்டு, அவர்கள் வெளியில் எழுந்து வருங்கால் உடனே எல்லாரும் அன்னவர்மீது பாய்ந்து குத்திக் கொன்றுவிடலா மென்னும் திண்ணிய எண்ணத்துடனே அதிக தைரியமாய் ஆங்கு வெளிப் புறத்தில் ஆவலுடனே காத்துக்கொண் டிருந்தனர். ஆனால், 'தானொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைத்த' தென்பது ஆன்றோர் வாக்காம். "ஒன்றை நினைக்கின் அதுவொழிந்திட் டொன்றாகும்," என்று மற்றொரு பெரியாரும் கூறியுள்ளார்.

வீட்டினுள்ளே 'ஹ'ஜ்ரத் அ'லீ(ரலி') அவர்கள் நபிகள் பெருமானின் படுக்கையில் படுத் துறங்கினார்கள்; ரஸூலுல்லா(ஹ்) (சல்) அவர்களும் அல்லா(ஹ்)வின் ஆணைப்படி வெளியில் புறப்பட சமயம் பார்த்திருந் தார்கள். ஆனால், நடுநிசிமட்டும் அங்கு வெளியில் விழித்துக்கொண் டிருந்த :குறைஷியருக்கு ஆண்டவன் சோதனையால் அதற்குமேல் அயர்ந்த உறக்க மயக்கம் உண்டாய்விட்டது. பிறகு அவர்கள் எங்கே விழிக்கப் போகின் றனர்! "துஞ்சினார் செத்தாரின் வேறல்லர்" என்னுமா போன்று, அல்லா(ஹ்)வின் இயற்கையான ":குத்'ரத்" அன்னவரை யெல்லாம் ஆழிய நித்திரையுள்ளே அன்றிரவு ஆழ்த்தி வைத்துவிட்டது! அதுசமயம் எங்கும் காரிருள் கம்மிக்கொண் டிருந்தது; அக்கணமே ரஸூலுல்லா(ஹ்) அவர்கள் தங்களைச் சென்ற பன்னிரண் டாண்டுகளாகக் கைவிடாது காப்பாற்றி வந்த அந்த எல்லாம் வல்ல இறைவனே இப்பொழுதும் எதிரிகளிடம் காட்டிக் கொடுத்துவிட மாட்டா னென்னும் மனஉறுதியுடன் தங்களில் லத்துத் தெருக்கதவைத் திறந்துகொண்டே, ஆங்குக் குழுமி யுறங்கிக்கிடந்த எதிரிகளினூடே தைரியமாக நுழைந்து வெளியில் வந்து நின்று, கஃ'பத் துல்லாவின் பக்கல் திரும்பிப் பார்த்தார்கள். உடனே, "ஏ 'ஹரம் ஷரீ':ப! உலகத்திலுள்ள ஏனைப் பொருள்க ளெல்லாவற்றைக் காட்டினும் நின் பாலே எனக்குப் பிரியம் அதிகமா யுண்டு. ஆனால், நின் மக்கள் என்னை இங்குத் தங்க விடுகின்றார்க ளில்லையே!" என்று கூறிவிட்டு, நேரே

'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ரின் இல்லத்துக்குச் சென்று, கதவைத் தட்டினார்கள். "மேலும், நிச்சயமாகவே, நாம் அவர்களுக்குப் பின்னால் உங்களை இப் பூமியில் குடியிருத் தாட்டுவோம்; இஃது எனது திருச் சமுகத்தில் நிற்கிறதை அஞ்சியும், எனது அச்சமூட்டலை அஞ்சியும் கொள்கிறவனுக்காக இருக்கும்"—(14 : 14) என்று ஆண்டவன் அதுகாலைக் கூறிய தீர்க்க தர்சனம் • பின்னர் நிறைவேறப் போவதை நீங்கள் நன்கறிவீர்கள். அக்கணமே இருவரும் அங்கிருந்து இரகசியமாகப் புறப்பட்டு, அந்த விண்மீன் வெளிச்சத்தின் மின்மின் உதவிகொண்டே, விடியுமுன் ஒருமணிநேரம் நடந்து சென்று, மக்காவின் எல்லையிலிருந்து தெற்கே சுமார் மூன்று மைல் தூரத்திலுள்ள ஃதளரென்னும்* மலையடிவாரத்தை நண்ணி, அதன் மீதுள்ள அப் பெயர்கொண்ட குகையினுள்ளே பத்திரமாகத் தங்கிவிட்டார்கள். எதிரிகளின் கண்களிலே மண்ணைத் தெள்ளிப்போட்டு விட்டார்கள்.

"திருமனைப் புறத்தி னின்றொரு பிடிமண்
செங்கையின் இனிதெடுத் தேந்தி
ஒருதரம் யாசீன் ஓதிநாற் றிசையும்
உறங்கிய கா'பிரை நோக்கி
இருதிருக் கினும்வா யினும்புக வெனவென்(று)
எண்ணியம் மண்ணினை யெறிந்து
சொரிகதிர்ச் சுதைமா மனையிடங் கடந்து
தோன்றினர் நீண்டமா மறுகில்,"— என்கிறார் சீறாவுக்குடைய பெரியாரும்.

இதுதான் 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ரும் (ரலி') ரஸூலுல்லா(ஹ்) அவர்களும்(சல்) ஹிஜ்ரத் புறப்பட்ட விருத்தாந்த மாகும். இனி, அவர்களுடைய மதீனாப் புறப்பாட்டையும், எதிரிகள் அவர்க ளிருவரையும் தேடித் திரிந்ததையும் அடுத்த அதிகாரத்தில் நன்கு காண்பாம்.

"ஆனை மருப்பும் அருங்கவரி மான்மயிரும்
கான வரியுகிரும் கற்றோரும்— மானே
பிறந்தவிடத் தன்றிப் பிறதொருதே சத்தே
செறிந்தவிடத் தன்றோ சிறப்பு!"— என்பது நீதிவெண்பா.

* "ஃதளர்" என்னும் குகைக்கும் 'ஹரம் ஷரீ'புக்கும் 6 மைல் தூரமுண்டு : இஃது யமனுக்குச் செல்லும் ரஸ்தாவில் மக்காவின் தென்திசையி லுள்ளது. முன்னொரு காலத்து, "ஃதளர் பி'ன் ஸியா'ஹ்" என்னும் தபஸி யொருவர் எப்பொழுதும் ஆங்குச் சென்று தங்கியிருப்பது வழக்கமாம். இதனால் அக் குகைக்கும் அதனைச் சூழ்ந்துள்ள மலைக்கும் "ஃதளர்" என்னும் நாமம் வழங்கலாயிற் றென்ப.

# அதிகாரம் — 17

## ஹிஜ்ரத் புறப்பட்டுச் செல்லல்

"(நந்நூதராகிய) அவருக்கு நீங்கள் உதவி புரியவில்லையாயின், (சத்யத்தை) நிராகரித்து விட்டவர்கள், அவர்— அபூ'ப'க்ர்— இருவரில் இரண்டாமவராக இருந்த நிலையில், அவரை— மு'ஹம்மதை' வெளியேற்றிய பொழுது, அவ்விருவரும் குகையில் (தமியராய்) இருந்தக்கால், அவர் தம்முடைய தோழருக்கு, 'நீர் கிலேசப்பட வேண்டாம்; நிச்சயமாக, அல்லா(ஹ்) நம்முடனே யிருக்கிறான்,' என்று கூறிய பொழுது, அல்லா(ஹ்) திண்ணமாக அன்னவருக்கு உதவி புரிந்துள்ளான்."— (9 : 40)

நபிகள் பெருமானும், அபூ'ப'க்ர் சித்'தீ':க் (ரலி') அவர்களும் மேலே கூறப்பட்டுள்ள வண்ணம் மக்காவை விட்டுப் புறப்பட்ட பின்னர், பொழுது புலரும்வரை ஆங்குக் குழுமிநின்ற :குறைஷிக் கொலைபாதகர்களனைவரும் நன்றாக உறங்கிவிட்டு, அதற்குப் பின்னால் எழுந்துநின்று, தங்கள் கண்களைக் கசக்கிக்கொண்டு அங்குமிங்கும் திகைத்துப் பார்த்தார்கள். இன்னம் மு'ஹம்மத்' (சல்) வெளியில் எழுந்துவாராம லிருப்பதைக்கண்டு, அவ்விடுதியின் வாயிற்கதவைத் திறந்துகொண்டு வேகமாக உள்ளே ஓடி, ஆங்கிருந்த கட்டிலின்மீது ஒரே பாய்ச்சலாய்ப் பாயப் பார்த்தார்கள். அதுசமயம் 'ஹஜ்ரத்' அ'லீ (ரலி') அவர்கள் அப் படுக்கையினின்று ரஸூலுல்லாவின் பச்சைப் போர்வைக்குள் ளிருந்து வெளியே தலையைக் காட்டி எழுந்திருந்தார்கள். அதனைக் கண்டு திக்பிரமை கொண்டுவிட்ட அந்தக் :குறைஷியருக்கு உண்டான அடங்காக் கோபத்திற்கோர் அளவுகாண முடியவில்லை. அக்கணமே அ'லீ (ரலி') அவர்களை நோக்கி, "உன்னுடைய சோதரன் எங்கே!" என்று வேகமாய் வினவியதற்கு, "இறைவனுடைய திருநபியின் விஷயம் இறைவனுக்குத்தான் தெரியும். என்ன! நான்தானா வெளியில் காவல் காத்துக்கொண் டிருந்தேன்? நீங்களெல்லா மிருந்தும், அவர்களை வெளியே போகும்படி விட்டுவிட்டீர்களே! அவர்கள் அப்பொழுதே வெளியே போய்விட்டார்கள்," என்று 'ஹ'ஜ்ரத் அ'லீ அவர்கள் அந்த இலவுகாத்த கிள்ளையே போன்று ஏமாந்துநின்ற சோண சைலங்களுக்கு விடைகொடுத்தார்கள். அதுபொழுது :குறைஷிகள் அ'லீ அவர்களைப் பிடித்துக் க'ஃ'பாவிற்குக் கொண்டு சென்றார்கள்; ஆங்குச் சென்ற சிறிது நேரத்திற்குள் அபூ'த்தாலிபி'ன் குமாரரை இம்சிப்பதால் அந்நகரில் விளையக்கூடிய தீங்கு

எத்தன்மைத்தா யிருக்குமென்பதை நன்குணர்ந்து கொண்டு, அப்பொழுதே அவர்களை விடுதலை செய்துவிட்டார்கள்.

ஃதௌர்க் குகைக்குள்ளே சென்ற 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் அக்குகையினுள் காணப்பட்ட ஒவ்வொரு துவாரத்தையும் பூச்சி புழுக்கள் வந்து தொந்தரை செய்யாமலிருக்கும் பொருட்டுத் தங்கள் துணியைக் கிழித்துத் திணித்து, அடைத்து வைத்து விட்டு, ஆங்குத் தரையிற் சிதறிக்கிடந்த பருக்கைக் கற்களை யெல்லாம் பொறுக்கி யெடுத்து வெளியிற் கொண்டு வந்து எறிந்த பின்னரே நபிகள் திலகத்தை அக் குகைக்குள்ளே பைய அழைத்துச் சென்றார்கள். மக்கமா நகரை விட்டுப் புறப்பட்டு அந்த மலையடிவாரத்தை நோக்கிச் செல்லுங்கால், வழியிலுள்ள கூரிய கற்களால் நபிகள் நாயகத்தின் பாதங்க ளிரண்டும் குத்தப்பட்டு இரத்தம் வடிந்ததனால், 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் (ரலி') அவர்களே தங்கள் ஞான பிதாவைச் சுமந்து சென்றார்க ளென்று சில சரித்திராசிரியர்கள் வரைந்திருக்கின்றார்கள்.




ஃதௌர்க் குகையுள் அபூ'ப'க்ர் சித்'தீ':க்(ரலி') அவர்கள் விஷஜந்துக்கள் மறைந்திருக்கக்கூடிய துவாரங்க ளனைத்தையும் அடைத்து விட்டதாக எண்ணியபோது, ரஸூல் நாயக மவர்கள் அபூ'ப'க்ரின் தொடையின்மீது தந்தலையை வைத்துச் சிறிது கண்ணுறக்கங் கொண்டதன்பின், அக் குகையிலுள்ள மற்றொரு துவாரம் அடைக்கப்படாம லிருந்ததைக் கண்டு, தங்கள் பாதத்தால் உதைத்து அந்தப் பொத்தலை இறுக அடைத்துக் கொண்டார்கள். அன்றிரா முழுதும் விழித்துக்கொண் டிருந்துவிட்டு, விடியற் காலையிலேதான் நபிகள் நாயகம் அவ்வாறு சிறிதே கண்ணயர்ந் திருந்ததனால், அவர்களை எழுப்பக் கூடாதென்று 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் அவர்கள் மேற்கூறியவாறு தங்கள் உள்ளங் காலைக் கொண்டு அந்தத் துவாரத்தை அடைத்துக் கொண்டிருந்த போழ்து, அதற் குள்ளிருந்த விரியன் பாம்பொன்று அபூ'ப'க்ரின் குதிக்காலில் நன்றாகக் கடித்துவிட்டது. ஆயினும், 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் தங்கள் ஞானாசிரியரின் நித்திரை கலைந்துவிடுமென்றஞ்சித் தங்கள் தொடையை அசைக்காமல் அப்படியே வைத்திருந்தார்கள்; அந்தப் பாம்பு தங்களைக் கடித்த போதினும், தங்கள் பெருமானாரை மட்டும் அருகினில் வந்து அது தீண்டக்கூடா தென்று அந்தப் பொத்தலை மீண்டும் அதிக பத்திரமாகப் பொத்திக்கொண்டே யிருந்தார்கள். ஆயினும், அவர்களுக்கு நோவு பொறுக்க முடியாது போய்விட்டமையான், அப்பிரிய சிஷ்யரின் நயனங்களி னின்று சிலதுளி கண்ணீர் வடியத் தொடங்கின;

அவற்றுள் இரண்டொரு துளி நாயகத்தின் முகாரவிந்தத்தின் மீதும் உருந்து சொட்டியதால், உடனே அவர்கள் விழித்துப் பார்த்து, விஷயம் என்னவென்று வினவினார்கள். ஆகவே, அபூ'ப'க்ர் (ரலி') அவர்கள் கூறிய விருத்தாந்தங்களைக் கேட்டு, நபிகள் திலகம் தங்கள் எச்சிலைத் தொட்டு அந்த விரியன் கடித்த இடத்திலே அல்லா(ஹ்)வின் நாமத்தைச் சொல்லித் தடவினார்கள். அப்பொழுதே அபூ'ப'க்ர் அவர்களுக் கிருந்த நோய் நோவு ஆகிய வெல்லாம் பறந்தோடிப் போயிற் றென்று வேறுசில சரித்திராசிரியர்கள் கூறுகின்றார்கள்.

முன்னமே சொன்ன வண்ணம் 'ஹ'ஜ்ரத் அ'லீ அவர்களை விடுதலை செய்துவிட்டவுடனே மு'ஹம்மது'ம் அபூ'ப'க்ரும் ஒருவருக்கும் தெரியாமல் ஓடிவிட்டார்க ளென்னும் ஆத்திரத்தால் அந்தக் :குறைஷிகள் இரண்டு மனிதர்களை அம் மக்காவின் இருபக்கங்களுக்கு மனுப்பி, ஓடிப்போன இருவருள் எவரையேனும் பிடித்துக் கொடுப்பவருக்கு ஒருநூறு பெண்ணொட்டகங்கள் சம்மானம் அளிக்கப்படுமென்று நகர்முழுதும் பகிரங்கமாக அறிவித்து விட்டார்கள். அக்கணமே அவரவரும் வெவ்வேறு திசையை நோக்கி ஆவலுடனே புறப்பட்டார்கள். அபூ'ஜஹ்லும் அவ்வாறு தேடுவதைத் தன் தலைமேற் போட்டுக்கொண்டு, நேரே அபூ'ப'க்ரின் வீடுதியை நோக்கிச் சென்று, அதன் கதவை மிகவேகமாக இடித்தான். அப்பொழுது ஆ'யிஷாவின் (ரலி') மூத்தசகோதரியான அஸ்மா வந்து கதவைத் திறந்தவுடன், "உன் தந்தை எங்கே?" என்று அபூ'ஜஹ்ல் அதிக ஆத்திரத்துடனே வினவினான். அதற்கு அஸ்மா (ரலி') "ஆண்டவனே அறிவான்; எனக்கொன்றும் தெரியமாட்டாது," என்று சாந்தமாக விடை கொடுத்ததைக் கேட்டு, அந்தத் துஷ்டன் திருப்தியுறாது அஸ்மாவின் கன்னத்தின் மீது ஓங்கி ஓர் அறை கொடுத்தான்; அதன் பயனாய் அஸ்மாவின் செவியிலிருந்த காதணி யொன்றும் அறுந்து போயிற்றாம். அதன்பின்பு அபூ'ஜஹ்ல் மற்றுஞ் சிலருடனே கூடிக்கொண்டு ஃதளர் என்னும் குகையை நோக்கி வேகமாக ஓடினான்.

இங்கு அஸ்மாவின் மற்றொரு தந்திரமும் முக்கியமாகக் கவனிக்கற்பாலதாகும். அஃதாவது, அஸ்மா பி'ன்த் அபூ'ப'க்ர் பின்காணுமாறு கூறுகின்றார்:— "என்னுடைய தந்தையார் எங்கள் வீட்டைவிட்டு ஹிஜ்ரத் புறப்பட்டுச் சென்றபோது, வீட்டிலுண்டான சுமார் 5 அல்லது 6 ஆயிரம் ரூபாய்களைத் தம்முடனே எடுத்துக்கொண்டு சென்றுவிட்டார். என் தந்தையார் நாடுகடந்த வுடனே என்பாட்டனார் (அபூ' கு'ஹா'பா) என்னையழைத்து, 'ஏ குழந்தாய்! அபூ'ப'க்ர் உங்களை இரண்டுவிதமான கஷ்டத்துக் குள்ளாக்கிவிட்டா ரென்றே எண்ணுகிறேன். என்னெனின், தாமும் வீட்டைவிட்டுப் போய்விட்டார்; வீட்டிலுண்டான திரவியங்க ளனைத்தையுங் கூடத் தம்முடனே கொண்டு சென்றிருப்பார் என்றே எண்ணுகிறேன்,' என்று கூறினார். அதுகேட்டு நான், 'இல்லை தாதா! அவர்

(தந்தையார்) தாம் போகும்போது நமக்குப் போதுமான திரவியங்களை வைத்துவிட்டே சென்றிருக்கின்றார்,' என்று சொல்லிவிட்டு ஒரு வஸ்திரத்தில் கல்லைவைத்துச் சுருட்டிப் பணம் வைக்கும் பெட்டிக்குள்ளே வைத்துவிட்டு, என் தாதாவின் கையைப்பிடித் தழைத்துச் சென்று நான் வைத்திருந்த அப் பொருளைத் தொட்டுப் பார்க்கும்படி வேண்டினேன். என் தாதாவின் நேத்திரப் பார்வை ஏற்கெனவே போய்விட்டிருந்தபடியால், நான் காட்டிய பொருளைத் தொட்டுப் பார்த்துவிட்டுச் சொன்னார் :— 'அப்படியானால் குற்றமொன்றுமில்லை. உங்களிடம் போதிய பணமிருக்கிறது. இவ்வாறு அபூ'ப்க்ர் செய்துசென்றது புத்திசாலித்தனமே. இனி அபூ'ப்க்ர் நம்மை விட்டு வெளிப் போனதைப்பற்றி நமக்கொன்றும் கவலையே யில்லை.' என்னுடைய வயோதிக தாதாவின் மனம் வருந்தா திருக்கும் பொருட்டே யான் இவ்வாறு யுக்தி செய்தேன். உண்மையைக் கவனிக்கப் புகின், மேன்மைமிக்க என்னுடைய தந்தையார் தாம் வீட்டைவிட்டுப் புறப்பட்டுப் போனபோது, நபிகள் நாயகத்தின் சௌகரியத்துக்காக எல்லாப் பணங் களையும் தம்முடனேயே எடுத்துச் சென்றுவிட் டிருந்தார்."—(இப்'னு ஹிஷாம்)

ஃதௌர் மலையை நோக்கிப் புறப்பட்டவர்கள் முன்சென்ற இருவர் நடந்துபோயிருந்த பாட்டையை—(அடிச்சுவட்டை)த் தொடர்ந்தே அந்தக் குகையின் வாயில்வரையும் நெருங்கிச் சென்றுவிட்டார்கள் ; ஆ'மிர் பி'ன் 'புஹைறா அவ்விருவரின் காலடிச்சுவடுகளனைத்தையும் நன்றாகக் கலைத்து விட்டிருந்தும், எதிரிகள் சந்தேகத்தின்மீதே ஆங்குவந்து சேர்ந்தார்கள். அவர்களுடைய காலடிச்சப்தமும் உள்ளே யிருப்பவர்கட்கு நன்றாகக் கேட் கின்றது. அதுபொழுது அபூ'ப்க்ர் சித்'தீ':க் அவர்கள் தங்கள் நாயகத்தி னிமித்தம் அளவற்ற கவலைகொண்டு விட்டார்கள் ; இருவர் உள்ளே தனித்து மாட்டிக் கொண்டனர் ; வெளியே அநேகம் கொலைபாதகர்கள் ! அபூ'ப்க்ரவர்கள் அத்துணைக் கவலையும் தங்களின் பொருட்டேதான் கொண்டார்களென்று சற்றும் எண்ணிவிடற்க ; ஆனால், தங்களுயிரைக் காட்டினும் பெரிதெனமதித்திருந்த தங்கள் ஞானபிதாவின் க்ஷேமத்தின் பொருட்டே அவர்கள் அத்துணை மட்டும் அதுபோழ்து கவலை கொண்டு விட்டார்கள். அவர்களுடைய தலைக்குமேலே கொலை பாதகர் களின் வாளாயுதம் உறையைவிட்டு வெளியில் உருவிக் கொண் டிருக் கின்றது. அவர்கள் அதுசமயம் ஒருசிறிதே உள்ளே எட்டிப் பார்த்திருப் பார்களாயின், அவ்விருவரின் நிலைமையும் யாதாயிருக்குமென்பதை இது சமயம் நம்மால் நினைக்கவும் மனம் துணுக்குறுகின்றது. கொலை, கொலை, படுகொலைதான்! அத் தன்மைத்தாய அவசர சந்தர்ப்பத்திலே எப்படிப்பட்ட கன்னெஞ்சமும் அதிகம் கரைந் துருகி விடுமென்பதற்கும் ஐயங்கூறுதல் அமையுமோ ? எப்படிப்பட்ட துளங்காத நெஞ்சமும் துணுக்குறக்கூடிய வினாடியாய் அஃதிருந்து வந்தது. " அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்பு

தில்லையே, உச்சிமீது வானிடிந்து வீழுகின்ற போதினும், அச்சமில்லை அச்ச மில்லை அச்சமென்ப தில்லையே," என்று மிக்க உற்சாகத்துடன் சபை மெச்சப் பாடும் பச்சைப் புலவர்களெல்லாமும் அச்ச மிகுதியால் உள்ளங் குன்றி உடலமும் உறைபனிபோ லாய்விடக்கூடிய நேரம்!

எதிரிகளோ, அவ் விருவரையும் கொலை செய்து விடுவ தென்னும் உறுதியுடனேயே ஆங்குத் தோன்றி யிருக்கின்றனர். எனவே, இஃஜ்ராயீல் — (எமதூதன்) ஆங்கு விஜயம் செய்யச் சமயம் பார்த்துக்கொண் டிருக் கின்றார். ஆயின், அம் மரணத்தினின்று தப்புவதற்கு ஒருவழியு மில்லை; இத் தரணியின்கண் காணப்படும் எத்தகைய மனிதப்பாதுகாப்பும் அவர் களுக்கு அதுசமயம் கிட்ட வில்லை. இப்படிப்பட்ட எவருடைய மனித சகாயமும் எள்ளத்துணையும் இல்லாம லிருக்கக்கூடிய, அதிகம் கதியற்ற அவஸ்தையி லிருந்து கொண்டு, 'ஹஜ்ரத் அபூ'ப'க்ர் (ரலி') அவர்கள் ரஸூலுல்லாவை நோக்கி, "பகைவர்கள் பலபேர் வந்திருக்கிறார்களே! நாம் இருவர் தாமே இருக்கின்றோம்!" என்று அதிகம் கைசோர்ந்து மெய் தளர்ந்து கூறினார்கள். அதனைக்கேட்டு, நபிகள்திலகம் (சல்) அதிக தைரியத் துடனும், அளவற்ற சாந்தத்துடனும், "அபூ'ப'க்ர்! நாம் இருவரே யிருக் கிறோமென்று நீர் சிறிதும் சிந்தனை செய்யற்க! நாம் இருவரா யில்லை; ஆனால், மூவராகவே யிருக்கின்றோம். நீர் கிலேசப்பட வேண்டாம். என்னெனின், நிச்சயமாக அல்லா(ஹ்) நம்முடனே இருக்கின்றான்!" என்று கூறினார்கள்.*

" இருவர்நாம் இருப்பப் பூவி னிருந்தபல் லுயிருங் காக்கும்
ஒருவனம் மிடத்தை நீங்கா துடனுறைந் திருப்பக் கா'பிர்
தெரிதருங் கண்ணிற் காணச் செயலுமற் றுண்டோ வென்றார்
அருவரை முழையிற் புக்கி யருக்கனைத் திருக்கும் வள்ளல்— "சீறா."

* இவ்விடத்தில் ஸர் வில்லியம் மூய்ர் சாக்ஷியம் கூறுவதைச் சற்றே கவனிப்பீர் களாக :—

" அவரே (திருநபியே) நேரடியாய் அபூ'ப'க்ரின் வீட்டை நோக்கிச் சென்றார்; சிறிது நேரம் கலந்தாலோசித்த பின்பு அக்கணமே வெளிப் புறப்பட்டுச் செல்வதென்று துணிவு செய்து கொண்டார். அபூ'ப'க்ர் ஆனந்த பாஷ்பம் சொரியலாயினர்; ஊரைவிட்டுப் புறப்படுதற்குரிய வேளை கடைசியாய் வந்து விட்டது; இவரே அந்த நபியின் பயணத்துக் குரிய கூட்டாளியாக வேண்டியவ ராயினர்......அவர்கள் (பின்)மாலைக் கால இருளில் ஒரு பின்புறச்சாளர வழியே வெளிப்பட்டு எவர் கண்ணிலும் படாமல் அந்நகரத்தின் தென்பகுதியை விட்டுத் தப்பி விட்டார்கள். தெற்கு நோக்கி நடந்து சென்று, இருளில் அங்கிருந்த கட்டாந்தரையான கரடு முரடாயிருந்த உயரத்தின்மீது தவழ்ந்தேறி, இறுதியாக நகரத்திலிருந்து சுமார் ஒன்றரை மைல் தூரத்திலுள்ள தௌர் மலையின் உன்னத சிகரத்தைத் தாவிப் பிடித்து, அக் கொடுமுடியினருகே யிருந்த பொதும்பினுள்ளே புகலிடம் தேடிக் கொண்டார்கள்......தனிக் கூட்டாளி, அல்லது அரபு பாஷையில் "இருவரில் இரண்டாமவர்" என்பது அபூ'ப'க்ரின் மகா கண்ணியமான பட்டப் பெயர்களுள்

இதனை உற்று நோக்கும் போது, அல்லா(ஹ்)வின் மீது அவனது அழகிய திருத்தூத ரவர்களுக்கு எத்துணை மட்டும் ஆழிய உறுதி யிருந் திருத்தல் வேண்டுமென்பதை மிகச் செவ்விதாய் நாம் விளங்கிக் கொள்ளு கிறோம். எத்துணை இன்பமயமான சாந்தியும் சமாதானமும் அதுசமயம் அவர்களது உள்ளத்தின்கண் ஒளிர்ந்துநின்றன வென்பதை என்னென்று எடுத்துரைப்போம்! அல்லா(ஹ்)வின் ஆணையின்றி அவனடியார் சுயமே இவ்வாறு கூறியிருத்தல் சாலா தென்பது ஒருதலையே. என்னெனின், அப்படிப்பட்ட அபாயகரமான சந்தர்ப்பத்திலே எப்படிப்பட்ட இன்ஸா னுடைய உள்ளமும் உடனே துணுக்குற்று விடுமென்பது கண்கூடு. தூக்குமரத்தில் தொங்கப் போகும்போது வேறொருவர் ஓலமிட்டதேபோல், "என் தேவனே! என் தேவனே! ஏன் என்னை இதுசமயம் கைவிட்டீர்?" என்று பிரலாபித்த வண்ணம் எம்பெருமானார் (சல்) ஓலமிட்டமாது, "நீர் ஒன்றற்கும் அஞ்சற்க! என்னெனின், ஆண்டவன் நம்முட னிருக்கின்றான்!" என்று கூறுவ தென்றால், அதனைக் கேட்டு, யார்தான் இறும்பூ தெய்தா திருத்தல் சாலுமென் றெண்ணுகின்றீர்கள்? இதனை நபிகள் பெருமானார் சுயேச்சையாய்ச் சொல்லியிருப்பது முடியாது. எல்லாவுலகங்களுக்கும் இறை னாய் விளங்கும் அல்லாஹுத் த'ஆலா ஒருவனிடத் திருந்தே மேற்கூறிய வாறான உற்சாக மொழிகள் உதயமாயிருத்தல் வேண்டும். என்னெனின், அன்னவனுடைய சன்மார்க்க நெறியில் சத்திய நிய்யியுடன் உழைத்துவரும் உத்தமோத்தமர்களுக்கு உதவிபுரிய வேண்டுவது அன்னவனது கடமை யேயா மன்றோ? படுகொலைசெய்யும் பாதக எண்ணத்துடனே வந்துள்ள பகைஞர்கள் அந்தக் குகையின் வாயிலருகினிலே வந்துநின்றும், அவர்கள் அதற்குள்ளிருக்கும் அல்லா(ஹ்)வின் அடியார்க ளிருவரையும் கைப்பற்றிக் கொள்வது ஒருகாலும் முடியாதென்னும் அந்தரங்கத்தை அந்த எல்லாம் வல்ல இறைவ னொருவனே முன்னறிந் திருத்தல் சாலு மல்லது, வேறெந்த மனிதப் பிராணியால் அந்த இரகசியத்தை ஒருசிறிதேனும் உள்ளவாறு உணர்ந்திருத்தல் சாலுமென்றெண்ணுகின்றீர்கள்?

---

ஒன்றாய் விட்டது......மு'ஹம்மது'ம் அவருடைய கூட்டாளியும் அஃதோர் அபாயகரமான நேரமென்றே ஐயமில்லாது அறிந்து கொண்டனர். காலை நேரத்தின் பிரகாசம் ஓர் இடுக்கு வழியே நுழைந்து வந்ததைக் கண்டு, அதன் வழியாய் மேல்நோக்கிப் பார்த்துவிட்டு அபூ'ப'க்ர், 'எவனேனு மொருவன் இவ்விடுக்கு வழியாய் எட்டிப் பார்த்து, அவனுடைய பாதத்தின் கீழேயே நம்மைக்கண்டு கொண்டால், என்னாகும்?' என்று முணுமுணுத்து வினவினர். அதற்கு நபிபிரான் சொன்னார்: 'அபூ'ப'க்ர்! அவ்வாறு நீர் நினைக்க வேண்டாம். நாம் இருவரா யிருக்கிறோம்! ஆனால், ஆண்டவன் நம் மத்தியில் மூன்றாவதா யிருக்கிறான்'."—[பின்புறச் சாளரவழியே அவர்கள் வெளிப்பட்டார்க ளென்று இவர் குறும்புத்தனமாய் வரைவதற்கு ஆதாரமில்லை. தெருக் கதவைத் திறந்துகொண்டேதான் நபிகள் திலகம் தங்களில்லம்விட்டு வெளிப்போந்தார்க ளென்றே சரியானசரித்திரம் சான்று கூறுகின்றது. பா. தா.]

அதுபொழுது அக் குகைவாயிலில் ஆண்டவனருளால் "உம்முல் ஃகலான்" என்னும் ஆளுயர முள்ள மரமொன்று அதியற்புதமாக முளைத்துத் தோன்றி, அந்தக் குகையின் வாயிலை மறைக்குமாறு பம்ப விட்டுக்கொண் டிருந்ததென்றும், அதன் சில கிளைகளையும் தழைகளையும் ஒன்றுசேர்த்து இரு புறுக்கள் கூடுகட்டி முட்டையிட்டிருந்தன வென்றும், அக்குகையின் வாயிலில் சிலந்திப்பூச்சிகள் நுண்ணிய நூல்நூற்று விட்டன வென்றும் ஒருசிலர் வரைந்து வைத்திருக்கின்றார்கள். "மவாஹிபு'ல் லது'ன்யா" என்பதுபோன்ற நூல்களில் காணப்படும் இதுபோன்ற கதைகளுக்கெல்லாம் ஆதாரம் இல்லை யென்றும், இவை முழுமையும் ச'ஹீ'ஹ் பு'க்'ாரீயின் பேராசிரியரால் கண்டிக்கப்பட் டிருக்கின்றன வென்றும் அல்லாமா ஷிப்'லீ நுஃ'மானீ அவர்கள் அறைகின்றார்கள். ஆனால், அக் குகையின் வாயிலில் நூலிழை பூச்சிகள் நூல் நூற்றிருந்தது மட்டும் மெய்யே யென்று வேறு சிலர் கூறுகின்றார்.

அக்குகைவாயி லருகினில் வந்துசேர்ந்த அபூ'ஜஹ்ல் முதலியோர் அம் மலைமுழுதும் சுற்றிப் பார்த்துவிட்டு, அந்தக் குகையினுள்ளும் நுழைந்து பார்க்க எண்ணியும் விட்டார்கள். ஆனால், அதுபொழுது உமையா பி'ன் க'ல'ப் என்னும் :குறைஷி, "இதற்குள்ளே என்ன இருக்கப் போகின்றது? இதன் வாயிலில், நாம் தேடும் மனிதர்க ளிருவரும் பிறப்பதற்கு முன்னமேயே நூற்கப்பட்ட நூலிழை பூச்சியின் நுண்ணிய இழைகளே காணப் படுகின்றன. எனவே, இதற்குள் அவர்கள் சென்றிருப்பது முடியாது," என்று கூறினான். அக்கணமே எல்லாரும் அதற்குள்ளே நுழைந்து பார்க்கும் எண்ணத்தைக் கைவிட்டு, வந்தவழியே வெறுமனே திரும்பி விட்டார்கள். ஆனால், அபூ'ஜஹ்லுக்கு மட்டும் அவ்வழியேதான் அவ்விருவரும் தப்பியோடியிருக்க வேண்டுமென்னும் சந்தேகம் உள்ளத்தின்கண் ஊர்ஜிதமாக ஊன்றிப் போயிருந்தும், அன்னவனுக்கும் அக்குகைக்குள் எட்டிப்பார்க்கலா மென்னும்எண்ணம் உதிக்காமற்போனதுதான் ஆண்டவனது பேராச்சரியம் நிறைந்த புதியதோர் அற்புதமாகக் காணப்படாநின்றது. ஆண்டவன் நாடுவானாயின், எத்துணைச் சர்வ சாதாரணமான மெல்லிய நுண்ணிழையையுங் கொண்டே தன்னடியார்களை மிக்கநல்ல முறையிலே காப்பாற்றி வைத்திடுதல் சாலுமென்பது இதனால் செவ்வனே போதருகின்றது. குகைக்குள்ளே இருவர் மறைந்துகொண் டிருக்கிறார்கள்; அதன் வெளிவாயிலில் அவர்களைத் தேடிக்கொண்டு வந்த கொடுங்கொலை பாதகர்கள் உருவிய வாளுடனே உற்று உற்றுப் பார்த்துக் கொண்டே அலைகின்றார்கள். ஆயின், அதுசமயம் அக் குகைவாயிலில் காணப்பட்ட மகாமெல்லிய — இவ்வகிலத்திலெல்லாம் அதனைக் காட்டினும் மென்மையான நொய்ய வஸ்து வேறொன்றும் இருக்கவே முடியாது அத்துணை லலிதமாய் விளங்கிய— ஒரு சிறு சிலந்திப் பூச்சியின் மகா நுண்ணிய நூலைக்கண்டு, வெறுமனே திரும்பி விடுகின்றார்கள். அக் :குறைஷியரின் நாட்டமெல்லாம் கொலைமீ திருந்தது;

ஆனால், அல்லா(ஹ்)வின் நாட்டமோ, அதற்கு மாறாக இருந்தது. என்னே இறைவனது சூழ்வினை! என்னே அன்னவனது கிருபாகடாக்ஷம்! என்னே அன்னவன் பேராச்சரிய மாகாத்மியம்! என்னே அன்னவனது இயற்கை யற்புதம்!

எனவே, இஸ்லாத்தின் சரிதையில் இரண்டு குகைகள் அளவிறந்த உதவிபுரிந்திருக்கின்றன வென்றே கூறியமைதல் வேண்டும். எவ்வா றெனின், முதன்முதலில் 'ஹிரா' என்னும் அந்தக் குகையினுள் ளிருந்த போதுதான் தீ'னுல் இஸ்லாத்திற்குரிய முதல் வ'ஹீயானது வெளிவரத் துவக்கிற்று. எனவே, அம்முதல் தோற்றம் அக் குகையினுள் ளிருந்து வெளிவந்ததே போன்று, அதன் இரண்டாவது தோற்றம் இந்த ஃதளர் என்னும் குகையி லிருந்தே தோன்ற லாயிற்று. இதன் சம்பந்தமான ஹிஜ்ரத்தி லிருந்துதான் இஸ்லாம் இத்தரணியில் நன்றாய் வேரூன்றத் தலைப்பட்டது. எனவே, இதிலிருந்துதான் முஸ்லிம்களது ஆண்டின் கணக்கும் ஆரம்ப மாகின்றது. ஆகவே, இதன் பெருமை எத்துணைப் பெரிய மாட்சிபெற்ற தென்பதை யாம் ஈண்டெடுத்துக் கூறவேண்டுவ தின்று. ஆதலினால்தான் நந் தீனுல் இஸ்லாம் இந்த இரண்டு குகைகளி னின்றுமேதாம் புத்துயிர் பெற்றுத் தோன்றிற் றென்று யாம் கூறத் துணிகின்றோம்.

மீக்கூறிய ஃதளர் என்னும் குகைக்குள்ளேயே நபிகள்பெருமானும் 'ஹ'ஜ்ரத் அபூ'ப்க்ரும் மூன்று பகலும், மூன்று இரவும் வெளிவராமலே தங்கி யிருந்தார்கள். அதுபொழு தெல்லாம் அபூ'ப்க்ரின் குமாரரான அ'ப்'து'ல்லா(ஹ்) என்பவர் பகல்முழுதும் மக்காவிலே சுற்றித் திரிந்து விட்டு, ஆங்குக் கிடைக்கும் செய்திகளைத் திரட்டிக்கொண்டு இராக்காலங் களில் ஃதளருக்குச் சென்று, அவ்விடத்தே அவ் விஷயங்களைக் கூறிவிட்டு, அங்கேயே அவர்கட்குத் துணையாகப் படுத்துக் கொள்வார். 'ஹ'ஜ்ரத் அபூ'ப்க்ரின் குமாரியான அஸ்மா எவருக்கும் தெரியாமல் இராக்காலங் களில் அவர்களுக்கு ஆகாராதிகளைக் கொண்டு செல்வார். இன்னம், அபூ'ப்க்ரின் (ரலி') ஆடுமேய்க்கும் வேலைக்காரரான ஆ'மிர் பி'ன் 'புஹைரா என்பவர் பகற்காலங்களில் தம்முடைய ஆடுகளை யெல்லாம் அங்கங்கே மேய்த்துக்கொண் டிருந்துவிட்டு, இராக்காலங்களில் அந்தக் குகையருகிலே கொண்டுபோய் மந்தைமடக்கி வைப்பார். அப்பொழுது அவற்றினின்று கறக்கப்படும் வெள்ளாட்டுப் பாலே அங்குள்ளவர்களுக்குத் தாகசாந்திக் குரிய திரவபதார்த்தமாக வழங்கப்பட்டு வந்தது. இவ்வாறு பால்கொண்டு போம்பொழுதும் ஆங்கேற்படும் காலடிச் சுவடுகளை யெல்லாம் இந்த ஆ'மிரே நன்றாகக் கலைத்துவிடுவார்.

இவ்வாறு மூன்று பகலும் மூன்றிரவும் அந்தக் குகையினுள்ளே தங்கி யிருந்து விட்டு, அதற்குள்ளே மக்காவில் கிளம்பிய குழப்பமும் சிறிது தணிந்து விட்டமையால், நபிகள்பெருமானும் (சல்) அவருடைய பிரிய

சிஷ்யரும் நான்காவதுநாள் விடிந்ததன் பின்னே அவ் விடத்தை விட்டு அப்பாற் புறப்பட்டுச் செல்ல ஆயத்தம் செய்துகொண்டார்கள். அதுகாலை நபிகள்திலக மவர்களும், 'ஹ'ஜ்ரத் அபூ'ப்க் ரவர்களும், மதீனுசெல்லும் வேறுபாதையை அதிகம் அறிந்திருந்தவரா யிருந்த அ'ப்'து'ல்லா ஹிப்'னு அரீ:க:துல் லை:தீ என்னும் முஸ்லிமல்லாதவர்* தம்பால் ஒப்படைக்கப்பட்டிருந்த அவ்விரு பெண்ணொட்டகங்களையும் ஓட்டிக்கொண்டு உரிய காலத்திலே வந்துசேர்ந்தார். அஸ்மாவும் தம்மால் தையாரித்து வைக்கப் பட்டிருந்த கட்டமுதுக்குரிய போஜன பதார்த்தங்களுடனே ஆங்குவந்து சேர்ந்தார்கள்.

அன்று நான்காம் நாட்காலையில் நபிகள்திலகம்(சல்) தங்களுக்கென்று கிரயம் பேசித் திட்டப்படுத்தி வைக்கப்பட் டிருந்த ஓர் ஒட்டகத்தின்மீது அமர்ந்து கொண்டார்கள். மற்றோர் ஒட்டகத்தின் மீது 'ஹ'ஜ்ரத் அபூ'ப்க்ர் ஏறிக்கொண்டார்கள்; அவ் வொட்டகத்தின்மீதே ஆ'மிர் பின் 'புஹைறாவும் அபூ'ப்க்ருக்குப் பின்னுல் ஏறி உட்காந்து கொண்டார். அ'ப்'து'ல்லா ஹிப்'னு அரீ:க:த் தம்முடைய சொந்த ஒட்டகத்தின்மீது ஏறிக்கொண்டு வழிகாட்டியாக முன்னேக்கிப் புறப்பட்டார்; ஆங்கிருந்து மேற்குப் பக்கமாக வளைந்து வளைந்து ய:த்ரிபு'க்குச் செல்லும் பாட்டையின் வழியே அந்நால்வரும் அல்லா(ஹ்)வின் மீதே நம்பிக்கை வைத்தவர்களாய் ஹிஜ்ரத் புறப்பட்டார்கள்.

அ'ப்'து'ல்லா ஹிப்'னு அரீ:க:த்தென்னும் விக்ரஹ வணக்கக்காரர் மகா நம்பிக்கைக்குரிய ஒரு சாமர்த்தியசாலியா யிருந்துவந்ததனுல், அவரைப் பின்பற்றியே நபிகள் திலகமும், மற்றிருவரும் அல்லா(ஹ்)வின் மீது வைத்துள்ள நம்பிக்கையால் தங்கள் பாதுகாப்பை அன்னவர் கரத்திடை ஒப்படைத்துச் சென்றூர்கள். அந்த அரீ:கத்துக்கு ய:த்ரிபு'க்குச் செல்லும் பாதை நன்ருகத் தெரியுமாதலின், அவரும் தக்க கூலி பெற்றுக்கொண்டே அம் மூவரையும் அதிக பத்திரமாக அக்குறிப்பிட்ட நகருக்கு அழைத்துச் செல்லத் துணிந்தார். இதிலும் ஆண்டவனது அரிய சோதனை யொன்று இல்லாமற் போகவில்லை: அநேகமாக மக்கத்துக் கு'ப்'பார்க ளனைவரும் நபிகள் திலகத்தைக் கொன்றுவிடுவ தென்று தீர்மானித் திருக்கும்போது, அவர்களுள் ளிருந்த ஒரு முஸ்லிமல்லாத அரீ:க:த்தைக் கொண்டே ஆண்டவன் தன் திருநபியைப் பத்திரமாக வெளியேற்றிச் செல்லுகின்றுன். என்னே இறைவனது இனிய திருவிளையாடல்! அல்லா(ஹ்)வின் ஆழிய சூழ்வினையை ஆரே அறியவல்லார்?

* "அல்லா(ஹ்)வின் திருத்தூதரும் (சல்அ'ம்) அபூ'ப்க்ரும் ப'னீத்'தீ'ல் வர்க்கத்தைச் சார்ந்த ஒரு மனிதனை வழிகாட்டியாக அமர்த்திக் கொண்டார்கள். அவனெரு சாமர்த்திய சாலி; மேலுமவன் கா'பிராய :குறைஷியரின் மதத்தைப் பின்பற்றியவனு யிருந்தான்," என்று ஆ'யிஷா பிராட்டி அறைகின்றூர்கள்."— (பு'க்'ாரீ 37 : 4)

இவ்வாறு புறப்பட்டவர்கள் ஒரு பகலும், ஓர் இரவும் இடைவிடாது தொடர்ந்து சென்றதன்பின், மறுநாள் மத்தியான்ன வெய்யிலின் கொடுமை மிகவுஞ் சகிக்கக் கூடாததா யிருந்ததைக் கண்டு, நபிகள் பெருமானு ரவர் களுக்கு அளவுகடந்த ஆயாச முண்டாகா திருக்கும்பொருட்டு 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் ஸித்'தீ':க் அவர்கள் ஒட்டகத்தின் மீதிருந்தபடியே நானு திசைகளிலும் ஏதேனும் சிறிது நிழல் கிடைக்கக் கூடுமோ வென்று அதிக ஆவலுடனே கண்ணுக்கெட்டிய தூரமட்டும் சுற்றுமுற்றும் பார்த்தார்கள். அதுபொழுது சிறிது தூரத்திற் கப்பால் ஒரு மேட்டின்மீது நின்றுகொண் டிருந்த பாறையொன்றின் நிழலைத் தவிர்த்து வேறு நிழலொன்றும் காணப் படாததைக் கண்டு, ஆங்கு எல்லோரும் போய்ச் சேர்ந்தார்கள். அதனருகில் காணப்பட்ட ஒருசிறு அருகிய நிழலின் கீழ்க் கிடந்த குப்பைகளையும் பருக்கைகளையும் அபூ'ப'க்ரவர்கள் அப்புறப்படுத்தி விட்டு, ஆங்குத் தங்கள் போர்வையை விரித்து, அதன்மீது படுத்துச் சற்றே இளைப்பாறுமாறு நபிகள் திலகத்தை வேண்டிக் கொண்டார்கள்.* அவ்வாறே அவர்களும் ஆங்கிறங்கி இளைப்பாறச் சம்மதித்ததன்பின், 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் அவ் விடத்தில் ஏதேனும் ஆகாரபதார்த்தம் கிடைப்பதற்கு ஏதுவுண்டோ வென்று சிறிதுதூரம் சென்று தேடிப் பார்த்தார்கள். அதுபொழுது ஆங்கோரிடத்தில் ஆடு மேய்த்துக் கொண்டிருந்த ஒரு மனிதனைக் கண்டு, அவனுடைய கைகளையும் ஆட்டின் மடியையும் சுத்தம் செய்யுமாறு சொல்லி, அவ்வாட்டினின்று சுத்தமாகப் பால்கறக்குமாறும் அபூ'ப'க்ர்(ரலி') வேண்டிக் கொண்டார்கள். உடனே அம் மனிதனும் அவ்வாறே அதிக பரிசுத்தத்துடனே ஒரு பாத்திரம் நிறையப் பாலைக் கறந்து 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ரிடம் நீட்டினான். உடனே அபூ'ப'க்ரும் அதனை வாங்கித் தங்கள் வஸ்திரத்தைக் கொண்டு அப்பாலை மூடிக்கொண்டு மிக வேகமாகத் தங்கள் ஞானாசிரியரிடம் கொண்டுவந்து கொடுத்தார்கள். நபிகள் பெருமானார் ஒவ்வொரு காரியத்திலும் எத்துணைப் பெரிய பரிசுத்தத்துடன் நடந்து வந்தார்களென்பதை அவர்களுடைய பிரியசிஷ்யர் நன்குணர்ந்தேயிருந்தார்.

'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ரால் கொண்டுவரப்பட்ட வெள்ளாட்டுப் பாலை நபிகள் நாயகம் பருகிக் களைதீர்ந்த பின்னர், சூரிய வெப்பமும் சிறிது தணிந்ததன்பின்னால் அவர்களெல்லாரும் அவ்விடத்தை விட்டுப் புறப்பட ஆயத்தம் செய்துகொண் டிருந்தார்கள். அதுசமயம் இவர்களைத் தேடிப் புறப்பட்ட மனிதர்களுள் ஒருவரான ஸுரு(க்):கா பி'ன் மாலிக் பி'ன் ஜுஃ'ஷும் மத்'லஜீ என்பவர் குதிரைமீதேறி ஓடிப் போனவர்களைத்

* அரப் நாட்டுப் பாலைவனம் உச்சியுரும வேளையில் எப்படி யிருக்குமென்று எழுது கோலால் வரைந்து காட்டுவது இயலாது. அத்தேசத்தில் சுற்றுப் பிரயாணம் பண்ணிய வர்கள் அதனை நன்கறிவார்கள். "பாருமோ டாதுநீ டாதெனும் பாலதோ!" என்றற் றொடக்கத்தை யுடைய கம்பன் வர்ணனையை ஒருவாறு நினைத்துக்கொள்வீர்களாக.

துரத்திக்கொண்டு வந்தார்.* இவ்வாறு நெடுந்தூரம் சென்றதன் பின்னர் கண்ணுக்கெட்டிய தூரத்தில் முதலில் சென்ற நால்வரையும் கண்டவுடனே ஸுறு(க்):கா தமது நீகிரோவ அடிமையைப் பின்னேவிட்டுத் தாம்மட்டும் மிகவேகமாகத் தமது குதிரைமீ தேறி அவர்களைத் துரத்திச் சென்றார்.

அவர் அவர்களை நோக்கி மிகவேகமாக ஓடும்போது, அவரது குதிரையின் முன்னங்காலிடறிக் குப்புற்று வீழ்ந்ததனால், ஸுறு(க்):காவும் அதன் தலைக்குமேல் வேகமாய்த் தூக்கி எறியப்பட்டார். உடனே அவர் எழுந்து நின்று, தம்முடைய தேசாசார முறைமைப்படி அம்புகளை எடுத்தெய்து சகுனம் பார்த்தார்; அதற்கு, "அவரைப் பின்தொடர்ந்து செல்லாதே!" என்னும் விடை கிடைத்தது. ஆனால், அவர் அதனைப் பொருட்படுத்தாது, நூறு ஒட்டகங்கள்மீது கொண்டுள்ள பிரியத்தால் மீண்டும் அதன்மீது சவாராகிச் சென்றார். மறுபடியும் முன்போலவே அக்குதிரை இடறி விழுந்து, அவரையும் கீழே தள்ளிற்று. மீண்டும் அவர் முன்போலவே குறிபார்த்தார்; மீண்டும் அக்குறி முன்போலவே மறுமொழி கூறிற்று. மறுபடியும் அவர் மனந்தளராது அக் குதிரைமீ தேறி நபிகள் திலகத்தை நெருங்கிச் சென்றார்; ஸுறு(க்):கா மிகநெருக்கமாகச் சென்று, தமது அம்பொன்றை யெடுத்து அவர்கள்மீது எய்யத் துணிந்தார். அது

*இந்த ஸுறு(க்):கா வென்பவரே கூறும்விவரமாவது: "எங்கள் கூட்டமான ப'னீமத்லைஜ் சார்ந்தவர்க ளெல்லாம், ரஸூலுல்லாவையும் அபூ'ப'க்ரையும் கொன்றோ அல்லது சிறைபிடித்தோ :குறைஷிகள்பால் கொண்டுவந்து சேர்த்துவிட்டால் மிகவான வெகுமதியைப் பெறலாமென அறிவிக்கப்பட் டிருந்தோம். இச் சம்மானத்தை யடைய எங்களுள் ஒவ்வொருவரும் அளவிலா அபிலாஷை கொண்டவரா யிருந்துவந்தனர். எனவே, ஒரு சமயம் எங்கள் கூட்டத்தின ரெல்லாம் ஓரிடத்திலமர்ந்து உல்லாசமாகச் சம்பாஷித்துக் கொண் டிருந்தோம். அதுசமயம் வெளியிலிருந்து ஒருவர் மிக வேகமாக வந்து எங்களை நோக்கி, 'நேயர்காள்! நான் இப்பொழுது, :குறைஷிகள் தேடிக்கொண் டிருக்கும் அவர்களுடைய ஒட்டகங்கள் கடலோரமாகப் போய்க்கொண்டிருப்பதைக் கண்டேன்,' என்று கூவினர். அவ் வார்த்தையைக் கேட்டவுடன் நான், மு'ஹம்மது'ம் அவருடைய சகபாடிகளுந்தாம் அங்ஙனம் செல்லுகின்றார்க ளென்பதை உள்ளத்தில் நன்கு தெரிந்துகொண்டு விட்டேன். எனினும், சம்மானம் அதிகம் பெறும் எண்ணங்கொண்டு, எங்கள்பால் வந்து அவ்விஷயத்தைச் சொன்னவருக்கு நான் சொன்னேன்: 'சிறிது நேரத்துக்கு முன்தான் நான் இன்னார் இனையார் கடலோரமாக ஒட்டகத்தின்மீது போய்க்கொண் டிருந்ததைக் கண்டேன். அவர்களையே தாம் நீரும் கண்டிருப்பீர்.' அவ்வாறு வேறு மனிதர்களைக் குறிப்பிட்டுச் சொல்லிவிட்டு, யான் துரிதப்படாதவனே போல் சிறிதுநேரம் அக்கூட்டத்திலே தங்கியிருந்தேன். பிறகு சாதாரணமாக வெளியில் செல்வதேபோல், வெளிப்பட்டு, என் வீடுநோக்கி வேகமாக விரைந்து சென்றேன்; பிறகு வீட்டிலிருந்த என்னுடைய குதிரையை எவருக்கும் தெரியாமல் வீட்டின் பின்புறமாகக் கொண்டுவரும்படி என் வேலைக்காரியிடம் சொல்ல, அவளும் அப்படியே கொண்டுவந்தாள். எனவே, யான் என்னுடைய அம்புகளை யெல்லாம் எடுத்துத் தூணியில் சொருகிக்கொண்டு வீட்டின் புழைக்கடை வழியாகவே எவருக்கும் தெரியாமலே குறிப்பிட்ட ஆசாமிகளைத் துரத்திச் சென்றேன்."

சமயம் அவரது குதிரையின் முன்னங்கால்க ளிரண்டும் மணலுக்குள்ளே முழங்கால்வரை பதிந்துவிட்டதனுல், மற்று மொருமுறை அவர் முன் போலவே தூக்கி யெறியப்பட்டார். “இவ்வாறு மூன்றுமுறை நிகழ்ந்ததன் பின்பு நபிகள் பெருமானின் ஸன்மார்க்க முயற்சி முற்றும் வெற்றிபெற வேண்டு மென்று ஆண்டவனே நாடியிருந்தா னென்பதை நான் நன்கு தெரிந்துகொண்டு விட்டேன்,” என்று அந்த ஸுறு(க்):காவே பின்னொரு சமயம் கூறியிருக்கின்றார். என்னெனின், மனித சக்திக்கு மேற்பட்ட மற்றொரு தெய்வ சக்தியே அவர்களுக்கு உதவிபுரிந்து வருகிற தென்பதை அவர் நன்குணர்ந்துகொண்டு விட்டார். அக்கணமே ஸுறு(க்):கா அச்சங் கொண்டு நபிகள் திலகத்தைக் கொல்லவேண்டு மென்றிருந்த எண்ணத்தை அடியோடு விடுத்து, மிக்க கழிவிரக்கத்துடனே நபிகள் பெருமானிடம் நடந்ததை யெல்லாம் கூறி, மிகத் தாழ்மையுடனே மன்னிப்புங் கேட்டுக் கொண்டார்.

“என்போலுஞ் சிறியர்பெரும் பழியடுத்த
குறைபிழையா யிரஞ்செய் தாலும்
பொன்போலு மனப்பெரியோர் பொறுப்பரெனு
மொழிதமியேன் புந்திக் கேற்ப
நின்பாலிற் கண்டறிந்தேன் சிறியேனுய்
திறத்தினெடிங் நிலத்தில் வாழ
முன்போலுங் காத்தளித்தல் வேண்டுமது
நினதுமறை முறைமைத் தாமால்,”— என்மனுர்

உ’மறுப் புலவர் பெருமானும்.

இனியொருபொழுது நபிகள் பெருமான் (சல்) உன்னத அந்தஸ்தை அடைந்துவிட நேருங்கால், அதுசமயம் தம்மை ஒன்றும் துன்புறுத்துவ தில்லையென்று அபயநிருபம் எழுதிக் கொடுக்குமாறு வேண்டிக்கொண்டார். அவ்வண்ணமே நபிகள் திலகம் ஆணைப்படி ‘ஹ‘ஜ்ரத் அபூ’ப’க்ரின் வேலைக் காரரான ஆ’மிர் பி’ன் ‘புஹைறாவும் ஒரு தோல்மீது அவர் வேண்டிய வண்ணமே ஓர் “அமன் நாமா”வை எழுதிக் கொடுத்தார். அதைக் குறித்து ஸுறு(க்):காவும், “இது :தாயி‘பின் படையெடுப்பின் போழ்து எனதுயிரைக் காப்பாற்றிற்று,” என்று கூறியிருக்கின்றார். எந்த நேரத்தில் இறைவ னிடத்திருந்து வேதவெளிப்பாடு (வ‘ஹீ) அருளப்படுமோ வென்னும் ஆர்வத்தினுல் அதனைச் சிலாசாஸனமாக வரைந்து வைக்கும் பொருட்டு அதற்குரிய சாமக்கிரியைக ளெல்லாம் அவர்களுடனே தையா ராகவே யிருந்துவந்தன.

நபிகள் பெருமான் அந்த ஸுறு(க்):காவுக்கு மற்றொரு சுபச்செய்தியும் அதுசமயம் சொல்லி யிருக்கின்றுர்கள்; பின்னொரு சமயம் பாரசீக மன்ன

னுக்குரிய பொற்கடகங்களை யெல்லாம் இந்த ஸுறுா(க்):காவே அணிந்து கொள்ளுதற்குரிய அதிருஷ்டமொன்று வாய்ப்பது சரதமென்று முன் னறிக்கை விடுத்தார்கள். அப்பால் 15 ஆண்டுகளுக்குப் பின்னே நிகழப் போகும் ஒரு சம்பவத்தைக் குறித்து அதுசமயம், அதுவும் தம்முயிர் தப்பும் பொருட்டு ஒரு நகரைவிட்டு மற்றொரு நகரை நோக்கி ஒருவருக்கும் தெரி யாமல் ஒளிந்தோடுங் காலையிலே, முன்னறிந்து கூறுவதெனின், அஃதொரு மனிதபுத்தியால் நிகழக்கூடிய காரிய மன்றென்றே உறுதியாகக் கொள்ளப் படுதல் வேண்டும். சாமான்யமான மனித புத்தியைக் கொண்டு இப்படிப் பட்ட தீர்க்கதரிசனத்தை முற்கூட்டியே நன்மாராய்ங் கூறுவதென்பது எவராலும் அதுபொழுது முடியக்கூடிய எளியகாரிய மன்று. நபிகள் பெருமானது உயிருக்கே ஆபத்து நேரிட்டுவிடும்போ லிருக்கும் ஒரு சந்தே காஸ்பதமான சந்தர்ப்பத்திலே தங்கள் இஸ்லாமிய குடைநிழலின் கீழே பாரசீக தேசம் பின்னொரு காலத்தில் தங்கள் நிர்யாணத்துக்குப் பின்னே வந்தமருமென்று முன்னறிக்கை செய்தது ஒரு தெய்விகத் தீர்க்கதரிசன மென்றே கொள்ளப்படுதல் வேண்டு மன்றோ ? நபிகள்திலகம் (சல்) அன்று ஹிஜ்ரத்தின்பொழுது கூறிய தீர்க்கதரிசனம் பிறகுவந்த இரண்டாவது க'லீ'பாவான உ'மரெ'பாரூ:க் (ரலி') அவர்களது ஆட்சியின் காலத்தே முற் றும் நிறைவேறிற்று. அதுசமயம் பாரசீகதேசம் முஸ்லிம்களின் கைவயமான போது, க'லீ'ப(த்)துல் மூமினின் ஸுறுா(க்):காவை வரவழைத்து, அவருடைய கரங்களில் பாரசீக மன்னனுடைய பொற்கடகங்களை மாட்டி அலங்காரம் செய்வித்தார்கள். அதுபொழுது உ'மர் (ரலி') அவர்கள் ஸுறுா(க்):காவை நோக்கிக் கூறியதாவது : "ஏ ஸுறுா(க்):கா ! நீர் முன் னொருமுறை கேவலம் ஒரு நூறு ஒட்டகங்களுக்கு ஆசைகொண்டு ரஸூ லுல்லாவையே எதிரிகளிடம் பிடித்துக் கொடுத்துவிடப் பார்த்தீர். ஆனால், இதுபொழுது அவற்றினும் நூறுபங்கதிகமான ஆபரணங்களை யெல்லாம் நீரே எடுத்துக்கொள்ளக் கடவீர்." இது நிகழ்ந்தது ஹிஜ்ரீ 16-ஆம் ஆண் டில் மதா'யின் பட்டணம் பிடிபட்ட பிறகாகும்.*

ஸுறுா(க்):கா பி'ன் மாலிக்கைக் கண்டவுடனே ஹ'ஜ்'ரத் அபூ'ப்'க்ர் அவர்கள், "அதோ துரத்தி வருகிறான் ஓர் எதிரி ! யாம் இப்பொழுது என் செய்வது ? என்று கூறியதாகவும், அதைக் கேட்டு நபிகள் திலகம், "நீவிர் ஒன்றுக்கும் அஞ்சற்க ! ஆண்டவன் நம்மைக் காப்பாற்றுவான் !" என்று தைரியம் கூறியதாகவும் ஒருசில சரித்திராசிரியர்கள் கூறியிருக்கின்றார்கள். அத்தகைய அபாயகரமான வேளையிலே நம்பெருமானார் இவ்வாறு கூறுவ தென்பது அவர்களுக்கு ஆண்டவன்மீ திருந்துவந்த அசைவுறாத உறுதியையே மீண்டும் பிரதிபலித்துக் காண்பிக்கின்றதென்றுதான் கூறியமைதல் வேண்டும். அடிக்கடி அல்லா(ஹ்)வி னிடத்திருந்து அவர்களுக்கு வந்து

* ரஸூலில் நாயகம் (சல்) நிர்யாணமடைந்து ஐந்தாண்டு கழிந்து இச்சம்பவம் நிகழ்வுற லாயிற்று; என்னே எம்பெருமானாரது தீர்க்கதரிசன உண்மை !

கொண்டிருந்த வேதஞான வ'ஹீயின் உதவியைக்கொண் டல்லாமல், வேறெந்தத் தைரியத்தையுங் கொண்டு அவர்கள் இவ்வாறு உறுத்திக் கூறி யிருக்க மாட்டார்கள். "நிச்சயமாகவே, உம்மீது :குர்ஆனை விதியாக்கி வைத்திருப்பவனே உம்மை இறுதி மீளுந்தலத்துக்கு— (மக்கமா நகருக்கு)த் திருப்பிக் கொண்டுவந்து சேர்ப்பான்," என்று நபிகள் திலகம் ஹிஜ்ரத் புறப்பட்டுச் செல்லுங்கால் ஆண்டவனே தைரியங் கூறியிருக்கிறான்— (28 : 85). இப்படிப்பட்ட வேதவாக்கியத்தால் அவர்கள் எத்துணைப் பெரிய தைரியத்தை அடைந்திருப்பார்க ளென்று நீங்களே நிதானித்துக் கொள்ளக் கடவீர்கள்.

இத்தகைய ஹிஜ்ரத் அன்னவர்களுக்கு எதிர்பாராமல் நிகழ்ந்துவிட்ட ஒரு சம்பவமாகாது. என்னெனின், ஹிஜ்ரத்துக்குப் பலகால் முன்னரே, அவர்கள் மக்காவைவிட்டு வெளியில் கிளம்பவேண்டிய அத்தியாவசியம் நேராமற் போகா தென்றும், ஆதலின், இஸ்லாத்தின் கொடி மற்றொரு கொளுகொம்பைப் பற்றித்தான் மேலோங்க வேண்டுமென்றும் அவர்கள் அடிக்கடி அறிவிக்கப்பட் டிருந்தார்கள் ; இதற்குவேண்டிய ஆதாரங்கள் :குர்ஆன் ஷரீ'பில் அனந்தம் மல்கிக் கிடக்கின்றன. பகைவர்களின் எதிர்ப் பிரசாரம் முகடு முட்டியிருந்த வேளைகளி லெல்லாம், நபிகள் பெருமான் ஆதரவற்று அதிகங் கஷ்டப்பட்டு அளக்கரும் ஆபத்துக்குள்ளே சிக்கிக் கொண் டிருந்தபோதும், எதிரிகள் எத்துணைப் பெரிய கஷ்டநிஷ்டூரங்களை யெல்லாம் இழைத்துவந்த போதினும், இறுதியில் இஸ்லாமார்க்கமே வெற் றிக் கொடி நாட்டுமென்று அந்த ஆண்டவனே அல்லுபகலாய் அறிவித்துக் கொண் டிருந்தான். நபிமார்கள் இப்படிப்பட்ட சமயங்களில் எப்படிப் பட்ட துன்பங்களையும் துயரங்களையும் மிக்க பொறுமையுடனே அதிகம் சகித்துவந்தார்க ளென்னும் படிப்பினையைச் சுட்டிக் காட்டுதற் கென்றே அடிக்கடி அன்னவர்களின் சரிதைக ளெல்லாம் எமது திருவேதத்தில் விளக் கப்பட் டிருக்கின்றன. ஹிஜ்ரத்துக்குச் சற்றுமுன்னே நபிகள்பெருமான் கண்டிருந்த உவமதரிசனத் தோற்றமும்— (யமாமாவுக்குப் புறப்பட்டுச் செல்ல அனுமதி கிடைக்கலாமென்று கண்டது) மதீனாவின் பெருமையைத் தான் உண்மையிலே குறித்துக் காட்டியிருக்கின்றது.

உண்மையில் இஸ்லாத்தின் பெருமை யனைத்தும் இந்த ஹிஜ்ரத்துக்குப் பின்னரே நன்றாக உயர்ந்தோங்கத் தலைப்பட்டதென்பது சரித்திர முணர்ந்த ஒரு சத்தியமாகும். ஆதலின், அக்கால முஸ்லிம்கள் இந்த ஹிஜ்ரத்தையே இஸ்லாத்தின் மறுமலர்ச்சி யென்று அதிக ஆவலுடனே எதிர்பார்த் திருந் தார்கள். எனவேதான், 'ஹிராக்குகையில் முதல் வ'ஹீ உதயமாகத் துவக் கியதி லிருந்து முஸ்லிம்களின் ஆண்டுக் கணக்கு ஆரம்பிக்காமல், நாம் முன்னர்க் கூறியபடி இந்த ஹிஜ்ரத்திலிருந்தே ஆரம்பிக்கப்பட் டிருக்கிறது. என்னெனின், இந்த ஹிஜ்ரத்தின்போதுதான் எதிரிகளின் முழுத் துஷ்டத் தனமும் படுகொலையின் எல்லைவரை முகடு முட்டிவிட்டது. எனினும்,

இந்த ஹிஜ்ரத்திலிருந்தே இஸ்லாத்தின் ஜோதியானது அதிகம் அபிவிருத்தியடைய வேண்டுமென்பதே ஆண்டவனது அந்தரங்க நாட்டமாய் விளங்கிற்றுப் போலும்! மக்காவாசிகள் அன்னவருக்கு உதவிபுரியாவிடின், அவர் அதிகமான கஷ்டத்தை யடைந்து, அந் நகரைவிட்டு ஒரே துணைவரை மட்டுமே உறுதுணையாகக் கொண்டு வெளியில் சென்றபோது, ஆண்டவனே நிச்சயமாக அவருக்கு உதவிபுரிந்தானென்று எமது திருமறையே உறுதி கூறுகின்றது.— (9 : 40)

அவ்விருவரும் மக்காவை விட்டுச் சென்று, தெற்குத் திசையிலுள்ள ஒரு குகைக்குட் போய் ஒளித்துக் கொண்டிருந்தும், ஓடிப்போனவர்கள் அப்படியே போகட்டுமென்று மக்கத்துக் ;குறைஷிகள் வாளா விட்டு விடவில்லை. அபூ'ஜஹ்ல் முதலிய கொலை பாதகர்கள் அந்தக் குகைவாயிலண்டையும் தேடிவந்து விட்டார்கள். அதுபொழுது அவர்கள் அதற்குள்ளே எட்டிப் பார்க்க வேண்டுவதுதான் பாக்கியாயிருந்தது. அதுசமயம் உடனிருந்த தோழர் எதிரிகளின் காலடிச் சப்தத்தைக் கேட்டுப் பேரச்சங் கொண்டுவிடுகிறார். அப்பொழுதும் நபிகள்பெருமான்(சல்) சற்றுஞ் சிந்தைகலங்காது தங்கள் தோழருக்குத் தைரியமொழி கூறுகின்றார்கள். என்னெனின், அல்லா(ஹ்)வும் அவர்களுக்கு அனவரதமும் துணைபுரிந்து வருவது அவனுடைய திருத்தூதருக்கு மிகநன்றாய்த் தெரிந்திருந்தது. இப்படிப்பட்ட தெய்வசகாயமே அவர்களுக்கு எப்பொழுதும், எப்படிப்பட்ட கஷ்டகாலத்தும் அளத்தற்கரிய அகத்துணிவை அளித்துக்கொண்டிருந்தது. "யான் இதுசமயம் என் செய்யட்டும்! ஐயகோ!" என்பன போன்ற வார்த்தைகள் அவர்களுடைய உதட்டினின்று ஒருபோதும் வெளிப்பட்டதேயில்லை. இத் தன்மைத்தாய சங்கடங்கள் சில நேரிட்டபோது, மற்றொரு தீர்க்கதரிசியென்பார் உள்ளமுடைந்து உடலந் துணுக்குற்று, "இதைப் பார்க்கினும் யான் என் மூதாதையர் சென்றுசேர்ந்த அந்த இடத்திற்குச் சென்றுவிடக் கூடாதா!" என்ற அதைரிய மொழிகளைக் கூறினார். வேறொரு தீர்க்கதரிசியோ, தமக்கு உயிர்க்கிறுதி வருவதேபோல் காணப்பட்ட வேளையில், "ஏலீ! ஏலீ! லாமா ஸபக்தானீ?" என்று தம்முடைய தேவனை நோக்கிப் பிரலாபித்தாரென்று அன்னவர் பெயரால் வழங்கப்பட்டுவரும் சுவிசேஷங்களே முறையிடுகின்றன. ஆனால், திருநபி பெருமானார் மு'ஹம்மத்' முஸ்த'பா ரஸூல் சல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் எப்பொழுதும் மனத்துளக்கம், உளச்சோர்வு, எதிரிகளின் திகில் ஆதியவற்றை ஒருசிறிதும் மூளையிற் கொண்டதே கிடையாது. எதிரிகளின் இம்சை வலுக்க வலுக்கத்தான் தங்களுடைய சத்திய சன்மார்க்கமும் முன்னேற்றமடையுமென்னும் சந்தோஷத்துள்ளே மூழ்கியிருப்பார்கள். ஃதளர்க்குகையுள்ளே, மனிதக் கண்ணைக் கொண்டு பார்க்குமளவிலே இத்தரணியிலுள்ள எப்படிப்பட்ட உதவியும் கிடைத்தற்கிடமில்லையென்று எல்லோராலும் எண்ணிவிடக் கூடிய அப்படிப்பட்ட முழு அபாயகரமான தன்னந்தனியான நிலையிலும்

நம் பெருமானு ரவர்கள் முழு நம்பிக்கை யுடனும் அளவுகடந்த தைரியத்துடனும், "நிச்சயமாக அல்லா(ஹ்) நம்முடனே யிருக்கின்றான்!" என்று கூறுகிறார்கள். என்னே அன்னவருக்கு ஆண்டவன்மீ திருந்துவந்த அளப்பரும் நன்னம்பிக்கை!

நுபு'வ்வத் வந்து உத்தேசம் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு மேலாகவே நம் நபிகள் திலகம் எதிரிகளின் இடைவிடா எதிர்ப்பிரசாரத்தின் முன்னின்றே வேலை செய்யவேண்டிய அசந்தர்ப்பம் ஏற்பட்டுக்கொண் டிருந்தது. அவர்களுடைய ஆத்மார்த்த உபதேசத்தின் பயனாய் அதுவரை சற்றேறக் குறைய முந்நூறு சிஷ்யர்களே தோன்றி யிருந்தார்கள்; அவர்க ளெல்லாரும் மக்கத்துக் :குறைஷிகளிடத்திருந்து சகிக்கமுடியாத துன்பங்க ளனைத்தையும் சந்தோஷமாகச் சகித்துக்கொண்டே தங்கள் ஞானபிதாவுடன் சேர்ந்திருந்தார்க ளல்லது, அவர்களை ஒருபோதும் அவர்களுள்ளே ஒருவரும் எதிரிகள்வயம் காட்டிக் கொடுத்துவிடத் துணிந்தன ரில்லை; இறுதியாக அவர்கள் தங்களுடைய வீடுவாசல்களையும், சொத்து சுதந்தரங்களையும், மற்றுமுள்ள உற்றார் பெற்றார்களையும் அடியோடு துறந்துவிட்டு, ஆண்டவனே கதியென்று நம்பித் தங்கள் ஞானகுருவைப் பின்பற்றியே ய:த்ரிபு'க்குச் சென்று விட்டார்கள். சுமார் பன்னிரண்டு ஆண்டுகளுக்குள், மக்காவிலிருந்துவந்த எல்லாக் :குறைஷியரும் ஒரேமுகமாக எதிர்த்துவந்தும், நபிகள் திலகமவர்களால் உற்பத்தி செய்யப்பட்டுவிட்ட ஆத்மார்த்த அபிவிருத்தியின் இணையில்லாப் பெருமையைக் குறித்து ஸர் வில்லியம் மூய்ர் என்னும் எமதிஸ்லாத்தின் ஜன்மவிரோதியும் பின்வருமாறு புகழ்ந்து பேசியிருக்கின்றாரெனின், பிறகு யாம் என்ன சொல்லக் கிடக்கின்றது?

"அத்துணைக் குறுகிய கால அளவுக்குள்ளே இந்த ஆச்சரியகரமான இயக்கத்தைக் கொண்டு மக்கமாநகர் இரு கக்ஷிகளாகப் பிளவுபட்டுவிட்டது; அக்கக்ஷிகள் பண்டை வேற்றுமைகளாய குலம் கோத்திரம் என்னும் வித்தியாசங்களை யெல்லாம் பாராட்டாது, கொலைவிளைக்கக்கூடிய பகைமையுடன் ஒன்றுக்கொன்று நேர்முகமாக அணிவகுத்து நின்றன; நன்னம்பிக்கை கொண்டவர்கள் பொறுமையுடனும் தாராளச் சித்தத்துடனும் எதிரிகளின் துன்பங்க ளனைத்தையும் பெரிதும் சகித்து வந்தார்கள்; அவ்வாறு செய்வதே அவர்களுக் குரிய புத்திசாலித்தனமே யாயினும், பெருந்தன்மையுடன் சகித்துவந்தார்க ளென்னும் கௌரவத்தை அவர்களுக்குத் தாராளமாகக் கொடுக்கலாம். ஒரு நூறு ஆடவரும் பெண்டிரும் தங்களுடைய மதிப்பேறப்பெற்ற மதக் கொள்கைகளை விட்டுவிடுவதைப் பார்க்கினும் தங்கள் வீடு வாசல்களை யெல்லாம் துறந்து, அந்தப் புயற்காற்றுத் தணியும்வரை அபிஸ்ஸீனியாவுக்குள் அடைக்கலம் புக்குவிட்டார்கள். ஆனால், இப்பொழுது மறுபடியும் இன்னமும் அதிகமானவர்கள், தங்களுக்கு இப் பூவுலகின்மீதே மகாபுண்ணிய ஸ்தலமாய் விளங்கிவந்த தங்களுடைய மிகப்பிரிய நகரத்தை அதிலுள்ள பரிசுத்த ஆலயத்துடனே

துறந்துவிட்டு, நபிகள் நாயகத்துடனே மதீனாவை நோக்கிச் சென்றுகொண் டிருந்தார்கள். அவ்விடத்திலும் அதேமாதிரியான அற்புதவசீகரணசக்தியே இரண்டுமூன்று வருஷங்களுக்குள் தங்கள் உதிரத்தைக்கொண்டு நபிகள் நாயகத்தையும் அவருடைய சிஷ்யர்களையும் தற்காத்தற்குரிய ஒருவித சகோதரத்துவத்தை அவர்களுக்காகத் தையார் செய்துகொண் டிருந்தது. யூதர்களின் தத்துவமே நெடுங்காலமாக மதீனாவின் மக்கள்களுடைய செவி களில் சப்தித்துக்கொண் டிருந்தது ; ஆனால், அரப்நாட்டுத் தீர்க்கதரிசியின் ஆன்மக்கிளர்ச்சி தரக்கூடிய உணர்ச்சிகளைச் செவி மடுக்குமட்டும் அவர் களும் உறக்கத்தினின்று விழிப்புக்கொண்டு திடீரென்று ஒருவகைப் புதிய கம்பீர வாழ்க்கையுள் பாய்ந்திருக்க மாட்டார்கள். அவருடைய சிஷ்யர் களின் சற்குணங்களைப் பற்றி மு'ஹம்மத்' நபி கூறியிருப்பதையே ஈண் டெடுத்துக் காட்டலாம் :—

" அருளாளனுடைய அடியார்கள் யாரெனின், அவர்களே தரணியின் மீது சாந்தமாக நடந்துகொண்டு, அஞ்ஞான மாக்கள் தங்களுடன் வார்த்தை யாடுங்கால், 'சாந்தி!' என்றே பதில் கூறுவார்கள்.

" தங்கள் இறைவனை நின்றுகொண்டும் சிரங்குனிந்துகொண்டும் இரா முழுதும் வணங்குகிறார்கள் ;

" இன்னமும், சொல்லுகிறார்கள். 'எங்கள் இறைவனே! நரகத்தின் வேதனையை எங்களைவிட்டு அப்புறப் படுத்துவாய்; நிச்சயமாகவே, அதன் வேதனையினின்று விடுதலை யில்லை. மெய்யாகவே, அஃதொரு பொல்லாத ஸ்தலமாகவும் தங்குமிடமாகவும் இருக்கின்றது.'

" தாங்கள் செலவு செய்யுங்கால், அளவுகடந்து செய்துவிடாமலும், உலோபித்தனமா யிருந்துவிடாமலும், இரண்டற்கும் மத்திபமான வழி யையே பின்பற்றுகிறார்கள்:— ஆண்டவனுடன் இணைத்து வேறெந்தத் தெய் வத்தையும் அழைக்க மாட்டார்கள் ; நியாய முறைப்படி யல்லது, ஆண்ட வனால் தடுக்கப்பட்ட எந்த உயிரையும் கொல்ல மாட்டார்கள் ; மேலும், பிறர்மனை விழைவதும் கிடையாது ;

" அசத்தியமான காரியத்துக்குப் பொய்ச்சாக்ஷியம் கூறமாட்டார்கள் ; வேடிக்கையான காரியங்களைக் கண்ணுறுவார்களாயின், அதனைப் பெருந் தன்மையுடனே திரஸ்கரித்து விடுவார்கள்.

" ஆண்டவன் வ'ஹீயைக் கொண்டு அறிவுறுத்தப்படுவார்களாயின், செவிடர்களைப் போலும் குருடர்களைப் போலும் குப்புறற்று வீழ்ந்துவிட மாட்டார்கள் ;

" 'எங்கள் இறைவனே! எங்களுக்குச் சௌகரியமா யிருக்கும் முறையிலே எங்கள் மனைவிகளையும் மக்கள்களையும் கொடுத்தருளி, பக்தி மான்களுக்கு எங்களை முன்மாதிரியாகச் செய்துவைப்பாயாக,' என்று கூறுவார்கள்."

உண்மையை ஊன்றி நோக்குங்கால், நன்னம்பிக்கை கொண்டவர்களின் குணாதிசயங்களைப் பற்றி வருணித்திருக்கும் இவ் வாக்கியங்களும், எமது :குர்ஆன் ஷரீ'பில் காணக்கிடக்கும் இவைபோன்ற இன்னம் பன்னூற்றுக் கணக்கான திருவாக்கியங்களும் ஏதோ ஒரு வெறும் மனோராஜ்யமான எண்ணங்களை மட்டுமேதாம் எடுத்தோதி யிருக்கின்றன வென்று எண்ணிவிடாதீர். என்னெனின், அவற்றிலெல்லாம் குறிப்பிடப்பட்டிருக்குமாறே அம் முஸ்லிம்கள் அனைவரும் உண்மையிலேயே நிகழ்ந்து வந்தார்கள். இப்படிப்பட்ட அத்தியாச்சரியகரமான மாறுதல்க ளனைத்தையும் அந்த அஞ்ஞான அராபியர்மீது செய்துவைத்த தெல்லாம் ஒரே ஒரு தனிப்பட்ட மகானின் ஆன்மசக்தியாகவே காணக்கிடக்கின்றது. மகா ஆச்சரியமான ஒருசிறிது காலத்திற்குள், எல்லாத் துர்க்குணங்களுள்ளும் மூடக்கொள்கைகளுள்ளும் ஆழ மூழ்கிக்கிடந்து, மகா அருவருப்பான ஆழிய விக்ரஹத் தொழும்புள்ளே சிக்கி, அதிகம் வெறுக்கத்தக்க, மிக்க கொடூரமான சமூகப் பழக்க வழக்கங்களுள் ளெல்லாம் அதிகம் ஆழ்ந்து மிகத்தாழ்ந்து போய்க் கிடந்த நூற்றுக்கணக்கான மனிதர்களைச் சன்மார்க்கத்தின் உச்சஸ்தானத்தின்மீது இனியில்லாவண்ணம் எடுத்துயர்த்திவிட்டார் ஒருதன்னந்தனியான அகதி உம்மீ. நபிகள் திலகம் அவர்களுக்குள்ளே ஒருவகைப் புத்துயிரைப் புகுத்தி விட்டார்கள்; அதன்பின்பு அன்னவர்களால் அங்கீகரிக்கப்பட்ட சத்தியத்தின் தத்துவத்தையும், சகோதர மக்களுக்கு நன்மைசெய்த லென்னும் கொள்கையினையும், தங்களுடைய உயிர்க்கிறுதி வருவதா யிருந்தபோதினும், ஒருபோதும் ஒருசிறிதும் கைவிடத் துணிந்தன ரில்லை. மனித கண்ணியத்துக்கும், அதன் ஜவாப்தாரித்தனத்துக்கும் பொருத்தமான ஒருவகைக் கௌரவ வாழ்க்கையை அவர்களுக்குள்ளே நுழைத்து விட்டார்கள். எனவே, இம் மகானுபாவரைக் காட்டினும் மன்பதைக்குப் பேருபகாரம் செய்து முடித்தவர் இதுகாறும் இத்தரணியின்கண் வேறெவரும் அவதரித்த தில்லை யென்பது சத்தியம்! இனியும் அவதரிக்க மாட்டா ரென்பது நிச்சயம்! இதற்கு இப்பூவுலகின் சரித்திரமே சான்று பகராநிற்கும்.*

"சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்."— குறள்.

* களிமண்ணால் பறவைகளைப் பண்ணி ஒரு தீர்க்கதரிசி ஊதிப் பறக்க வைக்கலாம்; சவக்குழியிலிருந்து சவங்களை உயிர்ப்பித்து எழுப்பலாம். ஆனால், மண்ணுடன் மண்ணாய் மக்கி மடிந்து மரித்துக் கிடந்த அந்த அரபிகளைத் தட்டி யெழுப்பி, ஆகாயத்திற் பறக்கும் பறவைகளைப் பார்க்கினும் ஆத்மஞான சிதாகாசத்தில் அள்ளிக் கொண்டு செல்லும் அசுவங்களாகப் பண்ணிவிடுவ தென்பது அத்துணை எளிய காரியமன்றே!

# அதிகாரம் — 18

## மதீ'னு மாநகர் சேறல்

"நிச்சயமாக, எவர்கள் ஈமான் கொண்டும், (தங்கள் இல்லங்களைத் துறந்து) வெளிப் புறப்பட்டும் தங்கள் பொருள்களையும் தங்கள் ஆவிகளையுங் கொண்டு அல்லா(ஹ்)வின் பாதையில் கடும் போராட்டம் புரிந்து மிருந்தார்களோ அவர்களும், எவர்கள் (திருநபியையும் அம் முஸ்லிம்களையும்) ஆதரித்து உதவியும் புரிந்தார்களோ அவர்களும்— இவர்கள்தாம்— இவர்களில் சிலர் சிலருக்குப் பாதுகாவலர்களா யிருக்கின்றார்கள்."— (8 : 72)

"தானமு மொழுக்கமுந் தவமு மீகையும்
மானமும் பூத்ததிண் மறனும் வெற்றியும்
ஊனமி லூக்கமு மொளிரக் காய்த்தநல்
தீ'னெனும் செல்வமே பழுத்த சேணகர்."

— சீறாப்புராணம்.

முன்னம் அவ்வாறு கூறப்பட்ட நபிகள்பெருமானும் (சல்) அவர்களுடனே புறப்பட்டுச்சென்ற மற்றைமூவரும் ஆண்டு ஸுறா(க்):கா பி'ன் மாலிக்குடன் சம்பாஷித்துக்கொண் டிருந்துவிட்டு, மேற்கொண்டு தங்கள் பிரயாணத்தைத் தொடங்கப் போகுந் தருணத்தில் ஷாம்தேயத்துக்கு வர்த்தகத்தினிமித்தம் சென்றிருந்த 'ஜுபை' ரிப்'னு அ'வ்வாம் என்பவர் திரும்பிவந்து, ஆங்கிருந்த அனைவரையும் நோக்கி அதிகமான பரிதாபங் கொண்டு, நபிகள் பெருமானுக்கும் அபூ'ப்க்ர் (ரலி') அவர்களுக்கும் உபயோகமாகக்கூடிய ஒரு சில உயரிய வெள்ளிய ஆடைகளைக் கொடுத் துதவினார். அதுபொழுது உடுத்திய உடையுடனே ஊரைவிட்டுப் புறப்பட்ட அவ் விருவருக்கும் 'ஜுபை'ரின் (ரலி') உபகாரம் மிகவும் போற்றப்படற் குரியதாகவே காணப்பட்டது. அதன்பின்பு 'ஜுபை'ர் மக்காவை நோக்கிப் புறப்பட்டார்; நபிகள் நாதரும் ஏனை மூவரும் மதீனாவை நோக்கிப் புறப்பட்டார்கள். ஸுறா(க்):காவும் தாம்கண்டதை ஒருவரிடத்தும் விண்டிடுவ தில்லையென உறுதி செய்துகொண்டு, தமதிருப்பிடம் நோக்கித் திரும்பிவிட்டார். இவர் திரும்பி வந்துகொண்டிருக்கும் வழியிலே எத்தனையோ பகைவர்கள் ரஸூலுல்லா அவர்களைத் தேடிக்கொண்டுவந்தார்கள். ஆனால், இந்தஸுறா(க்):கா,

அப்பாதையிலே நபியவர்கள் (சல்) செல்லவில்லை யென்றும், வீணே தேடிக் கொண்டு செல்லவேண்டா மென்றும் சொல்லி, அன்னவரை யெல்லாம் தடுத்து அவரவரின் இல்லங்களுக்குத் திருப்பியனுப்பிக் கொண்டே சென்றார். என்னே இறைவனது இரகசியச் சூழ்வினை! இந்த ஸுறா(க்):கா பி’ன் மாலிக் அப்பொழுதே இஸ்லாத்தைத் தழுவி விட்டாரென்று சில சரித்திராசிரியர்கள் வரைந் திருக்கின்றார்கள்.

“பின்னர் மேன்மை பொருந்திய அப் பிரயாணிகள் (நால்வரும்) ஒரு நாட் பிரயாணம் சென்று, உம்மு மஃ’ப’த் தென்னும் பெண்பிள்ளையின் இல்லம் சென்று சேர்ந்தார்கள். உம்மு மஃ’ப’த் தென்னும் அம்மாது கு’’ஜா ஆ’ வர்க்கத்தைச் சேர்ந்தவர்; வழிப்பிரயாணிகளை — தேசாந்தரிகளை — அதிகம் விசாரித்து உபசரிப்பவர்; தம்மிடம் வருபவருக் கெல்லாம் யாதொரு தங்கு தடங்கலின்றித் தாகசாந்தி செய்துவைப்பதில் மகாகீர்த்தி பெற்றவர். இவரிடம் ரஸூல் நாயகமவர்கள் சென்றுசேர்ந்து, உணவுப்பொருளேதேனும் உண்டோவென்று விசாரித்தார்கள். அதற்கு விடையில் பால் மறத்துப்போன ஒரு கிழ ஆட்டைத் தவிர வேறொன்றுமில்லை யென்பதைத் தெரிந்துகொண்டு, வறந்துலர்ந்துபோன அவ் வாட்டினின்றும் பால்கறந்து கொள்ள அனுமதி கோரினார்கள். உம்மு மஃ’ப’த், ‘இவ்வாடு பால் கொடுப்ப தில்லை; நெடுநாளைக்கு முன்னமேயே இதில் பால் தட்டுப்பட்டுப் போய்விட்டது,’ என்று சொல்லியும், நபிகள் (சல்) அவர்கள் கேளாமல், ‘உத்தரவு மாத்திரம் கொடுத்தால் அந்த ஆடு பால்கொடுக்கும்படி யான் செய்கிறேன்,’ என்று சொன்னார்கள். இதற்குப் பின்பு உம்மு மஃ’ப’த் உத்தரவு கொடுக்க, ரஸூல் அவர்கள் பிஸ்மில்லா(ஹ்) என்னும் திரு மந்திரத்தைச் சொல்லி, அவ்வாட்டின் மடிமீது கரத்தை வைத்துப் பாலைக் கறக்க, ஏராளமாக அதினின்று பால் உண்டாயிற்று. நாயகமும் நாயகத்தின் சோதரர்களும் வயிறுநிறைய அருந்தியும், உம்மு மஃ’ப’த்தின் வீட்டுப் பாத்திரங்க ளெல்லாமும் அதன் பாலால் நிறைந்து கிடந்தன,” என்று வேறுசில சரித்திராசிரியர்கள் இங்குக் கூறுநிற்பர். பிறகு மதீனாவை நோக்கிப் புறப்பட்டவர்கள் ஜத்’வாத், அ’:கீ:க், ல:க்’ப், ‘ஹத’ாயித்’, ‘பாக்’’தா ஆதிய பதினாறு ஸ்தலங்களில் தங்கியிருந்து, இறுதியாக எட்டாவது தினத்தன்று மதீனாவின் புறநகர் எல்லையை நண்ணினார்கள். ராபி’:க் என்னும் முக்கிய ஸ்தலமும் அந்த முஹாஜிரீன்கள் தங்கிச்சென்ற அந்தப் பதினாறு ஸ்தலங்களுள் ஒன்றாகவே காணப்படாநின்றது. இங்கே தான் நபிகள் பெருமான் சூரியாஸ்தமயத் தொழுகையை ஒருநாள் முடித்துக் கொண்டார்கள்.

வழக்கமாகப் பதினொரு தினங்களில் கடக்கக்கூடிய தூரத்தை (சுமார் 300 மைலை) நபிகள்பெருமானார் (சல்) எட்டுத்தினத்திலேயே கடந்துசென்று, அந்த ய:த்ரிபி’ன் எல்லையுள்ளே நுழைந்தார்கள். அன்று தேதி, நுபு’வ்வத் வந்து 13-ஆவது ஆண்டு, ரபீ’உ’ல் அவ்வல் மாதம் பிறை 8—(கி. பி. 622,

ஸெப்டெம்பர் மாதம், 20-ஆந் தேதி) என்று அல்லாமா ஷிப்'லீ நுஃமானீ அவர்கள் வரைந் திருக்கின்றார்கள். ஆனால், வேறு சிலர், அவ்வருடம், அம்மாதம், பிறை 12 அன்றுதான்—கி. பி. 622, ஜூன் மாதம், 28-ஆந் தேதி) நபிகள் திலகம் ய:த்ரிபு'க்குள் நுழைந்த தென்று கூறுகின்றார்கள். நபிகள் நாயகம் மக்காவை விட்டுப் புறப்பட்டவுடனே அந்தச் செய்தி நேரே ய:த்ரிபு'க்கு வந்துசேர்ந்து விட்டது; ஆனால், நபிகள் பெருமான் ஃதௌர்க் குகையுள் மூன்று நாட்கள்வரை தங்கிவிட்டமையால், அவர்களைப் பற்றிய சமாசார மொன்றும் அந் நகரத்தாருக்குத் தெரியவில்லை யாதலால், ஆங் குள்ளவர்கள் ஒவ்வொரு நாளும் அதிக ஆவலுடனே எதிர்பார்த் திருந்தார் கள். பெரியவர்க ளெல்லாரும் சந்தோஷ ஆரவாரத்தால் அளவற்ற குதூகலங்கொண் டிருந்தார்கள். சிறுவர்களும் சிறுமிகளும் பொறுக்க முடியாப் புளகாங்கிதத்தால் அளவுகடந்த ஆனந்தத் தாண்டவம் ஆடி நின்றார்கள்.

ஒவ்வொரு நாட் காலையிலும் முஸ்லிம் பக்தர்கள் பலர் கூடி, ய:த்ரிபு'க் குத் தென்மேற்குத் திசையிலுள்ள ஹீரா என்னும் மாகொடிய மைதானத் தில் வந்துநின்று, நபிகள் திலகத்தை எதிர்நோக்குவார்கள். உச்சிப் பொழுதுவரை அச் சகிக்கமுடியா உஷ்ணத்தில் நின்றுவிட்டு, அளவுகடந்த ஏமாற்றத்துடனே தங்கள் இல்லம் திரும்புவார்கள். இவ்வாறு சிலதினம் எதிர்பார்த்து விட்டு, இறுதியில் ஒருநாள் அவ்வாறே வந்து நோக்கிவிட்டு, அதிக ஏமாற்றத்துடனே அன்றும் திரும்பினார்கள். ஆனால், அவர்கள் அவ்வாறு திரும்பிச் சென்றதன்பின்னால் அம் மைதானத்தின் கோட்டை யொன்றின் கோபுரத்தின்மீ திருந்த எஹூதி யொருவர் நெடுந்தூரத்திற் கப்பால் சக்கரவாளத்தில் இரண்டு மூன்று ஒட்டகங்களின்மீ தேறிய வெண் டுகிலணிந்த சில மனிதர்கள் ய:த்ரிபை' நோக்கி வருவது தொடுவானத்திலே தென்பட்டதென்று கூறியவுடனே, ய:த்ரிப்' வாசிகள் கூவிய "அல்லாஹு அக்ப'ர்!" என்னும் பேரொலியானது அந் நகர் முழுதும் குமுறத் தலைப் பட்டது. உடனே ஆங்கிருந்த எல்லாரும் திரண்டு வந்து நபிகள் திலகத்தை நல்வரவேற்க எதிர்கொண் டோடினார்கள். அப்பொழுது நம்பெருமானா ரவர்கள் அ'ய்ன் ய:த்ரிபி' லிருந்து மூன்றுமைல் தெற்கிலுள்ள ஆ'லியா, அல்லது :குப'ா வென்று கூறப்படுகின்ற ய:த்ரிபி'ன் புறநகரிலே தங்கினார் கள். அவ் விடத்திலே அன்சார்களில் பல குடும்பத்தினர்கள் வசித்து வந்தார்கள். அத்தகைய அன்சார்களுள் ஒருவரான குல்:தூம் பி'ன் ஹத'ம் என்னும் பெரியாரே அவ்விடத்துக்குத் தலைவராக அதுசமயம் விளங்கி வந்தார். இப் பெரியார் :குப'ாயில் பெயர்பெற்று விளங்கிய அ'ம் ரிப்'னு அ'வ்'பின் வம்சத்தைச் சார்ந்தவரா யிருந்தார். அவருடைய வேண்டு கோளுக் கிணங்கி, நபிகள் நாயகமும்(சல்) அங்கேயே இறங்கிவிட்டார்கள்.

அதற்குள்ளே ய:த்ரிபி'லிருந்து பல அன்சார்களும், முஹாஜிரீன்களும் கூட்டமாகக் குழுமி, :குப'ாயிக்கு வந்து சேர்ந்தார்கள். அவர்க ளெல்லாரும்

மீண்டு மொருமுறை "அல்லாஹு அக்ப'ர்!" என்று ஆனந்த ஆரவாரம் செய்து, நபிகள் நாதரை உயிருடனே கண்டு களித்தார்கள். அதுபொழுது விஜயம் செய்திருந்த முஹாஜிரீன்களுள் கீழ்க்காணும் பத்து ச'ஹாப'ாக்களும் நபிகள் நாயகத்துடனே :குப'ாயிலே தங்கிவிட்டார்கள். அன்னவர்களின் நாமங்களாவன :—1. அபூ'உ'பை'த'ா, 2. மி:க்த'ாத்', 3. க'ப்'ப'ாப்', 4. ஸுஹைல், 5. ச'ப்வான், 6. இ'யால்', 7. அ'ப்'து'ல்லா ஹிப்'னு' மு'ஹ'ஜமா, 8. வஹ்ப்' பி'ன் ஸஃ'த்', 9. மஃ'மர் பி'ன் அபீ'ஸர்'ஹ், 10. உ'மைர் பி'ன் அ'வ்'ப். :குப'ா யென்னும் அப் பகுதி மிக்க வளம் பொருந்தியதாகவும் அழகியதாகவும் காணப்பட்டதனால் அவ்விடத்திலேயே நபிகள் நாயகமும் அவர்களைச் சார்ந்த தோழர்களும் பதினான்கு தினம்வரை தாமதித்திருந்தார்கள். இதுகாறும் எம்பிரான் அவர்களை நேரில் காணாதிருந்து புதிதாகக் காணும் பாக்கியம் பெற்றுள்ள மதீனா வாசிகள், ஆண்டவன் திருத்தூதர் அபூ'ப'க்ரா, நபிகள் நாயகமா? என்ற ஐயத்தி லாழ்ந்துகொண் டிருந்தனர். இதனை 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் அவர்கள் உணர்ந்துகொண்டு, நபிகள் நாதரைப் பிரித்துக் காட்டவேண்டு மென்னும் பெருநோக்கங் கொண்டு, நபிகள்(சல்) அவர்கள் சிரத்துக்கு நேரே எழுந்துநின்று, நிழல் விழுமாறு ஒரு குடை பிடித்து நின்றார்கள். இவ்வாறு செய்ததனால் மதீனா மாநகர் வாசிகள் திரள்திரளாக வந்துகூடியும், ஆண்டவனுடைய தூதர் ஆரென்பதை மிக எளிதிலே அறிந்துகொண்டு சென்றனர்.

நபிகள் பெருமானார் மக்கத்தை விட்டுப் புறப்பட்டதற்குப் பின்னே மூன்றுதினங் கழிந்து, 'ஹ'ஜ்ரத் அ'லீ(ரலி') அவர்கள் தங்கள்பால் ஒப்படைக்கப்பட்டிருந்த அடைக்கலப் பொருள்கள் யாவற்றையும் அஃதற் குரியவர்களிடம் ஒப்படைத்து விட்டு, அந்நகரைத் துறந்து பகற்காலங்களி லெல்லாம் மறைந் துறைந்துவிட்டு, இராக் காலங்களில்மட்டுமே பாதசாரியாக நடந்து வந்து, நபிகள் பெருமான் :குப'ாயி லிருக்கும் போதே அவர்களுடன் சேர்ந்து கொண்டார்கள். 'ஹ'ஜ்ரத் அ'லீ அவர்கள் ஆங்குவந்து சேரும் போது அவர்களுடைய பாதமிரண்டும் பெரிதும் வீங்கிப் பருத்திருந்தன. அவர்களுடைய வருகைச் செய்தியைக் கேட்டவுடன் எம்பிரான்(சல்) அவர்கள் அ'லீயைத் தங்களிடம் அழைத்துக்கொண்டு வரச் சொல்லி, அவ்வாறு அ'லீயால் நடக்கமுடியா தென்பதைத் தெரிந்துகொண்டு, நாயக மவர்களே அ'லீ(ரலி')யின் இருப்பிடம்சென்று, அவர்களைக் கட்டித்தழுவிக்கொண்டு அன்பு மேலீட்டால் ஆனந்தக் கண்ணீர் விட்டார்கள்.— (இப்'னு அ:தீர்)

நபிகள் பெருமான் அந்தக் :குப'ாயி லிருந்தபோது முதன் முதலாக ஒரு மஸ்ஜித்' கட்ட ஆரம்பித்தார்கள். குல்:தூம் அவர்கள் பேரீச்சங் காய்களை உலர்த்தும் களம்போன்ற தரிசு நிலமொன்று அங்கே காணப்பட்டது. அதிலேயே அம் மஸ்ஜிதை'க் கட்டவேண்டு மென்று அதற்குடையவர் கேட்டுக் கொண்டதன்மேல் நபிகள் திலகமவர்கள் தங்கள் சொந்தத் திருக்கரத்தைக் கொண்டே அதற்குரிய அஸ்திபாரக்கல்லை நாட்டினார்கள். அதன்

நிர்மாணவேலை நடைபெற்று வருங்கால், தாங்களும் கூலியாட்களுடன் சரி சமானமாய்ச் சேர்ந்துகொண்டே அதற்கு வேண்டிய வேலைகளைச் செய்வார்கள். சில சமயங்களில் அல்லா(ஹ்)வின் திருத்தூதரவர்கள் பெரும் பாரமான கற்களைச் சுமக்கநேருங்கால், அந்த மஹானுபாவருடைய முதுகும் அதிகம் கூன்விழுந்து விடுமாம். அவர்கள் சுமக்கும் கற்களை வேறு தோழர்கள் வந்து மாற்றிக் கொள்வார்கள். எனினும், உடனே மீண்டும் சென்று நபிபெருமான் (சல்) மற்றொருகல்லை மிகச் சந்தோஷமாகச் சுமந்து வருவார்கள்.

இவ்வாறு அக்கட்டிட வேலை அதிக துரிதமாக நடைபெற்று வரும் போது, அவர்களுள் அ'ப்'துல்லா ஹிப்'னு ரவா'ஹா என்னும் அரபிக் கவிவாணரும் உடனிருந்து வந்தார். அவர் ஆங்கு வேலை செய்யும் மனிதர்களுக்குக் கஷ்டம் தோன்றாதிருக்கும் வண்ணம் அரபுபாஷையில் கவிபாடுவார். அதன் கருத்தாவது: "பள்ளிவாயில் கட்டுகிறவனும், இருக்கும் போதும் எழும்போதும் :குர்ஆன் ஷரீ'ப ஓதுகிறவனும், இரவில் விழித்திருப்பவனும் வெற்றி பெற்றார்கள்," என்பதாகும். அந்தக் கவிவாணர் அதைப் பாடும்போது நபிகள் பெருமானும் அவருடனே சேர்ந்து பாடுவார்கள். :குப'ாயில் நிருமிக்கப்பட்ட இந்த மஸ்ஜிதே' இஸ்லாத்தின் ஆரம்பப் பள்ளியாகும்; இந்த மஸ்ஜிதெ' :குப'ாயைப் பற்றித்தான் ஆண்டவனும் தனது அழகிய திருமறையில், "நிச்சயமாக, முதல்நாள் முதற்கொண்டே பக்தியின்மீதே அடி கோலப்பட்ட பள்ளிவாசல்" என்று (9 : 108) வருணித்துள்ளான். இம் மஸ்ஜிதை' அதுசமயம் கட்டிமுடித்தவர் அ'ம்மார் பி'ன் யஸார் என்பவராவார். ஆரம்பத்தில் இஃதொரு சதுரமான மிகச்சிறிய கட்டிடமாகவே காணப்பட்டது; ஆனால், நபிகள் திலகத்துக்குப் பின்வந்த மூன்றாவது க'லீ'பாவான உ':த்மான்(ரலி') அவர்களே இதனை விஸ்தீரணப் படுத்தினார்கள். நபிகள் பெருமானார் மதீனாவி லிருந்தபோதெல்லாம் வாரத்துக் கொருமுறை கால்நடையாகவே நடந்துசென்று இம் மஸ்ஜிதைப்' பார்வையிட்டு வருவார்கள்.*

அவ்வாறு :குப'ாயில் 14 தினங்கள்வரை தங்கியிருந்து விட்டு, ஆங்கிருந்து மறுநாள் வெள்ளிக்கிழமை யன்று காலையில் அ'ய்ன் மதீ'னாவுக்குப் புறப்பட்டார்கள். குல்:தூம் அவர்கள் தங்களிடத்திலேயே நபிகள் பெருமான் தங்கிவிட வேண்டுமென்று எத்துணை மட்டும் விரும்பி வேண்டிக் கொண்டும், அதற்கிணங்காது அப்பெருந்தகையாளர் அந்த வெள்ளியன்று காலையிலே தங்களுக்குரிய "அல் :கஸ்வா" என்னும் ஒட்டகத்தின்மீது ஏறிச் சென்றார்கள். பெருந் திரளான மக்கள் அளவற்ற குதூகலத்துடனே பாதசாரிகளாகவும், குதிரைகளின்மீது சவாரானவர்களாகவும் நபிகள் திலகத்தைச் சூழ்ந்துகொண்டு சென்றார்கள். அவர்களுடைய தோழர்களுள்

* மதீனாவுக்கு விஜயம் செய்யும் 'ஹஜ்ஜாஜ்க ளெல்லாமும் இதனைப் போய்ப் பார்த்து விட்டே வருகிறார்கள்.

பலர் அல் :கஸ்வாவின் கடிவாளத்தைப் பிடித்துக்கொள்ள வேண்டு மென்னும் கண்ணியத்தைப் பெறும்பொருட்டுத் தமக்குள்ளே அதிகமான போட்டிபோட்டுக் கொண்டார்கள்.

இவ்வாறு பொதுஜனங்கள் திரளாகச் செல்லும்போது, வழியில் ஜுமுஆ'த், தொழுகைக்குரிய நேரம் வந்துவிட்டமையான், "வாதீ' ப்னீ ஸாலிம்" என்னும் நீரோடைக்குச் சென்று தங்கள் கைகால்களை யெல்லாம் சுத்தி செய்துகொண்டு, அந்த ப்னீ ஸாலிமின் மஹல்லாவிலேயே ஜுமுஆ'த் தொழுது கொண்டார்கள். அத் தொழுகைக்கு முன்னே நபிகள் பெருமானார் ஆங்குக் குழுமியிருந்தவர்களுக்கு ஓர் அழகிய நெடிய பிரசங்கம் செய்தார்கள். அதுதான் மதீ'னுவில் இஸ்லாத்தில் முதன்முதலாகச் செய்யப்பட்ட ஜுமுஆ'ப் பிரசங்கமாகும்; அன்று தொழுததுதான் முதன்முதலான ஜுமுஆ'த் தொழுகையு மாகும். அதுசமயம் இஸ்லாம் மார்க்கத்தை ஏற்றுக் கொண்டிருந்த பக்தர்க ளனைவரையும் ஒன்றுசேர்த்தார்கள். ஆகவே, அதுசமயம் ஒருநூறு பக்தர்களான முஸ்லிம்கள் அந்த குத்ப'ா பிரசங்கத்தின்போது பிரசன்னமா யிருந்தனர்.— ('ஜாது'ல் மஆ'த்')

நுபு'வ்வத் வந்து 13-ஆவது ஆண்டு, ரபீ'உ'ல் அவ்வல் மாதம், பிறை 23, வெள்ளிக்கிழமைப் பகலில் நபிகள் பெருமான்(சல்அ'ம்) ப்னீஸாலி மென்னும் இடத்திலே முதன்முறையாகச் செய்த ஜுமுஆ'வின்

# குத்பா பிரசங்கம்

வருமாறு:

# خطبه تبا

الحمد لله احمده واستعينه واستغفره واستهديه واؤمن به ولا اكفره
واعادي من يكفره. واشهد ان لا اله الا الله وحده لا شريك له وان محمدا
عبده ورسوله.

ارسله بالهدى والنور والموعظة على فترة من الرسل وقلة من العلم
وضلالة من الناس وانقطاع من الزمان ودنو من الساعة وقرب من
الاجل من يطع الله ورسوله فقد رشد ومن يعصهما فقد غوى وفرط
وضل ضلالا بعيدا. واوصيكم بتقوى الله فانه خير ما اوصى به المسلم
المسلم ان يحضه على الآخرة وان يأمره بتقوى الله.

فاحذروا ما حذركم الله من نفسه ولا افضل من ذالك نصيحة ولا افضل
من ذالك ذكرا. وان تقوى الله لمن عمل على وجل ومخافة من ربه
عون صدق على ما تبتغون من امر الآخرة ومن يصلح الذي بينه وبين
الله من امره في السر والعلانية. لا ينوي بذالك الا وجه الله يكن له ذكرا في
عاجل امره وذخرا فيما بعد الموت حين يفتقر المرء الى ما قدم.

وما كان سوى ذالك يود لو ان بينه وبينها امدا بعيدا. ويحذركم الله
نفسه والله رءوف بالعباد. والذي صدق قوله وانجز وعده لا خلف
لذالك فانه يقول عز وجل. ما يبدل القول لدي وما انا بظلام للعبيد

فاتقوا الله في عاجل أمركم وآجله في السر والعلانية فإنه من يتق الله يكفر عنه سيئاته ويعظم له أجرا ومن يتق الله فقد فاز فوزا عظيما. وإن تقوى الله يوقي مقته ويوقي سخطه. وإن تقوى الله يبيض الوجوه ويرضي الرب ويرفع الدرجة.

خذوا حظكم ولا تفرطوا في جنب الله. قد علمكم الله كتابه ونهج لكم سبيله ليعلم الذين صدقوا ويعلم الكاذبين فأحسنوا كما أحسن الله إليكم وعادوا أعداء الله وجاهدوا في الله حق جهاده هو اجتباكم وسماكم المسلمين. ليهلك من هلك عن بينة ويحيى من حي عن بينة ولا قوة إلا بالله فأكثروا ذكر الله. واعملوا لما بعد اليوم فإنه من يصلح ما بينه وبين الله يكفه الله ما بينه وبين الناس ذلك بأن الله يقضي على الناس ولا يقضون عليه ويملك من الناس ولا يملكون منه. الله أكبر ولا قوة إلا بالله العظيم.

**நந் நபிகள்^ஸல் முதன்முதலாகக் :குபா'யில் செய்த கு'த்பா' (பிரசங்கம்—தமிழில்)**

புகழடங்கலும் அல்லா(ஹ்)வுக்கே உரித்தாகுக! யான் அவனைப் புகழ்கின்றேன்; மேலும், அவனிடத்தே உதவி தேடுகின்றேன். அவனிடமே பிழைபொறுத்தலையுந் தேடுகின்றேன். அவனிடத்தே நேர்வழி காட்ட விழைகின்றேன். அவன்மீதே யான் உறுதி கொள்கின்றேன். யான் அவனுக்கு மாறு செய்ய மாட்டேன். அவனை வெறுப்பவர்களை யான் வெறுக்கின்றேன். வணக்கத்துக் குரியவன் அவனைத் தவிர்த்து வேறு யாருமில்லை யென்றும், அவன் தனித்தவன், அவனுக்கு இணைதுணை யாருமில்லை யென்றும், மு'ஹம்மத்' அவனுடைய அடியவராகவும் தூதுவராகவும் இருக்கிறாரென்றும் யான் சாக்ஷியங் கூறுகின்றேன்.

நெடுங்காலமாகவே நபிமார்களில்லாது போயினமையால், அறிவும் ஆத்ம ஞானமும் குன்றி, அஞ்ஞானம் நிறைந்து எங்கும் இருள் சூழ்ந்து கொண்டிருக்கும் இச் சமயத்திலே அவரை— (மு'ஹம்மதை') நேர்வழி

யுடனும் பிரகாசத்துடனும் ஆண்டவன் அனுப்பி வைத்தான். இறுதிக் காலத்திலும், :கியாமத்துக்குச் சமீபமாகவும், மரணத்துக்குச் சமீபமாகவுமுள்ள சமயத்திலுமே (தான்) (அவ்வாறு) அவன் அனுப்பி வைத்தான். அல்லா(ஹ்)வுக்கும் அவனுடைய தூதருக்கும் வழிபட்டு நடந்தவன் நிச்சயமாகவே நேர்வழி யடைந்தான். ஆனால், அவர்களிருவருக்கும் மாற்றஞ் செய்தவன் நிச்சயமாகவே அதிகம் வழிகெட்டு, நேரான பாதையினின்று நெடுந்தூரம் சறுகிப்போனவனா யிருக்கிறான்.

(ஏ ஜனங்களே!) அல்லா(ஹ்)வுக் கஞ்சி நடக்கவேண்டுமென நான் நுங்களுக்குச் சொல்லுகிறேன். ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமுக்குச் சொல்ல வேண்டியதில் சிறந்ததாவது: இறுதி நாளன்று நன்மையைப் பெறுவதன் பக்கல் அவனைத் தூண்ட வேண்டும். அன்றியும், அல்லா(ஹ்)வுக் கஞ்சி நடக்கவேண்டுமென்றும் (உபதேசம்) சொல்ல வேண்டும்

(ஏ நண்பர்காள்!) எதைச் செய்யவேண்டாமென ஆண்டவன் நுங்கள் பால் விலக்கி யிருக்கிறானோ, அதனைச் செய்யாம லிருங்கள். இதைவிட மேலான உபதேச மில்லை; இதைக் காட்டினும் மேலான தியான மொன்று மில்லை. இறுதிநாளில் நன்மையைப் பெறும்பொருட்டு ஆண்டவனுக் கஞ்சி நற்கருமங்களைச் செய்பவனுக்குத் ('த:க்வா வெனும்) உள்ளச்சம் பெரிதும் பிரயோஜனம் தரத்தக்கதா யிருக்கின்ற தென்பதை நீங்கள் அத்தியாவசியமாகக் கவனித்தல் வேண்டும். எவனேனும் ஒருவன் தனக்கும் அல்லா(ஹ்)வுக்கு மிடையே தொடர்பு பெற்றிருக்கும் காரியங்களில், அந்தரங்கத்திலும் பகிரங்கத்திலும் நன்றாகவும் நேர்மையாகவும் நடந்து கொள்வதுடன், தன்னுடைய எண்ணத்தையும் பரிசுத்தமாக வைத்துக்கொண் டிருப்பா னாயின், அவனுக்கு இவ்விஷயம் இகத்தில் ஒவ்வொன்றிலும் நன்மையைத் தரத்தக்கதாகவும், பரத்தில் மகாபெரிய நன்மையின் பொக்கிஷமாகவும் சமைந்துவிடும். அன்றியும், அன்னவன் பின்னே தனக்கு நன்மை கிடைக்கவேண்டும், இதற்காகத் தான் நற் காரியத்தைச் செய்யவேண்டும் என்பதை முதற் கடமையாகக் கொள்ளல் வேண்டும்.

ஆனால், அவ்வாறு நற்கருமங்களைச் செய்ய எவனேனும் தவறிவிடுவனாயின், அவன் தனக்கும் அவற்றிற்கு மிடையே நெடுந்தூரம் இருக்க வேண்டுமென நேசிக்கிறான். (ஆனால்) அல்லா(ஹ்) தன்மாட்டிருந்து நுங்களுக்கு அச்சமூட்டி எச்சரிக்கை விடுக்கிறான். இன்னம், அல்லா(ஹ) அடியவர்கள்மீது இரக்கங் கொள்பவனா யிருக்கிறான். இன்னம், எவன் அவனுடைய வாக்குறுதியை உண்மையென நம்பி, தன்னுடைய வாக்குறுதியை நிறைவேற்றி வைத்ததுடன், அதற்கு விரோதமும் செய்யாமலிருக்கிறானோ, அவனுக்கு ஆண்டவன் சொல்வதாவது: "என் வார்த்தைக்கு விரோதமும் மாற்றமும் செய்யப்படக் கூடா; மேலும் நான் அடியவர்களுக்கு அக்கிரமம் செய்யக்கூடிய அநியாயக்கார னல்லேன்.",

நீங்கள் அந்தரங்கமாகவும் பகிரங்கமாகவும் செய்யக்கூடிய ஒவ்வொரு காரியத்திலும் அல்லா(ஹ்)வுக் கஞ்சி நடந்துகொள்ளுங்கள். என்னெனின், எவன் அல்லா(ஹ்)வுக் கஞ்சி நடந்து கொள்ளுகிறுனே, அவனுடைய பாபத்தை (ஆண்டவன்) மன்னித்து விடுகிறுன்; இன்னம், அன்னவனுக்குச் சரியான நல்ல பிரதிப் பிரயோஜனத்தையும் அளிக்கிறுன். இன்னம், எவன் அல்லா(ஹ்)வுக் கஞ்சி நடந்து கொள்ளுகிறுனே, அவன் நிச்சய மாகவே மாபெரும் வெற்றியைப் பெற்றவ னுவான். இதுவு மல்லாமல் ஆண்டவனுக் கஞ்சி நடப்பது பெரிய மனேபீஷ்டங்களைப் பூர்த்தி செய்வதா யிருக்கிறது. இந்த அச்சப்பா டொன்றே ஆண்டவனுடைய தண்டனையினின்றும் கோபத்தினின்றும் அடியவனை அகற்றிக் காப்பாற்றக் கூடியதா யிருக்கின்றது.

இன்னம், அல்லா(ஹ்)வுக் கஞ்சி நடப்பதென்னும் 'தஃக்வா வானது வதனங்களை யெல்லாம் பிரகாசிக்கச் செய்கின்றது; தன்னிறைவனைச் சந்தோஷமடையச் செய்கின்றது. தனது அந்தஸ்தை உயரச் செய் கின்றது. நீங்கள் நற்பயன்களைப் பற்றிக் கொள்ளுங்கள்! ஆண்டவனுக் குரிய உரிமைகளில் அளவைக்கடந்து செல்லாதீர்கள்! நிச்சயமாகவே அல்லா(ஹ்) தன்னுடைய வேத போதங்களை நுங்களுக்குத் தெரியப்படுத்தி யிருக்கிறுன்; தன்னுடைய நேரான பாதையை நன்கு விளக்கிக் காட்டி யிருக்கிறுன். எனவே, நேரான பாதையில் நடந்து, அல்லா(ஹ்)வின் வார்த்தைகளை மெய்ப்படுத்தியவர்களையும், பொய்யாக்கி வைத்தவர்களையும் அல்லா(ஹ்) அறிந்துகொள்ளுகிறுன். உங்கள்பால் அல்லா(ஹ்) அழகான மாதிரியில் நடந்துகொண் டிருப்பதேபோல் நீங்கள் (மக்கள்பால்) நன்கு நடந்து கொள்ளுங்கள். அல்லா(ஹ்)வின் பகைவர்களை நேசிக்காதீர்கள். அல்லா(ஹ்)வின் விஷயத்தில் அவனுக்குத் தக்கவாறே அதிகம் பெரு முயற்சிகளைச் செய்யுங்கள். அவன் (தான்) நுங்களைச் சிறந்தவர்களாகச் செய்தான்; மேலுமவன் நுங்களுக்கு "முஸ்லிம்கள்"— (அடிபணிந்து முடி சாய்க்கிறவர்கள்) என்ற நாமத்தையுஞ் சூட்டியுள்ளான்.

ஒன்றுக்கு முதவாமல் நாசமாய்ப் போகிறவனும், நல்லவிதமாக ஜீவித் திருப்பவனும் (ஆண்டவனுடைய) ஆதாரங்களை அறிந்து கொள்ளட்டும். அல்லா(ஹ்)வைக் கொண்டே யன்றி, எவ்விதத் திராணியு மில்லை. அல்லா(ஹ்)வின் தியானத்தை அதிகப்படுத்திக் கொள்ளுங்கள். அடுத்து வரும் ஜீவிப்பிற்கு (மறுமைக்கு) வேண்டிய காரியங்களைச் செய்யுங்கள். எவனொருவன் தனக்கும் அல்லா(ஹ்)வுக்கு மிடையே இருக்கும் வியவகாரங் களைச் சீர்படுத்திக் கொள்ளுகிறுனே, அவனுக்கு மக்கள்பால் காணக் கிடக்கும் வியவகாரங்களை அல்லா(ஹ்) சீர்படுத்திவிடுகிறுன். ஆண்டவன் அடியவர்கள்மீது அதிகாரம் செலுத்தி நற்காரியங்களை ஏவுகிறுன். அவன் மீது எவரும் அதிகாரம் செய்ய வியலார். அல்லா(ஹ்) அடியவர்களுக்கு அதிபதியா யிருக்கிறுன். அடியவர்களுக்கு அவன்மீது எவ்வித அதிகாரச்

சொந்தமு மில்லை. அல்லா(ஹ்) மிகவும் பெரியவன். நன்மை செய்வதற்கு வேண்டிய சக்தியும் பெரியவனான (அந்த) அல்லா(ஹ்)வின் உதவிகொண்டே யல்லது (நமக்குக்) கிடைக்கப் போவதில்லை.

* * * *

அவ்வாறு ப'னீஸாலிமில் ஜுமுஆ'த் தொழுகை தொழுது முடிந்ததன் பின்னால் மீண்டும் மதீனாவை நோக்கிப் புறப்பட்டார்கள். அதுபொழுது அந் நகரவாசிக ளெல்லாரும் அலங்காரமான ஆடைகளை அணிந்து கொண்டு, அளவுக்குமீறிய ஆனந்தத்துடனே :குப'ாயிலிருந்து மதீ'னாவரை இருமருங்கும் வரிசையாக அணிவகுத்து நின்றார்கள். அப்பொழுது 'புரைத'ா பின் 'ஹஸீப்' அஸ்லமீ என்பவர், தாமொரு முஸ்லிமல்லாதவரா யிருந்தும், தமக்குண்டான அளவுகடந்த சந்தோஷத்தினால் தமது தலைப் பாகையை அவிழ்த்துக் கொடியாகப் பறக்கச்செய்து, தங்கரத்துள்ள ஈட்டியில் மாட்டிப் பிடித்துக்கொண்டார். இதுதான் இஸ்லாத்தின் முதற் பதாகையாகும்.* இவ்வாறே ஏனையோர் சிலர் பேரீச்ச மட்டைகளைக் கொண்டு நபிபெருமானுக்குக் குடைபிடித்தார்கள். மதீனாவிலுள்ள சிறுவர்களும் சிறுமிகளும் தத்தங்கரத்தில் வட்டப் பறைவைத்துத் தட்டிக் கொண்டு, "நபிகள் பெருமான் நம்மூருக்குள்ளே வந்துகொண் டிருக் கிறார்கள்!" என்று பாடியாடி ஆனந்தக் கூத்தாடிக் கொண்டிருந்தனர். அன்று மாலைப்பொழுதில் வள்ளலிரஸூலவர்கள் பெருந்திரளான பொது ஜனங்களுடன், அவர்க ளெல்லாரும் உயரிய உபசார மொழிகளும் சுபசோபன வார்த்தைகளும் அதிகம் வழங்கி நிற்க, அ'ய்ன் மதீ'னாவின் எல்லைக்குள் நுழைந்தவுடனே அழகிய ஆடையாபரணங்களால் தங்களை அலங்கரித்துக் கொண்டிருந்த பர்த'ா நஷீன்களான க'ாத்தூன்கள்—(கோஷாப் பெண்களான 'தவாத்துல் கி'த'ார்கள்) எல்லாரும் தத்தம் உப்பரிகைகளின்மீ தேறிக்கொண்டு, அல் :கஸ்வாவின் மீது ஆரோகணித் தவர்களாய் அந் நகருக்குள்ளே அதிக கம்பீரத்துடனே விஜயம் செய்து கொண்டிருக்கும் அல்லா(ஹ்)வின் திருத் தூதரவர்களைக் குறித்து,

---

* நபிகள் நாயகத்துக்கு ஒரு குறிப்பிட்ட கொடியென்பது இருந்ததாகத் தெரியவில்லை ஒரு சிறிய சாதாரணமான வெண்டுகிலாகவேனும், அல்லது ஒரு பெரிய சதுரமான வேஷ்டி யாகவேனும், அல்லது வெவ்வேறு நிறப் பொட்டுக்களால் நிறைக்கப்பெற்ற ஒரு கறுப்புத் துணியாகவேனும், சிற்சில சமயங்களில் அதன்மீது ஒரு கழுகின் உருவத்துடனும் அப் பெருமானாரின் கொடி காணப்பட்டது. ஆனால், துருக்கிக் கொடியில் காணப்படும் பிறை வடிவானது பை''ஜான்டிய (பண்டை ரோமராஜ்ய) அரசசின்ன மென்பதும், கான்ஸ் டாண்ட்டி நோபிளை 2-ஆவது மு'ஹம்ம தென்பவர் கைப்பற்றிய பின்னரே அந்தப் பிறைக்கொடி முஸ்லிம்களின் கைவயம் வந்து சேர்ந்ததென்பதும் எல்லாருக்கும் தெரிந்த விஷயமேயாம், என்று மிர்'ஜா அபு'ல் 'ப'ஜ்ல் தாம் எழுதியிருக்கும் "The life of Mohammad" என்னும் நூலில் வரைந்துள்ளார். வெண்ணிறமுள்ள துகிலையே எம் பிரான்(சல்) அவர்கள் அநேகமாய்க் கொடியாக உபயோகப் படுத்தியிருக்கிறார்கள் என இப்'னு அ:தீரில் காணப்படுகிறது.

":தனீயத்துல் விதாஇ'லிருந்து வெளிப்போந்து அந்தப் பூரணச் சந்திரன் நம்முடைய சிரசுகளுக்கு மேலே கிளம்பிவிட்டது! அல்லா(ஹ்)வுக்கு நம்முடைய பிரார்த்தனைகளின் பரிசுத்தமான உற்சாகத்தைக் கொண்டு நாம் செலுத்தக்கூடிய வந்தனைகள் அனந்தமாகும்! ஆண்டவன் திருத் தூதராகிய தாங்கள் எங்களிடம் வருக!" "தங்களால் எங்களுக் கிடப்படும் ஆணைக ளெல்லாம் மிக்க பணிவுடனே நிறைவேற்றி வைக்கப்படும்!" என்று இடைவிடாது சுபசோபனம் கூறினார்கள்.

நபிகளுநாதர்(சல்) அந்நகருக்குள் நுழைந்து ப'னூஸைத், ப'னூஸைதா, ப'னூஹாரிஸ், ப'னூஅ'தீ' முதலிய மஹல்லாக்களின் வழியே செல்லுங்கால், ஒவ்வொரு கூட்டத்தின் தலைவர்களும் அவர்களுடைய ஒட்டகத்தின் கடிவாளத்தைப் பற்றிநிறுத்தி, "யாரஸூலல்லா! எங்களுடனே தாங்கள் தங்கி யிருக்கலாம். இவ்விடத்தில் திரண்ட ஐசுவரியமும் அதிகாரமும் பாதுகாப்பும் அதிகம் காணப்படும்," என்று விண்ணப்பித்துக் கொண்டார்கள். அவர்க ளெல்லாருக்கும் நபிகள் பெருமான் தலைகுனிந்து அன்னவர்களின் உபசாரமொழிகளை ஏற்றுக் கொண்டவர்களேபோல் புன்முறுவல் பூத்த முகமலர்ச்சியுடனே, "அல்லா(ஹ்)வின் அனுக்கிரகம் உங்கள்மீ துண்டாகுக! அல்லா(ஹ்)வின் ஆணைப்படி இவ்வொட்டகம் சென்று தானே நிற்கும் இடம்வரை இதன் கடிவாளத்தை விட்டுவிடுவீர்களாக. ஆண்டவனது அனுமதியின் பிரகாரம் அல்:கஸ்வா தானே நிற்கும் அவ் விடத்திலே தான் தங்கிவிடுவேன்," என்று கூறினார்கள். அவ்வாறே அவ்வொட்டகம் சென்று நாலு பக்கத்தையும் திரும்பித் திரும்பிப் பார்த்து, இறுதியாக அபூ' ஐயூப்' அன்சாரீ அவர்களுடைய விடுதிக்குப் பக்கத்திலுள்ள திறந்த வெளியிலே படுத்துக்கொண்டது. அதைக் கண்டவுடன் நபிகள் நாதரும் அந்த அபூ' ஐயூபி'ன் (ரலி') இல்லத்திலேயே இறங்கிவிட்டார்கள்.

அபூ' ஐயூபி'ன் இயற்பெயர் க'ாலித்' என்பதாகும். இவர் ப'னூ நஜ்ஜார் வர்க்கத்தைச் சார்ந்தவ ராவார். அவ்வர்க்கமே நபிகள் பெருமானின் தந்தைவழிப் பாட்டனுருக்குரிய மாதுலர் வம்சமாகும். அவ் வம்சத்தாரிடத்தேதான் தாங்கள் தங்கிவிட வேண்டுமென்று நபிகள் பெருமான் எண்ணியிருந்தார்க ளென்று இமாம் பு'க'ாரீ இயம்பி யிருக்கின்றார்கள். ஆனால், பற்பல வர்க்கத்தின் தலைவர்களுக்குள்ளே அபிப்பிராய பேதம் ஏற்பட்டு விட்டதனால், அவர்களுடைய நாமங்களை யெல்லாம் வரைந்து குலுக்குசீட்டுப் போட்டுப் பார்த்ததில் அபூ' ஐயூபி'ன் நாமமே வெற்றி பெற்ற சீட்டில் காணப் பட்டமையாலேயே ஆங்குத் தங்கி விட்டார்க ளென்று அல்லாமா ஷிப்'லீ அறைந்திருக்கிறார்கள். அதன்பின்பு திருநபியவர்களை அழைத்துவந்த மற்றெல்லாரும் அத்தியந்த சந்தோஷத்துடனே, "முஹ'ம்மத்'(சல்) நம்மிடம் வந்துவிட்டார்! அல்லா(ஹ்)வின் திருத்தூதர் நந்நகருக்கு விஜயம் செய்து விட்டார்!" என்று பாடிக்கொண்டே தத்தம்

இல்லம்நோக்கி ஏகிவிட்டார்கள். அபூ' ஐயூப்' (ரலி') விடுதியில் நபிகள் திலகம் இறங்கியதில் எவருக்கும் எத்தகைய வெறுப்புமில்லை யென்னலாம்.

நபிகள் திலகம் ஃதௌர்க் குகையை விட்டு நுபு'வ்வத் வந்து 13-ஆவது ஆண்டின் ரபீ'உ'ல் அவ்வல் மாதம் பிறைபிறந்த முதல்தேதி யன்றே யஃத்ரிபை' நோக்கிப் புறப்பட் டிருக்கிறார்கள். பின்னர் அம்மாதம் பிறை 8 அன்றே ஃகுப'ாயிக்குள் நுழைந்திருக்கிறார்கள். அங்கே 14 தினம் தாமதித்திருந்து, ரபீ'உ'ல் அவ்வல் பிறை 23-க்குச் சரியான வெள்ளிக்கிழமை யன்று யஃத்ரிபு'க்குள் சென்று சேர்ந்தார்கள். அன்று முதல்தான் அந்த யஃத்ரிப்' நகரமும் மதீ'ன(த்)துன் னபீ' (நபி' பெருமான் நகரம்) அல்லது சுருக்கமாக மதீ'னா என்று இன்றளவும் அழைக்கப்பட்டு வருகின்றது. அன்று முதல் தான் நாம் முன்னமே கூறியவண்ணம் நமது ஹிஜ்ரீ ஆண்டின் கணக்கும் ஆரம்பமாகின்றது. ஆனால், ஹிஜ்ரத்துக்குப் பின்னே 17 வருடங்கள் கழிந்த பிறகுதான் 2-ஆவது க'லீ'பாவான உ'மருப்'னுல் க'த்தாப்'(ரலி') அவர்களுடைய காலத்திலே முஸ்லிம்களின் ஆண்டுக்கணக்கு இந்த ஹிஜ்ரத்திலிருந்து கணிக்கப்பட வேண்டுமென்னும் அரசாங்க அறிக்கை வெளியிடப்பட்டது. அதுபொழுதும் நபிகள் திலகம் ஹிஜ்ரத் புறப்பட்ட ரபீ'உ'ல் அவ்வல் முதல் தேதியிலிருந்து இக்கணக்கு ஆரம்பிக்கப் படவில்லை. அவர்கள் ரபீ'உ'ல் அவ்வல் பிறையன்று வியாழக்கிழமைக் காலையிலே ஃதௌரை விட்டுப் புறப்பட்டு, அப்பிறை 23-ஆந் தேதி வெள்ளிக்கிழமை யன்று மாலையிலே மதீ'னாவிலுள்ள அபூ' ஐயூப்' அன்சாரீ யவர்களின் இல்லம் சேர்ந்தார்கள். ஆனால், அதற்குப் பின்னே 17 ஆண்டுகள் கழிந்த பிறகு ஹிஜ்ரீக் கணக்கு நிலைநிறுத்தப்பட்டபோது, நுபு'வ்வத் வந்து 13-ஆவது ஆண்டின் ரபீ'உ'ல் அவ்வல் முதல் தேதியிலிருந்து ஆரம்பம் செய்யாது, முஸ்லிம் வருஷத்தின் முதல்மாதமாகிய (அந்த ரபீ'உ'ல் அவ்வலுக்கு முன் நிகழ்ந்த) மு'ஹர்ரம் மாதம் முதல் தேதியிலிருந்தே கணிக்கத் தொடங்கினார்கள். இதுதான் ஹிஜ்ரீ ஆண்டின் சரியான கணக்காகும்.

தங்கள் தலையைக் கொய்துகொண்டு வருபவருக்கு ஒரு நூறு ஒட்டகம் சம்மானம் கொடுக்கப்படுமென்று சபதஞ் செய்யப்பெற்றிருந்த நபிகள் பெருமானா ரவர்கள் உயிர்தப்பி ஓடிவந்தவரேபோ லில்லாமல், ஜயபேரிகையுடன் தான் வெற்றிகொண்ட ஒரு நகருக்குள் நுழையும் வாகை மாலைசூடி வெற்றிக்கொடி நாட்டும் மாபெருங் கீர்த்திவாய்ந்த கொற்றவனேபோல் அளவுகடந்த கம்பீரத்துடனும், அதிகமான கண்ணியத்துடனுமே மதீ'னா மாநகருக்குள் விஜயம் செய்தார்கள். சாதாரணமாக நோக்கும்போது, இந்த ஹிஜ்ரத்தைக்கொண்டு முஸ்லிம்களின் காலகணிதம் எண்ணப்பட்டு வருகிறதென்பது ஒரு சாமான்யமான சம்பவமாகவே கருதப்படுதல் கூடும். ஆனால், உண்மையிலே இதனைப் பார்க்கினும் விசேஷ வைபவம் வேறொன்றும் அத்துணைப் பொருத்தமாகக் காணப்படமாட்டா தென்பது திண்ணமேயாம். மக்காவிலேயே நபிபெருமானார் தாமதித்திருந்து, அவ் விடத்தி

லேயே இஸ்லா மார்க்கமும் இறுதியில் வெற்றிபெற் றிருக்குமாயினும், அப் பொழுது இம்மார்க்கத்திற்குப் பிற்காலத்தில் விளைந்த பெருமை அத்துணை யும் விளைந்திருத்தல் முடியுமோ வென்பதுதான் ஒரு பெருஞ் சந்தேகமாகக் காணப்படாநின்றது. என்னெனின், மக்கமா நகரில் இஸ்லாம் சுயமே வெற்றிக்கொடி நாட்டியிருக்கு மாயின், அதனைச் சூழ்ந்துள்ள அராபிய ரனைவரும் ஒன்றுகூடி இம் மார்க்கத்தை அடியோடு பரவவொட்டாது பஹிஷ்காரம் செய்திருப்பார்கள். எனவே, நபிகள் நாயகர் முன்னர்க் கூறியவாறு மக்காவை விட்டு வெளியில் துரத்தப்படாமலிருந்திருப்பார்க ளாயின், அம் மகானுபாவர் இவ்வுலக மக்களனைவர்க்கும் பொதுவாக அவ தரித்த புண்ணிய புருஷரென்னும் தெய்வசங்கல்பம் இனிது நிறைவேறி யிருப்பது அதிகங் கஷ்ட சாத்தியமாகவே போய் முடிந்திருக்கும்; அவர் களால் உபதேசிக்கப்பட்ட சத்திய சன்மார்க்கமும் இவ் வுலகுமுழுதும் அத் துணை எளிதிலே நன்கு பரவியிருப்பதும் அதிக சிரம சாத்தியமாகவே முடிந்துபோ யிருக்கும்.

எனவேதான், இந்த ஹிஜ்ரத் தென்பது ஆண்டவனருளால் அளிக்கப் பட்ட ஒரு மறைமுகமான அனுக்கிரகமேபோல் அமைந்து கிடக்கின்றது. ஆண்டவனால் அடியாருக்குச் சிற்சில வேளைகளில் அளிக்கப்படும் சம்பவங் கள் ஒருசில, அவை நிகழுங்காலங்களில் வேண்டத்தகாத வெறுப்புள்ள விஷயங்களே போல் காணப்படினும், காலக்கிரமத்திலே மகா உசிதமான பெரிய அனுக்கிரகங்களாகவே மாறிவிடுதல் வெளிப்படை. ஆதலினால் தான், நபிகள் திலகமும் மக்காவைவிட்டு வெளியேறிச் சில வருடங்களுக் குள்ளே அந்நகரத்தையே கைக்கொண்டு ஆண்டுத் தங்கள் வெற்றிக் கொடி யையும் நிலைநாட்டினார்கள். இதனால் இத்தாரணி முழுதும் இந்த இஸ்லாம் மார்க்கம் நன்கு பரவுவதற்கு ஹேதுவுண்டாயிற்று.

மேலே கூறியவண்ணம் அபூ' ஐயூப்' அவர்களுடைய வீட்டுக் கெதிரில் நபிகள் திலகம் இறங்கியவுடனே அவர்களை அந்த அன்சாரீ யானவர் அதிக அன்புடனே நல்வர வேற்று, உள்ளே அழைத்துச் சென்று, உபசாரமும் புரியலாயினர். இருலோக சம்பத்தும் தமக்கு ஒருங்கே கிடைத்து விட்டதே போல அவர் அத்தியந்த ஆனந்த சாகரத்துள்ளே ஆழ்ந்துகிடந்தார். அபூ' ஐயூப்' அன்சாரீயின் விடுதி இரண்டடுக்கு மெத்தையுள்ளதாக அமைந் திருந்ததனால், அன்னவர் நபிபெருமானை நோக்கி மேல்மாடியில் தங்கியிருக்கு மாறு பெரிதும் வேண்டிக் கொண்டார். ஆனால், தங்களைக் காண வருவார் போவா ரெல்லாரும் அபூ' ஐயூபி'ன் அகத்தவருக்குச் சிரமம் கொடாதிருக் கும் பொருட்டும், தங்களை விரும்பிவருவோ ரனைவருக்கும் சுலபத்திலே தரி சனம் கொடுக்கும் பொருட்டும் அடித்தளத்திலேயே தாங்கள் தங்கியிருக்க விரும்புவதாக நபிகள் திலகம் கூறிவிட்டார்கள். அவ்வாறே அடி வீட்டில் அவர்கள் தங்கியிருந்தக்கால், அபூ'ஐயூபு'ம் அவருடைய மனைவியும் அடுக்கு வீட்டிலிருந்து ஒவ்வொருநாளும் இவ்விரண்டு வேளைப் போஜனமாகத்

தாங்கள் சமைத்திருப்ப தவ்வளவையும் அனுப்பி வைப்பார்கள். நபிகள் திலகம் புஜித்து எஞ்சியதையே அபூ' ஐயூபு'ம் அவருடைய மனைவியும் அப்பால் உட்கொள்வார்கள். இங்ஙன மிருந்து வருங்கால், ஒருநாள் மேல் மாடியி லிருந்த தண்ணீர்ப் பாத்திர மொன்று உடைந்து எங்கும் நீர்ப் பெருக்கெடுத்து ஓடிற்று. அந்தத் தண்ணீர் நபிகள் திலகத்தின் மீது ஒழுகி விடுமென் றஞ்சி அபூ' ஐயூப்' தம்பா லிருந்துவந்த ஒரே போர்வையைக் கொண்டு அத் தண்ணீரில் விரித்து அதைச் சுவறும்படி செய்துவிட்டார். இத்துணைப் பக்தி விசுவாசத்துடன் அப் பெரியார் தங்கள் ஞானசிரியரை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகப் பாதுகாத்து வந்தார். இவ்வாறாக அவரது இல்லத்தில் நபிகள் பெருமான் ஏழுமாத காலம்வரை தாமதித் திருந்தார்கள்.

"உடன்பிறந்தார் சுற்றத்தார் என்றிருக்க வேண்டா
உடன்பிறந்தே கொல்லும் வியாதி— உடன்பிறவா
மாமலையில் உள்ள மருந்தே பிணிதீர்க்கும்
அம்மருந்து போல்வாரும் உண்டு,"— என்று அவ்வையம்மையும்

அழகுபெற இயம்பியுள்ளார்.

அதற்குள்ளே அந்நகரின்கண் இன்றும் மாபெரும்புகழுடனே விளங்கி வரும் மஸ்ஜிது'ன் னப'வீ என்னும் பள்ளிவாயிலின் ஆரம்பக் கட்டிடத்தை அமைத்துவிடத் துவக்கினார்கள். நாம் முன்னம் வரைந்திருப்பதே போல அபூ' ஐயூப்' அன்சாரீயின் வீட்டருகிலுள்ள அந்தக் காலிமனையை வாங்கத் தீர்மானித்து, அதற்குரிய அனாதைச் சிறுவர்களான ஸஹ்ல், ஸுஹைல் என்னும் இருவருக்கும் பாதுகாவலராக விளங்கிய முஆ''தி'ப்னு அப்'ரா அவர்களை அழைத்து, அதன் கிரயத்தைப்பற்றி வினவினார்கள். அவர் அதற்குக் கிரயமொன்றும் பெறச் சம்மதியாது, தற்சமயம் அவ்வனாதைப் பிள்ளைகளுடைய 'கார்டியனா'கத் தாமே யிருப்பதாகவும், அப் பிள்ளைக ளுக்கு வயது வந்தவுடனே தாம் அவர்களுக்குத் தக்க சமாதானம் கூறிக் கொள்ளுவதாகவும் விடைகொடுத்தார். பிறகு நபிகள் நாயகம் ஸஹ்லையும் ஸுஹைலையும் நேரே அழைப்பித்துக் கேட்டார்கள். அவர்களும் அல் லா(ஹ்)வின் ரஸூலவர்களிடம் கிரயம்பெறச் சம்மதியாது, அந்த ஆண்டவ னிடத் திருந்தே சம்மானம் பெற விரும்பியதாகக் கூறினார்கள். ஆனால், நபிகள் திலகம் அதற் கிடங் கொடாது அம் மனையின் கிரயத்தைப் பத்து தீ'னாரென்று (ரூ. 25 என்று) தீர்த்தே முடிவுசெய்தார்கள். அத் தொகை யையும் அபூ'ஐயூப்' அன்சாரீயே கொடுத் துதவினார். (அத் தொகை கொடுத் தவர் அபூ'ப'க்ர் சித்'தீ:'க் என்று வேறுசிலர் தவறாகக் கூறுவர்.) ஸர்வ லோகங்களுக்கும் ஒரு தயாபரராக அவதரித் திருக்கும் "ர'ஹ்மதுன் லில் ஆ'லமீ"னாகிய எம்பிரானவர்கள் எவ்வாறு அந்த அனாதைச்சிறுவரின் மனையில்

இனுமாகப் பள்ளி கட்டிக் கொள்ளச் சம்மதிப்பார்கள்? அவ்விடத்திலே மஸ்ஜித்' கட்டி முடிக்கும்வரை நபிகள் பெருமானும் ஏனைய முஸ்லிம்களும் மிருகங்க ளடைக்கும் கொட்டிலாய் விளங்கிய ஒரு கொட்டகையையே சுத்தம் செய்து, அதிலே தங்கள் தொழுகையை நிறைவேற்றி வந்தார்கள்.

ப'னீ நஜ்ஜார்களுக்குச் சொந்தமாய் விளங்கிவந்த அந்த மனையில் சில இடிந்த சுவர்களும், வேறு சில கிலமாய்ப் போயிருந்த சமாதிகளும், இன்னம் சில பேரீச்ச மரங்களும் நின்றுகொண் டிருந்தன. அந்தப் பூமி சமன் செய்யப்பட்டு, அஸ்திபாரக்கல்லும் நாட்டப்பட்டது. முதலில் நபிகள் நாயகமும், பிறகு அபூ'ப'க்ரும்(ரலி') அதன்பின் உ'மரும்(ரலி') பிறகு ஏனைத் தோழர்களுமாக அடித்தளக் கற்களை அடுக்கி வைத்தார்கள். இதுசமயம் இருலோக சர்தாரான எம்பிரான்(சல்) சாதாரணக் கூலிவேலைசெய்யும் ஒரு கொத்தனே போல் மீண்டும் தென்படுகின்றார்கள்; இதற்குமுன் :குப'ாயில் கொத்துவேலை செய்திருக்கின்றார்க ளென்பதை நீங்கள் மறந்திருக்க மாட்டீர்கள். அம்மனையி லிருந்த மரங்களெல்லாம் வெட்டப்பட்டு, வேறு சுவர்களும் சமாதிகளும் நிரவல் செய்யப்பட்டு, அங்கே யிருந்த மஸ்ஜித்' பிறகு ஆரம்பமாயிற்று. எல்லா ச'ஹாப'ாக்களுடனும் நபிகள் பெருமானும் சரிசமமாக நின்றே கல்லும் மண்ணும் சுமந்து கூலியாளேபோல வேலை செய்தார்கள். அந்தத் தோழர்க ளெல்லாரும், "ஏ இறைவனே! இறுதி நாளின் வெற்றியல்லாத வேறொரு வெற்றியு மில்லை. ஏ இறைவனே! முஹாஜிரீன்களுக்கும் அன்சாரிய்யீன்களுக்கும் பாபமன்னிப்புச் செய்தருள் வாய்!" என்று பாடும்போது நபிகள்திலகமும் (சல்) உடன்சேர்ந்து பாடுவார்கள்.

அந்த மஸ்ஜிதி'ன் வேலை மிகச் சுலபமாகவே நிறைவேறிக் கொண்டு வந்தது; அதன் சுவர்கள் பச்சைவெட்டுக் கற்களால் நிர்மாணிக்கப் பட்டன; அச்சுவர்கள் ஏழுமுழ உயரம் கிளம்பியவுடனே அவற்றின்மீது தட்டையான மண்தளமொன்று போடப்பட்டது. இடையிலே பேரீச்ச மரத் தூண்கள் நிறுத்தப்பட்டு, மேல்தளம் அவற்றின் மட்டைகளையும் ஓலைகளையும் பரப்பிச் செய்யப்பட்டது. அக் கூரையின்மீது மண்பத்தைகள் பரத்தப்பட்டிருந்தும், மழைபெய்தால் உள்ளே அதிகம் ஒழுகக்கூடியதாகவே யிருந்து வந்ததனால், மஸ்ஜிதி'ன் உட்புறத்தரை சேறாகப் போய்விடாதிருக்கும் பொருட்டுப் பருக்கைக்கற்கள் கொணர்ந்து அத் தரையின்மீது பரத்தப்பட் டிருந்தன. நபிகள் நாயகம் உபதேசித்துவந்த சத்திய சன்மார்க்கம் எத்துணை இலகுவானதாகக் காணப்பட்டு வந்ததோ, அத்துணை எளிதாகவே அவர்களுடைய மஸ்ஜிது'ம் நிர்மாணம் செய்யப்பட்டது. அது 100 முழ நீளமுள்ளதாகவும், அகலத்தில் சிறிதே குறைவுள்ளதாகவும் காணப்பட்டது. அதற்கு மூன்றுபக்கச் சுவர்களில் மூன்று வாயில்கள் வைக்கப்பட்டிருந்தன; அவற்றுள் "ப'ாபு'ர் ர'ஹ்மா" என்னும் வாயிலே சிறந்ததாகக் கருதப்பட்டு வந்தது. மற்றொரு வாயில் "ப'ாபு' ஜிப்'ரீல்"

என்று அழைக்கப்பட்டது. மூன்றாவது வாயில் மக்காவை நோக்கியுள்ள தெற்குச்சுவரி லிருந்தது. அந்தப் பள்ளியின் :கிப்'லாவானது பை'த்துல் மு:கத்'த'சை (ஜெரூஸலத்தை) நோக்கியிருந்ததனால், வடபுறச் சுவரில் மட்டுமே வாயில் வைக்கப்பட வில்லை. பிறகு அந்தக் :கிப்'லாவானது மக்காவின்பக்கல் அல்லா(ஹ்)வின் ஆணையால் திருப்பப்பட்டபோது, அதன் தென்புறச் சுவர் அடைக்கப்பட்டு, அதிலிருந்த வாயில் வடபுறச் சுவரில் வைக்கப்பட்டது. பிற்காலத்தில் முஸ்லிம் மன்னர்களால் இவ்வுலக முழுதும் நிர்மாணிக்கப்பட வேண்டியிருந்த மகா மகா அழகிய உயரிய மஸ்ஜித்'களுக்கெல்லாம் முதன்மையாய் நின்றிலங்கிய இந்த மஸ்ஜிது'ன் னப'வீ இவ்வாறு சர்வ சாதாரணமான முறையிலே தொழுதற்குரிய விரிப் பொன்றுங்கூட இல்லாது, "நனை சுவர்க் கூரை"யால் அப்பொழுது நபிகள் திலகத்தின் திருக் கரத்தாலேயே நிருமித்து முடிக்கப்பட்டது.*

அம் மஸ்ஜிதி'ன் வெளிப்புறத்தில் ஒரு மூலையிலே கூரை வேயப்பட்ட தாழ்வார மொன்று கட்டப்பட்டது. அதிலேதான் தங்குவதற்கு வேறிட மில்லாத அகதித் தோழர்கள் தங்கி யிருப்பார்கள்; அன்னவருக்கு "அஸ்"ஹாபு'ஸ் ஸு'ப்'பா" என்று நாமம் வழங்கப்பெறும். ஆங்குள்ளவர் கள் வேறு வேலையொன்றும் செய்யாது, சதா சர்வ காலமும் ஆண்டவன் வணக்கத்திலும் சமய ஆராய்ச்சியிலுமே தங்கள் காலத்தைக் கழித்து வருவார்கள். இன்னம், அப் பள்ளிவாயிலின் சுவரை யொட்டி வெளியில் இரண்டு கூரையிடப்பெற்ற தாழ்வாரப்பத்தி போன்ற அறைகளும் 5 பேரீச்ச மரப் பராரைகளைக் கொண்டு நிர்மாணிக்கப் பட்டன. இவ் விரண்டனுள் ஒரு "ஹுஜ்ரா" பீ'பீ' ஆ'யிஷா (ரலி') அவர்களுக்கும், மற்றொரு "ஹுஜ்ரா" ஸௌத'ா அம்மா ளவர்களுக்கும் என்று வேறு பிரித்து வைக்கப்பட்டன. அவ்வறையின் சுவர்கள் 6 அல்லது 7 முழ உயரமுள்ளனவா யிருந்தன. எனவே, மேற்கூரை கீழே நின்று உயரத்தில் எட்டக்கூடியதாக விருக்கும். தெருப் பக்கத்து வாயிலுக்குக் கதவொன்று மில்லாது, வெறுங் கம்பளிப்போர்வையே விரித்துத் தொங்கவிடப்பட் டிருக்கும். இவ்விரு அறைகளை ஒட்டியே பிறகு ஸ'பிய்யாவின் அறை யொன்றும் கட்டப்பட்டது. இவற்றிற்கு எதிர்ச்சிறகில் ஷாம் திசையை நோக்கி, உம்மு ஸலமா, உம்மு 'ஹபீ'ப'ா, ஸை'ஜனப்', ஜுவைரிய்யா, மைமூனா, ஸை'ஜனப்' பி'ன்த் ஜஹஷ் ஆகிய ஆறு மனைவியரின் "ஹுஜ்ராக் களும்" நிர்மாணிக்கப்பட்டன.

---

* இதுவே இஸ்லாத்தின் 2-ஆவது மஸ்ஜித'ாகும். இதன் தெற்கு வடக்கு நீளம் 54 முழ முள்ளதாகவும், கிழக்கு மேற்கு அகலம் 63 முழமுள்ளதாகவும் ஆதியில் அமைந்திருந்தன. ஆனால், ஹிஜ்ரீ 7-இல் (பிறகு 3-ஆவது க'லீ'பாவாய் விளங்கிவந்த) 'ஹ'ஜ்ரத் உ':த்மான் அவர்கள், இம் மஸ்ஜிதி'ன் சுற்றுப்புறத்துள்ள வேறுசில நிலங்களை 10,000 திர்ஹத்திற்கு வாங்கி, நபி பெருமானிடம் ஒப்புக் கொடுத்தார்கள். இதன் பிற்கால அபிவிருத்தி அதற் குரிய இடத்திலே விவரமாகக் கூறப்படும்.— மிர்'ஜா அபு'ல் ப'ஜ்ல்.

இதற்குள்ளே மாதம் ஏழாகிவிட்ட படியால், ரஸூல் நாயகமவர்கள் ஸைஜதி'டம் 500 திர்ஹம் பணங் கொடுத்தனுப்பி, இரண்டு ஒட்டகங்களுடன் சென்று தங்களிரு பிராட்டிமாரையும் மக்காவிலிருந்து அழைத்து வருமாறு கட்டளையிட் டனுப்பினுர்கள். அவருடன் அபூ'ப'க்ரின் (ரலி') புத்திரரான அ'ப்'து'ல்லாவும் துணைக் கனுப்பப்பட்டார். அதுசமயம் 'ஹ'ஜ்ரத் உ':த்மானும் (ரலி') அவ்வருடைய மனைவியான ருகையாவும் மக்கத்திலில்லாது 'ஹப'ஷாவிலே தங்கியிருந்தமையான், அவ்விருவரும் மதீ'னுவிற்கு வரவேண்டிய அத்தியாவசியம் நேரிட வில்லை. ஆனுல், நபிகள் நாதரின் மற்ரெருரு குமாரியான ஸை'ஜனபை', அவருடைய கணவர் அபு'ல் ஆ'ஸ் என்பவர் இஸ்லாத்தின் பரமவிரோதியா யிருந்துவந்தமையான், மதீ'னுவிற்கு அனுப்பிவைக்கச் சம்மதியாததால், அவரது ஹிஜ்ரத்தும் அது போழ்து நடைபெறவில்லை. ஆதலின், மக்காவுக்குச் சென்ற ஸை'ஜதெ'ன்பார் 'பா(த்)திம(த்)து'ஜ் ஜெ'ஜாஹ்ராவையும், ஸெளதா அம்மாளையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டார்; பீ'பீ' ஆ'யிஷா(ரலி') அவர்களையும், ஆ'யிஷாவின் தாயாரும் 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ரின் மனைவியுமான ஸை'ஜனபை'யும் ஆ'யிஷா அவர்களின் சோதரரான அ'ப்'து'ல்லாவே அழைத்துக்கொண்டு வந்து சேர்ந்தார்.

இவ்வாறு நபிகள் திலகத்தின் குடும்ப முழுதும் மதீ'னுவிற்கு வந்து, அவர்களுக்குரிய ஹுஜ்ராக்களில் தங்கிவிட்டார்கள். அந்நகரி விருந்துவந்த ஸஅ'தி'ப்னு உ'ப'ாத'ா, ஸஅ'தி'ப்'னு முஆ'':த், அ'ம்மாரா பி'ன் ஜ'ஹ்ம், அபூ'ஐயூப்' முதலிய பிரமுகர்கள் ரஸூலுல்லாவின் குடும்பத்தினருக்கு வேண்டிய அன்னபானுதிகளை எப்பொழுதுமே அனுப்பி வருவார்கள். அபூ'ஐயூப்' அன்சாரீ அவர்கள் எப்பொழுதும் பால் அனுப்பி வருவார்கள். ஸஅ'தி'ப்'னு உ'ப'ாத'ா அவர்கள் எப்பொழுதும் இராக்காலங்களில் நெய், பால், ஸாலன் (ஆணம்) ஆகியவற்றுள் ஒன்றை அவசியமாகப் பெரிய பாத்திரத்திலே அனுப்பிவைப்பார். இவ்வாறு நபிகள் திலகத்தின் குடும்பத்தினர் வாழ்ந்துவரும் வறுமை நிலைமையை நோக்கி அனஸ் (ரலி') அவர்களின் தாயார் தமக்குள்ள சொத்து முழுதையும் ரஸூலுல்லா அவர்களிடம் சம்மானமாகக் கொடுத்துவிட்டார். ஆனுல், நபிகள் நாதர் தங்களுடைய வழக்கத்திற் கேற்ப, அப் பொருள்க ளனைத்தையும் தாங்கள் அவதரித்த போது தங்களுக்குப் பால் கொடுத்த போஷகத்தாயாகிய உம்மு ஐ'மனென்னும் அடிமை யம்மாளுக்குத் தானமாகக் கொடுத்துவிட்டார்கள். "தன்னுயிரைப் போல மன்னுயிரையும் காப்பாற்ற வேண்டு" மென்று ஏனையோருக்கெல்லாம் இதோபதேசம் புரியும் எம்பெருமானுர் (சல்) அவர்கள் தங்கள் வாழ்க்கையில் 'தன்னுயிரைப் பார்க்கினும் மன்னுயிரையே பெரிதெனு' மதித்து வந்தார்கள். "தனக்கு மிஞ்சித்தான் தர்மம்" என்னும் நியதியைக் கடந்தே, "தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்" என்னும் தர்மத்தைக் கடைப்பிடித் தொழுகி நின்ருர்கள். என்னெனின்,

அந்த அல்லா(ஹ்)வின் திருத் தூதரவர்கள் மற்றெல்லாரைக் காட்டினும் எல்லைகடந்து முந்ம இன்னு என்னும் முடிவான விசிராந்தி ஸ்தலத்திலே அதிகம் உயர்ந்து நின்றூர்கள்.

> ***ஏ நபீ! "ஏனைய அரசர்களுக் கெல்லாம் முன்னதாகத் தாங்கள் விஜயம் செய்திருக்கிறீர்கள்; எல்லோருக்கும் இறுதியாய் விஜயம் செய்தபோதிலும், தாங்களே முதன்மையாவீர்கள். ரஸூல்களுக் கெல்லாம் தீர்க்கமானவரே! இறைவனோடு தங்களுக்குள்ள நெருங்கிய உறவை நாங்கள் அறிவோம். வெகுதூரத்திலிருந்து வந்தீர்கள்; ஆதலால்தான் தாமதித்து வந்தீர்கள்."***

இத் தாரணியிலுள்ள ஒருசில முஸ்லிம்களே இந்தக் கவியின் அந்தரங்கத் தாத்பரியம் முழுதையும் அறிந்துகொள்ளும் ஆற்றல் பெற்றிருக்கின்றூர்கள். நபிகள் திலகம் மக்காவைத் துறந்து மதீனுவுக்கு விஜயம் செய்துவிட்டதன் பின்னுல் அவர்களுடைய மாபெருந் தோற்றம் தேச சரித்திரங்களில் காணப்படும் மற்றெல்லாப் பெரியார்களைக் காட்டினும் மகா மகா உன்னதம் வகித்த உயரிய நிலைமையையே அவர்களுக்கு அளித்துவிட்டதென்பதில் சற்றும் சந்தேகமென்பதில்லை. அது முதற்கொண்டு அவர்களுடைய உயிர் வாழ்க்கையின் ஒவ்வோர் அம்சமும் அணுத்துணையும் விடப்படாது சரித்திரபூர்வமாக வரைந்து வைக்கப்பட்டிருக்கின்றது. நம் மகானுபாவர் அன்னையும் பிதாவுமற்ற ஓர் அகதிக் குழந்தையாக மக்காவின் தெருவிலே உலவித் திரிந்ததை இதற்குமுன் நாம் பார்த்திருக்கின்றோம். தந்தை இன்னுரென்பதையே அச்சிறுவர் அறிந்துகொள்ளும் பாக்கியத்தைப் பெற்றில்லை; தாயின் பேரன்பு இத்தன்மைத் தென்பதையும் அன்னவர் அதிகநாள் மட்டும் அனுபவித்துப் பார்த்ததில்லை. வீண் காரியங்களில் சற்றும் தலையிடாது அதிக கம்பீரமான வாழ்க்கையுடனே யௌவனப் பருவத்தைக் கடந்து, கௌமார தசையை அடைந்ததையும் நாம் கண்டிருக்கிறோம். அவர்கள் ஏழை எளியோர்களின் துன்பத்துக்கும் துயரத்துக்கும் சதா செவிகொடுத்து வருவார்கள். அடியார்க் கெளியவனும் அநாத ரக்ஷகனுமாகிய அல்லா(ஹ்)வின் அருமைத் திருத்தூதராய் அவதரித்திருந்த அப் பெரியார் எப்பொழுதுமே இவ்வுலகுக் கெல்லாம் ஒரு கருணைமூர்த்தியாகவே விளங்கி வந்தார்கள். அடியார்களை முன்னேற்றுவதே அல்லா(ஹ்)வுக்குவந்த உத்தமோத்தம உன்னத கைங்கரியமெனக் கருதியிருந்தார்கள். அவர்கள் நடந்துகொண்டு வந்த ஒழுக்கத்தின் விழுப்பத்தையும் உண்மையான நேரிய நாணயத்தையும் கண்ட அம்மக்கா வாசிக ளெல்லாரும், "அதோ போகின்றூர் அல் அமீன்!" என்று பேராச்சர்யத்துடனே புகழ்ந்து கூறுவார்கள். என்ன பெருமை! என்ன மகிமை!!

நட்பு விஷயத்திலும், வாழ்க்கை நடாத்திவரும் நேரிதான ஒழுங்கு விஷயத்திலும் எல்லாரின் நல்லபிப்பிராயத்தையும் நபிபெருமான் பெற்றுக் கொண்டார்கள். அவர்களுடைய இகலோக வாழ்க்கையென்பது சாதாரண சௌலப்பிய வாழ்க்கையாகவே சதாசர்வ காலமும் இருந்துவந்த போதினும், அவர்களுடைய ஆன்மாவானது எப்பொழுதுமே இறைவனுடைய இரகசியங்களைப் பற்றியே இடைவிடாது சிந்தித்துக்கொண் டிருந்ததென்பதில் அணுத்துணையும் ஐயப்பாடில்லை. இவ்வவனியில் மனிதனைச் சிருஷ்டித்திருக்கும் இறைவனது இரகசிய நோக்கந்தான் யாதாயிருத்தல் கூடும்? இவன் இங்கு வந்ததன் பின்னே செய்யவேண்டிய முக்கியக் கடமையும் யாதாயிருத்தல் கூடும்? இவன் இக் குவலயத்தின்கண் இழைத்துவரும் காரியங்களுக் கெல்லாம் இவனே உத்தரவாதி யாகாமல் எவ்வாறு தப்பியோடிவிடுதல் சாலும்? என்பன போன்ற எண்ணங்களை யெல்லாம் தமதுள்ளத்தின்கண்ணே கொண்டு அல்லும்பகலும் அனவரதமும் அத்தகைய மனித வர்க்கத்தினரை யெல்லாம் எவ்வாறு முன்னுக்குக் கொண்டுவருதலென்னும் கவலையி னுள்ளேயே எப்பொழுதும் மூழ்கிப்போ யிருப்பார்கள். ஆதலினுல்தான், இவ்வுலக மன்பதை முழுதையும் சீர்திருத்த நாட்டங் கொண்டு, இவ்வுலகினில் காணப்படும் துக்கத்தையும் துயரத்தையு மெல்லாம் ஆண்டவ னருளால் ஆராய்ந் தறிந்துவந்தார்கள்.

இம்மானிட முன்னேற்றம் போன்ற மாபெருங் காரியத்தில் இறங்கியதன் பின்னுல் நம் மகானுபாவர் ஒருசிறிதும் முன்வைத்த காலைப் பின்வைக்கத் துணிந்தார்க ளில்லை; ஒரு முறையேனும் தங்கள் முதுகின்புறத்தைத் திரும்பிப்பார்க்கத் துணிவதில்லை. இப் பூவுலகின்கண் காணப்படும் எத்துணைக் கடுமையான இன்னல்களும் இடையூறுகளும் ஒரு விநாடியேனும் இவர்களுடைய உள்ளத்தைத் துளக்கிவிடத் துணிந்த தில்லை. தாங்கள் ஆண்டவன்மீது வைத்திருந்த அசைக்கமுடியா அபிமானத்தினுல் தங்களுடைய இறுதி நோக்கத்தின் மீதே எப்பொழுதும் கண்ணுங் கருத்துமாக இருந்து வந்தார்கள். இம் மகானுபாவரின் வாழ்க்கையின் பரிசுத்தமும், ஒழுக்கத்தின் உயர்வும், ஆண்டவன் கருணைமீது இவர்களுக் கிருந்து வந்த அழிக்கமுடியா உறுதியுமே அடிக்கடி பற்பல சிஷ்யர்களையும் இவர்களுடைய கோஷ்டியினுள்ளே கொண்டுவந்து சேர்த்துக்கொண் டிருந்தன. தங்கள் உயிர்க்கிறுதி வருவதே யாயினும், தாங்கள் அல்லா(ஹ்)வின் மீது கொண்டுள்ள நன்னம்பிக்கையைச் சற்றும் ஊசலாடும்படி விட்டுவிடுவது இவர்களுக்கு வழக்கமில்லை.

இப்படிப்பட்ட இணையற்ற மகானுபாவர் இனி மக்களின் ஸ்தூல தேகத்துக்கோர் அரசராகவும், ஸூக்ஷ்ம தேகத்துக்கோர் ஆசிரியராகவும், யுத்தகளத்துக் கொரு தளபதியாகவும், நியாயாலயத்துக் கொரு நீதிபதியாகவும், அநாத மக்களின் ஆதரிப்பாகவும் இருந்துகொண்டே, எவ்வாறு எல்லாரினும் மிகவு மெளிய வாழ்க்கையை நடாத்திவந்தார்க ளென்பதை

நாம் நன்குணர்ந்துகொள்ளக் கடவோமாக. இனி இப்பெருமானின் சரித்திர முழுதும் இஸ்லாத்தின் குடியரசுக்குரிய பொதுச் சரிதையுடனேயே அதிகம் மிசிரமாய்க் கலந்து விட்டது. அவ்வாறுய குடியரசின் இணையற்ற தலைவராய் விளங்கி வந்தும், தங்களுடைய கிழிந்த ஆடைக்குத் தங்கள் திருக் கரத்தைக் கொண்டே அப்புப் போட்டுத் தைத்துக்கொள்வார்கள் ; தங்கள் பாதரக்ஷைகளைத் தாங்களே பழுதுபார்த்துக் கொள்வார்கள். தங்கள் வீடு வாசல்களை யெல்லாம் தாங்களே பெருக்கிச் சுத்தஞ் செய்வார்கள். தங்கள் ஆடு மாடு ஒட்டகங்களி னின்றுந் தாங்களே பால் கறப்பார்கள். இத் தாரணியின்கண் உள்ள மன்னாதி மன்னர்களுக் கெல்லாம் மகா மேன்மை வாய்ந்த மன்னர் பிரானுக்குரிய மாபெரும் அந்தஸ்தை வகித்திருந்தும், பல நாட் கணக்காக ஆகாரமின்றியே புசியாதிருப்பார்கள் ; சிற்சில சமயங்களில் தங்களால் பசிதாளாது தளர்வுற்றுப் போய்விடா திருக்கும்பொருட்டுத் தங்கள் திருஉதரத்தின் கண்ணே கற்களை வைத்துக் கட்டிக்கொள்வார்கள். தாங்கள் வசிக்கும் அறைகளுக்கு இராக்காலங்களில் விளக்கேற்ற வசதி யில்லாமற் போயினமையான், ஆங் கெப்பொழுதும் தீபமே கொளுத்தப் பட்ட தில்லை. ஆனால், அவர்கள் கட்டிய பள்ளிவாயிலுக் குள்ளேமட்டும் ஆரம்பத்திலே பேரீச்ச விறய்களை எரித்து வெளிச்ச முண்டாக்கினார்கள் ; பிறகுதான் அதற்குள்ளே எண்ணெயும் விளக்கும் நுழைக்கப்பட்டன. இத் தாரணியின்கண் உண்மைச் சன்னியாசிகளாக உள்ளவர்களே உலகாசையை வெறுக்கமுடியா திருந்துவருங்கால், மன்னாதி மன்னர்களுக் கெல்லாம் மாபெரிய மன்னர் பெருமா னொருவர், இரு லோகத்திற்கும் வள்ளல் நாயகமாய் விளங்கிவந்தும், ஓர் உண்மைச் சன்னியாசியின் ஏழ்மை வாழ்க்கையை உண்மையிலேயே மேற்போட்டுக் கொண்டிருந்த லென்பது இங்குக் காணப்படும் மற்றெந்த மனித 'மகாத்மா'வினாலும் செய்துகாட்ட முடியாத ஓர் அரிய சம்பவமே யாகுமன்றோ ?

"மு'ஹம்மத்' (சல்) தாம் இப்படிப்பட்டவ ரென்பதை மனிதர்களுக் கெல்லாம நன்கெடுத்து நிரூபித்து விட்டார்கள் ; தங்கள் குணாதியசத்தின் மேன்மையும், தங்கள் நட்பின் உயர்வும், தங்கள் சகிப்புத் தன்மையின் உச்சமும், இவற்றிற் கெல்லாம் மேலாகத் தாங்கள் உபதேசிக்க வந்த உண்மையின் மீது தாங்கள் வைத்திருந்த தைரியமும், அக்கினி மயமான உத்வேகமும் ஆகிய இவைகளே அப்பெரியார் இன்னாரினையா ரென்பதை நன்ருக நிலைநிறுத்திவிட்டன ; அம் மாதிரியே, அப் பெரியாருக்குக் கீழ்ப் படிந்து நடவாதிருத்தலும், அன்னவர்மீது விசுவாசம் கொள்ளாதிருத்தலும் முடியாத காரியங்களாகக் காணப்பட்டு வந்தன. இனிமேல் ஒருசிறிது காலதாமதந்தான் பாக்கியா யிருந்துவந்தது. மதீனாவாசிகள் நம்மகானுபா வரான மு'ஹம்மதி'ன் (சல்) உண்மையானதன்மை வெளியாக வெளியாக, அவர்களெல்லாரும் தங்கள் உடலையும், பொருளையும், ஆவியையும் அவருக் காகத் தத்தம்செய்யப் பின்வாங்க மாட்டார்கள் ; இன்னம், அந்த அரபநாடு

முழுதும் ஏகநாயனுடைய ரஸூலின் பாதத்தடியிலே வந்து வீழுமட்டும் அவர்களுடைய உற்சாகமானது தீப்பற்றி யெரிந்து, எல்லா வர்க்கத்தின ரிடத்தும் பரவப்போகின்றது. தானே அப்புப்போட்ட தனக்குச் சொந்த மான கந்தல் துணியை அணிந்திருந்த இம் மனிதனைப்போலத் தன்னுடைய குருமுடிக் கிரீடம் தரித்திருந்த எந்த ஏகசக்ராதிபதியுங்கூடக் கீழ்ப்படியப் பட்ட தில்லை. இப்பெரியார் மனிதர்களை உற்சாகப் படுத்தக்கூடிய சாமர்த் தியத்தை அதிகம் பெற்றிருந்தார்; அவர்களை நல்வழியிலே உய்க்கும் பொருட்டே மட்டும் உற்சாகம் செய்துவிடக்கூடிய அத்துணைப் பெருந் தன்மை வாய்ந்தவராகவும் இருந்துவந்தார்."

முன்னம், மஸ்ஜிதெ' நப'வீயின் ஒரு வெளிமூலையில் கூரைத்தாழ்வார மொன்று வேயப்பட்டிருந்த தென்று கூறியிருப்பது நுங்களுக்கு ஞாபக மிருக்கலாம்; அந்த இடத்திற்கு "ஸு'ப்'பா" என்னும் நாமம் இடப்பட் டிருந்த தென்பதும் நுங்களுக்குத் தெரியும். "ஸு'ப்'பா" என்பதன் ஒரு பொருள் 'சார்ப்புத் தாழ்வாரம்' என்பதாகும்; அதன் மற்றொரு பொருள் 'சாதுக்க' ளென்றும் கொள்ளப்படும். எனவே, அந்தச் சார்ப்பிட்ட தாழ் வாரத்தில் வசித்துவந்த நபிகள் பெருமானின் தோழர்களான சாதுக்களுக்கு "அஸ்'ஹாபு'ஸ் ஸு'ப்'பா" என்னும் அழகிய திருநாமம் வழங்கலாயிற்று. ச'ஹாப'ாக்களுள் பெரும்பான்மையோர் அம் மதீனாவின்கண் வர்த்தகத் திலும் வேறுபல 'ஜோலி'களிலும் ஈடுபட்டிருந்தார்கள். ஆனால், அஸ்'ஹா பு'ஸ் ஸு'ப்'பாக்கள் நபிகள்நாயக மவர்களால் ஏவப்பட்ட பணிவிடை களைப் புரியக்கூடிய திருத்தொண்டர் களாகவே விளங்கி வந்தார்கள். அவர்களனைவரும் அந்தக் கூரைவேயப்பட்ட தாழ்வாரத்திலேயே வசித்து வந்தார்கள்; அவர்களுக்கு மனைவிகளு மில்லை; மக்களு மில்லை. அந்தத் திருத் தொண்டர்களுள் எவரேனும் மணமுடித்துக் கொள்வராயின், அக்கணமே அன்னவர் அந்த ஸு'ப்'பாவை விட்டு இல்லறம் நடாத்த வெளியிலே வந்துவிடுதல் வேண்டும். அந்தத் திருத் தொண்டர் திருக் கூட்டத்தில் ஒருசிறு பெண்ணும் இருந்துவந்தாள். அந்தச் சிறுமி பகல் முழுதும் விறகு சுமந்து வந்து, அதனை அந் நகரத்தில் விற்றுவிட்டு, அவ்வாறு கிடைக்கும் ஒருசிறு தொகையைக் கொண்டு மற்றெல்லா ஆண் தொண்டர்களுக்கும் தன்னா லியன்றவரை அன்னபானாதிகளைச் சித்தஞ் செய்து கொடுப்பது வழக்கமாம். அந்தத் திருக் கூட்டத்தினர் சதா சர்வ காலமும் வேத பாராயணமும், நாயகத் திருவாய்மொழிப் பாடமும் செய்து கொண் டிருப்பார்கள். அப்படிப்பட்டவர்களுள் ஒருவராகவே நம் பெயர் போன ச'ஹாபி' அபூ' ஹுரைராவும்—(பூனையின் தந்தையும்*) சேர்ந் திருந்தார்.

* இவர் எப்பொழுதுமே பூனைக்குட்டியை வைத்து வளர்த்து வந்தமையால், அப் பூனை பெயர்கொண்டு அழைக்கப்படலாயினர்.

ஆனால், அவர்களுள் எவருக்கும் ஏககாலத்தில் இரண்டு ஆடைகள் இருந்ததில்லை; எப்பொழுதுமே ஒரே வஸ்திரத்துடனே இருந்துவந்த பலர் அதைத் தங்கள் கழுத்திலிருந்து முழந்தாள் மறையக் கட்டித் தொங்கவிட்டுக்கொண் டிருப்பார்கள். அவர்களுடைய ஆகாரமோ, ஆடையைப் பார்க்கினும் அதிக தாரித்திரியம் மிக்கதாகவே காணப்பட்டுவந்தது. சிற்சில சமயங்களில் சில அன்சார்கள் பேரீச்சங் குலைகளைக் கொண்டுவந்து அந்தத் தாழ்வாரத்தின் சார்பில் சொருகி விடுவார்கள்; அவற்றினின்று பேரீச்சம் பழங்கள் கனிந்து வீழ வீழ, அவற்றை யெடுத்துப் புசித்தே அந்தத் திருத்தொண்டர் குழாத்தினர் ஒருவாறு காலங்கழித்து வருவார்கள். ஆனால், வேறுசில சமயங்களில் இரண்டிரண்டு தினங்கள்வரை ஒன்றும் தின்னக் கிடைக்காது வெறுமனே பட்டினி கிடப்பார்கள். ஆதலின், சிற்சில வேளைகளில் நாயகத்தின் பின்னே நின்று தொழுது கொள்ளும் போதே பசிப்பிணி தாளாது, அத்திருக் கூட்டத்தினருள் பலர் சோர்ந்து மயங்கி வீழ்ந்துவிடுவார்கள். இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் வெளியிலிருந்து எவரேனும் மஸ்ஜிதுக்குள் வந்து நுழைவராயின், இந்த அஸ்''ஹாப்'ஸ் ஸுஃ''ப்'பாக்கள் பித்தம் தலைக்கேறிய பைத்தியக்காரர்களென்றே எண்ணுவார்கள் — (திர்மிதீ).

வேறு சில சமயங்களில் நாயகமவர்களுக்கு அனுப்பப்பட்டு வந்த இன்னும் சாப்பாட்டுச் சாமான்களை யெல்லாம் அந்த அஸ்''ஹாபு'ஸ் ஸுஃ''ப்'பாக்களுக்கே அனுப்பிவிட்டுத் தாங்கள் பட்டினியா யிருந்து விடுவார்கள். எப்பொழு தேனும் எவரேனும் நபிகள் பெருமானுக்கு விருந்து சொல்வா ராயின், அவர்களுடனே அந்தத் திருத் தொண்டர்களனைவரும் அவ்விருந்துக்கு அழைக்கப்படுவது வழக்கம். பல சமயங்களில் இராக் காலங்களில் அத்தகைய திருக்கூட்டத்தினர் அனைவரையும் நபிகள் திலகம்(சல்) மதீனாவின்கண் ணுள்ள அன்சார்களுக்குள் விகிதாசாரப்படி பங்கிட் டனுப்புவார்கள். அவர்களுள் செல்வராக விளங்கிய ஸஅ'தி'ப்'னு உ'ப்'ாத'ா(ரலி') என்னும் தயாள குணசீலர் ஒவ்வோ ரிரவிலும் எண்பதெண்பது திருத் தொண்டர்களைத் தம்வீட்டுக்கு மட்டும் அழைத்துச் செல்வார்.*

இவர்கள் விஷயத்தில் நபிகள்பெருமானார் எத்துணைப் பெரிய கவலை கொண் டிருந்தார்களென்பதை இதன் கீழ்க் காணும் சம்பவத்திலிருந்து ஒருவாறு உணர்ந்து கொள்ளுதல் சாலுமென்று கண்டு, அதனை ஈண்டு யாம் வரைகின்றோம்: எப்பொழுதும் மாவரைப்பதற் காகவே தங்கள் திருக்கரத்தைக் கொண்டே கல்லியந்திரத்தைச் சதா சுழற்றிக்கொண் டிருந்ததனால் தங்கள் கையில் காய்ப்புத் தழும்பு ஏற்பட்டு விட்டதென்று

---

* "இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு,"— என்றார் வள்ளுவனாரும்.

கூறித் தங்களுடைய பிரிய தந்தையான ரஸூலுல்லா அவர்களிடம் அவர்களுடைய அருமைச் சிறுமியான ‘பா(த்)திம(த்)து‘ஜ் ஜெ‘ஜாஹ்ரா(ரலி’) அவர்கள் ஓர் அடிமைப் பெண்ணை அமர்த்திக் கொடுத்துத் தங்களுக்கு மாவரைக்க உதவி புரியுமாறு விஞ்ஞாபனம் செய்து கொண்டார்கள். அதனைச் செவியேற்ற நபிகள் திலகமவர்கள், “என் அருமைக் குழந்தாய்! நம் அஸ்’‘ஹாபு’ஸ்’ ஸுஃ‘ப்‘பாக்க ளெல்லாரும் உண்ண உணவிற்கே ஒன்றும் கிடைக்காது வீண்பட்டினி கிடந்து வருந்துங்காலை உனக்கு மாவரைத்துக் கொடுப்பதற்கும் ஓர் அடிமைப்பெண் வேண்டுமா? அவர் களின் பரிதாபகரமான நிலைமையைக் கவனிக்குங்கால், இது செய்வது என்னுல் முடியா தென்றே சொல்லுவேன்,” என்று விடை கொடுத்து முடித்து விட்டார்கள்.

இரா முழுதும் அந்த அஸ்’‘ஹாபு’ஸ்’ ஸுஃ‘ப்‘பாக்க ளெல்லாரும் ஆண்டவனுக்கு வணக்கம் புரிவதிலும், :குர்ஆன் ஷரீஃ‘ப ஓதுவதிலும், அவர்களுக் கென்றே நியமிக்கப்பட் டிருந்த :குர்ஆன் போதனுசிரியரிடம் சென்றமர்ந்து இன்னமும் அதிகமாக அவ்வேதத்தைக் கற்றுக் கொள் வதிலுமே காலங் கழித்து வந்தார்கள். இதனுல் அவர்களுக் குள்ளே பெரும்பெரும் “:காரீகளும்”— (:குர்ஆன் ஓதுவதில் கைதேர்ந்தவர்கள்) பலர் ஆங்கு உற்பத்தியாய் விட்டார்கள். இத் தொண்டர்க ளெல்லாரும் இச்சா சேவகர்களாக ஆங்காங்கு வெளியே சென்று இஷா‘அ’த்துல் இஸ்லாம்— (இஸ்லாமார்க்க பிரசாரம்) செய்து வருவார்கள். இப்படிப் பட்ட அஸ்’‘ஹாபு’ஸ்’ ஸுஃ‘ப்‘பாக்களின் தொகை அடிக்கடி சுருங்கியும் விரிந்தும் வந்துகொண்டே யிருக்கும். ஒரு முறை அவர்களின் எண்ணிக்கை நானூறு வரைகூட அதிகரித்து நின்றதென்று சரித்திராசிரியர்கள் சான்று கூறி வரைந்து வைத்திருக்கின்றுர்கள்.

## அதிகாரம் — 19

### மதீ’னுவில் சகோதரத்துவம்

**"இன்னம், எவர்கள் ஈமான் கொண்டும், (தங்கள் இல்லங்களைத் துறந்து) வெளிப் புறப்பட்டும், அல்லா(ஹ்) வின் பாதையிலே கடும் போராட்டம் புரிந்து மிருந்தார் களோ அவர்களும், எவர்கள் (திருநபியையும் அம்முஸ்லிம் களையும்) ஆதரித்து உதவியும் புரிந்தார்களோ அவர்களும் — இவர்கள்தாம் உண்மையாகவே மூமினுனவர்கள்; அன்ன வர்களுக்கு மன்னிப்பும், கௌரமான உண்டியும் உண்டு."— (8 : 74)**

**ம**க்காவி லிருந்துவந்தபோது, முஸ்லிம்கள் தங்களுடைய தெய்வ வணக் கத்தைக் கூட்டங்கூடிப் பகிரங்கமாக நின்று தொழுதுகொள்ள முடியாத வர்களா யிருந்துவந்தார்கள். ஆனால், இதுபோழ்து புதிதாகக் குடிபுகுந் திருக்கும் மதீ’னுவின்கண் அத்தகைய சங்கடமொன்றும் இருப்பதற்குக் காரணம் புலப்படாமையான், இந் நகரத்தில் இனிமேல் எல்லோரும் ஏகோபித்து— ஜமாஅ’த்தாக நின்று— வணக்கம் புரிதற்குரிய அத்தியாவ சியம் அதிகம் காணப்படாமற் போகவில்லை. இதற் கறிகுறியாகவே, நபிகள் பிரான்(சல்) அவர்கள் :குபா’யைவிட்டுப் புறப்பட்டு மதீ’னுவை நோக்கி வந்துகொண் டிருந்தபொழுது, இடைவழியில் எல்லாரையும் சேர்த்து வைத்து ஜுமுஆ’ப் பிரசங்கமும், ஜுமுஆ’த் தொழுகையும் நிறைவேற்றி வைத்தார்கள். எனவே, இனி எல்லா முஸ்லிம்களும் ஏகோபித்துத் தொழுது கொள்ளாது, அவரவரும் அவரவருக்கு விருப்ப மான வேளையிலே வந்து தொழுதுகொண்டு போவதில் ஒன்றும் ஒற்றுமைக் குரிய அம்சம் காணப்பட வில்லையெனக் கண்டு, நபிகள்திலகம் (சல்) அம் முஸ்லிம்களுக்குள் அத் தொழுகையிலும் ஒருவகை ஒற்றுமையை உண்டு பண்ண நாடினார்கள். என்னெனின், இஸ்லாத்தின் மூலக் கொள்கையே ஏகேசுவரவாத மாகவும், ஏக சகோதரத்துவ சம்பிரதாய மாகவுமே அமைந்து கிடப்பதனுல், இதற்குரிய தெய்வ வணக்கத்திலும் அப்படிப் பட்ட விசுவ சகோதரத்துவம் காணப்பட வேண்டுவது ஓர் அத்தியாவசிய மாகவே உணரப்பட்டுவந்தது.

ஆகலின், ஒரு சிலரை அனுப்பி ஒவ்வொரு வேளைத் தொழுகைக்கும் எல்லா முஸ்லிம்களையும் அழைத்து வருமாறு கட்டளையிடுவது உசிதமா யிருக்குமோ வென்று நபிபெருமானுர் (சல்) முதன்முதலில் ஆலோசனை

செய்து பார்த்தார்கள். ஆயின், தங்கள் தோழர்களையும் தருவித்து' அவர்களோடு கலந் தாலோசிப்பதே சௌகரியமா யிருக்குமெனக் கண்டு, அவர்களையும் அவ்வாறே அழைத்தனுப்பிக் கேட்டுப் பார்த்தார்கள். ஒவ்வொரு நேரத்துத் தொழுகைக்கும் ஆட்களை யனுப்பியே ஒவ்வொரு வரையும் அழைத்துவரச் சொல்லவேண்டு மென்பது அதிகஅசௌகரியமாக இருக்குமெனக் கொண்டு, அதற்குரிய யோசனையைக் கைவிட்டு, வேறு பல யோசனைகளும் செய்யத் தலைப்பட்டார்கள். ஆங்குக் குழுமியிருந்தவர் களுள் ஒருவர் ஓர் உயரமான இடத்தில் துவஜ மொன்றைப் பறக்கவிட்டு ஒவ்வொரு தொழுகை நேரத்தின் அடையாளத்தையும் அறிவிக்கலா மென்று ஆலோசனை கூறினர். ஆனால், தூரத்திலுள்ள எல்லா முஸ்லிம் களுக்கும் அத்தகைய கொடியால் பயனொன்றும் விளையமாட்டா தெனக் கண்டு, அந்த ஆலோசனையும் அங்கீகரிக்கப் படவில்லை. ஒருசிலர் தொழுகை நேரத்தில் மணியடிக்கலா மென்றும், வேறுசிலர் ஊதுகுழல் நாதஞ் செய்யலா மென்றும், மற்றுஞ் சிலர் அடையாளத்திற்காக அக்கினியைக் கொளுத்தலா மென்றும் பற்பல விதமான அபிப்பிராயங்களை யெல்லாம் தத்தமக்குத் தோற்றியவாறு கூறிவந்தார்கள். அவை யனைத்தும் கிறிஸ்த வர்க ளிடத்தும், யூதர்களிடத்தும், அக்கினியை வணங்கும் வேறுசில ஜாதியாரிடத்தும் காணப்பட்டு வந்தமையான், அவற்றை யெல்லாம் விடுத்து வேறு யோசனை செய்வதே சிறந்த முறையாகு மென்று நபிகள் பெருமான் தங்க ளபிப்பிராயத்தைத் தெரிவித்தார்கள். அது போழ்து உ'மர் (ரலி') அவர்கள் இதுபோழ்தும் எம்முஸ்லிம்க ளிடையே அனுஷ்டா னத்திலிருந்துவரும் இந்த அ'தானையே (ப்'ாங்கையே) சொல்லலா மென்று தங்களுடைய மேலான அபிப்பிராயத்தைக் கூறினுர்கள்.

அதன் விவரமாவது :— "அல்லாஹு அக்ப'ர்!" (ஆண்டவனே மகா பெரியவன்!) என்று நான்கு முறை கூறவேண்டும். "அஷ்ஹது' அன்லா இலாஹ இல்லல்லாஹு!" (வணக்கத்திற் குரியவன் அந்த ஆண்டவன் ஒருவனைத் தவிர்த்து வேறு யாரும் இல்லை யென்று யான் அறுதியிட்டு உறுதி கூறுகின்றேன்!) என்று இரண்டு முறையும், "அஷ்ஹது' அன்ன மு'ஹம்மத'ர் ரஸூலுல்லா(ஹ்)!" (மு'ஹம்மத்' நபியவர்கள் அந்த ஆண்டவனுடைய திருத்தூதரென்றும் யான் அறுதியிட்டு உறுதி கூறு கின்றேன்!) என்று இரண்டு முறையும், "ஹை'ஹய அ'லஸ்' ஸ'லாத்!" (தொழுகைக்கு வருவீர்களாக!) என்று இரண்டுமுறையும், "ஹை'ஹய அ'லல் 'பலா'ஹ்!" (வெற்றி பெற வருவீர்களாக!) என்று இரண்டு முறையும், மறுபடியும் "அல்லாஹு அக்ப'ர்!" என்று இரண்டு முறையும், "லா இலாஹ இல்லல்லாஹு!" (வணக்கத்திற் குரியவன் அந்த ஆண்டவனைத் தவிர்த்து வேறு ஒருவரு மில்லை!) என்று ஒரு முறையும் கூறியழைத்தல் வேண்டும். (மொத்தம் பதினைந்து கூப்பீடுகள்)

இவ்வாறு உ'மர் (ரலி') அவர்கள் தங்களுடைய (மனும்) உவமதரிசன மொன்றில் கண்டார்க ளென்றும், அவ்வாறே அ'ப்'து'ல்லா ஹிப்'னு ஜைதெ'ன்பவரும் தமது உவமதரிசனத்திலும் பார்த்தா ரென்றும் சரித்தி ராசிரியர்கள் எழுதி யிருக்கின்றூர்கள். ஆனாலும், இவ்வாறு உ'மரவர் களின் அபிப்பிராயத்தின்மீதே நபிகள் நாயகம் அவர்கள் இந்த அ'தானை நியமனம் செய்தார்க ளென்பதில் மட்டும் சற்றும் சந்தேகமென்ப தில்லை. இவ்விஷயம் இவ்வாறு நபிபெருமானால் தீர்மானிக்கப்பட்டவுடனே, அவர் கள் பி'லால்(ரலி') என்னும் 'ஹப'ஷீத் தோழரிடம் கூறி, மேற்கண்டவாறு பல கூப்பீடு கூவுமாறு கட்டளை யிட்டார்கள். அவ்வாறே அவரும் அந்த



ஐந்து வேளைத் தொழுகையின் முன்னும் ஐந்து முறை தமது இனிய உரத்த குரலால் ப'ாங்கு சொல்லிக் கூவியழைப்பது வழக்கமாய் விட்டது; அவ் வழக்கமே இன்றளவும் நம்முடைய மஸ்ஜித்'களிலும் அனுஷ்டிக்கப்பட்டு வருகின்ற தென்பதை நீங்க ளெல்லீரும் நேரில் பார்த்துக்கொண்டே வரு கின்றீர்கள். இந்த அ'தானி லுள்ள வாக்கியங்களின் அர்த்தபுஷ்டி நிரம்பிய கருத்துக்களை நீங்கள் கண்கூடாகக் காண்கின்றீர்கள். இஸ்லாத்தின் இனிய தத்துவங்களை எடுத்துக் கூற இதனினும் உயரிய பிரகடன மார்க்கம் வேறென்னவா யிருத்தல் கூடும்? இன்னம், சகோதர ஒற்றுமையின் பொருட்டு எல்லா மனிதர்களையும் தினம் ஐந்துமுறை ஏகோபித்துக் கூடு மாறு இவ்வழகிய வாக்கியங்களே கூவி யழைத்துக்கொண் டிருக்கின்றன. இக் கூப்பீட்டுச் சப்தத்தைக் கேட்டவுடனே அரசனும் ஆண்டியும், வலியா னும் எளியானும், முதலாளியும் தொழிலாளியும் ஆகிய அனைவரும் ஆண் டவனுடைய புள்ளியில் வந்து ஏகதெய்வ வணக்கத்திற்காகக் கூடிவிடுகிறூர்

கள்.* தத்தமக்குரிய வேறு பல வேலைகளை யெல்லாம் ப்'ாங்கின் சப்தம் கேட்டவுடனே விட்டுவிட்டு, ஓட்டோட்டமாக மஸ்ஜிதை' நோக்கி எல்லா முஸ்லிம்களும் விரைந்து செல்கின்ருர்கள். †இத்தகைய தெய்வ வழிபாட்டுக் கழைக்கும் உயரிய முறையை இத் தரணியின் கண்ணுள்ள வேறு எம்மதத் தினரும் மேற்கொண் டிருக்கவில்லை யென்பதையும் நீங்கள் கண்கூடாகக் கண்டுகொண்டுதான் இருக்கின்றீர்கள்.

["ப்'ாங் கென்னும் சடங்கு மாத்திரம் (இதுசமயம்) ப்'ாக்கியாய்த் தங்கி நிற்கின்றது. ஆனுல், பி'லாலின் ஆத்மசக்தியோ இல்லாமற் போய் விட்டது; தத்துவ சாஸ்திரம் இதுசமயம் இருக்கின்றது. எனினும், :க'ஜ் 'ஜாலீயின் உண்மைஞானம் இல்லாமற் போய்விட்டது; மஸ்ஜித்' (பள்ளி வாயில்)களெல்லாம் ஒப்பாரி யில்லங்களா யிருக்கின்றன. (இவற்றிலே) தொழுபவர்க ளில்லாமற் போய்விட்டனர்; அஃதாவது, (இது சமயம் மக்கள்பால்) 'ஹிஜா'ஜில் தோன்றிய நபிகள் (சல்) அவர்களுடைய சற்குணங்களில்லாமற் போய்விட்டன," என்பது ஒரு கவியின் கருத்து.‡]

இவ்வா றெல்லாம் இஸ்லாத்தின் தொழுகைக் கழைக்கும் ப்'ாங்கு முறையை ஒழுங்குசெய்து வைத்ததன்பின்பு, அடிக்கடி நபிகள் திலகம் தங்களுடைய மஸ்ஜிது'க்குள் நின்றுகொண்டும், ஆங்குள்ள பேரீச்சமரத் தூண்மீது சார்ந்து கொண்டும் இஸ்லாத்தின் ஒழுக்க வழக்கங்களைப் பற்றி யும், தானதர்மங்களின் மேன்மைகளைப் பற்றியும், சகோதர வாஞ்சையின் அன்னியோன்னியத்தைப் பற்றியும் அதிகம் வற்புறுத்திக் கூறிவருவார்கள். ஏகேசுவரக் கொள்கைக்குச் சற்றும் மாற்றமாக எந்த முஸ்லிமும் தமது செய்கையாலேனும், ஹிருதய எண்ணத்தாலேனும் செய்து காட்டவேனும் எண்ணிப் பார்க்கவேனும் கூடாதென்று மிகமிக விரிவாக வற்புறுத்தி வரு வார்கள். காமம், கொலை, களவு, வஞ்சகம், சூது, மதுபானம் முதலிய தகாத கிரியைகளால் மனிதசமூக சகோதரத்துவத்துக்கே கேடுண்டாகு மென்று எப்பொழுதும் அவற்றை விலக்கிவைக்கச் சொல்வார்கள். ஏக தெய்வக் கொள்கையும், ஏகசகோதரக் கட்டுப்பாடுமே இஸ்லாத்திற் குரிய இரு பெருந் தூண்க ளாதலின், இவ்விரண்டினையும் பலஹீனப் படுத்தற் குரிய எல்லாக் கெட்ட காரியங்களையும் தடுத்து, அவற்றைப் பலப்படுத்தற் குரிய எல்லா நல்ல காரியங்களையும் புரியும்படி ஏவிக்கொண் டிருப்பார்கள்.

---

* ப்'ாங்கு வந்த வரலாற்றை, ச'ஹீ'ஹ் பு'க'ாரீயில்— (எமது தமிழ்மொழி பெயர்ப்பில்) பரக்கக் காணலாம்.

† இத்தகைய ப்'ாங்கின் சப்தங் கேட்டு அவசரமாக இறங்கியோடிய போது கா'விடறி மாடிப்படியி லிருந்து உருண்டு வீழ்ந்ததனுலேதான் ஹுமாயூன் மன்னர் உயிர் துறந்தார்.

‡ நபிகள் பெருமானும் (சல்அ'ம்) இவ்வாறு அபிப்பிராயம் கொண்டிருந்ததேபோல் அனஸ்(ரலி') அறைந்துள்ளார்: "அவர்கள் (பள்ளிகளை நிருமிப்பதில்) ஒருவரோ டொருவர் போட்டி போடுவார்கள்; அப்பால் அதில் ஒருசிலரைத் தவிர்த்து அன்னவர்கள் அவற்றின் பக்கல் செல்லவு மாட்டார்கள்."— (பு'க'ாரீ)

ஏக சகோதரத்துவத்தின் கட்டுப்பாடு முற்றுப் பெறுதற்காகவே இம்மார்க் கத்தில் தான தர்மங்கள் நிலைநிறுத்தப்பட் டிருக்கின்றனவென்று அடிக்கடி நல்லுபதேசம் புரிந்துகொண் டிருப்பார்கள். இன்னம், ஏகேசுவரக் கொள்கையை இணையில்லா வண்ணம் இவ்வுலகின்கண் நிலைபெறுத்துவான் வேண்டியே நபிகள் பெருமானாரும் தங்களை ஆண்டவனுடைய ஓர் அடியவ ரென்றே அதிகம் வற்புறுத்திக் கூறி வந்தார்கள்; அவ்வாறே ஒழுகியும் காட்டினார்கள். இவ்வாறு அன்னவர்கள் செய்திராவிடின், இத் தாரணி யின்கண் ணுள்ள கிறிஸ்தவர்களும் ஏனை இந்துமதத்தவரும் தத்தம் மதா சாரியர்களைத் தெய்வமென்றும், தெய்வ குமாரனென்றும், தெய்வ அவதார மென்றும், தெய்வ அம்சமென்றும் கூறத் தலைப்பட்டு விட்டதேபோல், நம் பெருமானார்(சல்) அவர்களையும் பலர் செய்துவிட் டிருத்தல் சாலும். இத் துணைச் சர்வஜாக்கிரதையுடன் எம்பிரான் அவர்கள் இயம்பியும் நடந்து கொண்டு மிருந்தும், சில அறியாத மாக்கள், பௌத்தர்களென்றும், கிறிஸ் தவர்களென்றும் மூல புருஷர்களுடைய நாமங்களைச் சுட்டிக்காட்டி அழைத்துக்கொண் டிருப்பதேபோல், இஸ்லாமார்க்கத்தைக் கைக்கொண்ட வர்களை "முஹம்மதியர்க"ளென்று தவறாக அழைத்துக்கொண் டிருக் கின்றனர்.*

மதீனாவுக்கு நபிகள்திலகம் (சல்) விஜயம்செய்யுமுன் ஆங் கிருந்துவந்த ஔஸ், க'ஜ்ரஜ் என்னும் இருபெரும் வர்க்கத்தினரும் ஒருவரோடொருவர் மனஸ்தாபத்தால் ஒரு நூற்றாண்டுக்கு மேலாகவே சண்டையிட்டுக் கொண் டிருந்தார்க ளென்பது உங்களுக்கு முன்னமே தெரியும். ஆனால், அவ்விரு வர்க்கத்தாரும் நபிகள் நாயகத்தின் ஹிஜ்ரத்துக்குப் பின்னே மந்திரசக்தி யால் மாற்றப் பெற்றவரேபோலத் தமக்குள் ளிருந்துவந்த பண்டைய வேறு பாடுகளை யெல்லாம் அப்புறம் ஒதுக்கித் தள்ளிவிட்டுத் தம்மினத்துள்ளே சகோதரவாஞ்சை என்னும் பரஸ்பர அபிமானத்தை அவலம்பித்து, அதிகம் அபிவிருத்தி செய்துகொண்டு விட்டார்கள். அவர்கள் (அன்சார்கள்) தமக் குள்ளே ஒற்றுமைப்பட்டு வாழத் தலைப்பட்டதுடன் நில்லாது, மக்கத்தி லிருந்து விஜயஞ் செய்திருக்கும் முஹாஜிரீன்களையும் தங்கள் உடன்பிறந்த சகோதரர்களாகவே பாவித்து, அவர்களுக்கு வேண்டிய சகலவித உதவி களையும், உபசாரங்களையும், உபகாரங்களையும் செய்துவர முற்பட்டு விட் டார்கள். அந்த மக்கா வாசிகள் தங்களூரில் இருந்துவந்தபோது சகலவித மான சுகபோகங்களுடன் வாழ்ந்திருந்தும், அவர்க ளெல்லாரும் இறுதி யாகத் தங்கள் நகரத்தைவிட்டு ஒருவருக்கும் தெரியாமல் வெளியேறிவிட நேரிட்டபடியால், அவரவரும் தத்தமக்குரிய சொத்து சுதந்தரங்க ளனைத்

---

* இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டவர் "முஸ்லிம்" என்றும், இஸ்லாத்தில் ஈமான் (விசுவாசம்) கொண்டவர் "மூமின்" என்றும் அழைக்கப் பெறுவர். "முஹம்மதியர்", "முஹம்மதிய மதம்" என்பன தவறான பிரயோகங்கள்.

தையும் பின்னேவிட்டு, உடுத்திய உடையுடனேயே இஸ்லாத்தினிமித்தம் முன்னேறி வந்துவிட்டமையான், அந்த முஹாஜிரீன்களுக்கு மதீனாவின்கண் வேறெவ்வித ஆதரவும் இல்லாது போய்விட்டது. ஆயினும், அவர்க ளனைவரும் தங்கள் விடுதிகளுக்குள்ளே வந்து சொந்த சகோதரர்களேபோல் உண்டு உடுத்துச் சுகித்து வருவதில் அன்சார்கள் அளவுகடந்த அபிமானம் பாராட்டி வந்தார்கள். ஆனால், அந்த முஹாஜிரீன்கள் எல்லாரும் வேலையில்லாது வெறும் சோம்பேறிகளேபோல அந்நகரத்தி லிருந்து நாட்கடத்த விருப்பங் கொண்டனரில்லை. இதற்கோர் உபாயம் செய்யவேண்டுமென்று நபிகள்நாதரும்(சல்) பலகாலும் யோசனை செய்துவந்தார்கள். மக்கத்து மனிதர்கள் ஏதேனும் வேலைசெய்து ஜீவனம் செய்யலாமென்று யோசிக்கத் தொடங்கியக்கால், அந்நகரில் அவர்களுக்குப் போதிய வேலைகளும் அகப்படுவ தில்லை.

இவற்றினை யெல்லாம் உணர்ந்துகொண் டிருந்த நபிகள் பெருமானார் அப்பொழுது பத்துவயதையே அடைந்திருந்த அனஸ் பி'ன் மாலிக் என்பவருடைய தாராளமான பெரிய வீட்டினுள்ளே ஒருநாள் கூட்டம் கூட்டுவித்தார்கள். அதுசமயம் 45 முஹாஜிரீன்கள் விஜயம் செய்திருந்தார்கள்; அன்சார்களும் அதிகமாக அங்கு வந்திருந்தார்கள். அவர்களுக்குள்ளிருந்துவரும் அன்னியோன்னியமான சகோதரப் பான்மையை இன்னமும் மிகநன்குக உறுதிப்படுத்தி வைக்கும் நோக்கத்துடனே நபிகள் திலகம் அவர்க ளனைவரையும் நோக்கி, "அல்லா(ஹ்)வின் ஆணையால் நீங்களெல்லீரும் சகோதரர்களா யிருக்கின்றீர்கள்; உங்களுக்குள் ஒவ்வோர் அன்சாரும் ஒவ்வொரு முஹாஜிரை உடன்பிறந்த சகோதரராக ஏற்றுக்கொள்ளுதல் வேண்டும்," என்று கூறினார்கள். அதைக் கேட்டு, எல்லா அன்சார்களும் அக்கணமே அதற்கு ஓமென்று ஒப்பம் வைத்தார்கள். உடனே நபிகள் பெருமான் ஆங்கிருந்த ஒவ்வொரு முஹாஜிரையும் ஒவ்வோர் அன்சாரிடம் ஒப்புக்கொடுத்து விட்டார்கள்.

அவ்வாறு பிணைக்கப்பட்ட சகோதரர்களுள் முக்கியமான பன்னிருவரின் நாமங்களைமட்டும் ஈண்டு நாம் குறிப்பிடுகின்றோம்:— (1) முஹாஜிர் அபூ'ப'க்ர் (ரலி') அவர்கள் அன்சார் க'ாரிஜா பி'ன் ஃஜது'டனும், (2) ஹ'ஜ்ரத் உ'மர் (ரலி') அவர்கள் இ'த்ப்'ான் பி'ன் மாலிக்குடனும், (3) உ':த்மான் (ரலி') அவர்கள் ஔஸ் பி'ன் :தாபித்துடனும், (4) அபூ' உ'பை'த'ா ஜர்ரா'ஹ் அவர்கள் ஸஅ'த்' பி'ன் மு'ஆ'து'டனும், (5) 'ஜுபை'ர் பி'ன் அவ்வாம் அவர்கள் ஸலாமா பி'ன் வக்ஷுடனும், (6) முஸ்அ'ப்' பி'ன் உ'மைர் அவர்கள் அபூ'ஐயூப்' அன்சாரீயுடனும், (7) அ'ம்மார் பி'ன் யாஸிர் ஹுதை'‘பா பி'ன் யமானுடனும், (8) அபூ'‘தர் :க'ப்'பாரீ முன்'திர் பி'ன் அ'ம்ருடனும், (9) ஸல்மான் 'பார்ஸீ அபூ'த'ர்த'ாவுடனும், (10) பி'லால் அபூ' ரவீ'ஹாவுடனும், (11) அபூ'ஹுஃஜ'பா பி'ன் உ'த்ப'ா பி'ன் ரபீ'ஆ', உ'ப்'ப'ாத்' பி'ன் ப'ஷருடனும் (12) ஸயீ'த்' பி'ன் ஃஜத்' பி'ன்

அ'ம்ரு பின் நுஃபல், உபை' இப்'னு கஅ'ப்'டனும் இணைத்து வைக்கப் பட்டார்கள். இவ்வாறே மற்றும் பலரும் வேறு பலருடனே பிணைத்து வைக்கப்பட்டார்கள்.— (ஷிப்'லீ)

ஆனால், நபிகள் திலகம் (சல்) அவர்கள்மட்டும் 'ஹ'ஜ்ரத் அ'லீ (ரலி') அவர்களைத் தங்களுடைய சகோதரராகச் செய்து கொண்டார்கள். அ'லீ (ரலி') அவர்களும் ஒரு மக்காவாசியே யாதலின், நபிகள் நாயகம் தங்களுக் கொரு சகோதரராக ஓர் அன்சாரீயைப் பொறுக்கி யெடுத்துக் கொள்ளவில்லை யென்று அந்நகரவாசிகள் ஒன்றும் குறைகூறு திருக்கும் பொருட்டு ஓர் உத்திசெய்து கூறினார்கள்; முதன் முதலில் பன்னிரு நகீப்' களாகப் பொறுக்கி யெடுக்கப்பட்டிருந்த தலைவர்களுள் ஒருவராய் விளங்கிய அஸ்அ'த்' பின் 'ஜராரா வென்பவர் மரணமடைந்து விட்டபடி யால், அவருடைய ஸ்தானத்தில் நபிகள் பிரான் இருப்பதாகக் கூறி, அந்த அ'லீ(ரலி')யுடனே தாங்கள் சகோதர பாந்தவ்யத்தை ஏற்படுத்திக் கொண் டார்கள். தங்களுடைய தாய்வழி மாமன் அந்நகரிலே வசித்து வந்திருந்த தனால், தாங்களும் ஓர் அன்சாரீ யென்றே கூறிக்கொள்வார்கள். இவ்வாறு நபிகள் திலகம் (சல்) முஹாஜிரீன்களையும் அன்சாரிய்யீன்களையும் இணை யிணையாகப் பிணைத்து விட்டதன்பின்னர், அவ்வவ் விருவரும் கூடப்பிறந்த சோதரர்களைக் காட்டினும் அதிக நெருக்க முள்ளவர்களாகவே ஆகிவிட் டார்கள்.

> மக்கமா நகர முஹாஜிரீன் களுக்கும் மதீனத்தன் சாரிகள் தமக்கும்
> ஒக்கலின் பிரியா தனந்தரத் தவரும் உவந்தசம் பந்தரு மாக
> மிக்கநந் நயினர் சேர்ந்தன ரியாரும் விள்ளுதற் கிடமற வுடலும்
> புக்கிய வுயிரும் போற்பிரி யாதங் கவர்களும் பொருந்தியங் கிருந்தார்.
>
> —என்றார் உ'மறுப் புலவர்,

எனவே, எல்லா அன்சாரிய்யீன்களும் தத்தமக்குரிய முஹாஜரீன் சகோதரர்களுக்குத் தத்தம் வசத்திலுள்ள சொத்துக்க ளனைத்தினும் பப்பாதியைப் பகிர்ந்து கொடுத்துவிட முன்வந்து விட்டார்கள். ஆனால், அந்த மதீனாவாசிகளிடம் அதிகமான ஜங்கமப் பொருள்கள் இல்லாமை யால், தங்களுக்குரிய ஸ்தாவரப் பொருள்களாகிய நக்'லிஸ்தானென்னும் பேரீச்சந் தோப்புக்களையே பகுதிப்படுத்திக் கொடுக்குமாறு நபிகள் பிரானிடம் வேண்டிக் கொண்டார்கள். ஆனால், மக்கத்து முஹாஜிரீன் களுக்கு வர்த்தகத் தொழிலும் வேறுபல வேலைகளும் தெரியுமே யல்லது, வேளாண்மைத் தொழிலில் அவர்கள் பண்பா டில்லா திருந்ததனால், அன்னவர் அவ்வாறு பேரீச்சந்தோப்புக்களில் பப்பாதியைப் பெற்றுக் கொள்ள எளிதில் சம்மதித்தன ரில்லை. ஆகலின், அன்னவருக்கு அவ்வாறே அத் தோப்புக்களைப் பகிர்ந்துகொடுப்பதிலும் நபிகள்திலகம் (சல்) விருப்பங்

கொள்ள வில்லை. அதனைக் கண்ட அன்சார்கள், தாங்கள் அவ்வாறு பகிர்ந்து கொடுப்பதை ஒருகாலும் நிறுத்திக்கொள்ள முடியாதென்றும், தாங்களே அம் முழுத் தோட்டத்தின் வேலைகளை யெல்லாம் செய்துகொடுப்பதாகவும், அவற்றில் கிடைக்கும் வருவாயினின்று மட்டுமே ஒரு பாதியை முஹாஜிரீன்கள் எடுத்துக் கொள்ளட்டு மென்றும் அதிகம் வற்புறுத்திக் கூறியதன் மேல், அவ்வாறே நபிகள் திலகமும் அக் காரியத்தை முடிவு செய்து வைத்தார்கள். என்னே அன்னவரின் சகோதர வாஞ்சை! இதைத்தான் ஆண்டவனும் தன் திருமறையில் (8 : 72) சுட்டிக் காட்டி யுள்ளான்.*

மதீனா வாசிகள் மக்கா வாசிகளுக்குத் தங்கள்பா லிருந்துவந்த சொத்துக்களுள் பப்பாதி கொடுத்துவிட்டதே போல, அவரவரும் தத்தம் சகோதரருக்குத் தமக்குரிய குடியிருக்கும் வீட்டிலும் ஒரு பாதியைக் கொடுத்து விட்டார்கள். அவர்களுள் ஒருசிலர் தங்களுக்குரிய முழு வீட்டையுமே முஹாஜிரீன்களுக்கு இன்'ஆமாக அளித்துவிட்டார்கள். வேறுசிலர் வீடு கட்டிக் கொள்ளுதற்குரிய வெறும் மனைகளாகவே கொடுத் துதவினார்கள். இவை யெல்லாவற்றையுங் காட்டில் மற்றொரு விந்தையான விஷயம் யாதெனின், ஸஅ'தி'ப்'னு ரபீ'ஃ' என்னும் அன்சாரீயின் வற்புறுத்தலே யாகும்: இந்தப் புண்ணிய புருஷரான அன்சாரீக்கு இரண்டு மனைவியர் இருந்து வந்தார்கள். அவ்விருவருள் ஒருவருக்குத் தாம் விவாஹ விமோசனம் கொடுத்து விடுவதாகவும், அம்மாது சிரோமணியை அவருடைய முஹாஜிர் சோதரரான அ'ப்'து'ர் ர'ஹ்மான் பின் அ'வ்'ப் அவர்களே விவாஹம் செய்துகொள்ள வேண்டுமென்றும் எப்பொழுதும் வற்புறுத்திக் கொண்டே யிருப்பார். ஸஅ'தி'ப்'னு ரபீ'ஃ' அவர்களின் சகோதர வாஞ்சை அத்துணைப்பெரிதா யிருந்துவந்தும், அதற்கு அ'ப்'து'ர் ர'ஹ்மான் என்பவர் இறுதிவரை சிறிதும் இடுக்குக் கொடுத்தன ரில்லை.

முஹாஜிரீன்களும் அன்சாரிய்யீன்களும் மேற் கூறியவாறு ஒருவரோ டொருவர் அளவுகடந்த அத்தியந்த சகோதர வாஞ்சையுடனே இருந்து வந்ததனால், அவ்விருவரும் உடன்பிறந்த சகோதரர்களைக் காட்டினும் அதிக நெருக்கமான பாந்தவ்ய முள்ளவர்களாக மாறிவிட்டார்கள். ஆதலின், அவ்விருவருள் ஒருவர் காலகதியால் தேகவியோகமாய் விடுவராயின், மற்றொருவர் அந்த இறந்த சகோதரரின் சொத்துக்களுக் கெல்லாமும் வாரிஸாக ஆகிவிடுவார்; ஆனால், சொந்த சகோதரருக்கு அவை சிறிதும் கிடைப்ப தில்லை. ஆயினும், ப'த்'ர் யுத்தத்திற்குப் பின்னே இவ்வழக்கம்

* "நிச்சயமாக, எவர்கள் ஈமான் கொண்டும் (தங்களில்லங்களைத் துறந்து) வெளிப்புறப் பட்டும், தங்கள் பொருள்களையும் தங்கள் ஆவிகளையும் கொண்டு அல்லா(ஹ்)வின் பாதையில் பெரும் போராட்டம் புரிந்து மிருந்தார்களோ அவர்களும், எவர்கள் (நபியையும் அம் முஸ்லிம்களையும்) ஆதரித்து உதவியும் புரிந்தார்களோ அவர்களும்— இவர்கள்தாம்— இவர்களில் சிலர் சிலருக்குப் பாதுகாவலர்களா யிருக்கிறார்கள்."

ஆண்டவ ஞணையால் நிறுத்தப்பட்டுப் போய்விட்டது. :குர்ஆன் ஷரீ'பி லுள்ள 8 : 75-ஆவது ஆயத்தில் கூறப்பட்டிருக்கும் கட்டளையின் பிரகாரம் அந்த ப'த்'ர் யுத்தத்துக்குப்பின் சட்டப்படியுள்ள வாரிஸ்களே இறந்து போன சகோதரர்களின் சொத்துக்களுக் கெல்லாம் பாத்யதை யுடையவர்க ளாகக் கருதப்பட்டு வருகிருர்கள்.

மதீஞ வாசிகள் மக்கத்தவர்களுக்கு இவ்வாறு தமக்குரிய சொத்துக் களினின்று சரிபாதியைப் பகிர்ந்து கொடுக்கச் சர்வ தாராளச் சித்தத்துடன் முன்வந்த போதினும், எல்லா முஹாஜிரீன்களும் இத்தகைய சௌகரியங் களை முழுதும் ஏற்றுக்கொள்ளத் துணிந்தன ரில்லை. அ'ப்'து'ர் ர'ஹ்மான் பி'ன் அ'வ்'ப் என்பவர் தம்முடைய அன்சார் சகோதரரான ஸஅ'தி'ப்'னு ரபீ'ஃ' அவர்களால் அளிக்கப்பட விரும்பிய அவருடைய மனைவிய ரொரு வரை அங்கீகரிக்க மறுத்துவிட்டா ரென்னும் செய்தியை முன்னரே நாம் படித் திருக்கின்ருேம். இன்னம், அந்த அன்சாரியால் கொடுக்கப்பட வேண்டியிருந்த ஏனைப் பொருள்களி லிருந்தும் தமக்குரிய ஒரு பாதியைத் தம் நண்பர் பிரித்துக்கொடுக்க முன்வந்தபோது, அவற்றினையும் அந்த அ'ப்'து'ர் ர'ஹ்மான் ஏற்றுக்கொள்ள விரும்பாது, கடைவீதிக்குச் செல்லும் வழியைமட்டும் தமக்குக் காட்டிக் கொடுக்குமாறு வேண்டிக் கொண்டார். அவ்வாறே, அந்த அன்சாரீ :கனீ:கா'இ'ன் பிராபல்யம் வாய்ந்த பெரிய கடைத்தெருவின் வழியைக் காட்டியவுடனே அ'ப்'து'ர் ர'ஹ்மானும் அந்த ப'னீ :கனீ:காஃ' வர்க்கத்தினர் வசித்துவந்த பகுதியிலுள்ள ப'ா'ஜாருக்குச் சென்று, ஆங்குச் சிறிது பன்னீரும் நெய்யும் வாங்கி விற்பனை செய்யத் தொடங்கினர். அவற்றினின்று ஆரம்பத்தில் அவருடைய ஜீவனத்துக்கு மட்டும் போதிய வருவாய் கிடைத்துக்கொண் டிருந்தது. அதன்பின்பு இரண்டு மனிதருக்குப் போதிய வருவாய் கிட்டிய வுடனே ஒரு பெண்ணைத் தேடித் திருமணமும் முடித்துக் கொண்டார்.

பிறகு நாளேற நாளேற, அ'ப்'து'ர் ர'ஹ்மானது வர்த்தகமும் அளவுக்குமீறிப் பெருகிக் கொண்டே வந்தது. பிற்பட்ட காலத்திலே இவருடைய கடைச் சரக்குக்கள் வெளிநாடுகளி லிருந்து எழுநூறு எழுநூறு ஒட்டகங்களின் மீதே வந்திறங்குமாம். ஒருமுறை அ'ப்'து'ர் ர'ஹ்மானுடைய ஒட்டகங்கள் மதீனுவுக்குள் வந்துவிடுமாயின், அந்நகர் முழுதும் பேரமளியாகவே காணப்படுமாம். இப்பெரியார் அந்நகரத்தில் தமக்குரிய கோட்டை யொன்றையும் (மாபெரும் மாளிகை) நிர்மாணித்துக் கொண்டார். "யான் மண்ணைத் தொட்டாலும் அஃது ஆண்டவனருளால் பொன்னுகவே போய்விடுகிறது," என்று அ'ப்'து'ர் ர'ஹ்மான் அடிக்கடி கூறுவதுண்டாம். இவ்வாறே வேறுசில முஹாஜிரீன்களுக்கும் நூற்றுக் கணக்கான ஒட்டகங்களின்மீது சரக்குக்கள் வரக்கூடிய அத்துணைப்பெரிய வர்த்தகம் அந் நகரத்தின்கண்ணே அபிவிருத்தி யடைந்துகொண்டு வந்தது.

'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் சித்'தீ':க்(ரலி') ஸுன்'ஹில்* ஜவளி வியாபாரம் செய்து கொண்டு வந்தார்கள். 'ஹ'ஜ்ரத் உ':த்மான் (ரலி') அவர்களும் ப'னீ:கனீ :காஃ' கடை வீதியிலேயே பேரீச்சம்பழ வியாபாரம் செய்துகொண் டிருந் தார்கள். 'ஹ'ஜ்ரத் உ'மர் (ரலி') அவர்களும் வர்த்தகத் தொழிலிலேயே ஈடுபட் டிருந்தார்கள். இவர்களுடைய வியாபாரம் பின்னொரு காலத்தில் ஈரான் (பாரஸீக) தேசம்வரை எட்டி யிருந்ததென்று சரித்திராசிரியர்கள் வரைந்து வைத்திருக்கிறார்கள். 'ஹ'ஜ்ரத் அபூ' ஹுரைரா அவர்கள் மற்றெல்லா ச'ஹாப'ாக்களைக் காட்டினும் மிகவுமதிகமாக ரிவாயத் (நாயக நிகழ்ச்சிக் குறிப்பைச்) சொல்லிக்கொண் டிருந்ததனால், ஏனையவர்கள் ஆக்ஷே பணை செய்தார்கள். அதுபொழுது 'ஹ'ஜ்ரத் அபூ'ஹுரைரா அவர்கள், "என்மீ தென்ன குற்ற மிருக்கிறது? ஏனைய ச'ஹாப'ாக்களான தோழர்க ளெல்லாரும் வியாபாரத்தில் அதிகம் ஈடுபட் டிருந்தார்கள். யானோ எச்சமயத்திலும் நாயகத்தின் திருச் சமூகத்திலேயே யிருந்துகொண் டிருந்தேன். ஆகையால், யான் செவியுற்ற விஷயங்களை யெல்லாம் சொல்ல வேண்டிய தாகத்தானே யிருக்கிறது!" என்று கூறி யிருக்கிறார்கள்.† எனவே, ச'ஹாப'ாக்கள் எத்துணைத் தூரம் வியாபாரத்தில் ஈடுபட்டிருந் தார்க ளென்பதை இதனால் நன்கு விளங்கிக் கொள்ளுகிறோம்.— (அ'ய்னீ ஷர'ஹ் பு'க'ாரீ)

இவ்வாறு வர்த்தகத்தில் ஈடுபட் டிருந்தவர்களை யன்றி, ஏனையோர் சிலர் சுமைசுமக்கும் கூலிவேலைகளையே செய்துகொண்டு வந்தார்கள். இவ் வேழைக ளெல்லாரும் தத்தமக்குரிய ஜீவனோபாயத்தையும் அக் கூலிவேலை யால் நிறைவேற்றிக்கொண்டு, சமூக முன்னேற்றத்திற் கென்று "பை'த்துல் மால்" என்னும் பொது க''ஜானாவிற்கும் தம்மாலியன்ற சிறுசிறு தொகை களைச் செலுத்தி வந்தார்கள். பிற்பட்ட காலத்தில் மேற்கூறியவாறு மதீனாவின் வர்த்தகம் அதிகம் அபிவிருத்தி யடைவதா யிருந்தும், ஆரம்ப காலத்தில் அந்த முஹாஜிரீன்களுடைய நிலைமையானது மகா பரிதாபகர மானதாகவே காணப்பட்டு வந்தது. ஒருமுறை பசிப்பிணியால் வருந்திய ஒருவர் (முசா'பிர்) நபிகள் பிரானிடம் வந்து ஏதேனும் ஆகாரம் கிடைக் குமோ வென்று இரங்கி வேண்டினார். அதுபொழுது நபிகள் திலகம்(சல்) தங்கள் விடுதியில் ஏதேனும் ஆகார பதார்த்தம் கிடைக்குமோ வென்று விசாரித்துப் பார்த்தார்கள்; அப்பொழுது ஆ'யிஷா பிராட்டி அவர்கள் தங்கள்வயம் வெறுந் தண்ணீரே யல்லது வேறொன் றும் தின்னக்கிடைப்பது அரிதா யிருக்குமென்று கூறிவிட்டார்கள். பிறகு நபிகள் நாயகம் அந்த

* ஸுன்'ஹ் (சுக்கல்ல) என்பது மதீனாவின் ஒரு புறநகராம். இங்கேதான் அபூ'ப'க்ர் சித்'தீ':க் வசித்துவந்தார்கள்.

† எனவேதான், இப் பெரியார், "நபிகள் நாதரின் (சல்அ'ம்) தோழர்களுள்ளே என்னைப் பார்க்கினும் அதிகமான 'ஹதீ':துகளை அப்பெருமானார் பாலிருந்து கூறியவர் ஒருவருமில்லை," என்று கூறியிருக்கின்றார்.— (பு'க'ாரீ 3 : 39)

முசா'பிரை அபூ'(த்)தல்ஹா என்னும் முஹாஜிருடன் ஆகாரம் செய்து வருமாறு அனுப்பிவைத்தார்கள். அதுசமயம் அபூ'(த்)தல்ஹா அவர்கள் தங்கள் பீ'பீ'யிடம் சென்று, ஏதேனும் உணவுண்டோ வென்று வினவினார்கள். அதுபொழுது அவ்வம்மையார் ஒருசிறு குழவிக்குங் காணாத அத்துணைக் குறைவான ஆகாரமே தம்வயம் இருப்பதாகக் கூறினர். அதுகாலை இராநேரமா யிருந்தமையான், அந்தச் சிறிது ஆகாரத்தைக் கொண்டுவந்து வைத்து விளக்கை அணைத்துவிடுமாறு அபூ'(த்)தல்ஹா ஆணையிட்டார். அதன்பின்பு வெளியிலிருந்து வந்தவரும், அபூ'(த்)தல்ஹா அவர்களும், அவருடைய மனைவியும் அவ்வாகாரத்தைச் சூழ்ந்து இருளிலே அமர்ந்து கொண்டார்கள். அதன் பின்னர் அங்குவந்த முசா'பிர் மட்டும் அந்த ஆகாரத்தை மென்று மென்று தின்றுகொண் டிருந்தார். ஆனால், அபூ'(த்)தல்ஹாவும் அவருடைய மனைவியரும் அவ்விருட்டில் எதையோ தின்றுகொண் டிருப்பதேபோல் கைகளை வாய்களின் பக்கல் உயர்த்தி உயர்த்திக் கொண்டும், வெறும் வாயையே மென்று மென்று கொண்டு மிருந்தார்கள். உண்மையில், வந்தவர் மட்டுமே சிறிது ஆகாரம் செய்து கொண்டார். ஆதலின், அந்தக் கணவரும் மனைவியும் அன்றிரவு வெறும் பட்டினியே கிடந்தார்கள். இதையேதான் ஆண்டவன் தன் திருமறை 59 : 9-ஆவது திருவாக்கியத்தில் சுட்டிக் காட்டியுள்ளான்.* "மண்திணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம் உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத்தோரே," என்றார், "மணிமேகலை" பாடிய சாத்தனாரும்.

மஸ்ஜிதின் ஸுஃப்'பாவில் தங்கியிருந்த திருத்தொண்டர் குழாங்கள் எவ்வாறு காலங்கழித்து வந்தார்க ளென்பதைச் சென்ற அதிகாரத்தில் ஒரு சிறிது நாம் படித்திருக்கின்றோம். அவ்வாறெல்லாம் அளவுகடந்த தாரித்திரியத்துள்ளே மூழ்கிக் கிடந்தபோழ்து அவர்களனைவரும் ஒருசிறிதும் ஒருவரையும் குறைகூறிய தில்லை. தாழ்வின்போழ்து எவ்வாறு தம்மடக்கத்துடனே இருந்து வந்தார்களோ, அவ்வாறே வாழ்வுவந்த போழ்தும் அவ் வடக்கத்துடனேதான் உயிர்வாழ்ந்து வந்தார்கள். ஒருமுறை ஆயி'ஷா பிராட்டி அவர்கள் இவ்வாறு கூறியிக்கின்றார்கள் :— "மாதக்கணக்காக எங்கள் விடுதியிலே அடுப்புப் பற்றவைக்காமலே யிருந்துவிடுவோம். நபி பெருமான் அவர்கள் பேரீச்சங் கனியையும் வெறுந் தண்ணீரையும் மட்டுங் கொண்டே நாட்கடத்துவார்கள். ஒரு சில சமயங்களில் எவரேனும் சிறிது இறைச்சி யனுப்புவார் ; அதுபொழுது ரொட்டி சுடுவதற்கு மாவொன்றும் கிடைக்க வில்லையாயின், அவ் விறைச்சியைக் கொண்டே புசித்துத்

* "அவர்களுக்கு முன்னே அந் நகரத்திலும் விசுவாசத்திலும் (வீடு கட்டித்) தரிபட்டிருந்தவர்கள் தங்கள்பால் ஹிஜ்ரத் வந்தவர்களை உவக்கின்றார்கள் ;...இன்னம், தரித்திரமென்பது தங்களையே வாட்டிய போதினும், தங்களுக்கு மேலாக (அவர்களை)த் தேர்ந்து கொள்கிறார்கள்," என்பது அவ்வாயத்.

திருப்தி யடைந்து விடுவோம். நபிகள் திலகம் தெள்ளிய வாற்கோதுமை மாவால்† செய்யப்பட்ட ரொட்டியையே புசிப்பார்கள். சிற்சில வேளை களில் ஒட்டகத்தின் பாலைமட்டுமே பருகிப் பசியைத் தணித்துக்கொள் வார்கள்."

ஆனால், அம் முஸ்லிம்களுக்கு வர்த்தகத்தில் ஆண்டவன் ப'ரக்கத் செய்ய ஆரம்பித்தவுடன், அவர்க ளெல்லாரும் ஏனை ஏழை எளியோர்களுக் கெல்லாம் தங்கள் முதலிலிருந்து நூற்றுக்கு இரண்டரை விகிதம் கடமை யான வரியாக 'ஜகாத் கொடுத்து வந்ததுடன் நில்லாது, அக் கணக்குக்கு மேற்பட்ட அதிகமான தானதர்மங்களையும் அடிக்கடி செய்துவந்தார்கள். இன்னம் அன்னவர்கள் இஸ்லாத்தின் பிரசாரத்திற்காகவும் அளவுகடந்த திரவியத்தை அள்ளிக்கொடுத்து வந்தார்கள். "மூமினானவர்கள் என்பவ ரெல்லாம் அல்லா(ஹ்)வையும் அவனுடைய திருத் தூதரையுங் கொண்டு ஈமான் சொண்டு, அதன்பின்பு ஐயஞ்சிறிதுங் கொள்ளாது, தங்கள் உயிர் களையும் பொருள்களையுங் கொண்டு அல்லா(ஹ்)வின் பாதையில் பெரும் பிரயாசையும் எடுப்பவர்களே யாவார்கள்; இப்படிப்பட்டவர்களே சத்திய சந்தர்கள்."— (:குர். 49 : 15). ஆண்டவனுடைய இவ் வாக்கியத்தை உண்மையிலே நம்பியவர்கள் மேற்காட்டிய வாறேதான் நடந்து செல்வர். ஆனால், இன்றோ? அந்தோ! இக் காலத்தில் எம் முஸ்லிம் சோதரர்கள் இனி எப்பொழுதுதான் அக்காலத்தி லிருந்துவந்த ஏக சகோதரத்துவத் தையும், இஷாஅ'த்தின் மீதுள்ள பிரியத்தையும் காண்பிக்கப் போகின்ற னரோ? மேலே குறிப்பிட்ட அத் திருவாக்கியத்தின்படி உண்மையான ஈமான்கொண்டு நடக்க முற்படப் போகின்றனரோ? அறிகிலேம். மானி டர்கள் வனவிலங்குகளே போல் தனித்து வாழ்வது முடியாது; சமூகமாகத் தான் கூடிவாழ்தல் வேண்டும். சமூகம் செழிக்க அதற்குவரும் கேட்டைத் தவிர்த்தல் அத்தியாவசியமாகும். சமூகம் சேமமுறப் பொருளைக்கொண்டும் உயிரைக் கொண்டும் தியாகம் புரிதல் வேண்டும். தியாகமின்றேல், சமூக மில்லை; சமூகமின்றேல், தனிமனிதன் இல்லை. இவ் வுண்மையினை இக்கால முஸ்லிம்கள் உணரக் கடவார்களாக.

பெரும்பான்மையான முஹாஜிரீன்கள் கடைவீதிகளுக்குச் சென்று விட்டார்கள்; ஆனால், அபூ'ஹுரைராவும் (ரலி') அவரைப்போன்ற சிலருமே சதா சர்வகாலமும் நபிகள்பெருமானா ருடனேயே இருந்துவருவார்கள். இக் காரணத்தினால்தான் அபூ' ஹுரைரா அவர்களின் வாயிலாக அள விறந்த நாயகர் நன்மொழிகள் வெளிவந் திருக்கின்றன. ஆகவே, அஷ்ட தரித்திரத்திற் கெல்லாம் அவரே அதிகம் இலக்கா யிருந்துவந்தார்.

ஹிஜ்ரீ நான்காவது ஆண்டில் ப'னீ நலீ'ர் என்னும் யூத வர்க்கத் தினர் அவர்களது விஷமத்தனத்தாலே தேசப்பிரஷ்டம் செய்யப்பட்ட

† அக்காலத்தில் மாச்சலிக்கச் சல்லடை யில்லாமையால், முறத்திலே அரைத்த மாவைப் போட்டுத் தெள்ளுவார்கள்.

பொழுது, அவர்களுக்குச் சொந்தமா யிருந்துவந்த பேரீந்தின் தோட்டங்க ளெல்லாம் முஸ்லிம்களின் கைவயமாய் விட்டன. அதுபொழுது நபிகள் திலகம் அன்சாரிய்யீன்களை யெல்லாம் வரவழைத்து, "முஹாஜிரீன்கள் திக்கற்றவர்களா யிருக்கின்றார்கள். எனவே, நீங்கள் முழுமனத்துடனே நல்லபிப்பிராயம் கொடுப்பீர்களாயின், புதிதாகக் கைப்பற்றப்பட்ட சொத் துக்க ளனைத்தையும் அவர்களுக்கே பகிர்ந்து கொடுத்துவிடலா மென்று யான் எண்ணி யிருக்கிறேன். இதற்கீடாக நீங்கள் அவர்களுக்குக் கொடுத் திருக்கும் நக்'லிஸ்தானின் சொத்துக்களை யெல்லாம் திரும்பவும் பெற்றுக் கொண்டு விடலாம்," என்று கூறியதைக் கேட்டு, அந்த அன்சாரிய்யீன்க ளனைவரும், "இல்லை, இல்லை! எங்களுடைய தோட்டங்களும் எங்கள் சகோதரர்களிடமே இருந்துவரட்டும். புதிதாகக் கிடைத்த இத் தோட்டங் களையும் அவர்களுக்கே பங்கிட்டுக் கொடுத்துவிடுங்கள்," என்று சொல்லி மறுத்து விட்டார்கள். பின்னர் அவ்வாறே அத் தோட்டங்க ளனைத்தும் முஹாஜிரீன்களுக்கும், மிக்க ஏழைகளா யிருந்துவந்த இரு அன்சார் களுக்குமே பாகித்துக் கொடுக்கப்பட்டன. இத்தகைய இணையற்ற ஏக சகோதர வாஞ்சையை இவ்வகிலத்தின்கண் காணப்படும் வேறெந்தச் சரித்திரத்திலும் கண்டுகொள்ள மாட்டீர்கள். இப்படிப்பட்ட இறுகப் பிணிக்கப்பட்ட ஏகசகோதரத்துவமே அக்கால உலகினில் முக்காற்பங்கிற்கு மேற்பட்ட பாகத்தை அம் முஸ்லிம்களின் தண்குடை நிழலின்கீழ்க் கொண்டு வருதற்குப் பெருஞ் சாதனமாக இருந்துவந்த தென்பதை நீங்க ளெல்லீரும் மிக நன்றாக உணர்ந்துகொள்ளக் கடவீர்கள். துரதிருஷ்ட வசமாகப் பின்னர் நமக்குள்ளே ஏற்பட்டுவிட்ட சகோதர வேற்றுமையின் காரணத்தினாலேயே நாம் இன்றளவும் இவ்வாறு பல்லாயிரம் துண்டுக ளாகப் பிளவுபட்டு மிக்க பரிதாபகரமான முறையிலே க்ஷீணித்துக் கல்வி யறிவும் இல்லாது பொருளாதார விஷயத்திலும் அதிகம் ஆழ்த்தப்பட்டும் தாழ்த்தப்பட்டும் வீழ்த்தப்பட்டுக் கிடக்கின்றோம்.*

அவ்வா றெல்லாம் அன்சாரிய்யீன்க ளிடத்திருந்து முஹாஜிரீன்கள் பெற்றுக்கொண்டிருந்த பேரீந்தின் தோப்புக்களின் பப்பாதிகளை அவ்வவற் றிற்குரிய சொந்தக்காரரான மதீனாவாசிகளிடம் கை'ப'ர் பிடிப்பட்டதன் பின்னே திருப்பிக் கொடுத்துவிட்டார்க ளென்று சரித்திரம் சான்று கூறு கின்றது. என்னெனின், அப்பொழு தெல்லாம் அந்த முஹாஜிரீன்கள் வர்த்த கத்தில் அதிகம் வெற்றிபெற்றவர்களாக விளங்கிவர லாயினார்கள். பின்

---

* "எந்த மார்க்கம் அன்னியர்களுடைய ஹிருதயங்களைக் கவர்ந்து கொண்டுவந்து தன் பால் சேர்த்துக் கொண்டிருந்ததோ, அந்த மார்க்கத்திலேயே இதுபொழுது பிரிவினைகள் அநேகம் உண்டாய்க் கிடக்கின்றன ; எந்தச் சமயத்தில் மானிட வர்க்கத்தின் உண்மை யான சகோதர வாஞ்சை இருந்துகொண் டிருந்ததோ, அந்தச் சமயத்திலேயே இதுசமயம் நாலுதிசைகளினின்றும் சண்டைகளும் சச்சரவுகளுமாய மயமாக மல்கிக்கிடக்கின்றன." — 'ஹாலீ.

ஒரு சமயம் ப''ஹ்ரைன் பகுதி பிடிபட்டபோது, ஆங்கிருந்து ஏராளமான பூஸ்திதிகளும் வேறுபல தோட்டம் வகைகராக்களும் முஸ்லிம்களின் ஆதிக்யத்தின்கீழ் வந்துவிட்டன. அப்பொழுது நபிகள் பெருமானார் முஹாஜிரீன்களை நோக்கி, "இதுசமயம் இந்த ப''ஹ்ரைன் மாகாணத்தில் கிடைத்தவற்றை யெல்லாம் அன்சாரிய்யீன்களுக்கே நான் பங்கிட்டுக் கொடுத்துவிட நாடி யிருக்கின்றேன். உங்களுடைய அபிப்பிராயம் யாது?" என்று வினவினார்கள். அதற்கு அந்த முஹாஜிரீன்கள் தடையொன்றும் சொல்லாவிடினும், அன்சாரிய்யீன்கள் அவ்வாறு அந்த முழுச் சொத்துக்களையும் பெற்றுக்கொள்ளச் சம்மதித்தினரில்லை. முஹாஜிரீன்களுக்கும் அவற்றிலிருந்து சரிபாதி பகிர்ந்து கொடுத்தால் மட்டுமேதான் தாங்களும் மிகுதிப் பகுதியை ஒப்புக்கொள்ள முடியுமென்று ஒரே உறுதியாக உறுத்திக் கூறிவிட்டார்கள். பிறகு அவ்வாறே நபிகள் திலகமும் அந்த ப''ஹ்ரைன் சொத்துக்க ளனைத்தையும் பப்பாதியாகவே பங்கிட்டு அவ்விரு வர்க்கத்தினருக்குமே பாகித்துக் கொடுத்து விட்டார்கள். இதுவன்றோ இஸ்லாத்தின் இணையில்லா ஏகசகோதரத்துவ வாஞ்சையாகும்! ஆனால், இதுசமயம் நம் முஸ்லிம் உலகின்கண் காணப்படுவது என்னவென்று எண்ணுகின்றீர்கள்? ஒருவருடைய சொத்தை ஒருவர் நயவஞ்சகமாக அபகரித்துக்கொள்வதும், சகோதர முஸ்லிம்களுக் குள்ளேயே சண்டைகளை மூட்டிவிட்டுப் பெரும்பெரும் பிளவுகளை யெல்லாம் அற்பக் காரணத்துக்காக உண்டு பண்ணுவதும், சிறுசிறு விஷயங்களுக் கெல்லாம், அதனால் அவன் கா'பிராய்விட்டான், இதனால் இவன் கா'பிராய்விட்டா னென்று ஒருவரையொருவர் மதப்பிரஷ்டம் பண்ணிக்கொள்வதும் சர்வ சாதாரணமான வழக்கத்தி லிருந்துவருகின்றன. என்று எம் முஸ்லிம்களுக்கு நம்மிறைவன் நல்லறிவைக் கொடுத்தருளப் போகின்றானோ? யாமறிகிலேம்.*

நபிகள்பெருமான்(சல்) அவர்களால் அடிகோலி நிருமிக்கப்பட்ட அந்த மதீனாவிலுள்ள மஸ்ஜிதுன் னபவீ யென்னும் பள்ளிவாயிலானது பிற்பட்ட காலங்களில் பற்பலவிதமான நல்ல அலங்காரங்களுடனே மிகப் பெரிதாக நிர்மாணிக்கப் பட்டபோதினும், ஆரம்பத்திலே அதன் சுவர்களெல்லாம் பச்சைவெட்டுக் கற்களாலே எழுப்பப்பட் டிருந்தன வென்பது உங்களுக்குத் தெரியும். அடித்தரைமீது விரிப்பதற்கொரு பாயுங்கூட இல்லாமையால், மேற்றளத்திலிருந்து ஒழுகும் மழைநீரால் அடித்தளம் சேறாய்ப் போகாதிருக்கும் பொருட்டு அதன்மீது பருக்கைக் கற்களைப் பரத்தியிருந்தார்க ளென்பதும் உங்களுக்குத் தெரியாம லில்லை. அதற்குள்ளே ஏற்றிவைப்பதற் குரிய ஒரு விளக்குக்கும் வழியில்லாமையால், பேரீச்ச விறகுகளைக் கொண்டே இராக்காலங்களில் பிரகாசமடையச்

* "எந்தத் தர்மம் மக்கள்பால் காணப்பட்ட பிரிவினைகளை ஒழிக்கத் தோன்றிற்றோ, அந்தத் தர்மத்துக் குள்ளேயே இக்சமயம் பிரிவினைக ளநேகம் உண்டாய்க் கிடக்கின்றன."
- 'ஹாலி.

செய்து வந்தார்க ளென்பதும் நீங்களறிந்த விஷயமே யன்றோ? அம் மஸ்ஜிதுக் குள்ளே மின்பரு மில்லை; மி'ஹ்ராபு' மில்லை; இரத்தினக் கம்பளமு மில்லை; அழகிய மெத்தைப் பாய்களு மில்லை. அப்படிப்பட்ட பள்ளிவாயிலில் வெறுந் தரைமீதே நின்றுகொண்டும், சிற்சில சமயங்களில் ஆங்குள்ள பேரீச்சந் தூண்கள்மீது சார்ந்துகொண்டும் நபிகள் பெருமானார் அந்த நல்லடியார்களுக்குப் பின்வருமாற்றா லெல்லாம் இதோபதேசம் புரிந்து வருவார்கள்:—

"அல்லா(ஹ்)வின் சிருஷ்டிப் பொருள்க ளிடத்தும், தன்னுடைய சொந்தக் குழந்தைக ளிடத்தும் அபிமானம் பாராட்டாதவ னிடத்து அல்லா(ஹ்)வும் அபிமானம் பாராட்ட மாட்டான். இவ்வுலகினில் ஆடையில்லாதவர்களுக்கு ஆடை யணிவிக்கும் ஒவ்வொரு முஸ்லிமையும் மறு உலகில் ஆண்டவன் சுவர்க்க லோகத்திலுள்ள பச்சைப் பீதாம்பரத்தைக் கொண்டு போர்த்துவிப்பான்."

மற்றொருமுறை தான தர்மத்தைப்பற்றி உபதேசம் புரிந்து கொண்டிருந்தக்கால், இவ்வாறு உவமாலங்கார உபாக்யான மொன்றை எல்லார் முன்னும் எடுத்தோதினார்கள்:— "ஆண்டவன் இத்தரணியை ஆதியில் நிர்மாணித்த பொழுது, இஃது அதிகம் ஆட்டங்கொண்டு நடுங்கிற்று. அப்பொழு துடனே ஆண்டவன் இதன் நடுக்கத்தை நிறுத்தும் பொருட்டு இதன்மீது மலைகளை நிறுத்தாட்டினான். அதைக் கண்ட வானவர்கள், 'ஏ ஆண்டவனே! உன்னுடைய சிருஷ்டியில் இம் மலைகளைப் பார்க்கினும் பலங்கொண்டது வேறேதேனும் உண்டோ?' என்று வினவினார்கள். அதற்கு ஆண்டவன், 'ஆம்; எஃகானது இம்மலைகள் எல்லாவற்றைப் பார்க்கினும் கடினமுள்ளதாக இருக்கின்றது; என்னெனின், எஃகின் வலிமையால் இம் மலைகளெல்லாம் சுக்கல் சுக்கலாகச் சிதறடிக்கப்பட்டுப் போய்விடுகின்றன,' என்று விடை பகர்ந்தான். அப்பால் அவர்கள், 'உன் சிருஷ்டியில் அந்த எஃகைப் பார்க்கினும் வலிமை கொண்டது வேறேதே னும் உண்டோ?' என்று வினவினார்கள். அதற்கு, 'ஆம்; தீயானது எஃகைப் பார்க்கினும் வலிமைபெற்று விளங்குகின்றது; என்னெனின், தீயின் வன்மையால் எஃகானது உருகிவிடுகின்றது,' என்று ஆண்டவன் விடை கொடுத்தான். 'உன்னுடைய சிருஷ்டியில் தீயைப் பார்க்கினும் வலிமைபெற்றது வேறேதேனு முண்டோ?' என்று அவ் வானவர்கள் வினவினார்கள். அதற்கு ஆண்டவன், 'ஆம்; நீரானது நெருப்பைப் பார்க்கினும் வன்மை பெற்றிருக்கிறது; என்னெனின், நீரினால் நெருப்பு அணைக்கப்பட்டு விடுகிறது,' என்று பதில் கூறினான். அதைக் கேட்ட வானவர்கள், 'ஏ ஆண்டவனே! உன்னுடைய சிருஷ்டியில் நீரைப் பார்க்கினும் வன்மை கொண்டது வேறேதனும் உண்டோ?' என்று வினவினார்கள். அதற்கு ஆண்டவன், 'ஆம்; நீரைப் பார்க்கினும் காற்றானது வன்மை பெற்றிலங்குகின்றது; என்னெனின், காற்றே தண்ணீரின்மீது ஆதிக்கங்

கொண்டு அதனை அலைத்து வருகின்றது,' என்று விடை கொடுத்தான். அதனையும் கேட்டு அவ் வானவர்கள், 'ஏ எங்கள் ரக்ஷகனே! உன்னுடைய சிருஷ்டியில் அந்தக் காற்றைப் பார்க்கினும் வல்லமை பெற்றிருப்பது வேறேதேனும் உண்டோ?' என்று வினவினார்கள். அதற்கும் ஆண்டவன், 'ஆம்! அப்படிப்பட்டவன் தானதர்மம் செய்யும் ஒரு நல்லமனிதனே யாவான்; அவன் தனது இடக்கரத்துக்குத் தெரியாது வலக்கரத்தால் தானத்தையும் தர்மத்தையும் வழங்கி வருவானாயின், அத்தகைய புண்ணிய புருஷன் இவ்வுலகத்திலுள்ள மற்றெல்லாவற்றையும் வென்றுவிடுகின்றான்,' என்று விடை கொடுத்து முடித்தான்."

நபிகள் திலகம் உபதேசித்துவந்த தர்மத்தின் இலக்ஷணமானது இவ்வுலகிலுள்ள எல்லாவிதமான பக்ஷங்களையும் தன்னுள்ளே அடக்கிக் கொண்டதாகவே காணப்பட்டு வந்தது. "ஒவ்வொரு சற் காரியமும் தர்மமே யாகும். நீர் உம்முடைய சகோதரன் முகத்தைப் பார்த்துப் புன் சிரிப்புப் பூப்பதுங்கூட ஒருவகைத் தர்மந்தான். சற்கருமங்களைப் புரியுமாறு நுங்கள் சகோதரர்களைத் தூண்டிவிடுவதும் ஒருவகைத் தர்மத்துக்கே ஒப்பாகும். வழி தவறியவனுக்கு நேரான வழியைக் காண்பிப்பதும் ஒருவகைத் தர்மந்தான். கண் தெரியாதவர்களுக்குக் கழிபிடித்து வழிகாட்டுவதும் ஒருவகைத் தர்மந்தான்; பொதுமக்கள் நடமாடக்கூடிய பாட்டையினின்று அவ் வழியிலுள்ள கற்களையும், முட்களையும், வேறுபல இடையூறுகளையும் அப்புறப்படுத்துவதும் ஒருவகைத் தர்மந்தான்; தாகவறட்சியால் தடுமாற்ற முற்றோருக்குத் தண்ணீர் கொடுப்பதும் ஒருவகைத் தர்மந்தான்," என்றெல்லாம் இதோபதேசம் புரிந்துவருவார்கள்.*

"ஒருவன் தனக்கு வரப்போகும் மறுஉலக வாழ்க்கைக்காகச் சேமித்து வைத்துக்கொள்ளும் உண்மையான ஐசுவரியமென்பது அவன் இவ்வுலக வாழ்க்கையில் தன்னுடைய சகோதர மக்களுக்குச் செய்து வைக்கும் நன்மையே யாகும். அவன் இறந்துபடுங்கால், அவன் என்ன சொத்தை விட்டுச்சென்றானென்று பொதுஜனங்கள் வினவுவார்கள். ஆனால், அவனுடைய புதைகுழியில் விஜயஞ்செய்து, அவனை விசாரிக்கப் புகும் வானவர்கள், 'நீ இங்கு வருவதற்கு முன்னே என்ன நன்மையைச் செய்தனுப்பி யிருக்கின்றாய்?' என்றே வினவுவார்கள்."

"யாரஸூலல்லா(ஹ்)! என் மாதாவாகிய உம்மு ஸஅ'த்' இறந்துவிட்டார்; அவரது ஆவியின் நன்மைக்காக யான் செய்ய வேண்டிய சிறந்த தர்மம் யாதா யிருக்கின்றது?" என்று ஒருநாள் ஒரு தோழர் தம்முடைய ஞானாசிரியரிடம் விண்ணப்பித்துக் கொண்டார். அதைக் கேட்டு, நபிகள்

* "கரிசனத்துடனே உங்கள் மனைவியர் வாயில் ஒரு கவளம் அன்னத்தை ஊட்டுவதுங்கூட ஒருவித தர்மந்தா னென்று நபி பெருமானார் நவின்றருளி யுள்ளார்கள்."—(பு'கா'ரீ)

திலகம் (சல்) தாகத்துடன் வருவோர்க்குத் தண்ணீர் கொடுத் துதவுமாறு ஆஞ்ஞாபித் தனுப்பினார்கள்: "உம்முடைய மாதாவின் பெயரால் கிண றொன்று வெட்டி, வருவார் போவார்க் கெல்லாம் தாகத்துக்குத் தண்ணீர் மொண்டு கொடுப்பீராக," என்று அவ்வராபிய பாலைவனத்தின் வெப் பத்தை நன்குணர்ந்திருந்த மனிதர்களுக் கெல்லாம் நல்லுபதேசம் புரிந்து வருவார்கள். தர்மங்களுக்குள் ளெல்லாம் தலைசிறந்ததாய் விளங்குவதும், ஆனால், மகா அலக்ஷியத்துடனே உதாசினம் செய்யப்பட்டு வருவதுமாகிய 'நாவைப் பேணிக்கொள்ளுத' லென்னும் தர்மத்தையும்* நம் நபிகள் திலகம் அதிகம் வற்புறுத்திக் கூறாம லிருப்பதில்லை. எவருக்கேனும் நன்மையைச் செய்வதா யிருப்பின், அத்தகைய பேச்சையே ஒருவர் பேசுதல் வேண்டும்; ஆனால், எவருக்கும் எத்தகைய தீங்கையும் விளைவிக்கக்கூடிய அப்படிப்பட்ட பேச்சைப் பேசுவதைப் பார்க்கினும் மௌனமா யிருந்து விடுவதே சாலச் சிறந்ததென்று கூறுவார்கள்.

ஒருசமயம் அபூ'ஜரியா என்னும் ப'ஸரா நகரவாசி மதீனாவிற்கு வந்து, நபிகள் நாயகத்தின் பெருமையை யுணர்ந்து அவர்கள்பால் சென்று, ஏதேனும் தமக்கு நல்லுபதேசம் புரியுமாறு வேண்டிக் கொண்டார். அப் பொழுது நபிகள் பெருமான், "ஒருவரைக் குறித்தும் ஒன்றும் தீங்குசொல்ல வேண்டாம்," என்று கூறி யனுப்பினார்கள். "அன்றுமுதல் நான் ஒருவரை யும் பொல்லாங்கு சொன்னதே யில்லை; ஓர் அடிமையைக் குறித்து, இல்லை! ஓர் ஆட்டுக்குட்டியைக் குறித்துங்கூட நான் ஒன்றும் குறைகூறிய தில்லை," என்று அந்த அபூ'ஜரியா வென்பவரே அறைந்திருக்கின்றார்.†

"ஒரு முறை ஒரு வியபிசாரியும் தாகத்துக்குத் தண்ணீர் கொடுத்து மன்னிப்புப் பெற்றுக்கொண்டாள். எவ்வாறெனின், அவள் ஒரு நல்ல வெய்யிலின் வேளையிலே ஒரு கிணற்றோரமாய்ப் போய்க்கொண் டிருந்தாள். அங்குத் தாக வறட்சியால் தவித்துக் கொண்டிருந்த நாயொன்று அக்கிணற் றுக்குள் எட்டிப் பார்ப்பதும் வெளியில் குதிப்பதுமாகத் தன்னுடைய நாவை அதிகம் தொங்க விட்டுக்கொண்டு நின்றது. அதனை யுணர்ந்த அம் மாது தனது பாதகவச மொன்றைக் கழற்றி, அதனைத் தன் மேலாடையின் முன்றானையில் கட்டி அக் கிணற்றுக்குள்ளே விட்டு, அதன் வாயிலாகத் தண்ணீர் சிறிது இறைத்து அந்நாய்க்குக் குடிக்கக் கொடுத்தாள். அதனால் அவளுடைய பாப முழுதும் மன்னிக்கப்பட்டுப் போய்விட்டது," என்றொரு சமயம் நபிகள்திலகம் (சல்) நல்லுபதேசம் புரிந்திருக்கின்றார்கள். என்னே இஸ்லாத்தின் தர்மசிந்தனை!

---

* "மௌனம் சர்வார்த்த சாதகம்" என்பதும், "மௌனம் கலக நாஸ்தி" என்பதும் ஆன்றோர் வாக்கு.

† "இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று."—குறள்.

"இவ்வாறே இனியொரு மாது ஒரு பூனைக்குட்டியைக் கட்டிப் போட்டுக் கொன்றுவிட்டதனுல் நரகத்திற் குரியவளாக மாறிவிட்டாள். என்னெனின், அன்னவள் அப்பூனைக் குட்டியைக் கட்டிப்போட்டு, அதற்கு ஆகாரமும் கொடாது, அது தானே ஆகாரம் தேடிக்கொள்ளுமாறு அவிழ்த்தும் விடாது வைத்திருந்ததனுல் அப் பூனைக்குட்டி இறந்துவிட்ட மையான், அக்குற்றத்தி னிமித்தம் நரக வேதனையை அடைதற் குரியவளாகி விட்டாள்," என்றும் அவர்கள் நல்லுபதேசம் புரிந்துவருவார்கள்.

அவர்களுடைய இதோபதேசம் சமுதாய வாழ்விற்கும் மிக்க ஒற்றுமையை யளிக்கக்கூடியதாக இருக்கின்றது. முஸ்லிம்கள் தங்கள் இல்லத்தை விட்டு வெளியில் புறப்படும்போது, உள்ளே யிருப்பவர்களுக்கு ஸலாம் கூறியே செல்லவேண்டு மென்றும், பிறகு திரும்பி உள்ளே வருங்கால், அங்குள்ளவர்களுக்கு அப்பொழுதும் ஸலாம் சொல்லியே நுழையவேண்டு மென்றும் நபிகள் பெருமான் நவின்றருளி யுள்ளார்கள். முஸ்லிம்கள் ஒருவரை யொருவர் சந்திக்க நேருங்கால், ஒருவர் மற்ருெருவரை நோக்கி, "அஸ்ஸலாமு அலைக்கும்!"—(உங்கள்மீது சாந்தியுண்டாவதாக!) என்று ஸலாம் சொல்ல வேண்டும். அதைக் கேட்ட மற்றவர், "வ அலைக்கு முஸ்ஸலாம்!"—(உங்கள்மீதும் சாந்தியுண்டாவதாக!) என்று பதில்கூறுதல் வேண்டும். வாகனத்தின்மீது ஏறி வருபவர் நடந்து வருபவருக்கு முதலில் ஸலாம் சொல்ல வேண்டும்; நடந்து வருபவர் உட்காந் திருப்பவர்களுக்கு முதலில் ஸலாம் சொல்ல வேண்டும்; சிறு தொகுதியினர் பெருந் தொகுதியினருக்கு முதலில் ஸலாம் சொல்ல வேண்டும். இவ்வாறே வாலிபர் வயோதிகருக்கு முதலில் ஸலாம் சொல்ல வேண்டும் என்றும் அப்பெருமானுர் அடிக்கடி உபதேசம் புரிந்து வருவார்கள். ஆண்பெண் ஒழுக்கங் குறித்தும், சதிபதி தர்மங் குறித்தும், அண்டை அயலவருடன் நடந்து கொள்ள வேண்டிய சமூகாசார சட்டங் குறித்தும் அதிகமதிகம் போதித்து வருவார்கள்.

எம்பிரான் (சல்) போதித்துவந்த மார்க்கம் சாந்திமார்க்க மாகும்; எனவே,எம் முஸ்லிம்கள் ஒருவரை யொருவர் சந்திக்க நேருங்கால், முகமன் கூறி வந்தனமளிப்பதும் அச் சாந்தியின் சொல்லே யாகும். இஸ்லாத்தின் சம்பந்தமான ஸலாமே எங்கும் ஸலாமத்தாக விளங்கி வருகின்றது. இத் தகைய அர்த்தபுஷ்டியுள்ள வந்தனம் இத்தரணியிலுள்ள வேறெம் மதத்திலும் இல்லை யென்பது, அவ்வம் மதத்தின் வந்தன மொழிகளி லுள்ள கருத்தை யுணர்ந்தவர்க் கெல்லாம் நன்கு புலனுகாமற் போகா தென்பது வெள்ளிடைமலை. எனவே, இஸ்லாத்தின் சுவர்க்கமும் "தாருஸ் ஸலாம்"—சாந்தி நிகேதனம்— என்றே அழைக்கப்படுகின்றது. என்னே இஸ்லாத்தி லுள்ள ஸலாமும், சாந்தியும், சமாதானமும்! "இன்னம், அல்லா(ஹ்) சாந்தி நிகேதனத்தை நோக்கி அழைக்கிருன்; மேலும், தான் நாடியவரை நேரான பாதையளவில் சீராக நடாத்தி வைக்கிருன்."—(;குர். 10 : 25)

# அதிகாரம் — 20

## மதீ'னு நிலைமையும் :குறைஷிக் கொடுமையும்

" (யுத்தத்தினுல்) கொல்லப் படுகின்ற அவர்களுக்கு (த்தற்காப்பி னிமித்தம் எதிர்த்து யுத்தம்புரிய) அனுமதி அளிக்கப்பட் டிருக்கிறது ; என்னெனின், அன்னவர்கள் அக்கிரமம் இழைக்கப் பெறுகிருர்கள். இன்னம், நிச்சய மாகவே, அல்லா(ஹ்) அன்னவருக்கு உதவி புரிவதன்மீது திராணியுள்ளவனு யிருக்கிருன்."— (22 : 39)

மதீ'னு முனவ்வரா— (பிரகாச மாக்கப்பட்ட நகரம்) மக்காவி னின்று வடக்கே பன்னிருநாட் பிரயாண தூரத்திலே (உத்தேசம் 300 மைல் என்ப) அமைந்திருக்கிற தென்பதை நீங்கள் முன்னரே அறிந்துகொண் டிருக்கின் றீர்கள் ; இதன் புராதனப் பெயர் ய:த்ரிப்' என்பதையும் தெரிந்துகொண்



டிருக்கின்றீர்கள். இஃது இக்காலத்தில் மிகச்செம்மையான மதிற்சுவர்களைக் கொண்டு நான்குபுறத்தும் பத்திரமாகக் காப்பாற்றப்பட்டு வந்தபோதினும், அக்காலத்தில் இத்துணைப் பத்திரமான பாதுகாப் பொன்றும் அமைந் தில்லா திருந்ததனுல், இப்பட்டணம் அடிக்கடி வெளியிலிருந்து வரும் பிற

மக்களால் தாக்கப்பட்டே வந்தது; பின்னொரு சமயம் இந்நகரத்தைக் :குறைஷியரின் தாக்குதலினின்று தற்காத்து வைக்கும்பொருட்டு நபிகள் திலகம் இதைச்சுற்றி ஒரு பெரிய அகழைத் தோண்டிவைக்கும் வரை இம் மதீனுவானது பண்டைக்காலத்தி லிருந்துவந்த வண்ணமே வெளிநாட்டுப் படையெழுச்சிகளுக் கெல்லாம் இலக்காகிக் கொண்டிருந்த தென்பதில் கிஞ்சித்தும் சந்தேகமில்லை.

அந்த ய:த்ரிப்' நகரம் மிகப்புராதன காலத்தி லிருந்துவந்த அ'மாலீ:க் என்னும் வர்க்கத்தின் தலைவ னொருவனால் ஆதியிலே நிர்மாணிக்கப்பட்ட தென்றும், அவனுடைய நாமத்தைக்கொண்டே இந்நகரமும் நம் ரஸூல் நாயகத்தின் திருவிஜயம்வரை வழங்கப்பட்டு வந்ததென்றும் சரித்திராசிரி யர்கள் கூறுகின்றார்கள். மஹா பிராசீன காலத்தில் மூஸாநபி அவர்கள் ப'னீ இஸ்ராயீல் கூட்ட மொன்றை அனுப்பி ய:த்ரிபி' லிருந்துவந்த அ'மாலீ:க்குகளை எதிர்க்கச் சொன்னதனால், அன்னவர் வந்து இந் நகரின் கண் வெற்றி கொண்டு, தங்களுக்குரிய யூதர்குடியேற்ற இடமாக இதனைச் செய்து கொண்டார்க ளென்று ஒருசில பண்டைச் சரித்திராசிரியர்கள் வரைந்து வைத்திருக்கின்றார்கள்; ஆனால், பண்டைக்கால பாபிலோனியர்க ளாலும், கிரேக்கர் (யூனனியர்)களாலும், உரோமர்களாலும் துரத்தியடிக் கப்பட்ட எஹூதிகள் அரப்நாட்டுக் குள்ளே நுழைந்து 'ஹிஜா'ஜின் வடக்குப் பகுதியில் அடைக்கலம் தேடிக்கொண்டார்க ளென்று வேறுசில சரித்திராசிரியர்கள் கூறுகின்றார்கள். எனினும், யஃ':கூபி' போன்ற சரித் திரக்காரர்கள், ய:த்ரிபி' லிருந்துவந்த எஹூதிக ளனைவரும் புராதன காலத்து அரபிகளே யென்றும், அவர்களுள் ளொருவரும் ப'னீ இஸ்ராயீல் வர்க்கத்தைச் சார்ந்தவ ரல்லரென்றும் கூறுகின்றார்கள். இவ் வபிப்பிரா யத்தையே அல்லாமா ஷிப்'லீ யவர்களும், மௌலானு மு'ஹம்மத'லீயும் ஆமோதித் திருக்கின்றார்கள். என்னெனின், ப'னீ இஸ்ராயீல்கள் பொது வாகவே சுத்தசோம்பேறிகளாக இருந்துவந்தார்க ளென்பது சரித்திர முணர்ந்த ஒரு சான்றே யாகும்; இக் காரணத்தினால்தான் பண்டைநாள் யூதர்கள், "நீரும்— (மூஸா அவர்களும்) உம்முடைய ரக்ஷகனும் செல்லுங் கள்; பின்னர் நீங்களிருவீரும் (எதிரிகளுடனே) போர்புரியுங்கள். (யூதர்க ளாய) நாங்களெல்லாரும் (எதிரியின் நகரத்தினின்று வெளியே) நிச்சயமாகக் குந்திக்கொண் டிருப்போம்," என்று கூறியதாக எமதாண்டவனும் தன் திருமறையிலே (5 : 24) இவர்களைப்பற்றி வர்ணனை செய்துள்ளானென்றால், நாம் இந்த யூதர்களைப்பற்றி அதிகம் சொல்வானேன்? ஆனால், மதீனுவி லிருந்துவந்த எஹூதிக ளெல்லாரும் அரபிகளேபோல் மிக்க சுறுசுறுப் புள்ளவர்களாகவே காணப்பட்டு வந்தனர். இன்னம், இவர்களுடைய பழக்க வழக்கங்களுக்கும், ஏனை ப'னீ இஸ்ராயீல்களின் பழக்க வழக்கங் களுக்கும் அதிகமான வித்தியாசமே காணப்பட்டு வந்தது. யூதர்கள் உலகத்தின் எல்லாப் பாகங்களிலும் பரவிச் சென்றனர். ஆயின், அன்னவு

ரெல்லாம் தங்கள் பெயரை மறைத்துக் கொண்டதே யில்லை. அன்னார் எங்குச் சென்ற போதினும், தங்களை இஸ்ராயீலீ என்று பகிரங்கமாகப் பகர்ந்துகொண்டு நின்றனர். ஆனால், மதீனாவின்பால் காணப்பட்டவர் களோ, தங்களை இஸ்ராயீலீயென்று கூறிக்கொள்ளாது, ப'னீ நலீ'ர், :கனீ:காஃ', மர்'ஹப்', 'ஹாரி:த் என்று சொல்லப்படும் கலப்பற்ற அரபிப் பெயர்களையே சூடிக்கொண் டிருந்தனர்.

இப்படிப்பட்ட எஹூதிகளுள் முக்கியமான வர்க்கத்தினர் மூவரா கவே காணப்பட்டுவந்தனர். கை'ப'ர் என்னுமிடத்தில் ப'னீ நலீ'ர்களும், 'பிதக்கென்னு மிடத்தில் ப'னீ :குறைள'ாக்களும், மதீனாவின் கண்ணேயே ப'னீ :கனீ:காஃ' என்பவர்களும் வசித்துவந்தார்கள். ஆனால், நலீ'ர்களும் :குறைள'ாக்களும் 'பலஸ்தீனிலிருந்து வந்து இங்குக் குடியேறினார்களென்று மஸ்ஊ'தீ' வரைந்திருக்கின்றார். இவர்களும், இவர்களைப் போன்ற வேறு பல எஹூதிகளும் மதீனாவிலும், அதனைச் சூழ்ந்துள்ள பகுதிகளிலும் தத் தமக்கு வேண்டிய சிறுசிறு கோட்டைகளை நிர்மாணித்துக் கொண்டு, தனித் தனியே சுகவாழ்க்கை வாழ்ந்து வந்தார்கள்.

இந்தப் புராதனக் குடிகளாகிய எஹூதிக ளன்றி, ஔஸ், க''ஜ்ரஜ் என்னும் இருவகை வேறு வர்க்கத்தினர்களும் ஆங்கு வந்து குடியேறி யிருந்தார்களென்று நாம் முன்னமே கூறியிருக்கின்றோம். இவர்களின் முன்னோர்கள், பெரிய வெள்ள மொன்று வந்தபோது, தங்கள் சொந்த தேசமாகிய யமனைவிட்டு மதீனாவின்கண் வந்து குடியேறி யிருந்தார்கள். ஔஸ், க''ஜ்ரஜ் என்னும் இரு ஆதிக்கிறிஸ்தவ சோதரர்களி னின்றே அவ் விரு வம்சமும் தோன்றின வென்பதும், அவர்களே நபிகள்பெருமானின் ஹிஜ்ரத்துக்குப் பின் அன்சாரிய்யீன்களாக அமைந்து விட்டார்க ளென் பதும் நுங்களுக்குத் தெரியும். அவ்விருவரும் ய:த்ரிபு'க்குள் வந்து குடி யேறிய காலத்தில் யூதர்களின் ஆதிக்யமும் ஆட்சியும் அந் நகரின்கண் அதிகம் தலைசிறந்து விளங்கின. அவர்கள்பால் இருந்துவந்த செல்வத்திற் கும் ஓர் எல்லைசொல்லி முடியாது. உத்தேசம் இருபது வம்சத்தினர்வரை அவர்கள் பெருகி, 'ஹிஜா'ஜின் வடபுறமெல்லாம் நிறைந்திருந்தார்கள். முதன்முதலில் ஆங்குக் குடியேறிய ஔஸ், க''ஜ்ரஜ்கள் சிலகாலம்வரை அந்த யூதர்களுடன் சேராமல் தனித்தே வசித்துவந்தார்கள். ஆனால், காலம் செல்லச்செல்ல அந்த எஹூதிகளின் செல்வாக்கைக் கண்டு சிநேக பாவமா யிருக்கும் பொருட்டு இந்த யமன்வாசிகள் அன்னவருடனே ஓர் உடன்படிக்கை செய்துகொண்டார்கள். ஆனால், பிற்பட்ட காலங்களில், இந்த ஔஸ், க''ஜ்ரஜ் வம்சத்தினர் பெருகி, அவர்களுடைய செல்வாக்கும் அதிகரித்து வந்ததனால், இனித் தமக்குத் தீங்கு நேருமென்று கண்டு, சில நாட்களுக்குள் ஆங்கிருந்த யூதர்கள் அவ் வுடன்படிக்கையை ஏதேதோ சாக்குப்போக்குச் சொல்லி முறித்துவிட்டார்கள்.

பிறகு சில காலத்துக்குப் பின்னே யூதர்களின் தலைவனான ப'த்'யூன்

என்பவன் இழைத்த சில ஸ்திரீலோலச் சார்பான அநாகரிகச் செயல்களி ஞல் அந்த எஹூதிகளுக்கும், ஔஸ் க''ஜ்ரஜ்களுக்கும் இடையிலே கொடிய யுத்தமொன்று மூண்டுகொண்டது. அதுபொழுது நிகழ்ந்த பெரிய தொரு சண்டையில் எஹூதிகள் தங்கள் எதிரிகளால் முற்றும் தோற்கடிக் கப்பட்டு, அவர்களுடைய செல்வாக்கனைத்தும் அடியோடு ஒடுக்கப்பட்டுப் போய்விட்டன. அன்றுமுதல் ஔஸ், க''ஜ்ரஜ்களின் ஆதிக்யம் வலுக்கத் தலைப்பட்டது. எனவே, இவர்களும் யூதர்களைப் போலவே ய:த்ரிபி'லும் அதனைச் சார்ந்துள்ள பற்பல பகுதிகளிலும் சிறுசிறு கோட்டைகளைக் கட்டிக் கொண்டார்கள். ஆனுல், பிறகு சிறிது காலத்திற்குள்ளே இந்த ஔஸ்களும், க''ஜ்ரஜ்களும் தமக்குள்ளேயே அந்த அரப்தேச வழக்கப்படி ஒற்றுமையை யிழந்து, ஒருவரோடொருவர் பகைமைகொண்டு, நேருக்கு நேரான யுத்தங்களி லெல்லாம் இறங்கிவிட்டார்கள். இவ்வாறு ஒரு நூற் ருண்டுக்கு மேலாகவே அவர்களுடைய பகைமை மேன்மேலும் முற்றிக் கொண்டே வந்தது. இறுதியில் நடைபெற்ற பு'ஆ'ெ:தன்னும் கொடிய போர்க் களத்தில் ஔஸ், க''ஜ்ரஜ்களின் முக்கியமான தலைவர்களெல்லாரும் மாண்டுபோய் விட்டார்கள்; இதனுல் அவர்கள் மீண்டும் க்ஷீண தசையையே அடைந்து விட்டார்கள். அதன்பின்பு ஔஸ்களுடன் ப'னீ:குறைள'ாக் களும், க''ஜ்ரஜ்களுடன் ப'னீ நலீ'ர்களும் சினேகபாவம் கொண்டுவிட் டார்கள். இப்படிப்பட்ட வேளையிலே அந்த ஔஸ் க''ஜ்ரஜ்களுடன் வேறெவரும் சினேகம் கொண்டுவிடாதபடி எல்லா எஹூதியரும் வேவு பார்த்துக் கொண்டே வந்தார்கள். இத்தகைய ஸந்தர்ப்பத்திலேதான் நபிகள் திலகம் அவர்கள் மக்காவிலிருந்து ஹிஜ்ரத் வந்து மதீனுவின்கண் குடியேறினுர்கள்.

ஆகவே, அதுசமயம் மதீனுவின்கண் மூன்றுவிதமான மனிதர்கள் இருந் திருக்கிருர்க ளென்று நாம் தெரிந்துகொள்ளுகிறேம். ஹிஜ்ரீ முதல்வரு டத்தில் முஹாஜிரீன்களும் அன்சாரிய்யீன்களு மாகிய முஸ்லிம் சகோதரர் கள் இஸ்லாத்தின் நடுநாயகமாக விளங்கி வந்தார்கள். நபிகள் பிரானின் ஹிஜ்ரத்துக்குப் பின்னே ஔஸ், க''ஜ்ரஜ் என்னும் இருபெரு வர்க்கத்தி னரும் தமக்குள் ளிருந்துவந்த பண்டைப் பகைமைகளை யெல்லாம் முற்றும் ஒழித்துக்கொண்டு தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவி, மக்காவிலிருந்து வந்தி ருக்கும் முஹாஜிரீன்களுக்கெல்லாம் வேண்டிய உபசாரங்களையும் உபகாரங் களையும் புரியத் தலைப்பட்டு விட்டார்கள். அந்த முஹாஜிரீன்களும் அன் சாரிய்யீன்களும் தங்கள் ஞானுசிரியரிடத்தே தங்களுக்குரிய மனைவிமக் களைக் காட்டினும், மற்றுமுள்ள உற்ருர் உறவினரைக் காட்டினும் அத்தி யந்த விசுவாசத்துடனே அடிபணிந்து நடந்து வந்தார்கள்.* முஹாஜிரீன்

* "உங்களில் எவனுமே, அவனுக்கு அன்னவனுடைய தந்தையையும் தனயனையும், இன்னம் எல்லா மனிதகோடிகளையும் பார்க்கினும் நான் அதிக உகப்பா யிராதவரையில் ஈமானைப் பெற்றுக்கொள்ள மாட்டான்," என்று அல்லா(ஹ்)வின் திருத்தூதர் அறைந்துள் ளார்கள்.— (பு'க'ாரீ 2 : 7)

கள் தங்கள் அரப்நாட்டு ஐதிகத்துக்கு முற்றும் மாற்றமாகத் தங்களுடைய வீடு வாசல்களையும், பெண்டு பிள்ளைகளையும், சொத்து சுதந்தரங்களையும் துறந்துவிட்டு, இஸ்லாத்தின் நன்மையையே நாடி, இந்நகருக்குள் வந்து அடைக்கலம் புகுந்து விட்டார்கள். அவர்களுடைய வறிய நிலையைக் கண்டு, மதீனத்து அன்சார்கள் எத்துணை மட்டும் உதவிபுரிய முன்வந்தார்க ளென்பதை முன்னமே நாம் நன்கறிந்து கொண்டிருக்கிறோம். இத்தகைய சகோதர வொற்றுமையால் தமக்குள்ளே எவர் தீ'னுல் இஸ்லாத்திற்காக அதிகம் உழைப்பதென்னும் விஷயத்தில் ஒருவரோடொருவர் மிகவாகப் போட்டிபோட்டுக் கொண்டிருந்தார்கள்.

இவர்களல்லாமல், இதற்கு முன்னம் கூறியிருப்பதே போன்று எஹூதிகளும் மற்றொருபக்கல் இருந்தே வந்தார்கள். அவர்களுக் கிருந்துவந்த செல்வப் பெருக்காலும் செல்வாக்கு மிகுதியாலும் அவர்களுக்கும் மக்காவில் வாழ்ந்துவந்த :குறைஷியர்களுக்கும் நெருங்கிய சிநேகபாவமே இருந்துவந்தது. ஆரம்பத்திலே அந்த யூதர்கள் நம் பெருமானார்மீது சிறிது அபிமானம் பாராட்டி வந்தார்கள். என்னெனின், தாங்கள் எதிர்பார்த் திருந்த அந்நத் தீர்க்கதரிசி இவரா யிருப்பது முடியாதென்று தீர்மானம் செய்துகொண்டபோதினும், தங்களுக்கு விரோதிகளா யிருந்துவந்த ஒளஸ், க''ஜ்ரஜ் வர்க்கத்தினர்மீது பழிதீர்த்துக் கொள்வதற்கு இம்மகானின் பேருதவி அதிக உபயோகமுள்ளதா யிருக்குமென்று அந்தரங்கத்திலே அவாக் கொண் டிருந்தார்கள் ; நபிகள் திலகத்தின் உதவியைக்கொண்டு அந் நாட்டிலுள்ள எல்லா அராபிக் குடிகளையும் வென்றுகொண்டு, தங்களுக்கு விருப்பமாகிய யூதராஜ்யத்தையும் நிலைநிறுத்தி விடலாமென்று நாட்டங் கொண் டிருந்தார்கள்.

இன்னம், அதுவரை நபிகள் பெருமான் அவர்கள் இஸ்லாத்தின் :கிப்'லாவை— (தொழுந் திசையை) அந்த எஹூதிகளின் திக்காகிய பை'த்துல் மு:கத்'த'ஸின் (ஜெரூஸெலத்தின்) பக்கமே, வடக்குத் திக்கை நோக்கி வைத்துக்கொண் டிருந்ததனாலும் அவர்கள் நபிகள் நாயகத்திடம் சிறிது பக்ஷம் பாராட்டி வந்தார்கள் ; அவ் விஷயத்தில் பெருமையும் சிறிது கொண்டே யிருந்தார்கள். இவ்வாறாய பல காரணங்களைக் கொண்டுதான் அந்த யூதர்க ளெல்லாரும் மற்ற மதீனாவாசிகளுடன் கலந்துகொண்டு நபிகள்நாதரின் (சல்) திருவிஜயத்தின்போது நல்வரவேற்றார்கள். நபிகள் திலகம் முஹாஜிரீன்களுக்கும் அன்சாரிய்யீன்களுக்கு மிடையில் ஒருவகைச் சகோதர பாந்தவ்யத்தை ஏற்படுத்தியதேபோல், அம் முஸ்லிம்களுக்கும் ஆங்கிருந்த எஹூதிகளுக்கும் இடையிலுங்கூட ஒருவகை ஸமரஸ உடன் படிக்கையை நிறைவேற்றி வைத்தார்கள். நம் மகோபகாரி யவர்களால் அன்று முடிவுசெய்து வைக்கப்பட்ட சமாதான உடன்படிக்கை இன்னம் பத்திரமாகவே காப்பாற்றப்பட்டு வருகின்றது. அதிலுள்ள நிபந்தனைகளை உற்று நோக்குங்கால், அப்பெரியார் எத்துணைப் பெரிய ஞானவான் என்ப

தும், எத்துணைப் பெரிய தீர்க்கதிருஷ்டி யுடையவ ரென்பதும் மிகச் செம்மையாக விளங்கக் கிடக்கின்றன. அதிலிருந்து அவருடைய ராஜ்ய தந்திரம் இத்துணைச் சிலாக்கியம் வாய்ந்த தென்பதும் நன்கு காணப்படா நின்றது. விசுவ சகோதரத்துவக் கொள்கைக்கென்று அம்மகான் போட்டு வைத்த அஸ்திபாரமும் அதினின்று இன்றளவும் நன்கு பிரதிபலித்துக் கொண்டே நிற்கின்றது.

மதீனத்து யூதர்களுடன் செய்துகொண்ட சமாதான உடன் படிக்கையில் மொத்தம் ஏழு அம்சங்கள் காணப்படுகின்றன. அவை முறையே வருமாறு :— (1) முஸ்லிம்களுக்கும் எஹூதிகளும் இனி ஒரே இனத்தவரே போன்று வசித்துவரக் கடவார்கள். (2) அவ்விருவரும் தத்தமக்குரிய மார்க்கத்தி லிருந்துவருவார்கள்; ஒருவர் மற்றவருடைய மதவிஷயத்தில் தலையிடுவது கூடாது. (3) மூன்றாவதொரு வகுப்பினருடனே போர்புரிய நேருங்கால், ஒருவர் மற்றொருவருக்கு உதவிபுரிதல் வேண்டும்; ஆனால், வலுவிலே ஒருவர் வேறொரு வர்க்கத்தாருடன் போர்தொடங்க நேருங்கால், இவ்விதி எவரையும் கட்டுப்படுத்த மாட்டாது; பிறரால் இவர்கள் துன்புறுத்தப்படுங் காலத்திலேதான் இந்நிபந்தனை இருவருக்கும் செல்லத் தக்கதாகும். (4) மதீனாவின்மீது எவரேனும் படையெடுத்துவர நேருமாயின், முஸ்லிம்களும், எஹூதிகளும் ஒற்றுமையாகவே அதைத் தற்காத்திடுதல் வேண்டும். (5) அவசியமானபோது சமாதான உடன் படிக்கை செய்ய நேருங்கால், ஒருவர் மற்றொருவரைக் கலந்தாலோசித்துக் கொண்டு, இரு வர்க்கத்தாரும் உடன்படிக்கையை ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும். (6) மதீனா நகர் இரு சாராராலும் பரிசுத்த முடையதாகக் கருதப்பட்டு, அவ்விடத்திலே இரத்தம் சிந்துவது கூடாது; ஆனால், மற்ற விதமான பழைய பழிக்குப் பழிவாங்கும் வழக்கம் அவரவருக் கேற்ற வண்ணம் அ'மலி லிருந்துவரலாம். (7) எந்தக் கூட்டத்தினரும் மக்கத்துக் :குறைஷியருக்கு உதவிபுரிதல் கூடாது. ஏதேனும் அவர்களுக்குள் சச்சரவு ஏற்பட்டு விடுமாயின், அதனைத் தீர்த்து வைக்கவேண்டிய முடிவான நியாயாதிபதி ரஸூலுல்லா(ஹ்) அவர்களாகவே இருந்து வருவார்கள். இந் நிபந்தனைகள் அனைத்தையும் அந்த யூதர்க ளெல்லாரும் ஒரேமுகமாக ஒத்துக்கொண்டே யிருந்தார்கள். எவரும் விலக்கா யிருக்கவில்லை.

அதற்கு முன்னே அந்த அராபியர்களுள் நியாய விசாரணையென்ப தொன்றும் இல்லாம லிருந்து வந்தது. ஒருவனுக்கு மற்றொருவனால் ஏதேனும் கஷ்டநஷ்டம் ஏற்பட்டு விடுமாயின், அவன் தன்னுடைய சொந்த பலத்தைக் கொண்டேனும், தன்னுடைய இனத்தவரின் பலத்தையும் சேர்த்துக் கொண்டேனும் தன் பகைவன்மீது பழிதீர்த்துக் கொள்வான். இக்கொடிய பாமர வழக்கம் அந்த உடன்படிக்கையால் அடியோடு ஒழிக்கப்பட்டுப் போய்விட்டது. எனவே, எம் நபிகள் திலகத்தின் இணையற்ற நபித்துவத்தாலும் நியாயமான நேரிய மனப்

பான்மையாலும் எல்லாராலும் ஏகோபித்து ஏற்றுக்கொள்ளப் படத்தக்க முதன்மையான நியாயாதிபதியாக அவர்கள் அங்கீகரிக்கப்பட்டு விட்டார்கள். ஆனால், ஆரம்பத்தில் ப'னீ நலீ'ர்களும், ப'னீ :குறைள'ாக் களும், ப'னீ :கனீ:காஃ'களும் இச் சமாதான உடன்படிக்கையில் சேர்ந்து கொள்ளா விடினும், ஹிஜ்ரீ இரண்டாவ தாண்டிலே அதை முழுதும் அங்கீகரித்துக்கொண்டு விட்டார்களென்று சில சரித்திராசிரியர்கள் கூறியிருக்கின்றார்கள்.

இங்ஙனம் ய:த்ரிபி'ன்கண் ணிருந்துவந்த கூட்டத்தினர்களுடன் இவ் வுடன்படிக்கையைச் செய்துகொண்டவுடன், மதீனாவின் சுற்றுப்புறங்களில் வதிந்துவந்த கூட்டத்தினருட னெல்லாமும் இவ் வுடன்படிக்கையை நிறைவேற்றிக் கொள்வது நலமென நபிகள் (சல்) அவர்கள் எண்ணங்கொண்டார்கள். என்னெனின், அதில் இரண்டு விதமான பிரயோஜனங்கள் காணப்பட்டன :—

(1) பற்பல :கபீ'லாக்களுள் பன்னெடுங்கால முதற்கொண்டே நடந்துவந்துகொண் டிருந்தே உட்சண்டைக ளொழிந்து, இனி மக்களுடைய உதிரத்தால் வெண்தரையானது செந்நிறமாகாம லிருக்கும். அன்றியும், அவர்களுக்குள்ளே சினேகமும் நாளுக்குநாள் நன்கு வளர்ந்தோங்கிவரும்.

(2) யாம் எந்த :கபீ'லாக்காரர்களுடன் உடன்படிக்கை செய்து கொள்ளுகிறோமோ, அவர்களை மக்கத்துக் :குறைஷியர் எமக்கு விரோதமாகக் கிளப்பிவிடல் முடியாது.

(க) இப் பரிசுத்த எண்ணத்துடனே எம்பிரான் (சல்) அவர்கள் ஹிஜ்ரீ முதலாவ தாண்டில், மக்காவுக்கும் மதீனாவுக்கு மிடையே யிருக்கும் வுத்'தா'ன் எனும் ஸ்தலம்வரை பிரயாணஞ் செய்தார்கள். ஆங்கிருத்த ப'னீ ஹம்'ஜா பி'ன் ப'க்ர் பி'ன் அ'ப்'துமனா'ப் என்னும் கூட்டத்தவருடன் இவ் வுடன்படிக்கையை நிறைவேற்றிக் கொண்டார்கள்.

(உ) இம் மேலான நோக்கத்தைக் கொண்டே நபிகள் பிரானவர்கள் ஹிஜ்ரீ இரண்டாவதாண்டில், ரில்'வா வென்னு மிடம்வரை சென்று, கோஹெ பு'வாத்தின் மக்களை யெல்லாம் இவ்வுடன்படிக்கையில் சேர்த்துக் கொண்டார்கள்.

(ங) அவ்வாண்டின் ஆறுவது மாதத்தில் ரஸூலுல்லா அவர்கள் 'தல் அ'ஷீரா (யன்பூ'உ'க்கும் மதீனாவுக்கும் இடையே யுள்ள இடம்) வரை சென்று, ப'னீ மத்'லஜ்களுடன் இவ் வுடன்படிக்கையை நிறைவேற்றிக் கொண்டு, திரும்பி மதீனாவந்து சேர்ந்தார்கள்.

எனவே, பொதுவாகக் கவனிக்கப் புகுமிடத்து, நபிகள் (சல்) அவர்கள் தங்களது இம் மேன்மையான எண்ணத்தை நிறைவேற்றிக்கொள்ளப் போதிய அவகாசம் கிட்டியிருக்கு மாயின், எம்பெருமானின் சற்குணங்கள் மிகநன்றாக விளக்கமாய்ப் போயிருக்குமென்பது துலக்கமாகின்றது. இத

னுல்தான் நபிகள் நாயகமவர்கள், "நான் சற்குணங்களைச் சம்பூர்ணமாக்கி வைக்கவே அனுப்பப்பட்டேன்," என்று கூறியிருக்கின்றுர்கள். அஃதாவது, எம் வள்ளல் அவர்கள் இவ்வுலகின்கண் வாளை ஓச்ச வரவில்லை. ஆனுல், உலக மக்கள்பால் சாந்தத்தையும், சமாதானத்தையும், அன்பையும், அமைதியையுமே நிலைநாட்ட வந்தார்களென்பது தெள்ளிதாகப் போயி ருக்கும். 'பூமியின்மேல் சமாதானத்தை அனுப்ப வந்தேன் என்று எண்ணு திருங்கள்; சமாதானத்தை யல்ல, பட்டயத்தையே அனுப்பவந்தேன்' (மத்தேயு 10 : 34) என்று ஒரு தீர்க்கதரிசி சொல்லியதேபோல நாயகம் (சல்) அவர்கள் என்றும் எங்கும் சொன்னுர்க ளில்லை.—(ர'ஹ்மத்துல் லில் ஆ'லமீன்)

மேற்கூறிய இரு வர்க்கத்தினரல்லாமல் மூன்றுவதாக மற்ருெரு வகை யாரும் அதுபோழ்து அம் மதீனுவின்கண் முளைக்கத் தலைப்பட்டு விட்டார்கள். நபிகள் பெருமானுர் மதீனுவுக்கு விஜயம் செய்த பின்பு ஔஸ், க''ஜ்ரஜ் வர்க்கத்தினர் அனைவரும் தீ'னுல் இஸ்லாத்தில் சேர்ந்து கொண்ட போதினும், அத்தகைய முஸ்லிம்களுள்ளே ஒருசிலர் முற்றும் நபிகள் நாயகத்தின்மீது உறுதிகொள்ளாது, உள்ளொன்றும் புறம்பொன்று மாக வைத்து நடிக்கக்கூடிய நயவஞ்சகர்களாகவே யிருந்து வந்தார்கள். அக்கூட்டத்திற்கு அ'ப்'து'ல்லா பி'ன் உபை' ஸலூல் என்பானே தலைமை வகித்து வந்தான். இப் பணக்காரனுக்கு மதீனுவின்கண் அதிகமான செல்வாக் கிருந்துவந்தது. நபிகள் நாயகத்தின் திருவிஜயத்துக்கு முன்னே இம்மனிதன் அந்நகரத்தின் தலைவனெனப் பட்டஞ் சூட்டப்பட வேண்டிய வனு யிருந்தான். இன்னம் சில தினம்வரை நபிகள் பிரான் அங்கு ஹிஜ்ரத் சென்றிராமற் போயிருப்பார்க ளாயின், அந்த அ'ப்'து'ல்லாவுக்கு "ய:த்ரி பி'ன் தலைவர்" என்னும் பட்டம் அரசர்களுக்கு முடிசூட்டும் வைபவமே போலச் சூட்டப்பட்டிருக்கும்; ஆனுல், அதற்குள்ளே நபிகள்திலகம் (சல்) ஆங்கு விஜயம் செய்துவிட்டமையான், அ'ப்'து'ல்லாவின் ஆர்வமிக்க எண்ணங்க ளெல்லாம் அடியோடு தகர்க்கப்பட்டுப் போய்விட்டன; இதனுல் அவனுக்குண்டான அழுக்காற்றுக் கோர் அளவென்ப தில்லை. ஆயினும், அவன் தானே ஒன்றும் செய்துகொள்ள முடியாமல், வெளித் தோற்றத்தில் வெறுமனே இருக்கவேண்டியவ னுகவே அடங்கிவிட்டான். அவனுடைய வர்க்கத்தாருள் பெரும்பான்மையோரும் தீ'னுல் இஸ்லாத் தைத் தழுவிவிட்ட காரணத்தால், அ'ப்'து'ல்லா பி'ன் உபை'யும் வெளிப் பார்வைக்கு ஒரு முஸ்லிமேபோல் ப'த்'ரு யுத்தத்துக்குப் பின்னே மாறி விட்டான். ஆனுலும், அந்தரங்கத்தில் அவனுக்குச் சிறிதும் இஸ்லாத்தில் அபிமான மில்லை. ஆதலின், அவன் உயிருட னிருந்த காலமெல்லாம் மிக்க நெருக்கடியான சமயங்களில் முஸ்லிம்களுக்கும் நபிகள் பிரானுக்கும் அளவற்ற தீங்குகளை யெல்லாம் இழைத்துவந்தான். எனவே, இஸ்லாமிய சரித்திரத்தில் இத்தகைய நயவஞ்சகர்களுக்கு "முனு'பி(க்):கீன்"கள் என்று

பெயர் கூறப்பட் டிருக்கிறது. இவர்களது அக்கிரமத்தைப் பற்றியே ஆண்டவனும் தனது திருமறையின் ஓர் அத்தியாயத்திலே மிகவிவரமாகக் கூறியுள்ளான்.

இங்கு, நாயகமவர்களுக்கு மக்காவின்கண் எத்துணைத்தூரம் எதிர்ப் பிருந்துவந்தது? இங்கு மதீனாவின்கண் நபிகள்(சல்) அவர்களுக்கு எத்துணை மட்டும் எதிர்ப் பிருந்துவருகின்றது? எம்பிரான் அவர்கள் மக்காவின் பால் அடைந்தது பெரிய வெற்றியா? அல்லது மதீனாவின்பால் பெற்றது பெரிய வெற்றியா? என்று ஒருசிறிதே கவனித்தல் வேண்டும். மக்காவில் :குறைஷிகளென்னும் ஒரே ஒரு வர்க்கத்தினரின் ஆட்சியும் அதிகாரமுமே இருந்துகொண் டிருந்தன. அதுவேயுமன்றி, அவர்களெல்லாரும் அநேகமாக விக்ரஹாராதனை புரிபவர்களாகவே யிருந்துகொண் டிருந்தனர். ஆனால், மதீனாவோ, பற்பல விதமான மதத்தினர்களைக் கொண்டதா யிருந்துவந்தது: இங்கு விக்ரஹாராதனைக்காரர்களு மிருந்தார்கள்; கிறிஸ்தவர்களும் பலர் வசித்து வந்தார்கள்; யூதர்களும் எண்ணிறந்தபேர் இருந்துகொண்டிருந்தார்கள். யூதர்களுள் அதிக பலமுள்ளவர்களும் தனவந்தர்களுமான ப்னீ நலீ'ர், ப்னீ :கனீ:கா'', ப்னீ :குறைள'ா முதலிய கூட்டத்தினர் இந்நகரில் தங்களுக்குத் தனித் தனியாயுள்ள கோட்டைகளில் வசித்துக்கொண் டிருந்தனர். வர்த்தகத்தின் பெருக்காலும், வட்டி வாங்குவதன் பொருட்டாலும் இன்னார் மாபெரும் செல்வர்களாகத் திகழ்ந்துநின்றனர்.

'ஹ'ஜ்ரத் மூஸா(அ'லை) அவர்கள் யூதர்களை நோக்கி, "ப்னீ இஸ்ராயீலுடைய சோதரர்களுள்ளிருந்து மூஸாவே போன்ற ஒருநபியை (அல்லாஹ்) உண்டுபண்ணுவான்," என்று உபதேசம் செய்துசென்றது இவர்களுக்கெல்லாம் நன்கு தெரியும். எனவே, இந்த யூதர்கள் தாங்கள், க்ஷீணிப் படைந்ததன் பின்னால் மூஸாவால் வாக்களிக்கப்பட்ட "அந்த நபி" எப்பொழுது தோன்றப் போகின்றார்? என்று ஆவலுடனே எதிர்பார்த்துக் கொண் டிருந்தனர். அன்றியும், ப்னீ இஸ்ராயீலின் சகோதரர்களாய ப்னீ இஸ்மாயீ'ல்களுள்ளிருந்து தோன்றும் நபியானவர், யூதர்களுடைய க்ஷீணிப்பையும் பிற்போக்கையும் நீக்கி, தங்கள்பாலிருந்து கைநழுவிப் போய்விட்ட முன்னேற்றத்தையும் கௌரவ கண்ணியத்தையும் அரசுரிமையையும் மறுமுறையும் உயிர்ப்பிக்கச் செய்வாரென்றும் பெரிதும் எதிர்பார்த்துக்கொண் டிருந்தனர். யூதர்கள் சிரியாவினின்று அப்புறப் படுத்தப்பட்டு அதிக கேவலமானவர்களாகச் செய்யப்பட்டதன்பின் னின்றே இந்த நபியை எதிர்நோக்கி நின்றனரென்று சொல்லலாம்.

எனவே, ப்னீ இஸ்மாயீ'ல்களுள்ளிருந்து தோன்றிய நபியானவர் ய:த்ரிபு'க்கு (மதீனாவுக்கு) வந்துவிட்டா ரென்று கேள்வியுற்ற வுடனே யூதர்களெல்லாம் அளவிகந்த ஆனந்தங் கொண்டார்கள். ஆனால், நம் நபிகள்(சல்) அவர்கள் மஸீ'ஹ் உண்மையானவ ரென்றும், அவருடைய

போதனைக ளெல்லாம் சத்தியமானவைதா மென்றும், மஸீ'ஹின்மீதும் முஸ்லிம்கள் அத்யாவசியமாக ஈமான் கொள்ள வேண்டுமென்றும், மேலும் மஸீ'ஹை உயர்த்திச் சொல்லியும், ஆனால், யூதர்கள் மஸீ'ஹின்பால் நடந்து கொண்ட முறையெல்லாம் தவறானதே யென்றும் சொல்லிக்கொண் டிருப்பதை யூதர்கள் கேள்வியுற்ற பின்னர் அவர்க ளெல்லாரும் நாயகம் (சல்) அவர்களுக்கு ஜன்ம விரோதிகளாக மாறிவிட்டனர்.

இஃது ஒருபக்கல் கிடக்க. மஸீ'ஹென்னும் ஈ'ஸா நபியவர்கள் இறுதி உபதேசத்தில், "சத்திய ஆவியாகிய அவர் வரும்போது, சகல சத்தியத்திற் குள்ளும் உங்களை நடத்துவார்; அவர் தம்முடைய சுயமாய்ப் பேசாமல், தாம் கேள்விப்பட்டவைகள் யாவையுஞ் சொல்லி, வரப்போகின்ற காரியங் களை உங்களுக்கு அறிவிப்பார். அவர் என்னுடையதில் எடுத்து உங்களுக்கு அறிவிப்பதினால் என்னை மகிமைப் படுத்துவார்"—(யோவான் 16 : 13, 14) என்று சொல்லிச் சென்றிருப்பதனால் கிறிஸ்தவர்களும் பின்னே வரப்போகும் அந் நன்னபியை எதிர்நோக்கிய வண்ணமே யிருந்துகொண் டிருந்தனர். வரப்போகின்ற நபியைக்கொண்டு யூதர்கள் இழைத்த அக்கிரமங்களுக்குப் பதில்வாங்க வேண்டுமென்றும், மஸீ'ஹின் உயர்வை வானளாவச் செய்ய வேண்டுமென்றும் கிறிஸ்தவர்கள் தமதுள்ளத்தி னுள்ளே எண்ணிய வண்ணமே யிருந்துகொண் டிருந்தனர். எனவே, இத்தகைய மனோராஜ்யம் கொண்டிருந்த கிறிஸ்தவர்கள் நபிகள் (சல்) அவர்கள் மதீனாவின்கண் விஜயம் செய்துள்ளார்க ளென்பதைக் கண்டவுடனே கரைகடந்த களிப்புக் குள் ளாயினார்கள். ஆனால், நாயகம் அவர்கள், பிதா-குமாரன்-பரிசுத்தஆவி யென்னும் மூன்றுவிதத் தெய்வமும், பாபிகளுக்காக— (இல்லை, உலக மக்க ளுக்கெல்லாம் பாவப் பிராயச்சித்தத்தின் பொருட்டு) மஸீ'ஹ் சிலுவையிலே இரத்தஞ் சிந்தினாரென்பதும், உலகத்தை யெல்லாம் வெறுத்துச் சுத்த சன்னியாசத்தையே கைக்கொள்ள வேண்டுமென்பதும், போப் அல்லது பாப்பாண்டவரின் அதிகாரமும் ஆதிக்யமும் வீணான ஆடம்பரங்களாகு மென்று மறுத்துக் கூறியதனால், மதீனாவின்கண் ணிருந்த கிறிஸ்தவர்க ளெல்லாம் நாயகமவர்களுக்கு மாகொடிய விரோதிகளாக மாறிவிட்டனர்.

பொதுவாக மதீனாவின் நிலைமையைக் கவனிக்க வேண்டு மாயின், உதாரணமாக, அ'ப்'து'ல்லா ஹிப்'னு உபை' இப்'னு ஸலூல் என்னும் முனா'பி:க்கின் நிலைமையைக் கொண்டு ஒருவாறு செவ்வனே தெரிந்து கொள்ளலாம். யூதர்களுக்கு அடுத்தபடியில் இரண்டாவதாக இந்த அ'ப்'து'ல்லா ஹிப்'னு உபை' என்பானே மதீனாவின் மாபெருந் தலைவனாகத் திகழ்ந்துநின்றான். ஒளஸ், க''ஜரஜ் என்னும் கூட்டத்தின ரெல்லாம் இவன் வார்த்தைப்படியே நடந்து வருவார்கள். ஆகலான், அ'ப்'து'ல்லா பி'ன் உபை' அவ்விரு கூட்டத்தினரைக் கொண்டேதான் மதீனாவுக்கே ஓர் அரசனேபோல் ஆய்விட வேண்டுமென்று இரகசியத்தில் எண்ணிக்கொண் டிருந்தான். ஆனால், நாள் செல்லச் செல்ல ஒளஸு

க''ஜ்ரஜ் கூட்டத்தின ரெல்லாம் சிறுகச்சிறுக முஸ்லிம்களாக மாறிக் கொண் டிருந்ததைக் கண்டு, (ப'த்'ர் யுத்தத்துக்குப் பின்னே) தானும் இஸ்லாம் மார்க்கத்தை ஏற்றுக்கொண்டவனே போல வெளியில் நடித்துக் கொண் டிருந்தான். யூதர்களெல்லாம் நாயகமவர்களுக்குப் பகைவர்களா யிருக்கின்றன ரென்று உணர்ந்து, பழையபடியே ப'னீ நலீ'ர் ப'னீ :கனீ:காஃ', ப'னீ :குறைள'ாக்களின் வயமே தலைமைப் பதவி இருக்க வேண்டு மென்று எண்ணினன். முஸ்லிம்களாக மாறிப்போய்க் கொண் டிருந்த ஔஸ் க''ஜ்ரஜ்களின்மீது தனது பழைய ஆதிக்யமே இருக்க வேண்டு மெனக் கருதினன். எனவே, இக்காரணத்தைக் கொண்டுதான் இந்த அ'ப்'து'ல்லா பி'ன் உபை' யென்பான் முஸ்லிம்கள்பால் வீற்றிருக்கும் போது, இவர்களுடனே சேர்ந்துகொண் டிருப்பதாகக் கூறுவான்; இஸ்லாத்துக்கு விரோதிகளா யிருக்கும் கூட்டத்தவரிடம் சென்று சேரும் போது, அன்னவர்களுடனேதான் தானு மிருப்பதாகத் தெரியப்படுத்திக் கொள்ளுவான்.

எனவே, இஸ்லாம் தோன்றி, இதற்குரிய மூலபுருஷர் மதீனாவுக்குள் ளேயே வந்து நுழைந்துகொண்டது இந்த அ'ப்'து'ல்லாவுக்கு ஒரு பெரிய தர்மசங்கடமாகவே தோன்றலாயிற்று. ஆதலினாற்றான், அமயம் கிடைத்த போதெல்லாம் இஸ்லாத்தை அழித்தொழித்துவிட வேண்டு மென்பதில் ஒருசிறிதும் பின்தயங்காமலே இருந்துவந்தான். இதனால்தான் இவனுக்கு ஏனை எல்லா வர்க்கத்தினரும் முனா'பி:க்கென்று (நயவஞ்சக னென்று) ஒரு நாமத்தைச் சூட்டினர். இதுவே மதீனாவின் பொதுவான நிலையாகும். இதனால் இங்கு இஸ்லாத்தைப் பிரசாரம் செய்வதில் எத்துணைத் தூரம் சங்கடங்க ளுண்டாகு மென்பதை நீங்களே சிறிதேனும் நிதானித்துக் கொள்ளலாம். உண்மை விஷயம் இவ்வாறிருந்துங்கூட, இத்தனை வித மான சங்கடங்க ளுள்ளெல்லாம் சிக்கிக்கொண்டு நின்று, இறுதியிலே இஸ் லாமே ஜயம்பெற்று வெற்றி முரசு கொட்டி, வாகைமாலை சூடி வெற்றிக் கொடியுடனே வெளிவந்து விளங்கிய தென்றால், இம்மார்க்கம் உண்மை யானதே, சத்தியமானதே யென்று சொல்வதற்கு வேறென்ன சாக்ஷியம் வேண்டும்? இந்த வெற்றியைச் சுட்டிக் காட்டியேதான் அல்லாஹுத் தஆ'லா பின்னே கிடைத்திருக்கும் வெற்றியானது முன்னே (மக்காவில்) கிடைத்ததைப் பார்க்கினும் மேலானதா யிருக்கின்ற தென்று கூறியுள் ளான்.— (ர'ஹ்மத்துல் லில்ஆ'லமீன்)

இவ்வாண்டில்— (ஹிஜ்ரீ முதலாவதாண்டில்) குல்:தூம் பி'ன் ஹத'ம், அஸ்அ'த்' பி'ன் 'ஜராரா என்னும் இரு மாபெரிய ச'ஹாப'ாக்கள் காலகதி யடைந்து விட்டார்கள். இவ்விருவருள் முந்திய பெரியாரின் இல்லத்திலே தான் எம்பிரான் (சல்) அவர்கள் :குப'ாயிக்கு விஜயஞ்செய்தபோது வந்து தங்கினர்கள் என்பது நுங்களுக்குத் தெரியும். அன்றியும், :குப'ாயின்பால் வந்துதங்கிய நூற்றுக்கணக்கான ச'ஹாப'ாக்களை 14 நாளும் உபசரித்து

வந்ததும் இப் பெருந்தகையாளர்தாம் என்பதையும் நாம் வேறெடுத்துச் சொல்லவேண்டுவ தின்று. அஸ்அ'த்' பி'ன் 'ஜராரா வென்னும் பெரியாரே, மதீனுவினின்று மக்காவுக்கு விஜயம்செய்து முதன்முதலாக நாயகம் (சல்) அவர்களிடம் பை'அ'த் தென்னும் விசுவாசப் பிரமாணம் செய்துகொடுத் தவர்களுள் ஒருவராவார். அவ் வறுவருள்ளும் முதன்முதலாக நபிபெருமா னிடம் கைகொடுத்தவரும் இவரே யாவார். அதுவேயுமன்றி, மதீனுமா நகருக்குள் முதன்முதலாக ஜுமுஆ'த் தொழுகையைக் கூட்டத்துடன் நடக்கும்படி ஏற்பாடு செய்து வைத்தவரும் இப்பெரியாரே யாவார்.

இஃ திங்ஙன மிருக்க, இதே ஆண்டில், கு'ப்'பார்களின் மாபெருந் தலைவர்களுள், வலீத்' பி'ன் மு:கீரா— (க்'ாலிதி'ன் தந்தை) ஆ'ஸ் பி'ன் வாயில் ஸஹ்மீ— (இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டபின் மிஸ்ரை வென்ற வரும், அமீர் முஆ'வியாவின் பிரதம மந்திரியுமா யிருந்த அ'ம்ருடைய தந்தை)யும் இறந்துபட்டனர். இதே ஆண்டிலேதான் அ'ப்'து'ல்லா பி'ன் 'ஜுபை'ர் மதீனுவில் ஜனனமாயினுர். இவருடைய தாயார்தாம், நாயகம் (சல்) அவர்கள் மக்காவினின்று ஹிஜ்ரத் புறப்பட்ட நேரத்தில் கட்டமுது கட்டக் கயிறில்லாமையால் தமது இடுப்புப்பட்டியை இரண்டாகக் கிழித் துக்கட்டிய 'தாத்துன் னி:தா:கன் என்னும் சிறப்புப்பெயரும், அஸ்மா வென்னும் இயற்பெயரும் பூண்ட 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ரின் மூத்த குமாரி யாவார். இன்னம், இதுவரை தொழுகைக ளெல்லாம் இரண்டிரண்டு ரக்ஆ'த்களைக் கொண்டனவா யிருந்துவந்தன. இதன் பிறகுதான் ளு'ஹ்ர், அ'ஸ்ர், இ'ஷாவுடைய தொழுகைகள் நந்நான்கு ரக்ஆ'த்களாகச் செய்யப் பட்டுவிட்டன. ஆனுல், மக்கள் பிரயாணத்தி லிருக்கும்போது இத் தொழுகைக ளெல்லாம் இன்னமும் இரண்டு ரக்ஆ'த்தாகவே சாசுவதம் செய்யப்பட் டிருக்கின்றன.

நபிகள் திலகம் மதீனுவிற்குள் விஜயம் செய்ததன் பின்னுல் சற்றேறக் குறையப் பதினறு, பதினேழு மாதகாலம் வரை பை'த்துல் மு:கத்'த'ஸே அம் முஸ்லிம்களின் :கிப்'லாவாக— (முன்னேக்கி நின்று தொழுந்திசை யாக) இருந்துவந்தது. ஆனுல், ஹிஜ்ரீ இரண்டாவ தாண்டு, ஷஃ'பான் மாதத்திலே கஃ'ப'ாவின் திக்கை நோக்கி முகந் திரும்பிநின்று தொழ வேண்டு மென்னும் ஆணையொன்று ஆண்டவனுல் அனுப்பி வைக்கப் பட்டது: "மெய்யாக வானத்தி(ன் பக்க)ல் நுமது வதனம் திரும்புவதை நாம் நோக்குகிறேம்; ஆகலின், நீர்விழையும் உமக்குப் பிரியமாயிருக்கின்ற :கிப்'லாவிற்கு— (கஃ'ப'ாவிற்கு) நும்மை நாம் நிச்சயமாகத் திருப்புவோம்; ஆகவே, அந்தப் பரிசுத்த மஸ்ஜிதி'ன் பக்கல் நும்முடைய வதனத்தைத் திருப்புவீராக. மேலும், நீங்கள் எங்கிருந்த போதினும், (அங்கிருந்தே) அதன்பக்கலே நுங்கள் முகங்களைத் திருப்புவீர்களாக. மேலும், வேதத்தை அருளப்பெற்ற மனிதர்கள் இஃது அவர்களுடைய ரக்ஷகனிடத்திலிருந்து வந்திருக்கும் சத்திய மென்பதை நிச்சயமாகவே அறிகிருர்கள்; மேலும்,

அல்லா(ஹ்) அவர்கள் செய்வதைக் குறித்து அறியாமல் பராமுகமானவனு மில்லை" (2 : 144) என்று ஆண்டவனே தன் திருமறையில் அறைந்திருக் கின்றான்.

"இறையவன் கருபத்துல் லாவென் றெய்திய
துறவுயர் பள்ளியை நோக்கித் தான்தொழ
மறையுரை வழங்கினன் என்ன மன்னபி
முறையிதென் றுனந்தக் கடலில் மூழ்கினார்.— சீறு.

பூவுலகின்கண் காணப்படும் ஒரு ஜாதியாரேனும், சமூகத்தாரேனும்' மதத்தவரேனும் தமது இணையற்ற வாழ்க்கையை நிலைநிறுத்த வேண்டு மாயின், தத்தமக்குரிய ஒரு குறிப்பிட்ட பிரத்தியேக அடையாளத்தைப் பெற்றிருத்தல் வேண்டும். எனவேதான், எமது இஸ்லாமார்க்கம் இந்தக் :கிப்'லாவையே தனக்குரிய சொந்த அடையாளமாகக் கொண்டிருக் கின்றது. தீ'னுல் இஸ்லாத்தில் ஒரு மனிதன் சேர்ந்திருக்கிறானா? இல்லையா? என்பதை அறிந்து கொள்ளுதற்கு இந்தக் :கிப்'லாவே— (கஃ'ப'ாவை முன் னோக்கி நின்று தொழுவதே) ஒரு நிகரற்ற அடையாளமாகக் காணப்பட்டு வருகின்றது; இக் காரணத்தினாலேதான் எம்பிரான் (சல்) அவர்களும், "நுங்கள் :கிப்'லாவையே தங்கள் :கிப்'லாவாகக் கொண்டு தொழும் எந்த மனிதரையும் கா'பிரென்று கூறாதீர்கள்," என்று வற்புறுத்திக் கூறி யிருக்கின்றார்கள்.

இஸ்லாத்தின் அனுஷ்டானக் கொள்கைகளுக்குரிய முதன்மையான தூண் ஐந்துநேரத்தின் தொழுகையாகவே அமைந்திருக்கின்றது. எனவே, ஒவ்வொரு வேளைத் தொழுகையின்போதும் ஒவ்வொரு முஸ்லிமும்— அவர் இந்தப்பூகோளத்தின் எந்தக்கோணத்திலிருப்பினும்—அந்தக்கஃ'ப'ாவையே முன்னோக்கி நிற்றல் வேண்டும். ஒவ்வொரு நேரத்துத் தொழுகையையும் ஆவசியகத்தினிமித்தம் தனித்திருந்து தொழுதுகொண்டபோதினும், கூடிய வரை எல்லா முஸ்லிம்களும் எல்லா நேரங்களிலும் ஏகோபித்துக் கூட்ட மாகத் தொழுவதே சாலச் சிறந்ததாகும். இவ்வாறு ஆயிரக்கணக்கான மக்கள் ஒருமித்துத் தொழும்போது, அவர்க ளெல்லாருடைய உள்ளங் களும் ஓரேநிலையிலே ஐக்கியப்பட்டு விடுகின்றன; அன்னவரின் புறவுறுப் பிற்குரிய இயக்கங்களும் ஒருதன்மைப் பட்டனவாகவே காணப்பட்டு வருதலினால், அவர்க ளெல்லாருடைய தொழுந்திசையும் ஓரே திக்காகவே அமைந்திருக்க வேண்டுவது அத்தியாவசியமாய் விடுகின்றது. இவ்வாறு செய்யாது, ஒவ்வொருவரும் ஒவ்வொரு திக்கைநோக்கி நிற்பதாயிருப்பின், தொழுகையில் பல குழப்பங்களும் வழக்கத்தில் பற்பல மௌட்டியங்களும் முளைப்பதற்கு ஏதுவுண்டாய்விடும். இன்னம், வெவ்வேறு மனிதர் வெவ் வேறு திசையை நோக்கித் தொழுதுவருவார்களாயின், இதில் ஏகசகோ தரத்துவம் குன்றிப் பலதிறப்பட்ட பின்னோதர மனப்பான்மையே பெரிதும்

இச் சமூகத்தாருள்ளே குடிபுகுந்துவிடும். முஸ்லிம்களெல்லாரும் ஒரே கட்டுக்கோப்பின் உறுப்புக்களே போல ஒன்றுபட்டு உறுதியாயிருக்க வேண்டுமென்பது எம்பிரான் (சல்) அவர்களது அரியஉபதேசமா யிருந்து வருகிறது.

எனவேதான், இஸ்லாத்தின் :கிப்'லாவானது கஃ'ப'ாவாக நியமிக்கப் பட் டிருக்கின்றது. இப் பரிசுத்த தேவாலயமே இவ்வுலகினில் முதன் முதலாக ஏகதெய்வ வணக்கத்திற் கென்று நிர்மாணிக்கப்பட்ட பை'த் துல்லா(ஹ்) வாகும். பிறகு நபிஇப்ராஹீம்(அ'லை) அவர்களால் பழுதுபார்த் துப் பரிசுத்தமாக்கப்பட்ட அவ் வாலயத்துள்ளே பிற்பட்ட காலத்தில் வந்துற்ற மனிதர்கள் பலதெய்வ விக்ரஹங்களை நுழைத்து விட்டமையால், அவற்றை யெல்லாம் அப்புறப்படுத்தி, அத் தேவாலயத்தை மீண்டும் ஏகேசுவர வணக்கத்திற்குரிய பரிசுத்த ஆலயமாகப் பண்ணவேண்டி யிருந் ததே நபிகள்பெருமானாரின் ஒரு முக்கிய ஊழியமாகக் காணப்பட்டுவந்தது. இப்'ராஹீம்(அ'லை) நபியால் நிலை நிறுத்தப்பெற்ற இஸ்லாத்தையே புனருத் தாரணம் செய்யவந்த இந்த இறுதி நபி, அந்த மஹா நபியால் புனருத் தாரணம் பண்ணி வைக்கப்பட்ட அந்த பை'த்துல்லாவையே தங்கள் சன் மார்க்கத்துக்குரிய :கிப்'லாவாக ஏற்படுத்தப் பெறுதல் நியாயந்தானே! இதைவிடப் பழைய பை'த்துல் மு:கத்'த'ஸ்— இஸ்ரவேலருக்கே உரியது— எவ்வாறு இஸ்லாத்தின் தொழுந் திசையாதல் கூடும்? அத்தகைய :கிப்'லா வானது முஸ்லிம்களின் ஒற்றுமையை நாடியேதான் கஃ'ப'த்துல்லாவாக நிர்ணயிக்கப்பட் டிருக்கிற தல்லது, அவ் விடத்திலேதான் ஆண்டவன் அமர்ந்திருக்கிறு னென்று எமது திருவேதம் எங்கும் இயம்பிற்றிலது. ஆனால், அதற்கு மாறாக, வேறுவிதமாகவே ஆண்டவன் அத்திருமறையிலே அறைந்திருக்கின்றான் :—

"மேலும், கிழக்குத் திசையும் மேற்குத் திசையும் அல்லா(ஹ்)வுக்கே உரியன; எனவே, எத்திசையை நோக்கி நீங்கள் முகந் திரும்புகிறீர்களோ, அத் திசையிலே(தான்) அல்லா(ஹ்)வின் நோக்கம் இருந்துவருகிறது;......" (2 : 115)

"நீங்கள் உங்கள் முகங்களைக் கிழக்குத் திசையை நோக்கியும் மேற்குத் திசையை (நோக்கி)யும் திருப்பிக் கொள்வதே சன்மார்க்கமாக மாட்டாது. ஆனால் (நல்ல) சன்மார்க்கமாவது: அல்லா(ஹ்)வைக் கொண்டும், இறுதித் தீர்ப்புநாளைக்கொண்டும், அமரர்களைக் கொண்டும், வேதத்தைக்கொண்டும், நபிமார்களைக் கொண்டும் நன்னம்பிக்கை கொண்டு; இன்னம், அன்னவன் மீது வைத்த உவப்பி னிமித்தம், சுற்றத்தார்களுக்கும், அகதிகளுக்கும், (வறுமையுற்ற) ஏழைகளுக்கும், வழிப்போக்கர்களுக்கும், யாசகம் கேட் போர்களுக்கும், அடிமைகளுக்கு (உரிமை யளித்தற்கு)ம் (தம்பாலுள்ள) ஐசுவரியத்தை அள்ளிக்கொடுத்து; மேலும், தொழுகையை ஒழுங்குடன் கடைப்பிடித்தும் ஏழை விகிதத்தை ஈந்தும் நடப்பவனே சன்மார்க்கன்

ஆவான்; மேலும், வாக்குறுதி செய்து கொடுக்குங்கால், தங்கள் வாக்குறுதியை நிறைவேற்றி வைப்பவர்களும், கஷ்ட காலத்திலும், சங்கடத்தின்போதும், யுத்த காலத்திலும் பொறுமையுடனிருப்பவர்களும்— இவர்களே தங்கள் (மனஉறுதியை) மெய்ப்பித்துக் காட்டுபவர்கள்;— மேலும், இவர்கள்தாம் தீமையினின்று அஞ்சித் தற்காத்துக் கொள்பவர்கள்.''— (2: 177)

அதற்கு முன்னே முஸ்லிம்கள் ஜெரூஸலத்தின் பக்கல் தங்கள் முகத்தைத் திருப்பித் தொழுதுகொண்டு வந்ததனால், எஹூதிகளும் (யூதர்கள்) தங்களைப் பின்பற்றியே முஸ்லிம்களும் அவ்வாறு செய்து வருகிறார்களென்று கூறிப் பெருமைபாராட்டி வந்தார்கள். மதீனாவிலிருந்த மற்றை மதக்காரர்களெல்லாரும் அதற்குமுன்னே யூதர்களின் மதத்தின்மீது மிக்க மதிப்பு வைத்திருந்தார்கள். என்னெனின், அந்த யூதர்களே மற்றவர்களைப் பார்க்கினும் கல்வியிலும் செல்வத்திலும் தலைசிறந்து விளங்கினார்கள். அவர்கள் தங்கள் மதத்தைப் போதிக்கக் கல்விச்சாலைகளையும் அந் நகரத்திலே ஏற்படுத்தி யிருந்தார்கள். ஆங்கிருந்த முழுமக்கள் தங்களுக்குப் பிறக்கும் முதற் குழந்தைகள் உயிருடனே பிழைத்திருக்க வில்லையாயின், பின்னே பிறக்கும் மற்றக்குழந்தைகள் உயிருடனே இருக்க நேர்ந்தால், அவைகளை யெல்லாம் யூதர்களாக்கி விடுவதாக நேர்ச்சைசெய்து கொள்வார்கள். இவ்வாறெல்லாம் அளவற்ற மதிப்போடு இருந்துவந்த அந்த யூதர்கள் தங்களைப் பின்பற்றியே முஸ்லிம்களும் தொழுது வருகிறார்களென்று பெருமை பாராட்டிக் கொண்டிருந்த சமயத்திலேயே நம் பெருமானார் அவர்கள் ஆண்டவனது ஆணைப்படி :கிப்'லாவை மக்காவின் பக்கல் திருப்பிவிட நேர்ந்தமையால், அந்த எஹூதிகளுக் கெல்லாம் அளவிகந்த மனவருத்தமும் ஏமாற்றமும் ஏற்பட்டுவிட்டன எனல் வேண்டும்.

மக்காவி லிருந்துவந்த காலத்திலே ஏகதெய்வக் கொள்கையை அனுஷ்டித்த தென்னும் ஒரே ஒரு குற்றத்திற்காகவே ஆங்குள்ள :குறைஷியரெல்லாரும் நந் நபிகள் பெருமானுக்கும் மற்றுமுள்ள முஸ்லிம்களுக்கும் இன்னல்களையும் இடையூறுகளையும் இடைவிடாது இழைத்து வந்தார்கள். ஆனால், இம் மதீனாவின் கண்ணோ, வேறு பற்பலவிதமான எதிர்பாராத சங்கடங்க ளெல்லாம் நம் முஸ்லிம்களைச் சூழ்ந்து துன்புறுத்தத் தலைப்பட்டு விட்டன. மதீனாவின்கண் மஸ்ஜிது'ம் கட்டப்பட்டு, ப'ாங்கு சொல்வதற்கும் தொழுது கொள்வதற்கும் சௌகரியம் கிடைத்துவிட்டமையால், அவ்வளவோடு நம் முஸ்லிம்களுக்கு நல்லகாலம் பிறந்துவிட்ட தென்று எட்டுணையும் எண்ணி விடாதீர்கள். அவர்க ளெல்லாரும் மதீனாவின் எல்லைக்குள்ளே எதேச்சையாகத் தெய்வவணக்கம் புரிந்துவந்த போதினும், :கிப்'லாவின் மாற்றத்திற்குப் பின்னால் எஹூதிகளான மாபெருங்கூட்டத்தினர் அனைவரும் தம் மனத்துக்குள்ளே அளவுகடந்த புழுக்கங்கொள்ள ஆரம்பித்து விட்டார்கள். தங்களது மதகௌரவத்துக்கும், தங்களுடைய

கண்ணிய செல்வாக்குக்கும் நம்மஹோபகாரியால் பேருதவி கிடைக்கலா மென் றெண்ணியிருந்த யூதர்களின் மனோராஜ்ய மெல்லாம் ஒருபக்கல் சுக்குச்சுக்காக நொறுக்கப்பட்டுப் போய்விட்டதுடன், இப் பெருநபியவர்க ளால் தங்களுடைய புராதன மதத்திற்கே பேராபத்து நேரிட்டுவிடுதலுங் கூடுமென்றும் அந்த எஹூதிகள் அளவிறந்த சந்தேகத்துள்ளே ஆழ்ந்து விட்டார்கள். அவ்வளவோ டமையாது, மக்காவாசிகளும் தம்மூர்வாசிகள் தமது கையை விட்டுத் தப்பிக்கொண்டு ஓடிவிட்டார்க ளென்று தங்களுக் குரிய வர்மத்தை மேன்மேலும் தமக்குரிய ஆக்ரோஷமென்னும் சாணைக் கல்லின்மீது அதிகம் தீட்டிக்கொண்டே யிருந்தார்கள். அக்கால அராபியர் களின் கலகப்பிரியமும், பிடிவாதகுணமும், எத்தனை தலைமுறைகளாயினும் பழிக்குப்பழி வாங்கவேண்டு மென்னும் குரோதபுத்தியும் இத்தன்மையன வென்பதை அறிந்தவர்களே அன்னவரால் அம் முஸ்லிம்களுக்கு என்ன நேரிடுதல் கூடுமென்பதை ஒருவாறு ஊகித்தறிந்து கொள்ளுதல் சாலும்.

"கொம்புளதற் கைந்து குதிரைக்குப் பத்துமுழம்
வெம்புகரிக் காயிரந்தான் வேண்டுமே— வம்புசெறி
தீங்கினர்தம் கண்ணில் தெரியாத தூரத்து
நீங்குவதே நல்ல நெறி"— என்றவாறு,

முன்னொரு முறை முஸ்லிம்கள் தங்கள் நாட்டைவிட்டுக் கடல் கடந்து அக் கரைத் தேசமாகிய அபிஸ்ஸீனியாவிற்குக் குடியோடி யிருந்தும், அவர்களை அங்கு வாளா விடாது, ஆங்கும் பின்தொடர்ந்து சென்று, அத்தேச நஜ் ஜாஷீயிடம் குதர்க்கங்கள் பல புரிந்து, அம் முஸ்லிம்களைத் திருப்பிக் கொடுக்குமாறு கேட்டவர்களா இப்பொழுது அவர்களை வாளா விட்டு விடப் போகின்றனர்? இதுபோழ்து நபிகள் திலகமும், அவர்களைச் சார்ந்த முஸ்லிம்களும் மதீனாவிற்குச் சென்று சுகமாக முன்னேறி வருவதென்பதை நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும் அந்த மக்கத்துக் :குறைஷியரின் அடி வயிறுனது படீரென வெடித்துக் கொண்டே யிருந்தது. இன்னம், இம் மதீனாவிலே நஜ்ஜாஷீ போன்றோர் அம் முஸ்லிம்களுக்கு உதவிபுரிய இல்லை யென்பதும் அம் மறமாக்களுக்கு அறியக்கிடக்காது போய்விட வில்லை.

அந்தக் குஃப்பார்களுக்குப் பொதுவாக முஸ்லிம்கள்மீதும், சிறப்பாக நபிபெருமான் அவர்கள்மீதும் அளவுகடந்த வைஷம்யமே இருந்துவந்தது. இஸ்லாம் மார்க்கம் ஒருகால் மதீனாவின்கண் ஸ்திரமாக வேரூன்றி விடு மாயின், பிறகு மக்காவிலிருந்து தப்பியோடிய முஹாஜிரீன்கள் தங்கள் சகோதரர்களான அன்சாரிய்யீன்களைத் துணைக்கு அழைத்துக்கொண்டு, தங்கள்மீது பழிதீர்த்துக் கொள்ளுவான் வேண்டி எந்த நேரத்திலும் வந்து விடுதல் கூடுமென்னும் சங்கையும் அக் :குறைஷியரின் உள்ளத்தின்கண்ணே அதிகம் உறுத்திக் கொண்டே யிருந்தது. இதனை அதுசமயம் நிகழ்ந்த ஒரு சம்பவத்தைக் கொண்டும் உதஹரித்துக் காட்டலாம்: ஹிஜ்ரத் நிகழ்ந்த

முதல் வருடத்திலே அபூ'ஜஹ்லின் சிற்றப்பனான வலீ திப்'னு மு:கீரா என்பவன் மரணத்தறுவாயி லிருந்தபோழ்து, தேம்பித்தேம்பி அழுதுகொண்டிருந்தான்; அதனைக் கண்ட :குறைஷித் தலைவரெல்லாரும் அந்தப் பெரிய மனிதன் அவ்வாறு அழுவதன் காரணம் என்னவென்று வினவியபோது, அபூ'ஜஹ்லும், "என் சிறியதந்தாய்! மரணத்திற்கு ஏன் இத்துணைமட்டும் நீர் அஞ்சுகின்றீர்?" என்று விசாரித்தான். அதற்கு வலீத், "நான் மரணத்திற்கஞ்சி இவ்வாறு அழவில்லை. ஆனால், மு'ஹம்மதி'ன் மதமானது எங்கும் பரவி, மக்காவும் அவனது கைவய மாகிவிடக் கூடாதென்றுதான் அதிகம் வருத்தப்படுகிறேன்," என்று விடைகொடுத்தான். அதுசமயம் ஆங்கிருந்த அபூ' ஸுஃப்யான், "ஏ வலீத்'! நீர் ஒன்றுக்கும் பயப்பட வேண்டாம். இஸ்லாமார்க்கம் இங்குப் பரவுதற்கு இடங்கொடுக்க மாட்டோம். அதற்கு யானே பொறுப்பாளி," என்று கர்ஜித்தார்.

மக்கத்துக் :குறைஷியருக்கு இத்தகைய கொடிய சித்தம் இருந்துவருங் காலை, முஸ்லிம்களை எவ்வாறு அவர்கள் சமாதானத்துடனே மதீனாவின் கண் வாழவிடப் போகின்றார்கள்? ஆனால், சென்ற பதின்மூன்றாண்டுகளாக மக்கத்துக் கு'ப்'பார்களிடம் பட்டுவந்த சங்கடங்களினின்று விலகி, 300 மைல்களுக்கப்பாலுள்ள மதீனாவின்கண் புகலிடம் தேடிக்கொண்ட பின்னரேனும் அன்னவரின் தொல்லையைவிட்டு நீங்கியிருக்கலாமென்று எத்துணை மட்டும் முஸ்லிம்கள் ஆர்வங் கொண்டிருந்தும், இப்பொழுதுதான் அந்தக் :குறைஷியர் ஒருபுறத்தும், மதீனாவிலுள்ள எஹூதிகள் மற்றொரு புறத்தும், முஸ்லிம் நயவஞ்சகர்கள் இன்னமொரு புறத்துமாக இந்த முஸ்லிம்களுக்கு ஓயாத பரம சங்கடத்தை உண்டுபண்ணிவரத் தலைப்பட்டார்கள். நபிகள் திலகமும் அவர்களுடைய ச'ஹாப'ாக்களும் மதீனாவிற்குச் சென்று அங்கே அவர்கள் நிலைகொண்டு விடாவண்ணம் முடிவுறத் தாக்கி, அம் முஸ்லிம்களை அடியோடு தொலைத்துவிட வேண்டுமென்று மக்கத்து மறமாக்கள் ஒரு கடுமையான பிரதிஞ்ஞை செய்து கொண்டார்கள். ஆதலின், மதீனாவிலுள்ள முனா'பி(க்):கீன்களுக்குத் தலைவனாய் விளங்கிவந்த அ'ப்'துல்லா பி'ன் உபை' என்பவனுக்கு அம் மக்காவாசிகள் ஒரு பயமுறுத்தலான லிகிதத்தை வரைந்திருந்தார்கள்; அதில், "நீங்கள் எங்கள் (பகைவர்களான) மனிதர்களுக்கு உங்களூரில் பாதுகாப்பளித் திருக்கின்றீர்கள்; ஆதலின், ஆண்டவன்மீது ஆணையாக! நாங்கள் உங்களுக்குக் கூறுவதென்னவெனின், நீங்கள் அவர்களைக் கொன்றுவிடல் வேண்டும்; இன்றேல், மதீனாவை விட்டு அப்புறப் படுத்திவிடல் வேண்டும். அதுவு மின்றேல், நாங்கள் உங்கள்மீது யுத்தம் தொடங்குவோம். மேலும், நுங்களையெல்லாம் கொன்றுதீர்த்து நாசப்படுத்திவிட்டு, நுங்களுக்குச் சொந்தமான பெண்டுகளை யெல்லாம் நாங்கள் சிறைவாரிக்கொண்டு வந்துவிடுவோம் என்பதே," என்று எழுதி யிருந்தார்கள். இச்செய்தியைக் கண்டவுடனே, அ'ப்'துல்லா பி'ன் உபை'யும் அவனுடைய 'சஹாக்களும்' உண்மையிலேயே மக்கத்துக்

:குறைஷியர் தம்மீது படையெடுத்து வந்தார்களாயின், தமது நிலைமையெல்லாம் மிகவுங் கேவலமாகப் போய்விடுமென் றஞ்சியதனுலும், இதற்கு முன்னே எம்பிரான் (சல்) அவர்கள்மீது கொண்டிருந்த புழுக்கத்தின் காரணத்தாலும் நாயகமவர்களுடனே போர் தொடங்குவதேதான் சரியென முடிவுகட்டி விட்டனர். இக்கடிதம் மதீனுவிற்கு வந்துசேர்ந்த சமாசாரம் நபிகள் நாயகத்திற்குத் தெரிந்தவுடனே, அவர்கள் அ'ப்'துல்லா பி'ன் உபை'யிடம் சென்று, "என்ன! நீவிர் உம்முடைய சகோதரர்களுடனும் மனைவி மக்களுடனும் எங்கள்மீது யுத்தம் தொடங்கவா போகின்றீர்?" என்று வினவினர்கள். அதைக் கேட்டு, அ'ப்'துல்லா ஒன்றும்பேச நாவெழாது மௌனமாயே யிருந்துவிட்டான். அவன் அதுவரை இஸ்லாத்தில் சேராதிருந்தும், அவனுடைய நெருங்கிய பந்துமித்திரர்க ளெல்லாரும் தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவிவிட்டமையான், அம் முனு'பி:க் தலைவன் :குறைஷிகளின் கோரிக்கைக் கிணங்க ஒன்றுஞ்செய்ய இயலாதவனுகி விட்டான். ஆனுல், பஹிரங்கத்தில் ஒன்றுஞ்செய்ய முடியாமற் போயினும், அந்தரங்கத்திலே அவனும் அவனுடைய நண்பர்களாகிய ஏனைய நயவஞ்சகர்களும் முஸ்லிம்களுக்கு முற்றமுற்ற விரோதிகளாகவே இருந்துவந்தார்கள். "உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவோர் உறவுகலவாமை வேண்டும்," என்ருர் ஒரு பெரியாரும்.

ஒருசமயம் ஸஅ'தி'ப்'னுமுஆ''த் (ரலி') அவர்கள் மக்காவுக்கு யாத்திரை சென்றிருந்தார்கள். இவருக்கும் மக்காவிலுள்ள உமையா பி'ன் க'ல'புக்கும் நெருங்கிய சினேகம் இருந்துவந்ததனுல், அவருடைய விடுதியிலேயே இவர் போய்த் தங்கியிருந்தார். அதுபொழுது ஒருநாள் அவ் விருவரும் க'ஃ'ப'த்துல்லாவை நோக்கிச் சென்றுகொண் டிருந்தபொழுது, அவர்களுக் கெதிரே அபூ'ஜஹ்ல் வந்து குறுக்கிட்டு, ஸஅ'தி'ப்'னு முஆ'த'த விளித்துத் தாறுமாருக ஏசினுன்: "எங்களூர் மதப் பாஷண்டர்களுக்கு உங்களூரில் புகலிடம் கொடுத்துவிட்டதன் பின்னுல் நீங்கள் எவ்வாறு இவ்வூருக்கு யாத்திரையினிமித்தம் விஜயம் செய்யலாம்? நீர்மட்டும் இதுபொழுது உமையாவின் விருந்தினரா யில்லாமற் போயிருப்பின், நீர் உயிருடனே உமதூருக்குத் திரும்பிச் சென்று சேரமாட்டீர்," என்று பிதற்றினுன். அதைக் கேட்டு, ஸஅ'து'ம் அவனுக்குத் தக்கவாருன வாயாப்பையே அறைந்தார். "நீங்கள் எங்களை இவ்வூருக்கு யாத்திரையினிமித்தம் விஜயஞ்செய்யக் கூடாதென்று தடைபடுத்தி விடுவீர்களாயின், பிறகு உங்களுடைய ஷாம்தேச வர்த்தகரஸ்தாவும் எங்களூர் வழியேதான் போய்க்கொண் டிருக்கிறதென்பதை நீங்கள் ஒருவரும் மறந்துவிட வேண்டாம். எங்களூர் அருகினிலே அந்தப் பாட்டையில் மறியல்செய்து விடுவோமாயின், அப்பால் உங்களூர் வர்த்தகம் யாதாகு மென்பதை நினைத்துப் பார்க்கக் கடவீர்கள்!"

இதிலிருந்து நாம் தெரிந்துகொள்ளக் கடவது யாதெனின், மக்கத்துக் :குறைஷிகள் மதீனத்து முஸ்லிம்களுக்கு ஏதேனும் தொந்தரை கொடுக்க

நாடுவார்க ளாயின், உடனே அம்மதீனு வாசிகள் எல்லாரும் மக்காவாசிகள் ஷாம்தேசத்திற்குச் சென்று வர்த்தகப் பொருள்கள் கொண்டு வருவதைத் தடைசெய்து விடுவதே சரியென்று தீர்மானித்துக்கொண் டிருந்தார்கள் என்பதே யாகும். அதனுடனே மதீனுவிலுள்ள எஹூதிகள் எல்லார்மாட்டும் நபிகள் பெருமான் காட்டிவந்த அபிமானமுழுதும் பாம்புக்குட்டிகளுக்குப் பால்வார்த்துப் பாலித்து வளர்த்த கதையாகவே போய்முடிந்து விட்டது. நபிகள் திலகத்தின் பேருதவியைக் கொண்டு அந்த அரபுதேச முழுதையும் யூதமதத்திலே திருப்பிவிடலா மென்று அவர்கள் எண்ணியிருந்த எண்ணமெல்லாம் வீண் வியர்த்தமாய்ப் போய்விட்டதுடன், முஸ்லிம்கள் தங்கள் :கிப்'லாவையும் கஃ'ப'ாவின் பக்கல் திருப்பிக்கொண்டதும் எண்ணுதற்கரிய ஏமாற்றத்தையே அன்னவருக்குக் கொடுத்துவிட்டதென்னலாம். எனவே, இனி மு'ஹம்மதி'ன்(சல்) மார்க்கத்தை ஆமோதிப்பதைப் பார்க்கினும் விக்ரஹத் தொழும்பர்களின் பலதெய்வ வணக்கமே சாலச் சிறந்ததென்று அந்த எஹூதிகள் எல்லாரும் தீர்மானிக்கத் துணிந்து விட்டார்கள். ஆதலின், அவர்கள் தங்கள் நாக்களைப் புரட்டிக் :குர்ஆன் ஷரீ'பின் திருவாக்கியங்களைத் திரித்துக்கூறி, அவற்றிற் கெல்லாம் அர்த்தத்திற்கு மாறான அனர்த்தத்தையே விளைத்துக் கொண்டு வந்தார்கள்; முஸ்லிம்களின் தொழுகைகளில் காணப்படும் வேறுபல மந்திரங்களையும் அவ்வாறே புரட்டிப் பரிகசித்து வரலாயினர்கள். அதுசமயம் யூதர்களுள் காணப்பட்டுவந்த அதிகமான ஆண்பெண் புலவர்க ளெல்லாரும் அக்காலத்தில் அந்த அரப்நாட்டில் கொண்டாடப் பட்டுவந்த எல்லாவித சமூக மேதை மரியாதைகளையும், இல்லை, சர்வ சாதாரணமான சமுதாய மரியாதைகளையுங் கூடக் கடந்துநின்று, முஸ்லிம் மாதர்களைப்பற்றி மிக மிகத் தாழ்மையான முறையாலெல்லாம் அதிக அவமானமுள்ள கவிகளையே யாத்து வந்தார்கள். ஆனால், நபிகள் நாயகத்தையும் மற்றுமுள்ள முஸ்லிம் ஆண்பெண்களை யெல்லாமும் வசைமொழிகளால் வர்ணித்துக் கூறிய பாடல்களை யெல்லாம் ஒருவகையில் மன்னித்துவிடலா மென்றாலும், அந்த எஹூதிகள் செய்துவந்த மற்றொரு சதியைமட்டும் இவ்வுலகிலுள்ள எவரும் எக்காலத்தும் மன்னித்துவிடுதல் சாலாதென்பது சரதமேயாம். என்னெனின், அவர்கள் அடிக்கடி மதீனுவில் நடைபெறும் முஸ்லிம் வர்த்தமானங்க ளனைத்தையும் மக்கத்துக் :குறைஷிகளுக்கு அப்போதைக் கப்போது அறிவித்து, அவர்கள் மதீனுவின்மீது படை யெடுத்து வருவதாயிருந்தால், அன்னவருக்கு வேண்டிய உதவியனைத்தையும் புரிவதாகவும் வாக்குறுதி செய்து செய்தி யனுப்பினர்கள். இதனைப் பார்க்கினும் வேறென்ன நம்பிக்கைத் துரோகம் வேண்டப்படுகிறது?

"வேங்கை வரிப்புலிநோய் தீர்த்த விடகாரி

ஆங்கதனுக்(கு) ஆகாரம் ஆனாற்போல்"... என்னும் "வாக்குண்டாம்" செய்யுள் உங்களுக்குத்தாம் தெரியுமே!

இவ்வாறு யூதர்க ளெல்லாரும் :குறைஷியருக்கு உதவிபுரிவதாக வாக்களித் திருந்தும், அ'ப்'து'ல்லா பி'ன் உபை' ஸலூல் என்னும் நய வஞ்சகன் அக் :குறைஷிகளின் பயமுறுத்தலுக் கஞ்சி நபிகள் பெருமா னுக்கும் ஏனை முஸ்லிம்களுக்கும் இடையூ றொன்றும் பஹிரங்கமாகச் செய்யத் துணியாததைக் கண்டு, அம்மக்கா வாசிகள் திடுமென்று மதீனா வின்மீது படையெடுத்துவரத் துணியாமல், அவ்விரு நகரங்களுக் கிடையி லுள்ள எல்லா வர்க்கத்தினரையும் நபிகள் நாயகம் (சல்) அவர்களுக்கு விரோதமாய்க் கிளப்பிவிடத் தலைப்பட்டார்கள். :குறைஷியர்கள் மக்காவி லுள்ள கஃ'ப'த்துல்லாவின் தர்ம கர்த்தாக்கள் என்னும் முறையிலே அவ் வரப்நாட்டி லிருந்துவந்த மற்றெல்லா மாக்களிடத்திருந்தும் அளவுகடந்த மரியாதைகளை யெல்லாம் அதற்கு முன்னே பெற்றிருந்தார்கள். அவர்க ளுடைய இத்தகைய செல்வாக்குக் கஞ்சியே மற்றைக் :கபீ'லாக்கள் அன்ன வரின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டிய அத்தியாவசியம் ஏற்பட்டுவிட்ட தென்னலாம். இக் காரணத்தினாலேயே யமன்வாசிகள் ஹிஜ்ரீ 6-ஆவது ஆண்டுவரை நபிகள் நாயகத்தின் திருவதனத்தையும் நேரில்வந்து காணமுடியாதவர்க ளாகவே யிருந்துவந்தார்கள். இவ்வாறே ப''ஹ்றைன் வாசிகளும்கூட அப் பெருமானார் அவர்களைப் பல வருடங்கள் மட்டும் நேரில்வந்து தரிசிக்க முடியாதவர்களாய்க் கஷ்டப்பட்டுக்கொண் டிருந்தார்கள்.

இவ் வண்ணமாக ஆங் கிருந்துவந்த பற்பல வர்க்கத்தினரும் :குறைஷி களின் கட்டளைக்குக் கட்டுப்பட்டு முஸ்லிம்களை வெறுக்கத் துவக்கியதனால், மதீனாவைச் சூழ்ந்துள்ள நாலு பக்கங்களிலும் இஸ்லாத்தின் விரோதி களே நிரம்பி விட்டார்கள். எனினும், மதீனாவின் எல்லைக்குள்ளும் நம்பிக் கைக்குரிய சமாதான மொன்றும் நிரம்பக் காணப்பட வில்லை. முஸ்லிம் களுக்குள் சமரஸத்தையும், முஸ்லிம்களுக்கும் எஹூதிகளுக்கு மிடையில் சமாதானத்தையும் நிறுவிவிட வேண்டு மென்று நபிகள் பெருமான் எத்துணைமட்டும் பெரும் பெரும் பிரயத்தனப்பட்டும், உள்ளூருக்குள்ளே அ'ப்'து'ல்லா பி'ன் உபை'யின் நண்பர்களும், மற்றுமுள்ள எஹூதிகளும் விரோதப் பான்மையுடனே விஷம வேலை செய்துவந்தார்கள். இவ்வள வோடு அத் தொந்தரை நில்லாது, எந்த நிமிஷத்திலும் மக்கத்துக் :குறைஷிகள் மதீனாவின்மீது படையெடுத்து வந்துவிடுதல் கூடுமென்னும் பேரச்சமும் அதிகம் அம்முஸ்லிம்களின் உள்ளத்தை ஊசலாடும்படி செய்து கொண்டே யிருந்தது. :குறைஷியரின் கொக்கரிப்பை யெல்லாம் நபிகள் திலகம் அடிக்கடி கேள்விப்பட்டுக் கொண்டே யிருந்தார்கள். உள்ளூர்ப் பகைமையும் வெளியூர்ப் பகைமையும் எந்த நிமிடத்திலும் ஒன்றுசேர்ந்து அம் மதீனத்தையே அடியோடு கவிழ்த்துவிடுதல் கூடும். நபிகள் திலகம் இதுபொழுது இஸ்லாத்தின் ஞானபோதகராய்மட்டும் நில்லாது, தங்களைச் சார்ந்த சிஷ்யகோடிகளின் உயிருக்கும் சுதந்தரத்துக்கும் பாதுகாவலராக வுங்கூட அமைந்து விட்டார்கள். நபியென்னும் முறைமையில் எதிரிகளின்

வசைமொழிகளையும் வேறுபல தாக்குதல்களையும் தங்களைப் பொறுத்த மட்டில் அவர்கள் உதாசினத்துடனே சகித்துக்கொண் டிருந்திடுதல் கூடும்; ஆனால், அகத்திலும் புறத்திலும் பகைமை நிரம்பி எந்நேரத்தில் என்னவிதமான ஆபத்து அந்நகருக்கு நேருமோ வென்னும் அச்சம் குடிகொண் டிருக்குங்கால், அம் மகோபகாரி ஒரு சேனாதிபதியே போல இருந்துகொண்டு, அந்நகரத்தின் பாதுகாப்பைச் சதா கவனித்துவருதல் வேண்டுமன்றோ? இக்காரணத்தினால் நபிகள்பெருமான் (சல்) இராக்காலங் களில் விழித்துக்கொண் டிருந்தே நகரத்தைச் சுற்றிவந்து விடியும்வரை பாதுகாத்து நிற்பார்கள்; எல்லாரும் இராக்காலங்களில் அயர்ந்து நித்திரை செய்யும்போது, நபிகள் திலகம் மட்டும் அந்நகரப் பாதுகாப்பு வேலையிலே முற்றும் ஈடுபட் டிருப்பார்கள். என்றேனும் அப் பெருமானாருக்குச் சகிக்க முடியாக் களைப்புத் தோன்றிவிடுமாயின், அன்றுமட்டும் வேறு நம்பிக்கைக் குரிய ஆயுதபாணிகளிடம் அந்நகரப் பாதுகாப்பை ஒப்படைத்து விட்டுச் சிறிதே தாங்கள் அயர்ந்து இளைப்பாறிக் கொள்வார்கள்.

மதீனாவின் கதியும், நபிகள் திலகத்தின் நிலையும் மீக்கூறிய வாறு இருந்துவந்தக்கால், ஹிஜ்ரீ 2–ஆவது ஆண்டு, ச'பர் மாதம், 12–ஆந்தேதி யன்று எதிரிகளுடன் முஸ்லிம்கள் தற்காப்பு நிமித்தம் யுத்தம் தொடங்கலா மென்று ஆண்டவனது திருச் சன்னிதானத்தி லிருந்தும் அனுமதி யளிக்கப் பட்டு விட்டது: "எவர்கள் போர்புரியப் பெறுகிறார்களோ அவர்களுக்கு, அன்னவர்கள் அநியாயம் புரியப்படுங் காரணத்தால், (எதிர்த்துப் போர் புரிய) அனுமதி யளிக்கப்படுகிறது; இன்னம், நிச்சயமாகவே, அல்லா(ஹ்) அவர்களுக்கு உதவிபுரிவதன்மீது அதிக சக்திபெற்றவனா யிருக்கிறான்"—(22 : 39). இதுதான் யுத்த சம்பந்தமாக முதன்முதலில் அருளப்பட்ட வேதவாக்கிய மென்று ஒருசில பெரியார்கள் அபிப்பிராயம் கூறியிருக் கிறார்கள். இன்னம், "நுங்களைக் கொல்லுகிறவர்களை நீங்களும் ஆண்ட வன் பாதையிலே கொல்லுங்கள்; மேலும், நீங்கள் வரம்பைக் கடவாதீர்கள்; மெய்யாக வரம்பைக் கடப்பவர்களை ஆண்டவன் உவக்க மாட்டான்"—(2 : 190) என்னும் திருவாக்கியந்தான் யுத்தசம்பந்தமாக வெளியாக்கப் பட்ட முதல் திருவாக்கிய மென்று வேறுசிலர் கூறுகின்றார்கள். இதற் கிடையிலே :குறைஷிகளின் சிறுசிறு கூட்டத்தினர் பற்பலர் அடிக்கடி மதீனாவைச் சூழ்ந்துள்ள இடங்களை யெல்லாம் போய் நோட்டமிட்டு வருவார்கள். அந் நகரத்தை விட்டு இஸ்லாத்தைக் கல்லியெறியும் பொருட்டு அப் பகைஞர்கள் சமயம் பார்த்திருந்தார்கள். அத்தகைய சூழ்நிலையிலேதான் இத்தகைய அனுமதி ஆண்டவனால் அளிக்கப்பட்டது. இந்தத் தற்காப்புச் சம்பந்தமான வேதவாக்கியங்களின் வெளிப்படையான கருத்தை நீங்களெல்லீரும் நன்கு நோட்டமிடக் கடவீர்களாக. இஸ்லாம் வாளாயுதத்தின் பலங்கொண்டேதான் இப் பாருலகினில் பரத்தப்பட்ட தென்னும் பொய்க்கதை யொன்றை முதலைப்பிடியாகப் பற்றிக்கொண்

டிருக்கும் எல்லா எதிர்மதவாதிகளுங்கூட மேற்கூறிய வேதவாக்கியங்களை ஆழ்ந்து கவனிக்கக் கடவார்களாக.

மேற்கூறிய இரண்டு திருவாக்கியங்களிலும் இருவிதமான நிபந்தனைகள் அமைக்கப்பட் டிருக்கின்றன: முதன் முதலாக, தற்காப்பி னிமித்தமாகவே யல்லது, வேறு காரணத்திற்காக முஸ்லிம்கள் யுத்தம் தொடங்குவது கூடாது; இரண்டாவதாக, அத்தகைய தற்காப்பு யுத்தத்தின் அத்தியாவசியம் ஒழிந்துவிட்டதன் பின்பு உடனே அந்த யுத்தமும் நிறுத்தி விடப்படுதல் வேண்டும். :குர்ஆன் ஷரீ'பின் கட்டளையின் பிரகாரம் முஸ்லிம்கள் வலுவிலே (மதப் பிரசாரத்துக்காகவுங் கூட) யுத்தம் தொடங்குவது அறவே கூடாது; தற்காப்பு யுத்தத்திலும் அளவுக்கு மீறிய அக்கிரமங்களைப் புரிதலும் கூடாது. எதிரியின் வாளாயுதம் தன் உறைக்குள்ளிருந்து வெளியில் உருவப்படும் வரை முஸ்லிம்கள் தங்கள் வாளாயுதங்களைக் கரத்திலேந்திப் பிடிப்பது அறவே கூடாது; அதுபொழுதும் தற்காப்பி னிமித்தம் எத்துணைமட்டும் அத்தியாவசியமோ, அத்துணை மட்டுமேதான் யுத்தம் புரிதல் வேண்டும். எதிரிகள் எந்த நிமிடத்திலே சமாதானத்திற்கு முன்வர நாடுகின்றார்களோ, அதே நிமிடத்திலே முஸ்லிம்களும் தங்கள் வாட்படைகளை யெல்லாம் உறைகளுக் குள்ளே சொருகிக் கொண்டு, அச் சமாதான உடன்படிக்கையைப் பூர்த்திசெய்து வைத்தல் வேண்டும். எக்காரணத்தை முன்னிட்டும் முஸ்லிம்கள் இவ்விஷயத்தில் அத்தியாவசியமான எல்லையைக் கடப்பது அறவே கூடாது.

நபிகள்திலகம் இதற்குமுன்னே ஒருபோதும் வாளாயுதத்தை ஏந்தியதே யில்லை; அவர்கள் எந்த மனிதனுடைய இம்ஸையையும் பார்த்துக்கொண்டு மனந்துளங்காது வாளா இருந்துவிடுவது வழக்கமில்லை. மக்களின் துன்பத்தையும் துயரத்தையும் கண்டு மிக்க மனவிரக்கங் கொண்டு அதிகமாக நைந்து உருகி விடுவார்கள். உயிர்ப் பிராணிகளின் உயிர் போவதைக் கண்டால், அவர்களுடைய நேத்திரங்களில் நீர்ததும்ப ஆரம்பித்துவிடும். தங்கள் குழந்தைகள் மரிக்க நேருங்கால், அவலக் கண்ணீர் சொரிந்து அதிகம் கலக்க முறுவார்கள். வீராதி வீரத்தனமும், சூராதி சூரத்தனமும் மல்கிக்கிடந்த அவ்வரப் நாட்டின்கண் நம்பெருமானார்(சல்) அவர்கள் திரைக் குள்ளிருக்கும் ஒரு கன்னிகையைப் போன்ற அமைதியுடனும் அடக்கத்துடனுமே இருந்து வந்ததைக்கண்ட எதிரிக ளெல்லாரும் இப்பெரியாரை ஒரு "பெண்ணையன்" என்றே அழைத்து வந்தார்கள். இப்படிப்பட்ட சாந்த மூர்த்தியாய் விளங்கிய, மூலையிலிருந்த மு'ஹம்மத்'நபியை (சல்) முற்றத்திலே இழுத்து விட்டார்கள் அந்தக் கொடுங் கா'பிர்களான :குறைஷியர்கள். நபிகள் திலகத்துக்குச் சற்றும் விருப்பமில்லா திருந்தும், தங்களைச்சார்ந்த சிஷ்யகோடிகளின் உயிரையும் பொருளையும் காப்பாற்றும்

பொருட்டுத் தற்காப்புப் போரில் இறங்கித்தான் ஆகவேண்டு மென்று ஆண்டவனும் இறுதியிலே அனுமதி கொடுத்துவிட்டான்.*

அரபிகள் ஆரம்பத்திலே பெரிய யுத்தமாகத் தொடங்காமல் சிறுசிறு சில்லறை விஷயங்களைக் கொண்டே ஆரம்பம் செய்வது வழக்கமாதலின், அன்னவரின் தன்மையை யுணர்ந்த நபிகள் பெருமானும் அதற்குத் தக்க வாறே இருவித யோசனைகளைச் செய்துகொண்டார்கள்: முதன் முதலாக, மக்கத்துக் :குறைஷியரின் வர்த்தகத் திமிரை ஒடுக்கிவிட வேண்டுமென்று எண்ணினார்கள்; அக் :குறைஷியர் ஷாம் தேயத்திற்குச் சென்று பெரும் பெரும் வியாபாரங்களைச் செய்து வருதலினாலேதான் அதிகமான பொருள் வருவாயைச் சேகரித்து வந்தார்கள். அன்னவரின் அச் செல்வச் செருக்கே முஸ்லிம்களின்மீது பெரும்பகைமை கொள்ளுமாறு தூண்டிக்கொண்டு வந்தது; ஆகலின், அன்னவரின் ஷாம் தேய வர்த்தகத்தை அடியோடு தடை செய்துவிட வேண்டுமென்பதே நம்பெருமானின் முதல் யோசனையாகும். இரண்டாவதாக, மதீனாவைச் சுற்றியுள்ள பகுதிகளில் வசித்துவரும் மனிதர்களுட னெல்லாம் சமாதானம் செய்து கொள்வதாகும். ஒருகால் :குறைஷிகள் தங்கள் வியாபாரக் கஷ்டத்தால் சமாதானத்துக்கு வாராது யுத்தம் தொடங்குவார்க ளாயின், அதற்கென்று முற்கூட்டியே முஸ்லிம் களுக்குச் சரியான பக்கபலத்தைச் சேகரித்து வைத்துக் கொள்ள வேண்டு மென்பதே இந்த இரண்டாவது யோசனையின் கருத்தாகும்.

:குறைஷிகளின் வர்த்தகத்தைத் தடுக்கவேண்டிய முதல் யோசனைக் காக அன்னவரின் இயக்கங்களை ஆங்காங்குச் சென்று துப்பறிந்து வர வேண்டுவது ஓர் அத்தியாவசியமாய்க் காணப்பட்டமையானே, ஐம்பது ஐம்பது, நூறு நூறு முஹாஜிரீன்களைக் கொண்ட வேவுகாரர் கூட்டங்களை மக்காவின்பக்கல் அனுப்பி வைப்பார்கள். ஒருமுறை 'ஹ'ஜ்ரத் ஹம்'ஜா, உ'பை'த்'ாபி'ன் 'ஹாரிஸ், ஸஅ'த்' பி'ன் அபீ' வ:க்:காஸ் என்னும் மூன்று தலைவர்களின் கீழே மூன்று ஒற்றர்களின் கூட்டங்களை நபிகள் பெருமான் அனுப்பி வைத்தார்கள். ஆனால், அவர்களுள் ஒருவரும் எவ்விடத்திலும் எந்த எதிரியையும் சந்தித்ததே யில்லை; எவரையும் எங்கும் துன்புறுத்தியது மில்லை. ஆனால், அந்தக் :குறைஷியர்மட்டும் முஸ்லிம்கள் சர்வ ஜாக்கிரதை யாகவே எச்சரிக்கையுடன் இருந்துவருகிறார்க ளென்பதை ஒருவாறு உணர்ந்து கொண்டிருத்தல் சாலும்; ஒருகால் தங்களுடைய ஷாம்தேச வர்த்தகத்தையும் முஸ்லிம்களின் ஒற்றர்கள் தடைசெய்துவிடக் கூடுமென் றும் ஐயங்கொண்டிருத்தல் கூடும். இதுதான் ஸஅ'தி'ப்'னு முஆ''தவர்கள் முன்னொரு முறை அபூ'ஜஹ்லின்முன் எச்சரிக்கை செயததன் கருத்து

* :குர்ஆன் ஷரீ'பைக் கூர்ந்து கவனிக்கின், அம் முஸ்லிம்கள் போர் நிகழாமலே போய்விடாதா வென்று பெரிதும் விரும்பி நின்றார்க ளென்னும் விஷயம் உள்ளங்கை நெல்லிக்கனியே போல் விளங்கிக் கிடப்பதை நன்குணர்ந்து கொள்ளலாம்.

மாகும். உண்மை விஷயம் இவ்வாறிருக்க, இதனைத் தப்பர்த்தம் செய்வ தென்பது இஸ்லாத்தின் பண்டை விரோதிகளின் பழைய வழக்கமாகவே ...ந்து வருகிறது. எந்தப் பகுத்தறிவுள்ள மனிதனேனும் மேற் கூறிய ...நபிகள் நாயகமவர்கள் தங்கள் சிஷ்யர்களுக்குக் கொள்ளையடிக்கும் தொ...ப முதன் முதலில் கற்றுக் கொடுத்தார்க ளென்று கூறத் துணிவனு? மனிதர்களைக் கொள்ளைத் தொழிலிலும் கொலைத் தொழிலி லும் பயிற்றுவித்தற்காகத்தான் இந்த இறுதிநபியவர்கள் (சல்) இறைவனுல் இத்தரணியின்கண் எழுப்பப்பட்டார்கள் போலும்! காமாலைக் கண்ணர் காண்பன வெல்லாம் மஞ்சள் மயமாகவே தோற்று மென்ப!

நபிகள் திலகத்தின் மற்ஞெரு யோசனையான தற்காப்பு உடன்படிக்கை களும் ஆங்காங்குச் சுமுகமாகவே நிறைவேற்றப்பட்டு வந்தன. மதீனுவி லிருந்து முப்பதுமைல் தூரத்திலுள்ள ஜுஹைனு வென்னும் கூட்டத்தா ருடனே செய்து கொள்ளப்பட்ட உடன்படிக்கையின் பிரகாரம் அக் கூட்டத்தினர் முஸ்லிம்கள் :குறைஷிகள் ஆகிய இருதிறத்தின ருடனும் கலந்து கொள்ளாது பொதுவாகவே இருந்துவிடுவ தென்று தீர்மானித்துக் கொண்டார்கள். அவ்வருடம் ச'பர் மாதத்தில் நபிகள் திலகம் 60 முஹா ஜிரீன்களுடன் மதீனுவின் இறுதி எல்லையாகிய, 8-ஆவது மன்'ஜிலிலுள்ள அப்'வா (அல்லது வுத்'த்ான்) என்னுமிடம் சென்று—(அங்கேதான் ரஸூலுல்லாவின் அன்னையாகிய ஆமினு அம்மா ளவர்களின் சமாதி ஸ்தல மும் அமைந்திருக்கிறது) ஆங்குள்ள ப்னூ ல்'ம்ரா என்னும் வர்க்கத்தின ருடனே ஓர் உடன்படிக்கை செய்து கொண்டார்கள். அதில், "அம் மக்க ளின் உயிர்களும் பொருள்களும் நன்கு பாதுகாக்கப்படும். மதச் சண்டை யல்லாத வேறு காரணங்களால் ப்னூ ல்'ம்ரா வர்க்கத்தினரை எவர் தாக்கிய போதினும், அவ் வர்க்கத்தினருக்கு உதவி செய்யப்படும். எப் பொழுது அல்லா(ஹ்)வின் நபி அவர்களை உதவிக் கழைக்கின்ருரோ, அப் பொழுது அவர்கள் உதவிசெய்ய முன்வரல் வேண்டும்," என்னும் நிபந்தனை கள் காணப்பட்டன. இவ்வாறே ப்னூ ஹம்'ஜா வென்னும் கூட்டத்தா ருடனும் ஓர் உடன்படிக்கை செய்து கொள்ளப்பட்டது.*

அப்'வாவின் உடன்படிக்கை நிகழ்ந்த ஒரு மாதத்திற்குப் பின்னே மக்காவின் தலைவருள் ஒருவனுன குர்'ஜ் பின் ஜாபி'ர் பி'பஹ்ரீ என்பான் மதீனுவின் எல்லைக்குள் வந்து, ஆங்குள்ள மேய்ச்சற் றரையில் மேய்ந்து கொண்டிருந்த மதீனுவாசிகளின் கால்நடைகளை யெல்லாம் திருட்டுத்தன மாக ஓட்டிக்கொண்டு ஓடிவிட்டான்; அவனைப் பிடிக்கும் பொருட்டுச் சில முஸ்லிம்கள் பின்னே அனுப்பப்பட்டும், அவன் அகப்படாமல் தப்பிக்

* உண்மை இவ்வாறிருக்க, நபி பெருமானர் சிற்சில ச'ஹாப'ாக்களை யனுப்பி, நாட்டுப் புறங்களில் இஸ்லாத்தைப் போதிக்கும்படியும், அம்மக்கள் இதனை ஏற்காவிடில், அவர்களை அழித்துக் கொள்ளையடித்து வருமாறும் ஏவினுர்க ளென்று சீறுப் புராணம் பாடிய புலவரையும் வரையும்படி செய்துவிட்டது எதிரிகளின் துர்ப் பிரசாரம்!

கொண்டான். பிறகு மூன்றுமாதம் சென்று ஜமாதுல் ஆகிரில் நபிகள் பெருமான் 200 முஹாஜிரீன்களை அழைத்துக் கொண்டு, 'தில் அஷீரா என்னுமிடம் சென்று ஆங்குள்ள ப'னூ மத்'லஜ் என்னும் வர்க்கத்தினரு னும் ஒரு சமாதான உடன்படிக்கையைச் செய்துகொண்டார்கள்.

ஹிஜ்ரீ இரண்டாவதாண்டு, ஜமாதுல் ஆகிர்மாத இறுதியில் நபிகள் திலகம் ஹம்'ஜாவின் சோதரிமைந்தர் அ'ப்'துல்லா பி'ன் ஜஹ்ஷ் என்பாரைப் பன்னிரு தோழர்களுடனே ஒரு லிகிதத்தையும் கொடுத்து, மக்காவின் :குறைஷியரைப்பற்றி வேவுபார்த்துச் செய்தியனுப்புமாறு தெற்குநோக்கி அனுப்பிவைத்தார்கள்; அவர் அப்பாட்டையில் இரண்டுநாள் பிரயாணம் சென்றபின்னரே அந்த லிகிதத்தைப் பிரித்துப் பார்க்கவேண்டு மென்று உத்தரவும் இடப்பெற் றிருந்தார். அவ்வாறே இரண்டுநாள் சென்றதன் பின்பு அ'ப்'துல்லா பி'ன் ஜஹ்ஷ் அக்கடிதத்தை உடைத்துப் படித்துப் பார்த்த போது, அதில் அவர் நக்லாவிற்குப் போய் ஆங்கிருந்தபடியே மக்கத்துக் :குறைஷிகள் செய்துவரும் ஏற்பாடுகளை இரகசியமாக அறிந்து மதீனாவிற்குச் செய்தியனுப்புமாறு கட்டளை யிடப்பெற்றிருந்தார். எதிர் பாராவண்ணம் எதிரிகள் முஸ்லிம்களின்மீது படையெடுத்து வந்துவிடா திருக்கும்பொருட்டு அன்னவரின் அந்தரங்க இயக்கங்களை அறிந்துகொள் ளுதற் கென்றே இந்த ஒற்றர் அவ்வாறு அனுப்பப்பட் டிருந்தார்; ஆனால், மக்காவின்மீதோ அல்லது மக்கத்து மனிதர்களின்மீதோ சிறிதும் தாக்க வேண்டு மென்று அன்னவர் எம்பெருமானால் ஒன்றும் ஆணையிட் டனுப்பப் பட வில்லை. அவ்வாறு மனத்தால் நினைப்பதற்கும் அம் முஸ்லிம்களுக்கு ஒருசிறிதும் அதுசமயம் வலிமை யென்பதே கிடையாது; வலிமை யென்பு திருப்பினும், வேத அனுமதி சற்றுங் கிடையாது. மிகச் சிறு தொகுதியின ரான அம் முஸ்லிம்களைக் காப்பாற்றுதற்கே போதியசக்தி நபிகள் நாயகத் தின் கைவயமில்லாதபோது, அவர்கள் எவ்வாறு அதுபோழ்து மக்காவைத் தாக்குவதைப்பற்றி ஆலோசனை செய்யப் போகின்றார்கள்? ஆனால், நபிகள் பெருமானார் ஒரு கைதேர்ந்த தளபதியேபோல எதிரிகளின் இயக்கத்தைப் பற்றி முற்றும் முற்கூட்டியே அறிந்துகொள்ள வேண்டுமென்று வேவுகாரர் களைக் கொண்டு ஏற்பாடு செய்து கொண்டார்கள்.*

---

* ஷிப்'லீ நுஃமானீ (ர'ஹ்) எழுதிய சரித்திரக்கூற்று அது. ஆனால், அடியிற் காணும் விபரீதக் கூற்றையும் பாருங்கள்: "அக்கடிதத்தில், வியாபாரத்தின் பொருட்டு ஷாம் இராஜ்ஜியத்திற்குப் போயிருக்கும் நமது சத்துருக்களாகிய மக்கமா நகரத்துக் காபிர்கள் அங்கிருந்து மீண்டு வரும்வரையும் நீங்கள் ஒன்பது பேர்களும் பத்னுன் னகுலாவிலேயே தங்கியிருந்து அவர்கள் வரும்போது வழிமறித்து அடர்ந்து தாக்கி, அவர்கள் கொண்டுவரும் திரவியங்களையும், ஒட்டகங்களையும், குதிரைகளையும், எருதுகளையும் கவர்ந்து கொண்டு மதீனா நகரம் வந்து சேரவேண்டும் என்று எழுதியிருந்தது."— ("நபி நாயகத்தின் ஜீவிய சரித்திரம்"— சீறா வசனம், பக். 594).

அந் நிருபத்தில் கண்டவண்ணமே அ’ப்’து’ல்லா பி’ன் ஜஹ்ஷ் நக்’லா சென்று சேர்ந்தார்; அந்த இடம் மக்காவுக்கும் :தாயி‘புக்கு மிடையில் [illegible]ாவிலிருந்து அரைநாட் பிரயாண தூரத்தி லிருக்கிறது. ஆங்குச் சென்ற [illegible]ஷாமிலிருந்து வர்த்தகச் சரக்குக்களை ஏற்றிக்கொண்டு மக்காவை நோ[illegible]துகொண்டிருந்த :குறைஷிக் கூட்டமொன்றை அ’ப்’து’ல்லா பி’ன் ஜஹ்ஷ் என்பவர் நேரில் சந்தித்து அவர்கள்மீது அதிக ஆத்திரத்தோடு தாவிப்பாய்ந்தார்; இது செய்தது நபிகள் திலகத்தின் கட்டளைக்கு நேர்மாறே யாகுமென்பது நினைப்பி லிருக்கட்டும். ஆயினும், அதைப் பொருட் படுத்தாது, அ’ப்’து’ல்லா பி’ன் ஜஹ்ஷ் அக் கூட்டத்தினரைத் தாக்கி, அதன் தலைவராகிய அ’ம்ரு பி’ன் ’ஹல’ரமீ என்னும் பெரியாரைக் கொன்றுவிட்டு,— (இப்’னு ‘ஹல’ரமீயைக் கொன்றவர் வா:கித்’ பி’ன் அ’ப்’து’ல்லா தமீமீ யாவார்) உ’ஸ்மான், நௌ‘பல் என்னும் இருபெரும் வர்த்தகர்களையும் அவர்களுடைய சாமான்களுடனே சிறை செய்து விட்டார். மற்றொருவர் மட்டும் தப்பிக்கொண்டு மக்காவை நோக்கி ஓடிவிட்டார்; அக்கணமே அ’ப்’து’ல்லா தம்கைவயம் அகப்பட்ட வியாபாரப் பண்டங்களுடனும் இரு கைதிகளுடனும் மதீனாவிற்கு வந்து, நபி பெருமானிடம் நடந்த விருத்தாந்தங்களை ஆதியோடந்தமாகத் தெரிவித்தார். அவற்றையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த நபிகள் பெருமான் (சல்) பெரிதும் மனவருத்த முற்று, “இவ்வாறெல்லாம் செய்வதற்கு உமக்கு நான் அனுமதி யளிக்க வில்லையே!” என்று கூறிக் கோபித்துக்கொண்டு, அவர் கொணர்ந்திருந்த பொருள்களைத் தீண்டவும் மறுத்து விட்டார்கள். அதனைக் கண்ட ஏனை ச’ஹாப’ாக்களும் அ’ப்’து’ல்லாவை அதிகம் கண்டித்தார்கள். அ’ப்’து’ல்லா :குறைஷியர்களை நக்’லாவில் தாக்கியதும், அதில் அ’ம்ரு இறந்துபோனதும் தற்செயலாக நிகழ்ந்துவிட்ட காரியங்களே யாகும்; அதற்கு நபிகள் திலகம் அனுமதியளித் தனுப்பினார்க ளில்லை. ஆனால், அவர்களுடைய விருப்பத்திற்கு நேர்மாறாகவே இது நிகழ்ந்து விட்டது. ‘ஹல’ரமீ யென்பவர் ஓர் உயர்ந்த குடும்பத்தைச் சார்ந்தவர்; சிறை பிடிக்கப்பட்ட மற்றிருவரும் :குறைஷிகளுள்ளே மிக்க மதிப்பு வாய்ந்தவர்கள்.

நெடுநாளாகத் தக்கதருணம் பார்த்திருந்த :குறைஷியருக்கு இதுவே போதுமான இறுதிக் காரணமாய்க் காணப்பட்டது. மதீனாவின்மீது படையெடுத்துச் செல்ல ஏதேனு மொரு சாக்கே அதுபொழுது வேண்டப்

---

சீறாப் பாடிய பெரும்புலவரும்,

> “மக்கநன் னகரார் ஷாமுக் கனுப்பிய முதலும் மற்றும்
> மிக்கவத் திரியும் மாவும் மீண்டவண் வருநாள் மட்டும்
> புக்கியங் குறைந்து கானிற் போவதற் கிடங்கொ டாமல்
> திக்கறப் பறித்து வெட்டித் திரும்புமென் றிருந்த தன்றே!”

என்று கவினுறப் பாடியுள்ளார். ஈதெல்லாம் வெறும் புராணம்; உண்மைச் சரிதை வேறு: அது மௌலானா ஷிப்’லீயின் கிரந்தத்தில் காணப்படும்.— பா. தா.

பட்டது; அஃது அந்த 'ஹல்'ரமீயின் கொலைச் சம்பவத்தால் நேரிட்டு விட்டது. சாதாரண காலங்களில் இத்தகைய எதிர்பாராச் சம்பவத்தால் ஒன்றும் விபரீதம் விளைந்துவிட மாட்டாது. இரத்தஈட்டுக் கிரய... இப்படிப்பட்ட எதிர்பாராக் கொலைகளுக்குச் சாமான்யமாக அத்... வாங்கிக் கொள்ளப்படும். ஆனால், இதுசமயமோ, அக் :குறை... வ் வாறு சமாதானமாய்ப் போக ஒருப்படார். யுத்தத்திற்குப் புறப்பட இறுதி யாக அவர்களுக் கொரு சாக்கே வேண்டப்பட்டது; அது வலுவிலே இப்பொழுது வந்து கிட்டிவிட்டது. எனவே, அவர்கள் இனி மதீனாவின் மீது படையெடுத்துச் சென்று அவ்வேழை முஸ்லிம்களை யெல்லாம் வெட்டிக் கருவறுக்கவே தீர்மானித்து விட்டார்கள்.

> "எங்கள் ரக்ஷகா! எங்கள்மீது நீ பொறுமையைச் சொரியக் கடவாய்! மேலும், எங்கள் கால்களை ஸ்திரப் படுத்தி வைக்கக் கடவாய்! கா'பிரான கூட்டத்தவர் மீது எங்களுக்கு உதவிபுரியவுங் கடவாய்!"— (2 : 250)

---

# அதிகாரம் — 21

## ப'த்'ர் யுத்த விசேஷம்

> **"மேலும், அல்லா(ஹ்), நீங்கள் பலஹீனர்களா யிருந்த வேளையிலே ப'த்'ரில் நிச்சயமாக உங்கட்கு உதவி புரிந்தான்; ஆதலால், நீங்கள் நன்றி செலுத்துவான் வேண்டி, அல்லா(ஹ்)வின்பால் (உங்கள் கடமையில்) சர்வ ஜாக்கிரதையா யிருந்துகொள்ளக் கடவீர்கள்."— (3 : 122)**

**நா**ம் இதற்குமுன்னே பலமுறையும் எழுதியிருப்பதேபோல், :குறைஷியர் எல்லாரும் மதீனாவின்கண் புகலிடம் தேடிக்கொண் டிருக்கும் புதிய இஸ்லாத்தை அடியோடு ஆணிவேருடன் கல்லியெறிந்து விடுவதென்றே ஒரே முதலைப் பிடிவாதமாகத் தீர்மானம் செய்துகொண் டிருந்தார்கள்; என்னவானாலும் இத்தரணியின்மீது இஸ்லாம் மார்க்கத்தை வேர்க் கொள்ள வொட்டாது தடைசெய்து விடுவதென்றே ஒரே உறுதிகொண் டிருந்தார்கள். இக் காரணத்தினாலேதான், அவர்கள் மதீனாவிலுள்ள அ'ப்'து'ல்லா பி'ன் உபை'க்கும் மீக்கூறியவாறு ஒரு பயமுறுத்தற் கடிதமும் விடுத்திருந்தார்கள். அந் நகரத்திலுள்ள எஹூதிகளும் அந்தக் :குறைஷி

களுக்கு உதவிபுரிவதாக இரகசியத்தில் செய்தியனுப்பி வந்தார்கள். மதீனாவின்மீது படையெடுத்து வருவதற்கு முன்னறிக்கையாகவே குர்'ஜ் பி'ன் ஜா'பி'ர் ஃபஹ்ரீயும் இந்நகரத்தின் எல்லைக்குள் வந்து நபிபெருமானுடைய செய்யக்... யொட்டகங்களை யெல்லாம் ஓட்டிக்கொண்டு, அங்கிருந்த பழமர... நாசப்படுத்திச் சென்றான். இவ்வாறெல்லாம் முற்கூட்டியே அவர்கள் யுத்த சன்னத்தம் செய்துகொண் டிருக்கும்போது, காகதாளிக நியாயப்படி* இப்'னு 'ஹல'ரமீயின் கொலையும் அந்தக் :குறைஷிப் பேய்களுக்குக் குங்கிலியம் போட்டதேபோ லாகிவிட்டது. :குறைஷிக் கு'ப்'பார்களின் படையெடுப்புக்கு இந்தக் கொலையானது ஒரு சமீபத்திய காரணமே யாயினும், உண்மையில் அவர்களுடைய உள்ளத்தின்கண் ஊன்றிக்கிடந்த இஸ்லாத்தின் மீதுள்ள வர்மமே முக்கிய மூலகாரணமாகும்.

முஸ்லிம்கள்மீது படையெடுத்துச் செல்வதற் கென்றே அதிகமான பொருள் திரட்டும்பொருட்டு மக்காவாசிகள் எல்லாரும் தங்கள் கைவயமிருந்த முதல்க ளனைத்தையும் ஷாம்தேச வர்த்தகத்திற்கென்று கொடுத்தனுப்பி யிருந்தார்கள். அந் நகரத்து ஸ்திரீகளுங்கூட அந்தப் பொருளீட்டத்தில் அதிகமான அக்கரைகாட்டித் தங்கள்பா லிருந்துவந்த முதல்கள் எல்லாவற்றையும் அவ் வாணிபத்துக்கே கொடுத் துதவினார்கள். இப் பெருந்தொகுதியான வர்த்தகக் :காபி'லாவுக்கு (உத்தேசம் 1000 ஒட்டகங்களுக்கு) அபூ' ஸுஃப்யானே தலைமைவகித்துச் சென்றிருந்தார். அவ் வர்த்தகக் கூட்டத்தினர் ஷாம்தேசத்தை விட்டுத் திரும்பிப் புறப்படத் தையாரா யிருந்தபோது, இப்'னு'ஹல'ரமீயின் கொலைச்செய்தி அங்கு எட்டியதைக் கேட்டு, அவர்களெல்லாரும் அதிக ஆவேசமும் ஆத்திரமும் கொண்டு நின்றனர். உடனே அபூ' ஸுஃப்யான் மக்காவிற்கு உ'மைர் என்பவனை முற்கூட்டியே அனுப்பிவைத்துக் :குறைஷியரிடம் தங்கள் வர்த்தகக் :காபி'லாவைத் தற்காக்கும்பொருட்டுத் தக்க ஏற்பாடு செய்தனுப்புமாறு செய்தியனுப்பி விட்டார். இதனைக் கேள்வியுற்றவுடன், மதீனாவாழ் முஸ்லிம்கள் அபூ' ஸுஃப்யானின் வர்த்தகக் :காபி'லாவை வழிமடக்கிக் கொள்ளையடிக்கப் போகிறார்க ளென்னும் வதந்தியொன்று அந்நகர் முழுதும் அனலைப்போலே பரவிவிட்டது; எனினும், இவ்வதந்திக்கு எப்படிப்பட்ட ஆதாரமும் இல்லை. என்னெனின், அவ்வர்த்தகக் கூட்ட முழுதும் மக்காவிலிருந்து மதீனாவழியாக வடக்கேயுள்ள ஷாம்தேசத்துக்குச் சென்றபோது, அவர்களை ஒருவரும் இடைவழியில் துன்புறுத்தித் தடைசெய்யவில்லை. அபூ' ஸுஃப்யான் முதலியோரும் தங்களை மதீனாவாசிகள் கொள்ளையடிக்கப் போவதாக ஒன்றும் செய்தி யனுப்பவில்லை. எனவே, முஸ்லிம்கள் அபூ' ஸுஃப்யானின் வர்த்தகக் :காபி'லாவை மதீனாவாசிகள்

---

* "காகதாளிக நியாயம்" என்பது, "காக்கை குந்தியதும் பனம்பழம் விழுந்ததும்" ஒத்துப்போதல் என்னும் பிரமாணம்.

கொள்ளையடித்து விடுவார்க ளென்று மக்காவாசிகள் வீண் "கிலி" கொண்டதற் கொன்றும் போதிய காரணமில்லை யென்று நாம் மிகச் செவ்விதாய் அறிந்துகொள்ளக் கடவோமாக.

மக்காவில் உ'மைர் கொண்டுவந்த செய்தி எட்டியவுடனே [illegible] லும், அபூ'ஸுஃப்யான் மனைவி ஹிந்துவும் சேர்ந்துகொண்டு, ம[illegible]ள மக்களுக் கெல்லாம் அளவுகடந்த உரோஷத்தை உண்டுபண்ணி விட்டார்கள். கொடுமைமிக்க "பழையனூர் நீலி"யாகிய அந்த ஹிந்தென்பாள் தன் தந்தையான உ'த்ப'ாவையும், சிறிய தந்தையான ஷைப'ாவையும், சகோதரனை வலீதை'யும் கூடச் சண்டைக் கிழுத்துவிட்டாள்.

மதீனாவின்மீது படையெடுத்து வரும்பொருட்டு மக்காவில் :குறைஷிகள் அதிக பலமான ஏற்பாடுகளை யெல்லாம் செய்து வருகின்றனர் என்பதைக் கேள்வியுற்று, நபிகள்நாயகமும் (சல்) அன்னவர் மதீனாவின்மீது வந்து தாக்குவதற்கு முன்னம் இடைவழியிலேயே எதிர்கொண்டு சென்று தடுக்கவேண்டு மென்று தீர்மானம் செய்துகொண்டு, தங்கள் ச'ஹாப'ாக்களான முஹாஜிரீன்களுடன் கலந்தாலோசிக்கத் தொடங்கினார்கள். அது சமயம் 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் சித்'தீ':க் அவர்கள் தங்களைப்போன்றார் இனி நடக்கப்போகும் யுத்தத்தில் தங்கள் உயிரையும் கொடுக்கத் தையாரா யிருப்பதாகக் கூறி, ஓர் உருக்கமான பிரசங்கம் செய்தார்கள். அதற்கு முன்னே மதீனத்து அன்சாரிய்யீன்கள் நபிகள் பெருமானிடம் அ':கப'ாவில் செய்துகொடுத்த வாக்குறுதியின் போது மதீனாவின்மீது எதிரிகள்வந்து தாக்குவதா யிருந்தால்மட்டுமே தாங்கள் வாளையுருவுவதாக ஒப்புக்கொண்டிருந்தமையால், அதுபொழுது நபிகள்திலகம் அந்த அன்சாரிய்யீன்கள் பக்கல் திரும்பிப் பார்த்தார்கள். உடனே க''ஜ்ரஜ் வர்க்கத்துத் தலைவராய் விளங்கிய ஸஅ'தி'ப்'னு உ'ப'ாத'ா (ரலி') அவர்கள் எழுந்துநின்று நபிகள் பெருமானை நோக்கி, "யாரஸூலல்லா! நாங்களும் இந்த யுத்தத்தில் கலந்துகொள்ள வேண்டு மென்று எங்கள் முகத்தைப் பார்க்கின்றீர்கள்? ஆண்டவன் மீது பிரமாணமாகத் தங்களுடைய ஓரேவார்த்தை மட்டும் பிறந்துவிடுமாயின், நாங்கள் நடுக்கடலிலும் குதித்து விடுவோமே," என்று கூறினார்கள். சீறாப் புராணம் பாடிய பெரும் புலவரும் இவ்வாறு கூறுகின்றார்:—

"அடிகள் புந்தியின் இருந்தவை உரைக்கிலவ் வழியே
முடியும் எங்களால் உரைப்பதென் முரணடை யலரைத்
தடிமின் என்றலும் தடிகுவம் எமர்கள்தம் உயிரை
விடுமின் என்றலும் விடுகுவம் நுந்திரு உளத்தால்."

அதைக் கேட்டு, மி:க்த'ாத்' என்பவரும் எழுந்துநின்று, "மூஸா நபியின் சிஷ்யர்கள் அவர்களை நோக்கி, 'நீங்களும் உங்கள் ரக்ஷகனும் சென்று சண்டை செய்யுங்கள்; நாங்கள் இங்கிருந்தே பார்த்துக்கொண் டிருக்

கிறோம்,' என்று கூறியதேபோல் நாங்களும் கூற மாட்டோம். நாங்க ளெல்லாரும் தங்களுக்கு வலப்புறமாகவும் இடப்புறமாகவும், முன்புற மாகவும் பின்புறமாகவும் நின்று, தோளோடு தோளுறழச் சண்டை செய்யக் கடவோம்," என்று இரைந்து செப்பினர்.

அதைக் கேட்டு, மகிழ்ச்சிகொண்ட நபிகள் திலகத்தின் (சல்) முகார விந்தத்தின்மீது புன்முறுவலும் அதிகம் பூத்துத் தவழ்ந்துகொண் டிருந்தது. ஆதலின், அம் முஸ்லிம்களெல்லாரும் எதிர்கொண்டு சென்று, இடைவழியி லேயே அம்மக்கத்துக் :குறைஷிகளை மடக்கித் தடுப்பதே சரியென்று அதுபொழுதே தீர்மானம் செய்து கொண்டார்கள். எனவே, ஹிஜ்ரீ 2-ஆவது ஆண்டு, ரமல'ான் மாதம் 12-ஆந் தேதியன்று சுமார் மூந்நூற் றுக்குச் சற்று அதிகமான தொகையினருடன் நபிகள்திலகம் மதீனவை விட்டுப் புறப்பட்டார்கள். அந் நகரை விட்டு ஒருமைல்தூரம் சென்ற வுடன் பீ'ராபி':கிப்'தா என்னுமிடத்தில் அப் பெருமானர் தங்களுடன் கூடிவந்த வீரத் தியாகிகளின் சேனையைச் சரிபார்த்தார்கள்; யுத்தத்துக்கு லாயி:க்கில்லாத சிறுவர்களை யெல்லாம் பொறுக்கியெடுத்து மதீனத்துக்குத் திருப்பியனுப்பி விட்டார்கள். ஆனல், ஸஅ'தி'ப்'னு அபீ' வ:க்:காஸின் இளைய சகோதரராகிய உ'மைர் பி'ன் அபீ' வ:க்:காஸ் என்னும் சிறுவர் மட்டும் மதீனத்திற்குத் திரும்பிச் செல்ல முடியாதென்று அழுதுகொண் டிருந்ததனல், அவரது குறுகிய கழுத்தில் நெடியதொரு வாள் மாட்டப் பட்டு, அவரும் அந்த யுத்தத்தியாகிகளுடன் சேர்த்துக் கொள்ளப்பட்டார். மதீனவைப் பாதுகாக்கும் பொருட்டு அபூ'லுப'ாப'ா பி'ன் அ'ப்'து'ல் முன்'திர் என்பவர் நியமிக்கப்பட் டனுப்பப்பட்டார். ஆ'லியாவிற்கு ஸர்தாராக ஆஸிம் பி'ன் அ'தீ' நியமிக்கப்பட்டார்.

அதன் பின்பு 313 முஸ்லிம்களுடனே நபிகள்பெருமானர் மக்காவை நோக்கித் தெற்குமுகமாய்ப் புறப்பட்டார்கள். அந்த யுத்தவீரர்களுள் இருவரே குதிரைவீரர்களாய்க் காணப்பட்டனர். 6 போர்க் கவசங்களும், 8 வாளாயுதங்களுமே அம் முஸ்லிம்கள்பால் அதுசமயம் இருந்துவந்தன. 70 வரிக்குதிரைகளும் அவர்கள்வயம் காணப்பட்டன. இளைஞர்களும் வயோதிகர்களும் கலந்துள்ள இந்த 313 வீரத் தியாகிகளும் போதிய யுத்த தளவாடங்களு மில்லாமல், தக்க யுத்தப்பயிற்சியுடனும் நல்லவிதமான ஆயுதங்களுடனும் ஆக்ரோஷங்கொண்டு, தங்களைக் காட்டினும் பெருந் தொகுதியினராய்த் திரண்டுவரும் மக்கத்துக்குப் போர்வீரர்கள் முன்னே எதிர்த்துச் செல்வதென்றால், அஃதெப்படிப்பட்ட எமன் வாயுள் நுழை வதேபோன்ற பயங்கரமான காரியமென்பதை நீங்களே சற்று நிதானித்துப் பார்த்துக்கொள்ளக் கடவீர்களாக. வெறிபிடித்த வேற்று மதவாதிகளே மதீனத்து முஸ்லிம்கள் மக்கத்துக் :குறைஷிகளைக் கொள்ளையடிக்கும் கொடிய நோக்கத்துடனேதான் இந்த யுத்தத்தில் இறங்கினர்க ளென்று கூறத் தலைப்படுவார்கள்' :குர்ஆன் ஷரீ'பும், "முஸ்லிம்களுள் ஒரு சாரார்,

தாங்கள் மரணத்தின் வாய்க்குள்ளேயே, அதனைக் கண்ணுற் கண்டு கொண்டே, நுழையத் துரத்தப்படுவதாக எண்ணிக்கொண்டு, மெய்யாகவே யுத்தத்திற்குச் செல்லும் விஷயத்தில் விருப்பம் சற்றும் இல்லாதவர்களா யிருந்து வந்தார்கள்"— (8 : 5, 6) என்னுங் கருத்துப்பட அவர்களுடைய அச் சமய மனத் திகிலைப்பற்றி விவரமாகக் கூறி யிருக்கின்றது. என்னெனின், தாங்கள் தங்களினும் மிக்க தொகையினரான யுத்த வீரர்களிடம் சிக்குண்டு சாவப்போவதாகவே நிச்சயமாகத் தீர்மானித்திருந் தார்கள். ஆயினும், அவர்கள் தங்கள் நகரத்தையும், அங்குள்ள பெண்டு பிள்ளைகளையும் தற்காக்க வேண்டுவதும் ஒரு முக்கியக் கடமையாய்க் காணப்பட்டு வந்தது. :குறைஷியர் எவ்வாற்ருனும் இஸ்லாத்தை வேரோடு கல்லியெறிந்து விடுவதென்றே ஓரே தீர்மானமாக முனைந்து நின்ருர்கள். அவர்களை எதிர்த்து முஸ்லிம்கள் தற்காப்பு வெற்றி பெறுதல் வேண்டும்; இன்றேல், அம்முயற்சியில் மடிந்து வீரசுவர்க்கம் புகுதல் வேண்டும். இதைக் குறித்துத்தான் நபிகள் நாயகமும் தங்கள் சிஷ்யர்களுக்கெல்லாம் ஜிஹாதி'ன் அவசியத்தைப் பற்றி நன்கு விளக்கிக் காட்டினுர்கள்.

அதுபொழுது நபிகள்பெருமானுல்(சல்) முற்கூட்டி யனுப்பப்பட்டிருந்த அ'தீ'யும் மற்ெருருவருமான இரண்டு வேவுகாரர்கள் திரும்பி வந்து, மக்கத்துக் :குறைஷிகள் பெருந் திரளாகச் செங்கட லோரத்திலுள்ள ப'த்'ரை நோக்கி வந்துகொண் டிருப்பதாகச் செய்தி யறிவித்தார்கள். ஆகவே, நபிகள் நாயகமும் தங்கள் சிறு சேனையையும் அந்த ப'த்'ரை நோக்கியே அழைத்துச் சென்ருர்கள். ரமல'ான் மாதம் 17-ஆந் தேதி ப'த்'ருக்குச் சமீபத்தில் நபிகள் திலகமும் மற்றுமுள்ள முஸ்லிம்களும் சென்று சேர்ந்த போது, அவ்வூரின் மற்ெருரு புறத்தில் :குறைஷிகள் ஓர் ஒற்றையடிப் பாதைவழியாக வந்து சேர்ந்திருக்கிருர்கள் என்று ஒற்றர்கள் மூலம் அறிந்து, நபிகள் நாயகமும் தாங்கள் வந்தவிடத்திலேயே தங்கிவிட்டார்கள். ப'த்'ரென்னும் கிணற்ருல் அப் பெயர் பெற்ற ஊர் ஆண்டிற் கொருமுறை பெருந் திரளான ஜனங்கள் கூடக்கூடிய ஒரு சந்தையா யிருந்துவந்தது; இது மக்காவிலிருந்து ஷாமுக்குக் குறுக்குப் பாதையாய்ச் செல்லும் ரஸ்தாவில் செங்கடலோரத்தில் அமைந்திருக்கிறது. மதீனுவிலிருந்து மூன்று நாள் பிரயாண தூரத்தில் (அஃதாவது, சுமார் 80-மைல் தூரத்தில்) ஒரு பள்ளத்தாக்கில் அக்கிராமம் நின்றுகொண் டிருந்தது. அங்கு ஆதியில் ப'த்'ரு பி'ன் :குறைஷ் கட்டிய கிணெறுென்றுங் காணப்பட்டது.

முஸ்லிம்கள் அம் மூன்றுநாட் பிரயாணத்தை நான்கு நாளில் நடந்து வந்து ஆங்குச் சேர்ந்தபோது, அதற்கு முன்னே ஒன்பது நாள் பிரயாணத்தைக் கடந்துவந்து, மக்கத்துக் :குறைஷிகளும் அவ்வூரின் மற்ெருரு பக்கத்தில் பாடிவீடு செய்திருந்தார்கள். முஸ்லிம்களின் படையில் 60 முஹாஜிரீன்களும், 253 அன்சாரிய்யீன்களுமே (77 முஹாஜிரீன்கள் 236 அன்சாரிய்

யீன்கள் என்றும் வேறு சிலர் கூறுவர்) சேர்ந்திருந்தார்கள். ஆனால், மக்கா விலிருந்து ஓராயிரம் பொறுக்கி யெடுத்த வீரர்களும், அவர்களுள்ளே ஒரு நூறு குதிரை வீரர்களும், எல்லாக் :குறைஷித் தலைவர்களும் சேர்ந்து விஜயம் செய்திருந்தார்கள். :குறைஷிகளின் மொத்தத் தொகை 950 தான் என்றும், அவர்கள்பால் 700 ஒட்டகங்களும் இருந்தன வென்றும் வேறு பலர் கூறுகின்றனர். ஆனால், அபூ'லஹப்' மட்டும் ஏதோ அசந்தர்ப்பத் தினால் அதுசமயம் அவர்களுடனே சேர்ந்து வரவில்லை. எனினும், தனக் கீடாக வேறோர் ஆளை யனுப்பி யிருந்தான். ஆயினும், நபி பெருமானின் ஜன்ம விரோதியாகிய அபூ'ஜஹ்லும், அவனுக் கதுபொழுது பிராயம் 70 கடந்திருந்தும், அம்மக்கத்துச் சேனையுடன் சேர்ந்து, இஸ்லாத்தை இன்றோடு ஒழித்தே விடவேண்டு மென்னும் ஒரே பிடிவாதமான மாகொடிய எண் ணத்துடனே வந்திருந்தான். அக் :குறைஷிகளின் சேனைக்குத் தலைமைப் பதவியை உ'த்ப'ா பி'ன் ரபீ'ஆ' என்பவர் வகித்திருந்தார். அவர்கள் தங்களுடன் ஏராளமான உணவுப் பொருள்களை யெல்லாம் கொண்டுவந் திருந்ததனால், தினமொன்றுக்கு ஒவ்வொரு தலைவராகப் பப்பத்து ஒட்ட கங்கள் விகிதம் அறுத்துப் போஜனம் புஜிப்பித்துக்கொண்டு வந்தார்கள்.

:குறைஷியர் சேனை முஸ்லிம்களுக்கு முன்னரே ப'த்'ருக்கு வந்து சேர்ந்துவிட்டமையால், தாமதித்து நல்லயுத்தம் புரிதற்கு வசதியான இடங் களை யெல்லாம் அவர்களே கைப்பற்றிக் கொண்டார்கள்; முஸ்லிம்கள் தங்கியிருக்க நேர்ந்த இடத்திலே தாகத்திற்காக ஒருகிணறேனும், அல்லது வேறேதேனும் ஊற்றேனும் காணக் கிடைக்க வில்லை; ஆங்குள்ள தரை மணற்றரையாக இருந்ததனால், ஒட்டகத்தின் கால்களும் அங்கே நன்கு பதிந்துவிடக் கூடியனவாயே யிருந்தன. அதனைக் கண்டு, ஹு'ப'ாப்' பி'ன் முன்'திர் என்பார் நபிகள் நாயகத்தை நோக்கி, "யாரஸூலல்லா! தாங்கள் இதுசமயம் இவ்விடத்தைத் தேர்ந்தெடுத் திருப்பது ஆண்டவனது அறிவிப் பைக் கொண்டா? அல்லது தங்கள் சொந்த யுத்த தந்திரத்தை அனு சரித்தா? என்று அறிய விரும்புகிறேன்," என்று வினவியதைக் கேட்டு, நபிகள்திலகம்(சல்) அல்லா(ஹ்)வின் வ'ஹீயினால் அவ்விடம் தேர்ந்தெடுக்கப் படவில்லை யென்று விடை கொடுத்தபோது, ஹு'ப'ாப்' என்பவர், "இவ் விடத்தைவிட்டு முன்னேறிச் சென்று, நீரூற்றுக்கள் மலிந்துள்ள இடங்களை நாம் கைப்பற்றிக் கொண்டு, அருகிலுள்ள வேறு கிணறுகளை யெல்லாம் எதிரிகளுக்குப் பயன் படாதவாறு செய்து விடலாம்," என்று யுத்ததந்திரம் கூறினார். நம் பெருமானார் அதனைக் கேட்டுத் தங்கள் அங்கீகாரத்தை யளித்தவுடன் அவ் வாலோசனையும் அவ்வாறே நிறைவேற்றப் பட்டுவிட் டது. அன்றிரவு ஆண்டவ னருளால் தற்செயலாக நல்ல மழையும் பெய்து, தரையிலுள்ள புழுதிகளும் அழுந்திவிட்டன. அம் மழைநீரைத் தேக்கி வேறுபல உபயோகத்திற் கென்றும் முஸ்லிம்கள் சேமித்து வைத்துக் கொண்டார்கள். இதைக் குறித்துத்தான் ஆண்டவனும் தன் திருமறையில்

(8 : 11) சுட்டிக் காட்டியுள்ளான். அம் மழையால் அந்த முஸ்லிம்களின் ஹிருதயங்களும் உறுதியடைந்து, கால்களும் ஸ்திரமாய்விட்டன.

நபிகள்திலகம் (சல்) தங்கள் ஜன்ம சத்துருக்களிடத்தும் உதாரகுணம் காட்டக் கூடியவர்களாகவே இருந்து வந்ததனுல், அவர்கள் இந்த யுத்த களத்திலும் தர்மயுத்த முறையையே மேற்கொண் டிருந்தார்கள். ஆங்குள்ள நீர்நிலைகளை யெல்லாம் முஸ்லிம்கள் கைப்பற்றிக்கொண்டு விட்டபோதினும், அங்கு வந்து தண்ணீர் மொண்டு கொள்ளுமாறு எதிரிகளுக்கும் முழு அனுமதியும் ஈந் துதவினுர்கள். அன்றிரா முழுதும் ச'ஹாப்'ாக்கள் எல்லாரும் நன்ருகத் தூங்கியெழுமாறு நபிகள்பிரான் (சல்) உத்தரவளித்து விட்டார்கள். ஆனுல், அன்றிரவு விடியுமட்டும் ஓரே ஒரு மகானே இடைவிடாது விழித்துக்கொண் டிருந்து, எல்லாருக்காகவும் காவல் புரிந்து, கிழக்கு வெளுக்கும்வரை ஆண்டவன் சன்னிதானத்தில் பிரார்த்தனை புரிந்து கொண்டே யிருந்தார்கள். வைகறை யாமவுடன் ரஸூல் நாயகமவர்கள் எல்லாரையும் எழுப்பி, சுப்''ஹ் தொழுது கொண்டதன் பின்பு, அவர்கள் முன்னே ஜிஹாதைப் பற்றிய நல்ல பிரசங்கமும் ஒன்று செய்து முடித்தார்கள்.

முஸ்லிம்கள் அவ்வா றிருந்துவரும்போது, :குறைஷிகளோ, யுத்தத்திற்காகத் துடிதுடித்துக் கொண்டிருந்தார்கள். இதற்குள் அபூ' ஸுஃப்யானும் முன்னமே வேறுவழியே ஷாமிலிருந்து மதீனுவைத் தாண்டி மக்கத்துக்குச் சென்று விட்டார்;* முஸ்லிம்களும் யுத்த சன்னத்தர்களாய்ப் புறப்பட்டு வந்துவிட்டார்கள். ஆதலின், இனி யுத்தம் தொடங்கவேண்டிய அத்தியாவசிய மொன்றும் இல்லை யென்று ப'ஜாஹ்ரா, அ'தீ' என்னும் இரு கூட்டத்தினரும் அக் :குறைஷியருக்கு ஆலோசனை கூறினர்; அவர்களுக்கு அபூ' ஜஹ்லின் அந்தரங்க எண்ணம் இன்னதென்பது ஒரு சிறிதும் தெரியமாட்டாது. அபூ' ஸுஃப்யானின் வர்த்தகக் :காபி'லாவைக் காப்பதற்கே அக் :குறைஷியர் வந்திருப்பதாக அவர்கள் எண்ணி யிருந்தனர் போலும்! ஆனுல், அந்த யுத்தத்தை நிறுத்துவதற்கு அபூ'ஜஹ்ல் ஒருப்படாததால், அவ்விரு வர்க்கத்தினரும் அந்த யுத்தத்தில் கலந்துகொள்ள மறுத்துத் தத்தம தூருக்குத் திரும்பி விட்டார்கள். அதன்பின்பு சகோதரர்களின் இரத்தத்தை அனுவசியமாய்ச் சிந்தவேண்டிய தில்லையென்னும் தயாளகுணத்துடன் 'ஹ(க்)கீம் இப்'னு ஹ'ஜாம்— (அதுவரை இவர் இஸ்லாத்தில் சேர்ந்து கொள்ளவில்லை) சேனுதிபதியான உ'த்ப'ா பி'ன் ரபீ'ஆ'— (அபூ' ஸுஃப்யானின் மாமனுர்) இடம் சென்று, "தங்களுடைய நல்ல பெயருக்கு

* காமாலைக் கண்ணரும், பௌராணிகப் பித்தருமே நபிப்பெருமானுர் அபூ' ஸுஃப்யானை வழிப்பறி கொள்ளையடிக்கச் சென்ருர்க ளென்று வருணிக்கத் துணிவர். அபூ' ஸுஃப்யானை நபிபிரான் கொள்ளையடிக்கச் சென்ருர்களாம்; இடைவழியில் ப'த்'ருக்குத் திரும்பி விட்டார்களாம். ஐயகோ, என்ன கொள்ளை! இதனைக் கற்றுக்கொடுப்பதுதான் இறுதி நபியின் வேலைபோலும்? நன்று! நன்று!

இன்று முடிவுக்காலம் வந்துவிட்டதே! தாங்கள் நாடுவீர்களாயின், தங்களுடைய நல்ல பெயர் இங்கு நிலைத்திருக்கக்கூடிய ஞாபகச்சின்னமொன்றை இன்று செய்துகொள்ளலாம்," என்று கூறினர். அதைக் கேட்டு, உ'த்ப'ா விவரம் என்னவென்று வினவினர்; அதற்கு 'ஹ(க்)கீம், "இப்'னு 'ஹல'ரமீயின் கொலை நிகழ்த்தப் பட்டதற்காகவே நம் :குறைஷியர் இந்த யுத்தத்திற்கு வந்திருக்கிறார்கள். தாங்கள் அ'ம்ரு பி'ன் 'ஹல'ரமீக்கு அத்தியந்த நண்பராதலின், அவரது இரத்தத்திற்கு ஈடாகத் தக்கதொரு தொகையைத் தாங்களே அன்னவரின் வாரிஸுக்கு அளித்துவிட்டால், இந்த யுத்தம் தடைபட்டுப்போகும்," என்று வியாக்கியானம் செய்தார். உ'த்ப'ா பெருந்தன்மையும் சாந்தகுணமும் உடையவராதலின், 'ஹ(க்)கீமின் வார்த்தைக்குச் செவிசாய்த்து, அவ்வண்ணமே இசைந்துகொண்டார். ஆனால், அவ்வாறு செய்வதற்கு அபூ'ஜஹ்லின் உடன்பாடும் வேண்டப்படுமாதலின், 'ஹ(க்)கீம் இப்'னு ஹ'ஜாம் அவனிடம் சென்று இவ்விஷயத்தைத் தெரிவித்தார்; அதுசமயம் அபூ'ஜஹ்ல் தன் அம்புகளையெல்லாம் தரையில் பரப்பி வைத்துச் சரிபார்த்துக்கொண்டிருந்தான். 'ஹ(க்)கீம் கூறியதை இஸ்லாத்தின் பரமவிரோதியாகிய அந்த அபூ'ஜஹ்ல் செவியேற்றவுடனே, "ஆஹா! உ'த்ப'ாவின் மனோதைரியமே இவ்வாறு சொல்லச் சொல்லுகிறதுபோலும்!" என்று கர்ஜித்தான். உ'த்ப'ாவின் குமாரரான அபூ'ஹுதை'ப'ா இதற்கு முன்னே இஸ்லாத்தைத் தழுவியிருந்ததனால், அவரும் முஸ்லிம்களின் சார்பில் அவ்யுத்தத்திற்கு வந்திருந்தார். எனவே, அவருடன் எதிர்த்துச் சண்டை செய்ய மனமில்லாமலே இவ்வாறு உ'த்ப'ா மழுமாறுகிறாரென்று அபூ'ஜஹ்ல் ஐயங்கொண்டுவிட்டான். உடனே அபூ'ஜஹ்ல் அ'ம்ரின் தம்பியான ஆ'மிர் பி'ன் 'ஹல'ரமீயை அழைத்து, அவனுடைய தமையன் உதிரம் சொரியப் பட்டதை மீண்டுமொருமுறை ஞாபகமூட்டி உரோஷப்படுத்தினன். அதுசமயம் அ'ம்ரின் அகால மரணத்தைக்குறித்து அதிக ஆத்திரங்கொண்ட ஆ'மிரின் கோபாவேசத்தைக் கண்டு, மற்றுமுள்ள படைகளெல்லாம் அதிகமான கொந்தளிப்பை அடைந்துவிட்டன. இவற்றையெல்லாம் கேள்வியுற்ற உ'த்ப'ா அதிக ஆக்ரோஷத்துடன், "அமானுஷீகபலம் ஆருக்குண்டென்பதை இந்த யுத்தகளமே காட்டிவிடட்டும்!" என்று சபதஞ்செய்து, சம்பூர்ண ஆயுதபாணியாய் யுத்தத்திற்குத் தையாராய்விட்டார். ஆனால், அவருக்குச் சொந்தமான தலைக்கவசம் ஒன்றுமில்லாமையால், அவர் வேறுபலருடைய தலைச்சீராக்களையெல்லாம் அணிந்தணிந்து சரி பார்த்தார்; அவற்றுள் ஒன்றேயும் அவரது பருத்தமண்டைக்குப் பற்றாமற்போய்விட்டமையால், உ'த்ப'ா தந் தலைமீது வஸ்திரங்களையே தலைப்பாகையாகச் சுற்றிக்கொண்டு யுத்தகளம் நோக்கிப் புறப்பட்டார்.

அதுபொழுது, அந்தப் போர்க்களத்தின் ஓரத்திலே ஓர் உயரிய இடத்தில் நபிகள்திலகமவர்களுக்குச் சிறுகுடில் ஒன்று அமைக்கப்பட்டிருந்தது; அந்தக் கூரையின் கீழே நபிபெருமானார் அமர்ந்திருக்க வேண்டுமென்றும்,

அவர்களுக் கருகில் ஸஅ்'தி'ப்'னு முஆ'ெ'தன்பவர் உருவிய வாளுடன் மெய் காப்பாளராக நிற்கவேண்டு மென்றும் ஏற்பாடு செய்யப்பட் டிருந்தது. அன்றுகாலையில் ஆண்டவனும் அமரர்களும் நபிகள் பிரானுக்கு உதவிபுரிய விஜயஞ் செய்திருப்பதே போல அங்குத் தோன்றிய இயற்கைக் காட்சிகள் அனைத்தும் மிக்கபொலிவுடனே அதுபொழுதுவீசிய மந்தமாருதத்தில் இலங் கிக்கொண் டிருந்தன. நபிகணுயகர் அவர்கள் அதுசமயம் தங்கள் கையி லிருந்த ஓர் அம்பைக் கொண்டு சமிஞ்ஞை செய்து, அணி வகுத்தார்கள்; அவர்கள் காண்பித்த அடையாளத்திற்கு முன்பின்னுகச் சற்றும் எவருமே சறுகக்கூடா தென்று கண்டிப்பான உத்தரவும் இட்டு வைத்தார்கள். சாதாரணமாக யுத்த களங்களில் அந்த அரபிகள் பேரிரைச்சல் போடுவது வழக்கம். ஆனுல், இந்த யுத்தகளத்தில் எந்த முஸ்லிமும் வாய்திறக்கக் கூடாதென்று கண்டிப்பான கட்டளை யிட்டு விட்டார்கள். முஹாஜிரீன் களின் கொடியை முஸ்அ'ப்' பின் உ'மைர் தாங்கியிருந்தார்;— அ'லீ(ரலி') அவர்களே அதைப் பிடித்திருந்தார்கள் என்று வேறுசிலர் கூறுகிருர்கள். க'ஜ்ரஜ் வர்க்கத்தினரின் கொடியை ஹு'ப'ாப்' பின் முன்'திர் பிடித்திருந் தார்; ஒளஸ் வர்க்கத்தின் கொடியை ஸஅ்'தி'ப்'னு உ'ப'ாத'ா பிடித்துக் கொண் டிருந்தார். பொழுது விடியவிடிய இவ்வா றெல்லாம் ஏற்பாடு செய்துவருங்கால், நபிகள் பெருமானின் நற்குண மொன்றைப் பரிசோதித் தறிதற்குரிய ஓர் அழகிய சம்பவம் அதுபொழுது நிகழ்ந்துவிட்டது :—

நம் உத்த மோத்தமரான ஞானகுருவானவர் எப்பொழுதுமே வாக்குச் சுத்தத்தில் இணையற்றவர் என்பதை நீங்களெல்லீரும் முன்னரே நன்கறிந்து கொண் டிருக்கின்றீர்கள். கொலைபுரிய வரும் பகைவனே யாயினும், அவ னுக்குக் கொடுத்த வாக்குறுதியையும் நிறைவேற்றுவதில் இப்பரம புரு ஷரை ஒப்பாரும் மிக்காரும் இத்தாரணியில் வேறெவரும் இல்லையென்றே கூறி முடிக்கலாம். இந்த ப'த்'ர் யுத்தத்திற்கு 313 முஸ்லிம்களே யுத்த சன்னத்தராய் வந்திருந்தார்கள். அவர்களுடனே இனி ஒருவரையேனும் சேர்த்துக்கொள்வதா யிருப்பின், அஃது எத்துணையோ முஸ்லிம்களுக்குப் பேருதவியா யிருக்கு மென்பதில் கிஞ்சித்தும் சந்தேகமென்பது கிடையாது. அப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் அபூ' ஹு'ை'ஜ'பா பின் யமான், அபூ' ஹைல் என்னும் இரு முஸ்லிம்கள் மக்கத்திலிருந்து ப'த்'ரின்பக்கல் வந்து சேர்ந்தார்கள். அவ் விருவரையும் இடைவழியிலே கு'ப்'பார்கள் மேற் கொண்டு செல்லக்கூடா தென்றுதடை செய்து விட்டார்கள்; பிறகு, அவ் விருவரும் முஸ்லிம்களுடன் சேர்ந்து இந்த யுத்தத்தில் கலந்துகொள்வ தில்லை யென்று வாக்குறுதி செய்துகொடுத்த பின்னரே அக் :குறைஷிகள் அவர்களுக்கு விடைகொடுத் தனுப்பினுர்கள். இவ் விஷயத்தை நபிகள் பெருமானுர் கேள்வியுற்றவுடன் அவ் விருவரையும் இந்த யுத்தத்தில் கலந்து கொள்ள வேண்டாமென்று ஒதுக்கி நிறுத்திவிட்டார்கள்; தங்களுக்கு ஆண் டவனே துணையா யிருக்கும்போது, அவ் விருவரும் தனித்து நின்று

தாங்கள் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றி வைக்கட்டு மென்று கூறிவிட்டார்கள்.

அதன்பின்பு மெய்யும் பொய்யும், ஒளியும் இருளும் போலவே இஸ் லாமும் கு'ப்ரும் சத்யமும் அசத்யமும் — ஒன்றோ டொன்று எதிர்த்து முட்டிக்கொண்டு நின்றன. இதையேதான் :குர்ஆன் ஷரீ'பின் 3 : 12-ஆவது ஆயத்தும் சுட்டிக் காட்டுகின்றது. எண்ணிப் பார்த்துக் கணிக்கு மளவில், :குறைஷிக் கு'ப்'பார்கள் முஸ்லிம் படையினரைப் பார்க்கினும் மும்மடங்கு அதிகரித்தவராகவே ஆங்கு வந்திருந்தனர்; இன்னம், அன்ன வர்கள், கைதேர்ந்த போர்வீரர்களாகவும் காணப்பட்டார்கள். ஆனால், முஸ்லிம்களோ, எண்ணிக்கையில் குறைந்தவர்களாகவும், போதிய யுத்த தளவாடங்கள் இல்லாதவர்களாகவும் காணப்பட்டு வந்தார்கள். இவர் களுக்குள்ளே ஒருசிலர் மிகச்சிறு பிராய முள்ளவர்களாகவும் இருந்து வந்தனர். இத்தோற்றம் பார்ப்பதற்கு ஆச்சரியகரமாகவே காணப்பட்டு வந்தது. இந் நெடிய கடலாடை சூழ்ந்த பெரிய உலகில் அதுசமயம் 313 சாமான்ய மக்களே ஏகேசுவர வாதத்திற் கென்று கொடிபிடித்து நின்றார்கள். அவர்கள் தோல்வி யடைந்தால் இஸ்லாமே நசித்துவிடும் போல் காணப்பட்டது. இந் நிலையில், அல்லா(ஹ்)வின் உதவியைக் கொண் டல்லது, வேறு எவ்வகைத் தைரியத்தைக் கொண்டும் இந்த ஏற்றத் தாழ்வான யுத்தத்தில் அம்முஸ்லிம்கள் வெற்றியடைந்துவிடுதல் கூடுமென எவரும் முற்கூட்டிக் கூறத்துணியார். இத்தகைய பரம சங்கடமான நிலை மையை நபிகள்பெருமானும்(சல்) முற்றும் சஞ்சலத்துடன் உணர்ந்துகொள் ளாமற் போகவில்லை. எனவே, அவர்கள் தங்கள் குடிலுக் குள்ளிருந்து நீர் ததும்பிய நேத்திரங்களுடனே அல்லா(ஹ்)வின் திருமுன்பினில் குப்புற்று வீழ்ந்து, "ஏ இறைவனே! நீ எனக்குப் பலகாலும் செய்துகொடுத் திருக்கும் வாக்குறுதியை இன்று நிறைவேற்றி வைக்கக் கடவாய்!" என்று மனமுருகிப் பிரார்த்தனை புரிந்தார்கள்; அதுசமயம் அவர்கள் தங் களையே மறந்திருந்தார்கள்; தங்கள் மேலாடை கீழே நழுவியதுகூட அவர்களுக்குத் தெரியவில்லை; பிறகும் தங்கள் சிரத்தைத் தரைமீது சார்த்தி, "எல்லாம் வல்ல இறைவனே! நீ உள்ளம் நொந்தவர்களுக்கு உதவிபுரியக் கடவாய்! இச்சிறு தொகுதியினர் இன்று மடிந்துபோக வேண்டுமென்று நீ நாடியிருப்பையாயின், பிறகு இத்தரணியின்மீது நினது பரிசுத்த நாமத்தைக் கொண்டு வணக்கம் புரிதற்கும், நினது சத்யத்தை இவ்வுலகினில் பிரசாரம் புரிதற்கும் ஒருவரும் இருக்கமாட்டார் என்பது திண்ணம்!" என்று குறையிரந்தார்கள்.*

---

* அன்று அந்த 313 ஏழை முஸ்லிம்களின் தியாகத்தினாலே இன்று நாம் 60 கோடி யென்று பெருமை பேசுகிறோம். இன்று நாம் 60 கோடி பேர் இருந்தும், இஸ்லாமிய பிரசாரத்துக்காக என் செய்கிறோம்? பேடிகை வாளேபோல் பேசாதிருக்கிறோம். திரு நபியின் பிறந்த தின "மௌலூது" என்று விளம்பரத்திற்காக விமரிசையான "கந்தூரி"

அதுபோது 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர்(ரலி') அவர்கள் நபிகள் பெருமானிடம் சென்று, "எம்பெருமானே! இறைவன் தன்னுடைய வாக்குறுதியை நிச்சயமாக நிறைவேற்றி வைப்பான்!" என்று கூறியதைக் கேட்டவுடன், "அதிசீக்கிரம் எதிரிகளின் கூட்டங்கள் தோற்கடிக்கப்பட்டு விடும்; இன்னம், அன்னவர்கள் புறமுதுகு காட்டி ஓடிவிடுவார்கள்!" (54 : 45) என்னும் வேதவாக்கியத்தை ஓதிக்கொண்டே வெளியில் வந்தார்கள். இது முஸ்லிம்களின் வெற்றிக்கொரு முன்னறிக்கையாய்க் காணப்பட்டு வந்தது. அதற்குள்ளே :குறைஷிகளின் சேனை சமீபத்திலே நெருங்கிக் கொண்டிருந்தது.†

இரு சாராரின் சேனைகளும் அதுபோழ்து எதிரெதிராகப் போர்க் களத்தில் வந்து புக்கன. ஆனால், முஸ்லிம்கள் முன்னேறிச் செல்லக்கூடாதென்றும், தங்கள் விற்களையும் அம்புகளையும் கொண்டே, மேலடர்ந்தேறி வரும் எதிரிகளைத் தடுக்க வேண்டுமென்றும் நபிகள் திலகம் நன்கு கட்டளையிட்டிருந்தார்கள். என்னெனின், இந்த யுத்தமானது தற்காப்பினிமித்தமாகவே புரியப்பட்டதன்றோ? அந்த யுத்தகளத்தில் விஜயம் செய்திருந்தவர்களின் எண்ணிக்கையைக் கொண்டு இதை இலேசாக மதித்துவிடக் கூடாது. ஓரிலக்ஷியத்திற்காகத் தங்களுயிரையும் அலக்ஷியம் செய்து, தங்கள் கரத்தைக் கொண்டே சொந்த பந்துமித்திரர்களையும் தங்கள் சொந்தக் குழந்தைகளையும் உயிர்வாங்கத் துணிந்து முன்வந்ததற்கு இவ்

---

ஆக்குவார்கள்; ஆனால், அப்பெருமானார் கொணர்ந்து நிறுத்திய தீ'னுல் இஸ்லாத்தின் இஷாஅ'த்துக்கென்று ஒருசிறு தொகையும் சம்மானம் அளிக்கத் துணியார். இதுதான் இக்கால முஸ்லிம் மனப்பான்மை. அந்தோ! அந்தோ!

† இமாம் பு'கா'ரீ இவ்வாயத்தைக் குறித்து வரைந்துள்ள வியாக்யானத்தில் இவ்வாறு எழுதி யிருக்கிறார்கள்: நபிகள் திலகமும் அவர்களுடைய தோழர்களும், இப்படிப்பட்ட தீர்க்கதர்சனங்களை யெல்லாம் எவ்வாறு :குறைஷியர் முறியடிக்கப் படுதற்குரிய முன்னறிக்கைக ளென்று எண்ணி யிருந்தார்க ளென்னும் உண்மை இதனால் விளங்கக் கிடக்கின்றது. இப்'னு அ'ப்'பா'ஸ்(ரலி') இவ்வாறு கூறியுள்ளார்: நபிகள் திலகம் ப'த்'ரின் போருக்குரிய தினத்தன்று தங்கள் கூடாரத்திற் குள்ளிருந்தபடியே, "ஏ ரக்ஷகா! உனது உறுதிமொழியின்படியும் வாக்குறுதியின் படியும் யான் உண்மையிலே இறைஞ்சுகின்றேன், ஏ ரக்ஷகா! அவ்விதம் (முஸ்லிம்கள் தோல்வியுற்று) நடைபெற வேண்டுவது உனது விருப்பமாயிருப்பின், இன்றைக்குப் பிறகு நீ வணங்கப்படாமலே போய்விடக்கூடும்!" என்றுபிரார்த்தனை புரிந்தார்கள். அபூ'ப'க்ர் (ரலி') அவர்கள் கரத்தைப்பற்றி, "ஏ அல்லா(ஹ்)வின் தூதரே! அல்லா(ஹ்) ஒருவனே உங்களுக்குப் போதும்," என்று கூறினர். ஆகவே! நபி பெருமான் வெளியில் வந்து, "அக் கூட்டங்கள் அதிசீக்கிரத்திலே முறியடிக்கப்பட்டு விடும்; இன்னம், அன்னவர்கள் (தங்கள்) முதுகுகளைத் திருப்பிக்கொண்டு ஓட்டம் பிடிப்பார்கள்; இல்லை! அந்த வேளைதான் அவர்களுக்குரிய வாக்குறுதி யளிக்கப்பட்டுள்ள நேரமா யிருக்கிறது; இன்னம், அவ்வேளை மிகவும் கிலேசப்படுத்துவதாகவும் கசப்புள்ளதாகவுமே யிருக்கும்," என்று இவ்விரு (54 : 45, 46) ஆயாத்களையும் ஓதினர்கள். அவ்வாறு அன்று அம்முஸ்லிம்கள் தோற்கடிக்கப் படாமையால்தான் இன்று இப்பூவுலகில் ஏகதெய்வக் கொள்கை நிலைபெற்று நிற்கின்றது.— எல்லாப் புகழும் அல்லா(ஹ்)வுக்கே,

வுலக சரித்திரத்தில் இதற்கிணையான இனியோர் உதாரணத்தைக் கண்டு கொள்ள மாட்டீர்கள். இருகக்ஷிச் சேனைகளும் ஒன்றுடனொன்று எதிர்த்துநின்ற போது, முஸ்லிம்கள் தங்களுடைய அம்புகளுக்கு முன்னே தங்கள் ஈரற்றுண்டுகளைக் கண்டார்கள். 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ரின் குமாரரான அ'ப்'து'ர்ர'ஹ்மான்— (இவர் அதுவரை இஸ்லாத்தில் சேரவில்லை) யுத்தகளத்தில் முன்னேறிவந்த போது, அவருடைய அருமைத் தந்தையே தம்புத்திரனுக் கெதிராக வாளையுருவிக் கொண்டார். உ'த்ப'ா வென்பவர் வெளிவந்த போது, அவருடைய அருமைக் குமாரரான அபூ'ஹுஜை'ஃபா வென்னும் முஹாஜிர் எதிர்கொண்டு சென்றார். 'ஹ'ஜ்ரத் உ'மர் அவர்கள் தங்களுடைய சொந்த மாமனுக்கு விரோதமாய் வாளேந்தி வெளிவந்தார். இவ்வாறாகவே அவரவரும் தத்தம் உறவின்முறையாள ருடனேயே போர் புரியவேண்டிய ஆவசியகம் ஏற்பட்டுவிட்டது.

இக்காலத்தில் நடைபெறுவதே போன்று, கிடங்கு வெட்டிக்கொண்டு அதற்குள் ளிருந்தபடியே போர்புரியும் வழக்கம் அக்காலத்தில் அவ் வரபிக ளிடத்தில் அதுகாறும் காணப்பட்டதில்லை யாதலால், அவ்விருகக்ஷி வீரர் களும் சமமான தரைமீது நின்றே போர்புரிய வேண்டியவர்களா யிருந் தார்கள். அதுபொழுதும் இருதிறத்துச் சேனைகளும் ஏகோபித்து அந்த யுத்தத்தைத் தொடங்கிவிடுவது வழக்கமில்லை. அணிவகுத்து எதிரெதிராக நிற்கும் இருசேனைகளி லிருந்தும் ஒவ்வொரு வீரனே முதலில் முன் வருவான்; முதன்முதலாக அவ்விருவரும் போர்புரிவார்கள்; அவ்விருவருள் ஒருவன் மாண்டுபோய் விடுவனாயின், அவனுக்கீடாக அக்கக்ஷியிலிருந்து வேறொரு வீரன் அனுப்பப்படுவான். இவ்வழக்கத்துக் கொத்தவாறே, ஃகுறைஷிகளின் சேனையிலிருந்து ஆ'மிர் பி'ன் 'ஹல'ரமீ வெளி வந்தான்: இவன், முன்னம் முஸ்லிம்கள் பன்னிருவரால் நக்'லாவில் கொல்லப்பட்ட தன் சகோதரன் அ'ம்ரு பி'ன் 'ஹல'ரமீயின் கொலைக்குப் பழிவாங்கப் புறப் பட்டவன்; இவனுக் கெதிராக முஸ்லிம்களின் அணியிலிருந்து 'ஹ'ஜ்ரத் உ'மர்(ரலி')அவர்களின் அடிமையான ம'ஹ்'ஜஃ' என்பவர் எதிர்த்து வந் தார். அச்சண்டையில் அம்முஸ்லிம் அடிமையே ஆ'மிர் என்பவனால் கொல் லப்பட்டு முதன்முதலாக வீரசுவர்க்கம் அனுப்பப்பட்டவராய் விட்டார்.— (இன்னாலில்லாஹி வ இன்னாஇலைஹி ராஜிஊன்'ன்!)

பின்னர், ஃகுறைஷிச் சேனைத் தலைவனான உ'த்ப'ா வென்பவன் தன் னுடைய சகோதரனான ஷைப'ாவுடனும், குமாரனான அல் வலீது'டனும் அப் போர்க்களத்தில் முன்னேறினான். உ'த்ப'ா சேனைத் தலைவனாதலின், அதிகமான ஆடம்பரத்துடனே முன்வந்து முனைந்து நின்றான்; அவன் தனது உயரிய அந்தஸ்துக் கறிகுறியாகத் தன் மார்பின்மீது தீக்குருவியின் இறகை அணிந்திருந்தான். அவர்களுக் கெதிராக முஸ்லிம்களின் சார்பி லிருந்து அ'வ்'ப், முஆ''து, அ'ப்'து'ல்லா பி'ன் ரவா'ஹா என்னும் மூவரும் முன் வந்தார்கள்; அவர்களைக் கண்டவுடன் உ'த்ப'ா அவர்களுடைய

குலம், கோத்திரம், பெயர் முதலியவற்றை விசாரித்தான். அம் மூவரும் அன்சாரிய்யீன்களென்று தெரிந்தவுடன், அவர்களை நோக்கி, "எங்களுக்கு உங்களிடத்தில் பகைமையில்லை; நாங்கள் முஹாஜிரீன்களுடனேதான் இந்த யுத்தம்புரிய வந்திருக்கிறோம்;" என்று கூறிவிட்டு, நபிபெருமான் இருந்த விடத்தை நோக்கி, "ஏ மு'ஹம்மதே! எவர்கூட எவரைச் சண்டைக்கு விடுகின்றீர்? இவர்கள் எங்களுக்கு நிகரல்லர்," என்று கூச்சலிட்டுக் கத்தினன். அதுபொழுது நபிகள் திலகத்தின் கட்டளையின்படி அம்மூன்று அன்சாரிய்யீன்களும் பின்னிடைந்து சென்று, அவர்களுடைய ஸ்தானத்தில் 'ஹ'ஜ்ரத் ஹம்'ஜா அ'லீ (ரலி') உ'பை'த்'ா பி'ன் ஹாரி:த் ஆகிய மூன்று முஹாஜரீன்களும் முன்வந்தார்கள். அம் மூவரும் போர்க்கவசம் அணிந்திருந்தமையால், உ'த்ப'ா அவர்களையும் நோக்கி, முன்போலவே குலம் கோத்திரம் பெயர் முதலியவற்றை விசாரித்தான். அம் மூவரும் சரியான விடை கொடுத்தவுடன், "இவர்களே எங்களுக்கு நிகர்!" என்று கூறி, அப்பொழுதே உ'த்ப'ா போருக்கு உடன்பட்டான்.

'ஹ'ஜ்ரத் ஹம்'ஜா உ'த்ப'ாவுடனும், 'ஹ'ஜ்ரத் அ'லீ(ரலி') அவர்கள் வலீது'டனும் தொந்தப் போர் தொடுத்தார்கள்;* அதில் உ'த்ப'ாவும் வலீ'து'ம் தத்தம் எதிரிகளால் கொன்று வீழ்த்தப்பட்டார்கள். (ஷாப'ஷ்!) உ'த்ப'ாவின் சோதரனை ஷைப'ா வென்பவன் உ'பை'த்'ா அவர்களால் காயமடைந்தவுடன், தானும் அந்த உ'பை'த்'ாவுக்குப் பலமான காயத்தை உண்டுபண்ணி விட்டான். அதைக் கண்ட அ'லீ(ரலி') அவர்கள் ஷைப'ாவை

* இங்கு உமறுப்புலவர் கூறுவதைக் கவனிப்பீர்களாக: "அவர்கள் அவ்வாறு வந்து எதிர்க்க, அந்த ஒலீ தென்பவன், 'எனது சாமர்த்தியத்தை யறியும்படி கடிவாளத்தைக் கொண்ட, தாவாநிற்கும் குதிரை வீரர்களிற் பெரிய கபடத்தையுடைய அந்த முஹம்ம தென்பவனே எனது முன்னர் வரல்வேண்டும். கோதண்டமும் தண்டமும் வாளும் தரித்து ஒரு சிறுவனாகிய இவனை மெலிவின்றி என்னோடு எதிர்த்துப் போராடுவோ'னென்று சிரித்தான். அவ்வாறு சிரித்து, 'யுத்தாயுதங்களுடன் உன்னையும் உனது வெவ்விய குதிரையையும் அடித்துப் பூமியில் விழச்செய்வது எனக்கு அருமையான காரியமல்ல; நீ என்னோடு வந்து எதிர்த்தாயானாலும் நான் உன்னைக் கைப்பிடியாகப் பிடித்தும் பாரேன். உனது பிராணனுக்கு ஒப்பற்ற குற்றமாய்த் துன்பமானது சாருவதற்கு முன்னர் நீ உனது இருப்பிடத்திற்குப் போய்ச் சேருவாயாக,' என்று சொன்னான்.

'அறிவின் செய்வினை தவிர்வினை அறிகிலா தவரே
சிறுவர் பூமியில் சிறுவரா யிருந்துஞ்செவ் வியதீன்
முறைமை நின்றுநல் வணக்கமும் ஒழுக்கமும் முதிர்ந்தோர்
மறனும் ஆண்மையும் பெரிதென வலிவகுத் துரைத்தார்.

"அவன் (ஒலீது) அவ்விதஞ் சொல்ல, அ'லீயிப்'னு அபீ'த்தாலிபு' அவர்கள், 'இவ்வுலகத்தினிடத்துத் தனது அறிவினாற் செய்யும் செயல்களையும் ஒழியும் செயல்களையும் தெரியாதவரே சிறியவர். சிறியவரா யிருந்தும், அழகிய தீ'னுல் இஸ்லாமென்னும் மெய்ம் மார்க்க ஒழுங்கில் நின்று நல்ல தொழுகையும் சன்மார்க்கமும் முதிரப் பெற்றவர்களது வெற்றியும் வல்லமையும் பெரிதென்று வகைப்படுத்திச் சொன்னார்கள்."

ஓரே வெட்டாக வெட்டி வீழ்த்திவிட்டு, உ'பை'த்'ாவைத் தங்கள் தோள் மீது சுமந்து, நபிபெருமானது திருச் சன்னிதானத்திற்குக் கொண்டு போயினூர்கள். அதுபொழுது 'ஹ'ஜ்ரத் உ'பை'த்'ா நபிகள் நாயகத்தை நோக்கி, "யாரஸூலல்லா ! ஷஹாத'த்துக்குரிய—(இரத்த சாக்ஷி மரணத் துக்குரிய) பாக்கியத்தைப் பெறுதற்கு யான் அருகதை யற்றவனுகி விட்டேனே?" என்று வினவினூர்கள். அதற்கு நபிபெருமானூர் அவர்கள், "நீர் ஷஹாத'த்துக்குரிய வீரசுவர்க்கப் பலனைப் பெற்றுக்கொண்டீர்," என்று விடை கொடுத்ததைக் கேட்டவுடன், உ'பை'த்'ா பி'ன் ஹாரி:த், "நாங்கள் மு'ஹம்மதி'ன்(சல்) அருகில் நின்று போர்புரிந்து எங்களுயிரை விட்டதன் பின்னர்த்தான் அவர்களை விரோதிகள் வயம் ஒப்படைப்போம்; மு'ஹம்மத்'(சல்) அவர்களுக்காக எங்கள் பெண்டுபிள்ளைகளையும் மறந்து விடுகிறோம், என்று 'ஹ'ஜ்ரத் அபூ'த்தாலிப்' அவர்கள் கூறிய கவிக்கு நான் தான் தகுதியுள்ளவ னென்பதை அவர் இன்று உயிருடனிருந்தால் ஒத்துக் கொள்வார்கள்," என்று கூறிமுடித்தார். 'ஹ'ஜ்ரத் உ'பை'த்'ாவின் ஒரு காலில் பட்டிருந்த எதிரியின் வெட்டினுல் அதன் எலும்புக் குள்ளிருந்த மூளையும் வெளியில் தெறித்துவிட்டது. அக்கொடிய விரணத்தின் வேதனை யால் தமது தலையை நபிகள் பிரானது முழந்தாள்மீது வைத்துப் படுத்துக் கொண் டிருக்கும்பொழுதே அன்னவரின் ஆவி ஆகாய உலகம் ஏகிவிட்டது. —(இன்னுலில்லாஹி......ராஜிஊ'ன் !)

அதன்பின்பு ஸயீ'தி'ப்'னுல் ஆ'ஸ் என்பவனது குமாரனுன உ'பை'த்'ா வென்பவன் தன் உச்சிமுதல் உள்ளங்கால் வரை இருப்புக் கவசத்தைக் கொண்டு மறைத்தவனுய்ப் போர்க்களத்தில் முன்வந்து குதித்தான்; அவன் தன்னை, "நான் அபூ' 'தாத்துல்:கர்ஷ்"—(நான் வீரத்தின் தந்தை) என்று கூறி, ஆரவாரம் செய்தான். அவன் கண்களிரண்டு மட்டும் இருப்புக் கவசத்தின்மீது இரு தொளைகளாகத் தெரிந்ததனுல், முஸ்லிம்களின் சார் பாகமுன்வந்த 'ஹ'ஜ்ரத்'ஜுபை'ர் (ரலி') அவனை எதிர்த்துத் தங்கள்கரத்தி லிருந்த கூரிய ஈட்டியால் அத்தொளைக்குள்ளே ஓங்கி ஒரு குத்துக் குத்தி னூர்கள்; அதனுல் அப்பாமரன் சூறையிற்பட்ட பெருமரமேபோல் நெடி துறச் சாய்ந்து நிலத்தின்மீது வீழ்ந் தொழிந்தான். அவனுடைய மண்டைக் குள் ஆழ்ந்துவிட்ட தங்கள் ஈட்டியைப் பிடுங்கும்பொருட்டு 'ஜுபை'ர் தமது காலை அவன் தலைமீது வைத்து மிக வேகமாக இழுத்ததனுல், அவ் வீட்டியின் இருமருங்கும் நன்கு வளைந்துவிட்டன. ப'த்'ர் யுத்தத்துக்குப் பின் நபிகள்நாயகம் (சல்) ஞாபகார்த்தமாக அவ் வீட்டியைப் பெற்றுக் கொண்டார்கள்; பிறகு நான்கு க'லீ'பாக்களிடத்தும் அஃ திருந்துவந்து, இறுதியில் 'ஜுபை'ரின் மூத்த குமாரராகிய அ'ப்'து'ல்லா இடமே மீண்டுஞ் சென்று தங்கிவிட்டது. அந்த யுத்தத்தில் 'ஜுபை'ர் அவர்களுக்குத் தோளிலொரு காயம்பட்டு, அஃது ஆறிய பின்னரும் அதற்குள்ளே ஒருவிரல் நுழையக்கூடிய பொரை விழுந்திருந்தது; அவருடைய சிறு குழந்தையான

உ'ருவாவும் அத் துவாரத்துக்குள் தனது விரலைவிட்டு விளையாடிக்கொண் டிருக்குமாம். அவருடைய வெள்ளிவேலை செய்த பிடியையுடைய உடை வாளும் பிறகு க'லீ'பா அ'ப்'து'ல் மலிக்கின் காலத்திலே முப்பதாயிரம் ரூபாய் விலைமதிப்புள்ளதா யிருந்ததாம்.

:குறைஷியர் பெருமை பாராட்டிக்கொண் டிருந்த சில முக்கிய வீரர் களின் கதி இவ்வா றுயியவுடன், அவர்களுடைய முழுச்சேனையும் போர்க் களத்தில் பொதுப்படையாய் இறங்கிவிட்டது; அந்தக் :குறைஷிகள் தங்கள் முழுப் பலத்தையுங் கொண்டு அதுசமயம் சண்டைசெய்யத் தொடங்கி னார்கள். முஸ்லிம்களோ, எல்லாம் வல்ல இறைவன் மீது தாங்கள் கொண்டுள்ள பலமான நம்பிக்கையையே உறுதியாய்க் கடைப்பிடித் திருந் தார்கள். அவர்கள், இருந்தால் இஸ்லாத்திற்கு வெற்றி யென்றும், இறந்தால் வீரசுவர்க்கமே யென்றும் ஒரே பிடிவாதமான எண்ணத்துடன் தங்கள் தாக்குதலை ஆண்டவன் பெயரால் "அல்லாஹு அக்ப'ர்!" என்று கூவி ஆரம்பித்தார்கள். :குறைஷிகளும் மக்காவை விட்டுப் புறப்பட்டக் கால், க'அ'ப'ாவின் கருந்திரையைப் பிடித்து, "ஏ அல்லா(ஹ்)! இரு சேனை களில் மிகச் சிறந்த சேனைக்கும், இரு கக்ஷிகளில் மிகவுஞ் சிறந்த கக்ஷிக்கும், இருகூட்டங்களில் மகா கண்ணியம் வாய்ந்த கூட்டத்துக்கும், இரு மதங் களில் மகா சிலாக்கியமான மதத்துக்கும் நீ உதவிபுரியக் கடவாய்," என்று பிரார்த்தனை புரிந்தார்கள். அபூ'ஜ(ஹ்)ல் யுத்தகளத்திலும், "ஏ அல்லா(ஹ்)! உறவின் முறைகளைத் தறிக்கத் துணிந்தும், மிகவுங் கெட்டவர்களாய்ப் போயும் விட்டிருக்கும் தீய மனிதர் எவரோ, அவரை நீ நாளைக் காலையில் நாசமாக்கக் கடவாய்!" என்று பிரார்த்தனை புரிந்தான். ஆகவே, அக் :குறைஷிகள் மிக்க ரூர்த்தன்யமாக முஸ்லிம்கள்மீது அதிக ஆவேசத் துடனே பாய்ந்து வீழ்ந்தார்கள்; ஆனால், முஸ்லிம்களோ, தங்களிடத்திலே சற்றும் நிலைகுலையாது கற்சுவரேபோல் நின்றுகொண் டிருந்தார்கள். அது சமயம் எவரும் எதிர்பார்த்திராவண்ணம் இயற்கையாகவே ஒரு பெரும் புயலும் மண்மாரியும் ஆகாயத்தில் காணப்பட்டன; அவற்றை நோக்குங் கால், ஆண்டவனே தன் இயற்கைச் சக்திகளை யெல்லாம் அனுப்பி, அந்தக் :குறைஷியருக்கு விரோதமாய்ச் சண்டை செய்யுமாறு ஏவிக் கட்டளையிட் டனுப்பியதேபோல் காணப்பட்டன; அப்பொழுது நேர்ந்த குழப்பத்தினால் எதிரிகள் பட்ட பாட்டை உற்றுநோக்குவோ மாயின், ஆண்டவனுடைய அமரர்களே நேரில் வந்து குதித்து, அம்முஸ்லிம்கள் சார்பில் போர்புரிவதே போல் அப் பயங்கரமான தோற்றம் காணப்பட்ட தென்னலாம். என் னெனின், அந்தக் :குறைஷியர் அவ்வேளையில் முஸ்லிம்களின் தொகையைத் தங்களைப் பார்க்கினும் இரண்டத்தனை மடங்கு அதிகமா யிருப்பதாகக் கண்டார்கள்; அத் திகில்கொண்டவர்களின் நேத்திரங்களின் முன்னே ஆண்டவன் சோதனையால் இதுவும் ஓர் அற்புதமாகவே காணப்பட்டது ஏனல்வேண்டும். அதற்கு முன்னிரவில் பொழிந்திருந்த மழையின்சறுக்கலால்

அப் பள்ளத்திலிருந்த :குறைஷிக்களின் பாதங்களும் ஸ்திரமாக நிலைபெற்றிருக்க முடியவில்லை. அந்த உவர்மண் கலந்த களிச்சேற்றில் அன்னவரின் மிருகங்களும் வழுக்கி வழுக்கி வீழ்ந்துகொண்டே யிருந்தன. எல்லாம் அல்லா(ஹ்)வின் பெருஞ் சோதனையேபோல் தோற்றிக்கொண் டிருந்தன!

. அபூ'ஜஹ்ல் லானவன் இஸ்லாத்தின் பரமவிரோதி யென்பதை நீங்களெல்லீரும் நன்கு அறிந்துகொண்டே யிருக்கின்றீர்கள். அப்படிப்பட்ட கொடும்பாதகனை எப்படியாயினும் கொன்றுவிட வேண்டு மென்றே இரு அன்சார் சோதரர்கள் தீர்மானம் பண்ணிக் கொண்டார்கள். உ'ப்'ராவின் குமாரர்களாகிய மஊ''ஜ், மஆ''ஜ் என்னும் அவ்விரு சோதரர்களும் எவ்வாற்றானும் அபூ'ஜஹ்லை அந்த யுத்தகளத்தில் தேடிப்பிடித்துத் தொலைத்துவிட வேண்டும்; இன்றேல் அப் பிரயத்தனத்தில் தாங்கள் உயிர் துறக்க வேண்டும் என்ற பிரதிஞ்ஞையுடன் ப'த்'ரின் போர்க்களத்திற்கு விஜயம் செய்திருந்தார்கள். கைகலந்து நடந்த அந்த யுத்தக்குழப்பத்தில் இவ் விருவரும் அபூ'ஜஹ்லைத் தேடிப் பிடிப்பதிலேயே கண்ணுங் கருத்துமா யிருந்து வந்தார்கள். இதைப்பற்றி அப்'து'ர் ர'ஹ்மான் இப்'னு அ'வ்'ப் கூறியிருக்கும் செய்தியாவது:—

"யுத்தகளத்தின் மத்தியில் எனக்கு வலப்புறமாகவும் இடப்புறமாகவும் இரண்டு வாலிபர்கள் வந்து நின்றதைக் கண்டேன். அவர்களுள் ஒருவர், 'அபூ' ஜஹ்ல் எங்கே யிருக்கிறான்?' என்று என் காதுக்குள்ளே தன் உதட்டை வைத்து வினவினார். நான் அதற்கு விடையாக, 'ஏ சோதரர் குமார! நீ அபூ' ஜஹ்லைப் பற்றித் தெரிந்துகொண்டு என்ன செய்யப் போகின்றாய்?' என்று வினவினேன். அதற்கவர், 'நான் அபூ' ஜஹ்லைக் கண்டவுடனே அவனை வெட்டி வீழ்த்த வேண்டும்; அல்லது அவனுடன் போர்புரிந்து நான் சாவவேண்டு மென்று ஆண்டவனிடம் பிரமாணிக்கம் பண்ணிக்கொண் டிருக்கிறேன்,' என்று கூறினார். அதற்குள் மற்றொருவரும் என் இடக் காதின்பக்கம் அதே விஷயத்தைப் பற்றியே வினவினார். நான் மறுமொழி யொன்றும் கூறாமல், அபூ'ஜஹ்ல் இன்னான் என்றுமட்டுமே ஜாடை காட்டினேன். நான் குறிப்புக் காட்டியதுதான் தாமதம்! அவ் விருவரும் இரு இராஜாளியேபோல் அவன்மீது தாவிப் பாய்ந்தார்கள். உடனே அபூ'ஜஹ்ல் வெட்டப்பட்டுக் கீழே வீழ்ந்தான்."

தன் தகப்பனை அவ்விருவரும் கொன்றது தெரிந்து அபூ'ஜஹ்லின் குமாரரான இ'க்ரிமா என்பவர் தங் கையிலிருந்த உடைவாளுடன் அவ்விரு சகோதரர்களையும் துரத்திச்சென்று, மஆ''ஜின் இடத்தோள்மீது வேகமாக வீசினார். அக்கணமே அவரது இடக்கரம் துண்டிக்கப்பட்டுத் தொங்கிக் கொண் டிருந்தது; அத் தொங்கிய கரத்துடன் மஆ''ஜ் இ'க்ரிமாவைப் பின் தொடர்ந்தார்; ஆனால், அவர் தப்பிக்கொண் டோடிவிட்டார். ம''ஆஜ் மட்டும் அத் தொங்கிக்கொண்டிருந்த கரத்துடன் சிறிதுநேரம் சண்டை செய்துகொண் டிருந்தார். ஆனால், அக்கை வேலையில்லாது வெறுஞ் சுமை

யாய்த் தொங்கிக்கொண் டிருப்பதைக் கண்ட அவர் அந்தத் தொந்தரையை அப்புறப் படுத்துவான் வேண்டி அவ்விடக் கரத்தைத் தமது வலக்காலின் கீழேவைத்து மிதித்துப் பிய்த்து அப்புறம் எடுத்தெறிந்துவிட்டுப் பின்னர்ச் சௌக்கியமாக யுத்தம் புரிந்தார். என்னே இவரது வீரத்தனம்!

சேனைத் தலைவனான உ'த்பா'வும், அடுத்த பெருந் தலைவனான அபூ'ஜஹ்லும் மாண்டு வீழ்ந்ததைக் கண்ட :குறைஷிகளின் உள்ளம் அதிகம் கலங்கி விட்டது; அதற் குதவியாக அங்குப் பறந்துகொண்டிருந்த சுழல்காற்றும் புழுதிமாரியும் அவர்களுடைய கலக்கத்தை இன்னமும் அதிகமாகப் பெருக்கிக்கொண் டிருந்தன. அச் சமயத்தில் மு'ஜ்ஜிர் அன்சாரீ என்பவர் அபு'ல் ப்க்'•தரீ யென்னும் ஒரு :குறைஷியைச் சந்தித்தார். அவர் தமக்கிஷ்டமில்லா திருந்தும், மற்றக் :குறைஷியரின் பலவந்தத்தினால் அந்த ப'த்'ர் யுத்தத்தில் கலந்து கொண்டார். எனவே, நபிகள் நாயகமும் அக் :குறைஷியருள் இரு வகையினரைப்பற்றி முன்னமே கூறிக்கொண் டிருந்தார்கள். ஒருவகையார் தீ'னுல் இஸ்லாத்தை அறவே அழித்தொழித்து விடவேண்டுமென்று கங்கணங் கட்டிக்கொண் டிருந்தார்கள்; மற்றொரு வகையார் இஸ்லாத்தின்மீது துவேஷம் சிறிதும் கொள்ளா திருந்தும், பிறருடைய கட்டாயத்திற்காக இந்த யுத்தத்தில் சேர்ந்துகொண்டோ ராவர். இத்தகைய இரண்டாவது வகையினரைக் கண்டால் முஸ்லிம்கள் ஒன்றும் துன்புறுத்தக்கூடா தென்று நபிகள் நாயகம் கட்டளை யிட்டிருந்தார்கள். அதற்கிணங்க மு'ஜ்ஜிர் அபு'ல் ப்க்'•தரீயைக் கொல்லக்கூடிய சந்தர்ப்பத்தில் அன்னவரைச் சந்தித்தும், அவரை ஒன்றும் செய்யாது நபிகள் திலகம் கூறியிருந்ததை விளக்கிக் காண்பித்தார். அதுபொழுது மு'ஜ்ஜிர் தம்பக்கத்திலிருந்த மற்றொரு :குறைஷியைச் சுட்டிக் காட்டி, "இவருமா அத்தகைய கௌரவத்திற்கு லாயி:க்கானவர்?" என்று வினவினார். அதற்கு "இல்லை" யென்று அந்த அன்சாரீ யானவர் விடைகொடுத்தவுடன் அபு'ல் ப்க்'•தரீ ஓர் அரபுப் பழமொழியைக் கூறிக் கொண்டு, மு'ஜ்ஜிர்மீது ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தார். "கண்ணியமுள்ள மனிதன் தான் மரணமடைந்து ஒழியும் வரை தன்நண்பனைக் காட்டிக் கொடான்," என்பதுதான் அப் பழமொழியின் கருத்தாகும். நண்பனை யுத்தகளத்தில் காட்டிக்கொடுப்ப தென்றால், அரபி மாதர்களுங்கூடப் பரிகாசம் பண்ணுவார்களாம். இக் காரணத்தினால் தான் அபு'ல் ப்க்'•தரீ அவ்வாறு தாவிக்குதித்தார்.

அதுபொழுது அங்கு நிகழ்ந்த குழப்பத்தின்போழ்து, இஸ்லாத்தின் பழைய விரோதியாகிய உமையா பி'ன் க'ல்'ப் என்பவனும் அ'ப்'து'ர் ர'ஹ்மான் பி'ன் அ'வ்'ப் என்பவரிடம் அகப்பட்டுக் கொண்டும், இவர் அவனைக் கொன்றுவிட மனந்துணிந்தன ரில்லை. என்னெனின், முன்னொரு முறை உமையா பி'ன் க'ல்'ப் மதீனத்திற்கு வந்து அங்கு ஏதேனும் உயிருக் காபத்து வருவதா யிருந்தால், அதுசமயம் உமையா பி'ன் க'ல்'பின் உயிரைக் காப்பாற்றிவிடுவதாக அ'ப்'து'ர் ர'ஹ்மான் பி'ன் அ'வ்'ப் வாக்குக் கொடுத்

திருந்தார். இக் காரணத்தினாலேயே அந்த உமையாவைக் கொல்லாது அ'ப்'து'ர் ர'ஹ்மான் அவனை வெளியேற்றிவிட வேண்டுமென்னும் எண்ணத்தோடு அங்கிருந்த ஒரு மலைமீது அழைத்துச் சென்றார். அதனை அப்பொழுது பி'லால் கண்டுகொண்டதனால் அவ் விஷயத்தை அன்சாரிய்யீன்களிடம் தெரிவித்து விட்டார்; அக்கணமே அவர்கள் உமையாவைத் துரத்தி வந்தபோது, அவனுடைய குமாரன் இடைவழியில் தடைசெய்தான்; அவனையும் கொன்றுவிட்டு, அந்த அன்சார்கள் உமையாவையே பின்பற்றி ஏகினர். அவர்கள் அதிசமீபத்தில் நெருங்கிவிட்டபோது, உமையாவைக் கீழேகிடத்தாட்டி, அ'ப்'து'ர் ர'ஹ்மான் அவன்மீது படுத்துத் தம் கைகால்களைப் பரப்பிக் கொண்டார். அப்பொழுதும் அந்த அன்சார்கள் அவனை வாளா விட்டுவிடாது, அ'ப்'து'ர் ர'ஹ்மானின் காலிடுக்குக்குள்ளே கட்கத்தைச் சொருகி, அந்த உமையாவைக் கொன்றே தீர்த்தார்கள். அப்பொழுது அ'ப்'து'ர் ர'ஹ்மானது முழந்தாளில் பட்ட ரணமானது நெடுநாள் மட்டும் பிறகு குழிப்புண்ணாகவே யிருந்துவந்தது. இதற்குள்ளே :குறைஷிகளின் தலைவர்களான உ'த்ப'ா பி'ன் ரபீ'ஆ', ஷைப'ா பி'ன் ரபீ'ஆ', அபூ ஜஹ்ல், முத்யி'ம் பி'ன் அ'தீ', அல்வலீத்' பி'ன் உ'த்ப'ா, அபு'ல் ப'க்'தரீ, ஜம்ஆ' பி'ன் அஸ்வத்', ஆ'ஸ் பி'ன் ஹிஷாம், உமையா பி'ன் க'ல்'ப், முனப்'ப''ஹ் பி'ன் ஹஜ்ஜாஜ் முதலிய பல தலைவர்கள் கொல்லப்பட்டுப் போய்விட்டார்கள். இக்கலக்கத்தாலும், மாபெரும் புயலும் மண்புழுதியும் கலந்தடித்த குழப்பத்தாலும் :குறைஷிப்படைகளெல்லாம் மிக்க அல்லோலகல்லோலப்பட்டு, கைசோர்ந்து மெய்தளர்ந்து, தங்கள் ஆயுதங்களனைத்தையும் கீழே யெறிந்துவிட்டு, ஓட்டம் பிடித்தன. ஆனால், அகப்பட்டவரை முஸ்லிம்கள் :குறைஷியரில் எழுபதின்மரைத் துரத்திப் பிடித்துக் கொண்டார்கள்; மற்றும் எழுபது வீரர்கள் :குறைஷியரின் படையிலிருந்து மரணமுற்றுக் கிடந்தார்கள். ஆனால், முஸ்லிம்களுள் 6 முஹாஜிரீன்களும், 8 அன்சாரிய்யீன்களுமேதாம் அந்த யுத்தத்தில் வீரசுவர்க்கம் புகுந்திருந்தார்கள். :குறைஷிக் கைதிகள் எழுபதில் இருவரே கொல்லப்பட்டார்கள். ஏனை 68 மனிதர்களும் மிக்க நல்லமுறையிலே முஸ்லிம்களால் நடாத்தப்பட்டு வந்தார்கள். நல்'ர் பி'ன் அல்'ஹர் தென்பான் :குர்ஆன் ஷரீஃபைப் பாரஸீக தேசத்துக் கட்டுக் கதைகளென்று மிகக் கேவலமாகப் பரிகாசம் பண்ணி வந்ததனால், அன்னவன் கொலையுண் டிறந்தான்; ஆதியில் நபிகள் திலகம் (சல்) கஃ'ப'ாவில்நின்று பிரசங்கம் பண்ணிக்கொண் டிருந்தபோது, "ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் அவர்கள் வந்து விடுவித்திராவிடின், அப்பெருமானாரை அப்பொழுதே உயிர்வதை செய்துவிடத் துணிந்த உ:க்ப'ா பி'ன் அபீ' முஐ'யித் என்பானும் அவனுடைய கொடுங் குற்றத்துக்காகக் கொல்லப்பட்டொழிந்தான். அக்காலத்திய அராபியர் யுத்தமுறைப்படி இவ்விருவரும் கொடிய தேவதூஷணைக்காகவும், கொலைசெய்ய நாடிய குற்றத்துக்காகவுமே அவ்வாறு சிக்ஷிக்கப்பட்டார்கள். மிகுதிக் கைதிகளெல்லாரும்

மதீனாவிற்குக் கொண்டு செல்லப்பட்டார்கள். அவர்களுள் ரஸூலுல்லாவின் சிறிய தந்தையான அப்ப்பாஸும், அபூத்தாலிபின் மூத்த குமாரராகிய உ'ைகலும், நௌபல், அஸ்வத் பின் ஆமிர், அப்துல்லா பின் ஜம்ஆ முதலியோரும் பிடிபட்டிருந்தனர். அதுபோழ்து நபிகள் திலகம் அபூஜஹ்லின் கதி யாதாயிற்றென்று விசாரிக்கத் தொடங்கினார்கள். அது கேட்டு, அப்துல்லா ஹிப்னு மஸ்ஊத் (ரலி) யுத்தகளம் சென்று, அங்கு மரித்துக்கிடந்த சவங்களை யெல்லாம் புரட்டிப் புரட்டிப் பார்த்துக் கொண்டே வரும்பொழுது, ஆங்கோரிடத்தில் தன் தொடையில் பெரியதொரு வாட்காயம் பட்டுக் கீழே வீழ்ந்த அபூஜஹ்ல் குற்றுயிருடன் (குறைப்பிணமாய்) மூச்சுத் திணறிக் கொண்டு கிடந்ததைக் கண்டு, "அடே! நீதானா அபூஜஹ்ல்?" என்று வினவினார். அதற்கு, "ஆம்! நான்தான் அபூஜஹ்ல். ஒரு மனிதனை எதிரியின் கூட்டத்தார் பலர் சேர்ந்து கொன்றதில் என்ன பெருமையிருக்கிறது?" என்று கடாவினான். முன்னொரு சமயம் அந்த அபூஜஹ்ல் இப்னு மஸ்ஊதைக் கன்னத்தி லறைந்திருந்த பழைய ஞாபகத்தை வைத்துக் கொண்டு, அன்னவர் அபூஜஹ்லின் கழுத்தின்மீது தமது பாதத்தை வைத்து மிதித்து, அவனது நெடிய தாடியைப் பிடித்துக் கொண்டு கழுத்தைத் துண்டிக்கப் போனார். அதுபொழுதும் அபூஜஹ்ல், "அடே! எங்கே உன் காலை வைக்கிறாய்? நீ செய்வதை நன்றாக நிதானித்துப் பார்!" என்று கூறிக் கொண்டே நபிகள் நாயகத்தையும் வாய்க்கு வந்தமட்டும் திட்டிக்கொண் டிருந்தான். அக்கணமே அப்துல்லா(ஹ்) அவனுடைய சிரத்தைக் கொய்து கொண்டுவந்து, நபிகள் நாதரின் திருச் சன்னிதானத்தில் சமர்ப்பித்துவிட்டார்.

பத்ரில் பிடிபட்ட யுத்தக் கைதிகளுள் அப்ப்பாஸ், உ'ைகல் அவர்களுடன் ரஸூலுல்லாவின் மருகராகிய அபுல் ஆஸும் அகப்பட்டிருந்தார். இவர்தாம் ஜைனபின் கணவராவார். ஸுஹைல் பின் உமர் என்னும் ஓரிளைஞர் ஸௌதா அம்மாளவர்களுக்கு அதிகம் வேண்டியவரா யிருந்தார்; அவரை நோக்கி அந்த அம்மாள், "நீங்க ளெல்லீரும் சாவாமல் ஏன் இங்கு வந்தீர்கள்?" என்று வினவினார்களாம். அப்ப்பாஸ் (ரலி) அவர்கள் பெரிய ஆஜானுபாகுவா யிருந்ததனால், அவரைக் கைதுசெய்த அபூயாஸிர் என்னும் குறுகிய உயரமுடையவர் அவரருகில் நின்றபோது, அப்ப்பாஸ் நாணத்தால் பெரிதும் தலைகுனிந்தாராம். அதுபொழுது அகப்பட்ட கைதிகளெல்லாரும் முஸ்லிம்களிடம் இரண்டிரண்டு, நந்நான்காகப் பிரித்துக் கொடுக்கப்பட்டு, மிக்கநல்ல முறையிலே நடத்தப்பட வேண்டுமென்றும் கட்டளையிட் டனுப்பப்பட்டார்கள். அவர்களுள் உடுக்க உடையில்லாதவர்களுக்கெல்லாம் நபிகள்திலகம் தங்கள் தோழர்களிடம் சொல்லி, அவர்களெல்லாருக்கும் உடை யணிவித்தார்கள். ஆனால், அப்ப்பாஸின் பருத்த சரீரத்திற்கு வேறெவரின் அங்கியும் பற்றாதிருந்ததனால், அப்துல்லா பின் உபைய்யிட மிருந்தே ஒரு மேலங்கியை வாங்கிக் கொடுத்தார்கள். இந்த

முனு'பி:க் தலைவன் மரண மடைந்த பொழுது, இந்தச் சட்டையையே அவனுடைய சவத்தைச் சுற்றுவதற்கு நபிகள் நாயகம் நல்கி யுதவினார்கள்.

இத்தகைய யுத்தக் கைதிகளை என்னசெய்யலா மென்று நபிகள் பெருமான் தங்கள் தோழர்களை நோக்கி வினவியக்கால், 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் அவர்கள், "இவர்க ளெல்லாரும் நமக்கு நெருங்கிய உறவினர்களாகவும், மிகவு நெருங்கிய நண்பர்களாகவுமே இருந்து வருகின்றமையால், சுயேச்சைக் கிரயம் பெற்றுக் கொண்டு சும்மா விட்டு விடலாம்," என்று கூறினார்கள். ஆனால், 'ஹ'ஜ்ரத் உ'மர் அவர்களோ, கைதிகள் எல்லாரையும் கொலை செய்துவிட வேண்டுமென்றும், ஒவ்வொரு முஹாஜிரும் அவரவருடைய உறவினரைத் தத்தம் கரத்தினாலேயே சேதிக்க வேண்டுமென்றும் கூறி நின்றார். என்னெனின், இவர்பால் இஸ்லாத்தைப் பற்றியவரை நண்பன், பகைவன், வேண்டியவன், வேண்டாதவன், நெருங்கியவன், நொதுமலன் என்னும் வேற்றுமையே காணப்படுவ தில்லை. ஆயினும், அபூ'ப'க்ர் அவர்களின் ஆலோசனையின் பிரகாரமே அக் கைதிகளிட மிருந்து தலையொன்றுக்கு 4,000 தி'ர்ஹம்— (சுமார் 1,000 ரூபாய்) விடுதலைக் கிரயம் பெற்றுக் கொண்டு அவர்க ளெல்லாரையும் விடுவித்து விடலாமென்று நபிகள்நாயகம் (சல்) தீர்மானம் செய்து விட்டார்கள். ஆனால், ஒன்றும் கொடுக்க இயலாதவர்கள் இனிமேல் அவர்கள் முஸ்லிம்களுக்கு விரோதமாய் வாளெடுப்பதில்லை யென்னும் உறுதிமொழியின்மீது வாளா விடுதலை கொடுத்தனுப்பப்பட்டு விட்டார்கள். எழுதப் படிக்கத் தெரிந்தவர் ஒவ்வொருவரும் பப்பத்துப் பிள்ளைகளுக்குக் கல்வி கற்றுக்கொடுப்ப தென்னும் நிபந்தனையின்மீது, அந்நிபந்தனை நிறைவேற்றப் பட்டதன்பின்பு விடுதலை செய்தனுப்பப் பட்டார். இத்தகைய மத்'ரஸாவிலேதான் ஸை'ஜத்' பி'ன்:தாபி'த் என்பவர் கல்வி பயின்று வந்தார். இவ்வாறு 10 சிறுவர்களுக்கு எழுதப் படிக்கக் கற்றுக் கொடுப்பதானது அக்காலத்தில் ஆயிரம் ரூபாய்க்கு நிகரானதென்று கருதப்பட்டு வந்தது. இதிலிருந்து நம் பெருமான் அவர்கள் கல்வி விஷயத்தில் எத்துணைமட்டும் கவலை கொண்டிருந்தார்கள் என்பது மிகச் செவ்விதாய் விளங்கக் கிடக்கின்றது.*

நபிக ணாயகத்தின் கட்டளைக் கிணங்கி அவரவரும் தத்தமக்குரிய யுத்தக் கைதிகளை மெத்த மேதை மரியாதைகளுடனேயே நடாத்தி வந்தார்கள். பதின்மூன்று வருஷ காலம்வரை மக்கத்துக் :குறைஷியர்களிடம் அம் முஸ்லிம்கள் பட்டுவந்த சகிக்க முடியாத இம்சைகளுக் கெல்லாம் இப்பொழுதுதான் முதன்முதலாக அவர்களுக்குத் தங்கள் ஜன்ம சத்துருக்கள் மீது பழிதீர்த்துக் கொள்ளக்கூடிய நல்ல சந்தர்ப்பம் வாய்த்திருந்தது.

---

* தனிக் கல்விக்கும் பொதுக் கல்விக்கும் ஆண் பெண் கல்விக்கும் அடிகோலி வைத்த இஸ்லாம், இக்காலத்தில் நம் மக்களெல்லாம் கல்வியின் கவலையே சிறிதுமில்லா திருப்பதைக் கண்டு எள்ளி நகையாடுகின்றது. நம் முஸ்லிம்கள் கல்வி விஷயத்தில் பிற்போக்கான ஜாதியினரென்றே பலராலும் கருதப்பட்டு வருகிறார்கள்.— பா. தா.

ஆனால், அக் குறைஷிக் கைதிகளெல்லாரும் அவ்வாறொன்றும் துன்பத்திற்கேனும் துயரத்திற்கேனும் உட்படுத்தப் படவில்லை. அக் கைதிகளுள் ஒருவரா யிருந்த அபூ' அ'ஜீஸ் — (இவர் முஸ்அ'ப்' பி'ன் உ'மைரின் தம்பி) என்பவர் பின்னொரு சமயம் தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவியதன்பின், தாம் கைதியா யிருந்தபொழுது அன்சாரிய்யீன்களிடம் அடைந்துவந்த மிக்க நல்ல மாதிரியான மரியாதையைப்பற்றி நன்றியறிதலுடன் இவ்வாறு கூறி யிருக்கின்றார்: "நான் மதீனத்து அன்சாரீ யொருவரிடம் கைதியா யிருந்த பொழுது, அவர் தமதில்லத்தில் என்னை வைத்துக் காலையிலும் மாலையிலும் எனக்கு வேண்டிய போஜன பதார்த்தங்களைக் கொண்டுவந்து கொடுப்பார். தம் வீட்டில் சுடப்படும் ரொட்டியை எனக்குக் கொடுத்துவிட்டு, அவர் வெறும் பேரீச்சம்பழத்தையே சாப்பிடுவார். அப்பொழுது எனக்கு வெட்கமுண்டாகி, ரொட்டியை அவரையே புசிக்கும்படி திருப்பிக் கொடுப்பேன்; அவர் அதை வாங்காமல் என்னையே சாப்பிடுமாறு வற்புறுத்திக் கூறுவார். கைதிகளை யெல்லாம் நல்லவிதமாக நடத்த வேண்டுமென்று நபிகள் திலகம் கட்டளை யிட்டிருந்ததனாலேயே அவர் அவ்வாறு என்னை அத்துணை மேதை மரியாதைகளுடனே நடத்தி வந்தார்."

இத்தகைய 'நடத்தை'யினாலேயே அம்முஸ்லிம்கள் தங்களுடைய பெருந்தன்மையை அக் கைதிகளின் உள்ளத்தின்கண் நன்கு ஊன்றச் செய்து விட்டார்கள். இன்னம், அக் கைதிகளுள் ஸுஹைல் பி'ன் அ'ம்ர் என்னும் பிரசங்கி யொருவரும் காணப்பட்டார். இவர் தம்முடைய வாக்குவன்மை முழுதையும் கொண்டு சற்றுந் தயங்காது சதா இஸ்லாத்தைப்பற்றி இழிவுரை கூறியே பிரசங்கமாரி பொழிந்து வருவது வழக்கம். இத்தகைய அதிகப் பிரசங்கியார் ரஸூலுல்லாவின் சன்னிதானத்திற்குக் கொண்டுவரப் பட்டபோது, உ'மர்(ரலி') அவர்கள் அவ்வதிகப்பிரசங்கி இனியொருபோதும் இஸ்லாத்தின்மீது அவதூறு கூறிப் பஹிரங்கப் பிரசங்கம் செய்து பொது ஜனங்களைக் கிளப்பிவிடா திருக்கும் பொருட்டு அவரது பிரசங்க வன்மையை உடைத்துவிடுவான் வேண்டி, அவருடைய முன்பல் இரண்டை உதிர்த்து விடுவதே சரியான தண்டனை யாகுமென்று உறுத்திக் கூறினார்கள். அதைக் கேட்டு, நபிகள் திலகம், "இவருடைய எந்த உறுப்பையும் நான் பின்னப்படுத்தி விடுவேனாயின், ஆண்டவனும் அவ்வாறே என்னுடைய உறுப்பையும் பின்னப்படுத்தி விடுவான்," என்று கூறி, மறுத்து விட்டார்கள். என்னே எம்பிரானின் (சல்) இரக்கமும் மன்னிப்பும்! சகல லோகங்களுக்கும் ஒரு தயாளமாக அவதரித்திருக்கும் அக் கருணாமூர்த்தியாகிய புண்ணியசீலர் அவ்வாறு பூததயையுடன் தீர்ப்புக் கூறாது, வேறு எவ்வாறுதான் நடந்து கொண்டிருப்பார்க ளென்று எண்ணுகின்றீர்கள்? "ர'ஹ்மத்துன் லில் ஆ'லமீன்" அல்லவா நம் மஹானுபாவ ரவர்கள்!

"பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்,"— என்றார் குறளுடைப் பெரியாரும்.

# அதிகாரம் — 22

## ப'த்'ரின் உண்மையும் 'பா(த்)திமாவின்(ரலி') திருமணமும்

> "எவர்கள் போர்புரியப் பெறுகிருர்களோ, அவர்களுக்கு, அன்னவர்கள் அநியாயம் புரியப்படுங் காரணத்தால், (எதிர்த்துப் போர்புரிய) அனுமதி யளிக்கப்படுகிறது; இன்னம், நிச்சயமாகவே, அல்லா(ஹ்) அவர்களுக்கு உதவி புரிவதன்மீது அதிக சக்தி பெற்றவனு யிருக்கிருன்."—(22 : 39)

**ப'த்'ர்** சம்பந்தமான யுத்தக் கைதிகளின் விசேஷம் மேற்கூறியாங்கு அவ்வளவேதா னென்று எண்ணிவிட வேண்டாம். 'ஹ'ஜ்ரத் அ'ப்'ப'ாஸ் அவர்களும் நாலாயிரம் தி'ர்ஹம் விடுதலைப் பணம் வாங்கிக் கொண்டே விடப்பட்டார்கள்; இவர்கள் நபிகள்நாயகத்தின் சிறியதந்தையா யிருந்தும், நாலாயிரத்துக் கதிகமான தொகையே வாங்கிக் கொண்டு விடுதலை செய்யப் பட்டா ரென்று அத்தேச சரித்திரம் கூறுகின்றது. நபிகள் பிரான் இவ் விஷயத்தில் நிர்தாக்ஷிண்யத்துடனே நடந்துகொண்டார்க ளென்று கருதி விட வேண்டாம். என்னெனின், முஸ்லிம் பொதுமக்களின் தீர்ப்பின் பிரகாரமே நபிகள் பெருமானும், அவர்களுடைய சிறிய தந்தையாரும் கட்டுப்பட்டு நடக்க வேண்டியவர்களா யிருந்தார்கள். ஒருபக்கல் பொது ஜனச் சகோதர சமத்துவச் சட்டத்துக்குக் கட்டுப்பட்டு நடக்க நேர்ந்த போதினும், நபிகள் திலகம் மற்றொரு பக்கல் அச்சிறிய தந்தையார்மாட்டுப் பூரண அபிமானம் பாராட்டியே வந்தார்கள்; அ'ப்'ப'ாஸ் அவர்கள், கைக ளிரண்டும் பிணிக்கப்பட்டு இராக்காலங்களில் உறக்கங் கொள்ளாது ரணரங்கத்தில் அடைந்துள்ள படுகாயங்களின் வேதனையால் பெரிதும் துன்பப் பட்டுக்கொண் டிருந்ததைக் கண்டு, நபிகள் பெருமான் (சல்) அக்கட்டை நெகிழ்த்திவிடச் சொல்வார்கள்; அவ்வாறு செய்ததன் பின்னே 'ஹ'ஜ்ரத் அ'ப்'ப'ாஸ் நல்ல நித்திரை செய்தார்க ளென்று சரித்திராசிரியர்கள் எல்லாரும் எழுதி வைத்திருக்கிருர்கள்.

இவ்வாறே நபிபெருமானின் மருகர் விஷயமும் மிக்க உருக்கமானதாகவே காணப்பட்டு வருகிறது: அபு'ல் ஆ'ஸிடமிருந்து 4,000 தி'ர்ஹம் கேட்கப் பட்டபோது, அவர் தம்மிடம் ஒன்றுமில்லை யென்று கையை விரித்துவிட்டார்; எனினும், அத்தொகை கொடுபடாது அவர் விடுபட முடியாதென்று கூறப்பட்டும் விட்டார். ஆதலின், அபு'ல் ஆ'ஸ் மக்கத்

திற்குச் செய்தியனுப்பித் தம்முடைய பத்தினி ஃஜனபி'டமிருந்த ஆபரண மொன்றை விடுதலைத் தொகைக்கீடாக வரவழைத்துக் கொடுத்தார். இந்த ஃஜனப்' ரஸூலுல்லாவுக்கு க'தீ'ஜா பெருமாட்டியார் திருவயிறு வாய்த்த மக்களுள் மூத்த திருக்குமாரி யென்பதை நீங்க ளறிவீர்கள்; அம்மாது சிரோமணியார் அனுப்பிவைத்த கண்டஹார மொன்றை நபிகள் பெருமான் கண்ணுற்றவுடன், அம் மாலையானது அதற்குமுன் அவ்வனிதா மணியின் அன்னையான க'தீ'ஜா பிராட்டியார் அவர்களுடைய கழுத்தி லிருந்துவந்த காலமாகிய அந்தப் பண்டைய இருபத்தைந் தாண்டுகளின் பழைய நினைவுக ளனைத்தும் நபிகள் திலகத்தின் உள்ளத்தின் குறுக்கே ஓடிவந்து, அவர்க ளுடைய நேத்திரங்களிலிருந்து நெடிய நீர்த்தாரைகளை வெளியி லிழுத்து விட்டன. அதுபொழுது அப் பெருமானாரவர்கள் மற்றெல்லா முஸ்லிம் களுக்கும் விருப்ப மிருக்குமாயின், அந்த ஹாரத்தை அபு'ல் ஆ'ஸிடமே திரும்பக் கொடுத்துவிடலா மென்று தங்க ளபிப்பிராயத்தைத் தெரிவித் தார்கள், அதைக் கேட்டு, எல்லா ச'ஹாப'ாக்களும் ஒன்றும் மறுத்துக் கூறாது சிரக்கம்பம் செய்ததைக் கண்டு, நபிகள் திலகம் அம் மாலையை அம் மருகரிடமே திரும்பக் கொடுத்து விட்டார்கள். உடனே அவர் விடுவிக்கப் பட்டு மக்கமாநகர் வந்து, தம்முடைய மனைவியான ஃஜனபை'— இதுவரை எம்பிரானிடம் அனுப்பமுடியா தென்று நிர்ப்பந்தம் செய்துவந்தவரை, அக்கணமே மதீனாவிற்குத் தந்தையாரிடம் அனுப்பிவைத்து விட்டார்.

இவ்வாறு அனுப்பி வைப்பதாக அபு'ல் ஆ'ஸ் மதீனாவில் வாக்குறுதி செய்துகொடுத்து வந்திருந்ததனால், தம்முடைய சோதரரான கினானாவின் வயம் ஃஜனபை' ஒப்படைத்து ஓர் ஒட்டகத்தின்மீ தேற்றி நபிகள் பெரு மானிடம் அனுப்பிவைத்தார். அந்த ஸ்ரீமதியும் இடைவழியில் :குறைஷிக் கு'ப்'பார்களால் தூண்டப்பட்டு ஹப்'ப'ார் என்பவனால் அவ்வொட்டகத் தின்மீ திருந்து ஈட்டிமுனையால் குத்திக் கீழே வீழ்த்தப்பட்டுத் துன்புறுத் தப்பட்டும், தங்கள் உதரத்திலிருந்த கர்ப்பம் சிதைந்ததோடு, வியாதியு முற் றுத் தந்தையாரிடம் தப்பிப்போய்ச் சேர்ந்தார்கள். அபு'ல் ஆ'ஸ் பெரிய வர்த்தகரா யிருந்ததனால், ஷாமிலிருந்து வியாபாரப் பண்டங்களுடன் ஒரு முறை திரும்பி வரும்போது, மதீனாவில் சிறை செய்யப்பட்டு நபிபெருமான் முன்னே கொண்டுவந்து சேர்க்கப்பட்டார். அதுசமயம் ஃஜனபி'ன் ஸிபாரிஷால் நபிகள்நாயகம் (சல்) ஏனைய முஸ்லிம்களின் அங்கீகாரத்தையும் பெற்று, அம் மருகரையும் அவருடைய சாமான்களையும் விடுவித்தனுப்பி விட்டார்கள். இப்பெருந் தன்மையை யெல்லாம் பார்த்துக்கொண் டிருந்த அபு'ல் ஆ'ஸ் என்பவர் மக்கத்திற்கு வந்து, அவ் வூரார்களுடன் தமக் கிருந்துவந்த கணக்கு வழக்குக்களை யெல்லாம் மிக்க நல்லமுறையிலே தீர்த் துக்கொண்டு, மீண்டும் மதீனாவிற்குச் சென்று, உடனே தீ'னுல் இஸ்லாத் தைத் தழுவிக்கொண்டார். இது நிகழ்ந்தது பின் ஹிஜ்ரீ 6, அல்லது 7-இலாகும். என்று கூறப்பட்டுள்ளது.

ப'த்'ரில் நிகழ்ந்த பெருந் தோல்வியால் முக்கியமான முதற்றலைவர்கள் ஒன்பதின்மர் * இறந்துபட்டதைக் கேள்வியுற்ற மக்காவில் பெரியதோர் இழவு வீழ்ந்ததேபோல் ஆற்றொணாத் துக்கம் அதிகரித் திருந்ததனால், அந் நகர் முழுதும் ஒருவரும் பஹிரங்கமாகத் துக்கங் கொண்டாடக் கூடா தென்று ஒரு பொது அறிக்கை வெளியிடப் பட்டிருந்தது. அவரவருக்கும் அதிகமான துக்கம் மேலிட்டிருந்தும், திருடனுக்குத் தேள்கொட்டிய கதையேபோல் ஒருவரும் வாய்விட் டரற்றாது மௌனமா யிருந்துவந்தனர். அதுபொழுது ஒருசமயம் ஓரிடத்தில் உ'மைர், ஸ'ப்வான் என்னும் இருவ ரும் மு'ஹம்மத்' நபியின் அக்கிரமத்தைப் பற்றியும் ப'த்'ரில் நிகழ்ந்த படுதோல்வியைப் பற்றியும் சம்பாஷணை புரிந்துகொண் டிருந்தார்கள். அப் பொழுது உ'மைர், தம்முடைய பெண்டு பிள்ளைகளையும் சிற்சில கடன் தொந்தரைகளையும் கவனித்துக் கொள்வதற்கு ஓராள் கிடைக்குமாயின், தாம் மதீனாவிற்கு நேரே சென்று மு'ஹம்மதை'க் கொன்றுவிட்டு வருவ தாக ஸ'ப்வானிடம் கூறினார். அது கேட்டு, ஸ'ப்வான் தாம் உ'மைரின் காரியங்களைக் கவனித்துக் கொள்வதாகக் கூறி, அன்னவரை மதீனாவிற்கு அனுப்பி வைத்தார். அதற் குடன்பட்டு உ'மைரும் நஞ்சில் தோய்த்த அம்புகளை எடுத்துக்கொண்டு அந் நகர்நோக்கிப் புறப்பட்டார்; ஆங்குச் சென்றவுடன் இந்த உ'மைர் முஸ்லிம்களால் சிறைசெய்யப்பட்டு நபிபெரு மான் திருமுன்பினில் கொண்டுவந்து நிறுத்தப்பட்டார். அதுபொழுது நபிகள் நாயகம் உ'மைருக்கும் ஸ'ப்வானுக்கு மிடையில் மக்காவில் நிகழ்ந்த சம்பாஷணை முழுதையும் கூறியதைக் கேட்டு, உ'மைர் என்பார் பிரமித்துப் போய்த் தம்முடைய துஷ்ட எண்ணத்திற்காக மன்னிப்புக் கேட்டு, உடனே இஸ்லா மார்க்கத்தில் சேர்ந்துகொண்டு விட்டார். அதன்பின்பு அவர் ஒரு முஸ்லிம் வீரராய் மக்காவிற்குத் திரும்பினார்; உ'மைர் கா'பிரா யிருந்த போது இஸ்லாத்தின்மீது எத்துணைப் பகைமை கொண்டிருந்தாரோ, அத் துணை உற்சாகத்துடனே இப்பொழுது இஸ்லாமிய பிரசாரம்புரிய முற்

---

* ப'த்'ரில் மக்கத்துக் :குறைஷியர் படுதோல்வியுற்றுப் பல தலைவர்களும் கொல்லப் பட்ட செய்தி கேட்டு, அபூ' லஹப்' ஏழுநாளைக்குப் பின்னே வாந்திபேதி கண்டு இறந் தொழிந்தான். அதுகாலை அவன் வீட்டாரும் நெருங்கவில்லை; நீகிரோவராலேயே அவனது சவம் இறுதியில் அடக்கப்பட்டது. நபிகள் திலகத்தின் பெரியப்பனா யிருந்தும், நபி பெரு மான் பிரசாரம் புரியுந்தொறும் அபூ'லஹப்' தொடர்ந்து சென்று, "இவன் பெரும் புளுகன்; இவன் பேச்சைக் கேட்காதீர்கள்," என்று கூறுவதோடு நில்லாது, நபிகள் பிரான் நடந்து செல்லவும் இயலாது போகட்டுமென்று கற்களைப் பொறுக்கியெடுத்து, திருநபி யவர்களின் பாதங்களையும் கெண்டைக்கால்களையும் புண்படுத்தி விடுவதை ஒரு பெருவழக்கமாகக் கொண் டலைவான். இப்பாதகன் பொருட்டு ஆண்டவனும் தன் திருமறையில் ஓர் அத்யா யத்தை (111) வெளிப்படுத்தி யுள்ளான். "நீ நாசமடையக் கடவாய் !" என்று ஆதியில் ச'பாமலையில் நபிபெருமானை ஆசி கூறியவனும் இவனேயாம் என்பதை நீங்கள் மறந் திருக்க மாட்டீர்கள்.

பட்டுவிட்டார். இவரது முயற்சியால் பிறகு மக்கத்திலிருந்த ஒரு கூட்டமே இஸ்லா மார்க்கத்தில் சேர்ந்துகொண்டு விட்டது.

இனி, ப'த்'ர் யுத்தத்தின் நிகழ்ச்சியைப் பற்றிய அந்தரங்கத் தாத்பரியம் இன்னதென்பதை யாம் ஈண்டுச் சிறிது கவனித்துப் பார்ப்போம். மதீனுவின்மீது படையெடுப்பதற் கென்று பொருள்திரட்டச் சென்ற அபூ'ஸுஃப்யான் ஷாமிலிருந்தபோது, அ'ம்ரு பி'ன் 'ஹல'ரமீயின் கொலையைப்பற்றிக் கேள்வியுற்றவுடன் மக்கத்திற்கு ஆளனுப்பித் துணைக்காகப் படையொன்று வேண்டி நின்றபோதினும், அவர் தம்முடைய வர்த்தகக் :காபி'லாவை மதீனத்து முஸ்லிம்கள் வழிமறித்துக் கொள்ளையடிக்கப் போவதாக ஒன்றும் செய்தியனுப்ப வில்லை. ஆயின், மக்கத்தில் அப்படிப்பட்ட வதந்தியொன்று உலவிவந்த போதினும், :குறைஷித் தலைவர்கள் மதீனுவின் மீது போர்புரியவே படைதிரட்டினர்க ளல்லாமல், அபூ' ஸுஃப்யானின் உதவிக்காகத் தாங்கள் புறப்பட்டுச் செல்வதாக ஒருசிறிதும் கூறவேயில்லை. :குறைஷிகள் கஃ'ப'ாவின் கருந்திரையைப் பற்றிக்கொண்டு வேண்டுதல் புரிந்ததும் மதீனத்திலுள்ள முஸ்லிம்களை அழித் தொழிப்பதாகவே யிருந்து வந்தது வெள்ளிடை மலையேயாம். இக் காரணத்தினுல்தான் ப'த்'ருக்கு வந்ததன்பின், அபூ'ஸுஃப்யானின் வர்த்தகக் :காபி'லா மதீனுவைத் தாண்டி க்ஷேமமாகச் சென்றுவிட்ட தென்னும் விஷயத்தைத் தெரிந்துகொண்டவுடன் ஜு'ஹ்ரா, அ'தீ' என்னும் இரு கூட்டத்தினரும் இனி முஸ்லிம்களுடன் யுத்தம் தொடங்கவேண்டிய அவசியமில்லை யென்று கூறிய சமாசாரத்தை அக் :குறைஷிப் படையினர் சிறிதும் செவியேற்றுக் கொள்ளவில்லை. எனவேதான், 'ஹ(க்)கீம் இப்'னு ஹ'ஜாம் கூறிய மற்றொரு யோசனையையும் அபூ'ஜஹ்ல் என்பான் சிறிதும் ஏற்றுக்கொள்ளத் துணியவில்லை.

இவ்வாறு :குறைஷிக ளெல்லாரும் மதீனுவின்மீது படையெடுத்து வருவதைத் தெரிந்து கொண்டுதான் நபிகள் திலகமும் அந்த யுத்தத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளை யெல்லாம் மதீனுவிலிருந்தே செய்துகொண்டு புறப்பட்டார்கள். அதுபொழுது நபிகள் நாதருக்கு அபூ'ஸுஃப்யானின் வர்த்தகக் :காபி'லாவை வழிமடக்க வேண்டுமென்னும் எண்ணம் ஒருசிறிதும் உதித்ததே கிடையாது; அவ்வாறு கூறுவதற்குச் சரித்திர பூர்வமான சரியான ஆதார மொன்றும் காணக் கிடைக்கவில்லை. அவ்வாறு அவர்கள் நாடியிருப்பார்க ளாயின், அந்தப் படையில் அன்சாரிய்யீன்கள் ஒருவரும் சேர்ந்திருக்கமாட்டார். என்னெனின், மக்கத்துக் :குறைஷிகளின் வர்த்தகத்தைத் தடைசெய்து ஒடுக்குவ தென்பது முஹாஜிரீன்களின் கடமையாகவே காணப்பட்ட தல்லது, அதில் மதீனுவாசிகள் சிறிதும் கலந்துகொள்ளச் சம்மதியார்கள். இத்தகைய காரணத்தினுலேதான் இதற்குமுன் பலதடவைகளில் நபிகள்நாதரால் ஐம்பதைம்பது, நூறுநூறு வேவுகாரர்கள் மக்காவை நோக்கி அனுப்பி வைக்கப்பட்டபோது, அவர்களுள் ஒருவரும் அன்சாரீயாயில்லை யென்பதை நீங்கள் அறிந்திருக்கிறீர்கள். பின்னர், நபிகள்பெரு

மான்(சல்) மதீனாவைச்சுற்றியுள்ள பற்பல கூட்டத்தார்களுடனும் சமாதான உடன்படிக்கை செய்துகொள்ளச் சென்றபோதும் அவர்களுடன் மற்றெல்லார்களும் முஹாஜிரீன்களாகவே சேர்ந்துகொண்டு சென்றார்கள். ஆனால் இறுதியில் மக்கத்துக் :குறைஷிகள் மதீனாவின்மீது படையெடுத்து வந்த காரணத்தினால்தான் ப'த்'ரின் யுத்தத்திற்குச் சென்ற 313 முஸ்லிம்களுள் 77 மனிதர்களே முஹாஜிரீன்களாகவும், ஏனை 236 மனிதர்களும் அன்சாரிய்யீன்களாகவும் காணப்பட்டனர்கள்.

அ'ப்'து'ல்லா பி'ன் ஜஹ்ஷின் கூட்டத்தார் நக்'லாவில் இப்'னு 'ஹல'ரமீயைக் கொன்றுவிட்டு, மற்றிருவரைக் கைதுசெய்து கொண்டு சென்றதனாலேயே மக்காவாசிகள் பெருங்கோபங்கொண்டு மதீனாவின்மீது படையெடுத்துச் சென்று அங்குள்ள முஸ்லிம்களெல்லாரையும் ஹதாஹதம் செய்து விடுவதெனத் தீர்மானித்துக்கொண்டே அம்மதீனாவை நோக்கிப் புறப்பட்டார்கள். தங்கள் நகரத்தின்மீது :குறைஷிகள் படையெடுத்து வருவது தெரிந்தே பெரும்பான்மையான அன்சாரிய்யீன்களெல்லாரும் அந்த யுத்தத்தில் கலந்துகொண்டார்கள். எனவே, எம்பிரான்(சல்) அவர்களும், ஏனைய முஸ்லிம்களும் அபூ'ஸுஃப்யானின் :காபி'லாவை வழிமறித்துக் கொள்ளையடிக்கத்தான் புறப்பட்டார்களென்றும், அவ்வாறு நெடுந்தூரம் சென்றதன்பின்பு அபூ' ஸுஃப்யான் ஆயிரம் ஒட்டகங்களுடனே தப்பிக்கொண்டு போய்விட்டதனாலேதான் ப'த்'ரை நோக்கிச் சென்று, ஆங்கிருந்த :குறைஷியருடன் வலுவிலே போர்புரியத் துணிந்தார்களென்றும் கூறத் துணிவது உண்மை விஷயத்தை ஒருசிறிதும் உணராது ஒருதலைப் பக்ஷமாய் உளறிவரும் உத்தமரல்லாதாரின் உன்மத்தச் செயலாகவே காணப்படாநின்றதென்று கண்டு, அதனை ஒருபுறம் ஒதுக்கித் தள்ளிவிடக் கடவோமாக. நெற்றிக்கண் படைத்தவர் கூறினாலும், குற்றம் குற்றந்தானே!

:குறைஷிகளின் சார்பில் சற்றேறக்குறைய ஆயிரம் கைதேர்ந்த போர்வீரர்களும், அவர்களுள்ளே ஒருநூறு குதிரை வீரர்களும், 700 ஒட்டகங்களும், வேறு பல உணவுப்பொருள்களும், யுத்த தளவாடங்களும் முட்டில்லாது இருந்துவந்தும், அவர்களுக்குப் பக்கபலமாய் மக்காவின் ஐசுவரியம் முழுதும் ஒருமித்துத் திரண்டிருந்தும், அப்படிப்பட்ட கடோத்கஜர்களான :குறைஷிக் கூட்டத்தினர், இரண்டே அசுவங்களும், ஆறே போர்க்கவசங்களும், எட்டே வாட்களுமே யுடைய, 313 சிறுவர்களும் வயோதிகர்களும் சரியான யுத்தப்பயிற்சி யில்லாதவர்களுமான ஏழை முஸ்லிம்களின் கரத்தால் முழுதும் முதுகொடிய முறியடிக்கப்பட்டுப் படுதோல்வியுற்று, ஒன்பது மாபெருந் தலைவர்களையு மிழந்து ஓட்டம்பிடிப்பதென்பது ஒரு சர்வ சாமான்யமான காரியமென்றா நினைக்கின்றீர்கள்? அச் சண்டையில் அபூ'ஜஹ்லுட்படப் பெரும்பான்மையான :குறைஷித் தலைவர்களெல்லாரும் மாண்டு மண்ணுக்குள்ளே மறைந்தனர். இதனால் சத்தியமே ஜயமென்னும்

சத்தியத்தை நாம் நன்று கண்கூடாகக் கண்டுகொள்ள வில்லையா? கண்ணிருந்தும் மக்கள் பலர் குருடராவ தேனோ? யா மறிகிலேம். முஸ்லிம்கள் தெய்வ மொன்றே யென்று கூறினார்கள்; வேறு பாபமொன்றும் இழைக்க வில்லை. அதற்காகவே பலதெய்வ வணக்கக்காரர்கள்— மக்கத்துக் கு'ப்'பார் கள்— அவர்களை அடியோடு அழித் தொழித்துவிட நாடினார்கள். ஆதலின், சத்தியத்தின் பக்கல் உழைத்து வந்த முஸ்லிம்களுடன் அக்கிரமமாகப் போராடத் துணிந்த அசத்திய வாதிகளான அந்தக் :குறைஷிக் கா'பிர்கள் ஆண்டவனிட்ட சாபத்தால் அன்றே அழிந் தொழிந்தார்கள். காமாலைக் கண்ணில்லா ரெல்லாரும் கண்டு தெளியட்டும்.

அவ் வாண்டவ னருளால்தான் அந்த ப'த்'ர் யுத்தம் நிகழ்ந்த வெள்ளிக் கிழமைக்கு முதல்நாளிரவில் முஸ்லிம்களுக்குச் சாதகமாகவும், கா'பிர் களுக்குப் பாதகமாகவும் ஒரு பெருமழை பெய்திருந்தது; இதனால்தான் விடிந்ததன் பின்பு :குறைஷிகள் இருந்த பகுதி உவர்நீர்ச் சேற்றுநிலமாகவும் மாறிவிட்டது. இன்னம், முஸ்லிம்களுக்கு ஏராளமான ஜலவசதியும் கிடைத்துவிட்ட தென்னலாம். மேலும், அதற்கு முன்னிரவில் முஸ்லிம்க ளெல்லாரும் நன்றாகத் தூங்கியெழுந்து, அதிகாலையில் தொழுது கொண்டு, அதிக உற்சாகத்துடனே போர்க்களத்திற்குச் சென்றார்கள்; ஆனால், :குறைஷிகளோ, அன்றிரா முழுதும் குடியாலும் குதூகலத்தாலும் தங்கள் நேரத்தை வீணாகக் கொண்டாடி விடிந்ததன் பின்னே அதிக அயர்ச்சியோடு யுத்தகளம் புக்கார்கள். முஸ்லிம்களே போல் :குறைஷிகள் நிசப்தராக வாவது, ஏதேனுமோர் ஒழுங்குக்குக் கட்டுப்பட்டவராக வாவது நடந்து கொள்ளாது, எல்லாரும் தாந்தோன்றிகளே போல் தாறுமாறாக ஒழுகி வந்தார்கள். போதாக் குறைக்கு யுத்தம் நிகழும்பொழுது பெரும் மண் மாரியும் புயலும் அந்தக் :குறைஷிகளுக்கு அதிகமான மனக்குழப்பத்தை உண்டுபண்ணி விட்டதனால், ஆண்டவனும் அமரர்களுமே தங்களுக்கு விரோதமாய் வேலைசெய்து வருவதாக நினைத்து, அம் 313 முஸ்லிம்களையும் 2,000 பேர்களேபோல் கண்டார்கள். தெய்வச் சோதனையாலேதான் தங்கள் தலைவர்களும் ஒருவர்பின் னொருவராய் அந்த யுத்தகளத்தில் ஒன்பதின்மர் மாண்டனரென்று எண்ணிக்கொண்டே ஓட்டம் பிடித்தனர். இதனால்தான், ஆண்டவன்மீது முழு நம்பிக்கையும் வைத்திருந்த முஸ்லிம் களுள் 14 சுத்த வீரர்களே வீரசுவர்க்கம் புகுந்திருக்கும் போது, அக் :குறைஷிகளுள் அத்தொகையைப் பார்க்கினும் ஐந்து பங்கு அதிகமானவர் கள் மாண்டு மடிந்ததோடு, அத்துணைத் தொகையினரே யுத்தக் கைதிக ளாகவும் அகப்பட்டுக் கொண்டார்கள்.

அந்த ப'த்'ரின் யுத்தகளத்தில் ஆண்டவனே முஸ்லிம்களுக்குத் துணை புரிந்தா னென்பதில் கிஞ்சித்தும் சந்தேகமென்ப தில்லை. இவ் வுலகத்தில், பெருந் தொகுதியான, ஆயின், தக்க யுத்தமுஸ்தீப்'க ளில்லாத பெரும் பெரும் சேனைகளை யெல்லாம் போதுமான யுத்தமுஸ்தீப்'க ளுடனும்,

போதிய ஆயுதப்பயிற்சி பெற்றுள்ள வீரர்களுடனும், நல்ல முறையில் வாளாயுதங்களைப் பிரயோகிக்கக் கற்றுக்கொண்டிருக்கும் சிறுபான்மைத் தொகுதியினர் பற்பல சமயங்களில் தோற்கடித் திருக்கும் செய்திகளை நாம் அடிக்கடி சரித்திரங்களில் கண்டுகொண்டுதான் வருகின்றோம். ஆனால், இந்த ப'த்'ர் யுத்தத்தில் காணப்பட்ட விசேஷம் யாதெனின், எல்லா விதமான குறைபாடுகளும் பலஹீனங்களும் முஸ்லிம்களின் பக்கமே காணப் பட்டு வந்தன; ஆயின், எல்லாவிதமான சௌகரியங்களும் பலங்களும் எதிரிகளான :குறைஷிகளிடமே முழுதும் அமைந்து கிடந்தன. அவர்க ளுடைய சேனுசமூகம் முஸ்லிம்களின் படையைப் பார்க்கினும் மும்மடங்கு அதிகமா யிருந்துவந்தது; அவர்கள் யுத்தத்திற்கு முதல்நாளே அங்குவந்து, தங்குவதற்கு வசதியான இடத்திலே பாடிவீடு செய்துகொண்டார்கள். அவர்களுள் பேர்போன போர்வீரர்க ளெல்லாம் ஒருமிக்கத் திரண்டிருந் தார்கள்; அவர்களுக்கு யுத்தப்பழக்கமே நித்தியப்பழக்கமா யிருந்துவந்த தென்னலாம். யுத்த தளவாடங்களும் அன்னவர்பால் அதிகம் காணப் பட்டு வந்தன. அவர்களுள் ஒவ்வொருவரும் முழுஆயுதபாணி யாகவே விளங்கிவந்தனர். ஆங்கு ஒருநூறு குதிரை வீரர்களும், 700 ஒட்டகங்களும் உடனிருந்து வந்தனவென்பதும் மெய்யேயாம்.

ஆனால், முஸ்லிம்களின் கதி யாதா யிருந்துவந்தது? என்று சிறிதே ஆராய்ந்து பார்க்கலாம்: இவர்களுடைய எண்ணிக்கை :குறைஷிகளைக் காட்டினும் மூன்றிலொரு பங்காகவே காணப்பட்டு வந்தது; இவர்க ளுள்ளே பால்யர்களும், வயதுசென்ற முஹாஜிரீன்களும், ஒருசில, மதீனு வாசிகளுமே நிரம்பி யிருந்தனர். எவ்விதத்திலும் இவர்கள் அக் :குறைஷி களுக்கு இணையென்று கூறுவது ஒருகாலும் முடியாது. இவர்களிடத்தில் இரண்டு சாதாரணக் குதிரைகளும், 70 வரிக்குதிரைகளுமே இருந்து வந்தன; இன்னம், 6 கவசங்களும், எட்டு வாட்களுமே அந்த 313 முஸ்லிம்க ளிடத்திலும் காணப்பட்டன. இத்தகைய ஏழை மக்களே மக்கத்துத் தனிகர்களின் முன்னே தற்காப்பி னிமித்தம் தைரியமாகச் சென்றனர். ஆனால், அந்தச் சத்திய சீலர்களுக்கு ஆண்டவனே தோன்றாத் துணையாய் நின்று, முற்றிலும் வெற்றி கொடுத்திருக்கிறான். அவ் வாண்டவன் பலத் தைக் கொண்டே அம் முஸ்லிம்கள் :குறைஷிப் பலசாலிகளை யெல்லாம் முற்றும் முதுகொடித்து முறியடியச் செய்து விட்டனர். எனவேதான், "அந்த யுத்தகளத்தில் நேருக்கு நேராய்ச் சந்தித்த இருகக்ஷி சேனைகளில் நிச்சயமாக உங்களுக்கு ஒரு தக்கசான்று இருக்கிறது; ஒரு கக்ஷி அல்லா(ஹ்)வின் பாதையிலே போர் புரிந்தது. மற்றொரு சேனையோ, கு'ப்ரின்பக்கம் சார்ந்ததாக இருந்தது......... இன்னம், ஆண்டவன் தான் நாடியவர்களைத் தன்னுதவிகொண்டு பலப்படுத்துகிறான், நேத்திரங்க ளுடையவர்களுக்கு மெய்யாகவே இதிலொரு படிப்பினை யிருக்கிறது,"

என்று அவ் விறைவனே தன் திருமறையில் (3 : 12) மிகவிளக்கமாகக் கூறி யிருக்கின்றான்.

இந்த ப்த்ர் யுத்தமானது ஒருபக்கல் :குறைஷிகளின் இடுப்பைச் செம்மையாக ஒடித்து விட்டதோடு, மற்றொரு பக்கல் முஸ்லிம்களுக்கு இனியில்லாத் தைரியத்தை ஊட்டிவிட்ட தென்றே நாம் நிச்சயமாகத் தெரிந்து கொள்ளுகிறோம். இத்தகைய வெற்றியைக் கண்டதன் பின்னரே அ’ப்’ து’ல்லா பி’ன் உபை’ என்னும் கொடிய நயவஞ்சகத் தலைவனும் திகில் கொண்டு வெளித் தோற்றத்திற்காக வேனும் இஸ்லாத்தைத் தழுவிக் கொண்டு விட்டான். அவனால் இனிக் கா‘பிரா யிருப்பதற்கு முடியாமற் போய்விட்டதனாலேயே இவ்வாறு வெளிவேஷத்தில் ஆஷாடபூதித்தனத்தை மேற்போட்டுக் கொண்டு திரியலாயினான். இன்னம், மதீனாவிலுள்ள யூதர் களும், அதைச் சுற்றி அக்கம் பக்கத்திலுள்ள காட்டரபிகளும் இந்த யுத்தத்தின் வெற்றியைக் கண்டு இறும்பூ தெய்தாது இருத்தற் கியலவில்லை. உண்மையில் அல்லா(ஹ்)வின் உதவி இல்லாமற் போயிருக்குமாயின், இத் துணைச் சிறு தொகுதியினரான முஸ்லிம்கள் எவ்வாறு அத்துணைப் பெரிய :குறைஷிச் சேனையைப் புறமுதுகுகாட்டி ஓட்டுமாறு வெருட்டி, வெற்றிக் கொடியும் நாட்டியிருத்தல் கூடுமென்று அன்னவர்க ளெல்லாரும் அதிசயங் கொண்டு நின்றார்கள். இன்னம், அக் :குறைஷியரின் தலைவர்க ளெல்லாரும் (முக்கால் ட‘ஜன் வரை) அடியோடு மாண்டு மண்ணைக் கவ்வியதுதான் எவருக்கும் விளங்காத இரகசியமாகவே இருந்து வந்தது. கண்ணுடைய ரென்பவர் இன்னமுமா இதில் தெய்வச்சோதனை யிருக்கிற தென்பதைக் கண்டுகொள்ள மறுக்கின்றார்கள்?

அந்த யுத்தகளத்தில் நிகழ்ந்த மற்றொரு சம்பவத்திலும் தெய்வ கடாக்ஷம் என்பது பெரிதும் காணப்படாமற் போகவில்லை. எவ்வா றெனின், அந்த யுத்தம் நிகழுங்காலத்தில் ஒருபுறத்தில் நபிகள் திலகம் (சல்) நீர் ததும்பிய நேத்திரங்களுடன் தரையிற் சிரவணக்கம் புரிந்து, ஆண்டவன் பால் உதவி வேண்டுகிறார்கள்; மற்றொரு புறத்தில் அபூ’ஜஹ்லும் அவ் வாண்டவனையே இறைஞ்சி நிற்கின்றான். இவ்வாறு பந்து மித்திரர்களைப் பிரித்து, நெடுங்காலமாக அந்நாட்டில் குழப்பத்தை உண்டுபண்ணிவரும் மனிதர்கள் எவர்களோ, அவர்களை ஆண்டவன் அழித்துவிட வேண்டு மென்பதே அன்னாரின் மனப்பூர்வமான பிரார்த்தனையாகும். :குறைஷிகள் மக்காவைவிட்டுப் புறப்படுமுன் கஃ’ப’ாவிற்குச் சென்று, நேரானபாதையில் நடந்து செல்பவர்களுக்கே இந்த யுத்தத்தில் வெற்றியுண்டாக வேண்டு மென்று பிரார்த்தனையும் புரிந்துகொண்டே மதீனாவை நோக்கிப் புறப்பட் டார்கள். எனவே, அவ்விரு திறத்தாருள் எவர் ஆண்டவனது நேரான பாதையில் சீராக நடந்துசென்றார்க ளென்னும் சத்தியத்தை இந்த யுத்தத் தின் முடிபிலிருந்தே நன்கு தெரிந்து கொள்ளுகிறோம் (:குர். 8 : 19). சத்திய மென்பது ஆண்டவனது உதவிகொண்டு வெற்றிபெற்று நின்றது; அசத்திய

மானது அவனது சாபத்தைக் கொண்டே அழிந்தொழிந்து விட்டது. சென்ற பன்னிரண் டாண்டுகளாகவே முஸ்லிம்களுக்கு இறுதியில் வெற்றியே கிடைத்து விடுமென்று அந்த ஆண்டவன் தீர்க்கதிருஷ்டியாகக் கூறிவந்தன வெல்லாம் இந்த யுத்தத்தின் முடிவிலே நிதரிசனமாக நிறை வேற்றி வைக்கப்பட் டிருக்கின்றன; இறுதியில் தர்மமே ஜயம்பெறு மென்னும் இறைவனது வாக்குறுதி இப்பொழுது முற்றிலும் நிறைவேறிவிட் டது. எனவே, இனி இஸ்லாத்தின் முன்னேற்றம் உச்சஸ்தானத்தை யடைந் துவிடுமென்னும் இறைவனது தீர்க்கதரிசனத்தை மெய்யென்றே எல்லாரும் இனிது ஒத்துக்கொள்ளத் துணிந்துவிட்டார்க ளென்றே கூறிமுடிக்கலாம்.

இந்த ப'த்'ரின் தோல்வியானது :குறைஷிகளின் கர்வத்தை முற்றும் பங்கப்படுத்தி விட்டதனால், அவர்கள் இனியும் இத் தோல்விக்குரிய பழி வாங்காது வாளா இருந்து விடுவது முடியா தன்றே! அவர்க ளபிப்பிரா யத்தில், போதிய யுத்த தளவாடமற்ற ஒருசிறு கூட்டத்தினராகிய அற்ப மதப் பாஷண்டர்கள் கூடித் தங்களுடைய பெருமையைக் குலைத்து விட்டார்க ளென்னும் உரோஷமே அக் :குறைஷியரை அதிகம் உறுத்திக் கொண் டிருந்தது. ஆதலின், பழிக்குப் பழி யென்னும் மூல மந்திரமே அம் மக்கமா நகர்முழுதும் சதா ஓலமிட்டுக்கொண் டிருந்தது. பெரும் பான்மையான :குறைஷித் தலைவர்க ளெல்லாம் அந்தப் ப'த்'ர் யுத்தத்தில் மாண்டொழிந்து விட்டமையால், அதன்பின்பு அபூ' ஸு'ப்யானே அக்:குறை ஷிகளுக்குத்தலைவரெனத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவருடைய மனைவியான கொடுநீலி ஹிந்துவும் தன்னுடைய தந்தையும், சகோதரனும், சிறிய தந்தை யும் அந்த யுத்தகளத்தில் கொல்லப்பட்டதற்காக ஹம்'ஜா (ரலி') மீதும், அ'லீ(ரலி') மீதும் பழிதீர்த்துக் கொள்ள வேண்டு மென்று அடிக்கடி துடி துடித்துக் கொண்டே கிடந்தாள். ப'த்'ருக்கு முன்னே அபூ' ஸு'ப்யான் ஷாமுக்குச் சென்று வர்த்தகம் செய்தக்கால் கிடைத்த இலாப முழுதும் முஸ் லிம்களின் மீது போர் புரிதற்கென்றே ஒதுக்கி வைக்கப்பட்டிருந்தும், அந்தத் தொகை ப'த்'ரின் சண்டையில் செலவு செய்யச் சமயம்வாய்க்காது போய்விட் டதனால், அத்தொகை முழுதும் மற்றொரு பெரிய யுத்தத்திற் கென்றே நிறுத்தி வைக்கப்பட்டது.

அவ்வாறு மற்றொரு பெரிய யுத்தத்திற்கு வேண்டிய ஆயத்தமொன்றும் செய்யப்படா முன்னமே ஹிந்துவின் தொந்தரை பொறுக்கமாட்டாது அபூ' ஸு'ப்யான் ப'த்'ரின் தோல்விக்குத் தமது சொந்த ஹோதாவில் பழி வாங்கிவிட வேண்டுமென் றெண்ணினார். "வென்றிலென் என்ற போதும் வேதமுள் ளளவும் யானும், நின்றுளென் அன்றோ மற்றம் முஹ(ம்)மத் பேர் நிற்கு மாயின்," என்று கூறுமா போன்று, தாம் ப'த்'ரில் கொல்லப் பட்டவர்களுக்காகப் பழிவாங்கும் வரை தலையில் தைலமிட்டுக் கொள்வ தில்லை யென்றும் சூளுறவு கூறிக்கொண்டு விட்டார். அக்கணமே அந்தச் சபதத்தை நிறைவேற்றுவான் வேண்டி 200 ஒட்டகப் படைகளுடன்

ஹிஜ்ரீ 2-ஆம் ஆண்டு 'துல்'ஹஜ்' மாதத்தில் மதீனாவை நோக்கிப் புறப்பட்டார். ஆங்குச் சென்றவுடன் யூதர்கள் முஸ்லிம்களுக்கு விரோதமாகத் தமக்கு உதவிபுரிவார்க ளென்று நினைத்து, மாறுவேடத்துடன் ஒரு யூதக் கூட்டத் தலைவனான் ஹைய்யிப்'னு அக்'தபி'டம் நெருங்கினார்; அவர் அபூ ஸுஃப்யான் வந்திருப்பதைக் கேள்வியுற்றுத் தம்வீட்டுக் கபாடத்தையும் திறக்கத் துணியவே யில்லை. அதன்பின்பு அபூ' ஸுஃப்யான் ப'னீ நலீர் வர்க்கத் தலைவனான ஸலாம் பி'ன் மஷ்கம் என்பவனிடம் உதவி தேடிச் சென்றார். இவன் மதீனாவிலுள்ள ஒரு பெரிய "ரொக்க லேவாதேவி" செய்பவனாய்த் திகழ்ந்து வந்தான். எனவே, இவன் அபூ' ஸுஃப்யானுக்கு உதவி செய்வதாக வாக்குக் கூறி, அவரை நல்வரவேற்று விருந்துபசாரமும் செய்வித்து, மதீனாவிலுள்ள இரகசியக் குறைக ளனைத்தையும் அவர்பால் எடுத்துக் கூறினான்.

பிறகு, அபூ' ஸுஃப்யான் ஒன்றுஞ் செய்ய இயலாது மதீனாவிலிருந்து மூன்று மைல் தூரத்திலுள்ள அரீஜ் என்னும் இடத்திற்குச் சென்று, ஆங்குள்ள சில கூரைகளைக் கொளுத்திவிட்டு, அன்சாரீ யொருவரையும் கொன்றுவிட்டார்; இவ்வாறு செய்ததே தமது சபதம் நிறைவேறுதற்குப் போதிய பழியெனத் தீர்மானித்துக் கொண்டார். இவ் விஷயம் தெரிந்தவுடன் நபிகள்பிரான் (சல்) சிலமுஸ்லிம்களை அழைத்துக்கொண்டு அரீஜை நோக்கிப் புறப்பட்டார்கள். முஸ்லிம்கள் துரத்திக்கொண்டு வரும் செய்தி தெரிந்து அபூ' ஸுஃப்யான் அந்த உத்தர குமாரனைப்போல ஓட்டம் பிடித்து விட்டார்; அவ்வாறு திகில்கொண் டோடிய பதஷ்டத்தினால் அவர் தம்முடன் கொண்டு வந்திருந்த கோதுமைமா மூட்டைகளை யெல்லாம் கீழே எறிந்துவிட்டு ஓடவேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது. :குறைஷிகள் அவ்வாறு தப்பி யோடியதன்பின்பு முஸ்லிம்கள் அம் மாமூட்டைகளை யெல்லாம் திரட்டிக் கொண்டு மதீனாவிற்குத் திரும்பினார்கள். மாவிற்கு அரபு பாஷையில் 'ஸவீ:க்' என்று பெயர் கூறப்படுவதால், இச்சிறு சண்டைக்கு "ஃகஜ்வெ ஸவீ:க்" (மாச் சண்டை) என்றே சரித்திராசிரியர்கள் பெயர் கூறுகிறார்கள்.

["ஸவீ:க்" கென்பது ஓரிடத்தின் பெயரன்று என்றறிக.]

அந்த ஹிஜ்ரீ 2-ஆவது ஆண்டிலேதான் நபிகள் பெருமானின் இளைய பிரிய குமாரியாகிய அழகிய 'பா(த்)திம(த்)து'ஜ் ஜ்ஜாஹ்ரா (ரலி') அவர்கள் ஹஜ்ரத் அ'லீ(ரலி') அவர்களுக்குத் திருமணமுடித்து வைக்கப்பட்டார்கள். அந் நங்கையர்க் கரசியாருக்கு அதுபொழுது வயது சற்றேறக்குறைய இருபதாகவே இருந்துவந்தது. எவ்வா றெனின், நபிகள் பெருமானுக்கு வயது 35 ஆக இருந்தபோதுதான் அவ் வனிதாமணி ஜனனமாயினார்க ளென்று சரியான சரித்திர ஆதாரங்கள் சான்று கூறிக்கொண் டிருக்

கின்றன. அதுசமயம் அ'லீ (ரலி') அவர்களுக்கு இருப்த்தொரு பிராயம் முடிந்து, 22-ஆவது பிராயம் நடைபெற்றுக் கொண்டிருந்தது.* முதன் முதலில் இக் கன்னிகையை மணந்துகொள்ள 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் (ரலி') அவர்கள் விழைந்ததாகவும், பிறகு உ'மர்(ரலி') அவ்வாறு விரும்பியதாகவும் சில ஆதாரமற்ற கதைகள்காணப்படுகின்றன. ஆனால், அ'லீ(ரலி') அவர்கள் அக் கன்னிகையின் மீது கருத்துக்கொண்டு, தமது விருப்பத்தை நபிகள் பெருமானிடம் மெல்லத் தெரிவித்தார்கள். பீ'பீ' 'பா(த்)திமாவும் அது தெரிந்து, மௌனமா யிருந்ததைக் கண்டு, நபிகள் நாதரும் தங் குமாரிக்கு அவ்விஷயத்தில் விருப்ப மிருக்கிறதென அறிந்து, 'ஹ'ஜ்ரத் அ'லீயை நோக்கி, “இத்திருமணத்திற்கென்று என்ன மஹர்-மாங்கல்யக் கட்டணம்-கொண்டு வந்திருக்கின்றீர்?” என்று புன்முறுவலுடனே வினவினார்கள். அது கேட்டு, அ'லீ(ரலி') அவர்கள் தம்மிடம் ஒரு குதிரையும், ரூபாய் 1-4-0 பெறுமதியுள்ள ஒரு போர்க்கவசமும், ஆட்டுத்தோல் ஒன்றும், பழைய யமன் தேயத் துப்பட்டி யொன்றும் தம்மிட மிருப்பதாகக் கூறினார். அதைக் கேட்டு, நபிகள் திலகம் குதிரை சவாரிக்குதவு மென்றும், கவசமொன்றே மஹருக்குப் போதுமென்றும் கூறினார்கள். அ'லீ(ரலி')யின் வல்க்கரமே யுத்தத்திற்குப் போதியதாதலின், அவர்களுக்கு இருப்புக் கவசமொன்றும் வேண்டுவதின் றென்று கருத்துக்கொண்டே நபிகள் பெருமான் இவ்வாறு இயம்பலுற்றார்கள்.

உடனே அ'லீ(ரலி')யின் ஒன்றேகால் ரூபாய் பெருமானமுள்ள அக் கவசத்தை 'ஹ'ஜ்ரத் உ':துமான்(ரலி') அவர்கள் ஒன்றேகால் நூறு ரூபாய் கொடுத்து வாங்கிக் கொண்டார்கள். அதன்பின்பு நபிகள் திலகம் அத்தொகையை பி'லால்(ரலி') அவர்களிடம் கொடுத்துக் கடைவீதிக் கனுப்பி, ஒரு பாதித் தொகைக்கு வலிமாவிருந்துக்கு வேண்டிய சாமான்களும், மற்றொரு பாதிக்குச் சில ஸ்திரீதனச் சாமான்களும் வாங்கிவரச் சொன்னார்கள். அந்தத் தோழரும் அவ்வாறே கடைக்குச் சென்று அவ் விவாகத்திற்கு வேண்டிய சாமக் கிரியைகளை யெல்லாம் சவதரித்துக் கொண்டு வந்தார். அக்கணமே அவ் விவாஹம் ஹி. 2- ஆவதாண்டு 'ஹஜ்மாதத்தில் நடைபெற்றது. இருலோகத்துக்கும் வள்ளலாகிய ஸர்தார் எம்பெருமானா ரவர்கள் (சல்) தங்கள் அருமைத் திருக்குமாரிக்கு என்னென்ன சாமான்களை ஸ்திரீதனமாகக் கொடுத்தார்க ளென்று நீங்கள் நினைக்கின்றீர்கள்? மூங்கிலால் செய்யப்பட்ட கட்டிலொன்றும், பேரீச்சை யோலைகள் திணிக்கப்பெற்ற தோல் தலையணை யொன்றும், தோலாலாய விரிப்பொன்றும், தண்ணீர் மொள்ளத் தோல்துருத்தி யொன்றும், ஒரு ஜோடி கல்லியந்திரமும், இரண்டு மட்குடங்களும், ஒரு துப்பட்டியுந்தாம் கொடுத் துதவினார்கள். இவற்றுள்ளே அந்த இயந்திரமும் தண்ணீர்த் துருத்தியுமே அவர்களுடைய

* 24 அல்லது 25 வயதென்று மௌ. மு'ஹம்மத'லீ கூறுகின்றார்.

மரணகால பரியந்தம் அன்னவர்பால் இருந்துவந்தன. 'ஹ'ஜ்ரத் உ';து மானும் தாங்கள் 480 தி'ர்ஹம் கொடுத்து வாங்கிய அப் போர்க் கவசத்தை அந்த அ'லீ (ரலி') யிடமே மாப்பிள்ளைச் சம்மானமாகக் கொடுத்து விட்டார்கள்.

விவாக மானதன் பின்பு அ'லீ(ரலி') அவர்கள் தங்கள் பத்தினியாரை நோக்கி, அன்னவர் தந்தையாரிடம் சொல்லி 'ஹாரி:தா பி'ன் நுஃ'மான் அவர்களிடமிருந்து ஒரு வீடுவாங்கித் தரும்படி கேட்டிருந்தார்கள். அதற்கு முன்னே அந்த 'ஹாரி:தா என்பவர் நபிகள் பெருமானுக்குச் சிலவீடுகளைக் கொடுத்துதவி யிருந்ததனுல்தான் அ'லீ(ரலி') அவர்களும் இதுபொழு தொரு வீடு கேட்கச் சொல்லி வேண்டினுர்கள். அவ்வண்ணமே 'ஹ'ஜ்ரத் 'பா(த்)தி மாவும் தங்கள் தந்தையா ரிடம் இவ் விஷயத்தைத் தெரிவித்தார்கள்; ஆனுல், நபிகள் பெருமான் 'ஹாரி:தாவிடம் இனியும் ஒரு வீடு கேட்கத் தங்களுக்கு வெட்கமா யிருக்கிறதென்று கூறிவிட்டார்கள். ஆயினும், அந்த 'ஹாரி:தா பி'ன் நுஃ'மான் இவ் விஷயத்தைக் கேள்வியுற்றுத் தாமாகவே ஒருவீடு கொடுத்துதவினுர். [புராணம் பாடும் புலவர்கள் வேறென்னென்ன வெல்லாமுங் கூறிப் புராண மியற்றிடினும், மீக்கூறிய அவ்வளவேதான் அவ்விவாக சம்பந்தமாகச் சரித்திரத்திலே காணப்படு கிறது. ஏனையவனைத்தும் "புராணமே புராணம்."]

பிறகு ஒருநாள் நபிகள்திலகம் (சல்) அத் தம்பதிகளிருந்த வீட்டிற்குச் சென்று ஒரு பாத்திரத்தில் தண்ணீர் கொண்டுவரச் சொல்லி, அதில் தங்கள் கைகளிரண்டையும் நனைத்து அந்த வதூவரர்களின் நெஞ்சிலும் புஜத் திலும் தெளித்து, அவ் விளங்குமாரியைப் பார்த்து, "நம்முடைய வர்க்கத்தி லிருந்து எத்துணை நல்ல மாப்பிள்ளையைத் தேடிப்பிடிக்க முடியுமோ, அத்துணை நல்ல மாப்பிள்ளையாகப் பார்த்து உனக்கு விவாகம் செய்து வைத்துவிட்டேன்," என்று கூறினுர்கள். பிறகு எப்பொழுதும் அப் பெண்ணும் பிள்ளையும் சந்தோஷமாகக் காலங் கழிப்பதே நபிகள் திலகத் துக்கு இனியில்லாப் பேரானந்தத்தைக் கொடுத்துக்கொண் டிருக்கும். அவ் விருவருக் கிடையில் எப்பொழுதேனும் சில்லறைப் பிணக்குக்கள் ஏற்பட்டு விடுமாயின், அவற்றினை எம்பிரானவர்களே சென்று, தீர்த்து வைப் பார்கள். ஒருமுறை நபி பெருமானுர் தம் மருகரின் விடுதிக்குள்ளிருந்து மிக்க முகமலர்ச்சியுடனே வெளிவருவதைக் கண்ட தோழர் ஒருவர் விசேஷம் என்னவென்று விசாரிக்கத் துவக்கினுர். அதற்கு நபிகணுயகர், "என்னுடைய மனத்துக்கினிய ஒரு பெண்ணையும், மனத்துக்கினிய ஓர் ஆணையும் ஒன்றுசேர்த்து வைத்துவிட்டு வருவதே எனக்குச் சந்தோஷமா யிருக்கிறது," என்று பதின்மொழி கூறினுர்கள். ஒருமுறை அ'லீயும் 'பா(த்)திமாவும் ஏதோவொரு சிறு விஷயங்குறித்துப் பிணங்கிக்கொண் டிருந்தார்கள். ஆகையால், அ'லீ(ரலி') கோபத்துடன் வீட்டைவிட்டு வெளியிற் சென்று, மஸ்ஜிதின் வெறுந்தரையிலே போய்ப் படுத்துக்கொண்

டார்கள். அதுபொழுது நபிபெருமானார் 'பா(த்)திமா(ரலி') இருந்தஇல்லம் சென்று பார்க்க, அங்கு அ'லீ(ரலி') இல்லாதது கண்டு, தங் குமாரியை விசாரித்தார்கள். அதுகாலை 'பா(த்)திமா அவர்கள் விருத்தாந்தத்தைக் கூறக் கேட்டு, நபிகள்திலகம் மஸ்ஜிதுக்குச் சென்று, அங்கே வெறுந்தரையில் புழுதியில் புரண்டுகொண்டு கிடந்த அ'லீ அவர்களைப் பார்த்து, "ஏ அபூ'த்துராப்'!— புழுதியில் புரண்டு கிடப்பவரே!— எழுந்திரும்!" என்று கூறி, அழைத்துச் சென்று, அத் தம்பதிகளின் பிணக்கைத் தீர்த்து வைத்தார்கள். அன்றுமுதல் 'ஹ'ஜ்ரத் அ'லீ அவர்கட்கு அபூ'த்துராப்' என்னும் பட்டமொன்று வழங்கலாயிற்று. [அபூ'த்துராப்' என்னும் சொற்றொடர், 'மண், அல்லது புழுதியின் தந்தை' என்று பொருள் கொள்ளும்.]

நபிகள் பெருமான் தங்கள் குமாரியை நோக்கி, அவர் கொண்டுவந்திருந்த பரியாதுக்கு மறுமொழியாக, "என் கண்மணி! இப்பூவுலகினில் மனைவியிடம் கோபித்துக்கொள்ளாத மணமகனும் உண்டோ?" என்று கூறிய வார்த்தைகளைச் செவியேற்று நின்ற அ'லீ(ரலி') அவர்கள் பிறகெப்பொழுதுமே தம் பத்மினியாரை ஒன்றும் கடுஞ்சொல் சொன்னதே யில்லையென்ப. மற்றொரு முறை நபிகள்திலகம் (சல்) செய்த மஸ்ஜித் பிரசங்கமொன்றைக் கேட்டுக் கொண்டிருந்ததன் பின்னர் அ'லீ அவர்கள், தாம் அதற்குமுன்னே மற்றொரு பெண்ணை மணம் புரிந்துகொள்ளப் போவதாக 'ஹ'ஜ்ரத் 'பா(த்)திமா அவர்களிடம் கூறியிருந்த ஒரு கடுமொழியை அப்பால் எப்பொழுதும் மறந்தே விட்டார்கள். ஆனால், 'பா(த்)திம(த்)து'ஜ்ஜெ'ஜாஹ்ரா பரலோக வாழ்வை எய்தியதன்பின்னால் 'ஹ'ஜ்ரத் அலீ அவர்கள் ஒருவர்பின் னொருவராக எட்டு மனைவியர்வரை மணமுடித்துக் கொண்டதாகச் சரித்திரம் சான்று கூறுகின்றது.

இவ்விரு தம்பதிகளும் ஒன்றாகக் கூடிக் குடும்பம் நடாத்திய காலம் ஒன்பது வருஷங்களே யாகும். அதற்குள்ளே அவ்விருவருக்கும் பிறந்த குழந்தைகள் ஐவராவர். இமாம் 'ஹஸன்(ரலி') இமாம் 'ஹுஸைன்(ரலி') ஸ'ஜனப்' ஆகிய மூவரையும்பற்றி நீங்கள் அடிக்கடி சரித்திரங்களில் கேள்வியுற் றிருப்பீர்கள். 'பா(த்)திம(த்)து'ஜ் ஜெ'ஜாஹ்ரா அவர்கள் தங்கள் 29-ஆவது பிராயத்தில், நபிகள் நாயகத்தின் வ'பாத்துக்குப் பின்னே ஆறு மாதம் சென்று, இகலோக வாழ்க்கையைத் துறந்து பரலோகப் பிராப்தியடைந்து விட்டார்கள்.

ஹிஜ்ரீ 2-ஆவது ஆண்டிலேதான் ரமல'ான் மாதத்தின் முப்பது நோன்பும் முஸ்லிம்களுக்குக் கடமையாக்கப்பட்டது. இந்நோன்பு முடிந்த மறுநாள் (ஷவ்வால் மாதம் முதற்றேதி) பெருநாளாகக் கொண்டாடப்பட்டதும் இவ்வருட முதற்கொண்டேதான். இன்னம், ஈ'து'ல் 'பித்ர் பண்டிகையன்று 'பித்ராவென்னும் சிறுதானம் கொடுக்கும் நியதியும் இவ்வாண்டிலேதான் அ'மலுக்குக் கொண்டுவரப்பட்டது. இதற்குமுன்னே

ஹிஜ்ரீ முதல் வருடத்திலே, மத்தியான்னம், சாயங்காலம், இ'ஷா ஆகிய மூன்றுநேரத்துத் தொழுகைகளிலும் 'பர்ல்'ஸ்ரக்ஆ'த்கள் நந்நான்காக ஆக்கப்பட்டு விட்டன; அதற்குமுன்னே இம்மூன்று வேளைகளின் தொழுகைகளிலும் இரண்டிரண்டு ரக்ஆ'த்தே 'பர்ல்'ஆகக் கொண்டாடப்பட்டுவந்தன.

ப'த்'ர் யுத்தத்தில் :குறைஷிகளுக்குப் படுதோல்வி கிடைத்துவிட்டதென்பதை மக்காவிலிருந்து கேள்வியுற்ற அபூ'லஹப்'ம் பிறகு நெடுநாள் மட்டும் ஜீவித்திருக்க வில்லை. ஏதோ அசந்தர்ப்பத்தினுல் அந்த யுத்தத்திற்குச் செல்ல முடியாது மக்கத்திலேயே தங்கிவிட்ட அபூ'லஹப்' (நபிகள் நாயகத்தின் பெரிய தந்தை) :குறைஷியரின் தோல்விச் செய்தியைச் செவியேற்றவுடன் திகில்கொண்டு, அதே விசாரத்தினுல் ஏழாவதுநாள் வாந்திபேதியால் தாக்குண்டு காலகதி யுடைந்து விட்டான். இப்பரம துஷ்டப் பிராணி காலமாயினபோது, அவனுடைய மனைவிமக்களுங்கூடச் சமீபத்திலிருக்க முடியாமற்போய் விட்டதனுல், அவனுடைய நீகிரோவ ('ஹப'ஷீ) அடிமைகளாலேயே மண்ணுள் புதைக்கப் பட்டான். இக் கொடும் பிராணிதான் அபூ' ஜஹ்லுடன் நபிகள் நாயகம் செல்லு மிடங்களுக்கெல்லாம் பின்தொடர்ந்து சென்று, "இவன் புளுகன்! இவன் சொல்லைக் கேளாதீர்கள்! இவன் பொய்யனு யில்லாதிருந்தால், நெருங்கிய பந்துக்களாகிய நாங்களெல்லாம் இவனுடைய உபதேசத்தைக் கேட்கத் துணிந்திருக்க மாட்டோமா?" என்று கூறிப் பொதுமக்களை யெல்லாம் கலைத்துத் துரத்திவிடுவது வழக்கம். இன்னம், இந்த அபூ'லஹப்' நபிகள்பிரான் நடந்து செல்லும் ரஸ்தாக்களில் கூரிய கற்களைக் கொண்டுவந்து பரப்பி வைப்பான். இவனுடைய மனைவியான உம்முஜமீல்— (அபூ'ஸுஃப்யான் சோதரி) என்பாளே காடுகளுக்குச் சென்று முட்களைக் கட்டுக் கட்டாகத் தானே சுமந்து கொண்டுவந்து, நபிகள் திலகம் நடந்து செல்லும் பாதைகளில் விரித்து வைப்பாள். இவ்விரு கணவன் மனைவியரைப் பற்றியே ஆண்டவனும் தன் திருமறையின் 111-ஆவது அத்தியாயத்தில் விளக்கிக் கூறியுள்ளான். எனவே, இவர்களைப்பற்றிய ஏனை விவரங்களை அவ்வத்தியாயத்தின் கீழே கண்டுகொள்வீர்களாக.

ப'த்'ர் யுத்தத்தின் வெற்றிச் செய்தியை முதன் முதலாக மதீனுவிற்குக் கொண்டு வந்தவர் ஃஜைத்'ப்'னு ஹாரி:தா வென்பவரே யாவர். அச்சுபச் செய்தியைச் செவியேற்று விட்டுப் பிறகு சிறிது நேரத்திற்குள் நபிகள் நாயகத்தின் திருக்குமாரியும், 'ஹ'ஜ்ரத் உ':துமான் அவர்களின் பாரியாளுமான பீ'பீ' ருகையா அவர்கள் காலகதியால் தேகவியோகமாய்ப்போய் விட்டார்கள். 'ஹப'ஷாவிலிருந்து தம்முடைய கணவருடன் மதீனுவிற்கு விஜயம் செய்தபோதே அம்மாது சிரோமணி வியாதியுற் றிருந்தார்கள். இவர்கள் இறந்த சமயத்தில் நபிகள் திலகமும் சமீபத்திலில்லாது ப'த்'ரின்

யுத்தகளத்திலேயே தங்கியிருந்து விட்டார்கள். அதன் பின்பு 'ஹ'ஜ்ரத் உ':துமான் (ரலி') அவர்களுக்கு மறுவிவாகம் ஆகவேண்டிய அவசியமும் நேரிட்டுவிட்டது.

அதே சமயத்தில் 'ஹ'ஜ்ரத் உ'மர்(ரலி') அவர்களுடைய திருக்குமாரியான ஹ'ப்ஸாவின் கணவரான குனைஸ் பி'ன் ஹ'ஜாப'ா வென்பவர் ப'த்'ரின் யுத்தத்தின்போது படுகாயமுற்றுப் பிறகு மதீனாவிற்கு வந்து சில தினங்களுக்குள்ளே காலமாய் விட்டார். இந்த ஹ'ப்ஸாவின் வயதும், பீ'பீ' 'பா(த்)திமா (ரலி') அவர்களின் வயதும் சமமாகவே அதுசமயம் இருந்து வந்ததோடு, ஹ'ப்ஸாவிற்கு அதுவரை குழந்தையும் பிறவாம லிருந்தது. எனவே, இவ்விளங் குமாரியான பால்ய விதவையை மறுமணமுடித்துக் கொடுத்துவிட வேண்டு மென்னும் எண்ண மொன்றும் உ'மர் அவர்களுக்குள்ளே ஊசலாடிக்கொண் டிருந்தது, ஆதலின், இப்பெரியார், மனைவியை இழந்திருக்கும் 'ஹ'ஜ்ரத் உ':துமான் அவர்களிடம் நெருங்கித் தம்முடைய குமாரியை மணமுடித்துக் கொள்ளுமாறு வேண்டினார். ஆனால், உ'மர் அவர்களின் புத்திரியான ஹ'ப்ஸாவின் குணவிசேஷமும் தந்தையாரின் குணவிசேஷத்தைப் போன்றே முற்கோபத்துடன் கூடிக் கடுகடுத்த தன்மை வாய்ந்ததாய் இருந்துவந்தது. ஆதலினால், உ':துமான் அவர்கள் அப்பெண்ணை மணமுடித்துக் கொள்ளுவதைப் பற்றிப் பின்னர் யோசனை செய்து முடிவு சொல்வதாகக் கூறிவிட்டார்கள். உடனே உ'மர் அவரை விடுத்து, 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் அவர்களிடம் நெருங்கித் தம் புத்திரியை விவாகம் செய்து கொள்ளுமாறு வேண்டிக்கொண்டார். இதற்கு அப்பெரியார் ஒன்றுமே விடை கொடுக்காது முற்றும் மௌனமாயிருந்துவிட்டார். இதனைக் கண்டு உ'மர்(ரலி') பொறுக்கமுடியாத ஆத்திரத்துடனும் சகிக்கமுடியாத நாணத்துடனும் மனவேதனை யடைந்திருப்பதை நபிகள் திலகம் ஒருவாறு உணர்ந்துகொண்டு, உடனே உ'மர் அவர்களைக் கூப்பிட் டனுப்பினார்கள். அவ்வாறே அவர் விஜயஞ் செய்தபொழுது அன்னவரை நோக்கி நபிகள் நாயகம், "ஏ உ'மர்! உம்முடைய குமாரிக்கும் உ':துமானைப் பார்க்கினும் நல்ல மாப்பிள்ளை பார்ப்பதே சர்வசிலாக்கியமாயிருக்கும்; அவ்வாறே உ':துமானுக்கும் உம்முடைய குமாரியைப் பார்க்கினும் நல்ல பெண்ணைப் பார்ப்பதே சர்வ சிலாக்கியமாகும்," என்று கவர் பொருள் படுமாறு கூறினார்கள். அதனைக் கேட்ட 'ஹ'ஜ்ரத் உ'மர் விஷயம் விளங்காது நின்றதைக் கண்டு, நபிகள் பெருமான் தாங்களே ஹ'ப்ஸாவை மறுமண முடித்துக்கொள்ள விரும்புவதாகவும், உ':துமானுக்குத் தங்கள் திருக்குமாரியான உம்முகுல்:தூமை மணமுடித்து வைக்கப் போவதாகவும் வியாக்கியானம் செய்து காட்டினார்கள்.

எனவே, அவ்விரு விவாகங்களும் ஹிஜ்ரீ 3-ஆவது ஆண்டு ரபீ'உ'ல் அவ்வல் மாதத்தில் நடைபெற லாயின. நம்பெருமானா ரவர்கள் தங்கள்

விருப்பத்தைத் தெரிவித்துக் கொண்டவுடன் 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ரும் உ'மரிடம் சென்று தங்கள் மௌனத்திற்காக மன்னிப்பும் கூறிக்கொண்டார்கள். 'ஹ'ஜ்ரத் உ'மர், அபூ'ப'க்ர் அவர்களிடம் ஹ'ப்ஸாவை மணமுடித்துக்கொள்ளுமாறு வேண்டிக்கொண்டதற்கு முன்னரே நபிகள் நாயகம் தங்களுக் கிருந்துவந்த விருப்பத்தைக் குறிப்பாகத் தம்மிடம் (அபூ'ப'க்ரிடம்) கூறியிருந்ததாகவும், அதனால்தான் தாங்கள் சம்மதம் கொடாது சும்மா இருந்ததோடு, நபிபெருமானின் அபிப்பிராயத்தையும் அவ்வேளையில் வெளியிடுவது அலௌகிகமா யிருக்குமெனக் கண்டே தாங்கள் முற்றும் மௌனம்சாதித்து விட்டதாகவும் கூறினார்கள். அதைக் கேட்டு, உ'மர் அவர்களும் ஆனந்தசாகரத்தில் மூழ்கினார்கள். நபிகள் பெருமான் மகா பொறுமைசாலியாக இருந்து வந்ததனால், அடிக்கடி ஹ'ப்ஸாவின் அகம்பாவத்தால் விளையக்கூடிய குடும்பக் கலகங்களை யெல்லாம் மிக்க நல்ல முறையில் சமாதானப் படுத்தியே சரிப்படுத்திக் கொண்டு சென்றுவிடுவார்கள். இம் மாதரசியால் விளைந்த மற்றொரு பெருங் கலகத்தைப்பற்றி இனியொரு முறை பின்னே நன்கு தெரிந்து கொள்வீர்கள்.

எனவே, மேலே கூறியவாறாக வெல்லாம் அக் :குறைஷியரின் முதற் பிரயத்தனம் முற்றும் பழுதாய் முடிந்துவிட்டதைப் பார்த்துக் கொண்டார்கள். "முதலிலே கோணல் முற்றிலுங் கோணல்" என்னும் பழமொழிக்கிணங்க இனிமேல் அம்மக்கா வாசிகள் தங்களுக்குண்டான அபஜயத்தின் ரோஷத்தால் எவ்வாறு மதீனாவின்மீது மீண்டும் மீண்டும் வலுவிலே படையெடுத்துவரப் போகின்றன ரென்னும் விஷயத்தை இனி அடுத்துவரும் அதிகாரங்களில் மிக விளக்கமாகத் தெரிந்து கொள்வீர்கள். இவ்வளவோடு ஹிஜ்ரி 2-ஆவது ஆண்டின் வைபவ மனைத்தும், 3-ஆவதாண்டின் ஒரு சிறிதும் ஒருவாறு முடிவடைந்து விட்டன வென்னலாம்.

" நீங்கள் (:குறைஷிகள்) நியாயத்தீர்ப்பை வேண்டிநின்றால் அந்நியாயத்தீர்ப்பு மெய்யாகவே உங்களுக்கு வந்துவிட்டது;* இன்னம், நீங்கள் விலகிக் கொள்வீர்களாயின், அஃதுங்களுக்கு நல்லதாயிருக்கும்; மேலும், நீங்கள் (போர்புரிய) மீள்வீர்களாயின், நாமுங்கூட மீண்டுவருவோம்; இன்னம், உங்கள் சேனைகள், அவை எவ்வளவிருப்பினும் உங்களுக்கு ஒருவிதத்தும் பயன்படமாட்டா; மேலும், அல்லா(ஹ்) மூமினானவர்களுடனே இருக்கிறானென்பதை (அறிந்துகொள்ளக் கடவீர்கள்)" என்று ஆண்டவனே தன் திருமறையில் (8 : 19-இல்) வாக்குக் கொடுத்துளான்.

* எனவேதான், எம்பெருமானார் ப'த்'ரின் இறுதியிலே :குறைஷியருள்ளிருந்து மடிந்துபோனவர்களை நோக்கி, "நிச்சயமாக, எங்கள் ரக்ஷகன் எங்களுக்கு வாக்களித்திருந்ததை நாங்கள் மெய்யெனக் கண்டுகொண்டோம்; நீங்களும் உங்கள் ரக்ஷகன் உங்களுக்கு வாக்களித்திருந்ததை உண்மையெனக் கண்டுகொண்டீர்களா?" என்று வினவியிருக்கின்றார்கள்.

மூமின்கள் சிறு தொகுதியினராயிருந்தும், தங்கள் ஈமானின் பலத்தால் பெருந் தொகுதியினரா யிருந்த ஈமானற்ற கா'பிரீன்களை முறியடிப்பார்க ளென்று கூறிய தீர்க்கதர்சனத்தை ஆண்டவன் நிறைவேற்றிக் காண்பிக்க நாடினான்; அவ்வாறே நிறைவேற்றிக் காண்பித்து விட்டான். எனவேதான், ப'த்'ரின் யுத்ததினத்தை எல்லாம்வல்ல இறைவன் "யவ்முல் 'புர்(க்):கான்" (விசேஷணப் பாகுபாட்டிற்குரிய நாள்) என்று அழைக்கிறான்; என்னெனின், அன்று அசத்தியத்தினின்று சத்தியம் வேறு பிரித்துக் காண்பிக்கப்பட்டு விட்டது.

---

# அதிகாரம் — 23

## உ'ஹுதி'ல் நடைபெற்ற யுத்தம்

**" இன்னம், நீங்கள் அதைரிய மடையாதீர்கள்; மேலும், கிலேசப் படாதீர்கள்; இன்னம், நீங்கள் மூமினுன வர்களா யிருப்பின், நீங்களே மேன்மையுற்றவர்களா யிருப் பீர்கள்."— (3 : 138).**

அரப் தேசத்தில் ஒரு கொலையின் காரணமாகப் பலப்பல தலைமுறைகள் மட்டும் யுத்தங்கள் தொடர்ந்து செல்வது வழக்கமா யிருந்துவந்தது; அத்தகைய பழிவாங்கும் போர்களினால் எத்தனையோ வம்சங்கள் நாசமாய் விடும். அபஜய மடைந்தவன் தனக்கு வேண்டிய பழிக்குப் பழியை வாங்கிக் கொள்ளாதவரை இத் தரணியின்மீது உயிருடனிருந்தும் ஒன்றும் புண்ணியமில்லை யென்றே பெரிதும் கருதுவான். எனவே, அ'ம்ர் பி'ன் 'ஹல'ரமீயின் கொலைக்குக்கொலை பழிவாங்க வேண்டுமென்னும் நோக்கத்தி னால்தான் அம்மக்கத்துக் :குறைஷிகள் சென்றவாண்டில் (ஹி. 2-இல்) மதீனாவின்மீது படையெடுத்துச் சென்று, ப'த்'ரின் போர்க்களத்தில் முற்றும் முறியடிக்கப்பட்டுப் படுதோல்வி யுற்றார்களென்னும் விஷயத்தை நீங்கள் இதுபொழுது நன்கு தெரிந்துகொண் டிருக்கின்றீர்கள். ஆனால், அந்த ப'த்'ரின் தோல்வியானது :குறைஷிபருக்கு அறிவுறுத்தாது மீண்டும் அடக்கொணு ஆத்திரத்தையே அதிகம் கொழுந்துவிட் டெரியும்படியாய்த் தூண்டிவிட்டுக் கொண்டிருந்த தென்னலாம். மக்காவிலுள்ள "தாருன் னத்வா"வின் தலைவர்களான அபூ'ஜஹ்லுள்ளிட்ட பன்னிருவர் ப'த்'ரின் போர்க்களத்தில் மடிந்துபோயினர்; அவர்களுடன் மற்றும் 58 :குறைஷி களும் ஆண்டு மண்ணுட்புக்கு மறைந்ததோடு, ஏனை 70 வீரர்களும் சிறை பிடிக்கப்பட்டுப் போய்விட்டார்கள். எனவே, மக்காவிலுள்ள ஒருசில

தனிப்பட்ட குடும்பங்கள் மட்டுமேதாம் அளவுகடந்த துக்கத்துள் ஆழ்ந்து பழிக்குப்பழி வாங்கவேண்டு மென்று எண்ணியதாகக் கருதிவிடற்க; என்னெனின், மக்காவின் கண்ணுள்ள சர்வஜீவன்களுமே அத்தகைய பழி வாங்கும் உரோஷத்துள்ளே ஆழ மூழ்கிக்கிடந்தன.

முஸ்லிம்கள்மீது படையெடுத்துச் செல்வதற்குப் போதிய மூல தனத்தைச் சவதரித்துக்கொள்ள வேண்டுமென்னும் அந்தரங்க நோக்கத் துடனேயே அபூ' ஸுஃப்யான் ப'த்'ரின் யுத்தத்துக்கு முன்னே அதிகமான ஒட்டகக் கூட்டங்களுடன் மக்காவாசிக ளனைவரின் முதல்களையெல்லாம் ஒருங்கு திரட்டிக்கொண்டு சிரியா நாட்டை நோக்கி வர்த்தகத்துக்குச் சென்றிருந்தார் என்னும் விஷயம் உங்களுக்கு முன்னரே தெரியக்கிடக் கின்றது; ஆனால், அந்த வர்த்தகக் :காபி'லா வேறு வழியாக மக்கத்துக்கு விஜயம் செய்துவிட்டதனால், அவர்கள் கொணர்ந்த இலாபமுழுதும் அந்த ப'த்'ரின் யுத்தத்திற்குப் பயன்படாது போய், அப்படியே சேமித்து வைக் கப்பட் டிருந்தது; அவரவர் கொடுத்திருந்த மூலதனம்மட்டும் அவரவருக் கும் திருப்பிக் கொடுக்கப்பட்டு, அவற்றின் உதவிகொண்டு கிடைத்த இலாபத் தொகையெல்லாம், ப'த்'ரின் யுத்தத்தில் மாண்டுபோனவர்களைக் குறித்துச் செய்யப்படவேண்டி யிருந்த அபரகிரியைகளனைத்தும் முடிந்து போயினபின்னர் அவரவர் விகிதாசாரப்படி பங்கிடப்படும் பொருட்டுப் பொது க''ஜானாவில் தனியாக மிகுத்துவைக்கப்பட் டிருந்தன. அப்பொழுது அபூ'ஜஹ்லின் குமாரரான இ'க்ரிமாவும், வேறு சில :குறைஷித் தலைவர் களும், ப'த்'ர் யுத்தத்தில் தங்களுக்கு நெருக்கமான பந்துமித்திரர்களை இழந்துவிட்டிருந்த ஏனை மக்களையெல்லாம் ஒன்றாகத் திரட்டிக்கொண்டு, அந்நகரின் மாபெருந் தலைவராய் அதுபோழ்து விளங்கிய அபூ' ஸுஃப்யா னிடம் தூதுகோஷ்டியாய்ச் சென்றார்கள்.

அவ்வாறு சென்றவர்கள், "மு'ஹம்மத்' நம்முடைய வர்க்கத்தினரை யெல்லாம் கருவறுத்து விட்டாராதலின், அதற்குப் பழிக்குப்பழி வாங்குவ தற்கு இதுதான் தக்க தருணமாய்க் காணப்படாநின்றது. சென்ற வாண்டில் ஷாம்தேச வர்த்தகத்தில் கிடைத்த இலாபத்தொகை முழுதையும் இக் காரியத்திற் கென்றே செலவுசெய்ய வேண்டுமென்று நாங்கள் அபிப் பிராயம் கூறுகின்றோம்," என்று செப்பியதைக் கேட்டு, அபூ' ஸுஃப்யானும் அவர்களுடைய அபிப்பிராயத்தை அவ்வாறே சந்தோஷத்துடன் அங்கீ கரித்துக் கொண்டுவிட்டார்.

ப'த்'ரின் யுத்தகளத்தில் நிகழ்ந்த சம்பவத்திலிருந்து :குறைஷிகள் முஸ்லிம்களின் சைன்ய வைராக்யம் எப்படிப்பட்ட தென்பதை ஒருவாறு உணர்ந்துகொண்டே யிருந்தார்கள். ஆதலின், இப்பொழுது அதற்குத் தக்க எச்சரிக்கையுடன் கூடிய எற்பாட்டுடனே சென்று தகைக்கவேண்டு மென்று அம்முயற்சிக்கு வேண்டிய ஆயத்தங்களை யெல்லாம் முற்கூட்டியே அதிக பலமாகச் செய்துகொள்ளத் துவக்கினார்கள். அரபிகளுடைய

உரோஷத்தைக் கவிகளின் வாயிலாக அதிகம் கிளர்ச்சி செய்துவிடுதல் சாலுமென்பதை நன்குணர்ந்திருந்த அக் :குறைஷியர் அதற்குரிய கவி வாணர்களை யெல்லாம் சுற்றுப்புறங்களுக் கனுப்பி, ஆங்காங்குள்ள மனிதர்களைக் கிளப்பிவிடுமாறு மிகவும் தூண்டிவந்தார்கள்: இவ்வாறு அனுப்பப்பட்ட கவிவாணருள் அ'ம்ரு ஜம்ஹீ, முஸாபி'ஃ' என்பவரும் இருவராவர்; இவ் விருவருள் முதல்வன் செய்ந்நன்றி கொன்ற மாகொடிய துரோகியா யிருந்துவந்தான். இப் புலவன் ப'த்'ர் யுத்தத்தின்போது சிறை செய்யப்பட்டுப் பிறகு நபிகள் நாதரால் உரிமைக்கிரயம் வாங்காது விடுதலை யளிக்கப்பெற் றிருந்தான்; எனினும், இச்செய்ந்நன்றி மறந்த துரோகியும் மற்ற வித்வான்களுடன் சேர்ந்துகொண்டு சுற்றுப் புறங்களுக் கெல்லாம் சென்று, அங்கங்கே காணப்படும் அரபிக ளெல்லாரையும் கவிபாடித் தூண்டிக்கொண் டிருந்தான். இதனால் திஹாமா, கினுனு போன்ற கூட்டத்தினரும் :குறைஷியருடன் இதுசமயம் சேர்ந்து கொண்டு விட்டார்கள்.

யுத்த களங்களுக்குச் செல்லும் போர்வீரர்கள் ஊக்கத்துடனும் உறுதி யுடனும் போர்புரியுமாறு அடிக்கடி தூண்டிக்கொண் டிருப்பதற்காக அக் காலத்துப் பெண்மணிகளும் போர்க்களம் செல்வது பெருவழக்கா யிருந்து வந்தது; மேலும், ஆண்களேபோல அப்பெண்களும் பழிவாங்கும் துர்க் குணத்தில் சிறந்தவர்களாகவே விளங்கி வந்தார்கள். அபூ' ஸு'ப்யான் மனைவியான ஹிந்தென்னும் நீலியே அவர்களுள்ளெல்லாம் தலைசிறந்து மிக விளங்கினாள். இம்மாது சென்ற ப'த்'ரில் தன்னுடைய தந்தையும், சிறிய தந்தையும், சகோதரனும், மைந்தனும் இறந்துபட்டதை நினைந்து நினைந்து 'ஹ'ஜ்ரத் ஹம்'ஜா அவர்களையும், 'ஹ'ஜ்ரத் அ'லீ அவர்களையும் இனி நடக்கப் போகும் யுத்தத்தில் எவ்வாற்றானும் கொன்று வெஞ்சந்தீர்த்துக் கொள்ள வேண்டுமென்னும் ஒரே பிடிவாதத்துடனே மூர்க்க குணத்துடன் மூர்த்தன்யம் வாய்ந்தவளா யிருந்தாள். இன்னம், பெண்கள் யுத்தகளத் துக்கு விஜயம் செய்துவிட்டால், தங்களை எங்கு இழிவாகக் கருதிவிடுவார் களோ வென்று நினைத்து, அவ்வரப் வீரர்கள் தங்களுயிரைத் திரணமாக மதித்துப் போர்புரிவது அந் நாட்டிலொரு பண்டை வழக்கமாயே காணப் பட்டுவந்தது. அஃதல்லாது, மக்காவிலுள்ள வேறு பற்பல மாதர்களும் தங்களுக்குப் பிரியமான மக்கள்களையும் மணவாளர்களையுங்கூட அந்த ப'த்'ரில் பறிகொடுத்திருந்தார்கள். ஆகையால், அப்பெண்மணிகளெல்லாரும் அதிக ஆத்திரத்துடன் இதுபொழுது பழிவாங்கப் புறப்பட்டார்கள்; எனவேதான், அபூ' ஸு'ப்யான் படையில் அநேகம் பெண்கள் கலந்து கொண்டார்கள். அவர்களுள் முக்கியமானவர்கள்: அபூ' ஸு'ப்யான் மனைவி ஹிந்து, இ'க்ரிமாவின் மனைவி-(அபூ' ஜஹ்ல் மருகி) உம்மு 'ஹ(க்)கீம், க'ாலித்'ன் சோதரி 'பா(த்)திமா, :தாயி'ப் தலைவன் மகள் ப'ர்'ஜா, அ'ம்ரு

பி'ன் ஆ'ஸின் மனைவி ரீத்'ா, முஸ்அ'ப்' பி'ன் உ'மைரின் தாய் 'ஹனூஸ் ஆதியோ ராவார்கள்.

ஹிந்துவுக்கு ஹம்'ஜா(ரலி') மீதுள்ள வர்மம் இப்படிப்பட்டதென்பதை நீங்க ளறிவீர்கள். ஆதலின், அவள் அவரை வேலை தீர்ப்பதற் கென்று ஓர் யுக்திசெய்து கொண்டாள்: மக்காவிலுள்ள 'ஜுபை'ரின் அடிமையான வ'ஹ்ஷீ யென்னும் 'ஹப'ஷீ அடிமை யொருவன் இருந்துவந்தான்; அவன் ஆபிரிகா தேசத்து நீகிரோவர்கள் எய்யக்கூடிய ஒருவகை எறியீட்டி எய்வதில் மிக்க நிபுணனாய்க் காணப்பட்டு வந்தான். இவனிடம் ஹிந்தென் பாள் சென்று, இனிநடக்கப்போகும் யுத்தத்தில் ஹம்'ஜாவை இந்த வ'ஹ்ஷீ யென்பான் கொன்று விடுவானாயின், இவனுக்கு 'ஜுபை'ரிடம் சொல்லி உரிமைவாங்கிக் கொடுத்துவிடுவதாக உறுதிகூறி முடித்தாள்.

ப'த்'ரின் யுத்தத்துக்குப் பின்னே நபிகள் திலகத்தின் சிறிய தந்தை யாகிய 'ஹஜ்ரத்அப்'ப'ாஸ்(ரலி') அவர்கள் தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவி விட்டார்கள்; ஆனால், அவர்கள் அக்கணமே மதீனாவிற்குச் செல்லாது, மக்காவின் கண்ணே தாமதித் திருந்தார்கள். ஆதலின், அப் பெரியார் மக்காவில் நடந்துவந்த செய்திகளை யெல்லாம் விவரமாக ஒரு லிகிதத்தில் வரைந்து தம தாள்வயம் நபிகள் நாதரின் திருச் சன்னிதானத்திற்கு அனுப்பிவைத்து விட்டார்; அத் தூதனும் தன் எஜமானன் ஆணைக் கிணங்கி மூன்றுஇரவு மூன்றுபகலில் அப் பன்னிருநாட் பிரயாணத்தையும் அதிக துரிதமாகக் கடந்துசென்று, மதீனாவிலுள்ள நபிகள் திலகத்தின் திருச் சமுகத்தில் அக்கடிதத்தைச் சமர்ப்பித்து வைத்தான். அது தெரிந்து, நம் பெருமானாரும் ஹிஜ்ரீ 3-ஆவது ஆண்டின் ஷவ்வால் மாதம் 5-ஆந் தேதியன்று, அனஸ், மூனிஸ் என்னும் இருவேவுகாரர்களைக் :குறைஷியரின் புறப்பாட்டைப்பற்றி முன்னறிந்து வருமாறு மக்காவை நோக்கி அனுப்பி வைத்தார்கள்; ஆனால், அவ்விருவரும் அதிசீக்கிரமாகத் திரும்பிவந்து, :குறைஷிகள் பெருந்திரளான சேனைகளுடன் மதீனாவிற்குச் சமீபத்தில் அ'ரீஜென்னு மிடத்திற்கு வந்து, அங்குள்ள மேய்ச்சற் றரைகளை யெல்லாம் தங்கள் மிருகங்களைவிட்டு மேய்த்தழித்து வெறுந் திடராக ஆக்கிவிட்டார்க ளென்று செய்தி கூறினார்கள். உடனே நபிகள் பெருமான் 'ஹுப்'ப'ாப்' பி'ன் முன்'திர் என்பவரை அனுப்பி, எதிரியின் சேனை எத்துணை யென்று சரியாகக் கணித்துவருமாறு கட்டளை யிட்டார்கள்.

ப'த்'ரின் யுத்தத்திற்குப் பின்பு கணக்காகப் பன்னிரண்டு மாதங்கள் கழிந்ததன் பின்னால் 3,000 போர் வீரர்களுடன் அந்தக் :குறைஷிகள் மதீனா வின் வடக்கே சுமார் 3 மைல் தூரத்திலுள்ள அ'ரீஜின் பசும்புற் றரைகளில் வந்து பாசறை யிறங்கிப் பாடிவீடு செய்துகொண் டிருந்தார்கள்; அ'ரீஜ் வந்து சேரும்வரை முஸ்லிம்கள் எவருக்குமே ஒருவிஷயமும் தெரியாதவாறு அத்துணை இரகசியமாகவே அங்குவந்து திடீரெனக் குதித்துவிட்டார்கள். அம் மூவாயிர வீரர்களுள் 200 ஆயுதபாணிகளான அசுவ வீரர்களும், 700

முழு ஆயுதபாணிகளான காலாட்களும் செறிந்திருந்தனர். இக்கணக்கை யெல்லாம் ‘ஹுப்’ப்‘ா பென்பவர் சரியாக மதிப்பிட்டுக் கொண்டுவந்து நபிகள் நாயகத்திடம் அறிவித்து வைத்தார். :குறைஷியர் மதீனாவிற்கு மிக நெருக்கத்தில் வந்து அண்மிவிட்ட காரணத்தினால் முஸ்லிம்க ளெல்லாரும் சிறிது அச்சத்துடனே கிலேசமுற்றுத் தங்கள் நகரத்தைப் பாதுகாக்க வேண்டுமே யென்று எண்ணிக் கலங்கினார்கள். அன்றுமுதல் ஸஅ’தி’ப்’னு உ’ப்’ாத’ா, ஸஅ’தி’ப்’னு முஆ’‘து ஆகிய இரு ஸஅ’த்’களும் பூரண ஆயுதபாணிகளாய் நின்று, இராமுழுதும் ஆங்குள்ள மஸ்ஜிதில் காவல் புரியுமாறு நியமிக்கப் பட்டு விட்டார்கள்.

மறுநாட் காலையில் நபிகள் திலகம் (சல்) ச‘ஹாப’ாக்க ளெல்லாரையும் கலந்து பரியாலோசனை புரிந்தார்கள். என்னெனின், இப்படிப்பட்ட பெருங் காரியங்களில் அம்மகான் தங்கள் தோழர்களை யெல்லாம் கலந்தாலோசிப்பதே எப்பொழுதும் பெருவழக்கா யிருந்துவந்தது. :குர்ஆன் ஷரீ‘பின் கட்டளையும் இப்படித்தான் இருக்கிறது. அன்று ஷவ்வால்மீ 10உ யாகிய வெள்ளிக்கிழமையின் காலையில், தாங்கள் அன்றிரவு கண்டிருந்த சிலகனாத் தோற்றங்களின் விவரங்களையும் அத் தோழர்களின்முன் ஊடறுத் தோதினார்கள்: தங்களுடைய வாளாயுதத்தின் முனையில் சிறிதே ஒடிந்து விட்டதேபோல் மனாம் கண்டதாகக் கூறினார்கள்; இதன் தாத்பரியம் நபிகள் நாயகத்தின் அங்கத்திற்குச் சிறிது பங்கம் விளையுமென்று வியாக்கியானம் செய்யப்பட்டது. இன்னம், நபிபெருமானார் தங்கள் மேனி முழுதையும் ஒரு போர்க் கவசத்தைக் கொண்டு போர்த்துக் கொண்டதாகவும் மனாம் கண்டிருந்தார்கள்; இதன் ஊடறுப்பாக முஸ்லிம்க ளெல்லாரும் மதீனாவுக்குள்ளே யிருந்து தற்காத்துக் கொண்டவண்ணமே எதிரிகளைத் தடுத்துத் துரத்தலாமென்று விரிபொருள் செய்தார்கள். மேலும், பசுக்கள் அறுக்கப்படுவதாகவும் ஸ்வப்பனம் கண்டிருந்தார்கள்; இதனால் முஸ்லிம்கள் பலர் கொல்லப்படுவார்க ளென்று தாத்பரியம் கொள்ளப்பட்டது. இவ்வாறான வியாக்கியானங்களைக் கொண்டு முஸ்லிம்கள் மதீனத்திற்குள்ளிருந்தே தங்களைத் தற்காத்துக் கொண்டு, எதிரிகளைத் தடுத்துத் துரத்தலாமென்று நபிகள் நாயகமும் அபிப்பிராயம் கொண்டிருந்தார்கள். மதீனாவாசிகளுக்கும் இவ்வாறு தங்கள் நகரைத் தற்காத்துக் கொள்வதுதான் பண்டைக்கால முதல் பெருவழக்கா யிருந்துவந்தது. எனவே, முஹாஜிரீன்களும், அன்சார் பெரியார்களும், மதீனாவிலுள்ள பெண்டு பிள்ளைக ளெல்லாரையும் அக்கம் பக்கத்திலுள்ள கோட்டைகளுக் கனுப்பிவிட்டு, அந்நகரத்தி லிருந்தவண்ணமே தற்காப்பு யுத்தம் செய்துகொள்ளலா மென்று ஆலோசனை கூறினார்கள். ப’த்’ர் யுத்தத்திற்குப் பின்னே வெளிக்கோலத்தில் மட்டும் தீ’னுல் இஸ்லாத்தைத் தழுவியவனும், உள்ளுக்குள் நயவஞ்சகக் கள்ளனா யிருந்தவனும், வேறு எத்தகைய ஆலோசனைக் கூட்டத்திலும் தன

தபிப்பிராயத்தை வெளியிடா திருந்தவனுமாகிய அ'ப்'து'ல்லா(ஹ்) பி'ன் உபை' பி'ன் ஸலூலும் மீக்கூறிய ஆலோசனையே உசிதமெனக் கூறினுன்.

ஆனுல், ப'த்'ர் யுத்தத்தில் கலந்துகொள்ளா திருந்த வாலிபர்களுக் கெல்லாம் இந்த ஆலோசனை திருப்தி யளிக்கவில்லை. தாங்கள்மட்டும் ப'த்'ர் யுத்தத்தில் கலந்துகொண்டவர்களைப் பார்க்கினும் பேடிகளா யில்லையென்று சொல்லி, எல்லாரும் நகரத்திற்கு வெளியிலே சென்றுதான் விரோதிகளை வெருட்டியடிக்க வேண்டுமென்று வீரவாதம் கூறினுர்கள். மதீனுவிற் கருகில் வந்து தாணையமிட்டு, எதிரிகள் அ'ரீஜிலுள்ள புலங்களை நாசப் படுத்திக்கொண் டிருப்பதைக் கேட்ட பின்னரும் ஆண்மையற்று வாளா ஊருக்குள்ளே பதுங்கிக்கொண் டிருப்பது பௌருஷ மல்லவென்றும் தொடை தட்டிக்கொண் டிருந்தார்கள். வெளியிற் கிளம்பாது உள்ளுக்குள் ஒளிந்திருப்பதைக் கண்டு :குறைஷிகள் முஸ்லிம்களைப் பயங்கொள்ளிக ளென்ன ஏளனம்பண்ணி, இன்னமும் அதிகமான விஷமங்களைச் செய்வார்க ளென்றும் சொன்னுர்கள். பெரும்பான்மையான முஸ்லிம்களாகிய வாலி பர்க ளெல்லாரும் ஒரு சரியான படிப்பினையையே அக் :குறைஷியருக்கு மீட்டும் கற்றுக்கொடுத் தனுப்ப வேண்டு மென்று ஒரே பிடிவாதமாக ஹடவாதம் புரிந்து நின்றதனுல், நபிகள் திலகமும் தங்களுடைய சொந்த அபிப்பிராயத்தைச் சிறிது தளர்த்திக் கொண்டு, அன்று ஜு'முஆ'த் தொழுகைக்குப் பின்னே தங்களில்லம் சென்று ஆயுதங்களைத் தரித்தவர்க ளாய்ப் போர்க்கோலத்தோடு போர்க்களம் நோக்கி வெளிப் புறப்பட்டார் கள். அதனைக்கண்ட ஏனை முஸ்லிம்களெல்லாரும் தாங்கள் வேறுவிதமா யெண்ணியதற்காக மனம்வருந்தி நம் பெருமானுரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்கள். அதைக் கேட்டு நபிகள்பிரான், "நீங்களெல்லீரும் நுங்கள் அபிப்பிராயத்தை மாற்றிக்கொண்ட போதினும் அஃதில்லாமற் போயினும், ஆயுதபாணியாய் வெளியில்வந்த அல்லா(ஹ்)வின் நபியொருவர் மீட்டும் தம்முடைய ஆயுதங்களைக் கழற்றியெறிவது அழகாயிருக்க மாட்டாது," என்று செப்பிவிட்டார்கள்.

இதற் கிடையில் :குறைஷிகள் அ'ரீஜைவிட்டு முந்தைநாள் புதன் கிழமையன்றே— (ஷவ்வால்மீ 9உ வியாழனென்று வேறுசிலர் கூறுவர்) மதீனுவிற்கு மூன்றுமைல் வடக்கிலுள்ள உ'ஹதெ'ன்னும் மலையடிவாரத் தில் வந்து பாசறை செய்துகொண்டார்கள். அங்கே அவர்கள் தங்கள் குதிரைகளுக் கென்று புலங்களில் செழித்துக்கிடந்த பயிர்களை யெல்லாம் வெட்டிக்கொண்டு போய்விட்டார்கள் ; எஞ்சியிருந்த வற்றையும் மேய்ந் தொழிக்குமாறு தங்கள் ஒட்டகங்களை யெல்லாம் அவிழ்த்தும் விட்டு விட்டார்கள். ஆனுல், ஷவ்வால் மாதம் பிறை 10 வெள்ளியன்று மாலையில் ஓராயிரம் படையுடன் நபிகள்பெருமான் (சல்) மதீனுநகரைவிட்டுப் புறப் பட்டார்கள். அச் சேனையில் ஒரு நூற்றுவரே ஆயுதபாணிகளா யிருந் தார்கள் ; இருவரே இதுபொழுதும் குதிரை வீரர்கள். இத் தொகுதியில்

அ'ப்'துல்லா பி'ன் உபை' பி'ன் ஸலூலும் 300 போர் வீரர்களைக் கொண்டு வந்து சேர்த்திருந்தான். அன்றிராப் பொழுது நகரத்திற்கு வெளியில் ஓரிடத்திலே கழிக்கப்பட்டது. சனிக்கிழமை விடிந்ததன்பின்பு அ'ப்'துல்லா பி'ன் உபை' எதிரிகளின் தோற்றத்தைக் கண்டவுடனே மு'ஹம்மத்'நபி(சல்) தன்னுடைய அபிப்பிராயத்தின் பிரகாரம் நடக்கவில்லையென்று குறைகூறி, அந்த யுத்தத்தில் கலந்துகொள்ள முடியாதென்று சாக்குப்போக்குச் சொல்லித் தான் கொணர்ந்திருந்த 300 வீரர்களுடனே மதீனாவிற்குத் திரும்பிப் போய்விட்டான். அதன்பின்னர் 700 முஸ்லிம்களே தங்களைப் பார்க்கினும் நான்குமடங்குக் கதிகமான :குறைஷிப் போர்வீரர்களுடன் அன்று எதிர்த்து நிற்கத் துணிந்தார்கள் ; அல்லா(ஹ்)வின்மீது உறுதி கொண்டுள்ள உண்மை முஸ்லிம்களுக்கு அதைரிய மென்பது ஏது? அன்னவர்கள் கிலேசப்படவு மாட்டார்கள். அவர்களெல்லாம் கைதேர்ந்த போர்வீரர்க ளல்லவென்பது உங்களுக்கே தெரியும். ஆனால், ஆண்டவனது சத்திய சன்மார்க்கத்தின் பொருட்டே தாங்கள் போர்புரியப் போகிறார்க ளென்னும் ஒரே எண்ணந் தான் அவர்களை மேன்மேலும் அதுசமயம் ஊக்கிக்கொண் டிருந்தது. இருந்தால் சத்தியமே ஜயம்! இறந்தால் வீரசுவர்க்கமே நிச்சயம்! என்னும் எண்ணத்தை மட்டும் அம் முஸ்லிம்க ளெல்லாரும் உறுதியாகப் பற்றிக் கொண் டிருந்தார்கள்.

அதன் பின்பு நபிகள்நாயகம் (சல்) தங்கள் படைகளுக்குப் போர்புரிய வேண்டிய முறையைப் பற்றிக் கற்பித்துக் கொடுத்தார்கள். அதுசமயம் சிறுபிராய முஸ்லிம் இளைஞர்க ளெல்லாரும் மதீனாவிற்குத் திரும்பிப் போய் விடுமாறு கட்டளையிடப் பட்டார்கள். ஜை'தி'ப்'னு :தாபி'த், 'பரா பி'ன் ஆ''ஜிப்', அபூ'ஸயீ'த்' :குத்'ரீ, அ'ப்'துல்லா பி'ன் உ'மர், உ'ராப'ா அ'வ்ஸீ முதலிய இளைஞர்கள் ஏராளமாக விஜயஞ் செய்திருந்தார்கள். ஆனால், வீட்டுக்குத் திரும்பிப் போமாறு கட்டளையிடப்பட்ட சிறுவர்களுள் ராபி'ஃ' பி'ன் கு'தை'ஜ் என்னும் இளைஞரும் காணப்பட்டார். அம் முஸ்லிம் இளைஞர்களெல்லா ரிடத்தும் பொதுவாகப் பிராணத்தியாகம் செய்யும் தீரமே மிகைத்திருந்தமையால் ராபி'ஃ' என்பவர் அவ்வாறு திரும்பிப்போக மனமில்லாது தம்முடைய காற் கட்டைவிரர்கள்மீது எக்கிநின்று, தம் முடைய சிரத்தைச் சிறிது நெட்டையாக நீட்டிக்காண்பித்தார். அவருடைய உத்ஸாகத்தைக் கண்டு அச்சிறுவரையும் நபிகள் பெருமான் சேனையில் சேர்த்துக் கொண்டார்கள். அவரைப் பார்க்கினும் வயதில் இளையவராகிய ஸுமரா வென்னும் இளைஞரொருவரும் மதீனாவிற்குத் திரும்புமாறு வேண்டப்பட்டபோது, "நான் ராபி'ஃ' என்பவரைக் காட்டினும் இளையவ னென்று எண்ணுகின்றீர்கள்? நான் அவரைத் தொந்த யுத்தத்தில் தோற்கடித்து விடுவேன். எனவே, சேனையில் சேர்ந்து கொள்ள அவருக்கு அனுமதி கிடைக்கும்போழ்து எனக்கும் அவ்வனுமதி கிடைத்தாக வேண்டும்," என்று பிடிவாதம் செய்துநின்றார். அவ்வாறே அவ்விருவரும்

தேர்ந்த யுத்தத்திற்கு விடப்பட்டபோது, ஸமுரா(ரலி)வே தம்முடைய எதிரியைக் கீழேதள்ளிப் புரட்டிவிட்டார். அதனைக்கண்ட ரஸூல்நாயகம்(சல்) புன்முறுவலுடனே அவ் விருவருக்கும் அனுமதி யளித்துவிட்டார்கள். அப்பொழுதே மற்றொரு வயோதிகர் நபிகள்பெருமான் திருமுன்னேவந்து நின்று, "யாரஸூலல்லா! யான் இதற்கு முன்னமே என் சவக்குழிக் குள்ளே நுழையுந் தறுவாயி லிருக்கின்றேன். இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் யான் அல்லா(ஹ்)வின் திருத்தூதரைத் தற்காக்கும் பொருட்டுப் போர் புரிந்து எனதுயிரைக் கொடுப்பேனாயின், அஃதெனக்கு எத்துணைச் சிறந்த சௌபாக்கியமா யிருக்கும்!" என்று கூறினார். அதனைக்கண்டு, நபிகள் பிரான் அவ் விருத்தாப்பியரையும் தங்கள் படையுடன் சேர்த்துக் கொண்டார்கள். இவ்வாறெல்லாம் பொறுக்கி யெடுக்கப்பட்ட 700 முஸ்லிம்களின் உள்ளத்தின்கண்ணும் உண்மைக்கு உழைக்கப்போகிறோ மென்னும் உறுதியொன்றே மற்றெல்லாப் பலன்களைப் பார்க்கினும் பன்மடங்கில் பிடர்பிடித் துந்திக்கொண் டிருந்தது. ஒருமுறை மரிப்பவர் இனி யொரு முறை இஸ்லாத்திற்காக மரிக்கப்போவ தில்லையெனும் வீரமே அக்குழாத் தினருள் அதுசமயம் மிளிர்ந்து காணப்பட்ட தென்னலாம். எனவேதான், எம்பெருமானார் அவர்களும் இவ்வாறு இயம்பியுள்ளார்கள் :— "எவனது கரத்தினிலே எனதாவி யிருக்கின்றதோ, அவன்மீது ஆணையாக, அல்லா(ஹ்) வின் பாதையிலே யான் கொல்லப்பட்டு, பிறகு உயிரளிக்கப்பெற்று, பின்னரும் மீட்டுங் கொல்லப்பட்டு, பிறகும் உயிரளிக்கப்பெற்று, பின்னரும் மீட்டுங் கொல்லப்பட்டு, பிறகும் உயிர் கொடுக்கப்பெற்று, பின்னரும் மீட்டுங் கொல்லப்பட வேண்டுமென்று விழைகின்றேன்."— (பு'கா'ரீ 56 :7)

அன்று சனிக்கிழமை (கி. பி. 625, ஜனவரிமீ 26உ)காலையில் வைகறைத் தொழுகைக்குப் பின்னே 3,000 வீரதீர எதிரிகளை எதிர்க்கச்செல்லும் அவ் வெழுநூறு ஏழை முஸ்லிம்களையும் அழைத்துக்கொண்டு சென்ற நபிகள் பெருமான் ஒரு கைதேர்ந்த யுத்த தளகர்த்தரேபோல் அம் மலையடிவாரத் தின் தென்சரிவில் ஒரு சௌகரியமான இடத்தைத் தேர்ந்தெடுத்தார்கள் ; ஒன்றும் முளைக்காது உருக்கிவார்த்த கற்பாறைகளா லமைந்துள்ள அந்த உ'ஹுத்'மலையை முதுகின் புறமாக வைத்து, நம்பெருமா னவர்களே (சல்) தங்கள் திருக்கரத்தினால் அணிவகுத்து வைத்தார்கள். இவ்வாறு செய்வது தான் முஸ்லிம்களுக்குப் பின்புறப் பலத்தையளித்து, ஆயுதபாணிகளான அந்தக் :குறைஷியரை எதிர்த்துத் தாக்குதற்கு வேண்டிய முன்புறப் பலத்தையும் கொடுக்குமென்று நன்கு தீர்மானித்துக் கொண்டார்கள். ஆனால், அம்முதுகின் புறமாயுள்ள மலையின் உச்சியில் ஒருசிறு வழிமட்டும் காணப்பட்டுவந்தது ; இவ்வாயிலைக் காத்துக்கொள்ளாவிடின், இதன்வழியே பின்புறமாக எதிரிகள் ஏறிவந்து முஸ்லிம்களின் முதுகின்புறம் தாக்கத் துணிந்துவிடுவர். ஆதலின், அவ்விடத்தில் 50 வில் வீரர்கள் அ'ப்'து'ல்லா பி'ன் 'ஜுபை'ர் என்பவரின் தலைமையின்கீழே நிறுத்திவைக்கப் பட்டார்

கள். அன்று நடைபெறப்போகும் யுத்தத்தின்முடிபு எவருக்கு வெற்றி தோல்வியை விளைப்பதாயிருப்பினும், வேறு என்ன நேர்வதாயிருப்பினும், அவ் வைம்பது வில்வீரர்களும் இறுதிவரை ஒருசிறிதும் தங்களுக்குரிய அக் கணவாயை விட்டு அப்புறம் இப்புறம் அசையக்கூடாதென்று நபிகள் திலகத்தால் மிகக் கடுமையாகக் கட்டளையிடப்பெற்றிருந்தார்கள்; ஆதலின், எதிரிகள் எவரும் அக்கணவாய் வழியே ஏறிவந்து வரக்கூடாத முறையில் அ'ப்'து'ல்லா பி'ன் 'ஜுபை'ரும் அவருடைய 50 வில்வீரர்களும் காத்துக்கொள்ள வேண்டுமல்லது, மற்றப்படி அவர்களொன்றும் யுத்தத்தின் முடிபைக்குறித்துச் சற்றும் சிந்தனைசெய்வது கூடாது. இதுதான் அல்லா(ஹ்)வின் தூதர் செய்துவைத்த மாபெரும் தற்காப்புத் தந்திரமாயிருந்தது,

அதுசமயம் முஹாஜிரீன்களின் கொடியை முஸ்அ'ப்' பி'ன் உ'மைரும், ஔஸ் வர்க்கத்தின் கொடியை உ'ஸை:கலும், க''ஜ்ரஜ் வம்சத்தின் கொடியை ஹுபா'பு'ம் பிடித்துக் கொண்டார்கள். 'ஜுபை'ர் பி'ன் அவ்வாம் என்பவர் சிறுசிறு சேனைத் தொகுதிகளுக்குத் தலைவராய் நியமிக்கப்பட்டார். 'ஹ'ஜ்ரத் ஹம்'ஜா அவர்கள் நிராயுதபாணிகளாயுள்ள முஸ்லிம்களுக்குத் தலைவராய் நியமிக்கப்பட்டிருந்தார்கள்.

:குறைஷிகளும் சென்ற ப'த்'ர் யுத்தத்தில் கற்றுக்கொண்ட அனுபவத்திலிருந்து இந்த யுத்தத்திற்குப் பூரண ஆயுதபாணிகளாகவே வந்திருந்தார்கள்; அவர்களும் தங்கள் சேனைகளை ஒழுங்காக அணிவகுத்து வைத்தார்கள். ப'த்'ர் யுத்தத்தில் மடிந்திருந்த வலீதி'ன் குமாரராகிய க'ாலிதென்பவர் அச் சேனையின் வலப் பாரிசத்திற்குத் தளபதியாகவும், அபூ'ஜஹ்லின் குமாரரான இ'க்ரிமா இடப்பாரிசத்திற்குத் தலைவராகவும், ஸ'ப்வா னிப்'னு உமையா இடையிலுள்ள குதிரை வீரர்களுக்குத் தலைவராகவும் நியமிக்கப்பட்டிருந்தார்கள்; இந்த ஸ'ப்வான் என்பவர் :குறைஷிப் பிரமுகர்களுக்குத் தலைவராவர். அ'ப்'து'ல்லா பி'ன் அபீ'ரபீ'ஆ' என்பவரது தலைமையின்கீழ் வில்வீரர்களும் பலர் அங்கு வைக்கப்பட்டிருந்தார்கள்; தக்க சமயத்தில் உதவுவதற்காக 200 புரவிப் படையும் சேமத்தில் தையாராக ஒதுக்கி வைக்கப்பட்டிருந்தன. :குறைஷிகளின் கொடியைத் தல்'ஹா பிடித்துக்கொண்டிருந்தார்.

இவ்வாறு :குறைஷிகளின் சேனை உ'ஹுத்' மலையின் தெற்குப் பகுதியில் ஓர் அரைவட்ட வடிவான பிறையேபோல் அர்த்தசந்திர வியூகமாக நிறுத்தி வைக்கப்பட்டது. அதன் மத்தியில் அபூ' ஸு'ப்யானும், அவர் கொணர்ந்திருந்த விக்ரஹச் சாமிகளும் இருந்துகொண்டிருந்தார்கள். அதுபொழுது ஹிந்துவும், அம்மாதுடன் மற்றும் 14 பெண்களும் தங்கள் கரத்திலிருந்த வட்டப்பறையை யடித்துக்கொண்டு, ப'த்'ர் யுத்தத்தில் மாண்டுபோனவர்களுக்குப் பழிக்குப்பழி வாங்கவேண்டுமென்பதைப் பற்றிய ஒப்பாரிப் பாட்டுக்களையும் பாடிக்கொண்டு யுத்தகளத்தில் முதன்முதலாக இறங்கினார்கள்;

அவ் வொப்பாரியைக் கேட்டவுடனே :குறைஷிய ரெல்லாருக்கும் அடக் கொணு ஆத்திரம் ஜனித்தது. அதன்பின்பு வேறுசில பாட்டுக்களையும் அம்மாதர்கள் பாடத் தொடங்கினார்கள்: "வீரம்! அ'ப்'து'த்'த்ாரின் புத்திரர்களே, வீரம்! பெண்மணிகளின் பாதுகாவலர்களே, வீரம்! உங்கள் வாட்படையின் கூர்மையைக் கொண்டு நன்றாக வெட்டுங்கள்!" என்பது அவர்கள் பாடிய ஒரு பாட்டின் கருத்தாகும். மற்றொன்றின் கருத்தாவது: "நாங்கள் ஒளிர்கின்ற உதய தாரகையின் உத்தம குமாரிக ளாவோம்! எங்கள் பாதங்கள் மெல்லிய பட்டுமெத்தைகளின் மீதே நடமாடுகின்றன. எதிரிகளின் முன்னே தீரத்துடன் போர்புரிவீர்களாயின், நாங்கள் உங்களை அணைத்து ஆலிங்கனம் செய்வோம்; நீங்கள் புறமுதுகு காட்டுவீர்களாயின், பிறகு நாங்களும் உங்களை உதாசினத்துடனேதான் ஒதுக்கித் தள்ளிவிடு வோம்."

எனவே, இனித்தான் யுத்தம் ஆரம்பமாகின்றது. மேற்கூறிய பெண் மணிகளல்லாமல் அக் :குறைஷியருள் அபூ'ஆ'மிர் என்னும் நாமம் புனைந்த கிறிஸ்தவ சன்னியாசி யொருவரும் காணப்பட்டார்; இவரைச் சாதாரண மாக "அர்ராஹிப்'" என்றும் கூறுவார்கள். இவர் முன்னம் மதீனாவிலே வசித்து வந்த காலத்தில் இவருடைய பக்தி விசுவாசத்திற்காகவும் நல்லொ ழுக்க நற்கருமங்களுக்காகவும் அந்நகர வாசிகளால் நன்கு மதிக்கப்பட்டு வந்திருந்தார். ஆனால், நபிகள் பெருமானது திரு விஜயத்தின்போது அம் மதீனாவாசிக ளெல்லாரும் அப் பெருமானாருக்குச் செய்த மேதை மரியாதை களைக் கண்டு பொறாதவராய் அந்நகரை விட்டு மக்காவிற்கே போய்க் குடியேறி விட்டார். இவரும் இதுபொழுது சேர்ந்துகொண்டு :குறைஷி களுடன் வந்திருப்பதனால் தமது பிரசன்னமே முஹாஜிரீன்களை விட்டு மதீனாவாசிகளைப் பிரித்து நிறுத்திவிடுமென்று பெருமை பேசிக்கொண் டிருந்தார். எனவே, அவர் 150 மனிதர்களுடனே யுத்த மைதானத்தி லிறங்கி, "ஏ மதீனாவாசிகளே! நீங்கள் என்னை அறியீர்களா? நான்தான் அபூ' ஆ'மிர்!" என்று வீரமுழக்கஞ் செய்ததைக் கேட்டு, அன்சாரிய்யீன்க ளெல்லாரும் ஏகோபித்து அன்னவரை நோக்கி, "நன்கறிவோம், துரோகி! நாங்கள் உன்னை நன்கறிவோம்! இந்த யுத்தத்தில் ஆண்டவன் உனது விருப் பத்தை நிறைவேற்றி வையான்!!" என்று கூவினார்கள். அதுபொழுது அந்தச் சன்னியாசியால் ஒன்றும் செய்யமுடியாது போய்க் கீழேகிடந்த ஒரு பருக்கைக் கல்லைமட்டும் எடுத்து எதிரிகள்மீது மிக்க கோபத்துடனே வீசி யெறிந்துவிட்டு, வேகமாகத் திரும்பிவிட்டார்.

அதன்பின்பு :குறைஷியரின் கொடியைப் பிடித்திருந்த அ'ப்'து'த்'த்ார் வம்சத் தல்'ஹா என்பவன் சேனையை விட்டு வெளியில் வந்து, எதிரில் நின்ற முஸ்லிம்களை நோக்கி, "ஏ முஸ்லிம்களே! என்னை நீங்கள் சீக்கிரம் உங்கள் நரகத்திற் கனுப்புகிறீர்களா? அல்லது என் கையால் சீக்கிரம் உங்களை நான் எங்கள் நரகத்திற் கனுப்பட்டுமா? இவ்விரண்டி லொன்றில்

விழைவு வைப்பவர் என்முன் வரட்டும்!" என்று வீரகர்ச்சனை செய்தான். அக்கணமே அ'லீ(ரலி') அவர்கள் தங்கள் அணியை விட்டு வெளியில் வந்து, "யானே அவ்விதம் செய்கிறேன்!" என்று கூறிக்கொண்டே தங்கள் கரத்தி லிருந்த வாளை ஓச்சி ஒரு வீச்சு வீசினார்கள். அவ்வளவேதான் தாமதம்! அப்பொழுதே :தல்'ஹா தரையிற்சாய்ந்து எமலோக மேகினான். (ஷாபாஷ்!) உடனே அவன் மகன் உ':துமான் என்பவன் தகப்பன் பிடித்திருந்த கொடி யைத் தாவியெடுத்துக் கொண்டான். அவன் பின்னே :குறைஷிப் பெண் களும்பலர் வந்துகொண் டிருந்தார்கள். ஆனால், 'ஹஜ்ரத் ஹம்'ஜா (ரலி') அவர்கள் தங்கள் கரத்திலேந்திய வாளாயுதத்தால் அவனுடைய தோள் மீது ஓங்கியொரு வெட்டு வெட்டினார்கள்; அவ்வொரே வெட்டானது உ':துமானின் தோளிலிருந்து இடுப்புவரை இரண்டாகப் பிளந்துவிட்டது. அத்துஷ்டன் சாவும்போதே, "நான் மக்கத்தில் 'ஹஜ்ஜாஜ்களுக்குத் தாகத் துக்குத் தண்ணீர் கொடுப்பவன் மகன்," என்று கூறிக்கொண்டே உயிர் துறந்தான்.

பிறகு இரு சேனைகளுக்கு மிடையில் கைகலந்த தொந்த யுத்தம் ஆரம்பமாகி விட்டது. :குறைஷிகளுக் கெல்லாம் கோபாவேசம் அதிக முண்டாய், அவர்களனைவரும் ஒருமிக்கத் திரண்டு யுத்தத்தி லிறங்கினார்கள். அதுபொழுது 'ஹ'ஜ்ரத் ஹம்'ஜா 'ஹ'ஜ்ரத் அ'லீ(ரலி') அபூ'து'ஜானா ஆகிய மூவரும் அக் :குறைஷியரின் சேனையினுள்ளே, செம்மறிக் கூட்டத்தில் வேங்கை வரிப்புலிகள் பாய்ந்தாங்கு, தாவிப் பாய்ந்தனர்; அவ்வாறு பாய்ந்து, தம்மிருபுறத்தும் வாட்களை யோச்சி எதிரிகளின் சைன்யங்களைச் சாய்த்துக்கொண்டே சென்றார்கள். அம்மூவருள் ஹம்'ஜாவின் வீரத்தைப் பற்றியும், அ'லீயின் தீரத்தைப் பற்றியும் நீங்கள் இதற்குமுன்னே ஒருவாறு தெரிந்துகொண் டிருக்கின்றீர்கள். அவ்வாறே அபூ' து'ஜானாவும் மதீனாவின் கண் ஒரு கீர்த்திவாய்ந்த "பயில்வானாய்" விளங்கிவந்தார்; இவரது பெயர் போன போர்வீரத் தனத்தைப்பற்றி அத்தேச மக்களெல்லாரும் நன்கறிந்தே யிருந்தார்கள். எனவே, இச் சண்டையின் ஆரம்பத்தில் நபிகள்திலகம்(சல்) தங்கள் கரத்தில் ஒரு வாளையேந்தி, "இதன் கடமையைச் செம்மையாய் நிறைவேற்றக் கூடியவர் எவர்?" என்று வினவியபோது, அதற்கென்று பல கரங்கள் உயர்த்தப்பட்டன; ஆனால், அபூ' து'ஜானாவுக்கே அந்தப் பாக்கியம் கிடைக்க லாயிற்று. "இந்தக் கட்கத்தின் கடமை யாதா யிருக் கின்றது?" என்று அந்த அபூ' து'ஜானா வினவியதற்கு நபிகள் நாயகம், "இதன்முனை மழுங்கும்வரை எதிரிகளைக் கொல்வதுதான் இதன் கடமை," என்று கூறினார்கள். இதற்குச் சம்மதித்தே அபூ'து'ஜானாவும் அந்த வாளா யுதத்தைப் பெற்றுக்கொண்டு, அத்தகைய விசேஷ கௌரவம் தமக்குக் கிடைத்தது குறித்துக் கர்வங் கொண்டு, தந் தலைமீது சிவப்பாடை யொன்றைச் சுற்றிக்கொண்டு, தமது சரீரத்தையும் அங்குமிங்கும் ஆட்டி யுசைத்துக்கொண்டு வெளியேறினார். அதனைக் கண்ட நம் பெருமானார்

அவரை நோக்கி, "இத்தகைய நடை அல்லா(ஹ்)வுக்குப் பிரியமுள்ளதாக மாட்டாது! ஆனால், இச் சந்தர்ப்பத்திலே இஃது அவனுக்குப் பிரியமுள்ள தாகவே யிருக்கின்றது!" என்று கூறினார்கள்.

அவ்வாறு புறப்பட்ட அபூ'து'ஜானா எதிரிகளின் சேனையுட் புக்குத் தாம் செல்லுமிடங்களி லெல்லாம் பிணக் குவடுகளைக் குவித்துக்கொண்டே முன்னேறிக்கொண் டிருந்தார். ஒரு சமயம் அபூ' ஸு'ப்யானுடைய மனைவியும், இஸ்லாத்தின்மீது மாகொடிய விரோதங்கொண் டிருந்தவளும், முஆ'வியாவின் பெற்ற தாயுமாகிய, உ'த்ப'ா பி'ன் ரபீ'ஆ'வின் குமாரியாம் ஹிந்தென்பாள் அவருக்கு முன்னே குறுக்கிட்டாள்; அதுபொழுது அபூ'து'ஜானா அவளைக் கொல்லும் பொருட்டுத் தமது கரத்திலிருந்த வாளை அவளுடைய தலைக்குமேலே ஓச்சினார்; ஆனால், நபிகள் திலகத்தின் வாளின் பெருமையைக் கேவலம் ஒரு பெண்பிள்ளை யிடத்திலா காட்டுவ தென்னும் எண்ணம் திடீரெனத் தோன்றி, அவள்தலைமீ தோச்சிய வாளை அப்புறம் அகற்றிக் கொண்டார்.

'ஹ'ஜ்ரத் ஹம்'ஜா அவர்கள் :குறைஷிகளின் சேனையுட் பிரவேசித்து, தங்களிரு புறத்தும் வாளைவீசி அகப்பட்டவரை யெல்லாம் வெட்டிச் சாய்த்துக் கொண்டே எங்கும் பிணக்காடாகவே பண்ணிக்கொண்டு சென்றார்கள். அப்பொழுது ஸ'ப்'பாக் குப்'ஷானீ என்பவனொருவன் இப் போர்வீரர் முன்னே எதிர்ப்பட்டான்; அவனைக் கண்டவுடன், "ஏ ஸ்திரீ களுக்கு ஸுன்னத் செய்கிறவள் மகனே! நீ எங்குச் செல்லுகின்றாய்?" என்று கூறி, ஓங்கியொரு வீச்சு வீசினார்கள்; அக்கணமே அவன் இந்த லோகம்விட்டு எமலோகம் போய்ச் சேர்ந்தான். இதற் கிடையில், ஹிந்து வினால் உரிமை யளிப்பதாக வாக்குக் கொடுக்கப்பட்டிருந்த வ'ஹ்ஷீ யென்னும் அபிஸ்ஸீனிய நாட்டு அடிமையும் ஹம்'ஜா அவர்களையே தேடிக் கொண் டிருந்தான். இந்த வ'ஹ்ஷீயின் எஜமானனான 'ஜுபை'ர் பி'ன் முத்இ'ம் என்பவனும், சென்ற ப'த்'ர் யுத்தத்தின்போது ஹம்'ஜா அவர் களால் கொல்லப்பட்டிருந்த தன்னுடைய சிற்றப்பனுக்காகப் பழிவாங்கும் பொருட்டு, இந்த வ'ஹ்ஷீ யென்பான் அந்த ஹம்'ஜாவை இந்த யுத்தத்தில் கொன்றுவிடக் கூடுமாயின், அவனுக்குத் தானே உரிமையளித்து வாளா விடுவதாக வாக்குறுதி செய்துகொடுத் திருந்தான். அக்கொலை பாதகனே தன்னுடைய மாகொடுஞ் செயலைப்பற்றி இவ்வாறு கூறியிருக்கின்றான் :—

"உ'ஹத்' யுத்தத்தில் நான் ஹம்'ஜா அவர்களையே தேடிக்கொண் டிருந்தேன். அவரை நான் கண்ட பொழுது, தமக் கெதிர்ப்பட்டவர் மீதெல்லாம் அவர் தம்முடைய வாளை வீசிக்கொண்டே சென்றார்; அவருடைய வாள்வீச்சினின்று ஒரு பிராணியும் தப்பிப் பிழைத்ததை நான் பார்க்கவே யில்லை. ஆதலின், அவர்முன்னே நான் குறுக்கிடாது அவரைப் பின்தொடர்ந்தே சென்றுகொண் டிருந்தேன். சிற்சில சமயங்களில் பாறை களின் பின்புறம் நின்று அவர்மீது குறிபார்ப்பேன்; ஒருசமயம் அவ்வாறு

நான் ஒளிந்துகொண் டிருந்த இடத்திற்கு நேராய் அப் பெரியார் வரக் கண்டேன். 'ஹப'ஷா நாட்டுச் சிறு ஈட்டி யெறிவதில் நான் கைதேர்ந் திருந்தேன்; என் குறி எப்பொழுதும் தப்பியதே யில்லை. எனவே, அவர் ஸ'ப்'பாக் குப்'ஷானீ என்பவன் தலைமீது தமது வாளை ஓங்கி வீசியபோது, யானும் என் எறியீட்டியைக் குறிபார்த்து அன்னவரது அடிவயிற்றின் பக்கல் எறிந்தேன்; உடனே அவ் வீட்டியானது அப் பெரியாரின் உந்திக் கமலத்தின் வழியே புகுந்து, முதுகின்புறமாக ஊடுருவிச் சென்றுவிட்டது. அதனைக் கண்டவுடன் அடக்கொணு ஆத்திரத்துடன் அந்த ஹம்'ஜா (ரலி') அவர்கள் என்மீது தாவிப் பாய்ந்தார்கள்; ஆனால், அதற்குள் அவர்களுடைய பலமுழுதும் குன்றிச் சுருட்டி மடக்கிக்கொண்டு தொப்பென்று தரையில் வீழ்ந்தார்கள்; அக்கணமே அவர்களுடைய ஆவியும் பரலோகம் புக்கு விட்டது. பிறகு நான் ஒளிந்துகொண் டிருந்த இடத்திலிருந்து வெளிப்போந்து, என்னுடைய ஈட்டியை உருவிக்கொண்டு யுத்தகளத்தை விட்டு அப்புறப்பட்டு விட்டேன். யான் என் சுயேச்சையை யடைவதற்காகவே யல்லது வேறு காரணத்திற்காக 'ஹ'ஜ்ரத் ஹம்'ஜா அவர்களை என் எறியீட்டியால் கொன்று விடவில்லை." இவ்வாறு நபிகள் திலகத்தின் பெரிய தந்தையான ஹம்'ஜா அவர்களின் பிராணத்தியாகம்— (ஷஹாத'த்) அன்று முடிவடைந்துவிட்ட தென்னலாம்.— (இன்னு லில்லாஹி வ இன்னு இலைஹி ராஜிஊன் !)

ஆயினும், அம் முஸ்லிம்கள் தங்கள் முழுவீரத்துடனே அந்த யுத்தகளத்தில், "இருந்தால் வெற்றி, இறந்தால் வீர சுவர்க்கம்" என்னும் வைராக்கியத்துடன் அதிக தைரியமாகவே போர் புரிந்து வந்தார்கள். இதனால் :குறைஷிகளுக்குள் பெருங்குழப்ப மேற்பட்டு, அவர்களுள்ளே பெரும்பான்மையினர் மாண்டுகொண்டே போயினர். இதனால் அப் படையில் கொடிபிடித்துக்கொண் டிருந்தவரும் ஒருவர்பின் ஒருவராக மடிந்துகொண்டே யிருந்தனர். ஆகவே, அக் :குறைஷியரின் துவஜமானது அடிக்கடி கீழே வீழ்வதும் மேலே எழுவதுமா யிருந்துவந்தது. ஒருசமயம் ஸவாப்' என்பவன் அக் கொடியைத் தாங்கிக்கொண் டிருந்தான்; அவனுடைய கரங்களிரண்டும் முஸ்லிம்களின் வாளாயுதத்தால் வெட்டிவீழ்த்தப்பட்ட போழ்து, அவன் அப்பொழுதும் தன்பா லிருந்துவந்த அந்தப் பதாகையைக் கீழேபோட மனங்கொள்ளாது மார்பால் அணைத்துக்கொண் டிருந்தான்; அவ்வாறும் அப் பதாகையைத் தாங்கிக்கொண் டிருக்க முடியாமற் போய்விட்டதன்பின்னே தான் கீழே படுத்துக்கொண்டு தன் மார்பின்மீது அக்கொடியை நட்டுக்கொண்டான். அதுபொழுது அவன் இறுதிவரை தன்கடமையை நிறைவேற்றி விட்டதாகக் கூறினன். அக் கணமே ஒரு முஸ்லிம் அவனது தலையைக் கொய்து, காரியத்தை முடித்து விட்டார். பிறகு நெடுநேரமட்டும் அக் கொடியானது தரையிலே சாய்ந்து

கிடந்தது. அதுவரை ஏழு :குறைஷியர் மட்டும் அத்துவஜம் தாங்கி நின்றதற்காக ஒருவர்பின் ஒருவராகக் கொல்லப்பட்டொழிந்தார்கள்.

:குறைஷிகளின் கொடியைத் தாங்கியிருந்த மிஷ்ப'ஹ், அல் ஜுலாஸ் என்னுமிரு சகோதரர்களும் அம்புகளால் நன்கு துளைக்கப்பட்டுத் தந் தாயிடம் நகர்ந்துசென்றனர். ஹிந்துவின் தோழியாகிய ஸுலப'ா என்னும் அம்மாது தன்னிரு புத்திரரும் அதிகமான இரத்தவாந்தி யெடுப்பதைப் பார்த்து, எவர் இக்காரியம் செய்தவரென வினவினள். "அல்லா(ஹ்)வின் புத்திரனாகிய ஆஸிம் நான்தான்; இந்த அம்புகளை நீங்கள் பெற்றுக் கொள்ளுங்கள், என்று கூறி, ஒருவன் எங்களை இவ்வாறு செய்து விட்டான்," என்று மொழிந்தார்கள். இதனைக் கேட்டவுடன் அந்த ஸுலப'ா என்பவள், "ஆஸிமின் மண்டை யோட்டை யானொரு திருவோடாகச் செய்து, அதினின்றுமே யான் இனி என் சாராயத்தைப் பருகக் கடவேன்!" என்று சூளுறவு செய்துகொண்டாள்.

பிறகு நெடுநேரம் சென்று உ'ம்ரா பி'ன்த் அல்கமா என்னும் :குறைஷிப்பெண் அக் கொடியை யெடுத்துப் பிடித்துக் கொண்டாள். அதற்கு முன்வரை எங்கும் சிதறிக்கிடந்த :குறைஷிக ளெல்லாரும் அக் கணமே அக்கொடியின் பக்கல்வந்து குழுமிக்கொண்டார்கள். அதுபொழுது அபூ'ஆமிர் என்னும் கா'பிரை அன்னான் மகனாகிய ஹன்'ஜலா என்னும் முஸ்லிம் தந்தந்தையைக் கொல்ல அனுமதி கோரி நின்றார்; ஆனால், நபிகள் பெருமான்(சல்) அதற்கு இடங்கொடுக்க வில்லை. ஆதலின், அந்த ஹன்'ஜலா வென்பவர் அப்பொழுதே அபூ' ஸு'ப்யானை நோக்கித் தமது வாளை ஓச்சினார். அதுபொழுது ஷத்'த்'ாத்' பி'ன் அஸ்வத்' என்னும் :குறைஷி அவ்வாளின் வேகத்தைத் தடுத்து, அப்பொழுதே ஹன்'ஜலாவைக் கொன்றொழித்து விட்டான். ஆயினும், 'ஹ'ம்ஜ்ரத்அ'லீ, அபூ'து'ஜானா ஆகிய இருவரின் இடைவிடா வாள்வீச்சால் :குறைஷிகளின் படைகளெல்லாம் சிதறுண்டு சின்னா பின்னமாக்கப் பட்டுப் போய்விட்டன. மீண்டும் :குறைஷிகளின் கொடி போனவிடம் தெரிய வில்லை. ஆகவே, :குறைஷிச் சேனையின் ஊக்க மெல்லாம் அடியோடு குன்றிப் போய்விட்டது. அதுபோது, பாட்டுக்கள் பாடிப் படைகளுக்கு ஊக்கமளித்து வந்த :குறைஷிப் படையின் நாரியரெல்லாரும் நம்பிக்கை முழுதையும் கைசோர விட்டு, மெல்ல மெல்லப் பின்னிடைந்து கொண்டிருந்தனர்; அதனைக் கண்ட ஆடவத் தலைவர்களும் முற்றும் மனமுடைந்து, அப் பெண்டுகளையே பேடிகளேபோல் பின்பற்றினர். ஆகவே, அன்று அம்முஸ்லிம்களுக்கே முழு வெற்றியும் கிடைத்துவிட்ட தென்னலாம்.

ஆனால், அந்தோ! கைக் கெட்டியது வாய்க் கெட்டா தென்பது இவ் வுலகினில் காணப்படும் ஒரு நெடுங்காலப் பழமொழியே யாமன்றோ? மேற் கூறியவாறு வெற்றி யென்பது முழுதும் முஸ்லிம்களின் கைவயமாய் விட்டதன்பின்னே அப்படைக் களத்திலிருந்த ஒரு சில முஸ்லிம்கள் சிறிதே

தங் கடமையில், அலக்ஷியம் செய்து வழுவியதன் காரணமாக, அற்றைப் பொழுதின் ஜயமுழுதும் அபஜயமாகவே ஆகுமாறு தெய்வ சங்கல்பத்தால் முற்றிலும் மாறிப்போய் விட்டது. எவ்வாறெனின்: முஸ்லிம்களின் பின்புறத்திலுள்ள மலைக்கணவாயில் நிறுத்தப்பட்டிருந்த 50 வில் வீரர்களும் ரஸூலுல்லாவின் மிகவுங் கடுமையான கட்டளையைக் கைவிட்டுச் சிறிதே தமது யதாஸ்தானத்தி னின்று கீழிழிந்தார்கள்; மக்கத்துக் :குறைஷிகள் தோல்வியுற்று ஓட்டம் பிடிக்கிறார்க ளென்பதைக் கண்ணுற்றபோழ்து, அவ்வில் வீரர்களெல்லாரும் தந்தலைவரான அ'ப்'து'ல்லா பி'ன் 'ஜுபை'ரிடம், தாங்களும் முன்னேக்கிச் சென்று எதிரிகள் போர்க்களத்தில் போட்டு விட்டுச்செல்லும் பொருள்களனைத்தையும் வாரியெடுக்கலாமோ வென்று அனுமதி கோரினார்கள். அதற்கு அ'ப்'து'ல்லா பி'ன் 'ஜுபை'ர் அணுத்துணையும் அனுமதி யளிக்காததோடு, அவர்கள் அவ்விடத்தை விட்டு ஓரங்குலமும் முன்பின் நகரக் கூடாதென்று மிகவுங் கடுமையாகக் கட்டளையிட்டார். முஸ்லிம்கள் வெற்றி கொண்டதையும், :குறைஷிகள் தோல்வியுற்றோடுவதையும் உயரத்திலிருந்து நன்கு கவனித்துக் கொண்டிருந்த அவ்வில் வீரர்கள் தாங்களும் மற்ற முஸ்லிம்களுடன் எதிரிகளின் பொருள்களைச் சூறைவாருவதில் ஆர்வங் கொண்டு, நபிகள் திலகத்தின் கண்டிப்பான உத்தரவையும், அ'ப்'து'ல்லாவின் கடுமையான கட்டளையையும் உல்லங்கனம் செய்து விட்டுக் கீழேயுள்ள யுத்த மைதானத்தில் வந்து கலந்துகொண்டார்கள். இவ் விஷயத்தைக் குறித்துத்தான் ஆண்டவனும் தன் திருமறையின் 3 : 151 முதலிய ஆயாத்களில் விவரமாகக் கூறியுள்ளான். ஆனால், அவ் யுத்தகளத்தில் மகா நுட்ப புத்தி படைத்திருந்த க'ாலித்' பி'ன் வலீ தென்பார் அம் முஸ்லிம் வில்வீரர்க ளிழைத்துவிட்ட இப்பெருந் தவற்றை நுணுகி யுணர்ந்துகொண்டு விட்டார். அக்கணமே அவர் தம்முடைய 200 துரக வீரர்களுடன் அம்மலையின் பின்புறமாக ஏறி வந்து, அக்கணவாயில் நின்றுகொண்டிருந்த அ'ப்'து'ல்லா பி'ன் 'ஜுபை'ரையும், மற்றுஞ் சிலரையும் மிக வேகமாகத் தாக்கினார். ஆனால், அ'ப்'து'ல்லாவும், அவரைச் சார்ந்த பதின்மரும் எத்துணை வீர தீரத்துடன் தடுத்தும், ஒன்றுஞ் செய்ய முடியாதுபோய், இறுதியிலே எல்லாப் பதினொருவரும் இறந்தே போயினர். அப்பாலுடனே அவ் வழியானது சர்வ தாராளமாகத் திறக்கப்பட்டு விட்டது. அக்கணவாய் வழியே அவர்கள் உள் நுழைந்திறங்கி, யுத்த களத்தில் சூறைப் பண்டம் வாரிக்கொண் டிருந்த முஸ்லிம்களைப் பின்புறமாய்த் தாக்கினார்கள். அவ்வாறு க'ாலித்' பி'ன் வலீத்' ஆங்கு வந்து தாக்குவதைக் கண்டவுடனே, புறமுதுகு காட்டி மக்காவின் பக்கல் ஓடிக்கொண்டிருந்த ஏனைக் :குறைஷியரும் திரும்பி வந்து முன்புறமாய்த் தாக்கினார்கள். எனவே, அவ்விரு கிடுக்கிக்குள் அகப்பட்ட ஒரு சில முஸ்லிம்கள், பாக்குவெட்டியி லகப்பட்ட பாக்கேபோல், திடீரென்று முன்னும் பின்னும் ஏககாலத்தில் தாக்கப்பட்ட கலக்கத்தினால்

இரு கக்ஷிச் சேனைகளும் கைகலந்துகொண்ட குழப்பத்தில் ஒருவரும் தம் மனிதரென்றும் பிற மனிதரென்றும் வேறுபாடு தெரிந்துகொள்ள முடியாமற் போய்விட்டார். மேலும், அம் முஸ்லிம்கள் தங்கள் அணிகளை யெல்லாம் விட்டுச் சின்னாபின்னமாய்க் கலைந்து நின்றதனால், அவர்களுக் கொன்றும் புத்தி நிதானமா யில்லாது தடுமாறிப் போய்விட்டது.

இதுபொழுதுதான் உ'ம்ரா பி'ன்த் அல்கமா என்னும் மாது நெடுநேரமாய்க் கீழே கிடந்த :குறைஷிகளின் கொடியை எடுத்துப் பிடித்துக் கொண்டா ளென்று வேறு சிலர் கூறுகின்றார்கள். நபிகள் திலகம் (சல்) யுத்தகால ஆரம்பத்தில் ராணுவ தந்திரத்திற்குரிய ஒருவகை நுண்ணிய சூழ்ச்சியை மட்டும் செய்திராமற் போயிருப்பார்க ளாயின், அன்று அம் முஸ்லிம்களின் கதி அதோகதியாகத்தான் போய் முடிந்துவிட் டிருக்குமென்பதில் சிறிதும் சந்தேகம் விளைதற் கில்லை. அப் பெருமானார் ஆதியில் தங்கள் அணிகளை வகுக்கத் தொடங்கிய பொழுது, மிகக்கூரிய முன்னெச்சரிக்கை யுடனே ஒருவகைப் பந்தோபஸ்தான காரியத்தைச் செய்திருந்தார்க ளென்பதை நீங்களறிவீர்கள். ஒருகால் யுத்தத்தின் முடிபானது முஸ்லிம்களுக்கு விரோதமாய்ப் போய்விடக் கூடுமாயின், அதுசமயம் தற்காப்புக்கு ஆதரவா யிருக்கும் பொருட்டே உ'ஹத்' மலையைத் தங்களுக்குப் பின்புறமாக வைத்து அவ்வணிகளை அதன் தென்பாரிசத்தில் :குறைஷிப்படையை எதிர்த்து நிறுத்தினார்கள்.

முதலில் நடைபெற்ற யுத்தத்தில் முதுகொடிய முறியடிக்கப்பட்ட :குறைஷிகள் மக்காவை நோக்கி ஓட்டம் பிடித்தபோது, அவர்களைத் துரத்திக்கொண்டு முஸ்லிம் படைகள் பின் சென்றக்கால், நபிகள் பெருமானார் (சல்) 'தல்'ஹாவுடனும் ஸஅ'து'டனும் பின்புறமாய் ஓரிடத்தில் தனித்திருந்தார்கள். ஆனால், க'ாலித்' அம் மலைக்கணவாய் வழியே ஏறிப் பின்புறமாய் வந்து அங்கு நின்ற முஸ்லிம்களைத் தாக்கியபோது, அவர்களுக் கேற்பட்டுவிட்ட அபாயத்தை நபிகளாதர் நன்குணர்ந்து கொண்டு விட்டார்கள். ஆதலின், அதுசமயம் அப் பெருமானார் தங்களுக்குத் தோன்றிய இரண்டி லொன்றான ஒரே காரியத்தைத்தான் செய்து முடிக்க வேண்டியவர்களா யிருந்தார்கள்: அக்கணமே அங்கு மலையடிவாரத்தில் எதிரிகள் வயம் அகப்பட்டுக் கொண்ட முஸ்லிம் வீரர்களை யெல்லாம் அவரவரின் தலைவிதிக்கே அவரவரும் ஆளாகட்டு மென்று ஆண்டு அவ்வண்ணமே விட்டுவிட்டுத் தங்கள் க்ஷேமத்தை மட்டும் கருதிக்கொண்டு நபிகள் பெருமான் மதீனாவை நோக்கி ஓட்டம் பிடித்து விடுவது ஒரு காரியமாகும்; அல்லது, மற்றொரு காரியம், தங்களுடைய உயிர்க்கிறுதி வருவதா யிருப்பினும், அதனை ஒருசிறிதும் பொருட் படுத்தாது, தாங்களே முன் வந்து நின்று தங்கள் சிஷ்யர்களை அவ்வாபத்தினின்று தப்புவிக்கத் துணிதலாகும். ஆனால், அல்லா(ஹ்)வின் திருநபியாகிய எம்பிரான் அவர்கள் அம் முஸ்லிம்களை அவ்வாறு அவ்வபாயத்தின் கண்ணே பொறியுள் சிக்கவிட்டு

விட்டுத் தாங்கள் மட்டும் தனியே தப்பிக்கொண் டோடத் துணிவார்களென்று நினைக்கின்றீர்கள்? இல்லை! இல்லை! அஃதொருபோது மில்லை! ஹிட்லர்கள் அவ்வாறு பயங்கொள்ளித் தனமாய்த் தங்கள் மக்களைவிட்டுத் தப்பியோடி விடுவார்கள்; வில்லியம் கைஸர்கள் அவ்வாறு தப்பி, அயல் நாடுசென் றொளிந்து கொள்வார்கள். ஆயின், அல்லா(ஹ்)வின் மெய்யான திருத்தூதர் அவ்வாறு செய்ய ஒருப்படார்; ஒருப்படார்; ஒருப்படார்.

---

# அதிகாரம் — 24

## உ'ஹுத்' யுத்தத் தொடர்

**"இன்னம், நீங்கள் விழைந்ததை அல்லா(ஹ்) உங்களுக்குக் காண்பித்த பின்னால், நீங்கள் கோழைகளாய்ப் போய், அவ் விஷயத்தில் பிணக்கமுங் கொண்டு, மாறு செய்து விட்டக்கால் வரை, அவனது ஆணை கொண்டு நீங்கள் அவர்களை ஸம்ஹரித்த பொழுது, திண்ணமாகவே, அல்லா(ஹ்) தன் வாக்குறுதியை உங்களுக்கு உண்மையாக்கி வைத்தான்; உங்களுள்ளே உலகத்தை விழைந்தவர்களும் ஒருசிலர் இருந்தனர்; உங்களுள் இறுதி வாழ்க்கையை விழைந்தவர்களும் ஒருசிலர் இருந்தனர்; அப்பால் அல்லா(ஹ்) உங்களைச் சோதித்தறிவான் வேண்டி அவர்களை விட்டு உங்களைத் திருப்பிவிட்டான்; இன்னம், திண்ணமாக, அன்னவன் உங்களை மன்னித்து விட்டான்; மேலும், அல்லா(ஹ்) மூமினானவர்கள்மீது கருணைமிக்கவனாக இருக்கிறான்."— (3: 151)**

எனவே, எம்பிரான் (சல்) அவர்கள், தங்கள் சிஷ்யர்க ளனைவரும் எதிரிகளுடைய கத்தரிக்கோலின் நடுவிலே சிக்கிக்கொண்டு கண்டதுண்டமாகக் கழுத்தறுபட்டுப் போகக்கூடிய அவ் விக்கட்டான பயங்கர சந்தர்ப்பத்தைக் கண்டவுடன், "என்பக்கல் ஓடிவாருங்கள்! நானே அல்லா(ஹ்)வின் திரு நபி!" என்று உரக்கக் கூவினார்கள். இவ்வாறு நபிகள்பெருமான் ஓங்கிக் கூவியதைக் கேட்ட எல்லா முஸ்லிம்களும் எதிரிகளின் தாக்குதல்களைத் தடுத்துக் கொண்டு, நம்பெருமானா ரவர்களிடம் நெருங்கி யோடினார்கள். ஆனால், அம் முஸ்லிம்கள் அக் கூப்பீட்டைக் கேட்டோடியபோது, நபிகளாதர் எவ்விடத்திலே தங்கி யிருக்கிறார்க ளென்னும் விஷயத்தை அவ் வெதிரிகளும் நன்குணர்ந்து கொண்டு விட்டார்கள். அப் பெருமானாரே

இப்படிப்பட்ட எல்லாச் சங்கடங்களுக்கும் மூல்காரணமாய் விளங்கி வந்தார்க ளென்னும் காரணத்தினுலேயே இத்தகைய யுத்தங்க ளெல்லாம் கிளப்பப்பட்டு வருகின்றனவென்று ஆத்திரம் பொங்கியவர்களாய் வேக மாக ஓடிவந்தார்கள். எனவே, எம்பெருமானுரை இவ்வுலகத்தி லில்லாது அடியோடு ஒழித்துவிட வேண்டுமென்பதேதான் அவ் வெதிரிகளின் ஒரே குறிப்பிட்ட நோக்கமாய்க் காணப்பட்டு வந்தது.

ஆதலின், அம் முஸ்லிம்கள் தங்கள் ஞானுசிரியரை நோக்கி ஓடியதைக் கண்டு, அவர்கள் பின்னே அக் :குறைஷியரும் தொடர்ந் தோடினுர்கள். ஆனுல், அந்த ச'ஹாப'ாக்க ளெல்லாரும் தங்களுயிர் போவதா யிருப்பினும், தங்களுடைய குருமஹானை மட்டும் எதிரிகளிடம், யூதாஸ் காரியோத் தன் ஞானுசிரியரை எஹூதிகளிடம் காட்டிக் கொடுத்ததே போல், காட்டிக் கொடுத்துவிட மாட்டார்கள். ஆயினும், அவ்விடத்தில் சண்டையென்பது மிகவுங் கொடுமையாய் நடாத்தப்பட்டு வந்தது. அதுசமயம் முஸ்லிம்களின் கொடியைப் பிடித்துக்கொண்டிருந்த முஸ்அ'ப்' பி'ன் உ'மைர் என்பவர் இப்'னு குமையாவென்னும் :குறைஷி வீரனுல் வெட்டப்பட்டுப் போயினுர்; அன்னவர் சற்றேறக்குறைய நபிகள்நாதரையே வெளித்தோற்றத்தில் ஒத் திருந்த காரணத்தினுல், உடனே நம்பெருமானு ரவர்களே கொல்லப்பட்டுப் போய்விட்டார்க ளென்னும் பெருங்கூச்ச லொன்று அவ்விடத்தில் அக் :குறைஷியரால் கிளப்பப்பட்டு விட்டது. இதனைக் கேட்டவுடனே முஸ்லிம் களின் சேனையில் எல்லாப் பக்கத்திலும் பெருங்குழப்பமே உண்டாய் விட்டது. முன்னரே அளவுகடந்த கலக்கத்தை யடைந்திருந்த அந்த ச'ஹாப'ாக்களின் மத்தியில் இப்பொய் வதந்தியானது இன்னமும் கடுமை யான குழப்பத்தையே தோற்றுவித்துவிட்ட தென்னலாம். பெரும்பெரும் வீரர்களின் கால்க ளெல்லாம் நடுக்கங்கொள்ள ஆரம்பித்து விட்டன. எனவே, முஸ்லிம்கள் இன்னுரென்றும், :குறைஷிகள் இன்னுரென்றும் அப் பெருங் குழப்பத்தில் ஒருசிறிதும் கண்டுகொள்ள முடியாமற் போய்விட்ட மையால், முஸ்லிம்களே தங்கள் சகோதரர்கள்மீது தாவிவிழ்ந்து வாட்களை வீசிக் கொண்டு கிடந்தனர். இப்படிப்பட்ட குழப்பத்தி லேதான் ஹு'ஜ'பா வென்னும் மூமினுனவரின் தந்தையான யமான் என்னும் முஸ்லிமை வேறுபல முஸ்லிம்களே வெட்டத் துரத்தினர்; [இவ்விஷயம் இனிப் பின்னே விவரிக்கப்படும்.]

ஆனுல், ஆண்டவனருளால் அதுசமயம் உயிர் தப்பிநின்ற நபிகள் திலகம் தங்களைச் சுற்றிப் பார்த்தபோது, அவ்விடத்தில் 'ஹ'ஜ்ரத் அ'லீ, 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர், 'ஹ'ஜ்ரத்களான ஸஅ'தி'ப்'னு அபீ' வ:க்:காஸ், 'ஜு'பை'ரிப்'னு அவ்வாம், அபூ' து'ஜானு, 'தல்'ஹா முதலிய பதினெரு ச'ஹாப'ாக்களே காணப்பட்டார்கள். ஆங்கு நிகழ்ந்த குழப்பத்திலும் பெருங் கலக்கத்திலும் மீட்டும் பற்பல வீரர்களும் பயில்வான்களும் தத்தம் ஊக்கத்தை அடியோ டிழந்துவிட்டார்கள்; மற்றும் பற்பல போர்வீரர்க

ளெல்லாம் யுத்தம்புரிந்து அங்கங்கே தரையில் சாய்ந்து கிடந்தார்கள். இதனுல் நபிகள் பெருமானைக் கவனிப்பவர் அதுசமயம் ஆங்கு ஒருவரு மில்லாது போயினர். 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ரும், உ'மருங்கூடப் பெருங்காயம் பட்டுவிட்டனர். அ'லீ(ரலி') மட்டும் தங்கள் கரத்திலிருந்த வாளை ஓங்கி வீசிக்கொண்டே, எதிரிகளின் படையினுள் மிகவேகமாகப் பிரவேசித்தார் கள். 'ஹ'ஜ்ரத் அனஸ் அவர்களின் சிறிய தந்தையாகிய இப்'னு நல்'ர் தாங்கள் செய்து கொண்டிருந்த சண்டையிலிருந்து வெளிவந்து நோக்கிய போது, ஆங்கு உ'மர் வெறுமனே நின்றுகொண் டிருந்ததைக் கண்டார்கள்; உடனே 'ஹ'ஜ்ரத் உ'மரை நோக்கி, "தாங்கள் ஆயுதத்தைக் கீழே யெறிந்து விட்டு இங்கே என்ன செய்துகொண் டிருக்கிறீர்கள்?" என்று வினவிய தைக் கேட்டு, அதற்கு முன்னே நம்பிக்கை யிழந்துபோயிருந்த உ'மர் (ரலி') அவர்கள், "இனிச் சண்டைசெய்து என்ன ஆகப்போகிறது! நபிகள் பெரு மானுர் உயிர் துறந்து விட்டார்களே! யாம் இனி யாதுசெய்தல் கூடும்!" என்றுமறுமொழி கூறினுர்கள். அத் துக்ககரமான செய்தியைக் கேட்டவு டன் இப்'னு நல்'ர், "நபிகள் திலகத்துக்குப் பின்னே நாம் உயிருடனிருந்து இனி என்னசெய்யப் போகிருேம்!" என்று சொல்லிக்கொண்டே, :குறைஷி களின் சேனையுட் புக்குத் தம்மாலியன்றவரை சண்டைசெய்து, இறுதியிலே உயிர்துறந்து போய்விட்டார். சண்டை முடிந்தபின்பு அவரது சரீரத்தைச் சோதித்த போது, வாட்களினுலும், ஈட்டிகளினுலும், அம்புகளினுலும் வெட்டப்பட்டும் குத்தப்பட்டு மிருந்த காயங்கள் எண்பதுக்கு மேலாகவே காணப் பட்டனவாம். எனவே, அப் பெரியாரை அடையாளம் கண்டு பிடிப்பதுகூட ஒருவராலும் நெடுநேரமட்டும் முடியாத காரியமாய்ப் போய் விட்டதாம்; ஆனுல், அன்னுரின் சகோதரி வந்து, தந்தமையனுடைய விரல் களின் அடையாளத்தைக் கொண்டே அவரை இன்னுரென்று கண்டு பிடித்தார்.

ஆனுல், முஸ்லிம் வீரர்கள் எதிரிகளுடனே சண்டை செய்துகொண் டிருந்தபோதும் அவர்களுடைய பார்வையெல்லாம் பெருமானு ரவர்களைத் தேடுவதிலேயே சென்றுகொண் டிருந்தது. அக்கொடூர மகா யுத்தத்தில் அ'லீ(ரலி') அவர்களுக்கும் காயம் பட்டுவிட்டது. அவ்வாறு பெருங்காயத் துடனே அங்குப் பலரும் நபிகள்நாதரைத் தேடிக்கொண் டிருந்தபோது, கஅ'ப்' இப்'னு மாலிக் என்பவரே இறுதியில் இரஸூலுல்லா அவர்களை அடையாளங் கண்டுபிடித்தார். நபிகள் திலகம் தலைக்கவசம் அணிந்திருந்த தனுல், அவர்களுடைய நேத்திரங்க ளிரண்டுமட்டுமே அத் தலைச்சீராவி னுள்ள இரண்டு துவாரங்களின் வழியே காணப்பட்டமையால், அவற்றின் வழியே நபி பெருமானை அடையாளங் கண்டுபிடித்து, உடனே, "முஸ்லிம் காள்! ஓடிவாருங்கள்! நபிகள் திலகம் இங்கே யிருக்கின்ருர்கள்!" என்று மாபெருங் கூச்சலிட்டார். அவ்வளவே தான்! அதனைக் கேட்டவுடனே முஸ்லிம் வீரர்களெல்லாரும் ஆங்குத் திரண்டோடினுர்கள். முஸ்லிம்கள்

ஓடுவதைக் கண்டு, :குறைஷிகளும் தங்கள் மனிதர்களை அப்பக்கம் நோக்கியே திருப்பினார்கள். அந்தக் :குறைஷிகள் கழுகின் கூட்டங்களே போல ஆங்குவந்து குழுமுவதைக் கண்ட அ'லீ(ரலி') அவர்கள் தங்கள் கரத்திலிருந்த "'துல்'பக்'க'ார்" என்னும் 'மின்னுடன் பிறந்த வாளின்' வீச்சைக் கண்டவுடனே, அவ்விருண்ட மேகங்களெல்லாம் சின்னாபின்ன மாக்கப்பட்டு விட்டன. ஆயினும், அந்தக் கு'ப்'பார்கள் மீண்டும் மீண்டும் ஆங்குவந்து சூழ்ந்துகொண்டே யிருந்தார்கள். அதுசமயம் நபிகள் பெருமான், "எனக்காக இதுசமயம் உயிர் கொடுப்பவர் எவர்?" என்று வினவியதைக் கேட்டு, 'ஜியாத்' பி'ன் ஸகன் என்னும் வீரர் ஐந்து அன்சார்களுடனே முன்வந்து, தாம் அக் கைங்கரியத்தைச் செய்து முடிப்பதாக வாக்குறுதி கூறினார். உடனே அவரும் அவருடன் சென்ற ஐவரும் நம்பெருமானைப் பாதுகாக்கும்பொருட்டுச் செய்தசண்டையில் ஒருவர்பின் னொருவராக எல்லாரும் உயிர்துறந்தே போயினர். அதுபொழுது நபிகள் திலகம் 'ஜியாதெ'ன்பவரின் சரீரத்தைப் பார்க்க விரும்பியதைக் கேட்டுச் சில தோழர்கள் சென்று, அவரைக் குற்றுயிருடன் நபிகள்நாயகத்தின் திருமுன்னே கொண்டு வந்து சேர்த்தார்கள். அதுபொழுது அவர் தமது வதனத்தை நபிபெருமானவர்களின் பாதார விந்தத்தின்மீது தொடுமாறு படவைத்தார்; அக் கணமே அந்தத் தியாகியின் உயிரும் வீரசுவர்க்கம் புக்குவிட்டது.—(இன்னாலில்லாஹி......ராஜிஊன்'ன்)

அப்பொழுது அச் சேனையிலிருந்த ஒரு முஸ்லிம் சண்டைசெய்வதை விட்டுப் பேரீச்சம் பழத்தைத் தின்றுகொண் டிருந்தார். அவரை நோக்கி ரஸூலுல்லா அவர்கள் எதிரிகளுடன் சண்டை செய்யுமாறு ஏவினார்கள். அதைக் கேட்டு, அம் முஸ்லிம், "இந்த யுத்தத்தில் யான் சண்டைசெய்திறந்தால், எனக்கென்ன பிரதிபலன் கிடைக்கும்?" என்று வினவினார். உடனே நபிகள் திலகம், "உமக்கு வீரசுவர்க்கம் சித்திக்கும்!" என்று விடை கொடுத்தார்கள். அப்பொழுதே அன்னவர் எதிரிகளின் சேனையுட் பாய்ந்து தம்மாலானவரை எதிரிகளைக் கொன்று, தாமும் அன்னவரால் தாக்குண்டு ஒருசில விநாடிகளுக்குள் அவ்வாறே வீரசுவர்க்கம் புக்கு மறைந்தார். அதுபோது :குறைஷியரின் வீரர்களுள் கீர்த்திவாய்ந்திருந்த அ'ப்'து'ல்லா பி'ன் குமையா என்னும் தலைவன் மீண்டும் முஸ்லிம் வீரர்களை ஒருவர்பின் னொருவராக வெட்டித் தள்ளிக்கொண்டு வந்து, பெருமானாரவர்களைச் சமீபித்துத் தன் கரத்திலிருந்த வாளாயுதத்தை அப் பெருமானின் சிரத்தின்மீது ஓங்கியொரு வெட்டு வெட்டினான். அக்கணமே அப் பெருமானின் தலைச்சீரா உடைந்து, அம் மூடியிலிருந்த இரண்டு வளையங்கள் நபிபெருமானின் வதனத்துள் ஆழப் பதிந்துவிட்டன. அதே சமயத்தில் அபீ' வ:க்:காஸ் என்னும் :குறைஷி யொருவனால் வீசி யெறியப்பட்ட கவணிலிருந்துவந்த கல்லொன்றும் நபிகள்திலகத்தின் உதட்டைக் கிழித்து, உள்ளிருந்த ஒரு தந்தத்தையும் உதிரும்படி செய்துவிட்டது. உடனே நபிகள்

பெருமான் அதுபொழுது பட்ட காயங்களின் சோகத்தாலும், இருப்புக் கவசத்தின் பளுவாலும் ஆங்கிருந்த ஒரு பள்ளத்துள்ளே சாய்ந்து வீழ்ந்து விட்டார்கள்.

"ஈத லாதொரு கவண்கல்கீழ் வாய்புறத் திலங்கும்
சோதி மூரலும் சிதைத்திடத் தைத்தது தொகுத்த
பூத லத்தினில் உணர்வுடன் சாய்ந்தனர் பொருவா
மாத ரத்தொடும் மதியொடும் பேசிய வள்ளல்,"—

என்று உ'மறுப் புலவரும் உரைத்துப் போந்துள்ளார்.*

அப்பொழுதே நபி பெருமான்மீது குறிவைத்து நானுபக்கங்களிலிருந் தும் வாட்களும் மிகவீசப்பட்டு, அம்புகளும் அதிகம் எய்யப்பட்டு வந்தன. அக்கணமே அங்கிருந்த ச'ஹாப'ாக்க ளெல்லாரும் தங்கள் ஞானுசிரியரைச் சூழ்ந்து, சுவர்க்கத்தின் சாவியை வைத்திருந்த பேதுரு வென்னும் பிரதம சிஷ்யன், "யான் அவனை அறிய மாட்டேன்," என்று முக்காலும் மூன்று முறை மறுத்துக் கூறியதேபோல் மறுத்துவிடாது, மானிடக் கோட்டை யொன்றையே நிர்மாணஞ் செய்து செறிந்து கொண்டார்கள். ஆனாலும், எதிரிகளும் அக்கூட்டத்தின் மீதே அதிகம் தாவி வீழ்ந்தார்கள். ஆயினும், அச் சிஷ்யர்களால் நிர்மாணிக்கப்பட்டிருந்த அம் மனிதக் கோட்டையானது எதிரிகளின் தாக்குதல்களுக்குக்குச் சற்றும் இடுக்குக் கொடுக்காததாகவே இறுகப் பிணிக்கப்பட் டிருந்தது. அவர்க ளெல்லாரும் தங்கள் முதுகின் புறத்தில் எதிரிகள் தாக்குவதால் தீங்கொன்றும், அச்சமொன்றும் விளையா தெனக் கண்டு, தங்கள் முன்புறத்தை நபிகள் நாயகத்தின் பக்கல் கவிழ்த் துக்கொண்டு, சூழ்ந்து நின்றார்கள். அபூ' து'ஜானு வென்னும் மாபெரும் வீரர் நபிகள் பெருமான்மீது குனிந்துகொண்டு, தமது மார்பையே அப் பெருமானுக்குக் கேடகமாகக் கவிழ்த்துக்கொண்டு விட்டார்; ஆனால், தம் முதுகின்மீது பாய்ந்து கொண்டிருந்த அம்புகளை யெல்லாம் அம் மகாவீரர் சற்றும் பொருட்படுத்தினு ரில்லை. அதுசமயம் 'தல்'ஹா என்னும் முஸ்லிம் வீரர் எதிரிகளின் வாட்படை வீச்சுக்களையெல்லாம் தமது கையினுலேயே தடுத்துக்கொண்டு வந்தார்; அதனுல் அவரது கையொன்றும் வெட்டப் பட்டுக் கீழே வீழ்ந்துவிட்டது. அதையேனும், அவருக்கன்று கிடைத்த இன்னம் எண்ணிலடங்கா ரணங்களையேனும் அவர் சற்றும் பொருட் படுத்தவே யில்லை. அத்துணைப் பெரிய தீரம்!

* "பத்தி மீறிய தீனவர் படவுமக் கவணுல்
தத்தி தத்தினிற் படரொளி முகம்மது தமக்கும்
கத்த னேவலிற் றுனிவந்து கருதிய தென்றுல்
எத்த லத்தினு மியாவரே துன்பமி லாதார்?"—

என்று அப் புலவர்பெருமானே இறும்பூதெய்தி எடுத்தோதுகின்றார்.

இறுதியாக, இருபக்கமிருந்து இரு வாட்படைகள் ஒரே அமயத்தில் அன்னவர்மீது வீசப்பட்டதனுல் அவர் மூர்ச்சையடைந்து கீழே சாய்ந்து விட்டார். அதுபொழுது 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் அவர்கள் அந்தத் தல்'ஹா வின் முகத்தில் சிறிது தண்ணீரை யடித்ததனுல், சற்று நேரத்திற்குள் மயக்கம் தெளிந்து 'தல்'ஹா தங் கண்ணைத் திறந்து பார்த்தார். அது பொழுது அபூ'ப'க்ர் அவர்களை நோக்கி, "நபி பெருமானது நிலைமை என்ன வாயிற்று?" என்று அதிக ஆவலுடனே வினவினுர். அதற்கு விடையாக 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர், "ரஸூலுல்லா (சல்) அவர்கள் இன்னமும் சுகமாகவே யிருக்கிருர்கள்; அவர்களே என்னை உம்மிடம் அனுப்பி வைத்தார்கள்," என்று விடை கொடுத்தார்கள். அவ் வார்த்தைகளைக் கேட்டவுடனே 'தல்'ஹா அவர்கள், "எல்லாப் புகழும் அல்லா(ஹ்)வுக்கே! இந்தச் சுபச் செய்தி எனக் கெட்டியதன் பின்னுல் எத்தகைய துன்பம் நேரிடினும் எனக்கு அஃது இலேசாகவே யிருக்கும்," என்று கூறினுர். அம் மனிதக் கோட்டையில் எவரேனும் ஒரு வீரர் இறந்து வீழ்வராயின், அன்னவரின் ஸ்தானத்தை அக்கணமே மற்றொருவர் பற்றிக்கொண்டு விடுவார். இவ்வாறு ஒருவர்பின் ஒருவராக அக்கோட்டைச் சுவரைப் பாதுகாத்து வந்ததனுல், அதன்பின்பு நபிகள் பெருமான்மீது ஒருசிறிதும் காயம்படவே யில்லை. ஆயினும், நபி பெருமானை நோக்கி அம்புமாரி பொழிந்தவண்ணமே யிருந்து வந்தது. அதைக்கண்டு, நபிகள் பெருமானுர், "ஆண்டவனே! என்னுடைய இனத்தவரின் பாபத்தை மன்னித்தருள்வாயாக! அவர்கள் அறி யாதவர்களா யிருக்கிருர்கள்!" என்று அல்லா(ஹ்)வை நோக்கிப் பிரார்த் தனை புரிந்துகொண்டே யிருந்தார்கள். அவ் வுயிருக்கு மன்ருடும் வேளை யிலும் அம் மஹானுபாவர் எதிரிகளைச் சபிக்க வில்லை. என்னே எம் பிரானின் பொறையும், இரக்கமும்! சர்வ லோகத்துக்கும் கருணையங் கடலல்லவா!

அனஸ்(ரலி') அவர்களின் மாதாவை மறுமணமுடித்துக் கொண்டிருந்த அபூ'த்தல்'ஹா வென்னும் பெரியார் வில்வித்தையில் இணையற்ற வீரராய் விளங்கி வந்தார்கள். இப்பெரியாரும் நாயகத்தைச் சூழ்ந்து நின்றபோது, :குறைஷிகள் தங்கள் பலமுழுதையும் சேர்த்துப் பாண வர்ஷத்தையே பொழிந்துகொண் டிருந்தார்கள். அவர்கள், அம்மனிதக் கோட்டையையும் அதற்குள்ளிருந்த மு'ஹம்மதை'யும் (சல்) அடியோடு ஹதம்செய்து விடுவ தென்றே ஒரே தீர்மானத்துடன் முனைந்து நின்ருர்கள். ஆனுல், முஸ்லிம் களும் தங்களுக்கு இறுதிவரும் வரை அப் பகைவருக்குப் பணிவதில்லை யென்றே பிடிவாதம் செய்து கொண்டார்கள். :குறைஷியர் எத்துணைக் கெத்துணை அடங்காத ஆவேசத்துடன் அம் முஸ்லிம்களைத் தாக்கிவந்தார் களோ, அத்துணைக்கத்துணை அழியா வீரத்துடனேயே அம்முஸ்லிம் வீரர் களும் தங்கள் தற்காப்பு யுத்தத்தை நிகழ்த்தி வந்தார்கள். ஆகவே, அதில் கலந்து வேலைசெய்த அபூ'த் தல்'ஹா வென்பவர் தம்வயமிருந்த மூன்று

வில்களும் ஒடிந்து போகும்வரை அம்புமாரியை அக் :குறைஷியர்மீது வருஷித்துக்கொண்டே யிருந்தார்கள். பிறகு அவ் வில்வீரர் நபியின்புறம் திரும்பி அவர்கள்மீது கேடகமாகக் குனிந்து கொண்டுவிட்டார். அது பொழுது நபிகள் பெருமான் அந்த யுத்தத்தின் முடிபு யாதாயிற்று ? என்று நோக்குமுகத்தான் தங்கள் சிரத்தைச் சிறிது உயர்த்திப் பார்த்தார்கள். அப்பொழுது அபூ’த் தல்‘ஹா, “ தங்கள் நிமித்தம் என் தாய்தந்தையர் அர்ப்பணமாகக் கடவர் ! தாங்கள் தலையைத் தாழ்த்திக்கொள்ள வேண்டு மென்றே யான் கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுகிறேன். தாங்கள் சிரத்தை உயர்த்துவீர்களாயின், எதிரிகளின் எந்த ஓர் அம்பும் தங்களுக் கேதேனும் ஊறு செய்துவிடுதல் கூடும். எதிரிகளின் தாக்குதலைத் தாங்க எங்கள் மார் பிருக்கிறது !” என்று வேண்டிக் கொண்டார்கள். அப்பொழுது எதிரி யின் பாணமொன்று இவரது விலாவின் புறமாகவந்து கைகளுள் ஒன்றை நன்றாகக் காயப்படுத்தி விட்டது. அதன்பின்பு தங்களுடைய கரத்திலிருந்த வில்லை உபயோகப்படுத்த முடியாமற் போய்விட்டமையால் உறைக்குள் ளிருந்த உடைவாளை உருவினார் ; ஆனால், தமது சரீரத்தினின்று வடிந்திருந்த இரத்தப் பெருக்கின் காரணத்தினால் அளவுகடந்த அயர்ச்சியடைந்து கண் ணிரண்டும் உறக்கங் கொண்டு அயர்ந்த நித்திரையுள்ளே ஆழ்ந்து மூழ்கி விட்டார் ; அதுபொழுது அவரது கரத்திலிருந்த வாட்படையும் தானே கழன்று வீழ்ந்துவிட்டது.

“ பொன்றுத லொருகா லத்துந் தவிருமோ ? பொதுமைத் தன்றோ ? இன்றுளார் நாளை மாள்வார் புகழுக்கும் இறுதி யுண்டோ ?” என்றான் கல்வியிற் பெரியானும்.

அதன்பின்பு ஸஅ’தி’ப்’னு அபீ’வ:க்:காஸ் என்னும் மற்றொரு வில்வீரர் நபிபெருமானிடம் இருந்துகொண் டிருந்தார். அதுகண்ட நபிகள் திலகம் தங்களுடைய அம்பறாத் தூணியை எடுத்தெறிந்து, “ என் தாய்தந்தையர் உமக்குக் :குர்ப்’ானீ ஆகுக ! நீர் எதிரிகளின் சேனைமுன் எனதம்பை யெடுத்து எய்தவண்ணமே செல்வீராக !” என்று கூறி யனுப்பினார்கள். அதுபொழுதுதான் நபிகள் பெருமான், “ எந்தச் சமூகத்தினர் தங்கள் நபியை ஊறுபடுத்துகிறார்களோ, அவர்கள் எவ்வாறு இறுதியில் வெற்றி பெறுதல் சாலும் ?” என்று மனம் நைந்து செப்பினார்கள். அக்கணமே ஆண்டவன், “லைஸல(க்)க மினல் அம்ரி ஷைவுன்”— (உமக்கொன்றும் இவ் விஷயத்தில் அதிகார மில்லை) என்னும் ஆயத்தை முனிவுடனே இறக்கி வைத்தான். இதற்குள்ளே முஸ்லிம்களின் விடாப் பிடிவாதத்தாலும், உயிருக்குச் சற்று மஞ்சாத் தைரியத்தாலும் கண்மூக்குப் பாராமல் ஒரே மூர்க்கமாக எதிரிகள்மீது விழுந்து தாக்கிவந்தார்கள். அதுபொழுதுதான் :குறைஷிகள் சற்றே தயங்கிப் பின்வாங்க ஆரம்பித்தனர். அதுகண்டு, நபிகள்பெருமான் தங்களைச் சார்ந்த ச‘ஹாப’ாக்களுடன் சமீபத்திலிருந்த குன்றொன்றின்மீது அதிக தைரியத்துடனே சென்று ஏறிக்கொண்டார்கள்.

அதனைக்கண்ட அபூ'ஸுஃப்யானும் தம்முடைய சேனையொன்றையும் அக் குன்றின்மீ தேறுமாறு கட்டளையிட்டார்; அதுசமயம் உ'மர் (ரலி') அவர்களும் வேறு சில ச'ஹாப'ாக்களும் அம்மலைமீ திருந்த கற்களைவாரி ஏராளமாக எதிரிகள்மீது இறைக்கத் தலைப்பட்டதனால், அக் :குறைஷியர் அங்கே நெருங்கிக் கொள்ள முடியாது போயிற்று. அப்பொழுதுதான் அபூ' உ'பைத்'ா பி'ன் 'ஜர்ரா'ஹ் அவர்கள் நபிகள்பெருமானது திருவதனத்தில் ஆழப் பதிந்திருந்த இரண்டு தலைச்சீரா மோதிரங்களையும் தங்கள் பற்களால் பற்றி யிழுத்தார்கள்; அதனால் ஒவ்வொரு வளையத்திற்கும் ஒவ்வொரு பல் விகிதம் அவர்கள் அவ்விரண்டு வளையங்களுக்கும் தங்கள் இரண்டுபற்களைத் தியாகம் செய்து விட்டார்கள். அப்பொழுது அவ்விரண்டு ரணங்களிலிருந்தும் அதிகமான உதிரம் பீரிட்டடித்தபோதுதான் நபிகள்பெருமான் முற்கூறிய "சாப" விஷயத்தைச் சொல்லி, அதற்கு ஆண்டவன் அவ்வாயத்தை இறக்கினுனென்று வேறுசிலர் கூறியிருக்கிறார்கள்.

இதற்கிடையில், நபிகள்பெருமான் (சல்) தேகவியோகமாய்ப் போய்விட்டார்களென மதீனாவிற்குச் செய்தியெட்டி, ஆங்கிருந்து அவர்களுடைய உயிர்த் தோழரெல்லாரும் அதிக ஆவலுடனே உ'ஹது'க்கு ஓடிவந்தனர்; அவர்களுடன் நபிகள் திலகத்தின் இளங்குமாரியாம் 'பா(த்)திம(த்)து'ஜ்ஜெ'ஜாஹ்ரா (ரலி') அவர்களும் கலந்தோடிவந்தார்கள். அதுபொழுது நபிகள் நாயகத்தின் முகத்திலிருந்து செம்பால் ஒழுகியவண்ணமே இருந்தது. அது கண்டு, அ'லீ(ரலி') அவர்கள் தங்கள் கேடகத்தில் சிறிது தண்ணீர் மொண்டு கொண்டு வந்தார்கள். அதுகொண்டு 'பா(த்)திமா (ரலி') அவர்கள் அப்புண்களைக் கழுவியும், அந்த உதிரப்பெருக்கு நின்றபாடில்லை. அதன் பின்பு அங்கு உலர்ந்துகிடந்த ஒருவகைப் புல்லைக் கரித்து, அதன் சாம்பரை அப் புண்களில் தடவினார்கள்; அப்பொழுதே அவ்வுதிரமும் நின்றுவிட்டது.

அதுபொழுது அபூ' ஸுஃப்யான் எதிரிலிருந்த மற்றொரு குன்றின்மீ தேறிக் கொண்டு, "அங்கே மு'ஹம்மத்' இருக்கின்றாரா?" என்று வினவினர். அதற்கு மறுமொழி கொடாதிருக்குமாறு நபிகள் திலகம் உத்தரவிட்டமையால், ஒருவரும் ஒன்றும்பேசாது எல்லாரும் மௌனமுற்றிருந்தனர். அதன் பின்பு அபூ'ப'க்ர் உ'மர் ஆகியோரின் நாமங்களைச் சொல்லி யழைத்து, அவ் விருவரும் உயிருட னிருக்கின்றனரா வென்று அந்த அபூ' ஸுஃப்யானே மீண்டும் வினவினர். அதற்கும் விடையாக யாதொரு மறுமொழியும் கூறப்படா திருந்ததைக் கண்டு, அந்த அபூ' ஸுஃப்யான் மேலும், "எல்லாரும் ஒழிந்தார்கள்; அவர்கள் உயிருடனிருந்தால் இதுவரை விடைகொடுத் திருப்பார்கள்!" என்று கூறி முடித்தார். அதுகேட்டு, 'ஹ'ஜ்ரத் உ'மர் (ரலி') அவர்கள் ஆற்றமாட்டாது, அபூ' ஸுஃப்யானை நோக்கி, "ஏ அல்லா(ஹ்)வின் பகைவனே! உன்னை இன்னம், தாழ்த்திவிட நாங்களெல்லாரும் உயிருடனேதான் இருக்கின்றோம்! இன்னம் ஒருவரும் சாவவில்லை!" என்று மிக வேகமாகக் கூறினர்.

அதுகேட்டு, அபூ' ஸுஃப்யான் தம்முடைய முக்கிய விக்கிரகத்தை நோக்கி, "ஏ ஹுபல்! நீயே உன்னதமடையக் கடவாய்!" என்று ஆசி கூறினார். அதைச் செவியேற்றவுடன் நபிகள் திலகத்தின் அனுமதியின்மீது தோழர்களெல்லாம், "ஆண்டவனே உயர்ந்தவனாகவும் மிகப்பெரியவனாகவும் இருக்கின்றான்," என்று உரக்கக் கூவினார்கள். அபூ' ஸுஃப்யான் தங்களைக் குறித்துச் சொந்தமுறையில் தூஷித்ததைக் கேட்டு, நபிகள்திலகம் ஒன்றும் ஆத்திரம் கொள்ள வில்லை; ஆனால், அல்லா(ஹ்)வின் கண்ணியத்தை அபூ' ஸுஃப்யான் இழிவுபடுத்தியதைக் கேட்டு, அப்பெருமானார் எங்ஙனம் மௌனமாயிருக்கச் சம்மதிப்பார்கள்? அப்பெருமானார் பட்டபாடெல்லாம் அல்லா(ஹ்) ஒருவனே யென்னும் ஏகேசுவர வாதத்துக்காகத் தானே!

அதன் பின்னும் அபூ' ஸுஃப்யான், "எங்கள்பால் உ'ஜ்'ஜா— (இதுவும் :குறைஷியரின் ஒரு விக்கிரஹமாகும்) இருந்துவருகிறது; உங்கள்பால் அஃதொன்று மில்லையே!" என்று கூறியதைக் கேட்டு, ச'ஹாப'ாக்கள் நபிபெருமானது அனுமதியின்மீதே, "அல்லா(ஹ்) எங்களுக்கு எஜமானனா யிருக்கிறான்; ஆனால், உங்களுக்கு எஜமானன் ஒருவனு மில்லையே!" என்று மறுமொழி கூறினார்கள். அதுகேட்டு, அபூ' ஸுஃப்யான் இன்று ப'த்'ருடைய தினத்திற்காகப் பழிவாங்கிவிட்டோம்!" என்று கூவினான். இதற்குள்ளே கீழே நின்றுகொண்டிருந்த :குறைஷிகள் முஸ்லிம்களை முற்றும் முறியடிக்க முடியாது போனதைக்கண்டு, அந்த யுத்தகளத்தில் தங்கள் க்ஷாத்திரத்தைத் தீர்த்துக்கொள்ள ஆரம்பித்தார்கள். அங்கே மரித்துக்கிடந்த முஸ்லிம்களின் மூக்குக்களையும் காதுகளையும், மற்றுமுள்ள உறுப்புக்களையும் கண்ட கண்டவாறு கத்தரித்தெறிந்து அப் பிரேதங்களை யெல்லாம் காண்பவர் துணுக்குறுமாறு சின்னாபின்னப்படுத்தி விட்டார்கள். :குறைஷிப் பெண் பிசாசுகளும் இப்பாமரச் செய்கையைவிட்டு ஒழிந்திருக்க வில்லை. ஹிந்தென்னும் கொடும் "பஜாரி"யான பழையனூர் படுநீலி— அபூ' ஸுஃப்யான் மனைவி, அத்தகைய மூக்குக்களாலும் காதுகளாலும் கோக்கப்பட்ட மாலையொன்றைக் கழுத்திலணிந்து கொண்டு, ஹம்'ஜா அவர்களின் செத்துக்கிடந்த சரீரத்தின்மீது குந்தி, அப் புண்ணியசீலரின் வயிற்றைக்கீறி உள்ளிருந்த ஈரலைப் பிய்த்து மென்றுதின்றாள்; ஆனால், அதனை விழுங்கமுடியாது தொண்டை யடைத்துக்கொண்டு, விக்கி வாந்தி யெடுத்து விட்டாள். இதனால்தான் இப் பெண்பிசாசுக்கு "ஈரலைத் தின்றவள்" என்று இஸ்லாமிய சரித்திராசிரியர்கள் நாமஞ்சூட்டி யிருக்கின்றார்கள். ஆனால், இதைக் குறித்தும் அபூ' ஸுஃப்யான், "என்னுடைய சேனைகள் இறந்த முஸ்லிம்களின் காதுகளையும் மூக்குக்களையும் அறுத்தெறிந்துவிட்டன; அவ்வாறு செய்யும்படி நான் ஆணையிடவில்லை. ஆனால், அப்படிச் செய்தார்களென்று தெரிந்தும், அதைக் குறித்து யான் கவலையொன்றும் கொள்ளவில்லை." என்று கைகழுவிக் கூறிவிட்டார்.

அன்று நடந்த உ'ஹத்' யுத்தத்தில் முஸ்லிம் சேனையோடு பெண்களும் பலர் கலந்திருந்தனர். ஆ'யிஷா(ரலி) அனஸ்தாய், உம்முஸுலைம், ஸைஜதிப்'னு ஹாரி:தாவின் பாரியாளான உம்முஜமன் ஆகிய மூவரும் யுத்தகளத்தில் காயமடைந்து, உதிரம் சிந்தியவர்களுக்குத் தாகத்திற்குத் தண்ணீர் கொடுத்து உதவிபுரிந்து கொண்டிருந்தனர். இன்னம், அன்னவர்களுக்கு வேண்டிய ஏனைச் சௌகரியங்களையும் செய்துகொண்டு வந்தனர். அபூ'ஸயீ'த்' அல் :குத்'ரீயின் அன்னையான உம்முஸ்லீத்தும் அவ்வாறே காய மடைந்தவர்களுக்கு நீர்கொடுத்துக் கொண்டே வந்தார். இதுமட்டு மின்றி, வேறுசில பெண்மணிகள் யுத்தப்படையிலும் கலந்துகொண்டே சண்டை செய் திருந்தார்கள். சற்றுமுன்னே நபிகள் பெருமானிடம் பதினொருபேரே இருந்துவந்தபோழ்து, உம்மு அம்மாரா என்னும் மாதரசி யொருவரே அங்கோடிவந்து எதிரிகளிடம் தமது நெஞ்சைக் காட்டி நபிகள்நாதரைத் தற்காத்துக் கொண்டார். கா'பிர்கள் நெருங்கி வருங்கால், அம் மாது சிரோமணி தமது கட்கத்தைக் கொண்டும் வில்லாயுதத்தைக் கொண்டும் எதிரிகளைத் துரத்தித் துரத்தியடிப்பார். இப்'னு குமையா விரைவாகப் பாய்ந்து நபிகள்திலகத்தை நெருங்கிவிட்டபோது, இம்மாதும் முன்சென்று அவனைத் தடுத்துநின்று சண்டைசெய்ததில் இம்மாதுக்குத் தோளில் பெரிய தொரு காயமும் ஏற்பட்டுவிட்டது. அந் நிலையிலும் இவ் வீராங்கனை தமது கரத்திலிருந்த வாளை அவ்வெதிரியின் சென்னிமீது ஓங்கிவீசினார். ஆனால், அவன் இரட்டைச்சீரா அணிந்திருந்ததனால், அவ் வாள்வீச்சால் அவனொன் றும் காயமடைய வில்லை.

இந்த உ'ஹத்'யுத்தம் ஆரம்பிக்குமுன்னே நபிகள்பெருமான் (சல்) முஸ் லிம் பெண்டு பிள்ளைகள் எல்லாரையும் மதீனாவிற்கு வெளியிலுள்ள கோட்டை யொன்றுக்குள் யமான், :தாபி'த் என்னும் இருவருடைய பாது காப்பின் கீழே அனுப்பி யிருந்தார்கள். அங்கு, எவ்வாறோ முஸ்லிம்களுக்கு உ'ஹதி'ல் தோல்விகிடைத்து விட்டதென்னும் செய்தியொன்றைக் கேள்வி யுற்று, எல்லாரும் உ'ஹதை' நோக்கி ஓடினார்கள். அவர்கள் யுத்தகளம் புக்கு, உண்மை விஷயத்தைத் தெரிந்து கொள்ளாது, அக் :குறைஷிய ருடன் மூர்த்தன்யமாய் மற்றொரு யுத்தத்தில் இறங்கியதனால்; :தாபி'த்தைக் கு'ப்'பார்கள் கொன்று விட்டார்கள். அதுசமயம் நிகழ்ந்த குழப்பத்தினால் யமானை இன்னாரென் றறியாது, முஸ்லிம்களே அவர்மீது வாளை ஓச்சினர். அதுகண்டு, அவருடைய புத்திரரான ஹுதை'ஜ'பா, "என் பிதா! என் பிதா! கொல்லாதீர்கள்! கொல்லாதீர்கள்!" என்று கூவிக் கொண்டே ஓடினார்; அதற்குள்ளே முஸ்லிம்களின் கரத்தாலேயே யமான் கொல்லப் பட்டு விட்டார். அதன் பின்பு ஹுதை'ஜ'பா, "உங்க ளெல்லாரையும் ஆண்டவனே மன்னிக்க வேண்டும்!" என்று கூறிவிட்டுச் சும்மா இருந்து விட்டார். பிறகு நபிகள் திலகம் (சல்) இதை யறிந்து, முஸ்லிம்களிட மிருந்து அக்கொலைக்கு உதிரக்கிரயமாக ஒரு தொகையை வசூல்செய்து,

அந்த ஹு'ஜ'பாவிடம் கொடுத்தார்கள்; அதையும் அன்னவர் மிக்க பெருந்தன்மையுடனே பெற்றுக்கொள்ள மறுத்துவிட்டார்.

உ'ஹுத்' யுத்தத்தில் முஸ்லிம்கள் அதிகமான சேதமடைந்து விட்டார்களென்று மதீனாவிற்குச் செய்தி எட்டியவுடன், ஆங்கிருந்து பல பெண்மணிகள் ஹம்'ஜா(ரலி') அவர்களின் சோதரியான ஸ'பிய்யா அவர்களுடனே கூட்டமாகத் திரண்டு போர்க்களத்தை நோக்கி ஓடிவந்தார்கள். அது கேட்டு, நபிகள் திலகம் (சல்) ஸ'பிய்யாவின் குமாரரான 'ஜு'பை' ரிப்'னு அவ்வாம் என்பவரை நோக்கி, அப்போர்க் களத்தில் சின்னுபின்னமாகக் கிழிக்கப்பட்டுக் கிடக்கும் 'ஹ'ஜ்ரத் ஹ'ம்'ஜாவின் சரீரத்தைக் காணவொட்டாது அவருடைய அன்னையைத் தடுத்து வைக்குமாறு கட்டளை யிட்டார்கள். அவ்வாறே 'ஜு'பர் தந் தாயிடம் கூறியபோது, அம்மாது சிரோமணியார், "இஸ்லாத்தின் தற்காப்பி னிமித்தம் என் சகோதரர் கொடுத்திருக்கும் :குர்ப'ானீயைப் பற்றி யான் முன்னரே கேள்வியுற்றுத்தா னிருக்கிறேன். ஆனால், அல்லா(ஹ்)வின் பாதையில் இஃதொரு பெரிய தியாகமாகுமா? யான் என் சோதரர் சரீரத்தைக் கண்டு அழுது புலம்ப மாட்டேன்; அதைப் பார்த்துப் பொறுமையுட னிருந்துகொண்டு, அவருடைய ஆத்ம சாந்திக்காக ஆண்டவனிடம் பிரார்த்தனையே புரிவேன்," என்று அதிக அமைதியாகப் பதிலிறுத்தார்.

அப்பொழுதே நம்பெருமானா ரவர்கள் அந்த ஸ'பிய்யாவிற்குத் தம திறந்த சோதரரின் சரீரத்தைப் பார்க்க அனுமதி யளித்து விட்டார்கள். அதுபொழுதே அம்மாதரார் ஆங்குப் போய்ப் பார்த்துத் தம்முடைய அருமைச் சோதரரின் சரீரம் முழுதும் பார்ப்பவர் பிரமிப்படையுமாறு சின்னபின்ன மாக்கப்பட் டிருப்பதைக் கண்டவுடன் அவருடைய இரத்தம் அதிகம் கொதித் தெழுந்தது. ஆயினும், அம்மாது சிரோமணி தமது ஆத்திரம் முழுதையும் அல்லா(ஹ்)வுக்காக அடக்கிக்கொண்டு மிக்க பொறுமையுடன், "இன்னா லில்லாஹி, வ இன்னா இலைஹி ராஜிஊன்'ன்"— [நிச்சயமாக நாமெல்லாம் அல்லா(ஹ்)வுக்காகவே இருந்து வருகிறோம்; மேலும், நிச்சயமாக அவனிடமே நாமனைவரும் திரும்பிப் போய்ச் சேருவோம்] என்ற வேத வாக்கியத்தைமட்டும் கூறிவிட்டு, அவரது ஆத்மசாந்திக்காகப் பிரார்த்தனையும் புரிந்துவிட்டுச் சும்மா இருந்துவிட்டார்கள். அப்பால் தஞ் சகோதரரின் சரீரத்தை மூடிப் புதைப்பதற்காக இரண்டு வஸ்திரங்களைக் கொடுத்துவிட்டுத் திரும்பி விட்டார்கள்.

அன்று நடந்த அகோர யுத்தத்தில் எழுபது முஸ்லிம்கள்வரை இறந்துவிட்டார்கள்; அவர்களுள் பெரும்பான்மையினர் அன்சாரிய்யீன்களாகவே காணப்பட்டனர். ஆங்கு இறந்து பட்டவர்களின் சரீரங்களைப் போர்த்திப் புதைப்பதற்குப் போதிய வஸ்திர மில்லாதபடி அத்துணை வறுமையான நிலைமையிலே அம் முஸ்லிம் களனைவரும் இருந்துவந்தனர். அவர்களுள் முஸ்அ'ப்' பி'ன் உ'மைர் என்னும் முஹாஜிரின் சரீரத்தைப் போர்த்தப்

போதிய ஓராடை யில்லாதிருந்ததனால், அவரது தலையை மறைக்கும்போது காற்பக்கம் திறந்து கொண்டும், காலை மறைக்கும்போது தலைப்பக்கம் திறந்து கொண்டும் இருந்து வந்தன. ஆதலின், அச் சிறு வஸ்திரத்தைக் கொண்டு தலையைமட்டும் மூடிக் காலின் பக்கல் காய்ந்த புற்களைக் கொண்டு மறைத்து, ஆங்கே அடக்கம் செய்து விட்டார்கள். பிற்காலங்களில்— இஸ்லாமிய ராஜ்ஜியம் செழித்தோங்கத் தலைப்பட்டதன் பின்னே— இதைக் குறித்து அம் முஸ்லிம்கள் நினைக்கும்போதெல்லாம் தங்களுக்குத் தெரியாமலே கண்ணீ ருகுத்து விடுவார்கள். மற்றும், அன்று வீர சுவர்க்கம் புக்க



உ'ஹத்' மலைச்சாரலில் 'ஹ'ஜ்ரத் ஹம்'ஜா (ரலி') அவர்களின் (:கப்'ர்) சமாதி

முஸ்லிம்க ளெல்லாரும் ஒவ்வொரு குழியில் இவ்விரண்டு மனிதர்களாகப் பல புதைகுழிக ளுள்ளே அடக்கம் செய்யப் பட்டார்கள். அந்த வீரத் தியாகிகளின் சரீரங்கள் குளிப்பாட்டப் படவுமில்லை; அவர்களுக்காக மரண(மையி)த் தொழுகையும் அதுசமயம் தொழுவிக்கப் படவில்லை. அவ்வாறு இரண்டிரண்டு பேர்களாகப் புதைக்கப்பட்டபோது, அவர்களுள் :குர்ஆன் பாடத்தை நன்கறிந்தவர்கள் பிள்ளைக் குழியுள்ளும், அவரல்லாதவர்கள் அதற்கு வெளியிலும் வைத்து நல்லடக்கம் செய்யப்பட்டார்கள். அவ்வேழை முஸ்லிம்கள் அதுகாலை அவ்வாறு உடலையும் ஆவியையும் தத்தம் செய்தார்கள். இதுகாலை எம் பணக்கார முஸ்லிம்கள் இஸ்லாத்

திற்காகத் தங்கள் செல்வத்தி னின்று சிறிதைச் செலவு செய்யவும் முன் வருவ தில்லை. அந்தோ! அந்தோ! அந்தோ!

க்'ாலித்' பி'ன் வலீத்' உ'ஹுத்' மலையிலிருந்த ஒரு சிறு உச்சிக் கணவாய் வழியே பின்புறமாக ஏறிவந்து, அம் மைதானத்தி லிருந்த முஸ்லிம்களைத் தாக்கியபோது, அங்கு நிகழ்ந்த குழப்பத்தினால் ஒருசில முஸ்லிம்கள் உண் மையை உணர்ந்துகொள்ள முடியாது, நபிகள் நாயகத்திடமும் போய்ச்சேர வழியில்லாது, தங்கள் கக்ஷியே முற்றும் அபஜயமடைந்து விட்டதாகத் தவறாக எண்ணிக்கொண்டு, மதீனாவிற்கு நேரே திரும்பியோடி விட்டார்கள். அதுகேட்டு, அன்னவரின் மனைவிய ரெல்லாரும் தங்கள் கணவன்மார்களை ஏசிப்பேசி, உதாசினமாக மண்ணையும் வாரி யிறைத்துவிட்டுத் தாங்க ளனைவரும் உ'ஹுதை' நோக்கி ஓடினார்கள். இதிலிருந்து அப் பெண்மணிகளுக் கெல்லாம் அன்று எத்துணைமட்டும் வீராவேசம் நிரம்பித் ததும்பிற் றென் பதை மிகச் செவ்விதாய் உணர்ந்து கொள்ளுதல் கூடும். அந் நாரிமணிக ளனைவரும் தங்கள் பந்து மித்திரர்கள்மீது வைத்திருந்த அபிமானத்தைப் பார்க்கினும், அதிகமான அபிமானத்தையே அளவிகந்து நபிகணாதர்மீது வைத் திருந்தார்கள். இக்காரணத்தினாலேதான் சிலர் யுத்தகளம் சென்று, காய மடைந்தவர்களுக்குத் தாகத்திற்குத் தண்ணீர் கொடுத்துச் சைத்தி யோபசாரம் செய்து வந்தார்கள்; வேறு சிலர் அவ் யுத்தத்திலும் கலந்து கொண்டு வில்லும் வாளுமேந்தி, ஆண்களுடன் ஆண்களாய்க் :குறைஷி யரை எதிர்த்துப் போரும் புரிந்தார்கள். ஆனால், அதுசமயம் உ'ஹுதை' நோக்கி ஓடிய பெண்மணிகளுள் அன்சார் நங்கையொருவர் இருந்து வந்தார். இந்தப் பதிவிரதா சிரோமணி அந்த யுத்தகளத்தை நோக்கிச் சென்ற பொழுது, வழியில் எதிர்ப்பட்டவர்கள், "உம்முடைய தந்தையார் இறந்து விட்டார்!" என்று கூறினார்கள்; அதைக் கேட்டு, அம்மாதரசி, "இன்னா லில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன்'ன்! அஃது இருக்கட்டும். ரஸூலுல் லாவின் நிலைமை எவ்வா றிருக்கிறது?" என்று அதிக ஆவலுடனே வினவி னார். அதனைக் கேட்டு, அங்கு வந்தவர்கள், "உம்முடைய சகோதரரும் இறந்துபோய் விட்டார்!" என்று கூறினார்கள்; அதற்கும் அப் பெண்மணி முன்கூறிய வேதவாக்கியத்தையே கூறி, மீண்டும் ரஸூலுல்லாவின் க்ஷேமத் தைப் பற்றியே விசாரித்தார். ஆனால், அந் நங்கையர்க் கரசியின் பிராண நாதரும் அந்த யுத்தகளத்தில் உயிர் துறந்து விட்டா ரென்று மேலும் கூறி னார்கள். இதுகேட்டு மட்டும் அப்பெண்மணி ஒருசிறிது பெருமூச்சுவிட்டுப் பின்னரும் அவ்வேத மந்திரத்தையே ஓதித் தைரியம் பூண்டார். இறுதியில் நபிகள் திலகம் (சல்) உயிருடனே இருக்கிறார்க ளென்னும் செய்தியைக் கேள்வியுற்றவுடன், தஞ்செவியிற்பட்ட எல்லாத் துக்க சம்பவங்களையும் மறந்து, பேருவகை பூத்துப் பெருமகிழ்வுடன் நபிகள் நாதரையே தேடிக் கொண் டோடினார். ஆங்குச் சென்று அப் பெருமானாரைத் தம்மிரு நேத்தி ரங்களாலும் க்ஷேமமாகக் கண்டவுடன் அம்மாது சிரோமணி, "இப்

பொழுது தங்களை யான் உயிருடனே கண்டுகொண்டேன். எனவே, மற்றெல்லாத் துக்கங்களும் எனக்கொரு பொருளாய்க் காணப்பட வில்லை!" என்று கூறுகின்றார். இன்னமும், "நானும், என் கணவரும், என் பிதாவும், என் சகோதரரும் தங்களுக்கே அர்ப்பணமாகக் கடவோம்!" என்றும் கூறினார்.* நபிகள் பெருமானிடம் (சல்) எத்தகைத்தாய பேரன்பு அக்கால மக்களுக்கு இருந்து வந்ததென்பதை இனிது விளக்கிக்காட்ட இச்சம்பவம் ஒன்றே போதுமானதா யிருக்கின்றது. அக்கால ச'ஹாப'ாக்கள் அவ்வாறு நபிபெருமானை (சல்) நேசித்து வந்தார்கள். இக்காலத்தில் வேறெந்த மதத் தலைவரைப் பார்க்கினும் எம்பெருமானார் (சல்) அவர்களே அதிகம் தூஷித்துத் தாக்கப்பட்டு வருகிறார்கள். இவர்களது திருமேனிமீது குவிக்கப்படும் குப்பை கூளங்களையும் அசங்கிய அசுசிகளையும் அப்புறமகற்ற நங்கால முஸ்லிம் பக்தர்கள் என்ன ஏற்பாடு செய்து வருகின்றனர்? தங்கள் கடைவிரல் நுனியையுங்கூட அசைக்க முன்வரக் காணோம். என்னே இவர்களுக்குள்ள இஸ்லாமிய பக்தி!

உ'ஹுத்' யுத்தம் நடந்ததன் பின்னால் எட்டுவருடகாலம் கழிந்து, நபிகள் பெருமான் (சல்) நிர்யாணமடைவதற்கு ஓரிரண்டு ஆண்டுகளுக்கு முன்னே அப்பெருமானார் அந்த யுத்தத்தியாகிகள் அடக்கம் செய்யப்பட்டிருந்த இடத்தின்வழியே செல்லவேண்டி அவசிய மொன்று நேர்ந்தது. அதுசமயம் அவர்களுக்கு மேற்கூறிய யுத்த சம்பந்தமான ஞாபகம் வந்து, தங்களுக்குத் தெரியாமலே அவலக்கண்ணீர் சொரிந்து விட்டார்கள். அதுபொழுது அவர்கள் கூறிய உபதேச மொழிகளில் சில உருக்கமான வார்த்தைகளும் காணப்படாமலில்லை. நபிபெருமானார் அதுசமயம் தாங்கள் செய்த உபதேசத்தின் இறுதியிலே, "என்னரும் முஸ்லிம் நேசர்காள்! நீங்கள் முஷ்ரி(க்)கீன்களாக— (ஆண்டவனுக்கு இணைவைப்பவர்களாக) ஆய்விடுவீர்களென்று யான் அச்சங்கொள்ள வில்லை. ஆனால், நீங்கள் இவ்வுலக இச்சையில் சிக்குண்டுவிடுவீர்களென்றே யான் பெரிதும் அஞ்சுகின்றேன்," என்று கூறி முடித்தார்கள். அவர்கள் அன்று தீர்க்கதரிசனம் சொன்னதற்கும், இன்று எம் முஸ்லிம்கள் இவ்வுலகினில் நடந்துகொண்டு வருவதற்கும் நெருங்கிய சம்பந்தம் காணப்படவில்லையா வென்பதை நீங்களே சற்று நிதானித்துப் பார்த்துக் கொள்ளக் கடவீர்களாக. இதுகாலை ஆத்மார்த்தத்தைப் பார்க்கினும் உலகாயதமே நம்மை நாலா பக்கத்திலும் அடைய வளைந்துகொண்டு கிடக்கின்றது. இஸ்லாமிய ஞானத்தைப்பற்றி நினைக்கவும் நேரமில்லை. அத்துணை வேகமான பொருளீட்டம்!

மேலே கூறியவா றெல்லாம் நிகழ்ந்துகொண் டிருக்கும்போதே :குறைஷிகள் மக்காவை நோக்கிச் சென்றுகொண் டிருந்தார்கள். முஸ்லிம்கள் மிகவும் காயமுற் றிருந்தமையால், அபூ' ஸுˉ'ப்யான் மீண்டும் திரும்பிவந்து

* "தன்மகன் கிடக்கை காணூஉ, ஈன்ற ஞான்றின் பெரிதுவந் தனளே!" என்று அன்றொரு புலவன் ஒரு தாயைக் குறித்துப் பாடியது இன்று எமது நினைவிற்கு வருகிறது.

விடுவானோவென்று ஒருசிறிது அஞ்சிக்கொண்டே யிருந்தார்கள். ஆனால், அபூ' ஸு'ப்யானும் கலக்கமுற்ற நிலைமையிலேயே தம்முடைய சேனையுடன் திரும்பிச் சென்றுகொண் டிருந்தார். உ'ஹத்' யுத்தகளத்தில் பெருங் குழப்பம் நேரிட்டபிறகு மதீனாநகர் தற்காப்பில்லாமலே திறந்துகிடந்தும், அபூ' ஸு'ப்யான் ஆங்குச் செல்லத் துணிந்தன ரில்லை. தாங்கள் தப்பிப் பிழைத்ததே தம்பிரான் புண்ணியமென் றெண்ணிக் கொண்டு, மக்காவை நோக்கிச் செல்லுவதிலேயே அந்தக் :குறைஷியர் பெருந்துரிதம் கொண்டிருந் தனர். எனவேதான், அவர்கள் முஸ்லிம்களை முற்றிலும் முறியடிக்கத் துணிந்து நிற்கவில்லை. தாங்கள் அம் முஸ்லிம்களைத் துரத்திக்கொண்டு மதீனாவிற்குள் செல்லநேர்ந்தால், தங்கள்கதி யாதாகுமோ வென்னும் பீதி யும் அவர்களை அதிகம் மக்காவின்பக்கல் துரத்திக்கொண் டிருந்தது. ஆத லின், அபூ' ஸு'ப்யான் நெடுந்தூரம் சென்று, ரௌ'ஹா என்னும் இடம் போய்ச் சேரும்வரை தங்களுயிர் தப்பினாலே போதுமென் றோடினார்கள். ஆங்குச் சென்ற பின்னர்த்தான் அபூ' ஸு'ப்யானுக்குத் தாம் உ'ஹது'க்குச் சென்ற காரியத்தைப் பூர்த்தி செய்யாது திரும்பி வந்துவிட்ட ஏமாற்றம் நினைவிற்கு வந்தது. இந் நிலைமையில் தாங்கள் வெற்றிபெற்று விட்ட தாக எவ்வாறு மக்காவிற்குப் போய்ப் பெருமைபாராட்டிக் கொள்ளுதல் சாலுமென்று சிந்திக்கத் தொடங்கினார். தங்களுடன் ஒரு யுத்தக் கைதி யைக்கூடக் கொண்டுசெல்லா திருக்கும்போது, இல்லை! அந்த யுத்தகளத்தி லிருந்து முஸ்லிம்களின் ஒரு பொருளைக்கூடக் கொள்ளைகொண்டு செல்ல முடியா திருக்கும்போது, எவ்வாறு தாங்கள் வெற்றிபெற்றதாகக் கூறிக் கொள்ளுதல் சாலும்? தங்கள் ஜயத்திற்குச் சாக்ஷியம் ஏது? முஸ்லிம்கள் யுத்தகளத்திலே இன்னம் தாமதித் திருக்கும்போது, எவ்வாறு தாங்கள் வெற்றி பெற்றதாகப் பெருமை கொள்ளுதல் கூடும்? முஸ்லிம்கள் யுத்த களத்தில் தாமதித்திருக்கும் போதே :குறைஷியர் அவ்விடத்தைவிட்டு ஓட் டம் பிடித்திருக்குங்கால், அதையொரு :குறைஷியரின் வெற்றியென்று எவ் வாறு எவரே கூறத் துணிவர்? மதீனாநகர் தற்காப்பில்லா திருந்தும், அத னைத் தாக்கவியலாது ஓடிப்போய் விட்டதுதான் அவர்களுடைய வெற்றி யாமோ? இவ்வாறு பற்பல விதமாக வெல்லாம் அந்தக் :குறைஷியர் ரௌ'ஹாவி லிருந்தே எண்ணிக்கொண் டிருந்தார்கள். அங்கிருந்து முன்னே செல்ல முடியாமலும் பின்னேபோக முடியாமலும் தள்ளாடிய மனத்துடன் தயங்கிக்கொண் டிருந்தபோது, முஸ்லிம்களைப் பற்றிய செய்தியொன்றும் அபூ' ஸு'ப்யான் செவியிற் பட்டது.

அதற்கிடையில், நபிகள் நாயகமும் அதுபொழுது ஓடிய :குறைஷியர் திரும்பிவந்து மீண்டும் யுத்தம் தொடங்கா திருக்கும்பொருட்டு அவர்களைத் துரத்திக்கொண்டு செல்ல ஆட்களுண்டோ வென்று மறுநாள் வினவி னார்கள். அதுகேட்டு, அன்றுவரை மதீனாவிற்குத் திரும்பாது உ'ஹதி'லே தங்கியிருந்த எழுபது முஸ்லிம்கள் கொண்ட சேனையொன்று முன்வந்து

நின்றது. அதில் 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் அவர்களும், 'ஜு'பை'ர் அவர்களும் சேர்ந்திருந்தார்கள். அம் முஸ்லிம்க ளனைவரும் முதல்நாள் கஷ்டத்தின்மேல் கஷ்டம் அனுபவித் திருந்தும், நபிகள்பெருமானது (சல்) கட்டளையைக் கேட்டவுடன் அனைவரும் அதில் சந்தோஷமாகச் சேர்ந்துகொண்டார்கள். அவர்க ளெல்லாரையும் நபிகள் திலகமே அழைத்துக்கொண்டு, மதீனாவிலிருந்து எட்டு மைல் தூரத்திலுள்ள 'ஹமராவுல் அஸத்' என்னும் இடம்போய்ச் சேர்ந்தார்கள். அதுபொழுது அங்கிருந்த ப'னூ கு''ஜாஆ' என்னும் கூட்டத்தினர் முஸ்லிம்களுக்கு நண்பர்களா யிருந்துவந்த காரணத்தினால், அவ்வர்க்கத்தின் தலைவரான மஃ'ப'த் கு''ஜாயீ' என்பவர் நபிகள் நாயகத்தைக் கண்டு சம்பாஷித்துவிட்டுப் பிறகு ரௌ'ஹாவிற்குச் சென்று, அபூ' ஸு'ப்யானையும் கண்டு பேசினார். அதுபொழுது அபூ' ஸு'ப்யான் மறுபடியும் திரும்பிச்சென்று முஸ்லிம்களைத் தாக்க எண்ணி யிருந்ததாய்க் கூறினார்; அது கேட்டு, அத் தலைவர் அவ்விதம் சென்று தாக்குவதில் ஒன்றும் பிரயோஜன முண்டாக மாட்டா தென்றும், முஸ்லிம்கள் மேலும் பரிபூரண ஆயத்தத்துடனே விஜயஞ்செய் திருக்கிறார்க ளென்றும் கூறிவிட்டார். இதனைக் கேட்டவுடன், அதற்கு முன்னமே ஊசலாடிக் கொண்டிருந்த அபூ' ஸு'ப்யானது உள்ளம் தளர்ந்து, ஊக்கமும் குன்றி, அவர் தம்படைகளை ஓட்டிக்கொண்டு மக்காவை நோக்கி விரைவாகப் புறப்பட்டு விட்டார். இவ்வாறு அத் தருணத்தில் முஸ்லிம் வீரர்கள் காட்டிய சாதுர்யத்தைப் பாராட்டி ஆண்டவனும் தன் திருமறையில் (3 : 153) சிரேஷ்டமாகக் கூறியிருக்கின்றான்.

உ'ஹது'க்குப் பின்னால் நபிகள்பிரான் (சல்) கு'ப்'பார்களின் சவங்களையும், அக் :குறைஷியர் முஸ்லிம்சரீரங்களை அங்கஹீனப்படுத்திச் சின்னபின்னமாக்கியதேபோல், முஸ்லிம்களைக் கொண்டு பழிக்குப்பழி வாங்கவேண்டுமென்னும் எண்ணத்துடன் சின்னபின்ன மாக்காதிருக்குமாறு எச்சரிக்கை செய்யும்பொருட்டு ஆண்டவன் தன் திருமறையில் (16 : 126) விவரமாகக் கட்டளை யிட்டுள்ளான்; அவ்விடத்தில், பொறுமையுடனே எதையும் சகித்துக்கொண் டிருக்குமாறு அறிவுறுத்தி யிருக்கின்றான் : பொறுமையை மேற்கொண்டால், அப்பொறுமையாளருக்கு அதுவே சர்வ சிலாக்கியமா யிருக்குமென்று நாம் அறிவிக்கப் பெறுகிறோம். எனவே, அம் முஸ்லிம்கள் அந்த யுத்தகளத்தில் காணப்பட்ட :குறைஷியர் சவங்களை யெல்லாம் ஒன்றும் ஊறு செய்யாது வாளா திரும்பிவிட்டனர்.

நம்பெருமானா ரவர்கள் (சல்) மதீனாவிற்குத் திரும்பியபோது, எங்கும் ஒப்பாரிக் குரலாகவே கேட்கப்பட்டு வந்தது; அதைக்கண்டு, நபிகள் திலகம், "என் செய்யலாம்! ஹம்'ஜாவுக்காக இரங்கிக் கண்ணீர்வடிப்பவர் எவரு மில்லையே!" என்று சொல்லிக் கொண்டே சென்றார்கள். அதுகேட்டு, எல்லா அன்சார்களும் தங்கள்வீட்டுப் பெண்மணிகளை யெல்லாம் நபிபிரான் விடுதிக்கனுப்பி, 'ஹ'ஜ்ரத் ஹம்'ஜாவுக்காகத் துக்கங்கொண்டாடும்

படி ஏவிவிட்டார்கள். உடனே நபிகள் திலகம் அதனைக்கண்டு, ஒருவரும் ஒருவருக்காகவும் ஓலமிட்டழ வேண்டாமென்று தடுத்து விட்டார்கள். மரித்தோருக்காக மார்பிலறைந்துகொண் டழுவதும், தலைமயிரை விரித்துக் கொண்டு மண்டையிலடித்துக் கொள்வதும், உரத்த குரலால் ஓலமிட்டு ஒப்பாரிவைத்துப் பலாக்கணம் பாடுவதும் அஞ்ஞானமாக்களின் அறிவிலாச் செய்கையெனக் கொண்டு, அவ்வாறெல்லாம் செய்யாவண்ணம் நபிகள் பிரான் (சல்) முஸ்லிம்களை அன்றுமுதல் தடுத்துவிட்டார்கள். ஆயின், மரித்தோருக்காக மௌனக்கண்ணீர் உகுப்பது குற்றமன்று.

உண்மையில் விஷயத்தின் அந்தரங்கத்தை அறிந்துகொள்ள முடியாதவர்களே உ'ஹுதி'ன் யுத்தத்தில் முஸ்லிம்களுக்குத் தோல்வி கிடைத்ததென்று கூறிக்கொண் டிருப்பார்கள். அதுசமயம் அம் முஸ்லிம்களுக்கு நேரிட்ட உயிர்ச்சேதமும் பொருள் விரயமும் அதிக மென்றுதான் கூற வேண்டும்; ஆனால், அதன் பயனாய் அம் முஸ்லிம்களுக்குப் பிற்காலத்தில் நிகழவேண்டி யிருந்த சம்பவங்க ளனைத்தையும் உற்று நோக்குங்கால், உ'ஹுத்'யுத்தம் உண்மையிலே முஸ்லிம்களுக்கு யாதொருவித நஷ்டத்தையும் விளைத்து விட்டதாகவே கூறுவது கூடாதாகும். தோல்வியுற்றவர்கள் போர்க்களத்தி லிருக்கும்போது, வெற்றி யடைந்தவர்கள் அப் போர்க்களத்தை விட்டு ஒருவரையும் சிறை வாராமலே ஓட்டம் பிடிப்பதென்னும் சம்பிரதாயத்தை நீங்கள் எந்த யுத்தத்திலாவது கேள்வியுற்றிருக்கின்றீர்களா? இன்னமும், தோல்வியுற்றவர்கள் மறுநாள்வரை அவ்விடத்திலேயே தங்கியிருந்து மிக்க தைரியத்துடனே வெற்றிகொண்டவர் செல்லும் மார்க்கத்தில் அன்னவரைத் துரத்திகொண்டு செல்லவும், அச் செய்தி கேட்டு அந்த "ஜயபேரிகை கொட்டியவர்" திகில் கொண்டு தம்மூரை நோக்கி ஓட்டம் பிடிக்கவும் அத்துணை அசம்பாவிதமான செய்கைகள் நடைபெறுவ தென்பதையும் இவ்வுலகிலுள்ள எந்தப் போர்க்களத்திலேனும் நீங்கள் கேட்டிருக்கின்றீர்களா? உ'ஹுதி'ல் முஸ்லிம்கள் பெருஞ்சேதமடைந்தார்கள்; பெரும்பெரும் போர்வீரர்க ளெல்லாரும் ஊறுபட்டார்கள்; நபிகள்பெருமானும் (சல்) ஒரு தந்தமுதிர்ந்து பெருங்காயம் பெற்றுக் கொண்டார்கள். இன்னமும், அன்னவர்கள் கொல்லப்பட்டும் விட்டார்களென்னும் பொய்வதந்தியும் கிளம்பி விட்டது. அவ்வளவுடனே முஸ்லிம்களின் தீபமும் அணைக்கப்பட்டு விட்டதே போலத்தான் ஆண்டுக் காணப்பட்டு வந்தது; தீ'னுலிஸ்லாத்தின் சீரிய சூரியனும் மந்தாரத்துள் மறைந்து மழுங்கிவிட்டதே போலும் முற்றிலும் தோற்றிற்று.

இவ்வளவும் நபிகள் பிரானது திவ்விய சரித்திரத்தில் நடைபெற்றாக வேண்டுவது அத்தியாவசிய மாகவேதான் காணப்பட்டு வந்தது. நபிகள் பெருமான் (சல்) ஒருகால் கொல்லப்பட்டே போயினும், அப்பொழுதும் முஸ்லிம்கள் அதன் நிமித்தம் அதைரியங் கொண்டுவிடக் கூடாதென்று ஆண்டவனே தன் திருவேதத்தில் (3 : 143) குறிப்பிட்டுக் கூறியுள்ளான்.

ஏனென்றால், மு‘ஹம்மது’ம் (சல்) உங்களைப்போன்ற ஒரு “மனிதரே” யாதலின், அவர் எப்பொழுதும் “சிரஞ்சீவி”யா யிருப்பது இயலாதன்றே! எனவே, அவர் இருந்தாலும் இறந்தாலும், எப்படிப்பட்ட சந்தர்ப்பத்திலும் நம் முஸ்லிம்கள் மனந்தளரக் கூடாதென்னும் படிப்பினையை இதினின்று மிகச் செவ்விதாய்க் கற்றுக் கொள்ளுகிறார்கள். வேண்டுமாயின், எதிரிகள் அதுசமயம் அம் முஸ்லிம்களுக்கு நேர்ந்த கஷ்ட நஷ்டத்தைக் குறித்துப் பரிகாசமாய்ப் பேசிக்கொண் டிருக்கலாம். ஆனால், தீ’னுல்இஸ்லாமோ, அதற் கெல்லாம் சற்றும் அஞ்சுவது கிடையாது. இதற்கு இடைநடுவே எத்துணைப் பெரிய இன்னல்களும் இடையூறுகளும் சம்பவிக்க நேரினும், இறுதியிலே அவையனைத்தும் இஸ்லாத்திற்கு மறைமுகமான ஓர் ஆசீர்வாத மாகவே வந்து முடிவடைகின்றன.

இன்னம், வேறுசில படிப்பினைகளையும் இந்த உ‘ஹுதி’ன் முடிபி லிருந்து நாம் தெரிந்து கொள்ளுகிறோம்: நபிகள் நாயகத்தின் ஆரம்பக் கட்டளையை அந்த மலைக்கணவாயில் வைக்கப்பட் டிருந்த 50 வில்வீரர் களுள் பெரும்பான்மையினர் உல்லங்கனம் செய்ததனால்தான் இப்படிப் பட்ட இக்கட்டுக்க ளெல்லாம் நேரிட்டுவிட்டன வென்பதை அம் முஸ்லிம் தோழர்க ளனைவரும் நன்குணர்ந்து கொண்டு விட்டார்கள். அதன்பின்பு அவர்களெல்லாரும் நபிகள் பெருமானது உத்தரவை ஒருசிறிதும் உல்லங் கனம் செய்வது கூடாதென்று நன்கறிந்து கொண்டு விட்டார்கள். தம் முடைய உயிர்க்கிறுதி வருவதா யிருப்பினும், இனியொருகாலும் நபிபெரு மானரது ஆணையை அணுத்துணையும் அலக்ஷியம் செய்யவே மாட்டார்கள். மேலும், அம் முஸ்லிம்களுக் குள்ளே உண்மையான உறுதியுள்ளவர்கள் இன்னாரினையா ரென்பதும், உபயோகமற்ற நயவஞ்சகர்கள் இன்னாரினையா ரென்பதும் இந்த யுத்தத்திலிருந்து மிகவும் விகசிதமாக வெளிப்பட்டு விட்டன. அ’ப்’து’ல்லா பி’ன் உபை’ ஸலூல் போன்ற முனா‘பி:க்குகள் இத்தன்மைத்தாய சமயதுரோகிக ளென்னும் செய்தி அன்றுதான் பட்டப் பகல்போலே வெட்டவெளிச்ச மாயிற்று.

“கேட்டினும் உண்டோர் உறுதி கிளைஞரை
நீட்டி அளப்பதோர் கோல்,”—

என்றார் குறளுடைப் பெரியாரும்.

ஆனால், மெய்யான மூமின்க ளெல்லாரையும் அல்லா(ஹ்)வும் ரஸூலும் அடியுடன் மன்னித்தே விட்டார்கள்.

“அவர்கள் சொன்னார்கள்: ‘எங்கள் ரக்ஷகா! எங்களுக்கே யாங்கள் அநியாயம் புரிந்துவிட்டோம்; இன்னம், எங்களை நீ மன்னித்து, எங்களுக் குக் கருணையும் காண்பிக்கவில்லை யாயின், நாங்கள் நிச்சயமாகவே நஷ்ட வாளிகளுள்ளே ஆய்விட் டிருப்போம்.’”— (7 : 23)

இந்த ஹிஜ்ரீ 3-ஆவது ஆண்டிலேதான் இமாம் 'ஹஸன் (ரலி) அவர்கள் ரமலா'ன்மீ 15உ யன்று ஜனன மாயினார்கள். இன்னம், இவ்வருஷத்திலே தான் வாரிஸ்கிரம பாத்யதையைப் பற்றிய சட்டமும் வெளியிடப்பட்டது. விக்ரஹ வணக்கக்காரர்களின் பெண்களை முஸ்லிம்கள் விவாகம் செய்து கொண்டுவந்த பழைய வழக்கமும் அடியுடனே நிறுத்தப்பட்டுப் போய் விட்டது இவ் வாண்டிலேதான்.

---

# அதிகாரம் — 25

## முஸ்லிம்களும் அ'ராபி'க் கூட்டத்தவர்களும்

**"அவர்கள்மீது அவன் கருணையுடனே திரும்பினும், அல்லது அவர்களை வேதனைப் படுத்தினும், அக்காரியத்தினின்று உமக்கொன்றும் சம்பந்த மில்லை; என்னெனின், அன்னவர்கள் நிச்சயமாக அநியாயக்காரர்களா யிருக்கிறார்கள்."— (3 : 127)**

ஹிஜ்ரீ நான்காவது ஆண்டின் ஆரம்பத்திலே அரப் நாட்டில் இரண்டொரு வர்க்கத்தினரைத் தவிர்த்து, ஏனைக் கூட்டத்தின ரெல்லாரும் இஸ்லாத்தின்மீது இனியில்லாப் பகைமை பூண்டவர்களாகவே யிருந்து வந்தார்கள். விக்கிரஹ வணக்கத்தையே தங்கள் பூர்விக மார்க்கமாகக் கொண்டிருந்த அவ் அராபியரின் அபிப்பிராயத்தில் தீ'னுல் இஸ்லாம் அவ் விக்கிரஹத் தொழும்பையே அடியோடு அழிக்க முயன்று வருவதாகக் கருதப்பட்டதுதான் அக் :குறைஷியரின் விரோதத்திற்கு முக்கிய முதற் காரணமாய்க் காணப்பட்டு வந்தது. எனவேதான், அம் மக்கத்துக் :குறைஷி மறமாக்கள் ஏனை யெல்லா வர்க்கத்தினரையும் இஸ்லாத்திற்கு விரோதமாய்க் கிளப்பிவிட்டுக் கொண்டே யிருந்தார்கள். எத்தகைய சட்டக் கட்டுப்பாட்டிற்கும் சிறிதும் அடங்கிநடவாமல் அயலவர் பொருளை யெல்லாம் அலக்ஷியமாக அபகரித்துக்கொண்டு, தங்கள் காலமுழுதையும் தீய வழியிலேயே செலவழித்துவந்த அந்தக் காட்டரபிகளின் ஒழுக்க வழக்கங்க ளனைத்தையும் கண்டித்து, அத்தகைய தீய நெறிகளை யெல்லாம் அடியோடு கைவிட்டு விடுமாறு நம் தீ'னுல் இஸ்லாம் போதித்துவந்தது அவர்களுடைய பகைமைக்கு மற்றொரு காரணமாகும். ஆனால், ப'த்'ரின் யுத்தகளத்தில் அம் முஸ்லிம்களுக்குக் கிடைத்த இணையில்லா வெற்றியைக் கண்டு, அத்தேயத்து மக்களெல்லாரும் அதிகம் திகில்கொண்டு, தங்கள் விரோதத்தை வெளியிற் காட்டாமல் வாளா இருந்துவந்தார்கள்; ஆயின், உ'ஹுத்' யுத்தத்தில் முஸ்லிம்களுக்கு நேரிட்ட கஷ்ட நஷ்டங்களைக் கண்ட

வுடனே அவ்வராபியருக் கெல்லாம் பொதுவாகவே முஸ்லிம்கள்மீ திருந்து வந்த அச்சம் அடியோடு நீங்கிவிட்டது. அதன் பயனுக அவர்களுள்ளே வெவ்வேறு வர்க்கத்தினரும் அம் முஸ்லிம்களைப் பகிரங்கமாக இனித் தாக்கத் துணிந்துவிட்டார்கள்.

மக்கத்துக் :குறைஷியர் இப்புதிய மார்க்கத்தை அடியோடு கரு வறுத்துவிடவே உறுதிகொண் டிருக்கிறுர்க ளென்றும், இன்றேல் மிக மிகப் பெரிய படைகளை யெல்லாம் அன்னவர் திரட்டிக்கொண்டு வந்து இவ்வாறெல்லாம் யுத்தங்கள்பல புரியவேண்டிய அவசியமொன்று மில்லை யென்றும் ஏனைய வர்க்கத்தின ரெல்லாரும் இதுசமயம் நன்கு தெரிந்து கொண்டு விட்டார்கள். இனிமேல் முஸ்லிம்களின் வாலொன்றும் ஆட்டப் பட மாட்டாதென்றும், அவ்வாறு தீனுல் இஸ்லாம் அடியோடு அழிந்து போகுங் காலையில் தாங்களும் அந் நன் முயற்சியில் பங்கெடுத்துக்கொள்ள வேண்டுமென்றும் அவரவரும் ஆங்காங்குத் தீர்மானித்துக் கொண்டு விட்டார்கள். இதனுல் மதீனுவைச் சூழ்ந்துள்ள ஒவ்வொரு மூலை முடுக்கி லிருந்தும் பற்பல அராபிக் கூட்டங்களெல்லாம் இஸ்லாத்தின்மீது வர்மங் கொண்டு படையெடுக்கத் தலைப்பட்டு விட்டன. ஆதலினுல்தான், இவ் வருடத்திலே பற்பலவிதமான சிறுசிறு சண்டைகளெல்லாம் நடைபெற லாயினவென் றறியக்கடவீர்கள்.

மனிதர்களின் ஒழுக்கத்தை விழுப்பஞ் செய்வதும், அன்னவரின் ஆத் மார்த்த காரியங்களை அபிவிருத்தி யடையச் செய்வதுமே நபிகள் நாயகத் தின் முக்கிய நோக்கமாய்க் காணப்பட்டுவந்த தென்பதை நீங்களெல்லீரும் நன்கறிந்துகொண்டே யிருக்கிறீர்கள். ஆதலின், முஸ்லிம்க ளல்லாதாருடன் யுத்தம் புரியவேண்டு மென்பதே அன்னவரின் ஒரு முக்கியத் தொழிலாய் அமைந்தில்லை யென்பது சத்தியமே யாகும். ஆனுல், அவர்களுடைய மிகப்பெருங் காரியமான இஷாஅ'த்துல் இஸ்லாம் ஊழியம் இதுபோது காணப்பட்டுவரும் ஒருசிறு தொகுதியினரால் மிகவெளிதில் முடிவடைந்து விடக்கூடிய சாதனையாய்க் காணப்பட வில்லை. அம் முஸ்லிம் சிறுபான்மை யோர் ஏனையோரை யெல்லாம் இஸ்லாத்தின் எல்லைக்குள் கொண்டுவந்து சேர்ப்பது பிறகிருக்கட்டும்; இதுபொழுது அம் முஸ்லிம்கள் தங்கள் நிலை மையைத் தற்காத்துக் கொள்ளவேண்டு மென்பதே ஒரு முக்கிய முதற் கடமையாய் மாறிவிட்ட தென்னலாம். எனவே, அச்சிறு தொகுதியினரின் பாதுகாப்பினிமித்தம் நபிகள்திலகம் எல்லாவிதமான ஏற்பாடுகளையும் முன் னெச்சரிக்கையுடனே செய்துகொள்ள வேண்டியவர்களாய் விட்டார்கள். இவ்வாறு அதுபொழுது தக்க பந்தோபஸ்து செய்துகொள்ள வேண்டுவது அத்தியாவசிய மில்லையென்று நீங்கள் இதுபொழுது எண்ணுகின்றீர்கள்? நபிகள் பெருமான் (சல்) கொண்டுள்ள ஏகதெய்வ மூலக் கொள்கைக்கே முரண்பாடு விளைந்துவருதலினுல், அம்முட்களை யெல்லாம் அப்புறப்படுத்த வேண்டுவது அன்னவரின் முழுநோக்கமாய்க் காணப்பட்டே வந்தது.

இன்னம், நபிகள்பெருமானாரே அச்சிறு முஸ்லிம் சமுதாயத்தின் தலைவ ராய் விளங்கிவந்த காரணத்தினால் அம்மக்களின் சுகதுக்கங்களைப் பற்றிய பொறுப்பெல்லாம் அன்னவர்மீதே சார்ந்திருந்தன வென்னலாம். சமுதாயத் தால் விளையும் நன்மைகளைமட்டும் பங்கிட்டுக்கொண்டு, அன்னவருக்கு நேரும் கஷ்டநஷ்டங்களை யெல்லாம் கவனியாதிருக்கும் தலைவன் ஓர் அதம னென்றே கருதப்படுவான்; ஆனால், உத்தமத் தலைவனோ, தன்னுயிரைப் பார்க்கினும் மன்னுயிரையே அதிகம் ஓம்பி, அச்சமூகத்திற்கு விளையும் இன்னல்களையும் இடையூறுகளையும் அடியோடு நீக்குவதிலேயே கண்ணுங் கருத்துமாய் இருந்துவருவான்.

“ குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு,”— என்பது குறள்.

எனவே, இவ் விஷயத்திலும் நம் நபிகணாதர் எல்லாருக்கும் ஒரு முன் மாதிரியாகவே இருந்துவந் திருக்கிறார்கள். எனவே, அம் முஸ்லிம் தொகுதி யினரின் க்ஷேமலாபங்க ளனைத்தையும் காப்பாற்ற வேண்டுவது எம்பிரான் மீது ஒரு பெருங் கடமைபாய் வந்து விளைந்துவிட்டதென்றே கூறியமைதல் வேண்டும்; ஆதலின், அவர்கள் அக்கணமே அதற்கு வேண்டிய ஏற்பாடுக ளனைத்தையும் இயற்றுவிக்கத் துணிந்துவிட்டார்கள். எம்பிரான் அவர்கள் இத் தாரணியின்கண் வேறொன்றும் செய்யாது, இக் குடியோம்பும் பரி பாலன மொன்றையே மேற்கொண் டிருந்திருப்பார்க ளாயினும், அப் பொழுதும் இவ்வுலக மன்னர்க ளெல்லாரும் அன்னவரின் பாதத்தடியிலே குந்திப் படித்துக்கொள்ள வேண்டிய படிப்பினைகள் அனந்த மிருக்கும் என்றே யாம் கூறிமுடிப்பாம்.

தங்களுடைய சிஷ்யர்கள் மதீனாவைச் சூழ்ந்து நானா பக்கங்களிலும் முற்றுகை போடப்பட்டதே போல் சுற்றிக்கொள்ளப்பட் டிருந்தார்கள். ஆதலின், அன்னவரின் உயிர்வாழ்க்கையே இரவுபகலாக ஒன்றும் புலப் படாது ஊசலாடிக்கொண் டிருந்தது. ஆயினும், நபிகள் திலகத்தின் கூரிய முன்யோசனையும், ஆழிய சுயநலத் தியாகமுமே அச்சிறு கூட்டத்தினரின் துன்பங்க ளனைத்தையும் ஒருவாறு ஒழித்துவிட்டன வென்னலாம். நபிகள் திலகத்தின் தீர்க்காலோசனையும் தியாக புத்தியுமே அம் முஸ்லிம்களுக்கு இறுதியில் வெற்றிமாலையைக் கொண்டுவந்து சூட்டியதென்று பின்வரும் சம்பவங்களிலிருந்து செவ்விதில் தெரிந்துகொள்ளக் கடவீர்கள். ஒரு ஜாதியாரை உச்சத்துக்குக் கொண்டுவருவ தென்பது மக்களின் சரித்திரத் தில் மகா கீர்த்திவாய்ந்த ஒரு காரியமாயே கருதப்படாநின்றது; ஆனால், நபிகள் பெருமான் அந்த அரப் ஜாதியாரை அதியுச்சத்துக்குக் கொண்டு வந்த விஷயத்தில் பட்டபாடுகளை யெல்லாம் உற்றுநோக்குங்கால், இப்படிப் பட்ட சிரமமானது வேறெந்த ஜாதியாரின் சரிதையிலும் காணப்படவில்லை யென்றே கூறியமைதல் வேண்டும்.

உ‘ஹுத்’ யுத்தத்தின் முடிபைக் கண்டவுடன் மதீனாவிலுள்ள யூதர்களெல்லாரும் தங்களுடைய உடன்படிக்கையைச் சிறிதும் இலக்ஷியஞ் செய்யாது, முஸ்லிம்களுக்குப் பற்பல வகையாலும் துன்பம் விளைக்கக்கூடிய மார்க்கத்தா லெல்லாம் :குறைஷியருக்குத் தூண்டுதல் புரிந்துகொண்டே வந்தார்கள். இஃதல்லாமல், முஸ்லிம் முனா‘பி:க்கீன்களின் நயவஞ்சகக் கள்ளத்தனம் மிகவும் பஹிரங்கமாய் வேலை செய்துவரத் தலைப்பட்டு விட்டது ; முஸ்லிம்களுக்கு எவ்விதத்தாலும் இன்னல் விளைப்பதே அந்த ஆஷாடபூதிகளின் நித்தியத் தொழிலாய்க் காணப்பட்டு வந்தது. உ‘ஹுது’க்குப்பின்னர் முஸ்லிம்கள் நசித்துப்போக வேண்டிய நிலைமைக்கே இழிந்து விட்டார்க ளென்று எண்ணிக் கொண்டிருந்த ஏனைய அராபிக் கூட்டங்களெல்லாம் இஸ்லாத்திற்கு இறுதிப் பூசையைக் கொடுத்து விடுவதென்றே இதுசமயம் தீர்மானித்துக்கொண்டு விட்டன. எனவே, மதீனாவின் உட்புறத்திலேனும், அதைச் சூழ்ந்துள்ள வெளிப்புறத்திலேனும் முஸ்லிம்களுக்குப் பாதுகாப்பென்பது ஒருசிறிதும் இல்லாம லிருந்துவந்தது. ஒவ்வொரு நாளும் இஸ்லாத்தின் விரோதிகள் இந்த மூலையிலிருந்து வருகிறார்களென்றும், அந்த மூலையிலிருந்து வருகிறார்களென்றும் அதிபயங்கரமான சமாசாரம் மதீனாவிற்குள் வந்து எட்டிக்கொண்டே யிருந்தன. எனவே, அஃதோர் அபாயகரமான வேளையாகவே அதிகம் காணப்பட்டு வந்தது.

ஆதலின், முஸ்லிம்கள் ஆயுதந் தரிக்காமல் ஒருபொழுதும் வெளியில் செல்வதென்பது ஒருசிறிதும் முடியாத காரியமாகவே போய்விட்டதெனல் வேண்டும். தொழுகையின் வேளைகளிலும், இன்னம், இராக் காலங்களிலுங்கூட அம்முஸ்லிம்கள் தங்கள்பா லிருந்துவந்த ஆயுதங்களைக் கழற்றி அப்பால் ஒதுக்கி வைக்க இயலாதவர்களாகவே இருந்து வந்தார்கள். இறுதியில் அவர்கள் தங்களுக்கு ஏற்பட்டிருந்த இம்சையைச் சகிக்கமாட்டாது, தங்கள் ஞானாசிரியரிடம் சென்று, தம்முடைய இக்கட்டான சிக்கல் நிலைமையைப்பற்றி முறையிட்டுக் கொண்டார்கள். நபிகள்பெருமான் (சல்) சமாதான காலம் சமீபத்திலே வந்துவிட்டதென்று கூறி, அடிக்கடி அந்தச் சிஷ்யகோடிகளுக் கெல்லாம் ஆறுதன்மொழி கூறித் தேற்றிவருவார்கள். அவர்களும் மற்றெல்லா ச‘ஹாப’ாக்களையும் போலவே முழு ஆயுதபாணியாய் நின்று, அத் தோழர்களுக்கு நேரவிருந்த அதிபயங்கர அபாயங்களனைத்தையும் தக்க தீர்க்கதிருஷ்டியுடனே தடுத்துக் கொண்டே வந்தார்கள். ஒரு நாள் வைகறை யாமத்தில், நன்றாக விடியுமுன், மதீனாவின்கண் திடுமென ஒருவகை அல்லோல கல்லோலக் குழப்பம் ஏற்பட்டுவிட்டது ; அந்நகரத்தைத் தாக்கும் பொருட்டோ, அல்லது சூறையாடும் பொருட்டோ எவனோ ஒருவன் நடுநகருக்குள் வந்து புகுந்துவிட்டா னென்றே அந்தப் பேரமளி கிளப்பி விடப்பட்டது. உடனே ஒவ்வொரு திக்கிலிருந்தும் முஸ்லிம்கள் ஓடிவந்து தற்காப்பினிமித்தம் நகருக்கு வெளியில் எதிர்த்துச் செல்லப் புறப்பட்டார்கள். ஆனால், அதுசமயம் அவ் அரை வெளிச்சத்தில்

ஒரு மானிட உருவம் ஒரு குதிரைமீதூர்ந்து எதிரே வந்துகொண் டிருந்தது. அவ்வடிவம் யாரென நீங்கள் நினைக்கின்றீர்கள்? மதீனாவின் எல்லைப்புறங்களையெல்லாம் அவ்விராப்பொழுது முழுதும் சுற்றித் திரிந்து காவல் புரிந்துவிட்டு, அம் “மனிதன்” ஒரு கலணையுமில்லாக் குதிரையின்மீது (அதுவும் 'தல்‘ஹாவின் அசுவத்தின்மீது) ஆரோகணித்தவராய்த் திரும்பி வருவதைக் கண்டார்கள். அவர்தாம் நபிகள் நாயகம்! ஆகவே, அவர்கள் புன்முறுவல் பூத்த வதனத்துடனே அச் சிஷ்யர்களை நோக்கி, ஒன்றும் அபாயமில்லை அவர்களால். ஆதலின், ஒருவரும் கிலேசங்கொள்ள வேண்டாமென்றும் தைரியம் கூறினார்கள். எனவே, எங்கள் நபிகள் திலகம் (சல்) தங்கள்சிஷ்யர்களெல்லாரைக் காட்டினும் தாங்களே அளவிறந்த ஞானமேதாவி யென்பதை எல்லாருக்கும் நன்கு விளக்கிக் காட்டியதோ டமையாது, அவர்கள் ஒவ்வொருவரைப் பார்க்கினும் தாங்களே எத்தகைய அபாயத்தையும் சிறிதும் பொருட்படுத்தாத மஹா தீரபுருஷர் என்பதையும் அடிக்கடி வெளிப்படுத்திக்கொண்டே வந்தார்கள்.

“ தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீங்கா நிலன்ஆள் பவற்கு,”— என்பது குறள்.

சுருங்கச் சொல்லி விளங்க வைக்க வேண்டு மாயின், மதீனுமாநகர் அதுசமயம் அப்படிப்பட்ட கலவரங்களுக் குள்ளேயே அடிக்கடி சிக்கிச் சுழன்றுகொண் டிருந்ததென்பது அப்போதைய சரித்திரத்தால் நன்கு விளங்கக் கிடக்கின்றது. அம் முஸ்லிம்கள் அல்லுபகலாக உருவிய வாளுடனேயே தங்களையும் தங்கள் பெண்டு பிள்ளைகளையும் ஓயாது தற்காத்து வந்தார்கள். ஆதலின், அம் மதீனாவின்மீது தாவிவரும் ஒவ்வோர் எதிர்ப்பையும் அப்போதைக் கப்போது அடி முளையிலேயே கிள்ளியெறிய வேண்டிய அத்தியாவசியம் அவர்களுக்கு அடிக்கடி ஏற்பட்டுக்கொண்டேயிருந்தது. என்னெனின், மதீனாவைச் சூழ்ந்துள்ள பகுதிகளில் எங்கேனும் சிறிது சங்கடம் நேரிடுகிறதென்னும் செய்தி யெட்டிவிடுமாயின், உடனே மதினாவின்மீது படையெழுச்சி யொன்று புறப்பட்டு விட்டதென்றே கருத வேண்டிய காலமா யிருந்துவந்தது அவ்வபாய வேளை. எனவே, அக்குழப்பத்தை யடக்கும் பொருட்டு மதீனாவிலிருந்து அக்கணமே சில முஸ்லிம்கள் அனுப்பப்பட்டு வந்தார்கள். இவ்வாறு அடிக்கடி சமயோசிதம் போலே செய்து வந்ததனால், பெரும் பெரும் யுத்தங்களாய் வந்து மூண்டு கொள்ளவேண்டியிருந்த சிறுசிறு கிளர்ச்சிகளனைத்தும் அப்பொழுதைக் கப்பொழுதே அடியோடு அடக்கி யொடுக்கப்பட்டு வந்தன வென்னலாம்.

ஆனால், இவ்விஷயத்தின் உண்மையை உள்ளவாறு உணரமாட்டாத பொருமைக் குணம் குடிகொண்ட பொல்லாத எதிர்மத வாதிகளே இஸ்லாத்தை வாள்முனையால் பரத்தும்பொருட்டே நபிகள்நாயகம் அந்தப் படைகளை யெல்லாம் அடிக்கடி வெளியில் அனுப்பி வந்தார்க ளென்று

மூடத்தனமாகக் கூறத் துணிவார்கள். அவர்கள் கூறுவனவெல்லாம் அது சமயம் மதீனாவில் காணப்பட்டு வந்த உண்மை நிலைமைக்கு முற்றும் மாற்ற மாகவே காணப்படாநின்றது. வாள்முனையைக் கொண்டு இஸ்லாத்தைப் பரத்துமாறு ஆண்டவன் ஒருபோதும் தன் திருநபிக்குக் கட்டளையிட்டதே யில்லை; ஆகவே, நம் நபிகள் திலகமும் ஒருமுறையேனும் ஒருவரையேனுங் கூட வாள்முனையின் உதவிகொண்டு இஸ்லாத்தை அங்கீகரிக்குமாறு வற்புறுத்திய தில்லை; வாயாற்கூட வற்புறுத்தியது கிடையாது. எனவே, ரஸூலுல்லா அவர்களின் எந்தப் படையெடுப்பும் இஸ்லாத்தின் பிரசாரத் துக்காக வலியக் கிளப்பப்படவே யில்லையென்பது ஒருதலையாகும். இதற்குச் சரித்திரமே சான்று பகரும். :குர்ஆன், 2 : 256 ம், "மத விஷயத்தில் பலவந்தம் வேண்டாம்," என்றே கூறுகின்றது; இன்னம், "உங்களுடைய (இணைவைப்பதன்) பிரதிபலன் உங்களுக்காக இருக்கும்; மேலும், என் னுடைய (தீ'னின்) பிரதிபலன் எனக்காக இருக்கும்," என்னும் :குர்ஆன் திருவாக்கியத்தையும் (109 : 6) கூர்ந்து கவனிப்பீர்களாக.

ஹிஜ்ரீ 4, முஹர்ரம் முதற் றேதியன்று 'தல்'ஹா, கு'வைலித்' என்னும் இரு தலைவர்கள் தங்கள் கூட்டத்தினரை மதீனாவின்மீது படையெடுத்துச் செல்லுமாறு கிளப்பிவிட்டார்கள். அதுசெய்தி தெரிந்து, நபிகள்நாயகம்(சல்) அபூ'ஸல்மா என்னும் தலைவரின்கீழ் முஹாஜிரீன்களும் அன்சாரிய்யீன்களும் சேர்ந்த 150 படைவீரர்களை அனுப்பி வைத்தார்கள். இதுசெய்தி கேட்ட வுடன் அங்கு எதிர்த்துவந்த கூட்டத்தினர் அம் முஸ்லிம்களைச் சந்திக்கா மலே ஓட்டம்பிடித்து விட்டார்கள். அதே ஆண்டின் அதே மாதத்திலே ல'ஹ்யான் கூட்டத் தலைவனான ஸு'ப்யான் பி'ன் க'ாலித்' என்பான் மதீனா வின்மீது தன்சேனையைத் திரட்டிக்கொண்டு வந்தான். அது தெரிந்து, முஸ்லிம் தலைவராய்ச் சென்ற அ'ப்'து'ல்லா பி'ன் அ'னீஸ் என்பார் மிகத் தந்திரமாக அவ் வெதிரியைக் கொன்றொழித்து விட்டார்.

ஆனால், இஸ்லாத்தின் பிரசாரத்திற் கென்று நபிகணாதர் அடிக்கடி தங்கள் ச'ஹாப'ாக்களை அக்கம் பக்கத்தி லுள்ள வர்க்கத்தினரிடமெல்லாம் சாதாரணமாக அனுப்பி வைப்பது ஒரு சர்வசாதாரண வழக்கமா யிருந்து வந்தது; ஆதலின், :குர்ஆன் ஷரீ'ப மனப்பாடம் பண்ணியிருந்த அத் தோழர்க ளெல்லாரும் அடிக்கடி வெளியில் சென்று இஸ்லாமதக் கொள் கைகளைப் பற்றி உபதேசம் புரிந்து வருவார்கள். எனவே, சிற்சில துரோக சிந்தனையுள்ள எதிரிகள் அத்தகைய முஸ்லிம் உபதேசகர்களைத் தங்கள் வர்க்கத்தினருக்கு இஸ்லாத்தின் தத்துவத்தைப்பற்றிப் போதிக்கவேண்டு மென்னும் சாக்குப்போக்குக்களைச் சொல்லி அழைத்துக் கொண்டுபோய், தங்கள் கைவயம் சிக்கவைத்துக் கொண்டு, சற்றும் இரக்க மில்லாமலே கொன்றுதீர்த்து விடுவார்கள்.

ஆகவே, அவ்வருஷம் ச'பர் மாதத்தில் ப'னீ கிலாப்' வர்க்கத்தின் தலைவனான— (ப'னீ ஆ'மிர், ப'னீ ஸுலைம் என்னும் வர்க்கங்களின் தலைவு

னென்றும் வேறு சிலர் கூறுவர்) அபூ'ப'ரா என்பவன் நபிகள் பெருமா னிடம் சில்வகைச் சம்மானங்களுடன் விஜயஞ்செய்து, தன் இனத்தவர்களை இஸ்லாத்தில் திருப்பும்பொருட்டு அன்னவருக்கு இம் மார்க்கக் கொள்கை களைப் போதிப்பான்வேண்டிச் சில ஆசிரியர்களை அனுப்பிவைக்க வேண்டு மென்று வேண்டிக் கொண்டான். ஆனால், நபிகள்பெருமான் (சல்) அவன் கொணர்ந்திருந்த சம்மானம் ஒன்றையும் ஏற்றுக்கொள்ள மனமில்லாது, நஜ்தி'ன் மக்களிடத்தே தங்களுக்கு நல்ல நம்பிக்கை யில்லையென்று கூறி னார்கள். அதைக்கேட்டு, அபூ'ப'ரா முஸ்லிம் பிரசாரகர்களின் பாதுகாப் புக்குத் தானே உத்தரவாதி யென்று உறுதி கூறியதன்மேல், பரநலப் பற்றையே மேற்கொண் டொழுகிவந்த பரிசுத்த ஹிருதயமுள்ள எழுபது அன்சாரிய்யீன்களை அவனுடன் நபிகள்நாயகம் ஒன்றும் ஐயங்கொள்ளாது அனுப்பி வைத்தார்கள்; அம் முஸ்லிம்கள் பெரும்பாலும் அஸ்''ஹாபு'ஸ்' 'ஸுப்'பாக்களாகவே காணப்பட்டு வந்தார்கள். அவர்க ளெல்லாரும் ப'னீ கிலாப்' வசித்துவந்த இடத்திற்கு வெளியில் பீ'ர்மஊ'னா என்னும் இடம் சென்றவுடன் அங்கேயே தங்கிவிட்டார்கள். உடனே அபூ'ப'ரா நாயகத்தின் திருமுகத்தை 'ஹராம் பி'ன் மல்ஹானிடம் கொடுத்து, ஆ'மிர் பி'ன் துபை'லிடம் சேர்ப்பித்து வருமாறு அனுப்பி வைத்தான். அதற்கு முன் அந்த ஆ'மிர் பி'ன் துபை'ல் ரஸூல் நாயகத்திற்கு ஒரு நிருபம் எழுதி யிருந்தான். அதில் பட்டிக்காடுகளுக் குரிய தலைமைப் பதவியை நபிக ளுதரே வைத்துக் கொள்ளட்டு மென்றும், நகரங்களுக்குரிய அரசுரி மையைத் தன்பால் விட்டுக்கொடுத்து விடவேண்டு மென்றும், இன்றேல் நபிகள் நாயகத்துக்குப் பின்னேனும் தனக்கே அம் மகானுபாவரின் வாரிஸ் கிரமபாத்யதை கிடைக்கவேண்டு மென்றும், அதுவுமின்றேல் ப'னீ:கிப்' தான் வர்க்கத்தினருடன் வந்து மதீனாவின்மீது போர்தொடுக்க வேண்டி நேருமென்றும் அந்த ஆ'மிர் என்பவன் எழுதியிருந்தான். ஆனால், அக் கடிதத்தை நபிகள் பெருமான் அங்கீகரிக்க மறுத்துவிட்டார்கள். ஆதலின், அந்த ஆ'மிர் பி'ன் துபை'ல் தனது பழைய மனஸ்தாபத்தை வைத்துக் கொண்டு, அவன்பால் கடிதம் கொண்டுசென்ற 'ஹராம் பி'ன் மல்ஹானை வெட்டி வீழ்த்திவிட்டான்.

அத் துரோகி அவ்வளவோடு நில்லாது, சுற்றுப் புறங்களி லிருந்த ஏனை வர்க்கத்தினர்களையும் அம் முஸ்லிம்களின்மீது சண்டை செய்யுமாறு அதுபொழுதே தூண்டிவிட்டான். அதன்பின்பு ஆ'மிர் என்பவனே ஒரு பெருஞ்சேனையுடன் அம் முஸ்லிம்களை நோக்கிக் கிளம்பிவந்தான். அது செய்தி கேட்டு, ஆங்கிருந்த 69 ச'ஹாப'ாக்களும் ஆ'மிரை எதிர்த்துப் புறப்பட்டனர். எனவே, இடைவழியில் இருபடைகளும் சந்தித்தன. அது சமயம் அவ் வெதிரிக ளெல்லாரும் அச்சிறு தொகுதியினரான முஸ்லிம் களைச் சூழ்ந்துகொண்டு, அவர்களுள் அ'ம்ரு பி'ன் உமையா என்னும் நாம முடைய ஒருவரைமட்டும் விட்டுவிட்டு, மற்றெல்லாரையும் சம்ஹரித்து

முடித்து விட்டார்கள். அவ்வொரே முஸ்லிமையும் விட்டபோது, ஆ'மிர் பி'ன் துஃபைல், "முன்னொரு முறை என் அன்னை ஓரடிமையை உரிமை யாக்கி விடுவதென்று பிரார்த்தனை புரிந்துகொண் டிருந்தாள். அதனிமித்தமே உன்னை நான் இன்று உயிருடனே விட்டுவிடுகிறேன்," என்று கூறி, அவரது சிகையையும் கத்தரித்துக்கொண்டு அனுப்பி விட்டான்; இச் சம்பவமுழுதும் நபிகள் திலகத்தின் செவியுட் புக்கவுடன் அவர்கள் அளவு கடந்த துக்கத்தி லாழ்ந்துவிட்டார்கள்; அம் மகானுபாவர் தமதுஜீவ்தசை முழுவதும் இப்படிப்பட்ட வருத்தத்தை மற்றெப்போதும் அனுபவித்ததே யில்லை யென்னலாம்.

அ'ம்ரு பி'ன் உமையா வென்பவர் மதீனாவிற்குத் திரும்பிவரும் வழியில் ப'னீஆ'மிர் கூட்டத்தைச் சார்ந்த இரு அரபிகளைச் சந்தித்தார்; அக் கூட்டத்தினர் முஸ்லிம்களுக்குச் செய்தசதி அவர் மனத்தை அதிகம் உறுத்திக்கொண் டிருந்தது. எனவே, அவ் விருவரையும் அ'ம்ரு பி'ன் உமையா வென்பவர் கொன்றுவிட்டார். ஆனால், அவ் விருவருக்கும் நபிகள் பெருமான் அபயநிருபம் எழுதிக் கொடுத்திருந்தார்கள். இது தெரியாமலே அ'ம்ரு பி'ன் உமையா அவ்விரு அரபிகளையும் கொன்று விட்டார். ஆனால், இச் செய்தியைப் பெருமானாரவர்கள் தெரிந்துகொண்டவுடன் அதிக வருத்தமடைந்து, அவ்வாறு கொல்லப்பட்டுப் போன அவ் விருவருடைய குடும்பத்தினருக்கும் நஷ்டஈடு கொடுக்குமாறு கட்டளை யிட்டார்கள்; அவ்வாறே அந்த உதிரக்கிரயத் தொகையும் கொடுக்கப்பட்டு முடிந்தது.

மேற் கூறியவாறே :கார்ரா, அலுல் என்னும் இரு கூட்டத்தார்களும் நபிகள் பெருமானிடம் வந்து தங்கள் வர்க்கத்தினர் தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவி யிருப்பதாகவும், அன்னவருக் கெல்லாம் மதசம்பந்தமான தத்துவங்களை உபதேசிப்பதற்காகச் சிலமுஸ்லிம் ஆசிரியர்களை அனுப்பிவைக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார்கள். அவர்களுடைய வார்த்தைகளையும்நம்பி நபிகள்திலகம் (சல்) ஆஸிம் பி'ன் :தாபி'த் என்னும் தலைவரின் கீழே பத்து மனிதர்களை அனுப்பி வைத்தார்கள். அவர்க ளெல்லாரும் ரஜீஃ' என்னுமிடம் போய்ச் சேர்ந்தவுடன் ஆங்கொரு சதிமோசம் செய்யப் பட்டது: அம் முஸ்லிம்களைக் கூட்டிச்சென்ற கூட்டத்தினர் அக்கம் பக்கத்தி லிருந்த ல'ஹ்யான் கூட்டத்தைத் தூண்டிவிட்டு, அம்முஸ்லிம்களைத் தாக்கிக் கொன்றுவிடுமாறு கிளப்பி விட்டார்கள். அவர்கள் ஒரு நூறு வில்வீரர்களுடன், இருநூறு போர்வீரர்களாக வந்து அப் பத்து முஸ்லிம்களையும் தாக்க முற்பட்டார்கள். அதைக் கண்டவுடன் அப் பதின்மரும் அருகிலிருந்த ஒரு குன்றின்மீதேறிக் கொண்டார்கள். எதிரிகளின் வில்வீரர்கள் அம் முஸ்லிம்களை நோக்கி, "நீங்கள் கீழே இறங்கி வருவீர்களாயின், உங்களுக்கு நாங்கள் அபயம் கொடுப்போம்," என்று உறுதி கூறினார்கள், அதைக் கேட்டு, அம் முஸ்லிம்களின் தலைவரான

ஆஸிம் என்பார், "நான் கு'ப்'பார்களிடம் அடைக்கலம்புக வரமாட்டேன்," என்று கூறிவிட்டு, ஆகாயத்தை அண்ணாந்து பார்த்து, "ஏ ஆண்டவனே! எங்களுடைய இவ் விக்கட்டான செய்தியை நீயே உன் ரஸூலிடம் அறிவிக்கக்கடவாய்!" என்று சொல்லிக்கொண்டே எழுவருடன் கீழிறங்கி வந்து, எதிரிகளுடன் சண்டைசெய்தார்; அதில் அவ்வெண்மரும் வீர சுவர்க்கம் புக்கனர். அச் செய்தியைக் கேட்டு, :குறைஷியர் ஆஸிமின் சரீரத்தினின்று ஒரு தசைத்துண்டைக் கேட்டனுப்பினார்கள். ஆனால், தேனீக்கள் வந்து அவ்வெண்மரின் சரீரங்களையும் நெருங்கச் சூழ்ந்து மொய்க்கத் தலைப்பட்டதனால் :குறைஷியர் ஒருவரும் அப் பிரேதத்தினிடம் நெருங்கிக்கொள்ள முடியவில்லை.

அதுசமயம் குன்றின்மீது நின்றுகொண் டிருந்த கு'பைப்', ஸை'ஜத்' என்னும் இருவரும் கீழே நின்றுகொண் டிருந்த கு'ப்'பார்களின் வஞ்சக மான உறுதி மொழியை நம்பி, இறுதியிலே ஏமாற்றமடைந்து போயி னார்கள். அவ்விருவரும் கீழே யிறங்கிவந்தவுடன் எதிரிகள் அவர்களைக் கைதிகளாகப் பிடித்து மக்காவிற்குக் கொண்டுபோய் அடிமைகளாக விற்று விட்டார்கள். அவர்களுள் கு'பைப்' என்பவர் 'ஹாரி தென்பவரின் மக்கள்களால் விலைக்கு வாங்கப்பட்டார். முன் நடந்த உ'ஹத்' யுத்தத்தில் மக்காவாசியாகிய 'ஹாரி:த் பி'ன் ஆ'மிர் என்பவரை வெட்டி வீழ்த்தி யிருந்த காரணத்தினால் அக் கொலைக்குப் பழிக்குப்பழியாக ஈடுவாங்க வேண்டுமென்னும் எண்ணத்தினாலேதான் இதுசமயம் அவருடைய வம்சத் தினர் கு'பை'பை'க் கிரயம் கொடுத்து வாங்கினார்கள். ஒருநாள் 'ஹாரி:தின் பேர்த்திப் பெண்ணை இந்த அடிமை வைத்துக்கொண்டு ஆகாரம் ஊட்டிக் கொண் டிருந்தார்; அதுசமயம் அவரது கரத்தில் தற்செயலாகக் கத்தி யொன்றும் இருந்துகொண் டிருந்தது. அவரருகில் தன் குழந்தையும், அவர் கையில் கத்தியும் இருந்ததைக் கண்டு உடனே அக்குழந்தையின் தாய் பெருங் கூச்சலிட்டுப் பிரலாபிக்கத் துவக்கினாள். உடனே கு'பைப்' அன்னாளை நோக்கி, "நான் குழந்தைகளைக் கொல்பவ னல்லேன். இஸ்லாத் தில் சேர்ந்துகொண் டிருக்கும் மனிதனொருவன் இவ்வாறு அகாரணமாய்ச் சிசுவதை புரிவானென்று சற்றும் நீ எண்ணிவிட வேண்டாம்!" என்று கூறினார்.

பிறகு சிலநாள் சென்ற பின்னர் 'ஹாரி:தின் மக்கள் 'ஹரம் ஷரீ'பின் எல்லைக்குள்ளே கொலை செய்வது கூடாதெனக் கொண்டு, மக்காவிற்கு வெளியில் சென்று அவரை வதை செய்துவிடத் துணிந்தார்கள். அதுசமயம் கொல்லப்படுவதற்கு முன்னே கு'பைப்' இரண்டு ரக்ஆ'த் (ந'பில்) தொழுது கொள்ள வேண்டுமென்று அனுமதி கோரிநின்றார்; அவ்வாறே அக்கொலை ஞர்களால் அனுமதி கிடைத்தவுடன், அவர் அவசரமாகத் தமது தொழு கையைச் சுருக்கித் தொழுது முடித்துக்கொண்டு, அக்கொலை பாதகர்களை நோக்கி, "நெடுநேரம் தொழவேண்டுமென்ற அவா என்னகத்தே உண்டு.

ஆனால், மரணத்துக் கஞ்சியே அவ்விதம் செய்ய நாடினேன் என்று நீங்கள் நினைக்காதிருக்கும் பொருட்டே நான் நீண்டநேரம் இதுசமயம் தொழுது கொள்ளச் சம்மதிக்க வில்லை," என்று கூறி, அரபு பாஷையில் செய்யு ளொன்றை ஸாஹித்யஞ் செய்தார்: "நான் இஸ்லாத்தி னிமித்தம் கொல் லப்படும்போது, எந்த விதமாகக் கொல்லப்படுகிறே னென்பதைப்பற்றி எனக்கொன்றும் கவலையில்லை. நான் கொல்லப்படுவ தெல்லாம் அல்லாஹ் வுக்காகவே யிருக்கின்றது! அவன் நாடுவானாயின், என் சரீரத்தின் ஒவ்வொரு சிறிய பாகத்தின்மீதும் தனது கருணைமாரியைப் பொழியக் கடவன்!" என்பதே அக்கவியின் கருத்தாகும். அதன்பின்பு அவர் சற்றும் இரக்கமில்லாமலே கொல்லப்பட்டுப் போயினர். அது முதற்கொண்டுதான் சிரச்சேதம் செய்யப்படுகிறவர் அதற்கு முன்னே இரண்டு ரக்ஆ'த் ந'பில் தொழுது கொள்ளலா மென்னும் வழக்கமானது உண்டா யிருக்கிறது போலும்!

அவ்விரு கைதிகளுள் மற்றொருவரான ஜை'ஜதெ'ன்பவரை ஸ'ப்வான் பி'ன் உமையா என்னும் :குறைஷி கொல்வதற்காகவே விலைக்கு வாங்கி யிருந்தான். அம் முஸ்லிமைக் கொல்வதற்கென்று ஒரு நாளைக் குறிப் பிட்டுக் கொண்டு, அன்று அவரைக் கொலைக்களத்திற்கு நடத்தாட்டிச் சென்றான். அவ் வேடிக்கையைக் கண்டானந்திக்கும் பொருட்டுக் :குறைஷித் தலைவர்களெல்லாரும் ஆங்கு வந்து குழுமினார்கள். அதுசமயம் அபூ' ஸு'ப்யானும் ஆங்கு விஜயஞ் செய்திருந்தார். அப்பொழுது ஜை'ஜத்' கொல்லப்படுவதற்குச் சற்றுமுன் அவரை நோக்கி அபூ' ஸு'ப்யான், "இது சமயம் உம்முடைய ஸ்தானத்தில் மு'ஹம்மத்' கொல்லப்படுவதா யிருந்தால், அதை நீ உனக்கு வந்த நல்லதிருஷ்ட மென்று எண்ணத் துணியாயோ?" என்று வினவியதைக்கேட்டு, ஜை'ஜத்'(ரலி')தம்முடைய கழுத்துக்குமேல் கத்தி சித்தமாகத் தொங்கிக்கொண் டிருந்த அக்கொடிய தருணத்திலும் என்ன மறுமொழி கூறினரென்று எண்ணுகின்றீர்கள்? "நபிகள் திலகத்தின் உயிருடனே ஒப்பு நோக்குங்கால், என்னுயிர் ஒரு சர்வ சாதாரணமான திரணமாகவே கருதப்படல் வேண்டும். என்னுயிர் எமலோகம் சேர்வதா யிருப்பினும், அன்னவரின் பாதத்தின்கீழ் ஒரு சாதாரணமான முள் தைப்ப தையும் நான் பார்த்துக்கொண்டு சும்மா இரேன். இதற்கு ஆண்டவனே சாக்ஷியா யிருக்கக் கடவன்!" என்று அந்தத் தைரியசாலியான ஜை'ஜத்' அவர்கள் அபூ' ஸு'ப்யானது முகத்துக் கெதிரில் கூறிமுடித்தார். அது கேட்டு, அபூ' ஸு'ப்யான், "மு'ஹம்மதை' அவருடைய சிஷ்யர்கள் எத்தனை உண்மை விசுவாசத்துடனே நேசித்து வருகிறார்களோ, அத்துணை யுண்மை விசுவாசத்துடனே வேறெவரையும் அவருடைய நண்பர்கள் நேசித்து வருவதை நான் கண்டதே யில்லை," என்று கூறிமுடித்தார். அதன் பின்பு ஜை'ஜத்' அவர்கள் ஸ'ப்வானின் வேலைக்காரனை நஸ்தாஸ் என்ப வனால் வெட்டப்பட்டு முடிந்தார்கள்.— (இன்னலில்லாஹி......ராஜிஊ'ன்).

இந்த ஹிஜ்ரீ 4-ஆவது ஆண்டிலே தான் ஷஃ’பா’ன் மாதத்தில் இமாம் ‘ஹுஸைன்(ரலி’) அவர்கள் திருவவதார மாயினார்கள். இவ் வாண்டிலே தான் ஜ’ஜனப்’ பி’ன்த் ஹு’ஜமா அவர்கள் ரஸூலுல்லாவிற்கு மண முடிக்கப்பட்டு மரணமும் ஆய்விட்டார்கள். உம்முஸல்மாவும் இப்பொழுது தான் நபிகள் திலகத்துக்கு மணமுடிக்கப் பட்டார்கள். இவ்வாண்டு ஷவ்வால் மாதத்திலேதான் மதுபானமும் ஒழிக்கப்பட்ட தென்பர். அன்றோடு இஸ்லாத்தில் “கள்ளரக்கன்,” இல்லை, “மதுராக்ஷஸன்” மண்ணுள்ளே மறைக்கப்பட்டுப் போய்விட்டான்.

மேற் கூறியவாறெல்லாம் முஸ்லிமல்லாதார் நம் முஸ்லிம்களை அக்கிரமமாகவும் அநியாயமாகவும் கண்டகண்டபடியெல்லாம் வெளியில் கபடத்தனமாக அழைத்துக் கொண்டுபோய், நம்பிக்கைத் துரோகம் செய்து அடிக்கடி படுகொலை புரிந்து வந்தார்கள். இதுதான் நபிகள் நாதருக்கு இனியில்லா மனவருத்தத்தை விளைத்துக்கொண் டிருந்தது. தாங்கள் சம்பந்தப் பட்டவரை எதிரிகளின் எல்லாவிதமான இம்சைகளையும் பொறுமையுடனே சகித்துவந்தார்கள்; ஆனால், தங்களுடைய உபதேச மொழிகளைக்கேட்டு, சத்திய சன்மார்க்கத்தில் சேர்ந்துகொண்டு, தங்களுக் குரிய உடல், பொருள், ஆவியை யெல்லாம் அல்லா(ஹ்)வின் பாதையிலே தத்தம் செய்து, அல்லும் பகலும் அனவரதமும் தங்களுக்குத் துணையாய் நின்று, ஆண்டவனுடைய அபிமான முழுதையும் அப்படியே கொள்ளை கொண்டுநின்ற அந்த ச’ஹாப’ாக்கள் அவ்வாறு நம்பிக்கைத் துரோகங்களால் சித்திரவதை புரியப்படுவதை நினைக்க நினைக்க நபிகள் திலகத்தின் ஆத்திரமானது அளவுகடந்தே பொங்கிக்கொண் டிருந்தது. அத்தகைய சாத்விகமான சாந்த மூர்த்திகளை யெல்லாம் உபதேசம் புரிவதற் கென்று நய வஞ்சகமா யழைத்துக் கொண்டுபோய், நிர்தாக்ஷிண்யத்துடன் அவ்வாறு படுகொலை புரிந்துவந்ததைக் கண்டு நபிகள் பெருமான் ஒருமுறை தங்கள் ரக்ஷகனிடம் அவ் வெதிரிகளைத் தண்டிக்குமாறும் குறையிரந்து கொண்டார்கள். கோபத்தையே வென்று நின்ற சுத்த சாந்தமூர்த்திக்கும் கோபம் வந்து விட்டது. ஏன்? எனின், அக்கொடும் பாலைவனப் பாதகர்கள் தங்களுடைய அக்கிரமச் செய்கைகளுக் கெல்லாம் தக்கதண்டனை பெற வேண்டியவர்க ளாகவே யிருந்தார்கள். எனவே, நபிகள்நாயகம் (சல்) அக் கொடுந்துன்பம் தாளாது, ஆண்டவன்பாலே தங்கள் விஞ்ஞாபனத்தைச் செய்துகொண்டார்கள்; அதற்கப்பால் அம் மஹானுபாவர் வேறொன்றும் செய்தற்குத் துணிந்தன ரில்லை. ஆனால், “சகல லோகங்களுக்கும் ஒரு தயாள மூர்த்தியாகவே” (:குர். 21 : 107) அனுப்பப்பட் டிருந்த நபிகள் பெருமான் இத்துணைமட்டே வேண்டிக்கொண்டதுங் கூட அந்தச் சர்வ லோக சரண்யனுக்குச் சற்றும் திருப்திகரமாய்க் காணப்பட வில்லை போலும்! அத்தகைய அயோக்கியக் கொலைபாதகர்கள்மீதும் ஆண்டவனது சாபத்தை வருத்தவேண்டா மென்று உடனே அவ் விறைவன் தன் திரு

நபியவர்களுக்குக் கட்டளையிட்டு விட்டான். என்னெனின், சகலலோகங் களுக்கும் தயாளமூர்த்தியாய் அவதரித்திருக்கும் அப் பெருமானார் (சல்) எப்படிப்பட்ட எதிரிகளிடத்தும் எத்தன்மைத்தாகிய சிறு குரோதமும் கொள்ளக்கூடா தென்பதே அவ்வல்லோனின் கருத்தேபோல் காணப்படா நின்றது. ஆதலினால்தான், "அவன்—(அல்லாஹ்) அவர்கள்மீது கருணை யுடனே திரும்பினும், அல்லது அவர்களை வேதனைப் படுத்தினும், அக் காரியத்தினின்று உமக்குச் சிறிதும் சம்பந்தமில்லை; என்னெனின், நிச்சய மாகவே அன்னவர்கள் அக்கிரமக்காரர்களா யிருக்கின்றார்கள்," என்று (3 : 127) ஆண்டவன் தன் திருமறையில் நபிகள் திலகத்திற்கு நல்லறி வுறுத்தி யிருக்கின்றான். எனவே, நம் நபிகள் திலகம் எல்லாவிதமான சுக துக்கங்களையும் எவ்விதமான விருப்பும் வெறுப்பு மில்லாமலேதான் மேற்கொண் டொழுகக் கடமைப்பட் டிருந்தார்க ளென்று மிகச்செவ்வி தாய் நாம் உணர்ந்து கொள்ளுகிறோம். ஆதலின், அன்றுமுதல் அவர்கள் எப்படிப்பட்ட கொடும் பஞ்சமகாபாதகர்கள் மீதும் எவ்வித மனக் குரோதமும் கொள்ளுதலை விட்டுவிட்டார்கள். என்னே எம்பிரானின் எளியகுணம்! இப் பூவுலகில் காணப்படும் வேறெவர் சரித்திரத்திலும் இத் தன்மைத்தாய மஹானுபாவச் செயல்களை நீங்கள் கண்டிருக்கின்றீர்களா? புராணப் புளுகுகளை யாம் ஈண்டு வேண்டி நிற்கவில்லை.

அதுபொழுது நிகழ்ந்துவந்த சம்பவங்க ளனைத்தையும் சுருக்கிச் சொல்ல வேண்டுமாயின், அக்காலத்து அரப்தேய மாக்க ளெல்லாருமே தீ'னுல் இஸ்லாத்தின்மீது அடக்கொணாக் குரோதங்கொண்டு திரிந்தார்க ளென்றே கூறி முடித்து விடலாம். ஒருபக்கல் யூதர்களும், மற்றொரு பக்கல் :குறைஷிக் கு'ப்'பார்களும், வேறொருபக்கல் முஸ்லிம் நயவஞ்சகர் களுமாக இருந்துகொண்டு, எல்லாரும் இஸ்லாம் மார்க்கத்தையே இவ் வுலகில் தலைகிளப்ப வொட்டாது முளையிலேயே கிள்ளியெறிந்து விட வேண்டு மென்றே பெரும்பெரும் சபதத்துடன் கங்கணங் கட்டிக்கொண் டிருந்தார்கள். அவர்க ளனைவரும் ஆங்காங்கே பெருங் கிளர்ச்சிசெய்து வருங்கால், அப்பொழுதைக் கப்பொழுதே தக்க முன்னேற்பாட்டுடன் நபிகள் பெருமான் அவ்வவ் வியக்கங்களை யெல்லாம் ஒழித்துவிடத் தக்க முஸ்தீபுகளை யெல்லாம் செய்யாம லிருந்திருப்பார்களாயின், ஒருநாளேனும் அம் முஸ்லிம்கள் யோகக்ஷேமத்துடன் அம் மதீனாவின்கண் உயிர்வாழ்ந் திருத்தல் முடியாதென்றே கூறிமுடிக்கலாம். எனவே, அப் பெருமானார் செய்யக்கூடிய காரியம் ஒன்றாகவேதான் காணப்பட்டு வந்தது: ஆங்காங்குக் கிளம்பும் எதிரிக ளெல்லாரும் ஒன்றுசேர்ந்து ஒருமிக்கத் திரளமுடியா வண்ணம் அவர்களையெல்லாம் அப்பொழுதைக் கப்பொழுதே அங்கங்கே சென்று, அடக்கி, ஒடுக்கிவிடுவதுதான் சாலச்சிறந்த உபாயமாய்க் காணப்பட்டு வந்தது. ஆதலின், அம் முஸ்லிம்கள், பகைவர்கள் ஒன்று திரண்டுவரும்வரை வாளா உட்காந்து பேடிகளேபோல் வேடிக்கை பார்க்க

முடியாதவர்களா யிருந்துவந்தார்கள். அப்பொழுதைக் கப்பொழுது அவ் வெதிரிகளின் கிளர்ச்சியை நபிபெருமான் நசுக்கியொடுக்காவிடின், அவர்க ளெல்லாரும் ஒன்றுசேர்ந்து வந்து, எல்லா முஸ்லிம்களையும் இங்கில்லாது செய்துவிடுதல் ஒரு சர்வ சாமான்யமான காரியமாகவே முடிந்துபோயிருக்கு மென்பதில் சிறிதும் சந்தேக மில்லை. எனவேதான், தங்கள் தற்காப்பி னிமித்தமாயே அடிக்கடி அம் முஸ்லிம்கள் வெளியில் சென்று, வெவ்வேறு கூட்டத்தாருடனும் மல்லாட வேண்டிய ஆவசியகம் அடிக்கடி நேர்ந்து கொண் டிருந்தது.

இவ்வாறு நிகழ்த்தப்பட்ட படையெழுச்சிகளுள் “இரண்டாவது ப’த்’ர்” அல்லது “சிறிய ப’த்’ர்” என்னும் சம்பவமும் ஒன்று நிகழ லாயிற்று. உ‘ஹுத்’ யுத்தகளத்திலிருந்து :குறைஷிகள் திரும்பி யோடிய போது, மறுபடியும் அடுத்த ஆண்டில் ப’த்’ரின் யுத்தகளத்தில் இவ்விஷயம் ‘பைஸல் செய்யப்படுமென்று சூளுறவு கூறிச் சென்றிருந்தார்கள். ஆகவே, அதற்குரிய பருவம் வந்தவுடன், அக் :குறைஷியரை எதிர்பார்த்து முஸ்லிம்கள் ப’த்’ரின் யுத்தகளத்தை நோக்கிச் சென்றார்கள்; ஆனால், அவ்விடத்தில் :குறைஷியர் ஒருவரும் காணப் படாமையால், ஆங்குச் சென்ற முஸ்லிம்கள் ஆண்டுக் கொருமுறை அவ்விடத்தில் கூடும் சந்தையில் தங்களுடன் கொண்டு சென்ற சாமான்களை யெல்லாம் விற்றுவிட்டு, இலாபத்துடனே மதீனாவிற்குத் திரும்பிவந்து சேர்ந்தார்கள். ஹிஜ்ரீ 5-ஆவது ஆண்டில் நடைபெற்ற த’வ்மத்துல் ஜந்தல், ‘தாத்துர் ரி:காஃ’* ஆகிய இரு சண்டைகளும், ஹிஜ்ரீ 6-ஆவது ஆண்டில் நடைபெற்ற ப’னீ ல‘ஹ்யான், ‘தூ:கரத்தென்னும் சண்டைகளும் மேற்கூறியவாறான போர்க ளாகவே காணப்படுகின்றன. எதிரிகள் யுத்தத்துக்கு ஆயத்தம் செய்கி றார்க ளென்னும் செய்தியைக் கேட்டவுடன் நபிகள் திலகமும் ஆண்டுச் சில படைகளை யனுப்பிவைப்பார்கள். சிற்சில இடங்களில் முஸ்லிம்களின் வருகையைக் கேள்வியுற்று அவ்வெதிரிகள் ஒருவருக்கும் சொல்லாமலே ஓட்டம் பிடிப்பார்கள்; அல்லது முஸ்லிம்கள் வந்து சிறிது யுத்தஆர்ப் பாட்டம் செய்தவுடனே அவர்களனைவரும் ஓட்டம்பிடித்து விடுவார்கள்.

மேற் கூறியவாறு நிகழ்வுற்ற சில்லறைச் சண்டைகளுள் ப’னீ முஸ்தலி:க்குடன் ஹிஜ்ரீ 5-ஆவது ஆண்டில் நிகழ்த்தப்பட்டதும் ஒரு சம்பவமே யாகும். அச் சண்டையில் வேறுசில விசேஷமும் கலந்திருப்ப தால், அந்தப் படையெழுச்சியைப் பற்றிச் சிறிது விளக்கவேண்டுவது ஆவசியகமாகவே காணப்படா நின்றமையால், அதனை இங்குச் சிறிதே விளக்கிக் காண்பிப்பாம். ப’னீ முஸ்தலி:க் கென்னும் கூட்டத்தினர் :குறைஷியருடன் நெருங்கிய சினேகபாவம் வைத்துக்கொண் டிருந்த கு‘‘ஜாஆ’ என்னும் வர்க்கத்தைச் சார்ந்தவர்களா யிருந்தார்கள். இந்த

* முஸ்லிம்கள் கல்குத்தி ரணமாய தங்கள் பாதங்களில் கந்தல் துணிகளைக் கிழித்துக் கட்டிக்கொண்டு சென்றதால் அது ரி:காஃ’ என்று கூறப்படுகிறது.

ப்னீ முஸ்தலி:க்காரர்கள் மதீனாவிலிருந்து 9 நாள் பிரயாணத்தி லுள்ள முரைஸீஃ' என்னுமிடத்தில் வசித்துக்கொண்டிருந்தார்கள். அவர்களுடைய தலைவனான ஹாரி:த் பி'ன் அபீ'ல்'ர்ரார் என்பான் :குறைஷிகளின் தூண்டுதலின்மீது மதீனாவின்மீது படையெடுத்து வர ஆயத்தம் செய்துகொண்டிருந்தான். உடனே நபிகள் திலகம் ஃ'ஜத்' பி'ன் :கஸீப்' என்பவரை அனுப்பி, விஷயத்தின் உண்மையை நிச்சயமாகத் தெரிந்துகொண்டு, இவர்களும் யுத்தமுஸ்தீபுகளுக்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்துகொண்டு, ஹிஜ்ரீ 5, ஷஃ'ப்'ான் மாதம், 2-ஆந் தேதி மதீனாவை விட்டு முரைஸீஃ' நோக்கிப் புறப்பட்டார்கள். முஸ்லிம்கள் தம்மூர்மீது படையெடுத்து வருவதைக் கேள்வியுற்று, ப்னீ முஸ்தலி:க் சேனைகளெல்லாம் பல பக்கத்தும் சிதறியோடி விட்டன; அவ்வற்றுடன்கூட ஹாரி:தும் ஊரை விட்டு ஓடிப்போய் விட்டான். ஆனால், முரைஸீஃ' குடிபடைகள் மட்டும் அம் முஸ்லிம் படைகளை ஒருசிறிதே எதிர்த்துப் பார்த்தார்கள். நெடு நேரமட்டும் அவர்கள் தங்கள் அம்புகளை எய்துகொண் டிருந்ததைக் கண்டு முஸ்லிம்கள் ஒன்று சேர்ந்து, அக் குடிபடைகள்மீது தாவி வீழ்ந்து தகைந்து விட்டனர். இச்சண்டையில் பத்து எதிரிகள் மட்டும் கொல்லப் பட்டு, 600 ப்னீ முஸ்தலி:க்குகள் சிறைவாரப் பட்டார்கள். இன்னம், 2,000 ஒட்டகங்களும், 5,000 ஆடுகளும் அம் முஸ்லிம்களுக்குக் கிடைத்தன.

முஸ்லிம்கள் எடுத்துக்கொண்டு செல்லும் படையெழுச்சிகளிலெல்லாம் ஏராளமான பொருள்கள் எதிரிகளிட மிருந்து அம் முஸ்லிம்கள்வயம் சிக்குறுவதைக் கண்டு இம்முறை மதீனாவிலிருந்து எல்லா முனா'பி:க்குகளுங் கூட ஒருமிக்கச் சேர்ந்து கொண்டார்கள்; அவர்களுடன் அன்னவரின் தலைவனான அ'ப்'து'ல்லா பி'ன் உபை'யுங்கூட வந்திருந்தான். அவன் முரைஸீஃ' சென்று, ஆங்கும் தன் முடிச்சு முடியும் புனைசுருட்டு வேலையை விட்டுவிடத் துணிந்தானில்லை: அவ்வூரிலுள்ள ஒரு கிணற்றண்டை ஒரு முஹாஜிரும் ஓர் அன்சாரீயும் தண்ணீர் மொண்டு கொண்டுவரச் சென்றார்கள். ஆங்குச் சென்ற அன்சாரீக்கும் முஹாஜிருக்கு மிடையில் தண்ணீர் மொள்ளும் விஷயத்தில் ஏதோ சச்சரவேற்பட்டுக் கைகலந்து கொண்ட பின்னர் அவ் வன்சாரீ, "ஏ அன்சாரிய்யீன்களே! உதவிக்கு ஓடி வாருங்கள்!" என்று கூவினார். அதுகேட்டு, அந்த முஹாஜிரும், "ஏ முஹாஜிரீன்களே! உதவிக்கு ஓடி வாருங்கள்!" என்று பதிலுக்குக் கூவினார். அக்கணமே அன்சாரிய்யீன்க ளெல்லாரும் ஒரு பக்கமாகவும், முஹாஜிரீன்க ளெல்லாரும் மறுபக்கமாகவும் எதிரெதிராகநின்று தங்கள் வாளாயுதங்களை உருவிக் கொண்டார்கள். அதுசமயம் அ'ப்'து'ல்லா பி'ன் உபை' என்பான் மதீனா வாசிகளிடம் சென்று, "உங்களுக்கு வேண்டும்! நீங்கள் சும்மா இருக்கும்போதே ஏன் உங்களுக்கு இந்தத் தொல்லை? மக்காவிலிருந்து உயிர் பிழைக்க ஓடிவந்தவர்களுக்கு நீங்கள் உங்கள் இல்லங்களில் புகலிடம் கொடுத்ததனா லல்லவா இதுபொழுது 'ஓண்டவந்த பிடாரி ஊர்ப்

பிடாரியை வெருட்டிய’ கதையேபோல் இம்மாதிரி உங்களை எதிர்க்கின்றார்கள். இனியேனும் உங்களுக்கு நல்லபுத்தி வந்து அம் மக்காவாசிகளை யெல்லாம் மதீனா சென்றவுடன் வெருட்டி விடுவீர்களாயின், அவர்கள் எங்கேனும் போய்த் தொலையட்டும்! சீக்கிரம் வெருட்டுங்கள்! ‘நாய்க்கு நல்ல ஆகாரம் கொடுத்து வளர்த்தால், அது நாளைத்தினம் உன்னையே கடித்துத் தின்றுவிடும்’ என்பது பழமொழி யன்றோ?” என்றுகூறித் தீ மூட்டி விட்டான். உடனே இவ்விஷய முழுதும் நபிகள் பெருமானிடம் எட்டி விட்டது. அப்பொழுதே உ’மர் (ரலி’) அவர்கள் அ’ப்’து’ல்லாவின் துரோகச் செயலுக்காகச் சிரசைக் கொய்துவிட வேண்டுமென்று அதிக ஆத்திரத்துடன் நபிகள் பெருமானிடம் விண்ணப்பித்துக் கொண்டார்கள்.

அதுகேட்டு, நபிகள் திலகம் அல்லா(ஹ்)வின் திருத்தூதரால் நம்பிக்கையுடன் கொண்டு செல்லப்பட்ட சிஷ்யர்களுள் ஒருவனான அ’ப்’து’ல்லா பி’ன் உபை’ என்பானை மதீனாவிற்கு வெளியே கொண்டுபோய் நம்பிக்கைத் துரோகத்துடனே கொன்றுவிட்டாரென்னும் அபவாதத்திற்குத் தாங்கள் ஆளாக முடியாதென்று கூறி, அந்த உ’மரைச் சமாதானப்படுத்தி வைத்தார்கள். இதற்குள் அ’ப்’து’ல்லா பி’ன் உபை’யின் குமாரரான அ’ப்’து’ல்லாவுக்குத் தந் தந்தையாரைக் கொலை செய்துவிட நபிகளார் அனுமதியளிக்கப் போகிறார்களென்னும் செய்தி எட்டியவுடன் அன்னவர் பெருமானாரிடம் ஓடிவந்தார். அ’ப்’து’ல்லா பி’ன் உபை’க்கு இஸ்லாத்தின்மீது எத்துணை அருவருப்பு இருந்துவந்ததோ, அதற்கு நேர்மாறான அத்துணைப் பிரியமே இஸ்லாத்தின்மீது அவனுடைய குமாரரான அ’ப்’து’ல்லாவுக்கு இருந்துவந்தது. எனவே, அக்குமாரர் ஓடிவந்து தந் தந்தையின் சிரத்தைக் கொய்யும் கைங்கரியத்தைத் தம்மிடமே ஒப்புக்கொடுக்க வேண்டு மென்று வேண்டிக் கொண்டார். என்னெனின், வேறொரு முஸ்லிம் அவ்வாறு செய்வது தமக்கு வருத்தமா யிருக்குமென்றும், ஆதலின், அவ்வூழியத்தைத் தாமே செய்வதுதான் சரியென்றும் கூறினார். அதற்கும் நபிகளார் அனுமதி கொடுத்தார்க ளில்லை. அம் மஹானுபாவர் அவ் வஞ்சகக் கள்வன் மீது இரக்கங்கொண்டு, எல்லாவற்றையும் அடியோடு மன்னித்துவிட்டார்கள். நபிகள் பெருமான் அவன்பால் காட்டிய கருணை இம்மட்டுந்தானென்று எண்ணுகின்றீர்கள்? பிற்காலத்தில் அந்த அ’ப்’து’ல்லா பி’ன் உபை’ இறந்துபோன பொழுது, நபிகள் திலகம் அவனுடைய சவத்தைப் போர்த்த ஒரு சட்டையும் கொடுத்ததோடு, அவனுக்குப் பிரேதத் தொழுகையும் தொழ வைத்தார்கள். அதுசமயம் அவனுடைய மையித்தைச் சுமந்துசென்றபோது, உ’மர் (ரலி’) அவர்களும் ஒருகைகொடுத்துத் தாங்கினார்கள். என்னே எம்பிரானின் பூததயை யிருந்தவாறு!

ப’னீ முஸ்தலி:க் கூட்டத்தாரிடமிருந்து பிடிக்கப்பட்டிருந்த போர்க் கைதிகளுள்ளே அவர்களுடைய தலைவனான ஹாரி:தின் செல்வக் குமாரியான ஜு’வைரிய்யாவும் காணப்பட்டார். பெண்ணடிமைகள் அம் மதீனத்து

முஸ்லிம்களுக்கு அக்கால யுத்த முறைப்படி பாகித்துக் கொடுக்கப்பட்ட போது, ஜுவைரிய்யாவும் :தாபி'த் பி'ன் ஃகஸுக்குக் கிடைத்தார். அது செய்தி கேட்டு, ஊரைவிட் டோடிய ஹாரி:தும் நபிகள் பெருமானிடம் திரும்பிவந்து, "என் மகளைத் தாங்கள் அடிமையாகப் பகிர்ந்து கொடுத் திருப்பது எனக்கு இழுக்கைத் தருகின்றது. நான் கௌரவம் நிறைந்த ஒரு கூட்டத்தின் தலைவனு யிருக்கிறேன். ஆதலின், தாங்கள் ஜுவைரிய் யாவை உரிமையாக்கி. என்பால் ஒப்புக் கொடுத்திடல் வேண்டும்," என்று வேண்டிக் கொண்டார். அதுகேட்டு, நபிகள் திலகம் ஹாரி:தை நோக்கி, "இவ்விஷயத்தை ஜுவைரிய்யாவின் அபிப்பிராயத்திற்கே விட்டுவிடுவது நன்மையாயிருக்கு மன்றோ?" என்று கூறினர்கள். உடனே ஹாரி:த் தங் குமாரியிடம் சென்று, "மு'ஹம்மத்' உன்னுடைய விருப்பப்படியே விட்டிருக்கின்றார். எனவே, நான் அபகீர்த்தி யடையாத முறையிலே நீ நடந்துகொள்ள வேண்டும்," என்று நற்புத்தி போதித்தார். அதுகேட்டு, அந்தப் பெண்மணி, "நான் நபி பெருமானர் அவர்களின் ஊழியத்திலேயே இருந்துவிடப் பிரியப்படுகிறேன்," என்றுகூறி முடித்துவிட்டார். உடனே நபிபெருமான் கொடுத்த பரிக்கிரயத்தால் :தாபி'த் பி'ன் ஃகஸிட மிருந்து விடுதலை பெற்ற ஜுவைரிய்யா சுயமே நபிகள் நாதரை மணந்துகொள்ள விழைந்து, அவ்வாறே முடித்துங்கொண்டு விட்டார்கள்.* நபிகள் திலகத்

---

* இதுதான் மெய்யான சரித்திரங்கள், சரிதைகள் எல்லாம் கூறும் உண்மைச் சம்பவ மாகும். ஆயின், அடியிற் காணும் ஆதாரமற்ற கூற்றைக் கவனிப்பீர்களாக :—

"சுவைரு சொன்ன வசனங்களை யெல்லாம் நபி நாயகம் ஸல்.........அவர்கள் கேட்டு, தங்கள் கருணைக் கண்களால் உற்று நோக்கினர்கள். நோக்கினபோது, சுவைருவின் தேக காந்தியும், இலக்ஷணமும் நபி நாயகம் ஸல்.........அவர்கள் இதயத்தில் படிந்து, கண்களைக் கவர்ந்து மனதையும் இச்சிக்கப் பண்ணின. அதனல், நபி நாயகம் ஸல்.........அவர்கள் சுவைருமேல் காதலாய், "சுவைருவே! உனது கிரயமாக நான் தாபித்துக்குப் பொருள் கொடுத்து விடுகிறேன். நீ உனது மாதா முதலானவர்களைத் தேடி மூறைசீக்குக்கு இனிப் போகாமல், எனக்கு மனைவியாய் இங்கேயே யிரு," என்றார்கள். இச்சொல்லைக் கேட்ட சுவைரு ஆநந்த சாகரத்தில் முழுகி, மனத்திலிருந்த குபிரையும், பந்துக்கள்மேலுள்ள விருப் பத்தையும் வெறுத்து, விலக்கி விட்டு, நபி நாயகம் ஸல்.........அவர்களை நோக்கி, "யா றசூலல்லா! தேவரீருடைய விருப்பத்தின்படி நடக்கக் கார்த்திருக்கிறேன்," என்ருள். உடனே நபி நாயகம் ஸல்.........அவர்கள் தாபித்துக்குக் கிரயத்தைக் கொடுத்துவிட்டு, சுவைருவைத் தங்கள் மனைவியாக்கிக் கொண்டார்கள்."— ("நபி நாயகத்தின் ஜீவிய சரித் திரம்"— சீரு வசனம்).

இதற்கு ஆதார கிரந்தமாய் விளங்கும் சீரு வென்கிற புராணத்திலே உமறுப் புலவர் ஓதி யிருப்பதைக் கூர்ந்து பாருங்கள் :

"வடிவுக்கொரு பொருளேபொழில் மழலைச்சிறு குயிலே
கடலுற்றெழும் அமுதேவிரி கதிருக்கொரு மணியே
குடியிற்பெறு சுடரேயதி குலனுக்கரு நிதியே
படியிற்சசி யெனவேயடிக் கடிநோக்கினர் பரிவின்;

திற்கு அம் மாதரசியார் விவாகமாயியவுடன், ப'னீ முஸ்தலி:க்கின் ஏனை யுத்தக்கைதிக ளெல்லாரும் விடுதலையடைய வேண்டுமென்று வேண்டிக் கொண்டு, "எந்தக் கோத்திரத்தில் நபிகள் திலகம் விவாகம் செய்துகொண் டிருக்கிறார்களோ, அந்தக் கோத்திரத்தார் அடிமைகளா யிருப்பது முடி யாது," என்று கூறினார்கள். அவ்வாறே அவர்களெல்லாரும் நபிகளுயைக ரால் விடுவிக்கப் பட்டார்கள். பிறகு சில தினங்களுக்குள்ளே ஹாரி:தும் தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவிக் கொண்டுவிட்டார்.

ப'னீ முஸ்தலி:க் சண்டையிலிருந்து திரும்பி வந்தபோதுதான் முனா 'பி(க்):கீன்கள் ஆ'யிஷா பிராட்டியார்மீது பெரும் பழியான அவதூறொன் றைச் சுமத்தி விட்டார்கள். முஸ்லிம்களினின்று ஒருசிலரும் அந்நயவஞ்சகர் களின் பொய்வலையுள் சிக்குண்டு, அப் பழிமொழியை நம்பிவிட்டார்கள்.*

"வெல்லுஞ்சசி முகமும்வளை வில்லின்தா நுதலும்
செல்லும்பிடி நடையும்தவழ் சின்னஞ்சிறி திடையும்
சொல்லும்திரு மொழியும்மிணை துள்ளும்பிணை விழியும்
அல்லும்பொரு குழலும்மிவை எல்லாமுடல் அயர்த்த.
"மோகத்துயர் உடனேநினை(வு) அறியாவகை முழுதும்
ஆகத்தினில் மீறப்புகழ் ஆண்மைத்திறல் நயினார்
பாகொத்தமெய்ம் மொழியார்முகம் நோக்கிப் பயமில்லா
நாகத்தொடு பேசுந்திரு வாய்விண்டுரை நவில்வார்:
"கொலைவாட்கர தாபித்தெனும் குலமேலவர் தமக்கே
விலையாம்நிதி யுளதீந்தன(து) உடல்மீட்குவன் விளங்கும்
பலனும்படி நீயும்மினிப் பதிதோறினும் போய்ப்போய்
அலையாவகை மகிழ்வாகஇல் லவளாகுதி யென்றார்."

* ஹிஜ்ரீ 5-இல் பனீ முஸ்தலி:க் படையெடுப்பினின்று மதீனாவிற்குத் திரும்பி வருங் கால், 'ஹ'ஜ்ரத் ஆ'யிஷா(ரலி') பிராட்டியார் இருளில் தமது ஒட்டகத்தினின் றிறங்கி வெளி யிற் சென்று மீண்டு வந்து பார்த்தபோது, தங் கழுத்திலிருந்த மணியார மொன்று காணு மிருப்பது கண்டு, அதனைத் தேடிக்கொண்டு மறுபடியும் வெளியே சென்று விட்டார்கள். ஆனால், அப்பொழுது இருட்டு நேரமா யிருந்தமையால், ஒட்டகக்காரர்கள் ஆ'யிஷா(ரலி') ஒட்டகத்தின் ஹௌதாவுக்குள் ஏறியிருப்பார்களென் றெண்ணிக் கொண்டே வெறும்ஒட்ட கத்தை ஓட்டிக்கொண்டு போய்விட்டார்கள். அதுகண்டு, ஆ'யிஷாபிராட்டி அவ்விடத்திலேயே வாளா குந்திவிட்டார்கள். பிறகு எல்லாருக்கும் இறுதியில் விடிந்தபின்னர் வந்த ஸ'ப்வான் என்பவரால் அம்மாது சிரோமணி மதீனாவிற்குக் கொண்டுவந்து க்ஷேமமாகச் சேர்ப்பிக்கப் பட்டார். இச் சாதாரண சம்பவத்தையே அ'ப்'து'ல்லா பி'ன் உபை' முதலிய முனா'பி(க்):கீன்கள் ஒரு பெரிய அபவாதமாகத் திரித்து அந்நகர் முழுதும் பரத்திவிட்டார்கள். இதில் 'ஹ'ஜ்ரத் ஆ'யிஷாவின் சற்குணத்தைப் பாதிக்கக்கூடிய அம்சம் ஒன்றுமே காணப்பட வில்லை.

"பொய்யைக் கொண்டு கற்பனை செய்துவந்த அவர்கள் நிச்சயமாக உங்களுள்ளே ஒருசாராரா யிருக்கிறார்கள். உங்களுக்கு அஃதொரு தீங்கென்று கருதாதீர்கள்; அவ்வா றில்லை! அஃதுங்களுக்கு நல்லதேயாம்.........இன்னம், அதன் பெரும் பகுதியைத் தன் மேல் சுமந்துகொண்டவன் குறித்தென்றாலோ, அவனுக்கு மாபெரும் வேதனையுண்டு," என்றும், "இஃதொரு வெளிப்படையான புளுகே," என்றும் ஆண்டவன் தன் திருமறை யிலே (24 : 11) விளக்கியிருக்கிறான்.

சன்மார்க்க சீலர்கள் எப்பொழுதும் தங்கள் விரோதிகளின் கையில் அபகீர்த்தியான அபவாதங்களுக்கு இலக்காகாமல் இருந்ததில்லை யென்பதற்கு இஃதொன்றே போதிய சான்றாகும். இவ்வாறே ஈஸா நபியின் அன்னையாகிய மரியம் அவர்களைப் பற்றியும் இப்படித்தான் அக்கால யூதர்கள் பழிமொழி சுமத்தினார்கள். "அது (முழுதும்) மரியத்துக்கு விரோதமாய்க் கிளத்தப்பட்டிருக்கும் மாபெரும் (பொய்க் குற்றப்) பழியேயாகும்,"(4 : 156) என்று ஆண்டவனே தன் திருமறையில் விளக்கி யிருக்கின்றான். இப்பொழுது அவ்வாறான மற்றொரு சிகாமணியின் மீதும் அவ்வண்ணமே அபவாதம் (அபாண்டப் புளுகையே) சுமத்தத் தலைப்பட்டார்கள். அம்மாது சிரோமணியின் (மரியத்தின்) மீது சுமத்தப்பட்ட படுதூறனைத்தும் நமது :குர்ஆன்ஷரீ'பாலே மறுக்கப்பட்டிருப்பதே போலத்தான் ஆ'யிஷா (ரலி') அவர்கள்மீது சுமத்தப்பட்ட அவதூறும் பொய்யென உறுதிப்படுத்தப் பட்டது. நபிகள் திலகம் இதைப்பற்றி முழுவிசாரணையும் செய்து, அபவாதச்செய்திமுழுதும் முனா'பி(க்):கீன்களாலேயே கட்டிவிடப்பட்டதென்று நன்கு ருஜூப்படுத்திவிட்டார்கள்; இதையேதான் ஆண்டவனும் தன் திருமறையில் கூறியிருக்கின்றான்; இவ்வாறெல்லாம் பஹிரங்க விசாரணையாலும், அல்லா(ஹ்)வின் திருமறையாலும் பொய்க் கட்டுக்கதை யென்று வெளிப்படையாய்ப் புலப்பட்டிருந்தும், ஏனோ ஒருசில எதிர்மத வாதிகள் 'ஹ'ஜ்ரத் ஆ'யிஷா அவர்களின் இப் படர்மொழியைப்பற்றி எழுதப்புகுங்கால், தங்கள் எழுதுகோல்களின் வேகத்தை முற்றும் அவிழ்த்துவிட்டு விடுகிறார்களென்பதற்குத்தான் தக்ககாரணம் புலப்படுவதில்லை. எவ்வாற்றானும் ஆ'யிஷா பிராட்டியார்மீது ஒரு வீண்பழியைச் சுமத்துவதால் அன்னவர் கணவரான நபிகள் திலகத்தின்மீதும் ஒருவகைக் குற்றத்தையேனும் சுமத்திவிடலாமென்னும் ஆர்வத்தினாலேயே அவ்வாறெல்லாம் துருவிட்டுக் கொண்டு அலைகிறார்களென்று நாம் எண்ணவேண்டிய திருக்கின்றதன்றோ? கண்ணிருந்தும் மக்கள்சிலர் குருடராவதேனோ? தூங்குகிறவனைத் தட்டியெழுப்பலாம்; ஆயின், விழித்துக் கொண்டு பாசாங்கு செய்கிறவனைத் தாற்றுக்கோலாலும் குத்தியெழுப்புவது கூடாதேயாகும்.

---

# அதிகாரம் — 26

## முஸ்லிம்களும் எஹூதிகளும்

*"ஏ ஈமான் கொண்டவர்காள்! உங்கள் சொந்த ஜனங்க(ளாய முஸ்லிம்க)ளைப் பார்க்கினும் ஏனையோருள்ளிருந்து உங்க ளந்தரங்கத்தை உசாவி யறிகிறவர்களை (அத்தியந்த நண்பர்களாக) ஆக்கிக் கொள்ளாதீர்கள்; உங்களுக்குக் கேடு விளைப்பதில் அவர்கள் குறை யொன்றும் செய்வதில்லை; மேலும், உங்களைக் கஷ்டப்படுத்துவதை(க் காண) அவர்கள் விழைகின்றார்கள்; திண்ணமாய், அன்னவர்களுடைய வாய்களிலிருந்தே (அசூயை மிக்க) கடும் பகை வெளியா யிருக்கிறது; இன்னம், அன்னவர்களின் நெஞ்சங்கள் மறைத்து வைத்திருப்பது (அதைப் பார்க்கினும்) மிகப் பெரிதா யிருக்கிறது; திண்ணமாக, நீங்கள் அறிந்துணரும் ஜனங்களா யிருப்பின், நுங்களுக்கு நாம் அறிவிப்புக்களை விவரித்துக் காண்பித்திருக்கிறோம்."— (3 : 117)*

சென்ற அதிகாரங்களில் ஹிஜ்ரீ 5-ஆவது ஆண்டுவரை முஸ்லிம்களுக்கும் ஏனைய அராபியருக்கும் இடையில் நிகழ்ந்துவந்த காரியங்களை யெல்லாம் ப'னீ முஸ்தலி:க் யுத்தம் முடியும் பரியந்தம் யாம் ஒருவாறு சுருக்கிக்காட்டி யிருக்கின்றோம். அதுவரை மதீனாவின்கண் வசித்துவந்த யூதர்களெல்லாரும் மௌனம் சாதித்துக்கொண்டு மரியாதையுடனேதான் வாளா இருந்து வந்தார்களென்று சற்றும் சிந்தனை செய்துவிடா திருப்பீர்களாக. என்னெனின், ஹிஜ்ரீ 2-ஆவது ஆண்டிலேயே அந்த யூதர்கள் தங்கள் விஷமத்தனத்தை நன்கு வெளியிற்காட்டத் துணிந்து விட்டார்கள். அவர்களுக்கு முழுச்சுதந்தரத்துடனே நபிகள்திலக மவர்களால் (சல்) அளிக்கப்பட்டிருந்த உரிமைக ளனைத்தும் வெறும் விழலுக்கிறைத்த நீராகவே மாறிப்போய் விட்டன. நாம் முன்னமே கூறியிருப்பதே போல, ஆங்கிருந்த யூதர்களே அம்மதீனா நகரிலும், அதனைச் சூழ்ந்துள்ள பகுதிகளிலும் பேராதிக்யம் பெற்று விளங்கிவந்தார்கள். நபிகள் திலகம் அந்நகருக்கு விஜயம்செய்யுமுன் யூதர்களின் செல்வாக்கே அங்கு எங்குப்பார்த்தாலும் தழைத்தோங்கி யிருந்ததென்பதை நீங்கள் இதற்கு முன்னரே ஒருவாறு தெரிந்துகொண்டிருக்கிறீர்கள். ஆனால், ஔஸ், க''ஜ்ரஜ் என்னும் இரு யூதரல்லாத வகுப்பினரும் ஆதியில் அந்த யூதர்களுக்கு இணையாகவே முன்னுக்கு வந்திருந்த போதினும், பிறகு அவ்விரு வர்க்கத்தினருள் நடைபெற்றுவந்த

யுத்தங்களின் பயனுய் இன்னவர்கள் அந்த யூதர்களுக்குச் சமமான அந்தஸ்தை யடையமுடியாது வீழ்ச்சியுற்றுத் தாழ்ச்சியுள்ளே சிக்குண்டு கிடந்தனர்.

அங்கு வசித்துவந்த யூதக்குழாங்களுள் ப'னீ க:னு:காஃ,' ப'னீ நலீ'ர், ப'னீ :குறைள'ா என்னும் மூன்று வர்க்கத்தினரே முதன் முக்கியஸ்தர்களாய்க் காணப்பட்டு வந்தார்கள். ஆகவே, மதீனுவின் கண்ணும் அதைச் சூழ்ந்துள்ள பகுதிகளிலும் அம்மூன்று கூட்டத்தினருமே அதிக பூஸ்திதி யுடைவராகவும், பெரிய ஐசுவரியவான்களாகவும் இருந்துவந்தனர். வர்த்தகமும் கைத்தொழிலுங்கூட அன்னவர் கைவயமே சிக்கியிருந்தன. வட்டி வாங்குவதில் அன்னவரை ஒப்பாரும் மிக்காரும் ஆங்கில்லாமையால், அவர்கள் செல்வக்குவியலில் புரண்டுகொண்டிருந்த சீமான்களாகவே காணப்பட்டு வந்தனர். அவர்களுள் க:னு:காஃ' என்னும் வர்க்கத்தினர் அழகிய ஆபரணங்கள் செய்துவிற்கும் பெரும் வர்த்தகத்தொழிலாளர்களாயிருந்துவந்தனர். வீரத்திலும் அவர்களே ஏனை எஹூதிகளைக் காட்டினும் தலைசிறந்து விளங்கினுர்கள். எனவே, அன்னவர்பால் அதிகமான யுத்த தளவாடங்களும் இருந்துவந்தன வென்னலாம்.

ஆதலின், அன்சார்கள் இஸ்லாத்துக்கு முன்னே அந்தக் க:னு:காஃ' வர்க்கத்தினர்பால் அடிக்கடி கடன் வாங்கிக்கொண் டிருந்தார்கள்; இதனுல் பெரும்பாலும் ஔஸ், க''ஜ்ரஜ் வர்க்கத்தின ரெல்லாரும் அந்த யூதர்களிடம் கடன்பட்டு, அன்னவர்பால் அடிமைகளாகவே அமர்ந்துகிடந்தனர். இவ்விரு (ஔஸ், க''ஜ்ரஜ்) கூட்டத்தினர்களும் விக்கிரஹத் தொழும்பர்களாகவே இஸ்லாத்துக்குமுன்னே இருந்துவந்ததனுல், இவர்கள் அந்த யூதர்களைத் தங்களைப்பார்க்கினும் மேலான வேதமத முடையவர்க ளென்றும் ம்தித்துவந்தார்கள்; அன்றியும், கல்வி சம்பந்த மாகவும் அந்த யூதர்களே இவர்களைப்பார்க்கினும் சிறப்புற்று விளங்கிவந்தார்கள். இதனுலெல்லாம் அந்த யூதர்கள் தங்களைப்பற்றி அதிகமான தற்புகழ்ச்சி யடைந்து மமதை கொண் டிருந்தார்கள். ஆதலினுல்தான், அந்த ஔஸ், க''ஜ்ரஜ் வம்சத்தினர் சில்வகை வேண்டுதலின்மீது தங்களுடைய சிற்சில குழந்தைகளை யூதர்களாகவே மாறச் செய்துகொண்டு மிருந்தார்கள். எனவே, இவ்வண்ணம் மல்கிய யூதர்களும் அம் மதீனுவின்கண் அதிகம் பெருத்துக்கிடந்தார்கள்.

செல்வத்தால் பெரியவர்களாகவும், செல்வாக்கால் சிறந்தவர்களாகவும் அந்த யூதர்கள் இருந்துவந்த காரணத்தினுல் அக்கம்பக்கத்தி லிருந்த எல்லாக் குடிமக்களுமே அன்னவர்பால் கடன்பட்டு அடிமைகளாய்ச் சிக்கிச் சுழன்று கிடந்துழன்றுர்கள். கடன்கொடுக்கும் விஷயத்தில் அந்தக் கொடிய யூதர்கள் மிகவுங் கடுமையான "ஷைலாக்" நிபந்தனைகளை யெல்லாம் ஏற்படுத்துவார்கள் ; அவர்கள் கொடுக்கும் கடன்தொகைக் கீடாக அக் கடன்காரர்களின் மனைவி, மக்களை யெல்லாமுங்கூட அடைமானமாகக்

கொண்டுவந்து ஒப்படைக்குமாறு பலவந்தப் படுத்துவார்கள். இத்துணைப் பெரிய செல்வமும் செல்வாக்கும் இருந்துவந்த போதினும், அந்த யூதக் கொடும்பாவிகள் இரண்டுரூபாய் நான்குரூபாய் பெறுமதியுள்ள ஆபரணங்கள்மீதும் அவாக்கொண்டு, அன்னவர்பால் அடைமானம் வைக்கப்பட்டிருக்கும் குழந்தைகளை யெல்லாம் கல்லாலடித்துக் கொன்றுவிடுவார்கள். எனவே, எப்படிப்பட்ட திருட்டுத் தொழிலையும் ஈனத் தொழிலெனக் கருத மாட்டார்கள். பணத்திமிர் அதிகம் இருந்துவந்தமையால், வியபிசாரமும் ஒரு சர்வசாதாரணமான இழுக்கற்ற ஒழுக்காகவே அன்னவர்களிடத்துக் காணப்பட்டுவந்தது. அவர்களே செல்வச் சீமான்களா யிருந்துவந்ததனால், அவர்களைக் கண்டிப்பார் தண்டிப்பார் ஒருவருமில்லாது போய், எல்லாத் தலைவர்களுங்கூட இத்தகைய இழிதொழிலில் அடியோடு ஆழ மூழ்கிக்கிடந்தார்கள்.

இத்தன்மைத் தாய அலங்கோலச் சூழ்நிலையிலேதான் இஸ்லாமார்க்கம் அம் மதீனுநகருக்குள்ளே விஜயம்செய்ய லாயிற்று. உடனே ஔஸ், க''ஜ்ரஜ் என்னும் இரு பெருங் கூட்டத்தினரும் மிக்க ஒற்றுமையுடனே தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவி அன்சார்களாக மாறிவிட்டார்கள். யூதர்களும் அதைக்கண்டு திகில்கொள்ள ஆரம்பித்து விட்டதனால், அன்னவரின் யதேச்சைக் கொன்றும் துன்பம் விளையமாட்டா தென்று நபிகள் பிரான் (சல்) ஓர் உடன்படிக்கையை ஏற்படுத்தி யிருந்தார்கள். ஆயின், நாளேற வேற, தீ'னுல் இஸ்லாம் சிறுகச் சிறுக அந்நகரில் கிரமேணுவாய் அபிவிருத்தி யடைந்து வருவதையும், அக் காரணத்தினுல் தங்கள் யூதமதத்தின் மீதிருந்துவந்த செல்வாக் கனைத்தும் சிறுகச் சிறுகச் சுருங்கிவருவதையுங் கண்டு, அந்த யூதர்களுக்குச் சற்றும் மனம்பொறுக்க வில்லை. இஸ்லாம் ஏறஏற, யூதமதம் இறங்கிக்கொண்டே வந்தமையால், அன்னிய மதத்தினர் அந்த யூதர்களின் கொள்கைகளை மேற்கொண்டொழுகும் பழக்கத்தையும் சிறுகச் சிறுகக் கைவிட்டு வந்தார்கள். அன்சாரிய்யீன்க ளெல்லாரும் தமக்குள்ளே கட்டுப்பாடான ஒற்றுமையைப் பின்பற்றிநடக்கத் துவக்கியதன் பின்னுல் யூதர்கள் முற்காலத்தைப்போல அன்னவர்மாட்டுப் பலவந்தமாகத் தங்கள் காரியங்களைத் துருத்தமுடியாது போயிற்று.

அதன் பின்பு முஸ்லிம்களுக்குக் கிடைத்துவந்த பற்பல போர்வெற்றியின் பயனுக அந்த அன்சாரிய்யீன்களுக்கு அதிகமான இலாபம் கிடைத்து வந்தன ; இதனுல் அவர்கள் யூதர்களுக்குக் கொடுக்கவேண்டி யிருந்த கடன்களையெல்லாம் கொடுத்துத் தீர்த்துவிட்டு, அன்னவரின் இருப்புப் பிடியினின்று விடுதலைபெற் றிருந்தார்கள். இக் காரணத்தினுலும் யூதர்களின் செல்வாக்கு அந்நகர்முழுதும் குறைந்துகொண்டே வந்தது. இதுவேயுமன்றி, இன்னம், இஸ்லாத்துக்கு முன்னே ஆங்கு யூதர்கள் செய்துகொண்டு வந்த அக்கிரமங்க ளெல்லாம் அன்னவரின் மதக்கடமைகள்

தாமோ வென்று ஐயுற்றுக்கிடந்த அன்சாரிய்யீன்க ளெல்லாரும் இஸ்லாத்தின் ஞானேதயத்துக்குப் பின்னே அந்த யூதர்க ளனைவரும் தங்கள் மதத்தில் (தவ்ராத்தில்) ஒருவிதம் சொல்லி யிருக்க, தாங்கள் மற்றொருவிதம் அதற்கு நேர்முரணுய் நடந்துகொண்டு வந்தார்க ளென்னும் அந்தரங்க அயோக்கியத் தனத்தையும் அதிகம் அறிந்துகொண்டு விட்டார்கள். இதனுலும், இஸ்லாமார்க்கம் யூதமதத்தைக் காட்டினும் சிறந்த தென்று தினே தினே பெயர்பெற்று விளங்கி வருதலினுலும் அந்த யூதர்களுக்கு நபிகள் திலகத்தின்மீது அடக்கமுடியா ஆத்திரம் அதிகம் ஜனித்துக்கொண்டே வந்தது. ஆனுல், நபிபெருமானுர் (சல்) அவர்களுடனே செய்துகொண்டிருந்த உடன்படிக்கையை அனுசரித்துச் சிறிதுநாள்வரை அந்த யூதர்கள் தங்கள் மனத்துக்குள்ளிருந்த குரோதத்தை வெளிப்படுத்தாமலே யிருந்து வந்தார்கள். இஸ்லா மார்க்கம் தங்கள் யூதமதத்தினும் சிறந்ததென்பதைக் கேட்குந்தோறும் கேட்குந்தோறும் யூதர்களுக் குண்டான மனக் கொதிப்பிற்கோர் அளவை சொல்ல முடியாது போய்விட்டது. அவர்கள் தங்களுக்குண்டாகும் லஜ்ஜையின் காரணத்தினுல் நபிகள் பிரான்மீது (சல்) தூஷணமொழி கூறித் தூற்றத் தொடங்கி விட்டார்கள். அந்த யூதர்கள் நபிகள் திலகத்துக்கும், ஏனை முஸ்லிம்களுக்கும் எத்தனைவிதமான இன்னல்களைச் செய்யத் துணிந்தபோதினும், நபிகள்பெருமானுர்மட்டும் (சல்) தங்கள் சிஷ்யகோடிகளுக் கெல்லாம் புத்திமதி புகட்டி, ஆண்டவனது ஆணையைப் பின்பற்றிப் பொறுமையுடனே சகித்துக்கொண் டிருக்கச்சொல்வார்கள்.

நபிகள் நாதரை அந்த யூதர்கள் சந்திக்க நேருங்கால், "அஸ்ஸலாமு அலைக்கும்!"— (உங்கள்மீது சாந்தியுண்டாகக் கடவது!) என்று சொல்வதற்கு மாருக, "அஸ்ஸாமு அலைக்க!"—(உன்மீது சாக்காடு வரக்கடவது!) என்றே கூறுவார்கள். ஒருமுறை இவ்வாறு யூதர்கள் கூறியதைக் கேட்ட ஆ'யிஷா (ரலி') பிராட்டியவர்கள், "நல்லதிருஷ்டங் கெட்ட மூதேவிகளே! நீங்களே நாசமாய்ப் போகக் கடவீர்கள்!" என்று மிக்க கோபத்துடனே திட்டினுர்கள்; அதனைச் செவிமடுத்த நபிகள் திலகம் (சல்) ஆ'யிஷா (ரலி') அவர்களின் கோபத்தைச் சமனப்படுத்தி, "நீயேன் வீணே கோபித்துக் கொள்ளுகின்றுய்? அமரிக்கையாயிரு. அவர்கள் அவ்வாறு கூறியதற்கு நானும் 'வஅ'லைக்க!'* என்றுதானே செப்பினேன்?" என்று கூறி முடித்தார்கள். வேறு சில சமயங்களில், "ராஇ'னு"— (எங்களைச் செவிமடுங்கள்) என்று கூறப்படும் சொல்லைத் திரித்து, "ரஇ'னு"—(அவனொரு முட்டாளாக, அல்லது மடயனுக ஆய்விட்டான்) என்று, நெட்டெழுத்தைக் குற்றெழுத்

* "வஅ'லைக்க" என்பது, "உன்மீதும்" என்றே பொருள் கொள்ளும். அஃதாவது, 'உன்மீதும் அத்தகைய சாக்காடு வரக்கடவது!' என்று கருத்துக் கொள்ளும்.

தாக மாற்றிக் குயுக்தியாக ஏளனம் செய்வார்கள்.† ஆயினும், நபிகள் திலகம் (சல்) அசல் யூதமதத்தின் மெய்யான கௌரவத்தை ஹானி செய்யுமாறு ஒன்றும் புரிய மாட்டார்கள். யூதர்களின் சவங்கள் சுமந்து செல்லப்படுங்கால், நபிகள் திலகம் (சல்) மரியாதையுடன் எழுந்து நின்று, "அந்தச் சரீரத்தினுள்ளும் ஆண்டவனது ஆன்மா இருந்த தில்லையா!" என்று கூறுவார்கள். இன்னம், ஆண்டின் ஆரம்பத்தில் மு'ஹர்ரம் முதற் பத்துத் தினங்களாகிய ஆ'ஷுரா காலத்தில் அந்த யூதர்களைப் பார்த்து நபிகள் திலகமும் (சல்) நோன்புவைத்து வந்தார்கள். இன்னம், அந்த யூதர்களைப் போலவே தலையில் சிகையும் வைத்திருந்தார்கள்.** ஆயினும், அந்த யூதர்கள் நபிகள் திலகத்தின்மீது கொண்ட வன்மத்தை மட்டும் ஒரு சிறிதும் குறைத்துக் கொண்டனரில்லை. ப'த்'ரின் யுத்தத்திற்குப் பின்னர் ஒருசிறிதே அச்சங்கொண் டிருந்தபோதினும், அந்த யூதர்கள் பிறகுடனே அதனை மறந்துவிட்டு, முஸ்லிம்களுக்கு இன்னல் செய்வதே சரியெனத் தீர்மானம் செய்து கொண்டார்கள்.

தீ'னுல் இஸ்லாத்தின் கௌரவத்தைக் குறைக்க அந்த யூதர்கள் தங்களாலியன்ற சமத்காரங்களை யெல்லாம் மேற்கொண்டு வந்தார்கள். விக்கிரஹத் தொழும்பர்களைக் காட்டினும் முஸ்லிம்கள் தாழ்ந்தவர்க ளென்று எண்பிப்பான்வேண்டி அன்னவர்களிடம் சென்று, "உங்கள் மதமே இஸ்லாத்தைப் பார்க்கினும் மேலானதா யிருக்கின்றது!" என்று ஸ்தோத்திரம் செய்வார்கள். இஸ்லா மார்க்கம் சத்திய சன்மார்க்கம் அன்றென்றும், இதைத் தழுவியவர்களுக்கும் இம் மார்க்கத்தின்மீது உறுதியான பற்றுக்கோடு இராதென்றும் வெளிக்காட்ட வேண்டுமென்னும் கபட நோக்கத்துடன் யூதர்களே இஸ்லாத்தில் முதல்நாள் சேர்ந்து மறுநாள் இதனை விட்டுத் தங்கள் பண்டை மதத்துக்கே திரும்பிவிடுவார்கள். எவரேனும் வினவுவராயின், "இஸ்லாத்தில் சேர்ந்து பார்த்தோம்; அதில் சத்தொன்றும் காணுமையால் எங்கள் புராதன மதத்திற்கே திரும்பி வந்துவிட்டோம்," என்று கூறுவார்கள்.* ஆரம்பத்தில் வெறும் அருவருப்பாய் மட்டும் இருந்துவந்த விஷயம் பிறகு நாளடைவில் முழுப் பகைமையாகவே வந்து

† நபிபெருமான் (சல்) உபதேசம் புரியுங்கால், தங்கள்பக்கம் திரும்பிச் சொல்லவில்லை, அல்லது தங்களுக்குக் காதில் விழவில்லை யென்று கண்டு, சில சீடர்கள் ராஇ'னு (எங்கள் கூப்பீட்டைச் செவிமடுத்து, எங்கள் பக்கமும் திரும்பிக் கூறுங்கள்) என்பார்கள். இச் சொல்லை அந்த யூதர்கள் ரஇ'னு (அவன் மடயனைய் விட்டான்) என்று ஏளனமாய்க் கூறி, நகை யாடுவார்கள்.

** இன்னதை இன்னவிதந்தான் செய்யவேண்டு மென்று :குர்ஆனில் வெளிப்படையாய்க் கூறப்படாத ஒன்றை நபிபிரான் செய்யத் துணியுங்கால், அவ் வேதக்காரராய யூதர்களையே பின்பற்றுவார்கள்.

* திரு காந்தியார் மகன் ஹீராலால் காந்தி அ'ப்'து'ல்லா காந்தியாக மாறி, மறுமாதத்திலே மீட்டும் தமது பழைய இந்து மதத்திற்கே சென்றது உங்களுக்கு நினைவி லிருக்குமே!

மூண்டுகொண்ட தென்னலாம். ஆகவே, முஸ்லிம் ஆண் பெண்களைப்பற்றி யெல்லாம் அந்த யூதர்கள் அவதூறாக வசைபாடத் தொடங்கி விட்டார்கள். மர்வான் என்னும் ஒரு யூதனது குமாரியான அஸ்மா வென்பவள், ஒரு கவி வாணியா யிருந்துவந்ததனால், நபிகள் திலகத்தைப் பற்றி வேண்டியமட்டும் வசைப் புராணம் பாடிக்கொண்டே திரிவாள். அக் காலத்தில் கவிவாணர் கள் அவ் வராபியரின் ஆவேசத்தைத் தங்கள் கவிவன்மைகொண்டு அதிகம் தூண்டிவிடுவது ஒரு பெருவழக்கா யிருந்துவந்தது. எனவே, இதுபோழ்து அந்த யூதக் கவிகளெல்லாரும் தங்கள் சாமர்த்திய முழுதையும் முஸ்லிம்கள் மீது பகைமையைக் கிளப்புவதற் கென்றே உபயோகப்படுத்தி வந்தார்கள். எனவேதான், ப'த்'ர் யுத்தத்துக்குப் பின் கஅ'ப்' இப்'னு அஷ்ர'ப் என்னும் நலீ'ர் வம்சக் கவிவாணன் மக்கத்துக்குச் சென்று, நபிகள் திலகத்தையும் வேறு பல நல்ல முஸ்லிம்களையும் தாக்கியும், ப'த்'ரில் மடிந்துபோன :குறை ஷிகளை உயர்த்தியும் கவிகள் பாடி, உ'ஹுதி'ன் யுத்தத்திற்குப் படையெடுத் தெழுமாறு மிக்க உரோஷத்துடனே கிளப்பிவிட்டான். பிறகு மதீனா விற்குத் திரும்பிவந்து, முஸ்லிம் ஆண் பெண்களை யெல்லாம் வசைமொழி நிரப்பிக் கவிபாடிக்கொண்டே திரிந்தான்.

ப'னீ நலீ'ர் வர்க்கத்தைச் சார்ந்த அ'பு'ல் ஹுகை:க்:க் என்பவ னுடைய குமாரனான அபூ' ராபி'ஃ' ஸல்லாம் என்னும் தனவந்தனும் இஸ்லாத்தின் மீது அளவிறந்த வைஷம்யம் பூண்டிருந்தான். இவன் தன்னுடைய கூட்டத்தின் ஒருசில மக்களுடன் பிறகு மதீனாவிற்கு வட மேற் கெல்லையில் நாலைந்துநாள் பிரயாணத் தொலைவிலுள்ள கை'ப'ர் என்னுமிடம் சென்று வசித்துக்கொண்டு வந்தான். இவன் முஸ்லிம்களை யும், மு'ஹம்மத்'(சல்) அவர்களையும் அதிகம் வெறுத்துவந்த காரணத்தால் தன் செல்வ வல்லமையைக் கொண்டு ப'னீ ஸுலைம், ப'னீ:கத்'பான் என்னும் வர்க்கத்தினரை யெல்லாம் இஸ்லாத்தின்மீது விரோதமாய்த் தூண்டி விட்டுக்கொண்டே யிருந்தான்.

இவ்வா றெல்லாம் செய்துவந்ததோ டமையாது, இஸ்லாத்தின் வுன்மையைக் குன்றச் செய்தற்கு அந்த யூதர்கள் வேறு பல வழிகளாலும் முயற்சி செய்துகொண்டு வந்தார்கள். அதற்கு முன்னே ஓயாது போர் புரிந்து கொண்டிருந்த ஔஸ், க''ஜ்ரஜ் என்னும் இரு அன்சார் கூட்டத் தினரும் முஸ்லிம்களாய பின்னே தமக்குள் மிக்க ஒற்றுமையுட னிருந்து வருவதே இஸ்லாத்தின் பலத்திற்கெல்லாம் மூலகாரணமென்று தெரிந்து கொண்டு, அந்த யூதர்கள் அவ் வொற்றுமையைக் குலைக்கப் பற்பல வகை யானும் சூழ்ச்சிசெய்து வந்தார்கள். அவ்விரு அன்சார் வர்க்கத்தின ருள்ளே பிளவை உண்டுபண்ணிவிடக் கூடுமாயின், அன்றுமுதல் இஸ்லா மார்க்கம் சுயமே க்ஷீணித்து விடுமென்று அவர்கள் பலமான தீர்மானம் செய்துகொண்டு விட்டார்கள். சாதாரணமாக, அரப் தேசத்தில் ஒருவருக் கொருவர் பகைமூட்டி விடுவதென்பது மிகவும் எளிதான காரியமேயாம்,

எனவே, ஒருமுறை ஔஸ், க''ஜ்ரஜ் வர்க்கத்தினர் சிலர்கூடி ஓரிடத்தில் சம்பாஷித்துக்கொண் டிருந்தார்கள். அதுபொழுது அவர்களுக் குள்ளே கலகத்தை மூட்டிவிட வேண்டுமென்னும் கெட்ட நாட்டத்துடன் ஒருசில யூதர்களும் அங்கே சென்றார்கள். அதுசமயம், ஆதியில் ஔஸ், க''ஜ்ரஜ் என்னுமிரு கூட்டத்தார்களும் க்ஷீணதசையை யடைவதற்கு மூலகாரணமா யிருந்துவந்த 'புஆ தென்னும் யுத்தத்தைப் பற்றி அந்த யூதர்கள் பையப் பேச ஆரம்பித்தார்கள். அக்கணமே அவ்விருகூட்டத்தினரும் தங்கள் தங்கள் புராதன சம்பவங்களை யெல்லாம் ஞாபகத்திற்குக் கொண்டுவந்து, தங்களுக் குள்ளே பலமான வாக்குவாதத்தை ஏற்படுத்திக்கொண்டு விட்டார்கள்; உடனே இருகக்ஷியினரும் உருவிய வாளுடன் எதிரெதிராக நின்றுகொண் டிருக்கின்றார்க ளென்னும் விஷயத்தை நபிகள் திலகம் (சல்) தற்செயலாக அறிந்துகொண்டு, அவ்விடம் சென்று, அவ் வன்சாரீய்யீன்களுக் கிடையில் மீண்டும் ஒற்றுமையை உண்டுபண்ணி வைத்தார்கள்.

இன்னம், பஹிரங்கத்தில் முஸ்லிம்களாக மாறி, அந்தரங்கத்தில் இஸ்லாத்திற்கே நேர்விரோதமாய் நடந்துகொண்டிருந்த முனா'பி(க்):கீன்க ளுடன் அந்த யூதர்கள் சேர்ந்துகொண்டு, அந் நயவஞ்சகக் கூட்டத்தாரின் தலைவனாய் விளங்கிய அ'ப்'து'ல்லா பி'ன் உபை'யுடன் இரகசியமாகக் கலந்து, இஸ்லாத்தின் ஆணிவேரையும் அடுத்தாற் போலுள்ள சல்லிவேரை யும் கல்லியெறிதற் குரிய சூழ்ச்சிகளை யெல்லாமும் செய்துகொண்டு வந்தார்கள். எல்லா அம்சங்களிலும் அ'ப்'து'ல்லா பி'ன் உபை' ஸலூல் என்பான் ப'னீ நலீ'ர் வர்க்கத்துக்குச் சமமாகவே இருந்து வந்ததனால், அவனுடைய உதவியை வைத்துக்கொண்டு முஸ்லிம்களை அடியோடு எளிதில் அழித்தொழித்து விடலாமென்று அந்த யூதர்கள் மனோராஜ்யம் செய்திருந்தார்கள். முன்னரே மக்கத்துக் :குறைஷிகள் நபிகள் நாயகத்தை மதீனாவைவிட்டு வெளிப்படுத்திவிட வேண்டுமென்று அ'ப்'து'ல்லா பி'ன் உபை'க்கு ஒரு பயமுறுத்தற்கடிதம் எழுதியிருந்தார்க ளென்பதை நீங்கள் அறிந் திருக்கின்றீர்கள்; ஆனால், அந்த லிகிதத்தில் கண்ட வண்ணம் அப்பொழுது அந்த அ'ப்'து'ல்லா வென்பவன் ஒன்றுஞ் செய்யத் துணிய வில்லை யென்பதையும் நீங்கள் நன்கறிவீர்கள். ஆனால், ப'த்'ர் யுத்தத் தோல்விக்குப்பின் அந்தக் :குறைஷியர் அஃதே போன்ற மற்றொரு பய முறுத்தலான லிகிதத்தை மதீனாவில் வசித்துவந்த யூதர்களுக்கும் அனுப்பி வைத்தார்கள். இத்தகைய விஷயங்களை யெல்லாம் கேள்வியுற்று, நபிகள் நாயகமும் யூதர்கள் கொலைத்தொழிலில் எந்தநிமிஷத்திலும் இரக்கமில்லாது இறங்கிவிடுதல் கூடுமென்னும் அச்சத்தினால் சிறிதுகாலம் வரை இராக் காலங்களில் தங்கள் விடுதியைவிட்டு வெளியில் புறப்படாமலே யிருந்து வந்தார்கள். இதனால் மதீனாவில் மரணத் தறுவாயிலிருந்த ஒரு ச'ஹாபி'யும் தம் பந்துமித்திரர்களை நோக்கி, "நான் இராக்காலத்தில் இறந்துவிடுவே னாயின், அப்பொழுது நீங்கள் விடியுமுன்னே என் மரணத்தைக் குறித்து

ரஸூலுல்லா(ஹ்) அவர்களுக்குச் செய்தியறிவிக்க வேண்டாம்," என்று கூறியிருந்தார்.

பிறகு ஹிஜ்ரீ இரண்டாவதாண்டு, ரமல'ானுக்கடுத்த ஷவ்வால்மாதம் வந்து தோன்றிற்று. ப'த்'ர் யுத்தத்தில் முஸ்லிம்கள் பெற்ற பெருவெற்றியைக் கண்டு யூதர்க ளெல்லாரும் நடுக்கங்கொள்ளத் தலைப்பட்டார்கள். ஆயினும், ஒவ்வொரு நாளும் தீ'னுல் இஸ்லாம் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக அபிவிருத்தி யடைந்துவருவதைக் கண்டு, அந்தயூதர்களுக்கு மற்றொருபுறம் அழுக்காறே அதிகரித்துக்கொண்டு வந்ததென்னலாம். எனவே, ப'னீ கை:னு:கா'ஃ' வர்க்கத்தினரே முதன் முதலாக இஸ்லாத்தை நசுக்கிவிட வேண்டு மென்னும் கொடிய எண்ணத்தால் முஸ்லிம்களுடன் செய்துகொண்டிருந்த உடன்படிக்கையை மீறிப் போர் புரியப் போவதாக அட்டகாசம் செய்துகொண் டிருந்தார்கள். அதுசமயம் தற்செயலாக நிகழ்ந்துவிட்ட மற்றொரு சம்பவமும் அந்த கை:னு:கா'ஃ'களின் ஆத்திரத்தை அதிகம் தூண்டிவிட்டது: ஒருநாள் ஓர் அன்சாரீப் பெண் கடைவீதி வழியே சென்று, சில சாமான் வாங்கும்பொருட்டுக் கை:னு:கா'ஃ' கூட்டத்தைச் சார்ந்த ஒரு யூதனுடைய கடைக்குள்ளே சென்றாள். ஆங்குக் கூடியிருந்த வேறுசில யூதர்கள் அக் கன்னிகையின் அழகைக் குறித்துப் பரிகாசம் பண்ணிக் கொண்டதிலிருந்து சச்சரவேற்பட்டு, அந் நங்கையை அங்குக் குழுமியிருந்த யூதர்கள் மானபங்கப் படுத்திவிட்டார்கள். அதுசமயம் அக் கடைவழியே சென்றுகொண்டிருந்த ஒரு முஸ்லிம் அச் சம்பவத்தைக் கண்டவுடன் அன்னவருக்கு மனக்கொதிப்பேற்பட்டு, அப்பொழுதே அம்முஸ்லிம் கன்னிகையை மானபங்கப்படுத்திய அந்த யூதனைக் கொன்று தீர்த்து விட்டார்; உடனே ஏனை யூதர்களெல்லாரும் ஒருமிக்கத் திரண்டு, அம் முஸ்லிமையும் ஆண்டே கொன்று முடித்து விட்டார்கள்.

அக்கணமே அதுசெய்தி தெரிந்து, நபிகள் திலகம் அவர்கள் ஆங்குச் சென்று, அந்த யூதர்களை நோக்கி, "ஆண்டவனுக்கு அஞ்சிக்கொள்வீர்களாக! அவ்வாறு அஞ்சாவிடின், ப'த்'ரில் கலந்துகொண்டவர்களுக்கு வந்த கதியே உங்களுக்கும் வந்துவிடியும்," என்று கூறினார்கள். அதுகேட்டு, யூதர்கள் மறுமொழியாக நபிகள் பெருமானை நோக்கி, "நாங்கள் :குறைஷிகளல்லேம்; எங்களுடன் நீவிர் யுத்தம் புரிவதாயிருந்தா லல்லவோ அந்தப் போர்முனை இன்னதென்பதை உங்களுக்குக் காண்பிப்போம்!" என்று கூறியதோ டமையாது, முஸ்லிம்களுடன் செய்துகொண்டிருந்த உடன்படிக்கைக்கு நேர்விரோதமாக அவர்களுடனே போர்புரியப் போவதாகவும் இறுதியில் அறிவித்துவிட்டார்கள். எனவே, நபிபெருமானவர்கள் அந்தக் கை:னு:கா'ஃ'களுடன் தற்காப்பி னிமித்தம் யுத்தம் புரியவேண்டிய ஆவசியகம் அதன்பின்னர் ஏற்பட்டுவிட்டது. உடனே முஸ்லிம்களெல்லாம் யுத்த சன்னத்தர்களாய்ச் சென்று, ப'னீ கை:னு:கா'ஃ'களின் கோட்டை

களைச் சூழ்ந்து முற்றுகை போட்டார்கள்; அந்த முற்றுகை பதினைந்து நாட்கள்வரை ஓயாது நடைபெற்று வந்தது. அதன்பின்பு அந்த யூதர்கள் நபிகள் திலகத்தின் தீர்மானத்தை ஏற்றுக்கொள்வதாகத் தூதனுப்பினார்கள். அதுபொழுது முஸ்லிம்க ளெல்லாரும் எல்லாக் ஃகனு:காஃ'களையும் அடியோடு கொன்றுவிட வேண்டுமென்று அபிப்பிராயங் கூறினார்கள். ஆனால், அந்த யூதர்களுடன் இரகசிய நேசஉடன்படிக்கை செய்துகொண்டிருந்த அப்'துல்லா பி'ன் உபை' யென்பான் நபிகளாரிடம் வந்து, அந்த யூதர்களை மதீனாவைவிட்டு வெளியேற்றி விடுவதே போதிய தண்டனையாகுமென்று தகவுரை கூறிநின்றான். உடனே நபிகள் திலகமும் தங்களுக்குரிய பெருந்தன்மையான தாராளச் சித்தத்தைக் கொண்டு அதற்குச் சம்மதம் கொடுத்து விட்டார்கள். ஆகவே, ப'னீ ஃகனு:காஃ' கூட்டத்தார் மதீனாவைவிட்டு வெளியேறி ஷாம் தேயத்திலுள்ள அஜ்ரஆ'த் தென்னும் பகுதிக்குச் சென்று குடியேறிவிட்டார்கள். அவர்கள் மொத்தம் 700 மனிதர்களா யிருந்தார்கள்; அவர்களுள் 300 பேர்மட்டும் இருப்புக்கவசம் அணிந்திருந்தார்கள். இது நிகழ்ந்தது ப'த்'ர் யுத்தத்துக்குப்பின் அடுத்த மாதத்திலாகும்.

அதன் பின்பு ஹிஜ்ரீ 3-ஆவது ஆண்டு பிறந்தது. யூத குலத்தில் தோன்றிய கஅ'ப் பி'ன் அஷ்ர'ப் என்னும் கீர்த்திவாய்ந்த கவிவாணனொருவன் இருந்துவந்தா னென்று நாம் முன்னம் கூறினோம். ப'னீ நலீ'ர் வர்க்கத்தைச் சார்ந்த அபூ'ராபி'ஃ' ஸல்லாம் பி'ன் அபு'ல் ஹு'ஃகை:க் என்னும் தனவந்தனது குமாரியைத் தாயீ இனத்தைச் சார்ந்த அஷ்ர'ப் என்னும் யூதக்கவி மணந்துகொண்டிருந்தான். ஸல்லாம் பி'ன் அபு'ல்ஹு'ஃகை:க் என்னும் "தாஜிருல் 'ஹிஜா'ஜ்"—('ஹிஜா'ஜின் வர்த்தகத் தலைவன்) என்று புகழ்பெயர் பெற்றிருந்த அப்பெருந் தனிகனது பேரனே கஅ'ப் பி'ன் அஷ்ர'ப் என்பவனாவான்; இவனும் தன் தந்தையைப் போலவே ஒரு வரகவியா யுயர்ந்து அந்த யூத வர்க்கத்தில் விளங்கிவந்தான். பிறவியால் கிடைத்த செல்வத்தாலும், மேதையால் கிடைத்த கல்வியாலும் அந்தக் கஅ'பு'க்கு அந் நாட்டின்கண்ணே அளவுகடந்த செல்வாக்கு மிக்கிருந்தது. சுருங்கச் சொல்லுமிடத்து, இவன் அங்கிருந்த எல்லா யூதர்களுக்குமே தலைமையான அந்தஸ்தைப் பெற்று விளங்கினான் என்னலாம். எனவே, அந்தக் கஅ'ப்' ஆங்கிருந்துவந்த எல்லா யூத முல்லாக்களுக்கும் உபகாரச் சம்பளமும் உம்பளமும் கொடுத்து, அவர்க ளெல்லாரையும் தனக்குப் பக்கபலமாகச் சேர்த்துக்கொண் டிருந்தான். ஆதலின், இவனுக்கும் மற்றெல்லா யூதர்களும் போலவே திருநபியவர்களின் ஹிஜ்ரத்திலிருந்தே அன்னவர் மீது அசூயை யென்பது பொங்கியெழுந்து வழிந்துகொண் டிருந்தது. ஆகவே, இவன் ப'த்'ர் யுத்தத்திற்குப் பின்னே 40 வீரர்களுடனே மக்காவுக்குத் துக்கம் விசாரிக்கச்சென்று, ஆங்கு எவ்வாறு அந்தக் :குறைஷியரின் ஆத்திரத்தைக் கிளப்பி விட்டானென்று முன்னமே நீங்கள் தெரிந்து

கொண் டிருக்கின்றீர்கள். இவன் சரமகவி பாடும்போது சுயமே தானும் அவலக் கண்ணீர்விட் டழுதுபுலம்புவான். இவன் செய்த மிகவும் உருக்க மான பிரசங்கத்தினால் அந்தக் :குறைஷிய ரெல்லாரும் க'அ்ப'ாவின் திரையைப் பற்றிக்கொண்டு, முஸ்லிம்களை அடியோடு அழித்தொழித்தே தீர்வ தென்று பிரதிக்கினை செய்துகொண்டு விட்டார்கள்.

இவன் உ'ஹுத்' யுத்தத்துக்கு வேண்டிய ஆயத்த மனைத்தையும் மக்கா வின்கண் செய்து முடித்துவிட்டு, உடனே மதீனாவிற்குத் திரும்பிவந்து, நபிகள் திலகத்தையும் மற்றுமுள்ள முஸ்லிம்களையும் நிந்தனை செய்து வசைக்கவி பாடிக்கொண் டலைந்தான். அது போதாதென்று நபிகள் திலகம் (சல்அ'ம்) அவர்களைக் கொன்று தீர்த்து விடுவதே சாலச் சிறந்ததெனக் கண்டு, அதற்கு வேண்டிய இரகசியச் சூழ்ச்சிகளையும் அந்தரங்கத்தில் செய்துகொண்டே வந்தான். இத்தீய நோக்குடனே பெருமானாரவர்களை ஒருநாள் கஅ்'ப்' என்பான் விருந்துக் கழைத்தான்; ஆனால், நபிகளாரருக்கு அவனுடைய அந்தரங்க நோக்கம் முன்னமே தெரிந்து விட்டமையால், அவனுடைய அவ் விருந்தழைப்பிற்கு இணங்க மறுத்து விட்டார்கள். முஸ்லிம்களுக்கும் தங்களுக்கும் அந்தக் கஅ்'ப்' இடைவிடாது இன்னல்பல விளைத்துவந்த விஷயத்தைக் குறித்து நம்பெருமான் (சல்) அவர்கள் ச'ஹா ப'ாக்களிடம் ஒருநாள் குறைகூறிக்கொண் டிருந்தார்கள். அதனைச் செவி மடுத்த மு'ஹம்மத்' பி'ன் மஸ்லமா என்னும் அன்சாரீயானவர் ஔஸ் வர்க் கத் தலைவர்களின் அனுமதிபெற்று, ரபீ'உ'ல் அவ்வல் மாதம் புறப்பட்டுச் சென்று, அந்தக் கஅ்'பி'ன் சிரத்தைக் கொய்து கொண்டுவந்து விட்டார். இதற்கு நபிகள் திலகத்தின் அங்கீகாரமும் அளிக்கப்பட் டிருந்ததாம்; ஆனால், மு'ஹம்மத்' பி'ன் மஸ்லமா அவனுடைய சிகையைப் பிடித்துக் கொண்டு கழுத்தை யறுக்குமாறு நம்பிரான் (சல்) அனுமதியளித்து அனுப்ப வில்லை யென்ப.

மு'ஹம்மத்' பி'ன் மஸ்லமா வென்பவர் கஅ்'பி'ன் வீடுநோக்கிச் சென்று, அவனை உள்ளிருந்து வெளியில் வருமாறு அழைத்து நின்றார். அவரது கூப்பீட்டைக் கேட்டுக் கஅ்'ப்' என்பான் தன் விடுதிக்குள்ளிருந்து வெளியில் வந்தான்; அப்பொழுது அவனுடைய தலைரோமத்தில் நல்ல வாசனைத் தைலம் தேய்க்கப்பட் டிருந்ததனால், அதை மோப்பம் பிடித்துப் பார்க்கத் தாம் விருப்பங் கொள்வதாக மு'ஹம்மத்' பி'ன் மஸ்லமா கூறினார்; அதற் கிணங்கி அக் கவிவாணன் தன் தலையைக் குனிந்து காண்பித்தபோது, மு'ஹம்மத்' பி'ன் மஸ்லமா அவனது சிகையைப் பற்றிக் கொண்டு சிரத்தைத் துண்டித்து விட்டார். இவ்வாறு செய்யும்படி நபிகள் திலகம் (சல்) கூறியதில்லை. ஆயினும், அக்கால வழக்கப்பிரகாரம் யுத்த காலங்களில் ஒரு கக்ஷிக்காரர் எதிர்க் கக்ஷிக்காரரை இவ்வாறு நயவஞ்சக மாக ஏமாற்றி விடுவதென்பது ஒரு சர்வ சாதாரணமான வழக்கமாகவே காணப்பட்டு வந்தது. ஏன்! இக்கால யுத்த சம்பவங்களிலுங் கூட,

சமீபத்திலே முடிவுற்றிருக்கும் உலகமகா யுத்தத்திலுங் கூட அவரவரும் தத்தம்மா லியன்றமட்டும் எதிரிகளை ஏமாற்றிக் கொல்வதென்பது ஒரு நித்தியப் பழக்கமாகவே— தர்மமாகவே காணப்பட்டு வரவில்லையா? பண்டைக்காலப் பழக்கமும் இதற்கெல்லாம் இடங்கொடுத் திருந்தபோது, இக் காலத்திலுள்ள சில எதிர்மதவாதிகள்— "போர் முறையிலும் காத லிலும் எதுசெய்தாலும், அது தர்மந்தான்!" என்னும் பழமொழியையுங் கூறிக்கொண்டே, வேறெதையோ தம் மனத்துக்குள்ளே நுழைத்துக் கொண்டு, அக்காலத்திய முஸ்லிம்களின் நடக்கையைக் குறித்து இழிமொழி கூறத் துணிவதுதான் ஓர் அர்த்தமற்ற அசட்டு வாதமாய்க் காணப்படா நின்றது. "சமாதான இளவரசரைப்" பின்பற்றுவதாய்க் கூறிக்கொண்டு, இஸ்லாத்தையும் இதன் திருநபியையும் வாய்கூசாது தாக்கிக் கிறுக்கித் தள்ளும் கிறிஸ்தவப் பெம்மான்களே 1914 முதல் 1944-க்குள்ளே இரண்டு உலகமகா யுத்தங்களை நிகழ்த்தி, இக் குவலயத்தி லுள்ள சகல ஜனங் களையும் கதிகலங்கச் செய்துவிட் டிருக்கின்றனர்கள். சென்ற உலகமகா யுத்தத்தால் விளைந்துள்ள கஷ்ட நஷ்டங்களை விட்டு உலகமன்பதை க்ஷேமமுற இன்னம் எத்தனை ஆண்டுகள் கழியவேண்டுமோ தெரியவில்லை. கடவுளுக்குத்தான் அது வெளிச்சம். "சமாதான இளவரசர்"— (Prince of Peace) பேராலேதான் ஜெர்மானி, இத்தாலி, இங்கிலாந்து, பிரான்ஸ், அமெரிக்கா ஆதிய நாடுகளெல்லாம் அவ்வுலக மகா யுத்தத்தை நடாத்தி முடித்தன என்கிறார்கள்.

இவ்வாறு இரகசியமாய்ச் சென்று, ஒரு கொடும் பகைவனை அக்கால யுத்தமுறைப்படி கொலைசெய்து விடுவதென்பது எவ்வாறு இக்கால அபிப்பிராயப் பிரகாரம் குற்றமெனக் கொள்ளப்படுதல் கூடும்? அக் காலத்தில் அத்தகைய மானநஷ்டமுள்ள வசைமொழிகளை விசாரித்து அவதூற்றுச் சட்டப்படி நியதி வழங்குவதற்கு நியாயமன்ற மொன்றும் அந்நாட்டில் இருந்துவந்த தில்லை. ஒரு புலவனது ஒரே ஆவேசச் செய்யுளே இருபெருங் கூட்டத்தினரை வாள்முனைக்குக் கொண்டுவந்து, போர்முனையிலே விடுமென்பது நிச்சயம். ஆனால், அத்தகைய குற்றங்களை விசாரித்து முடிவுசெய்தற்கு அதுபோது "இராணுவக் கோர்ட்" ஒன்றும் ஆங் கிருந்துவந்த தில்லை. இவ்வாறெல்லாம் நியாயம் வழங்குதற்குரிய பொதுநீதிமன்ற மொன்றும் இல்லாமையால், அக்காலத்தில் அவரவரும் தத்தம்மாலியன்ற சாம பேத தான தண்ட முறையா லெல்லாம் எதிரிகளை அழித்தொழித்து வந்தார்கள். யூதர்களும் அந்த முஸ்லிம்களும் செய்து கொண்டிருந்த உடன்படிக்கை நிபந்தனைக்கு நேர்மாறாகவே கஅ'ப்' தன் செல்வச் செருக்கைக் கொண்டும் கல்விப் பெருக்கைக் கொண்டும் எம் முஸ்லிம்களுக்கு இனியில்லா இன்னல்களை யெல்லாம் இனிது விளைத்துக் கொண்டு வந்தான். ஒருமுறை நபிகள் நாதரையும் கொலைபுரிவான்வேண்டி அப்பாதகன் விருந்துக் கழைத்திருக்க வில்லையா? இதற்கெல்லாம் நியாயம்

வழங்க ஓர் அரசுநிலையும் ஆங்குக் காணப்பட்ட தில்லை. எனவே, பஹிரங்க ஏற்பாட்டுடன் சென்று அவனைக் கொல்வதென்பது ஒரு மகாயுத்தத்துக்கே அடிகோலியதாகு மன்றோ? அதனால் எண்ணிறந்த உயிர்ச்சேதங்களும் இருகக்ஷியிலும் விளையாம லிருந்து விடுமோ? ஆதலின், பொதுஜன அபிப்பிராயத்தில் மாகொடிய பகைவனெனக் கருதப்பட்ட ஓர் எதிரியைத் துரிதமாகவும் இரகசியமாகவும் அப்புறப்படுத்தி விடுவதே அக்கால இராஜ்ஜிய தந்திரத்தின் அனுஷ்டான முறையாய்க் காணப்பட்டுவந்தது. எனவே, மானிட சமூகத்தின் நன்மையையும், அம்மதீனா நகரத்தின் பாது காப்பையும் கருத்தி லிருத்திக்கொண்டு, அந்தப் பகைஞன் முற்கூட்டியே விஷயத்தை ஒருவாறு உணர்ந்துகொண்டு, தனக்குரிய படைகளையெல்லாம் திரட்டிக்கொண்டு வருமுன்னரே வேலை தீர்த்துவிடுவதே சாலச்சிறந்த தெனக் கண்டே அந்த மு'ஹம்மத்' பி'ன் மஸ்லமா அவ்வாறு அந்தக் கஅ'பை'க் கொன்றொழித்து விட்டார். ஆயினும், அவ்வாறு அவனது சிகையைப் பிடித்துக்கொண்டு, கழுத்தைக் குனியவைத்துத் துண்டிக்க வேண்டு மென்று எம்பிரான் அவர்கள் எப்பொழுதுமே குறிப்பாகவுங் கூறியனுப்பிய தில்லையென் றறிக.

ப'னீ நலீ'ர் கூட்டத்தாருக்கும் முஸ்லிம்களுக்கு மிடையில் நேச வுடன்படிக்கை ஏற்படுத்தப்பட் டிருந்ததை நீங்கள் இதற்கு முன்னமே யறிவீர்கள். ஆ'மிர் பி'ன் 'துஃபல் என்பான் முன்னொரு முறை எழுபது முஸ்லிம் உபதேசகர்களை பீ'ர் மஊ'னா என்னுமிடத்தில் வஞ்சித்துக் கொன்றுவிட்டா னென்பதையும், அதிலிருந்து தப்பிப் பிழைத்துவந்த அ'ம்ரு பி'ன் உமையா என்னும் முஸ்லிம் அந்த ப'னீ ஆ'மிர் கூட்டத்தினர் இருவரை இடைவழியில் சந்திக்க நேர்ந்தபோது, அவ்விருவரையும் க்ஷாத்திரத்தால் கொன்றுவிட்டா ரென்பதையும் நீங்கள் முன்னம் வாசித் திருக்கின்றீர்கள். அவ்விரு கொலைகளுக்கும் நஷ்டஈடு கொடுத்து விட வேண்டுமென்று நபிகள்திலகம் தீர்ப்புக் கூறியிருந்தார்க ளன்றோ? ஹிஜ்ரீ 4-ஆவது ஆண்டில் அந்த நஷ்டஈட்டுத் தொகை கொடுபடவேண்டிய காலம் நெருங்கிய போது, ப'னீ நலீ'ர் வர்த்தகத்தினருக்கும் முஸ்லிம்களுக்கும் ஏற்பட்டிருந்த உடன்படிக்கையின் ஷரத்துப்பிரகாரம் அந்த நஷ்டஈட்டின் ஒரு பகுதியை ப'னீ நலீ'ர்களும் கொடுக்க வேண்டியதா யிருந்தது. அதனைக் கேட்டு வாங்கிவரும் பொருட்டு நபிகள்திலகம் (சல்) அந்த ப'னீ நலீ'ர் வசித்துவரும் இடத்திற்குச் சென்றார்கள். முதன் முதலில் அவ் வர்க்கத்தினர் தாங்கள் செய்யவேண்டிய உதவியைச் செய்யத் தையாரா யிருப்பதாகவே வெளியில் காட்டிக் கொண்டார்கள். ஆனால், நபிக ளாதரின் உயிருக்கே உலைவைக்கவேண்டி அந்தரங்கத்திலே ஓர் ஏற்பாடும் செய்துவைத் திருந்தார்கள். நபிகள் திலகம் (சல்) ப'னீ நலீ'ர் தலைவன் விடுதிக்கருகில், அவனது மேல்மாடிக்குச் செல்லக்கூடிய வழியோரமாய்

ஒரு சுவரின் நிழலில்நின்று பேசிக்கொண் டிருந்தார்கள்; அச் சுவரின் உச்சியில் ஒரு பெரும் கருங்கற் பாறைக்கல் ஏற்றிவைக்கப்பட் டிருந்தது.

நபிகள் திலகத்தின் (சல்) தலைமீது அக்கல்லை உருட்டித்தள்ளி விடுவ தென்னும் தீய எண்ணத்துடனே அ'ம்ரு பின் ஹஜ்ஜாஷ் என்னும் யூதனொருவன் மேல்மாடிக் கோடினான். எக்காரியத்திலும் சர்வஜாக்ரதை யுடனே இருந்துவரும் இயற்கைச் சுபாவமுடைய எம்பிரான் (சல்) அவர்கள் அந்த யூதனது அந்தரங்க நோக்கத்தை ஆண்டவனருளால் ஒருவாறு ஊகித் தறிந்துகொண்டு, உடனே புறப்பட்டு மதீனாவந்து சேர்ந்து விட்டார்கள். தாங்கள் சந்தேகத்துடன் திரும்புவதாகக் காட்டிக் கொண்டால், அந்த யூதர்களெல்லாரும் அதுசமயம் பலவந்தத்தில் இறங்கிவிடக் கூடுமென்று எண்ணிக்கொண்டே, எம்பிரான் (சல்) அவர்கள் தங்களுடன் சென்றிருந்த ச'ஹாபா'க்களையும் அவ்விடத்திலேயே விட்டுவிட்டு, ஏதோவோர் அவசர காரியமாகத் திரும்புவதேபோலத் திரும்பி, மதீனாவுக்கு க்ஷேமமாக விஜயஞ் செய்து விட்டார்கள். ஈதெல்லாம் :குறைஷியரின் தூண்டுதலின்மீதே நடைபெற்றதென்று சரித்திராசிரியர்கள் கூறுகின்றார்கள்.

நபிகள் திலகத்தை அடியோடு அழித்தொழித்து விடுமாறு மக்கத்துக் :குறைஷிகள் மதீனத்து யூதர்களை அடிக்கடி தூண்டிக் கொண்டேயிருந் தார்கள். அதற்கு முன்னரே முஸ்லிம்கள்மீது துவேஷம் பூண்டு நின்ற ப'னீ நலீ'ர்கள் :குறைஷியரின் கடிதத்தைக் கண்டதன் பின்னால் வெளிப் படையாகவே தங்கள் விரோதத்தைக் காட்டிக்கொள்ளத் துணிந்து விட்டார்கள். ஆதலின், அவர்கள் நபிகள் பெருமானுக்கு ஒரு தூதை யனுப்பி வைத்தார்கள்: நபிகள் திலகம் தங்கள் சிஷ்யர்கள் 30 பேருடன் யூதர்களால் குறிப்பிடப்படும் ஸ்தலத்திற்கு வந்துசேர வேண்டுமென்றும், யூதர்களும் தங்களுடைய அத்தனை குருமார்களை ஆங்கு அழைத்துக் கொண்டு வருவார்களென்றும், நபிகளுதர் அக் குருமார்களுக் கெல்லாம் நல்லுபதேசம் புரியவேண்டு மென்றும், அவ் வுபதேசத்தின் பயனாய் அந்தக் குருமார்கள் மனந்திரும்பி முஸ்லிம்களாய் விடுவார்களாயின், தாங்க ளெல்லாருங்கூட அவ்வண்ணமே தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவிவிடுவது நிச்சயமென்றும் அந்தத் தூது வந்தவர் மொழிந்துநின்றார். ஆனால், அந்த யூதர்களின் வசனங்களை ஒருசிறிதும் நம்பமுடியா தென்றும், ஆதலின், புதிய ஓர் உடன்படிக்கையே செய்துகொடுக்க வேண்டுமென்றும் நம் பெருமானா ரவர்கள் பதின்மொழி கூறி யனுப்பினார்கள். இதற்கு அந்த ப'னீ நலீ'ர் கூட்டத்தார் சம்மதிக்க வில்லை.

ஆனால், ப'னீ :குறைள'ாக்களும் தங்க ளுடன்படிக்கையைப் புதுப் பித்துக்கொடுக்க வேண்டுமென்று நபிகள் திலகம் கேட்டனுப்பியபோது, அதற் கொப்பி, அக் கூட்டத்தினர்மட்டும் தங்கள் பழைய உடன்படிக் கையைப் புதுப்பித்துக் கொடுத்தார்கள். ஆனால், ப'னீ நலீ'ர் கூட்டத்தார் இரண்டா முறையாகவும் நபிகள் நாதருக்கு ஒரு தூதை

யனுப்பிவைத்தார்கள்: தங்களுக்கு இஸ்லாம் மதத்தைப் போதிப்பதற்காக முஸ்லிம்களினின்று மூவரையேனும் நபிகள்திலகம் அழைத்துவர வேண்டுமென்றும், தாங்களும் தங்கள் குருமார் மூவரை அழைத்துவருவார்களென்றும், அக்குருமார் இஸ்லாத்தைத் தழுவுவார்களாயின், தாங்களும் அவ்வண்ணமே தழுவுவது நிச்சயமென்றும் கூறியனுப்பினுர்கள். அதற்குச் சம்மதித்து நபிகள் திலகம் புறப்பட்டுச் செல்லும்போது, இடைவழியில் பெருமானு ரவர்களது உயிருக்கே பேராபத்தை விளைக்கக்கூடிய சூழ்ச்சிகளைச் செய்துகொண்டு, அந்த ப்னீ நலீ'ர்கள் யுத்தமுஸ்தீபுடன் இருந்து வந்தார்களென்பதை உறுதியாகக் கேள்வியுற்று, உடனே மதீனுவுக்குத் திரும்பி விட்டார்கள். அப்பால் பஹிரங்கமாக முஸ்லிம்களுடன் யுத்தம் தொடங்குவ தென்றே அந்த நலீ'ர்கள் தீர்மானம் செய்துகொண்டார்கள் அவர்களுக்குப் பலமான கோட்டைக ளிருந்து வந்ததனுலும், :குறைஷியரின் ஆதரவு ஒருபக்க லிருந்துவந்ததனுலும், மற்றொரு பக்கல் முனு'பி:க் தலைவனுன அ'ப்'துல்லா பி'ன் உபை' தன் கைவயமுள்ள 2,000 வீரர்களுடன் வந்து உதவிபுரிவதாகக் கூறியதனுலும் அந்த யூதர்கள் அவ்வாறு தைரியங்கொண்டு விட்டார்கள். "கொண்டவன் தைரியமிருந்தால், கூரை மீதேறிச் சண்டைசெய்வாளன்றோ?" என்பது ஒரு பழமொழியாம்.

முஸ்லிம்கள் அதுசமயம் அதிக அபாயகரமான காலத்தையே கடத்தி வந்தார்க ளென்பதை நீங்கள் நன்குக ஞாபகத்தில் இருத்திக்கொள்ளுதல் வேண்டும். அதுதான் உ'ஹுதி'ன் யுத்தத்திற்குப் பிந்திய கடுங்காலமாகவும் காணப்பட்டு வந்தது. அப்பொழுது இஸ்லாத்தின் எல்லா எதிரிகளும் ஆங்காங்குப் படையெழுச்சிகளைக் கிளப்பிக்கொண் டிருந்தார்கள். புறப்பகைகளே போதியமட்டும் பொங்கிக்கொண் டிருக்குங்கால், அகப்பகையென்பதும் அந்தரங்கத்தில் அதிகம் ஆழிய வேலை செய்துகொண்டே வந்தது. ஆகவே, அம்முஸ்லிம்க ளெல்லாரும் முன்னெச்சரிக்கையுடன் தங்கள் காரியங்களைச் சர்வ ஜாக்கிரதையாய்ச் செய்துமுடிக்க வேண்டியவர்களா யிருந்துவந்தார்கள். புறப்பகையா யிருப்பினும், ஒற்றர்கள் வாயிலாய் முற்கூட்டியே விஷயங்களைத் தெரிந்துகொண்டு, அதனைத் தடுத்தற்கு வேண்டிய ஆயத்தங்களை ஒருவாறு செய்துகொண் டிருக்கலாம். ஆனுல், அகப்பகை யென்பது, அதிலும் முஸ்லிம் முனு'பி(க்):கீன்கள் உட்கையாய்ச் சேர்ந்துகொண் டிருக்குங்கால், எந்த நிமிஷத்திலும் இந்த அகப் பகைமையே இஸ்லாத்தைத் தலைகீழாகப் புரட்டிக் கவிழ்த்து விடுதல் சாலும். ப்னீ நலீ'ர்கள் ஒருபுறத்தில் :குறைஷிகளுடனும், மற்றொரு புறத்தில் முஸ்லிம் நயவஞ்சகர்களுடனும் அந்தரங்கத்திலே கலந்துகொண் டிருந்தார்கள். இத்தகைய இக்கட்டான நிலைமையில் அவர்கள் பழைய உடன்படிக்கையையும் புதுப்பித்துக் கொடுக்க மறுத்து விட்டதோடு நில்லாது, நபிகளுதரைக் கொன்றுவிடவும் பலமுறை இரகசியச் சூழ்ச்சி செய்துவந்தார்கள். இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களை

யெல்லாம் உற்று நோக்குங்கால், அந்த ப்னீ நலீ'ர்களை இஸ்லாத்தின் பகிரங்க விரோதிகளென்றே தீர்மானம் செய்துவிடுவதில் ஒன்றும் தடையிராதென்றே கூறிமுடிக்கலாம்.

என்வே, நபிகள் பெருமான் சில ச'ஹாப'ாக்களுடன் சென்று, மதீனாவிலிருந்து மூன்று மைல் தூரத்திலுள்ள, ஜ'ாஹ்ரா வென்னும் நலீ'ர்களின் கோட்டையை முற்றுகை யிட்டார்கள். அதுசமயம் அ'ப்'து'ல்லா பி'ன் உபை'யும் அவர்களுக்கு முன்னமே செய்துகொடுத்திருந்த வாக்குறுதியின் படி ஒன்றும் உதவிபுரிய முடியாமற் போய்விட்டான். ப்னீ :குறைள'ாக்களாலும் தங்கள் உடன்படிக்கைக்கு மாறாக ப்னீ நலீ'ர்களுக்கு ஒரு சிறிதும் உதவிபுரிய முடியாமலே போய்விட்டது. நபிகள் திலகம் 21 தினங்கள்வரை தங்கள் முற்றுகையை விடாது நடாத்திக்கொண் டிருந்தார்கள். அதுசமயம் தங்கள் முற்றுகைக்கு இடையூறாய் நின்றுகொண்டிருந்த பயனற்ற மலட்டுப் பேரீச்ச மரங்களையெல்லாம் வெட்டி வீழ்த்தி விட்டார்கள். இச்செய்தி கேட்டு, உள்ளிருந்த நலீ'ர்கள் தங்கள் ஆகாரத்திற்குரிய நல்ல பேரீச்ச விருக்ஷங்க ளெல்லாம் வெட்டப்பட்டு விட்டதாகக் கேள்வியுற்றுப் பெருந்திகில் கொண்டுவிட்டார்கள்.

பிறகு அந்த ப்னீ நலீ'ர் வர்க்கத்தினர் தப்பிப் பிழைப்பதற்கு வழியொன்றும் இல்லாததுகண்டு, நபிகள் திலகத்துக்கு (சல்) ஒரு தூதனுப்பினார்கள் : தாங்கள் மதீனாவைத் துறந்து வெளிநாடு சென்றுவிடுவதாகவும், ஆனால், தங்களுக்கு வேண்டிய பொருள்களைமட்டும் எடுத்துக்கொண்டு போக அனுமதியளிக்க வேண்டு மென்பதாகவும் செய்திசொல்லி யனுப்பினார்கள். ஆகையால், நம் மஹானுபாவர் அந்த யூதர்களின் கோரிக்கையை அவ்வண்ணமே ஏற்றுக்கொண்டு, யுத்த கலன்களைமட்டும் விட்டுச்செல்ல வேண்டுமென்று கூறினார்கள்.

அதற் கிணங்கவே ப்னீ நலீ'ர்கள் ஏராளமான பொருள்களையெல்லாம் தங்கள் ஒட்டகங்களின்மீது ஏற்றிக்கொண்டு, மதீனாவைவிட்டு மிக்க ஆடம்பரத்துடனே புறப்பட்டுச் சென்றார்கள் : அவர்கள் ஒருசிறிதும் மனக்கிலேச மில்லாது, அதிக சந்தோஷத்துடனும் ஆரவாரத்துடனுமே, மேள வாத்தியங்களுடனும் பாட்டுக் கச்சேரிகளுடனுமே சென்றார்கள். அவர்கள் 50 இருப்புக் கவசங்களையும், 50 ஸ்திரீகளையும், 340 வாளாயுதங்களையும் மட்டுமே விட்டுச் சென்றார்கள். அவர்கள் அவ்வாறு புறப்பட்டுச் சென்றபொழுது, தங்கள் வீடுவாசல்களை யெல்லாம் தீயிட்டுக் கொளுத்தி விட்டார்களென்று சில சரித்திராசிரியர்கள் கூறுகிறார்கள். அன்சாரீய்யீன்களின் வேண்டுதலின் பயனாக இஸ்லாத்திற்கு முன்னே, சிற்சில சமயங்களில் தங்களுடைய குழந்தைகளை அவர்கள் யூதர்களாக மாற்றிவிட்டிருந்தார்கள்; அச்சிறுவர்களை யெல்லாம் அன்சாரீய்யீன்கள் அதுசமயம் விடமுடியா தென்று தடைசெய்து விட்டார்கள். அச்செய்தி கேட்டு, நபிகள் பெருமானார் அக்குழந்தைகளை யெல்லாம் அந்த யூதர்கள்வயமே

விட்டுவிடுமாறும் தீர்ப்புக் கூறிவிட்டார்கள். என்னெனின், அப்பொழுது தான் "லா இக்ராஹ 'பித்'தீ'ன்"—(மதவிஷயத்தில் பலவந்தம் செய்யவேண்டாம்) என்னும் வேதவாக்கியம் ஆண்டவனால் அருளிச் செய்யப்பட்டது. இது நிகழ்ந்தது ஹிஜ்ரீ 4, ரபீ'உ'ல் அவ்வலில்; அஃதாவது, உ'ஹத்' யுத்தம் நிகழ்ந்து ஆறு மாதங்களுக்குப் பின்னேயாம்.

மதீனாவை விட்டுப் புறப்பட்ட கூட்டத்தினருள் பெரும்பான்மையோர் ஷாம் தேசத்தின் பக்கல் சென்று விட்டார்கள்; ஆனால், ஸல்லாம் பின் அபு'ல் 'ஹுகைக், கினானா பின் ரபீ'ஃ', ஹுயை பின் அக்'தப்' ஆகிய சிலர்மட்டும் மதீனாவிற்கு வடக்கே சுமார் 50 மைல் தூரத்திலுள்ள கை'ப'ரில் சென்று குடியேறினார்கள். ஆங்கும் சிறிது காலத்திற்குள்ளே இந்தப் பணக்கார யூதர்களே அளவற்ற செல்வாக்கைப் பெற்றுத் தலைமைப் பதவியையும் அடைந்துவிட்டார்கள். இனியும் இச்சரிதையே தொடர்ந்து வருமாதலின், இந்தச் சம்பவத்தை நீங்கள் மறவாது ஈண்டு ஞாபகத்தில் வைத்துக்கொண் டிருக்கக் கடவீர்களாக.

---

# அதிகாரம் — 27

## அகழ் அல்லது அ'ஹ்'ஜாப்' யுத்தம்

> **"இன்னம், மூமின்களவர்கள் கூட்டரவுப் படைகளைக் கண்டபொழுது, சொன்னார்கள்: "இஃது அல்லா(ஹ்)வும் அவனுடைய தூதரும் நமக்கு வாக்களித் திருந்ததே; இன்னம், அல்லா(ஹ்)வும் அவனுடைய தூதரும் சத்தியமே செப்பினார்கள்;" இன்னம், அன்னவர்களுக்கு அஃது ஈமானையும் அடிமுடி சாய்த்தலையுமே அதிகப்படுத்தியே வைத்தது."— (33 : 22)**

**ந**பிகள் பெருமான் ஹிஜ்ரீ 4–ஆவது, 5–ஆவது ஆண்டுகளில், மதீனாவைச் சூழ்ந்துள்ள அரபிகளெல்லாரும் ஒன்றாகத் திரண்டு அந்நகரத்தின் மீது பெரும்படையாகப் போர்புரிய வாராதிருக்கும் பொருட்டு, த'வ்'மத்துல் ஜந்தல் போன்ற இடங்களிலுள்ள கிறிஸ்தவ அராபிகளுடனும், வேறு பற்பல அராபிக் கூட்டங்களுடனும் மல்லாடிக்கொண் டிருக்கும்போது, மதீனாவிற்கு வடக்கிலுள்ள கை'ப'ருக்குச் சென்று குடியேறிய ப'னீ நலீ'ர் வர்க்கத்து யூதர்களும், தெற்கே மக்காவிலுள்ள :குறைஷியர்களும் மதீனாவின்மீது படையெடுத்து வந்து, மறுபடியும் இஸ்லாத்தை இந்நானிலத்திலே இல்லாமலாக்கிவிடப் பெரும்பெரும் முயற்சிகளையெல்லாம் செய்தற்குரிய

சூழ்ச்சிகளில் தங்கள் கவனத்தை அதிகம் செலுத்திக்கொண் டிருந்தார்கள். ஆயினும், :குறைஷி மறமாக்களைப் பார்க்கினும், சமீபத்திலே தங்கள் சொந்தவூராகிய மதீனுவைவிட்டு, கை'ப'ர் சென்று குடியேறிய பனீ' நலீ'ர்களே மதீனத்து முஸ்லிம்கள்மீது அதிக ஆக்ரோஷம் கொண்டிருந்தார்கள். ஆதலால், ஸல்லாம் பி'ன் அபு'ல் ஹு:கைக், ஹுயை பி'ன் அக்'தப்', கினுனு பி'ன் ரபீ'ஃ' ஆகியோர் ஹிஜ்ரீ 5, 'துல்கஃ'த்'ா மாதம் மக்காவை நோக்கிச் சென்று, :குறைஷியர் தங்களுக்கு இதுசமயம் உதவிசெய்வதாயிருந்தால், தீ'னுல் இஸ்லாத்தை ஆணிவேருடனே கருவறுத்து விடலாமென்று ஆலோசனை கூறினர்கள். இந்த விதமான உள்நாட்டு உதவியை நெடுநாட்களாகவே எதிர்பார்த்துக் கொண்டிருந்த :குறைஷிக் கு'ப்'பார்களெல்லாரும் அத்தியந்த சந்தோஷத்துடனே அந்த ஆலோசனையை வரவேற்றுக் கொண்டார்கள். அப்பாலுடனே ப'னீ நலீ'ர்கள் மக்காவைச் சூழ்ந்துள்ள பகுதிகளில் வசித்துவந்த ப'த'வீக ளென்னும் காட்டரபிகளையெல்லாம் ஆங்காங்குச் சென்று இஸ்லாத்திற்கு விரோதமாய் இல்லாததையும் பொல்லாததையும் போதித்துக் கிளப்பிவிட்டார்கள்.

:கத்'பான் என்னும் வகுப்பினர்பால் சென்று, கை'ப'ர் வருவாயிலிருந்து ஒருபகுதியைத் தருவதாய்க்கூறி, அக் கூட்டத்தினரைக் :குறைஷியருடன் கலந்துகொள்ளுமாறு சரிப்படுத்திவிட்டார்கள். இதற்குமுன்னரே ஆ'மிர் பி'ன் 'துப'ல் என்பான் பீ'ர் மஊ'னு என்னுமிடத்தில் நிகழ்ந்த யுத்தத்திற்கு உதவிபுரிய அந்த :கத்'பான்கள் வந்து சேரவில்லை யென்று அன்னவர்மீது அதிகமான கோபங் கொண்டிருந்தான். ஆதலினுல், இதுசமயம் ப'னீ நலீ'ர்கள் கேட்டுக்கொண்டவுடன் அதிக தாராளமாய் அந்த யுத்தத்தில் கலந்துகொள்ளச் சம்மதித்து விட்டார்கள். அதுகேட்டு, அந்த :கத்'பான்களின் நேயர்களான ப'னூ அஸத்' கூட்டத்தினரும் இப்படையெடுப்பில் சேர்ந்து கொண்டார்கள். :குறைஷியருக்கு நண்பர்களாய் விளங்கிய ப'னூ ஸுலைம் கூட்டமும், ப'னீ நலீ'ரின் நண்பர்களான ப'னூ ஸஅ'த்' கூட்டமுங் கூடக் கலந்துகொண்டன. இவ்வாறெல்லாம் இதுபோழ்து ப'னீ நலீ'ர்கள் அதிக க்ஷாத்திரத்துடன் செய்துவந்த ஆத்திரக் கிளர்ச்சியால் :குறைஷியர்களும் அவர்களுடைய நேசப்படையினரும் ப'னீ நலீ'ர்களும், அவர்களைச் சேர்ந்த ப'னீ :குறைள'ா முதலிய நண்பர்களுமாக அ'ஷ்ஜஃ', முர்ரா, 'பி'ஜாரா ஆகிய எல்லாரும் திரண்டு 24,000-க்கு மேற்பட்ட படைகள்* மதீனுவின்மீது யுத்த முழக்கத்துடன் ஆவேசங்கொண்டு அடங்காத ஆத்திரத்துடனே புறப்பட்டு விட்டன. இக் காரணத்தினுல் தான் இந்த யுத்தத்திற்கு "ஒப்பந்த நேயர்களின் யுத்தம்"— (:க'ஜ்வெ அ'ஹ்'ஜாப்') என்றும் மற்றொரு பெயர் வழங்கலாயிற்று. இத்துணைப் பெரிய சேனுசமுத்திரத்துக் கெல்லாம் அபூ'ஸு'ப்யானே பொதுத் தளகர்த்

* எதிரிப்படை பதினுயிரமே என்றும், முஸ்லிம் படை ஓராயிரமே என்றும் மௌ. மு'ஹம்மத'லீ கூறுகின்றர்.

தராய் விளங்கிவந்தார். ஆனாலும், அக்கூட்டரவுச் சேனைக ளெல்லாம் மூன்று பிரிவாகப் பிரிக்கப்பட்டு, :கத்'பான்சேனை ஹுயைனு பி'ன் ஹிஸ்ன் 'பி'ஜாரீ யென்பவன் தலைமையிலும், ப'னூ அஸத்' சேனைகள் 'தல்'ஹாவின் தலைமையிலும் வைக்கப்பட்டன. ஏனையோருக்கும், ஆங்கிருந்த எல்லோருக்குமே அபூ'ஸு'ப்யான் தலைமை வகித்துவந்தார். இந்த அபூ'ஸு'ப்யான் தமது மார்க்கத்தில் எவரும் எதிர்கொண்டு தடுபடை செய்யாததால், அடுபடையாக நேராய்ச் சென்று, மதீனாவிற்கு வடக்குப் பகுதியில் உ'ஹுதி'ன் பக்கமாய்ப் பாடிவீடு செய்துகொண்டு விட்டார்.

அத்துணைப் பெரிய மஹாசேனையுடன் :குறைஷிகள் மதீனாவின்மீது படையெடுத்துவரும் செய்திதெரிந்தவுடன் நபிகள்திலகம் (சல்) தங்கள் ச'ஹாப'ாக்க ளெல்லாரையும் அழைத்துவரச் செய்து, ஆழமாக ஆலோசனை புரியத் தலைப்பட்டார்கள். அவர்களுள்ளே ஸல்மான் 'பார்ஸீ— (சமீபத்தில் தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவியிருந்த ஒரு பாரசீகர்) என்னும் தோழர் அயல் நாட்டு யுத்தமுறைகளை யெல்லாம் அறிந்தவராய் இருந்துவந்த காரணத்தினால், சிறுதொகுதியினரான முஸ்லிம்கள் பெருந்திரளான எதிரிகளுடனே சமதரையில் நின்று சண்டைசெய்வது யுத்த முறைமைக்கு ஏற்ற தன்றென்றும், முஸ்லிம்கள் எல்லாரும் ஒரு பாதுகாப்புள்ள ஸ்தலத்திலே யிருந்துகொண்டு, தங்களைச்சூழ அகழ்வெட்டிக் கொள்வதே சாலச் சிறந்ததென்றும் ஆலோசனை கூறினார். இத்தகைய யுத்தமுறை அந்த அரபிகளுக்கு நூதனமாகக் காணப்பட்டபோதினும், நபிகள் திலகம் உட்பட அனைவரும் அதனை அப்பொழுதே அங்கீகரித்துக் கொண்டார்கள். மதீனாவைச் சூழ்ந்து மூன்று திசைகளில் கோட்டைகளும், கொத்தளங்களும், குன்றுகளும், பேரீச்சந் தோட்டங்களும் மிகநெருக்கமாக அமைந்திருந்ததனால், அத்திக்குக்களுக்கு வேண்டிய அரண்களாக அவைகளே இயற்கையாய் அமைந்து கிடந்தன. ஆனால், மதீனாவின் வடக்குப்பாகம் மட்டுமே திறந்திருந்ததனால், அத்திசையிலேயே ஓர் அகழ் வெட்டினால் போதுமான தென்று எல்லாரும் ஏகமனதாய்த் தீர்மானஞ் செய்து கொண்டார்கள். அப்பக்கத்தில் அகழ் தோண்டுவதற்காக நபிகள்பெருமான்(சல்) 3,000 முஸ்லிம்களுடன் ஆங்குச்சென்றார்கள். 'துல்கஃ'த்'ா மாதம், எட்டாந்தேதி யன்று அவ்வேலை தொடங்கப்பட்டது. அகழின் அகல நீள ஆழத்திற்கு நபிகளாதரே எல்லை கோலிக் கொடுத்தார்கள். பப்பத்துக் கெஜதூரத்தை ஐந்துகெஜ ஆழத்தில் பப்பத்துப்பேர் சேர்ந்து தோண்டவேண்டு மென்று கட்டளை யிட்டார்கள். நபிகள் திலகம் ஏனையோருக்கு இட்ட கட்டளையோடு ஒதுங்கி நின்றுவிடாது, தாங்களும் அவர்களுடன் கலந்துநின்று, தங்கள் திருமேனி முழுதும் மண்மயமாக, வேலையாட்களுடன் ஒரு வேலையாளாகவே மண் வெட்டியும், கல் சுமந்தும் வந்தார்கள்.

அதுசமயம் முஸ்லிம்களுக்கு வேண்டிய உணவுப்பொருள்கள் அதிகமாயில்லாததோடு, மிக்க குளிருள்ள வாடைக் காற்றும் மிகக் கொடூரமாகவே



நேசப்படைகள் மதீனாவுக்கு வெளியில் பாசறை இறங்கியிருந்த காட்சி

வீசத் துவக்கிக்கொண் டிருந்தது. அதிகமான ஆகாரப் பொருள்களை வெளியிலிருந்து சவதரித்துவர முடியாதவாறு வடக்குவாயிலுக் கெதிரில் அபூ' ஸுஃப்யான் ஒரு கால்லக்ஷம் சேனைகளுடன் குறுக்கே வழிமறித்துக் கொண்டிருந்தார். இதனால் மும்மூன்று நாளைக்கு ஒருமுறையே ஆகாரம் செய்துகொள்வ தென்னும் சிக்கனத் திட்டத்துடனே அம்முஸ்லிம்களெல் லாரும் சிறிதும் தளர்வில்லாது அந் நெடுநல்வாடையில் நின்று இரவு பகலாய் வேலைசெய்து, இருபது தினத்தில் அந்த அகழை அகழ்ந்து முடித்துவிட் டார்கள். அவர்கள் தங்களுடைய உற்சாகத்தில் மட்டும் ஒரு சிறிதும் குறைவில்லாது, பட்டினியுடனும் பசியுடனும் இருந்துகொண்டு, தங்க ளுடைய வேலைக்காலங்களில் பின்வருமாறு ஓர் அரபிக்கவியைப் பாடிக் கொண்டிருப்பார்கள் : "ஏ இறைவனே! ஆண்டவன்மீது பிரமாணமாக, உன் னுடைய காருண்யம்மட்டும் எங்கள்மீது இல்லா திருக்குமாயின், நாங்கள் நேர்வழி யடைந்திருக்க மாட்டோம்; தருமம் செய்திருக்க மாட்டோம்; நின்னைத் தொழுதிருக்கவு மாட்டோம். ஆண்டவனே! எங்களுக்கு நீ சாந்தியை அருளச் செய்வாய்; விரோதிகளுக்கு முன்னே எங்கள் கால்களை உறுதிப்படுத்தி வைக்கக் கடவாய். அவ்விரோதிகள் எங்களுக்கு விரோத மாய்ப் பலவந்தம்புரிந்து எங்களை இம்சைக் குள்ளாக்கி, இஸ்லாத்தை யாங்கள் விட்டுவிடுமாறு செய்துவிடலா மென்று கருதியிருக்கிறார்கள். ஆனால், நாங்கள் அதனை எதிர்த்துநிற்கின்றோம்!"—"நாங்கள் அதனை எதிர்த்துநிற்கின்றோம்!" என்னும் இறுதிப்பகுதியை மட்டும் திரும்பத் திரும்பப் பல்லவியைப்போலச் சொல்லிக்கொண்டே உரக்கக்கூவி உற்சாக மெய்துவார்கள். நபிகள் திலகமும் தங்கள் மார்பிலும் முதுகிலும் மண் புழுதி நிறைந்திருக்க, அவர்களும் மற்றவர்களுடன் கூடிப் பாடிக்கொண் டிருப்பார்கள். "நாங்கள் மு'ஹம்மதி'ன் (சல்) கரத்தில் தீக்ஷைபெற்றவர்கள்! இனி எப்பொழுதுமே நாம் இவ்வுலகில் ஜீவித்திருக்கப் போவதில்லை. இந்த உலகம் அநித்தியம்; இங்கே ஒரேமுறை இறந்தால் மறுமுறையும் இறக்கப் போவ தில்லை!" என்றும் வீராவேசத்துடன் கூறி கர்ஜிப்பார்கள். "ஆறிலுஞ்சாவு, நூறிலுஞ்சாவு! ஆகவே, இந்த ஊனத்தைச் சரீரம் எத்தனை நாளைக்கு உயிரோடிருந்தாலும், இறுதியில் ஒருநாளைக்குச் சாவத்தானே வேண்டும்!" என்பர் உலகோர். அந்த ச'ஹாப'ாக்கள் அவ்வாறு ஓர்ப் புடன் உரக்கச் சொல்லி வருங்கால், நபிகள் பெருமான், "ஏ இறைவனே! இறுதி வாழ்க்கையின் நன்மையுடன் வாழ்வதே உண்மையான வாழ்க்கை யாகும். ஆதலின், முஹாஜிரீன்களுக்கும், அன்சாரிய்யீன்களுக்கும் நீ கிருபை கூர்ந்தருள்வாய்!" என்று அல்லா(ஹ்)வை நோக்கி அடிக்கடி பிரார்த்தனை புரிவார்கள்.

இவ்வகிலத்தில் இம்மைக்கும் மறுமைக்கும் உரித்தாய எல்லாவித சர்வாதிகாரங்களையும் ஏகபோகமாய் வகித்துவந்த ஒரு மஹானுபாவர் தம் முடைய சிஷ்யகோடிகளுடனே கலந்துகொண்டு, ஒரு சர்வசாதாரணக்

கூலியாளே போல மண்சுமப்பதிலும் கல்வெட்டுவதிலும் கலந்திருத்த லென்னும் சௌலப்யத்தை நம் நபிகள்திலகத்தின் (சல்) திவ்யசரித்திரத்தி லல்லது வேறெந்த மானிடர் சரிதையிலும் வெகுசிறிதும் நீங்கள் கண்டு கொள்ள மாட்டீர்கள். நபிகள் பெருமான் தோட்டிமுதல் தொண்டைமான் வரையுள்ள எப்படிப்பட்ட கைங்கரியத்தில் தங்கள் திருக்கரத்தை வைத்த போதினும், அந்தக் காரியம் மிக்க அழகு ததும்பியதாகவே பொலிந்து நிற்பது வழக்கம். எத்தகைய வேலையில் ஈடுபட்டிருப்பினும், அத்தகைய கைங்கரியத்தை அழகுபெற நிறைவேற்றி வைப்பதே எம்பெருமானாரிடத் தில் காணப்பட்டுவந்த ஓர் இனிய இயற்கையாகும். நம் மஹானுபாவர் மனிதர்களுக்குள் ளெல்லாம் ஓர் இணையற்ற ஏகசக்ராதிபதியாய் விளங்கி வந்ததேபோல், அத்தகைய ஏகசக்ராதிபதிகளுக்குள் ளெல்லாம் ஓர் இணை யற்ற மானிடப் பிறவியாகவே பொலிந்து நின்றார்கள். ஆதலின், அந்த அகழைத் தோண்டியகாலத்தும் தங்கள் இணையற்ற மேலான உத்தமக் கைங்கரியமொன்றை உதஹரித்துக் காண்பிக்காது போய்விடவில்லை. அந்த அகழை ஆழத் தோண்டிக் கொண்டிருந்த ச'ஹாப'ாக்கள் தங்கள் வெட்டுக் குழியின் நடுவில் ஒரு பெரிய கட்டியான கருங்கற் பாறை குறுக்கிட்டதைக் கண்டார்கள். அப் பகுதியை வெட்டிக் கொண்டிருந்த ச'ஹாப'ாக்கள் தங்களா லியன்றமட்டும் முயன்று பார்த்தும் அப்பாறையை அடித்துடைத் தெடுப்ப தென்பது அடியோடு முடியாது போயிற்று; அவர்களுடன் மற்றும்பல முஸ்லிம்களும் சேர்ந்துகொண்டு தகர்த்துப் பார்த்தார்கள். ஆனால், ஒருவராலும் ஒன்றும் முடியாது போயினதன் பின்னால் எல்லாரும் சேர்ந்து எம்பிரான் அவர்களிடம்வந்து அவ்விஷயத்தைக் கூறிக்கொண் டார்கள்; நபிகள் திலகம் கோடிட்டுக் காட்டியிருந்த எல்லையைவிட்டுச் சிறிது அப்பால் கோணித்தோண்டிக் கொள்ளலாமோ வென்றும் விண்ணப் பித்துக் கொண்டார்கள்.

அக்கணமே நபிகள்திலகம் (சல்) மூன்றுநாட் பட்டினியுடன், முதுகு வளையாது தங்கள் திருஉதரத்தில் கற்களை வைத்துக் கட்டிக்கொண்டிருந் தும், அல்லா(ஹ்)வின் ஊழியத்தில் அணுத்துணையும் பின்வாங்க மனந் துணியாது, மிக்க ஓர்ப்புடன் தங்கள் கரத்திலொரு கொந்தாலியை எடுத் துக்கொண்டு சென்று, மற்றையோரால் முடியாமற் போய்விட்ட அக் காரியத்தைத் தாங்களே சாதிக்கத் துணிந்து, அவ்வகழுக்குள் ளிறங்கி, ஆங்கிருந்த கட்டியான கருங்கற்பாறையின்மீது ஓங்கியோர் அடி கொடுத் தார்கள். அவ்வளவுதான்! அக்கணமே அப்பாறை நெகிழ்ச்சி யடைந்து, அதினின்று ஓர் அனற்பொறியும் வெளிக் கிளம்பிற்று. அதுபொழுது நபிகள் பெருமானும் ஏனை ச'ஹாப'ாக்களும் ஒருமிக்க, "அல்லாஹு அக்ப'ர்!— (ஆண்டவனே மகாபெரியவன்!) என்று உரக்கக் கூறியபோது, நம் பெருமானார் அவ்வனற் பொறியில் ஷாம் தேயத்தின் அரண்மனைக்குரிய திறவுகோல் தங்கள் கைவயம் அளிக்கப்பட்டதேபோல் (கஷ்'ப்) கண்ட

தாகக் கூறினூர்கள். அப்பால் நம் பெருமான் இரண்டாவதாக மற்றுமோர் அடி கொடுத்தார்கள்; அப்பொழுது அந்தப் பாறை பிளக்கத் துவக்கிற்று; அதுசமயமும் ஓர் அனற்பொறி பறந்தது; அப்பொழுதும், "அல்லாஹு அக்பர்!" என்னும் பெருங் கோஷமொன்று கிளம்பிற்று. அதுகண்டு, நபிகள் திலகம் (சல்) அப்பொறியில் பாரசீக தேசத்து அரண்மனையின் சாவி அளிக்கப்பட்டதேபோல் (கஷ்'ப்) கண்டதாகக் கூறினூர்கள். உடனே நபி பெருமானூர் அப் பாறையின்மீது தங்கள் கொந்தாலியைக் கொண்டு மற்றுமொருமுறை ஓங்கியடித்தார்கள்; அப்பொழுதே அப்பாறை சுக்குச் சுக்காகச் சிதறுண்டு போய்விட்டது. அதுசமயம் கிளம்பிய அனற்பொறியில் யமன் தேயத்து அரண்மனைச் சாவிகள் தங்கள் கரத்திடை யளிக்கப் பட்டனவேபோல் (கஷ்'ப்) கண்டதாகக் கூறினூர்கள். அஃதாவது, முதற் பொறியில் ஃகஸர்களின் அரண்மனைகளைக் கண்டதாகவும், மறுபொறியில் கிஸ்ராவ்களின் அரண்மனைகளைக் கண்டதாகவும், மூன்ருவது பொறியில் ஸன்ஆ'விலுள்ள அரண்மனையைக் கண்டதாகவும் சொல்லி, அம்மூன்று தேயத்தின் ஆட்சிமுறையின் செங்கோல்களும் தங்கள் சிஷ்யர்களின் கைவயம் சீக்கிரம் சிக்குமென்று தீர்க்கதரிசனம் கூறினூர்கள்.

என்ன அருமையான தீர்க்கதரிசனம்! என்ன அளவிட முடியாத ஆச்சரியம்! அரப்தேச முழுவதுமுள்ள அனைத்துக் கூட்டத்தினரும் ஒருமிக்கச் சேர்ந்து இஸ்லாத்தையே இத்தரணியி லில்லாது செய்துவிட வேண்டுமென்னும் ஒரே முக்கிய நோக்குடன் கால்லக்ஷத்துக்கு நெருங்கியுள்ள சேனைகளைத் திரட்டிக் கொண்டுவந்து மதீனூவின் தலைவாசலின் கண்ணே பாசறை செய்துகொண்டு, அந்நகருக்குள்ளே பாயத் தக்கதொரு சமயத்தையே அதிக ஆவலுடனே எதிர்நோக்கிக்கொண் டிருக்குங்காலையில் அல்லா(ஹ்)வின் திருத்தூத ரவர்கள், "உறங்குவது குட்டிச்சுவர், கனவு காண்பது மச்சுமாளிகை!" என்று சாமானிய மக்கள் கூறுமா போன்று, மேற்கூறியவாறு தீர்க்கதரிசனம் சொல்வதென்ருல், அதனை நீங்கள் என்னென்று நினைக்கின்றீர்கள்? அரப்நாடு முழுதும் அம் முஸ்லிம்களின் உதிரத்தை உறுஞ்சிப் பிழிந்துவிடுவ தென்று உறுமிக்கொண்டு கிடக்கின்றது. அம் முஸ்லிம்களும் அல்லா(ஹ்)வின் திருத்தூதரும் மூன்றுநாட் பட்டினியுடனே அன்றடித்த அலைக்காற்றில் போர்த்தத் துணியில்லாது* மேனிவாடி, "ஆடை யின்றி வாடையின் மெலிந்து கையது கொண்டு மெய்யது பொத்திக் காலது கொண்டு மேலது தழீஇப் பேழையு ளொடுங்கும் பாம்பென உயிர்க்கும் ஏழையாள"ரா யிருந்துவந்த அப்படிப்பட்ட சந்தர்ப்பத்திலே நபிகள் திலகம் பத்து வருடங்களுக்குப் பின்னே நிகழப்போகின்ற எதிர்கால வெற்றிச் செய்திகளைப்பற்றி அதுசமயம் முன்னறிக்கை செய்கின்ருர்கள்! இத்தகைய மனோராஜ்யம் மனிதபுத்தியால் நிகழக்கூடிய காரிய

*"போர்த்தத் துணியில்லை, பொரி பொரிக்க நெல்லில்லை," என்பது ஒரு தமிழ்ப் பழமொழி.

மென்று நினைக்கின்றீர்கள்? இஸ்லாத்தின் ஆணிவேரே அசைக்கப்பட்டுக் கொண்டிருக்கும் அம்மிக்க நெருக்கடியான, உயிருக்கே மன்றுடி ஊசலாடும் சமயத்தில் எல்லாம்வல்ல திரிகால ஞானியாகிய அல்லா(ஹ்) ஒருவனே யல்லது, வேறெவரே எம்பிரான்(சல்) அவர்களுடைய உள்ளத்தின்கண் இத் தகைய உறுதியான தீர்க்கதிருஷ்டியை உண்டுபண்ணி யிருத்தல் சாலும்?

சற்றேறக்குறைய 20 தினங்களுக்குள் மதீனுவின் வடபுறமுள்ள அந்த ஆழிய. அகழ் ஒருவாறு வெட்டி முடிக்கப்பட்டு விட்டது. எதிரிகளின் தொகையில் எட்டிலொரு பங்கான 3,000 முஸ்லிம்களே* அவ்வகழைத் தங்கள் முன்புறமாகக் கேடகமேபோல் வைத்துக்கொண்டு, தங்கள் முதுகின்புறத்தில் ஸலஃ' என்னும் குன்றை நிறுத்தி, அகழுக்கு வெளியில் எதிர்ப்புறமாகப் பகைவர்களின் சேனைகளைப் பார்த்தவண்ணம் அணி வகுத்து நிறுத்தப்பட்டார்கள். முஸ்லிம்களின் பெண்டு பிள்ளைகளெல் லாரும் ஒரு பாதுகாப்புள்ள கோட்டைக்குள்ளே அனுப்பி வைக்கப்பட்டு விட்டார்கள். யூதர்களுள் ஒருசாராரான ப'னீ குறைளா' வர்க்கத்தினர் முஸ்லிம்களுடன் சினேகபாவமா யிருப்பதாகவும், மதீனுவைப் பகைவர்கள் வந்து தாக்கினுல், தக்க பக்கஉதவி புரிவதாகவும் சமீபத்தில் இரண்டாவது முறையாக உடன்படிக்கை செய்துகொடுத்திருந்தார்கள். ஆனுல், மதீனுவின் தென்கிழக்குப் பகுதிகளில் வசித்துவந்த அந்த ப'னீ :குறைளா'க்க ளெல் லாரும் அதுசமயம் தங்கள் உடன்படிக்கையில் காணப்பட்ட நிபந்தனையின் பிரகாரம் நடந்துகொள்வார்க ளென்று நம்பமுடியாமல் அவ்விஷயம் ஐயப் பட இருந்துவந்தது. ஆதலின், அன்னவர் கைவயம் அநேகங் கோட்டைகள் இருந்து வந்ததனுலும், முஸ்லிம்களுக்கு அவர்களைப்பற்றிய சந்தேகமும் அதிகம் காணப்பட்டதனுலும், அப்பகுதியில் பாதுகாப்புப் புரியும் பொருட்டு 200 மனிதர்களடங்கிய சேனையொன்று ஸல்மா பி'ன் அஸ்லமின் தலைமையின்கீழ் ஆண்டு அணிவகுத்து வைக்கப்பட்டிருந்தது.

இதுவரை அந்தக் :குறைளா' யூதர்கள் ஒன்றிலுங் கலவாது தனியா கவே இருந்து வந்தார்கள். ஆயினும், ப'னீ நலீ'ர் கூட்டத்தினர் அந்தக் :குறைளா'க்களும் முஸ்லிம்களுக்கு விரோதமாய்ச் சண்டைசெய்ய வேண்டு மென்று அவர்களைத் தூண்டிக்கொண்டே யிருந்தார்கள். இறுதியாக, ப'னீ நலீ'ர்களின் தலைவனுன ஹுயையை இப்'னு அக்'தப்'—(இவனே நபிபெரு மானுடைய யூத மனைவியாக வரப்போகும் ஸ'பிய்யாவின் தந்தையாவன்) ப'னீ:குறைளா' வர்க்கத்தின் தலைவனுன கஅ'ப்' பி'ன் அஸதி'டம் சென்று, எல்லா யூதர்களுடனும் வந்து எதிரிகளுடன் சேர்ந்துகொள்ளுமாறு அதிகம் வேண்டிக் கொண்டான். ஆனுல், முதன் முதலில் அந்தக் கஅ'ப்' ஹுயையைக்குத் தன் விடுதியின் கதவையும் திறக்க மறுத்து விட்டான். ஆயினும், ஹுயை தன் தாகத்துக்குப் பானகம் வேண்டுமென்ற சாக்கைச்

*பத்திலொரு பங்கான ஓராயிரம் முஸ்லிம்களே யென்று மௌ. முஹம்மதலீ தமது தப்ஸீரில் வரைந்துளார்.

சொல்லி உள்ளே மெல்ல நுழைந்துவிட்டான். உடனே வாக்குச் சாதுர் யத்தில் பெயர்பெற்று விளங்கிய அந்த ஹுயையையென்பான், தான் ஏராள மான சேனையைக் கொண்டுவந் திருப்பதாகவும், :குறைஷிகளும் ஏனை அரப் தேய மக்களெல்லாருமே ஒருமிக்கத் திரண்டு வந்திருப்பதாகவும், இது சமயம் ஒன்று சேர்ந்திருக்கும் கூட்டரவாளர் அனைவருங் கூடி மு'ஹம்ம தி'ன் (சல்) உதிரத்தை உறுஞ்சி, இஸ்லாத்தையே இங்கில்லாது செய்து விடுவது மிக்க எளிய காரியமா யிருப்பதாகவும் நன்கெடுத்துக் காட்டி, அத் துணை யருமையான சமயத்தை அந்த ப'னீ :குறைள'ாக்கள் வீணே வீட்டு விடக் கூடாதென்றும் மற்றும் பலவாறும் விளக்கிக் காண்பித்தான். அது கேட்டுக் கஅ'ப்', "ஏ ஹுயையே! நீர் கூறுவதெல்லாம் வீண் படாடோபமே யாகும். வெறு மின்னலும் இடியும் காணப்படும் ஒரு வீணான (மழை பொழியாத) மேகத்தையே நான் காண்கின்றேன். இதில் எனக்கொன்றும் பிரயோஜன மில்லை. நான் மு'ஹம்மது'டன் (சல்) உடன்படிக்கையும் சமீ பத்திலே செய்துகொண் டிருக்கிறேன். வாக்குறுதியில் எப்போதும் அவர் தவறக்கூடியவ ரல்லரென்பதையும் நான் நன்றாக அறிவேன். எனவே, விஷயம் இவ்வாறிருக்க, நான் இதுசமயம் எவ்வாறு என் உடன்படிக்கையை மீறி நடப்பது முடியும்?" என்று கூறி வினவினான். ஆனால், ஹுயை மட்டும் வெறுமனே திரும்பாது, பற்பலவிதமான தந்திரமந்திர யந்திரங்களை யெல்லாம் செய்து, தன்னுடைய கோரிக்கைக்கு அந்தக் கஅ'பை' இணங்கு மாறு செய்தே தன் காரியத்தை இறுதியில் முடித்துக் கொண்டான்.

உடன்படிக்கைக்கு நேர் விரோதமாக ப'னீ :குறைள'ாக் கூட்டத்தினர் எதிரிகளுடனே சேர்ந்து கொண்டார்களென்ற செய்தி நபிகள் திலகமவர் களுக்கு (சல்) எட்டியவுடன் அஃதுண்மைதானா வென்பதை அறிந்துவரும் பொருட்டு முஸ்லிம்களினின்று ஸஅ'தி'ப்'னு முஆ''து, ஸஅ'தி'ப்'னு உ'ப'ா த'ா என்னு மிரண்டு அன்சாரிய்யீன்களையும் அந்த ப'னீ :குறைள'ாவிடம் அனுப்பி வைத்தார்கள். அவ்விருவரும் ஆதியில் அந்த யூதர்களின் நேயர் களா யிருந்துவந்த காரணத்தினாலேதான் அவர்களையே ஆண்டுச் செல்லச் செய்தார்கள். அவ்விருவரும் சென்று விஷயத்தின் உண்மையை உள்ள வாறு அறிந்துவர வேண்டுமென்றும், நிச்சயமாகவே :குறைள'ா வர்க்கத் தினர் தங்கள் உடன்படிக்கைக்கு நேர்மாறாக நடக்கத் துணிந்திருந்தால், அதைப்பற்றி ஏனையோர் எவரும் தெரிந்துகொள்ளா வண்ணம் தங்களிடம் மட்டுமே வந்து, அதிரகசியமாக அறிவிக்க வேண்டுமென்றும் நபிகள் பெரு மான் நவின்றருளி யிருந்தார்கள்; எல்லாருக்கும் இவ்விஷயம் முதலிலே தெரிந்துவிடு மாயின், முஸ்லிம்சேனைகள் அதுசமயம் வீணே அதைரியம் கொள்ள இடமுண்டாகுமென் றெண்ணியே இவ்வாறு சொல்லி யனுப்பி னார்கள். எனவே, இவ்விருவரும் நேரே ப'னீ:குறைள'ாக்களிடம் சென்று, அவர்கள் நபிபெருமானுக்குச் சமீபத்திலே செய்துகொடுத்திருந்த உடன் படிக்கையைப்பற்றி ஞாபகமூட்டினார்கள். இதுகேட்டு, அவர்கள், "நாங்கள்

மு'ஹம்மத் (சல்) இன்னாரென்று அறியோம். அவருடன் எவர் உடன் படிக்கை செய்துகொண்டார்?'' என்று ஒன்றுமறியாதவரே போல அதிக அகம்பாவத்துடன் அழுத்திக் கூறினார்கள். அப்பொழுது அந்த யூதர்களின் செய்கையைக் கண்டித்து ஸஅ'தி'ப்'னு மு'ஆ''து மிகக் கடுமையாகக் கோபித்துக் கொண்டார்; அதுகேட்டு, ஸஅ'தி'ப்'னு உ'ப்'ாத'ா, "வாய்ப்பேச்சை விட்டுவிடுக. நமக்கும் இவர்களுக்கும் இடையிலிருக்கும் விவாதம் வாய்ப் பேச்சினால் முடியக்கூடிய தன்று,'' என்று கூறி, அவரை அழைத்துக் கொண்டு, திரும்பிவிட்டார். இது ப'னீ :குறைள'ாக்கள் செய்த மறக்க முடியாச் சதிமோசமே யாகும். ஒருவன் தான் செய்துகொடுத்துள்ள வாக் குறுதியை மீறலாம்; ஆயின், குரல்வளையில் கத்தி வைக்கும்படியான கூறு வாயில் வாக்குமீறி எதிரிகளுடனே சேர்ந்துகொண்டு கழுத்தறுப்பதைப் பார்க்கினும் மகாமோசமான சதியொன்று இத் தரணியில் இருப்பது முடியாதென் றறிக.

எதிரிகள் தங்கள் சேனைகளை மூன்று பகுதிகளாகப் பிரித்து, மதீனமா நகரின் மூன்று பக்கங்களில் சூழவைத்து விட்டார்கள். அவர்கள் கிளப்பிய புழுதியின் மேகத்தால் அன்று அம் மதீனா முழுதும் இருண்டுவிட்ட தென்று சரித்திராசிரியர்கள் எழுதிவைத் திருக்கிறார்கள். இதைத்தான் ஆண்டவனும் தன் திருமறையில் (33 : 9, 10) சுட்டிக் காட்டியுள்ளான். எதிரில் 24,000 படைகள் வந்து சூழ்ந்து நிற்கும்போது, உள்ளேயிருந்த ப'னீ:குறைள'ாக்களும் தக்கசமயத்தில் கைவிட்டு, எல்லாரும் எதிரிகளுடன் சேர்ந்து கொண்டதன் பின்னர், அ'ப்'து'ல்லா பி'ன் உபை' என்பவனைச் சார்ந்த முனா'பி:க் கூட்டத்தார்களும் தங்கள் நயவஞ்சக வேலையைச் செய்ய ஆரம்பித்து விட்டார்கள். காலம் குளிர்காலமா யிருப்பதையும், ஆகாரம் போதிய அளவு கிடையாம லிருப்பதையும், இரவு பகலாகக் கண்துஞ்சாது விழித் துக்கொண் டிருக்கவேண்டியதையும், எதிரிகளின் சேனைகள் எண்ணிக்கை யில் எத்தனையோ மடங்கு அதிகமா யிருப்பதையும் கண்டு, அந்த முனா'பி(க்) :கீன்கள் தாங்கள்மட்டும் தப்பியோட வழிபார்த்தார்கள். தங்கள் வீடு வாசல்கள் பாதுகாக்கப்படாமல் திறந்துகிடக்கின்றன வென்றும், அவற் றைப் பாதுகாக்கத் தாங்கள் போய்ச் சேரவேண்டுவது அத்தியாவசிய மென்றும் சாக்குப்போக்குச் சொல்லிக்கொண்டே நகரத்துக்குள் திரும்ப ஆரம்பித்தார்கள். ஆனால், உண்மையிலே அவர்களுடைய வீடுவாசல்க ளொன்றும் அபாயத்திற் குள்ளாக்கப்பட்டில்லை; இதைத்தான் ஆண்டவ னும் 33 : 13-இல் விளக்கியிருக்கின்றான்: அந்த முனா'பி(க்):கீன்கள் போர்க் களத்தை விட்டுத் தப்பியோடுதற் கென்றே இவ்வாறு கூறினார்களென்று ஆண்டவனே அவர்களுடைய புளுகை வெளிப்படுத்தி யிருக்கின்றான். ஆனால், உண்மையான முஸ்லிம்கள்மட்டும் தங்கள் உறுதியில் இன்னமும் கடினமாய் விட்டார்கள். அம் முனா'பி(க்):கீன்கள், "மு'ஹம்மதை'ப் பாருங் கள்! கிஸ்ராவ்களின் கருவூலங்களும் ஃ:கஸர்களின் கருவூலங்களும் நமக்குக்

கிடைக்குமென்று சோதிடம் கூறினர்; ஆனால், இன்று இவர் தம்முடைய விடுதியைத் திரும்பியடைவதே சந்தேகமா யிருக்கின்றது!" என்றும் ஏளன மாய்க் கூறுவார்கள். இதையேதான் எம்மிறைவனும் தன் 33 : 12-இல் குறித்துக் கூறியுள்ளான். ஆயினும், மெய்யான முஸ்லிம்கள் மட்டும் இந்த அதிகாரத்தின் தலைப்பில் கூறப்பட் டிருப்பதேபோல, "இஃது அல்லா(ஹ்)வும் அவனுடைய தூதரும் நமக்கு வாக்களித்திருந்ததே; இன்னம், அல்லா(ஹ்)வும் அவனுடைய தூதரும் சத்தியமே செப்பினர்கள்," என்று குதூகலங்கொண்டு நின்றார்கள். எதிரிகளின் சேனையைக் கண்டு எத்துணைக் கெத்துணை முஃமி(க்)கீன்கள் பீதியடைந்து விட்டார்களோ, அத்துணைக் கத்துணை அம்முஸ்லிம்களுக் கிருந்துவந்த ஊக்கமும் உற்சாகமும் அதிகம் அபிவிருத்தி யடைந்துகொண் டிருந்தன. அவர்கள் தங்களுயிரைப் பார்க்கினும், பொருளைப்பார்க்கினும், மனைவி மக்களைப்பார்க்கினும் தீனுல் இஸ்லாமே மேலென்று கொண்டுநின்றார்கள்.

அந்தக் கூட்டரவுப் படையினர் மதீனாவைச் சூழப் போட்டிருந்த கொடிய முற்றுகையானது மிகக் கடுமையுடன் இருபது தினம்வரை ஓயாது நடைபெற்றுக்கொண்டே வந்தது. முஸ்லிம்க ளெல்லாரும் மிக்க பசியாலும் மிதமிஞ்சிய குளிராலும் அதிகம் வருந்திக்கொண் டிருந்தார்கள்; எதிரிகளோ, தக்க முஸ்தீபுகளுடன் வந்து வெளியில் அளவற்ற அட்டகாஸம் செய்துகொண் டிருந்தார்கள். எனவே, அவ்வெதிரிக ளெல்லாரும் மதீனாவின்மீது தாண்டிவந்து வீழ்ந்து விடுவார்களாயின், பிறகு முஸ்லிம்களின் கதியைப்பற்றி ஒன்றும் சொல்லவேண்டுவ தின்று. அம் முஸ்லிம்கள் அது சமயம் பட்டுவந்த பாட்டைப்பற்றி யெல்லாம் ஆண்டவன் தன் திருமறையில் இவ்வாறு வருணித் திருக்கின்றான் : "அவர்கள் உங்களுக்கு மேலேயிருந்தும் உங்களுக்குக் கீழேயிருந்தும் உங்களிடம் (தாவி) வந்தபோதும், (உங்கள்) நேத்திரங்களெல்லாம் பஞ்சடைந்து சொருகியும், (உங்கள்) ஹிருதயங்களும் தொண்டைக்குழிகள்வரை எழும்பியும், நீங்கள் அல்லா(ஹ்)வைப் பற்றிப் பற்பலவிதமான எண்ணங்களை எண்ணியும் இருந்தபொழுதும் (நிகழ்ந்ததை நினைவுகூர்க). ஆண்டு நன்னம்பிக்கை கொண்டவர்கள் (நன்றாகச்) சோதிக்கப்பட்டார்கள்; இன்னம், அன்னவர்கள் கடியதோர் அலைப்பாக அலைக்கப்பட்டார்கள்."— (33 : 10, 11)

அம் முஸ்லிம்க ளனைவர்க்கும் அல்லா(ஹ்)வின் மீதும் அவனுடைய ரஸூலின்மீதும் அளவற்ற நம்பிக்கை யிருந்தும், அப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் அவர்களுடைய மனிதசுபாவம் சிற்சில வேளைகளில் ஒருசிறிதே ஊசலாடிக்கொண் டிருந்தது போலும்! அதுபொழு திருந்துவந்த அபாயத்தின் நிச்சயத்தால் ஹிருதயங்கள் தொண்டையிலே வந்து விக்கிக் கொண்டதேபோல் தோற்றின. பட்டினியாலும் பசியாலும் கண்களெல்லாம் இருண்டு மழுங்கிவிட்டன. மேற்கூறியவாறான மாபெருங் கூட்டரவாளர் சேனைகளின் முன்னே எந்த மனிதனுடைய உள்ளந்தான்

துணுக்குறுதென்று எண்ணத் துணிகின்றீர்கள்? அம் முற்றுகையின் காலங்களில் நபிகள் திலகமும் (சல்) மற்றைத் தோழர்களும் மும்மூன்று நாளைக்கு ஒருமுறையே ஆகாரம் செய்துவந்தார்கள். ஒருநாள் அந்த ச‘ஹாப’ாக்களுள் ஒரு சிலர் பசியின் கொடுமையால் வருந்திப் பெருமானு ரவர்களிடம் நெருங்கித் தங்கள் வயிற்றைத் திறந்து காண்பித்தார்கள். அதுபொழுது பசியின் மிகுதியால் முதுகு வளையாதிருக்கும் பொருட்டு ஒவ்வொருவரும் தத்தம் அடிவயிற்றில் ஒவ்வொரு கல்லை வைத்துக் கட்டிக் கொண் டிருந்தார்கள். அதுகண்டு, நபிகள் திலகம் தங்கள் திருவுதரத் தைத் திறந்து, அதில் அடுக்கப்பட்டிருந்த இரண்டுகற்களை அந்த ச‘ஹாப’ாக் களிடம் காண்பித்தார்கள். ஆனால், முற்றுகையோ நாளுக்குநாள் மிகக் கொடுமையுடனே நடந்துவந்தது. எதிரிகள் அந்த அகழைத் தாண்ட முடியாமல் பாண வர்ஷங்களை எய்துகொண்டும், கல்மாரிகளை எறிந்து கொண்டுமே இருந்தார்கள். நபிகள் பெருமானவர்கள் முஸ்லிம்சேனையை அகழின் பற்பல பாகங்களிலும் பிரித்துவைத்துத் தாங்களும் ஒருபாகத்தில் இருந்து கொண்டார்கள். தங்களை அடியோ டொழித்துவிட வேண்டு மென்றே எதிரிகளெல்லாரும் இதுசமயம் ஒருமிக்கத் திரண்டு வந்திருக் கிறார்க ளென்னும் அச்சம் ஒருபுறத்தில் அதிகரித்திருந்தும், மற்றொரு புறத்தில் இதுதான் அவ் வெதிரிகளை யெல்லாம் அடியோடு முறியடிக்க வேண்டிய சமயமென ஆண்டவன் கூறியுள்ள தீர்க்க தரிசனத்தைக் கண்டு கொண்டு, எம் முஸ்லிம்க ளனைவரும், இருந்தால் கௌரவம், இறந்தால் வீரசுவர்க்கம், என்னும் உறுதிப்பாட்டுடன் தங்கள் கால்களின்மீது ஸ்திரங் கொண்டு நின்றார்கள். இதுதான் எதிரிகளின் இறுதிப் பிரயத்தன மாதலின், இதனை எவ்வாற்றானும் முறியடித்துவிட வேண்டுமென்பதே அம் முஸ்லிம்களின் ஒரே நோக்கமாக இருந்து வந்தது. எனவேதான், அவர்களுடைய பசிப்பிணியும், நளிர் நோயும் ஒருபொருளா யெண்ணப் படவே யில்லை.

இவ்வாறு அம்முற்றுகை மூன்றுவாரகாலமட்டும் நீடித்துக்கொண்டே செல்வதனால் மதீனத்து முஸ்லிம்கள் ஒருகால் தங்கள் தைரியத்தை இழந்து விடக் கூடுமென்னும் ஐயத்தினால் நபிகள் திலகம் எதிரிகளுள் ஒருபகுதி யினரான :கத்‘பான் கூட்டத்தாரைத் தங்கள் கைவயப் படுத்திக்கொள்ள லாமாவென்று ஆலோசிக்கத் தொடங்கினார்கள். மதீனாவின் விளைபொருள் களிலிருந்து மூன்றிலொரு பாகத்தை ஒவ்வொரு வருடத்திலும் :கத்‘பான் வர்க்கத்தவருக்குக் கொடுத்துவிடுவ தென்றும், ஆதலின், அவர்கள் இந்த யுத்தத்தினின்று விலகிக்கொள்ள வேண்டுமென்றும் நிபந்தனை கூறி உடன் படிக்கை செய்து கொள்ளலாமா வென்று நபிகள் திலகம் அன்சாரிய்யீன் களின் தலைவர்களான இரு ஸஅ’த்’களையும் கலந்து ஆலோசித்தார்கள். நகருக்குள் எதிரிகள் நுழைவதைத் தடுக்க எவர் முன்வருகிறா ரென்று மூன்றுமுறை நபிகள் திலகம் கூவியழைத்தும், ‘ஜுபைர் (ரலி’) ஒருவரைத்

தவிர்த்து, வேறியாரும் முன்வரத் துணியாததைக் கண்டே நம் பெருமானார் (சல்) அவ்வாறு ஆலோசனை செய்தார்கள். அவ்வெதிரிகள் மதீனாவின் மற்றொரு புறமாக வந்து நபிகள் திலகத்தின் மனைவிமக்கள் வதிந்துவந்த கோட்டையின் புறமாய்த் தாக்கப் போகிறார்க ளென்னும் வதந்தியும் ஒரு பக்கல் உலாவிக்கொண் டிருந்தது. ஆனால், அவ்வாறு நபி பெருமான் :கத்'பான் வர்க்கத்தாருடன் செய்துகொள்ள நாடிய உடன் படிக்கைக்கு அந்த இரு ஸஅ'த்'களும் ஒரு சிறிதும் உடன்படவே யில்லை. அவ்விருவருள் ஒருவரான ஸஅ'தி'ப்'னு முஆ''த்(ரலி') நபிகள் நாயகத்தை நோக்கி, "இவ்வாறு சமரசம் செய்து கொள்ளுமாறு ஆண்டவனே தங்களுக்குக் கட்டளை யிட்டிருக்கிறானா? அல்லது இது தங்களுடைய சொந்த அபிப்பிராயமா? அல்லா(ஹ்)வின் கட்டளையே இவ்வா றிருக்குமாயின், பிறகு நாங்கள் ஒன்றும் மறுத்துக் கூறுவது கூடாது. இவ்வாறு செய்யலா மென்பது தங்களுடைய சொந்த அபிப்பிராயமா யிருப்பின், எங்களுடைய விஞ்ஞாபனங்களைச் சிறிது செவிமடுக்குமாறு பெரிதுங் கேட்டுக்கொள்ளுகிறோம்," என்று சொன்னார். அதற்கு நபிகளுநாதர், "இஃது அல்லா(ஹ்)வின் ஆணையாயிருப்பின், நான் உங்களைக் கலந்து ஆலோசிக்கவேண்டுவதின்று. நம்மை நான்கு புறத்தும் அந்த எதிரி நேசப்படையினர் சூழ்ந்து கொண்டு விட்டார்கள்! ஆதலின், அவர்களுடைய நேய ஒப்பந்தத்தை இச் சாம பேத தானோபாயத்தால் உடைக்கும்பொருட்டே இவ்வாறு யான் அபிப்பிராயப் படுகின்றேன்," என்று கூறினார்கள். அக்கணமே அந்த ஸஅ'த்' ('இப்'னு முஆ''த்) நபிகள் திலகத்தை நோக்கி, "யாரஸூலல்லா! நாங்கள் ஆண்டவனுக் கிணையாக அநேக விக்ரஹங்களை வைத்து வணங்கிக் கொண்டு, அவனைப்பற்றிய உண்மையான ஞானமும் அவனுக்குச் செய்ய வேண்டிய சரியான வணக்க முறையும் ஒருசிறிதும் தெரியாமல் காலங் கடத்திவந்த அவ் அஞ்ஞான அறியாமையின் போதும் மதீனாவின் ம'ஹ்ஸூலிலிருந்து ஒரு பேரீச்சஞ் சுளையையேனும் கிரயங் கொடாது கொண்டு செல்வதற்கு அந்த :கத்'பான்களுக்கு வன்மை இருந்ததில்லையே! உண்மை இவ்வாறிருக்க, தங்கள் வாயிலாக எங்களுக்கு ஆண்டவன் நேர் வழியைக் காட்டி, எங்களைக் கண்ணியப்படுத்தியு மிருக்கும் இக்காலத்திலா நாங்கள் மதீனாவின் ம'ஹ்ஸூலிலிருந்து மூன்றிலொரு பகுதியை அன்னவருக்குப் பங்கிட்டுக் கொடுக்கத் துணிவோம்? அவர்களுக்குக் கொடுப்பதற்கு எங்கள்பால் இதுசமயம் உடைவாளைத் தவிர்த்து வேறொன்று மில்லை!" என்று சொன்னார்கள். இதைச் செவியேற்றவுடன் அன்சாரிய்யீன்களெல்லாரும் இவ்விஷயத்தில் மிக்க உறுதியுடனேதான் இருக்கிறார்களென்று செவ்வனே தெரிந்துகொண்டு, நபிகள் பெருமானார் அதிக திருப்தியுடன் இருந்து விட்டார்கள். உடனே ஸஅ'தி'ப்'னு முஆ''தும் நபி பெருமான் (சல்) வரைந்து வைத்திருந்த திருமுகத்தைக் கிழித்து விட்டார்கள்.

எதிரிகளால் அந்த அகழைத் தாண்டி வருதற் கியல வில்லை. இத்தகைய அகழ் (க’ந்தக்) யுத்தமே அந்த அரபிகளுக்கு நூதனமாய்க் காணப்பட்டது. ஆதலின், அவர்கள் வெளியி லிருந்தவண்ணமே தங்கள் முற்றுகையை உத்தேசம் ஒருமாத காலம்வரை நீடித்து நடாத்தி வந்தார்கள். அதுசமயம் அபூ’ஸு‘ப்யான், க’ாலித்’ப்னு வலீத்’, அ’ம்ரு பி’ன் ஆ’ஸ், ல’ர்ரார் பி’ன் க’த்தாப்’, ‘ஜுபை’ரா என்னும் ஐவரும் ஒவ்வொரு நாளைக்கு ஒவ்வொருவர் தலைவரா யிருந்து அம் முற்றுகையை நடாத்தத் தீர்மானித்தார்கள். அவர்களால் அவ்வகழைக் கடக்கமுடியாது போகவே, அச் சேனைக ளெல்லாம் இறுதியிலே ஒருபக்கமாகத் திரண்டு, அகழின் அகலம் சிறிது குறைவாக வுள்ள ஒரு பாகத்தைத் தாண்டிக் கல்லாலும் வில்லாலும் முஸ்லிம்களைத் தாக்கிக்கொண்டு மதீனாவின் பக்கம் வந்து, முஸ்லிம்களுடன் கைகலந்த தொந்தச் சண்டை செய்வதென்று தீர்மானம் செய்து கொண்டார்கள். அரப் தேசத்தில் அதிக கீர்த்திவாய்ந்த மகா வீரர்களாய் விளங்கிய ல’ர்ரார், ‘ஜுபை’ரா, நௌ‘பல், அ’ம்ருபி’ன் அ’ப்’து’வுத்’ ஆகிய நால்வரும் அகலம் கம்மியாயிருந்த இடமொன்றைத் தேடிச் சென்று, தங்கள் குதிரைமீ திருந்தவண்ணமே மிகவேகமாகத் தாவி, அந்த அகழைத்தாண்டி அக்கரையிற் றொப்பென்று குதித்தார்கள். அந்நால் வருள்ளும் அ’ப்’துவுத்’ என்பான் மகாதைரியசாலி; அரப்தேச முழுதுமே பிரக்யாதி பெற்றவன். அவன் 1,000 அசுவ வீரர்களுக்குச் சமமானவன். அவனுடைய பெயரைக் கேட்டவுடனே அந்நாட்டில் நடுக்கங்கொள்ளாதவர் ஒருவரும் இரார். அவன் ப’த்’ர் யுத்தத்தில் காயமடைந்து மக்காவுக்குத் திரும்பிச் சென்றபோது, அந்த ப’த்’ருக்குப் பதில் பழிவாங்கும்வரை தன் தலையில் எண்ணெயே தேய்த்துக் கொள்வ தில்லையென்று பிரதிக்கினை செய்து கொண்டு சென்றான். இவனுக்கு அதுபொழுது வயது 90. அவ்வாறிருந்தும், இவன் எல்லாருக்கும் முன்னாகச் சென்று, “என்னுடன் போர்புரிய எவனேனும் முன்வரத் துணிகின்றானா?” என்று அதிக ஆக்ரோஷத்துடனே அறைகூவி யழைத்தான். அதைக் கேட்டு, ‘ஹ’ஜ்ரத் அ’லீ(ரலி’) அவர்கள் (வயது 23 தான்) தாங்களே எதிர்கொண்டு வருவதாகக் கூறினார்கள். ஆனால், அ’ம்ரு பி’ன் அ’ப்’து’வுத்’துடைய பயங்கரமான தோற்றத்தையும் ராக்ஷஸ உருவத்தையும் கண்டு நபிகள் திலகம் தங்கள் மருகரைத் தடுத்து விட்டார்கள். மீண்டு மொருமுறை அந்த அ’ம்ரென்பான் முஸ்லிம்களை நோக்கி முன்போலவே அறைகூவி யழைத்தான்; அப்பொழுதும் அ’லீ(ரலி’) அவர்களைத் தவிர்த்து வேறொருவரும் மறுமொழி கூறத் துணியவில்லை; மூன்றாவது முறையும் அவ்வெதிரி அறைகூவி யழைத்தான்; அதற்கும் ‘ஹ’ஜ்ரத் அ’லீயவர்களே விடைகொடுத்தார்கள். இதுகேட்டு, அவ்வெதிரி இன்னா னென்பதைத் தெரிந்து கொண்டுதானா அ’லீ(ரலி’) அவர்கள் மறுமொழி கூறினார்களென்று நபிகள்பெருமான்(சல்) வினவியதற்கு, “ஆம், அவனை நான் அறிவேன்!” என்று ‘ஹ’ஜ்ரத் அ’லீ(ரலி’) விடை கூறியதைக்

கேட்டு, நபிகள் பெருமான் அதிக சந்தோஷத்தோடு தங்கள் திருக்கரத்தினு லேயே அ'லீ(ரலி')யின் போர்க்கவசத்தைப் பூட்டி, தலைப்பாகை யொன் றையும் கட்டி அன்னவர் தலையில் வைத்து, தங்கள் திருக்கரத்திலிருந்த உடைவாளையும் கொடுத்து, அதிக ஆசீர்வாதம் பண்ணியனுப்பினார்கள்.

அக்கணமே 'ஹ'ஜ்ரத் அ'லீ(ரலி') அவர்கள் அந்த அ'ம்ரின் முன்னே சென்று நின்றார்கள். இவ் வுலகிலுள்ள எவரேனும் தன்னிடம் மூன்று கோரிக்கைகளை வேண்டிக் கொள்வராயின், அவற்றுள் ஒன்றையேனும் தன்னால் நிறைவேற்றிக் கொடுக்க முடியுமென்று அ'ம்ரு முன்னொரு முறை வாக்குறுதி கொடுத்திருந்தான். அது சம்பந்தமாக அ'லீ(ரலி') அவர்களுக்கும் அவனுக்கும் இடையிலே பின்வருமாறு அதுசமயம் சம்பாஷணை நிகழ் வுற்றது :—

அ'லீ(ரலி') :— நீர் முதன்முதலாக இஸ்லாத்தில் சேரவேண்டு மென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அ'ம்ரு :— இது முடியாத காரியமாகும்.

அ'லீ(ரலி') :— நீர் போர்க்களத்தை விட்டுத் திரும்பிப் போய்விடக் கடவீர்.

அ'ம்ரு :— நான் குறைஷிப் பெண்களின் வசைச் சொற்களைச் செவி மடுக்கத் தயாரா யில்லை.

அ'லீ(ரலி') :— அப்படியானால் என்னுடன் நீர் சண்டை செய்வதற்கு வருவீராக!

இதைக் கேட்டவுடனே அ'ம்ரு சிரித்துக்கொண்டே, "இந்த வானத் தின் கீழே இத்தகைய விண்ணப்பத்தையும் என்னிடம் வந்து ஒருவன் கேட்பானென்று யான் நினைக்கவே யில்லை," என்று அதிசயித்துக் கூறினான். அ'லீ(ரலி') அவர்களுக்கு ஏறுவாகன மில்லாமையால் தான்மட்டும் அசுவத் தின்மீ திருந்துகொண்டு அவர்களுடன் போர்புரிவது தன்னுடைய அந்தஸ் திற்கு அழகல்ல வென்று கண்டு, தன் குதிரையைவிட்டுக் கீழே குதித்துத் தன் கையிலிருந்த உடைவாளினால் முதன்முதலாக அ'ம்ரு அக்குதிரையின் கால்களை வெட்டினான். அதன்பின்பு அ'லீ(ரலி') அவர்களது நாமதேயத்தை விசாரித்தான். அவர்கள் தங்கள் பெயரைச் சொன்னவுடனே, "யான் உன் னுடன் சண்டைசெய்ய விருப்பங் கொள்ள வில்லை. என்னெனின், உன் தந்தையார் என் நண்பரா யிருந்தார்," என்று கூறினான். அதுகேட்டு, அலீ'(ரலி') அவர்கள், "உன்னுடன் சண்டை செய்ய நான் விழைவு கொள்ளுகிறேன்," என்று கூறியதைச் செவியேற்று, அ'ம்ருக்கு அடங்காக் கோப முண்டாயிற்று. அக்கணமே அவன் தன் கையிலிருந்த வாளை யோங்கி அ'லீ(ரலி') அவர்கள்மீது வீசினான்; அதுகண்டு, அ'லீ(ரலி') அவர் கள் அவ்வோங்கிய வாளைத் தங்களுடைய கேடகத்தால் தடுத்தார்கள்; ஆனால், அவ்வாளானது அவர்களுடைய பரிசையைக் கிழித்துக்கொண்டு போய், அவர்களது நெற்றியிலும் ஒருசிறு காயத்தை உண்டு பண்ணி

விட்டது; அதன் வடு அவர்களுடைய மரணபரியந்தம் ஆங்கிருந்தே வந்தது. இந்தக் காய மொன்றும், பின்னொரு சமயம் இப்'னு முல்ஜிம் கொடுத்த காயமொன்றும் இரண்டு மாறுவடுக்களை அ'லீ(ரலி')யின் நெற்றியில் உண்டுபண்ணி விட்டமையால், அவர்களுக்கு "துல்:கர்னைன்" (இரட்டைக் கொம்பர்) என்று பிறகொரு பெயர் வழங்கலாயிற்று. பின்னர் 'ஹ'ஜ்ரத் அ'லீ(ரலி') அவர்கள் தங்களுடைய கரத்திலிருந்த 'துல்'பக்'க்'ார் என்னும் ரஸூலுல்லாவின் வாளை ஓங்கி, அந்த அ'ம்ரைக் குறித்து வீசினார்கள்; அவ்வாள் அக்கணமே அவனுடைய மார்பிற்பட்டுச் சரீரத்துள் நெடுந்தூரம்வரை கீழிறங்கி விட்டது. அதுகண்டு, அ'லீ(ரலி') அவர்கள் "அல்லாஹு அக்ப'ர்!" என்று பெருஞ்சப்த மிட்டார்கள். அதுபொழுது அ'ம்ரு பி'ன் அ'ப்'து'வுத்'தும் சூறையிற்பட்ட பெருமரமே போல் நெடிதுறக் கீழேசாய்ந்து வீழ்ந்து, அப்பொழுதே எமலோகம் ஏறிச் சென்றான். எனவே, அதுசமயம், "கூசிவா ளரக்கர் தங்கள் குலத்துயிர் குடிக்க அஞ்சி, ஆசையால் உழலுங் கூற்றும் சுவைசிறி தறிந்த தன்றே!"

"முஸ்லிம்களுக்கு ஜே!" என்று அ'லீ(ரலி') முழக்கியதைக் கேட்டு, ல'ர்ராரும், 'ஜுபை'ராவும் அவ்வாலிபர்மீது பாய்ந்து வீழ்ந்தார்கள்; ஆனால், 'ஹ'ஜ்ரத் அ'லீயின் கையிலிருந்த 'துல்'பக்'க்'ாரின் வீச்சைக்கண்டு, பின் வாங்கினார்கள். உடனே உ'மர்(ரலி') அவர்களும் உதவிக்காகத் தாவிப் பாய்ந்தார்கள்; அதுபொழுது ல'ர்ரார் பின்னிடைந்து உ'மரைத் தன் கையிலிருந்த சனியனால் குத்த நாடினான். உடனே 'ஹ'ஜ்ரத் உ'மரென்று தெரிந்து, அவ் வாயுதத்தை நிறுத்திக்கொண்டு, தான் அதுசமயம் காட்டிய கருணையை மறக்க வேண்டா மென்றுங் கூறினான். அதுபொழுது நௌ'பல் திரும்பியோடப் பார்த்துத் தன் குதிரையிலிருந்து இடறிப் பதினைந்தடி ஆழமுள்ள அந்த அகழுக்குள்ளே தடுமாறி வீழ்ந்தான். அக்கணமே முஸ்லிம்கள் அவன்மீது அம்பைக்கொண்டு எய்யத் தலைப்பட்டார்கள்; அதைப் பார்த்து நௌ'பல் நாயைப்போல் அடிபட்டுச் சாவத் தனக்கு இஷ்ட மில்லையென்று கூவினான். உடனே அ'லீ(ரலி') அவ்வம்புகளை யெல்லாம் நிறுத்தி, அகழுக்குள்ளே இறங்கித் தங்கள் திருக்கரத்திருந்த உடைவாளால் அவனது சிரத்தைக் கொய்து, ஆவியை ஆகாயலோகம் அனுப்பி விட்டார்கள். அன்று முழுதும் அந்தப் போர் மிகக் கடுமையாகவே நடந்துகொண்டு வந்தது; எதிரிக ளெல்லாரும் ஒருவினாடியும் சும்மாவிராது முஸ்லிம்கள் இருந்த இடத்தைநோக்கிக் கல்மாரிகளையும் அம்புவர்ஷங்களையும் இடைவிடாது வர்ஷித்துக்கொண்டே யிருந்தார்கள். அன்றுதான் நபிகள்திலகமும் (சல்) அப்பாலிப்பால் அசையமுடியாது நான்கு வேளைத் தொழுகைகளையும் விட்டுவிடும்படியான அத்தியாவசியம் ஏற்பட்டுவிட்டது.

அந்த யுத்தத்தின் போழ்து முஸ்லிம் பெண்டு பிள்ளைக ளெல்லாரும் ஒரு பாதுகாப் புள்ள கோட்டைக்குள்ளே அனுப்பப்பட் டிருந்தார்க ளென்று நீங்கள் முன்னமே வாசித்திருக்கின்றீர்கள். அக்கோட்டையானது

ப்னீ :குறைள'ாக்கள் வசித்துவந்த இடத்திற்குச் சமீபத்தி லிருந்துவந்தது. முஸ்லிம் வீரர்கள் எல்லாரும் நபிகள் திலகத்துடன் அகழுக் கருகிலிருந்து யுத்தம் புரிந்துகொண் டிருப்பதால், பெண்மணிகள் வசிக்கும் கோட்டை பாதுகாப்பில்லாமலே இருக்குமென் றெண்ணி, அந்த யூதர்கள் அதைத் தாக்க எண்ணங் கொண்டு விட்டார்கள். அதற்கு முதன்முதலாக, அங்குள்ள நிலைமையை நன்கறிந்து வருமாறு ஒரு யூதனை உளவனாக அனுப்பி வைத்தார்கள். அவன் கோட்டை வாயில்வரை வந்து, அதை எவ்வாறு தாக்கலாமென்று ஆலோசித்துக் கொண்டு நின்றான். அவன் வந்து ஆங்கு உளவனா யுலவிக்கொண் டிருந்ததைக் கண்ட நபிகள் திலகத்தின் அத்தையாகிய 'ஹ'ஜ்ரத் ஸ'பிய்யா அம்மாளவர்கள் கண்டு, அக் கோட்டைக்குப் பாதுகாவலரா யிருந்த 'ஹஸ்ஸான் பி'ன் :தாபி'த் தென்னும் புலவரை யழைத்து, அந்த யூதனை வெட்டிவருமாறு கட்டளையிட்டார்கள். ஆனால், 'ஹஸ்ஸான் புலவர் பெருமான் பெரிய பயங்கொள்ளியா யிருந்துவந்ததனால், அவர் எதிரிகளின் படைகளைக் கண்டவுடனேயே ஓட்டப்பிடித்துச் சென்று ஒளிந்துகொள்ளக்கூடிய சுபாவம் வாய்ந்தவராய்க் காணப்பட்டார். ஆதலின், அன்னவர் அம் மாதரசியை நோக்கி, "ஆண்டவன் தங்களை மன்னிப்பானாக! ஏ அ'ப்'து'ல் முத்தலிபி'ன் அருமைக் குமாரியே! யானொரு புலவனே யல்லது யுத்த வீரனல்லன் என்பதைத் தாங்களே நன்கறிவீர்கள். யான் அப்படிப்பட்ட தைரிய காரியத்திற்குத் தகுதிவாய்ந்தவனா யிருந்திருந்தால், ஆண்மக்களுடன் கலந்து ஆங்குப் போர்புரியப் போயிருக்க மாட்டேனா? அவ்வாறாயின், எனக்கு இதுசமயம் பெண்களிருக்கும் இடத்திலே என்னவேலை யிருக்கின்றது?" என்று அச்சத்துடன் செப்பினார்.

அதுபொழுது, ஸ'பிய்யா அம்மாள் அதைக் கேட்டுச் சிரித்துக் கொண்டே, கூடாரத்தின் கம்பமொன்றைப் பிடுங்கிக்கொண்டு, கோட்டையைவிட்டு வெளியில்வந்து, அந்த யூதன்சிரசை நோக்கி ஓச்சியடித்தார்கள்; அவ்வொரே அடியால் அவன்மண்டை இரண்டாகப் பிளந்து உயிரற்றுக் கீழே வீழ்ந்துவிட்டான். பிறகு ஸ'பிய்யா அம்மாள் கோட்டையுள்ளே வந்து, தாங்கள் ஒரு ஸ்திரீயானமையால், 'ஹஸ்ஸானை நோக்கி, அந்த யூதனிடம் சென்று அவனுடைய ஆயுதங்களையும் போர்க் கவசங்களையும் கழற்றிவருமாறு கட்டளை யிட்டபோது, அந்தத் தைரியசாலியான கவிவாணர், தமக்கு அந்த யுத்த தளவாடங்களால் என்ன பிரயோஜனம் விளையப் போகிறதென்று கூறி, மறுத்துவிட்டார். அதன் பின்பு, மற்றக் :குறைள'ாக்களுக் கெல்லாம் ஒரு திகிலை உண்டாக்கும் பொருட்டு, அந்த யூதனது சிரத்தைக் கொய்து கோட்டைக்கு வெளியே எறிந்துவிடுமாறு ஏவினார்கள். அதுவும் அந்தப் பயங்கொள்ளிப் பாவலரால் ஆகாது போயிற்று. அதுபொழுது ஸ'பிய்யா அம்மாள் அவர்களே சென்று, அக் காரியத்தையும் பூர்த்திசெய்து முடித்தார்கள். அந்த யூதனது அறுபட்ட தலையைக் கண்டவுடனே அக் கோட்டையி னுள்ளும் முஸ்லிம்களின் படை

கள் அதிகம் வைக்கப்பட் டிருப்பதாக எண்ணிக்கொண்டு, அந்த ப'னீ :குறைள'ாக்கள் தங்கள் நாட்டத்தை நிறைவேற்ருது வாளா விட்டு விட்டார்கள். ஊரைக் கெடுப்பது உள்ளூர்ப் பகை யன்றே?



முற்றுகை போடப்பட்டுப் பலநாட்களாய் விட்டன. முஸ்லிம்கள் தங்களுக்குரிய உற்சாகத்தாலும் உறுதியாலும் மூச்சைப் பிடித்துக்கொண்டு, மூப்பது நாள்வரை நபிகள் பெருமானாரின் கட்டளைக் கிணங்கச் சற்றும்

மனந்தளராது நடந்துவந்தார்கள். ஆனால், குறைஷிப் படைகளோ, இது வரை ஒருபலனையும் கண்டுகொள்ளவில்லை. முன்னமே அன்னவருக்கு முஸ்லிம்களைப்பற்றிய திகிலில்லாமற் போகவில்லை. ஆண்டவனே அவ்வேழை முஸ்லிம்களுக்குத் தோன்றாத் துணையாய்நின்று உதவுகிறானென்றும் எண்ணிக் கொண் டிருந்தார்கள். இதுபொழுதும் ஏராளமான சைன்யங்களைத் திரட்டிக்கொண்டு வந்திருந்தும், இதுவரை ஒருமாத காலமாகியுங்கூட ஒன்றும் பயன் விளையாததைக் கண்டு, அயர்ச்சியுற்று அதிகமாக அதைரிய முங்கொண்டு விட்டார்கள். இத்துணைப் பெரிய சேனையின் முன்னும் இத்தனை நாட்களாக ஒருசில முஸ்லிம்கள் சடைவுறாது எதிர்த்து நிற்பதைக் கண்டு, அன்னவர்பக்கல் ஆண்டவனே துணைநிற்கின்றான் என்றே அச்சங்கொண்டு உற்சாகங் குன்றிவிட்டார்கள். இதுவுமல்லாமல், எத்தனை நாட்களுக்குத்தாம் அவ்வெதிரிகள் கொணர்ந்திருந்த ஆகாராதிகளெல்லாமும் தினமொன்றுக்கு 24,000 ஆட்களுக்கும், அவர்களைச் சார்ந்த ஒட்டகம் குதிரை முதலிய பல்லாயிரக்கணக்கான மிருகங்களுக்கும் போதுமானவையாய் இருந்திருத்தல் சாலும்? திறந்த வெளியில் வடக்கிலிருந்து சீறுசீறென்று சீறிக் கொண்டிருந்த சீரற்ற வாடைக்காற்றின் கொடுமையால் அநேகம் மனிதர்களும் மிருகங்களும் கஷ்டப்பட்டு, நாளடைவிலே உயிர் துறந்துகொண் டிருந்தார்கள். அவர்களுக்கு வாய்த்த துரதிருஷ்டம் இவ்வளவோடு நில்லாது, ஒரு கடும்புயலையும் அல்லா(ஹ்)வின் சோதனையால் அங்கே கொண்டுவந்து சேர்த்துவிட்டது. அப்புயலின் கடுவேகத்தால் அவர்களுடைய கூடாரங்களெல்லாம் மழையில் அடியோடு பெயர்த்தெறியப்பட்டன. அடுப்புப் பற்றவைத்து ஏதேனும் ஆகாரம் சித்தஞ் செய்துகொள்ளுதற்கும் அப்புயற்காற்று இடங்கொடுக்க வில்லை. அடுப்பின்மீது ஏற்றிவைக்கப்பட்ட பெரும்பெரும் சமையற் பாத்திரங்க ளெல்லாமும் அக் கடும்புயலால் அப்புறம் உருட்டிக் கீழே வீசியெறியப்பட்டன வென்றால், அதன்பின்பு நீங்களே அப் பெரும்புயலின் கொடுந்தீமையைப் பற்றி ஒருவாறு ஊகம் செய்துகொள்ளக் கடவீர்களாக. ஸர் வில்லியம் மூய்ரும், "அயர்ச்சியுற்றும், அந்தக்கரணத்தில் எரித்துப்போயும் இருந்துவரு நேரத்திலே, இராப்பொழுதுதானது குளிரையும் கடும்புயலையும் அன்னவர்மீது கொண்டுவந்து கொட்டிற்று. அந்தப் பாதுகாப்பற்ற பாசறைமீது சோனா மாரியும் ஓயாப் பெரும்புயலும் சற்றும் இரக்கமில்லாது வேகமாக வீசியடித்துக் கொண்டிருந்தன. அந்தப் புயற்காற்று அப்பால் சுழல்காற்றாக—சூறாவளியாக மாறி—உயர்ந்தெழுந்தது. அக்கினிகள் அணைக்கப்பட்டன; கூடாரங்கள் பெயர்த் தெறியப்பட்டன; சமையற் பாத்திரங்களும், ஏனையுத்த தளவாடங்களும் உருட்டிக் கவிழ்க்கப்பட்டன," என்று கவினுற வரைகின்றார். அதனைக் கண்டபின்னர் ஆண்டவனும் தங்களுக்கு விரோதமாகவே இருந்துவருவதாய் அவ் வெதிரிகள் நிச்சயம் செய்துகொண்டு விட்டார்கள். இதைத்தான் ஆண்டவனும் தன் திருவேதத்தில், "ஏ

ஈமான் கொண்டவர்காள்! உங்கள்பால் பெருந்திரளான படைகள் எதிர்த்து வந்தபொழுது,.........நாம் அவர்களுக்கு விரோதமாய் ஒரு கடும் புயலையும், நீங்கள் கண்டுகொள்ள முடியாத சேனைக் கூட்டங்களையும் அனுப்பிவைத்தோம்,” (:குர். 33 : 9) என்று குறிப்பிட் டிருக்கின்றான்.

இந்தப் புயலடிப்பதற்கு முன்னே அவ் வெதிரிகளின் நேசப்பான்மையைக் குலைப்பதற்குரிய வேறொரு சம்பவமும் நடைபெற்றிருந்தது: :குறைஷிகளுடன் வந்து கலந்துகொண்டிருந்த :கத்‘பான் கூட்டத்தில் மிக்க பிரக்யாதி பெற்றவரும், :குறைஷிகளாலும் ப’னீ:குறைள’ாக்களாலும் நன்கு மதிக்கப் பெற்றவருமா யிருந்த நயீ’ம் பி’ன் மஸ்ஊ’த்’ என்னும் பெரியார் ஒருநாள் நபிகள் பெருமானிடம் (சல்) விஜயஞ் செய்து, “யா ரஸூலல்லா! நான் முழுநம்பிக்கையுடனே முஸ்லிமாய்விட்டேன். ஆனால், இதை என் கூட்டத்தினர் அறிய மாட்டார்கள். யான் இனித் தங்களுடைய கட்டளையின்படி நடக்கக் காத்திருக்கிறேன்,” என்று விஞ்ஞாபனம் செய்துகொண்டார். அதுகேட்டு, நபிகள் பெருமான் (சல்) அன்னவரை நோக்கி, “எதிரிகளுக்குள்ளே பிரிவினையைப் பேதோபாயத்தால் உண்டாக்குவதைத் தவிர்த்து வேறென்ன உம்மைப்போன்ற பெரியார் இஸ்லாத்திற்கு இது சமயம் செய்துவைத்தல் சாலும்? யுத்தமென்பதே தந்திரமாகத்தானே இத் தாரணியில் காணப்பட்டு வருகின்றது!” என்று கூறினார்கள். அப்பொழுதே அப் பெரியார் தாம் செய்துமுடிக்க வேண்டிய காரியம் இன்னதென்பதை நன்குணர்ந்து கொண்டு, ப’னீ :குறைள’ாக்களிடம் போய்ச் சேர்ந்தார். நயீ’ம் ஆங்குச் சென்று :குறைள’ாக் கூட்டத் தலைவர்களையெல்லாம் ஒன்று திரட்டிப் பின்வருமாறு கூறலாயினர் :—

“நான் உங்களிடம் ஒரு முக்கிய காரியத்தைக் குறித்துக் கேட்கின்றேன்: நீங்கள் இதுசமயம் என்ன செய்திருக்கிறீர்க ளென்பதைப் பற்றிக் கிஞ்சித்தேனும் சிந்தித்துப் பார்த்தீர்களா? நான் உங்களுடைய பழைய நண்பன்; உங்கள் க்ஷேமத்தை விழைகின்றவன். ஆகவே, நான் சொல்ல வேண்டுவதை வெளிப்படையாய்ச் சொல்லிவிடுகின்றேன்: உங்களுடைய நிலைமை வேறு; :குறைஷிகளுடைய நிலைமை வேறு. அவர்கள் இம் மதீனாவின்கண் நிலையாய்க் குடியிருப்பவர்க ளல்லர். அவர்களுக்கு இப் பகுதியில் பெண்டு பிள்ளைகள், ஸ்தாவர ஜங்கம சொத்துக்கள் ஒன்றுமே யில்லை. எனவே, அவர்கள் இங்கு 4, 5 நாள் தங்கி யிருந்துவிட்டுப் பிறகு தங்களூர் நோக்கிப் பயணம் புறப்பட்டு விடுவார்கள். அதன்பின்பு நீங்கள் முஸ்லிம்களுடனே தனியே எதிர்த்து நிற்பதென்பது முடியக் கூடிய காரியமாயில்லை. உங்கள் பெண்டு பிள்ளைகளும், சொத்து சுதந்தரங்களும் இங்கிருக்கும்போது, நீங்கள் வேறெங்கே ஓடிவிடுதல் முடியும்? நீங்களும் முஸ்லிம்களும் இந்நகரிலேயே ஒன்றித்து இருக்கவேண்டியவர்கள். ஆதலின், நீங்கள் ஏன் இம்முஸ்லிம்களின் விரோதத்தைச் சம்பாதித்துக்கொள்ளல் வேண்டும்? எனவே, என்னுடைய யோசனைக்குச் செவி சாய்ப்பீர்களாக: உங்களை

இனிக் :குறைஷியர் சண்டைக் கிழுத்தால், அக் :குறைஷியரின் சில தலைவர் களை உங்களிடம் 'ஜாமீனாக ஒப்படைக்குமாறு கேட்டு வாங்குங்கள். இந்த யுத்தத்தை இறுதிவரை நடாத்தித் தீரவிட்டால் அத் தலைவர்களை விட முடியாதென்று கூறிவிடுங்கள். இவ்வாறு ஈடுவாங்கினால் தான் :குறைஷி கள் உங்களைத் தனியேவிட்டு ஓடமாட்டார்கள்." நயீ'மின் இவ்வுபதேசம் யூதர்களின் மனத்துள்ளே நன்கு பதிந்துவிட்டது. அதுகேட்டு, ஹுயை பி'ன் அக்'தப்' என்னும் ப'னீ நலீ'ர் தலைவரும் :குறைள'ாக்களிடமே இனித் தங்கிவிடுவதாகக் கூறினார்.

அதன் பின்பு அந்த நயீ'ம் என்பார் :குறைஷிகளிடம் சென்று, அபூ' ஸு'ப்யான் முதலிய தலைவர்களைக் கூட்டி, இவ்வாறு உபதேசித்தார் :— "நான் நேற்றிரவு ஓர் இரகசியச் செய்தியைத் தெரிந்துகொண்டேன். நான் உங்களுடைய பழைய நண்பனும், உங்களுடைய க்ஷேமலாபத்தை அதிகம் விரும்புகிறவனுமாதலால், அந்தச் செய்தியை உங்கள்பால் கூறு திருக்க என் மனம் சகிக்கவில்லை. நீங்கள் ஏமாற்றத்துள் வீழ்ந்து விடுவது கூடாது. ஆதியில் ப'னீ :குறைள'ாக்கள் மு'ஹம்மது'டன் (சல்) உடன் படிக்கை செய்திருந்தது உங்களுக்குத் தெரியுமே. அதற்கு மாறாகத் தானே அவர்கள் இப்போரில் உங்களுடன் சேர்ந்துகொண்டார்கள்? ஆதலின், அவர்கள் இப்பொழுது பச்சாத்தாபப்பட்டு மு'ஹம்மதி'டம் (சல்) பின்வரு மாறு இரகசியச் செய்தி யனுப்பி யிருக்கிறார்கள்: 'நாங்கள் முன் உடன் படிக்கையை மீறி நடந்ததற்காக மிகவாய் வருந்துகிறோம். ஆதலின், மீண்டும் உங்களுடன் உடன்படிக்கை செய்துகொள்ளப் பிரியம் கொள்ளு கிறோம். தங்களுக்கு எங்கள்மீது நம்பிக்கை ஏற்படுவதற்குக் :குறைஷியர் களிடமிருந்தும், :கத்'பான் கூட்டத்திலிருந்தும் சில தலைவர்களை உங்க ளிடம் ஈடாக வைக்கிறோம். முதலில் நீங்கள் அவர்களைக் கொன்று விடுங்கள். அதன்பின்பு நாமிருவரும் ஒன்றுசேர்ந்து எதிரிகளுடன் சண்டை செய்து அவர்களைத் துரத்தி விடலாம். அவ்வாறு நாம் செய்யாவிடின், அவர்கள் இம் மதீனாவையும் இதன் சுற்றுப் புறங்களையும் கைப்பற்றிக் கொள்வார்கள்.'"

இவ்வாறு நயீ'ம் கூறிய நயிச்சிய விஷயம் :குறைஷிகளுக்குப் பெருங் கலக்கத்தையே உண்டுபண்ணிவிட்டது. பிறகு அவர் :கத்'பான் கூட்டத்தா ரிடமும் சென்று அவர்களையும் இவ்வாறே பேதோபாயத்தால் கலைத்து விட்டார். பிறகு வெள்ளிக்கிழமை மாலையில் :குறைஷிகளும் :கத்'பான் கூட்டத்தாரும் கலந்தாலோசித்து, அபூ'ஜஹ்லின் குமாரரான இ'க்ரிமாவை யும் வேறு சிலரையும் ப'னீ :குறைள'ாக்களிடம் அனுப்பிவைத்தார்கள். அவர்கள் ஆங்குச் சென்று, "இங்கு எங்கள் ஒட்டகங்களும் குதிரைகளும் அதிகம் மாண்டு வருகின்றன; சேனைகளும் பல்வகைக் கஷ்டங்களுக் குள் ளாகி வருகின்றன. ஆதலின், நாளைக் காலையில் எல்லாரும் ஒருமிக்கத் திரண்டு யுத்தத்தை நடத்தி ஒரு முடிபுக்குக் கொண்டுவருதல் வேண்டும்,"

என்று கூறினார்கள். அதுகேட்டு, அந்த யூதர்கள் இ'க்ரிமாவை நோக்கி, "நாளைச் சனிக்கிழமை எங்களுக்கு ஓய்வு நாளா யிருக்கும்; அன்று நாங்கள் ஒரு காரியமும் செய்வது கூடாது. மேலும், நீங்கள் உங்கள் முக்கியஸ்தருள் சிலரை எங்கள்பால் ஈடுவைத்தா லல்லது, நாங்கள் உங்களுடன் இனிக் கலந்து போர்புரிவது முடியாது. என்னெனின், முஸ்லிம்களுடனே தனியாக நின்று சண்டை செய்யுமாறு நீங்கள் எங்களை விட்டு உங்களூருக்கு ஓடிவிடுவீர்களென்ற சந்தேகம் எங்களுக்கு ஜனித்திருக்கின்றது," என்று விடை கொடுத்தார்கள். இவ்விஷயம் :குறைஷிகளுக்கும் :கத்'பான் வர்க்கத்துக்கும் தெரிந்தவுடனே அவர்கள் நயீ'ம் தங்களிடம் கூறியது முழுதும் மெய்யேயென்று நம்பிக்கொண்டு, பின்வருமாறு ப'னீ:குறைள'ாக்களுக்குச் செய்தி சொல்லி யனுப்பினார்கள்: "நாங்கள் எங்கள் தலைவர்களுள் ளிருந்து ஒருவரையும் உங்கள்பால் 'ஜாமீனாக ஒப்படைப்பது முடியாது. ஆனால், நிச்சயமாய்ச் சண்டை செய்யவேண்டுமென்னும் எண்ணம் மட்டும் உங்களுக்கிருந்தால், நாளையே அவ்வாறு நடத்திவிடுவோம்."

ப'னீ :குறைள'ாக்கள் அதற்கு மறுமொழியாக, "எங்களுக்குச் சமாதானம் ஏற்படாதவரை நாங்கள் உங்களுடன் சேர்ந்து சண்டை செய்வது முடியாது," என்று இறுதிச் செய்தி யனுப்பி விட்டார்கள். இதிலிருந்து அவர்களுக்குள்ளே பிரிவினை (பேதம்) ஏற்பட்டுவிட்டது. அதன் பிறகுதான் மேலே கூறிய புயற்காற்றும் அன்றிரவில் வீசத் தலைப்பட்டது. அதன் பின்பு அபூ' ஸு'ப்யான் :குறைஷிகளெல்லாரையும் அழைத்து, "நமது நாட்டை விட்டு நாமெல்லாரும் இங்குவந்து சென்ற ஒரு மாதத்துக்கு மேலாகக் கஷ்டதசையி லிருக்கிறோம். நம்முடைய சேனைகளும் வாகனங்களும் அதிகம் க்ஷீணித்துக்கொண்டு வருகின்றன. புயற்காற்றின் கொடுமையால் நாம் நெருப்புப் பற்றவைக்கவும், நம்முடைய ஆகாரங்களைத் தையார் செய்துகொள்ளவும் ஒருசிறிதும் முடியவில்லை. எனவே, இனி நாம் இங்குத் தங்குவது நியாயமில்லை," என்று கூறிவிட்டுத் தமது ஒட்டகத்தின்மீதேறித் தனியே புறப்பட்டு விட்டார்;* காரிருளாலும் வாடைக் குளிராலும் கஷ்டப்பட்ட ஏனையோரும் அவ்வாறே புறப்பட்டுச் செல்லத் துவக்கினார்கள். ஆதலின், அன்றிரவு விடியுமுன்னே எதிரிகளெல்லாரும் அம் மைதானத்தைக் காலிசெய்துவிட்டு, நபிகள் பெருமான் கூறிய வண்ணமே வெறுமையாய்த் திரும்பிப் போய்விட்டார்கள். இவ்வாறு 3,000 முஸ்லிம்கள் 24,000 எதிரிகளைத் தடுத்துத் துரத்துவதென்பது தெய்வ சகாயத்தா லல்லது, வேறு மனித சகாயத்தால் நிறைவேறக் கூடியதன்றே!

---

* "வாரணம் பொருத மார்பும் வரையினை எடுத்த தோளும்
நாரத முனிவற் கேற்ப நயம்பட உரைத்த நாவும்
தாரணி மவுலி பத்தும் சங்கரன் கொடுத்த வாளும்
வீரமும் களத்தே போட்டு வெறுங்கையோ டிலங்கை புக்கான்,"—என்னும்
கம்பநாடன் கவியே இங்கெமக்கு நினைவில் வருகிறது.

புறப்பகையுடன், அகத்திலும் முனாஃபிக்கீன்களும் பனீ :குறைளா'க்களும் நம்பிக்கைத் துரோகஞ் செய்து விட்டார்கள். ஆயினும், ஆண்டவனது அருள்மட்டும் அந்த முஸ்லிம்களின் சார்பில் இருந்துகொண் டிருந்ததென்ப தில் கிஞ்சித்தும் சந்தேகமென்பதே இல்லையென்றே மகா நிச்சயமாகக் கூறி முடிக்கலாம்.

எதிரிகள் இந்த அ'ஹ்'ஜாப்' யுத்தத்தில் "தாங்கள் நாடியதைப் பெற்றுக் கொள்ளாதவர்களாய் (ஏமாற்றத்துடனே) திரும்பிச்" சென்றுவிட்டார்கள் என்று எம திறைவன் கூறியதிலிருந்து (3 : 126) அந்நேசக் கக்ஷியினர் ஒருசிறிதும் வெற்றி பெறுமலே தான் திரும்பியோடினார்களென்னும் உண்மை நன்கு வெளியாகின்றது. மக்காவுக்குத் திரும்பிச் செல்லும் வழியிலே அவர்களுடைய மாபெருந் தளபதி க'ாலித்' பி'ன் வலீத்' தீ'னுல் இஸ்லாத்தைத் தழுவிக்கொண்டு விட்டார்.— எல்லாப் புகழும் அல்லா(ஹ்)வுக்கே!

"எங்களுக்கும் எங்களின ஜனங்களுக்கு மிடையே உண்மையைக் கொண்டு நீ தீர்மானிக்கக் கடவாய்; மேலும், தீர்மானிக்கிறவர்களுள்ளே நீயே மிக மேலானவன்."— (7 : 89)

---

# அதிகாரம் — 28

## :குறைள'ா வைபவமும் ஃஜனப்' சம்பவமும்

*"இன்னம், அ(வ்வாண்ட)வன், வேதத்தை யுடையவர்களினின்று (நேசப் படையினரான) அவர்களுக்கு உதவி புரிந்தவர்களை அன்னவர்களுக் குரிய அரண்களை விட்டுக் கீழே யிறக்கிவிட்டு, அவர்களுடைய ஹிருதயங்களிலே திகிலையும் போட்டுவிட்டான்; (அவர்களினின்று) ஒருசிலரை நீங்கள் கொன்றீர்கள்; இன்னம், சிலரைக் கைதிகளாய்ப் பிடித்தீர்கள்."— (33 : 26)*

மேலே கூறியவாறு அந்த எதிரிகளின் நேசப் படைகளெல்லாம் ஓரே இரவில் ஊரைவிட்டோடி விட்டன. இந்த அகழ்யுத்தத்தில் அம்முஸ்லிம்களுக்கு அதிகமான நஷ்டமுண்டாக வில்லையென்றே கூறிமுடிக்கலாம். ஆயின், முஸ்லிம்களெல்லாருக்கும் வலக்கரமாகவும், ஒளஸ் வர்க்கத்தினருக்கெல்லாம் மாபெருந் தலைவராகவும் விளங்கிவந்த ஸஅ'தி'ப்'னு முஆ''த் என்பவருக்கு மட்டும் மிகக்கடுமையான காயம் பட்டுவிட்டது. ஆ'யிஷா பிராட்டி அவர்களுடன் இந்த முஆ''தின் அன்னையும் பெண்களிருந்துவந்த

கோட்டையிலே தங்கியிருந்தார். அதுபொழுது ஆங்கு நிகழ்ந்த சம்பவத்தைக் குறித்து ஆ'யிஷா (ரலி') கூறுவதாவது: "யான் அக்கோட்டையி லிருந்த போது, எனக்குப் பின்னே ஒருநாள் ஒரு கூச்சல் கேட்டது. அதுசமயம் நான் திரும்பிப் பார்த்தேன்; அப்பொழுது ஸஅ'தி'ப்'னு முஆ''த் ஒருவனைத் துரத்திக்கொண்டு வேகமாக ஓடியதைக் கண்டேன். அவர் அவ் வேளையில், 'அடே, ஓடாதே! சற்று நில்! யுத்தத்தில் பகைவன் வருமுன்னே ஓடுவது பேடித்தன மாகும். படுகளத்துக்கு வந்ததன் பின்னால் மரணத்துக் கஞ்சினால் அஃதுன்னை விட்டுவிடுமோ?' என்னும் கருத்தமைந்த கவிகளைப் பாடிக் கொண்டே ஓடினார். அதுகேட்டு, அவருடைய அன்னையார், 'அருமை மைந்த! இத்துணை நேரம்வரை எங்குச் சென்றிருந்தாய்? ஓடு! ஓடு! சீக்கிரம் ஓடக்கடவாய்!' என்று உற்சாக மூட்டினார். அதுபொழுது அவ்வீரர் அணிந்திருந்த இருப்புக்கவசம் மிகச்சிறிதா யிருந்துவந்தமையால், அவருடைய இருகரங்களும் வெளியில் பிதுங்கிக்கொண்டு நின்றன. அது கண்டு நான், 'இவருடைய இருப்புக்கவசம் இன்னம் சற்றுப் பெரிதா யிருந்தால் மிகநன்று யிருந்திருக்குமே!' என்று கூறினேன். அதுசமயம் ஆங்கோரிடத்தில் ஒளிந்துகொண் டிருந்த இப்'னுல் அர்:க்:கா என்னும் பகைவனொருவன் பாய்ச்சிய ஓர் அம்பால் அந்த ஸஅ'தி'ன் ஒரு தோள்நரம்பு துண்டிக்கப்பட்டு விட்டது."

அந்த அகழ்யுத்தத்தில் காயமடைந்தவர்களுக்கு வைத்தியம் செய்யும் பொருட்டு ர'பீத'ா என்னும் மாதுசிரோமணி தம்மாலியன்றவரை பிரதம சிகித்ஸைகளையும் ஏனைய சைத்தியோப சாரங்களையும் இடைவிடாது செய்துகொண்டே வந்தார். இவர் மதீனாவிலுள்ள மஸ்ஜிதின் முற்றத் திலும் கூடாரமொன்றை அடித்துக்கொண்டு, அங்கே முஸ்லிம் வியாதி யஸ்தர்களுக்குரிய விரண ஸிகித்ஸை போன்றவற்றை யெல்லாம் அதிக கவனத்துடனே பார்த்துக்கொண்டு வந்தார். அவ் விடத்திலேதான் ஸஅ'தி'ப்'னு முஆ''தும் தமது கைரணத்துக்கு ஸிகித்ஸை செய்யப்பட்டு வந்தார்; நபிகள் பெருமானும் அவருடைய புண்ணைக் கவனித்துத் தங்கள் திருக்கரத்தாலும் மருந்துபோட்டுப் பார்த்தார்கள். ஆயினும், ப'னீ :குறைஷ்'ாக்களின் விஷயம் ஃ'பஸல் செய்யப் பட்டதன்பின்பு, மீண்டும் அந்தப் புண் பெருங்காயமாக மாறி, அதன் விளைவாக அப்பெரியார் ஆண்டவ னருளால் மறுநாளே சுவனபதியை யடைந்து விட்டார்.— (இன்னாலில்லாஹி......ராஜிஊ'ன்)

மதீனாவின்கண் ஆதியில் தழைத்தோங்கி வந்த யூதவர்க்கங்களுள் ப'னீ ஃகனு:காஃ', ப'னீ நலீ'ர் ஆகிய இரு கூட்டத்தினரும் தத்தம் குறும்புத் தனத்தாலேயே முன்னமே நாடுகடத்தப்பட் டிருந்தார்க ளென்பதை நீங்கள் நன்கறிந்துகொண் டிருக்கின்றீர்கள். ஆனால், ப'னீ நலீ'ர்கள் மதீனாவை விட்டுப் புறப்படுங் காலத்தில், ப'னீ :குறைஷ்'ாக்கள் மட்டும் இரண்டாவது முறையாகத் தங்கள் உடன்படிக்கையை நபிகள் திலகத்திடம் புதுப்பித்துக்

கொடுத் திருந்தார்கள். ப்னீ நலீ’ர் வர்க்கத்தினர் ஒருசிலர் மதீனாவை விட்டுப் புறப்பட்டு, கைப்ப்’ர் என்னும் இடத்திற் போய்க் குடியேறி யிருந் தார்க ளென்று முன்னர் நாம் கூறியிருக்கின்றோம். ஆண்டு அவர்கள் சிறிது போழ்தைக்குள் அளவுகடந்த செல்வாக்கைப் பெற்றுவிட்டார்கள். ஹுயை பின் அக்’தப்’, ஸல்லாம் பின் அபு’ல் ஹுகைக் முதலிய பிரமுகர்களே மக்காவிற்குச் சென்று ஆங்கிருந்த :குறைஷியரை யெல்லாம் மதீனாவின்மீது படையெடுத்து வருமாறு கிளப்பிவிட்டதோ டமையாது, அவ்வரப் நாட்டில் வசித்துவந்த மற்றெல்லாக் கூட்டத்தார்களையுங் கூட இந்த அகழ்ச் சண்டையில் கலந்துகொள்ளுமாறு தூண்டி விட்டார்கள். அந்த ப்னீ நலீ’ர்கள் முதன்முதலில் கேட்டுக்கொண்ட போழ்து, இந்த ப்’னீ :குறைள’ாக்களும் அந்த அ‘ஹ்‘ஜாப்’ யுத்தத்தில் கலந்துகொள்ள முடியாதென்றே மறுத்துக் கூறினார்கள். ஆனால், ஹுயை பின் அக்’தப்’ என்பான் செய்த வஞ்சக துர்ப்போதனையைக் கேட்டு, முஸ்லிம்கள் இனி எங்கே தலைதூக்கப் போகிறார்க ளென்னும் “அசட்டுத்” துணிச்சலை மேற் கொண்டு, தாங்கள் முன்னம் செய்து கொடுத்திருந்த இரு உடன்படிக்கை களையும் அடியோடு மீறி, ஆங்குவந்த எதிரிகளுடனே, சமயத்தில் கழுத்தை யறுப்பதே போல, சதிமோசம் செய்து, பகிரங்கமாகச் சேர்ந்துகொண் டார்கள். :குறைஷிகள் இந்த யுத்தத்தை இறுதிவரை நடத்தாமல் திரும்பிப்போய் விடுவதாயிருந்தால், தான் கைப்’ரை விட்டு மதீனாவுக்கே வந்து :குறைள’ாக் கூட்டத்தாருடன் தங்கிவிடுவதாக ஹுயை இப்’னு அக்’தப்’ முதன்முதலில் வாக்குறுதி செய்து கொடுத்திருந்தான்; அதன் பிரகாரம் அந்த அகழ்யுத்தத்தில் தோல்வியடைந்து :குறைஷிகளெல்லாரும் ஓடிப்போய் விட்டவுடன் அந்த ஹுயை என்பவன் மட்டும் ப்னீ :குறை ள’ாக்களுடன் சேர்ந்துகொண்டு மதீனாவிலேயே தங்கிவிட்டான்.

ப்னீ :குறைள’ாக்கள் நபிகள் பெருமானுக்குச் செய்துகொடுத்திருந்த உடன்படிக்கையை மீறி, மிக்க நெருக்கடியான, உயிருக்கே மன்றாடும் அமயத்தில் அம் முஸ்லிம்களைக் கைவிட்டு, அன்னவர்களின் ஜன்ம சத்துருக் களான :குறைஷிகளுடன் வெளிப்படையாகச் சேர்ந்துகொண்டு, முஸ்லிம் ஸ்திரீகள் வசித்துவந்த கோட்டைகளையும் தாக்கப் பார்த்தார்கள். இதைக் குறித்துத்தான் ஆண்டவனும் தன் திருமறையில் (33 : 26) ஒருவாறு சுட்டிக் காட்டியுள்ளான். அதுபொழுது அந்த நேசப் படையினரின் பெரு முயற்சி வெற்றிபெற்று, மதீனாநகரும் அன்னவர் கைவயம் அகப்பட்டிருக்கு மாயின், அவ்வேளை முஸ்லிம்களின் கதி யாதாயிருக்குமென்பதை நீங்களே சற்று நிதானித்துப் பார்த்துக்கொள்ளக் கடவீர்களாக. புறத்தில் 24,000 படைகளும், அகத்தில் அயோக்கிய நயவஞ்சகர்களின் அந்தரங்க சூழ்ச்சியும் ஒருபக்கல் இருந்து வந்தக்கால், மற்றொரு பக்கல் இந்த ப்னீ :குறை ள’ாக்களும் அவ் வெதிரிகளுடன் சேர்ந்துகொண்டு முஸ்லிம்களின் நிலைமை யைப் பாக்குவெட்டிக்குள்ளே அகப்பட்ட பாக்கேபோல் மிகவும் நெருக்கி

விட்டார்கள். எனவேதான், அவர்களுக்கு ஒரு நல்ல படிப்பினையைக் கற்றுக்கொடுக்க வேண்டுமென்னும் தீர்மானத்துடன் தயாள மூர்த்தியாகிய நபிபெருமானா ரவர்கள் அந்தக் :குறைள’ாக் கூட்டத்தினர் வசித்துவந்த திசையின்பக்கல் தங்கள் கவனத்தைச் செலுத்த வாரம்பித்தார்கள். அதிக கண்ணியத்துடன் ஆண்டவனையும் சாக்ஷிவைத்துத் தங்கள் உடல் பொருள் ஆவியை யெல்லாம் அவ் வுடன்படிக்கையின் மீதே சார்ந்திருக்குமாறு செய்துகொண் டிருந்த சமாதான உடன்படிக்கையை மீறி, அவர்கள் இவ்வாறு துரோகசித்தத்துடனே நடந்துகொண் டிருப்பார்களாயின், அதன் பின்பு இத்தகைய பரிசுத்த உடன்படிக்கைப் பத்திரங்களைப் பத்திரமற்ற “வெறுங் காகிதமே” யென்று ஏனையோர் குப்பைக் கூடைக்குள்ளே கசக்கி யெறியத் துணிய மாட்டார்களா? ஆகவே, மானிட சமூகத்துக்கொரு நல்ல படிப்பினையைக் கற்றுக்கொடுப்பான் வேண்டியும், அத்தகைய உடன் படிக்கைகளை இனி யெல்லாரும் மீறிநடவா திருப்பான் வேண்டியும் அந்த ப’னீ :குறைள’ாக்களுக்குத் தக்கதொரு தண்டனையை இயற்றுவிக்க வேண்டுவது அதுசமயம் ஓர் அத்தியாவசியமான கடமையாகவே காணப்பட்டு வந்தது.

ஆதலின், அந்த அகழ்யுத்தம் முடிவடைந்தவுடன் நபிகள்திலகம் (சல்) தங்கள் சேனைக ளெல்லாம் ஆயுதங்களைக் கழற்றாமலே :குறைள’ாக் கூட்டத்தினர் வசித்துவந்த இடத்தை நோக்கிச் செல்லுமாறு கட்டளை யிட்டார்கள். அந்த யூதர்கள் மீண்டும் சமாதானத்திற்கு வருவதா யிருப்பின், இனிப் போதிய பந்தோபஸ்தைக் கொண்டே அவர்களுடன் தக்க நிபந்தனையின்மீது சமாதானம் செய்துகொள்ள வேண்டுமென்ற நாட்டத்துடனேயே ஆண்டுச் சென்று, அவர்களுடைய கோட்டைகளுக் கெதிரிலுள்ள “என்னா” வென்னும் கிணற்றருகில் பாடிவீடு செய்து கொண்டார்கள். ஆனால், அந்த முற்றுகையைத் தடுத்து முழுதும் யுத்தம் செய்துபார்ப்பதே சரியென்று அந்தக் :குறைள’ாக் குறும்பர்கள் முழு மூடத்தனமாகத் தீர்மானம் செய்து கொண்டார்கள். இது நிகழ்ந்ததும் ஹிஜ்ரீ 5-ஆவது ஆண்டிலேதான். அதுசமயம் ‘ஹ‘ஜ்ரத் அ’லீ(ரலி’) அவர்கள் அம்முஸ்லிம் சேனைகளுக்குத் தலைமைதாங்கி யூதர்களின் கோட்டைகளை நோக்கிச் சென்றுகொண் டிருந்தபொழுது, அந்தக் :குறைள’ாக் கூட்டத்தினர் தங்கள் கோட்டைகளுக்குள் ளிருந்தபடியே நபிகளாரைத் தங்கள் வாய்க்கு வந்தவா றெல்லாம் திட்டிக்கொண் டிருந்தார்கள்; வேறெவரும் வாய்கொண்டு திருப்பிச் சொல்லத் துணியாத அத்தகைய இழிய வசைமொழிகளையெல்லாம் கேட்டுக்கொண்டுசென்ற அம் முஸ்லிம்கள் அந்த யூதர்களைச் சூழ்ந்து நெருக்கமாக முற்றுகையைப்போட்டு முடுக்கி விட்டார்கள். அதன்பின்பு அம்முற்றுகை உத்தேசம் ஒரு மாதகாலம் வரை நீடித்துக்கொண்டே வந்தது.*

---

* சரியாக 25 நாட்களே யென்று மௌ. மு‘ஹம்மத’லீ கூறுகின்றார்.

இறுதியில் அந்த யூதர்கள் சிரங் குனிந்து பணிந்து, தங்கள் அத்தியந்த நண்பராய் விளங்கிவந்த ஸஅ'தி'ப்'னு முஆ''தின் (ரலி) தீர்ப்பையே ஏற்றுக் கொள்வதாக ஒத்துக்கொண்டு விட்டார்கள். ஒளஸ் வர்க்கத்தின் தலைவராய் விளங்கிய அந்த ஸஅ' தெ'ன்பார் :குறைள'ாக் கூட்டத்திலும் அளவு கடந்த நன்மதிப்பைப் பெற்றிருந்தார். இவ்வாறு தங்குலத்தாலும் பிற கோத்திரத்தாலும் புகழப்படுவ தென்பது அக்காலத்தில் அவ்வரப் நாடு முழுதும் ஒரு பெருங் கீர்த்தியாகவே கருதப்பட்டு வந்தது. எனவே, தங்களுக்கும் ஒளஸ் வர்க்கத்தினருக்கும் இருந்துவந்த நெடுங்கால நட்பை யுத்தேசித்தே தங்களுக்கு அனுகூலம் கிடைக்கு மென்னும் ஆவலுடனே தான் ஸஅ'தி'ப்'னு முஆ''த் விதிக்கும் நிபந்தனையை அங்கீகரிப்பதாக அந்தக் :குறைள'ாக்க ளெல்லாரும் கோரிக் கொண்டார்கள். நபிகள் பெருமானும் அதற்குக் கட்டுப்பட்டு விட்டார்கள். நபிகள் திலகம் தங்கள் சொந்த அபிப்பிராயத்தின் பிரகாரம் தீர்ப்புக்கூறுவதா யிருந்தால், அம் மஹானுபாவர் அதற்கு முன்னே இரு யூதக் கூட்டங்களுக்கும் கூறிய தீர்ப்பையே இதுபொழுதும் கூறியிருப்பார்கள். ஆகவே, அவர்கள் அதிகமாகத் தண்டிக்கப்பட் டிருந்தால், தேசப் பிரஷ்டம் செய்யப்படும் தண்டனைக்குள்ளாகவே ஆக்கப்பட்டிருப்பார்கள். ஆனால், ஸஅ'தி'ப்'னு முஆ'தெ'ன்பவரோ அந்த யூதவர்க்கத்தின் தௌராத்திலுள்ள விதிப்படியே அன்னவருக்கு அதுசமயம் நியாயம் வழங்கத் தலைப்பட்டு விட்டார். மேலும், அதுவரை :குர்ஆன் ஷரீ'பில் ஆண்டவனால் விளக்கிக் காட்டப் படாத விஷயமொன்று ஃபஸல் செய்யப்பட வேண்டுமாயின், அவ்விஷயம் தௌராத்திலுள்ள விதியின்வண்ணமே முடிவு செய்யப்பட்டு வந்தது. உதாரணமாக, வியபிசாரக் குற்றத்துக்காகக் கல்லெறிந்து கொன்றதும், :கிப்'லா வென்னும் தொழுந்திசை பை'த்துல் மு:கத்'த'ஸின் பக்கல் இருந்து வந்ததும் ஈண்டுக் குறிப்பிடப்படலாம். இன்னம், ஸஅ' தெ'ன்பார் இப்படிப் பட்ட இக்கட்டான வேளையில் அந்த யூதர்கள் நடந்துகொண்ட அயோக்கியத்தனம் மிகக்கொடிய ராஜத்துரோகக் குற்றமே யெனக்கண்டு, அதற்குத் தக்கவாறான தௌராத்துத் தண்டனையை முற்றும் விதிப்பதுதான் சரியான நியாயமாகுமென்று தீர்மானம் செய்துகொண்டு விட்டார். குற்றத்துக்குத் தக்க தண்டனை கொடுக்கப்படாவிடின், பிறகு கண்ணியம் வாய்ந்த உடன் படிக்கைகளின் கதிதான் யாதாய் விடுமென் றெண்ணுகின்றீர்கள்? எனவே, அப்பெரியார், தம்முடைய தீர்ப்புக்கு அந்த யூதர்கள் கட்டுப்படத் தையாரா யிருக்கின்றார்களா வென்னும் உறுதிமொழியை வாங்கிக் கொண்டே பின்வருமாறு தௌராத்திலுள்ள தீர்மானத்தை எடுத்துக் கூறினார்கள். அந்த மூஸாநபி வேதத்தில் இவ்வாறு வரையப்பட்டிருக்கிறது :—

"நீ ஒரு பட்டணத்தின்மேல் யுத்தம்பண்ண நெருங்கும்போது அந்தப் பட்டணத்தாருக்குச் சமாதானம் கூறக்கடவாய். அவர்கள் உனக்குச் சமாதானமான உத்தரவு கொடுத்து, வாசலைத் திறந்தால், அதிலுள்ள ஜனங்கள்

எல்லாரும் உனக்குப் பகுதி கட்டுகிறவர்களாகி, உனக்கு ஊழியம் செய்யக் கடவார்கள். அவர்கள் உன்னோடே சமாதானப் படாமல், உன்னோடே யுத்தம் பண்ணுவார்களானால், நீ அதை முற்றிக்கை போட்டு, உன் தேவனாகிய கர்த்தர் அதை உன் கையில் ஒப்புக் கொடுக்கும்போது, அதிலுள்ள புருஷர்கள் எல்லாரையும் பட்டயக் கருக்கினால் வெட்டி, ஸ்திரீகளையும் குழந்தைகளையும் மிருக ஜீவன்களையும் மாத்திரம் உயிரோடே வைத்து, பட்டணத்திலுள்ள எல்லாவற்றையும் கொள்ளையிட்டு, உன் தேவனாகிய கர்த்தர் உனக்கு ஒப்புக்கொடுத்த உன் சத்துருக்களின் கொள்ளைப் பொருளை அநுபவிப்பாயாக."—(பைபிள் பழையஏற்பாடு, உபாகமம், 20 : 10—14)

இந் நியதியின் பிரகாரம் போர்புரியச் சக்தி வாய்ந்த ஆடவர்களெல்லாரும் அடியுடன் வெட்டப்படல் வேண்டும். பெண்டிர்களும் பிள்ளைகளும் சிறைவாரப்படல் வேண்டும்; அவர்களுடைய பொருள்களனைத்தும் பறிமுதல் செய்யப்படல் வேண்டும். இத் தீர்ப்பைக் கேட்டபொழுது, அந்த ப'னீ :குறைஎ'ாக்களும் நியாயந்தானென்று சிரங்குனிந்து, வாளா நின்றார்கள்; நபிகள்பெருமானும் (சல்) அன்னவரின் தேவவேதக் கட்டளைப்படியே நெறியான நியாயம் வழங்கப்பட்ட தென்று ஆமோதித்தார்கள். என்னெனின், இத்தகைய பிரமாண முறையைத்தான் யூதர்களும், அவர்களுடைய விரோதிகளும் அதுசமயம் மேற்கொண் டொழுகிவந்தார்கள். ஸஅ'தி'ன் தீர்ப்பைச் செவியேற்று, ப'னீ நலீ'ர் தலைவனான ஹுயை பி'ன் அக்'தப்' அந்த யூதர்களை நோக்கி, "ஏ ப'னீ :குறைஎ'ாக்களே! கடவுளுடைய கட்டளையை நிறைவேற்றுவதைக் குறித்துக் கவலைகொள்ள வேண்டாம்; இஃதொரு தெய்வக்கட்டளையே யாகும். இவ்வாறேதான் நமது திருவேதத்தில் வரையப்பட் டிருக்கிறது. இஃது இஸ்ரவேலர் கூட்டத்தார்மீது தேவனால் விதிக்கப்பட்ட ஒரு தண்டனை யாகும்," என்று கூறினான். அப்பொழுது வெட்டப்பட்ட யூதர்களுள் இவனும் ஒருவனாயிருந்தான். இவன் முதலில் மதீனாவைவிட்டு, கை'ப'ருக்குப் புறப்பட்டபோது, ஆண்டவன்மீது சத்தியம் செய்து, நபிகள் நாயகத்திற்கு இனி விரோதம் செய்வதில்லையென்று பிரதிக்கினை செய்துகொடுத்துப் போயிருந்தான்; அதற்கு மாறாகவே பின்னர் இன்னவன் நடந்துகொண்டு விட்டான். :குறைஷிகளையும் ஏனை அராபிக்கூட்டத்தினர்களையும் அ'ஹ்'ஜாப்' யுத்தம் புரியுமாறு தூண்டிவிட்ட முக்கியஸ்தருள் இவனும் ஒருவனாவான். பிறகு, நபி பெருமானுடன் செய்துகொடுத்திருந்த உடன்படிக்கைக்கு நேர்மாறாக மிக்க நெருக்கடியான வேளையிலே அம் முஸ்லிம்களைக் கைவிட்டு, அவர்களுக்கு விரோதமாய்ச் சண்டைசெய்யுமாறு ப'னீ :குறைஎ'ாக் கூட்டத்தினரைக் கிளப்பிவிட்டவனும் இவனே யாவான். இன்னம், இவன் அந்த அகழ்யுத்தத்துக்குப் பின்னே கை'ப'ருக்குச் சென்றுவிடாது, மதீனாவிலேயே ப'னீ :குறைஎ'ாக்களுடனே தங்கியிருந்து விட்டான். எனவே, இப்படிப்

பட்ட விஷம துஷ்டன் கொல்லப்படுவதில் ஒன்றும் அநீதியில்லை ; ஆச்சரி யமு மில்லை. ஆதலின், அவனைக் கொலைக்களத்திற்குக் கொண்டு சென்று நிறுத்தியபோது, அன்னான், "தேவன்மீது பிரமாணமாக! உம்மீது—(நபி பெருமான்மீது) ஏன் பகைமைகொண்டே னென்பதைப்பற்றி எனக்கொன் றும் மனவருத்த மில்லை. ஆனால், எவனொருவன் அத் தேவனை விட்டு விலகிக் கொள்ளுகிறானோ, அவனை அத்தேவனும் கைவிட்டுவிடுகிறா னென்ற உண்மையை மட்டும் நான் நன்கறிந்து கொண்டு விட்டேன்," என்று கூறினான்.

அதுசமயம் வெட்டப்பட்ட யூதவீரர்கள் 700 முதல் 800 வரை என்று கிறிஸ்தவ நூலாசிரியர்கள் வரைந்து வைத்திருக்கின்றார்கள் ; அல்லது பௌராணிகருங் கூட அவ்வாறு கூறலாம். ஆனால், அல்லாமா ஷிப்'லீ நுஃ'மானீ அவர்கள் அத்தொகை 400 என்றே எழுதியிருக்கின்றார்கள். லாகூர் மௌலானா மு'ஹம்மத்'லீ, அதுபொழுது கொல்லப்பட்டவர்கள் 300 என்றே வரைந்திருக்கின்றார். ஆனால், ஸர் சையித்' அமீரலீ யென் பார் அத்தொகை 200 முதல் 300 வரைதான் என்றே தமது ஆராய்ச்சியில் கண்டிருக்கின்றார். சுருங்கச் சொல்லுமிடத்து, அந்தத் தொகை 200 முதல் 900 வரை யென்றே பற்பல மனிதர்கள் பற்பலவாறாகக் கூறியிருக்கின்றார் கள். ஆனால், எல்லாருடைய விவாதத்தையும் ஆழ்ந்து நோக்குங்கால், 250, அல்லது 300 யூதர்களே அன்று கொல்லப்பட் டிருப்பார்க ளென்று நாம் நிச்சயிக்க வேண்டியவர்களா யிருக்கின்றோம். இவ்வாறு கூறும்போதும், இந்தத் தொகையும் மிகக் கொடுமையான தென்றே ஒருசில எதிர்மதவாதி கள் குறை கூறாநின்றார்கள். அல்லா(ஹ்)வின் நபியெனப்பட்டா ரொருவர் இவ்வாறு நூற்றுக்கணக்கான மனிதர்களை "ஈவிரக்க"மற்ற முறையிலே படுகொலை புரிந்தது ஓர் அடாதகாரிய மென்றே அன்னவ ரெல்லாம் நாவில் நரம்பில்லாது நவின்று வருகின்றார்கள். ஆனால், உண்மையை உசாவி யுணர்ந்தவர்கள் இவ்வாறு எளிதிலே இயம்பிவிடத் துணியமாட்டார்க ளென்பது திண்ணமேயாம்.

மீக்கூறிய தீர்ப்பானது மேற்போக்காய்ப் பார்ப்பவருக்கு நியாயவிரோ தமே போலக் கொடுமையாய்த் தோன்றினாலும், எக்காரணத்தை முன் னிட்டு அவர்கள் அவ்வாறு கொல்லப்பட்டார்க ளென்பதை ஒரு சிறிதே னும் ஊன்றிப் பார்ப்பீர்களேல், அது நியாய விரோதமான தென்று நீங்கள் சிறிதும் அறிந்துகொள்ள மாட்டீர்கள். நபிகள்திலகம் (சல்) மதீனாவுக்கு முதன்முதலில் விஜயஞ்செய்தபோது, இந்த ப்னீ :குறைள'ாக்கள் ப்னீ நலீ'ர்களைப் பார்க்கினும் "பேர்பாதி" அந்தஸ் துள்ளவர்க ளாகவே யிருந்து வந்தார்கள். எனவே, :குறைள'ா யூதனொருவனை நலீ'ர் யூதனொருவன் கொன்று விடுவானாயின், அப்பொழுது அந்தக் :குறைள'ா மனிதனுக் கீடாய்ச் சாதாரணமான மனிதக் கொலைக்குக் கொடுக்கப்படும் உதிரத் தொகையில் ஒருபாதியே கொடுப்பதுதான் வழக்கமா யிருந்துவந்தது ;

ஆனால், ஒரு நலீ'ரை ஒரு :குறைஷ்'ா கொன்றுவிடுவா ராயின், அந்தக் கொலைக்கீடாய் ப'னீ :குறைஷ்'ாக்கள் சாதாரணக் கொலைக்குக் கொடுக்கப் படும் உதிரத் தொகை முழுதையுமே கொடுக்கவேண்டியதா யிருந்தது. இத்தகைய ஏற்றத்தாழ்வை நபிகள் திலகம் தாங்கள் செய்துகொண்ட உடன்படிக்கையால் சமன்செய்து, சமரசப் படுத்திவைத்தார்கள். இன்னம், அந்த உடன்படிக்கையால் எல்லா யூதர்களின் ஆவிக்கும் பொருளுக்கும் மதக் கொள்கைக்கும் தக்க பாதுகாப்பளிக்கப் பட்டிருந்தது. மேலும், ப'னீ நலீ'ர்கள் மதீனாவைவிட்டுச் சென்றதன் பின்னால் ப'னீ :குறைஷ்'ாக்கள் புதியதோர் உடன்படிக்கையைச் செய்துகொடுத் திருந்தார்கள். அவற்றை யெல்லாம் அடியோடு மறந்து, அவர்கள் அதிக வெளிப்படையாகவே மிக்க நெருக்கடியான சமயத்திலே எதிரிகளோடு சேர்ந்துகொண்டு, முஸ்லிம் பெண்டு பிள்ளைகள் வசித்துவந்த கோட்டையையும் ஊருக்குள்ளிருந்த படியே தாக்கப் பார்த்தார்கள்; ":குறைஷ்'ாக்கள் :குறைஷிகளுக்கு உதவி புரிவதென்று ஏற்பாடாய் விட்டது," என்று நம் ஸர் வில்லியம் மூய்ர்கூட ஒத்துக் கொண்டுள்ளார். போதாக்குறைக்கு ஹுயை பி'ன் அக்'தபை'யும் தங்களுக்குத் துணையாகச் சேர்த்து வைத்துக்கொண்டு விட்டார்கள். தாங்கள் சுயமேதான் ஸஅ'தி'ப்'னு முஆ''தின் தீர்ப்புக்குக் கட்டுப்படுவதாக அவர்களே கோரிக் கொண்டார்கள். அந்த ஸஅ'தி'ன் ஸி'பாரிஷைக் கொண்டுதான் அதற்கு முன்னே ஔஸ்களுக்கும் :குறைஷ்'ாக்களுக்கும் இருந்துவந்த நட்புரிமையை யுத்தேசித்து நபிபெருமானிடம் நேச உடன் படிக்கை செய்துகொள்ளப் பட்டிருந்தது. அப் பெரியாரின் கைவயமே இப்பொழுது அவர்களைப்பற்றிய தீர்ப்பும் அன்னவர்களாலேயே ஒப்புக் கொடுக்கப்பட் டிருந்தமையால், ஏனையோரின் அபிப்பிராயம் இக்காலத்தில் எப்படியிருந்த போதினும், அந்த நியாயாதிபதி யானவர் ப'னீ :குறைஷ்'ாக் களின் குற்றத்தின் பருமனைக்கண்டு, அதற்குத் தக்கவாறான தேவ வேதக் கட்டளையையே தமது தீர்ப்பாகக் கூறிமுடித்தார். இன்னம், இந்த ஸஅ' தெ'ன்பார் தமது ரணத்தால் மரணத்தை நெருங்கிச் சென்றுகொண்டிருந் தார்; எனவே, அவர் ஆண்டவனுக் கஞ்சியே வெகு நீதமான நியாயத் தீர்ப்பை அதுகாலை அளித்திருத்தல் வேண்டும்.

அதனைக் கேட்டு, அந்தக் :குறைஷ்'ாக்களின் தலைவர்கள் ஒன்றும் குறைகூறினார்க ளில்லை. ஹுயை பி'ன் அக்'தபு'ம் நியாயமான தென்றே அதனை ஒத்துக்கொண்டான். என்னெனின், முஸ்லிம்களின் உயிர் தப்புவதே அரிதா யிருந்துவந்த அத்தகைய நெருக்கடியான அகழின் முற்றுகையின் காலத்தில் அந்த ப'னீ :குறைஷ்'ாக்கள் தங்கள் உடன் படிக்கையின்படி நபிபெருமானுக்கு உதவிபுரியாததோடு நின்றுவிடாது, அம் முஸ்லிம்களை அடியோடு நசுக்கி நசித்துவிடச் செய்யவேண்டு மென்றே ஒருமித்து வந்திருந்த எதிரிக் கோஷ்டியாருடனும் சேர்ந்துகொண்டு, முஸ்லிம்களை உள்ளிருந்தபடியே தாக்க முன்வந்து விட்டார்க ளென்னும்

விஷயம் அன்னவரின் மனத்தையே உள்ளுக்குள்ளே உறுத்திக்கொண் டிருந்தது. அவர்களுடைய சதிமோசம் பலித்து, முஸ்லிம்களும் தோல்வி யடைந்து, கன்னெஞ்சும் வன்பகையுங் குடிகொண்டு அம் முஸ்லிம்களின் மீது படை யெடுத்துவந்த அந்த அராபிக்கூட்டத்தினர் கையில் எம் ஏழை முஸ்லிம்கள் சிக்கியு மிருப்பார்களாயின், மிகச் சிறுபான்மையினரா யிருந்த அவ் வேழை மக்களின் அதோகதி யாதாயிருக்கு மென்பதை நீங்களே ஒரு சிறிதே ஓர்ந்து பார்த்துக்கொள்ளக் கடவீர்கள். ப்னீ :குறைள'ரக்கள் செய்த சதிமோசத்திற்குச் சரியான தண்டனையையே அவர்களுடைய நீதி பதியே அன்னவரின் தவ்ராத்தினின்றே கூறியிருந்தும், அது கொடுங் கொலை யாகுமென்று குறைகூறும் இக்கால யூதர்களும் கிறிஸ்தவர்களும் தங்கள் பைபிள் பழைய ஏற்பாட்டையே— தவ்ராத் வேதத்தையே— குற்றங் கூறியவ ராவார்கள். இதனால், அந்தத் தவ்ராத்திலுள்ள சட்டம் மிகவுங் கொடுமையான தென்றும், ஆதலின், அதனைக் காட்டினும் இரக்க முள்ள மற்றொரு சட்டம் பிறக்க வேண்டுமென்றும் தோன்றக்கூடிய ஓர் அத்தியாவசியத்தை அன்னவர் மறைமுகமாக ஒத்துக்கொண்டவ ராகவே ஆகின்றார். அந்தத் தவ்ராத்தின் மாகொடிய சட்டத்துடனே நமது இஸ் லாமிய தயாள சட்டத்தை ஒப்புநோக்குவார்க் கெல்லாம் இவ்வுண்மை நன்கு விளங்காமற் போகமாட்டாது.

பண்டைக் காலத்தில் ஒருவிதமான சந்தர்ப்பத்தின்கீழ் ஏதேனுமொரு காரியம் நிகழ்ந்திருக்குமாயின், அக்காரியம் நிகழ்தற் குரியனவாயிருந்த அக் காலக் காரணங்களை ஒருசிறிதும் ஒறுப்புடனே ஆராய்ந்து பாராது, இக்காலத்திலுள்ள ஒருவர், அதற்குத் தம் மனம்போன போக்கிலெல்லாம் தாறுமாறாகத் தீர்ப்புக்கூற முற்படுவதுதான் ஓர் ஆச்சரியகரமான அதிசயச் செய்கையாய்ப் புலப்படாநின்றது. அக் காலத்தி லிருந்துவந்த, யூதர் கிறிஸ்தவ இந்துக்களுட்பட ஏனை மதவாதிகளெல்லாம் எவ்வாறு தங் கரத்தில் சிக்கிய எதிரிகளை நடாத்தி வந்தார்க ளென்பதைப் பற்றி யாமொன்றும் ஈண்டு விரித்துரைக்க வேண்டுவதின்று. இன்னம், ஒரு கன்னத்திலறைந்தால் மறு கன்னத்தைத் திருப்பிக் காட்டென்னும் கவைக் குதவாத வாய்வேதாந்தத்தை மட்டும் சாகோபசாகையாக விஸ்தரித்துக் கொண்டிருக்கும் சிற்சில சாத்விக வாதிகள்* எம்பெருமானின் இச் செய்கையை முன்பின் யோசியாது கண்டிக்க முற்படுதல் கூடும். ஆனால், நம் நபிகள்பெருமான் (சல்) இவ்வுலக காரியங்களிலே தலையிடாது ஒருபுற மாய்க் கானகத்துள் ஒதுங்கிச் சென்று கங்கைக்கரையில் துறவறம் பூண்டொழுகிய ஒரு சுத்த சன்னியாசியாய் இருந்துவந்த தில்லை. அவர்கள்

* அத்தகைய கிறிஸ்தவர்களே இருபதாண்டுக்குள்ளே இருபெரும் உலக மகா யுத்தங் களை நடாத்தி, இக்குவலய மக்களனைவரையும் உண்ண உணவின்றியும், உடுக்க உடை யின்றியும், படுக்கப் பாயின்றியும் பஞ்சக் கோலத்திலே கொண்டுவந்து விட்டுவிட்டார்கள்,

இவ்வுலகுக்கும், இனி வரப்போகும் அவ்வுலகுக்கும் எல்லாருக்கும் நேர்வழி காட்டவந்த ஓர் இணையற்ற இல்லறத் துறவியாகவே இலங்கி வந்தார்கள். ஆதலின், அதுசமயம் அவர்களுடைய ஆட்சியின் கீழே இருந்துவந்த 3,000 ஏழைமக்களின் பொருளுக்கும் ஆவிக்கும் அவர்களே ஜவாப்தாரியா யிருந்து வந்தார்கள், அப்படிப்பட்ட அரசியலுக்கேற்ற முறையில், மிகவுங்கொடிய ராஜதுரோகக் குற்றம் இழைத்துவிட்ட அந்த ப'னீ :குறைள'ாக்களுக்கு, அக்கால அரசாங்கச் சட்டப்படியும், தவ்ராத் வேதக் கட்டளைப்படியுமே தான் அந்தத் தீர்ப்புக் கூறப்பட்ட தென்பதில் சிறிதும் சந்தேகமென்ப தில்லையே! அக்கால அரசாங்க ஒழுங்கு ஒருபக்கல் கிடக்கட்டும்; இக்கால அரசுநிலை நியதியின் முறைப்படியேனும் ஆழ்ந்து யோசிக்கப் புகுவோ மாயின், அப்பொழுதும் அந்த யூதர்களுக்கு ஸஅ'தி'ப்'னு முஆ''த் கூறிய தண்டனையைப் பார்க்கினும் மிக்க எளிய தண்டனையா அளிக்கப்படு மென்று நீங்கள் கருதி யிருக்கின்றீர்கள்? நியூரம்பர்க்கில் சமீபத்தில், வெற்றி பெற்றவர் தோல்வி யுற்றவர்களை விசாரித்துத் தண்டித்ததை நீங்கள் மறந்துவிடாதீர்கள்.

"குடிபுறங் காத்தோம்பிக் குற்றம் கடிதல்
வடுவன்று வேந்தன் தொழில்."— என்பது குறள்.

அந்த ஸஅ'தெ'ன்பார் கூறுது, நபிகள் திலகமே (சல்) அத்தகைய தீர்ப்பைக் கூறியிருப்பினும், அதையும் அந்த யூதர்கள் தங்களுடைய திரு வேதக் கட்டளை யென்றே சிரங்குனிந்து ஏற்றுக்கொண் டிருப்பார்கள். என்னெனின், தாங்கள் மட்டும் அந்த யுத்தத்தில் வெற்றிபெற் றிருப்பார்க ளாயின், தாங்களும் அவ்வாறுகத்தானே தங்கள் பகைவர்களான தோல்வி யுற்ற முஸ்லிம்களை நடாத்தி யிருப்பார்க ளென்பது அன்னவருக்கு மிக நன்ருகத் தெரியும். ஆதலின், அவர்களே கோரிக்கொண்ட அன்னவர் களின் நண்பராலே— தங்களுடைய இனத்துக்கே வேண்டிய சொந்த நண்பராலே— அளிக்கப்பட்ட தீர்ப்பை அந்த யூதர்கள் தேவனது ஆக்கினை யென மனமொப்பி ஏற்றுக்கொண்டு விட்டார்கள். இதற்காக இக்கால எதிர் மதவாதிகள் முதலைக் கண்ணீர் வடிப்பதன் காரணம்தான் இன்ன தென்று எமக்குப் புலப்படவில்லை. அந்தோ! அந்த யூதர்கள்மீது இந்த எதிர்மத வாதிகளுக்கு என்ன கரிசனம் உண்டா யிருக்கின்றது பாருங்களேன்!

அந்த ப'னீ :குறைள'ாக்களின் பெண்டுகளும் பிள்ளைகளும் யாதொரு விதமான குற்றமும் செய்யாததால், அவர்க ளனைவரும் அடியோடு மன்னிக்கப் பட்டார்கள்.* ஆனல், ஒரு யூதப் பெண் மட்டும் தன்

---

* "மீந்திருக்கும் மற்ற ஸ்திரீகள், சிறுர்கள் ஆகிய ஆயிரத்தைம்பது பேர்வழிகளையும் நசுது என்னும் தலத்தில் கொண்டுபோய்க் கிரயத்திற்கு விற்று, அந்தப் பணத்திற்குப்

கோட்டை மீதிருந்து ஒரு பாறைக் கல்லைத் தள்ளி, கித்’ராஷ் என்பவரைக் கொன்றிருந்தாள்; அவள்மட்டுமே கொலைக்குக் கொலையீடாக மற்றைய ஆண்களுடனே சேர்த்துக் கொல்லப்பட்டாள். இவளுடைய தீரத்தைப் பற்றி ஒரு விஷயம் கூறப்படுவதுண்டு: :குறைள’ா ஆண்களெல்லாரும் கொல்லப்படுதற்காக ஒவ்வொருவராய்ப் பெயர்கூறப்பட் டழைக்கப்பட்ட போது, அப்பெண் அதையெல்லாம் காதினால் மிக்க குளிர்ச்சியுடன் கேட்டுக் கொண்டே, ஆ’யிஷா (ரலி’) பிராட்டியுடன் அதிக சந்தோஷமாக வேறுபல விஷயங்களைக் குறித்து உல்லாசமாய்ச் சம்பாஷணம் புரிந்துகொண் டிருந்தாள். ஆனால், இவளுடைய பெயர் கூப்பிடப்பட்டவுடனே சட்டென் றெழுந்து, "நான் ஒரு குற்றம் செய்து விட்டேன்; அதற்குத் தண்டனை யளிக்கக் கூப்பிடுகிறார்கள்; போய் வருகிறேன்," என்று சொல்லியதன்பின் மிகவேகமாக ஓடித் தன் தலையை உருவிய உடைவாளின் கீழே வைத்துக் கொண்டாள். இதைக் குறித்து எப்பொழுதுமே ‘ஹ’ஜ்ரத்தெ ஆ’யிஷா அவர்கள் அதிக ஆச்சரியமாகவே பேசிக்கொண் டிருப்பார்கள். அதன் பின்பு ஏனையெல்லாப் பெண்களும் பிள்ளைகளும் முற்றும் விடுதலையடைந்து போயினார்கள். ஒரு சிலர் விடுதலைக் கிரயம் கொடுத்துவிட்டுச் சென்றார்கள்; மற்றும் பலர் தயாளமாகவே உரிமையளிக்கப் பெற்றார்கள். ஆனால், ஒருவரும் அடிமையாக வேறெவரிடத்தும் விற்கப்பட்ட தில்லை. இதுதான் சரித்திரம்.*

---

படைக் கலன்களையும், போர்க் குதிரைகளையும் வாங்கிக்கொண்டு வரும்படி ஏவினார்கள்" எம்பெருமானார் என்னுங் கருத்துப்படச் சீறாப்புராணத்தில் பாடப்பட் டிருப்பதற்குச் சரித்திர ஆதாரம் எங்குமே யில்லையென் றுணர்க.

* ஈங்கொரு வின்னியாச விஷயம் கவனிக்கற் பாலதாம்: ப’னீ :குறைள’ாக்கள் கொலையுண்ணப் பெறுமுன்னே தீ’னுலிஸ்லாத்தைத் தழுவுமாறு ஏவப்பட்டார்களாம்; அவ்வாறு வழிபட மறுத்துவிட்டமையால், வெட்டப்பட்டார்களாம். இது நபி பெருமானிட்ட கட்டளையாம்! இவ்வாறு சீறா என்கின்ற புராணத்தில் காணப்படுகிறது. இங்ஙனம் எதிர்மத யூதர்களும் கிறிஸ்தவர்களுங் கூடக் கூறத் துணிய வில்லை. என்னெனின், இவ்வாறு கூறச் சரித்திரத்திலே ஒன்றும் ஆதாரமில்லை.

> "நாட்டும் வேதம் நவிலும் முறைப்படி
> வேட்டி டார்களை வெட்டிப் படுகுழிப்
> போட்டி டும்மின் எனப்புகன் றார்எழில்
> காட்டும் மாமறைக் காரணத் தூதரே!"

"நிலையாக நிற்கச் செய்த (:குர்ஆன் என்னும்) அவ்வேதமானது கூறிய ஒழுங்குப் பிரகாரம் விரும்பாதவர்களை வெட்டி அந்தப் பெரிய கிடங்கில் போடுங்களென்று அழகைக் காட்டாநிற்கும் பெருமை பொருந்திய அந்தப் புறுக்கானுல் கரீமென்னும் வேதத்தினது காரணத்தைக் கொண்ட றசூலாகிய நாயகம்...முகம்மது முஸ்தபா (சல்அ’ம்) அவர்கள் சொன்னார்கள்," என்பது அக்கவியின் பொருள்.

அ’ப்ஸோஸ்! :குர்ஆன் மஜீத்’ எவ்விடத்தும் இஸ்லாத்தை ஏற்காததற்காக எவரையேனும் கொல்ல அனுமதியளித்திருக்க வில்லை. ஆனால், மதவிஷயத்தில் நிர்ப்பந்தம் செய்ய வேண்டா மென்றே ஆண்டவன் வெளிப்படையாய்க் கட்டளை யிட்டுள்ளான். நபிகள்

அதுபொழுது கிடைத்த யூதப்பெண்மணிகளில் றை'ஹாஞ வென்னும் கட்டழகி யொருத்தியும் காணப்பட்டதைக் கண்டு, நபிகஞதர் (சல்அ'ம்) அப் பெண்மணிமீது இரக்கங்கொண்டு, தங்களுடைய சொந்த இல்லத்துக்கனுப்பிப் பணிப்பெண்ணுக நியமித்துக் கொண்டார்கள். ஆஞல், சில அயல் மதவாதிகள் இதிலும் ஒருவகை இழிவையே கற்பிக்கின்ருர்கள்: நபிகள் திலகம் அப் பணிப்பெண்ணை விவாகம் புரியாது, வெறுமனே "வைப்பாக" (நஊ'துபி'ல்லாஹ்) வைத்துக்கொண் டிருந்தார்க ளென்று பொய்க்கதை யொன்றைச் சிருஷ்டித் திருக்கின்ருர்கள். இதற்கு இஸ்லாமிய மெய்ச் சரிதைகளில் ஒன் றுமே ஆதாரம் காணக்கிடைக்க வில்லை. நபிகள் பெருமான் பிறகு அந்த றை'ஹாஞவை நியாய முறைப்படியே மண முடித்துக் கொண்டார்க ளென்றே மெய்யான சரித்திரம் உறுத்திக்கூறு நின்றது. இந்த றை'ஹாஞவையும் சேர்த்துப் பார்த்தால், நபிகள் திலகம் மொத்தத்திலே பதின்மூன்று பிராட்டிமாரை மணமுடித்துக் கொண்டார்க ளென்று நாம் நன்கு தெரிந்து கொள்ளுகின்ருேம். நபிகள் பெருமாஞர் சட்டபூர்வமாய் எவரையும் பகிரங்க விவாகம் செய்துகொண்டார்க ளன்றி, எப்பொழுதுமே இந்த றை'ஹாஞவை யேனும், வேறெந்த மாரியா :கிப்'தியாவை யேனும் விவாகமில்லாது வெறுமையாய்த் தங்கள் அந்தப்புரத்துக்குள்ளே அழைத்து மனைவியின் ஸ்தானத்திலே அமர்த்திக்கொண் டிருந்த தில்லை. இதுதான் சத்தியமான சரித்திரச் சான்ருகும்; ஏனைய வெல்லாம் இட்டுக்கட்டேயாம்.

ஹிஜ்ரீ 5-ஆவது ஆண்டிலேதான் நபிகள் திலகத்துக்கு மற்ருெரு ஃஜனபு'டன் திருமணம் நிறைவேற்றப்பட்டது. இதைக் குறித்துத்தான் எத்துணை அலங்காரத்துடன் இழிவுசெய்து மிகைபடுத்திக் கூறமுடியுமோ, அத்துணை அலங்காரத்துடன் இழிவுரை செய்து ஒருசிலர் எழுதிவைத்திருக்கிருர்கள். ஃஜதி'ப்'னு ஹாரி:தா என்பவர் நபிகள் பெருமாஞல் ஆதியில் உரிமை யளிக்கப்பெற்ற (ப'னீ தாயீ வம்சத்த)வ ரென்பதை நீங்கள் நன்கு தெரிந்துகொண் டிருக்கிறீர்கள்.* அவரை நபிகள் திலகம் ஒரு குழந்தையே போல வளர்த்து வந்தார்கள். மேலும், பெருமாஞரின் அத்தையாகிய உமைமா பி'ன்த் அ'ப்'து'ல் முத்தலிப்' என்பவரது குமாரியாகிய ஃஜனப்' என்னும் சிறுமியையும் தங்கள் மேற்பார்வையின் கீழே வைத்து வளர்த்து

திலகமும் (சூல்) என்றும் எங்கும் எவரையும் இஸ்லாத்தை ஏற்குமாறும், இன்றேல் கொல்லப் படுவாரென்றும் கூறியது கிடையாதென் றுணர்க. "இஸ்லாத்தை ஏற்காதவர்களைக் கண்ட கண்ட இடத்திலே கண்டதுண்ட மாக்கிவிடுங்கள் !" என்பதே :குர்ஆனின் கட்டளையெனப் பொய்ப்பிரசாரம் புரிந்துவரும் எதிர் மதவாதிகளுங்கூட அந்த ப'னீ :குறைஎ'ர்க்கள் தீ'னுலிஸ்லாத்தை ஏற்குமாறு ஏவப்பெற்றூர்கள் என்றும், அவ்வாறு அவர்கள் ஏற்க மறுத்ததஞல்தான் வெட்டப்பட்டார்கள் என்றும் எழுதக்காணேம். "லா இக்ராஹ 'பித்தீ'னி" என்பதே இஸ்லாத்தில் பிரசாரத்திற்குரிய முக்கிய முதல் நிபந்தனையா யிருந்துவருகிறது. எனவே, நம்மெல்லாரையும் நாயனே நேரான பாதையிலே சீராக நடாத்தி வைப்பாஞக !

* முன் பக்கம் 146, அடிக்குறிப்பு.

வந்தார்கள். ஃஜைதை' நபிகள் பெருமானுர் அதிக பிரியத்துடனே வளர்த்து வந்த காரணத்திஞலும், இஸ்லாத்தில் ஜாதிவித்தியாசம் சிறிதும் பாராட்ட உரிமை யில்லையென்னும் காரணத்திஞலும் நபிகள்திலகம் (சல்) தாங்களே அதற்கு வேண்டிய எடுத்துக்காட்டை நடத்திக்காட்ட வேண்டுமென்னும் நன்னேக்குடன் தங்கள் வார்த்தைக்குக் கட்டுப்பட்டிருந்த ஃஜைனபை' அந்த ஃஜைது'க்கு மணமுடித்து வைக்க விழைவு கொண்டார்கள். இத் தகைய திருமணத்தை உமைமாவும் அவருடைய கணவரான ஜஹஷும் அங்கீகரித்தாலும், அங்கீகரிக்கா விட்டாலும், ஃஜைனபு'க்கும், அவருடைய சோதரரான அ'ப்'து'ல்லாவுக்கும் அவ் விவாகத்தில் சற்றும் பொருத்தமே யில்லை யென்பது திண்ணம்; ரஸூலுல்லாவின் அபிப்பிராயம் யாதா யிருப்பினும், தாமெஞரு :குறைஷ் குலத்தில் தோன்றிய உன்னத அந்தஸ்து வாய்ந்த அழகிய அப்ஸரஸா யிருக்கும்போது, ஓர் அடிமைக்கு எவ்வாறு வாழ்க்கைப் படுவதென்ற ஆணவத்தால்தான் ஃஜைனப்' பிரியங்கொள்ள வில்லை. ஆயினும், நபிகள் திலகத்தின் பலவந்தத்தின்மீது அப்பொருத்த மில்லாத தாலி இருத்திவைத்துக் கட்டப்பட்டது; அவ்வாறு அவ்விவாஹம் அந்த ஃஜைது'க்கே ஒருவாறு முடித்துவைக்கப் பட்டது; ஆயினும், அவர் களுக்குள்ளே ஒற்றுமை என்பது ஆதிமுதல் குதிரைக்கொம்பாகவே யிருந்து வந்தது. மணமுடிந்து ஓராண்டாகியும், அவர்களுக்குள் மனவேற்றுமை யென்பது நாளுக்குநாள் அதிகரித்துக்கொண்டு சென்றதே யன்றி, ஒரு சிறிதும் ஒற்றுமைக்கு வழிகாணப்படவே யில்லை. நாளுக்குநாள் தங்க ளுக்குள் அபிப்பிராயபேதம் அதிகரித்துக்கொண்டே போவதை ஃஜைதெ'ன் பார் கண்டு, நபிகள் பெருமானிடம் வந்து, ஃஜைனப்' ஆணவங்கொண்ட வாய்ப்பட்டியா யிருப்பதால், தம்மாலொன்றும் இனிச் சமாளிக்கமுடியா தென்றும், ஆதலின், தம் மனைவிக்கு விவாக விமோசனம் கொடுத்து விடுவதே சாலச்சிறந்த தென்றும் 'பர்யாத்' செய்துகொண்டார்.

ஆனல், நபிகள்திலகம் (சல்) பலமுறையும் சமரசம் செய்துவைத்துப் பார்த்தார்கள். ஆயினும், அவர்களுக்கிடையில் ஒற்றுமையென்பது ஒரு சிறிதும் உற்பத்தியாகவே யில்லை. ஆண்டவன்மீதுள்ள அச்சத்தை அஸ்தி பாரமாகக் கொண்டும் அம் மனைவியை அரவணைத்துப் பிரியத்துடன் பரிபாலித்து வருமாறு நபிகள் பெருமான் நவின்றருளிக் கொண்டிருந் தார்கள் (33 : 37). ஆனலும், இறுதியாக ஃஜைத்' ஃஜைனபு'க்குத் :தலா:க் கொடுத்தே முடித்துவிட்டார். நபிகள் பெம்மானே அவ் விவாகத்தை முன்னின்று முடித்து வைத்திருந்தும், அஃதிவ்வாறு முறிக்கப்பட்டுப் போனதைக் குறித்துப் பெரிதும் வருந்திஞர்கள். இஸ்லாத்தில் ஆண்டா னும் அடிமையும் ஒன்றே யென்னும் சமரச நியதியைக் கற்பிப்பான் வேண்டியே அந்த விவாஹத்தை அவ்வாறு முடித்து வைத்தார்கள். ஆனல், அத்தகைய திருமணம் இடையில் முறிந்துவிடுவ தென்றால், அதனைக் கண்டு முஞ'பி(க்):கீன் க ளெல்லாரும் ஏளனம் செய்வார்க ளென்னும் சந்தேகமும்

ஜனித்து விட்டது. அதன்பின்பு அந்த ஃ'ஜனபை' வேறெவருக் கேனும் மறுமணமுடித்து வைத்துவிடலா மென்று அவருடைய தந்தையான ஜஹஷ் எத்துணைமட்டும் பிரயத்தனப்பட்டும், ஒருவரும் ஓர் அடிமையால் :தலா:க் சொல்லப்பட்ட மனைவியை மறுமண முடித்துக்கொள்ள விரும்பினாரில்லை. இதனாலும் நபிகள் பெருமானுக்கு (சல்) அளவற்ற மனவேதனை உண்டாய்விட்டது.

இறுதியில், ஒரு :தலா:க் சொல்லப்பட்ட நங்கையை, அவளோர் அடிமையின் மனைவியா யிருந்திருப்பினும், மறுமண முடித்துக்கொள்வதில் எவரும் கிஞ்சித்தும் லஜ்ஜைகொள்ள வேண்டிய ஆவசியகமில்லை யென்னும் உண்மையை உலகினர்க் கெல்லாம் உதஹரித்துக் காட்டுவான்வேண்டி நபிகள் பெருமானே (சல்) அந் நாரிமணியை மனமுவந்து மண முடித்துக் கொள்ள விழைவுகொண்டு விட்டார்கள்.* ஆனால், தாங்களே வளர்த்த பெண்ணைத் தாங்களே வளர்த்த பையனுக்கு விவாகம்செய்து கொடுத்து விட்டுப் பின்னர்த் தாங்களே அப்பெண்ணை மறுமணமும் முடித்துக் கொள்வதென்பது அந்த அரப் நாட்டில் ஓர் அவமானமான காரியமாகவே அதற்குமுன்னே கருதப்பட்டு வந்தது. ஆதலின், இந்நூதன விஷயத்தைக் கேள்வியுற்றவுடன் மதீனாவி லிருந்துவந்த முனா'பி(க்):கீன்க ளெல்லாரும் மிகவு மிழிவாக ஏளனம் புரியத் தலைப்பட்டார்கள். இக் காலத்திலும் விஷயத்தின் உண்மையை விளங்கிக்கொள்ளாத, இல்லை, விளங்கிக்கொள்ள மனமில்லாத வேறுசிலரும் அவ்வாறே இழிமொழி கூறுதல் கூடும். ஆனால், இஸ்லாத்தில் ஸ்வீகாரம் எடுத்துக்கொள்வதென்பதே இல்லை யென்பதை நீங்கள் நன்றாக ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுதல் வேண்டும்; எனவேதான், இம்மார்க்கத்தில் ஸ்வீகாரப் பிள்ளைகளுக்கு வாரிஸ்கிரம பாத்யதையும் இல்லை யென்னும் சட்டம் ஏற்படுத்தப்பட் டிருக்கிறது. ஆதலின், இம் மார்க்க வைதிக லௌகிக சட்டப்படி, ஒருவர் ஒரு பெண்ணையேனும் ஆணையேனும் தமதில்லத்தில் வைத்து வளர்த்து வருவதனால், அக் குழந்தை அன்னவருக்குக் குமாரியாகவேனும், குமாரனாகவேனும் ஆய்விடுதல் கிடையாது. இஸ்லா மார்க்கத்தில் சொந்தக் குழந்தைகளல்லாத ஏனையோரெல்லாம் இஸ்லாமிய சகோதர சகோதரி பாவத்திலேயே யிருந்துவருகிறார்கள்— (:குர்ஆன், 33 : 5). ஆகவே, தமதில்லத்தில் வளர்ந்துவந்த ஒரு குழந்தை தம்முடைய சொந்தக் குழந்தையாகவே மாறிவிடுகிறதென்று கூறும் ஒருசில வாய்வேதாந்திகளின் அபிப்பிராயத்தைக் கண்டு நம் முஸ்லிம்கள் நாணமுறுதற்கு யாதொரு காரணமும் புலப்பட வில்லை. :குர்ஆன் ஷரீ'பில் வளர்ப்புக் குழந்தைகள் சொந்தக் குழந்தைகளாக மாறிவிடமாட்

* அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்) ஆதியில் தங்களினும் 15 பிராயம் மூத்திருந்த ஒரு விதவைப் பேரிளம்பெண்ணை மணமுடித்துக் கொண்டார்கள் ; இப்பொழுதோ, ஓரடிமையால் விவாக விமோசனம் செய்யப்பட்ட "வாழாவெட்டிப்" பெண்ணை விழைவுடனே மறுமண முடித்துக்கொள்கிறார்கள். என்னே இஸ்லாத்தில் பெண்களின் அந்தஸ்துயர்வு !

டார்களென்னும் விஷயம் மிக்க வெளிப்படையாய்க் கூறப்பட்டிருக்கின்றது. மேலும், மு‘ஹம்மத்’ நபி (சல்) அவர்கள் உங்களுள்ளே எவருக்கும் தந்தையரல்ல வென்னும் விஷயமும் அவ்வழகிய திரு மறையிலேயே அறையப்பட் டிருக்கின்றது (33 : 40).* இன்னம், தம் வீட்டில் வளர்ந்த குழந்தைகளைத் தங்குழந்தைகளென்றே பாவித்துவந்த பண்டைப்போலி வழக்கமும் ஒழிக்கப்பட வேண்டியதா யிருந்தது. ஆதலினால்தான், இதை யெல்லாங் குறித்து ஆண்டவன் தன் தழகிய திருமறையில் (33 : 37) விவரமாகக் கூறியுள்ளான்: “இன்னம், எவர்மீது அல்லா(ஹ்) அருட்கொடை சொரிந்தும், எவர்மீது நீரும் அருட்கொடை சொரிந்தும் வைத்தீர்களோ, அவருக்கு நீர் (இவ்வாறு) கூறிய பொழுது, (நிகழ்ந்ததை நினைவுகூர்க): ‘உம்முடைய மனைவியை உம்மிடத்தே நிறுத்தி (வைத்து)க் கொள்க; அல்லா(ஹ்)வின்பால் (உமது கடமையில் சர்வ) ஜாக்ரதையாய் இருந்துங் கொள்க;’ இன்னம், அல்லா(ஹ்) வெளியில் கொண்டுவரக்கூடிய அதை நீர் உமதுள்ளத்திலே ஒளித்துவைத்தீர்; மேலும், மனிதர்களை அஞ்சினீர்; இன்னம், நீர் அ(வ்வாண்ட)வனையே அஞ்சிக்கொள்ள வேண்டுமென்று அல்லா(ஹ்) (உம்மீது) அதிக உரிமைபெற்றவனா யிருந்தான். ஆனால், ஸ‘ஜத்’ அவள்பாலிருந்து தனது தேவையை (அறுத்து)த் தீர்த்துக் கொண்ட பொழுது, அவர்கள்— (ஸ்வீகார புத்திரர்கள்) அன்னவர்கள்— (அவர்களுடைய மனைவிமார்) பாலிருந்து தங்கள் தேவையை (அறுத்து)த் தீர்த்துங் கொள்ளுங்கால், மூமினனவர்கள்மீது தங்கள் ஸ்வீகாரப் புத்திரர்களின் மனைவிமார்— (அன்னவர்களை மணக்கும்) விஷயத்தில் கஷ்டமொன் றில்லாதிருப்பான் வேண்டி, நாம் அவளை நுமக்கு மனைவியாக்கி வைத்தோம்; மேலும், அல்லா(ஹ்)வின் கட்டளை நிறைவேறி முடிக்கப்படத் தக்கதா யிருக்கிறது.”

எனவேதான், ஸ‘ஜதி’ன் மனைவியா யிருந்த, தங்கள் சொந்த அத்தையின் குமாரியை நபிகள் பெருமான் (சல்) மறுமணமாகத் திருமண முடித்துக் கொண்டார்கள்.

ஆனால், இச்சாதாரண சம்பவத்தைச் சில அயல் மதவாதிகள், கண், காது, மூக்கெல்லாம் வைத்து ஒரு மா பெரிய அபாண்டமாக மிகைபடப் பெருக்கிப் புளுகத் தலைப்பட்டு விட்டார்கள். ஒரு பண்டை மௌட்டியப் பழக்கத்தை ஒழித்துப் புதியதொரு சீர்திருத்தத்தைப் புகுத்துவ தென்றால், அதற்கு எண்ணிலடங்கா இடையூறுகளும் ஏளனங்களும் ஏற்படுவது இவ் வுலகின்கண் இயற்கையேதான். தாங்கள் வளர்த்த மகனுடைய மனைவியை நபிகள் திலகம் மறுமணம் முடித்துக் கொண்டார்களென்று முனா‘பி(க்):கின்கள் கைகொட்டிப் பரிகாசம் பண்ணியது ஒருபக்கல் கிடக்க;

* இதுகாலை இக் குவலயத்தி லுள்ள 60 கோடி முஸ்லிம்களும் அப் பெருமானாரின் ஞானக்குழந்தைகளே யன்றி, எவரும் அவருடைய சொந்தக் குழந்தையாகார்.

எதிர் மதவாதிகள் இக்கல்யாண சம்பவத்தையே முற்றும் மாற்றிக் கூறுகின்றார்கள்: ஒரு நாள் நபிகள் திலகம் ஸ'ஜதி'ன் வீடுதிக்குச் சென்றார்களாம்; ஆங்குச் சென்று தெருக் கதவைத் திறந்தவுடனே உள்ளேயிருந்த ஸ'ஜனபைத் துணிகுலைய மணிகுலைய இருந்த ஒரு விகாரநிலையிலே கண்டு விட்டார்களாம். அக்கணமே அந்நங்கைமீது நபிகள் நாயகத்திற்கு நாட்டம் சென்று விட்டதாம் (நஊ''து பி'ல்லாஹ்!). அதன்பின்பு ஸ'ஜது'க்கு அவ்வுண்மை தெரிந்து, தம்முடைய ஞான பிதாவின்பால் வைத்திருந்த பேரன்பின் மிகுதியால் தம் மனைவிக்குத் தலா:க் கொடுத்து விட்டாராம். பிறகு நபிகள் பெருமான் அளவற்ற ஆடம்பரத்துடனே அம்மருகியைத் திருமணமுடித்துக் கொண்டார்களாம். இப் பொய்க்கதைக்கு எத்தனையோ விதம்விதமான புளுகு வர்ணங்களை யெல்லாம் மேற்பூச்சுப் பூசி, நபிகள் திலகத்தை (சல்) இச்சந்தர்ப்பத்தில் எத்துணைக் கேவலமாக இழிவுபடுத்த இயலுமோ, அத்துணைக் கேவலமான முறைகளா லெல்லாம் எதிர்மதவாதிகள் இழிவுசெய்து எழுதுகிறார்கள். ஆனால், அவ் வெதிர்மதவாதிகள் இவ்வாறு இழிவுறத் தீட்டுவதற்கு எம் முஸ்லிம் கிரந்தங்களில் ஒருசிறிது ஆதாரமும் காணப்படாம லில்லை. 'தப்'ரீ என்னும் கிரந்தத்தில் மேற்கூறியவாறு பொய்க் கதையொன்று சிருஷ்டிக்கப்பட் டிருக்கின்றது. அக்கதைக்குரிய மூலகர்த்தா வா(க்):கிதீ' என்னும் பெயர்போன புளுகு மணியா யிருக்கின்றா ரென்றும், அ'ப்'ப'ாஸீ க'லீ'பாக்களின் சிற்சில விஷமங்களுக்கு ஆதாரமா யிருக்கும் பொருட்டே அந்த வா(க்):கிதீ' யென்னும் பௌராணிகப் புளுகர் அவ்வாறு பொய்ம் மூட்டையை அவிழ்த்து விட்டிருக்கின்றா ரென்றும் அல்லாமா ஷிப்'லீ யவர்கள் தாங்க ளெழுதிய "ஸீரத்தில்" வரைந்திருக்கிறார்கள்.

'த'ப்ஸீர் இப்'னு க:தீர் போன்ற உண்மையான கிரந்தங்களிலும் இத்தகைய கதையானது நன்கு கண்டிக்கப்பட் டிருக்கின்றது. 'ஹதீ':து கிரந்தங்களில் கீர்த்திவாய்ந்திருந்த பெரும் பெரும் மு'ஹத்'தி':தீன்களெல்லாமும் இந்தப் புளுகு மணி மூட்டையை ஒருசிறிதும் ஒத்துக் கொள்ள வில்லை. இப்'னு ஹஜர்(ர'ஹ்) போன்ற பெரியார்களும் இக்கட்டுக் கதையை அதிகம் கண்டித்திருக்கின்றார்கள். இதே ஆண்டில்தான் மதீனாவிலிருந்துவந்த முனா'பி(க்):கீன்களெல்லாம் பீ'பீ' ஆ'யிஷா (ரலி') அவர்கள் மீதும் ஓர் அடாத பழிமொழியைச் சுமத்தத் தலைப்பட்டார்கள். எனவே, இந்த ஸ'ஜனபி'ன் விவாகத்தைக் குறித்தும் அவர்கள் பழிதூற்றத் தலைப்பட்டதில் ஒன்றும் ஆச்சரிய மில்லை. முனா'பி(க்):கீன்களின் விஷமத்தனத்தால் ஒவ்வொரு சிறு பிள்ளையின் வாயிலும் 'ஹ'ஜ்ரத் ஆ'யிஷாவின் விஷயமும், 'ஹ'ஜ்ரத் ஸ'ஜனபி'ன் விஷயமுமே அதுசமயம் அம் மதீனாவின்கண் இருந்து வந்தன. இவ்வாறெல்லாம் நல்லோர்களும் பெரியோர்களும் இத் தரணியின்கண் பொல்லாத விஷமிகளின் ஊத்தைவாயுள்ளே புகுந்துதான் வெளிவரவேண்டிய திருக்கின்றதுபோலும்.

இதே காலத்தில்தான் நபி பெருமானது குமாரியான ஸைனபின் கணவராகிய அபுல் ஆஸும் இஸ்லாத்தைத் தழுவிக்கொண்டார். ஹிஜ்ரீ 5-இல்தான் ஸ்திரீகள் சம்பந்தமான ஒழுக்க வழக்கங்களுக்குரிய சட்ட திட்டங்களெல்லாம் வெளியாக்கப் பட்டன. இதற்கு முன்வரை முஸ்லிம் பெண்க ளெல்லாரும் அவ்வரப் தேசப் புராதன வழக்கப்படியே அறியாமையுள் ஆழ்ந்து கிடந்தார்கள். ஆனால், இவ்வருஷ முதல் பெரிய விடத்துப் பெண்கள் வெளியில் செல்ல நேர்ந்தால், ஒரு துப்பட்டியைக் கொண்டு தங்கள் சரீரத்தைப் போர்த்துக்கொண்டு வெளியில் செல்லலாமென்னும் சட்டம் நிறுவப்பட்டது. அகங்காரத்துடன் பாதத்தைத் தரையிலடித்து நடக்கக்கூடா தென்னும் சட்டமும் முஸ்லிம் பெண்களுக்கென்று ஏற்படுத்தப் பட்டது. நாரிமணிகள் அதற்குமுன் னிருந்ததேபோல் எல்லா ஆடவருடனும் பகிரங்கத்தில் கலந்துகொள்ளாது, திரை மறைவிலிருந்து பேசுவதே நியாயமென்றும் ஒரு சட்டம் நிர்மாணிக்கப் பட்டது. நபிகள் நாயகத்தின் மனைவியர் அன்னியர் முன் நேரே வரக்கூடா தென்னும் வரையறையும் ஏற்படுத்தப்பட்டது. இன்னமும், வியபிசாரக் குற்றத்திற்குத் தவ்ராத்திலிருப்பதேபோ லில்லாது, 100 அடி கசையால் கொடுத்தலென்னும் தண்டனையும் இவ் வருடத்திலேதான் ஏற்படுத்தப் பட்டது. ஸ்வீகார மக்கள் சொந்தமக்க ளல்லராதலின், அன்னவர் மனைவியை அப்பெரியார் மறுமண முடித்துக் கொள்வது சட்டவிரோத மாகாதென்னும் நியதியும் நிலைநிறுத்தப் பட்டது. பெரிய மனிதர் வீட்டுப் பெண்கள்மீது படர்மொழி கூறுவது கூடாதென்னும் சட்டமும் நிறுவப் பட்டது. பொதுவாகப் பெண்கள்மீது வீண்பழி (ஊரலர்) கூறுவது சட்ட விரோதமாக்கப் பட்டது. கணவனும் மனைவியும் ஒருவர்மீதொருவர் கற்பின் சார்பான அவதூறுகளைப் பரஸ்பரம் பகர்ந்துகொள்வார்க ளாயின், :கா'ஜீ யென்பார் அவ்விருவருக் கிடையிலுள்ள விவாகத்தை ரத்துசெய்துவிடலா மென்னும் சட்டமும் ஏற்படுத்தப் பட்டது. தண்ணீரில்லா விடத்து வுலூ'வுக்குப் பதிலாகத் தயம்மும்— (மிருத்யு அர்த்த ஸ்னனம்) செய்துகொள்ளலா மென்னும் அனுமதியும் இவ்வருடத்திலேதான் அளிக்கப்பட்டது.

# அதிகாரம் — 29

## நபிபெருமானின் தயாளசித்தம்

*"எல்லா ஜாதியார்களுக்கும் ஒரு கருணையங் லாகவேயன்றி, வேறெதுவாகவும் உம்மை நாம் அனுப்பி வைக்க வில்லை."* — (21 : 107)

முன்னர்க் கூறியுள்ள அ'ஹ்'ஜாப்' யுத்தத்தின்போழ்து அந்த மூவாயிரம் ஏழை முஸ்லிம்களைக் காட்டினும் எண்மடங் கதிகமாய்த் திரண்டுருண்டு வந்த அரப் தேசத்தின் பணக்கார, ஏழைப் படைகளெல்லாம் இறுதியில் ஓரேஇரவில் ஆடிக்காற்றிற் பறக்கும் ஆலஞ்சருகே போல அழிந்து மறைந்துவிட நேர்ந்ததிலிருந்து தீ'னுல் இஸ்லா மென்னும் இச்சத்திய சன்மார்க்கம் அந்த ஆண்டவனொருவனது கிருபா கடாக்ஷத்தைக் கொண்டே நன்கு பாதுகாக்கப்பட்டு வந்ததென்பதை நாம் மிகச் செவ்விதாய்த் தெரிந்து கொள்ளுகிறோம். மக்கத்துக் :குறைஷிகள் ப'த்'ர் யுத்தத்திலும், உ'ஹுத்' யுத்தத்திலும் தங்களா லியன்றமட்டும் முயன்று பார்த்தார்கள்; ஆனால், அவர்களா லொன்றும் அவ் விஸ்லாத்தை அசைக்க முடியாது போய் விட்டமையான், மற்றெல்லா அராபிக் கூட்டத்தார்களையும் ஒருமிக்கச் சேர்த்துக்கொண்டு இவ்வமயம் இந்த அகழ்ச்சண்டைக் கென்று ஆறுநாலாயிரமாக அதிகந் திரண்டு வந்தார்கள். ஆயினும், அப்பெருங் கூட்டத்தினராலும் அவ்விஸ்லாத்தின் ஆணிவேரானது அணுத்துணையும் ஆட்டங் கொண்டு விடவில்லை. :குறைஷிகளும், ப'த'வீகளும் ஒருமிக்கத் திரண்டுவந்து மதீனாவிற்குரிய வெளிவாயிலில் நின்று, அந் நகரத்தைத் தாக்கத் துணிந்தார்கள். அதே அமயத்தில் அந் நகரத்திற்குள் ளிருந்து வந்த முனா'பி(க்):கீன்களும் யூதர்களும் நயவஞ்சகமாகவும் நம்பிக்கைத் துரோகமாகவும் முழுமோசஞ் செய்யத் தலைப்பட்டு விட்டார்கள். எனவே, இவ்வாறான அகப்பகையும் புறப்பகையும் ஏகோபித்தும், ஒன்றுஞ் செய்யமுடியாது போய்விட்டமையான், இனி அம் முஸ்லிம்களை எதிர்க்கத் துணிபவர் எவருமில்லை யென்றே துணிந்து கூறக்கூடிய அத்தகைய வன்மைபொருந்திய மேன்மை யனைத்தையும் ஆண்டவ னருளால் நபிகள் திலகம் (சல்அ'ம்) நன்குபெற்று வீற்றிருக்க லாயினார்கள்.

இவ்வாறு இறைவனருளால் அற்புதமாகத் தற்காத்து வைக்கப்பட்டு இஸ்லாத்தைத் தாக்குவதற்கு இனிமேல் ஒருவரும் பகிரங்கமாய்த் துணியு மாட்டா ரென்பது திண்ணம்; இதுதான் சரித்திர முணர்ந்த உண்மை

யாயும் இருந்து வருகின்றது. எனினும், இஸ்லாமார்க்கம் வாளாயுதத்தின் துணைக்கொண்டேதான் இவ்வுலகி லெங்கும் பரத்தப்பட்ட தென்னும் புலம்பலைமட்டும் ஒருசில எதிர்மதவாதிகள் இன்றும் ஓலமிட்டு நீலாம்புரி ராகம் பாடாது வாளா இருக்கத் துணிவ தில்லை. ஆனால், இஸ்லாத்தின் உண்மைச் சரித்திர நுணுக்கத்தை ஆழ ஆராய்ந்தவர் எவரும் இவ்வாறான குருட்டுப் பல்லவியை இடைவிடாது பாடிக்கொண் டிருக்கச் சம்மதியா ரென்பது திண்ணமே யாம். பட்டப்பகலில் குட்டிச்சுவரில் முட்டிக் கொள்ளும் "வெள்ளெழுத்துக் கண்ணுடையாரே" இம் மார்க்கம் வாட் படையின் துணைக்கொண்டே இத்தரணியின்கண் பரத்தப்பட்ட தென்று உளறிக்கொண்டு கிடப்பர். ஆனால், உண்மையை ஓர்ந்து பார்க்குமளவில், வாளாயுதத்தின் துணையைக்கொண் டல்லாமல், அவ் வாட்படையின் வீச்சுக்கு எதிர்த்துநின்றே இஸ்லாமார்க்கம் தன்னை இவ் வவனியின்கண் பரவச்செய்துகொண்ட தென்பதைத்தான் கண்ணுடைய புண்ணியசீலர் கண்டுதெளிவர். இவ்வாறு வாட்களின் வீச்சுக்களுக்கு எதிர்த்துநின்று இவ்வுலகின்கண் வேறெந்த மதமும் இஸ்லாமார்க்கத்தைப் போன்றே வெற்றி முரசுடன் வாகைமாலைசூடி வெளிவந்ததில்லை யென்பது சரித்திரம் கண்ட சான்றாகும். என்னெனின், இதன் நாலா பக்கங்களி லிருந்தும் வாளாயுதங்களே இடைவிடாது வீசப்பட்டு வந்தன; ஆனால், அவ்வீச்சுக்க ளெல்லாம் இம் மார்க்கத்தைத் தடைபடுத்துவதற்கு மாறாய், மேன்மேலும் மிகச்செவ்விதாய்ப் பரவச்செய்யவே உதவியாயிருந்தன வென்று நாம் செவ்வனே கண்டு தெளிகின்றோம்.

ஹிஜ்ரீ 2-ஆவது ஆண்டிலிருந்து 5-ஆவது ஆண்டுக்குள் மூன்றுமுறை மக்காவின் சேனைகள் மதீனாவின்மீது படையெடுத்து வந்தன; முதற் படையைக் காட்டினும் இரண்டாவது படை பெரிதாகவும், இரண்டாவது படையைக் காட்டினும் மூன்றாவது படை மிகப் பெரிதாகவும் திரண்டுருண்டு வந்தன. ஆனால், முஸ்லிம்கள் மட்டும் 300-இலிருந்து 3000 ஆகப் பெருகுவ தற்குள் எதிரிகளின் சைன்யம் 1000-த்திலிருந்து 24,000 ஆக மல்கிவிட்டன. ஆயினும், அவற்றின் முடிபுகள் யாதாயின? அதனாலெல்லாம் இஸ்லாத்தின் ஆத்மசக்தி எள்ளத்துணையும் குன்றிவிட்டதென்றா எண்ணுகின்றீர்கள்? அடிக்க அடிக்க எழும்பும் "ரப்பர்" பந்தேபோல், ப'த்'ர் யுத்தகளத்தில், சுமார் 300 ஆகக் காணப்பட்ட முஸ்லிம்கள் உ'ஹுதி'ன் போழ்து 700 ஆகவும், அ'ஹ்'ஜாபி'ன் போழ்து 3000 ஆகவும் பெருகி விட்டார்கள். எனவே, எதிரிகளின் தாக்குதல் வலுக்க வலுக்க, இஸ்லாத்தின் பெருமை யும் உயர்ந்துகொண்டே வந்ததென்பதை மிகச் செவ்விதாய் நாம் அறிந்து கொள்ளுகிறோம். எத்துணைக் கெத்துணை அவ்வெதிரிகள் எல்லாரும் ஒன்றுதிரண்டு வந்தார்களோ, அத்துணைக்கத்துணை இஸ்லாத்தின் இயக்க மும் வலுவடைந்துகொண்டே வந்ததென்னலாம். இவற்றினை யெல்லாம் கூர்ந்து நோக்குங்கால், இஸ்லாத்தின் அபிவிருத்தியில் இறைவனே அதிகம்

அக்கரை காட்டி வந்தா னென்பது மிக்க வெளிப்படையாய்ப் புலப்படா நின்றது.

ஆயினும், மதீனாவைச் சூழ்ந்துள்ள சில்லறைக் குடிகள் செய்துவந்த சிறுசிறு குறும்புத்தனத்தை யெல்லாம் ஒருவாறு கண்டிக்க வேண்டியதும் மதீனாவி லிருந்துவந்த அக்குடியரசின் கடமையாகவே காணப்பட்டுவந்தது. ஆதலால், ஆங்காங்குள்ள குறும்பர்களை யெல்லாம் அடக்கிவரும் பொருட்டு அப்பொழுதைக் கப்பொழுது சிற்சில முஸ்லிம் வீரர்கள் அனுப்பப்பட்டே வந்தார்கள்; ஆனால், அந்தக் காட்டுப்பூச்சிகள் முஸ்லிம்களின் படைகளைக் கண்டவுடனே ஓட்டம் பிடித்து விடுவார்கள். இவ்வாறுதான் ப'னூ லஹ்‘ஹ்யான் கூட்டத்தினரும் நடந்துகொண்டார்கள்: முஸ்லிம்களிலிருந்து ஒரு சிலரைத் தங்களுக்கு மதபோதம் புரியும் பொருட்டு அனுப்பிவைக்க வேண்டுமென்று நபிகள் பெருமானிடம் விஞ்ஞாபனம் செய்துகொண்டு, நயவஞ்சகமாக ஒரு பதின்மரை அழைத்துச்சென்று, எண்மரைக் கொன்று, இருவரை மக்கா வாசிகளிடம் விற்றுவிட்ட ப'னூ ல‘ஹ்யானின் குற்றமானது இன்றுகாறும் தண்டிக்கப்படாமலே யிருந்துவந்தது. அதற்குரிய காலம் இதுவென்றே கண்டு, நபிகள்திலகம் (சல்) ஹிஜ்ரீ 6-ஆவது ஆண்டு, ஜமாது'ல் அவ்வல் மாதம் சில முஸ்லிம்களை யழைத்துக்கொண்டு, அந்த ப'னூ ல‘ஹ்யான் கூட்டத்தினர் இருக்குமிடத்தை நோக்கிப் புறப்பட்டார்கள். ஆனால், அதுகேட்டு, அக்குறும்பர்கள் எல்லாரும் தங்கள் வாசஸ்தலங்களைத் துறந்து, சுற்றுப்புறங்களி லுள்ள மலைக்குகைகளுக்குள் சென்று ஒளிந்து கொண்டார்கள். ஆதலின், கோரிச்சென்ற காரியம் நிறைவேறாது நபிகள்பெருமான்(சல்) வாளா மதீனத்திற்குத் திரும்பிவந்து விட்டார்கள்.

இது நிகழ்ந்து சில தினங்களுக்குள் கைல், :கத்‘பான் என்னும் நாடோடிக் கூட்டத்தாரின் ஒரு சாகையாகிய ப'னூ ‘பிஜாரா வென்னும் வர்க்கத்தின் தலைவனொருவன் மதீனாவின் சுற்றுப்புறங்களில் மேய்ந்து கொண்டிருந்த பெருந்திரளான ஒட்டகக் கூட்டத்தின்மீது தாவி வீழ்ந்து, அவற்றினை மேய்த்துக் கொண்டிருந்த முஸ்லிமைக் கொன்றுவிட்டு, அவருடைய மனைவியையும் தூக்கிக்கொண்டு ஓடிவிட்டான். அதுகேட்டு, முஸ்லிம்கள் உடனே அக்கள்வனைத் துரத்திச் சென்றார்கள்; அவன் கொள்ளையிட்டுச் சென்ற ஒட்டகங்களுள் ஒரு சிலவற்றையும் கைப்பற்றிக் கொண்டார்கள். ஆனால், அந்த ப'த'வீகள் மிகுதி ஒட்டகங்களை யெல்லாம் ஓட்டிக்கொண்டு, பாலைவனத்துள் சென்று மறைந்துவிட்டார்கள்.

இப்படிப்பட்ட சந்தர்ப்பத்திலேதான் நபிகள்நாயகம் (சல்) அவர்களால், ஸீனாய் மலைக்கருகிலுள்ள ஸெயிண்ட் காதரைன் மடாலயத்தில் வசித்துவந்த கிறிஸ்தவ சன்னியாசிகளுக்கும், அவர்கள் மூலமாய் மற்றெல்லாக் கிறிஸ்தவர்களுக்கும் ஓர் உரிமைப் பத்திரம் எழுதியளிக்கப்பட்ட தென்னலாம். அதனைப் போன்ற அத்துணை மத தாராளம் கொண்டுள்ள மற்றொரு

பத்திரத்தை இக்குவலயத்தின்கண் எவராலும் கண்டுகொள்வது முடியாது. இன்றளவும் முஸ்லிம் சரித்திராசிரியர்களால் பத்திரமாகப் பாதுகாக்கப் பட்டுவரும் இந்தப் பத்திரத்தில் காணப்படும் விஷயங்களைக் கொண்டு நபிகள் திலகத்தின் மத தாராளச் சித்தம் இத்தன்மைத்தாய தென்பதை முற்றும் நீங்கள் நன்குணர்ந்து கொள்ளக் கடவீர்கள். அவ்வுரிமைச் சாஸனம் இவ்வாறு வரையப்பட் டிருக்கிறது :—

"அருளாளனும் அன்புடையோனுமாகிய அல்லா(ஹ்)வின் திருநாமத்தால்; அல்லா(ஹ்)வின் திருத்தூதர் மு'ஹம்மத்' நபியால் ஸீனாய் மலையிலுள்ள கிறிஸ்தவ சன்னியாசிகளுக்கும், பொதுவாக ஏனைக் கிறிஸ்தவர்களுக்கும் அளிக்கப்பட்டது :

"சத்தியமாகவே ஆண்டவன் மகா பெரியவனாகவும் கண்ணிய மிக்கவனாகவும் இருந்து வருகிறான். அவனிடத்திருந்தே எல்லாத் தீர்க்கதரிசிகளும் தோன்றி யிருக்கிறார்கள்; ஆண்டவன் அநீத முள்ளவனென்று கூறுவதற்கொன்றும் அத்தாக்ஷி காணப்பட வில்லை. மனிதர்களுக்கு அளிக்கப் பட்டிருக்கும் அருட்கொடைகளைக் கொண்டு அ'ப்'து'ல்லாவின் குமாரரும் அல்லா(ஹ்)வின் தூதருமாகிய மு'ஹம்மத்' என்பவரால், கிறிஸ்தவர்களுக்கும் அவர்களுடைய பந்து மித்திரர்களுக்கும், அவர்கள் உயர்ந்தவராகவேனும், தாழ்ந்தவராகவேனும், கண்ணியமிக்கவராகவேனும், அஃதல்லாதாராகவேனும் இருந்துவரினும், ஒரு பாதுகாப்பாகவும் சத்தியமான வாக்குறுதியாகவும் இருத்தற்பொருட்டு மு'ஹம்மது'டைய ஜாதி ஜனங்களுக்கும், அவருடைய மதத்தைப் பின்பற்றுவோருக்கும் இந்தச் சாஸனத்தை யளித்து, அதில் இவ்வாறு வரைகின்றார் :—

1. "என்னுடைய வாக்குறுதியையும், இந்தச் சாஸனத்தில் அடங்கி யிருக்கும் சத்தியத்தையும் என் இனத்தவர்களுள் எவனேனும் முறிக்கத் துணிவனாயின், அன்னவன் ஓர் அரசனே யாயினும், அல்லது ஆண்டியே யாயினும், அல்லது வேறெவனே யாயினும், அல்லா(ஹ்)வின் வாக்குறுதியை நாசஞ் செய்து, அவனது சத்தியத்திற்கு மாறாய் நடந்து இஸ்லாத்தின் கொள்கையையும் மீறியவனாவான். (இவ்வாறு நிகழாவண்ணம் ஆண்டவனே காக்கக் கடவன்!) என்னெனின், அன்னவன் அல்லா(ஹ்)வின் சாபத்திற்குப் பாத்திரமாகின்றான்.

2. "கிறிஸ்தவ சன்னியாசிகளுள் எவரேனும் எப்பொழுதேனும் தம்முடைய பிரயாணத்தின்போழ்து எந்த மலையிலேனும், குன்றிலேனும், கிராமத்திலேனும், அல்லது வேறெந்த மனித சஞ்சாரத்துக் குரிய இடத்திலேனும், கடல் மீதேனும், பாலை வனத்தி னூடேனும், அல்லது மடாலயத்துக் குள்ளேனும், மாதா கோயிலுக் குள்ளேனும், அல்லது வேறெந்தப் பிரார்த்தனை யாலயத்துக் குள்ளேனும், இருக்க நேருங்கால், யான் என்னுடைய இனத்தவர்களுடனெல்லாம் சேர்ந்து அத்தகைய சன்னியாசிகளின் மத்தியி லிருந்துகொண்டு என்னுடைய உயிரையும், உதவியையும், பாது

காப்பையும் அளித்துக்கொண்டு, அவர்களுக்கும் அவர்களுடைய ஸ்தாவர ஜங்கமப் பொருள்களுக்கும் பர்துகாவலராகவும் ஆதரவளிப்போராகவும் இருந்துவரக் கடவேன். என்னெனின், அன்னவர்கள் என்னுடைய இனத்தவர்களின் ஒரு பகுதியாகவே இருந்து வருகிறார்கள்; எனவே, அவர்களைக் காப்பாற்றுவது எனக்கொரு கௌரவமாகும்.

3. "அவர்களிடத்திருந்து எவ்விதத் தலைவரியையும், அல்லது வேறெவ்விதமான கப்பத்தையும் வசூல்செய்வது கூடாதென்று யான் இதன்வாயிலாய் எல்லா அதிகாரிகளுக்கும் கட்டளை யிடுகின்றேன்; என்னெனின், அன்னவர்கள் அப்படிப்பட்ட எத்தகைய வரியையும் இறுக்குமாறு வற்புறுத்தப்படுதல் கூடாது.

4. "அவர்களுடைய நீதிபதிகளையும் அரசப் பிரதிநிதிகளையும் மாற்றுவதற்கு ஒருவரும் அதிகாரம் பெற்றில்லை; ஆதலின், அவர்களெல்லாரும் தள்ளப்படாமல் தங்கள் தங்கள் உத்தியோகங்களிலேயே சாசுவதமாயிருந்துவரக் கடவார்கள்.

5. "அவர்கள் ரஸ்தாக்களின் வழியே சென்றுகொண் டிருக்கும்போது ஒருவரும் அன்னாரைத் தொந்தரைக் குள்ளாக்குவது கூடாது.

6. "அவர்களிடத்திருந்து அவர்களுடைய மாதாகோயில்களைப் பறித்துக்கொள்வது கூடாது.

7. "என்னுடைய இந்தக் கட்டளைகளுள் ஒன்றையேனும் முறித்து விடும் எந்த என் இனத்தவனும் அல்லா(ஹ்)வின் ஆணையையே முறித்தவனாக அறிந்துகொள்ளக் கடவன்.

8. "அவர்களுடைய நியாயாதிபதிகளும், அரசப் பிரதிநிதிகளும், கிறிஸ்தவ சன்னியாசிகளும், அவர்களுடைய சிஷ்யர்களும், ஊழியக்காரர்களும், அன்னாரைச் சார்ந்திருக்கும் மற்றெல்லா மனிதர்களும் எத்தகைய தலைவரியையும் கொடுக்கக் கடமைப்பட் டில்லை; அல்லது வேறுவகைத் தொந்தரைகளும் கொடுக்கப்பட மாட்டார்கள். என்னெனின், அன்னவர்களும் அன்னவர்களுக்குச் சொந்தமான மற்றெல்லாமும் இந்த என்னுடைய சத்திய உறுதிமொழியான பத்திரத்தில் உள்ளடக்கப்பட் டிருக்கின்றனர்.

9. "மலைகளின்மீது அமைதியாகவும் தனிமையாகவும் வசித்துக் கொண்டு வரும் அத்தகைய மனிதர்களிடத்திருந்து முஸ்லிம்கள் தலைவரியையேனும், அன்னாரின் வருவாயினின்று பத்திலொரு பங்கையேனும் வாங்காதிருப்பார்களாக; எந்த முஸ்லிமும் அன்னவரிடத்திருந்து எத்தகைய உபயதானத்தையும் ஏற்றுக்கொள்ளா திருப்பாராக. என்னெனின், அன்னவர்களுடைய முயற்சி முழுதும் அன்னவரின் சம்ரக்ஷணத்திற்கேதான் போதுமானதா யிருக்கின்றது.

10. "அதிகமான ம'ஹ்சூல் விளைந்திருக்குங் காலங்களில் குடியானவர்கள் ஒவ்வொரு பறைக்கும் ஒருவித அளவுள்ள தான்யத்திரளை அச்சன்னியாசிகளுக்குக் கொடுத்துதவக் கடவார்களாக.

11. "யுத்த காலங்களில் முஸ்லிம்கள் அந்தச் சன்னியாசிகளைத் தங்களுக்குரிய ஆசிரமங்களி லிருந்து வெளிவருமாறு தூண்டவேனும், அன்னாரை யுத்தகளம் செல்லுமாறு வற்புறுத்தவேனும் கூடாது. இதற்காக அன்னவரைத் தலைவரி இறுக்குமாறேனும் பலவந்தம் செய்வது கூடாது.

12. "கிருஹஸ்தாசிரமத்தி லிருந்துகொண்டு, தங்கள் முதல்களைக் கொண்டு வர்த்தகம் செய்துவரும் கிறிஸ்தவர்கள் தலைவரியைக் கொடுக்கக் கூடிய அந்தஸ்தி லிருப்பார்களாயின், அன்னவர்களிட மிருந்து நியாயமான தொகைக்கு மேற்பட்டதை வசூல்செய்வது கூடாது.

13. "ஆண்டவனது வெளிப்படையான கட்டளைக்கு மாருக, அத்தகைய தலைவரியைத் தவிர்த்து வேறொன்றையும் கொடுக்கும்படி அவர்களை வற்புறுத்துவது கூடாது.

14. "கிறிஸ்தவ மாதொருத்தி ஒரு முஸ்லிமை மணந்துகொள்ள நேருமாயின், அம் முஸ்லிம் தன் மனைவியை அவளுடைய ஆலயத்துக்குச் சென்று பிரார்த்தனை முதலிய மதக்கிரியைகளை நிறைவேற்ற வொட்டாது அவளுடைய விருப்பத்தைத் தடுப்பது கூடாது. (இவ்வாறு ஒரு யூத, அல்லது கிறிஸ்தவ மாதாவுக்குப் பிறந்த முஸ்லிம் மைந்தன் தன தன்னையை அவளுடைய ஆலயத்துக்குச் செல்லுமாறு ஒரு வாகனத்தின்மீது ஏற்றி வைத்துச் செல்லக் கடவன்; வாகனம் வைக்க முடியாவிடின், தாயும் தள்ளாத வயதுடையவளாயின், தனயன் தன தன்னையைத் தன் தோள்மீது சுமந்து செல்லக்கடவன். இதனினும் சிறந்த இனியோ ருபதேசமும் உண்டாமோ?)

15. "கிறிஸ்தவர்கள் தங்கள் தேவாலயங்களைப் பழுதுபார்க்குங்கால், யாதொரு முஸ்லிமும் அவர்களைத் தடைசெய்வது கூடாது. கிறிஸ்தவர்கள் தங்கள் தேவாலயங்களையும் மடாலயங்களையும் பழுது பார்க்குங் காலங்களிலேனும், அல்லது அவர்களுடைய மதவிஷயத்திற்குரிய வேறெந்தக் கைங்கரியத்திலேனும் உதவி தேடுவார்களாயின், முஸ்லிம்கள் அன்னவர்களுக்கு வேண்டிய உதவியனைத்தையும் புரிந்திடுதல் வேண்டும்.

16. "என்னுடைய இந்த உரிமைச் சீட்டுக்கு மாருக நடப்பவனும், இதற்கு மாருன விஷயமொன்றைப் பரத்துபவனும் சத்தியமாகவே அல்லா(ஹ்)வை விட்டும் அவனுடைய திருத்தூதரை விட்டும் விலகிச் சென்ற மதப்பிரஷ்டர்க ளாவார்கள். ஏனெனின், இதை நான் இச் சத்தியத்தின் பிரகாரமே அவர்களுக் களிக்கின்றேன்.

17. "அவர்களுக்கு விரோதமாக எவரும் படையெடுத்தல் கூடாது; ஆனால், இதற்கு மாருக முஸ்லிம்கள் அக் கிறிஸ்தவர்களுக்குச் சார்பாய் யுத்தம் புரியக் கடவார்கள். வெளியிலுள்ள கிறிஸ்தவர்களுடன் முஸ்லிம்கள் யுத்தம்புரிய நேரிடுங்கால், இவர்களைச் சார்ந்த கிறிஸ்தவர்கள் ஒரு

வரும் அவருடைய மதக்கொள்கையின் காரணத்தினால் அருவருப்புடன் நடாத்தப்படுவது கூடாது.

18. "இன்னம் இதனால், என்னுடைய மனிதர்களுள் எவரேனும் உலகமுடிவுக் காலம்வரை இந்தச் சத்திய சாஸனத்துக்கு முரணாய் ஏதொன்றையும் செய்யத்துணிவது கூடாதென்று நான் கட்டளை யிடுகின்றேன். எனவே, இதற்குமாறாக நடக்கும் எந்த முஸ்லிமும் அல்லா(ஹ்)வுக்கும் அவனுடைய திருத் தூதருக்கும் நேர்விரோதமாக நடக்கத் துணிந்தவனென்றே கொள்ளப்படுதல் வேண்டும்."

பாருலக மக்காள்! இக் காலத்திலும் இப் பூவுலகின்கண் இதனைப் பார்க்கினும் அதிக தாராளமுள்ள மத சாதன மொன்றை வேறெந்த மார்க்கத்திலும் நீங்கள் கண்டுகொள்ளப் போகின்றீர்களா? மனிதர்கள் தத்தமக்குரிய கடமைகளையும் நிபந்தனைகளையும் ஒருசிறிதும் அறிந்து கொண்டிராத அக்காலத்தில், மனிதஜாதியார் ஒருவரையொருவர் அகாரணமாக வெறுத்து அடிமையாக்கிவந்த அவ்வாதி காலத்தில் இதுபோன்ற ஓர் ஒப்பற்ற தஸ்தாவீ'ஜூம், இதற்குமுன் மதீனாவிலிருந்த எஹூதிகளுக்கெல்லாம் எழுதிக் கொடுக்கப்பட்டிருந்த தஸ்தாவீ'ஜூம் ஒரு தெய்விகக் கருணைவாய்ந்த இணையற்ற மஹானுபாவரின் மேதாவித்தனம் வாய்ந்த, புகலுதற்கரிய புத்திசாலித்தனத்தையே சுட்டிக் காட்டிநின்றதென்று கூறி முடிக்கலாம். இதனைக் குறித்து ஸர் சய்யித்' அமீரலீயும் பின்வருமாறு வரைந்து வைத்திருக்கின்றார் :—

"இதனால் நபிகள்நாயகம் (சல்) கிறிஸ்தவர்களுக்கு அவர்களுடைய சொந்த மதத்தைப் பின்பற்றிய மன்னர்களின்கீழும் பெற்றிராத அப்படிப்பட்ட உரிமைகளையும் பாத்யதைகளையும் கொடுத்தருளினார்கள்; அச் சாஸனத்தில் இடப்பட்டிருந்த கட்டளையை மீறி மாறான வழியில் நடக்கத்துணியும் எந்த முஸ்லிமும் ஆண்டவனது ஆணையை முறித்தவனாகவும், அவனுடைய கட்டளைகளை மீறியவனாகவும், அவனுடைய மார்க்கத்தை உதாசினம் செய்தவனாகவும் கருதப்படுவானென்றும் கூறியிருக்கிறார்கள். கிறிஸ்தவர்களைப் பாதுகாத்தற்கும், அவர்களுடைய ஆலயங்களையும் அவர்களுடைய பாதிரிமார்களின் வாசஸ்தலங்களையும் பாதுகாத்தற்கும், அன்னவர்களை எல்லாவிதமான தீங்குகளினின்றும் காப்பாற்றி வைத்தற்கும் உரிய கடமைகளை நபிகள் பெருமான் தங்கள் தோள்மீதும், தங்கள் சிஷ்யர்களின் தோள்மீதும் சுமத்தி வைத்திருக்கின்றார்கள். அவர்கள்மீது— (கிறிஸ்தவர்மீது) தாங்கமுடியாத வரிப்பளுவைச் சுமத்துவது முடியாது; எந்தப் பாதிரியும் அவருடைய ஆசிரமத்தை விட்டு அப்புறப் படுத்தப்படுவது கூடாது; எந்தக் கிறிஸ்தவரும் அவருடைய மதத்தை விட்டுவிடுமாறு வற்புறுத்தப்படுவது கூடாது; எந்தக் கிறிஸ்தவ சன்னியாசியும் அவருடைய மடாலயத்தை விட்டு அப்புறப்படுத்தப்படுவது கூடாது; எந்த யாத்திரிகனும் அவனுக்குரிய யாத்திரையினின்று தடைபடுத்தப்படுவது கூடாது. மஸ்ஜித்களை

நிர்மாணிப்பதற் கென்றும் முஸ்லிம்களுக்கு விடுதிகள் கட்டுவதற் கென்றும் கிறிஸ்தவர் கோயில்களை இடிப்பது கூடாது. முஸ்லிம்களை மணந்து கொள்ளும் கிறிஸ்தவ மாதர்கள் தங்கள் மதத்திலேயே யிருந்துவரலாம்; இக் காரணத்தினால் அவர்களைப் பலவந்தப் படுத்துவதும் துன்பத்திற் குள்ளாக்குவதும் கூடாத காரியமாகும். கிறிஸ்தவர்கள் தங்கள் மாதா கோயில்களையும் மடாலயங்களையும் பழுதுபார்க்கும்போது, அவர்களுடைய மதக்கிரியையின் வேறெந்தக் கைங்கரியத்தின்போதும் உதவிதேடி நிற்பார்களாயின், முஸ்லிம்கள் அவர்களுக்கு அத்தகைய உதவிகளைப் புரிய முன் வருதல் வேண்டும். இதனால் முஸ்லிம்கள் கிறிஸ்து மதத்தில் சம்பந்தம் வைத்துக் கொண்டவர்களாகக் கருதப்பட மாட்டார்கள்; ஆனால், அவர்களுடைய அத்தியாவசியத்தின் போது வெறும் உதவி புரிந்தவர்களாகவும், அவர்களுக் குதவியாய் அல்லா(ஹ்)வும் அவனுடைய ரஸூலும் கோரியவண்ணம் நபிபெருமானால் இடப்பட்ட கட்டளைகளுக்குச் சிரஞ் சாய்த்து நடந்தவர்களாகவுமே கருதப்பட்டு வருவார்கள். முஸ்லிம்கள் அயல்நாட்டுக் கிறிஸ்தவர்களுடன் பகைமை கொள்ளுங்கால், முஸ்லிம்களுக்கிடையில் வசித்துவரும் எந்தக் கிறிஸ்தவனும் அம்மதக் கொள்கையின் காரணத்தால் அருவருப்புடன் நடத்தப்படுவது கூடாது. இதை மீறி நடக்கும் எந்த முஸ்லிமும் நபிகள் நாயகத்தின் கட்டளையை உல்லங்கனம் செய்தவனாகவே கருதப்படுவான்.''

ஒரு மனிதன் தன் பகைவர்மீது பழிதீர்த்துக் கொள்ளக்கூடிய தக்க சந்தர்ப்பத்தைப் பெற்றிருந்து, அதுசமயம் அப்பகைவர்மாட்டு மன்னிக்குங் குணத்தை வெளிக்காட்டுவானாயின், அப்பொழுதுதான் அம்மனிதனை ஒரு "பெரிய மனித"னென்று இவ்வுலகம் புகழ்ந்து கூறுநிற்கும். பகைவர்கள் நமது கைவயம் சிக்கமுடியாதபோது அவர்களை நாம் மன்னிப்பதென்பது ஒரு பைத்தியக்காரத்தனமேயாகும்; எதிரிகள் நம் முன்னே தோல்வியுற்றுச் சிரங்குனிந்து வணங்கி நிற்குங்கால், அன்னவர்மீது பழிதீர்த்துக் கொள்வதென்பதும் ஒரு பெருங்காரியமாகக் கருதப்படமாட்டாது; ஆனால், ஒருவன் தன் பகைவர்மீது எப்படிப்பட்ட பழியையும் தீர்த்துக்கொள்ளுதற் குரிய நல்ல சமயம் வாய்ந்து, அதுசமயம் அவன் அன்னவர்மாட்டுக் கருணை கூர்வானாயின், அத்தகைய மனிதனே, "செல்லிடத்துக் காப்பான் சினங் காப்பான் அல்லிடத்துக் காக்கினென் காவாக்கா லென்?" என்னும் குறளுக்கு இலக்காய் விளங்குகின்றான்.

எனவே, இவ்வாறாகத்தான் நபிகள்நாயகமும் (சல்) சகல மன்பதைகளிடத்தும் ஒரு கருணை மூர்த்தியாகவே நடந்துகொண்டு வந்திருக்கிறார்களென்பதை அன்னவர்களுடைய சரித்திரத்தி லிருந்து நாம் நிதரிசனமாகக் கண்டு கொள்கிறோம். மேற்கூறிய குறட்பாவில் கூறப்பட்ட வண்ணம் எம்பிரான் அவர்கள் உதட்டால் மட்டுமே உபதேசித்துத்தான் காண்பித்தார்களென்று எண்ணிவிடா திருப்பீர்களாக. என்னெனின், அம்மகானு

பாவர் தங்கள் செய்கையிலும் அக் குறட்பாவின் கொள்கையை அனுஷ் டித்தே காட்டி யிருக்கின்றார்கள். நபிகள் திலகம் அதுசமயம் மதீனாவி லிருந்துவந்த குடியரசு ராஜ்ஜியத்திற்குத் தலைமை வகித்து வந்த காரணத் தினால், அக் குடிமக்களின் உடலுக்கும், பொருளுக்கும், ஆவிக்கும் உரிய பாதுகாப்பை யளிக்கவேண்டுவது அப்பெரியாரின் ஒழியாக் கடமையாகவே இருந்துவந்தது; எனவே, இத்தகைய நியாயாதிபதியின் ஸ்தானத்துக்குரிய நியதிமுறை வழுவாது குற்றத்தைக் கடிவதில் ஒருசிறிதும் விட்டுக் கொடுப்பது வழக்கமில்லை. "குடிபுறங் காத்து......வேந்தன் தொழில்," என்பதுதானே வள்ளுவன் வாக்கும்? ஆனால், அல்லா(ஹ்)வின் திருத் தூதராகவும் அடியார்களின் ஞானாசிரியராகவும் இருந்துவந்த முறைமையில் தங்களுக்குரிய ஜன்ம விரோதிகளிடத்தும் மிருதுவான பக்ஷம் பாராட்டியே வந்தார்கள். எனவே, கருணையுடன் கூடிய நியதியென்னும் ஓர் இணையற்ற மானுஷீக தருமத்தை நம்பெருமானார் (சல்) நிரம்பப் பெற்றிருந்தார்கள் என்பதற்கு இதன்கீழ்க் காணப்படும் ஒரு சிறு சரிதையே போதிய சான்றாக விளங்காநின் றிலங்குகின்றது :—

அரப்நாட்டுப் பாலைவனங்களில் அடங்காப் பிடாரிகளாய் அலைந்து திரிந்துவந்த ஒருசில காட்டரபிகள்மீது முஸ்லிம்கள் ஒருமுறை படை யெடுத்துச் சென்றபோது, 'ஹனீ'பாவென்னும் கூட்டத் தலைவரான :துமாமா இப்'னு உ:தால் என்பவர் அம் முஸ்லிம்களால் சிறைசெய்யப் பட்டு மதீனாவிற்குக் கொண்டுவரப் பட்டார். அதுபொழுது நபிகள் பெருமான் அம்மனிதனை நோக்கி, எவ்விதமான தீர்ப்பு வேண்டுமென்று வினவலுற்றார்கள்; அதுகேட்டு அப் பெரியார், " தாங்கள் என்னைக் கொலை புரிவதா யிருப்பின், முஸ்லிம்களைக் கொன்ற ஒருவனைக் கொலைசெய்வது போலாகும். ஆனால், என்மீது இரக்கங் காட்டுவீர்களாயின், அதற்காக நன்றிபாராட்டக்கூடிய ஒருவன்மீது இரக்கங் காட்டியது போலாகும்," என்று கூறினார். நபிகள்நாயகம் (சல்) அதனைக் கேட்டவுடன் அன்னவரை விடுவித்து விடுமாறு உத்தரவிட்டார்கள். உடனே அவர் அருகிருந்த ஒரு சிற்றோடைக்குச் சென்று ஸ்நானம் செய்துவிட்டு வந்து, " ஆண்டவன்மீ தாணையாகச் சொல்லுகிறேன்! நேற்றுவரை தங்களுடைய முகத்தைப் போல இத்தரணியில் வேறொருவர் முகத்தையும் நான் அதிகம் வெறுத்த தில்லை. ஆனால், இன்றோ! தங்களுடைய வதனத்தைப் போல அத்துணை அருமையானது எனக்கு வேறொன்றும் காணப்படவில்லை. அல்லா(ஹ்)வின் மீது பிரமாணமாக! நேற்றுவரை வேறெந்த மதத்தையும் தங்கள் மதத்தைப் போல நான் வெறுத்த தில்லை. ஆனால், இன்றோ! எனக்கு இஸ்லாத்தைப் பார்க்கினும் வேறொன்றும் இத்துணை அருமையானதாய்த் தென்படவில்லை," என்று கூறி, அப்பொழுதே இஸ்லா மார்க்கத்தில் சேர்ந்துகொண்டு பரிசுத்த ராகிவிட்டார்.

அக்கணமே அவர் மதீனாவிலிருந்து நேரே மக்காவிற்கு யாத்திரை சென்றார். அவரைக் கண்ட :குறைஷியர்கள், "நீரென்ன மதம்மாறியவ ராய்விட்டீராமே!" என்று ஏளனமாய் வினவியதைக் கேட்டு, :துமாமா தமது மதநம்பிக்கையில் தவறிழைக்க வில்லையென்றும், ஆண்டவனுடைய நேரிதான மார்க்கத்தையே தாம் தழுவியிருப்பதாகவும் பதில்மொழி கூறினார். இவர் ஆரம்பத்தில் இஸ்லாத்தின்மீது எத்துணைப் பகைமை கொண்டவரா யிருந்துவந்தாரோ, அத்துணைக் கதிகமாகவே தாம் முஸ்லி மாயபின்னர் இஸ்லாத்தில் மிகப் பற்றுடையவராக மாறிவிட்டார். அவர் வசித்துவந்த யமாமாப் பகுதியிலிருந்துதான் மக்காவுக்குக் கோதுமை ஏற்றுமதி செய்யப்பட்டு வந்தது. :துமாமா முஸ்லி மானதன்பின்னால் நபிகள் திலகத்தின் உத்தரவில்லாது இஸ்லாத்தின் பரமவிரோதிகளாகிய மக்காக் :குறைஷிகளுக்குக் கோதுமையனுப்ப முடியாதென்று கூறி, மறுத்துவிட்டார். இதனால் அக் :குறைஷிய ரெல்லாரும் அளவிறந்த கஷ்டத்திற் குள்ளாய்த் தங்களுக்குக் கோதுமை அனுப்பி வைக்குமாறு :துமாமாவுக்குக் கட்டளையிட வேண்டுமென்று நபி பெருமானார் அவர்க ளிடம் வந்து வேண்டிக் கொண்டார்கள். சகலலோகங்களுக்கும் ஒரு தயாள மூர்த்தியாய் அவதரித்திருந்த நபிகள்திலகம் (சல்) அக்கொடிய பகைவர் களின் வேண்டுகோளையும் மறுக்காது, :துமாமாவுக்குச் செய்தி யனுப்பி, வழக்கம்போலே கோதுமையை யனுப்பச் சொன்னார்கள். என்னே எம்பெரு மானின் இணையில்லாத் தயாளகுணம்!

"ஆற்றுநர்க் களிப்போர் அறவிலை பகர்வோர்
ஆற்று மாக்கள் அரும்பசி களைவோர்
மேற்றே உலகின் மெய்ந்நெறி வாழ்க்கை
மண்திணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே!"— என்றார் "மணி

மேகலை" பாடிய சீத்தலைச் சாத்தனாரும்.

இவ்வாறாக, நபிகள்திலகத்தின் (சல்) உதாரகாருண்ய குணத்தைப்பற்றி எத்தனையோ உதாரணங்களைப் பெருக்கிக்கொண்டே போகலாம். ஆயின், நாம் இவ்விடத்தில் இரண்டு விஷயங்களை மட்டும் குறிப்பாகச் சொல்லி, நிறுத்திக்கொள்ளக் கடவோம்: நபிகள் நாயகத்தின் செல்வக்குமாரி யொருவர்— (ஃஜனப்' என்பார்) ப'த்'ர் யுத்தத்துக்குப் பின்னர் மக்காவை விட்டு மதீனாவை நோக்கி வந்துகொண் டிருந்தார். அம் மாதுசிரோமணி பேறுகாலத்தை நெருங்கியுள்ள அத்துணை முதிர்ந்த கர்ப்பவதியா யிருந்தும், அவரை அவரது ஒட்டகத்தினின்று ஹப்'ப்'ார் பி'ன் அஸ்வத்' என்னும் துஷ்டன் தனது :குறைஷ் குலத்துக்குரிய கொடிய துர்க்குணத்தை மேற் கொண்டு, தன் கையிலிருந்த ஈட்டியால் குத்தி, அம்மாதரசைச் சற்றும் இரக்கமில்லாது கீழே உருட்டித் தள்ளிவிட்டான். இதன் காரணமா

யுண்டான நோவினையால் அம் மாதுசிரோமணி பிறகு மதீனாவிற்கு வந்து சேர்ந்து, குறைப்பிரசவமடைந்தும், நோய்வாய்ப்பட்டும், பின்னால் இறந்தும் விட்டார்கள். ஆனால், மக்கமாநகர் நபிகள் திலகத்தால் (சல்) கைப்பற்றப் பட்டதன் பின்னர் அந்தக் கொலைபாதகன் குற்றவாளியெனத் தீர்மானிக்கப் பட்டான். ஆதலின், அந்த ஹப்'ப்'ார் என்பான் சிலநாட்கள் வரை மறைந்துகொண்டிருந்து, பிறகு நபிகணாதர் முன் 'ஹா'ஜிராகி, மன்னிப்புக் கேட்டுக்கொண்டான். அவனிழைத்திருந்த குற்றமோ, கொடும் பாதகக் கொலையாகும்! அதுவும் நபி பெருமானாரின் செல்வக் குமாரியைக் கொன்ற குற்றம்! ஆயினும், அவ்விஷயம் இஸ்லாமிய சமூகத்தைச் சாராது, நபி பெருமானார் அவர்களைக் குறித்த சொந்த விஷயமாகவே காணப்பட்டு வந்தது. இன்னம், அம் மனிதன் உண்மையிலேயே தானிழைத்துவிட்ட குற்றத்திற்காகப் பெரிதும் பச்சாத்தாபப் படுபவனேபோல் காணப்பட்டு வந்தான். அதுவேயு மன்றி, அவன் தீ'னுல் இஸ்லாத்தையும் தழுவிக் கொண்டு விட்டான். எனவேதான், அம் மனிதனுக்கு முழுச் சுயேச்சை யுடனே மன்னிப்புங் கொடுக்கப்பட்டது. இவ்வாறே கை'ப்'ரில் நபி பெருமானுக்கு விஷமிட்ட யூதக்கன்னிகையும், நபிகள் திலகத்தின் ஜன்ம விரோதியாய் விளங்கிவந்த அபூ'ஜஹ்லின் குமாரரான இ'க்ரிமாவும் முற்றும் மன்னிக்கப்பட்டே விட்டார்கள்.

த'வ்மத்துல் ஜந்தல் என்னுமிடத்தில் குடியேறி யிருந்த ப'னூ கல்ப்' என்னும் கிறிஸ்தவ ப'த'வீகள் மதீனாவைச் சூழ்ந்துள்ள பகுதிகளிலும் தங்கள் கொடுங்கொள்ளைத் தொழில்களை நிகழ்த்திவந்ததைக் கேள்வியுற்று, நபிகணாயகர் ஒரு முஸ்லிம் படையை யனுப்பி, அக் கிறிஸ்தவக் கூட்டத்தின ருக்குச் சொல்லித் தங்களுடைய கொள்ளைத் தொழில்களைக் கைவிட்டு, இஸ்லாம் மார்க்கத்திலே சேர்ந்துகொள்ளுமாறு உபதேசம் புரியச்செய் தார்கள். அதுசமயம் அச் சேனைக்குத் தலைமைவகித்துச் சென்ற முஸ்லிமை நோக்கி நபிகணாதர் (சல்) "எக்காரணத்தைக் கொண்டும் நீர் வஞ்சகத்தை யேனும் மோசக் கருத்தையேனும் ஆண்டு ஒருசிறிதும் கைக்கொள்ளா திருப்பீராக! இன்னம் ஆண்டு எந்தக் குழந்தையையும் கொலைபுரியா திருக்கக் கடவீராக!" என்று அறிவுறுத்தி யனுப்பினார்கள். இவ்வண்ண மாகவே ஒவ்வோர் படையெழுச்சியின் போதும் நபிபெருமானார் (சல்) அவர் கள் நல்லறிவுறுத்தி யனுப்புவதே வழக்கமா யிருந்துவந்தது. ஒருமுறை பை'ஜான்ஷிய (புராதனத் துருக்கிய) குடிகளுக்கு விரோதமாக முஸ்லிம் படையொன்றை அனுப்பிவைத்தபோழ்து, "விடுதிகளுள்ளே ஒதுங்கிக் கிடக்கும் குற்றமற்ற மனிதர்களைத் துன்புறுத்தா திருப்பீர்களாக! மென் மையான தன்மைவாய்ந்த மெல்லிநல்லாரை விட்டுவிடக் கடவீர்களாக! பால் குடிக்கும் பச்சிளங் குழவிகளையும் படுக்கையிற் கிடக்கும் பிணியாளி களையும் துன்புறுத்தா திருப்பீர்களாக! குற்றமற்ற குடிமக்களின் வீடு வாசல்களை இடித்துத் தகர்ப்பது கூடாது. அவர்களுடைய ஆகாரமூலங்க,

களையும் பழவிருக்ஷங்களையும் பாழ்படுத்துவதும் கூடாது. மேலும், பேரீச்ச மரங்களைக் கை(வாள்) கொண்டும் தொடுவது கூடாது!" என்று வலியுறுத்திக் கூறினார்கள்.

பிறகு அபூ'ப'க்ர் ஸித்'தீ':க் (ரலி') அவர்கள் தங்கள் ஞானாசிரியரைப் பின்பற்றியே, ஷை"ஜான்ஷியத்தின்மீது படையெடுத்துச் சென்ற முஸ்லிம் படைகளின் தலைவராய்ப் புறப்பட்ட எ'ஜீத்' பி'ன் அபூ' ஸு"ப்யானிடம் இவ்வாறு அறிவுறுத்திக் காண்பித்தார்கள்: "ஏ எ'ஜீத்'! உம்முடைய கைவயமுள்ள மனிதர்களைக் கொடுமைக்குள்ளாக்காது நன்கு பாதுகாத்துக் கொள்ளக்கடவீர்; அவர்களுக்கு எவ்வகைத் தொந்தரையும் கொடாதிருத்தல் வேண்டும். உம்முடைய சகல காரியங்களிலும் அவர்களையுங் கலந்து ஆலோசனை புரிந்துகொள்ளக் கடவீர். சரியானதும் நியாயமானதுமாகிய காரியத்தையே நீர் செய்யக்கடவீர். என்னெனின், இவற்றிற்கு மாறாகச் செய்கிறவர்கள் க்ஷேமத்துடன் உயிர்வாழ மாட்டார்கள். உங்களுடைய எதிரிகளைச் சந்திக்க நேருங்கால், நீங்களெல்லீரும் ஆண்சிங்கங்களே போல நடந்துகொள்ளுதல் வேண்டும்; யுத்தகளத்தில் புறமுதுகு காட்டுவதென்பதை அறவே மறந்து விடுவீர்களாக. நீங்கள் வெற்றிபெற்று விடுவீர்களாயின், குழந்தைகளையும், கிழவர்களையும், பெண்மணிகளையும் வதை புரியாதிருக்கக் கடவீர்கள். பேரீச்சமரங்களை நாசப்படுத்தாமலும் தான்ய வயல்களைத் தீயிட்டுக் கொளுத்தாமலும் நிதான புத்தியுடனே நேரிதாய் நடந்துகொள்ளக் கடவீர்கள். பழந்தரும் தருக்களை வெட்டி வீழ்த்தாதீர்கள்; ஆகாரத்திற்கு அத்தியாவசியமானதையல்லாமல் வேறு ஆடு மாடு ஒட்டகங்களை வதைபுரியாதிருப்பீர்களாக. ஏதேனும் உடன்படிக்கை செய்துகொள்வீர்களேல், அதன்படி ஒழுகிக்கொள்ளக் கடவீர்கள். நுங்கள் வாக்குச் சுத்தத்தை நன்கு பராமரித்துக் கொள்ளக் கடவீர்கள். நீங்கள் செல்லுமிடங்களில் (வேறு) சில மதானுஷ்டான முள்ள மனிதர்களைக் காண்பீர்கள். அவர்கள் சன்னியாச ஆசிரமங்களிலேயே ஒதுங்கியிருந்து கொண்டிருப்பார்கள்; அவர்களெல்லாரும் தங்களுக்குரிய மதானுஷ்டானப்படியே தெய்வத்தைத் தொழுது வருவதாய்க் கூறுவார்கள். (என்னெனின், அன்னவர்கட்கு, அவரவர் மதத்திலே அவரவருக்கும் பிரியம் இருக்குமாறே ஆண்டவன் செய்துவைத்திருக்கிறான்.) அப்படிப்பட்டவரை வாளா விட்டுவிடுங்கள். அவர்களைக் கொலைபுரிவதும் கூடாது; அன்னவரின் மடாலயங்களைத் தகர்த்தெறிவதுங் கூடாது." இதில், இந்த இருபதாவது நூற்றாண்டிலுள்ள "நாகரிகம்" படைத்த ஜாதியாரென்னப் படுபவர்களும் கற்றுக்கொள்ளவேண்டிய படிப்பினை பலவுள.

இத்தகைய அறிவுறுத்தலுடன், பைபிள் வேதத்திலுள்ள ஒருசில கட்டளைகளை மட்டுமே ஈண்டு ஒப்பிட்டுப் பார்ப்பீர்களாக:* "இப்போதும்

---

* ஆனால், மனுமகாராஜர் நீதியையும், அதர்வண வேதபோதத்தையும் நீங்களே படித்

நீ போய், அமலேக்கை மடக்கடித்து, அவனுக்கு உண்டான எல்லாவற்றை யும் சங்கரித்து, அவன்மேல் இரக்கம் வைக்காமல், புருஷரையும், ஸ்திரீகளை யும், பிள்ளைகளையும், குழந்தைகளையும், மாடுகளையும், ஆடுகளையும், ஒட்டகங்களையும், கழுதைகளையும் கொன்றுபோடக் கடவாய்"—(I சாமுவேல், 15 : 3). "உங்கள் கண் தப்பவிடாமலும் நீங்கள் இரங்காமலும், முதியோரையும், வாலிபரையும், கன்னிகைகளையும், குழந்தைகளையும், ஸ்திரீகளையும் சங்கரித்துக் கொன்றுபோடுங்கள்"—(எசேக்கியேல், 9 : 6). இவ்வாறாய கிறிஸ்தவக் கொள்கையுடன் நபிபெருமானார் (சல்) அவர்களின் மேன்மையான நல்லுபதேசங்களை நன்கு ஒப்பிட்டுச் சீர்தூக்கிப் பார்க்கக் கடவீர்களாக. கத்தோலிக்க கிறிஸ்தவர்களும், புரொட்டெஸ்டெண்ட் கிறிஸ்தவர்களும், கிரீக் கோயில் கிறிஸ்தவர்களும், ஸெயிண்ட் லாக்டான்ஷியஸ் கால முதல் "கவனென்ட்டர்கள்"—(உடன்படிக்கைக்காரர்) காலம்வரை நிகழ்த்தி வந்த அக்கிரமங்களை யெல்லாம் மில் என்பவரின் "முஹம்மதிய மதசரிதை" என்னும் நூலின் 45, 46-ஆம் பக்கங்களில் விவரமாகக் கண்டுகொள்வீர்கள். ஸ்பெயின் முதலிய தேசங்களில் நடத்திவந்த "இன்க்விஸிஷன்"— மத விசாரணைச் சங்கங்கள்— செய்துவந்த அடாத அட்டூழியங்களைப் பற்றி ஐரோப்பா கண்ட சரித்திரங்களில் பரக்கக் காணலாம்.* இந்த 20-ஆவது நூற்றாண்டிலும் மஞ்சூரியாவிலுள்ள பிளாகோ வெஸ்ச்சங் என்னுமிடத்தில் ஒரு பெரிய கிறிஸ்தவ ராஜ்ஜியத்தின் சேனைகளால் 5,000 சீன ஆண்களும், பெண்களும், சிசுக்களும் சற்றும் இரக்கமில்லாது முற்றும், கொடுங்கொலை புரியப்பட்டது ஒருபக்கல் கிடக்க, "சமாதான இளவரசன்" என்று அழைக்கப்படும் இயேசு கிறிஸ்துவை அடியொற்றி நடப்பதாய்க் கூறிக்கொள்ளும் 'சாந்தகுண சீலர்களான' நம் கிறிஸ்தவ நேசர்கள் சமீப காலம்வரை எத்தகைய ஈவிரக்கமு மில்லாது வயோதிகர்களையும் வாலிபர்களையும், ஆண்களையும் பெண்களையும் கொள்ளையடித்தும், கொலைபுரிந்தும், மானபங்கப் படுத்தியும், தீயிட்டுக் கொளுத்தியுமே வந்திருக்கிறார்கள். இன்னம், அந்தச் சமாதான இளவரசருடைய பிரதிநிதிகளாய் விளங்கும்

---

துப் பார்த்துக்கொள்ளுங்கள். எமது "ஆரிய சமாஜிக் கர்ப்பணம்" என்னும் நூலையும் படித்துப் பாருங்கள்.

* உதாரணமாக, 24—8—1572 அன்று (Saint Bartholomew's Day) பிரான்ஸ் தேசத்தில் கத்தோலிக்க இனத்தைச் சார்ந்த கிறிஸ்தவர்கள் தம் சகோதரர்களாகிய புரொட்டெஸ்டெண்ட் கிறிஸ்தவர்களை ஒரே இரவில் பல்லாயிரக் கணக்கில் கொலைபுரிந்து விட்டார்கள். அந்த ஓர் இரவிலே கொல்லப்பட்ட ஆண், பெண், சிசுக்களின் மொத்த எண்ணிக்கை 70, 000 பேர் என்று பிரான்ஸிலிருந்த பெரிய மந்திரி ஸல்வி என்பார் சொல்லியிருக்கிறார். ஐரோப்பாகண்டம் முழுதுமே இப்படுகொலையைக் கேள்வியுற்று நடு நடுங்கிவிட்டது. பிரான்ஸ் தேசத்தை ஆண்டுவந்த 9-ஆவது சார்லஸ் மன்னன் என்னும் கத்தோலிக்க கிறிஸ்தவன் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டு மென்னும் ஒரே சுயநலத்துக்காக எதிர்மத வாதிகளனைவரையும் ஒரே இரவில் வெட்டி வீழ்த்துதற்கு அணையிட்ட இக் கொடுமை உலக சரித்திரத்திலேயே ஈடிணையற்ற சம்பவமாகும்.

போப்புகளும்,* பிஷப்புகளும், பாதிரிகளும், உபதேசிகளும் அத்தகைய கொடும் பாதகக் கொலைகளை யெல்லாம் பார்த்துக்கொண் டிருந்ததோடு மட்டும் நில்லாது, எப்படிப்பட்ட பஞ்சமகா பாதகங்களுக்கும் பரிபூரண மன்னிப்பையே அளித்து வந்திருக்கிறார்கள்.

ஹிஜ்ரீ 6-ஆவது ஆண்டு ஷஃ'ப்ான் மாதத்திலேதான் ப'னூ முஸ்தலி:க் படையெழுச்சியும் நிகழ்ந்ததென்பதை நீங்கள் முன்னமே அறிந்துகொண் டிருக்கின்றீர்கள். இனி இவ்வாண்டின் இறுதியில் நடைபெற்ற மற்றொரு முக்கியமான சம்பவத்தைக் குறித்து அடுத்துவரும் அதிகாரத்தில் ஆராய்ச்சி செய்து பார்க்கக் கடவோம். [அதி. 30, இரண்டாம் பாகம்]

"இன்னம், அன்னவர்கள் அறியாமையால் வரம்பை மீறி அல்லா(ஹ்) வை ஏசாதிருக்கும் பொருட்டு, அல்லா(ஹ்)வைத் தவிர்த்து அவர்கள் வணங்குகின்றவைகளை நீங்கள் ஏசாதீர்கள். அவ்வாறாகத்தான் சகல ஜனங் களுக்கும் அவரவர் செய்கைகளை நாம் (அவரவருக்கு) அழகாக்கி யிருக் கிறோம்; பிறகு அவர்களுடைய ரக்ஷகன்பாலே அன்னவர்களின் மீட்சி இருக்கிறது; அப்பால் அவன் அவர்களுக்கு அன்னவர்கள் செய்துகொண் டிருந்தது குறித்து அறிவிப்பான்."—(6:109).






*6-ஆவது அலெக்ஜாந்தரும், அந்தச் சன்னியாசப் போப்பின் 'புத்திரன்' ஜார்ஜ் போர்ஜியாவும் நடாத்திய திருவிளையாடல்களை யெல்லாம் அவர்கள் சரிதைகளில் நன்கு காணலாம்.

# பிழை திருத்தம்

[சிற்சில பிரதிகளிலேயே கீழுள்ள சிற்சில பிழைகள் காணப்படும்]

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 17 | 28 | நபிநள் | நபிகள் |
| 32 | 38 | பிரயத்தினத்தால் | பிரயத்தனத்தால் |
| 35 | 22 | யிழந்து | இழந்து |
| 49 | 11 | கியலாதவனாய் | கியலாதனவாய் |
| 87 | 34 | அவர்வமயமே | அவர்வயமே |
| 94 | 14 | தோன்றியவர்கள். | தோன்றியவர்கள்.) |
| 111 | 9 | நெஞ்கமானது | நெஞ்சகமானது |
| 113 | 27 | கொல்லென்ஞ் | கொல்லெனுஞ் |
| 120 | 37 | முதனியவற்றின் | முதலியவற்றின் |
| 127 | 26 | நெக் நெக் | நெக்கு நெக் |
| 182 | 23 | கஃ'ப'வையே | கஃ'ப'ாவையே |
| 198 | 6 | ஸுஜூதி'லிருந்த | ஸுஜூதி'லிருந்த |
| 209 | 19 | வெளிவரும்பொதுதான் | வெளிவரும்போதுதான் |
| 213 | 29 | ஆபூ'ப'க்ர் | அபூ'ப'க்ர் |
| 215 | 38 | போதாக்குறைக்குக் | போதாக்குறைக்குத் |
| 229 | 21 | சமூகத்திற்கு | சமுகத்திற்கு |
| 251 | 4 | மக்கத்துக்குக் | மக்கத்துக் |
| 263 | 36 | சுற்றும் | சற்றும் |
| 264 | 33 | அல்லா(ஹ்)வீன் | அல்லா(ஹ்)வின் |
| 265 | 21 | ஏறிவருவதற்ரு | ஏறிவருவதற்கு |
| 278 | 30 | வர்த்தகத்தின் | வர்க்கத்தின் |
| 280 | 11 | முதலுறுதி | முதலறுதி |
| 282 | 18 | அல்லமா | அல்லாமா |
| ,, | 25 | பழுதுபார்கப் | பழுதுபார்க்கப் |
| 289 | 34 | வந்துவிட்டதாகத் | வந்துவிட்டதாகக் |
| 293 | 8 | சதாரணமாய்க் | சாதாரணமாய்க் |
| 294 | 15 | சரிரத் | சரீரத் |
| 295 | 27 | அ'லமெ | ஆ'லமெ |
| 296 | 24 | (தூரியதரிசனம்) | (துரியதரிசனம்) |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 306 | 20 | முஸ்லிம்களை பிடித்துக் | முஸ்லிம்களைப் பிடித்துக் |
| 317 | 29 | பிறதொருதே | பிறிதொருதே |
| 330 | 20 | மூமினின் | மூமினீன் |
| 352 | 18 | வெலையொன்றும் | வேலையொன்றும் |
| 357 | 15 | மற்றெரு | மற்றொரு |
| 360 | 9 | கௌரமான | கௌரவமான |
| 367 | 23 | செய்துகொன்ள | செய்துகொள்ள |
| 372 | 30 | பிடிப்பட்டதன் | பிடிபட்டதன் |
| 380 | 21 | யிருந்தார்கன் | யிருந்தார்கள் |
| 407 | 11 | மூந்நூற் | முந்நூற் |
| ,, | 33 | மக்கத்துக்குப் | மக்கத்துப் |
| 409 | 7 | கூருனின்றனர் | கூருநின்றனர் |
| 411 | 21 | அவ் புத்தத்திற்கு | அவ் யுத்தத்திற்கு |
| 414 | 23 | முள்லிம் | முஸ்லிம் |
| 420 | 23 | அதுபொழுது மு'ஜ்ஜிர் | அதுபொழுது அபு'ல் [ப'க்'ரீ |
| 432 | 17 | ஓட்டுமாறு வெருட்டி | ஓடுமாறு வெருட்டி |
| 435 | 21 | பெருமானமுள்ள | பெறுமானமுள்ள |
| 447 | 30 | கட்டை விரர்கள்மீது | கட்டை விரல்கள்மீது |
| 461 | 19 | தாக்குதல்களுக்குக்குச் | தாக்குதல்களுக்குச் |
| 470 | 19 | செல்ல வேண்டி | செல்ல வேண்டிய |
| 503 | 13 | 1914 முதல் 1944 | 1914 முதல் 1945 |

